# தந்தை பெரியார்

முழு
முதல்
வாழ்க்கை
வரலாறு

கவிஞர் கருணானந்தம்

THE FIRST
COMPLETE
BIOGRAPHY
OF
PERIYAR E.V.RAMASAMY

# உள்ளே...

# நன்றிக் கடன்

ஈரோட்டில், பெரியார் குருகுலத்தில், என்னோடு சம காலத்தில் ஒரு சாலை மாணாக்கராக (Colleagues) இருந்த சிலருள் இருவர், தமிழகத்தில் மிக உன்னதமான தகுதியும், மிக்க உயரிய பதவியும் பெற்றனர். ஒருவர் க. அரசியல்மணி. இவர் ஈ. வெ. ரா. மணியம்மையார் என்ற தகுதியும், திராவிடர் கழகத் தலைவர் என்ற பதவியும் பெற்றார். இன்னொருவர் மு. கருணாநிதி. இவர் கலைஞர் மு. கருணாநிதியாய் திராவிட முன்னேற்றக் கழகத்தலைவர் என்ற தகுதியும், தமிழகத்தின் முதல்வர் என்ற பதவியும் பெற்றார். நானும் "அண்ணா காவியம்" இயற்றியதால் காவியக் கவிஞர் என்ற தகுதியும், தந்தை பெரியார் வாழ்க்கை வரலாறு எழுதியதால் பெரியார் வரலாற்றாளர் (Periyar's Biographer) என்ற பதவியும் பெற்றேன்.

1942–ஆம் ஆண்டு கும்பகோணம் அரசினர் கல்லூரியில் நான் இண்டர்மீடியட் வகுப்பில் சேர்ந்த போது, அங்கே பி. ஏ. வகுப்பில் தவமணி இராசன் என்பாரும் வந்து சேர்ந்தார். இவர் தனது இண்டர் வகுப்பை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பயின்றவர். என்னைத் தன் தோழனாக இணைத்துக் கொண்ட இவரே எனக்கு அரசியல் ஆசான் (Mentor). இருவரும் சேர்ந்து, இன்னும் சிலர் உதவியுடன் கும்பகோணத்தில் திராவிட மாணவர் கழகத்தைத் துவக்கி, முதல் மாநாட்டையும் நடத்தினோம். தந்தை பெரியாரும், அறிஞர் அண்ணாவும் எங்கள் செயலை அங்கீகரித்து ஏற்றுக் கொண்டார்கள். திராவிட மாணவத் தோழர்கள் பலரை நாட்டுக்கு அறிமுகம் செய்தோம்.

படிப்பைத் துறந்து இருவரும் ஈரோடு சென்றோம். அய்யா குருகுலத்தில் மணியம்மையார், எஸ். கஜேந்திரன், ஏ. பி. சனார்த்தனம் ஆகிய மூவரோடு நாங்கள் இருவரும் இணைந்து, குடும்பத்தைப் பெருக்கியதோடன்றியும்

திருவாரூரில் முரசொலித்து வந்த மு. கருணாநிதி அவர்களை யும் ஈரோட்டுக்கு வரவழைத்துக் கொண்டோம். இவருக்குத் திருமணமாகியிருந்ததால் மாதச் சம்பளம் தருமாறு அய்யாவைக் கேட்டுக் கொண்டோம்.

அய்யாவின் "குடிஅரசு" இதழில் நான் ஆஸ்தான கவிஞர். 1945–ல் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனைப் பற்றி ஒரு கவிதை எழுதி, அவருக்கு நிதி வழங்கி உதவவேண்டும் என்று "குடி அரசு" இதழில் வெளியிட்டுள்ளேன். பல்வேறு பெயர்களில் நிறையக் கவிதைகள் எழுதி வந்தேன். ஈ.வெ.கி. சம்பத்தும் நானும் கருப்புச் சட்டைப் படையின் முதலாவது அமைப்பாளர்களாக அய்யாவால் நியமிக்கப்பட்டோம்.

1944–ல் திராவிட மாணவர் முதல் சுற்றுப்பயணத்தின் போது, பத்து வயதுச் சிறுவனாக இயக்கத்தில் நுழைந்த வீரமணி,இன்று திராவிடர் கழகத்தின் பொதுச்செயலாளர்! என்னைவிடப் பத்து வயது இளையவராயினும், வீரமணிக்கு இதனால் இயக்கத்தில் என் அளவு சீனியாரிட்டி உண்டு! இந்தச் சிறுவனை மேசைமீது தூக்கி நிறுத்தி முதன் முதலில் பேசக் கேட்டவர்களில் நானும் ஒருவன். முதல் திராவிட மாணவர் பயிற்சி முகாமில் கலந்து கொண்டேன். பின்னர் பயிற்சிப் பாசறை அமைப்பாளரானேன்.

அய்யாவின் அனுமதியோடு ஊருக்கு வந்து, திருத் துறைப்பூண்டியில், எம். கே. ஹாஜாபீர், வி. எஸ். பி. யாகூப், இராம. அரங்கண்ணல் (அப்போது என் தம்பியுடன் படித்து வந்தார்) ஆகியோர் ஒத்துழைப்பால் முதலாவது கருப்புச் சட்டை மாநாடும், மாணவர் மாநாடும் நடத்தி னேன். எங்கு மாநாடு நடந்தாலும், என் பணியின் பங்கு, ஓரளவாவது அங்கு இருந்து வந்தது.

1946–ல் மத்திய அரசின் தபால் இலாக்காவில் அஞ்சற் பிரிப்பாளர் அலுவல் எனக்குக் கிடைத்தது. அய்யாவிடமும், அண்ணாவிடமும், கலைஞரிடமும் விடை பெற்று அரசு ஊழியரானேன். கலைஞரும் அய்யாவிடம் சொல்லிக் கொண்டு, கோவையில் திரைப்படத் துறையில் எழுத்துப் பணி புரியச் சென்றார். தஞ்சையில் நான் சில காலம் பணி

திருவாரூரில் முரசொலித்து வந்த மு. கருணாநிதி அவர்களை யும் ஈரோட்டுக்கு வரவழைத்துக் கொண்டோம். இவருக்குத் திருமணமாகியிருந்ததால் மாதச் சம்பளம் தருமாறு அய்யாவைக் கேட்டுக் கொண்டோம்.

அய்யாவின் "குடிஅரசு" இதழில் நான் ஆஸ்தான கவிஞர். 1945–ல் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனைப் பற்றி ஒரு கவிதை எழுதி, அவருக்கு நிதி வழங்கி உதவவேண்டும் என்று "குடி அரசு" இதழில் வெளியிட்டுள்ளேன். பல்வேறு பெயர்களில் நிறையக் கவிதைகள் எழுதி வந்தேன். ஈ.வெ.கி. சம்பத்தும் நானும் கருப்புச் சட்டைப் படையின் முதலாவது அமைப்பாளர்களாக அய்யாவால் நியமிக்கப்பட்டோம்.

1944–ல் திராவிட மாணவர் முதல் சுற்றுப்பயணத்தின் போது, பத்து வயதுச் சிறுவனாக இயக்கத்தில் நுழைந்த வீரமணி,இன்று திராவிடர் கழகத்தின் பொதுச்செயலாளர்! என்னைவிடப் பத்து வயது இளையவராயினும், வீரமணிக்கு இதனால் இயக்கத்தில் என் அளவு சீனியாரிட்டி உண்டு! இந்தச் சிறுவனை மேசைமீது தூக்கி நிறுத்தி முதன் முதலில் பேசக் கேட்டவர்களில் நானும் ஒருவன். முதல் திராவிட மாணவர் பயிற்சி முகாமில் கலந்து கொண்டேன். பின்னர் பயிற்சிப் பாசறை அமைப்பாளரானேன்.

அய்யாவின் அனுமதியோடு ஊருக்கு வந்து, திருத் துறைப்பூண்டியில், எம். கே. ஹாஜாபீர், வி. எஸ். பீ. யாகூப், இராம. அரங்கண்ணல் (அப்போது என் தம்பியுடன் படித்து வந்தார்) ஆகியோர் ஒத்துழைப்பால் முதலாவது கருப்புச் சட்டை மாநாடும், மாணவர் மாநாடும் நடத்தி னேன். எங்கு மாநாடு நடந்தாலும், என் பணியின் பங்கு, ஓரளவாவது அங்கு இருந்து வந்தது.

1946–ல் மத்திய அரசின் தபால் இலாக்காவில் அஞ்சற் பிரிப்பாளர் அலுவல் எனக்குக் கிடைத்தது. அய்யாவிடமும், அண்ணாவிடமும், கலைஞரிடமும் விடை பெற்று அரசு ஊழியரானேன். கலைஞரும் அய்யாவிடம் சொல்லிக் கொண்டு, கோவையில் திரைப்படத் துறையில் எழுத்துப் பணி புரியச் சென்றார். தஞ்சையில் நான் சில காலம் பணி

யாற்றிய போது, அங்கே அண்ணாவின் உதவியால் புதிதாகத் துவக்கப்பட்ட "கே. ஆர். ராமசாமியின் கிருஷ்ணன் நாடக சபா"வில், இயக்கத் தோழர்களான டி. வி. நாராயணசாமி, ஆர். எம். வீரப்பன், சிவாஜி கணேசன், பி. எஸ். தட்சணாமூர்த்தி, எம். என். கிருஷ்ணன், ஜி. எஸ். மகாலிங்கம், எஸ். சி. கிருஷ்ணன், (சிவாஜிகணேசன் சக்தி நாடக சபாவில் சேர்ந்த பின்னர் வந்த) எஸ். எஸ். ராஜேந்திரன் ஆகியோர் நடிகர்களாக விளங்கினர். அண்ணா மூலமாக எனக்கு அவர்கள் அறிமுகம் கிடைத்தது. அவர்களுக்கு உறுதுணைவர்களாகக் கரந்தை என்.எஸ்.சண்முகவடிவேல், டி. கே. சீனிவாசன், ஏ. கே. வேலன் ஆகிய நாங்கள் எல்லாரும் அங்கே ஒருங்கே முகாமிட்டு வாழ்ந்தோம்; அண்ணா அடிக்கடி வந்து தங்கிச் செல்வார்.

அஞ்சல் துறை ஊழியனாக ஆனபின்னரும், என்னை ஈரோட்டுக்கே மாற்றினார்கள். அய்யா அளவற்ற மகிழ்ச்சி கொண்டார்கள். "அட சனியனே! ஈரோட்டுக்கே போட்டானா?" என்றார்கள். அலுவல் ரயில்வே ஸ்டேஷனிலும், உண்ணலும் தங்கலும் அய்யா வீட்டிலுமாக, மூன்றாண்டுகள் இருந்தேன். நான் இருந்த காலத்தில் ஈரோட்டில் அய்யா சுமார் பத்து இடங்களிலாவது குடியிருந்திருப்பார். எல்லாம் சொந்த வீடுகள்தாமே! ஈ. வெ. கி. சம்பத், ஈ. வெ. கி. செல்வராஜ், எஸ். ஆர். சந்தானம், எஸ். ஆர். சாமி ஆகியோர் அய்யா குடும்பத்தினர்; எனக்கு அரிய நண்பர்கள். செல்வனும் நானும் வா போ என்று பேசிக்கொள்ளுமளவு நெருக்கம். பி. சண்முகவேலாயுதம் எனக்கு நண்பர், தோழர், புரவலர், ஆலோசகர். பின்னாளில் எனக்குத் திருமணமாகி, நான் ஈரோட்டில் குடும்பம் அமைத்தபோது, தனது வீட்டில் ஒரு பாதியை இலவசமாக ஒதுக்கித் தந்து, அதற்குக் 'கவிஞர் இல்லம்' என்றே பெயரும் சூட்டினார். பெரியாரை முற்றிலும் புரிந்தவர்; அபாரமான விஷய ஞானம் உள்ளவர்; அய்யாவுக்கும் சண்முகவேலாயுதம் நம்பிக்கைக்கு உரியவர்! நாகரசம்பட்டி சம்பந்தமும், சண்முகவேலாயுதமும் இவ்வகையில் ஒத்த பண்பினர்.

இருவருடைய நட்பும் எனக்கு ஒரு தனிச் சொத்தாகும். ஈரோட்டில் லூர்துசாமி, ஆர். டி. முத்து, அங்கமுத்து, கருப்பையா, அப்பாவு ஆகியோரும் நல்ல நண்பர்கள் எனக்கு!

ஈரோட்டில் சம்பத்துக்கு என்னைத் தவிர வேறு நெருக்கமான நண்பர் கிடையாது. இதை அவரே சொல்வார். அவரும் நானும் சிந்தனையாளர் கழகம் ஒன்று (Free Thinkers' Association) அங்கே தொடங்கினோம்.

அய்யா ஊரிலில்லாத நேரங்களில் எனக்குச் சாப்பாடு பெரிய அய்யா வீட்டில். சம்பத்தோ செல்வனோ, என்னை வெளியில் உணவருந்த விட்டதில்லை. "நாயக்கரின் தத்துப் பிள்ளை" என்று நண்பர்கள் என்னைக் கேலி செய்வார்கள். "குடி அரசு" இதழில் என்றுமே சம்பளமில்லாத, நிரந்தர, கவுரவ ஊழியன் நான். மணியம்மையார் தனது கனிவான உபச்சாரங்களாலும், சிறப்பான சமையல் முறைகளாலும் என்னை நன்கு கவனித்து வந்தார்கள். எங்கள் குருகுல வாசத்தின் போதிருந்தே மற்றவர்களைவிட அம்மா அவர்களுக்கு என்னிடத்தில் அன்பும் மதிப்பும் அதிகம். என் வாழ்க்கையில் மறக்க முடியாத குருகுலவாசமே பொற்காலமாகும்.

1948-ல் எனக்குத் திருமணம். அய்யாவே நடத்தி வைத்திருக்கவேண்டும். ஆனால் செப்டம்பர் 9-ல் முல்லை வடிவேலு திருமணத்துக்கு, அய்யா முன் கூட்டியே ஒத்துக் கொண்டதால், 'அண்ணாவை அழைத்துப்போ' என்று கூறினார். அப்போது இருவர்க்கும் இடையில் ஊடல் குறைந்திருந்த நேரம். 'அய்யாவிடம் கடிதம் வாங்கி வா' என்றார் அண்ணா. சரியென்று எழுதி வாங்கி வந்தேன். அண்ணா, சம்பத், கே. கே. நீலமேகம், சேலம் ஏ. சித்தையன், டி. கே. சீனிவாசன், சண்முகவேலாயுதம் ஆகியோர் வந்தனர். மன்னை நாராயணசாமி (மாமா) வரவேற்பாளர்.

ஊருக்குப் போக அய்ம்பது ரூபாய் அய்யாவிடம் கை மாற்று வாங்கினேன். என் திருமணம், முடிந்து திரும்ப ஈரோடு வந்ததும் அதைத் திருப்பித் தந்தேன். Write off செய்துவிட்டேன் போ என்றார். திருமண அன்பளிப்போ?

1949-ல், குடும்பத்துடன் நான் மாயூரத்திலிருந்து அலுவல் பார்த்தபோதுதான், இயக்கத்தில் பிளவு நேரிட்டது. 'நமக்கென்ன; அரசு ஊழியர்தானே?' என்று நடு நிலை வகித்தேன். அய்யா என்னிடமிருந்த நம்பிக்கையோடும் அன்போடும்; மணியம்மையாரைத் திருமணம் செய்த பின்னர்; அவரோடு வந்து, முதல் தடவை மூன்று நாட்களும், அடுத்த தடவை இரண்டு நாட்களும், என் வீட்டில் தங்கிச் சென்றார்கள், ஓய்வாக!

அப்போது என் தகப்பனார் சுந்தரமூர்த்தி, அய்யாவிடம் "You should not have missed Mr. Annathurai" என்றார். அய்யா சிரித்துக் கொண்டார்.

1951-ல் திருச்சியில் பெரியார் மாளிகையில் அய்யாவைப் பார்க்க மாயூரம் நண்பர் காந்தியும் நானும் சென்றிருந்தோம். அய்யா என்னிடம் கொஞ்சம் மாறுபாடாக நடந்து கொண்டதுபோல் தோன்றிற்று! இரவு நேரம்; 'சாப்பிட்டு வா' என்றார். அம்மா பரிமாறினார்கள். உண்டு வந்து எதிரில் உட்கார்ந்தேன். "ஏம்பா! இந்த அண்ணாத்துரை, சம்பத்து, கருணாநிதி இவுங்கள்ளாம் மாயவரம் வந்தா, உன் வீட்லதான் தங்குறாங்களாமே?" என்று கோபத்துடன் அய்யா கேட்டார். "ஆமாங்க!" என்றேன் தயங்காமல், தவறென்று கருதாமல்! "அப்ப சரி!" என்று கூறிவிட்டு, அருகிலிருந்த பத்திரிகையைக் கையில் எடுத்துப் படிக்கத் தொடங்கினார் அய்யா! எட்டாண்டு அனுபவம்; எனக்கா புரியாது?

தன் வீட்டுப் பிள்ளை; இவன் தனக்குத் துரோகம் செய்தவர்களோடு கூடிக் குலவிவிட்டு, அதைப் பற்றிச் சிறிதும் வருத்தப்படாமல், ஆமாம் என்றும் ஒத்துக் கொள்கிறானே, என்ற ஆதங்கமும் ஆத்திரமும் அய்யாவிடம் மிளிரக் கண்டேன். இனி சமாதான முயற்சி நடக்காது. "போயிட்டு வாரேனய்யா!" என்று சொல்லிவிட்டு, உள்ளே சென்று மணியம்மையாரிடம் விவரம் கூறி, விடை பெற்று வந்தவன்தான்! பதினாறு ஆண்டு கழித்துதான் மீண்டும் அய்யாவைச் சந்தித்தேன்.

இந்தச் சம்பவத்தைக் கேட்டபோது, அண்ணாவும் சம்பத்தும் வருந்தினர். ஆனால் கலைஞர் மகிழ்ந்தார். "நீங்கள் மட்டும் அய்யாவுக்கு நல்ல பிள்ளையா?" என்று சில காலமாக இவர் என்னைக் கலைத்து வந்தவர். இனி என் சார்பு இவர் பக்கம் முழுமையாக இருக்குமல்லவா? அதனால் இவருக்கு மகிழ்ச்சி!

இடைக் காலத்தில் நான் அய்யாவைச் சந்திக்காவிடினும், என் பிள்ளைகளை அனுப்பி வந்தேன். அய்யாவும் அம்மாவும் மகிழ்ச்சியோடு விசாரிப்பார்கள். "அப்பாவைப் போலவே இருக்கிறீர்களே? (அப்பாவியாக)" என்பாராம் அய்யா!

1967–க்குப் பிறகு அடிக்கடி சந்தித்தேன். "அண்ணா காவியம்" எழுதி முடித்த பிறகு, அய்யாவிடம் மதிப்புரை வாங்க விரும்பினேன். கையெழுத்துப் பிரதியைக் கொண்டு போய்க் கொடுத்து, என். எஸ். சம்பந்தம் அவர்களை நினை ஊட்ட வேண்டினேன். 15-12-72 அன்றையத் தேதியிட்டு, அய்யா அவர்கள், பாராட்டுரை என்ற தலைப்பில், தம் கைப்பட மதிப்புரை எழுதித் தந்தார்கள். "அண்ணா காவியம்" நூலில் அதை அப்படியே பிளாக் செய்து அச்சிட்டுள்ளேன். அதில் ஒரு பகுதியில் அய்யா அவர்கள்...

15-12-72

என்று குறிப்பிடுகிறார்.

அய்யா அவர்களே இப்படிச் சொல்லி விட்டதனால்தானோ என்னவோ, நான் முதன்முதலாக இந்த உரை நடை நூலை எழுதத் துணிந்தேன்! ஏனெனில், என்னுடைய பூக்காடு, கனியமுது, சுமைதாங்கி, அண்ணா காவியம் ஆகியவை கவிதை நூல்களாகும். இந்த முதலாவது உரை நடை நூலிலும், என்னுடைய நடை என்பதாக எதையும் கையாள இயலவில்லை! அய்யாவைப் பற்றிய நூலானாலும், அய்யாவின் உரைகளை அப்படியே எடுத்தாள வேண்டியிருப்பதாலும் நான் எனக்கென ஒரு தனி நடையையோ, கருத்தையோ இங்கு வெளிப்படுத்திட வாய்ப்பில்லை.

அண்ணாவோடு நான் பழகியதற்குக் காணிக்கையாகச் சிறு நூலாயினும் 'முழு நூலாகவும், அண்ணாவுக்கு என் கவிதைகளில் இருந்த ஈடுபாடு • காரணமாகக் கவிதை நூலாகவும் அண்ணா காவியம் இயற்றினேன். கலைஞர் வெளியிட்டார். தமிழகத்துப் பல்துறைச் சான்றோரும் ஆன்றோரும் ஏராளமாக அதைப் பாராட்டி முடித்து விட்டனர்.

என் இயல்பின்படி அய்யாவுக்கும் "பெரியார் காவியம்" என்ற கவிதை நூலினைத்தான் இயற்ற எண்ணி, ஓரளவு தொடக்கமும் செய்திருந்தேன். இந்நிலையில் ஓர் நாள், என் நண்பர் மூவேந்தர் அச்சக உரிமையாளர் முத்து, என்னைத் தொலை பேசியில் அழைத்துப் "பெரியார் வரலாற்றை நீங்கள் உரை நடையில் எழுதினால் பொருத்தமாயிருக்குமே! நண்பர் பி. எல். ராஜேந்திரனும் அப்படியே செய்யச் சொல்லி உங்களிடம் தெரிவிக்கச் சொன்னார். அதையும், இந்தப் பெரியார் நூற்றாண்டு விழா நிறைவிலேயே முடித்தால் நலமாயிருக்கும்" என்றார். இவர்கள் என் நலம் நாடுவோராதலின், தயக்கத்துடனேயே ஒத்துக் கொண்டேன்.

புத்தகத் துறை வித்தகரான என் உழுவலன்பர் ஒருவர் இக்கருத்தை ஆதரித்தார். துணிந்து விட்டேன். அவர் பல அரிய ஆலோசனைகள் வழங்கினார். அவ்வாறே, வாழ்க்கை

வரலாறு பற்றிய பொதுவான சில ஆங்கில நூல்களை உடனே நான் படிக்கத் தொடங்கினேன். ஆராய்ச்சிக் கண்ணோட்டத்துடனோ, விமர்சனக் கண்ணோட்டத்துடனோ நான் பெரியாரின் வாழ்க்கை வரலாற்றை எழுதப் புகவில்லையாதலால், நான் என்னென்ன படித்தேன் என்பதை இங்கு குறிப்பிடவில்லை. ஆனால் பெரியாரை நான் நன்கு படித்தவன்; என் சகாக்களில் மற்றவர்களை விட அதிக ஆண்டுகள் அவரோடு வாழ்ந்தவன்; அவர் அன்புக்கும் நம்பிக்கைக்கும் உரியவனாக விளங்கியவன் — என்ற தகுதியோடு இதை எழுதத் துணிவு பெற்றேன்.

பெரியாரே தன்னுடைய (Autobiography) சுயசரித்திரத்தை எழுதியிருக்க வேண்டும். சிந்திக்கவும், உரையாடவும், சொற்பொழிவாற்றவும், தலையங்கம் தீட்டவும், பயணம் செல்லவுமே அவருக்கு நேரமில்லை. ஓய்வாக அமர்ந்து தன் வாழ்க்கை வரலாறு எழுதிட அவரால் எப்படி இயலும்? 1939-40 ஆண்டுக்குப் பிறகு, பெரியாரின்வாழ்க்கை வரலாற்றைத் தொடர்ந்து எழுதிட, இன்னொரு சாமி சிதம்பரனாரும் உண்டாகவில்லை! சரி, இது வரையில் வேறு யாரும் பெரியாரின் வாழ்க்கை வரலாறு (Biography)எழுதத் தொடங்கவும் இல்லையாதலால் நாமே எழுதுவோம் என்று முடிவெடுத்து விட்டேன். ஆனாலும், திராவிடர் கழகத்தார், அய்யா அவர்களின் நூற்றாண்டு நிறைவில் ஏதாவது; வெளியிடக் கூடுமே என்ற அய்யம் எழுந்தது. அதனால், என் முடிவை அதிகார பூர்வமாக அறிவித்து விடுவோம் என்று கருதி, என் பழைய நண்பர் கி. வீரமணியைச் சந்தித்துத்,—"தந்தை பெரியார் என்ற தலைப்பில் அய்யாவின் முழுமையான வாழ்க்கை வரலாறு— A complete biography of Thanthai Periyar—in prose— எழுதப் போகிறேன். நீங்கள் எழுதுவதானாலும் நான் தடுக்க முடியாது. இந்தத் தலைப்பை மட்டும் எடுத்துக் கொள்ளாதீர்கள்—" என்றேன்.

"சரியான முடிவு! நீங்களே இதைச் செய்வதுதான் மிகப் பொருத்தம்"—என்று மகிழ்ச்சி தெரிவித்து, அன்பின் அடை

யானமாக ஒரு பார்க்கர் பேனா கொடுத்தார். இதற்குப் பிறகுதான் அரசுத்தரப்பிலிருந்து பெரியார் வாழ்க்கை வரலாறு வெளியிடப் போவதாக அறிவிப்பு வந்தது. 'அது மிகப்பெரிய அளவில் இருக்கும்; நம் புத்தகம் சிறியது தானே; ஒன்றையொன்று பாதிக்காது' என்ற துணிவு பெற்றேன்! (அரசுப் புத்தக அலுவல் இன்னமும் வளர்ச்சி பெறவில்லை.).

அய்யாவைப் பற்றி நமக்கு மற்றவர்களைவிட நிறையத் தெரியும்; சரியாகவும் தெரியும்; என்றாலும், எழுதும்போது மெய்ப்படுத்தும் ஆதாரங்கள் வேண்டுமே, எங்கே போவது? —அய்யாவைப் பற்றிய அனைத்துச் சான்றுகளும் ஒருங்கே கிடைக்குமிடம் பெரியார் பகுத்தறிவு நூலகம்—ஆய்வகம் ஒன்றுதான் என்பதை அறிந்து வைத்திருந்தேன். ஆனால், அது lending library அல்ல; அங்கேயே சென்றுதான் படிக்க வேண்டும் என்பது, நான் முன்னர் அறிந்திராத செய்தி. நானே அந்த நூலகத்துக்கு நூற்றுக்கணக்கில் நூல்கள் வழங்கிய வள்ளல்தான்! எனினும் விதி தளர்த்தப் பட முடியாதே! ஆகவே, எடுப்புச் சாப்பாடு, தண்ணீர், காப்பி சகிதம் ஆய்வகத்திற்குப் படையெடுத்தேன். காலை 10 மணி முதல் இரவு 8 மணி வரை ஓயாத உழைப்பு; ஒருவனாகவே! பெரியார் பகுத்தறிவு நூலகம் ஆய்வகத்துக்கு நான் எப்படி நன்றி பாராட்டுவதோ, தெரியவில்லை.

இடையிடையே சிற்சில வால்யூம் தவிரக் "குடிஅரசு" "திராவிடநாடு," "விடுதலை" ஃபைல்கள் நன்கு பராமரித்து வைக்கப்பட்டு, உதவியாயிருந்தன. சில ஃபைல்களை "விடுதலை" அலுவலகத்திலும் பெற்றேன். குறிப்பெடுத்து, வீடு திரும்பி, எழுதத் தொடங்கினேன். ஏறத்தாழப் பத்து மாதக் கடின உழைப்பு. இந்த அலுவல் தொடங்கிய நாள் முதல், அன்றாட முன்னேற்றம் குறித்து, டயரி எழுதத் தொடங்கினேன்; திரும்பிப்பார்க்க உதவுமே என்று! மலைப்பாகத்தான் தோன்றியது.

இந்த நூலை எழுதும்போதும் பதிப்பிக்கும்போதும் நான் யாரையும், எதையும் சார்ந்து இருக்கவில்லை;

யாருக்கும், எதற்கும் கட்டுப்பட்டு இருக்கவில்லை; யாருடைய, எதனுடைய தாட்சண்யத்திற்கும் ஆட்பட்டு இருக்கவில்லை! எனக்குச் சரியென்று தோன்றிய முறையில், என் வசதிக்கும் விருப்பத்திற்கும் ஏற்ப எழுதத் தொடங்கினேன். அதையே ஒரு முழுமையான, நிறைவான வெற்றியாகவும் கருதுகிறேன். முடிந்தவரை, தவறில்லாத உண்மைகளை எழுதப் பெருமுயற்சி எடுத்துக் கொண்டேன். நிகழ்ச்சிகளை நிரல்படத் தொகுத்துள்ளேனே தவிர, என் கருத்துகளை எங்கும் திணித்திட முயலவில்லை. ஒரு சுயமரியாதைக்காரன் என்பதை மட்டும் மறக்காமல், எழுதினேன். தஞ்சையில், சுயமரியாதை இயக்கப் பொன்விழாவில் 22-1-76 அன்று மணியம்மையார், எனக்குக் கேடயம் வழங்கினார்கள். பெரியார் நூற்றாண்டு நிறைவுவிழாவில் 15-9-79 அன்று கி. வீரமணி, எனக்குப் 'பெரியார் பெருந்தொண்டர்' பட்டயம் வழங்கினார்.

தமிழில் சுய சரித்திரமும், வாழ்க்கை வரலாறும் பெருமளவில் எழுதப் படவில்லை. வெளி வந்துள்ள சில நூல்களில் சாமி சிதம்பரனார் எழுதிய ''தமிழர் தலைவர்'' மிகச் சிறந்த வாழ்க்கை வரலாற்று நூலாகும். பெரியதொரு தலைவரின் வாழ்க்கைச் சரித்திரம் என்பதோடு; ஒரு biography எப்படி எழுதப்படவேண்டும் என்பதற்கும் அது மிகச் சரியான எடுத்துக்காட்டாகும். 40 ஆண்டுகட்கு முன்னர் அது எழுதப்பட்டதாயினும், அந்நூல் என்றுங் குன்றாத பொலிவுடன் கூடியதாகும். அதைப்போல இன்னொரு நூல், அதே தலைவரைப் பற்றி எழுத முடியுமா? என்ற அய்யமும் அச்சமும் என்னை ஆட்கொண்டன. அவர் எழுதி முடித்துள்ள காலம்வரை, என் எழுத்தைச் சுருக்கிக் கொண்டேன். பிறகுதான் விரிவாக நடந்தேன். சாமி சிதம்பரனார் எங்கள் மாவட்டத்துக்காரர், எனக்கும் அறிமுகமானவர். அவர் எழுத்து வழிகாட்டிற்று. அடுத்து, 'இது பெரிய முயற்சி ஆயிற்றே; நம்மால் இயலுமா?' என்ற தயக்கம் பிறந்த போது, திருச்சி நண்பர் வே. ஆனைமுத்து, மனக்கண்முன் தோன்றினார். திருச்சி சிந்தனையாளர் கழகச் சார்பில்,

அவர் தொகுத்துள்ள பெரியார் சிந்தனைகள் மூன்று பகுதியும், மாபெரும் சாதனையாகும். அவரை எண்ணிய போது மலைப்பு ஓரளவு நீங்கியது.

தன்னையீன்ற சின்னத்தாயம்மையார் மறைந்தபோது பெரியார் எழுதியுள்ள கட்டுரை, மிகச் சிறந்த வாழ்க்கை வரலாற்று இலக்கியம். பன்னீர் செல்வம், நாகம்மையார் மறைவின்போது தீட்டியவை, ஒப்பற்ற கையறு நிலை இலக்கியங்கள். அய்ரோப்பியச் சுற்றுப் பயணத்தின்போது அவர் எழுதி அனுப்பிய மடல்கள், தலை சிறந்த பயணக் கட்டுரைகள். இராமாயண ஆராய்ச்சி ஒன்றே அவருக்கு பி. எச். டி. வாங்கித்தர வல்லது. தாமே நூற்றுக்கு மேற்பட்ட நூல்கள் எழுதியவர். இனிவரும் உலகம், தத்துவ விளக்கம் இரண்டும் ஆங்கிலத்தில் இருந்தால் நொபெல் பரிசு அவரைத் தேடிவந்திருக்கும். அவர் தீட்டிய தலையங்கம் அத்தனையும் ஈட்டியின்முனைகள். அவ்வளவு பெரும எழுத்தாளர், தமது சுயசரித்திரம் எழுதாமல் விட்டதால், எனக்குக்கூட அவருடைய வாழ்க்கை வரலாற்றை எழுதக் கூடிய தைரியம் பிறந்து விட்டதல்லவா?

உலகத்திலேயே தந்நிகரற்ற சுயசிந்தனையாளர், பகுத்தறிவு ஊற்று, தீர்க்கதரிசி, பெரியார். நல்வாய்ப்பாக இவருக்கு ஆங்கிலம் தெரியாது. தெரிந்தால், இவர் கருத்துகள் இரவல் என்றும் சொல்ல, இங்கு ஆள் இருப்பர்! உலகத்தில் எத்தனையோ சிந்தனைச் செல்வர்கள் வாழ்ந்திருக்கிறார்கள். சொல்லாகவும் எழுத்தாகவும் தங்கள் அறிவுக் கருவூலத்தை அவர்கள் வழங்கியுள்ளார்கள். ஆனால், பெரியாரைப் போலப் பகுத்தறிவின் அடிப்படையில் ஓர் இயக்கத்தையே உருவாக்கிய பெருமை பெற்றவர் உலகில் வேறு எவருமே இலர்! நிகழ்காலமும், எதிர்காலமும் இவரது இணையற்ற அறிவுச் சுரப்பைத் தொழுது வரவேற்கத் துடித்து நிற்கின்றன!

இத்தகைய ஒரு மாமேதையின் வாழ்க்கைச் சரிதம் வரைவது எளிதா? ஒரு சரித்திராசிரியரோ, நாவலாசிரியரோ தத்தம் நோக்கங்களை, விருப்பங்களைத் தம் நூலில் வலி

புறுத்த முடியும்; ஆனால், ஒரு வாழ்க்கை வரலாற்று ஆசிரியரால் இது இயலாது! தனக்குக் கிடைக்கும் எல்லா விதமான செய்திகளையும் திரட்டித், தன் நூலின் நாயகரின் உண்மையான குண நலன்கள் வெளியிடப்பட, எதையும் குறைத்தோ மறைத்தோ திரித்தோ கூட்டியோ கழித்தோ கூறாமல், அன்னாரின் பண்புகளைப் பிறர் அறிந் திடும் ஆர்வம் மிகுந்திட, மெய்யை உணரும் ஆவல் நிறைந் திடச், சுவை குன்றாது, அழகுடன் அமைத்துத்தரவேண்டும்.

அய்யாவோ நம் கண்முன் வாழ்ந்தவர். மூன்று தலை முறையினர் அவரை முழுமையாய் அறிவர். வாழ்க்கையில் இரகசியமே கிடையாது. அவர் பேச்சில்—எழுத்தில் தெளி வின்மையோ, குழப்பமோ, இருபொருள் தரும் தன்மையோ (ambiguity) இருப்பதில்லை. மூடிமறைத்துப் பேச அவர் அறியார். எல்லாமே வெளிப்படை. அச்சம் தயை தாட்சண்யத்துக்கு அப்பாற்பட்டவர். காலமெல்லாம் தாம் செய்வது நன்றி கிட்டாத பணி மட்டுமல்ல; யாருக்காகப் பாடுபடுகிறோமோ அவர்களே உண்மை புரியாமல் எதிர்க்கக் கூடிய பணி—என்பது நன்கு தெரிந்திருந்தும், அதனையே தொடர்ந்து ஆற்றி வந்தவர்.

அதனால், அவரைப்பற்றி எழுதவரும் போதே, சிலரது வெறுப்போ மறுப்போ எதிர்ப்போ ஏனமோ வரவேற்கும் என்பது தெரிந்தே தொடங்கினேன். நானும் நன்றி கிட்டாப் பணிசெய்ய அவரிடமே நன்கு பயின்றவனல்லவா? பெரியார் வரலாறு எழுதுகிறேன் என்று கேள்விப்பட்டதிலிருந்து பல நல்லெண்ண நண்பர்கள் எனக்குப் பாராட்டும் ஊக்கமும் நல்கினர். என் வறிய நிலை புரிந்தோர், தனிப்பட்ட, சொந்த முறையில் பதிப்பித்து, வெளியிடும் செய்கிறேன் என்றதும், வியந்தனர்.

பெரியார் வாழ்க்கை வரலாறு எழுதியதால், என்னை நான் தமிழ்நாட்டுஜேம்ஸ் பாஸ்வெல் என்று கருதிக்கொள்ள இடமுண்டு; எனினும், நான் அதற்கு ஒப்பவில்லை. காரணம் நான் பாஸ்வெல் ஆனால், தந்தை பெரியார் டாக்டர் சாமுவெல் ஜான்சன் ஆகவேண்டுமே! ஜான்சன் ஆங்கில

இலக்கியத்துறை ஒன்றில் மட்டும் நிகரற்ற மேதை. தந்தை பெரியாரோ அனைத்துத் துறைகளிலும் ஒப்பாரும்மிக்காரும் அற்ற சுயசிந்தனைப் பகுத்தறிவுச் சுரங்கம். அவரோடு ஒப்பிட்டுச் சொல்லத் தக்கவர் உலகில் யாருமிலர். எனவே பெரியாரின் தொண்டனாக இருந்தே இந்த எழுத்துப் பணியினை நிறைவேற்றியுள்ளேன்.

சென்னை வானொலி நிலையத்தில் 17-9-1978-ல் "பெரியார் ஈ.வெ.ரா. வின் சமுதாய சீர்திருத்தப் பணிகள்" என்ற தலைப்பில் 4 நிமிடங்கள்; 9-5-1979-ல் "பெரியாரின் இதயப் பாங்கு" எனுந் தலைப்பில் 12 நிமிடங்கள்; பேசவும் 24-12-1979 ல் "பெரியார் கண்ட சமுதாயம்" என்கிற தலைப்பின் கீழ் 20 நிமிடங்கள் கலந்துரையாடவும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. (வானொலிக்கு நன்றி) தஞ்சையில், திராவிடர் கழகம் நடத்திய பெரியார் நூற்றாண்டு நிறைவு விழாவின் முதல் நாள், 15-9-1979 அன்று, என் முன்னிலையில் கவியரங்கம் நடைபெற்றது.

அச்சுக்குப்போகும் வரையில் "தந்தை பெரியார்" நூலின் கையெழுத்துப் பிரதிகளை நான் யாருக்கும் காட்ட விரும்பவில்லை. எனக்கு அய்யமேற்படுங்கால், நினைவாற்றல் மிக்க நண்பர் என்.எஸ். சம்பந்தம் அவர்கள் துணையை நாடினேன். அவரும் மனம் உவந்து உதவினார். அச்சாகத்தொடங்கியதும், காகிதம் ஒரேமாதிரி கிடைக்காத பிரச்சினை. காத்திருப்பதால் பயனில்லை என்று கிடைத்த காகிதத்தில் அச்சியற்றினேன்.

அய்யாவின் அழகான transparency படம் ஒன்றை என் அருமை நண்பர் வழங்கினார். அதை முகப்பாக வைத்துத், தமது திறமையான ஓவியக் கோலங்களால், அட்டையினை அலங்கரித்திட, ஓவிய நிபுணரும் என் இனிய நண்பருமான கோபுலு கனிவு காட்டினார். அனுபவசாலிகளான சில நல்ல தோழர்கள்—அவர்கள் பெயரைக் குறிப்பிடுவது அவர்களுக்கே தீங்காக முடியலாம்!—அவ்வப்போது ஏற்ற யோசனைகள் அளித்தனர்.

எழுத்தாளரும் அச்சக உரிமையாளருமான அன்பர் ஜி.டி. முத்து, இதை அவர் சொந்தப் பணியாகவே ஏற்றுத் துவக்கமுதல் தொண்டாற்றினரர். கனரா பிரிண்டர்சார் மேலட்டையினை அழகுற அச்சிட்டனர். இவர்களுக்கெல்லாம் "நன்றி" என்ற மூன்றெழுத்தால் என் உள்ள உணர்வுகளை வெளியிட ஒல்லுமா?

இன்றைக்கு நம் நாட்டில் மட்டுமல்லாமல் உலக நாடுகள் பலவற்றிலும் பெரியாரை ஆய்வு செய்வதால், வரலாற்றில் உண்மைக்குப் புறம்பான செய்திகள் (Factual errors) வந்துவிடாமலிருக்க அதிகக் கவனம் செலுத்தினேன். என்னைமீறி ஏதாவது குற்றங் குறைகள் தவறுகள் பிழைகள் இருப்பின், அன்பர்கள் சுட்டிக் காட்டினால், வணங்கி ஏற்றுக்கொள்வேன்.

வணக்கம்.

எஸ். கருணானந்தம்.
24-12-1979

# 1. பிறந்தார்

**பெரியார் பிறக்கு முன்பு தமிழ் நாட்டின் நிலைமை—பெற்றோர், உடன் பிறந்தோர்—பெரியார் பிறந்த நாள் 17 செப்டம்பர் 1879.**

---

பெரியார் என்ற சொல்லுக்கு உரியார் உலகில் ஒரே ஒருவர்தாம் இருந்து வந்தார்; இன்றும் இருந்து வருகிறார்; இனி என்றுமே இருந்து வருவார். செயற்கரிய செயல்களைத் தொடர்ந்து செய்து முடித்துக் காட்டிய, ஈடற்ற வெற்றி கண்ட, இராமசாமி என்னும் அந்தப் பெருமகனை உலகம் பெரியார் இராமசாமி என்று போற்றிப் புகழ்ந்து, ஏற்றிப் பாராட்டியது. மனிதகுலம் அனைத்தையுமே தம் மக்கள் என்று கருதிச் சொந்தம் பாராட்டிப், பந்தம் பாசம் பரிவுடன் காட்டிய, அந்தச் சிந்தனைச் செல்வரை உலகம் தந்தை பெரியார் என்று சிந்தை மகிழ்வுறக் கொண்டாடுகின்றது.

விந்தைசூழ் மனிதரான அந்தப் பெரியார் இராமசாமி, இந்தச் செந்தமிழ் நாட்டில்தான் பிறந்தார், வளர்ந்தார், வாழ்ந்தார். தமிழ்ப் பெருங்குடியினரின் மூச்சுக் காற்றாகி உயிர்ப்பில் புகுந்து, ஊனில் கலந்து, உணர்வில் நிறைந்து இரண்டறத் தோய்ந்து, நிரந்தரமாய்ப் படிந்து போனார்.

அன்னார் பிறப்பதற்கு முன்னால், நமது தமிழ் நாட்டின் நிலை என்ன? தமிழ் மொழியின் கதி என்ன? தமிழ் மக்களின் தரம் என்ன?

உலகத்தில் முதன் முதலில் மனித இனம் தோன்றிய இடமே தமிழ்நாடுதான்—எனவே முதன் முதலில்

தோன்றிய மொழியும் தமிழ் மொழிதான்—எனவே தொன்மை வாய்ந்த தமிழகத்தில் தோன்றிய மனித இன மாகிய தமிழினமே மக்கள் குலத்தின் முதன்மை இனம்—என ஆராய்ச்சியாளர்கள் அறுதியிட்டு நிறுவியுள்ளனர். தமிழ் மக்கள் விந்திய மலையினைத் தாண்டி வடபுலத்திலும், கடலைக் கலங்களால் கடந்து ரோம கிரேக்க நாடுகளோடும் பர்மா, மலேயா, சீனம் போன்ற நாடுகளோடும் மேற்றிசை யிலும் கீழ்த்திசையிலும் வணிகம் நடத்தினர்; சில நேரங் களில் ஆட்சியினைக் கைப்பற்றி அரசும் நடத்தினர்.

உலகில் மிகச் சிறப்புடன் விளங்கிடும் உயர் தனிச் செம்மொழி தமிழ் மொழியே ஆகும். பழைய மொழிகளான இலத்தீன், கிரேக்கம், சமஸ்கிருதம் ஆகியவை சிதைந்தும் தேய்ந்தும் உலக வழக்கொழிந்தும் மறைந்தும் போயின. என்றுங் குன்றாத வளத்துடன் பழைமைக்கும் பழைமை யாய்ப் புதுமைக்கும் புதுமையாய், உலகவழக்கும், செய்யுள் வழக்கும் ஒரு சேரப் பெற்று, நிலவி வருவது நம் தமிழ் மொழியே ஆகும்.

சுமார் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் வரையில் தமிழ் மொழி ஒன்றே இங்கு வழக்கில் இருந்து வந்தது. வடமொழியின் ஆதிக்கத் தாக்குதலாலும், போக்குவரத்து வசதிக் குறைவுகளாலும், தமிழ்மொழி உருமாறித் தெலுங்கு என்று ஒரு பகுதியில் வழங்கப்பட்டது. இதனைப் பேசிய மக்கள் தமிழகத்தின் வடபகுதியில் நிறைந்தனர். வடமேற்குப் பகுதியில் வாழ்ந்தோர், சுமார் ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர் கன்னடம் பேசத் தொடங்கினர். எழுநூறு ஆண்டுகட்கு முன், மேற்குப் புறத்து மக்கள் மலையாளம் மொழியத் தலைப்பட்டனர். எனவே பழந்தமிழ் மொழியின் பண்பு கெடாமல், வழங்கப்பட்டு வந்த தமிழ் நாட்டின் எல்லையின் அளவு மட்டுமே சுருங்கியது.

(தமிழிலிருந்து தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு ஆகியவை பிறந்தன என்பது சரியல்ல; தமிழ்தான் திரிந்து வழங்கப்படுகிறது எனப் பெரியார் ஈ.வெ.ராமசாமி சான்று களுடன் ஆராய்ந்து நிறுவியுள்ளார்.)

தமிழ் நாட்டில் சங்ககாலம் என்றழைக்கப்படும் பொற் காலம் ஒன்று, என்றோ இருந்தது! அது சுமார் இரண் டாயிரம் ஆண்டுகட்கு முன் எனலாம். பரந்த விரிந்த அப் பண்டைத் தமிழகத்தைச் சேரர், சோழர், பாண்டியர் எனும் மூவேந்தர் சீரோடும் சிறப்போடும் ஆண்டு வந்தனர். தமிழ்மொழி செங்கோலோச்சி மிக உன்னத நிலையில் மேலோங்கி நின்றது. தமிழ் பயின்ற புலமைச் சான்றோர் அரசர்க்கே அறிவுரை பகரும் திண்மையும், வன்மையும் உடையோராயிருந்தனர். தமிழ்நாட்டில் அப்போது சாதி சமயங்கள் இல்லை. மதபேதங்கள் இல்லை. குலம்கோத்திரம் கிடையாது. ஆண்டான் அடிமைப் பிளவுகள் இல்லை. கடவுள்கள் பல இல்லை. காதலும் வீரமும் வாழ்வோடு பிணைந்திட்ட, இயற்கையோடு இணைந்திட்ட இன்ப வாழ்வு நிறைந்திட மக்கள் களிப்போடு உலாவந்தனர்.

உலக அரங்கில் மிகவும் மேலாக மதித்துப் போற்றப் படும் நிலையிலிருந்த தமிழகத்தில் கிறித்துவுக்குப் பின்னர் மூன்றாம் நூற்றாண்டிலிருந்து ஊறு நேரத் தொடங்கிற்று. தமிழ் நாட்டின் அகமும் முகமும் மாறிட அயலவர் நாகரிகம் அடிவைக்கத் துணிந்தது. களப்பிரர் என்னும் அந்நியர் படையெடுத்து, ஆட்சியினைக் கைப்பற்றித் தமிழ்ப் பண் பாட்டினை அழித்ததால் வடமொழி ஆதிக்கமும் படை யெடுத்தது; சமண பௌத்த மதங்களும் நுழைந்தன. மொழியிலும் பழக்க வழக்கங்களிலும் மாற்றங்கள் நிகழ்ந்தன. புராணக் கற்பனைகள் மக்கள் வாழ்க்கையில் ஊடுருவிப் புகுந்தன.

கிரேக்கக் கடவுள்களைப் போலவே உருவாக்கப்பட்ட கற்பனைக் கதாபாத்திரங்களைக் கடவுளாக வணங்கும் இழிவான நிலைக்கு இறங்கினர் மக்கள்.

வைதிக மதங்களான சைவம், வைணவம் இரண்டின் செல்வாக்கினால் உந்தப்பட்ட பல்லவ அரசர்கள் தமிழகத் தில் ஆட்சிக்கு வந்தனர்; இவர்கள் ஆளுகையில் சிற்பக்கலை வளர்ந்தது; கோயில்கள் பெருகின; சமண பவுத்த மதங் களை அடியோடு அழித்திட இவர்கள், தமிழ் மூவேந்தர்

களின் ஒத்துழைப்பும் பெற்றனர்; பாமர மக்களிடையே பக்தி மார்க்கத்தைப் பரப்ப இசைத் தமிழ் பெரிதும் உதவியது! (பவுத்தமும் சமணமும் மதங்களல்ல; கொள்கைகளே என்பது பெரியார் கருத்து.)

புராணக் கருத்துகள் தடையின்றிப் புகுத்தப்பட்டன; வடமொழிச் சொற்கள் தமிழில் ஏராளம் கலந்தன. தனித்தமிழின் திண்மை சிதைந்தது; நெகிழ்ச்சியும் தளர்ச்சியும் ஏற்பட்டு, எளிமை இனிமை என்ற முலாம் பூசப்பட்டது. இசையோடு குழைத்து, ஆகா நெறிகளை நுழையவிட்டனர். தமிழ் மக்களிடையே மத நம்பிக்கைகள் வெறிகளாய் மாறின. சாதிச் சழக்குகள் தோன்றின. மனுதர்மம் மர்மப் புன்னகை பூத்தது. மூடக் கருத்துகள் முளைவிட்டன. மவுடிகம் காரிருளாய்க் கவிந்தது.

தமிழகத்தில் மீண்டும் சோழப் பேரரசு தலைதூக்கியது. அரசர்கள் மதச் சார்புடையவர்களாக விளங்கியதால்,பெருங் கோயில்களை எழுப்பினர். கோயில்களைச் சார்ந்து வாழும் புரோகிதர், அருச்சகர், இசைவாணர், தேவதாசியர் முதலிய சாதிகள் தோன்றிப் பரவிப் பெருகி வந்தன. மானியங்கள், தானதருமங்கள் வரையின்றி வழங்கப்பட்டன. தமிழ் நாட்டில் வடமொழியின் ஆதிக்கம் தலைவிரித்து ஆடியது. பகுத்தறிவுக்கு ஒவ்வாத கருத்துகள் பக்குவமாய் ஊடுருவி மக்களின் அறிவுப் பெருக்கத்துக்கு அணை போட்டுவிட்டன. சிந்தனா சக்தியும், தர்க்கத்திறமையும் அற்றவர்களாய்த் தமிழ் மக்கள் ஆக்கப்பட்டனர்.

இதுவரையில் ஆண்டு வந்த தமிழ் மரபு மன்னர்களின் ஆட்சிக்கும் தமிழகத்தில் முடிவு நேரிட்டது. நாயக்கர்களும், மராட்டியர்களும், முஸ்லீம்களும், வெள்ளைக்காரர்களும் தொடர்ந்து ஆட்சிபீடத்தில் அமர்ந்தனர். இவர்களுக்கு நாடு–மொழி–மக்கள்–மீது உண்மையான பற்றுதல் ஏற்பட வழியில்லாமல் போயிற்று. மக்கள் போகும் போக்கிலேயே விட்டு, அவர்களது மத சுதந்திரங்களில் தலையிடாதது போல் நடித்து—ஆனால் உண்மையில் மதமாற்றங்களிலும்

டுபட்டுக், குழப்ப நிலையில் தமிழகத்தை ஆழ்த்தினர். சைவ, வைணவர்கள் கலை இலக்கியங்களின் வழியே மத நம்பிக்கைகளைப் புகட்டியது போன்றே, இஸ்லாமியர்களும் கிறித்துவர்களும் தமிழர்களிடையே தத்தம் மதக் கருத்து களைப் புகட்டிடத் துவங்கினர். வந்தாரையெல்லாம் வாழ வைத்தும், மதம் தந்தாரையெல்லாம் வழிகாட்டிகளாய் மதித்தும் தமிழகத்து மக்கள் தமக்குள் ஆயிரம் சாதி களாய்ப் பிளவுபட்டுக் கட்டுக்குலைந்தனர். தமிழ்மொழியில் தெலுங்கு, உருது, ஆங்கிலம் ஆகிய மொழிகளின் பல சொற்கள் விரவி, ஏற்கனவே வடமொழியின் இடைச் செரு கலால் தனித்தன்மை குன்றியிருந்த தமிழ்மொழியை மேலும் நோயாளி ஆக்கின.

பிரிட்டிஷ் ஆட்சி இரண்டு நூற்றாண்டுகள் நிலவி யிருந்தது. சிதறுண்டு கிடந்த இந்தியாவை ஆங்கிலேயர்கள் தான் ஒரே நாடு எனப் பிரகடனப்படுத்தனர். மொழி, கலாச்சார வேற்றுமைகளால், மாறுபட்ட பண்பாடுகளால், பல்லாண்டுகளாய்த் தனித்தனி நாடுகளாய் விளங்கியவற்றை யெல்லாம் வெள்ளையர், தம் துப்பாக்கி முனையால் ஒன்று படுத்திய பாவனையை உண்டாக்கினர். ஆங்கிலம் ஆட்சி மொழியாகியது. கல்விக் கூடங்கள், நீதி மன்றங்களில் ஆங்கிலமே ஆதிக்கம் செலுத்தியது. இந்தியரின் மதச் சுதந்திரங்களில் தலையிடுவதில்லையென பிரிட்டிஷ் அரசு உறுதி கூறிவிட்டது.

பாமர மக்கள் நலனுக்கென ஆங்கில அரசு பல புதிய திட்டங்களை விஞ்ஞான அடிப்படையில் புகுத்தியும் அவற்றை அனைவரும் அனுபவிக்க இயலவில்லை. சாதி மதங்களின் பேராலும், கடவுள் சம்பிரதாயங்களின் பேராலும், பாமரனின் வாய்ப்புகள் தடுக்கப்பட்டு வந்தன. மனுதர்மம் போன்ற ஸ்மிருதிகளின் அடிப்படையில் அமைந்த இந்துச் சட்டம் ஒரு குலத்துக்கு ஒரு நீதி வழங் கிற்று. யாரால் எப்போது உண்டாக்கப்பட்டது? இது ஒரு மதமா—அல்லது பல மதங்களின் கூட்டா? இது ஒரே மதமானல் ஏன் முரண்பட்ட பல்வேறு உட்கிளைகள்?

சைவ, வைணவப் பெரும் பிரிவும்; பல்வேறு உட்பிரிவுகளும்; அவற்றுக்கிடையே ஓயாத போரும் எதனால்? கோடிக் கணக்கில் கடவுளரும் கதைகளும் கற்பனைகளும் மலிந்து காணப்படுவது எவ்வாறு?—என்று விடை காண ஒண்ணாத பல் நூறு வினாக்கள் தொடுக்கக் காரணமாயுள்ள இந்து மதம், தமிழர்களின் வாழ்க்கையினூடே புகுந்து ஒற்றுமை குலைத்துச் சின்னாபின்னமாகச் சிதறடித்தது!

அடிமை வாழ்வில் சுகங்காண ஆரம்பித்தனர் தமிழ் மக்கள். அரசியலில் ஆங்கிலேயனுக்கு அடிமை; பொருளா தாரத்தில் ஜமீன் மிட்டா மிராசு வணிகர்க்கு அடிமை; சமுதாயத்தில் புரோகிதர்க்கு அடிமை! மொழித்துறையில் ஆங்கிலத்துக்கும் வடமொழிக்கும் அடிமை! கலைத்துறையில் புராண இதிகாசங்களுக்கு அடிமை! சாதி அமைப்பில் வர்ணாசிரமத்துக்கு அடிமை!

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழகத்து நிலைமை இதுதான்! தாழ்ந்து வீழ்ந்து கிடக்கும் மக்கள் தலை நிமிர, அவர்களைக் கைதூக்கி விட்டுக் கண்ணீரைத் துடைத்துக் கவலைகளைக் களைந்திடத் தனிப்பட்டவர்களோ அமைப்பு களோ இல்லவேயில்லை. சமரச சன்மார்க்கம் காண முயன்ற வடலூர் இராமலிங்க அடிகளார்க்குத் தமிழகத் திலேயே போதிய வரவேற்புக் கிட்டிடவில்லை. கண் மூடி வழக்கமெலாம் மண் மூடிப்போக; நால்வருணம் ஆசிரமம் ஆசார முதலா நவின்ற கலைச் சரிதமெலாம் பிள்ளை விளை யாட்டே, சதுர்மறை ஆகம சாத்திரமெல்லாம் சந்தைப் படிப்பே, என்ற அடிகளின் புதிய கருத்துகளை, ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவம் தமிழ் மக்களிடம் வளரவில்லை. மாறாக, அரைத்த மாவையே அரைத்திடும் போக்கில், வழக்கத்தால் செக்கைச் சுற்றி வரும் மாடுகள் போல், பழைய கருத்துகளையே, தத்தம் மொழியில், புதியன போல் புகுத்திய பலரைத், தமிழகத்தார் விரும்பி விரைந்து ஏற்றனர்! இராமலிங்கருக்குக் கிடைக்காத ஆதரவு அவர் காலத்தில் வாழ்ந்த வடநாட்டு இராமகிருஷ்ணருக்கு இங்கே

கிடைத்தது, என்ற வரலாறு இதற்கு உரிய மிகச் சரியான எடுத்துக் காட்டாகும்!

தண்டமிழ் இனத்தார், தம் பண்டைப் பெருமையெல்லாம் மறந்தும் துறந்தும், நிரந்தரமாய் அடிமைப்பட்டுச் சுதந்திரத்தைப் பெறவும் முனையமாட்டார்களோ என்று மிகப் பெரிய வினாக்குறியாய் வெடித்தெழுந்து தமிழர் நிலை அறைகூவல் எழுப்பிக் கொண்டிருந்த பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில்தான்—தமிழகத்தின் எழுஞாயிறாய், இருள் துடைக்க அருள் சுரந்து, பிறந்தார் நம் தந்தை பெரியார்!

பழந்தமிழ் மக்களால் கொங்கு நாடு என்று அழைக்கப்பட்டுத் தமிழகத்தின் மேற்புறத்தில் மேற்குத் தொடர்ச்சி மலைகளைச் சார்ந்துள்ள நாட்டின் ஒருபகுதியே இன்றையக் கோயமுத்தூர் மாவட்டம். அங்குள்ள ஈரோடு பெருநகரம் வணிகச் சிறப்புடையதாகும். பெரிய தொடர் வண்டிச் சந்திப்பும் ஆகும். வீட்டில் கன்னட மொழி பேசும் பலிஜ நாயக்கர் வகுப்பினைச் சார்ந்த வெங்கட்ட நாயக்கர், தம் மனைவி சின்னத்தாயம்மாளுடன், அன்றாடம் கூலி வேலை செய்து, பிழைப்பினை நடத்தி வந்தார். உழைப்பின் மேன்மையினை உணர்ந்திருந்த காரணத்தால், பின்னர், வண்டி, மாடுகள் வாங்கி, அவற்றின் வாயிலாக வருவாய்ப் பெருக்கம் தேடினார். நாள்தோறும், ஓய்வின்றி, அரிதின் முயன்று, தம் மனையாளின் அருந்துணையுடன், சிறு மளிகைக் கடை ஒன்றினை வண்டிப்பேட்டையில் துவக்கிய வெங்கட்ட நாயக்கர், தமது நாணயத்தாலும் நாநயத்தாலும், பெரும் மண்டிக் கடையின் உரிமையாளராக, விரைவில் மாறினார். பொருட்களை மொத்தமாகக் கொள்முதலும் விற்பனையும் செய்வதில் ஈடுபட்டு மிகத் தேர்ந்த வணிகரானார். ஈரோட்டில் நாயக்கர் என்றால் அவர்தாம்; நாயக்கர் மண்டி என்றால் வெங்கட்ட நாயக்கரின் மண்டிக் கடைதான்; நாயக்கம்மாள் என்றால் சின்னத்தாயம்மாள்தான் என்று நாடெங்கும் அறிமுகம் கிடைத்தது.

கூலிக்காரராய் வாழ்வு தொடங்கிய நாயக்கர்

ஊழையும் உப்பக்கம் காண்குவராய், உலைவின்றித் தாழாது உஞற்றிக், குன்றெனச் செல்வந் திரட்டி, வணிக வேந்தராய் விளங்கினார். பொருள் குவிந்திட்டால் புகழ் பெருகும்; தான தர்மங்கள் பெருகும்; நட்பும் சுற்றமும் நயந்து சூழும்; வீடு மாளிகையாகும்; மாளிகை சத்திர மாகும்; சத்திரத்தில் சாப்பாடு பெருகும்; அந்தஸ்து வளரும்; ஆதரவு நாடுவோர் அலை அலையாய் வருவர்; பக்தி பெருகும்; பாகவதர்கள் வருவர்; வீடே பஜனை மடமாய் மாறும்! இதெல்லாம் நாட்டு வழக்கந்தானே? நாயக்கர் மட்டும் விதி விலக்கா? பரம பாகவத சிரோமணியானார்; வைணவ சித்தாந்த வள்ளலும் ஆனார் வெங்கட்ட நாயக்கர். அறப்பணியும் திருப்பணியும் அளவு கடந்து செய்தும் தேவைப்பட்ட சிறப்புக் கிடைக்கவில்லை நாயக்கருக்கு! காரணம், திருமணமாகிப் பத்தாண்டுகள் கழிந்தும், சின்னத் தாயம்மாள் இன்னும் தாயாகவில்லையே! பக்தியும் விரதமும் நோன்பும் சிரத்தையும் பெருகின! தொடர்ந்தன!

வைணவ குலதிலகமாம் நாயக்கர் மனம் மகிழ (இரண்டு மூன்று பிள்ளைகள், பிறந்தவுடன் இறந்து போயினும்) கடைசியில், 1877—செப்டம்பர் 28-ஆம் நாளில் கிருஷ்ண சாமியும் 1879—செப்டம்பர் 17-ஆம் நாளில் இராமசாமியும் 1881-ல் பொன்னுத்தாயம்மாளும் 1891-ல் கண்ணம் மாளும் மக்களாய்ப் பிறந்தனர். நாயக்கர் மக்கள், நாடு போற்றும் நன்மக்களாய்த் திகழ்ந்து, மகன் தந்தைக் காற்றும் உதவி இவன் தந்தை எந்நோற்றான் கொல் எனுஞ் சொல்லுக்கு இலக்கணம் வகுத்தனர். ஆளுக்கொரு துறையில் புகழீட்டினர். எனினும், ஈரோடு வெங்கட்ட நாயக்கரின் இளைய புதல்வன் இராமசாமி, உலகமே கண்டறியாத ஒப்புயர்வற்ற சிந்தனைச் சுரங்கமாய், அறிவுச் சிகரமாய்க், கருத்துக் கருவூலமாய், எண்ணப் பெருங்கடலாய் எழுந்து நிமிர்ந்து உயர்ந்து ஓங்கி நின்ற பேருண்மை வரலாற்றினை, முறையோடு காண்போம்.

பெரியார் பிறந்தார், 1879-ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 17-ஆம் நாள் அன்று! ஆம்!

# 2. வளர்ந்தார்

பள்ளிப் படிப்பு—துள்ளித் திரியும் துடுக்கு — மாணவப் பருவத்தில் வாணிகம் புரிந்தார்—19 பிராயம் வரை—1879 முதல் 1898 முடிய.

கோவை மாவட்டத்தின் பெருங்குடி மக்களாகிய கொங்கு வேளாளர் சமூகத்திடையே, செல்வாக்கும் நல்ல மரியாதையும் பெற்றுத் திகழ்ந்தார் வெங்கட்ட நாயக்கர். பல அறக்கட்டளைகள், கல்விச் சாலைகள், மருத்துவ நிலையங்கள் நிறுவினார். திரண்ட செல்வத்தில் புரண்டெழுந்த போதிலும், பக்தி மார்க்கத்தைப் பரப்புவதை மறப்பதில்லை. வீட்டில் எந்த நேரமும் புராண கதா காலட்சேபங்கள், பஜனைப் பாடல்கள், வைணவ சமயத் தத்துவ விசாரணைகள் இத்யாதி, இத்யாதி......

கிருஷ்ணசாமியும் இராமசாமியும் முறைப்படி பள்ளிக்கு அனுப்பப்பட்டனர். மூத்த பிள்ளை பெற்றோருக்கு அடங்கிய பிள்ளையாய், நல்ல வைணவ சிரோமணியாய், நெற்றியில் நாமம் துலங்கப், பயபக்தியுடன் பள்ளி சென்று வந்தார். அங்கு கிடைத்த கல்வியின் எல்லை வரை சென்ற பின்பும், அத்துடன் விடாது, தனியே தமிழ், ஆங்கிலம், வடமொழி, பக்தி மார்க்க நூல்கள், சித்த மருத்துவ நூல்கள் யாவும் விரும்பிப் பயின்றார்.

ஈ. வெ. கிருஷ்ணசாமி "வைத்திய வள்ளல்" என்னும் சிறப்புப்பட்டம் பெற்று, இலவசச் சித்த மருத்துவ மனை ஒன்றினைத் தமது நேரடிப் பார்வையில் ஈரோட்டில் நெடுங்காலம் நடத்தி வந்தார். நெற்றியில் திருமண் இட்டியதால் ஏற்பட்ட தழும்பு இறுதி

வரை மறையவில்லை. ஆனால் தமது தம்பியாரின் கொள்கைகளைத் தாமும் ஏற்று, வைதிகப் பிடியிலிருந்து விடுபட்டு, இவரும் இறுதிவரை எல்லா நிலைகளிலும் பெரியாருடன் ஒத்துழைத்து வந்தார். பெரிய நாயக்கர் என்றே அழைக்கப்பட்ட இவருக்கு, முதன் மனைவி நாகம்மாள் வாயிலாய்ப் பிறந்த மகன் ரங்கராம், இங்கிலாந்தில் டாக்டர் சுப்பராயனுடன் கல்வி பயின்று வந்தவர் 20 வயதில் இறந்து போனார். தாயாரம்மாள் என்ற ஒரு மகள். பின்னர் இரண்டாவது மனைவியான ரங்கநாயகி அம்மாள் வாயிலாக மிராண்டா, சம்பத், செல்வராஜ், செல்லா, கஜராஜ் ஆகிய மூன்று ஆண், இரண்டு பெண் மக்கள் பிறந்தனர். திருப்பத்தூர் வழக்கறிஞர் சாமிநாயுடு மகன் கஜேந்திரன் மிராண்டாவையும், மகள் சுலோச்சனா சம்பத்தையும் மணந்துகொண்டனர். இவர்கள் அனைவர்க்கும் மக்கட்செல்வம் நிரம்ப உள்ளது.

இப்போது ஈ. வெ. கிருஷ்ணசாமி, ரங்கநாயகி அம்மாள், ஈ. வெ. கி. சம்பத், ஈ. வெ. கி. கஜராஜ் ஆகியோர் உயிருடன் இல்லை. ஈ. வெ கி. செல்வராஜ் நகரமன்றத் துணைத் தலைவராயிருந்தார்.

மூத்தபிள்ளைக்கு முற்றிலும் மாறுபட்ட குண நலன்கள் கொண்டவராய் இளையபிள்ளை இராமசாமி விளங்கினார். இளமையிலேயே இவருக்குப் பெற்றோரின் கண்டிப்பும் கட்டுப்பாடும் நேரடியாய்க் கிட்டாமல் போயிற்று. காரணம், இவர் தனக்குப் பாட்டி முறையுள்ள ஒருவரிடம் செல்லப் பிள்ளையாக இளம்பருவத்தில் வளர்ந்து வந்தார்.

இராமசாமி பயில்வதற்காக அனுப்பப் பெற்றது ஒரு திண்ணைப் பள்ளிக்கூடம். அது சாமான்யக் குடிமக்கள்—அதாவது—செக்கில் எண்ணெய் ஆட்டுவோர், கூடை முறம் முடைவோர், பீடி சுற்றுவோர் போன்ற அடித்தளத்தார்—அதிலும் பல்வேறு சாதிமத அடிப்படையில் அழுத்திவைக்கப் பட்டோர்—வாழும் இடத்தில் அமைந்திருந்தது. ஆறாவது வயதில் அங்கு நுழைந்த இராமசாமி, மூன்றாண்டுகள் அந்தத் திண்ணைப்பள்ளியில் இருந்தார்; பயின்றார் என்று சொல்ல முடியாது; குறும்புகள் புரிந்தார்; வரம்புகள் கடந்து சமுதாய சமத்துவ நெறி நின்றார்! ஆம்!

பரம பாகவதரும் உத்தம வைணவ பக்த சிரோமணியு மான வெங்கட்ட நாயக்கரின் இளைய பிள்ளை, பள்ளியில் பல திருவிளையாடல்கள் நிகழ்த்தினார். இவர் குடிப்பதற்குத் தண்ணீர் வேண்டுமானால் கூட, உயர் வகுப்பினரான உபாத்தியாயர் வீட்டில் மட்டுமே அருந்திடவேண்டும் என்பது பெற்றோர் உத்தரவு! இதை அன்றாடம் பள்ளிக்குப் புறப்படும் போதெல்லாம், பிள்ளைக்கு நினை வூட்டுவது அன்னையாரின் வாடிக்கை. அதனால் அந்த ஆணையைக் கடைப்பிடிக்கக் கருதிய மகனார், பள்ளி ஆசிரியராகிய சைவ ஒருவரார் வகுப்பைச் சார்ந்தவருடைய வீட்டில் தண்ணீர் அருந்தச் செல்வார். இவரை எச்சில் படாமல் குவளையைத் தூக்கிக் குடிக்கச் சொல்வார்கள். தண்ணீர் அருந்திய பாத்திரத்தைக், கீழே கவிழ்த்து வைக்கச் சொல்லித், தண்ணீர் தெளித்துப், புனிதப்படுத்தி, உள்ளே எடுத்துக் கொள்வார்கள். சிலநேரங்களில் இவருக்குத் தண்ணீர் தரவும், தயங்குவார்கள்!

இளம் உள்ளத்தில் இந்த உயர்சாதி மனப்பான்மையைப் பற்றி இராமசாமி நன்றாகப் பதித்துக்கொண்டார். பின்னர், ஆசிரியரிடம்கூட உண்மையை வெளியிடாமல், தண்ணீர் குடிக்க வெளியில் செல்லும் போதெல்லாம், தனக்கு விருப் பத்துடன் தர இசைகின்ற பிறசாதியினர் வீடுகளை நாடினார். வாணியச் செட்டியார், இஸ்லாமியர், முறங் கூடை பின்னுவோர் இவர்கள் வீடுகளில் நாயக்கர் வீட்டுப் பிள்ளைக்குத் தண்ணீர் தந்தனர். தடையில்லை, தயக்க மில்லை. இராமசாமியின் பெற்றோர் அறிந்தால் வெறுப் பார்களே என்று அவர்கள் அஞ்சியபோது, இராமசாமியோ அச்சம் தேவையில்லை என்றார். நாட்கள் செல்லச் செல்ல இராமசாமியின் செயல் இந்தத் துறையில் தீவிரமடைந்தது. தண்ணீரில் தொடங்கியவர், தின்பண்டங்கள் அருந்துவது வரையில் துணிந்து சென்று விட்டார். இவர்கள் வீட்டுப் பிள்ளைகளுடன் அதிகம் நெருங்கிப் பழகவும் தொடங் கினார் இராமசாமி.

ஆச்சார அனுஷ்டானங்கள் மிகுந்து, வைதிக மனப்பாங்கு பெருகித், தம்மை உயர்வகுப்பு வைணவப் பார்ப்பனர் போன்றே கருதிக் கொண்டு வாழ்ந்து வந்த வெங்கட்ட நாயக்கரும், சின்னத்தாயம்மையாரும் தமது இளைய புதல்வனின் இந்த அடாத செயல்களைக் கேட்டுத் துடிதுடித்துப் போயினர். கண்டவர் வீடுகளில் சாப்பிடுவது தவறு எனக் கண்டித்துக் கோபித்தனர். பயன்தராது போகவே, மகனின் கால்களில் விலங்குக் கட்டைகளைப் பூட்டி வருத்தித் தண்டித்தனர்.

மூன்றாண்டுகள் திண்ணைப் பள்ளிக் கூடத்திற்கும், இரண்டாண்டுகள் ஆங்கிலம் போதிக்கும் பள்ளிக்கும், இராமசாமியைப் பெற்றோர் அனுப்பி வந்ததுகூட, அவர் படிக்க வேண்டும் என்ற நல்ல எண்ணத்தால் அல்ல; வீட்டிலிருந்து தொந்தரவு தருவதைவிட, எங்கோ வெளியில் சென்றுவிட்டாவது வரட்டுமே என்ற எண்ணத்தால்தான்!

பத்தாவது வயதிற்குள் பள்ளிஆசிரியர்கட்கும் பெற்றோருக்கும் தீராத தலைவலியைத் தந்து வந்த இராமசாமி, தமது அய்ந்தாண்டுப் பள்ளி வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைத்துக்கொண்டார். பிள்ளைக்குப் படிப்பு ஏறாது என்று கண்டறிய அய்ந்தாண்டுகள் பிடித்தனவாம் அவர்கட்கு! படிப்பு ஏறவில்லை என்றாலும், தமது மகனின் அறிவுத்திறன், ஆற்றல், கூர்மை இவைகளில் தந்தையார்க்கு மெத்த நம்பிக்கையுண்டு. படிப்பில் கவனஞ் செலுத்தாவிடினும் இராமசாமியைத் தொழிலில் நுழைத்து விட்டால், உழைத்து உயரும் தன்மை நிரம்ப அவருக்கு இருப்பதை, வெங்கட்ட நாயக்கர் உணர்ந்து, அவரைத் தமது ஏலமண்டிக்கே அழைத்துக்கொண்டார்.

தமது பன்னிரண்டாவது வயதிலேயே, இந்தச் செல்வந்தரின் திருக்குமாரன், மண்டிக்கடையில் மூட்டைகளில் குறிப்பு எழுதுதல், ஏலங்கூறுதல், சரக்குகளை உயர்ந்த விலைக்கு விற்றல், வாடிக்கையாளரை நழுவவிடாமல் பற்றுதல் ஆகிய செயல்களை மிகுந்த ஆர்வத்துடன் செய்து வந்தார். தந்தையார்க்கும் மகன்மீது பாசமும் பற்றும்

வளரத் துவங்கின. மிகத்தேர்ந்த வணிகராக மாறிவந்தனர் நமது ஈ. வெ. இராமசாமி!

வணிகராயினும், பிறவிக் குறும்பு குறைவாகிப் போகுமா? வைணவ மதவாதிகளின் புகலிடமாக அப்போதெல்லாம் வள்ளல் வெங்கட்ட நாயக்கரின் இல்லம் இலங்கியதே! வருவார் போவார் ஏராளம். சாதுக்கள், சந்நியாசிகள், பாகவதர்கள், பக்திமான்கள், வித்வான்கள், பண்டிதர்கள், சமயப் பிரச்சாரகர்கள்—இப்படி எந்த நேரத்திலும் வீடே அமர்க்களமாக விளங்கும். சைவ வைணவப் புராண இதிகாசக் கதா காலட்சேபங்கள் அடிக்கடி நிகழும்.

இராமசாமிக்கு இவற்றைக் கேட்பதில் தனியானதொரு நாட்டம் பிறந்தது. தாமே படித்து அறியவில்லை எனினும் இராமாயணம், பாரதம், பாகவதம், மற்றும் புராணங்கள் இவற்றையெல்லாம் கேட்டறிந்தே தமது அறிவினைக் கூர்மையாக்கிக் கொண்டனர். சமயக்கருத்துகள், சாத்திர சரித்திர தர்க்க வாதங்கள் யாவும் கேள்வி ஞானத்தினாலேயே உணர்ந்தார். இவற்றை அதிகமாகக் கேட்கக் கேட்க, அவருள்ளே எதிரிடையான பயன் உருவாகத் தொடங்கிற்று. தர்க்கத்திறன் வளர்ந்தது. ஏன்? எதற்காக? எப்படி?என்ற கேள்விகளை எழுப்பும். முனைப்பு பெருகிற்று. வாதம் புரிய வேண்டும் என்று வேணவா எழுந்தது.

ஆதரவாளரின் அருமருந்தன்ன செல்வன், தம்மிடம் விதண்டாவாதம் பேசும்போது, பண்டிதர்கள் கோபித்துக் கொள்ள முடியாதே! அவர் கேள்விக்கு ஏற்ற பதிலைத் தந்திட அவர்களிடம் சரக்கு ஏது? தடுமாற்றம், தாறுமாறாகப் பிதற்றல், மாறுபடக் கூறல் இவைதாம் பதில்களாகக் கிடைத்து வந்தன இராமசாமிக்கு. விளையாட்டாகவும் பொழுதுபோக்காகவும் தொடங்கிய இந்த வேலையினால், நாளடைவில் இராமசாமிக்குக் கடவுள், மதம், சாஸ்திரம் இவற்றின்மீது நம்பிக்கையில்லாமலே போய் விட்டது!

நூல்களைப் பயிலாமலே கேள்வித்திறனால் கண்டாரைக் கதிகலங்கவைத்த இராமசாமி, அந்த இளம்பிரா

யத்தில் செய்த திருவிளையாடல்கள் பல. கடைவீதியில் இவரது மண்டிக் கடை செல்லும் வழியில் இருந்தது ஓர் அய்யரின் கடை. தினந்தோறும் அவரிடம் வாதம் புரிவது இராமசாமிக்கு உற்சாகமான காரியம். எல்லாம் தலை விதிப் படி நடக்கும்; அவனன்றி ஓரணுவும் அசையாது என்பது அய்யரின் அசைக்க முடியாத நம்பிக்கை. இந்தக் கருத்தை ஆணித்தரமாக எடுத்துரைத்து இராமசாமியிடம் வாதாடு வார் அய்யர். ஒரு நாள் கடையின் முன்புறத்தில் தூக்கி நிறுத்தப்பட்டிருந்த தட்டியின் காலை இராமசாமி கீழே தள்ளிவிட்டார். தட்டி நழுவி அய்யரின் தலைமீது வீழ்ந்து, பலத்த காயத்தை உண்டாக்கி விட்டது. தம்மைத் திட்டிக் கொண்டே, தாக்கத் துரத்திய அய்யரைப் பார்த்து, இராம சாமி, "இது தலை விதிப்படி நடந்தது; எல்லாம் அவன் செயல்"—என்று பதிலடி கொடுத்தார்.

இவ்விதம், இயல்பாகவே இவரிடம் இம்மாதிரியான அறிவார்ந்த பண்புகள் நிரம்பியிருந்தன. தாராளமாகவும், அஞ்சாமலும், தயக்கமின்றியும் வாதமிடும் துணிவு இருந் தது. தம் வீட்டில் நடைபெறும் மத நம்பிக்கைக் காரி யங்கள் யாவுமே பொருளற்றவை; சடங்குகள் அர்த்த மில்லாதவை; செலவுகளெல்லாம் வீணானவை என்று இவர் பகுத்தறிவின் அடிப்படையில் சிந்தித்து வந்தார், சாதி வேறுபாடுகளால் சமுதாயத்தின் ஏற்றத்தாழ்வு மனப் பான்மைகளும், இவரது உள்ளத்தில் ஆழப் பதிந்ததால், அவை குறித்தும், இவர் தமது எண்ணத்தைத் தீவிரமாய்ச் செலுத்தி வந்தார்.

இப்படிப்பட்ட சூழ்நிலைகளில் இராமசாமி தமது வாணிபத் தொடர்பிலும் மேலோங்கி வளர்ந்து வந்ததால், பெற்றோர் இவரை வெறுத்தொதுக்க இயலவில்லை. இராம சாமிக்கு இப்போது பதினெட்டாண்டுகள் முடிந்து, பத் தொன்பது வயது தொடங்கிற்று.

இந்தக் கால கட்டத்தில் தமது தந்தையார்க்கு இருந்து வந்த சமுதாயநிலை என்ன என்பதைப் பின்னாட்களில்

ஈ.வெ.ரா. எப்படி எடுத்துக் காட்டுகிறார்:—“முன்பு எனது தகப்பனார் ஈரோட்டில் முனிசிபல் கவுன்சிலர், பிரபல வியாபாரி. சுமார் 100, 150 ரூபாய் இன்கம் டாக்ஸ் கட்டி வந்தவர். அவரை அக்காலத்தில் 12 ரூபாய் 15 ரூபாய் மாதச் சம்பளம் வாங்கும் முனிசிபல் பில் கலெக்டர்—பார்ப்பனன்—வரிவிதிப்பு விஷயமாக ஒரு விண்ணப்பத்தை நேரில் பார்த்துப் பைசல் செய்ய மண்டிக் கடைக்கு வந்து கூப்பிடுவான். அப்படிக் கூப்பிட வந்தால் அவனைக் கண்டதும் என் தகப்பனார் எழுந்து ‘‘ராவால ராவால தேவுடா (வரவேணும் வரவேணும் ஸ்வாமி)’’ என்று இருகை கூப்பிக் கும்பிட்டு, உட்காரச் சொல்லிவிட்டு நின்று கொண்டேயிருப்பார். அப்பார்ப்பன பில் கலெக்டர் தலையை ஆட்டிவிட்டு உட்கார்ந்து கொண்டு ‘‘ஏமிரா வெங்கட்ட நாயுடு போத்தாமா ஆ இண்டினி சூசே தானிக்கி (ஏண்டா வெங்கட்ட நாயுடு அந்த வீட்டைப் பார்க்கப் போகலாமா?)’’ என்று கூப்பிடுவான். என் தகப்பனார் ஆஹா என்று சொல்லி அங்கவஸ்திரத்தைத் தலையில் கட்டிக்கொண்டு அவன் பின்னால் புறப்பட்டு விடுவார்.

ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு வந்தவுடன், மஞ்சள் மிளகாய் கருப்பட்டி வெல்லம் எல்லாம் ஒரு சாக்கில் கட்டி ஒரு பையனிடம் கொடுத்து, சுவாமிகள் வீட்டில் கொடுத்துவிட்டு வா என்று சொல்லி, அவனை வழி அனுப்புவார். இதை நானே நேரில் பார்த்திருக்கிறேன்.

இதே மாதிரி எவ்வளவு பெரிய மிராசுதாரையும் ஒரு வக்கீல் குமஸ்தா பார்ப்பான் நாயிலும் கீழாக மதித்து அடாபுடா என்று பேசுவான். இதுவும் நான் கண்ணால் பார்த்ததேயாகும்.”

சுயமரியாதை இயக்கத்துக்கு முன்பு, பார்ப்பனர்கள் நிலையும் உணர்ச்சியும் எப்படி இருந்தன? இப்போது எவ்வளவு மாற்றமடைந்துள்ளன என்பதை உணர்ந்தவர்களுக்கு இது நன்கு புரியுமே!

# 3. மணந்தார்

**இல்லறமாகிய நல்லறம் மேற்கொள்ளல்— வாழ்க்கைத் துணையாய் வந்து வரலாறு படைத்த வீரப் பெருமாட்டி—பெரியாரின் முதல் ஆறாண்டு மணவாழ்வு— 1899 முதல் 1904 வரை.**

---

முரட்டுத்தனமாய்த் துள்ளித் திரிந்து, மிரட்டி வருகின்ற காளை மாட்டுக்கு, மூக்கணாங்கயிறு மாட்டுவது போலத், துடுக்கு மிகுந்த பிள்ளையை அடக்கிட, இராமசாமிக்கு மணம் பேச முனைந்தனர், வெங்கட்ட நாயக்கரும் சின்னத்தாயம்மாளும். வயதோ பத்தொன்பது; பிறந்ததோ செல்வந்தர் வீட்டில்; நண்பர்களோ, எதற்குந் துணிந்தவர்கள்; சுபாவமோ கட்டுப்பாடற்றது! இந்தச் சூழ்நிலையில் இராமசாமியின் நாட்டம் விலைமாதர் இல்லங்களை நோக்கிச் செல்லத் தொடங்கிற்று எனப் பெற்றோர் கேள்வியுற்றபின் வாளா இருப்பரோ? செல்வச் செருக்கில் செம்மாந்து நிற்கும் தமது செழுமைக்கேற்ற நல்வளமை நிறைந்த இடத்தில், இளமையும் எழிலும் பொருந்திய பெண் கிடைக்குமா, என உறவினர்க்கெல்லாம் தூது விடுத்தனர்.

பெற்றோர் பார்த்து யாரை யாருக்குக் கட்டி வைக்கிறார்களோ, வெட்டிப் பேசாமல், அட்டியின்றி அதனை ஏற்று, ஒட்டிப் போகும் பண்பாடும் பழக்கமும் நிலவி வந்த குடும்பம்; காலமோ இருபதாம் நூற்றாண்டின் விடிவெள்ளி கூட முளைக்காத நேரம்! இந்தச் சுற்றுச் சார்பில் வளர்ந்த

பிள்ளையாயினும், இராமசாமியின் போக்கும் நோக்கும் தனித்தன்மை பெற்றவை அன்றோ? எனவே நான் தாய் தந்தையரின் விருப்பத்துக்கு முரண்பட்டுத் தமக்கு வேறொரு பெண்மீது நாட்டமென்றும், மணந்தால் அந்தப் பெண்ணை மணப்பதாகவும் உறுதியாகக் கூறிவிட்டார் இராமசாமி! பெற்றோரின் கற்பனைக் கோட்டை தகர்ந்து தூளாயிற்று. 'சரி, வேறு வழியில்லை; இந்தப் பிள்ளை யாண்டான் சொந்த விருப்பத்தின்படியே நடப்பான்; சொன்னால் கேட்க மாட்டான்! யார் அந்தப் பெண் பாவை?' என்று விசாரித்தனர் பெற்றோர்.

சின்னத்தாயம்மையாரின் தம்பி உறவுடைய சேலம் தாதம் பட்டி ஹெட்கான்ஸ்டபிள் ரங்கசாமி நாயக்கருக்கு மனைவி பொன்னுத்தாயம்மாள் மூலமாக தேவராஜன் என்ற ஒரு மகன், முத்தம்மாள், நாகம்மையார் இரு பெண் மக்கள். அவர்களில் இளைய பெண் நாகம்மை பதின்மூன்றாண்டு பிராயத்தில் இருந்தது. அதற்கு இராமசாமியார் மீது உள்ளூறக் காதல். சமுதாயத்தில் நடுத்தர வர்க்கக் குடும்பத்தைச் சார்ந்த அந்தப் பெண், தனது மன நாட்டத்தை வெளிப்படுத்தியும், தகுதிக்கு மீறிய செயல் எனத் தடுத்திட்ட அதன் பெற்றவர்கள், யாரோ ஒரு பண்பாடற்ற பணம் படைத்த முதியவருக்கு மூன்றுந்தாரமாக்க இசைவு தந்தனர். தன் காதல் போயின் சாதல் என்று நாகம்மை தற்கொலைக்குத் தயாராகிவிட்டது!

இந்த நாகம்மைதான் இராமசாமியின் உள்ளங்கவர்ந்த கன்னியாம் என, இரு சாராரும் தெள்ளிதின் உணர்ந்து கொண்டனர். பிறகென்ன? இப்படியாகப் போராடிப் புணைந்த புது மணவாழ்வில் இணைந்த இரு இளம் நெஞ்சங் களும் அளவிட ஒண்ணா அன்பு வெள்ளத்தில் ஆழ்ந்து திளைத்தன. உறுதியுடன் நின்று பெற்ற வெற்றித் திருமணம், இறுதிவரை இன்ப இணைப்பாகத் திகழ்ந்ததில் என்ன வியப்பு? முப்பத்தைந்தாண்டுகள் இந்த இலட்சிய

தம்பதிகள், ஒன்றிய மனத்துடன் நன்ருக வாழ்ந்து காட்டி, வரலாறு செதுக்கினர்.

மாணாக்கராயிருந்து அய்ந்தாண்டுகளை வீணாக்கிய போது, இராமசாமியின் பிள்ளை விளையாட்டுகள் பெரும் தொல்லையாயிருந்து வந்தன பெற்றோர்க்கு. ஓரளவு திசை திருப்பமாயிருக்கட்டும் என்று கருதியே திருமணவாழ்வில் ஈடுபடுத்தினர். தமக்கு முழுவிருப்பமற்ற பெண்ணை மகன் பிடிவாதமாக மணந்ததால் தமது வெறுப்பைக் காட்டிட வெங்கட்ட நாயக்கர், திருமணத்தன்று, உணவுக் கூடத்தி லேயே இருந்தனராம். அய்ரோப்பிய விருந்தினர் மணம் விசாரிக்க வந்தபோது மட்டும் வெளியே வந்தாராம். நாளடைவில் நாகம்மையாரிடம் மிகுந்த பாசம் கொண் டிருந்தாராம். பால்யக் குறும்புகள் வாலிபப் பருவத்தில் மறைந்தா போய்விடும்? பெற்றோரின் வைதிக சனாதனப் போக்குப் பிடிக்காமல் எதிரிடையாய் நடைபோட்டு வந்த இராமசாமி, அதேபோலத் தன் மனையாளும் தன்னையே பின்பற்றி வரவேண்டுமென விரும்பியது தவறல்லவே!

மாமனார் மாமியார் வைணவ சம்பிரதாயங்களில் மூழ்கி ஊறித் திளைத்துக் கிடப்பவர்கள். தம் மருமகளுக்கும் ஆச்சார முறைகளை அவ்வாறே புகட்டிவிட்டனர். நோன்புகள் விரதங்கள் சடங்குகள் பூசை புனஸ்காரங்கள் அனைத்தும் கற்பித்துத் தந்தனர். இராமசாமியின் அநாச் சாரப் பழக்க வழக்கங்களால் பெற்றோர் அவரைத் தொடக் கூட மாட்டார்கள். வேண்டுமென்றே அவர் தமது தாயா ரைத் தீண்டினால், தீட்டாகிவிட்டது என்று திட்டிக் கொண்டே அவர் மறுபடியும் 'ஸ்நானம்' செய்வார். இதே பாடத்தை நாகம்மையாருக்கும் போதித்தார்கள். முடியுமா?

இராமசாமி தம் மனையாட்டியைத் தம் வழிக்குக் கொணரப் பல முறைகளைக் கையாண்டார். நாகம்மையார் மூத்தோர் ஆணைப்படி மரக்கறி உண்பவர். அவர் தலை முழுகி விரதம் அனுஷ்டிக்கும் நாளில், தனக்குக் கட்டாயம் புலால் உணவு தேவையெனக் கணவர் அடம் பிடிப்பார். கொண்டான் குறிப்பறியும் பெண்டாட்டியோ, மாறாக

நடக்க முனைவாரா? தனியே சமைத்துத் தனியே பரிமாறி வேண்டுமளவு—வயிறு புடைக்க உண்ணுமளவு-அன்னாருக்குப் படைத்திட அவரை வீட்டுக்கு வெளிப்புறத்து முற்றத்திலோ தாழ்வாரத்திலோ அமர்த்திச் சாப்பிடச் செய்து விட்டுத், தாம் பிறகு நீராடிப், பூசை முடித்துத், தனியே சைவ உணவு சமைத்துத், தமக்கு எடுத்து வைத்துக்கொண்டு உண்ணப் போவார். அதுவரை வெளிப்புறத்திலேயே பதுங்கியிருந்து, தாம் மென்று துப்பிய எலும்புத் துண்டுகளை எடுத்துவந்து, அம்மையாருக்குத் தெரியாமல் அவரது தனிச் சமையலில் மறைத்து வைத்துவிட்டு, வெளியேறுவார் இராமசாமி; அவ்வளவுதான்! இந்த எலும்பைக் கண்ட அம்மையார், அய்யோ, அய்யோ எனக் கதறிப் பதறித் தமது விரதம், பதியின் சதியால் இந்தக் கதியானதே என மாமியாரிடம் வழக்குரைப்பார். தீர்ப்பு மகன் பக்கம் சாயும். மருமகள் விரதம் கைவிட ஆணை பிறக்கும். மகனுக்கு வெற்றி; இனித் தடையில்லாமல் மாமிச உணவு கிடைக்கும்!

நாகம்மையார் பழமையில் ஊறிய பெண்தானே; மூட நம்பிக்கை, குருட்டு பக்தி இவற்றுக்கு ஆட்பட்டவர் தானே; தேர், திருவிழா, கோயில், உற்சவம் இவைகளைக் காண விருப்பம் கொண்டு கோயிலுக்குச் செல்வார். அவர் இன்னா ரென்றறியாத சில முரட்டு ஆட்களை இராமசாமி கூலிக்கு அமர்த்திக் கொண்டு, அம்மையாரைக் காட்டி "அவள் நமது ஊர்க்கோவிலின் புதிய தேவதாசிப் பெண்; அவளை எள்ளி நகையாடி, ஏளனம் ஏகடியம் செய்து வாருங்கள்!" என்று தூண்டிவிட்டுத் தாம் மறைந்திருப்பார். எய்து விடப்பட்ட அம்புகள் தம் பணியை இனிது முடிப்பர். ஏவியவரோ கள்ளத் தனமாய் நகைத்து நிற்பார். காலிகளின் கண் வீச்சுக் கணைகளைக் கண்டஞ்சும் நாகம்மையார், விரைந்து வீட்டுக்கு ஓடி, இனிக் கோயிலுக்கே செல்வதில்லை என, அங்கு நல்ல பிள்ளையாய் முன்னதாகச் சென்றிருக்கும் கணவரிடம் நடந்ததைக் கூறிச், சத்தியம் செய்வார்.

மனைவிக்குக் கணவன் தாலிகட்டுவது, அவளை என் றென்றும் தனக்கு அடிமையாக வைத்துக் கொள்வதற்காகத்

தான்; பெண்ணடிமை தீர்வதற்குப் பெண்கள் தாலி அணியாப் போராட்டம் நடத்தவேண்டும் என்பது இராம சாமியாரின் பிற்காலக் கொள்கை. இதற்கான முளை அப்போதே அவர் மூளையில் தோன்றிவிட்டது போலும்! பழங்காலப் பழக்கவழக்கங்களில் தோய்ந்து, பிடிவாதமாக, மாற்றங்களுக்கு இடங் கொடுக்காமல், மற்றவைகளை ஓரளவு விட்டுக் கொடுத்தாலும், இன்னமும் தாலியணியும் பழக்கத்தைத் தாய்மார்கள் விடாப் பிடியாய்க் கையாண்டு வருகிறார்கள். தாலியே பெண்களுக்கு வேலி; என்று, ஆண்கள் வேலிதாண்டுவதற்கு அனுமதியாகப், பழமொழி ஒன்றும் வழங்குவார்கள். கணவரிடம் மதிப்பு, மரியாதை குறைத்திடும் பெண்டிரும், தாலியிடம் குறைக்கமாட்டார் களே! புனிதம், தெய்வீகம், மங்கலம் இப்படியாக—மஞ்சள் மகிமை தாலிக்கு மிகவும் உண்டு !

இவ்வாறு போற்றிப் பாதுகாக்கப்படும் தாலியை வைத்து இராமசாமி, ஒரு சிறு விளையாட்டு நடத்தினார். இரவு நேரம். உல்லாச வேளை. சல்லாபம் நடக்கிறது. எல்லாமே இன்பமயம். தாலி எதற்கு இடையூறாக இந்த வேளையில் என்பதாகக் கொஞ்சிப் பேசிய இராமசாமி, தயங்கித் தடுத்த நாகம்மையாரை வஞ்சகமாய்ச் சரிக்கட்டி, அவருடைய தாலியைக் கழற்றித் தம் சட்டைப் பையில் வைத்துக் கொண்டார். காலையில் மறந்ததுபோல், அதே சட்டையைப் போட்டுக்கொண்டு கடைக்கும் போய் விட்டார். உறங்கி எழுந்தபின், நினைவின்றி இருந்த அம்மை யாருக்குத் தம் கணவர் வெளியிற் சென்ற பின்னரே, தாலி யின் நினைவு எழுந்தது. திடுக்குற்றவராய், அக்கம் பக்கம் பார்த்துத் தமது புடைவை முன்தானையால், கழுத்தினை மூடி மறைத்துக் கொண்டார். எவ்வளவு நேரத்துக்கு இது இயலும்? தமது பதற்றத்தினாலேயே, வெறுமையான கழுத்தை வெளியே காட்டிக் கொண்டார். கேலியாகவும் கடுமையாகவும் மற்ற பெண்டிர், தாலி எங்கே என்று கேட்டபோது, அம்மையார் தாமே முந்திக் கொண்டு, சமா தானம் கூறினார். "கணவர் நல்லபடியாக ஊரில் இருக்கும்

போது, தாலி இருந்தால் என்ன, இல்லாவிட்டால் என்ன? குடியா முழுகிவிடும்?'' என்றார். இனி என்ன? இராமசாமிக்கு இதிலும் வெற்றி!

துவக்கத்தில் எல்லாப் பெண்களையும் போல் பண்டைய வழிமுறைகளையே பின்பற்றி வந்த நாகம்மையார், அவையெல்லாம் தம் கணவருக்குப் பிடிக்காதவை என்பதைப் படிப்படியே உணர்ந்து, தாமே திருத்திக்கொண்டார். சமுதாயக் கொள்கைகளில் மட்டுமின்றி, அரசியல் கொள்கைகளிலும் கணவரையே அடியொற்றி நடைபோட்டார். விருந்தோம்பலில் அவர்க்கு நிகரானவர் எவருமிலர். பிற்காலங்களில் தமது கணவர் நாட்டுத் தொண்டுக்குத் தம்மை அர்ப்பணித்துத் தலைமைப் பொறுப்பேற்ற காலை, பெரிய சத்திரம் போல் விளங்கிய அவர் வீட்டில் வந்து தங்கி அன்னையாரின் அறுசுவை உண்டிகளை அருந்தி மகிழாதார் இல்லை! இந்தியாவிலேயே, முதன்முதலில் அரசியல் போராட்டக் களத்தில் குதித்துச் சிறைவாசம் ஏற்ற முதல் பெண்மணி நாகம்மையாரே ஆவர். கஸ்தூரிபா காந்திக்கும் இப்பெரும் புகழ் கிட்டியது கிடையாது! புறநானூற்று வீரத் தாய்மார்களுக்கு ஏற்றிச் சிறப்பிக்கப் பெறும் அத்தனை உயர்பண்புகளும் அம்மையாரிடம் நிறைந்து காணப்பட்டன. கற்ற கல்வி சொற்பமாயினும், கணவர் வழிநின்று கற்றுக் கொண்டது ஏராளம்!

கணவர் இராமசாமி சிக்கனத்துக்கே இலக்கணம் வகுத்தவர். நிறைய நண்பர்களும் தொண்டர்களும் வீட்டுக்கு உணவருந்த வரும்போதெல்லாம், ஏன் இவ்வளவு வகையான உண்டிகள், கறிகள் என்று நாகம்மையாரிடம் கடிந்துகொள்வார். அந்நேரங்களில் அவருக்கு மட்டும், சோறும் மோரும் சிக்கனமாய்ப் பரிமாறிவிட்டு, உழைத்து ஊர் சுற்றி, மக்கள் தொண்டாற்றும் மகன்களுக்கு விருந்துணவு படைப்பது அன்னையாரின் வாடிக்கை. மிகப்பெரிய கூடம் நிறைய இலைகளைப்போட்டுவிட்டுத்தான், வந்த விருந்தினரின் தலைகளை எண்ணுவார் அம்மையார்.

அன்புக்கும் பண்புக்கும் இருப்பிடமான நாகம்மை யாரைக் கொள்கைப் புடமிட்ட தங்கமாய்ப் பொலிவும் ஒளியும் பெறச் செய்த இராமசாமியின் இல்லற வாழ்வு இனிதே ஆறாண்டு காலத்தைக் கடந்தது. இன்ப மனை மாட்சியின் மங்கலச் சின்னமாய் இரண்டாவது ஆண்டில் பிறந்த ஓர் பெண் மகவும் ஐந்தே மாதங்களில் மறைந்து போயிற்று! பின்னர் மகப்பேறு வாய்க்கப் பெறவில்லை இராமசாமி—தம்பதியர்க்கு!

உலக மக்களினத்தையே தம் மக்களாய் ஏற்கவிருக்கும் பெருமகனுக்குத் தன்மகவு என ஒன்று உண்டா ?

இளமையிலேயே இராமசாமி பொய்ம்மையை வெறுத்து விலக்கி, எத்தகைய இன்னல் எதிர்கொளினும் மெய்ம் மையை நிலைநாட்டவல்லார் என்பதும், வணிகராயினும், தேவையற்று யார்க்கும் தீங்கு விளைத்திட நினையார் என்பதும் இனிது விளங்கிட, நல்ல நகைச்சுவை ததும்பும் நிகழ்ச்சி ஒன்றினை இங்கு நினைவு கூரலாம். 1903—ஆம் ஆண்டு, இவர் தந்தையார்க்கு உதவியாய், வணிகத் துறை யில் ஈடுபட்டிருந்தார்; வயது 24. திருச்சியில் ஒருவரிடமிருந்து வரவேண்டிய ஓராயிரம் ரூபாய்க்கான வழக்கிற்கு, வக்காலத்து நமூனாவில் தமது தந்தையார் பெயரைத் தாமே கையெழுத்துப் போட்டு, ஒரு வழக்கறிஞரிடம் கொடுத்து விட்டு, இவர் ஈரோடு திரும்பிவிட்டார். வழக் கறிஞர் ஆத்திரப் பட்டுத், தந்தை கையெழுத்தை மகன் ஃபோர்ஜரி செய்து, மோசடி செய்து விட்டதாக, ஒரு வழக்கைத் தொடுத்து விட்டார். தந்தை வெங்கட்ட நாயக்கர் பயந்து போய்த், தங்கள் பிரசித்தமான பெயருக்குக் களங்கம் விளையுமே என அஞ்சி, சேலம் விஜய ராகவாச்சாரியார், சென்னை நார்ட்டன் துரை போன்ற மிகப் பிரபல வழக்கறிஞர்களின் உதவி நாடினார்.

இராமசாமி, தான் இந்தக் கையெழுத்தைப் போட வில்லை என்று சொல்லி விட்டால், தப்பித்துக் கொள்ள லாம்; அது ஒன்றுதான் வழி; என்று அவர்கள் ஆலோசனை கூறினர்! ஆனால் ஈ. வெ. இராமசாமி, பிடிவாதமாகப்

பொய் கூற மறுத்து, வருவது வரட்டுமெனச், சிறை வாழ்க்கைக்கு ஒத்திகை பார்க்கத் தொடங்கிவிட்டார்! அதாவது, தன் காப்பு, கொலுசு, கடுக்கண் முதலிய நகைகளைக் கழற்றிவிட்டுச்—சவரம் செய்து கொள்ளாமல்—கேழ்வரகுக்களி சாப்பிட்டுத், தலையணையில்லாமல், வெறும் பாயில் படுத்துப் பழகி வந்தார்.

இரண்டு மாதங்கழித்துத், திருச்சி உதவி கலெக்டரான ஆங்கிலேய இளைஞர் ஒருவர் முன்னிலையில் வழக்கு விசாரணைக்கு வந்து விட்டது. பிரபல வியாபாரியானதால், வழக்கு வேடிக்கை பார்க்க, நீதி மன்றத்தில் நிறையக் கூட்டம் நிரம்பி வழிகிறது. அரசு வழக்குரைஞரான கணபதி அய்யர், பெரிய கலெக்டரிடம் அனுமதி பெற்று, ஈ. வெ.ராமசாமிக்காக வழக்காட வருகிறார். குற்றம் சாட்டப்பட்ட இளைஞராகிய இராமசாமியின் தோள்மீது கைபோட்டபடி, உள்ளே நுழைகிறார். உதவி கலெக்டர், கணபதி அய்யரைப் பார்த்து விவரம் விசாரிக்கிறார். பின்னர், குற்றம் சாட்டப் பட்டிருக்கும் இராமசாமியையும் கேட்கிறார். தகப்பனாருக்காகத், தானே வியாபார விஷயங்களைக் கவனிப்பதால், வயதான அவருக்காகத், தானே கையெழுத்துப் போட்டதாக, ஒத்துக் கொள்கிறார். வெங்கட்ட நாயக்கரும், அச்சத்துடன் ஆமோதிக்கிறார்.

வழக்கு தள்ளுபடி செய்யப்படுகிறது. காரணம், இராமசாமி, யாரையும் மோசடி செய்யும் கருத்தோடு இந்தக் கையெழுத்தைப் போடவில்லை; உண்மையை ஒத்துக் கொண்டார் என்பதால்! எப்படியோ உண்மை வென்று விட்டதல்லவா? இந்தச் சம்பவத்தால், வாலிப நிலையிலும் வாய்மையாளராக விளங்கிய நேர்மை தெரிகிறதே!

# 4. துறந்தார்

உறவை முறித்துத் துறவு—ஊர் சுற்றிச் சீர்பெற்றுப் பயணம் தொடங்கிய இடங்காண மடங்கி வந்தது—வணிகத் துறையில் மீண்டும் புகுதல்—1905 முதல் 1907–ஆம் ஆண்டு வரை.

---

திரளான செல்வம், தெருவுக்கொரு மாளிகை, வளங் குன்றா வாணிபம், நன்செய் புன்செய் வேளாண்மை, இன் சொல் வாக்கினால் எழும்பிய செல்வாக்கு, ஆணை எதிர் நோக்கும் ஆள் அம்பு, நண்பர் குழாம், எந்நேரம் வந்தாலும் ஏன் தாமதம் எனக்கேளாமல் முன்னே ஓடி நின்று, முறு வலித்து, முகம் பார்த்து அகமகிழும், அன்பு நவழும் இல்லக் கிழத்தி—இந்த இராமசாமிக்கு என்ன குறை என்றுதான் எல்லாரும் பொறாமை மீதுறப் பார்த்து வந்தனர். ஆனால் எங்கோ எதிலோ குற்றை கண்டார் போலும்! தாயார் கடிந் துரைத்தனரோ, அல்லது தந்தையார் தட்டிக் கேட்டனரோ தெரியவில்லை.

இராமசாமியார் ஓர் நாள் ஊரைவிட்டு யாருக்கும் சொல்லாமல் வெளியேறிவிட்டார். நேரே சென்னை மாநகரம் வந்து சேர்ந்தார். தம்முடன் துணைக்கு இரண்டு மூன்று நண்பர்களையும் அழைத்து வந்திருந்தார். அவர்களில் ஒருவர் பெயர் இராமசாமி நாயக்கர் என்னும் மாப்பிள்ளை நாயக்கர்.

ஆம்! இவர் எஸ். இராமசாமிநாயக்கர். வெங்கட்ட நாயக்கரின் மகள் கண்ணம்மாளின் கணவர். இவருக்கு

மஞ்சள் மண்டி வணிகம். முதல் மனைவி கண்ணம் மாளுக்குக் குழந்தைகள் இல்லை. இரண்டாவது மனைவி பொன்னம்மாள் மூலமாக ராஜாத்தி என்கிற சுப்புலட்சுமி, காந்தி, சரோஜினி ஆகிய மூன்று பெண் மக்கள். சந்தானம், சாமி இரு ஆண்மக்கள். இவர் களைக் கண்ணம்மாளின் மக்கள் என்றே அனைவரும் கருதுவர். எஸ். இராமசாமி நாயக்கர் 1951 ஆகஸ்ட் 5-ஆம் நாளும் எஸ். ஆர். கண்ணம்மாள் 1971 பிப்ரவரி 23-ஆம் நாளும் மறைந்தனர். இந்த இராமசாமி நாயக்கரின் மக்கள் எஸ். ஆர். சந்தானம், எஸ். ஆர். சாமி ஆகியோர் இன்று ஈரோட்டில் பிரமுகர்கள். மாப்பிள்ளை நாயக்கரின் மக்கள் என்று இவர்கள் அன்புடன் அழைக்கப்படுவார்கள்.

கண்ணம்மாளின் அக்காள் பொன்னுத்தாய் அம்மாளை எஸ். இராமசாமி நாயக்கரின் அண்ணன், கல்யாணசுந்தர நாயக்கருக்கு மணம் முடிக்கப்பட்டது. இந்த அம்மாளுக்கு, அம்மாயி அம்மாள், அப்பய்யன் என இருமக்கள் பிறந்ததும், தமது 25 வயதிலேயே, இறந்து போனார். இந்த அம்மாயி அம்மாளுக்குப், பிற் காலத்தில் பெரியார் விதவைத்திருமணம் நடத்தித், தம் குடும்பத்தில் புரட்சி செய்தார். அம்மாயி, அய்யப்பன் இருவருமே இப்போது இல்லை.

சென்னை வரையில் வருவதற்குத்தான் மற்ற நண்பர் களுக்குத் தென்பும் திராணியும் இருந்தது. சென்னையில் ஒரு விடுதியில் தங்கியிருக்குங்கால், யாரோ ஈரோட்டுக் காரர் அவ்வழியே செல்லக்கண்ட மாப்பிள்ளை நாயக்கர், தங்களைத் தான் தேடச் சொல்லி மாமனார் வெங்கட்ட நாயக்கர் அவர்களை அனுப்பியிருப்பதாக அஞ்சி, இராம சாமியை விட்டு அகன்று, உடன் வந்த மற்றவர்களுடன் ஈரோட்டுக்கே திரும்பிவிட்டார். இராமசாமி துறவு மேற் கொண்டு, சென்னையை விட்டு எங்கோ வடக்கே சென்று விட்டதாகவும் ஊரில் அவர் கூறினார்.

கவுதம புத்தருக்குத் திருமணமாகி, ஒரு குழந்தையும் தோன்றிய பின்னர், இல்லறத்தில் பற்று நீங்கித் துறவறத் தில் ஆர்வம் பிறந்தது போல், இராமசாமியாருக்கு 25 வயது பிறந்த பின்னர் குடும்ப பாசம் குறைந்தது. உறுதியாகத்

துறவு நிலை பூணுவது என்று முடிவு செய்து கொண்டு, சென்னையை விட்டுத் தனியே புறப்பட்டுப் போனார். ஆந்திரப் பகுதியிலுள்ள பெஜவாடாவை அடைந்தார். ஆங்கோர் சத்திரத்தில் தங்கியிருந்தார். இவரைப் போலவே ஏதோ மனக்குறையால், வீட்டாரிடம் வெறுப்புற்ற இருவர், இவருக்கு அங்கே உற்ற துணைவராயினர். ஒருவர், தஞ்சாவூரைச் சார்ந்த வடமொழிப் புலமை வாய்ந்த வெங்கட்ரமண அய்யர். இன்னொருவர், கோயமுத்தூரைச் சார்ந்த கிராம அதிகாரி கணபதி அய்யர்.

இந்த மூன்று இல்லற சந்நியாசிகளும் கூட்டுச் சேர்ந்து கொண்டு பெஜவாடாவை விட்டு, நிஜாம் மன்னரின் தலை நகரமான அய்தராபாத் போய்ச் சேர்ந்தார்கள். அங்கேயும் ஒரு சத்திரத்தில் தங்கிக்கொண்டு, காலையில் வெளியே கிளம்பி, உஞ்சவிருத்தி செய்து, கிடைக்கும் அரிசியை உணவாகத் தாமே சமைத்து உண்டு, சத்திரத்துத் திண்ணையில் அமர்ந்து தத்துவ விசாரணையில் ஈடுபடுவார்கள். அய்யர்கள் இருவரும் புராண இதிகாசக் கருத்துகளை எடுத்துப் பேச, இராமசாமியார் தமது இயல்பான தர்க்க வாதத்திறமையால், அவர்களை மறுத்தும் எதிர்த்தும் பேச, வீதியில் போவோர் வருவோர் பெருங்கூட்டமாய்த் திரள்வர்.

இராமசாமியாரின் அறிவுக் கூர்மை அனைவரையும் கவர்ந்தது. அதுவரை கேட்டிராத புதுமைக் கருத்துகள், புராணங்களையே பொய்யாக்கும் அளவுக்கு அவரால் விவாதிக்கப்படுவது கண்டு எல்லாரும் வியந்து பாராட்டினர். குறிப்பாகக் காஞ்சி முருகேசனார் என்ற அரசு அலுவலர் ஒருவர், இவர்களது விவாத மேடை முன், இரசிகராயிருந்து கவனித்து வந்ததில், இம் மூவர் மீதும் மிக்க அன்பு பூண்டு இவர்களைத் தம் இல்லத்திற்கே அழைத்தேகினார். வீட்டரசியார் வெளியூர் சென்றிருந்தமையால், தமக்கும் சேர்த்துச் சமைக்குமாறு பணித்தார். நால்வரும் உண்டபின், நல்ல உரைக்கோவை தொடங்கும். தொடர்ந்து நடக்கும்.

முருகேச முதலியார் அலுவலகம் சென்ற பின், சந்நியாசிகள் மூவரும், பழைய தொழிலான அரிசிப்பிச்சை ஏற்க வெளியே கிளம்பி விடுவார்கள். சில நாள் திருடர்கள் ஒருநாள் முருகேசனாரிடம் சிக்கிக் கொண்டார்கள். அவர் மனம் வருந்தவே, இவர்கள் மனம் திருந்தினர். அங்கிருந்த ஏனைய தமிழர்களும் சேர்ந்து, பொருள்திரட்டி, இவர்களைக் காப்பாற்ற முன்வந்தனர். பலரும் இவர்களுக்குத் தனித் தனியே அழைப்பு விடுத்துத், தத்தம் வீடுகளில் கதாகாலட்சேபம் நிகழ்த்திட வேண்டினர். வடமொழிப் பண்டிதர் இராமாயண பாரதக் கதைகளை வடமொழி சுலோகங்களால் சொல்லித், தமிழிலும் விளக்கம் தருவார். தெலுங்கர் மிகுந்த ஊராகையால், அவற்றைத் தெலுங்கில் மொழி பெயர்த்து உரைக்கும்பணி, இராமசாமியிடம் வந்தது. இவர் தமது சுயமான கற்பனைகள், உவமைகள், சிறு கதைகள், விளக்கமொழிகள் ஆகியவற்றையும் இடையிடையே கலந்து, நகைச்சுவையும், கேலியும் கிண்டலும் விரவிட, ஒரு தனிச் சொற்பொழிவே நிகழ்த்தி விடுவார். மக்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கி, மூவரையும் மிகவும் நேசித்தனர். அவர்களின் இராமசாமியாருக்கு ஏராள ரசிகசிகாமணிகள்!

கட்டை கடைத்தேறக் காசிக்குச் சென்று தீரவேண்டுமென்று, மூன்று சந்நியாசிகளும் முடிவு செய்தனர். மக்களும் பிரியாவிடை தந்தனர்; தடுத்துப் பார்த்துப் பயனின்றிப் போனதால்! செல்வச் செருக்கின் சின்னமாக அதுவரை இராமசாமியார் அணிந்திருந்த தங்க நகைகளான அரைஞாண், மோதிரம், காப்பு, கொலுசு, கடுக்கண், சங்கிலி ஆகியவற்றைத், தம்மிடம் பாதுகாப்பாக விட்டுச் செல்லுமாறு, முருகேசனார் அறிவுரை கூறினார். அவரை நம்பலாமோ என்று முதலில் தயங்கினாலும் பிறகு தெளிந்து எல்லா நகைகளையும் ஒரு சிறு பெட்டியிலிட்டு, ஒரு பட்டியலும் உள்ளிட்டுத், தந்து விட்டார்! அவருக்குத் தெரியாமல், ஒரு மோதிரத்தை மட்டும் மறைவாகத் தம்மிடம் இருத்திக் கொண்டார். இவர் இன்னார் என்பது அவர்களில் யாருக்குமே தெரியாது!

மூவருக்கும் கம்பளிப்போர்வை, கை நிறையப் பணம், கல்கத்தாவுக்கு ரயில் பயணச் சீட்டு—இவை வழங்கி, அய்த ராபாத் மக்கள் நன்றி பாராட்டினர். பொருள் திருமட்டும் கல்கத்தா வாசம்; பின்னர் அங்கிருந்த சில நகரத்தார் தமிழ்ப் பெருமக்களின் தயவால், மூன்று பேரும் காசிமாநகர் சென்றடைந்தனர்.

புனித கங்கையில் நீராடிப், புண்ணியத்தலமாம் காசியில் அடி வைத்தால், பண்ணிய பாவங்கள் நண்ணிடாது ஒழியும் என எண்ணிய இராமசாமிக்கு—அங்கு ஏமாற்றமே எதிர் கொண்டழைத்தது! காசியில் அன்ன சத்திரங்கள் ஆயிரம் நாட்டி, வருவோர் போவோருக்கெல்லாம் தர்மச் சாப்பாடு படைப்பார்கள் என நம்பியன்றோ சென்றார்! சோறு கிடைத்தது; ஆனால் யாருக்கு? மார்புப் பூணூல் துலங்க, மடி சஞ்சியணிந்து, பிறப்பினால் பூதேவர் எனக், கண்டரும் புரிய வைத்த, அந்தப் புண்ணியாத்மா இருவருக்கு மட்டும்! இனி, அவர்களுக்கு ஏன் இராமசாமியின் துணை? சோறு கண்ட இடம் சொர்க்க லோகம் என, வேறு பாட்டையில் விலகிச் சென்றனர்.

சித்தம் குழம்பினார்; ஏமாற்றம், பசி, பட்டினி; சிறு குடலைப் பெருங்குடல் கவ்விடக், கண்கள் காண மறுக்கக், காதுகள் கேட்க மறுக்கக், கால்கள் நடக்க மறுக்கக், கைகள் சோறு பிசையத் துடிக்கவே—ஒரு சத்திரத்தில் நுழைய முயன்றார். இவர் பார்ப்பனரல்லர் என உணர்ந்த வாயிற் காவலன், அனுமதி மறுத்தான். உள்ளே பந்தி போசனம் நடந்து, பூசுரர் உண்ட மிகுதி எச்சிற் பண்டங் களும், இலையோடு சேர்த்து வெளியே எறியப்பட்டன. எச்சிலை தன்னிலே மிச்சமாய் எறிந்த சோற்றுக்கும், பிச்சைக்காரர் சண்டை தெருவிலே! தானும், கொதிக்கும் கும்பியினை அடக்கிட, அவ்வழி நாடிட ஒருக்கணம் எண்ணினார். கோபம், கொந்தளிப்பு, குமுறல், ஆத்திரம்! வீட்டைவிட்டு வெளியேறிய தவற்றை நினைத்து வருந்தி னார். அங்கே தமது தந்தையார் இயற்றி வரும் தான தருமங்கள் எவ்வளவு? இங்கே தனயனுக்கு ஒரு பிடி அன்னம்,

கிடைக்காத அவலமா? ஏன் இந்த ஏற்றத் தாழ்வு நிலை? யார் இதற்குக் காரணம்? இவ்வளவு கொடுமையான நிலையி லும், இடுப்பில் மோதிரம் பத்திரமாக உள்ளதா எனத் தடவிப் பார்த்துக் கொண்டு புறப்பட்டார்!

உண்மையான துறவுக்கோலம் பூண்டார். முகத்தினை மழித்தார். தலை முடி இறக்கினார். ஆடைகளைக் களைந்தெறிந்து கோவணந் தரித்தார். வந்துவிட்டது பரதேசிக் கோலம்! இனி இந்த வேடத்தில் பிழைப்பு நடத்திட இயலும் என்ற நம்பிக்கை பிறந்தது! வேலை தேடி ஒவ்வொரு இடமாகச் சென்றார். மடம் ஒன்றில், சிறு அலுவல் கிடைத்தது. ஒரு வேளை சாப்பாடு. அதி காலை எழுந்து, குளித்து முழுகித், திருநீறு அணிந்து, அருச்சனைக்கான மலர்கள் பறித்துத் தரவேண்டும். மாலை யில் மீண்டும் மூழ்கி வந்து, திருவிளக்கு ஏற்ற வேண்டும்.

கடுமையான நிபந்தனைகள் இராமசாமியாருக்கு இவை. கண் முன் நாகம்மையார் தோன்றினார். அன்றாடம் பல்விளக்குவதும், குளிப்பதும் அவசியமானவை அல்ல, என்ற பிடிவாதக் கொள்கையுடைய தம் கணவரைப், பலவந்தமாய் இழுத்துச் சென்று, பல் துலக்கிக், குளிப் பாட்டி விடும் அம்மையாரின் அன்புப் பணியினை இங்கே யார் செய்ய முன் வருவார்? நடுக்கும் குளிரில் நாள் தவறாமல் நீராடுவதா? மடத்துச் சாமியார் விழித்துக் கொள்ளுமுன் எழுந்து, பட்டை பட்டையாக விபூதியினைக் குழைத்து மேனி எங்கும் தீட்டிக், குளித்துவிட்ட பாவனை யில் மலர் பறித்து வருவார். இந்தக் கள்ளத்தனமும் ஒரு நாள் கண்டு பிடிக்கப்பட்டது. கையில் கிடைத்த வேலை கை நழுவிப் போயிற்று! கங்கைக் கரையில் கையேந்திச் சில நாள் காலங் கழித்தார்! அங்கு கண்ட அநாச்சார, அவலக் காட்சிகள், பிண்டம் போட்டு இறந்தவர்க்குச் சிராத்தம் நடத்தும் பண்டாக்களின் ஈனத்தனமான எத்து வேலை மோசடிகள், ஒழுக்கக்கேடும், விபச்சாரமும், வழுக்கி விழுத லும், ஒரு பொருட்டாக மதியாமல், பார்ப்பன மாந்தர்— பெண்டிர் உட்பட, மது மாமிசம் அருந்தும் அயோக்கியத்

தனங்கள்—இவை யாவும் காசி நகர் மீதே வெறுப்பினை உண்டாக்கிவிட்டன. இராமசாமி, அங்கிருந்து வேற்றூர் செல்ல விழைந்தார்!

செப்பாலடித்த சிறுகாசும் கைவசமில்லை; அப்பால் செல்வது எப்படியோ எனச் சிந்தித்த வண்ணம், இடுப்பில் கை வைத்த போது, என்றோ மறைத்து எடுத்து வந்திருந்த மோதிரம் தட்டுப்பட்டது. அதனை விற்றுப் பணமாக்கிக் கொண்டு கிளம்பினார். எதிர்ப்பட்ட ஊர்களில் சிற்சில நாள் தங்கிச், சுற்றிப் பார்த்துக் கொண்டே, ஆந்திராவைச் சார்ந்த ஏலூரு என்னும் ஊரை வந்தடைந்தார். முன்னர் ஈரோட்டில் அலுவல் பார்த்த சுப்பிரமணிய பிள்ளை என்பார், ஏலூரில் இருந்து வந்தது இராமசாமியின் நினைவில் நின்றபடியால், அன்னாரின் இல்லத்தைத் தேடிக் கண்டு பிடித்து, நள்ளிரவில் அங்கு போய்ச் சேர்ந்தார். கவுபீன தாரியான சின்ன நாயக்கரை, அவர் அடையாளம் கண்டு கொள்ள அதிக நேரம் ஆயிற்று. குரல்தான் காட்டிக் கொடுத்தது; சான்று தந்தது. உள்ளம் நெகிழ்ந்த பிள்ளை அவர்கள், இராமசாமிக்கு வேட்டி சட்டை அணிவித்து, வேடத்தைக் களையச் செய்து, தம் இல்லத்திலேயே அன்புடன் இருத்திக் கொண்டார். இதற்கிடையில், இராமசாமியைக் காணாத பெற்றோர் என்ன பாடுபட்டனர்? எண்ணற்ற பொருட் செலவு; எங்கெங்கோ தேடி வர ஆள் செலவு; தந்திகள் கடிதங்கள் பறந்த வண்ணம் இருந்தன! நாயக்கர் குடும்பத்தில் இப்படியொரு நலிவா? வெங்கட்ட நாயக்கரும் கிருஷ்ணசாமியும் வெகு தூரம் தேடி நொந்து, அந்தோ இளவலை இழந்தோம் என வருந்தி வாடினர். இராமசாமிக்கு எல்லாவற்றிலும் நெருங்கிய நண்பரான—பொறியாளரும் தமிழறிஞருமான—பா. வே. மாணிக்க நாயகரும் பல் வகையானும் தேடி அலைந்தார்.

சேலம் மாவட்டம் பாகல்பட்டியில் பிறந்த பா.வே. மாணிக்க நாயகர், 12 வயதில் பள்ளி சென்று, 25 வயதில் பி. இ. தேர்ந்து, மேற்பார்வைப் பொறியாளர் வரை உயர்ந்தவர். மேட்டூர் அணை இவர் திட்ட

மிட்டுக் கட்டியதென்பது, மறைக்கப்பட்ட வரலாறு. பெரியாரினும் 7, 8 ஆண்டு மூத்தவர். இரண்டறப் பழகிய இனிய நண்பர். பல்கலை வல்லுநர்; ஆங்கிலம், வடமொழி, தனித்தமிழ் மூன்றிலும் மறைமலையடிகளை ஒத்தவர். இங்கிலாந்து சென்று பாரிஸ்டரும் ஆனார். காங்கிரீட் ஆராய்ச்சியும் செய்தவர். கம்பன் புளுகும், வால்மீகி வாய்மையும் என்ற நூலின் ஆசிரியர். வான்மீகரின் இராமாயணம் இயல்பானது, உண்மையானது; கம்பராமாயணம் வெறும் புளுகு என இவர் நிலை நாட்டினார். 60 வயதில் மரணமடைந்து விட்டார்.

ஏலூரில் தங்கியிருந்த இராமசாமி, தமது ஆதரவாளரான பிள்ளையவர்களிடம் உள்ளதை உள்ளவாறு உரைத்துத், தம் பெற்றோருக்குத் தமது இருப்பிடத்தை அறிவிக்க வேண்டாம் என வேண்டிக் கொண்டார். ஒரு நாள் பிள்ளையவர்களுடன் கடைவீதி வழியே செல்லும் போது, எள் மண்டி சீராமுலு என்பாரின் கடை கண்ணிற் பட்டது. இரத்தத்தோடு ஊறிய வணிக உணர்வு உந்தித் தள்ளிட, இராமசாமி சிறிது எள்ளை எடுத்து, அகங்கையில் வைத்துத் தேய்த்து, மோந்து, பின்னர் அங்கேயே போட்டு விட்டு, அப்பால் சென்று விட்டார்!

மண்டிக்கடை சீராமுலுவுக்கு மிக்க மனவருத்தம் எள்ளைப் பார்த்து விட்டுக் கொள் முதல் செய்யாமல், ஒன்றுமே பேசாமல் போகிறாரே, இவர் யாரெனச் சுப்பிரமணிய பிள்ளையின் பின்னால் வந்த சேவகனைக் கேட்டறிந்து கொண்டு, தமக்கு அறிமுகமான பெரு வணிகரான வெங்கட்ட நாயக்கருக்கு ஒரு கடிதம் எழுதி, "உங்கள் சின்னக்கொடுக்கு இராமசாமி, எள் வாங்காமல் போய்விட்ட காரணம் என்ன? என்னிடம் என்ன கோபம்?" என்று கேட்டார்.

துப்புத் துலங்கிவிட்டது! பொங்கும் மகிழ்ச்சியில் பூரித்துப் போனார் வெங்கட்ட நாயக்கர்! பிள்ளைப் பாசத்தால் உள்ளம் மெலிந்தவரன்றோ? உடனே புறப்பட்டார் ஏலூரு நோக்கி! மண்டி சீராமுலுவைக் கண்டு, எல்லாம்

விசாரித்தறிந்து, அலுவலர் சுப்பிரமணிய பிள்ளையின் இல்லத்தைத் தெரிந்து கொண்டார். நள்ளிரவு ஆகிவிட்டது. ஆர்வ மிகுதியினால் கதவைத் தடதடவெனத் தட்டினார். முன்புறம் படுத்திருந்த இராமசாமிதான் கதவைத் திறந்தார். தந்தையைக் கண்டதும் 'திருதிரு'வென விழித்துத், தலை கவிழ்ந்து நின்றார். தந்தையோ மகனைப் புரிந்து கொள்ளாமல், பிள்ளைவாள் எங்கே என்று தேடினார். சுப்பிரமணிய பிள்ளைக்கோ எல்லாம் மர்மமாயிருந்தது! நாயக்கர் எப்படி இங்கே வந்தார் என்ற மாயம் புரியவில்லை. திகைத்துக் குழம்பித், தடுமாறி, 'வாருங்கள்' என வரவேற்று, அமர்த்தினார். "முதலில் என் மகன் எங்கேயிருக்கிறான்? சொல்லுங்கள்!" எனத் துடித்தார் நாயக்கர்.

மகனே முன் வந்து தன்னை வெளிப்படுத்திக் கொண்டார். மகிழ்ச்சிக்கோர் எல்லையில்லை. பிரிந்தவர் கூடினர். பேச்சு எழவில்லை. ஒருவாறு இருவரும் மனந்தெளிந்த பின்னர், விசாரணை தொடங்கிற்று. மகன் ஊரூராய்ப் பயணம் மேற்கொண்ட கதையெல்லாம் கேட்டு வருந்திய தந்தை, அவரைத் தேடித், தாமும் போகாத ஊரெல்லாம் போய், அலைந்து திரிந்து வருந்திய கதைகளையும் கூறினார். பின்னர், தந்தையை இரண்டொரு நாள் அங்கேயே தங்கியிருக்குமாறு வேண்டிக் கொண்ட இராமசாமி, அய்தராபாத் முருகேச முதலியாருக்குத் தந்தி கொடுத்துத், தாம் ஒப்படைத்த நகைகளை அனுப்பச் செய்தார். பெட்டியும் எல்லா நகைகளோடு வந்து சேர்ந்தது. நகைகளையெல்லாம் தன் பிள்ளை விற்றுச் சாப்பிட்டுத் தீர்த்திருப்பானோ என்று அய்யுறவு கொண்டிருந்தார் நாயக்கர். "இவ்வளவு நாளும் சாப்பாட்டுக்கு என்ன செய்தாய் மகனே?" எனத் தந்தை ஆதங்கத்தோடு கேட்க, "நீங்கள் ஈரோட்டில் எவ்வளவோ காலமாய்ச் செய்து வரும் அன்னதானத்தை வெளியூர்களில் வசூலித்து விட்டேன்" எனச் சமத்காரமாய்ப் பதிலுரைத்தார் இராமசாமி. அழுவதா சிரிப்பதா எனப் புரியாவிட்டாலும், மகனது சாமர்த்தியத்தைக் கண்டும், அவரது வணிக மனப்பாங்கு குன்றாதிருந்ததைப் பார்த்தும்,

அளவிட இயலா மகிழ்வுற்றார். ஈரோட்டில் உள்ள மக்கள் தம் இளைய குமாரரைப் பற்றித் தவறாக எண்ணாதிருக்கும் பொருட்டு, எல்லா நகைகளையும் மீண்டும் அணிந்து கொள்ளச் செய்து, இருவரும் புறப்பட்டனர், பிள்ளையவர்களுக்கு உள்ளம் நிரம்பிய நன்றி தெரிவித்து!

ஏலூரிலிருந்து ஈரோடு மீண்டதுமே, தம் பிள்ளைக்குக் குடும்பப்பொறுப்பு வேண்டிய அளவு தொடர்ந்து ஏற்பட ஏதுவாகத், தமது வெங்கட்ட நாயக்கர் மண்டி என்ற மண்டிக் கடை விலாசத்தை, "ஈ. வெ. இராமசாமி நாயக்கர் மண்டி" என்று மாற்றிவிட்டார் வெங்கட்ட நாயக்கர். தாயாருக்கு இராமசாமி மீதுதான் அன்பு அதிகமாம் பெரியபிள்ளை கிருஷ்ணசாமியைவிட! இதை அவர் உரையிலேயே காணலாம்: "எங்கம்மாவுக்கு நானும் எங்கண்ணனுமாக இரண்டு ஆண்பிள்ளைகள். எங்கம்மாவுக்கு என்மேல்தான் அதிக ஆசை. ஆனால் என்னைத் தொட மாட்டார்கள். தொட்டுவிட்டால் குளிப்பார்கள். காரணம், நான் கண்ட இடத்தில் சாப்பிடுகிறேன் என்பதால். என் அண்ணனைக் கண்டால் பிடிக்காது. அண்ணனும் அதை லட்சியம் பண்ணுவதில்லை. அம்மாவுக்குக் காசுமேல் நிரம்பக் குறி. சாப்பிடாமல் கூடச் சேர்த்து வைப்பார்கள் வருடம் எப்படியும் ஆயிரம் ரூபாயாவது மீதமிருக்கும். அண்ணனுக்குப் பணம் தேவையாயிருக்கும். அம்மாவிடம் போய் உட்கார்ந்துகொண்டு பணம் கேட்பார். அம்மாவோ 'என்னிடம் ஏது பணம்?' என்பார்கள். என்னவெல்லாமோ கூறிப்பார்ப்பார்; பணம் தரமாட்டார்கள். கடைசியில், 'இந்தாம்மா? நீ செத்தால் நான்தான் கருமம் செய்யணும். அவன் கொள்ளிகூட வைக்கமாட்டான். நீ பணம் கொடுத்தால்தான் செய்வேன், இல்லாவிட்டால் நீ செத்தவுடன் நான் எங்கேயாவது ஊருக்குப் போய்விடுவேன்' என்பார்.

உடனே எங்கம்மா, 'ஏதோ ஒரு பிள்ளைதான் அப்படிப் பிறந்துவிட்டது. நீ அப்படியெல்லாம் செய்து விடாதே. இந்தா' என்று கூறிப் பணம் கொடுத்து விடுவார்கள்."

# 5. எழுந்தார்

**தந்தை மகனை முந்தி அமர்த்துதல் — நாயக்கர் பெருமகன் நல் அடக்கம் — நகரத் தந்தையின் புகழ் தரும் பணிகள் — 1907-ல் முதல் மன முதிர்ச்சி — 1920-ல் மன எழுச்சி.**

---

"ஈ. வெ. இராமசாமி நாயக்கர் மண்டி"யில் வாணிபம் நாளுக்கு நாள் விரைவாக முன்னேறி, வெகுவாக மேலோங்கி வளர்ந்து வந்தது. கண்ணும் கருத்தும் கவனமாய்ச் செலுத்தி, எண்ணம் மொழி செயல் யாவும் அத்துறையில் ஈடுபடுத்தி, வணிகச் சமுதாயத்தின் வழிகாட்டியாய் விளங்கினார் இராமசாமி. பொறுப்பினை ஏற்றபின்னர் இளைய மகனின் திருப்பத்தை உணர்ந்த வெங்கட்டநாயக்கர், தாம் மெல்லமெல்ல ஒதுங்கி, ஓய்வாக இருந்து, மகனை முன்னுக்கு உந்தினர். பள்ளிப் படிப்புக் குறைவாயினும் பொது அறிவில் நினைவாற்றலில் மிதமிஞ்சிய வன்மை கொண்டதால் கணக்கு விவரங்கள், எண்சுவடி, வாய்ப்பாடு, சிட்டை குறிப்பு பேரேடு எழுதல், சிக்கலான விவகாரங்களைத் தீர்த்து வைத்தல், தகராறு எழுந்தால் தாமே வலிந்து சென்றுவழக்கு விசாரணை நடத்தித் தீர்ப்பு வழங்கல் இவ்வாறாக இராமசாமியிடம் உள்ளுணர்வில் அரியதொரு மாற்றம் நிகழ்ந்தது.

தன் பெற்றோர், தன் சுற்றம், தன்பெண்டு, உடன்பிறந்தோர், தன் வீடு, தன்சொத்து என்பதான தன்னலக் குறுநோக்கு தேய்ந்து மாய்ந்து, ஊர்நலம் பொது நன்மை, சமுக மேம்பாடு, பிறர்முன்னேற்றம் என்பதான பொதுநோக்கு

மெதுவாக விரிந்து பரந்து நிறைந்து வரலாயிற்று. வரவேற்கத்தக்க இந்த மாறுதல்களால், அப்போது கோவைமாவட்டத்தையே கொடுமைக்குள்ளாக்கிய பிளேக் நோயினால் பெரும் பரபரப்பும் பீதியும் ஆட்கொள்ள, மக்கள் நகரங்களையெல்லாம் காலிசெய்து, வசதிப்படி வெளியேறினார்களாகையால், ஏழை மக்கள் என்ன செய்வோம் என ஏங்கித் தவித்தபோது, பாங்குடன் மனமுவந்து தாமே முன்வந்து, அஞ்சாமல் அயராமல் அவர்களைக் காப்பாற்றினார். மகத்தான சேவைசெய்ததாக மக்களால் மிக்க பெருமையோடு பாராட்டப்பெற்றார் இராமசாமி!

மகனின் மனம் விசாலமடைந்ததைத் தந்தை நேரிடையாக அறிந்து, மட்டில்லா மகிழ்ச்சி பூண்டார். கெட்ட நடத்தையுள்ள இரண்டொரு நண்பர்களும், எட்ட விலகிச் சென்று விட்டனர். இராமசாமி எவ்வளவோ தீயவர்களுடன் கலந்து உறவாடியிருப்பினும், மது அருந்துதல் எனுந் தீயொழுக்கம் பற்றியதே கிடையாது. எப்போதோ வெற்றிலைபாக்கு போடுவது உண்டு; புகைபிடித்தலும் வழக்கமாக இருந்ததுண்டு. தமது நாற்பதாவது வயதில் இவற்றையும் அறவே நிறுத்திக் கொண்டார். நல்ல பண்பாளர்கள் அறிவாளிகள் உறவு மிகுந்தது, பா. வே. மாணிக்க நாயகர் இவருக்கு மிகச் சிறந்த நண்பர். கரூர்ப் பெரும் புலவர் மருதையாபிள்ளை புராணப் புரட்டுகளைக் கண்டிப்பதில் வல்லவர். இவரது நட்பு இராமசாமியாரின் கொள்கைக்கு அரணாக அமைந்தது. இக்காலத்தில் வாழ்ந்த இன்னொரு மாபெரும் தர்க்க நிபுணரான கைவல்ய சாமியாரின் கூட்டுறவும் பெரியாரின் பகுத்தறிவு வாதங்களுக்கு உறுதுணை புரிவதாக அமைந்தது.

மகனது பெரும் புகழ் கண்ட தந்தை அகங்குளிர்ந்து இறும்பூது எய்தினார்; மிகுந்த நிம்மதி கொண்டார். நம்பிக்கை அதிகமானதால், தம்மைப்போல் திருவிழா, உற்சவம், கோயில், மத சம்பந்தமான பண்டிகைகளில் ஈடுபாடு ஏற்படட்டும் என்று, தேவஸ்தானக் குழுவில் இடம் பெறச் செய்தார். ஏற்ற பணியினை இனிது நிறைவேற்றுங்

கொள்கை கொண்டவராதலால் இராமசாமி, தமக்கு நம்பிக்கையில்லாவிடினும், மிகச் சிக்கனமாகவும் சிறப்பாகவும் அறப்பணிகளைச் செய்து காட்டினார். கோயில் சொத்துகள் கொள்ளை போகாமல் தடுத்தும், கோயில் பழம் பெருச்சாளிகள் சுரண்டலைக் கண்டு பிடித்தும் செவ்வனே நிர்வாகம் நடத்திக்காட்டினர். மகன் கடவுள் பற்றுதல் பெறாவிடினும் கடமையுணர்ச்சி மிக்காராய் விளங்கக்கண்டு, வெங்கட்ட நாயக்கர் பேருவகையடைந்தார்.

உழைப்பால் உயர்ந்த அந்த உத்தமர் வெங்கட்ட நாயக்கர் செழிப்பான பல அறச் செல்வங்களை உருவாக்கினார். அந்தப் பேரறிவாளருடைய திரு, ஊருணி நீர்போல் நிறைந்த பலனைத் தந்தது. தமது மக்களின் நற்செய்கைகளால் தாம் தக்காராய் மேம்பாடடைந்த பெருமையினால், நிரம்பிய நெஞ்சுடன் அவர் இறுதி நாட்களை எய்தினார். நோய்ப் படுக்கையில் இருந்தபோது, தாம் சமாதியில் அடக்கம் செய்யப்பட விழைந்தார். மூத்த பிள்ளையான கிருஷ்ணசாமி, வைணவர்களைப் புதைக்கக் கூடாது, எரிக்கத்தான் வேண்டும் என வாதிட்டார். இரு பிள்ளைகளுக்கும் தனித்தனியே எண்ணற்ற சொத்துகளை ஒதுக்கி வைத்து, மீதமுள்ள செல்வத்தை அறக்கட்டளை நிறுவிடத் தந்தை விரும்பியபோதும், பெரியவர் 'மறுத்துப் பார்த்தார்; இளையவர்தாம் அப்போதும் தந்தையை ஆதரித்தார். எனவேதான், ஏராளமான செல்வம், இன்றும் அறச் செயல்களுக்காகப் பெரிதும் உதவிவருகின்றது. அண்ணன் கருத்தை ஏற்காமல், தந்தை விருப்பத்தை நிறைவேற்றிட, அதாவது சமாதிக் குழியில் இறக்கி அடக்கம் செய்திட, மரணப் படுக்கையிலிருந்த வெங்கட்ட நாயக்கருக்குச், சாத்திரப் படிச் சந்நியாசம் வழங்க இராமசாமி ஏற்பாடு செய்தார். (சந்நியாசிகளைச் சமாதி வைத்திட, யாரும் எதிர்ப்புக்காட்ட முடியாதே!) அதற்குப் பிறகும் ஊருக்குள் சமாதி எழுப்பிட நகர சபையார் ஆட்சேபம் தெரிவித்தனர். மேலதிகாரிகள் சம்மதம் பெற்று இராமசாமி, தம் தந்தையார் இறப்பதற்கு முன்பே, ஈரோடு பழைய புகைவண்டி நிலையத்திற்கு

அருகே, கண்ணுக்கெட்டிய தூரம் தெரியக் கூடிய நாயக்கரின் கட்டடங்கள் தொகுதியின் இறுதியாக உள்ள இடத்தில், சமாதி ஒன்றினை எழுப்பினார். இறந்த பின்னர் வெங்கட்ட நாயக்கரின் உடல் அங்கே புதைக்கப்பட்டது. அவரது உருவச்சிலை ஒன்று, கருங்கல்லில், சிறிய அளவில் வடிக்கப் பட்டு, அங்கே நிறுவப்பட்டுள்ளது.

> ஈ. வே. கிருஷ்ணசாமியாரின் இறுதிக்காலம் வரையில் அந்தச் சமாதிக் கட்டடத்துக்குச் சென்று தந்தையார் சிலையை வணங்கி வருவது அடிக்கடி நிகழும். தந்தை பெரியாரும், சில நேரங்களில் அங்கு சென்று கல்லறைக் கட்டடம் சரியாகப் பராமரிக்கப் பட்டு வருகிறதா என ஆராய்வார்.

இளமையிலேயே மதக் கட்டுப்பாடுகள் சாதிச் சம்பிர தாயங்கள் ஆகிய தளைகளின் கட்டறுத்துச், சுய இச்சைப் படி, அனைவருடனும் சமரச நோக்குடன் பழகியதால், இராமசாமியை எல்லாத் தரப்பினரும் மனங்கனிய நேசித்த னர். அநேக நண்பர்கள் எந்த நேரமும் அவரைச் சூழ்ந்து நிரம்பிக்கிடப்பர். யாருக்கு என்ன தீங்கு நேரினும் வலியச் சென்று, அது நீங்கும் வரையில் நிற்பார். யார் வீட்டு நிகழ்ச்சியிலும், தம் வீட்டு நிகழ்ச்சிபோல் பங்கேற்று, முடித்து வைப்பார். இவ்வுயரிய குணங்களால், இராம சாமியின் புகழ் ஒளி வீசத் தொடங்கிற்று. ஈரோட்டின் கவுரவ நீதிபதியாய் நியமனம் பெற்றுப் பன்னிரண்டாண்டு பணிபுரிந்தார். ஈரோடு வட்ட தேவஸ்தானக் குழுவின் தலைவராகப் பல்லாண்டுகள் தொண்டாற்றி, எல்லா ராலும் போற்றப்பட்டார். ஈரோடு தாலுக்கா போர்டு துணைத் தலைவராகவும், ஜில்லாபோர்டு மெம்பராகவும் வீற்றிருந்தார். இவற்றிலெல்லாம் இராமசாமி தமது திறமை முத்திரைகளை, நாணயத்தின் சின்னங்களை, நன்கு பொறித்து வந்துள்ளார். அனைத்துக்கும் மேலாக, இன் றைக்கும் அன்னாரின் புகழைப் பறைசாற்றி வருவன, அவர் ஈரோடு நகராட்சித் தலைவராயிருந்து ஆற்றியுள்ள அருஞ் செயல்கள்தாம் !

அப்போது ஈரோட்டுக் கடை வீதி மிகக் குறுகலாக இருந்தது. பொது நலன் கருதி அதனை அகலப்படுத்திட வேண்டும். அதற்கு இடையூறாகப் பெருஞ்செல்வந்தர்களான வணிக வேந்தர்களுக்குச் சொந்தமான மாளிகைக் கட்டடங்களின் முன்புறங்களை இடித்துத்தள்ள வேண்டும். தாமே செல்வக்குடியிற் பிறந்தாலும், பெரும்பான்மை மக்களின் பொது நன்மை கருதிச், சிறுபான்மைப் பணக்காரர்களின் எதிர்ப்பினைத் துச்சமாய் ஒதுக்கிய ஈ.வெ.ரா. தமது நகரசபைத் தலைவர் பதவி தந்த அதிகாரத்தாலும், தமது இயற்கையான துணிவாலும், சட்ட விரோதமான ஆக்கிரமிப்பு என்று கூறித் தாமே அருகில் நின்று தேவையான அளவுக்குக் கட்டடங்களின் முகப்புகளை இடித்துத் தள்ளச் செய்தார். அப்போது, மேட்டுக்குடியினர் எதிர்த்த போதிலும், அவர் செய்த அருஞ்சாதனையின் பயனை இன்று பலரும் பாராட்டி, அனுபவித்து வருகின்றனர்.

பாறைப் பகுதியான ஈரோட்டில் குடிநீர்ப் பஞ்சம் தலைவிரித்தாடியது. காவிரியாற்றிலிருந்து குடி தண்ணீரை எடுத்து, வடிகட்டிப், பாதுகாக்கப்பட்ட குடிநீரைக் குழாய் வழியாக ஊராருக்கு வழங்கிட, முதன் முதலில் திட்டம் தொடங்கி வழிகாட்டியவர் ஈ.வெ.ரா. ஆவார். பெரியாரின் இந்தச் செயலை ஊர் மக்களெல்லாம் போற்றினார்கள். ஆனால் பெரியாரின் தாயார் சின்னத்தாயம்மையார் மட்டிலும் குழாய்த் தண்ணீர் கூடாது என்றார்கள். காரணம் என்ன? குழாய்த் தண்ணீரை யார் யாரோ பிடித்து விடுகிறார்கள்—அதில் தீட்டு ஒட்டியிருக்கும் என்பதற்காக.

அதேபோலப், பெரியாரின் வீட்டுமுன் உள்ள குழாயில் நல்லதொரு வேடிக்கை. அதில் தண்ணீர் பிடிக்க ஒரு பார்ப்பன அம்மையார் வரும்போது, ஒரு சுண்டைக்காய் பிரமாணம் புளியும், பஞ்ச பாத்திரத்தில் தண்ணீரும் கொண்டு வந்து குழாயைப் புளியால் விளக்கிக் கழுவிப் பின்பு தண்ணீர் பிடித்துக் கொண்டுபோக ஆரம்பித்தார்கள். இதைப் பார்த்த பார்ப்பனரல்லாத மாதர்களும் நெல்லிக்காய் அளவு

புளியும் ஒரு தோண்டி தண்ணீரும் கொண்டுவந்து, புளியால் விளக்கிக் குழாயைக் கழுவித் தண்ணீர் எடுத்துக் கொண்டு போனார்கள். இதைக் கண்ணுற்ற முஸ்லீம் சகோதரிகள் எலுமிச்சங்காய் அளவு புளியும் முக்கால் குடம் தண்ணீரும் கொண்டுவந்து புளியால் குழாயை விளக்கிக் கழுவித் தண்ணீர் பிடித்து எடுத்துக் கொண்டுபோகப் பழகினார்கள்.

முஸ்லீம் சகோதரிகளைப் பார்த்து உங்கள் மார்க்கத்தில் தான் வித்தியாசம் கிடையாதே; நீங்கள்கூட ஏன் இப்படிக் கழுவித் தண்ணீர் பிடிக்கிறீர்கள் என்று பெரியார் கேட்கச் செய்தபோது, எங்களுக்கு என்ன தெரியும், இப்படித்தான் தண்ணீர் பிடிப்பது வழக்கமோ என்னமோ, என்று கருதி நாங்கள் இப்படிச் செய்து வருகிறோம் என்றார்கள், இவ் வளவுக்கும் பார்ப்பனர் உண்டாக்கிய பழக்க வழக்கந்தானே காரணம் என்று பெரியார் குறிப்பிட்டுள்ளார்.

ஈரோட்டிலுள்ள எழில் தவழும் வ.உ.சி. பூங்காவின் மேல்நிலைக் குடிநீர்த் தொட்டியில் ஈ. வெ. ராமசாமியின் பெயர்தான் பொலிகின்றது! இவ்வளவு நன்மைகள் செய்தும் ஈரோட்டுப் பார்ப்பன மாந்தர், இவர் இப்பதவிக்குத் தகுதி யில்லாதவர்; இவரை நீக்கிடல் வேண்டும் என அரசுக்கு விண்ணப்பம் விடுத்தனர். பாதிக்கப்பட்ட சில பாதிரியார் களும் இதற்கு ஆதரவு தெரிவித்தனர். மேலிடத்தார் நேரில் வந்து விசாரணை நடத்தியபோது, ஈரோடு நகரத்தில் பொது நலன் பேணும் கவுரவப் பதவிகள் அனைத்தும் ஈ.வே. ராமசாமியைத் தாமே தேடிவந்து தஞ்சம் புகுந்ததில், அவர் அப்போது வகித்துவந்த பதவிகளின் எண்ணிக்கை இருபத்தொன்பது என்பது தெரியவந்தது. அதனால், மிக உறுதியுடன், இராமசாமியே தலைவராயிருக்கத் தக்கவர் என்று கூறிப் பழி கூறியோர் முகத்தில் கரிபூசிச் சென்றனர்.

ஈ. வெ. ராமசாமி ஈரோடு நகர்த்தலைவராயிருந்த போது, இவரைவிட ஒரு வயது மூத்தவரும், வழக்கறிஞரு மான சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் சேலத்தில் தலைவராக வீற்றிருந்தார். பக்கத்திலுள்ள பெரிய நகர

மாதலால், இருவரும் அடிக்கடி சந்தித்து, அளவளாவி, நட்புப் பூண்டனர். ஈ. வெ. ராமசாமியின் ஆட்சித்திறன் இராசகோபாலாச்சாரியைக் கவர்ந்தது. அவரும், அவரது நெருங்கிய சகாக்களான டாக்டர் பி. வரதராசலு நாயுடுவும் திருவாரூர் தமிழ்த்தென்றல் வி. கல்யாண சுந்தர முதலியாரும், கப்பலோட்டிய தமிழன் வ. உ. சிதம்பரம் பிள்ளையும் அப்போது காங்கிரஸ் இயக்கத்தில் ஈடுபட்டிருந்தனர்.

இங்கிலாந்தில் நிறுவப்பட்ட கிழக்கு இந்தியக் கம்பெனி கி. பி. 1600-ல் இந்தியாவுக்கு வாணிபம் செய்வதாக வந்து நுழைந்து, படிப்படியாக உள்நாட்டுப் பிரச்சினைகளில் தலையிட்டு, நாடுகளைக் கைப்பற்றி வந்தது. கி.பி. 17x4-ல் இந்தப் பகுதிகளை இங்கிலாந்து அரசே நேரடியாக ஆளத்தொடங்கியது. ஆங்கில ஏகாதிபத்தியத்தை அவ்வப்போது இந்தியாவில் எதிர்த்துச் சில கிளர்ச்சிகள் நடைபெற்று வந்தன. 18 5-ஆம் ஆண்டு பம்பாயில் இந்திய தேசியக் காங்கிரஸ் என்னும் அமைப்பை ஹியூம் என்ற ஆங்கிலேயர் தோற்றுவித்தார். இந்தியன் நேஷனல் காங்கிரஸ்—அதாவது இந்தியச் சாதியாரின் சபை என்று வைக்கப்பட்ட பெயர், பிறகுதான் இந்திய தேசிய மகாசபை என மாற்றிக் கொள்ளப்பட்டது. படிப்படியே இந்தியர்களுக்கும் உத்தியோகங்கள் தரப்படவேண்டும் என்பதே இதன் கோரிக்கை. 1929-ல் தான் சுயராஜ்யக் கோரிக்கை முதன் முதலாக உருவாகியது. காங்கிரஸ் இயக்கம் வளரவே, 1909-ல் மிண்டோ-மார்லி சீர்திருத்தம், 1919-ல் மாண்டெகு- செம்ஸ்போர்டு சீர்திருத்தம் ஆகியவை ஆங்கிலேயரால் கொண்டு வரப்பட்டன.

1916-ல் பார்ப்பனரல்லாதார் நலன்களைப் பாதுகாக்க, நீதிக்கட்சி துவக்கப்பட்டது. காங்கிரஸ் இயக்கத்திலேயே டாக்டர் அருண்டேல், டாக்டர் அன்னி பெசண்ட் அம்மையார் ஆகியோர் ஈடுபட்டு, ஸ்மார்த்தப் பார்ப்பனர் சிலர் உதவியுடன் ஹோம்ரூல் என்ற பெயரால் மிதவாதக் கொள்கைகளைப் பிரச்சாரம் செய்து வந்தனர்.

காந்தியார் தென்னாப்பிரிக்காவிலிருந்து அப்போது தான் இந்தியா திரும்பினார். ஹோம்ரூல் இயக்கத்தினை முறியடித்து, ஒத்துழையாமை இயக்கத்தை வலியுறுத்தி வந்தார். அவருக்கு ஆதரவாக வைணவப் பார்ப்பனர்கள் திரண்டனர். இராசகோபாலாச்சாரியார்தான் பிரதம தளபதி!

ஈ. வெ. ராமசாமியின் தீவிரமான முற்போக்கு எண்ணங்களை நன்கு உணர்ந்திருந்ததால், இராசகோபாலாச்சாரியாரின் குழுவினர், அடிக்கடி அவரை ஈரோட்டில் வந்து சந்தித்துக், காங்கிரஸ் இயக்கத்தில் ஈடுபடத் தூண்டினர். நகரசபைத் தலைவராக நற்பணி ஆற்றியதற்காக, ராவ் பகதூர் பட்டம் வழங்கிடப் போவதாய், அரசின் சார்பில் ஒருபுறம் ஆசைவார்த்தைகள் பேசப்பட்டன. சபலத்துக்கு ஆளாகும் ஜனபுத்தியா ஈ வெ. இராமசாமிக்கு?

அவரே என்ன சொல்கிறார்:— "பொது மக்களின் சுயமரியாதைக்கும் உரிமைக்கும் விடுதலைக்கும் ஆபத்தான இயக்கம் என்று எதையாவது நான் கருதினால் அதை அடியோடு அழிக்க நான் பின்வாங்கமாட்டேன். எவ்விதப் பழியோ அபகீர்த்தியோ ஆபத்தோ வருவதானாலும் அவற்றைக் கொஞ்சமும் இலட்சியம் செய்யாமல் என்னால் கூடியதைச் செய்துதான் தீருவேன்.

நான் பொது வாழ்வில் உழைக்க ஆரம்பித்த பிறகு இக் கொள்கையையே என்னால் கூடியவரை அனுசரித்து வந்திருக்கிறேன். உதாரணமாக ஹோம்ரூல் கிளர்ச்சியின் போதும், ஈரோட்டில் நடந்த கொடித்தகராறில் நானே முன்னணியில் இருந்ததும், என் வீட்டில் கொடி கட்டினதும்; ஜஸ்டிஸ் கட்சி ஆரம்பித்த காலத்தில், அது தேசத்துரோகமான கட்சி என்று நமது பார்ப்பனர்கள் செய்த பிரச்சாரத்தில் ஏமாந்துபோய் அதற்கு எதிராக (Madras Presidency Association) சென்னை மாகாணச்சங்கம் ஏற்படுத்துவதற்காகக் கூட்டிய முதல் கூட்டத்திற்கு என்னுடைய முழு ஆதரவையும் கொடுப்பதாக வாக்களித்து 1000 ரூபாய் தந்தியில் அனுப்பியதும், அக்கூட்டத்திற்கு முன்

ணியில் இருந்து மாநாடுகள் முதலியன நடத்தியதும், திவான்பகதூர் கேசவப் பிள்ளை தலைமையில் நான் உப தலைவராக இருந்ததும்; பிறகு ஹோம்ரூல் கிளர்ச்சியில் உள்ள சில புரட்டுகள் வெளியானதும், அதை ஒழிப்பதற்குச் சட்டவரம்புக்கு உட்பட்ட கிளர்ச்சி செய்ய வேண்டும், ஆனால், வெள்ளைக்காரர்களை எதிர்க்கக்கூடாது என்பதனால் தகராறு ஏற்பட்ட நிலையில், அதிதீவிரவாதிகள் எல்லாம் சேர்ந்து, (Nationalist Association) அதிதீவிர வாதிகள் சங்கம் ஏற்படுத்தி, சேலம் விஜயராகவாச்சாரியார் தலைவராகவும், ராஜாஜி செக்ரட்டரியாகவும் நான் வைஸ் பிரசிடெண்ட் ஆகவும் இருந்திருக்கிறேன்.''

காந்தியார் தலைமையில் வீறுநடை போடத்துவங்கிய காங்கிரஸ் மகாசபையின் ஒத்துழையாமை இயக்கம், ஈ.வெ.ரா.வை மெத்தவும் கவர்ந்திழுத்தது. தமக்கு 'எப்போதும் மிகப்பிடித்தமான கொள்கைகளாகிய தீண்டாமை விலக்கு, சாதிபேத ஒழிப்பு, மதுவிலக்கு, நீதிமன்றப் புறக்கணிப்பு, பள்ளிக்கூட பகிஷ்காரம், உத்தியோக விலகல் ஆகிய திட்டங்களில் அவர் மனம் பறிகொடுத்தார். பஞ்சாப் படுகொலையைக் கண்டித்து, நாடெங்கும் பிரச்சாரத்திற்காகத் தாமும் கிளர்ந்தெழுந்தார். ஒத்துழையாமை இயக்கத்திற்கு உயிர் கொடுக்க, உயர் பதவிகள் இருபத்தொன்பதை ஒரே நாளில் விட்டொழித்தார். பரம்பரைத் தொழிலான மண்டி வாணிபத்தை, வருமானம் தரும் கருவூலத்தை, பஞ்சாலையை, யோசிக்காமல் மூடிவிட்டார். சொத்துசுகம் அத்தனையும் பித்தம் வளர்க்கும் வித்தெனமதித்துப், பதறாமல் சிதறாமல், கதறாமல் கலங்காமல்,துறந்து வெளியேறினார்.

தமிழ்நாட்டில், காங்கிரஸ் இயக்கம் என்ற தரு வளர்வதற்கான மூல விதையைக் கரத்தினில் ஏந்தி, மண்ணில் விதைத்துத், தண்ணீர் வார்த்து, அது முளைவிட்டு இலைவிட்டுக் கிளைவிட்டு, ஆணிவேர் சல்லிவேர் பரப்பி, ஆலவிருட்சமாய் விழுதுகள் இறக்கித், தழைத்துச் செழித்துக் கொழுத்துப் படர ஒரே காரண கர்த்தாவான ஈ.வெ. ராமசாமி புறப்பட்டார் 1920-ல்!

# 6. துணிந்தார்

காந்தியார் திட்டங்களை ஏந்திப் பரப்பியது — கதராடை, மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு— பிரச்சாரமும் போராட்டங்களும் — வைக்கம் வீரர் — வகுப்புவாரிப் பிரதிநிதித்துவக் கோரிக்கை ஏற்காத காங்கிரஸ் தனக்கும ஏற்காது என நீங்குதல்—192 —ஆம் ஆண்டு முதல் 1925—வரை.

காந்தியடிகளின் ஒத்துழையாமைக் கொள்கையினை மொத்தமாக வரவேற்று அத்தனை பகுதிகளையும் சித்துங் குலையாமல் உதறிய ஈ. வெ. ரா., காந்தியாரின் நிர்மாணத் திட்டங்களான கதராடை அணிதல், மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு ஆகிய முப்பெரும் கோட்பாடுகளை முழு மூச்சுடன் ஆதரித்தார். அவற்றை மும்முரமாய்ப் பிரச்சாரம் செய்திடவும் முனைந்து முடிவெடுத்தார். ஒத்துழையாமைக் கொள்கை வெற்றிகரமாய் நடத்தப்பெறத் தாமே முன்னுதாரணமாய் விளங்கிட எண்ணினார் நீதிமன்றங்களைப் புறக்கணித்தலே அதன் செயற்பாடாகும். தமது குடும்பத்துக்கு வரவேண்டிய பல்லாயிரக் கணக்கான ரூபாய்க் கடன் தொகைகளைக் கோர்ட் மூலம் வசூலிக்க மறுத்ததால், அவ்வளவு பெருந்தொகை இழக்க நேர்ந்தபோதும் ஈ. வெ. ரா. உள்ளத் தளர்ச்சி கொள்ளவில்லை. சேலம் பிரபல வழக்கறிஞர் விஜயராகவாச்சாரியார் அந்தக் கடன் பத்திரங்

களைத் தனக்கு மாற்றித் தருமாறும், தான் எப்படியும் வர வழைத்துவிட இயலுமென்றும் பேசியபோது, அது தமது கொள்கைக்கு முரணாகும் என மறுத்துரைத்தார் இந்த மாபெருந் தியாகி! விஜயராகவாச்சாரியார் இதைப் பல ரிடத்தும் வியந்து போற்றினார்.

மாளிகை வாசமும், சாரட்டுச் சவாரியும், பட்டுச் சொக்காயும், பகட்டான உடைகளும், அறுசுவை உண்டியும், அரசர்போல் வாழ்வும் ஒரேநொடியில் ஒதுக்கித்தள்ளினார். எளிய வாழ்க்கையை வலிய மேற்கொண்டார். வீட்டைத் திருத்தி நாட்டையும் திருத்த விழைந்தார். நேர்மையான நன்னடத்தை, கூர்மையான பகுத்தறிவு, வாய்மையான நல் லொழுக்கம்; தூய்மையான பொது வாழ்வு; பரம்பரைப் பணக்காரரான சீமான்களிடையே காண இயலாத இந்தப் பெருந்தன்மையான மனப்பக்குவம்; முன்பே ஒரு முறை வீட்டைத் துறந்து வெளியேறி, நாட்டில் வலம் வந்ததால் பெறப்பட்ட உரமான அனுபவம்; ஏறத்தாழ நாற்பது வயது நெருங்கி விட்டதால் ஏற்பட்ட தெளிந்த முதிர்ச்சி; ஏதாவது புதுமையினைச் செய்து நாட்டோரின் அவல வாழ்வை மேம் படுத்திட வேண்டுமெனும் நாட்டம்—அனைத்துக்கும் இருப் பிடமாக, நினைத்ததை முடித்திடுவோம் என்ற உறுதியின் பிறப்பிடமாக இருந்த ஈ.வெ. இராமசாமியைக் காந்தியடி களின் அறவழிப் போர் முறைகள் ஈர்த்ததில் வியப்பில்லை யன்றோ?

அந்நியத்துணிகளை அறவே விலக்கினார்; பட்டுப் பீதாம்பரங்களை எட்ட எறிந்தார்; முரட்டுக் கதராடை களையே எளிமையாக உடுத்தினார். வழக்கம்போல் தமது கொள்கைகளைத் துணைவியாரும், தாயாரும், தங்கை யாரும், மற்றுமுள்ள சுற்றத்தாரும், கெழுதகை நண்பர் களும், உழுவலன்பர்களும் பின்பற்ற வேண்டுமென அன்புக் கட்டளை பிறப்பித்தார். 80 வயது நெருங்கிய, சீமான் வெங்கட்ட நாயக்கரின் பார்யை, சின்னத்தாயம்மையாரும் சாமான்யக் கதர்ப்புடவை உடுத்தத் தொடங்கினார் எனில் பிறரைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ? தக்ளியும் ராட்டை

யும் கைகளில் சுழலத் தொடங்கின. இராமசாமியாரின் கால்களும் தமிழ்நாடு முழுதும் சுழலத் தொடங்கின.

கட்டித் தங்கத்தைத் தட்டித் தகடாக்கி மெருகேற்றினாற் போன்ற ஆடகப் பசும்பொன்னிற மேனி, செல்வத்திரட்சியால் வளர்ச்சி பெற்ற உருட்சியான உடல், செழுமையின் வளமைகாட்ட முன்னோக்கி எழுந்த இளந்தொந்தி, பரம்பரையாய் இளமையிலேயே கருமை மறைய, வெண்பஞ்சுப் பொதிபோல் வெளுத்துச்சுருண்டு அடர்ந்த தலைமுடி, தருக்கினைச் சுருக்கென உணர்த்திடும் முறுக்கிய பெருமீசை, அறிவுமிகுதியின் வரைவு காட்டிடும் அகன்றுயர்ந்த நெற்றி, நீண்டு அகன்ற பெரிய மூக்கு, மயிரடர்ந்து அறுகம்புல் வரிசையென அழகூட்டும் புருவங்கள், ஆழ்ந்து ஒளிரும் அருள் சூழ்ந்த இருபெருங் கருவிழிகள், அழகான, மென்மையான சிவந்த உதடுகள், செயற்கைப் பற்கள், கட்டை விரல் நீண்டு சிறிது வளைந்தும் பிறவிரல்கள் நீண்டும் தொங்கிடும் கரங்கள்! மேதாவிலாசத்தை விளக்கிடும் கவர்ச்சியும் எழுச்சியும் உணர்ச்சியும் மிகுந்த தோற்றத்தையுடைய ஈ. வெ. ரா. மேடையேறிவிட்டால் அங்கே சிங்கத்தின் கர்ச்சனைதான் கேட்கும்!

தர்க்கத்தில் வல்லவர்; குதர்க்கத்திலுந்தான்! வாதத்தில் தேர்ந்தவர்; பிடிவாதத்திலும், தேவைப்பட்டால் விதண்டாவாதத்திலுந்தான்! சொல்லடுக்கில் சோர்விலாதவர்; கல்லெடுக்க நினைத்தால் மூக்குடைப்பார்—மற்போரால் அல்ல சொற்போரால்! சமுதாயத்தின் அடித்தளத்து மக்கள்; அடிமைப்பட்டு மாக்களாக மாறினாற்போல் ஊக்கமின்றி உட்கார்ந்து உறங்கிச் சாகும் தேவாங்கு போன்றார்; பஞ்சைபராரிகள், பாமரர்கள்; எத்தர், ஏமாற்றுவோர் யார் எனப் புரிந்து கொள்ளுந் திராணியற்றோர்; ஒளி தெரிய வழியுண்டா எனத் தலையுயர்த்திப் பார்க்கவும் தெம்பு அற்றோர்; பொதி சுமக்கும் மாடுபோல் அந்நியரின் வரி சுமக்கும் வக்கற்றோர், வகையற்றோர், திக்கற்றோர்—இவர்களின் நாடிநரம்பெலாம் தடவிப் பார்த்து, இருதயத்தில் சுருதி மீட்டி, இன்னிசை எழுப்பிடும் தன்னிகரில்லா

வன்மை படைத்தவரானார் இராமசாமி. மேடையிலே ஏறி, அவர்கள் மொழியிலே, அவர்களுக்காக, அவர்களது பிரச்சினைகளை அலசி ஆராய்ந்து, அவர்களுடைய உயர் வாழ்விற்காக அவர் பேசத்தொடங்கினால்...ஆவென வாய் பிளந்து, ஓய்வெடுக்க மறந்து, உண்டி மறந்து, உறக்கம் துறந்து, அலுப்பின்றிக் களைப்பின்றி, நான்கு மணி நேரம் ஐந்து மணி நேரம் தமது செவிக்குணவு பெறுவர் தமிழ் நாட்டு மாந்தர். கூட்டம் முடிந்ததும் சீமைத் துணிகளைத் தீயிட்டுக் கொளுத்திடும் துணிவு பிறக்கும்! கதராடை புனையும் தெளிவு பிறக்கும். கையில் ராட்டினம் ஏந்திட அறிவு பிறக்கும். அத்தனை பேரும் ஈ. வெ. ராமசாமியின் அன்புத் தொண்டராய் மாறுவர். கதர் அணிவதையே காங்கிரஸ் கட்சியின் திட்டமாய்க் கொள்கையாய் மாற்றியவர் ஈ. வெ. ரா. கதர்த்துணி மூட்டைகளைத் தோளிலும், கைராட்டையைக் கரங்களிலும் சுமந்து திரிந்து அலைந்து தமிழ் நாட்டில் அவர் பாதங்கள் படாத கிராமிய மண்ணே இல்லை எனலாம்! காங்கிரசில் இல்லாதவர்கூடக் கதராடை அணிந்து வருவதை இன்றுந் தமிழ் நாட்டில் காணலாம். இது ஈ. வெ. ராமசாமியின் கைங்கர்யம் எனில் மிகையன்று! தமிழ் நாட்டின் மூலை முடுக்கெல்லாம் கதர்த்துணி அங்காடிகள் அவரால் திறக்கப்பட்டவையேயாம். "கல்கி" ஆசிரியர் ரா. கிருஷ்ணமூர்த்தி, ஈ. வெ. ராமசாமியிடம்தான் திருச்செங்கோடு கதர் அங்காடியில் வேலைக்கு அமர்ந்தார் முதலில். கதர்த்திட்டம் இராமசாமிக்குப் புதியதென்றாலும், காந்தியடிகளின் மீது கொண்ட கரைகாணாப் பற்றினால், கொண்ட கொள்கை மீது வைக்கும் நம்பிக்கையால், அதன் வெற்றியில் கொள்கின்ற வற்றாத அக்கறையால், நன்றி எதிர்பாராத நல்லுழைப்பால் தமிழ்நாட்டில் கதர்த்திட்டம் வெற்றிகரமாய் வேரூன்றி விட்டது!

காலையில் எழுந்தவுடன் சாதாரண ஃபிரேமுக்குள் அடங்கிய வெள்ளெழுத்துக் கண்ணாடியை எடுத்து மூக்கின் மீது வைத்து இழுத்துக் காதில் மாட்டிக்கொண்டு, கையில் இந்து, சுதேசமித்திரன், நவசக்தி ஆகிய பத்திரிகைகளை வரி

விடாமல் படித்து முடித்திடுவார். அப்போதே அன்றைய மேடைச் சொற்பொழிவுக்கான கருத்துகள் மூளையில் பதிவாகி விடும். அற்புதமான நினைவாற்றலால், அவை கற்பனையும் கதையுமாய்ப் பழமொழி உவமைகளுடன் கூடிக் கலவையாகிச் சுவை மிக்க தின்பண்டமாய்க் கேட்போர் செவிப்புலனில் தேன்மாரியாய்ச் சென்று விழும். யாரேனும் கேள்வி கேட்டுவிட்டால்தான் சுறுசுறுப்பும் சூடும் அதிகமாகும் அவருக்குப் பேச்சு மேடையில்!

நாள்தோறும் பல்துலக்குதலோ, குளித்தலோ, ஆடை மாற்றுதலோ அவசியமான கடமைகள் என அவர் கருதுவதில்லை. அவற்றுக்கு முக்கியத்துவமும் தருவதில்லை. அதே போலக், கிடைத்த உணவை வயிறுநிரம்பச் சாப்பிட்டு விடுவார்; அதனுல் தொல்லைகள் ஏற்படினும் பொருட்படுத்துவதில்லை! மிகச் சாமான்ய மக்களும் தம் கருத்தைப் புரிந்து கொள்ளுமாறு, கடினமான விஷயங்களையும், உடைத்து நொறுக்கி நுட்பமாய் எளிமையாய் உண்ணத் தருவதுபோல், விளக்குவார். அவர்கள் மூளையில் பல்லாண்டுகளாய் அடிமை மிடிமைகளால் ஏறியிருக்கும் பழமைத் தூசியைத் துடைத்துக் கருத்துகளைக் குடியேற்றுவார். படிக்காதவர் விளங்கிக் கொள்ளுமாறும், படித்தவர் சிந்திக்குமாறும் பேசுவார். இப்படிப் பேச்சு வன்மையில் வெற்றி கண்டவர் இந்திய வரலாற்றில் இவர் ஒருவரே ஆவர்! உலகின் நெடிய வரலாற்றிலோ சாக்ரடீஸ், ஏசுகிறிஸ்து—ஆகிய மிகச் சிலரையே கூறமுடியும்!

மதுவிலக்குக் கொள்கையும் அப்போது ஈ. வெ. ராமசாமிக்கு மிகவும் உடன்பாடான ஒன்றாகும். இந்தக் கொள்கையின் வெற்றிகரமான நடைமுறைப்பாட்டிற்காக ஈ. வெ. ரா. கையாண்ட யுக்திகள், செயல்கள் உலகில் யாரும் எண்ணிப் பார்க்கக்கூட இயலாத அளவு மகத்தானவை. வேறு யாருக்கும் இந்த வழியில் சிந்தனை செல்வது அரிதாகும். கள் குடிக்க வேண்டாம் என்று மக்களை வேண்டிக் கேட்டுக் கொண்டு கள்ளுக் கடைகளின் முன் அமைதியாக மறியல் செய்ய வேண்டுமென்பதே காந்தியடிகளாரின்

ஆணை. மதுவினால் ஏற்படுங் கேடுகளைப் பொது மேடைகளின் வாயிலாய் விளக்கிப் பிரச்சாரம் செய்திடவும் வேண்டும்; அவ்வளவுதான் திட்டம்! ஆனால் எதிலும் தீரமும் வீரமும் தீவிரமும் புதுமையும் மிதந்திட வேண்டுமென்பதில் தணியா ஆர்வமுடைய ஈ. வெ. ரா. தமது தோட்டங்களில் இருந்த சுமார் அய்ந்நூற்றுக்கும் மேற்பட்ட தென்னை மரங்களை ஒரே நாளில் அடியோடு வெட்டி வீழ்த்தினார்! மலேரியா நோயைத் தடுக்கக் கொசு உற்பத்தியாகும் நீர்த் தேக்கங்களைத் தூர்த்துவிட வேண்டும் என்பதுபோல் தென்னங்கள் அருந்துவதைத் தடுக்கத் தென்னை மரங்களையே அழித்திட வேண்டும் என்பது வாதப்படி சரிதானே? வெறித்தனமான பின்பற்றும் போக்கினால் அங்கே அறிவுக்கு முதலிடம் தரவில்லை ஈ. வெ. ரா! தலைவன் கட்டளையைக் கண் மூடித்தனமாகத் தாம் பின்பற்றியதால், தமது தொண்டர்களும் தமது ஆணையை அவ்வாறே நிறைவேற்றிடவேண்டுமென அவர் எதிர் பார்த்ததில் தவறேது? இளநீரும் தேங்காயும் நாரும் மட்டையும் கீற்றும் பாளையும் கூட இல்லாமல் போகுமே, என்ற அடுத்த கட்டச் சிந்தனைக்கு அங்கே வேலையில்லை!

மதுவிலக்குத் திட்டத்தை எவ்வாறு அமுல் படுத்துவது என்பதை ஆலோசித்துக் கலந்துரையாடி முடிவு செய்யக் காந்தியடிகள் தேர்ந்தெடுத்த ஊர் ஈரோடுதான். ஈ.வெ. ராமசாமியின் மாளிகையில்தான் காங்கிரஸ் தலைவர்கள் கூடிக் கள்ளுக்கடைகளின் முன் மறியல் செய்வது என்பதைத் தீர்மானித்தனர். ஈ. வெ. ரா. மதுவிலக்குக் கொள்கையின் பால் காட்டி வந்த பேராதரவே, காந்தியாரும் பிறதலைவர்களும் ஈரோட்டில் வந்து போராட்ட வழிவகுக்கக் காரணமாயிருந்தது. மேலும் தென்னகத்தில் தோன்றி வளர்ந்து வந்த நீதிக் கட்சியினை முறியடிக்கக் காங்கிரஸ்காரர்களின் மறைமுகமான தூண்டுதலால் திவான்பகதூர் கேசவப் பிள்ளை போன்றவர்களால் துவக்கப்பட்ட சென்னை மாகாணச் சங்கத்தின் மாநாட்டை ஈரோட்டில் 1919-ஆம் ஆண்டு ஈ. வெ ரா. வெற்றிகரமாய் நடத்தியிருந்தார். அதனால்

அவரது திறமையில் நம்பிக்கை மிகக் கொண்ட காங்கிரசார் ஈரோட்டிலேயே கள்ளுக்கடை மறியல் போராட்டத்தைத் துவக்கிட நினைத்தனர்.

1921-ஆம் ஆண்டு இந்தியத் துணைக்கண்டமே ஈரோடு நகரம் நோக்கித் தன் விழிகளை அகலத் திறந்து பார்த்து நின்றது. இந்தியக் காங்கிரசின் சரித்திரத்தில் பொன்வரிகளால் பொறிக்கப்படத் தக்க புகழ் மிக்க அந்தப் போரின் தளநாயகர் ஈ. வெ. ரா. என்று நெஞ்சு நிமிர்த்திச் சொல்வதோடு நின்றுவிட முடியாது! காரணம், இராமசாமியாரின் வாழ்க்கைத் துணைநலமாம் நாகம்மையாரும், அன்பு உடன்பிறப்பாம் கண்ணம்மாளும் பெரும்வீராங்கனைகளாய் உயர்ந்தோங்கி நின்று களம் புகுந்து வாகை சூடினர். ஈரோட்டில் 144 தடையுத்தரவு நடைமுறைக்குக் கொணரப் பட்டது. தாம் பிறந்து வளர்ந்து, பெருமகனாய் உலவி, நகர முன்னேற்றத்தில் எந்நேரமும் பாடுபட்டுப் புகழீட்டிய அதே மண்ணில், தமது மண்ணின் மைந்தர்கள் எண்ணிலாத் துயரம் தென்னங்கள்ளினால் எய்தி வருந்துவதைத் தடுக்க மறியல் களம் புகுந்தார் ஈ. வெ. ரா.! நூற்றுவர் பின்தொடரக் கைதாகித் தண்டனை பெற்றுச் சிறை புகுந்தார்; நாடெங்கும் அமளி! ஆயிரக்கணக்கில் ஆண் பெண் தொண்டர்கள் அணிவகுத்து வந்தனர். அன்னையார் நாகம்மையாரும் அருமைத்தங்கையார் கண்ணம்மாளும் போராட்டத்துக்குத் தலைமையேற்று வீரகாவியம் படைத்தனர். தீரரெல்லாம் வேகமாகச் சேர வந்தது கண்டு பிரிட்டிஷ் அரசு விதிர் விதிர்த்தது பல்லாயிரம் பேரை அடைத்து வைக்க இல்லையே இங்கு சிறைச்சாலை எனத் திகைத்துத் தவித்து, 144 தடையுத்தரவைத் தவிர்த்திட, அரசு முன் வந்தது!

இந்தச் சூழ்நிலையில்தான் செந்தமிழ் நாட்டின் புறநானூற்று வீரத் தாய்மார் போல் செம்மாந்து நின்ற நாகம்மையார்-கண்ணம்மாள் இருவரின் மாப்புகழ் இந்தியா எங்கும் எதிரொலித்த செய்தி ஒன்று நிகழ்ந்தது. 1922-ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 19-ஆம் நாளிட்ட "இந்து" பத்திரி

கையில் இப்பேருண்மை வெளியாகி ஒளிபரப்பியுள்ளது. அதாவது, காந்தியடிகளின் ஒத்துழையாமைக் கிளர்ச்சிகளை நிறுத்திக் கொள்ளுமாறு சமாதானப் பேச்சு வார்த்தைகள் பம்பாயில் நடைபெற்றன. அரசு, ஒப்பந்தம் செய்து கொள்ள முன்வந்ததால், பண்டித மாளவியா, சர் சங்கரன் நாயர் இருவரின் முயற்சியால் ஒரு மாநாடு கூட்டப்பெற்றது அதில் அவர்களிருவரும், கள்ளுக்கடை மறியலை நிறுத்தி விடுங்கள்; வேறு நடவடிக்கை துவக்கலாம் என்று கேட்ட போது, காந்தியடிகள், மறியலை நிறுத்துவது என் கையில் இல்லை; அது ஈரோட்டிலுள்ள இரு பெண்மணிகளிடம் உள்ளது; அவர்களைத்தான் கேட்க வேண்டும் என்று பெருமிதத்துடன் பதிலுரைத்தார்!

ஈ.வெ. ராமசாமியாரின் துணைவியும், தங்கையும் இந்திய சுதந்திரப் போராட்ட வரலாற்றில் முதலிடம் பெற்றிருந்தார்கள் என்பதும், முதன் முதலில் காங்கிரஸ் இயக்கத்திற்காகச் சிறை செல்லத் துணிந்தவர்கள் அவர்களே என்பதும் எத்தகைய புகழைத் தமிழர்க்குத் தேடித்தரவல்லன! வாழிய நாகம்மையார் கண்ணம்மாள் புகழ் வண்டமிழ் நாடும் தண்டமிழ் மொழியும் வாழும் வரை! ஆடவரும் வெட்கித் தலைகுனிய, அனைத்து இந்தியாவும் வியந்து மெச்சி நிற்க, மறக்குல மகளிர் திலகங்கள் நிகழ்த்திய அம்மாபெரும் மறியல் போர், மானமுள்ள தமிழ் மக்கள் நெஞ்செல்லாம் நிறைத்திடுக! இவ்வாறு நாடே வாழ்த்திற்று.

1922-ஆம் ஆண்டு ஈரோட்டுக்கு வந்த பண்டித மோதிலால் நேரு, வித்தல்பாய் படேல், டாக்டர் அன்சாரி ஆகிய பெருந்தலைவர்கள் தம் இல்லத்தில் தங்கியிருந்த நினைவாக அப்போது தமது பழைய ரயில்வே நிலைய மாளிகையில் 30 பிள்ளைகள் அடங்கிய இந்தி கற்பிக்கும் பள்ளி ஒன்றினைத் தமது செலவில் துவக்கி, 2 ஆண்டுகள் வரை நடத்தி வந்தார் ஈ. வெ. ரா. அதில் 15 பிள்ளைகளுக்கு உணவு முதலியவை இவர் பொறுப்பு.

காந்தியடிகளின் உயிர் மூச்சாய் விளங்கிய தீண்டாமை ஒழிப்பின் ஒரு கட்டமாகத், தாழ்த்தப்பட்டோர் ஆலயப்பிர

வேசம் எனும் திட்டம் தீட்டப்பட்டிருந்தது. தீண்டாமை, ஒழிப்பிலும் தாமே ஆழ்ந்து மூழ்கி, எதிர் நீச்சலிட்டு, எதிர்த்துப் போராடி, முதல் வெற்றிகாணும் முழு வாய்ப்பும் ஈ. வெ. ராமசாமிக்கே கிட்டிற்று. யதேச்சையாக இந்த வாய்ப்பு இவரை நாடி வந்தது; இவர் தேடிப் போகவில்லை.

1924-ஆம் ஆண்டு ஈ.வெ.ரா. குளித்தலையில் ஒரு காங்கிரஸ் மாநாட்டில் கலந்து கொண்டு, அங்கிருந்தவாறே, மதுரை மாவட்டத்தில் சுற்றுப் பயணம் மேற்கொள்ளப் போய்விட்டார். அங்கே வயிற்று நோய் அதிகம் துன்புறுத்தவே, இடையே தடைபட்டு, ஈரோட்டுக்கு மீண்டார். அங்கு வந்து படுக்கையில் ஓய்வாக இருந்தபோதே, அவருக்கு ஓர் இரகசியக் கடிதம் வந்தது. அதைக் கண்டதும், நாகம்மையாரிடம் தமக்கு உடல் நலிவு குணமடைந்து விட்டதாகப் பொய்யுரைத்து, அதாவது புரை தீர்ந்த நன்மை பயக்குமானால் பொய்யும் மெய்யோடு சேர்த்துக் கொள்ளப்படும் என்ற குறள்மொழிப்படித் தமது பெட்டி படுக்கை துணிமணி சகிதம் புறப்பட்டுப் போய்விட்டார்.

என்ன அந்த மர்மக்கடிதம்? எங்கே போனார்? கேரள ராஜ்யத்திலுள்ள திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் வைக்கம் என்று ஒரு பேரூர். அங்கே கோவிலுக்கு அருகிலுள்ள தெரு ஒன்றில் தாழ்த்தப்பட்டோர் நடக்கக்கூடாது என நீண்ட நாளாகத் தடையிருந்து வந்தது. அதாவது ஆரியசமாஜத்தியர்களையும், மதம் மாறிய கிறிஸ்துவப் புலையர்களையும், தெருவில் நடக்க விடவில்லை; இஸ்லாமானவரை அனுமதித்தார்கள்! மக்களின் மான உணர்ச்சிக்கு விடப்படட் இந்த அறைகூவலை எதிர்த்துப் போராடக் கேரளக் காங்கிரஸ் தலைவர்கள் முடிவெடுத்தனர். வைக்கம் நகரில் தடைமீறும் போராட்டம் துவங்கியது. நாளுக்கு ஒருவராய்த் தலைவர்கள் அரசினரால் கைது செய்யப்பட்டு வந்தனர். 19-ம் நாள் ஆனதும் மேலும் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்திவரத் தலைவர்கள் இல்லை. சிறையிலிருந்த ஜார்ஜ் ஜோசஃப், கேசவமேனன் ஆகிய தலைவர்கள் ஆழ்ந்து யோசித்து, இனி இந்தக் கிளர்ச்சியைத் தொடர்ந்து

நடத்தி வெற்றி தேடித்தரத்தக்க தலைவர் ஈரோட்டு இராமசாமி ஒருவர்தாம் எனத்தேர்ந்து, அன்னாருக்குச் சிறையிலிருந்தவாறே, அபாயம் என்ற அபாயக் கடிதம் ஒன்றினை அனுப்பி அழைத்தனர். கேரளத்தாரின் மானம் தங்கள் கையில்தான் உள்ளது என அகமுருக எழுதியிருந்தனர். இது போதாதா ஈ.வெ. ராமசாமிக்கு?

மணவிழா மடல் கிடைக்கப் பெற்றாற்போல் மகிழ்வு பூண்டவராய் மறுநாளே படகில் ஏறி, வைக்கத்தில் வந்து குதித்தார். கிளர்ச்சியில் ஈ.வெ. ராமசாமி ஈடுபடப் போகிறார் என்ற செய்தி திருவாங்கூர் மன்னரின் செவிகளை எட்டியதும், தமது உயர் அதிகாரிகளை அனுப்பி மன்னர் சில ஆணைகளை நிறைவேற்றச் சொன்னார். என்ன அவை? மன்னர் டெல்லிக்குச் செல்லும்போதெல்லாம் தமது பரிவாரங்களுடன் ஈரோட்டில் இறங்குவார். அரச வாழ்வு நடாத்திவந்த இராமசாமியாரின் ரயில்வே ஸ்டேஷன் பங்களாவில் அரசரும், அடுத்துள்ள நாயக்கர் சத்திரத்தில் ஆள் அம்புகளும் தங்குவர்; அறுசுவை விருந்து அருந்துவர்; அன்பான உபச்சாரத்தை ஏற்பர். இது அநேகமுறை நடந்து வந்த வாடிக்கை. இதற்கெல்லாம் பதிலாகத் தாம் எப்போது இராமசாமியார்க்கு உபசரிப்புகள் செய்ய முடியுமோ என ஏங்கியிருந்தார் மன்னர். வந்திருப்பது கிளர்ச்சிக்குத் தலைமை ஏற்கத்தான் என்றாலும் தமது அரச மரியாதைகளையும் ஏற்கத்தான் வேண்டும் எனத் திருவாங்கூர் மன்னர் வேண்டியிருந்தார். வேண்டாமென மறுத்து மன்னிப்பு வேண்டினார் ஈ.வெ.ரா. அரசப் பிரதிநிதிகள் எவ்வளவோ எடுத்து மொழிந்தும் ஈ.வெ.ரா. இணங்கவில்லை. வணங்கி வாழ்த்தித் திருப்பி அனுப்பிவிட்டார். கேரளத்து வைக்கம் வாழ்மக்களுக்கு இராமசாமியாரின் மகத்துவம் புரியவந்தது.

ஈ.வெ.ரா. தலைமையில் மீண்டும் புத்துயிர் பெற்றது தீண்டாமை ஒழிப்புப்போர். பல்லாயிரக்கணக்கில் மக்கள் திரண்டு வேடிக்கை பார்த்தனர், வைக்கம் நகரத்திலே. போராட்டத்தில் குதிக்கவும் அனுமதி கேட்டனர். ஈ.வெ. ராமசாமி தம் வழக்கம்போல்—மறக்குலப் பண்டைத்

தமிழ் மன்னர் மரபுபோல்—தாமே தலைமை பூண்டு, முதல் தளபதியாய்க் களத்தில் இறங்கிக் கைதாயினார். அடுத்து, கோவை அய்யாமுத்து, மாயூரம் இராமநாதன், அன்னை நாகம்மையார், தங்கை கண்ணம்மாள் தலைமை தொடர்ந்தது. ஒரு மாதத் தண்டனை பெற்று விடுதலை யான ஈ. வெ. ராமசாமிக்குத் திருவாங்கூரிலிருந்து நாடு கடத்தல் உத்தரவு வழங்கப்பட்டது. அதையும் மீறி, ஆறு மாதக் கடுங்காவல் தண்டனை ஏற்றார். திருவனந்தபுரம், அருவிக்குத்தி என்ற, தீவுச் சிறையில் அடைக்கப்பட்டார். அருவிக்குத்தி தீவுக்குப் படகில் செல்லும்போது புயலால் தாக்குண்டு படகு வேறு பக்கம் ஒதுங்கியது. சட்டத்துக்குக் கட்டுப்படும் ஈ. வெ. ரா. தாமே முனைந்து, படகில் வந்த காவலர்க்கும் பாதுகாப்புத்தந்து, உதவி பெற்றுத், தாமே சிறைக்குள்ளும் சேர்ந்தார். அன்னை நாகம்மையார் முன் னிலும் மேலோங்கிய உணர்வுடன், மும்முரமாய்த் திருவாங் கூர் முற்றிலும் சுற்றுப் பயணம் செய்து, நாடுதழுவிய கிளர்ச் சியை உருவாக்கினார். காந்தியடிகளே நேரில் வந்து பெரி யாரைச் சந்தித்துத் திருவாங்கூர் ராணியின் நல்ல முடிவு பற்றிக் கூறி அவரை இசையச் செய்தார். அதன் பிறகுதான் அரசு இறுதியாகப் பணிந்தது! தாழ்த்தப்பட்ட மக்கள், தெருவில் நடக்கும் உரிமை பெற்றனர். 1925 நவம்பர் 29-ல் வெற்றிவிழாக் கூட்டத்தில் ஈ.வெ.ரா. கலந்து கொண்டார். "வைக்கம் வீரர்" என்ற சிறப்புப்பட்டம் சூட்டி இராம சாமியை இந்தியமக்கள் கொண்டாடினர். வைக்கம் வெற் றியை அடுத்துத்தான் சுசீந்திரத்தில் அரிசனங்கள் ஆலயப் பிரவேசக்கிளர்ச்சி என ஒன்று உருவாக்கப்பட்டு, அதன் பின் விளைவாய் ஆலயங்கள் அனைவர்க்கும் திறந்து விடப்பட்ட சூழ்நிலை பிறந்தது 1926-ல். சுசீந்திரம் சத்தியாக்கிரகத்தை ஆதரித்துக் "குடி அரசு" 31-1-26-ல் ஈ.வெ.ரா. தலையங்கம் எழுதினார்.

ஆறுமாதச் சிறைத் தண்டனையைத் திருவனந்தபுரத்தில் அனுபவித்து வந்தபோது, நான்கு மாதங்கள் ஆகிய பின்னர், திருவாங்கூர் மன்னர் மறைந்து விட்டதை யொட்டி

ஈ.வெ.ரா. விடுதலை செய்யப்பட்டார். நேரே ஈரோடு சென்று நோய் வாய்ப்பட்டிருந்த தமது அன்னையார் சின்னத்தாயம்மையாரைக் காண விழைந்தார். 1924-ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 11-ஆம் நாள் ஈரோட்டில் அடி வைத்ததும், சென்னை மாகாண அரசால் கைது செய்யப் பட்டுச் சென்னை மத்திய சிறையில் அடைக்கப்பட்டார். 124-A, 153-A பிரிவுகளின்மீது அவர்மேல் அரசு வழக்குத் தொடர்ந்தது. ஏழெட்டு மாதங்களுக்கு முன்னர் அவர் ஆற்றிய ஒரு சொற்பொழிவில் ராஜத்துவேஷ, வகுப்புத் துவேஷ வெறியிருந்ததாம். அதில் என்ன புதுமை? அவர் தொழிலே அதுதானே! பின்னர் என்ன காரணமோ, அந்த வழக்கில் அடிப்படையான ஆதாரம் இல்லையென அரசே திரும்பப் பெற்றுக் கொண்டது! ஈ.வெ. ராமசாமியை விடு வித்தது! அப்போதைய அரசியல் நோக்கர்கள் இதற்கு வேறொரு வியாக்கியானமும் தந்தனர். திருவாங்கூர் சமஸ் தானத்தில் மீண்டும் நுழைந்து ஈ.வெ.ரா. போராடாமல் தடுக்கவே, திவான் மாதவையா கேட்டுக்கொள்ளச், சென்னை அரசின் சட்டமந்திரி சர் சி.பி. இராமசாமி அய்யர் இந்த வழக்கைப் போட்டார். பின்னர், வைக்கத்தில் தெருவைப் பொதுவாக்கும் நெருக்கடி நேர்ந்ததால், வெ. ரா.வை விடுதலை செய்யுமாறு நிர்ப்பந்தம் ஏற்பட்டது என்பதே அது! யாருக்குத் தெரியும் சாணக் கியர்கள் சூழ்ச்சி?

காந்தியடிகளின் ஒத்துழையாமை இயக்கங்கள் நல்ல வண்ணம் வெற்றி சூடி வந்தன. தென்னாட்டில் நூற்றுக்கு நூறு அந்தப் பணியின் பெரும் வெற்றி, ஈ. வெ. ராமசாமி யால் நிகழ்ந்தது. இந்நிலையில் காங்கிரசில் ஒரு கருத்து மாறுபாடு முளைவிட்டது. சித்தரஞ்சனதாசர் தலைமையில் சிலர் கூடி, இனி அரசுடன் ஒத்துழைத்துச், சட்ட மன்றங் களைக் கைப்பற்றி, ஆட்சி அமைக்க வேண்டும் என வாதிட் டனர். அதற்கென சுயராஜ்யக் கட்சி என்றொரு அரசியல் அமைப்பினையும் தொடங்கினர். இதன் கிளை தென்னகத் தில் தோற்றுவிக்கப்பட்டு, அதனைப் பார்ப்பனர்களே

முழுமையாய் ஆக்கிரமித்துக் கொண்டனர். காந்தியடிகளை அப்போதும் இராஜாஜியும் இராமசாமியாரும் பின்பற்றி நின்றனர். சென்னை மாகாண சுயராஜ்யக் கட்சியின் பிறப்பு நோக்கம் குறித்து ஈ. வெ. ரா. ஓர் அய்யுறவு கொண்டார். அதுதான் உண்மையுங்கூட. அதாவது—

ஆங்கிலேயர்களால் சென்னை ராஜதானி என்று அழைக்கப்பட்ட மாகாணம், நான்கு மொழி மாநிலங்களை உள்ளடக்கியிருந்தது. நிஜாம்ராஜ்யம் நீங்கலாக ஆந்திரம், மைசூர் ராஜ்யம் நீங்கலாகக் கர்நாடகம், திருவாங்கூர், கொச்சி சமஸ்தானங்கள் நீங்கலாகக் கேரளம், புதுக்கோட்டை சமஸ்தானம் நீங்கலாகத் தமிழகம். ஜமீன்தார் மிட்டாதார் மிராசுதார் இனாம்தார் என்று வெள்ளையருக்கு விசுவாசம் தெரிவிக்க ஏராளமான சிற்றரசுகள் இருந்தன. தலைநகரம் சென்னை மாநகரந்தான்.

1909-ஆம் ஆண்டு மிண்டோ—மார்லி சீர்திருத்தத்தின் விளைவாய் இந்தியர்களையும் உயர் உத்தியோகங்களில் ஆங்கிலேயர் நியமித்தனர். தென்னகத்தில் இவை அத்தனையும் பார்ப்பனர்களுக்கே கிடைத்து வந்தன. எடுத்துக் காட்டாக 1898 முதல் 1930 வரை நியமிக்கப் பெற்ற ஹைகோர்ட் ஜட்ஜ்கள் ஒன்பது இந்தியரில், எண்மர் பார்ப்பனர், ஒருவர் நாயர். உதவி கலெக்டர் 140 பேரில் 77 பேர் பார்ப்பனர். 128 மாவட்ட நீதிபதிகளில் 93 பேர் பார்ப்பனர்கள்.

1916-ல் இதனால் வெகுண்டெழுந்த டாக்டர் டி. எம். நாயர், சர். பி. தியாகராயர் இருவரும் சென்னையில் தென்னிந்திய நலஉரிமைச்சங்கம் எனும் நீதிக் கட்சியைத் துவக்கினர். பனகல் அரசர் ராமராய நிங்கவார், டாக்டர் நடேச முதலியார் ஆகியோர் ஒத்துழைத்தனர். அப்போது காங்கிரஸ் மாயை மூடுபனி போல் கவிந்திருந்ததால் தமிழினத் தலைவர்கள் பலர் அந்த முகாமில்தான் இருந்தனர்!

1919-ல் நிகழ்ந்த மாண்டெகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தத்தின் அடிப்படையில் நடைபெற்ற சட்டமன்றத் தேர்தல்களில் நீதிக்கட்சி 1920-ஆம் ஆண்டிலும் 1923-ஆம் ஆண்டிலும் பெருவெற்றி பெற்று மந்திரி சபைகளை அமைத்தது. நீதிக்கட்சியின் வெற்றியில்

பொறாமை கொண்ட பார்ப்பனர், சுயராஜ்யக் கட்சி அமைத்து, 1926-ஆம் ஆண்டுத் தேர்தலில் போட்டியிட்டனர். நீதிக்கட்சிக்கும், சுயராஜ்யக் கட்சிக்குமே பெரும்பான்மை கிட்டவில்லை அப்போது!

பார்ப்பனரல்லாதார் ஆட்சி நடத்துவதைப் பார்ப்பனர்களால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை என்ற அப்பட்டமான உண்மையினை அப்போதுதான் ஈ.வெ.ரா. முதன் முறையாக உணர்ந்தார். அதற்கேற்ப, நாட்டிலிருந்த செய்தி ஏடுகளெல்லாம் பார்ப்பன ஆதரவு ஏடுகளாகவே இருந்து வந்தன. காங்கிரஸ் இயக்கத்தை ஆதரிப்பதாகக் காட்டிக் கொண்ட அத்தகைய, ஏடுகளும், ஈ. வெ. ராமசாமியின் வைக்கம் போராட்டம், ஈரோடு மறியல் போன்ற வரலாறு படைத்த செய்திகளைக்கூட இருட்டடிப்புச் செய்தன; ஈ. வெ. ராமசாமிக்குப் பெருமை சேரக் கூடாதென்ற உள்நோக்கத்தால்! நீதிக் கட்சியினரால் நடத்தப்பட்டு வந்த தமிழ் ஏடு "திராவிடன்" ஆங்கில ஏடு "ஜஸ்டிஸ்" ஆகியவற்றுக்கும் போதிய செல்வாக்கில்லை. ஆகையால் தாமே ஒரு பத்திரிகை துவங்கிட ஈ.வெ.ரா. துணிவு கொண்டார்.

1925-ஆம் ஆண்டு மே திங்கள் 2-ஆம் நாள் ஈரோட்டில் உண்மை விளக்கம் பிரசில் அச்சாகிக் "குடி-அரசு" என்னும் வார இதழ், திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகளால் தொடங்கி வைக்கப் பெற்றது. நாட்டிலுள்ள உயர்வு தாழ்வு மனப்பான்மை ஒழிந்து, சமத்துவ உணர்வு பரவி, சமயத் துறையிலுள்ள கேடுகள் ஒழிய, நாயக்கரின் "குடி அரசு" பாடு பட்டால் தனக்கு மிக்க மகிழ்ச்சி என அந்தத் தமிழ்த் துறவி பேசினார். மனச்சாட்சிக்கு உண்மை என்று பட்டதைத் தெரிவிக்க அஞ்சக்கூடாது; மக்களுக்குள் சுயமரியாதை, சமத்துவம், சகோதரத்துவம் ஓங்கி வளர வேண்டும்; உயர்வு தாழ்வு உணர்ச்சி நாட்டிலுள்ள சாதிச் சண்டைக்குக் காரணமாயிருத்தலால் அது ஒழிக்கப்பட வேண்டும்; தேசத்தையே முன்னிறுத்தி வைக்காமல், ஒவ்வொரு வகுப்பும் முன்னேற வேண்டும்—என்று தமது

புதிய ஏட்டின் நோக்கத்தை அன்றே வெளியிட்டார் ஈ. வெ. ரா. பச்சை மேலட்டையுடன் கூடிய "குடி அரசு" வார ஏடு, அன்றைய ஆதிக்கக் கோட்டையினைத் தகர்த் திடும் வெடிகுண்டாகக் கருதப்பட்டது. தமிழ் மக்கள் இதனைத் தம் கைக்குழந்தை போல் சீராட்டி வளர்க்கத் தலைப்பட்டனர்.

தமிழ்நாடு காங்கிரசின் தலைவராக ஈ. வெ. ரா; சில ஆண்டுகள் வீற்றிருந்தார். பின்னர், டாக்டர் வரதராஜலு நாயுடு தலைவராகவும் ஈ. வெ. ரா. காரியதரிசியாகவும் பணி யாற்றினர். சென்னையிலிருந்த காங்கிரஸ் கமிட்டியை ஈரோட்டில் தம் வீட்டுக்கே மாற்றிக் கொண்டார். அப்போது நிகழ்ந்த ஒரு சம்பவமே தமிழகத்து அரசியலில் மாபெரும் புரட்சிகரமான திருப்பத்துக்கு அடிகோலியது. திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள சேரன்மகாதேவியில் தமிழ் நாட்டுக் குருகுலம் என்ற பெயரால் சிறுவர்களுக் கான விடுதி ஒன்றினை வ. வே. சுப்பிரமணிய அய்யர் பொறுப்பேற்று நடத்தி வந்தார். இது தமிழ்நாடு காங்கிரஸ் கட்சியின் பொருளுதவியில் நடந்தது. கட்சியி லிருந்து பணம் அவ்வப்போது தரப்பட்டு வந்தது. மேலும் தமிழ் நாட்டு வள்ளல் பெருமக்களிடமிருந்து ஈ. வெ. ரா., திரு. வி. க., டாக்டர் நாயுடு போன்றார் நிறையப் பொருள் திரட்டி வழங்கி வந்தனர். மெத்தப் படித்த தேசிய வாதியான வ. வே. சு. அய்யர் குருகுலத்து மாணவர் களிடையே வேற்றுமையை விளைத்து வந்தார். பார்ப்பனப் பிள்ளைகளுக்குத் தனி இடம், தனித்தண்ணீர், தனி உணவு (உப்புமா) தனிப்பயிற்சி; பார்ப்பனரல்லாத சிறார்களுக்கு வேறு இடம், வேறு உணவு, (பழைய சோறு) வேறு தண்ணீர், வேறான பயிற்சி; இதனால் அங்கே சாதிப் பிரிவினை ஆக்கம் பெற்று வந்தது. குருகுலத்தின் நோக்கத்துக்கும் தேசிய ஒருமைப்பாட்டுக்கும் இது முரணானது எனப் பல முறை எடுத்துக் காட்டியும், வ. வே. சு. அய்யர் ஒருப்பட வில்லை; காங்கிரஸ் கட்சியின் உதவிப் பணத்தை ஈ.வெ.ரா. தரச்சம்மதிக்காதபோது, வேறொரு பார்ப்பனக் காரியதரிசி

(டி. எஸ். எஸ். ராஜன்) வாயிலாய், அய்யர் அந்தத் தொகையைப் பெற்றுக் கொண்டார்!

பின்னாளில், 1948—ல் சென்னை மாகாண முதலமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓமந்தூர் பி. ராமசாமி ரெட்டியாரின் மகன் சேர்மாதேவி குருகுலத்தில் பயிலும்போது, பார்ப்பனர் தண்ணீர்ப் பானையில் நீர் எடுத்துக் குடித்து, அவ்வாறு சாதிப் பிரிவால் பாதிக்கப்பட்டவர். இவரை அழைத்து வந்து ரெட்டியார், பெரியார்முன் நிற்கவைத்து, 'அங்கு நடைபெறும் அட்டூழியங்களை நாயினாவிடம் செப்பு' என்றாராம்.

பச்சைப் பார்ப்பனியம் தலை விரித்தாடும் போக்கினைக் கண்டித்து ஈ.வெ.ரா. வெளிப்படையாகப் போர் தொடுக்க வேண்டிய சூழ்நிலைக்கு உந்தப்பட்டார். காங்கிரசில் இருந்த பார்ப்பனரல்லாத தலைவர்களான திரு வி.க., டாக்டர் நாயுடு, எஸ். ராமநாதன், தண்டபாணிப் பிள்ளை, வயி. சு. சண்முகம் செட்டியார், ஓமந்தூர் ரெட்டியார், தங்கப் பெருமாள் பிள்ளை ஆகியோர் இந்தக் குருகுலத்தையே ஒழித்துவிட முடிவெடுத்தனர். அய்யர் இணங்கவில்லை. காந்தியடிகளிடம் தலையிடுமாறு கேட்டனர். அவரும் குருகுலத்தில் சமபந்தி உணவே அளிக்கப்படல் வேண்டும் என வலியுறுத்தினார். இதற்கும் வ.வே.சு அய்யர் மறுத்து விட்டார்.

ஈ.வெ. ராமசாமியின் கோட்பாட்டுக்கு இப்போது ஒரு புதிய பொருள் கிடைத்தது. பார்ப்பனர் பேசுகின்ற தேசியம் போலி; தீண்டாமை ஒழிப்பு மாய்மாலம்; ஒற்றுமை ஒருமைப்பாடு கொள்கை யாவும் ஏமாற்று வேலை—என்று தமிழ்நாடு முழுவதும் பறையறைந்தார். காங்கிரசில் இருந்த போது பிரச்சாரத்துக்காக திண்டுக்கல்லில் ஒரு பார்ப்பனர் வீட்டில் உணவு கொள்ளச் சென்றபோது, எஸ். சீனிவாச அய்யங்காருக்கு உள்ளேயும், இவருக்கு வெளியேயும் சாப்பாடு படைத்தனர். காலையில் சாப்பிட்டுவிட்டுத் தாம் விட்டுச்சென்ற எச்சில் இலைக்குப் பக்கத்திலேயே, அமர்ந்து மதியமும், இரவும் ஈ.வெ.ரா. உணவு அருந்த நேரிட்டது.

சாதிவேற்றுமை வளர்த்த குருகுலத்துக்கு நிதி திரட்டி வழங்குவதை அறவே நிறுத்திக் கொண்டதால், அது இயங்குவது இயலாமற்போய்த், தானே மரணத்தைத் தழுவியது. தமிழ் மக்களின் அகக் கண்களைத் திறக்க இந்தக் குருகுலப் போராட்டம் அருமையாக உதவியது. காங்கிரஸ் காரியக் கமிட்டியிலிருந்த பார்ப்பனர்களான சி. ராசகோபாலாச்சாரியார், என்.எஸ்.வரதாச்சாரியார், கிருஷ்ணமாச்சாரி, ஆலாசியம், கே. சந்தானம், டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் (இவர் ராஜாஜி அமைச்சரவையில் சுகாதார மந்திரியாக இருந்தபோது, 2000 மூட்டை நெல்லைப் பதுக்கி வைத்திருந்தாராம் 1937–39–ல்) மற்றும் டாக்டர் சாமிநாத சாஸ்திரி ஆகியோர், தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர்கள் பார்ப்பன துவேஷப் பிரச்சாரம் செய்வதாய்ப் பழி கூறிக் கமிட்டியைவிட்டு விலகிச் சென்றனர். இவர்களை "இந்து" கஸ்தூரி ரங்க அய்யங்காரும், "சுதேசமித்திரன்" ரெங்கசாமி அய்யங்காரும், எஸ். சீனிவாச அய்யங்காரும், எஸ். சத்தியமூர்த்தி அய்யரும் பச்சையாக ஆதரித்தது குறிப்பிடத் தக்கது.

இன்னொரு நிகழ்ச்சியிலும் பார்ப்பனத் தலைவர்கள் தமது தனித்த நிலையினை வெளிப்படுத்தி, வெறுப்பினைத் தேடினார்கள். பனகல் அரசர் முதலமைச்சராயிருந்தபோது 1924—ஆம் ஆண்டில் இந்து அறநிலையப் பாதுகாப்புச் சட்டம் கொண்டு வந்தார். இதனால் கோவில் மடாலயச் சொத்துகள்மீது கட்டுப்பாடும் ஒழுங்கு முறையும் புகுத்தப் பட்டது. சுரண்டல் பெருச்சாளிகளுக்கு இது தீமையாகத் தென்பட்டது. எனவே பார்ப்பன வழக்கறிஞர்கள், காங்கிரஸ்காரர்கள் ஆகியோர் மடாதிபதிகள், கோயில் அறங்காவலர் இவர்களின் பின்னணியிலிருந்து தூண்டிவிட்டு, மதத்தில் அரசு தலையிடுகிறது; இது தவறு என எதிர்ப்புக் காட்டினர். காங்கிரசில் இருந்துகொண்டே ஈ. வெ. ரா., தமது நண்பர்களின் துணையோடு, நீதிக் கட்சியின் அந்த நேர்மையான சட்டத்தை வரவேற்றார். அற நிலையங்களுக்கு ஆபத்தில்லை; கோயில் சொத்துகள் கொள்ளை போகாமல்

தடுக்கலாம்; கள்வர்களுக்குதான் ஆபத்து—என அறிக்கை விடுத்தார் ஈ.வெ. ராமசாமி!

அனைத்துக்கும் சிகரமாய், மகுடம் வைத்தாற்போல் அமைந்தது வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம்! பார்ப்பனர் ஆதிக்கத்தைத் தவிர்ப்பதற்காகப் பார்ப்பனரல்லாதாருக்கு அரசுப் பணிகளில் தக்க பாதுகாப்பளிக்க வேண்டும்; வகுப்பு எண்ணிக்கைக்கு ஏற்ற வீதாச்சாரத்தில் உத்தியோகங்களை வழங்கிட வேண்டும். இவைதாம் நீதிக்கட்சி தோன்றியதற்கான மூலகாரணங்கள். ஈ.வெ.ரா. இதிலுள்ள நியாயத்தை உணர்ந்திருந்ததால் துவக்க முதலே இக்கொள்கையை ஆதரித்து வந்தார். நீதிக்கட்சி இக்கொள்கை கொண்டிருப்பதால்தானே வலுவடைகிறது; அவன் வலிமையைக் குறைக்க வேண்டுமானால் நாமே காங்கிரசில் வகுப்புவாரி உரிமைக் கொள்கையினை ஏற்றுக் கொள்ள வேண்டும்—என ஈ.வெ.ரா. வாதாடிப் போராடி வந்தார்.

1920—ம் ஆண்டு திருநெல்வேலியில் நடைபெற்ற காங்கிரஸ் மாகாண மாநாட்டில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத் தீர்மானம் கொணர்ந்து, பெரும்பான்மை பெற்று நிறைவேற்றியும், தலைவர் எஸ். சீனிவாச அய்யங்கார் அனுமதிக்க மறுத்துவிட்டார்.

1921—ல் தஞ்சாவூர் மாகாண மாநாட்டில்—இதைக் கொள்கையாக வைத்துக் கொள்ளலாம்; தீர்மான வடிவம் வேண்டாம் என்று தலைவர் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் தந்திரமாகத் தடுத்து விட்டார்.

1922—ல் திருப்பூர் மாகாண மாநாட்டில் கொண்டு வர முயன்று, விவாதத்தால் கோபம் மேலிட்டு, மனுதர்ம சாஸ்திரத்தையும் இராமாயணத்தையும் தீயிட்டுக் கொளுத்த வேண்டுமென முழங்கினார் ஈ.வெ. ரா! சேலம் விஜயராகவாச்சாரியார் அமைதிப்படுத்தி விட்டார்.

1923—ல் சேலம் மாகாண மாநாட்டிலும் தீர்மானத்தை முன்மொழிந்த போது, கலவரம் மூளுவதாக அறிந்து, டாக்டர் நாயுடுவும், ஜார்ஜ் ஜோசஃபும் தலையிட்டுச் சமாதானம் செய்து விட்டனர்.

1924—ல் திருவண்ணாமலை மாநில மாநாட்டுக்குத் தலைவரே ஈ.வெ.ராமசாமி தாம்! அங்கு தலைமையுரையிலும் இப்பிரச்னையைக் குறிப்பிட்டுப் பார்ப்பனர்களை எச்சரித்தார். ஆனால் வகுப்புவாரி உரிமைத் தீர்மானத்தை, எஸ். சீனிவாச அய்யங்கார் ஆள்திரட்டி வந்து, தடுத்து நிறுத்தி விட்டார்!

1925—ல் காஞ்சிபுரத்தில் மாநில மாநாடு; திரு.வி.க. தலைவர். இறுதி முயற்சியாக இங்கேயும் தீர்மானம் கொணர்ந்தார் ஈ.வெ.ரா.! தலைவர் நிராகரித்தார். அங்கேயே—எரிமலையின் குமுறல், கடலின் கொந்தளிப்பு, சூறாவளியின் சீற்றம், இடியோசை வெடி முழக்கம்—ஈ.வெ.ரா. எழுந்து நின்று தமது ஆரஞ்சுநிறச் சால்வையை மார்பின் குறுக்கே இழுத்துப் போர்த்தி, கைவசம் எப்போதும் இருக்கும் சிறு தோல் பெட்டியை விரைவாகக் கையில் எடுத்துக் கொண்டு, எந்நேரமும் தம் வலது கையிலிருக்கும் தடித்த கைப்பிரம்பைத் தரையில் ஓங்கித் தட்டி, உரத்த குரலில் "கல்யாணசுந்தர முதலியார் அவர்களே! நான் வெளியேறுகிறேன். காங்கிரசால் பார்ப்பனரல்லாதார் நன்மை பெற முடியாது! காங்கிரசை ஒழிப்பதே இனி எனது வேலை!" என்று வீரகர்ச்சனை புரிந்து, வீறு நடைபோட்டு, அடல் ஏறு போல், அஞ்சாநெஞ்சுடன், காஞ்சியில் வெளிவந்து, திரும்பிப் பார்த்தார்! ஆகா! தன்மான உணர்வால் உந்தித் தள்ளப்பட்ட தமிழ் இனக் காங்கிரஸ்காரர் நூற்றுக் கணக்கில் எழுந்திருந்து, அவரைப் பின்பற்றித் தொடர்ந்து, அவரது அணிவகுப்பில் வந்து நின்றிடக் கண்டு, என்றுங் காணாத பேரின்பங் கண்டார் ஈ.வெ. ராமசாமியார்!

காங்கிரஸ் ஒழிந்ததைக் கண்ணால் கண்டுவிட்டுத்தானே மறைந்தார்—பெரியார்!

# 7. விழித்தார்

"குடிஅரசு" துவக்கமே சுயமரி யாதைத் தோற்றம்—தீவிரப் பிரச் சாரம்—காந்தியாருடன் இறுதி முறிவு—சைமன் கமிஷன் வர வேற்பு—சுயமரியாதை மாநாடு— நீதிக்கட்சி ஆதரவு—1926 முதல் 1929 வரை.

---

"குடிஅரசு" என்னும் மிகச் சிறியதொரு வார இதழைக் கொண்டு தமிழகத்தில் ஈ.வெ ரா. விளைத்த அறிவுப் புரட்சிக்கு ஒத்ததாக உலகில் வேறு யாரும் எங்கும் நிகழ்த்தியதாக வரலாறு கிடையாது. பிரான்சு நாட்டில் ரூசோவும் வால்டேரும் எழுத்தின் மூலம் மாற்றத்தினை உருவாக்கினர் என்பது உண்மையே ஆயினும், சுயமரியாதை இயக்கத்தின் ஒரே அதிகார பூர்வமான ஏடாகிய இதில் வெளிவந்த கருத்துகள், அது வரையில் தமிழில் யாருமே சொல்லத் துணியாத, புதிய, முரண்பட்ட, முரட்டுத் தனமான கருத்துகளாகும். பெரியாருக்கு முன்பு மறைந்த இராமலிங்கர் வெள்ளாடைத் துறவியாயிருந்து, இந்து சமயத்தில் அறிவுக்குப் பொருத்தமான சில மாற்றங்களை, அறிவித்தார் எனினும், அவரது முடிவைப் பார்க்கும்போது, அவரும் பார்ப்பன சூழ்ச்சிக்குப் பலியானதாகவே தோன்று கிறது.

சுயமரியாதைக் கொள்கைகளின் ஒரே பிரச்சாரப் பத்திரிகையான "குடிஅரசு"—புராணம், சாஸ்திரம், இதி

காசம், மனுதர்மம் ஆகியவற்றைக் கடுமையாகச் சாடியது. பார்ப்பன சூழ்ச்சியைப் படம் பிடித்துக் காட்டியது. மதம், சாதி, கல்வி, தொழில், அரசியல் ஆகிய துறைகளில் ஆதிக்கம் செலுத்துவோரின் ஆணவத்தால் பாதிக்கப்பட்ட பெரும்பான்மை மக்களின் கேடயமாய்ப் பாதுகாத்தது. கொடுமை களைந்திடும்போது கடுமையான, கூர்மையான வாளாய்ப் பாய்ந்தது.

ஈ. வெ. ரா. 1925-ஆம் ஆண்டு காங்கிரசிலிருந்து வெளியேறினாலுங்கூட, காந்தியாரின் நிர்மாணத்திட்டங்களை அடுத்த இரண்டாண்டுகள் வரை ஆதரித்தே வந்தார். கதர் அணிதலையும், கதர்ப் பிரச்சாரத்தையும் கைவிடவில்லை. "குடிஅரசு" இதழிலும் கதரை ஆதரித்தே எழுதி வந்தார். ஆனால் சுயமரியாதை மேடைகளில் காந்தியாரின் சமுதாயக் கொள்கைகளை மட்டும் கடுமையாகக் கண்டித்து வந்தார். ஏன்?

தான்பெற்ற மகனைத் தாயார் தோள்மீதும் மார்மீதும் தூக்கியணைத்துப், பாலூட்டிச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து, நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் அவனைக் கண்ணேபோல் காத்து ஆளாக்கி வருகையில்; வளர்ந்த பின்னர் அதே மகன், தாயாரை மானபங்கம் செய்து, அவள் சொல்லைத் துச்சமாய் வெறுத்தொதுக்கினால் அந்தத் தாயாரின் நெஞ்சம் படும்பாடு சொல்லத் தரமா? அஃதே போன்று, தமது சொந்த நலன்களை—வருவாயைத்—துறந்து, தமது மாளிகையிலேயே காங்கிரஸ் கட்சிக்கும் கதர் வஸ்திராலயத்துக்கும் இலவசமாய் இடந்தந்து, தமது தனிப்பட்ட பொருளைச் செலவு செய்து, குடும்பத்தாரோடு சிறை சென்று, அனைத்திந்திய மாநாடு ஒன்று தவறாமல் தாம் சென்றதோடன்றிக், காங்கிரசுக்கே வழிகாட்டியாய்த், தம் துணைவியார் நாகம்மையாரையும் அழைத்துச் சென்று, (அப்போதெல்லாம் பெண்டிரை மாநாடுகட்கு அழைத்துச் செல்லும் வழக்கம் நம் நாட்டில் இல்லை!) காங்கிரஸ் வேறு தாம் வேறல்ல என இரண்டறக் கலந்து நின்ற அதே நிறுவனம் — தமது சுய நலத்திற்காக

அல்ல; இன நலத்திற்காக; வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத் தீர்மானத்தை ஏற்றுக்கொள்ள முன் வரவில்லை என்ற துரோகச்செயலை ஈ. வெ. ராமசாமியால் எளிதில் சீரணித்துக் கொள்ள முடியவில்லை! பார்ப்பனரல்லாத குடியில் பிறந்தவராதலால், தம்மால் தனி அன்புடன் ஆதரிக்கப் பெற்ற காந்தியடிகள், நிச்சயம் தம்மைக் கைவிட மாட்டாரென்று முழுநம்பிக்கையோடிருந்தார். அதுவும் தூள் தூளாய்த் தகர்ந்து தரைமட்டமான செய்தி அவருக்குத் தக்க சான்றுகளுடன் கிடைத்தது! என்ன அது?

வைக்கம் போராட்டம் நடந்தபோது, 1925 மார்ச்சில் திருவனந்தபுரம் வந்த காந்தியார், திருவாங்கூர் மகாராணியுடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டுதான் போராட்டத்தைக் கைவிடச் சொன்னார் என்பதும்; வேண்டுமென்றே தமது பத்திரிகையில் எந்த ஓரிடத்திலும், ஈ. வெ. ராமசாமியின் பெயரைக்குறிப்பிடாமலே வைக்கம் சத்தியாக்கிரக வரலாறு எழுதிவந்தார் என்பதும்; மனுதர்ம அடிப்படையில் அமைந்துள்ள வருணாசிரம தர்மத்தை காந்தியார் ஆதரித்திடுகிறார்—அங்ஙனமாயின், தீண்டாமை ஒழிப்புத் திட்டம் போலியாகத்தான் சொல்கிறார் என்பதும்; அனைத்துக்கும் மேலாக, அவர் பார்ப்பனர் கைப்பாவையாகத்தான் செயல்படுகிறார் என்பதும் 1927-ஆம் ஆண்டில் இராமசாமிக்குத் தெள்ளத் தெளிவாக விளங்கின.

இருப்பினும், காந்தியாருடன் நேராக உரையாடினால் ஏதாவது நன்மை கிடைக்கலாம் என்று கருதி, 1927-ஆம் ஆண்டு ஆகஸ்டுத்திங்களில் பெங்களூருக்கு வந்திருந்த காந்தியடிகளைக் கண்டு, கலந்து, விவாதம் செய்தார். இராஜாஜியும், தேவதாஸ்காந்தியும் பெங்களூரில் காந்தியடிகள் தங்கியிருந்த இடத்திலேயே உரையாடலுக்கு ஏற்பாடு செய்து, முன்வாயிலில் நின்று, வரவேற்று, காந்தியாரிடம் ஈ. வெ. ராமசாமியை அழைத்துச் சென்றனர். நாயக்கருக்குக் காங்கிரஸ்மீது என்ன கோபம் என்று காந்தியார் விசாரித்தார். இந்தியா விடுதலை பெறவேண்டுமானால் முதலில் காங்கிரசை ஒழிக்க வேண்டும்; இரண்டாவதாகச் சாதியை

ஒழிப்பதற்கு, அதன் மூலகாரணமாக உள்ள இந்து மதத்தை ஒழிக்க வேண்டும்; மூன்றாவதாகப் பார்ப்பன ஆதிக்கத்தை ஒழிக்க வேண்டும்—என்று ஈ. வெ. ரா. வலியுறுத்திப் பேசினார்.

இன்னும் இரண்டு மூன்று முறை நாம் சந்திப்போம் என்றாரே தவிர, இவற்றை ஏற்றுக் கொள்ளும் சூழ்நிலையில் காந்தியார் இல்லை. ஏனெனில் அந்த அளவு 'இராமசாமி ஒரு பிராமணத்துவேஷி; இனி அவரால் தமிழ் நாட்டில் காங்கிரஸ் வளராது' என அவரிடம் கோள் மூட்டியிருந்தனர். எனவே தாம் அன்றுவரை மிகுந்த மதிப்பு வைத்திருந்த காந்தியாரிடமும் விடைபெற்று, வேதனையோடு ஈ. வெ. ரா. வெளியே வந்துவிட்டார். விவரங்களைக் கீழேயிருந்த இராஜாஜியிடம் தெரிவித்துவிட்டுப் புறப்பட்டார்.

பெரியார் காந்தியடிகளிடம் பிரிந்து வந்த செய்தியை அவர் மொழியிலேயே கேட்பது நலமாயிருக்குமே! "இது விஷயமாய் நடந்த தர்க்கங்கள் முன் சொன்ன காரணத்தால் வெளியிடக் கூடியதல்ல. ஆதலால், இனி இதைப்பற்றி மகாத்மாவிடம் மறுபடியும் கலந்து பேசித் தெரிந்துகொள்ள வேண்டியது ஒன்றும் இல்லை என்பதையும், மகாத்மாவினிடம் நேரிலேயே இம்மூன்று விஷயங்களைப் பற்றியும் மகாத்மா சொன்ன சமாதானங்கள் எம்முடைய அபிப்பிராயத்தை மாற்றக்கூடியதாயில்லை என்றும் சொல்லி, மகாத்மாவினிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு வந்துவிட்டோம். மகாத்மாவும், தான் சொன்ன சமாதானத்தால் நாம் திருப்தி அடையவில்லை என்பதைத் தெரிந்து கொண்டதாகவும், இன்னும் இரண்டொரு தடவை இதைப் பற்றிப் பேசவேண்டும் என்றும் சொன்னார். எமது நண்பர் ஸ்ரீமான் இராமநாதன் அவர்கள்கூட, மகாத்மா சொன்னது போலவே மறுபடியும் இரண்டொரு தடவை மகாத்மாவிடம் பேசலாம் என்றுகூடச் சொன்னார். இதற்கு உடனே நாம் 'மகாத்மா நம்முடைய அபிப்பிராயத்தை மாற்றும்படித் திருப்தி செய்வார்கள் என்று நம்புகிறீர்களா? அல்லது மகாத்மா அபிப்பிராயத்தை நாம் மாற்றக்கூடும் என்பதாகக் கருது

கிறீர்களா?' என்று கேட்டதில், 'மகாத்மா சொல்வதைக் கொண்டு நம்முடைய அபிப்பிராயங்களை மாற்றிக் கொள்ளக் கூடியதாய் ஏற்படாது என்றும், ஒருகால் நமது அபிப்பிராயத்துக்கு மகாத்மா இணங்கக் கூடியதானால், நமது பிரச்சாரத்திற்கு இன்னும் உதவியாக இருக்காதா?' என்றும் சொன்னார். உடனே நாம் 'அந்தப்படி எதிர் பார்ப்பது தப்பு என்றும், மகாத்மாவைத் திருத்தும்படியாக நாம் சொல்லிச் சரிசெய்ய முடியாது என்றும், நம் அபிப் பிராயத்தை நாம் வெளிப்படுத்த வேண்டியதுதான் நமது கடமை!' என்றும் சொல்லிவிட்டோம். இன்ன இன்ன விஷயங்களைப் பற்றி மகாத்மா அவர்களுடன் சம்பாஷித்த தாகத் திரு. சி. இராஜகோபாலாச்சாரியார் அவர்களிடம் தெரிவித்துவிட்டே உத்திரவு பெற்றுக்கொண்டு வந்து விட்டோம்!'' (குடிஅரசு தலையங்கம் 28–8–1927)

அதன் பின்னர் காந்தியாரின் நிர்மாணத்திட்டங் களையும் வன்மையாக எதிர்க்க ஆரம்பித்தார். மேலும், கதர்விற்பனை நிலையங்கள் ஈ. வெ. ராமசாமியால்தான் துவங்கப் பெற்றவை எனினும், இந்தக் காலகட்டத்தில் அனைத்தும் பார்ப்பனரின் வேட்டைக்களங்களாக மாறி யிருந்தன! தீண்டாமை ஒழிப்பின் லட்சணமும் தெரிந்து போய்விட்டது! கள்ளுக்கடை மறியல் அல்லது ஒழிப்பு என்பதும், சிறிது காலத்துக்குப் பின்னர் வெட்டவெளிச்ச மாகி விட்டது.

காந்தியார் தமது பிடிவாதமான வர்ணாசிரம தர்ம ஆதரவை, அடுத்த திங்கள் சென்னை வந்த போதும் காட்டிக் கொண்டார். அங்கு நீதிக்கட்சியின் சார்பில் தம்மைச் சந்தித்துத், தமிழகப்பார்ப்பனரின் ஆதிக்க நிலையினை எடுத்துக் காட்டிய சர் ஏ. டி. பன்னீர் செல்வம், தமிழவேள் த. வே. உமாமகேசுவரனார் ஆகியோரின் நியாயவாதங்களையும் காந்தியார் புறக் கணித்து விட்டார்!

1926-ஆம் ஆண்டினிலே நடைபெற்ற சென்னை மகாணச் சட்டமன்றத் தேர்தலில் நீதிக்கட்சியும், சுயராஜ்யக்கட்சியும் போட்டியிட்டதில், எக்கட்சியும்

அறுதிப்பெரும்பான்மை பெறவில்லை. ஆனால் நீதிக் கட்சி சார்பில் வென்ற குமாரமங்கலம் ஜமீன்தார் டாக்டர் பி. சுப்பராயன், கட்சிமாறி, சுயராஜ்யக் கட்சி ஆதரவுடன் முதல் மந்திரியானார். அடுத்த ஆண்டிலேயே அந்த ஆதரவு திரும்பப்பெறப்பட்டதால், நீதிக் கட்சி ஆதரவுடன் நிலைத்துக்கொண்டார்.

1926-ஆம் ஆண்டு சட்டமன்றத் தேர்தலில் ஈ. வெ. ரா. எந்தக்கட்சியையும் வெளிப்படையாக ஆதரிக்காமல், பார்ப்பனரல்லாதார் நன்மைக்குப் பாடுபடுவோர் வெற்றிக்கே தமது ஒத்துழைப்பை நல்கினார். இதில் காங்கிரஸ் கட்சி ஈடுபடவில்லை. ஆனால் காங்கிரஸ்காரரான ராஜாஜி, நீதிக்கட்சியினராகிய பார்ப்பனரல்லாதார் வென்றுவிடக் கூடாதே என்ற உள்நோக்கத்தோடு, மறைமுகமாக சுய ராஜ்யக்கட்சியை ஆதரித்த போக்கு, ஈ. வெ. ராமசாமியின் அகக்கண்களை இன்னும் அகலத் திறந்துவிட்டது!

இந்தச் சமயத்தில், 1926-ல் மதுரையிலும், 1927-ல் கோவையிலும் இரு பார்ப்பனரல்லாதார் மாநாடுகள் சிறப்பாக நடைபெற்றன. சுயமரியாதை இயக்கப் பிரச்சாரம் செய்து வந்த ஈ. வெ. ரா. இவ்விருமாநாடுகளிலும் பங்கேற்றார். வ. உ. சிதம்பரனார், திரு. வி. க., டாக்டர் வரதராசுலு, ஆர். கே. சண்முகம், ஏ. இராமசாமி, ஏ. பி. பாத்ரோ, குமாரசாமி ரெட்டியார், சுப்பிரமணிய முதலியார் ஆகியோர் கலந்துகொண்டனர். நீதிக்கட்சி சென்னை மகாணத்தில் ஆறாண்டுகாலம் ஆட்சிசெய்து, கிராமப்புறங்களில் பல்லாயிரம் துவக்கப்பள்ளிகளை நிறுவியும், அங்கே கட்டாயமாக ஆதித்திராவிடப் பிள்ளைகளை அனுமதிக்குமாறு சட்டங்கள் இயற்றியும்; வகுப்புவாரி உரிமையை அரசின் கொள்கையாக்கி, மூன்று முறை 1921, 1922, 1924-ஆம் ஆண்டுகளில் அரசாணைகள் பிறப்பித்தும், இந்து அறநிலையப் பாதுகாப்புச்சட்டம் 1924-ல் நிறைவேற்றியும்; இனஇழிவை ஒழிக்கும் முறையில் தேவதாசிகள் ஒழிப்புக்குப் பாடுபட்டும்—திராவிட இனமக்களின் மேம்பாட்டுக்கு உழைத்துங்கூட 1926-ல் பெருந்தோல்வியைத்

தழுவிட நேர்ந்ததால் எதிர்கால வேலைத்திட்டத்துக்கு ஈ. வெ. ராமசாமியாரின் மேலான ஆலோசனைகளை வேண்டினர்; அவரும் நீதிக் கட்சியினர் மனந்தளர வேண்டாம் எனத் தென்பளித்தார். காங்கிரசில் அனைவரும் சேர்ந்து அதைக் கைப்பற்றிப் பார்ப்பனரல்லாதார் வசமாக்குவோம் என்றும் சிலர் யோசனை தெரிவித்தனர். அதனால் பயன் விளையாது என ஈ. வெ. ரா. மறுத்ததோடு முதலில் நம்மிடமுள்ள மூட நம்பிக்கை, அறிவீனம் இவற்றை நீக்கி, நமது மக்களுக்குச் சுயமரியாதை உணர்வினை உண்டாக்குவோம். பிராமணன் உயர்ந்த ஜாதி என ஒப்புக் கொள்வதாலேயே நாம் சூத்திர ஜாதி; பிராமணனது வைப்பாட்டிமக்கள் என நாமே ஒப்புக்கொள்கிறோம். முதலில் சுயமரியாதை பெறுவோம். அஃதில்லாமல் நமக்கு ஆட்சி எதற்கு? கட்சிகள் எதற்கு?—என விளக்கமுரைத்தார். வீழ்ந்துவிட்ட இனத்துக்குப் புத்துணர்வும், புதிய எழுச்சியும் ஊட்டிட ஒரு ஈ. வெ. ரா. பிறந்தாரே எனத் தென்னகத்துப் பெருங்குடிமக்களின் அருங்குணத் தலைமையாளர்கள் பூரிப்பு எய்தினர். இந்தி தேசிய மொழி என்ற காங்கிரஸ் கொள்கையின் அடிப்படையில் தமிழ் நாட்டில் அதைப் பரப்பிடக் காங்கிரஸ்காரர்கள் முனைவதைச் சுட்டிக் காட்டி இந்த மாநாடுகளில், இந்தி பொதுமொழிஎன்ற வாதத்தினை எதிர்க்கும் கொள்கையை ஈ.வெ.ரா. முதன் முதலாக அறிவித்தார்!

கள்ளுக்கடை மறியலுக்காக ஒரு முறை, கதர்ப் பிரசாரத்துக்காக ஒரு முறை, தீண்டாமை ஒழிப்புக்காக இருமுறை சிறைசென்ற ஈ. வெ. ரா. 1927-ஆம் ஆண்டில் தொழிலாளர்க்காக ஒரு முறை சிறை செல்லும் வாய்ப்பும் நேரிட்டது! நாகைப்பட்டினத்தில் அதுவரை இயங்கிவந்த தென்னிந்திய இருப்புப்பாதையின் பெரிய பணிமனை (ஒர்க்ஷாப்) திருச்சியை அடுத்த பொன்மலைக்கு மாற்றப்படுவதால் எழுந்த நடைமுறைச் சிக்கலில் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் துவங்கிவிட்டது. 1926-ம் ஆண்டு நாகை சென்று, தொழிற்சங்கக் கூட்டத்தில் கலந்து கொண்ட ஈ.வெ.ரா. தொழிற்சங்கத் தலைவர்களாக வெளி

யாரை அனுமதிப்பதால், வருந்தீமைகளை எடுத்துக்காட்டி எச்சரிக்கை செய்தார். ரயில்வேத் தொழிலாளரில் சில காங்கிரஸ்காரர்கள் இருப்பினும், அநேகர் ஈ. வெ. ராமசாமியிடம் பெருமதிப்புக் கொண்ட அன்புத் தொண்டர்களாவர். அப்போது நீதிக்கட்சியின் ஆட்சி நடைபெற்று வந்தது. ஈ. வெ. ரா. நாகைப்பட்டினம் சென்று, தொழிலாளரை அமைதிப்படுத்தித், தமிழர் அரசுக்குத் தொல்லை தரவேண்டாம் என்றும், பார்ப்பனக் காங்கிரசார் சூழ்ச்சி வலையில் விழவேண்டாம் என்றும் அன்பான அறிவுரை புகன்றார். ஆனால் அவர் அஞ்சியதுபோலவே, அரசுக்குச் சங்கடம் தந்து குழப்பம் உண்டாக்கிட மாற்றார் திட்டமிட்டவாறே, தொழிலாளர்கள் கிளர்ச்சிகளை மும்முரமாக்கினர். வேலை நிறுத்தத்துடன் நில்லாது, பலாத்கார வன்செயல்களும் தலை காட்டின; தண்டவாளம் பெயர்த்தல், தந்திகளை அறுத்தல் ஆகியவை நடைபெற்றன! இந்தக் கட்டத்தில், வழக்கம்போல், வன்முறை தூண்டியவர்கள் மெதுவாக ஒதுங்கிக்கொண்டார்கள். அதுவரை தொழிலாளர் பக்கம் போராடிவந்த ஏடுகள் திரும்பிக்கொண்டன. "குடிஅரசு" வார இதழும், "திராவிடன்" தினசரி ஏடும் கடைசிவரை தொழிலாளர்க்காக உதவிவந்தன. ஈ. வெ. ரா. ஆதரவும், பொருளுதவியும் திரட்டித் தந்தார். கூட்டம் நடத்தத் தடைவிதித்திருந்த நேரத்தில் தடையினை மீறிப் பொதுக் கூட்டத்தில் ரயில்வே நிர்வாகத்தையும், அரசையும் கண்டித்துப் பேசினார்; ஈரோட்டில் 1928-ஆகஸ்டு 5-ஆம் நாள் சிறைபிடிக்கப்பட்டார்! ஜாமீனில் வெளிவர மறுத்ததோடு, எதிர் வழக்காடுவதில்லை எனவும், முடிவுசெய்தார். மிகக் கடுமையான குற்றப்பிரிவுகளின் கீழ், அரசு வழக்குத் தொடர்ந்து, நீதி மன்றத்தில் நிறுத்தியது. தண்டனையை எதிர்நோக்கியிருந்த நேரத்தில் ஈ. வெ. ரா. மீது தொடுத்த வழக்கினை அரசு திரும்பப் பெற்றுக்கொண்டது! ஏனோ?

1928-ஆம் ஆண்டு நவம்பரில் பாஞ்சால சிங்கம் லாலா லஜபதிராயும், டிசம்பரில் பனகல் அரசர் ராமராய நிங்க

வாரும் மறைந்தபோது, பெரியார் கண்ணீர் உகுத்து இரங்கல் கட்டுரைகள் தீட்டினார், "குடிஅரசு" இதழில்.

1909-ல் மிண்டோ-மார்லி சீர்திருத்தமும், 1919-ல் மாண்டெகு-செம்ஸ்போர்டுசீர்திருத்தமும் கொண்டுவந்த லண்டன் அரசு, 1927-ஆம் ஆண்டில், இந்தியாவுக்கு மேலும் என்னென்ன உரிமைகள் வழங்கலாம் என்பதை நேரில் ஆராய்ந்து வருமாறு, சைமன் கமிஷன் என்ற ஒரு ராயல் கமிஷனை நியமித்தது. இதில் இந்தியர்களில் யாருமே உறுப்பினராக நியமிக்கப்படவில்லை என்ற காரணத்தைக் காட்டி, இதனுடன் ஒத்துழைக்கக்கூடாது என்று காங்கிரஸ் கட்சி புறக்கணிக்க விரும்பியது. நீதிக் கட்சி என்ன முடிவு மேற்கொள்வது என்ற திகைப்பில் ஆழ்ந்திருந்தது. அதே போல, இங்கிருந்த பிற அரசியல் கட்சிகளும் சைமன் கமிஷனை வரவேற்பதா, மறுப்பதா எனக் குழம்பிக் கிடந்தன. சென்னை மாகாண முதன் மந்திரியான டாக்டர் சுப்பராயனும் அவரது சுயராஜ்யக் கட்சி அமைச்சர்களிருவரும் செய்வதறியாது தயங்கியிருந்தனர். இந் நிலையில் மிகத் துணிவாகவும், தெளிவாகவும், இங்கு ஆராய்ச்சி செய்து அரசியல் நிலவரம் அறிந்துகொள்ள வருகின்ற சைமன் கமிஷனை வரவேற்று ஆதரித்தலே நமது கடமையென விளக்கி, ஈ. வெ. ரா. கட்டுரைகளும், துண்டு அறிக்கைகளும் வெளியிட்டு, மேடைகளிலும் முழங்கினார். காங்கிரஸ் தலைவர்கள்போல் சுயநலத்துக்குப் பாடுபடாமல், பார்ப்பனரல்லாத மக்களின் தலைவர்கள் பெரும்பான்மையாய், அடங்கி, ஒடுங்கி, ஆமையாய், ஊமையாய்க் கிடக்கின்ற இந்நாட்டு ஏழைப் பாமரனின் நலன்களைப் பாதுகாக்க முன்வாருங்கள்; என ஈ. வெ. ரா. உருக்கமாக வேண்டினார்.

சுயராஜ்யக் கட்சித் தலைவரான பண்டித மோதிலால் நேரு, சைமன் கமிஷனில் இந்தியர்களை நியமிக்காததே நல்லதென்றார். டாக்டர் அன்னிபெசண்ட் இந்தியாவின் சுயமரியாதையைக் காப்பாற்ற சைமன் கமிஷனைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்றார். இந்த அம்மையார் பஞ்சாப் படு

கொலையை ஆதரித்தார். 1920–ஆம் ஆண்டு பிரிட்டிஷார் செய்த சீர்திருத்தத்தையும் ஆதரித்தவர். வெள்ளையர் ஏற்படுத்திய சட்டசபையிலும் உத்தியோகங்களிலும் இருப்பது சுயமரியாதையா என்று உசாவினார் ஈ. வெ. ரா.!

சென்னைக்கு சைமன் கமிஷன் வந்தபோது, மாபெரும் மாற்றங்கள் ஈ. வெ. ராமசாமியால் விளைவித்துக் காட்டப் பெற்றன. காங்கிரஸ் கட்சி பெயரளவுக்குத்தான் எதிர்ப்பினைக் காட்டிற்றே தவிரக் காங்கிரஸ் பிரமுகர்கள் வெவ்வேறு பெயர்களில் சைமன் கமிஷனை வரவேற்றனர். தமது சக அமைச்சர்களின் ஒத்துழைப்பு இல்லாமலே முதன் மந்திரி டாக்டர் சுப்பராயன் வரவேற்றார். நீதிக்கட்சியினர் துணிந்து வரவேற்றனர். பழமைப்போக்கினர், மதவாதிகள், சநாதனிகள், வழக்கறிஞர்கள் ஆகிய பார்ப்பனர் பிரதிநிதிகளும் வரவேற்றனர். சென்னையில் சைமன் கமிஷன் தனது பணிகளைச் செவ்வனே முடிப்பதற்கு ஈ.வெ. ராமசாமியின் துணிச்சலான பிரச்சாரமே காரணம்! துள்ளிக் குதித்த பார்ப்பன ஏடுகளின் துடுக்கினை அடக்கினார் வெற்றியுடன்! இதன் விளைவாக டாக்டர் சுப்பராயன் சுயராஜ்யக் கட்சியின் ஆதரவினை இழக்க நேர்ந்தது. மாறாக நீதிக்கட்சியினர் ஒத்துழைக்க முன்வந்தனர். சேதுரத்தினம் அய்யரும் 192?-ல் காங்கிரசிலிருந்து விலகி வந்த எஸ். முத்தையாமுதலியாரும் அமைச்சர்களாயினர். 1928 ஆம் ஆண்டில் எஸ். முத்தையா முதலியாரின் பெரு முயற்சியால் வகுப்பு வாரி உரிமை நடைமுறைக்குக் கொணரப்பட்டது. மட்டற்ற மகிழ்ச்சியில் பூரித்துத், திளைத்துத், களித்துத் தமிழர் வீட்டுப் பிள்ளைகளுக்கு முத்தையா எனப் பெயரிடுங்கள் என்று கூறி வெகுவாகப் பாராட்டினார் ஈ.வெ.ரா.!

சுயமரியாதைஇயக்கம் இதுவரை அமைப்புமுறை பெறாமல், மேடைகளிலும் ஏடுகளிலும் முழங்கப்பட்டுவந்த கொள்கைப் பிரச்சார இயக்கமாகவே இயங்கி வந்தது. இதற்கு, மேலும் வலிவும் வளர்ச்சியும் ஏற்றிவிடும் வண்ணம், 1929-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 17, 18 நாட்களில் முதலாவது சென்னை மாகாணச் சுயமரியாதை மாநாடு செங்கற்பட்டில்

நடைபெற்றது. பட்டிவீரன்பட்டிப் பெருமகனார் டபிள்யூ. பு அ. சவுந்தரபாண்டியன் தலைமை தாங்கினார். முதல் மந்திரி டாக்டர் சுப்பராயன் திறந்து வைத்தார். சர் பி.டி. இராசன் என்னும் பொன்னம்பலம் தியாகராஜன் கொடி ஏற்றினார். இவர்கள் அனைவரும் சுயமரியாதை இயக்கத்தின் மேலான கொள்கைகளை வரவேற்றும் இதனை உண்டாக்கிய மாபெருந்தலைவர் ஈ. வெ. ராமசாமி அவர்களைப் பாராட்டியும் சிறப்பான உரைகளை நிகழ்த்தினார்கள். பத்தாயிரக் கணக்கில் ஆர்வமுள்ள இளைஞர்கள் குழுமியிருந்தனர். தமிழர் எண்ணிஎண்ணிப் பெருமையுறத் தக்க புரட்சிகர மான பல தீர்மானங்கள் அங்கு இயற்றப்பட்டன:-சாதிப்பட்டங்களை விட்டு விடுதல்; மதக்குறிகளை உடலில் அணியா திருத்தல்; புரோகிதத்தை அறவே ஒழித்தல்; கோவில்களில் இடைத்தரகர்கள் இல்லாமலும், பூசைக்காகக் காசு செல வில்லாமலும் ஏற்பாடு செய்தல்; எல்லாருக்கும் கட்டாயத் துவக்கக்கல்வி தருதல்; தீண்டாமைஒழிந்திட எல்லாப்பொது இடங்களிலும் தாழ்த்தப்பட்டவர் நுழையச் சட்டப்படி அனுமதி தருதல்; அரசு அலுவல்களில் முதலிடம் தாழ்த்தப்பட்டோருக்கே அளித்தல்; புறம்போக்கு நிலங்களைத் தாழ்த்தப் பட்டோருக்கும் நிலமற்ற ஏழை விவசாயிகட்கும் வழங்குதல்; பெண்களுக்குச் சொத்துரிமை, வாரிசுஉரிமை, எந்தத் தொழிலையும் ஏற்று நடத்திடச் சமஉரிமை, 16 வயதுக்குப்பின் திருமணம் செய்ய, மணவிலக்குப்பெற, விதவை மறுமணம் புரிய உரிமை கொடுத்தல்; துவக்கக்கல்வி ஆசிரியர்களாகப் பெண்களையே நியமித்தல்; ஏழை மாணாக்கர்க்கு இலவச உடை, உணவு, புத்தகம் தருதல்; ரயில்வேஉணவு விடுதிகளில் சாதிப் பாகுபாடுகளை ஒழித்தல்; மத விஷயங்களில் அரசு தலையிடாமல் நடுநிலைமை வகிப்பதால், பெரும்பான்மை மக்களின் உரிமைகள் பாதிக்கப்படுவதால், சட்டப்படி அவர்களுக்குப் பாதுகாப்புத் தருதல்............

அனைத்துக்கும் முத்தாய்ப்பு வைப்பது போல்—சமூக முன்னேற்றத்துக்கும், சமூக விடுதலைக்கும் பாடுபடச் சுயமரி யாதை இயக்கம்கண்ட ஈ.வெ.இராமசாமிப் பெரியார் அவர்

களைப் பாராட்டுவதோடு, அவர் தலைமையில் பரிபூரண நம்பிக்கை தெரிவிப்பது—என்ற தீர்மானமும் நிறைவேற்றப் பட்டது!

சுயமரியாதை இயக்கத்துக்குச் சூடுபிடித்து விட்டது. சொரணையிழந்து, சோம்பிக்கிடந்த தமிழ் மக்களின் துருப் பிடித்த மூளைக்குச் சாணை தீட்டப்பட்டது. வெட்டாத கத்திகளை வீசமுடியாத கரங்களால் வீசிச் சுயமரியாதை இயக்கத்தையும், ஈ.வெ.ரா. பெரியாரையும் நாவில் நரம் பின்றித் தூற்றினர் பாதிக்கப்பட்டோர்; காங்கிரஸ் போர் வையில் மதவாதிகளின் பின்னிருந்து பார்ப்பனர் தூபம் போட்டனர். "தேசபந்து," "நவசக்தி," "சுதேச மித்திரன்" ஏடுகள் அதிகமாகத் தாக்கத் தொடங்கின. நாத்திகர், தேசத்துரோகி, மதத்துவேஷி, வகுப்புவாதி என்ற பட்டங்கள் ராமசாமிப்பெரியாருக்கு அந்த வட்டங்களால் வழங்கப்பட்டன. 1928-ல் "ரிவோல்ட்" என்னும் ஆங்கில வார ஏட்டினையும் பெரியார் துவக்கி நடத்திவந்தார். "திராவிடன்" நாளேட்டுக்குப் பெரியாரும், ஜனக சங்கர கண்ணப்பரும் ஆசிரியர்களாக இருந்தனர்.

தமிழ்நாட்டு இளைஞர்களையெல்லாம் சுயமரியாதை இயக்கம் தன்பால் ஈர்த்தது. நீதிக்கட்சியின் முன்வரிசையி லிருந்த தலைவர்களான சர் ஆர். கே. சண்முகம், சர் ஏ. ராமசாமி, சர் ஏ. டி. பன்னீர் செல்வம், எஸ். முத்தையா, எஸ். ராமச்சந்திரன், சி.டி.நாயகம், பி. சிதம்பரம் ஆகியோர் சுயமரியாதை இயக்க மாநாடுகளிலும் கூட்டங்களிலும் கலந்து கொண்டனர். பெரியாரின் சுயமரியாதைப் பிரச்சார பீரங்கிகளாக எஸ். இராமநாதன், எஸ். குருசாமி, சாமி சிதம்பரனார், கே. வி. அழகர்சாமி, அ. பொன்னம்பலனார், ஏ. எஸ். அருணாசலம், சொ. முருகப்பா, ராம. சுப்பையா, சி. ஏ. அய்யாமுத்து, நாகைமணி, எஸ்.வி. லிங்கம், ச.ம.சி. பரமசிவம், சி.நடராசன், சின்னையா, சித்தர்காடுஇராமையா, மூவலூர் இராமாமிர்தத்தம்மையார், என்.பி. காளியப்பன், பி.எஸ். தண்டபாணி, ஏ. ஆர். சிவானந்தம், கருப்பையா, வே.வ. இராமசாமி, ஊ.பு.அ. சவுந்தரபாண்டியன் ஆகியோர்

தமிழ் நாடெங்கும் சுற்றிச் சுழன்று சூறாவளிப் பிரச்சாரம் புரிந்தனர். கூட்டத்தில் கேட்கப்படும் கேள்விகளுக்கு அவ்வப்போது ஆணி அறைந்தாற்போல் இவர்கள் பதிலுரைப்பர். பெரியாரின் கூட்டத்தில் கலகம்விளைவித்துக் கலைத்துவிடச் சிலர் முயன்றதெல்லாம் இவர்களின் ஈடுபாட்டால் கனவாகவே போயிற்று. கல்லெறிதல், செருப்புவீசுதல், தண்ணீர்ப் பாம்பு விடுதல் இவையெல்லாம் கண்டு கலங்காத பெரியார், எதிர்ப்பையே எருவாகக்கொண்டு, இயக்கத்தினை வளர்த்து வந்தார், இவர்கள் துணையுடன்!

''குடியரசு'' ஒரு ஏட்டில் வெளிவந்த கட்டுரைகளுக்குப் பதில் சொல்லவோ, மறுக்கவோ எதிரணியினருக்கு எத்தனையோ பத்திரிகைகள் இருந்தன. அவைகளின் வாதங்களை, எதிர்ப்புகளை முனைமழுங்கச் செய்யக் ''குடிஅரசு'' இதழில் பெரியார் சித்திரபுத்திரன் என்ற புனை பெயரில் எழுதுங் கட்டுரைகளுடன், மாபெரும் தர்க்கவாத ஆராய்ச்சி நிபுணர்களும், மேதைகளும், அறிவாளிகளுமான சாமிகைவல்யம், சந்திரசேகரப் பாவலர், சாமிசிதம்பரனார், எஸ். குருசாமி போன்றாரின் பகுத்தறிவு விளக்கங்களும் நிரம்ப இடம் பெற்று வந்தன. இராமாயணம், பெரிய புராணம், பாரதம் இவற்றையெல்லாம் அலசி ஆராய்ந்து, அவற்றிலுள்ள பொருந்தாக் கதைகளையும், புரட்டுகளையும் அம்பலப்படுத்தியது ''குடியரசு.''

சுயமரியாதை இயக்கத்துக்குத் தஞ்சை மாவட்டம் தந்த பங்குவீதம் அதிகமாயிருந்தது. பட்டுக்கோட்டை அஞ்சாநெஞ்சன் அழகர்சாமிக்கு நிகரான மேடைப் பேச்சாளர் அக்காலத்தில் எவருமிலர். மூன்று மணி நேரத்துக்குக் குறையாமல் நெடிதுயர்ந்த கம்பீரமான உருவத்துடன் கணீரென்ற வெண்கலக் குரலெடுத்துச் சொன்மாரி பொழிவார். கேட்டோர் உணர்ச்சிப்பிழம்புகளாய் உருகி மெய்ம்மறந்து கிடப்பர். அநேக மேடைப் பேச்சாளர்கள் தங்கள் முதல் முயற்சிக்கு அவரையே முன்மாதிரியாக் கொள்வர். கலைஞர் மு. கருணாநிதி, நாவலர் இரா. நெடுஞ்செழியன் ஆகியோரைப் பிற்காலத்தில் எடுத்துக் காட்டாகக் கூறலாம். கடைசி வரை பெரியாரின் முகாமிலேயே இருந்தவர். பேசிப் பேசி இரத்தம் கக்கி, 1949-ஆம் ஆண்டு தஞ்சையில் இயற்கை எய்தினார்.

குருவிக்கறம்பை எஸ். குருசாமி ஆங்கிலம் தமிழ் இரண்டிலும் புலமை மிக்கவர் அரசியல் விஷயஞானம் அபாரமாகப் பெற்றவர். பேச்சாளராக இவர் பெற்ற பெருமைகளைவிட எழுத்தாளராகவே இவர் சிறப்பான முத்திரை பொறித்துள்ளார். குத்தூசி என்ற புனை பெயரில் இவர் "விடுதலை" ஏட்டில் ஆசிரியராயிருந்து தீட்டியுள்ள கட்டுரைகள் ஈடு இணையற்றவை. இவர் 1962 வரையில் .பெரியாருடன் வாழ்ந்தவர்.

முறையோடு தமிழ் பயின்று, இராசாமடத்தில் ஆசிரியப் பணியாற்றிய சாமி சிதம்பரனார், "குடி அரசு" இதழில் நெடுங்காலம் எழுத்துப் பணி புரிந்தவர்; பெரியாரிடம் நீண்டநாள் தங்கியிருந்து, 1940 முதல் பிரிந்து வாழ்ந்தார். 1950-ல் பெரியாரிடம் திரும்பி வந்து மீண்டும் 1951-ல் "விடுதலை" நாளேட்டில் சிறிதுகாலம் ஆசிரியராகப் பணியாற்றினார். இறுதிவரை சுயமரி யாதைக் கொள்கைகளைக் கைவிடவில்லை. ஆராய்ச்சி நூல்கள் பல வெளியிட்டுள்ளார். ஈடில்லாப் புகழ் சேர்க்கும் வண்ணம், தமிழர் தலைவர் என்ற இவரது நூலைப்போல் தமிழில் ஒரு சிறந்த வாழ்க்கை வரலாற்று நூல் (Biography) வேறு கிடையாது. துணைவியார் சிவகாமி அம்மையார் சென்னையில் தமிழ்த் தொண்டாற்றி வருகிறார்.

மகளிர் குலதிலகம் வீராங்கனை மூவலூர் இராமா மிர்தம் அம்மையார், டாக்டர் அன்னிபெசண்ட் போன்ற தோற்றமுடையவர். அழுத்தமான குரல். ஆவேசமான பேச்சு. தேவதாசிக் குலத்தில் பிறந்து, சிறந்த சுயமரியாதைக்காரராகி, அந்தப் பொட்டுக் கட்டும் முறையை ஒழிக்கப் பாடுபட்டவர். "தாசிகள் மோசவலை" என்ற புத்தகம் இயற்றியவர். 1949-ல் திராவிடமுன்னேற்றக் கழகத்தில் சேர்ந்து, இறுதி மூச்சு வரை இயக்கப்பணி ஆற்றியவர்.

நாகை என். பி. காளியப்பன் பெரியாருடைய அணுக்கத்தொண்டர்களில் ஒருவர். நல்ல மேடைப் பேச்சாளர். இன்றும் மருக்கூரில் வாழ்ந்து வருகின்றார். இயக்கத்தின் பழைய செய்திகளைப் பெருமிதத்துடன் நினைவுகூர்ந்து, நிரல்படச் சுவைகூட்டிச் சொல்பவர்.

மாயூரம் சி. நடராசன், சித்தர்காடு இராமையா, சின்னையா, நாகை மணி இவர்களெல்லாம் பேச்சாளர்

என்பதைவிட அமைப்பாளர் என்று சொல்லே பொருந்தும். பெரியார் கூட்டத்தில் எதிர்ப்பே தலை காட்ட முடியாமல் செய்துவந்த வீரர்கள் இந்தப் பகுத் தறிவுப் பட்டாளத்தார்.

சர் ஏ. டி. பன்னீர்செல்வம் பண்பாளர். பெரி யாரின் அன்புக்குரியவர். உயர் பதவி ஏற்க லண்டன் சென்றபோது விமானமே காணாமற்போய் முடிவு தெரி யாமல் அகாலமரணமடைந்த பெருவீரர் பெரும் பண்ணையூரைச் சார்ந்தவர். தஞ்சைத் தமிழவேள் உமாகேசனார் வழக்கறிஞர். கரந்தைத் தமிழ்ச்சங்கம் நிறுவிய சான்றோர். இவர் நண்பர் அய். குமாரசாமி யார், நெடும்புலம் சாமியப்பா இவர்களெல்லாம் நீதிக் கட்சியினரேனும் பெரியாரை மதித்துக் கொண்டாடிய மாண்பு மிக்கவர்கள். தஞ்சைமாவட்டத்தின் பட்டியல் பிற்பகுதியிலும் தொடர்கிறது.

துவக்க முதல் பெரியாருடனிருந்த எஸ். இராம நாதன் எம். ஏ. பி. எல். 1938-ல் இராஜாஜியுடன் காங் கிரசில் மீண்டும் சேர்ந்து, அமைச்சராகி விட்டார். ஆனால், 1950-51-ல் வகுப்புரிமைப் போராட்டத்தில் பெரியாரிடம் இணைந்து பணியாற்றினார். அவர் இளவல் மாயூரம் எஸ். சம்பந்தம் 1938 இந்தி எதிர்ப்புப் போரில் சர்வாதிகாரியாகிச் சிறை ஏகினார். இறுதிவரை பெரியாரின் நண்பராக இருந்தார்.

சிவகங்கை வழக்கறிஞர் எஸ். இராமச்சந்திரன் (சேர்வை) அகமுடையார் வகுப்பில் பெருந்தலைவர். சுயமரியாதை இயக்கத்தில் அளவுகடந்த பற்றுள்ளவர். 1929-ல் திருநெல்வேலி சுயமரியாதை மாநாட்டுக்குத் தலைமை ஏற்று அரிய கருத்துகளை வழங்கியவர். 48-ம் வயதில் 26—2—1933-ல் அகால மரணமடைந்தபோது பெரியார் எல்லையற்ற துயரமடைந்தார். இவரது மகன்தான் பிற்காலத்தில் சர்வீஸ் கமிஷன் தலைவரா யிருந்த ராமசுப்ரமணியம். இவருடைய உறவினர்கள் அத்தனை பேரும் வழக்கறிஞர்கள்; சுயமரியாதை இயக்கம், திராவிடர்கழகம் இவற்றில் முழுமூச்சுடன் ஈடு பட்டவர்கள். சிவகங்கை ஆர். சண்முகநாதன், கே ராஜ சேகரன் ஆகியோர் கழகத்தின் முக்கியப் பொறுப் பேற்றனர்; குடும்பமே இயக்கத்துக்காக அர்ப்பணிக்கப் பட்டதாகும்.

பூவாளூர் அ. பொன்னம்பலனார் அளவு விரைவாக மேடையில் பேசவல்லார் இன்று ஒரே ஒருவர்தான் இருக்கின்றார். அவர் பெயர் கி. வீரமணி எம்.ஏ பி.எல். போட்மெயில் பொன்னம்பலனார் என்றே மக்கள் அன்புடன் இவரை அழைத்தனர். பெரியாருடனும், தனித்தும், தமிழகத்திலும் மலேயாவிலும் இவர் சென்று பேசாத ஊரே கிடையாது. தி. மு. கழகத்தில் சேர்ந்து இறுதி நாள் வரை இயக்கப்பணியாற்றினார்.

கோவை சி. ஏ. அய்யாமுத்து இறுதிவரை சுயமரியாதைக் காங்கிரஸ்காரராயிருந்து 1975-ல் மறைந்தார். ஆங்கிலப் பெண்மணியான மிஸ்மேயோ தனது (Mother India) இந்தியத்தாய் என்ற நூலில் இந்திய மக்கள் கல்வி அறிவில்லாமல் இருப்பதற்குக் காரணம் பார்ப்பனர்களே—என்று குறிப்பிட்டிருந்தார். குப்பைக்காரி என்றெல்லாம் தேசியத் தலைவர்கள் மேயோவை ஏசின போது அவர்களுக்குப் பதிலளிக்கும் முறையில் எழுதப்பட்ட மேயோகூற்று மெய்யா பொய்யா என்ற இவரது நூல் பிரச்சினைக்குரியதாய் விளங்கிற்று. நல்ல தமிழ் அறிவு கொண்ட பேச்சாளர், எழுத்தாளர், கவிஞர்.

வயி. சு. சண்முகம், முருகப்பா, ராமசுப்பய்யா ஆகியோர் செட்டி நாட்டுப் பகுதியில் இயக்க வளர்ச்சிக்கு உரமேற்றிய அன்பர்கள். ராமசுப்பையா தி. மு. கழகத்தில் இன்றும் முதிய தொண்டர்.

வயி. சு. சண்முகம் மறைந்த பின்னும் முன்னர் அவரால் கலப்புத் திருமணம் செய்து கொள்ளப்பட்ட மஞ்சுளாபாய் அம்மையார் தமது முதுமையிலும் இயக்கப் பணியில் ஈடுபட்டுள்ளார். பெரியார்-மணியம்மை குழந்தைகள் காப்பகத்தைப் பார்த்துக் கொள்கிறார் இப்போது (1979-ல்).

எஸ். வி. லிங்கம், தண்டபாணி ஆகியோர் நல்ல விதண்டாவாதிகள்; யாரும் இவர்களிடம் அகப்பட்டுச் சொற்போராடி மீள முடியாது.

சவுந்தரபாண்டியனாரும், இ ர ா ம ச ா மி யாரும் மதுரை, இராமநாதபுரம் மாவட்டங்களில் நாடார் சமூகத்திடையே இயக்கம் வேரூன்றிச் செல்வாக்குப் பெற இறுதிவரை உழைத்தவர்கள். 1945-க்குப்பின் சவுந்தரபாண்டியனார் ஒதுங்கி வாழ்ந்தார். 1979-ல் மறைந்த வே. வ. இராமசாமி முதிய வயதிலும் சுயமரியாதை வீரராய் விளங்கினார்.

"குடிஅரசு" எழுத்தாளர்களில் சந்திர சேகரப் பாவலர் நல்ல தமிழ், வடமொழிப் பாண்டித்யம் உள்ளவர். புராண இதிகாச நூல்களை அலசி ஆராய்ந்தவர். பெரியாரின் பகுத்தறிவுக் கொள்கைக்கு எருவிடுவதுபோல இவரது தெளிவான கட்டுரைகள் செறிவுடன் மறுக்க முடியாத ஆதாரங்களுடன் விளங்கின.

பகுத்தறிவு எழுத்தாளர்களில் பழைய பெரியோர் வரிசையில் முதலிடம் சாமி கைவல்யம் அவர்களுக்கே. கள்ளிக்கோட்டையில் பிறந்து, திருச்சியில் பயின்று, இந்தியா முழுவதும் சுற்றியலைந்தவர். கோவை மாவட்டத்தில் இவருக்கு அதிகச் செல்வாக்கு. இவரை அறியாத மக்களே கிடையாது. பொன்னுசாமி என்ற இயற்பெயர் மறைந்தது; கைவல்ய நூலைப் பற்றி அதிகமாக விவாதம் செய்து வந்ததால் கைவல்ய சாமியார் என்ற பெயரே நிலைத்தது. தர்க்கம் செய்வதில் இவருக்கு இணையானவர் யாரும் இலர். கற்றறிந்தவர்களாகக் கருதப்பட்ட ஆத்திகப் பெரியோர் பலர் இவரிடம் வாதிட அஞ்சி ஓடி ஒளிவர். பெரியாருடைய 24-ஆம் வயது முதல் இவர் நண்பர்; சிறிது மூத்தவர். கருத்த உயர்ந்த மேனி; வெளுத்த முடி; மழித்த முகம்; வெள்ளை வேட்டி; வெண்மையான தொளதொள அங்கி; கையில் மெலிந்து நீண்ட ஒரு தடி; வேறு ஒன்றும் சொத்து கிடையாது. எங்கு சென்றாலும் மரியாதையான அன்பான உபசரணை.

கண்டவுடன், "வாங்க சாமி" என வாஞ்சையுடன் அழைத்து, முதலில் வெற்றிலை பாக்கு வாங்கி வந்து, கைவல்யசாமியைப் பெரியார் உபசரிப்பார். அங்கேயே உட்கார்ந்து ஆராய்ச்சிப் பொருள் நிறைந்த அறிவு கமழும் கட்டுரை எழுதித் தந்து சென்று விடுவார் கைவல்ய சாமியார்.

சுயமரியாதைச் சேனா வீரர்கள் இன்னும் எண்ணற்றோர்! எழுதிட இயலுமா?

பெரியாரின் புயல் வேகப் பணிகளால் வைதிகம் ஆடி அலறித் துடித்தது. பரம்பரையாய் அரசியலிலும் ஆன்மிகத்திலும் தலைமைப் பீடத்தில் அமர்ந்துகொண்டு, நகத்தில் அழுக்குப்படாமல், வெயிலில் அலையாமல், மேனி குலையாமல் வாழ்வின் எல்லா அம்சங்களையும் நல்ல

வண்ணம் அனுபவித்து வந்த ஆதிக்கபுரியினர், மதத்தலைவர்களைச் சரணடைந்து, பெரியாரை மடக்கிவிட மனப்பால் குடித்தனர்; சிருங்கேரி மடத்துச் சங்கராச்சாரியார் முயன்று பார்த்தார். நாயக்கர்வாளும், அவரது பார்யாளும் பொது நலத்தொண்டு செய்து வருவதைத் தாம் பாராட்டுவதாகவும் அவர்களிருவரும் தம்மைச் சந்திக்கத் தாம் விழைவதாகவும் 'திருமுகம்' அனுப்பியிருந்தார். அவரைச் சந்திப்பதால் இயக்கத்திற்கு எள்ளளவு பயனும் ஏற்படப் போவதில்லையெனும் தமது தோழர்களின் கருத்தை மதித்துப் பெரியார், சங்கராச்சாரியாரின் அழைப்பினை ஏற்றுக் கொள்ளவில்லை எனப் பணிவுடன் தெரிவித்தார்.

வெறும் வாய்ச்சொல் வீரர்களாகச் சுயமரியாதை இயக்கத்தவர் விளங்கிட மாட்டார்கள் என மெய்ப்பிக்குமாறு, நிறையச் சுயமரியாதைக் கலப்பு மணங்களை நடத்தி வைத்தார் பெரியார். குறிப்பிடத்தக்க இணைகளாகச் சிதம்பரனார்—சிவகாமி, குருசாமி—குஞ்சிதம், சிதம்பரம்—ரங்கம்மாள், முருகப்பா-மரகதவல்லி, சண்முகம்—மஞ்சுளா பாய் இராம சுப்ரமணியம்—நீலாவதி, இரத்தினசபாபதி—அன்னபூரணி, ராமசுப்பய்யா—விசாலாட்சி ஆகியோர் விளங்கினார்கள். இவையன்றி நாடு முழுதும் ஏராளமான விதவைத் திருமணங்கள், புரோகிதம், சடங்கு ஒழிந்த திருமணங்கள் ஆகியவற்றையும் பெரியார் நடத்தி வந்தார். பெண்ணுரிமை பேணுவதில் கண்ணுங் கருத்துமாயிருந்த பெரியார், 1928–ஆம் ஆண்டில் முதன் முதலாகக் கர்ப்ப ஆட்சி என்ற, குறைவாகக் குழந்தை பெறும் குடும்பநலத் திட்டத்தைக் கொள்கையாக அறிவித்துப் பிரச்சாரமும் செய்து வந்தார்.

தமிழ் நாட்டில் மிக நல்லவகையில் சுயமரியாதைக் கருத்துக்கள் வேர்விட்டு முளைத்தன. இந்த முறையில் சொல்லும் செயலும் ஒருமித்து விளங்கியதால் மிகக்குறுகிய கால அளவான நான்கைந்து ஆண்டுகளில், 1925–முதல் 1929 வரையில், தமிழகத்தில் சுயமரியாதை இயக்கத்திற்குக் கடைக்கால் நன்கு போடப்பட்டு விட்டது!

# 8. கடந்தார்

உடல் வெளிநாட்டில் உயிர் தமிழ் நாட்டில்—கடல் கடந்து வாழும் தமிழர்க்குத் தலைவர் பெரியாரைக் காணத் தணியாத ஆவல்—மலேயா பின்னர் மேற்கு நாடுகள், இலங்கை சுற்றுப் பயணங்கள்—தாயகத்தில் சுயமரியாதை மாநாடுகள் தொடர்ச்சி—அகில உலக அறிமுகம்—1929 முதல் 1932 வரை

மலேயாவிலும் சிங்கப்பூரிலும் வாழ்கின்ற தமிழர்கள் எத்தனையோ தலைமுறைகளுக்கு முன் அங்குக் குடியேறியவர்கள். ரப்பர் தோட்டங்களிலும், தேயிலைத் தோட்டங்களிலும் உழைத்துப் பிழைத்து வருவோரும், வாணிகம் செய்வோரும், அலுவல் பார்ப்போருமாக இந்திய மரபினைச் சார்ந்தோரில் அதிகமானவர் தமிழர்களே ஆவர். இவர்கள் அங்குள்ள சுதேச மக்கள், சீனர், ஜப்பானியர், ஆங்கிலேயர், முஸ்லிம்கள், ஈழநாட்டவர் ஆகியோருடன் நல்ல முறையில் இணக்கமான சூழ்நிலையில், பின்னிப் பிணைந்து பழகி வந்தவர்கள். எனவே இவர்கள் அனைவருமே இணைந்து ஈ.வெ.ராமசாமிப் பெரியாரை மலேயா சிங்கப்பூர் நாடுகளுக்கு வருமாறு அழைப்பு விடுத்தனர்.

பெரியாரின் வெற்றிக்கு,அவரது ஆதரவாளர்கள் மட்டுமல்லாது,மற்றொரு காரணமாயிருப்பவர் அவரை எதிர்ப்போரேயாவர். அதே முறையில் மலேயாவிலுள்ள யாரோ சில

பழைமை விரும்பிகள், ஆதிக்கச் சுரண்டல்காரர்கள் பெரியாரைப் பற்றித் தவறாகப் பிரச்சாரம் செய்து அரசுக்கும் அவரை அனுமதிக்கலாகாது என அறிவுறுத்தி, ஆனவரையில் தடுப்பதற்கு முயன்று, மூக்கறுபட்டார்கள். "தமிழ் நேசன்" பத்திராதிபரான அய்யங்கார் இதில் ஒருவர். அழைப்பாளர்கள் கொடுத்ததுபோல், வரவேண்டாம் என்று பொய்த் தந்தியும் கொடுத்துப் பார்த்தார்கள். ஆட்களிடம் 500 வெள்ளி தந்து ஆளையே தீர்த்து விடும்படி ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததாகவும் வதந்தி பரவியிருந்தது. வருபவர் தேசத் துரோகி, மதத்துவேஷி, நாத்திகர்! அவரை யாரும் வரவேற்கக்கூடாது; என அவர்கள் மலேயா, சிங்கப்பூர் நாடுகளில் பெருத்த விளம்பரம் செய்தனர். வரவேற்பாளரைவிட எதிர்ப்பாளர் பலமான ஏற்பாடுகள் செய்திருந்தனர். இதனால் இருமடங்கு ஆவலுடன் பல்லாயிரம் மக்கள் கூட்டம் பினாங்குத் துறைமுகத்தில் காத்திருந்தது.

1929-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 15-ஆம் நாள் பெரியார், தமது துணைவியார் நாகம்மையார், நண்பர்களான எஸ். இராமநாதன், சாமி சிதம்பரனார், அ. பொன்னம்பலனார், மாயூரம் நடராசன், நாகை காளியப்பன் ஆகியோருடன் நாகைப்பட்டினம் துறைமுகத்தில் கப்பலில் ஏறினார். 20-ஆம் நாள் பினாங்கில் இறங்கியபோது, மலாயா வாழ் பெருமக்கள் லட்சக் கணக்கில் திரண்டு வரவேற்றனர். வேறெந்த இந்தியத் தலைவரும் காணாத பெரு வரவேற்பு! மாலைகளும் வாழ்த்து மடல்களும் எண்ணிலடங்கா; பத்திரிகைகள் பிரமாதமாகப் பாராட்டி எழுதின! 23-ஆம் நாள் ஈப்போவில் தமிழர் சீர்திருத்த மாநாட்டைப் பெரியார் துவக்கி வைத்தார். தமிழர் மாத்திரமன்றித் தெலுங்கர், மலையாளிகள், யாழ்ப்பாணத் தமிழர், முஸ்லிம் பெருமக்கள் அங்கு ஏராளமாகக் குழுமியிருந்தனர். அடுத்து, 26-ஆம் நாள் சிங்கப்பூர் சென்று, மலேயா இந்தியச் சங்க மாநாட்டிலும் விரிவுரை நிகழ்த்தினார்.

அந்த நாடுகளில் இந்த நாட்டைப்போலச் சாதி-மதச் சண்டைகள் இல்லையெனினும், மூட நம்பிக்கைகள்,

அறிவுக்குப் பொருந்தாத குருட்டுப் பழக்க வழக்கங்கட்குக் குறைவில்லை. பலபேர் பெரியார் என்றால் துறவி இராம சாமியென்றே கருதிக் காலில் வீழ்ந்து வணங்கினர். அவர் களுக்கெல்லாம் பகுத்தறிவு விளக்கங்களைப் பெரியாரும் குழுவினரும் தாராளமாகவும் ஏராளமாகவும் வழங்கினர். அவர்கள் கேட்ட அய்யவினாக்களுக்கெல்லாம் தயங்காமல் மயங்காமல். அறிவுபூர்வமான தெளிவான பதிலுரைகள் வழங்கினர். மக்களிடையே பேதங்கள் ஒழிந்து சுயமரி மரியாதை பெருக வேண்டும் என்ற குறிக்கோளை எடுத் துரைத்தனர். எதிர்ப்பாளரும் மனநிறைவடைந்து அமைதி பெற்றனர்.

சிங்கப்பூரில் "தமிழ்முரசு" ஏடு நடாத்தி வந்த திரு வாரூர்க்காரர் கோ. *சாரங்கபாணி பெரியாரின் சிறந்த நண்பரானார். மலேயாவிலுள்ள பற்பல பெரிய ஊர்களுக் குப் பெரியாரும் குழுவினரும் சென்று பிரச்சாரம் புரிந்தனர். பினாங்கு, ஈப்போ, கோலாலம்பூர், கோலப் பிறை, கோலக்கங்சார், தைப்பிங், மூவார், ஜொகூர்பாரு, பத்துப்பகாட், மலாக்கா, தம்பின், கோலக்குபு, தஞ்சை மாலிம், சுங்கை குரூட், சுங்கை பட்டாணி, தெலுக்கான்சன், கம்மார் ஆகிய சுமார் எழுபத்தொரு இடங்களில் சொற் பொழிவுகளும், வரவேற்பு நிகழ்ச்சிகளில் உரைகளும் நிகழ்த்தி மாபெரும் எழுச்சியும், விழிப்புணர்ச்சியும் ஏற் படுத்தினார்கள்.

மீண்டும் 1930–ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 11-ஆம் நாள் பினாங்கில் கப்பலேறி, 16–ஆம் நாள் நாகைப்பட்டினம் துறைமுகத்தில் வந்திறங்கினர். இந்த நேரத்தில்தான் பெரி யாரின் தோற்றத்தில் முக்கியமானதொரு மாற்றம் நேர்ந் தது. அதுவரையில் முகத்தில் வெண்ணிறமான திண்ணிய மீசை மட்டும் வளர்த்திருந்த பெரியார், மலேயாவிலிருந்து திரும்பியபோது, வெண்மையான தாடியுடனும் காணப் பட்டார். தற்செயலாய் நேரிட்ட, சவரம் செய்து கொள்ள இயலாத நிலையைப் பிற்காலங்களில் தனக்கு மிகவும் சாதக

மான அமைப்பாக்கிக் கொண்டார் பெரியார். அதாவது பொது வாழ்க்கையில் ஈடுபடுவோர் குளிக்கவோ, பல் துலக்கவோ, தலை சீவவோ, சவரம் செய்து கொள்ளவோ துணி. துவைக்கவோ, சலவை உடுக்கவோ, அலங்காரம் மேற் கொள்ளவோ நேரம் செலவழிக்கக் கூடாது என்பது பெரி யாரின் பிடிவாதமான கொள்கை. இதற்கு மாறுபடும் அவருடைய அணுக்கத் தொண்டர்கள் சிலர் அவரது கண்ட னத்துக்கு ஆளாகியுள்ளனர்; நன்குணர்ந்த புத்திசாலிகள் தப்பித்துள்ளனர். பிடரியினைச் சிலிர்த்தெழும் அடலேற்றுச் சிங்கமெனப் பெரியார் மலேயா நாடுகளிலிருந்து திரும்பி னார் கவர்ச்சி மிகு தோற்றத்துடன்!

அவரில்லாத காலத்தில் சென்னைக்கு மாற்றப்பட் டிருந்த "குடி அரசு", "ரிவோல்ட்" இதழ்கள் மீண்டும் ஈரோட்டுக்கே கொண்டு வரப்பட்டன. "ரிவோல்ட்" இதழ் 1930-ஆம் ஆண்டில் அடியோடு நிறுத்தப்பட்டு விட்டது. எனினும் "குடி அரசு" இதழில் முன்னிலும் அதிகத் தீவிரத்துடன் பெரியார் எழுதி வந்தார். இந்த நேரத்தில்தான் காந்தியார் தமது உப்புச் சத்தியாக்கிரகம் எனும் புதிய போராட்டத்தைத் துவக்கி யிருந்தார். 1930-ல், இந்தியாவிலிருந்து வெள்ளை ஆட்சியை விலகச் செய்திட ஒரு கருவியாக இந்த உப்புப்போர் கருதப்பட்டு, இதில் ஏராளமானோர் ஈடுபட்டனர். தென்னாட்டில் வேதாரண் யத்தில் உப்புப் போர் நடத்த இராஜாஜியும், சர்தார் வேத ரத்தினம் பிள்ளையும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இரண்டுங் கெட்டான் நிலைமையிலிருந்த சில தமிழ் மக்கள் உப்புப் போர் மிக நியாயமானதே என்று நினைக்கவும் தொடங் கினர். இந்நிலையில், அதனை அடியோடு எதிர்த்துப் பெரியார் முழக்கமிட்டார். இந்தக் கொள்கையிலும், இதை நடத்துகின்ற தலைவர்களின் நாணயத்திலும் தமக்கு நம்பிக்கை இல்லை என்றார். இந்தியாவில் மத ஆதிக்கம், குருட்டு நம்பிக்கை, தீண்டாமை, பெண்ணடிமை, சாதி இழிவு, பார்ப்பன் ஆளுகை இவை யாவும் அடியோடு ஒழிக் கப்பட்டால்தான் பூரண சுயராஜ்யம் கிடைக்கும்; கிடைத்

தாலும் நிலைக்கும் என்ற தமது கொள்கையை அழுத்தந் திருத்தமாக அஞ்சாது வெளிப்படுத்தினார் பெரியார்!

இவ்வாறு சொன்னதால், ஒரு பெரிய தேசிய எழுச்சியை அவமதிக்கிறார் என்று சொல்லிக் கடுமையாக ஏசினார்கள்; மிரட்டினார்கள்; மொட்டைக் கடிதங்கள் தீட்டினார்கள்; வெள்ளைக்காரர் பாதந்தாங்கி எனப்பட்டம் சூட்டினார்கள்! என்னதான் அச்சுறுத்தினாலும், இந்த உப்புக் காய்ச்சும் போரினால், வளைந்து போன குண்டூசியளவு நன்மைகூட இந்தியாவுக்குக் கிடைக்காதென்று, கோபுரத்தின் மீதிருந்தும் கூறுவதாகப் பெரியார் பிரகடனம் செய்தார்! கலந்து கொள்ளாவிட்டாலும், இதைக் கண்டிக்காமலாவது விடலாமே என்று உடனிருந்தோரில் சிலரது முணுமுணுப்பும் அவர் செவிகளில் ஏறவில்லை!

ஈரோட்டில் இரண்டாவது மாகாண சுயமரியாதை மாநாடுகளின் தொகுப்பு, 1931-ஆம் ஆண்டு மே 10, 11 நாட்களில் நடைபெற்றது. வரவேற்புக் குழுத்தலைவர் ஆர்.கே. சண்முகம். சுயமரியாதை மாநாட்டுத் தலைவர் எம்.ஆர். ஜெயக்கர், இளைஞர் மாநாட்டுத் தலைவர் நாகர்கோயில் வழக்கறிஞர் பி. சிதம்பரம், பெண்கள் மாநாட்டுத் தலைவர் டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி (டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி தேவதாசி ஒழிப்பு மசோதாவைச் சட்டமன்றத்தில் நிறைவேற்ற அரும்பாடு பட்டார். பெரியாரின் முழு ஆதரவு இதற்கு இருந்தது. இதை உடனடியாக நிறைவேற்றித் தராததற்காகப் பெரியார் நீதிக் கட்சியினரைக் கடுமையாகக் கண்டித்து வந்தார் 1930-ல்) மதுவிலக்கு மாநாட்டுத் தலைவர் சிவகங்கை வழக்கறிஞர் எஸ். இராமச்சந்திரன், சங்கீத மாநாட்டுத் தலைவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகச் சங்கீதப் பேராசிரியர் தஞ்சை கே. பொன்னையா—எனப் பெரியார் ஏற்பாடு செய்தார்.

மாநாட்டில் பல்லாயிரக் கணக்கான மக்கள்—இந்து முஸ்லீம், கிறிஸ்தவர், தாழ்த்தப்பட்டோர்—ஒன்றாகக்கூடி அமர்ந்திருப்பதையும், இவர்களனைவருக்கும் உணவு சமைத்துப் பரிமாறுகின்றவர்கள் யாவரும் தாழ்த்தப்பட்டோர்

என்பதையும் கண்டு, எம். ஆர். ஜெயக்கர் என்னும் வட நாட்டு அறிவாளர் மிக்க வியப்பும் மகிழ்வுங்கொண்டு பல்லாயிரம் ஆண்டுகளாய் எந்த மதத் தலைவரும் செய்யாத அருஞ்சாதனைகளைப் பெரியார் ஆற்றியுள்ளதாகப் பாராட்டிப் புகழ்ந்தார். சட்டமன்றம் செல்லவோ, அரசுப் பதவி பெறவோ விரும்பாமல் ஏழை மக்களின் மேம் பாட்டுக்குத் தொண்டு செய்வதே அவரது பிறவிப்பயனாய்க் கருதுவதைப் போற்றினார்.

பெரியார் சில முற்போக்கான தீர்மானங்களைக் கூடுத லாகக் கொணர்ந்து இங்கு இணைத்தார். செங்கற்பட்டுத் தீர்மானங்களை முழுமையாக ஏற்றுக் கொள்வதோடு, மாதம் 1000 ரூபாய்க்கு மேல் எந்த அரசு அலுவலரும் சம்பளம் பெற இடமிருக்கக்கூடாது என்பது ஒன்றாகும். இது இங்கு நிறைவேறிய பின்னர்தான் காங்கிரஸ் கட்சி 500 ரூபாய் சம்பளத்துக்கு மேல் அரசு யாருக்கும் தரக் கூடாது என்று தீர்மானித்ததாகும். மேலும், யார் தூற்றி னாலும் போற்றினாலும் கவலை கொள்ளாமல், சுயமரி யாதை இயக்கம் அரசியலில் கலக்கக் கூடாது; சட்டமறுப்பு இயக்கங்களை ஆதரிக்கக் கூடாது; முழுமையான சமூக சீர்திருத்த இயக்கமாகவே நடைபெற வேண்டும் என்பது மற்றொரு முக்கிய தீர்மானமாகும். சுயமரியாதை இயக்கம் என்றைக்குமே மூடப் பழக்க வழக்கங்களையும், கடவுள் மதம் சாதி பார்ப்பான் பண்டிதனைக் கண்டித்துக்கொண்டு மட்டுந்தான் இருக்கும் என எண்ணிட வேண்டாம்; ஒருவன் உழைப்பில் மற்றவன் நோவாமல் சாப்பிடுவதும்; ஒருவன் கஞ்சிக் கலைய, மற்றவன் அய்ந்து வேளை சாப்பிட்டுச் சாய்ந்து ஒய்ந்து கிடப்பதும்; ஒருவன் கந்தை யணிவதும் மற்றவன் மூன்று உடுப்பு அணிந்து திரிவதும்; பணக்காரர்கள் செல்வம் முழுவதும் தங்களது சுக வாழ்வுக்கு மட்டுமே என எண்ணுவதும் இனி நடக்காது—என்ற சமதர்மக் கருத்தை யும் பெரியார் ஈரோடு மாநாட்டில் பிரகடனம் செய்து விட்டார்! இந்தப் புதிய பொருளாதாரத் திட்டம் மேலும் பல இளைஞர்களை இயக்கத்தின்பால் ஈர்த்தது.

பகத்சிங் தூக்கிலிடப்பட்டபோது—ஆங்கிலேய அடக்கு முறைக்கு அஞ்சிப் பிறதேசபக்தர் வாய்மூடிக்கிடந்தபோது—பெரியார், "அவர்தான் யோக்கியமான மனிதர்; அவர் மேற்கொண்டதுதான் சரியான மார்க்கம்" என்று பாராட்டி 1931 மார்ச் 29-ஆம் நாள் "குடி அரசு" இதழில் எழுதினார்.

அடுத்ததாக, விருதுநகரில் 1931-ஆகஸ்டில் மூன்றாவது மாகாண சுயமரியாதை மாநாடு ஆர்.கே. சண்முகம் தலைமையில் நடைபெற்றது. வே.வ. இராமசாமி வரவேற்புக் குழுத் தலைவர். இங்கு செங்கற்பட்டு, ஈரோடு மாநாடுகளின் தீர்மானங்கள் ஏற்றுக் கொள்ளப் பெற்றன. கதர் கைத்தொழில் திட்டங்கள் பொருளாதார வளர்ச்சிக்கு ஏற்றவை அல்ல; எனவே இயந்திர சாதனங்களே தொழில் வளர்ச்சிக்கு உகந்தவை என்பதாக ஒரு தீர்மானம் இங்கே இயற்றப் பெற்றது குறிப்பிடத் தக்கதாகும்.

மார்க்ஸையும் லெனினையும் அறிந்து கொள்ளாமலே, பெரியார் தமது கூர்த்த மதியினால், 1900-ஆண்டிலேயே, தமது 21-ஆவது வயதில், தாம் தீவிரமாக மண்டி வணிகத்தில் ஈடுபட்டிருந்த காலையில் தொழிலாளர்க்குத் தொழிலில் பங்கு என்ற திட்டத்தை மேற்கொண்டிருந்தார். இலாபத்தை மூன்றாகப் பிரித்துத் தனக்கு ஒரு பாகம், தன் முதலுக்கு வட்டியாக ஒரு பாகம், தொழிலாளிகளாகிய உழைக்கும் கூட்டாளிகளுக்கு ஒரு பாகம் எனப் பிரித்துக் கொடுத்தார். அது நன்கு செயல்பட்டதால், அதுவே தொழிலாளர் பிரச்சினை தீர்க்கும் வழி என்பதைத் தனது கொள்கையாய்க் கொண்டு பிரச்சாரமும் செய்து வந்தார். இப்படியாகச் சமுதாயத்திலிருந்து, பொருளாதார சம்பந்தமாகவும் தமது கொள்கைகளை விரிவுபடுத்திய, பெரியார், அப்போது சமதர்மத் திட்டத்தை வெற்றிகரமாக நடைமுறைப் படுத்திக் காட்டிய சோஷலிச சோவியத் ரஷ்ய நாட்டை நேரில் கண்டுவர விரும்பினார். இச்சமயத்தில் 1931-நவம்பரில், அவருக்கு உடல் நலிவுற்றது; நாகம்மையார் ஓர் அறிக்கை வாயிலாகவும்இதனை வெளிப்படுத்தி, அவருக்கு ஓய்வு தேவையென வேண்டியிருந்தார். எனினும்

இதையெல்லாம் பொருட்படுத்தாமல் எஸ். இராமநாதன், ஈரோடு இராமு ஆகியோருடன் மேல்நாட்டுச் சுற்றுப் பயணத்துக்காகக் கப்பலில் 4-ஆம் வகுப்பில் வசதிக் குறை வென்றாலும் சிக்கனம் கருதி அதிலேயே புறப்பட்டு விட்டார் பெரியார்! ஆப்பிரிக்க நாடுகளில் இருந்த வரையில் வேட்டி சட்டையுடன் இருந்தார்; பின்னர் கம்பளியாலான முழுக்கால் சட்டை, முழுநீள ஓவர்கோட், பெரிய தலைப் பாகை இவற்றுடன், காண்பவர் கண்களைக் கவரும் கம்பீர மான தோற்றத்துடன், பெரியார் மேலை நாடுகளில் வலம் வந்தார்.

1931–ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 13–ஆம் நாள் சென்னையிலிருந்து கிளம்பிப் பாண்டிச்சேரியில் ஒரு நாள் கப்பல் தங்கியபோது, பாரதிதாசன் வந்து பார்த்து, அன்னியச் செலாவணி நாணயங்களை மாற்றித்தந்தாராம். டிசம்பர் 24–ஆம் நாள் தென்னாப்பிரிக்காவில் இறங்கி, அங்கே அய்ந்தாறு நாள் சுற்றிப் பார்த்துச் சூயஸ் கால்வாய் வழியே பிறகு எகிப்து சென்று, அங்கு 10 நாட்கள்; அதன் பின்னர் கிரீஸ், துருக்கி நாடுகளில் சில வாரங்கள்; அதற்குப் பிறகு சோவியத் ரஷ்யாவில் 1932–ஆம் ஆண்டு பிப்ரவரி 13–ஆம் நாள் முதல் மே 19-ஆம் நாள் வரை தங்கியிருந் தனர். சோவியத் நாட்டில் பெரியார் குழுவினர்க்கு நல்ல வரவேற்புக் கிடைத்தது. இளைஞர் சங்கங்கள், நாத்திகச் சங்கங்கள், தொழிற்சாலை நிர்வாகம் ஆகியவை பெரியாரை வரவேற்றன. சுமார் மூன்று மாத காலம், அரசு விருந்தினராக ஏற்றுக் கொள்ளப்பட்டு, மொழி பெயர்ப்பாளர்களின் துணை கொண்டு, பல்வேறு நகரங்களி லுள்ள இடங்களையும் விரிவாகச் சுற்றிப் பார்த்து விளக்கம் பெற்றார் பெரியார். மிகப் பெரிய தொழிற்சாலைகள், கல்விச் சாலைகள், நூலகங்கள், நாடக அரங்குகள், வேளாண்மைப் பண்ணைகள், பொது உணவு விடுதிகள், லெனின் மியூசியம், லெனின் உடல் பாதுகாக்கப்படும் இடம் ஆகிய எல்லா இடங்களையும் நல்ல முறையில் கண்டார். ஆங்காங்கு சிறிய பொதுக் கூட்டங்களில் பேசினார்.

தொழிற்சங்கங்களில் உரையாற்றி, வரவேற்பும் பெற்றார். அப்போது நடைபெற்ற மாபெரும் மேதின விழா அணி வகுப்பினையும் பார்வையிட்டார். அங்கு அணிவகுப்பு மரியாதை ஏற்றுக் கொள்ள வந்த ரஷ்யத் தலைவர் ஸ்டாலினுக்கு, இந்தியாவிலிருந்து வந்துள்ள நாத்திகத் தலைவர் என அறிமுகம் செய்யப்பட்டார். எட்ட நின்றே இருவரும் வணக்கம் பரிமாறிக் கொள்ள முடிந்தது. ஸ்டாலினுடன் பேட்டி ஒன்று, 1932-மே 29-ஆம் நாள் ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. ரஷ்யா போய்ச் சேர்ந்ததுமே பெரியார் தன்னையும் ராமநாதனையும் கம்யூனிஸ்ட் கட்சியில் உறுப் பினர்களாகச் சேர்த்துக் கொள்ள விண்ணப்பம் செய்து, உறுப்பினர் கட்டணமும் செலுத்தி, அவ்வாறே சேர்த்துக் கொள்ளப்பட்டனர். ஆனால் பெரியாருடன் சென்றிருந்த எஸ். இராமநாதனுடைய நடவடிக்கைகளில் ஏதோ சந்தேகம் கொண்ட சோவியத் அரசு, 19-ஆம் நாளே இவர்கள் ரஷ்யாவிலிருந்து புறப்பட வேண்டுமென்று தெரி வித்துவிட்டது! கைக்கெட்டிய வாய்ப்பு கை நழுவிப் போன வருத்தம் பெரியாருக்கு!

அதற்கு அப்பால், ஜூன் திங்கள் முதல் அக்டோபர் திங்கள் வரை இங்கிலாந்து, ஜெர்மனி, ஸ்பெயின், போர்ச்சுகல், பிரான்ஸ் ஆகிய நாடுகளுக்குச் சென்றார். இங்கிலாந்தை நன்கு சுற்றிப் பார்த்துப் பல தொழிலாளர் தலைவர்களைச் சந்தித்து உரையாடினார். பிரபல இந்தியத் தொழிற்சங்க வாதியான சக்லத்வாலாவையும் கண்டு பேசினார். 1932-ஆம் ஆண்டு ஜூன் 20-ஆம் நாள் இங்கிலாந்தில் யார்க்ஷயரிலுள்ள மேக்ஸ்பரோ லேக்பார்க்கில் சுமார் அய்ம்பதாயிரம் தொழிலாளர் நிரம்பிய கூட்டத்தில் பெரியார் உரையாற்றினார். அப்போது இங்கிலாந்தில் தொழிற்கட்சி ஆட்சி நடந்து வந்தது. இந்தியச் சுரங்கங்களில் 10 மணி நேரம் வேலை செய்யும் ஆண் தொழிலாளர் நாள் ஒன்றுக்கு எட்டணாவும், பெண் தொழிலாளர் அய்ந்தணாவும் கூலி பெற்று, வறுமையில் நெளிகின்றனர். இந்தியாவில் மன்னர்களும், ஜமீன்தார்

களும், மிட்டா மிராசுகளும், முதலாளிகளும், வெள்ளைக் கார வியாபாரிகளும் சாமான்யக் குடிமக்களாகிய பெரும் பான்மையினரை ஆதிக்கம் செலுத்தி, அடிமைப்படுத்தி வைக்க உதவிடும் ஓர் ஆட்சி அங்கு நடைபெற, இங்குள்ள தொழிற்கட்சி எப்படி அனுமதிக்கிறது? ஆகவே, போலித் தனமான இந்தத் தொழிலாளர் நலக் கொள்கைகளை நம்பாமல், உலகத் தொழிலாளர்கள் ஒன்றுபட்டு, ஒற்றுமை யாய்ப் போராட வேண்டும் என்று பெரியார் முழங்கினார். சிங்கத்தின் குகையிலே நுழைந்து, அதன் பிடரி மயிரைப் பிடித்து உலுக்குவது போல, இங்கிலாந்து சென்று, அந்த அரசைக் கண்டித்தது கண்டு, தொழிலாளர்களும், அவர் களின் தலைவர் லான்ஸ்பரியும் பெரிதும் பாராட்டினர். திரும்பும்போது, மார்ஸேல்ஸிலிருந்து பெரியாரை இந்தி யாவுக்குக் கப்பலேற்றிவிட்டு, எஸ். இராமநாதன், சில திங்கள் கழித்து வருவதாகக் கூறி, ஜெனிவா சென்று விட்டார்.

அய்ரோப்பாவை விட்டுப் புறப்பட்டுப் பெரியார் அப்படியே இலங்கை வந்தடைந்தார். 1932 அக்டோபர் 17 முதல் நவம்பர் 6 வரையில் இலங்கையில் சுற்றுப் பயணம் நடத்தினார். கொழும்பு, கண்டி, நாவலப்பிட்டியா, ஹட்டன், யாழ்ப்பாணம், பருத்தித் துறை ஆகிய சுமார் 18 இடங்களில் நடந்த வரவேற்பு விழாக்களிலும் பொதுக் கூட்டங்களிலும் விளக்கவுரையாற்றினார் பெரியார். "இலங்கை உபந்நியாசம்" என்ற தலைப்பில் வெளி வந்துள்ள அந்தச் சொற்பொழிவுகளின் தொகுப்பு மிகுந்த புரட்சிகரமானதாகும். இலங்கைக்கு எதிர் கொண்டு சென்று அவருடன் அன்னை நாகம்மையாரும், மாயவரம் நடராசனும் கலந்து கொண்டனர். தொழிலாளர் முன் னேற்றம், பொருளாதார சமத்துவம் ஆகியவை பற்றித் தாம் மேல் நாடுகளில் கண்டவற்றையும் இணைத்துத் தமது கோட்பாடுகளை இலங்கைத் தொழிலாளரிடையே பல கூட்டங்களில் விவரித்தார். இலங்கைத் தமிழரிடையே நல்ல முறையில் சுயமரியாதை இயக்கம் தழைத்துப்

பரவிற்று. பின்னர் 1932 நவம்பர் 11-ஆம் நாள் ஈரோடு வந்து சேர்ந்தார், தூத்துக்குடி வழியே!

அதற்குப் பிறகு நிறைய நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டார். கருத்தாழமிக்க "இலங்கைச் சொற்பொழிவுகள்" குறிப்பிடத்தக்க விளக்க நூலாகும். கீழ் நாடு மேல் நாடு பயணக் கட்டுரைகளும் பெரிதும் அறிவு புகட்டத் தக்கவைகளாகும். அவரது எல்லாச் செயல்களிலும் பொதுவுடைமை மணம் கமழத் தொடங்கிற்று. ஆண்களைத் தோழர் என்றும், பெண்களைத் தோழியர் என்றும் விளிக்குமாறு பணித்தார். சோவியத் நாட்டின் அய்ந்தாண்டுத் திட்டத்தைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்டார். தாம் பயணம் சென்றிருந்த காலத்தில், இயக்கம் சோர்வடையாதவாறு, தம் தமையனாரும், தம் துணைவியாரும் பாதுகாத்து, இயக்க நண்பர்களின் பெருந்துணையோடு தளர்வுறாமல் வைத்தது கண்டு, பெருமிதங் கொண்டார்.

சமதர்மக் கருத்துக்களை மேலும் தோழர்களிடையே விளக்கமளித்திடப் பெரியார் விரும்பினார். சிந்தனைச்சிற்பி மா. சிங்காரவேலர் பேருதவி புரிந்தார். இயக்கத்தின் புதிய வரவுகளாக ப. ஜீவானந்தம், கே. எம். பாலசுப்ரமணியம், கே. முத்துசாமி வல்லத்தரசு, பண்டித திருஞான சம்பந்தம், டி. வி. சுப்பிரமணியம், பேராசிரியர் லட்சுமி நரசு, எஸ். லட்சுமி ரதன் பாரதி, டி. வி. சோமசுந்தரம், சேலம் ஏ. சித்தையன், சேலம் ஆர். நடேசன் மற்றும் ஏராளமானோர் மிக்க ஆர்வத்துடன் பேசவும் எழுதவும் முற்பட்டிருந்தனர். இவர்களையெல்லாம் நன்முறையில் பயன்படுத்திட, ஈரோட்டில், பெரியார் 1932—டிசம்பர் 28, 29 நாட்களில் சுயமரியாதைத் தொண்டர்கள் கூட்டம் ஒன்றினை மிகச் சிறப்புடன் நடத்தினார். புதிய பொருளாதாரப் புரட்சித் திட்டம், நாட்டில் பொதுவுடைமைக் காற்றினைத் தென்றலாய் வீசச் செய்தது.

சென்னையைச் சேர்ந்த வழக்கறிஞர் மா. சிங்காரவேலர் மீனவர் குடியிற் பிறந்த பேரறிவாளர், உண்மையான பொதுவுடைமை வாதி. தொழிற்சங்க நட-

வடிக்கைகளில் பெரிதும் ஈடுபட்டு, ஏராளக் கஷ்ட நஷ்டங்கள் அனுபவித்து வந்தவர். பெரிய நூல் நிலையம் அமைத்துக் கொண்டு, ஆராய்ச்சிகள் செய்து, சுயமரியாதை, பகுத்தறிவுக் கொள்கைகளுக்கு யாரா லும் மறுக்கவொண்ணாத வாதங்களை நிறுவிக் காட்டி யவர். "குடி அரசு" இதழில் அறிவு விளக்கத்துக்கான கேள்விகளுக்கு ஆதார பூர்வமாகப் பதில்கள் எழுதி வந்தார். பல விஞ்ஞான அடிப்படையிலான நாத்திக நூல்கள் இயற்றியுள்ளார்.

நாஞ்சில் தமிழரான ப. ஜீவானந்தம் திருப்பத் தூரில் பள்ளி ஆசிரியராக இருந்தபோது பெரியாரால் அழைத்து வரப்பட்டார். பெரியவர்களுக்கே பாடம் புகட்டும் அறிவு அவருக்கு இருப்பதாகப் பெரியாரே புகழ்ந்துரைத்தார். பொதுவுடைமை அடிப்படையி லான சுயமரியாதைக் கருத்துகளை மேடைகளில் ஆவேசமாக, ஆத்திரமாக, ஆடிப்பாடி முழங்குவார். நல்ல தமிழ் அறிவு கொண்டவர். பிற்காலத்தில் பொதுவுடைமைக் கட்சியில் தலைவராக விளங்கினார்.

திருச்சி கே. எம். பாலசுப்ரமணியம் ஆங்கிலத் திலும், அழகு தமிழிலும் எழுதவும், பேசவும் பேராற்றல் படைத்தவர். சில காலமே சுயமரியாதை இயக்கத்தில் இருந்தாலும் தனது முத்திரைகளை ஆழமாகப் பதித்தவர். பின்னாட்களில் சமயப் பிரச்சாரம் புரிந் தார். திருவாசகமணி என்னும் சிறப்புப் பெயரோடு, திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். பெரியார் பற்றி ஆங்கில நூல் எழுதியுள்ளார்.

சோமசுந்தர பாரதியார் என்னும் நாவலரின் மகன் லட்சுமிரதன். ஆங்கில ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதும், லட்சுமிநரசு. மேடைகளில் வீர முழக்க மிடும் புதுக்கோட்டை வல்லத்தரசு சிறந்த சொல் வீரர்களான சேலம் ஏ. சித்தையன்; மற்றும் சேலம் ஆர். நடேசன். மற்ற யாவரும் படித்துப் பட்டம் பெற்று, அருமையான விரிவுரை ஆற்றும் வன்மை படைத்தவர்கள்,

இக்காலத்தில், ஓரிருவர் கொள்கை வேகம் தாங்க இயலாமல் ஒதுங்கிப் போனாலும், கொள்கை வேகத் தாலேயே வேறுபல்லோர் ஈர்க்கப்பட்டுப், பெரியார் அணி யில் வீரராக விரைந்தனர்.

# 9. தொடர்ந்தார்

அன்னை நாகம்மையார் மறைவு—முன்னிலும் உத்வேகம் இயக்கப் பணிகளுக்கு—ஈ.வெ.ரா வேலைத் திட்டம் காங்கிரசுக்கும் நீதிக்கட்சிக்கும் தரப்பட்டது—நீதிக்கட்சி ஏற்றதது—ன்றா— குத்தறிவு வெளியீடுகள்— 1933 முதல்1935வரை.

---

இடுக்கண் இன்னல் அடுக்கடுக்காய் வந்தாலும், துன்ப துயரங்கள் தொய்வின்றித் தொடர்ந்தாலும், அன்பு தவழும் முகமும், அருள்சுரக்கும் அகமும் கொண்ட எம் அன்னை நாகம்மையார் ஈரோட்டில் உள்ளவரை எமக்கேது குறை—எனச் சுயமரியாதை இயக்கத்தின் தோழர்களும் தோழியர்களும் தென்புடன் கட்டிவைத்த நம்பிக்கை மாளிகை; நாசமாய்ப்போயிற்றே! 1933 ஏப்ரலில் நோயாய்ப்படுத்தவர் எழுந்து நடமாடாமலே மே 11 ஆம் நாள் அனைவரையும் அவலக்கடலில் தள்ளி அபலைகளாக்கிப்போனாரே! அந்தோ!

நாற்பத்தெட்டாண்டுகள் நலிவின்றி வாழ்ந்தவர், தமக்கென்று வாழாமல், கணவர்க்கென்றே வாழ்ந்தவர்; அவருக்குத் தாம் வாழ்க்கைத் துணைவியே தவிர, அவர் தமக்கு வாழ்க்கைத் துணைவர் என்ற கருத்தினால் அவர்க்குத் தொல்லை தராமல், சாதாரணப் படிப்பறிவு பெற்றிருந்தும் இந்தியத் துணைக்கண்டமே விந்தையுடன் விழிதிருப்பி நோக்குமளவுக்கு அரசியலில்—போராட்டத்தில்—வரிசையாய் ஈடுபட்டுச், சிறைசென்று, நாடுசுற்றித் தொண்டாற்றி,

விருந்தோம்பிப், பத்திரிகை நடத்தி, இயக்கத்தை முடுக்கிப், பெரியார்க்குக் காதலியாய், மனைவியாய்த், தோழியாய்த் தொண்டராய், அன்னையாய் அமைச்சராய்த் தலைவியாய்ப் பிள்ளையாய்—ஏன் அனைத்துமாய்—நின்ற அம்மையார் மறைவு நிம்மதிக் குறைவுதானா பெரியாருக்கு?

அம்மையார் மறைவால் பெரியாருக்கு ஓர் அடிமை போனதா? ஆதரவு போனதா? இன்பம் போனதா? உணர்ச்சி போனதா? ஊக்கம் போனதா? எல்லாம் போயிற்றா? என்ன சொல்வதென்று யார்க்கும் விளங்கவில்லை! ஏறத் தாழப் பதினொரு திங்கள், பெரியார் தம்மைப் பிரிந்து மேலை நாட்டுச் சுற்றுப் பயணம் மேற்கொண்டதால், பிரிவாற்றாமை காரணமாய்த்தான் அம்மையார் உடல் நலி வுற்றது. நினைவெல்லாம் தம் கணவர் மீதும் இயக்கத்தை வளர்க்கும் பிள்ளைகள் மீதும் நிலைத்திருக்க, எந்நேரமும் நாடு, மக்கள், இயக்கம், போராட்டம் என்று—குடும்பம், மனைவி, பாசம், பற்று இவை முற்றிலும் அற்ற துறவியாய்த் தன் கணவர் அலைந்து திரியும் போக்கினை எண்ணி இரங்கி, நைந்துருகி, உடல் இளைத்து, அம்மையார் இறுதி எய்தி னார்கள்! இந்த இழப்பால் தமக்கு லாபமா, நட்டமா? துக்கமா, மகிழ்ச்சியா? எனப் பெரியாராலேயே முடிவு கட்ட இயலவில்லை! வருங்காலத்தில் தமது புதிய ஈரோடு வேலைத் திட்டத்தின் விளைவாய்ப் பயங்கர சூழ்நிலைகள் உருவாகலாம்; அம்மையார் அப்போது இல்லாதிருப்பதே நிம்மதி; மிச்சமிருக்கும் காலத்தில் நிரந்தர வாசம் இல்லா மல், சுற்றிச் சுழன்று வர, அம்மையார் இருந்தால் தடை யாகத் தோன்றலாம், என்றே பெரியார் கருதினார்!

தமது பொதுப்பணிக்கு எதுவுமே இடையூறாக இருத்த லாகாது எனுங் கருத்துக் கொண்டவர் பெரியார். இறப்பு களையும் அவ்வாறே கருதினார்; சிறப்பெதுவுமில்லை, சாவு களுக்கு! தமது அண்ணன் மகன் 10 வயது முதல் லண்டனில் படித்து ஊருக்கு வந்திருந்த நேரம், என்புருக்கி நோயினால் தாக்கப்பட்டு மாண்டபோது, சுற்றுப்பயணத்திலிருந்தார். தமது மாமனார் தம் வீட்டில் வந்து தங்கியிருந்தபோது,

நோயுற்று மாண்டநேரம், சென்னையிலிருந்தார். அண்ணா வின் முதல் மனைவி — அவர்கள் பெயரும் நாகம்மாள்— இறந்த அன்றே வெளியூர் புறப்பட்டார். அதே போல அன்னை நாகம்மையார் உடல் நிலை அபாயக் கட்டத்தில் இருந்த போதும் திருப்பத்தூர் புறப்பட்டுச் சென்று விட்டார். அங்கே தமது ஈரோடு வேலைத் திட்டத்தை விளக்கி முழக்குகிறார்:—'அரசியல் துறையிலும் பொருளா தாரத் துறையிலும் மாற்றங்கள் செய்யாமல் வெறும் சமுதாய முற்போக்குக்காக எதற்குச் சுயமரியாதை இயக்கம்? அதே போல் சாதி மதம் வர்ணாசிரமம்; வேதம் புராணம் இதிகாசம் எல்லாம் இருக்க வேண்டும்; மன்னர் மிட்டா மிராசு பிரபுக்கள் இருக்க வேண்டும்; வெள்ளைக் காரன் மட்டும் வெளியே போக வேண்டும் என்றால் என்ன நியாயம்? ஆகையால் காங்கிரசோ, தேசியமோ காந்தியமோ சுயராஜ்யமோ, இவை யாவுமே சுயமரியாதை இயக்கத்துக்கு வைரிகள்—அழிக்கப்பட வேண்டியவை'—என்று மக்கள் மன நிறைவு கொள்ளும் வண்ணம் ;ஒப்புக்கொள்ளத் தக்க வித மாகத் தமது வாதங்களை எழுப்பிக் காட்டி விட்டுத்தான், மனைவியின் மறைவு காண ஈரோடு வந்தார் பெரியார்.

என்னதான் பகுத்தறிவுத் தந்தையாயினும், கல்நெஞ்சு கொண்டவரல்லவே; ஏழையர்பால் கசிந்துருகித்தானே சமதர்மக் கொள்கை வகுத்தார்? அம்மையார் மறைந்தது குறித்துப் பெரியார் வெளியிட்ட இரங்கல் அறிக்கை; கையறு நிலைக் காவியமாய், இலக்கியத்தின் சிகரமாய் ஒளிரக் காணலாம்!

அன்று இரவே திருச்சிக்குச் சென்றார். மறு நாள் 1933 மே 12—ல் அங்கு விதிக்கப் பட்டிருந்த 144 தடையுத்தரவை மீறி, ஒரு கிறித்துவத் திருமணத்தை நடத்தி வைத்தார். கைதாகி, வழக்கும் தொடரப் பட்டது. பின்னர், வழக்கு திரும்பப் பெறப்பட்டது!

1932 டிசம்பர் இறுதியில் ஈரோட்டில் கூடிய சுயமரி யாதைத் தொண்டர்களின் கலந்துரையாடல் கூட்டத்தில் எதிர்கால வேலை நடைமுறைகள் பல்விதமாய் அலசி

ஆராய்ந்து விவாதிக்கப்பட்டன. சுயமரியாதை இயக்கத்தின் சமுதாயக் கொள்கைகளுடன், சமதர்ம அடிப்படையிலான பொருளாதாரக் கொள்கையும், முற்போக்கான அரசியல் கொள்கையும் இணைக்கப்பட்டு, அதற்கு ஈரோடு வேலைத் திட்டம் எனப் பெயர் தரப்பட்டது. 'ஈ.வெ.ரா. பெரியார் தோழர் ராமசாமியாகிவிட்டார்; அதாவது பொதுவுடை மைக் கட்சியாகத் தமது இயக்கத்தை மாற்றி விட்டார்; அவர் ரஷ்யா சென்று வந்த விளைவு இது—எனப் பெரியார் மீது திரித்துக்குற்றம் சாட்டி,ஏராளமான தப்புப் பிரச்சாரம் நாட்டில் கட்டவிழ்த்து விடப்பட்டிருந்தது. வஞ்சகர்களின் வாயை அடக்கவும், வகைபுரியாப் பாமரர்க்குத் தெளிவுறுத் திடவும் தமிழ் நாட்டில் பட்டி தொட்டி, சிற்றூர் பேரூர், நகரம் மாநகரம் எங்கணும் கிளைகள் துவக்கப்பட்டும், பொதுக் கூட்டங்கள், மாநாடுகள் நடத்தப் பட்டும் பெரியா ரின் ஈரோடு வேலைத் திட்டம் அருமையாக விளக்கப் பட்டது. தமிழகத்தில் மட்டும் அல்லாது கேரளத்திலும் இவர் கொள்கைகள் விரைந்து பரவின. ஈழவர் வகுப்புத் தாழ்த்தப்பட்ட மக்களின் மாபெரும் அமைப்பான எஸ்.என். டி.பி. யோகம், பெரியாரின் தலைமையைப் பெரிதும் போற்றியது; வைக்கம் போராட்டத்திலிருந்தே அங்கும் பெரியாரின் அன்பர்கள் பலர் இருந்து வந்தனர்.

1933–ஆம் ஆண்டு நவம்பர் 26–ஆம் நாள் ஈரோட்டில் நடைபெற்ற சுயமரியாதைச் சமதர்மமாநாட்டுக்குக் கேரளத் தோழர் அய்யப்பன் தலைமை தாங்கினார். டாக்டர் வரத ராஜலு நாயுடு தலைமையில் இம்மாநாட்டில் லெனின், நாகம்மையார் படங்களைத் தமிழ்த்தென்றல் திரு. வி. க. திறந்து வைத்தார். 1926–ஆம் ஆண்டு கோவையில் சந்தித்த தற்குப் பின்பு, இப்போதுதான் இந்த முப்பெருந்தலைவர் களும் இணைந்து கூடினர். இந்தக் கூட்டினைக் கண்டு நாட்டினரில் பிற்போக்கு வாதிகள் மனங்கலங்கினர்; அரசு அதிசயத்துடன் அகலத்திறந்த விழிகளும் செவிகளுமாய், என்ன நடக்குமோ என எதிர்பார்த்துக் கூர்ந்து கவனித்து வந்தது!

கடன்களைத் திருப்பித் தராததற்காகச் சிறை பிடிக்கக் கூடாது என்பது பெரியாரின் கொள்கையல்லவா? இதை வலியுறுத்தி நிறையப் பேசியும் எழுதியும் வந்தார்; பல மாநாடுகளில் தீர்மானங்களும் இயற்றச் செய்தார். இதற்கு அவரே சோதனைக்கு ஆட்பட வேண்டிய சம்பவம் ஒன்று நடந்தது. "திராவிடன்" பத்திரிகை சம்பந்தமாக இவர்மீது ஒரு கடன் வாரண்ட் பிறப்பிக்கப் பட்டது. உண்மையில் அந்தக் கடன் இவருக்குரியதல்ல. எனினும் நியாயத்தை விடச் சொல்லுக்கு மதிப்புத் தருபவராதலால், பெரியார் 1933 ஜுன் 2-ஆம் நாள் இதற்காகச் சிறைத்தண்டனை பெற்று, ஏற்றுக் கொண்டார். எனினும் சிறையிலிருந்து விடுதலை ஆன பின்னர் அந்தக் கடனைத் தாமே கொடுத்துத் தீர்த்துவிட்டார் பெரியார்.

1933 அக்டோபர் 29-ஆம் நாளில் வெளியான "குடி அரசு" இதழின் தலையங்கம் 'இன்றைய ஆட்சி முறை ஏன் ஒழிய வேண்டும்?' என்பது. இதில் தீவிர சமதர்ம வாடை வீசுவதாக அரசு கருதவே, இதனை எழுதிய தோழர் ஈ. வெ. ராமசாமிப் பெரியாரையும், "குடிஅரசு" இதழின் வெளியீட்டாளரும், பெரியாரின் தங்கையுமான தோழியர் எஸ். ஆர். கண்ணம்மாளையும் கைது செய்து, அவர்கள் மீது 1934 சனவரி 12-ல் ராஜத்துவேஷ வழக்குப் போடப் பட்டது, கோவை நீதிமன்றத்தில்! வழக்கம்போல் பெரியார் எதிர்வழக்காடவில்லை; அன்றே வாக்கு மூலம் ஒன்று வழங்கினார்:

"இ.பி.கோ. 124.A செக்ஷன்படித் தொடரப்பட்டுள்ள பொதுவுடைமைப் பிரச்சாரத்திற்காகவும், இராஜ நிந்தனை என்பதற்காகவும் உள்ள வழக்கு கோவையில் 12-ஆம் தேதி ஆரம்பிக்கப்பட்டபோது தோழர் ஈ. வெ. ராமசாமி அவர்கள் கோவை ஜில்லாக் கலைக்டர் ஜி. டபிள்யூ. வெல்ஸ் அய். சி. எஸ். அவர்கள் முன் தாக்கல் செய்த ஸ்டேட் மெண்ட்.

என்பேரில் இப்போது கொண்டுவரப்பட்டிருக்கும் வழக்குக்கு ஆதாரமே கிடையாது. வழக்குக்கு அஸ்திவார

மான 29-10-1933 "குடி அரசு" தலையங்கத்தை இப்போது பலதரம் படித்துப் பார்த்தேன். அதை நான் எழுதினேன் என்பதை ஒப்புக்கொள்கிறேன். அதில் எழுதப்பட்டிருக்கும் விஷயங்களுக்காவது, வாக்கியங்களுக்காவது இராஜத்துவேஷக் குற்றம் சாட்டப்படுமானால் இன்றைய அரசாங்கமுறை முதலியவைகளைப்பற்றி ஆராய்ச்சி செய்து குறைகளை எடுத்துச் சொல்லவோ, அவற்றால் மக்களுக்கு ஏற்படக்கூடிய கஷ்டங்களை விலக்கப் பரிகாரம் தேட ஏற்பாடு செய்யவோ யாருக்கும் சுதந்திரம் கிடையாது என்றுதான் முடிவு செய்யப்பட்டதாகும்.

என்ன காரணத்தைக்கொண்டு என்மேல் இந்தப் பிராது தொடரப்பட்டிருக்கிறது என்று யோசித்துப் பார்த்தால், என்னுடைய சமதர்மப் பிரச்சாரத்தை நிறுத்திவிடச் செய்வதற்காக முதலாளி வர்க்கமோ அல்லது மத சம்பிரதாயக் காரர்களோ செய்த சூழ்ச்சியாக இருக்கவேண்டுமென்ற முடிவுக்குத்தான் வரவேண்டியிருக்கிறது. வியாசத்தின் விஷயத்திலாவது பதங்களிலாவது நோக்கத்திலாவது சாட்டப்பட்ட குற்றத்தின் அமைப்பேகிடையாது. முக்கியமாய் அதில் சொல்லப்பட்ட விஷயம் எல்லாம் கல்வி இலாக்காவின் சம்பளங்கள் அதிகமென்றும், பிள்ளைகளுக்குக் கல்விச் செலவு அதிகமென்றும், அதற்கேற்ற பயன் விளைவதில்லை என்றும் ஏழைகளுக்குக் கல்விபரவ சௌகரியம் இல்லை என்றும், இப்படிப்பட்ட முறையால் லாபம் பெறும்பணக்காரர்களும் அதிகார வர்க்கத்தாரும், உத்தியோகஸ்தர்களும் சொல்லுவதைக் கேட்டு ஏமாந்து போகாமல் வரப் போகும் சீர்திருத்தப் பட்ட எலக்ஷன்களில் ஜாக்கிரதையாய் நடந்து கொள்ள வேண்டுமென்று ஏழைப் பொது ஜனங்களுக்கு எடுத்துக் காட்டியதே ஆகும்.

நான் 7, 8 வருஷகாலமாய் சுயமரியாதை இயக்க சமதர்மப்பிரச்சாரம் செய்து வருகிறேன். சமூக வாழ்விலும் பொருளாதாரத்திலும் மக்கள் யாவரும் சமத்துவமாய் வாழ வேண்டுமென்பது அப்பிரச்சாரத்தின் முக்கிய தத்துவமாகும்.

நாட்டில் உற்பத்தியாகும் பொருள்களை நாட்டுமக்கள் யாவரும் சமமாய் அனுபவிக்க வேண்டும் என்பதும் அவ்வுற்பத்திக்காகச் செய்யப்படவேண்டிய தொழில்களில் நாட்டு மக்கள் எல்லாரும், சக்திக்குத் தக்கபடி பாடுபடவேண்டும் என்பதும் அத்தத்துவத்தின் கருத்தாகும்.

அவ்வியக்க இலட்சியத்திலோ வேலைத்திட்டத்திலோ பிரச்சாரத்திலோ அதற்காக நடைபெறும் "குடிஅரசு"ப் பத்திரிகையிலோ பலாத்காரம், துவேஷம், இம்சை இடம் பெற்றிருக்கவில்லை. எந்த விதத்திலாவது அவை நமது நாட்டில் இடம்பெறுவது என்பதும் எனக்கு இஷ்டமான காரியம் அன்று; எனது பிரசங்கத்தைக் கேட்டாலே தெரியும்.

அரசாங்கமானது முதலாளித்தன்மை கொண்டதாயிருப்பதால் அது இத்தகைய சமதர்மப் பிரச்சாரம் செய்யும் என்னை எப்படியாவது அடக்க வேண்டும் என்று முயற்சி எடுத்துக் கொண்டிருப்பதில் அதிசயமில்லை. தற்கால ஆட்சியில் பங்குபெற்று போக போக்கியம் பதவி அதிகாரம் அடைந்துவரும் பணக்காரர்களும் மதம், சாதி, படிப்பு இவற்றால் முதலாளிகளைப் போல வாழ்க்கை நடத்துகின்றவர்களும் இம்முயற்சிக்கு அனுகூலமாயிருப்பதும் அதிசயமல்ல.

ஏதாவது ஒரு கொள்கை பரவ வேண்டுமானால் இக்கொள்கையில் நம்பிக்கை கொண்டவர்கள் இதற்கு இடையூறு செய்பவர்களால் அடக்குமுறைக்கு ஆளாக வேண்டியதும் அவசியமேயாகும். இந்தப் பிரச்சாரத்தைத் தடுக்க வேண்டுமென்ற கருத்தில் இவர்கள் வழக்கைக் கொண்டு வந்திருப்பதால் எப்படியாவது எனது வியாசத்தில் துவேஷம் வெறுப்பு பலாத்காரம் இருப்பதாகக் கற்பனை செய்து தீர வேண்டியவர்கள் ஆகிவிட்டார்கள். அந்தப்படிச் செய்யப்படும் கற்பனைகளால் நான் தண்டிக்கப்பட்டாலும் பொதுவாக என்மீது நம்பிக்கையும் நல்லெண்ணமும் உடையவர்களும், சிறப்பாக எனது கூட்டுப் பணித் தோழர்களும் தப்பான அபிப்பிராயம் கொள்ளக் கூடுமாதலால் அப்படிப்

பட்ட கற்பனைகளை மறுத்து, உண்மையை விளக்கிவிட வேண்டும் என்றே இந்த ஸ்டேட்மெண்ட்டைக் கொடுக்கக் கடமைப்பட்டவனாவேன்.

இதனால் பொது ஜனங்களுடைய கவனிப்பு இன்னும் அதிகமாவதோடு அவர்களது ஆதரவும் பெற நேர்ந்து கிளர்ச்சிக்குப் பலம் ஏற்படக்கூடும். ஆதலால் என் மீது சுமத்தப்பட்ட இவ்வழக்கில் ஒரு ஸ்டேட்மெண்ட்டை மாத்திரம் கொடுத்துவிட்டு, எதிர் வழக்காடாமல், இப்போது கிடைக்கப் போகும் தண்டனையை மகிழ்ச்சியோடு வரவேற்கின்றேன்.

இந்நிலையில் சர்க்கார் என்னைத் தண்டித்தாலும் சரி, அல்லது இந்தப் பிராதுக்குப் போதிய ஆதாரமில்லையென்று நியாயத்தையும் சட்டத்தையும் இலட்சியம் செய்து, வழக்கைத் தள்ளிவிட்டாலும் சரி, இப்படிப்பட்ட அடக்கு முறையை வரவேற்குமாறு எனது தோழர்களுக்கு வழி காட்ட எனக்குக் கிடைத்த சந்தர்ப்பத்தைப் பற்றி மகிழ்ச்சியடைகின்றேன்.''

இந்த வழக்கையொட்டிப் பெரியார் கோவைச் சிறையில் அடைக்கப்பட்டிருந்தார். பக்கத்து அறையில் இராஜாஜி இருந்தார். ஜெயிலைப் பற்றிப் பெரியாரின் பொதுவான கருத்து அவர் வாய் மொழியாகவே:—''ஜெயில் என்பது ஒரு பூச்சாண்டி. ஜெயிலுக்குப் போன பலர் தங்கள் தரத்துக்கு மேல் வாழ்வும் சுகமும் அனுபவித்தவர்களாகவே இருப்பார்கள். நான் ஜெயிலுக்குப் போன சுமார் 19 முறைகளில் 4 தரம் A, B கிளாஸ் ஏற்படாத, C கிளாஸ் கைதியாக மண் சட்டியிலே கஞ்சியும் சோற்று மொத்தையும் வாங்கிக் கல்லையும் புழுவையும் பொறுக்கி எறிந்துவிட்டுச் சாப்பிட்டவன். இன்று காங்கிரசில் அப்படிப்பட்டவர் ஒருவர் கூட இல்லை (18–8–1961)

இராஜாஜி அவர்களின் பக்கத்து அறையில், நான் கம்யூனிஸ்ட் பிரச்சாரம் செய்ததற்காக சுயமரியாதைக் கைதியாக இருந்தபோது அங்கிருந்த காங்கிரஸ் தோழர்கள் தாங்கள் உள்ளே இருக்கிறோமே என்று கருதி மனக்

குறைபட்டிருப்பார்களே ஒழிய, மற்றபடி வீடு போன்ற சகல வசதிகளுடன், ஒரு நாளைக்குப் பொங்கல், ஒரு நாளைக்குத் தத்தியோதனம், அக்காரவடிசில் (சர்க்கரைப் பொங்கல்) பாயசம், பலகாரம் முதலிய நல்ல உணவுடன் தான் இருந்தார்கள். எனக்குக்கூட அதில் நல்ல பங்கு கிடைத்தது. ஜெயிலுக்குப் போனதற்காகவே காங்கிரசில் ஒருவர் கூடச் சாகவில்லை. என் இயக்கத்தில் 10, 15 பேர் செத்தார்கள்!

ஆகையால் ஜெயிலுக்குப் போனதே யோக்கியதாம்சம் என்றால் அது மூன்றாம் தர யோக்கியதாம்சம் என்று மறுபடியும் சொல்கிறேன். ஜெயிலுக்குப் போகாத பார்ப்பனர்—காங்கிரசையும் காந்தியாரையும் ஆபாசமாய் வைத பார்ப்பனர்கள்—எத்தனை பேர் காங்கிரஸ் ஆட்சியில் பதவி வகிக்கிறார்கள்!"

இந்த வழக்கை ஒட்டிச் சிறையிலிருந்துவந்த காலத்தில், கோவைச் சிறையில் முன்பே அடைக்கப்பட்டிருந்த இராஜாஜியைப் பெரியார் சந்திக்க நேர்ந்தது. எந்த வகையிலேனும் பெரியாரை மீண்டும் காங்கிரசுக்குள் வளைத்துப் போடவேண்டும் என்ற பேரவா இராசகோபாலாச்சாரியாருக்கு! தந்திரமாகவும், சாமர்த்தியமாகவும் பேசத் துவங்கினார். பொதுவான வேலைத் திட்டம் ஒன்று தயாரிக்கப்பட்டது. முதலாவதாகக், கடவுள், மத எதிர்ப்புப் பிரச்சாரத்தைப் பொது மேடைகளில் கலவாமல் தனிப்பட்ட கொள்கையாக அவரவர் கடைப்பிடிப்பது; இரண்டாவது, அரசுப் பதவி, அலுவல்களில் வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவ முறை அமல் செய்யப்பட வேண்டும் என்பது. காந்தியாரிடம் கலந்து பேசி வருவதாகக் கூறிய ராஜாஜி, பின்னர், காந்தியார் வகுப்பு வாரி உரிமை விவகாரத்தை ஒப்புக் கொள்ளவில்லை என்பதாகவும், ஆனால் பெரியார் காங்கிரசுக்குத் திரும்பிடவேண்டும் என விரும்பியதாகவும் தெரிவித்தார். உண்மையில் ஆர். கே. சண்முகம் இல்லத்தில் காந்தியடிகள் தங்கியிருந்த போது, அங்கே சந்தித்த இராஜாஜிதான் வஞ்சகமாகக், காந்தியடிகள் இத்திட்டத்தை

ஏற்காதவாறு செய்தார், என்று ஒரு செய்தி பரவியது. நெருப்பில்லாமல் புகையாதல்லவா?

காங்கிரஸ் கட்சி பெரியாரின் ஈரோடு வேலைத் திட்டத்தை ஏற்றுக் கொள்ள மறுக்கிறது என்பது தெளிவு படுத்தப்பட்டுவிட்டது. அதனால் தமது திட்டத்தைப் பெரியார் நீதிக்கட்சிக்கு அனுப்பி வைத்தார். உழுவோர் கடன் தொல்லையால் அவதிப்படாமல், லேவா தேவிக் காரரிடமிருந்து காப்பாற்றப்படக் கூட்டுறவு வங்கிகள் ஏற்படுத்தல்; சொத்துகளை பெனமி பெயரில் எழுதுவோர் வழக்காட முடியாமல் சட்டம் இயற்றுதல்; உழவர்க்கும் வணிகர்க்கும் இடையே தரகர் சுரண்டாவண்ணம் அரசு சார்பில் அமைப்புகள் உண்டாக்குதல்; இன்ஷ்யூரன்ஸ் தொழிலை அரசே மேற்கொள்ளல்; தொழிலாளர்-மற்றும் பொதுமக்களின் வருவாய் பெருகிட வகை கசெய்தல்; எல்லா மக்களுக்கும் கட்டாயமாக ஆரம்பக் கல்வி தருதல்; மதுவை ஒழித்தல்; தீண்டாமை, மற்றும் பிறவியால் உயர்வது, சமூகத்தில் மூடநம்பிக்கை பெருகுவது ஆகியவற்றைச் சட்ட மூலமாக ஒழித்தல்; வகுப்பு வாரிப் பிரதி நிதித்துவ முறையை ஏற்படுத்தல்; நிலவரி, நிலத்தின் அளவுக்குத் தக்க வாறு, படிப்படியே உயர்த்தப்படுதல்; உள்ளாட்சி அமைப்பு களுக்கு அதிக அதிகாரம் வழங்கி, அரசு மேற்பார்வையில் நடத்துதல்; அரசு நிர்வாகச் செலவைக் குறைத்தல்— ஆகியவை ஈரோடு வேலைத் திட்டத்தின் முக்கிய அம்சங்கள். நாற்பத்தைந்து ஆண்டுகட்கு முன் இவை எவ்வளவு புரட்சிகரமானவை? இப்போது இவற்றில் யாவுமே நடைமுறைக்கு வந்துவிட்டன, பெரியாரின் விருப் பத்திற்கேற்ப.

1934 செப்டம்பர் 29, 30-ல் சென்னையில் நடந்த நீதிக் கட்சி மாநாட்டில், பெரியாரின் ஈரோடு வேலைத் திட்டம் பரிசீலனைக்கு வந்தது. நீதிக் கட்சியினைத் தோற்றுவித்த டாக்டர் டி.எம்.நாயர் 1919-ஆம் ஆண்டிலும், சர் பி. தியாக ராயர் 1925-ஆம் ஆண்டிலும் மறைந்தார்கள். இப்போது கட்சியின் தலைமைப் பீடத்தில் பொப்பிலி அரசர் வீற்றி

ருந்தார். 1932 முதல் 1937 வரை இவர் சென்னை மகாண முதலமைச்சராகப் பொறுப்பிலிருந்தார். பெரியாரிடத்தில் அளவற்ற மதிப்பும் நம்பிக்கையும் இவர் கொண்டிருந்தவர்.

இதை நன்கு அறிந்து வைத்திருந்ததால்தான் பெரியார், தம்மை ஈரோட்டில் வந்து சந்தித்து உரையாடி மகிழ்ந்த ஜெயப்பிரகாச நாராயணன் எவ்வளவோ வேண்டியும், காங் கிரசில் மீண்டும் சேர மறுத்து விட்டார்!

ஒரு குழுவினை அமைத்து, ஈரோடு வேலை திட்டத் தைப்பற்றி ஆராயுமாறு பொப்பிலி அரசர் பணித்தார். திட்டத்தை எப்படியும் ஒப்புக் கொள்வதாகப் பெரியா ரிடமும் வாக்களித்தார். 1934-ல் டெல்லியிலுள்ள இந்திய சட்டமன்றத்துக்கு நடைபெற்ற தேர்தலில் நீதிக்கட்சியை ஆதரிக்குமாறு பெரியாரிடம் வேண்டினார். பெரியாரும் ஏற்றுக்கொண்டு, தீவிரமான தேர்தல் , பிரச்சாரத்தில் இறங்கினார்.

1920-ல் சுயராஜ்ய நிதி 1 கோடி ரூபாய், 1926-27ல் கதர் நிதி 30 லட்சம் ரூபாய், 1934-ல் அரிசன நிதி 30 லட்சம் ரூபாய் வசூலித்துப் பார்ப்பன ஆதிக்கத்துக்கும் தேர்தலுக்கும் காந்தி யார் செலவிட்டதாகப் பெரியார் இந்த நேரத்தில், குற்றம் சுமத்திப் பேசி வந்தார்.

பெரியார் முதன் முதலில் 1934-ல் நீதிக் கட்சியைத் தேர்தலில் ஆதரித்து வெளிப்படையாகப் பிரச்சாரம் செய் தார். அக்டோபர் 12-ம் நாள் கோயமுத்தூர் டவுன் ஹாலில் சொற்பொழிவாற்றினார். மேல்நாட்டுப் பாணி யில் கூட்ட இறுதியில் கேள்விகளுக்குப் பதில் அளித்தார். பெரியாரின் வாதத்திறனும் கூர்ந்தமதியும் இங்கு வெளிப் படக் காணலாம்:

**கேள்வி :** ஜஸ்டிஸ் கட்சி உத்தியோக வேட்டைக் கட்சி யாயிற்றே; அதை நீங்கள் ஆதரிக்கலாமா?

**பதில் :** ஆம்; ஜஸ்டிஸ் கட்சி உத்தியோக வேட்டைக் கட்சிதான். ஆனால் காங்கிரஸ்காரர்கள் 30,40 வருட கால மாய் ஆடி வந்த உத்தியோக வேட்டையைத்தான், ஜஸ்டிஸ் கட்சிக்காரர்கள் வேட்டையாடிப் பிடிக்கிறார்களே தவிர

வேறில்லை, ஆனால், காங்கிரஸ் காரியதரிசிகள், காங்கிரஸ் பிரமுகர்கள், தேசாபிமானிகள் ஆகிய சர் சி. பி. இராமசாமி அய்யர், கே. சீனிவாச அய்யங்கார். வி. கிருஷ்ணசாமி அய்யர், சர் பி. எஸ். சிவசாமி அய்யர், மகாகனம் வி. எஸ். சீனிவாச சாஸ்திரிகள் முதலியவர்கள் ஆடிய வேட்டைகளைத்தான் ஆடுகிறார்களே ஒழிய—அவர்கள் வாங்கிய சம்பளத்தைத்தான் வாங்குகிறார்களே ஒழியப்—புதிய வேட்டை ஒன்றுமில்லை; அதிகச் சம்பளமும் இல்லை.

காங்கிரஸ், பார்ப்பனர்களுக்கே உத்தியோகம், படிப்பு முதலியவை இருக்கும்படிப் பார்த்து வந்தது; ஜஸ்டிஸ் கட்சி பார்ப்பனருக்கும், பார்ப்பனரல்லாதாருக்கும் இருக்கும்படிப் பார்த்து வருகிறது! எல்லா உத்தியோகங்களுக்கும், எல்லாப் பதவிகளுக்கும் பார்ப்பனரல்லாதாருக்கும் லாயக்கும் உரிமையும் உண்டு என்பதைச் செய்து காட்டி, மெய்ப்பித்து வருகின்றது!

**கேள்வி :** உத்தியோகந்தான் பெரிதா?

**பதில் :** ஆம்; இதுவரை தேசாபிமானிகள், காங்கிரஸ் காரர்கள், தேசிய வீரர்கள் என்பவர்கள் பெரிதும் உத்தியோகத்தை இலட்சியமாகக் கொண்டுதான் உழைத்து வந்திருக்கிறார்கள். இப்போது பார்ப்பனரல்லாதார் அந்தக் கொள்கையைக் கொண்டவுடன், பார்ப்பனர்கள் அதைத் தேசத்துரோகமென்று சொல்ல வந்துவிட்டார்கள்!

ஒருவன் பாடுபட்டும் பட்டினியாய்க் கிடப்பதும், ஒருவன் பாடுபடாமல் வயிறுபுடைக்கத் தின்று புரளுவதும், ஒருவன் பல வேலைகளைக் கைப்பற்றித் தனது தேவைக்கு மேல் பயனடைந்து பாழாக்க, ஒருவன் செய்வதற்குக்கூட வேலையில்லாமல் திண்டாடித் தெருவில் திரிய—இவைகளுக்கு வகுப்பு ஆதிக்கமும், வகுப்பு வித்தியாசமும் காரணமாயிருப்பதென்றால், இவற்றை எப்படிச் சகித்துக்கொண்டு, வகுப்பைப் பற்றியே கவலையில்லாத ஒரு தேசாபிமானத்தை ஆதரிக்க முடியுமென்று கேட்கிறேன்!

ஜஸ்டிஸ் கட்சியை நான் ஆதரிப்பதைக் கண்டு நீங்கள் வயிற்றெரிச்சல் படுவதில் பயனொன்றுமில்லை. அது தைரிய

மாய் வகுப்பு நியாயத்தையும்,வகுப்பு உத்தியோகங்களையும் நிலை நாட்டி; உயர்வு தாழ்வுகளை ஒழிக்கச் சட்டம் செய்வதையும்,வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தை அமுல் நடத்துவதையும் கொள்கையாகக் கொண்டு, வேலை செய்து வருகின்றது.

ஜஸ்டிஸ் கட்சியின் யோக்கியதையும் காங்கிரசின் யோக்கியதையும் நாணயமாய் வெளியாக வேண்டுமானால், கம்பளிபோட்டு எல்லோரும் உட்கார்ந்து, ஒரு பொது நியாயாதிபதியை வைத்து, இருவரும் பேசுவோம்! ஜஸ்டிஸ் கட்சியின் அக்கிரமங்களை நாணயத் தவறுதல்களை நீங்கள் சொல்லுங்கள். காங்கிரஸ்–பார்ப்பனர் அக்கிரமங்களை, மோசங்களை நாணயத் தவறுதல்களை நானும் சொல்கிறேன். யார் சொல்வது சரி என்று முடிவு செய்யட்டும்! இந்த நாட்டுப் பார்ப்பனர்களுடையவும், பார்ப்பனியத்தினுடையவும், காங்கிரசினுடையவும், அரசியலினுடையவும், தேசாபிமானத்தினுடையவும் 30, 40 வருஷத்திய வண்டவாளமும், கொடிவழிப் பட்டியும் என்னிடமிருக்கிறதே ஒழிய, நான் வெறும் ஆள் என்று மாத்திரம் கருதிக் கூப்பாடு போட்டு, மிரட்டி ஓட்டி விடலாமென்று நினைத்து ஏமாந்து போகாதீர்கள்!

நான் மொட்டைமரம்; என்னை மிரட்டுவதற்கு உங்களிடம் சரக்கு கிடையாது! உத்தியோகமோ, பணமோ, வயிற்றுச்சோற்றுக்கு வழியோ, ஒரு கவுரவமோ, பெருமையோ எதிர்பார்த்து நான் பொதுச் சேவையில் இறங்கவில்லை! நான் 6, 7, முறை ஜெயில் பார்த்தாகிவிட்டது; சிவில், கிரிமினல் இரண்டும் பார்த்தாகி விட்டது; பார்ப்பனர்கள் தொல்லைகளையும், அவர்களால் கூடிய மட்டிலும் செய்து பார்த்தாய் விட்டதை, அனுபவித்துமாய் விட்டது! காடு வா வா என்கிறது; வீடு போ போ என்கிறது! (இதற்கப்புறம் 40 ஆண்டுகள் பெரியார் வாழ்ந்திருக்கிறாரே!) நான் செத்தால் எனக்காக அழுபவர்கள்கூட யாருமில்லை! என்னால் காப்பாற்றப்பட வேண்டியவர்களும் எவருமில்லை! நான் ஒற்றை ஆள்! நின்ற நாளைக்கு நெடுஞ்சுவர்; விழுந்

தால் குட்டிச்சுவர்! முழுகிப்போவது ஒன்றுமில்லை; எலெக்ஷன் முடிந்த எட்டாம் நாள் நான் அரசாங்க விருந்தாளியாய்ப் போகப்போகிறேன்!

**கேள்வி :** அப்படியானால் நீங்கள் ஏன் காங்கிரசில் சேரக்கூடாது?

**பதில் :** சேருவதற்குச் சமயம் பார்த்துக் கொண்டு தானிருக்கிறேன். இந்த பம்பாய் காங்கிரசில் தோழர் காந்தியவர்கள் விலகிப்போய் விடுவதாகச் சொல்லுகிறாராம். அப்படி அவர் விலகி விடுவாரானாலும், எனது திட்டங்களை ஜஸ்டிஸ் கட்சி ஒப்புக் கொள்ளவில்லையானாலும், நான் காங்கிரசில் சேர்ந்து, எனது திட்டத்தை நடத்த, முயற்சி செய்ய உத்தேசித்திருக்கிறேன்.

இன்று இரவு 8 மணிக்கு, இந்தக் கூட்டத்தை முடித்துக் கொண்டு, ஒரு விருந்துக்கு வருவதாக ஒப்புக்கொண்டு இருக்கிறேன். மணி 8-30 ஆகிவிட்டது. இனியும் கேள்விகள் இருந்தால் கேட்கலாம். இன்னும் 15 நிமிஷம் இங்கிருக்க ஆட்சேபனை இல்லை!—

பெரியார் சிறிது நேரம் நின்று கொண்டு, கேள்விகளை எதிர்பார்த்தார். யாரும் கேட்க முன்வராததால் "இத்துடன் கூட்டத்தை முடித்து விடுகிறேன்" என்றார்!

இந்தத் தேர்தலில் காங்கிரஸ் கட்சியும் நேரடியாகப் போட்டியிட்டது முதல் முறையாக! தேர்தலில் போட்டியிட்ட ஆர். கே. சண்முகம், ஏ. இராமசாமி போன்ற பிரமுகர்கள், நீதிக் கட்சிக்குத் தோல்வியையே பெற்றுத் தந்தனர். காங்கிரஸ் கணிசமான வெற்றிகள் பெற்றது.

இந்தத் தோல்வியால் துவண்டுபோன நீதிக் கட்சியினர்க்கும், சுயமரியாதை இயக்கத் தோழர்களுக்கும், புத்துணர்ச்சியும் உத்வேகமும் புகுத்தித், தென்பினைப் பாய்ச்சி அன்பினைச் சொரிந்த பெரியார், எதிர்காலத்தில் தமது திட்டங்களைச் செயல்படுத்திட நீதிக்கட்சியையே கருவியாகப் பயன்படுத்தப் போவதாகவும், அதுதான் வெற்றி யளிக்குமென்றும் திடமாக நம்பிக்கை தெரிவித்து வந்தார். உண்மைதானே?

ஈரோட்டில் குடியரசுப் பதிப்பகம் நிறைய நூல்களை வெளியிட்டு வந்தது. சாத்தான்குளம் இராகவன் வந்து பெரியாருக்கு உதவியாயிருந்தார்; மேலும் புத்தகங்கள் வெளியாக்கப் பகுத்தறிவு நூற்பதிப்புக் கழகமும் நிறுவப் பட்டிருந்தது. இதன் வாயிலாகவும் எண்ணற்ற, பயனுள்ள நூல்கள் பதிப்பிக்கப் பெற்றன. மிகக் குறைவான, அடக்க விலையில், பெரியார் நூல்களை வெளியிட்டுவந்தார். இந்த இரண்டு நூல்வெளியீட்டு அமைப்புகளின் சார்பிலும் பெரி யார் எழுதிய கர்ப்ப ஆட்சி, புராண ஆபாசம், பார்ப்பனக் கொடுமை, பெரியாரின் பல உபந்யாசங்கள்(சொற்பொழிவு கள்), சோஷலிசம், சோதிடப்புரட்டு, பொதுவுடைமைத் தத்துவம், பெண்ணடிமை, பிரகிருதிவாதம், மதம் என்பும் என்ன; மற்றவர் எழுதிய ஞானசூரியன், இராமாயணப் பாத் திரங்கள், பாரத ஆபாசம் என்பன போன்ற தலைப்புகளில் வெளியான கணக்கில்லாப் புத்தகங்கள் நன்றாக விற்பனை ஆயின. பெரியார் சுற்றுப்பயணம் செல்கின்ற நேரங்களில் பிரம்பு, கைப்பெட்டி, படுக்கை (ஹோல்டால்) இவற்றோடு இரண்டு மூன்று சிப்பங்கள் இப்புத்தகங்களையும் சுமந்து ரயிலுக்குச் செல்வார். ஆங்காங்கு கூட்டங்களிலும், மாநாடு களிலும் உரையாற்றுகையில், இடையிடையே இந்தப் புத் தகங்களின் சிறப்புகளையும் கருத்துகளையும் பற்றி விவரித்து, விலைசகாயத்தையும் எடுத்துக்காட்டி, விளம்பரம் செய்து, நூல்களை விற்பனை செய்வார். இறுதி நாள்வரை இந்த வழக்கம் பெரியாரிடம் தொடர்ந்தது!

இந்தப் பதிப்பகங்கள் இரண்டும் அரசாங்கத்தால் தீவிர மாகக் கண்காணிக்கப்பட்டு வந்தன. பல புத்தகங்களை அரசு பறிமுதல் செய்தது. சிலவற்றைத் தடைசெய்தது. "குடியரசு" இதழ்மீது 1933-ல் வழக்குத் தொடுத்துப், பெரி யாருக்கு 9 மாதம் சிறைத்தண்டனை; 300 ரூபாய் அபராதம்; செலுத்தத் தவறினால் 1 மாத சிறை. தங்கை கண்ணம் மாளுக்கு 6 மாத சிறைத் தண்டனை; 100 ரூபாய் அபராதம்; செலுத்தத்தவறினால் 1 மாதசிறை; அதே போன்று 1935-ல் பத்திரிகைக்கு மீண்டும் ஜாமீன் கேட்கப்பட்டது. நான் ஏன்

நாஸ்திகன் ஆனேன் என்ற புத்தகமும் பறிமுதல் செய்யப்பட்டது. இது புரட்சி வீரர் பகத்சிங் அவர்களால் தமது தந்தைக்குக் கடிதமாக எழுதப்பட்டுத், தோழர் ப. ஜீவானந்தம் தமிழில் மொழிபெயர்த்தது. இதனை எழுதியதற்காக ஜீவாவும், உண்மை விளக்கம் அச்சகத்தில் பதிப்பித்ததற்காக ஈ. வெ. கிருஷ்ணசாமியும் கைது செய்யப்பட்டனர்.

ஒரு காலகட்டத்தில் பெரியார், அரசுக்குத் தம்மீதும் இயக்கத்தின் மீதும் தப்பபிப்பிராயம் ஏற்பட்டதை அறிந்து, அதனைப் போக்க, ஒரு ராஜி பேச நேரிட்டது. இது கேவலமல்ல என்ற எண்ணந்தான் பெரியாருக்கு. அதற்கு ஆதரவாகப் பெரியார் என்ன எழுதினார்:— "உண்மை விளக்கம் பிரஸ் பதிப்பாசிரியரான தோழர் ஈ. வெ. கிருஷ்ணசாமி அவர்கள் மீதும், தோழர் ப. ஜீவானந்தம் அவர்கள் மீதும், காலஞ்சென்ற பகத்சிங்கால் எழுதப்பட்ட 'நான் ஏன் நாத்திகன் ஆனேன்?' என்ற புத்தகத்தை—முறையே பிரசுரித்ததற்காகவும், மொழி பெயர்த்ததற்காகவும், இந்தியன் பினல் கோட் 124-A செக்ஷன்படி, இராஜத்துவேஷக் குற்றம் சாட்டிக், கைதியாக்கிச் சிறையில் வைத்து, வழக்குத் தொடர்ந்திருந்தது வாசகர்கள் அறிந்திருந்ததாகும்! அவ்வழக்கு; மேற்கண்ட இருதோழர்களாலும் இராஜத்துவேஷத்தை உண்டாக்கவோ, அதைப்பிரச்சாரம்செய்யவோ எண்ணங்கொண்டு அப்புத்தகம் பிரசுரிக்கப்படவில்லை என்று அரசாங்கத்திற்குத் தெரிவித்து, இராஜத்துவேஷம் என்று கருதத் தகுந்த காரியங்கள் பதிப்பிக்கப்பட்டுவிட்டதற்காக மன்னிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டதன் பேரில்—அரசாங்கத்தார் வழக்கை வாபஸ் வாங்கிக்கொண்டு ஈ. வே. கி., ப. ஜீ., ஆகியவர்களை விடுதலை செய்துவிட்டார்கள்.

இந்தப்படி இந்த இரண்டு தோழர்களும் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு விடுதலை அடைந்தார்கள் என்பதற்கு அவர்களே முழு ஜவாப்தாரிகள் அல்லர் என்பதையும், பெரும்பான்மையான அளவுக்கு நானே ஜவாப்தாரி என்பதையும் முதலில் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இந்த மன்

னிப்பு எழுதிக் கொடுக்கப்பட்டதும், அதைச் சர்க்கார் ஏற்றுக்கொண்டதும், ஆகிய இரண்டு காரியங்களும் மிகுதியும் இந்தக் கேசையே பொறுத்தது மத்திரமல்ல என்பது இதில் முக்கிய விஷயமாகும். விளக்கமாகச் சொல்ல வேண்டுமானால், சுயமரியாதை இயக்கத்தைப் பற்றிச் சர்க்கார் மனத்தில் எப்படியோ தப்பபிப்பிராயம் ஏற்பட்டு, எப்படியாவது அடக்கி அழித்துவிடவேண்டும் என்று தீர்மானித்து விட்டார்கள் என்பதாக, நான் கொஞ்ச நாளைக்கு முன்பே தெரிந்து கொண்டேன்!

நம் சுயமரியாதை இயக்கம் சமுகத் துறையிலுள்ள குறைகளை நிவர்த்திப்பதற்கென்றே ஆரம்பிக்கப்பட்டு நடைபெற்று வந்ததும், சர்க்கார் அதிகாரிகள் முதல் அநேக செல்வவான்களும் நமது இயக்கத்தில் கலந்து வேலைசெய்து வந்ததும் எவரும் அறியாததல்ல! ஆனால், சிறிது காலம் சென்றபின், மக்களுக்குள்ள சமுதாயக் கொடுமைகள் தீர வேண்டியது எவ்வளவு அவசியமோ, அதுபோலவே, மக்களுக்குள்ள பொருளாதாரக் கொடுமையும் தீரவேண்டியது மிகவும் அவசியமென்று கருதியதால்,பொருளாதார சம்பந்தமாக நாம் சிறிது பிரச்சாரம் செய்ய ஆரம்பித்தோம். என்றாலும், அரசாங்கத்தார் தப்பபிப்பிராயத்தைக் கொண்டு, இயக்கத்தைஅடக்க அடக்குமுறைப் பிரயோகம் ஆரம்பித்து விட்டார்கள் என்று உணர்கிறேன். எனக்கு ரஷ்யாவிலிருந்து பணம் வருவதாகவும், நான் ரஷ்ய ஒற்றனென்றும் சந்தேகப்பட்டதால், எனக்கு ரஷ்யாவோடு எந்தச் சம்பந்தமும் இல்லை என்பதை அதிகாரிகளிடம் விளக்க வேண்டி வந்தது.

அதனால் ஓரளவுக்கு சர்க்காருடன் ராஜி ஏற்படுத்தி கொள்ளலாம் என்கின்ற ஆசையின்மீதே, பொருளாதார விஷயத்தில் சமதர்மக் கொள்கையைப் பிரச்சாரம் செய்வதில் சர்க்காருக்கு ஆட்சேபனை இல்லை என்றும், சாதி, மத சம்பந்தமான விஷயங்களில் வேறு சாதிக்காரர்கள் மனம் புண்படும்படியோ,அவமானம்ஏற்படும்படியோ என்று இல்லாமல், சாதிமதக் கண்டனங்கள் செய்து கொள்ளலாம் என்றும் முடிவுக்கு வந்தோம். சர்க்காரோடு இந்த மாதிரியான ஒரு

சமாதான முடிவுக்கு வராதபட்சம், சர்க்காருக்கும் நமக்கும் வீண்தொந்தரவும், மனக்கசப்பும் ஏற்பட்டுத்தீரும் என்கின்ற நிலையில், மற்ற ஆதாரங்களும், முயற்சிகளும், நிலைமைகளும் இருந்ததால், நான் இந்தச் சமாதானத்துக்கு வரவேண்டியதாயிற்று. ஆகவே, இதன் பலன் என்னவானாலும், இதற்குநானே பொறுப்பாளி என்றுதான் சொல்லவேண்டும்.

சில இளைஞர்களுக்கு இது கேவலமானதாகத் தோன்றலாம். என்றாலும், நம் இயக்க சம்பந்தமாக நமது கொள்கைகளிலோ, திட்டங்களிலோ எதையும் விட்டுக் கொடுத்துச் சமாதானம் செய்து கொண்டதாக எனக்குப் படவில்லை. சுயமரியாதை இயக்கம் சட்ட வரம்புக்கு உட்பட்ட இயக்கம் அல்லவா!

ஊரார் என்ன சொல்லுவார்கள், எதிரிகள் என்ன சொல்லுவார்கள் என்பதையே முக்கிய குறிப்பாய் வைத்து அதற்கு அடிமையாகி, மாற்றங்கள் செய்வதானால் மாத்திரம், அவற்றுக்கு அதிக ஆயுள் இருக்குமென்று கருதமுடியாதே தவிர, மற்றபடி உண்மையும் துணிவும் உள்ள காரியத்தில், எவருக்கும் யாரும் பயப்பட வேண்டியதில்லை என்றே கருதுகிறேன்!'' (குடி அரசு 31.3.1935)

அடிக்கடி அரசின் அடக்கு முறைகளுக்கு உள்ளாக நேரிட்டதால், அவ்வப்போது பல பத்திரிகைகளை மாற்றி மாற்றிப் பெரியார் நடத்தி வந்தார். 1933-ல் "புரட்சி" வார இதழ், 1934-ல் "பகுத்தறிவு" வார இதழ், 1934-ல் "பகுத்தறிவு" நாளேடு, 1935-ல் "பகுத்தறிவு" மாத இதழ்— இப்படியாகப் பலப்பல.

கருத்துச் சுரங்கமான பெரியார், தமிழ் நாட்டில் அடிப்படைக் கல்வி அகலமாகப் பரவாத காரணத்தை ஆழ்ந்து சிந்தித்து வந்தார். மனுதர்மப்படி சூத்திரன் கல்வி கற்கக் கூடாது; உடலுழைப்பு மட்டுமே செய்ய வேண்டும் என்ற சூழ்ச்சி ஒரு புறம், மக்களின் வறுமை நிலையில் அன்றாடம் வாய்க்கும் கைக்குமே போராட்டம் என்னும் நிலை இன்னொரு புறம் பாதித்தாலும், தமிழ் மொழியிலுள்ள பெருத்த குறைபாடு அதன் நெடுங்கணக்கிலுள்ள ஏரான

மான எழுத்து வடிவங்களே என்பது பெரியாரின் ஆராய்ச்சி முடிபாகும். இப்போதுள்ள தமிழ் எழுத்து முறை எவ்வளவோ மாறுதல்களைக் கண்டு வந்துள்ளது என்பது, கல்வெட்டு எழுத்துகளை ஊன்றிப் பார்த்தால் விளங்கும். வீரமாமுனிவர் எனும் பெஸ்கி பாதிரியார் கடைசியாகச் சில மாற்றங்கள் செய்துள்ளார். அதே போல், உயிர் 12, ஆய்தம் 1, மெய் 18, உயிர்மெய் 216 ஆகிய இத்தனை வடிவங்களை இளம் நெஞ்சங்களில் பதிய வைப்பது என்பதற்குப் பதிலாக, இந்த எழுத்து வடிவங்களில் சிலவற்றை நாமும் குறைக்கலாமே என்று பெரியார் சிந்தித்தார். அதன் விளைவாக ஊ, ஞ, ரு என்பனவற்றிற்கு ணா, னா, றா என்றும்; ணொ,னொ, றொ என்பனவற்றிற்கு ணொ, னொ றொ என்றும்; ணோ, னோ, றோ என்பன வற்றிற்கு ணோ, னோ, றோ என்றும் ணை, னை, லை, ளை என்பனவற்றிற்கு ணை, னை, லை, ளை என்றும் பதின்மூன்று எழுத்து வடிவங்களை மாற்றியமைத்தார். 1935-ஆம் ஆண்டு சனவரி 13-ஆம் நாள் முதல் நடைமுறைப் படுத்தித் தமது பத்திரிகைகளிலும் புத்தகங்களிலும் தொடர்ந்து கையாண்டு வந்தார்.

இன்றும் இதேமுறை திராவிடர்கழகத்தில் தொடர்கிறது. இன்றையத் தமிழ்நாடு அரசு இந்த முறையை அனைவரும் கையாள வேண்டுமென அரசாணையும் பிறப்பித்துள்ளது பாராட்டுக்குரியதாகும்.

தட்டச்சுச் செய்யவும், அச்சுக் கோக்கவும் இம்மாற்றம் எளிதாக இருக்கும். மேலும், தமிழில் ஐ, ஔ ஆகிய இரு உயிரெழுத்துகளும், அவற்றின்மேல் மெய் சேர்ந்த 36 எழுத்துகளும் எழுத்து வடிவத்தில் தேவையில்லை. ஒலி வடிவத்திற்கேற்ப அய் என்றும், அவ் என்றும் எழுதிக் கொள்ளலாம் என்றும் பெரியார் விளக்கியுள்ளார். உயிர் 5, மெய் 15, ஆய்தம் 1, சிறப்புக்குறி 8, ஆக 29-ல் தமிழ் எழுத்து வடிவத்தை அடக்கலாம் என்றும் கூறியுள்ளார்.

இந்தக் காலகட்டத்தில், பெரியாரின் பொதுவுடைமைக் கருத்துகள் புதுமையாகப் புகுத்தப் பட்டதால், இயக்க மேடைகளிலும், மாநாடுகளிலும் சமுதாய சம்பந்தமான

கருத்துகளைவிட, அரசியல், பொருளாதார சம்பந்தமான இக்கருத்துகள் பெரும்பான்மையான இடத்தைப்பெற்றன. இவற்றுக்கான விளக்க மொழிகள், தெளிவுரைகள் மிகுதியும் பேசப்பட்டன. சுயமரியாதை இயக்கம் புது முறுக்கோடும், பொலிவோடும், வலிவோடும் வளர்ந்தோங்கிவரக் கண்ட ஆதிக்க புரியினரும் பாதிக்கப் படுவோரும், சென்னையிலுள்ள நீதிக்கட்சி ஆட்சி பெரியாருக்கு ஒத்துழைப்பதால், டெல்லியிலுள்ள மத்திய பிரிட்டிஷ் ஆட்சியின் துணையை நாடி, அடக்கி ஒடுக்கப் பல நடவடிக்கைகளை மேற்கொண்டனர். நுனிப்புல் மேயும் அவசரக்காரர்கள், மாகாண அரசுக்கும் பெரியாருக்கும் பகை மூண்டதாகக் கதை கட்டி விட்டனர் இந்த உண்மை புரியாமல்!

இந்நிலையில் சுயமரியாதை இயக்கம் இதுவரை ஆற்றி வந்த அரும்பணிகள் பாழாகிப், பெரும் இழப்புக்கு உள்ளாகி, அடக்கி ஒடுக்கப் படுமோ என்ற அய்யுறவு, நலம் நாடுவோர் உள்ளத்தில் தோன்றியது. பெரியாரிடம் உண்மை நிலவரத்தை எடுத்துச் சொல்லி, விளக்கமாக ஓர் அறிக்கை விடுத்திட வேண்டினர். அதற்கிசைந்து 1935—மார்ச் 10-ஆம் நாள் "குடிஅரசு" இதழில் பெரியார் அறிவித்தார்:—"சுயமரியாதை இயக்கத்தின் அரசியல் கொள்கை—பார்ப்பன ஆதிக்கத்திலுள்ள காங்கிரசை ஒழிப்பது, இதற்காக மத்திய அரசுடன் ஒத்துழைப்பது; சமுதாயக் கொள்கை—சாதிமத பேதங்களை அகற்றுவது; மூடநம்பிக்கைகளை ஒழிப்பது; பொருளியல் கொள்கை சமதர்மம் ஆகும். இவைகளை மக்களிடையே பிரச்சாரம் செய்து அமுலுக்குக் கொண்டு வரும் செயல்கள் வெற்றி பெற வேண்டுமானால் என்னைப் பொறுத்த வரையில் காங்கிரஸ் ஆட்சியை விட பிரிட்டிஷ் ஆட்சியே மேல் என்பதாகும்."

காற்று காங்கிரசின் பக்கம் வீசத் தொடங்கியதால் பழுத்த மரத்தை நாடிய வவ்வால் மனிதர்கள் சிலர் இது பிரிட்டிஷ்காரரான அந்நியரை ஆதரிக்கும் போக்கு எனச் சாக்குக் கூறி வேற்றிடம்தேடினர். ஆனால் தமிழ் நாட்டைப் பொறுத்தவரை சுயமரியாதை இயக்கத்தின் திட்டங்களை

ஏற்று நடத்த முன்வந்த நீதிக் கட்சியும் கூடப் பெரியாரின் வலையில் வீழ்ந்து விட்டதாகவும், நாத்திக சமதர்ம மோசடியில் சிக்கியதாகவும் பழைமை வாதிகளின் குற்றச் சாட்டிற்கு உள்ளாயிற்று!

எது எவ்வாறாயினும், பெரியார்—நீதிக்கட்சி உறவு, பொப்பிலி அரசர் காலத்தில் வலுப் பெற்றது சரித்திர உண்மையாகும்!

ஏறத்தாழ இந்தக் கால கட்டத்திலேயேதான் வடநாட்டில் ஆதி திராவிட சமுதாயத்தில் பிறந்த ஒப்பற்ற மேதையும் ஈடிணையற்ற போராட்ட வீரருமான டாக்டர் அம்பேத்கார் தமது தாழ்த்தப் பட்ட மக்களின் உரிமைகள், சாதி இந்துக்களாலும், அரசியலில் காங்கிரஸ் கட்சியாலும், தொடர்ந்து நசுக்கப் படுவது கண்டு மனங் குமுறித் தாம் இஸ்லாத்தில் சேர்ந்து விடப் போவதாக அறிவித்தார். அது தெரிந்தவுடன் பெரியார், 1935 அக்டோபர் 20–ஆம் நாளிட்டுத் "தயவு செய்து அவசரமாக முஸ்லிம் மதத்துக்கு மாறி விடாதீர்கள்! உங்களவர்களில் குறைந்தது பத்தாயிரம் பேரையாவது முஸ்லிம் ஆக்கி விட்ட பிறகே நீங்க்ளும் இஸ்லாமாகுங்கள்" என்று தந்திச் செய்தி அனுப்பினார் பெரியார்.

எப்படி அதிரடி?

# 10. இணைந்தார்

**ஈரோடு திட்டம் ஏற்கப்பட்டது—நீதிக் கட்சிக்கே ஆதரவு—தேர்தல் தோல்வி—எல்லாம் நன்மைக்கே!—1935 முதல் 1937–வரை.**

---

சென்னை மாகாணத்தில் பிரிட்டிஷாரின் இரட்டை ஆட்சி முறை, நீதிக் கட்சி அரசுப் பொறுப்பேற்ற 1920-ஆம் ஆண்டு முதல் வெற்றிகரமாகச் செயல்பட்டு வந்தது. 1923 முதல் 1926 வரையில் முதன் மந்திரியாயிருந்த பனகல் அரசர் காலத்தில்தான் பெரியாரின் ஆதரவோடு, இந்து அற நிலையப் பாதுகாப்புச் சட்டம் கொண்டு வரப்பட்டது. ஜில்லா போர்டு, தாலுக்கா போர்டு என்னும் உள்ளாட்சி அமைப்பு முறைகள் மக்களாட்சி அடிப்படையில் பனகல் அரசரால்தான் நடைமுறைக்கு வந்தன. கிராமப்புற மருத்துவம், சாலை, விளக்கு, கல்வி அத்தனை வசதிகளும் செய்யப்பட்டன. அதனால் அப்போதெல்லாம் சுயமரியாதை இயக்கத்தைப் பெற்றெடுத்து விட்ட பெரியாரின் தார்மீக ஆதரவு நீதிக் கட்சிக்குத், தானே கிடைத்து வந்தது. பின்னர் நேரடியான நீதிக்கட்சி ஆட்சியாயிராமல், ஓரளவு ஆதரவு பெற்றுச் சுயேச்சையாகச் செயல்பட்ட டாக்டர் சுப்பராயன் அமைச்சரவை நான்காண்டுகள் பதவியில் இருந்தது.

இந்தக் காலத்தில் அமைச்சராயிருந்த சீர்காழி எஸ். முத்தையா முதலியார் முதன் முதலாகத் தமது இலாக்காவில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ முறையை அமுலாக்கி, அதன்படி அரசு உத்தியோகங்கள் அளிக்க முன்

வந்தார். பெரியார் தலைகால் புரியாத மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தார். பார்ப்பனரல்லாதார் இதற்காக நன்றி யுடன் நடந்து கொள்ள வேண்டுமானால், அவர்கள் வீட்டில் பிறக்கும் பிள்ளைகளுக்கு முத்தையா என்று பெயர் சூட்ட வேண்டும் என்கிற அளவுக்குச் சென்று, பாராட்டினார். பின்னர், நீதிக்கட்சி நேரடியாக ஆட்சிக்கு வந்தது. சித்தூர் வி. முனுசாமி நாயுடு முதல் மந்திரியாகவும், சர் பி.டி. இராசன், எஸ். குமாரசாமி ரெட்டியார் மந்திரிகளாகவும் விளங்கினர். 1930-முதல் 1932-வரையில் நீதிக்கட்சியின் தலைவராகவும் இருந்த முனுசாமி நாயுடு திறமையற்றவ ராகவே காணப்பட்டார். நீதிக் கட்சியிலுள்ளவர்களே அவர்மீது அருவெறுப்புற்றிருந்தனர். காரணம், அவர் சுய மரியாதை இயக்கத்தின்மீது வெறுப்புக் காட்டிக், காங்கிரஸ் மீது அனுதாபங் காட்டி வந்ததே!

1932—அக்டோபரில் தஞ்சையில் நடந்த நீதிக்கட்சி மாநாட்டில், அவரை அகற்றுவதற்குப் பெரியாருடைய ஆதரவை நாடினார் பொப்பிலி அரசர். சுயமரியாதை இயக்கத் தோழர்களின் பேருதவியினால் பொப்பிலி அரசர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, 1932 முதல் 1936 வரை யில் முதன்மந்திரிப் பதவியும் வகித்தார்; மற்ற இரு மந்திரிக ளாக முந்தைய இருவருமே நீடித்தனர்.

1935-ல் நீதிக்கட்சி, பெரியார் தந்த ஈரோடு வேலைத் திட்டத்தை முழுமையாக ஏற்றுக்கொண்டது. தாம் ஒரு ஜமீன்தாராயிருந்தும், நாட்டு மக்கள் நலனில் நீதிக்கட்சிக்கு உண்மையான அக்கறை உண்டு என நிரூபித்து நிலை நாட்டிக் "காண்பிக்கவே, பொப்பிலி அரசர் பெருமுயற்சி எடுத்துப் பெரியாரின் திட்டத்தை ஏற்றுக் கொண்டார். இதனால் வைதிகர்கள், பிரபுக்கள், பிரிட்டிஷ்காரர் ஆகிய முத்தரப்பினரின் எதிர்ப்பும் நீதிக்கட்சிக்குப் பரிசாகக் கிடைத்தது.

"பகுத்தறிவு" மாத இதழ் ஒன்றினைப் புத்தக வடிவில் பெரியார் துவங்கியிருந்தார். பண்டித முத்துசாமி, புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், ஜலகண்டபுரம் ப. கண்ணன் ஆகி

யோர் இதில் பயனுள்ள எழுத்துப்பணி புரிந்து வந்தனர். விஞ்ஞான ரீதியில் ஆராய்ச்சிப் பூர்வமான கட்டுரைகள், புராண இதிகாச மோசடிகளைப், புரட்டுகளை விளக்கும் கட்டுரைகள், சமூக சீர்திருத்தக் கதைகள், கவிதைகள் இதில் இடம் பெற்றன. இது சுமார் நான்காண்டுகள் நடைபெற்று வந்தது. 1934-ஆம் ஆண்டு பாரதிதாசன் எழுதிய இரணியன் அல்லது இணையற்ற வீரன் என்ற நாடகம் சென்னையில் அரங்கேறியபோது பெரியார் தலைமை தாங்கிக் கவிஞருக்குத் தங்கப் பதக்கம் வழங்கிப் பாராட்டினார். 1946-ஆம் ஆண்டில் அண்ணா முயற்சியால் சென்னையில் கவிஞருக்குப் பணமுடிப்பு வழங்கப்பட்டது.

> புதுவை புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பெரியாரின் கொள்கைகளை நூற்றுக்கு நூறு அப்படியே ஏற்றுக் கொண்டு அவற்றைக் கவிதை வடிவில் வெளியிட்டு வந்தார். இறுதிவரை அவர் இந்த நிலையிலிருந்து பிறழவில்லை. தேசியமும் ஆத்திகமும் கலந்தே பாடிய பாரதியின் சீடராயினும், இவர் நாத்திகரே. மிகப் பெரிய பரம்பரை ஒன்றை இவர் உருவாக்கி விட்டார். இவரால் கவிதையுலகில் செய்யப்பட்ட முதல் மாறுதல்கள் பெரிய திருப்பு முனையாய் நிற்கின்றன. அஞ்சா நெஞ்சமும் ஆழ்ந்தகன்ற பெரும் புலமையும் புதுமையான நோக்கும் கொண்ட இவர் உலக அளவில் தமக்கு நிகரற்ற நிலை பெற்றுவிட்ட கவிஞராவார். மாடுகளும் வழக்கத்தால் செக்கைச் சுற்றும், மடையர்களும் இயற்றிடுவார் கடவுட் பாடல் என்ற வரிகள் இவரது புரட்சி மனப்பாங்கைக் காட்டும். வயதில் அறிவில் முதியார் நாட்டின் வாய்மைப் போருக்கென்றும் இளையார்-உயர் எண்ணங்கள் மலரும் சோலை என்றார் பெரியாரைப்பற்றி. 1964-ஆம் ஆண்டு மறைந்தார் சாகா இலக்கியம் பல படைத்த பின்னர்!

நீதிக்கட்சி தமது திட்டத்தை ஏற்றுக் கொண்டதில் பெரியார் மிகுந்த பெருமிதமும் பூரிப்பும் கொண்டார். அவர் விரும்பியதும் அஃதேயாகும். காங்கிரஸ் புறக்கணித்ததையே பெரியார் பெருமையாகக் கருதினார். காரணம், காங்கிரஸ் பசுத்தோல் போர்த்திய புலி என்று, அதன் தோலுரித்துக் காட்டவே பெரியார் நேரம்

பார்த்திருந்தார். அதனால் 1937-ஆம் ஆண்டுத் தேர்தலில் காங்கிரஸ் பெருமளவில் ஈடுபட்டதைத் தனக்குச் சாதக மாக்கிக் கொண்டார். வெற்றி தோல்வி பற்றிய கவலை அவருக்கு எப்போதுமே இருப்பதில்லையாதலால், முழு மூச்சாக நீதிக்கட்சியை ஆதரித்துத் தேர்தல் பிரச்சார இயந்திரத்தை முடுக்கி விட்டார். 1938-ஆம் ஆண்டு வரை பெரியார் மதுவிலக்கை ஆதரித்துத்தான் வந்தார். கதர், கைராட்டை, கைத்தறி, இவற்றிலெல்லாம் அவர் நம்பிக்கை இழந்திருந்தார். மதச்சின்னங்களைப் போலவே கதரும் ஒரு மூடநம்பிக்கைச் சின்னம்; பொருளாதார அடிப்படையிலும் இலாபமில்லாமல், மனித உழைப்பை வீணாக்கிடும் ஒரு சாதனம்; இயந்திர யுகத்தில் தேவையில்லாத பழைய கட்டை வண்டிக் காலத் திட்டம்; இது கவைக்குதவாது என்று பெரியார் கருதினார்.

நாகம்மையார் மறைந்ததுபோது பெரியாருக்கு வயது 54. கடந்த இரண்டு மூன்று ஆண்டுகளில் பெரியார் ஈரோட்டில் தங்க நேர்ந்து, தமது தாயார் சின்னத்தாயம்மை யாரைச் சந்திக்க வாய்ப்பு ஏற்பட்டால், அந்த அம்மையார், ஈன்ற அன்னையென்ற பாசத்தோடும், தனது இளைய மகன் பயமறியாமல் கண்டபடி திரிவதால், மீண்டும் கால் கட்டுப் போட வேண்டும் என்ற வழக்கமான ஆசையோடும், திருமணம் செய்து கொள்ளத் தூண்டுவார். அப்பேர்ப்பட்ட சின்னத்தாயம்மையார் தமது 95-ஆவது வயது வரையில் நல்ல நிதானத்தோடும் நடமாட்டத்தோடும் (ஆகா! அப்படியே தந்தை பெரியாரை நினைவூட்டுகிறாரே!) வாழ்ந்து வந்தவர். 1936-ஆம் ஆண்டு ஜூலை 28-ஆம் நாள், நள்ளிரவு 12 மணிக்கு இயற்கை எய்தினார். ஜோலார்ப் பேட்டை சென்றிருந்த பெரியாருக்குச் செய்தி எட்டவே மறுநாள் வந்து சேர்ந்தார்.

தாயாரைப் பற்றிய சுருக்கமான வாழ்க்கை வர லாற்றைத் திருக்குறள் போல் இனிதாக எளிதாக 2-8-1936 "குடிஅரசு" இதழில் பெரியார் எழுதி வெளியிட்டுள்ளதைக் காணும்போது, இவ்வளவு அருமையான Biographer ஏன்

# 10. இணைந்தார்

**ஈரோடு திட்டம் ஏற்கப்பட்டது—
நீதிக் கட்சிக்கே ஆதரவு—தேர்தல்
தோல்வி—எல்லாம் நன்மைக்கே!—
1935 முதல் 1937–வரை.**

---

சென்னை மாகாணத்தில் பிரிட்டிஷாரின் இரட்டை ஆட்சி முறை, நீதிக் கட்சி அரசுப் பொறுப்பேற்ற 1920-ஆம் ஆண்டு முதல் வெற்றிகரமாகச் செயல்பட்டு வந்தது. 1923 முதல் 1926 வரையில் முதன் மந்திரியாயிருந்த பனகல் அரசர் காலத்தில்தான் பெரியாரின் ஆதரவோடு, இந்து அற நிலையப் பாதுகாப்புச் சட்டம் கொண்டு வரப்பட்டது. ஜில்லா போர்டு, தாலுக்கா போர்டு என்னும் உள்ளாட்சி அமைப்பு முறைகள் மக்களாட்சி அடிப்படையில் பனகல் அரசரால்தான் நடைமுறைக்கு வந்தன. கிராமப்புற மருத்துவம், சாலை, விளக்கு, கல்வி அத்தனை வசதிகளும் செய்யப்பட்டன. அதனால் அப்போதெல்லாம் சுயமரியாதை இயக்கத்தைப் பெற்றெடுத்து விட்ட பெரியாரின் தார்மீக ஆதரவு நீதிக் கட்சிக்குத், தானே கிடைத்து வந்தது. பின்னர் நேரடியான நீதிக்கட்சி ஆட்சியாயிராமல், ஓரளவு ஆதரவு பெற்றுச் சுயேச்சையாகச் செயல்பட்ட டாக்டர் சுப்பராயன் அமைச்சரவை நான்காண்டுகள் பதவியில் இருந்தது.

இந்தக் காலத்தில் அமைச்சராயிருந்த சீர்காழி எஸ். முத்தையா முதலியார் முதன் முதலாகத் தமது இலாக்காவில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ முறையை அமுலாக்கி, அதன்படி அரசு உத்தியோகங்கள் அளிக்க முன்

வந்தார். பெரியார் தலைகால் புரியாத மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தார். பார்ப்பனரல்லாதார் இதற்காக நன்றியுடன் நடந்து கொள்ள வேண்டுமானால், அவர்கள் வீட்டில் பிறக்கும் பிள்ளைகளுக்கு முத்தையா என்று பெயர் சூட்ட வேண்டும் என்கிற அளவுக்குச் சென்று, பாராட்டினார். பின்னர், நீதிக்கட்சி நேரடியாக ஆட்சிக்கு வந்தது. சித்தூர் பி. முனுசாமி நாயுடு முதல் மந்திரியாகவும், சர் பி. டி. இராசன், எஸ். குமாரசாமி ரெட்டியார் மந்திரிகளாகவும் விளங்கினர். 1930-முதல் 1932-வரையில் நீதிக்கட்சியின் தலைவராகவும் இருந்த முனுசாமி நாயுடு திறமையற்றவராகவே காணப்பட்டார். நீதிக் கட்சியிலுள்ளவர்களே அவர்மீது அருவெறுப்புற்றிருந்தனர். காரணம், அவர் சுயமரியாதை இயக்கத்தின்மீது வெறுப்புக் காட்டிக், காங்கிரஸ் மீது அனுதாபங் காட்டி வந்ததே!

1932–அக்டோபரில் தஞ்சையில் நடந்த நீதிக்கட்சி மாநாட்டில், அவரை அகற்றுவதற்குப் பெரியாருடைய ஆதரவை நாடினார் பொப்பிலி அரசர். சுயமரியாதை இயக்கத் தோழர்களின் பேருதவியினால் பொப்பிலி அரசர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, 1932 முதல் 1936 வரையில் முதன்மந்திரிப் பதவியும் வகித்தார்; மற்ற இரு மந்திரிகளாக முந்தைய இருவருமே நீடித்தனர்.

1935-ல் நீதிக்கட்சி, பெரியார் தந்த ஈரோடு வேலைத் திட்டத்தை முழுமையாக ஏற்றுக்கொண்டது. தாம் ஒரு ஜமீன்தாராயிருந்தும், நாட்டு மக்கள் நலனில் நீதிக்கட்சிக்கு உண்மையான அக்கறை உண்டு என நிரூபித்து நிலை நாட்டிக் 'காண்பிக்கவே, பொப்பிலி அரசர் பெருமுயற்சி எடுத்துப் பெரியாரின் திட்டத்தை ஏற்றுக் கொண்டார். இதனால் வைதிகர்கள், பிரபுக்கள், பிரிட்டிஷ்காரர் ஆகிய முத்தரப்பினரின் எதிர்ப்பும் நீதிக்கட்சிக்குப் பரிசாகக் கிடைத்தது.

"பகுத்தறிவு" மாத இதழ் ஒன்றினைப் புத்தக வடிவில் பெரியார் துவங்கியிருந்தார். பண்டித முத்துசாமி, புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், ஜலகண்டபுரம் ப. கண்ணன் ஆகி

யோர் இதில் பயனுள்ள எழுத்துப்பணி புரிந்து வந்தனர். விஞ்ஞான ரீதியில் ஆராய்ச்சிப் பூர்வமான கட்டுரைகள், புராண இதிகாச மோசடிகளைப், புரட்டுகளை விளக்கும் கட்டுரைகள், சமூக சீர்திருத்தக் கதைகள், கவிதைகள் இதில் இடம் பெற்றன. இது சுமார் நான்காண்டுகள் நடைபெற்று வந்தது. 1934-ஆம் ஆண்டு பாரதிதாசன் எழுதிய இரணியன் அல்லது இணையற்ற வீரன் என்ற நாடகம் சென்னையில் அரங்கேறியபோது பெரியார் தலைமை தாங்கிக் கவிஞருக்குத் தங்கப் பதக்கம் வழங்கிப் பாராட்டினார். 1946-ஆம் ஆண்டில் அண்ணா முயற்சியால் சென்னையில் கவிஞருக்குப் பணமுடிப்பு வழங்கப்பட்டது.

புதுவை புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பெரியாரின் கொள்கைகளை நூற்றுக்கு நூறு அப்படியே ஏற்றுக் கொர்ண்டு அவற்றைக் கவிதை வடிவில் வெளியிட்டு வந்தார். இறுதிவரை அவர் இந்த நிலையிலிருந்து பிறழவில்லை. தேசியமும் ஆத்திகமும் கலந்தே பாடிய பாரதியின் சீடராயினும், இவர் நாத்திகரே. மிகப் பெரிய பரம்பரை ஒன்றை இவர் உருவாக்கி விட்டார். இவரால் கவிதையுலகில் செய்யப்பட்ட முதல் மாறுதல்கள் பெரிய திருப்பு முனையாய் நிற்கின்றன. அஞ்சா நெஞ்சமும் ஆழ்ந்தகன்ற பெரும் புலமையும் புதுமையான நோக்கும் கொண்ட இவர் உலக அளவில் தமக்கு நிகரற்ற நிலை பெற்றுவிட்ட கவிஞராவார். மாடுகளும் வழக்கத்தால் செக்கைச் சுற்றும், மடையர்களும் இயற்றிடுவார் கடவுட் பாடல் என்ற வரிகள் இவரது புரட்சி மனப்பாங்கைக் காட்டும். வயதில் அறிவில் முதியார் நாட்டின் வாய்மைப் போருக்கென்றும் இளையார்-உயர் எண்ணங்கள் மலரும் சோலை என்றார் பெரியாரைப்பற்றி. 1964-ஆம் ஆண்டு மறைந்தார் சாகா இலக்கியம் பல படைத்த பின்னர்!

நீதிக்கட்சி தமது திட்டத்தை ஏற்றுக் கொண்டதில் பெரியார் மிகுந்த பெருமிதமும் பூரிப்பும் கொண்டார். அவர் விரும்பியதும் அஃதேயாகும். காங்கிரஸ் புறக்கணித்ததையே பெரியார் பெருமையாகக் கருதினார். காரணம், காங்கிரஸ் பசுத்தோல் போர்த்திய புலி என்று, அதன் தோலுரித்துக் காட்டவே பெரியார் நேரம்

பார்த்திருந்தார். அதனால் 1937-ஆம் ஆண்டுத் தேர்தலில் காங்கிரஸ் பெருமளவில் ஈடுபட்டதைத் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டார். வெற்றி தோல்வி பற்றிய கவலை அவருக்கு எப்போதுமே இருப்பதில்லையாதலால், முழு மூச்சாக நீதிக்கட்சியை ஆதரித்துத் தேர்தல் பிரச்சார இயந்திரத்தை முடுக்கி விட்டார். 1938-ஆம் ஆண்டு வரை பெரியார் மதுவிலக்கை ஆதரித்துத்தான் வந்தார். கதர், கைராட்டை, கைத்தறி, இவற்றிலெல்லாம் அவர் நம்பிக்கை இழந்திருந்தார். மதச்சின்னங்களைப் போலவே கதரும் ஒரு மூடநம்பிக்கைச் சின்னம்; பொருளாதார அடிப்படையிலும் இலாபமில்லாமல், மனித உழைப்பை வீணாக்கிடும் ஒரு சாதனம்; இயந்திர யுகத்தில் தேவையில்லாத பழைய கட்டை வண்டிக் காலத் திட்டம்; இது கவைக்குதவாது என்று பெரியார் கருதினார்.

நாகம்மையார் மறைந்தபோது பெரியாருக்கு வயது 54. கடந்த இரண்டு மூன்று ஆண்டுகளில் பெரியார் ஈரோட்டில் தங்க நேர்ந்து, தமது தாயார் சின்னத்தாயம்மையாரைச் சந்திக்க வாய்ப்பு ஏற்பட்டால், அந்த அம்மையார், ஈன்ற அன்னையென்ற பாசத்தோடும், தனது இளைய மகன் பயமறியாமல் கண்டபடி திரிவதால், மீண்டும் கால் கட்டுப் போட வேண்டும் என்ற வழக்கமான ஆசையோடும், திருமணம் செய்து கொள்ளத் தூண்டுவார். அப்பேர்ப்பட்ட சின்னத்தாயம்மையார் தமது 95-ஆவது வயது வரையில் நல்ல நிதானத்தோடும் நடமாட்டத்தோடும் (ஆகா! அப்படியே தந்தை பெரியாரை நினைவூட்டுகிறாரே!) வாழ்ந்து வந்தவர். 1936-ஆம் ஆண்டு ஜூலை 28-ஆம் நாள், நள்ளிரவு 12 மணிக்கு இயற்கை எய்தினார். ஜோலார்ப்பேட்டை சென்றிருந்த பெரியாருக்குச் செய்தி எட்டவே மறுநாள் வந்து சேர்ந்தார்.

தாயாரைப் பற்றிய சுருக்கமான வாழ்க்கை வரலாற்றைத் திருக்குறள் போல் இனிதாக எளிதாக 2-8-1936 "குடிஅரசு" இதழில் பெரியார் எழுதி வெளியிட்டுள்ளதைக் காணும்போது, இவ்வளவு அருமையான Biographer ஏன்

தமது Autobiography எழுதி நமக்கு உயிர் ஊட்டியிருக்கக் கூடாது, என்ற அய்ய வினா எழாமல் இருக்காது! இறுதியாகத், தமது அன்னையாரின் பழைமைப் பிடிப்புக்கோர் உதாரணமாகப், புகழ் பெற்ற மவுலானா மகம்மது அலி, ஷவுக்கத் அலி சகோதரர்கள் ஈரோடு வந்திருந்தபோது, தமது அன்னையாருடைய கரங்களின் மீது தங்கள் சிரங்களைப் படியவைத்து, அப்பேர்ப்பட்ட வீர இராமசாமிப் பெரியாரின் அன்னை, தங்களை வாழ்த்த வேண்டுமென்று கேட்டபோது, அவர்களெதிரில் அவ்வாறே வாழ்த்தி விட்டுப், பின் உள்ளே சென்று, தீட்டுப்பட்டதற்காகத் தலை முழுகிய செய்தியினைப் பெரியார் நயமாக வெளியிட்டுள்ள பாங்கு, எண்ணியெண்ணி மகிழத் தக்கதாகும். பெற்ற மகனையே தொட நேரிட்டாலும், குளித்து முழுக ஓடும் ஆச்சார சீலராயிற்றே அந்தப் பெருமாட்டி! ஒரு குறிப்பிட்ட அந்தஸ்தை அடைந்துவிட்ட சிலர், தமது முன்னாள் ஏழ்மை வாழ்க்கையினைத் திரும்பிப் பார்ப்பதில்லை! இன்றுள்ளோர் யாருக்கும் உண்மை தெரியாது என்ற துணிவில், தாம் அரசபரம்பரை எனக் கூசாது பொய் மொழிவதுதான் வாடிக்கை. இங்ஙனமிருக்கப், பெரியார் தமது பெற்றோரின் ஏழ்மைக் கூலி வாழ்க்கையினை, எட்டுணையும் மறைக்காமல் கூறியுள்ள வாய்மையினை எவ்வாறு பாராட்டுவதோ?

இதனால்தான், பெரியாரது தொண்டின் பெருமையினை நேரிற் கண்ட பெரியோர்கள் அக்காலத்திலேயே அவரைப் பலபடப் புகழ்ந்துள்ளனர் :– இவர் இயற்கைப் பெரியார்; இவரது கருத்துகளும், அரிய யோசனைகளும் இயற்கையறிவில் உதித்தவை; தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன் என்பது பெரியாருக்கே பொருந்தும்— என்றார் திரு. வி. க. தமிழ்நாட்டின் எல்லாத் தலைவர்களையும் விடப் பெரிய தியாகி இவர்தான்; பெரியாரிடம் உள்ள விசேஷ உத்தமகுணம் தன் மனத்திற் பட்டதை ஒளிக்காமல் சொல்வதுதான்; அவரைப் பற்றி அய்ரோப்பாவிலும் பேசப்படுகிறது—என்றார் வ.உ.சி. தமக்கு நியாயமென்று பட்ட கருத்துகளை அஞ்சாது

வெளியிடுவதில் பெரியார் முதல் இடம் பெற்றவர்; சமய சமூக அரசியல் துறைகளில் அவர் செய்துள்ள தியாகமும் ஊழியமும், பட்டுள்ள கஷ்டங்களும் இத் தேசத்தினர் ஒரு நாளும் மறக்க முடியாது—என்றார் டாக்டர் நாயுடு. பொதுநலம் பேணும் அறம் திறம்பா அருண் மறவர் பெரியார்; கலா நிலையக் கல்விப் பட்டங்கள் பெறாமல், மானமிழந்து பிறர் பின் நின்று பதவி முதலிய வீண் பெருமை தேட விரும்பாமல் ஊக்கமும் வாய்மையும் ஆக்கமனைத்தும் தரும் என்பதை நாள்தோறும் தாம் வாழ்ந்து காட்டும் சால் புடையார்—என்றார் நாவலர் பசுமலை சோமசுந்தர பாரதியார். இவ்விருபதாம் நூற்றாண்டில் தென் தேசத்தில் உண்டான அறிவின் பயனையெல்லாம் அனுபவிக்கச் செய்த தீரபுருஷன் இராமசாமிப் பெரியாரே என்பது பின் சரித்திரங்களில் எழுதப்படும்—என்றார் கைவல்ய சாமியார். அநீதியை எதிர்க்கத் திறமையும் தைரியமும் அற்ற ஏழைகளாய்ச் சொரணை யற்றுக் கிடந்த தமிழர்களின் உள்ளத்தை அடிதெரியும் படிக் கலக்கிய பிரம்மாண்ட பாக்கியம் பெரியாரைப் பெரிதும் சேர்ந்ததாகும்—என்றார் வ. ரா. என்னும் ராமசாமி அய்யங்கார். பாமர ஜனங்களை வசப்படுத்தும் ஆற்றல் தமிழ் நாட்டில் வேறெவரையும்விட அவருக்கே அதிகம் உண்டு—என்றார் "கல்கி" என்னும் ரா. கிருஷ்ணமூர்த்தி. இராமசாமிப் பெரியார் உண்மை யிலேயே ஒரு பெரியார் என்பதற்கு மூன்று ஆதாரங்கள் சொல்லலாம்:- அவரைப் பற்றி உலகத்தார் தப்பபிப் பிராயம் கொள்ள வேண்டும்; அவர் கொள்கைகள் எங்கும் கண்டிக்கப் படவேண்டும்; அவர் கடுமையாக வையவும் சபிக்கவும் படவேண்டும்—என்றார் ரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார்.

அன்னையார் மறைவுக்குப் பின்னர் மிச்சமிருந்த குடும்பப் பிணைப்பும் அற்று விடவே, முன்னிலும் தீவிர மாகப் பெரியார் தேர்தல் களத்தில் குதித்தார். நீதிக்கட்சி ஆட்சி செய்து வந்த இந்தப் பதினேழு ஆண்டுகளில் நிகழ்த் தப்பட்டுள்ள அருஞ்சாதனைகளைப் பட்டியல் போட்டுக் காட்டினார். சர்க்கஸ் கொட்டகையில் புலியும் பசுவும் ஒன்றாய் நிற்கலாம்; ரயில் வண்டியில் பறையனும் பார்ப்பா னும் ஒன்றாய்ப் பிரயாணம் செய்யலாம்; இது சமதர்மம்

ஆகிவிடாது! நீதிக்கட்சி ஆட்சியில் சட்டப்படித் தாழ்த்தப் பட்டவர்களுக்கு அநேக உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன; இதைப்பற்றிக் காங்கிரசார் எண்ணியும் பார்த்ததில்லை! நீதிக்கட்சியார் ஆட்சிக்கு மறுபடியும் போனால் மக்கள் தொகைக்கு ஏற்ப அந்தந்தச் சமூகத்தார்க்கும் பதவியில், அதிகாரத்தில் விகிதாச்சாரம் தருவதாகச் சொல்கிறார்கள்; காங்கிரசார் இதைத் தேசத் துரோகம் என்கிறார்கள்! நீதிக் கட்சியார் வெள்ளையருடன் அவசியத்துக்கு ஏற்ப ஒத் துழைக்கிறார்கள்; காங்கிரசார் வெள்ளையருக்கு ரகசிய மாய்ச் சலாம் போடுகிறார்கள்! ஆகையால் காங்கிரஸ் வெற்றிபெற்று விட்டால், நமது சமுதாயம் ஒரு நூற்றாண்டு பின்னுக்குத் தள்ளப்பட்டு விடும். பார்ப்பனர்களின் சுய ராஜ்யம் நிலை நிறுத்தப்படும்—என்ற ரீதியில் பெரியாரின் தேர்தல் பிரச்சாரம் மும்முரமாய் நடந்தது.

இரட்டையாட்சி ஏற்பட்ட 17 ஆண்டுகளாய் நீதிக் கட்சியே தொடர்ந்து ஆட்சி செய்ததால், மனப் புழுக்க மடைந்த காங்கிரசாரும் அவர்களை அதிகம் நம்பி எதிர் பார்த்திருந்த பதவி வேட்டைக்காரர்களும் வாக்குறுதிகளை அள்ளி அள்ளி வழங்கினர். மக்களும் அப்படியே நம்பித், தங்கள் வரிச்சுமை நீங்கும்; வறுமை பறக்கும்; வளமை சுரக்கும்; ஏகாதிபத்தியம் ஓடும்; துயரங்கள் ஒழியும்; சுய ராஜ்யம் வாழும் என்றெல்லாம் எதிர்பார்த்தனர். பழசாய்ப் போன நீதிக்கட்சி மீதில் காதல் குறைந்ததும், புதுமையான காங்கிரஸ்மீது மோகம் பிறந்ததும் இயற்கை தானே? அதனால் 1937-ஆம் ஆண்டுப் பொதுத் தேர்தலில், காங்கிரசே எதிர்பாராத அளவுக்கு அது அமோக வெற்றி பெற்றது! நீதிக்கட்சி படுதோல்வி கண்டது; பெரும் தூண்க ளெல்லாம் அடியோடு சாய்ந்தன!

காங்கிரசார் வெறியாட்டம் போட்டனர். நீதிக் கட்சியை அய்யாயிரம் அடி ஆழக்குழி தோண்டிப் புதைத்து விட்டதாகக் காங்கிரஸ் பேச்சாளர்கள் கொக்கரித்தனர். ஈ. வெ. ராமசாமிப் பெரியார் காங்கிரசில் சேர்ந்து விட

வேண்டும்; இனி உலகு உள்ளளவும் ஆட்சிபீடம் காங்கிர சுக்குத்தான்—என்றும் ஆர்ப்பரித்தனர்.

ஆனால், தோல்வியிலும் வெற்றி காணும் பெற்றி கொண்ட பெரியார், நீதிக்கட்சியின் தோல்வி தமக்கு அனு கூலந்தான் என்றார். தேர்தல் நடைபெறுமுன்பே அவர் கணிப்பு, வெற்றியைக் காட்டிலும் தோல்வியினால்தான் பார்ப்பனரல்லாத மக்கள் ஒன்று சேர்ந்து, பலமாக வேலை செய்ய வாய்ப்புக் கிடைக்கும் என்பதே! ஆகவே சோர்வடை யாமல், ஊக்கம் மிகுந்தவராய்த் தோழர்களை உற்சாகப் படுத்தி வந்தார் பெரியார். காங்கிரஸ்காரர்களும், பார்ப் பனர்களும் இதுவரையில் செய்து வந்த புளுகுப் பிரச்சாரம், இனி வெட்ட வெளிச்சமாகும். இப்போதுதான் அவர்கள் உண்மையான நெருக்கடியில் சிக்கியிருக்கிறார்கள். தொடர்ச் சியான அவர்களது விஷமத்தனங்களுக்கு இப்போதுதான் முடிவு ஏற்படும்; மந்திரிப் பதவி ஏற்பவர்களின் சாமர்த்தியம் தெரிய வரும்! நம்மைப் பொறுத்த வரையில் சுயமரியாதைப் பிரச்சாரத்துக்கு நல்ல முறையில் பாதை திறந்து விட்டது போலாகும்—என்று பெரியார் பேசி வந்தார்.

காங்கிரஸ்காரருக்கோ தலைவலி ஆரம்பித்தது. ஆட்சி அமைக்குமாறு கவர்னர்கள் அழைத்தபோது, மந்திரிகளின் அன்றாட அலுவல்களில் கவர்னர்கள் கலந்து கொள்வ தில்லை என உறுதி தரவேண்டும் என்று கேட்டனர்; அரசினர் இதனை ஏற்க மறுத்தனர்! அதனால், சுமார் மூன்றரை மாதம் வரை, கவர்னர்களே இடைக்கால மந்திரி சபை அமைத்தனர். நீதிக்கட்சி இந்த இடைக்கால மந்திரி சபையில் பொறுப்பேற்கக் கூடாது என்று பெரியார் சொல்லி விட்டதால், யாரும் ஏற்கவில்லை. கே. வி. ரெட்டி, எம். சி. ராஜா, கலிபுல்லா, பன்னீர் செல்வம், முத்தைய செட்டியார், பாலட், ஆகியோர் பதவியில் அமர்த்தப் பட்டனர். இதனைக் காங்கிரசார் அற்பாயுள் மந்திரிசபை எனக் கேலி பேசினர்.

காங்கிரஸ்காரர்களுக்குப் பசி வயிற்றைக் கிள்ளுகிறது; இலை முன்னர் படைக்கப்பெற்ற விருந்தை எவ்வளவு நேரம்

அருந்தாமல் பார்த்துக்கொண்டேயிருக்கமுடியும்? காங்கிரஸ் காரர்கள் கடைசியாகப் பிடிவாதத்திலிருந்து இறங்கி வந்தனர். சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் தலைமையில் முதன் முறையாகச் சென்னை மாகாணத்தில் காங்கிரஸ் மந்திரிசபை பதவி ஏற்றது 1937 ஜூலை 14-ஆம் நாளில்! முரண்பாடாக நடந்து கொண்டதால் இந்தக் காங்கிரஸ் மந்திரி சபைக்குப் பெரியார், சரணாகதி மந்திரி சபை எனப் பெயர் சூட்டினார். வீம்புடன் முதலில் ஒதுங்கியிருந்தவர்கள், பின் விட்டுக்கொடுத்த பண்பையே பெரியார் சரணாகதி என்றார்; தவறல்லவே? சுயமரியாதைக்காரராக இருந்த எஸ். ராமநாதன் இந்த மந்திரி சபையில் ஒரு மந்திரியானார். முதலமைச்சரை வைத்து ஒரு மாட்டு வண்டியை இவரே ஓட்டிச் சென்றதாகப் புகைப் படங்கள் வெளியாயின. அது முதல் இவர் கட்டை மாட்டு வண்டி ராமநாதன் என்று கேலி செய்யப்பட்டார். இந்த மந்திரிசபையில் ஆச்சாரியார், சத்தியமூர்த்தி அய்யருக்கு இடந்தராமல் டாக்டர் டி.எஸ்.எஸ். ராஜன் அய்யங்காருக்குப் பதவி தந்து விட்டதால், சத்தியமூர்த்தி இதன்பின் ராஜாஜியின் எதிரியாகவே விளங்கினார்.

நீதிக்கட்சியினரால் 1935-ல் சென்னையில் துவக்கப்பட்டு, வாரம் இருமுறையாயிருந்து, பின்னர் நாளேடு ஆகிய "விடுதலை", பெரியாரிடம் 1937-ல் ஒப்படைக்கப்பட்டது. செய்தித்தாள் என்னும் புதிய படைக்கலன், போர்வீரராகக் களத்தில் முன்னணியில் நின்று கொண்டேயிருக்கும் பெரியாரிடம் உரிய நேரத்தில் வரலாயிற்று! அதனை ஈரோட்டுக்கே மாற்றிக் கொண்டார் பெரியார். "விடுதலை"யின் முதல் பக்கத்தில், கொட்டை எழுத்தில், சரணாகதி மந்திரி சபை—இன்று......ஆவது நாள்! இன்னும் எத்தனை நாள்? என்று பெட்டிச் செய்தி நாள்தோறும் வெளியிடப்பட்டு வந்தது மிக்க பரபரப்பாயிருந்தது! எப்படித்தான் பெரியார் முன் கூட்டி எதிர்பார்த்தாரோ?—1939 அக்டோபர் மாதத்தில், 28 மாத ஆட்சிக்குப் பின், காங்கிரஸ் பதவியை விட்டு வெளியேறியது. அதன்பின் 1946-வரை சென்னை மாகாணத்

தில் ஆலோசகர்கள் உதவியுடன் கவர்னர் ஆட்சியே நடந்தது!

காங்கிரசார் உள்ளாட்சி நிறுவனங்களான பஞ்சாயத்து, நகராட்சி, ஜில்லாபோர்டு ஆகிய அனைத்திலும் வெற்றி பெற்றனர். தோல்வியுற்றதால் சிலர் காங்கிரசிலே போய்ச் சேர்ந்து கொண்டனர்! இப்படிப் பதவிக்காகக் கட்சி மாறிய வர்களைப்பற்றிப் பெரியார் என்ன நினைத்தார் என்பதைக் கவனித்தால், 1937 ஏப்ரல் 5-ஆம் நாள் "குடி அரசு" கூறு வது, இன்றும் என்றும் பொருந்துமே!—"காங்கிரஸ் கட்சி யில் சேர்ந்தால்தான் இனிப் பதவி, உத்தியோகம் தமக்குக் கிட்டும் என நம்பிச் சிலர் அங்கே போகிறார்கள். இந்த முட்டாள்தனமான தேர்தல், அந்த முடிவுக்கு வரத் தூண்டி யிருக்கிறது. யார் யாருக்குப் பதவியினால் மாத்திரம் மதிப்பும் மரியாதையும் கிடைக்குமோ — அவர்கள்தான் போயிருக்கிறார்கள்! வேறு வாழ்வுக்கு வகையில்லாதாரும் போகிறார்கள். இவர்கள் நீதிக் கட்சியிலிருந்து, ஒருக்கால் பதவிக்குச் சென்றாலும், கட்சிக்குக் கெட்ட பெயர் தேடித் தரக் கூடியவர்களே! ஆகையால் இவர்கள் போவதுதான் நல்லது. கட்சியே இவர்களை வெளியேற்றுமுன், தாமே சென்று விட்டது அவர்களுக்கே நல்லது! இன்னும் இம்மாதிரி வெளியேற்றப்படவேண்டிய சிலர் இருக்கிறார்கள்; அவர் களும் போய்விட்டால் நீதிக்கட்சிக்கு உதவியவர் ஆவார்கள்! இப்படிக் குடியிருந்த வீட்டுக்கு கொள்ளி வைக்கும் ஆட்களுக் குப் புகலிடமாய்க் காங்கிரஸ் இருப்பதும் மகிழ்ச்சியே!" —எப்படி?

பதவி ஏற்ற காங்கிரசார் வாக்குறுதிகளை மறந்தனர்; கொள்கைகளை மறந்தனர்; செயல்பட மறந்தனர்; மொத்தத்தில் வந்த வேலையை மறந்தனர்; மக்களையே மறந்தனர்! தவறு கண்டவிடத்துத் தயவு தாட்சண்யம் பாராமல் தட்டிக் கேட்கும் பெரியாரின் இயல்பு—பீறிட்டுக் கிளம்பிற்று. "விடுதலை"யும், "குடியரசும்" வெடி குண்டு களாக வீசின!

# 11. எதிர்த்தார்

இந்திப்போர் — முதல் பரணி— சிறை வாழ்வு—நீதிக் கட்சித் தலைவர்—திராவிடநாடு திராவிடருக்கே முழக்கம் உதயம்—1938 முதல் 1943 வரை

---

துஞ்சு புலி இடறிய சிதடன் போலத் தமிழ் மக்களின் உணர்வினை உசுப்பிட முனைந்தார் சென்னை மாகாணப் பிரதமராகப் பதவி ஏற்ற சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார். காங்கிரசின் வேலைத் திட்டங்கள் எத்தனையோ இருக்க, மிக்க அவசரமாகக், காங்கிரஸ் ஆண்டு வந்த எட்டு மாகாணங்களில் வேறெந்த மாகாணத்துக் காங்கிரஸ் மந்திரி சபையும் முயற்சி எடுக்காத நேரத்தில், இவர் மாத்திரம் முந்திக்கொண்டு, இந்தி கட்டாயப் பாடமாக்கப் படும், என முதலில் அறிவிப்புச் செய்தார், 1938 பிப்ரவரி 25-ஆம் நாள். 25-4-38-ல் அது நடைமுறைக்கு வந்தது.

தமிழனுக்குத் தமிழில் பற்றில்லை; தாய்மொழியில் பற்றுச் செலுத்தாதிருக்கும் வரையில் தமிழர்கள் முன்னேற்றம் அடையமாட்டார்கள்—என்று காங்கிரசில் இருந்த போதே பெரியார், 1924-ஆம் ஆண்டு திருவண்ணாமலை மாகாண மாநாட்டுத் தலைமையுரையில் குறிப்பிட்டுள்ளார். பின்னரும், இந்தி பொது மொழியாக வேண்டுமெனக் காங்கிரசார் வற்புறுத்துவதன் இரகசியம் என்ன என்பதை 1926-ஆம் ஆண்டு "குடி அரசு" இதழில் விளக்கியுள்ளார்:—

"100க்கு 97 பேராயுள்ள பார்ப்பனரல்லாதார் செலவில், 100க்கு 3 பேரேயுள்ள பார்ப்பனர்கள், 100க்கு 100 பேரும்

இந்தி படித்துள்ளனர். ஆரிய ஆதிக்கத்தை நிலைநாட்டி, வடமொழி உயர்வுக்கு வகை தேடவே, ஒரு ஒடிந்து போன குண்டுசி அளவு பயனும் இல்லாத இந்தி மொழியை, இங்குப் பிரச்சாரம் செய்ய வருகிறார்கள். தமிழ் மொழி வளர்ச்சிக்காக இதில் 100-ல் 1 பங்கு கவலையாவது இவர்கள் எடுத்துக் கொள்கிறார்களா? பார்ப்பனரல்லாதார்க்கு ஏற்படும் பல ஆபத்துகளில் இந்தியும் ஒன்றாக முடியும் போலிருக்கிறது!'' வரும்பொருள் உணர்ந்து பெரியார், அன்றே உரைத்த மொழி இது. மேலும் தொடர்ந்து, ''குடி அரசு'' இதழில் எச்சரித்து வந்திருக்கிறார் பெரியார். 1930-ஆம் ஆண்டு நன்னிலத்தில் நடந்த ஒரு சுயமரியாதை மாநாட்டில் இந்தி நுழைவைக் கண்டித்துத் தீர்மானம் இயற்றியுள்ளனர். இந்திமொழி கட்டாயமானால் தமிழ் வளர்ச்சி குறையும்; தமிழர் நலம் குன்றும்; தமிழர் நாகரிகம் அழியும் என்றார் பெரியார். மறைமலையடிகளாரும், இந்தி பொது மொழியாவதற்குத் தகுதியுடையதன்று; இந்தி நுழைப்பால் தமிழ் கெடும்; தமிழர் துன்புறுவர்—எனக்கட்டுரை தீட்டினார்.

தமிழ் நாட்டில் இந்திக்கு எதிர்ப்பு ஏற்படும் என எதிர்பார்த்தே ஆச்சாரியார், கட்டாயப் பாடமாக்குவேன் என உறுதியாய்க் கூறிவிட்டார்! தமிழர் உணர்வோடு விளையாடுவது எனத் திட்டமிட்டே இறங்கியிருக்கிறார்! மேலும், பெரியாரின் சூறாவளி வேகச் சுயமரியாதைப் பொதுவுடைமைப் பிரச்சாரத்துக்கு மக்களிடையே பெருவாரியாக ஏற்பட்டு வரும் செல்வாக்கு கண்டு, தமது இனநலன் அழிக்கப்பட்டு விடுமே என அஞ்சித், திசை திருப்பும் சாணக்ய தந்திரமாகவும் ஆச்சாரியார் இந்தி நுழைப்புப் பணியினைக் கருதினார். 1937 டிசம்பர் 26-ல் திருச்சியில் தி.பொ. வேதாசலம், கி. ஆ.பெ. விசுவநாதம் ஆகியோர் முயற்சியால், நாவலர் சோமசுந்தர பாரதியார் தலைமையில் ஒரு தமிழர் மாநாடு கூட்டப்பட்டது. பெரியார் கலந்து கொண்டார். இதில் கட்சி, சாதி, மத பேதமின்றி, வைதிகர் உட்படத் தமிழர் அனைவரும் குழுமினர். இந்தி நுழைப்புக்கு எதிர்ப்பு,தமிழ்ப் பல்கலைக் கழகம் கோரல், தனியான தமிழ்

மாகாணம் வேண்டல்—ஆகிய முக்கிய தீர்மானங்கள் இங்கு நிறைவேறின. பெரியாரின் உழைப்பினுடைய உருவந்தான் அங்கே அனைவர் சிந்தையிலும் ஊடுருவிக் காணப் பட்டது. தொடர்ச்சியாகக் கிளர்ச்சிகள், ஆர்ப்பாட்டங்கள், மாநாடுகள், பொதுக்கூட்டங்கள் வாயிலாகத் தமிழ்மக்களின் எதிர்ப்புஉணர்ச்சி வெளிப்படுத்தப்பெற்றது. புத்துயிரும், புது வன்மையுங்கொண்டவராய்ச் சிலிர்த்தெழுந்தார் பெரியார்!

தமிழவேள் உமாமகேசனார் உறவினரும், வழக்குரைஞருமான திருச்சி தி. பொ. வேதாசலம் பெரியாரிடம் மெய்யன்பு பூண்டவர். நேர்மையும் ஒழுக்கமும் அடக்கமும் அறிவும் மிகுந்தவர். ஆங்கிலத்திலும் தமிழிலும் அருமையான விரிவுரைகள் ஆற்றவல்லவர். பெரியாருக்கும் இயக்கத் தொண்டர்களுக்கும் இவர் இல்லம் திருச்சியில் நல்லதோர் உறைவிடமாகும். பெரியார் பிற்காலத்தில் திருச்சியில் தங்குமிடம் அமைக்க இவரே காரணம். ஏதனாலோ தமது இறுதி நாட்களில் பெரியாரிடம் கருத்து வேறுபாடு கொண்டார். 1971-அக்டோபர் 10-ஆம் நாள் மறைந்தார். இடுகாட்டில் இரங்கலுரை ஆற்றினார் பெரியார்.

1899-ல் பிறந்த முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் திருச்சியில் புகையிலை வணிகர். மேலான, ஆழ்ந்த தமிழ்ப் புலமை வாய்ந்த சான்றோர். பெரியாரின் துணையாகச் சில ஆண்டுகள் பழகியவர். சுயமரியாதைக் கொள்கைப் பற்றுடன் விளங்குபவர். எண்ணற்ற சீர்திருத்தத் திருமணங்கள் நடத்தி வருகிறார். தமிழுக்கு ஊறு, யாரால், எப்போது, எங்கே நேர்ந்தாலும், எதிர்த்து முதல் குரல் கொடுக்கத் தயங்கமாட்டார்! முதுமையிலும் இளைஞராய், ஓய்வின்றி உழைத்து வருகிறார்.

பின்னர் 1938 பிப்ரவரியில் காஞ்சியில் அ. க. தங்கவேலர் முயற்சியால் மாபெரும் இந்தி எதிர்ப்பு மாநாடு ஒன்று நடத்தப் பெற்றது. சர் கே. வி. ரெட்டிநாயுடு தலைவர். முன்னாள் சட்ட உறுப்பினர் சர் எம். கிருஷ்ணன் நாயர் திறப்பாளர். பெரியார் இங்குதான் இந்தி எதிர்ப்புப் போர்ப் பிரகடனம் செய்தார்; போர் போர் போர் என முழங்கினார்; போராட்டம் துவங்கிவிட்டது!

இந்தி கட்டாயப் பாடமாகத் திணிக்கப்படுவது, பொதுவான விஷயம்; அனைவருடைய வரிப்பணத்தில் இருந்துதான் இது செய்யப்படுகிறது; இதைத் தட்டிக் கேட்க வேண்டியது நம்முடைய கடமை என்றார் பெரியார். இந்தி கட்டாயமானால் இந்து மதக் கலாச்சாரம் தொடர்ந்து ஆக்கம் பெறும்; வட நாட்டாரின் அரசியல் ஆதிக்கம் இங்கு நிலை பெற வழி வகுக்கும்—எனவும் எடுத்துக் காட்டினார். இந்தியைக் கட்டாயப் பாடமாக்குவதை ஒழித்தால் மட்டும் போதாது; அதற்கான உள் காரணங்களை ஒழிக்க வேண்டும்! அவை என்ன? பார்ப்பனீயத்துக்குத் தமிழ் மக்களைப் புராண காலம் போல் நிரந்தர அடிமைகளாய் ஆக்குவதற்கேயாம்; சுயமரியாதை உணர்ச்சியால் ஆட்டம் கொடுத்திருக்கும் பார்ப்பனீய மத உணர்ச்சியை மீண்டும் சரியானபடிப் புகுத்துவதற்கேயாம்! இந்தி எதிர்ப்பின் மூலம் தமிழ் மக்கள் வெற்றி பெற வேண்டுமானால், தமது சரீரத்தில் ஓடும் பார்ப்பன மத உணர்ச்சி ரத்தம் அவ்வளவும் வெளியேற்றப் பட்டுப் புதிய பகுத்தறிவு ரத்தம் பாய்ச்சப்படவேண்டும்—என்றார் பெரியார்.

ஆச்சாரியார் உறுதியில் பின்வாங்க மறுத்தாரேனும், சிறிது தளர்ச்சி ஏற்படத்தான் செய்தது. அதாவது, எல்லாப் பள்ளிகளிலும் என்று எடுத்த முடிவு தேய்ந்து, 125 பள்ளிகளில் மட்டும் என்றும்; முதல் மூன்று ஃபாரங்கள் வரையிலுந்தான் என்றும்; அதிலும் தேர்வில் வெற்றி பெற வேண்டுமென்று அவசியமில்லை என்றும் சிறு மாற்றங்கள் செய்யப்பட்டாலும், சூதான உள்நோக்கத்தை நீண்ட நாட்களாகப் புரிந்தவராதலால், ஆச்சாரியாரை நம்பவில்லை பெரியார்! மேலும் அவர் தலைமையில் அமைச்சர்கள் எட்டு பேர்; சட்டமன்றத் தலைவர், மேலவைத் தலைவர் ஆகிய பத்துப் பதவிகளில், ஆறு இடங்களில் பார்ப்பனரே இருந்தனர். 12 லட்சம் ரூபாய் செலவில் புதிய வேதபாட சாலை அமைத்து, அதில் பல பார்ப்பன ஆசிரியர்கட்கு வேலையும் அளித்தார் ஆச்சாரியார். மாறாகச் சேலம் மாவட்டத்தில் மதுவிலக்கை அமுல் செய்வதாகவும்,

அந்த இழப்பினை ஈடுகட்டக் கிராமப் புறங்களில் ஏழை மக்கள் கல்விக்காக நீதிக்கட்சியினரால் துவக்கப்பட்டிருந்த 2200 ஆரம்பப் பள்ளிகளை மூடிவிடுவதாகவும் ஆச்சாரியார் ஆணையிட்டார். பொற்கொல்லர்கள், தம் பெயருடன் ஆச்சாரி என்ற அவர்களது சாதிப்பட்டத்தை இணைப்பதால் தமது சாதிப் பெருமை குறைவதாக எண்ணி, அவ்வாறு அவர்கள் குறிப்பிடக்கூடாது எனவும் ஆணையிட்டார் சக்கரவர்த்தி இராஜகோபால ஆச்சாரி!

நயவஞ்சகமான ஆச்சாரியாரின் போக்கினை நன்கு அறிந்ததால், பெரியார் காங்கிரசை ஒழிக்கவே இந்தியைக் கருவியாக எடுத்துக்கொண்டு போர் துவக்கியதாக, மற்றவர்கள் குற்றம் சுமத்திய போதும், அவற்றையெல்லாம் துச்சமென ஒதுக்கித் தள்ளிப், பெரியாரே குதித்தார் போர்க்களத்தில்; இந்திப் பரணி பாடினார்!

1938-ஆம் ஆண்டு ஜூன் 4-ஆம் நாள் சென்னையில் முதல் மறியல் போராட்டம் துவங்கப் பெற்றது. பெத்து நாயக்கன் பேட்டை இந்து தியாலாஜிகல் பள்ளி முன்பும், பிரதமர் (முதல் மந்திரி) இல்லத்தின் முன்பும் ஒரு சர்வாதிகாரி தலைமையில் ஒவ்வோரணியினராக மறியல் செய்தனர். ஒரு சர்வாதிகாரி கைதான ,பின் அடுத்த சர்வாதிகாரி தலைமையில் மறியல், இப்படியாக ஏராளமான தாய்மார்கள் (குழந்தைகளுடன்) தமிழ்ப் பற்றுள்ளோர், புலவர், ஆசிரியர், துறவிகள், மக்கள் தொண்டர்கள், மாணவர்கள்— இந்தி எதிர்ப்புக் களத்தில் இன்முகத்துடன் இறங்கினர். பல்லடம் பொன்னுசாமி முதல் அமைச்சரின் வீட்டுக்கு முன்னால் பட்டினிப் போர் தொடங்கிக் கைதானார். ஸ்டாலின் ஜெகதீசன் அவரை அடுத்து உண்ணா விரதம் தொடங்கிச், சாகும்வரையிலும் தொடர்வதென இருந்தார்; அரசுத் தரப்பில் இவருக்கு வஞ்சக வலை விரிக்கப்பட்டு, ஏமாந்து அதில் சிக்கிவிட்டார் இறுதியில்!

காங்கிரஸ்காரர் ஒத்துழையாமைப் போர் நடத்திய காலத்தில், அவர்கள் மீது வெள்ளை அரசால் வீசப்பட்டு, அவர்களால் அப்போதெல்லாம் வன்மையாகக் கண்டிக்கப்

பட்ட, அதே கிரிமினல் திருத்தச் சட்டத்தையே, இந்தி எதிர்ப்புத் தொண்டர்களின் மீது ஏவிக், கைது செய்து, கடுமையான தண்டனைகளை வழங்கியது ஆச்சாரியார் அரசு! அடக்குமுறைக் கொடுமை தாளாது, அக்காலத்திய சில காங்கிரஸ் சார்பு ஏடுகள் கூடக் கண்டித்து எழுதின. நடுநிலையாளரான பல பார்ப்பனப் பிரமுகர்களும் வன்முறைகளை எதிர்த்துக் கருத்துக் கூறினர். சத்தியமூர்த்தி அய்யரோ, இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி செய்வோர் மீது ராஜத்துவேஷக் குற்றம் சுமத்தித், தூக்குத் தண்டனை, ஆயுள் தண்டனை வழங்க வேண்டுமென அரசுக்கு ஆலோசனை கூறினார்! தயாள குணசீலர்!

கிரிமினல் அமெண்ட்மெண்ட் ஆக்ட் 7-3-A பிரிவின்படிக் கைதானவர்கள்மீது, வழக்குப் போட்டுக், கடுங்காவல் தண்டனை 3, 4 மாதங்கள்வரை தந்து, மொட்டையடித்துச், சிறைஉடை அணிவித்துக், குல்லாய் போட்டுக், களியும் கூழும் உணவாகத் தந்து வந்தது ஆச்சாரியார் ஆட்சி! இதற்கெல்லாம் அஞ்சாமல் அன்றைக்கு, மாங்குயில் கூவிடும் பூஞ்சோலை எமை மாட்ட நினைக்கும் சிறைச்சாலை, என மகிழ்வோடு சிறை ஏகியவர்கள் எண்ணிக்கை 1269 ஆகும். இதில் பெண்டிர் 73 பேர், மதலையர் 32 பேர்.

மேலும், இந்தியன் பினல்கோட் 117 பிரிவின்படி சி டி. நாயகம், கே. எம். பாலசுப்பிரமணியம், ஈழத்துச் சிவானந்த அடிகள், சண்முகானந்த சாமிகள், சுவாமி அருணகிரிநாதர், பாலசுந்தரப் பாவலர், மறை. திருநாவுக்கரசு, டி. ஏ. வி. நாதன், சி. என். அண்ணாதுரை ஆகியோரைக் கைதுசெய்து, சிறையிலிட்டு, 3ஆண்டு தண்டனை வாங்கித்தர முயற்சிகள் நடந்தன. 1938-ஜூன் 26-ல் இலட்சக்கணக்கான மக்கள் திரண்டு, சென்னைக் கடற்கரையில், பெரியார் தந்த வாசகங்களான தமிழ்வாழ்க, இந்தி ஒழிக, காங்கிரஸ் ஆட்சி ஒழிக என்பனவற்றை மண்ணதிர முழக்கமிட்டனர்.

செ. தெ. நாயகம் கூட்டுறவுத் துறையில் துணைப் பதிவாளராயிருந்த தமிழ்ச் சான்றோர். பெரியாரிடம்

மிக்க அன்புடையார். குலசேகரன்பட்டினத்தில் தமிழ்க் கல்லூரி துவக்கினார். 1944-ல் மறைந்தார்.

டி. ஏ. வி. நாதன் ஆங்கிலமும் தமிழும் பாங்குற எழுதவல்ல வழக்கறிஞர். "ஜஸ்டிஸ்", "விடுதலை" ஏடுகளின் ஆசிரியப் பொறுப்பில் இருந்தார்.

முகவைமாவட்ட வெங்கலக்குறிச்சியில் 15-9-1907-ல் பிறந்த பாலசுந்தரப் பாவலர் சுயமரியாதைக் குடும்பத்தின் தலை சிறந்த புலமைத்தொண்டர்; எழுத்தாளர்; பேச்சாளர்; கவிஞர்; பராசக்தி நாடக ஆசிரியர். "தென்சேனை", "தமிழரசு" இதழ்கள் நடத்தினார். 1938-ல் சிறைசென்றவர் திராவிடர் கழகம் நடத்திய எல்லாப் போராட்டங்களிலும் தண்டனை பெற்றவர். புதுக்கோட்டை 'பிராமணாள்' அழிப்புப் போராட்டத்தில், மனைவி பட்டம்மாள், மகள் அறிவுக்கொடி, மகன் தமிழரசனுடன் கலந்துகொண்டார். சென்னையில் பொதுமருத்துவ மனையில் 1. 4. 1971 இரவு 10 மணிக்கு மறைந்து, 3-ந் தேதி அடக்கம் செய்யப்பட்டார். குடும்பத்தார் இன்றும் கழகப்பணியில் முன்னணி.

ஈழத்தடிகள் இல்லறத்தில் ஈடுபட்டுக் காஞ்சியில் அண்ணாவின் ஆதரவில் நீண்ட நாள் வாழ்ந்திருந்தார்.

மறைமலையடிகளாரின் மகனார் திருநாவுக்கரசு. தனித்தமிழ் அன்பர். இனித்திடும் பண்பாளர்.

சி. என். அண்ணாதுரை 1934-ல் எம். ஏ., பட்டதாரி. அடுத்த ஆண்டு திருப்பூரில் நடைபெற்ற செங்குந்தர் மாநாடு ஒன்றில் அண்ணாவின் பேச்சுத் திறனால் பெரியார் கவரப்பட்டார். பெரியாரின் கனிவான கவனிப்புக்கு அண்ணா உள்ளானார். இந்தி எதிர்ப்புப் போரில் 1938-ல் ஈடுப்பட்டுச் சிறை சென்றார். பெரியாருடன் 1940-ல் ஈரோடு சென்று, 'விடுதலை' ஆசிரியரானார். 1944-ல் சேலம் மாநாட்டில் தென்னிந்திய நல உரிமைச் சங்கத்தின் பெயர் திராவிடர் கழகம் என மாற்றப்பட்டது. புகழ்பெற்ற அண்ணாதுரை தீர்மானம் அங்கே நிறைவேறியது. இயக்கத்துக்கு அண்ணாவின் வரவு இளைஞர்களை ஈர்த்துப் புதுரத்தம் பாய்ச்சியது. பெரியார் உருவாக்கிப் பெருமைக்குரியவராக்கிய எண்ணற்ற சுயமரியாதைத்

தளபதிகளில் அறிஞர் அண்ணாவே முதன்மையானவர். பெரியாரின் புகழ் உலகெலாம் பரவியுள்ளதற்கு அண்ணாவை அவர் தமது சீடராக்கிக்கொண்டதும் ஒரு காரணம். சாக்ரட்டீசுக்குப் பிளாட்டோவும், புத்தருக்கு அசோகனும், மார்க்சுக்கு லெனினும் போல் பெரியாருக்கு அண்ணா! இங்கர்சாலும், ரஸ்ஸலும் யாரைக் குருவாகக்கொண்டனரோ; ஆனால் அண்ணாவுக்கு ஆசான் பெரியாரே! 1949-ல் பிரிந்து சென்று திராவிட முன்னேறக் கழகம் அமைத்தபோது, தான் தலைவராகக் கண்டதும் கொண்டதும் பெரியார் ஒருவரைத்தான் எனக் கூறித் தலைவர் இல்லாத நிறுவனமாகவே அதனைக்கண்டார் அண்ணா. 1967-ல் அண்ணா தனது அமைச்சரவையையே பெரியாருக்குக் காணிக்கையாக்கியவர். 1969- பிப்ரவரி 3-ஆம் நாள் இந்தப் பேரறிவாளர் கல்லறையானார்; பெரியாரின் கண்ணீரால் குளிப்பாட்டப்பெற்றார். "புரந்தார் கண் நீர்மல்கச் சாகிற் பின் சாக்காடு இரந்துகோள் தக்க துடைத்து."

அடக்குமுறை வெறியாட்டம்போட ஆரம்பித்துவிட்டால் அதற்கு முடிவேது? மதுவருந்திய மந்தியைத் தேளும் கொட்டிவிட்டால் எப்படியிருக்கும்? "விடுதலை" நாளேட்டின் மீது ராஜத்துவேஷ, வகுப்புத்துவேஷ வழக்குகள் போடப் பட்டன. அரசவெறுப்புக் குற்றம் என்பது தள்ளப்பட்டது. வகுப்புவெறுப்புக் குற்றத்துக்காக "விடுதலை" ஆசிரியர் பண்டித முத்துசாமியும், வெளியீட்டாளர் ஈ. வெ. கிருஷ்ண சாமியும் ஆளுக்கு ஆறுமாதச் சிறைத்தண்டனை பெற்றனர் கோவையில்.

தமிழர் தன்மான உணர்வோடு, மிகுந்த வீறுகொண்டு எழலாயினர். நாடு முழுவதும் தமிழ் வாழ்க இந்தி ஒழிக எனும் வீரமுழக்கம் ஒலிக்காத இடமில்லை. அன்று ஆச்சாரியார் மூட்டிய இந்தி எனும் செந்தீ இன்றளவும் கொழுந்து விட்டெரிகின்றது. முந்தி அவரே மூட்டிய தீயைப் பிந்தி அவரே அணைக்க நினைத்து மனம்மாறியும் முடியவில்லை. இந்தியாவின் தலைமைப் பீடத்தை யார் அலங்கரித்தாலும் சாம்பல்பூத்த இந்தி நெருப்பை ஊதி எரியவிடுவது வாடிக்கை

யாகிவிட்டது. தண்ணீரால் அல்ல; கண்ணீராலும் செந்நீராலும் அணைத்துப் பார்த்தும் அது தணிய மறுக்கிறது!

முதன் மந்திரியான ஆச்சாரியார் வீட்டு முன்னர் மறியல் செய்வது அரசுக்கு இடையூறாக உள்ளது என உணர்ந்த பெரியார், அதைத் தவிர்க்குமாறு பெருந்தன்மையுடன் தமது தொண்டர்களைக் கேட்டுக் கொண்டும், அரசின் அடக்குமுறைக் கொடுமை குறையவில்லை; போராட்டம் தொடர்ந்தது!

திருச்சியில் வழக்கறிஞர் கலிபுல்லா தலைமையில் பெரியார் கலந்துகொண்ட வழியனுப்புக் கூட்டம், இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் புதுமையான முன்னுதாரணம் படைத்தது. தமிழர்படை என்பதாக 100 பேர் கொண்ட அணி அமைக்கப்பட்டு, அவர்கள் திருச்சியிலிருந்து புறப்பட்டு, வழியிலுள்ள ஊர்களிலெல்லாம் இந்திஎதிர்ப்புப் பிரச்சாரம் செய்து கொண்டு 42 நாள் நடந்தே 577 மைல் கடந்து சென்னை சென்றடைவது என்பதாக ஒரு திட்டம். இந்தத் தமிழர் படைக்குத் தஞ்சை பள்ளியக்ரகாரம் அய். குமாரசாமி தலைவர். திருச்சி "நகரதூதன்" ஆசிரியர் மணவை ரெ. திருமலைசாமி யுத்தமந்திரி, பட்டுக்கோட்டை கே. வி. அழகர்சாமி அணித்தலைவர், திருப்பூர்முகைதீன், மூவலூர் இராமாமிர்தத்தம்மாள் ஆகியோர் முன்னணியில், தொண்டர்களுக்கு அறிவுரை கூறி, 1938-ஆகஸ்டு 1-ஆம் நாள் வழியனுப்பி வைத்த பெரியார், 1938-செப்டம்பர் 11-ஆம் நாள் அதே தமிழர் படையை வரவேற்றுச், சென்னைக் கடற்கரையில் திரண்டிருந்த இலட்சக்கணக்கான மக்கள் பெருவெள்ளத்தில், வீரமுழக்கம் செய்தார். அங்கே ஒரு புதுக்கர்ச்சனை புரிந்தார். தமிழ்நாடு தமிழருக்கே என்பதுதான் அது. தமிழ்நாடு தமிழருக்கே என்ற கோரிக்கை திடீரெனப் பெரியாரின் உள்ளத்திலிருந்து வெடித்ததல்ல. இந்திய அரசியல் அமைப்பில், தமிழர் நலன் தனியாகப் பாதுகாக்கப்படும் என்பதற்கு உத்தரவாதம் இல்லை. எந்நாளும் பார்ப்பனரும் வடநாட்டாரும் ஆதிக்கம் செலுத்தியே வருவர். இதற்கான பரிகாரம், தமிழ்நாட்டின் ஆட்சி தமிழர்கைக்கு வருவதுதான்

என்பன போன்ற கருத்துகள் 1930-ஆம் ஆண்டு முதலே பெரியாரின் உள்ளத்தில் உருவாகி வந்தன.

பின்னாளில் புதுக்கோட்டை திவானாக விளங்கிய கலிபுல்லா, பெரியாரிடமும் இயக்கத்தினிடமும் மிகுந்த பற்றுள்ளவர். போராட்டத்தை அவர் நெடுநாள் ஆதரித்து வந்தார்.

திருப்பூர் முகைதீன் இந்தி எதிர்ப்புக் காலத்திலிருந்து தொடர்ந்து திராவிட இயக்க மேடைகளிலும் முழங்கி வந்த ஆவேசப் பேச்சாளர். முஸ்லிம் லீகில் இருந்தவாறே நல்லநட்புடன் ஆதரித்துவந்தபண்பாளர்.

''நகரதூதன்'' இதழில் பேனா நர்த்தனம் என்ற பகுதியில், உண்மையிலேயே தமதுபேனாவை நடனமாட விட்ட நயமான எழுத்தாளர் திருமலைசாமி. கேலியும் கிண்டலும், வீரமும் விவேகமும் கொப்புளிக்க எழுது வார். பெரியாரின் அன்பர்.

இந்திப் பரணி பாடிய இந்தத் தரணி முதல்வர் பெரியார்மீது, ஆச்சாரியார் அரசு வழக்குத் தொடர்ந்து 2 ஆண்டு சிறைத் தண்டனையும், 2000 ரூபாய் அபராதமும் விதித்தது. அன்பான எதிரி ஆச்சாரியார், தமது நண்பரின் இந்தி எதிர்ப்புப் போருக்காக அளித்தஇன்பமான பரிசு பெரியாரின் ஃபோர்டுகார் (டூரர்மாடல்) 181 ரூபாய்க்கு அரசினரால் ஏலத்தில் விடப்பட்டது;அபராதத்தொகை வசூலிக்க என்று!

1938 நவம்பர் 26-ல் கைது செய்யப்பட்ட பெரியார் மீது வழக்கு, 1938 டிசம்பர் 5, 6 தேதிகளில் சென்னையில் நடைபெற்றது. தமது நண்பர்களான பாரிஸ்டர் பன்னீர்செல்வம், செட்டி நாட்டு இளவரசர் அ. முத்தையா செட்டியார் ஆகியோர் வேண்டியும், பெரியார் தமதுவழக்கம் போலவே எதிர் வழக்காடவில்லை. எழுத்து வடிவில் அறிக்கை ஒன்றினை நீதி மன்றத்தில் வெளியிட்டார். சென்னை ஜார்ஜ்டவுன் 4-வது போலீஸ் நீதிபதி மாதவராவ்தான் விசாரித்துத் தண்டனை வழங்கியவர். பெரியார் அறிக்கையில் என்ன கூறியிருந்தார்? ''நான் சம்பந்தப்படும் எந்த இயக்கமும், அல்லது கிளர்ச்சியும், அல்லது போராட்டமும் சட்டத்துக்கு உட்பட்டு, வன்முறையில்லாமல்தான் இருக்கும்! என்னுடைய பேச்சுகள் இதை விளக்கும். ஆனால், இந்தி எதிர்ப்புக்

கிளர்ச்சியை அடக்குமுறை மூலம் ஒடுக்கிவிடக் காங்கிரஸ் அரசு கருதுகிறது. வீட்டுக்குள் திருடன் புகுந்தால் கையில் கிடைத்ததை எடுத்து அடிப்பேன் என முதல் மந்திரியார் பேசிவிட்டார். நீதிபதியோ, காங்கிரஸ் அரசுக்குக் கட்டுப் பட்டவர்; அதிலும் பார்ப்பனர். எனவே எவ்வளவு அதிக தண்டனை தரமுடியுமோ அதையும், எவ்வளவு தாழ்ந்த வகுப்புத் தரமுடியுமோ அதையும், கொடுத்து,இந்த விசா ரணை நாடகத்தை முடித்து விடுங்கள்" - என்பதாகத் தமது அறிக்கையில் பெரியார், தமது உள்ளக் கிடக்கையைத் தெள்ளிதின் விளக்கியிருந்தார். முதலில் சென்னை மத்திய சிறையில் அடைக்கப்பட்ட பெரியாரை 1939 பிப்ரவரி 16-ல் பெல்லாரி சிறைக்கு மாற்றினார்கள்.

பெரியார் சிறைப்பட்டபோது, தமது தனித்தமிழ்க்குருதி கொதிப்பேறத் திரு வி. க. தமது "நவசக்தி" ஏட்டில் மிக இரக்கத்துடன் அருமையான தலையங்கம் தீட்டியிருந்தார். ஓய்வு என்பதை அறியாது வீரக்கர்ச்சனை புரிந்துவந்த கிழச் சிங்கம் இப்பொழுது ஓய்வுபெற்றிருக்கிறது. சிறையில் தலை நிமிர்ந்து கிடக்கிறது—என்று முடித்திருந்தார்.

பெரியார் சிறையேகிய பின்னர்தான், சென்னை மத்திய சிறையில் தண்டனை அனுபவித்து வந்த தாளமுத்து, நட ராசன் என்னும் இரு மாவீரர்கள் அடக்குமுறை காரணமாய், சிறையிலேயே உயிர் நீத்துக் களப்பலியானார்கள். 1939 ஜனவரி 15-ஆம் நாள் நடராசனும், மார்ச் 13-ஆம் நாள் தாள முத்துவும் மாண்டனர். தமிழகமே கொந்தளித்துக் குமுறி யது.

முதல்முறை யென்றாலும், 1938-ஆம் ஆண்டில் நடை பெற்ற இந்தி எதிர்ப்புப் போர் உலக வரலாற்றில் மேலான இடம் பெறத் தக்கதாகும். தமிழ் நாட்டிலேயே, தமிழ்நாட் டார், தமிழ் வாழ்க என்று முழங்குவதற்காகத் தண்டிக்கப் படும் கொடுமையை நடுநிலையாளர் கண்டித்தனர். தமிழ் நாட்டின் வீரமகளிர், சென்னையில் 1938 நவம்பர் 13-ஆம் நாள், தமிழ் நாட்டுப் பெண்கள் மாநாடு என்ற பெயரில், மறைமலையடிகளார் மகளாரும் திருவரங்கனார் துணைவி

யாருமாகிய நீலாம்பிகைஅம்மையார் தலைமையில்உணர்ச்சி யுடன் கூடினர். பெரியாரின் தீரமிக்க சொற்பொழிவைக் கேட்டுத் தன்மானக் குருதி சூடேறத் தாமும் மறியலில் பெருமளவில் ஈடுபடத் துணிவு கொண்டனர். இந்த மாநாட் டில் தீர்மான வடிவமாக, இனித்தோழர் ஈ.வெ. ராமசாமிப் பெரியாரை அனைவரும் பெரியார் என்றே அழைத்திடல் வேண்டுமென முடிவு செய்தனர்.

அடுத்து, வே லூரில் 1938 டிசம்பர் 26,27 நாட்களில் சர் ஏ. டி. பன்னீர் செல்வம் தலைமையில் சென்னை மாகாணத் தமிழர் மாநாடும், பண்டித நாராயணி அம்மையார் தலை மையில் பெண்கள் மாநாடும் எழுச்சியுடன் கூடி, இனித் தமி ழர்களின் தலைவர் பெரியாரே என்றும், எந்நாளும் அவர் மொழிவழி நடப்பதாகவும் உறுதி பூண்டது. இதனைத் தொடர்ந்து, சென்னையில் 1938 டிசம்பர் 29, 30, 31 நாட் களில் நீதிக்கட்சியின் 14-ஆவது மாகாண மாநாடு எழுச்சியும் உணர்ச்சியும் பொங்கிடக் கூடியது. லட்சக்கணக்கான, மக்கள், பெரியார் இல்லாமல் நடைபெறும் இந்தமாநாட்டில் கடமையுணர்ச்சியோடு குழுமியிருந்தனர். மாநாட்டின் தலைவராக, முன்னரே பெரியாரைத்தான் தேர்ந்தெடுத் திருந்தனர்.

பெரியார் பெல்லாரி சிறைக்குள் அடைக்கப்பட்டிருப்பது போல் வடிவு அமைக்கப்பட்ட அலங்கார வண்டி ஊர்வல மாய் வந்தது. மாநாட்டு மேடையில் தலைவரின் நாற்காலி யில் பெரியாரின் 'உருவப்படம் பெரிதாக வைக்கப்பட்டிருந் தது. என் தோளுக்குச் சூட்டிய மாலையைப் பெரியாரின் தாளுக்குச் சூட்டுகிறேன்—என்று நன்னீர்மை கொண்ட பன்னீர்ச் செல்வனார் நாத் தழுதழுக்கத் தமது பெருமீசை துடிதுடிக்கக் கூறித் தமக்களித்த மாலையைப் பெரியார் படத்துக்குச் சூட்டினார். பெரியாரால் முன்பே தயாரித்துத் தரப்பட்டிருந்த தலைமையுரையை இவரே படித்தார். சிறையிலடைபட்டிருந்த சிங்கம், இந்தத் தங்கத் தமிழ் நாட்டுக்குப் பங்கம் நேராமல் பாதுகாத்திட, நீதிக்கட்சியின் தலைவராக ஒரே மனத்துடன் தேர்ந்தெடுக்கப்பட்டது.

மாநாட்டில் குழுமியோர் அனைவரும் ஒரு முகமாக எழுந்து நின்று, எங்கள் மாபெருந் தலைவரே! உங்கள் உடல் சிறைப் படுத்தப்பட்டிருந்தாலும், உங்கள் வீரத்திருவுருவத்தின்முன் நாங்கள் அனைவரும் எழுந்து நின்று ஒன்றுபட்டிருக் கின்றோம். உங்கள் தலைமையில் நாங்கள் அனைவரும், சொல்வழி நின்று, கட்சி வளர, மக்கள் வாழ, நோக்கம் நிறைவேற ஓயாது உழைத்து வெற்றி பெறுவோம் என உறுதி கூறுகிறோம்—என்னும் உறுதி மொழியினைத் தமிழி லும், தெலுங்கிலும் எடுத்துக் கொண்டனர்.

பெரியார் தமது தலைமையுரையில், தாம் நீதிக் கட்சி யில் தலைவரானதால் சுயமரியாதை இயக்கத்தின் எந்தக் கொள்கைக்கும் எள்ளளவு ஊனமும் நேரவில்லை என்பதைத் தெளிவுபடுத்தினார். இந்து மதப்படிச் சூத்திரர்தான் உழைப்பாளர், தொழிலாளர், பார்ப்பனரல்லாதவர் எல் லாம்! நாம் எல்லாரும் திராவிடர் என்னும் ஒரே வகுப்பைச் சேர்ந்தவர்கள். உலகில், எல்லா மக்களுமே உழைத்து, உழைப்பின் பலனை விகிதாச்சாரப்படிப் பகிர்ந்து கொள்ள வேண்டும். "தேசபக்தி, தேசியம், தேசவிடுதலை, ஆத் மார்த்தம், பிராப்தம் என்று சொல்லி ஏமாற்றி வஞ்சித்து வயிறு வளர்க்கும் போக்கை அடியோடு ஒழிக்க வேண்டும்— இதற்கு ஒரே பரிகாரமாகத் தமிழ்நாடு தமிழருக்கே ஆக வேண்டும்—என்றெல்லாம் பெரியார் நன்கு விளக்கம் அளித் தனர். இளமைப் பிராயத்தில் இயல்பாக அவருள் கரு வாகிக் கிளர்ந்தெழுந்த சிந்தனைச் செல்வமே, கொள்கை யாய்க்கோட்பாடாய் இலட்சியமாய் இயக்கமாய்ப் பேச்சாய் எழுத்தாய் வழக்காய் போராட்டமாய் வெற்றியாய் உருவும் திருவும் பெற்றுப்பற்பல பரிமாணங்களில் பரிணாம வளர்ச்சி யாய்ப் பல்கிப் பெருகி வந்ததைத் தெளிவாகக் காணமுடி கின்றது. அடிப்படையில் அணுவளவு மாற்றமும் செய்யா மல், கட்டடத்தின் முதல்தளம், இரண்டாந்தளம், மூன்றாந் தளம் என வசதிக்கும் வாய்ப்புக்கும் நேரத்துக்கும் தேவைக் கும் ஏற்ப எழுப்பிச் செல்வதுதான் அவரது நடைமுறை என்பதும் நுட்பமாய்க் காண்போர்க்குத் திட்பமாய்ப்புரியும்.

தமது அறுபதாவது வயதில், அரசு ஊழியராக இருந் திருந்தால் வேலையிலிருந்து ஒய்வுபெற்றுச் சாய்வு நாற்காலி யில் அமர்ந்து கிடக்கவேண்டிய வயதில் பெரியார் ‘மொழிப் போராட்டத்தில் ஈடுபட்டு, வெயிலின் வெம்மை அதிகமாகத் தாக்கும் பெல்லாரி சிறையில், அடக்குமுறைக் கொடுமை களால் அவதியுற்று, உடல் நலிந்து, வயிற்று நோயினால் துன்புற்று வந்தார். வெளியிலிருந்து, வெயிலின் கொடு மையைவிடக் காங்கிரஸ் புதிய ஆட்சியின் அடக்குமுறைக் கொடுமையை அதிகம் அனுபவித்து வந்த தமிழ் மக்கள், பெரியார் வாழ்க எனச் சந்து பொந்துகளிலும் கூடச் செந்தமிழ் முழங்கிச் சிந்து பாடி வந்தனர்.

சென்னை மாகாண அரசு என்ன எண்ணிற்றோ தெரிய வில்லை; 1939–ஆம் ஆண்டு மே திங்கள் 22-ஆம் நாள் எந்தக் காரணமும் அறிவிக்காமல் திடீரென்று பெரியாரை விடு தலை செய்துவிட்டது. 190 பவுண்டு எடையுடன் சிறை சென்ற பெரியார், ஆச்சாரியார் ஆட்சிக்கு விலையாகத் தமது எடையில் 24 பவுண்டு அன்பளிப்பாக வழங்கியே, வெளியில் போந்தார். தாளமுத்து-நடராசன் ஆகிய இரு இளங்காளைகளே சிறைக் கொடுமையால் உயிர்த் தியாகம் செய்ய நேர்ந்ததே! தள்ளாத வயதில் பெல்லாரிச் சிறையில் வாடும் தலைவர் பெரியாரை நாம் உயிருடன் காண்போமா? என அய்யுற்றுக் குமைந்த தமிழ் மக்கள் களிப்பால் கூத் தாடினர்! ஊருக்கு ஊர் வரவேற்பும், பணமுடிப்பு வழங் கலும் போட்டி போட்டுக் கொண்டு நடைபெற்ற வண்ண மிருந்தன!

விடுதலை பெற்று வெளிவந்தவுடன், சென்னையில் தம்மைச் சந்தித்த பத்திரிகை நிருபர்களிடம் பெரியார், இந்தி எதிர்ப்பு இயக்கம் தொடரும் எனவும், புதிதாகக் காங்கிரஸ் அரசால் விதிக்கப்பட்டுள்ள வணிக விற்பனைவரி அநீதியானது என்றும், ஆந்திரா தனி மாகாணமாக அமைக் கப்பட வேண்டும் என்றும், தமது தலைமையில் நீதிக்கட்சி தன்மானச் சமதர்ம அடிப்படையிலேயே இயங்கும் எனவும் விரிவாக எடுத்துரைத்தார்.

அவ்வாறே, கோடைவிடுமுறைக்குப் பின்னர் பள்ளிகள் திறக்கப்பட்டதும், மீண்டும் இந்தி எதிர்ப்பு மறியல் மிக உத்வேகத்துடன் தொடங்கியது. ஏற்கனவே தண்டிக்கப் பட்ட தோழர்கள் இன்னும் சிறையில் வாடத், தம்மை மட்டும் விடுவித்தனரே, எனச் சங்கடமும் சஞ்சலமும் அடைந்திருந்த பெரியார் மனம் மகிழ, முதல் அணியாக 1939 ஜுன் 6-ஆம் நாள் சிலர் விடுவிக்கப்பட்டனர். இரண் டாவது அணியாக 1939 நவம்பர் 15-ஆம் நாள் மீதியிருந்த தோழர்களும் சிறையின்றும் விடுவிக்கப்பட்டனர். ஆக மொத்தம் 1271 பேர் சிறைத்தண்டனை பெற்றவராவர். அரசுக்கு ஏதோ நல்லெண்ணம் முளைத்து விட்டதாகத் தவறியும் யாரும் கருதிவிடக்கூடாதே என்று, "விடுதலை" அலுவலகம், நீதிக்கட்சி அலுவலகம் ஆகியவை சோதனை யிடப் பெற்றுக் கண்காணிப்புக்கு இலக்காயின.

பெரியாருடைய சிறைவாசம் அவருக்கு இன்னொரு புதிய சிந்தனையைத் தோற்றுவித்திருந்தது. இது புதிய சிந்தனை என்பதைவிடப் பட்டை தீட்டப்படாமல் ஒளி மங்கியிருந்த ஒரு வைரக்கல்; அது சிறை வாழ்க்கையில் துப்புரவு செய்யப்பட்டுப் பட்டை தீட்டப் பெற்றுச் சுட ரொளி வீசுமாறு பிரகாசமாக்கப்பட்டது என்னலாம். அதாவது நமது இனத்துக்கு என்று ஒரு பெயர் இல்லாதது போல, நாம் நம்மை ஏன் பார்ப்பனர் அல்லாதவர் என்று சொல்லவேண்டும்? நூற்றுக்கு மூன்று பேராயிருப்பவர் பெயரைச் சொல்லி, நூற்றுக்குத் தொண்ணூற்றேழு பேராயிருப்பவர்—அது அல்லாதவர்—என்று சொல்லி வருவது என்ன நியாயம்? நம்மை இந்தியன் என்றும், இந்து என்றும் கருதிக் கொள்வதால் வரும் இழிவுதானே இது? எனவே சரித்திரப்படித் தமிழ் நாட்டின் பூர்வகுடிகளான நாம் திராவிட இனத்தைச் சார்ந்தவர்கள் தாமே? எனவே நமது இனப்பெயர் திராவிடர்; அவர்கள் வேண்டுமானால் திராவிடர் அல்லாதவர் என்று வைத்துக் கொள்ளட்டும். திராவிடர்களாகிய நமது நாடு திராவிடருக்கே ஆகவேண் டாமா? இவ்வளவேன்? பார்ப்பனர்கள் ஆரிய வழி வந்தவர்கள்

என்பதை அவ்வகுப்பைச் சார்ந்த சரித்திர ஆசிரியர்களே ஒப்புக் கொண்டுள்ளார்கள்! எனவே நமது நாட்டில் நடை பெறுவது ஆரிய திராவிடப் போராட்டமேயாகும். இதற்கு முடிவு வடவர் பிடியிலிருந்து திராவிட நாட்டைத் தனி நாடாக்குவதே—எனப் பெரியார், 1939-ஆம் ஆண்டு டிசம்பர் 17–ஆம் நாள் "குடி அரசு" இதழில் முதன் முறையாக வெளிப்படுத்தினார். தொடர்ந்து திராவிடநாடு திராவிட ருக்கே என்ற உரிமை முழக்கம் நாடெங்கணும் எதி ரொலிக்கத் தொடங்கிற்று. இந்திய அரசியல் அமைப்பில் இருந்துகொண்டே, தனிநாடு ஒன்று பிரிக்கப்படவேண்டும் என்ற தத்துவத்தை உருவாக்கியவரும், உலகுக்கு அறிவித்த வரும் முதன் முதலாகப் பெரியார் ஒருவரே என்பது வர லாற்றின் மாபெரும் உண்மைக் குறிப்பாகும்!

1939-ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 10-ஆம் நாள் ஈரோட்டில் பெரியார் மாளிகையில் தென்னிந்திய நல உரிமைச் சங்கம் என்னும் நீதிக்கட்சியின் செயற்குழு நடை பெற்றது. அரசர்கள் கட்சி என்று அழைக்கப்பட்ட அந்த நீதிக் கட்சியைப் பயங்கர சமதர்மவாதி என அழைக்கப் பட்ட பெரியார், தமது இல்லத்துக்கே குடியேற்றி வைத்துப் பெருமை சேர்த்தனர். மேலும், ஆங்கிலேய அடிவருடிக் கட்சி என எள்ளி நகையாடப்பட்ட நீதிக்கட்சி, அதுவரை இந்தியாவுக்குக் குடியேற்ற நாட்டு அந்தஸ்து போதும் என்ற அடிப்படைக் கொள்கைதான் கொண்டிருந்தது. அதையும் அடியோடு மாற்றிப் பூரணச் சுதந்திரம் வேண்டும் எனப் புரட்சியும் செய்து விட்டார் பெரியார். இலங்கையில் துயருறும் தமிழர் நிலை குறித்தும், இந்தி எதிர்ப்புத்தொடர் போராட்டம், எதிர் வரும் ஜில்லா* போர்டு நகரசபைத் தேர்தல்கள், தனி ஆந்திர நாடு அமைப்பு போன்ற விஷயங் களிலும் நீதிக்கட்சியின் செயற்குழு தனது கண்ணோட் டத்தை விசாலப்படுத்த வகைசெய்தார் தலைவர் பெரியார்.

இந்தியர்களின் கோரிக்கைகளை நேரிடையாகக் கண் டறிய, அப்போதைய இந்தியா மந்திரி சர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் தலைமையில் கிரிப்ஸ்மிஷன் என 'ஒன்று இந்தியா

வுக்கு வருகை புரிந்தது. பெரியார் நீதிக்கட்சித் தலைவர் என்ற முறையில் கிரிப்ஸைச் சந்தித்துத் தமது திராவிடநாடு கோரிக்கையை விளக்கினார். கிரிப்சோ முதலில் இந்து இந்தியா, முஸ்லிம் இந்தியா எனப் பிரித்தால், பிறகு திராவிட இந்தியா, வட இந்தியா தானே வந்து விடும் என்பதாகக் கருதினாராம்.

"குடிஅரசு" வார இதழும், "விடுதலை" நாளேடும் கொடிகட்டிப் பறக்கின்றன. அண்ணாவின் எழுத்தோவியங்கள்; எஸ்.எஸ். மாரிசாமி, ரா.பி. சேதுப்பிள்ளை, என்.வி. நடராசன் ஆகியோரின் கருத்தாழமிக்க கட்டுரைகள் அணி செய்கின்றன.ஆரியர்-திராவிடர்பற்றி இலக்கிய ஆதாரங்கள் வரலாற்று உண்மைகள் பூகோளச்சான்றுகள் அடுக்கடுக்காய் எடுத்தாளப் படுகின்றன. புள்ளி விவரங்கள் பார்ப்பனக் கொள்ளையை விளக்குகின்றன. கெஜட் பதிவு பெற்ற 650 உத்தியோகங்களில் 350 பார்ப்பனர்க்கு; நூறு ரூபாய்க்கு மேல் மாதச் சம்பளம் பெறும் உத்தியோகங்கள் 6000-ல் 3508 பார்ப்பனர்க்கு; முப்பத்தைந்து முதல் அறுபது ரூபாய் வரை சம்பளம் பெறும் அலுவல்களில் 8000 பார்ப்பனர்க்கும் 9000 மற்றவர்க்கும் என்ற நெஞ்சு பதறும் நிலைமை விளக்கப் படுகின்றது.

1938-ஆம் ஆண்டு இந்திப் போரில் கண்டெடுத்த தொண்டர் மாணிக்கம் என். வி. நடராசன், அதுவரையில் காங்கிரஸ்காரர்; சென்னை பெத்து நாய்க்கன் பேட்டை வாசி. பெரியாரின் உண்மைத் தொண்டர், அண்ணாவின் அருமை நண்பர். "திராவிடன்" வார இதழில் இவர் பேனாவின் திறம் காட்டி வந்தார். தி.மு.க. அமைப்புச் செயலாளராக நெடுநாள் உழைத்தவர், எளியவர், தொழிலாளர் தோழர், கலைஞர் அமைச்சரவையில் உறுப்பினராயிருக்கும்போதே 1975ல் மரணமடைந்தார். மக்களான சோமு, செல்வம் தி.மு.க. தொண்டர்கள். அனைத்துக் கட்சியினராலும் என்றும் நட்புரிமை பூண்டு கொண்டாடப்பட்ட, சுயமரியாதை இயக்கத்தின் மக்கள் தொடர்புத் தலைவர்.

எஸ்.எஸ். மாரிசாமி இடதுகையால் மிகமிக விரைவாகச் சரமாரியாகக் "காண்டிபம்" வாயிலாகப் பொழி

வார். முதலில் காமராசருக்கும், பின்னர் இராஜாஜிக்கும், அதன்பின் கலைஞருக்கும் அணுக்கமான நண்பராக விளங்கினார். மாநிலங்களவை உறுப்பினராக நன்முறையில் கடமையாற்றியவர். 1976 மிசாக் கைதியாகி விடுதலையான பின், சிறிது நாள் ஓய்வில் இருந்தார்.]

1939 செப்டம்பர் 3-ஆம் நாள் மூண்ட இரண்டாம் உலகப் போரில் இந்தியாவின் சம்மதம் பெறாமல் இந்தியாவையும் பிரிட்டன் ஈடுபடுத்தியது தவறு என்றும், அதைக் கண்டிக்கும் முகத்தான் வெளியேறுவதாகவும் கூறித், தமது இருபத்தெட்டு மாத ஆட்சியை விட்டு, எட்டு மாகாணக் காங்கிரசும் பதவி விலகியது. சென்னை மாகாணப் பிரதமரான இராசகோபாலாச்சாரியார் 1939 அக்டோபர் 27-ஆம் நாள் பதவி நீத்தார். இதற்குள் சென்னை மாகாண கவர்னர் சர் ஆர்தர் ஹோப் நீதிக்கட்சியின் அரசை உடனே அமைக்குமாறு கட்சித் தலைவர் பெரியாருக்குத் தாக்கீது அனுப்பினார். ஆச்சாரியாரே பெரியாரிடம் வந்து, சண்டை சமயத்தில் அட்வைஸரி ஆட்சி நடக்க விடுவது ஆபத்து. தயவு செய்து நீங்கள் பிரதமர் பொறுப்பை ஏற்றுக் கொண்டால், நானும் மந்திரியாக இருந்து, எங்கள் ஆட்களிலும் 2, 3 பேரை இருக்கச் செய்து உதவுகிறேன் என்று கூறினார்.

பெரியாரோ முன்னெச்சரிக்கையாக அக்டோபர் 25-ஆம் நாள், சென்னை அடையாற்றில் நடைபெற்ற நிர்வாகக் குழுவில், நீதிக்கட்சி பதவிஏற்காது என்றும், நேசநாடுகளின் போருக்கு ஆதரவு தரும் என்றும் முடிவுகளை மேற்கொண்டார். வலிய வந்த பதவி நாற்காலியைத் தலைவர் இப்படி எளிமையாக உதறி விட்டாரே என்று சில பதவியாசைத் தோழர்கள் மனத்திற்குள் பொருமினர். தமது முடிவை 29–ஆம் நாள் பெரியார் அறிவித்துவிட்டார். நாற்பதாண்டுகட்கு முன்னரே தம்மை நாடி வந்த சென்னை மாகாணப் பிரதமர் பதவியை ஒதுக்கிய பெரியாரின் மாண்பு என்னே! வெள்ளுடை வேந்தரை நினைவுறுத்தும் இச்செயலில், அதனிலும் மேலான முற்போக்கு ஒன்றும் உள்ளது. அன்னார் தமக்குத்தான் பதவி வேண்டாமென்றார்;

தியாகராயரைப் போன்றே நீதிக்கட்சித் தலைவரான பெரியாரோ, தமது கட்சியே பதவிஏற்காதெனத் திட்டமாகக் கூறி விட்டார்! பெரியாரைப் பற்றிச் சரியாகப் புரியாத கவர்னரோ, பன்னீர் செல்வத்திடம், உங்கள் தலைவருக்கு நன்றாக ஆங்கிலம் தெரியுமா? அடுத்து முதல் மந்திரி அவர் தான்—என்றாராம். செல்வமோ, எங்கள் தலைவர் உங்கள் பதவியை ஏற்றுக்கொள்வாரா என்பதை முதலில் நீங்கள் தெரிந்து கொள்ளவில்லையே என்று, அவரது வாயை அடைத்தாராம்.

நவம்பர் இரண்டாம் நாள் பண்டித முத்துசாமியாரும், ஈ. வெ. கிருஷ்ணசாமியாரும் விடுதலை பெற்று வெளி வந்தனர். பெரியாரே சிறை வாயில் சென்று அன்னாரிரு வரையும் வரவேற்றுச் சிறப்பித்தனர். ஈ. வெ. கிருஷ்ண சாமியோ முன்னிலும் தீவிரத்துடன், ஈரோட்டில் ஆரிய திராவிட ஆராய்ச்சிப் பள்ளி ஒன்று துவக்கிப் பணிபுரிய லானார். ஈரோட்டில் திராவிட நடிகர் கழகம் ஒன்றைப் பெரியார் 1939 நவம்பர் 24-ஆம் நாள் துவக்கி வைத்தார்.

வடவர் ஆதிக்கம் அடியோடு தகர்க்கப்பட்டுத் தமிழர் சுய ஆட்சி உரிமை பெற வேண்டும் என்ற அடிப்படையில் பெரியார் திராவிட நாடு திராவிடருக்கே என்ற முழக்கத்தை உருவாக்கி, முதன்முதலாக இதே தலைப்பில், "குடிஅரசு" 1939 டிசம்பர் 17-ஆம்நாள் இதழில் தலையங்கம் தீட்டினார். பின்னர், இந்தியாவில் இந்துக்களாலும், காங்கிரஸ் கட்சியா லும் முஸ்லிம் சமுதாயத்துக்கு நன்மை கிடைக்காது என்ப தாகக் கருத்து வெளியிட்ட அனைத்திந்திய முஸ்லிம்லீக் தலைவர் முகம்மதலி ஜின்னாவை ஆதரித்து, 22-ஆம் நாள், அவரது அறிவிப்பைப் பெரியாரும் வழிமொழிந்தார். திராவிடநாடு பிரச்சினையைத் தமக்கு 61-வது பிறந்த நாள் விழாவெடுத்த திருவாரூரில் 18-ம் தேதியும், பின்னர் காஞ்சி யில் இந்தி எதிர்ப்புப் போராட்டம் பற்றி விவாதிக்கக் கூடிய குழுவில் 31-ந் தேதியும் விரிவாக விளக்கினார் பெரியார்.

பம்பாயில் சுயமரியாதை இயக்க-நீதிக்கட்சித் தோழர் களும், டாக்டர் அம்பேத்காரும் பெரியாரின் வருகையை

மிகவும் விழைந்தனர். நெடுநாளைய அவர்களது விருப்பத்திற்கு ஒருப்பட்டுப், பெரியார் தமது குழுவினருடன், ரயில் மார்க்கமாக 1940–சனவரி 6-ஆம் நாள் பம்பாய் போய்ச் சேர்ந்தார். குழுவில் "சண்டே அப்சர்வர்" ஆசிரியர் பி. பாலசுப்ரமணியம், "ஜஸ்டிஸ்" ஆசிரியர் டி.ஏ.வி. நாதன், கே.எம். பாலசுப்ரமணியம், அறிஞர் அண்ணா ஆகியோர் இருந்தனர். டாக்டர் அம்பேத்கார் பெரியாருக்கு 6-ந் தேதி இரவு விருந்தும், 9–ந் தேதி இரவு விருந்தும், 7-ந் தேதி மாலை தேநீர் விருந்தும் அளித்துச் சிறப்பித்தார். 8-ந் தேதி இரவு ஜனாப்ஜின்னா அவர்களை அவரது இல்லத்தில், டாக்டர் அம்பேத்காரும் உடனிருக்கப், பெரியார் சந்தித்துப் பேசினார். தமது இந்தி எதிர்ப்பு பற்றி விளக்கவே, அவர்களிருவரும் ஆரவாரத்துடன் ஆதரவு தெரிவித்தனர். தனிநாடு பிரச்சினை குறித்தும் எடுத்துரைத்தார். மூவரும் ஆங்கிலேயர்களின் பிரியத்துக்குரிய காங்கிரஸ் பிடியிலிருந்து நாட்டை எப்படி விடுவிப்பது? இந்துக்களின் கொடுமையிலிருந்து— முஸ்லிம், தாழ்த்தப்பட்ட. திராவிட இன மக்களை எப்படி மீட்பது? என்பது பற்றியெல்லாம் கருத்துப் பரிமாற்றம் செய்து கொண்டனர். பம்பாய் வாழ் இயக்கத் தோழர்களின் ஊர்வலம், பொதுக்கூட்டம் ஆகியவற்றில் பெருமையுடன் கலந்து கொண்டு, அவர்களைப் பூரிப்பில் ஆழ்த்திய பெரியார், சனவரி 10-ஆம் நாள் புறப்பட்டார்; இந்தியா ஒரே நாடு என்ற தத்துவத்தைத் தூளாக்கும் வெடிமருந்தைத் தூவி விட்டு!

தமிழகத்திற்குத் திரும்பிய பெரியார், காங்கிரஸ் ஆட்சி ஒழிந்த பின்னும், அது புகுத்திய கட்டாய இந்தி இன்னும் ரத்தாகாத நிலை குறித்துக் கண்டித்து வந்தார். கவர்னரின் கீழிருந்த அட்வைசர் ஆட்சி, 1940 பிப்ரவரி 21-ஆம் நாள் வெளியிட்ட உத்தரவில், இந்தியை விருப்பப் பாடமாக வைத்துக் கொள்ளலாம் எனக் கூறியிருந்தது. கட்டாய இந்தி ஒழிந்ததற்குக் களிப்புத் தெரிவித்தாலும், மக்களின் வரிப்பணத்திலிருந்து விருப்பப் பாடமாகவேனும் இந்தி கற்க அவசியமில்லையெனப் பெரியார் வெறுப்பும் தெரி

வித்தார். மற்றப் பத்திரிகைகள் எதிர்ப் பிரச்சாரம் செய்து வந்த போதிலும், ஆதரவு தெரிவித்து வந்த "மெயில்" ஏட்டுக்குப் பெரியார் தமது நன்றியை, 25-ஆம் தேதி "குடி அரசு" அறிக்கையில் குறிப்பிட்டிருந்தார்.

சென்னை ராயப்பேட்டையில் நீதிக்கட்சியின் தலைமை அலுவலகத்தை 1940 பிப்ரவரி 4–ஆம் நாள் சர் ஏ. டி. பன்னீர் செல்வம் திறந்து வைத்தார். பிரிட்டிஷ் அரசு அவரை லண்டனில் இந்தியா மந்திரி ஆலோசகராக நியமித்திருந்தது. பெரியார் அளவற்ற மகிழ்ச்சியுடன் அவரைப் பாராட்டினார். லண்டன் புறப்படுமுன் தமிழ் நாடெங்கும் அவருக்கு வழியனுப்பு விழாக்கள் சிறப்புடன் நடைபெற்றன. ஆனால் அந்தோ! அவர் புறப்பட்டுச் சென்ற ஹனிபால் என்ற விமானம் மார்ச் 1-ஆம் நாள் காணாமல் போய் விட்டதாக ஒரு செய்தி வந்தது. இதுவரையில் அது என்ன ஆயிற்று என்பதைக் கண்டறிய முடியாத ஒரு மர்மமாகவே அது போய்விட்டது! தமது துணைவியார் நாகம்மையார், தமது தாயார் சின்னத்தாயம்மையார், தமது அண்ணன் மகன் லண்டனில் படித்த ரங்கராம் ஆகியோர் மறைந்த போதும் கண்ணீர் சிந்தாத பெரியார், தமது உண்மைத் தோழரும், உற்ற துணைவரும், உள்ளும் புறமும் ஒன்றாயிருந்தவரும், ஓயாத உழைப்பாளரும், தம்மிடம் களங்கமற்ற அன்பும் விசுவாசமும் கொண்டவருமான பன்னீர்செல்வம் மறைவுக்குக் கலங்கிக் கதறி, முதன் முறையாகக் கண்ணீர் வடித்தார்! அவருக்குக் கிடைத்த பதவி, சர்க்கரை தடவிய நஞ்சு உருண்டை குத்திய தூண்டில் முள்ளாகவும், பன்னீர்செல்வம் அத்தூண்டிலில் சிக்கிய மீனாகவும் ஆன நிலையினை எண்ணி எண்ணி மனம் குமைந்தார் பெரியார்! ஏப்ரல் 2-ஆம் நாள் பன்னீர்செல்வம் மறைவுக்குத் துக்க நாள் என்று அறிக்கை வெளியிட்டார். ஏப்ரல் 7-ஆம் நாள் கோவையில், என். ஆர். சாமியப்பா, பா. தாவுத்ஷா, சர் அ. முத்தையா செட்டியார் ஆகியோர் பங்கேற்ற நீதிக்கட்சி மாநாட்டு அரங்கிற்குப் பன்னீர் செல்வம் பெயரைச் சூட்டினார் பெரியார்!

இதற்கிடையில் ஜனாப் ஜின்னா, அதுகாறும் இஸ்லாமியக் கலாச்சாரப் பாதுகாப்பு, உத்தியோக உரிமை கோருதல் ஆகியவற்றுக்காக நிறுவப்பட்ட முஸ்லிம் லீக்கின் சார்பில், 1940 மார்ச் திங்களில் முதன் முதலாகத் தமது பாக்கிஸ்தான் என்னும் தனி நாடு கோரிக்கையைப் பிரகடனம் செய்திருந்தார். பெரியார் அதனை முழுமையாக வரவேற்று, மார்ச் 11-ஆம் நாள் "குடி அரசு" தலையங்கம் தீட்டினார். பின்னர் ஜூன் 6-ஆம் நாள் காஞ்சியில் நடைபெற்ற திராவிட நாடு பிரிவினை மாநாட்டை ஒட்டி, ஜின்னா பெரியாருக்குக் கடிதம் எழுதியிருந்தார். அந்த மாநாடு திராவிட நாடு தனி ஸ்டேட் ஆவதற்கான நடவடிக்கைகள் எடுக்கும் அதிகாரத்தைப் பெரியாருக்கு வழங்கியது. அடுத்த வாரத்தில் நெல்லையில் நடந்த தமிழர் மாநாட்டின் தலைமை ஏற்றபோது, பிரிட்டிஷாரின் யுத்த முயற்சிகட்கு ஆதரவு தெரிவிக்கும் தீர்மானத்தைப் பெரியார் நிறைவேற்றினார். அண்ணாவுடன் இங்கு, சி. பி. சின்னராஜ், பி. சண்முக வேலாயுதம் கலந்து கொண்டனர். சென்னை திரும்பியதும் அடுத்த திங்களில் அதாவது ஜூலை 30–ஆம் நாளில் சென்னை வந்திருந்த வைசிராய் வெல்லிங்டனை, அவர் விரும்பிய வண்ணம் சென்று சந்தித்துப் பேசினார் பெரியார்.

சிந்தனைச் சிற்பி சி. பி. சிற்றரசு என அழைக்கப்பட்ட வேலூர் சின்னராஜ் சுயமரியாதை இயக்க முன்னணி வீரர். அனல் பறக்கப் பேச எழுத நடிக்க வல்லவர். அண்ணாவின் அன்புத் துணைவராய் விளங்கியவர். "தீப்பொறி" ஏடும், போர் வாள் நாடகமும் கணக்கற்ற நூல்களும் நகைச்சுவை மிளிரும் பேச்சும் தனித்தன்மை பெற்றவை. 1978-ல் மறைந்தார். தமிழ் நாடு சட்ட மன்ற மேலவைத் தலைவராகக் கலைஞர் ஆட்சியில் வீற்றிருந்தவர்.

ஈரோடு சண்முகவேலாயுதம் "ஈரோடு வாசி", "ஈரோட்டுப் பாதை" ஆசிரியர். எந்நாளும் பெரியாரின் அந்தரங்கத் தொண்டர். நல்ல பேச்சாளர். பெரியாரின் அசைவுக்கும் அர்த்தம் சொல்லும் வித்தகர்.

1940 மே 5-ஆம் நாள், சென்னையில், இந்தி எதிர்ப்புத் தியாகிகளான தாளமுத்து நடராசன் கல்லறைக்குப் பெரியார் அடிக்கல் நாட்டினார். 1939 அக்டோபரில் அரசு பதவி நீங்கியும், தமது சம்பளத்தை மட்டும் பெற்று வந்தனர், சென்னை மாகாணச் சட்டமன்ற உறுப்பினர்கள். இதைக் கண்டித்துச் சம்பள ஒழிப்புநாள் கொண்டாடினார் பெரியார், மே 15-ஆம் நாள்!

வரலாற்றுப் புகழ் தாங்கிய திருவாரூர் மாநாடு 1940 ஆகஸ்டுத் திங்கள் 24, 25 ஆகிய இரு நாட்களிலும் சிறப்புற நடைபெற்றது. 15-வது நீதிக்கட்சி மாகாண மாநாடு இது. பெரியார் தலைமையில், இளவரசர் முத்தையா திறந்து வைக்க, புச்சிரெட்டிப்பாலம் ராமச்சந்திர ரெட்டியார் கொடி உயர்த்த, செல்வம் நகரில், ஜின்னா மண்டபத்தில், கோலாகலமாகக் கூடியது. திராவிடநாடு திராவிடருக்கே என்ற முழக்கம் கட்சியின் தீர்மானமாக மாநாட்டில் இயற்றப்பட்டது மிக முக்கியமானதாகும். கி.ஆ.பெ. விசுவநாதம் காரியதரிசியாகவும், சி. என். அண்ணாதுரை கூட்டுக் காரிய தரிசியாகவும் இங்கு தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

ஆரிய, இந்து பிடிப்பிலிருந்து நம் மக்கள் விடுபடத் தனி நாடுதான் சிறந்தவழி; தாயைக் கொல்வதா? பசுவை வெட்டுவதா? என்ற மாய்மாலப் பேச்சுகளுக்கெல்லாம் மயங்கிடக்கூடாது. சிலோன், பர்மா முதலிய நாடுகள் இந்தியாவிலிருந்து தனியே பிரிந்ததால்தான் தம் மக்களை வாழவைக்கவும், பிறரை அங்கிருந்து விரட்டவும் முடிந்தது. ஒரு காலத்தில் இங்கிலாந்தில் அந்நியத் துணி அணிவோருக்கு 30 பவுன் அபராதம்! இப்படிச் செய்து சுதேச நெசவுத் தொழிலை வளர்த்தது இங்கிலாந்து—என்றெல்லாம் கணக்கற்ற ஆதாரங்களை அள்ளி வழங்கினார் பெரியார்.

கட்சி இவ்வளவு வளர்ந்தும், அதிகார பூர்வமான தினசரி ஏடாகிய "விடுதலை" மாதம் 500 ரூபாய் நட்டத்தில் நடக்கிறதே எனப் பெரியார் அங்கலாய்த்தார். இருப்பினும் கலக்கமுறாது தமது பணியினைத் தொடர்ந்தார். சென்னை

யில் டாக்டர் நாயர் நினைவுநாள், கோகலே மண்டபத்தில், 1940-ஜுலை 20-ஆம் நாளில் நடைபெற்றபோது அரிய கருத்துக்களை வழங்கினார். டாக்டர் நாயரை திராவிடத்து லெனின் என வர்ணித்தார். அவர் இருபது ஆண்டுகட்கு முன்பே தனித் திராவிட நாடு கருத்துக்கு ஒரு கருவினைத் தந்தவராம். பதவியில் நமக்கு நாட்டம் இருக்கக்கூடாது; 17-ஆண்டுக்காலம் பதவியிலிருந்தது ஜஸ்டிஸ் கட்சி; ஆனால் அதனால், காங்கிரஸ் தன்னை வளர்த்துக் கொள்ளவே ஏதுவாயிற்று; காங்கிரஸ் 28 மாதம் இப்போது ஆள்வதற்குள், நாம் எவ்வளவு நம்மை வளர்த்துக் கொண்டு விட்டோம்! எனவே நாம் பதவியை நாடாமல், கட்டுப்பாட்டை வளர்ப்போம்—என்றார் பெரியார்.

பெரியாரின் பெருமையினைப் பாராட்ட யங் ஜஸ்டிசைட் லீக் சார்பில் சென்னையில் கன்னிமாரா ஓட்டலில் அக்டோபர் 6-ம் நாள் விருந்தொன்று நடந்தது. பிரமுகர்கள் பலரும் கலந்துகொண்டு பாராட்டினர். அதே திங்கள் 25-ஆம் நாள் சுந்தர வடிவேலு—காந்தம்மா கலப்புத் திருமணம் பதிவு செய்யப்பட்டது; பெரியார் வாழ்த்தோடு!

> என். டி. சுந்தர வடிவேலு எம்.ஏ., எல். டி. கல்வித் துறையில் ஆய்வாளராகத் துவங்கிப் பல்கலைக் கழகத் துணை வேந்தராக ஆறாண்டு பணியாற்றும் உயரம் வளர்ந்தவர். பெரியாரின் அன்புக்குரியவர். குஞ்சிதம் குருசாமி அம்மையாரின் தங்கையான எம்.எஸ்.சி. பட்டதாரி காந்தம் அம்மையாரைப் பதிவுத் திருமணம் செய்தவர். ஒரே மகன் இளம் அறிவாளன் வள்ளுவன் மறைவால் உள்ளம் பாதிக்கப்படினும், கல்விவெள்ளம் பாமரனுக்கும் பாய்ந்திட வழிவகுத்த கொடையாளர். காமராசர் காலத்து மதிய உணவு இவரது திட்டமே.

தொழிற் சங்கவாதியும், நீதிக்கட்சித் தலைமகனுமாகிய பாசுதேவ் இவ்வாண்டு நவம்பர் ஆறாம்நாள் சென்னை மேயராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றது பெரியாரின் மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். 1939-நவம்பரில், இருந்த பழைய அமைப்பின் உதவியால், சத்தியமூர்த்தி அய்யர் மேயரானதற்குக் காங்கிரஸ்—பார்ப்பன வட்டாரங்கள் குதூகலித்துக்

கிடந்தன! சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் 1940 நவம்பர் 11-ஆம் நாள் பெரியாரைச் சந்தித்துச் சென்னை மாகாண ஆட்சிப் பொறுப்பை ஏற்குமாறு யோசனை கூறினார். பெரியார் இசைய மறுத்தார். இக்காலகட்டத்தில் அண்ணாவின் கட்சிப்பணி.உச்ச நிலையிலிருந்தது. சென்னை யில் சீர்திருத்தத் தொண்டர்கள் அண்ணா தலைமையில் மாநாடு கூடிப் பெரியார் கருத்துகளுக்கு உரமேற்றினர். பின்னாட்களில் எதிர் முகாம்களுக்குச் சென்றுவிட்ட வேளுக்குடி கா.மு.ஷெரீப்,தமது கவிதைகளைக் ''குடிஅரசு'' இதழ்களில் தொடர்ந்து யாத்தளித்து வந்தார். ''குடி அரசு'', ''விடுதலை'' ஆகிய இரண்டு பத்திரிகைகளையும் சென்னையிலிருந்து வெளிக்கொணர ஏற்பாடு செய்யப் போவதாகக் ''குடிஅரசு'' இதழில் டிசம்பர் 29-ல் பெரியார் அறிக்கை வெளியிட்டார். அதே போன்று 1941-சனவரி -ஆம் நாள் நிறுத்தப்பட்ட ''குடி அரசு'' மீண்டும் ஈரோட்டி லிருந்து 1943 அக்டோபர் 16-ஆம்நாள்தான் வெளியாயிற்று! அப்போது கைவல்யம் அவர்கள் ''வந்தாயா குடி அரசே?'' என்று வாழ்த்தி, வரவேற்றுத் தம் பேனாவை உருவிப் புறப் பட்டார், எதிர்த்தோரைத் தாக்குதலுக்கு!

ரயில்வே நிலையங்களிலுள்ள உணவு விடுதிகளில்—இவ் விடம் பிறாமணுளுக்கு, இவ்விடம் இதராளுக்கு—என்று தனித்தனியே இருவேறு இடங்கள் சாதி அடிப்படையில் இருந்ததைப் பெரியார் வன்மையாகக் கண்டித்து வந்தார். பார்ப்பதற்கு மிக அற்பமானதாக இது தோன்றினாலும், பெரியாருடைய தொலை நோக்குப் பயணத்தில், இதெல்லாம் காலில் இடறும் சிறுகல் எனினும், சமூக இழிவு ஒழிப்பிற்கு, இதனை நீக்குவது அவசியம் எனப் போராடினார். ரயில் வண்டிகளில் முதல் வகுப்பு இரண்டாம் வகுப்பு மூன்றாம் வகுப்பு என்றுதான் இருந்ததே தவிரப் பிராமணாள் வகுப்பு சூத்திராள் வகுப்பு என இருந்ததில்லையே! 20–3–1941-ல் ரயில்வே நிர்வாகத்தின் இணக்கத்தினால் இந்த பேதம் ஒழிக்கப்பட்டது; பெரியாருக்கு வெற்றிதானே? (''விடுதலை'' 21—3—41 அன்று பெட்டிச் செய்தி)

சோவியத் ரஷ்யாவில் பொதுவுடைமை இயக்கத் தந்தையான லெனினுடன் தம் இளமைக் காலத்தில் இணைந்து பணியாற்றிய, வங்க வீரர் எம். என். ராய், பின்னர் இந்தியா திரும்பிக், காங்கிரசில் இருந்து, தமது தீவிரப் போக்கினுக்கு அது ஏற்றதல்ல என விலகி, ரேடிக்கல் டெமக்ரடிக் பார்ட்டி எனும் தீவிர ஜனநாயகக் கட்சியினைத் துவக்கினார். பெரியாருக்கு அவரிடத்திலும், அவரது முற்போக்குக் கொள்கையிடத்திலும் மிகுந்த பற்று உண்டு. அவரது கருத்துகளைக் "குடி அரசு" இதழில் மொழி பெயர்த்து வெளியிடச் செய்வார். 1941-ஆம் ஆண்டு பிப்ரவரியில் அவர் தமது துணைவியாரான ஜெர்மானிய மாதரசி எல்லென்ராயுடன், சென்னைக்கு வருகை தந்து, பெரியாரின் விருந்தினராக இருந்தார். இருவரும் தத்தம் சிந்தனை விருந்துகளைப் பரிமாறிக் கொண்டனர். அகில இந்தியக் காங்கிரஸ் எதிர்ப்பு முன்னணி ஒன்றை உருவாக்கிக், காங்கிரசல்லாத மந்திரிசபையை முதலில் சென்னையில் அமைத்து, வழிகாட்ட வேண்டும் எனப் பெரியாரை எம். என். ராய் கேட்டுக் கொண்டார்.

நாடெங்கிலும் திராவிடர் உணர்வு வெள்ளமாகப் பெருக்கெடுத்து ஓடியது! ஆங்காங்கு ஏற்கனவே இருந்து வந்த பற்பல பார்ப்பனரல்லாதார் சங்கங்களெல்லாம் திராவிடர் கழகங்களாக மாற்றம் பெற்றன. பெரியார் மீண்டும் 1942-ஆம் ஆண்டில் ஒரு முறை வடநாடு சுற்றுப் பயணம் சென்றார். அங்கிருந்து தகவல் தந்து அண்ணாவும் புறப்பட்டார். "குடி அரசு" இதழ் நிறுத்தப்பட்டதால், அங்கிருந்து சில எழுத்துகள், பெட்டிகள், அலமாரிகள் முதலிய அச்சகத்துத் தேவைகளைப் பெரியார் கொடுத்து உதவ, அண்ணா காஞ்சியிலிருந்து "திராவிட நாடு" என்ற வார இதழைத் துவக்கினார். 1942 மார்ச் 8-ஆம் நாள், முதல் இதழ் வெளிவந்தது. "குடி அரசு" இல்லாத குறையை அது போக்குவதாகவும், "திராவிட நாடு" இதழ் வளர்ச்சிக்கு ஆங்காங்கு தோழர்கள் நிதியளிக்க வேண்டுமென்றும் பெரியார் 1-4-1943-ல் அறிக்கை வெளியிட்டார். தாமே நூறு

ரூபாய் அளித்தார். காஞ்சியில் திராவிட நடிகர் கழகம் ஏற்படுத்தித், தாம் எழுதிய சந்திரோதயம் என்னும் புரட்சி நாடகத்தில், தாமே மூன்று வேடங்கள் ஏற்று நடித்துத் தமிழ் நாடெங்கும் அந்த நாடகத்தின் வாயிலாகவும் அண்ணா நிதி திரட்டினார். திருவாரூரிலிருந்து மாணவர் மு. கருணாநிதி 1942 ஏப்ரல் 26-ம் தேதியிட்ட "திராவிட நாடு" இதழில் இளமைப் பலி என்ற கட்டுரை தீட்டியிருந் தார். இவர் திருவாரூரில் "முரசொலி" என்ற சிறு ஏடு ஒன்று துவக்கிக் காலணா விலையில் 1942 ஆகஸ்ட் 10-ஆம் நாள் முதல் வெளியிட்டு வந்தார். வேகமும் விவேகமும் மிக்க எழுத்துகளில் பெரியாரின் கருத்துகள் "முரசொலி" யில் மிளிர்ந்தன.

பாரத மாதாவைத் துண்டாடுவதா? என்று பதைத்தவர் கள் தங்கள் பாதையை மாற்றிக் கொண்டனர். இராஜாஜி காங்கிரசிலிருந்து விலகிப் பாக்கிஸ்தான் பிரிவினைக்கு ஆதரவு தந்தார். அவருக்காகத் துவக்கப்பட்ட "கல்கி" வார இதழ் பிரிவினைக் கொள்கையைத் தாங்கி எழுதியது. 1942 ஏப்ரல் 23-ஆம் நாள், பெரியார் ஆச்சாரியாரின் பாக்கிஸ் தான் ஆதரவு பற்றிக் குறிப்பிட்டுத், தென்னாட்டில் நீதிக் கட்சியின் உடன்பாடு பெறாமல் எந்தத் திட்டமும் நிறை வேற்றப்படக்கூடாது—முடியாது என நினைவுறுத்தினார். ஈரோட்டில் பெரியாரின் வீட்டிற்கே வந்து ராஜாஜி, திராவிடநாடு பிரிவினைக்கு ஆதரவு தருவதாகச் சொன் னார். ஈரோடு ரயில்வே ஸ்டேஷன் மைதானத்தில் நடந்த பொதுக் கூட்டத்தில் இராமசாமி நாயக்கர் கேட்கும் திரா விடஸ்தானையும் திராவிட மக்கள் கேட்டால் பிரித்துவிட வேண்டியதுதான் என்று வெளிப்படையாக ஆதரவு தந்த தோடு அதன் அவசியம் பற்றியும் பேசினார். 1942 ஆகஸ்டு சட்ட மறுப்புக் கலவரங்களால் பொது மக்களுக்குத் தொல்லைதான் எனப் பெரியார் கருதினார். இதனால் விலைவாசி ஏற்றம் ஏற்பட்டதை எடுத்துக் காட்டினார். ஆங்காங்கு காங்கிரஸ்காரர்களால் ஏற்பட்ட அழிவு, சேதம், சொத்து நாசம் ஆகிய மோசமான செயல்களைக் கண்டித்

தார். இதனால்தான் அடுத்த அக்டோபர் 18-ஆம் நாள் சென்னை மாகாண கவர்னரைச் சந்தித்து, துவக்கத்திலிருந்து தாம் ஆகஸ்டுக் கலவரங்களைக் கண்டனம் செய்ததை எடுத்துக் காட்டி, அரசினர் விதித்த கூட்டு அபராதத் திட்டத்திலிருந்து நீதிக் கட்சியினர்க்கு விலக்களிக்கக் கோரினார். வைசிராய், கவர்னர் இருவருமே 1942-ஆம் ஆண்டில் மீண்டும் வேண்டுகோள் விடுத்தும், பெரியார் சென்னை ஆட்சிப் பொறுப்பை ஏற்க மறுத்தார். பெரியாருக்குச் சிலை ஒன்று நிறுவ வேண்டுமென அண்ணா அக்டோபர் 25 "திராவிட நாடு" இதழில் கருத்தறிவித்தார்.

1942 இறுதித் திங்களில் பெரியாருக்கு உடல் நலமில்லை. சென்னைப் பொது மருத்துவமனையில் சில நாள் இருந்துவிட்டு, ஈரோடு சென்று ஓய்வு எடுத்து வந்தார். ஈரோட்டிலிருந்து "விடுதலை" நாளேடு மீண்டும் வெளியாயிற்று. சென்னையில் சர் ஏ. ராமசாமி அவர்களின் மூத்த மகன் டாக்டர் ஏ. கிருஷ்ணசாமி (பாரிஸ்டர்) "லிபரேட்டர்" என்ற ஆங்கில நாளேட்டினை 1942 டிசம்பர் 7-ஆம் நாள் துவக்கினார். இது நீதிக் கட்சியின் படைக்கலனாக விளங்கியது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஒரு பட்டமளிப்பு விழாவில் கலந்துகொண்ட திருவாங்கூர் மகாராணியும், மன்னரும் தமது நல்லெண்ண அறிகுறியாய், சமஸ்கிருத வளர்ச்சிக்கு, ஒரு லட்சம் ரூபாய் நன்கொடை தருவதாக அறிவித்தனர். இதைக் கேள்வியுற்ற பெரியார், உள்ளங் கொதித்து, வடமொழி வளர்ச்சிக்கு இந்தப் பணம் செலவிடப்படலாகாது என வலியுறுத்தியும், வற்புறுத்தியும் போராடினார். இறுதியில், மாணவர் விடுதியினை விரிவுபடுத்திட அத்தொகையினை செலவழிப்பதாகப் பல்கலைக் கழக நிர்வாகம் முடிவெடுத்த பின்னரே, பெரியார் ஓய்ந்தார். திருவாங்கூர் அரசர் இதற்கு இணங்காவிடில் பணத்தையே திருப்பித் தந்துவிடலாம் என்றார் பெரியார்!

உடல் நிலை சரியானதும், மீண்டும் பெரியாரின் சுற்றுப் பயணங்கள் தொடர்ந்தன. இளைஞர்களைப்

பொதுவுடைமைக் கொள்கைகள் பெரிதும் கவர்ந்ததால், அவர்கள் அங்கே ஈர்க்கப்படுவதைத் தடுக்கவே, தாம் 1930ல் உப்பு சத்தியாக்கிரகம் தொடங்கியதாகக் காந்தியார் உண்மையை ஒப்புக் கொண்டார்; இது காந்தியாரின் சனாதனப் போக்கையே காட்டுகிறது என்று பெரியார் எடுத்துக் காட்டினார். பெங்களூரில் நடைபெற்ற நீதிக் கட்சி மாநாட்டில் பங்கேற்றார்; பின்னர் ஜூலை 1943-ல் உடல் நலிவுற்றுச் சில காலம் சென்னைப் பொது மருத்துவ மனையிலிருந்தார். ராஜா அண்ணாமலைச் செட்டியாரால் புதிதாகத் தொடங்கப் பெற்று, முறுக்கோடு பவனி வந்த தமிழிசை இயக்கத்துக்குப் பெரியார் தமது ஆதரவைத் தெரிவித்தார். கொச்சி திவான் ஆர். கே. ஷண்முகம், சர் ஏ. முத்தையா செட்டியார் முதலியோர் முன்னோடிகளா யிருந்தனர்.

என்னதான் நீதிக்கட்சிக்குத் தலைவராகத் தாம் இருந்த போதிலும், சுயமரியாதை இயக்கத்தில்தான் தமக்கு நாட்டம் அதிகம் எனப் பெரியார் காட்டி வந்தார். நீதிக் கட்சியைப், பெரியாரைத் தவிர இன்னொருவர் கூட நடத்தி விடலாம்; ஆனால் சுயமரியாதை இயக்கத்துக்குப் பெரியார் தான் இருக்க வேண்டும்—என்று "விடுதலை" தலையங்கம் தீட்டியது. மேலும் இயக்கத்துக்குச் சரியான ஒரு வாரிசு வேண்டும் என்பதாகவும் பெரியார் தெரிவித்தார். 1943-செப்டம்பர் 13-ஆம் நாள் ஏட்டில், பொறுப்பாக இருந்து; கட்சி, பத்திரிகை, பதிப்பகம், அச்சகம் ஆகியவற்றைக் கவனிக்க ஆட்கள் தேவை என்றும், வருகின்றவர் சிறிது காலம் இருப்பதும், திருமணமோ வேறு நிலையோ கிடைத் ததும் அகன்று விடுவதுமாயிருக்கிறார்கள். இது இயற்கை தான் என்றாலும், காரியங்கள் நடைபெறத் தடையா கின்றன என்றார் பெரியார். அதனால் "விடுதலை" ஏட்டைச் சென்னைக்கு மாற்றுவதாக அறிவித்தார். இப்போது "குடி அரசு" துவக்கப்பட்டதால், ஈரோட்டிலிருந்து "விடுதலை" 1943 அக்டோபர் 18-க்குப் பிறகு வெளியாகவில்லை.

1933-ல் நாகம்மையார் காலமான பிறகு, பெரியாருடைய தனிப்பட்ட தேவைகளைக் கவனிக்க அணுக்கமாக யாருமே யில்லை! அண்ணார் வீட்டிலோ, தங்கை வீட்டிலோ ஈரோட்டிலிருக்கும்போது உணவு கிடைத்துவிடும். ஆனால், இப்போதெல்லாம் பெரியாருக்கு ஓயாத உழைப்பினால், அடிக்கடி உடல் நலக் குறைவு ஏற்பட்டது. அம்மாதிரி நேரங்களில், ஒரு செவிலிப்பெண் அளவிலாவது உடனிருந்து பரிவு காட்ட ஒருவர் தேவையல்லவா? இந்த எண்ணத்தை 1943 அக்டோபர் 23-ஆம் நாள் "குடிஅரசு" இதழில் செல்வி கே. அரசியல் மணி அம்மையார் தெரிவித்திருந்தார்.

நவம்பர் 19-ம் நாள் ஈரோட்டில் பெரியார் தலைமையில் நடைபெற்ற சந்திரோதயம் நாடகத்தின் வாயிலாக அண்ணாவின் "திராவிடநாடு" வளர்ச்சிக்காக 4000 ரூபாய் கிடைத்தது. இந்த நாடகத்தைக் கண்ணுற்ற பெரியாருக்குக் கலைத் துறையின்மீது அதிக ஆவல் பிறந்தது. நம்மவர்கள் இந்தக் கலைகளை நன்முறையில் வளர்த்திட, நாமும் மூன்று வகையான பிரிவுகளை உண்டாக்க வேண்டும். சினிமா நாடகம் பார்க்கிறவர் கழகம், இசை நுகர்வோர் கழகம், பத்திரிகை படிப்போர் கழகம்—இவை நமக்கு அவசியம் என்றார் பெரியார். திருவையாறு அரசர்கல்லூரியில், விடுதியிலுள்ள பார்ப்பன மாணவர்க்குத் தனி உணவு ஏற்பாடு நடைபெறுவது கேள்விப்பட்டு, "மீண்டும் சேர்மாதேவியா?" எனப் பெரியார் குமுறினார்.

கோவை மாவட்டத்தில் முதலாவதாகத் திராவிடர் கழகம், 1943 நவம்பர் 18-ஆம் நாள் பெரியாரால் ஆரம்பிக்கப் பட்டது. இது ஆங்காங்கு பரவத் தொடங்கியது.

மாயூரத்தை அடுத்த மூவலூரில் பெரியார் பிறந்த நாள் விழாவில் நவம்பர் 21-ஆம் நாள் வ. ரா. நெடுஞ்செழியன் கலந்து கொண்டதாகக் "குடிஅரசு" செய்தி ஒன்று வெளியாகியுள்ளது. யார் இவர்?

பதினான்கு வயது பள்ளிச் சிறாராயிருந்த போதே 1938-இந்திப் போரில் திருவாரூரில் கொடி பிடித்துக் கோஷ மிட்டவர் மு. கருணாநிதி. 1942-ல் துவக்கிய

“முரசொலி” இன்றளவும் நடைபோடுகிறது வெற்றிப் பெருமிதம். 1943-ல் தமிழ்நாடு தமிழ் மாணவர் மன்றம் துவக்கிப் பின் திராவிட மாணவர் கழகத்துடன் இணைத்தார். சாந்தா அல்லது பழனியப்பன் என்ற நாடகத்தை 1944–ல் எழுதி நடித்துப், பின், நாகை திராவிட நடிகர் கழகத்துக்குத் தந்து, தாமும் விழுப் புரம், புதுவையில் நடித்து வந்தார். 1945 இறுதியில் ஈரோட்டில் பெரியாருடன் தங்கிக் “குடிஅரசு” உதவி ஆசிரியரானார். 1946-ல் கோவையிலும், பின்னர் சேலத் திலும் திரைப்படக் கதை வசனப் பணியில் தமிழகத்தில் மிக உயர்ந்த இடம் வகித்தவர். 1942 செப்டம்பர் 13-ல் இசைவாணர் சிதம்பரம் ஜெயராமன் தங்கை பத்மாவை மணந்தார். 12-4-48–ல் அவரது அகால மறைவுக்குப் பின், 1948 செப்டம்பர் 15–ல் தயாளு அம்மையாரை மணந்தார். 1951 முதல் சென்னையில் நிரந்தரமாகத் தங்கினார். சென்னை மாநகராட்சியை 1959-ல் தி.மு.க வசமாக்கினார். 1967-ல் தி.மு.க ஆளுங்கட்சியாக அருந்துணை புரிந்தார். 1957 முதல் தொய்வின்றிச் சட்டமன்ற உறுப்பினர். 1969 முதல் 1976 சனவரி முடிய தமிழகத்தில் பொற்காலங்கண்ட முதல் முதலமைச்சர். தனித் தன்மை படைத்த, எழுச்சியூட்டும் மேடைப் பேச்சாளர். உணர்ச்சியால் ஊன் உயிரெலாம் உருக்கிடும் ஓங்கு தமிழ்ப் படைப்பாளர். தமிழகத்தின் ஒரே நம்பிக்கைப் பெருஞ்சூரியன். 1976-ல் ஏற்பட்ட சோதனையைக் கடந்த நிகழ்ச்சிக்கு, உலக வரலாற் றிலேயே ஒப்புவமை கிடையாது. 1969-ல் இந்திய ஜனாதி பதியாகும் வாய்ப்பினை ஒதுக்கித் தள்ளித், தாய்த் தமிழக மேன்மைக்குச் சகலத்தையும் தரத்துணியும், தியாகத் தீப்பிழம்பு!

1938-ல் அன்னை நாகம்மையார் மறைவுக்குப் பின்னர் நெருக்கமாயிருந்து, தனிப்பட்ட முறையில் பணி விடைகள் செய்து, பராமரிக்க யாருமில்லாமலிருந்த பெரியாருக்கு, ஒரு செவிலிப் பெண் தொண்டராக வேலூர் கனகசபை அவர்கள் மகளார் கே. அரசியல் மணி 1943–ல் பெரியாரிடம் வந்து சேர்ந்தார். 1973-ல் பெரியார் மறையும் வரை அவரை விட்டு அகலவே யில்லை! பக்குவமாய்ப் பத்தியமாய் உணவு சமைத்தல், வேளைதவறாமல் ஒழுங்குடன் உண்ணச் செய்தல், வற் புறுத்திக் குளிப்பாட்டுதல், வலியுறுத்தித் துணி

மாற்றுதல், வருவாரை உபசரித்தல், வீட்டில் கணக்கு எழுதுதல் குடிஅரசுப் பதிப்பக நூல்களின் சிப்பங் களைச் சுமந்து பெரியாருடன் பயணம் சென்று விற்பனை செய்தல், இயக்கத்தின் கொள்கைகளில் முழு நம்பிக்கையோடும் தலைவர் மீது பரிபூரண விசுவாசத் தோடும் தொண்டாற்றுதல், எளிமையா யிருத்தல், இனிமையாய்ப் பழகுதல், இவ்வளவு நற்பண்புகட்கும் உறைவிடமான அரசியல் மணி 1949 ஜூலை 9-ஆம் நாள் ஈ.வெ.ரா. மணியம்மை ஆனதில் என்ன தவறு? 64 வயதில் இறந்து போயிருக்க வேண்டிய பெரியாரை 95 வயதுவரை வாழவைத்த பெருமை மணியம்மையாரையே சாரும். இது ஒன்று போதாதா, தமிழ்க்குலம் அம்மை யாருக்கு நன்றி பாராட்ட? தலைவரையிழந்தும் கழகத்தைக் கைவிடாமல் இவர் காப்பாற்றி, உயிரை இழுத்துப் பிடித்துக் கொண்டு மேலும் 5 ஆண்டு வாழ்ந் திருந்தது பெரும் நல்வாய்ப்புத்தானே?

வடகண்டம் ராஜகோபால் நாராயணசாமி பி. ஏ. ஆனர்ஸ், 1943-ல் இளந்தாடி நெடுஞ்செழியன் எம். ஏ. நெடிதுயர்ந்த கவர்ச்சி மிகு உருவம், குற்றால அருவி யெனக் கொட்டும் தமிழ்ச்சொல்வளம், மணிக்கணக்கில் கேட்பாரைப் பிணிக்கும் நயம். பெரியாரின் தளபதி களில் சிறந்தவர். 1948-ல் திருமணத்துக்குப்பின் பேச்சு நடையில் பெருமாற்றம் எனினும் நாளொன்றுக்கு மூன்று வெவ்வேறு ஊர்களில் பேசிடும் ஆற்றல். "மன்றம்" இதழ் வேண்டும்போது வரும், நிற்கும், நடக்கும். ஆழ்ந்த தமிழறிவு, அகலமான உலகறிவு, சுயநலமற்ற பொதுநலப்பணியே வாழ்வின் குறிக்கோள். 1948 முதல் அண்ணா எவ்வழி அவ்வழி நாவலர். அதனால்தான் அவர் மறைந்த 1969-ல் சிறு விலகல், பின், சேர்க்கை. அண்ணா, கலைஞர் அமைச்சரவைகளில் இரண்டாம் இடம் இவருக்கே. அண்ணா அமைத்த திராவிடமுன்னேற்றக் கழகத்தில் அதிகநாள் பொதுச் செயலாளர் இவரே. பின்னர் சிறிது நாள் மக்கள் முன் னேற்றக் கழகம் கண்டார். இன்று அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகப் பொதுச் செயலாளர்.

நீதிக்கட்சியில் இன்னமும் பதவி ஆசை கொண்டவர் களும், முன்னரே பதவியைச் சுவைத்தவர்களும் இருந்து வந்ததை நன்கு உணர்ந்திருந்தார் பெரியார். 1943 ஜூன்

8-ஆம் நாள் வேலூரில் நகரமண்டபத்தில் நடைபெற்ற ஒரு கூட்டத்தில் அவர்களுக்கெல்லாம் நன்கு அறிவுரைபுகன்றார். காங்கிரஸ்காரர் பதவிக்குச் சென்றால் ராமராஜ்யம் நிறுவுவோம் என்று துணிவுடன் சொல்கிறார்கள். முஸ்லிம்லீக் சென்றால் இஸ்லாமிய ராஜ்யம் நிறுவுவோம் என்கிறார்கள். நீதிக்கட்சியினர் சென்றால் என்ன செய்யப் போகிறீர்கள்? நமது இனஇழிவு ஒழியத் திராவிடநாடு கேட்பீர்களா? சுயமரியாதைப் பகுத்தறிவுக் கருத்துகளை நடைமுறைக்குக் கொண்டுவருவீர்களா? 'தேர்தல் பிரச்சாரக் கூட்டங்களில் நான் என் சுயமரியாதைக் கருத்துகளைப் பேசினாலே ஓட்டுக் கிடைக்காது என்று பயப்படுகிறீர்களா!—அதனால் நமக்கு வேண்டாம் தேர்தலும் பதவியும் என்று அறுதியிட்டுக் கூறினார் பெரியார்.

விஞ்ஞான மேதை ஆல்பர்ட் அய்ன்ஸ்டீனுக்கும் பெரியாருக்கும் சமவயதுதான்! பெரியார் ஒரு விஞ்ஞானி என்று யாரும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். ஆனால் இதுவரை எந்த விஞ்ஞானியும் தமது அறிவியல் கண்ணோட்டத்தில், தீர்க்கதரிசனத்தோடு, எதிர்காலம் எப்படியிருக்கும் எனக் கணித்துக் கூறியதில்லை. எச். ஜி. வெல்ஸ் ஓரளவு எடுத்துக் காட்டியுள்ளார். இதெல்லாம் பெரியாருக்குத் தெரியாது. ஆனால் அவரது கூர்த்தமதியால், நுட்பமான பகுத்தறிவின் தொலை நோக்குத் திட்பத்தால், அவருக்கே உரிய சுயசிந்தனை ஆராய்ச்சித்திறத்தால் அவர் எழுதியுள்ள ஒரு இருவாரத் தொடர் கட்டுரை அவரை உலகப் பெரும் விஞ்ஞானிகள் வரிசையில் உயர்த்தி உட்கார வைக்கிறது. "இனிவரும் உலகம்" என்ற தலைப்புத்தந்து அண்ணா தமது "திராவிட நாடு" வார இதழில் 1943 மார்ச் 21, 28 தேதிகளில் இக் கட்டுரையினை வெளியிட்டுள்ளார்கள். டெஸ்ட் டியூப் பேபி எனப்படும் சோதனைக் குழாய்க் குழந்தை, டெலிவிஷன் எனப்படும் தொலைக்காட்சி, உணவு மாத்திரைகள் இன்னும் ஏராளமான கண்டுபிடிப்பு எதிர்காலத்தில் நடைமுறைக்கு வரும் என்று பெரியார் அன்றே கூறியுள்ளார்.

# 12. விரைந்தார்

**சேலம் மாநாடு—திராவிடர் கழகம் பிறந்தது—வடநாடு பயணம்—கருப்புச் சட்டை—ஆகஸ்டு 15 துக்க நாள்.—ஜூலை 1 திராவிட நாடு பிரிவினை நாள்—மீண்டும் இந்தி எதிர்ப்புப் போர்—தூத்துக்குடி, ஈரோடு மாநாடுகள்—1944 முதல் 1948 முடிய.**

முத்தமிழ்க் கலைஞர்கள் சுயமரியாதைக் கொள்கைகளையும் தத்துவங்களையும் பிரச்சாரம் செய்ய உதவியாகப், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் முயற்சி மேற்கொண்டு, சென்னையில் முத்தமிழ் நிலையம் ஒன்றை அமைத்தார். 1944 சனவரி 2-ஆம் நாள் பெரியார் இதனைத் தொடங்கி வைத்தார். பாரதிதாசன் கவிதைகள் "குடி அரசு" வாயிலாக நன்கு விளம்பரம் செய்யப்பட்டு, இதற்குள் மூன்று பதிப்புகள் செலவாகிவிட்டன. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பிப்ரவரி 7-ஆம் நாள் கா. சுப்பிரமணிய பிள்ளை தலைமையில் பெரியார், தமிழிசையும் கிழக்கும் மேற்கும் என்ற தலைப்பின் கீழ், அரியதோர் ஆராய்ச்சிச் சொற்பொழிவு நிகழ்த்தினார். தமிழ் நாட்டில் தமிழன் தன் பொருளைச் செலவழித்துத், தான் நுகரும் இசை, தமிழ் மொழியில் இருக்கவேண்டுமென்று கேட்பது தவறா? இந்த உணர்ச்சி இப்போது வெற்றி பெற்று வருவது பாராட்டற்குரியதுதான் எனினும், நரஸிம்ஹ மூர்த்தியே என்று பாடி வணங்குவதற்குப் பதில் சிங்கமுகக் கடவுளே

என்று பாடி வணங்குவதால் என்ன முன்னேற்றம் ஏற்படும்?" பஜனை, பக்திப் பாடல்களை எந்த மொழியில் பாடினால் தான் என்ன? அதே போல் புராண நாடகங்களால் என்ன பலன்? நந்தனார் பார்த்தால் தீண்டாமை பெருகும்; கிருஷ்ணலீலா பார்த்தால் விபச்சாரம் பெருகும்—என விளக்கினார். இவைகளை முறியடிக்க எம். ஆர். ராதா நடத்தி வரும் சீர்திருத்த நாடகங்களைப் பெரியார் ஆதரித்து வந்தார். நாகப்பட்டினத்தில் மார்ச் 10-ஆம் நாள் எம். ஆர். ராதாவைப் பாராட்டினார்.

நடிகவேள் என்று திருச்சியில் பட்டுக்கோட்டை அழகர்சாமியால் பட்டமளிக்கப்பட்ட எம். ஆர். ராதா 1943-முதல் புரட்சிகரமான சுயமரியாதைக் கருத்துகளை விளக்கி நாடகங்களில் நடித்து வந்தார். பின்னர் சி.பி. சிற்றரசு எழுதிய போர்வாள், கலைஞர் மு. கருணாநிதி எழுதிய தூக்குமேடை, திருவாரூர் தங்கராசு எழுதிய ரத்தக் கண்ணீர் இவற்றைத் தமிழ் நாடு முழுதும் ஆண்டுக் கணக்கில் தொடர்ந்து நடத்தினார். அரசின் அடக்கு முறைக்கு அடிக்கடி ஆளாகிப், போராடி வென்றார். கட்சிக் கட்டுப்பாடு கட்கு ஆட்படாமல் பெரியாரின் உண்மைத் தொண்டராக விளங்கிய அச்சமறியா இயல்பினர். 1967—ல் புரட்சி நடிகர் எம். ஜி. ராமச்சந்திரனைச் சுட்டதாக நடந்த வழக்கில் சிறைத்தண்டனை பெற்றார். விடுதலையாகி வெளிவந்த பின்பும், தனிப்பட்ட முறையில் கொள்கை விளக்கமும் நடிப்பும் தொடர்கிறார்.

சேலம் செவ்வாய்ப் பேட்டையில் கடந்த ஆண்டே துவக்கப்பட்ட திராவிடர் கழக முதலாண்டு விழாவில், சனவரி 16–ஆம் நாள், பெரியார் பங்கேற்றார். பிப்ரவரி 13-ஆம் நாள் சென்னையிலும், 20-ஆம் நாள் திருச்சியிலும் மாவட்ட நீதிக்கட்சி மாநாடுகளைத் திறந்து வைத்தார். சுதந்திரத் திராவிட நாடு பெறவேண்டிய அவசியத்தை வலியுறுத்தியும், புராண இதிகாசக் கதைகளின் புரட்டுகளை அம்பலப்படுத்தியும் திராவிட மக்களுக்கு எழுச்சியுண்டாக்கினார் பெரியார். தமிழ்ப் புலவர்களும், ஆசிரியர்களும், இளம் மாணாக்கர்க்குப் புராணக்கதைகளைப் பாடமாகப்

போதிக்காமல், அறிவுவளர்ச்சிக்கு உகந்தவற்றையே கற்பிக்க வேண்டிப் பெரியார் பல கட்டுரைகள் தீட்டினார்.

1944-ஆம் ஆண்டின் துவக்கமே பெரியாரின் மொழிப்படி நற்குறிகளின் துவக்கமாகத் தென்பட்டது. தென்னகத்தில் பெரியாரின் பெருந்தொண்டால் புதிய எழுச்சி ஒன்று எங்கணும் பரவி வியாபித்தது. ஒன்று கலைத்துறையின் மறுமலர்ச்சி! மாணாக்கர் எழுச்சி மற்றொரு புதுமையாகும். 1942-ஆகஸ்டுக் கலவரங்களில் காங்கிரஸ், கம்யூனிஸ்ட் சார்புடைய மாணவர்கள் பெரும் பங்கு கொண்டனர். அதன் பின்னர் உண்மை உணர்ந்த பார்ப்பனரல்லாத மாணவர்கள், தாம் தவறான பாதையில் இழுத்துச் செல்லப் படுவதை உணர்ந்து, தந்தை பெரியார் காட்டும் பகுத்தறிவு ஒளியில் கவனஞ் செலுத்தத் துவங்கினர். ஆரிய வஞ்சகத் தால் திராவிடர் எதிர்காலம் இருட்டாவதை உணர்ந்தனர். பெரியாரின் "குடிஅரசு", அண்ணாவின் "திராவட நாடு" இதழ்கள் உணர்வுத் தீயை மூட்டிவிட்டன. மாணவர்கள் நேரடி அரசியலில் ஈடுபடச் சட்டங்கள் தடைசெய்தன. அதனால் முதலில் பெரியாரின் சம்பந்தமில்லாது கும்ப கோணத்தில் திராவிட மாணவர் முதல் மாநாடு 1944 பிப்ரவரி 19, 20, இருநாட்களிலும், மிகுந்த எழுச்சிமயமாய் நடைபெற்றது. அண்ணாவும் பிறரும் அரிய சொற்பொழிவு களை ஆற்றினார்கள். மாணவர் மட்டுமல்லாது ஆசிரியரும் பேரெழுச்சி கொண்டனர். கோ. சி. பெரியசாமிப் புலவர், குழந்தையா, நன்னன், நா. மு. மாணிக்கம், ஏ.பி. சனார்த்தனம், க. அன்பழகன், இரா. நெடுஞ்செழியன், இரா. தண்டபாணி, க. அ. மதியழகன், பூ. கணேசன், இரா. செழியன், த. மா. திருநாவுக்கரசு, கி. தியாகராசன், ஆகி யோரை மாநாட்டில் அறிமுகம் செய்தனர் குடந்தை மாணவர்களான எஸ். தவமணி இராசன், எஸ். கருணா னந்தம், இரா. சொக்கப்பா ஆகியோர்.

1943 முதல் "குடி அரசு" இதழில் கட்டுரைகள் தீட்டிவந்த க. அன்பழகன், பச்சையப்பன் கல்லூரியின் தமிழாசிரியராகச் சிலகாலம் பணிபுரிந்தார். தமது

வெண்குலக் குரலோசை துணைசெய்யத் தமது ஒல்லி யான உருவத்துடன் தமிழகத்தில் அவர் முழங்காத சுய மரியாதை இயக்க மேடையில்லை. அண்ணாவுடன் திராவிட முன்னேற்றக் கழகங் கண்டவர். 21–2–45ல் பெற்ற வெற்றிச்செல்வி அம்மையாரின் வாழ்க்கைத் துணை நலம் இவருக்குப் பேருதவியாயிருந்தது. சிதம் பரம் கல்யாண சுந்தரனாரின் மூத்தமகனாகிய இவரைப் போலவே அடுத்த இளவல்களும் ஆசிரியர் களாயினும், இயக்கத்துடனேயே இணைந்த குடும்பத் தினராவர். சட்டமன்றப் பேரவை,சட்டமன்ற மேலவை, நாடாளுமன்றம் மூன்றிலும் உறுப்பினராகப் பணி யாற்றியுள்ளார். கலைஞரின் அமைச்சரவையில் நல் வாழ்வுத்துறையின் பொறுப்பிலிருந்தார். பின்னர் கழகம் சோதனைக்குள்ளான போழ்தில், தி.மு.க. பொதுச் செயலாளராகியுள்ளார். பேராசிரியர் என மக்கள் இவரை அன்பொழுக அழைக்கின்றனர்.

டார்ப்பிடோ சனார்த்தனம் தமிழ் தெலுங்கு ஆங் கிலம் மும்மொழி வல்லுநர். எளிய தோற்றம், வெடிக்கு முன் எரிமலை, பெரியாரின் பெரு விருப்புக்குப் பாத்திரமானவர். சட்டமன்ற மேலவை, மாநிலங் களவை உறுப்பினர் பொறுப்பில் இருந்துள்ளார். தமிழ கத்தில் சுறுசுறுப்புடன் சுற்றிச் சுழன்று, விறுவிறுப்புடன் உரையாற்றி இவர் காணாத ஊரே இல்லை எனலாம். ஆங்கிலத்தில் பத்திரிகை, நூல்கள் எழுதியுள்ளார். சில காலம் தி. மு. கழகத்திலிருந்தார். இப்போது அ. இ. அ. தி. மு. க. எங்கிருந்தாலும் சுயமரியாதைக்கொள்கை களுக்கும், தந்தைபெரியாருக்கும் இவர் சிந்தையில் முதல் இடம்!

பெரியசாமிப்புலவர், குழந்தையா, திருநாவுக்கரசு ஆகியோர் தொடர்ந்து சுயமரியாதைக் கருத்துகளைப் பரப்பி வருவோர். பெரியசாமிப் புலவர் நல்ல பரம் பரையை உருவாக்கியவர், மறைந்து விட்டார். நா. மு. மாணிக்கம், செட்டிநாடு தந்த பகுத்தறிவுப் புலவர். பெருமைக்குரிய "குடிஅரசு" அலுவலகத்தில் பெரியா ரிடம் பணியாற்றியவர். புலவர் நன்னன் சிலநாள் பெரியாரிடம் வதிந்தவர்; பகுத்தறிவுத் திறங்குன்றாப் பண்பாளர் பேராசிரியராகி, டாக்டர் பட்டமும் சுய முயற்சியால் பெற்றவர்.

இரா. செழியன், நாவலர் நெடுஞ்செழியனின் இளவல். 1957–ல் தி.மு.க. சார்பில் நாடாளு மன்றத் தேர்தலில் குதித்தார். 1962, 67, 71 ஆண்டுகளில் வென்று, நற்பணியாற்றினார். அண்ணாவின் அருந் தோழர். இன்று ஜனதாக் கட்சியின் சார்பில் மாநிலங் களவையினை அலங்கரிக்கிறார்.

பூ. கணேசன் தந்தையார் பூவராகனார் பகுத்தறி வாளர்; எனவே தம் மக்களையும் தம் வழியில் ஈடுபடுத் தியவர். "நிலவு" இதழ் நடத்தி வந்து, "விடுதலை"யில் சில காலம் பணியாற்றிப் பின்னர் குடும்பநலத்துறையில் நீண்டநாள் அரசு அலுவலராக விளங்கி, ஓய்வு காணும் வயதில் உள்ள கணேசன் அமைதி, அடக்கமுடையார்.

இ.ரெ. இளம்வழுதி எனும் தண்டபாணி கடலூரில் சிறந்த வழக்கறிஞர்.குறையாயுளில் மறைந்து போனார். கருப்பு இளவரசன் என்ற சிறப்புப் பெயருக் கேற்பத் துவக்க நாட்களில் நன்கு இயக்கப்பணி புரிந்தவர்.

மதியழகன் உருவமோ குள்ளம். உள்ளமோ உயரம். இயக்கப் பணியோ ஏராளம். துவக்க நாட்களில் பெரியார் பாசறையிலிருந்து, பின் அண்ணாவின் நண்ப ராகி, நல்ல தொண்டாற்றிய முழுநேர அரசியல்வாதி. அண்ணாவின் அமைச்சரவை, கலைஞரின் அமைச் சரவைகளில் உறுப்பினராகவும், சட்டப் பேரவை, மாநிலத் திட்டக்குழுத் தலைவராகவும் விளங்கியவர். அண்ணா தி.மு. கழகத்தில் இணைந்தார். இன்று உடல் நலிவுற்று ஓய்வாக வாழ்கின்றார்.

எஸ். தவமணி இராசன் 1943-ல் கும்பகோணத்தில் முதன்முதலில் திராவிட மாணவர் கழகம் அமைத்தவர். தோற்றம் கவர்ச்சியற்றது; தொண்டை, கணீரென்பது; தொண்டு இவர் உயிர்மூச்சு; தோழமை இவர் நல்லுணவு! பெரியாரிடமும் அஞ்சாமல் பேசும் வெகுளி யான உள்ளம் படைத்தவர். அவரது உண்மையான தொண்டராதலால் என்றும் அன்புடன் நேசிக்கப் பட்டவர். ஓயாது உழைப்பது இவரது இலட்சியம். ஈரோட்டில் திராவிட மாணவர் பயிற்சி முகாம் இவரது தனிச்சிறப்பு, "குடிஅரசு" அலுவலகம் இவருக்குக் குடி யிருப்பு. குடந்தை திராவிட மாணவர் மாநாடு வரலாற்றுச் சிறப்புமிக்கதாக ஆக்கியவர் இவரே; இவர் ஒருவரே!

1949—ல் ஏற்காட்டிலிருந்து பெரியாரின் பிரதிநிதியாகச் சென்னை "விடுதலை" அலுவலம் வந்தவர், அண்ணாவுடன் சேர்ந்து, கண்ணீர்த்துளியாகிவிட்டார். ஈரோடு வந்தவுடன், பெரியாரிடம் விடை பெற்றுக் கொண்டு, நேரே குன்னூர் நகராட்சி ஆணையாளராயிருந்த தன் தந்தை செந்தில் வேலாயுத நாடார் அவர்களிடம் போய்ச் சேர்ந்தார். ஆயினும் அய்யாவின் மெய்யன்பர். பெரியாரிடம் 'நீ' என்று பேசத் துணிவுள்ள ஒரே மனிதர்.

கும்பகோணம் மாநாடு பெரியாரின் வாழ்த்துச் செய்தி க. அன்பழகனால் படிக்கப்பட்ட அளவோடு முடிந்தது மாணவ உலகுக்குப் பெருத்த ஏமாற்றம். அதனால் மார்ச் 15-ஆம் நாள் செல்வம் நினைவு நாள் பொதுக்கூட்டத்திலும்; பின்னர் பெரு முயற்சியால், ஏப்ரல் முதல் நாள், குடந்தை அரசினர் கல்லூரியிலும் பெரியார் கலந்துகொண்டு, அரியவுரை நிகழ்த்துமாறு செய்து, மாணாக்கர் பெருமிதமும் பூரிப்பும் எய்தினர். கும்பகோணத்திலிருந்து ஈரோடு சென்றதும் பெரியார் புதுத்தென்பு கொண்டார். தம்மிடம் அப்போது தனிச் செயலராக இருந்த கஜேந்திரனை அழைத்தார். கல்லூரிகளுக்கெல்லாம் அனுப்பினார். எங்கெங்கு இயக்கப் பற்றுள்ள மாணவர்கள் உள்ளார் எனக் கண்டறிந்தார். அனைவரையும் ஈரோடு வருமாறு அன்பழைப்பு விடுத்தார். அதிலே பெரு வெற்றியும் பெற்றார்.

வடார்க்காடு திருப்பத்தூர் வழக்கறிஞர் சாமி நாயுடு நீதிக்கட்சியின் நிர்வாகக் குழு உறுப்பினர். அவருடைய மூத்தமகன் கஜேந்திரன். மகள் சுலோசனா. கஜேந்திரன் பி. ஏ. பட்டம் பெற்ற பின்னர் பெரியாரிடம் அந்தரங்கச் செயலாளராக வந்து சேர்ந்தார். பின்னர் "குடி அரசு", "ஜஸ்டிசைட்" இதழ்களில் எழுதினார். 1945 மே 24-ஆம் நாள் பெரியார் தலைமையில் ஈ. வெ. கிருஷ்ணசாமி அவர்களின் மூத்த மகள் மிராண்டா பி. ஏ. அவர்களைத் திருமணம் செய்து கொண்டார். பின்னர் கஜேந்திரன் அரசு தலைமைச் செயலகத்தில் அலுவலரானார். மிராண்டா அம்மையார் சென்னை மாநகராட்சிக் கல்வித்துறை அதிகாரியானார். இவர்கட்கு இரு பெண் மக்கள்.

ஈரோட்டில் 1944 ஏப்ரல் 17-ஆம் நாள் நடைபெற்ற திராவிட இளைஞர் மாநாட்டையொட்டி எல்லா மாணவர் களையும் பெரியார் நேரில் பார்த்துக்கொள்ள விரும்பினார். அண்ணா தலைமையில், நெடுஞ்செழியன் திறந்துவைக்க, அன்பழகன் கொடிஏற்ற, இம்மாநாடு எழுச்சியுடன் நடை பெற்றது. பழையகோட்டை இளைய பட்டக்காரர் என். அர்ச்சுனன் வரவேற்புக் கழகத் தலைவர். எஸ். ஆர். சந்தானம் செயலாளர். இதனை ஒட்டியே மாணவர் பிரச்சாரப் பயிற்சி முகாம் நடைபெற்றது. பெரியாருக்குத் திடீரென்று உடல் நலம்குன்றி, நடக்க முடியாமல் அவதிப் பட்டார். எனினும் புதிய வரவுகளான மாணவர்களை ஆவலுடன் கண்டு உரையாடிக் களித்தார். இந்த நேரத்தில் சென்னையில் நடைபெற்ற கம்பர் மாநாடு கலவரத்தில் குழப்பமாகி, நடைபெறாமல் நின்று விட்டது. இது சுய மரியாதைப் பிடாரிகளின் அடாத செயலென்று தமிழ்நாட் டின் அக்கிரகாரப் பத்திரிகை உலகம் அவதூறு பொழிந்தது.

> கொங்கு வேளாளர் சமுதாயத்தின் மிகப்பெரும் பண்ணைக்காரராகிய பட்டக்காரர் குடும்பத்திலிருந்து கழகத்துக்குக் கிடைத்த நன்முத்து என். அர்ச்சுனன், 20 வயதில் ஈடுபட்டு 23 வயதில் வாழ்வையே முடித்துக் கொண்டார். இந்த மூன்றாண்டுகளில் முப்பதாண்டுப் பொதுப்பணியை அற்புதமாய்ச் செய்து காட்டினார். இந்தக் காலகட்டத்தில் ஏராளமான மாநாடுகள், பொதுக்கூட்டங்கள் நடத்தியும், பங்கேற்றும் சிறப் பித்தார்.
>
> எஸ். ஆர். சந்தானம் மாப்பிள்ளை நாயக்கரின் முதல் மகன். நெடுநாள் ஈரோடு நகரமன்ற உறுப்பினர். கோவை மாவட்டதிராவிடர் கழகத் தூண்களில் முக்கிய மானவர். பெரியார் நினைத்தவண்ணம் முடித்திடும் ஆற்றலுடையார்.

மாணவர்கள் பயிற்சிபெற்று மாவட்டந்தோறும் இயக்கப் பிரச்சாரம் செய்திடப் புறப்பட்டனர். அந்தக் கோடைவிடு முறையில் தொடங்கிய இவ்வழக்கம், திராவிடர்கழகத்தால் இன்றளவும் கையாளப்படுமாறு, பெரியார் பணித்துவிட்டார்.

பிரிட்டிஷ் அரசு சிறையிலிருந்த காந்தியாரை விடுதலை செய்து விட்டு, வெள்ளையனே வெளியேறு என்று 1942 ஆகஸ்டில் செய்த தீர்மானத்தைத் திரும்பப்பெறுமாறு கேட்டது. காந்தியார் விடுதலையால் யாருக்கு என்ன நன்மை ஏற்படப்போகிறது? இறந்துபோன தம் மனைவியார் பெய ரால் கஸ்தூர்பா நிதிவசூலித்து, அடுத்துவரும் பொதுத்தேர் தலில் நிறையச் செலவு செய்ய முனைந்துவிட்டார்களே! என்றார் பெரியார். மே மாத இறுதியில் சென்னை மாநில 3-வது மருத்துவகுல மாநாட்டைச் சென்னையில் திறந்து வைத்துவிட்டுப் பெரியார், ஜுன் முதல்வாரம் ஆந்திரப் பகுதியில் சுற்றுப்பயணம் சென்று வந்தார். பாக்கிஸ்தான் கோரிக்கைக்கு மறுப்புத் தெரிவித்த காந்தியார், இறுதியில் ஜின்னாவைச் சந்திக்க இசைந்ததைக், காந்தியாரின் சரணா கதி எனப் பெரியார் வர்ணித்தார். அவர்கள் பேச்சு முறிந் ததையும் விமர்சித்தார்.

நீதிக்கட்சியின் 16-ஆவது மாகாண மாநாடு சேலத்தில் மிகுந்த பரபரப்பான சூழ்நிலையில் கூடியது. பழைமை வாதிகள் சிலர் திட்டமிட்டுப் பெரியாரின் தலைமைப் பதவி யைப் பறித்திடக் கனவு கண்டனர். பெரியாரின் தீவிரப் போக்கு கண்டு மனங்குமுறும் பதவிப்பித்தர்கள் அவர்கள். ஆனாலும் தமிழகத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும்-குறிப் பாகத் தஞ்சை திருச்சி மாவட்டங்களினின்றும்-சென்றிருந்த பல்லாயிரக்கணக்கான பெரியார் தொண்டர்களின் முயற்சி யால் எதிர்ப்பு தலைகாட்டவே முடியவில்லை. ஏற்கனவே சென்னையில் அண்ணா தலைமையில் கூடிய ஒருமாநாட்டில் தென்னிந்திய நல உரிமைச்சங்கம் என்ற பெயரைத் திராவிடர்கழகம்என மாற்றவேண்டிப் பரிந்துரைக்கும்முடிவு மேற்கொள்ளப்பட்டிருந்தது. அதன்படி சேலத்தில் கட்சி யின் பெயர் திராவிடர் கழகம் என மாற்றப்பட்டது. சேலம் மாநாட்டின் முக்கியத்துவமே அண்ணாதுரை தீர்மானந் தான். பெரியாரின் விருப்பத்திற்கிணங்கவே அண்ணா இதனைக் கொணர்ந்து நிறைவேற்றினார். இதன்படி பிரிட்டிஷ் அரசால் அளிக்கப்பட்ட கவுரவப் பட்டங்களான

சர், திவான்பகதூர், ராவ்பகதூர், ராவ்சாகிப், கான்பகதூர், கான்சாகிப் போன்றவைகளைக் கட்சியில் உள்ளோர் விட்டு விடவேண்டும். அதேபோலக் கவுரவ நீதிபதி, ஜில்லாபோர்டு, தாலுக்காபோர்டு நியமனங்கள், நாமினேஷன் மூலமாகப் பிரிட்டிஷ் அரசால் தரப்பட்ட எல்லாப் பதவிகளையும் விட்டொழிக்க வேண்டும் என்பது சரிகைக் குல்லாய்க் கட்சி என்ற அவப்பெயர் இத்தீர்மானம் நிறைவேறியதன் வாயிலாக ஒழிந்தது; 1944 ஆகஸ்ட் 27–ஆம் நாளோடு! இங்கு ஒரு தீர்மானத்தின் மீது பேசினார் கடலூர் சிறுவன் வீரமணி.

கடலூர் சி. எஸ். கிருஷ்ணசாமி அவர்களின் பிள்ளைகளை திராவிட இயக்கத்துக்காகவே அவர் பெற்று வளர்த்து ஆளாக்கிவிட்டவர். மூத்தவர் கி. கோவிந்தராசன் தி. மு. க. செயலாளர். அடுத்தவர் கி. தண்டபாணி தி.மு.க. சார்பில் நகர் மன்ற உறுப்பினர். மூன்றாவது பிள்ளை பால்யத்திலேயே படுசுட்டியாக இருந்தது.

கடலூர் ஓ. டி. எனப்படும் பழைய பட்டினத்தில் சென்னையைச் சேர்ந்த ஏ. சுப்ரமணியம் பி.ஏ. அலுவல் பார்த்து வந்தார். பெரியாரிடத்தில் ஏகலைவ பக்தி கொண்ட அவர் தமது பெயரை ஆ. திராவிடமணி என மாற்றிக் கொண்டு, தமிழ் வெறியும் சுயமரியாதைக் கொள்கை வெறியும் கொண்டவரானார். அவரது அத்யந்த சீடர் 10 வயது கி. வீரமணி; இவர் 2-12-1933-ல் பிறந்தார். கடலூரில் உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முதன்மை மாணாக்கராக இருந்து முடித்தார். இடையில் சுயமரியாதை உணர்வினை மூச்சோடும் நீரோடும் உணவோடும் உயிர்த்தும் உண்டும் தன் உடலை ஊனை அறிவை வளர்த்து வந்தார். வாயாடித் தன்மை பகுத்தறிவு ஒளி வீச்சாக இருந்தது. 10 வயதில் சராசரி உயரத்தைவிடக் குள்ளமாதலால் மேஜைமீது தூக்கி நிறுத்திப் பேசச் சொல்லிவிட்டால் போதும். நிறுத்துவதுதான் கஷ்டம். இந்தப் பத்துவயதுச் சிறுவன் வீரமணி 1944 சேலம் மாநாட்டில் தீர்மானத்தை வழி மொழிந்து பேசியதன் மூலம் இயக்கத்தின் வரலாற்றில் இடம் பிடித்துக் கொண்டது. வரலாறு படிப்போராக இல்லாமல் திராவிட இயக்க வரலாறு படைப்போராக மாறியது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பொருளா தாரத்தில் முதல் வகுப்பு ஹானர்ஸ் தேர்வு. சட்டக் கல்லூரியில் பி. எல். தேர்வு. கடலூரில் கி. வீரமணி எம். ஏ. பி. எல். வழக்கறிஞராகப் பதிவு. திராவிட முன்னேற்றக் கழகம் பிரிந்த போதும் பெரியாரைப் பிரியாத பேராண்மை.

பெரியாரையும், திராவிட பாரம்பரியத்தின் வரலாற்றையும், சுயமரியாதை இயக்கத்தின் கோட்பாடு களையும் அய்யந்திரிபு இன்றி உணர்ந்தமையாலும், அபாரமான நினைவாற்றலாலும், கல்வியின் தேர்ச்சியா லும், பயிற்சியின் சிறப்பினாலும், சொல்லாட்சித் திறத்தாலும் மேடையிலே இவர் வெற்றிகரமான விரைவுப் பேச்சாளராக விளங்குகிறார். பூவாளூர் அ. பொன்னம்பலனார் கூட விரைவாகப் பேசுவார். ஆனால் சில பல சொற்கள் விளங்காமலே போகும். வீரமணியின் விரைவான சொற்பெருக்கிலும் விளங் காத சொல்லடுக்கே விழுவதில்லை. அலங்கார நடை யல்ல. ஆனால் அழுத்தமான தெளிவான உறுதியான நடை. ஆழமான அனுபவமிக்க கருத்தோட்டம்.

எழுத்திலும் இவர் இணையற்ற வெற்றி கண்டுள்ளார். "விடுதலை"யில் இவர் பொறுப்பேற்ற பிறகு எழுதப்பட்ட தலையங்கம், துணைத்தலையங்கம் எவையாயினும், வெளியிடப்பட்ட பெட்டிச் செய்திகள், துணுக்குகள், செய்திகள் எவையாயினும் பெரியாரின் அங்கீகாரம் பெற்றவை என்று நம்பலாம். ஏனெனில் எஸ். குருசாமியின் பொறுப்பில் "விடுதலை" நடந்த காலத்தில் பெரியாரின் எண்ணத்திற்கு முரணாக எத்தனையோ சங்கதிகள் வெளியானதுண்டு.

o

பெரியாரின் அனைத்து நற்பண்புகட்கும் உறைவிட மாய், அவர் தீர்மானித்த பெண்மணியை மணந்து, அளவான குடும்பமாய், இரு ஆண் ஒரு பெண் மக்க ளுடன், அவர் ஏற்றித் தந்த பகுத்தறிவுச் சுடரைப் பாதுகாப்பாய் பத்திரமாய் உயிரினும் மேலாகப் போற்றி வரும் இவர் ஒருவரே தன்மான இயக்கத்தின் நம்பிக்கைப் போரொளியாய் இன்று திகழ்கின்றார்.

பதவிச் சுகம் அனுபவித்தவர்களால் சும்மாயிருக்க முடியாதே! அவர்கள் சென்னையில் ஒன்று கூடித் தாங்கள்

தான் ஜஸ்டிஸ் கட்சி என்று அறிக்கை விட்டனர். பெரியார், அவர்களின் தவறான போக்கைக் கண்டித்துக் "குடி அரசு" 17-9-1944 இதழில் எழுதினார். அதே போன்று டாக்டர் அம்பேத்கார் சென்னை வந்தபோது, அவருக்கு நீதிக்கட்சி யின் சார்பில் என்று சொல்லி, இவர்கள் செப்டம்பர் 22-ஆம் நாள் விருந்தொன்று கொடுத்தனர். உண்மை நிலவரம் உணர்ந்த அம்பேத்கார், இவர்களைக் கண்டித்து உரை யாற்றினார். அடுத்த நாளே பெரியார் இல்லத்துக்குத் தாமே வருகை தந்து, நீண்ட நேரம் உரையாடியும் சென்றார். இம்மாதம் 29-ஆம் நாள் திருச்சியில் பெரியார் இடத்துக்கு வந்து, அனைத்திந்திய இந்து மகா சபைத் தலைவர் டாக்டர் மூஞ்சே, பெரியாரைச் சந்தித்துப் பேசினார். அவருடன் தமிழ் நாடு இந்து மகா சபைத் தலைவர் டாக்டர் வரதராசலு நாயுடுவும் வந்திருந்தார். இந்து என்ற சொல்லுக்கே ஆதாரம் இல்லை என வாதாடி னார் பெரியார். அனைத்திந்திய திராவிடர் கழகம் அமைத்திட, மூஞ்சே பெரியாரிடம் கேட்டார்.

தஞ்சையில் புரட்சிக் கவிஞர் தலைமையில் நடந்த திராவிட மாணவர் மாநாட்டை 26-ஆம் நாள் பெரியார் திறந்து வைத்தார். கரூரில் 24-ஆம் நாளும், கோவை யில் அக்டோபர் முதல் நாளும் நடைபெற்ற கழக மாநாடு களில் கலந்துகொண்டார். கோவை மாநாட்டில் சென்னை சத்தியவாணி முத்து பங்கேற்றார்.

> சென்னையில் தாழ்த்தப்பட்ட வகுப்பில் தோன்றிய சத்தியவாணி, அவர் கணவர் எம். எஸ். முத்து இருவரும் சிறந்த சமுதாய சீர்திருத்தத் தொண்டர்கள். பெரியார் வழி நின்று சத்தியவாணி சிறந்த பேச்சாளராக விளங்கினார். அண்ணாவுடன் தி.மு.க. அமைப்பில் இருந்து வந்தார். அண்ணா, கலைஞர் அமைச்சரவை களில் இடம் பெற்றார். அ. இ. அ. தி. மு. க. சார்பில் டெல்லி மாநிலங்களவையில் உறுப்பினராக இருந்து, சமூக நலத்துறை அமைச்சராகியுள்ளார்.

சிதம்பரத்தில் நடைபெற்ற வர்ணாசிரம மறுப்புக் கூட்டத்தில் பெரியார் அக்டோபர் 14-ஆம் நாள் பங்கேற்

றார். புராணங்கள் கற்பனையானாலும், சைவரும் வைணவரும் ஒருவரைப் பார்த்து மற்றவர் காப்பி அடித்துள்ள வேடிக்கையைப் பெரியார் நன்கு பிரித்துக் காட்டினார். பக்தலீலாமிருதம் வைணவ ஆழ்வார்கள் 82 பேரைப் பற்றி உரைக்கிறது. பெரிய புராணம் 63 சைவ நாயன்மார்களைப் பற்றிப் பேசுகிறது. நாயன்மார் நால்வர். ஆழ்வாராதியர் பன்னிருவர். மேலும் பொதுவுடைமைவாதிகளைப் பற்றிச் சொல்லும்போது, இந்தியாவில்தான் சாதியும் வகுப்பும் தனித்தனியே இருக்கின்றன. மேல் நாடுகளில் வகுப்பு பேதம்தான் இருக்கிறது; அதனால் அதை ஒழித்தல் சுலபம். இங்கே முதலில் சாதியை ஒழித்தால்தான் வகுப்பை நீக்க முடியும். சாதியை ஒழிப்பதுதான் சிரமம். அதில் அவர்கள் நுழைய மாட்டார்கள்; அதுதான் நமது போராட்டம்—என விளக்கினார். சாதி என்றால் Caste என்றும், வகுப்பு என்றால் Class என்றும் பெரியார் வேறுபாட்டைத் தெரிவித்தார்.

கலையுலகில் மறுமலர்ச்சித் தூதுவராக விளங்கிய என். எஸ். கிருஷ்ணன் சென்னையில் ஒரு நாடக சபா துவக்கினார். அவரது இழந்த காதல் நாடகத்துக்குப் பெரியார், நவம்பர் முதல் நாளிரவு தலைமை ஏற்றுப் பாராட்டினார். கலையுலகில் அவர் மீதும், எம். கே. தியாகராஜ பாகவதர் மீதும் அவதூறுகளைக் கிளப்பி விட்டிருந்தனர் அழுக்காறு படைத்தோர் சிலர். பெரியாரின் ஒத்த வயதினரும் மதிப்புக்குரிய நண்பருமான செ. தெ. நாயகம் 1944 டிசம்பர் 13-ஆம் நாள் மறைந்தது குறித்துப் பெரியார் மிகுந்த வருத்தமுற்றார்.

டிசம்பர் 24-ஆம் நாள் அண்ணாவுடன் புறப்பட்டுப் பெரியார் கல்கத்தா சென்று, அங்கு எம். என். ராயின் தீவிர ஜனநாயகக் கட்சி மாநாட்டில் 27—ஆம் தேதி உரையாற்றினார் பெரியார். தனது நாத்திக ஆசான் பெரியார் என்றும், அவரளவு நாத்திகத்தைப் பற்றிப் பேசி, எழுதி, நூல் வெளியிட்டவர் உலகில் வேறு எவரும் இலர் என்றும், ராய் புகழ்ந்துரைத்தார். அப்படியே கான்பூர் சென்று, அகில இந்திய

பிற்படுத்தப்பட்டோர் மாநாட்டுக்குத் தலைமை ஏற்று, 29, 30, 31 மூன்று நாட்களும் ஆங்கிலத்தில் விளக்கமாக உரை நிகழ்த்தினார் பெரியார்.

சேலம் மாநாட்டிற்குப் பிறகு திராவிடர் கழகத்துக்கு உறுப்பினர் சேர்க்கும் பணியைத் தீவிரப்படுத்தினார் பெரியார். 1945-ஆம் ஆண்டுத் துவக்கத்தில் உறுப்பினர் எண்ணிக்கை 24,302. அவர்கள் செலுத்திய கட்டணம் ரூ. 2619-13-0. மாணவர்கள் புத்தெழுச்சியால் மனம் நெகிழ்ந்த பெரியார் எதிர்காலத்தில் இனி அச்சமில்லை என்ற கருத்தை வெளிப்படுத்தி, ஆரிய திராவிடப் போருக்கு அறைகூவல் என்ற "குடி அரசு" 20-1-45 தேதிய இதழில் தலையங்கமே தீட்டினார். தென்னார்க்காடு மாவட்டம் புதுப்பேட்டையில் திராவிட மாணவர் மாநாடு; சிற்றூரிலும் வெற்றிகரமாய் நடக்கும் என எடுத்துக் காட்டாய் இலங்கியது. பூட்டிய இருப்புக் கூட்டின் கதவு திறக்கப்பட்டது சிறுத்தையே வெளியில் வா என்று தொடங்கி, இங்கு உன் நாட்டுக்கு இழி கழுதை ஆட்சியா? என்றெல்லாம் ஓடும் கவிதைப் பிரவாகம், புரட்சிக் கவிஞர் இந்த மாநாட்டுக்கு அனுப்பிய வாழ்த்துச் செய்தியாகும். ஈ. வெ. கி. சம்பத் இம்மாநாட்டின் தலைவர்.

சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் இண்டர் மீடியட் படிப்போடு நிறுத்திய சம்பத், எல்லா வகையிலும் பெரியாரின் வாரிசாக விளங்குந் தகுதி பெற்றிருந்தார். பெரியாரும் தத்து எடுத்துக் கொள்ளப் பத்திரங்கள்கூட வாங்கி வைத்திருந்தார். என்ன அவநம்பிக்கை ஏற்பட்டதோ—பின்னாளில் பெரியாரின் யூகம் சரியானதென நிரூபிக்கப்பட்டது—சம்பத்தைப் பெரியார் தம் வாரிசுப் புதல்வனாக ஏற்றுக் கொள்ளவில்லை. தீர்க்கமான சிந்தனையும் தெளிவான கருத்து ஓட்டமும் வாய்க்கப் பெற்ற சம்பத், சொல்லின் செல்வர் என அன்புடன் அழைக்கப்பட்டார். அண்ணாவின் தனியான கனிவுக்குப் பாத்திரராயிருந்தவர்—அதனாலேயே பெரியாராலும் ஒதுக்கப்பட்டவர்—என்ன சபலத்துக்கோ ஆட்பட்டார். தி.மு.க. நாடாளுமன்ற உறுப்பினரானவர், தமிழ் தேசியக்கட்சி கண்டார்

1961-ல். பின்னர் காமராசருடன் இணைந்தார்; அவரையும் எதிர்த்து, இந்திரா காந்தி முகாமில் இரண்டறக் கலந்தார். எங்கும் எதிலும் வெற்றி பெறாமல் இளமையில் வாழ்வையும் முடித்துக் கொண்டார் 1976-ல். மனைவியும், மகன்களில் இனியனும் இன்று இந்திரா காங்கிரஸ். பெரியாரின் நேர் வாரிசு, தொடர்பின்றிப் போனது!

சுற்றுப் பயணம் தொடர்ந்தார் பெரியார் தஞ்சை திருச்சி மாவட்டங்களில். ஆறறிவு படைத்ததால் மனிதன் சிந்திக்கும் ஆற்றலுள்ளவனாயிருக்கிறான்; அதனால் விலங்குகளைவிட உயர்ந்தவன்—என்ற கருத்தைப் பெரியார் மறுத்து, விளக்கினார். மிருகங்கள் கூடச் சிந்திக்கின்றன. மனிதன் மற்றவர்களுக்கு உதவுவதால் பெரியவன் என்றால், அற்பமான தேனீகூட மனிதனுக்குத் தேன் தருகிறதே; மாடு கூடப் பால் தருகிறதே-ஆனால் மனிதன் எப்போது உயர்ந்தவன் என்றால், தனக்கென்றுசுயநலத்துடன் எதையும்செய்து கொள்ளாமல், பொது நலத்துக்கே எப்போதும் பாடுபடுவதால் மதிக்கப்படுவான்—என்றார் பெரியார். அதே போல 32 தர்மங்கள் செய்ய வேண்டும்; அதற்காகத்தான் கடவுள் மனிதனுக்குச் செல்வத்தைத் தந்துள்ளார் என்ற பழங் கொள்கையையும் கண்டித்தார். ஒருவனிடம் செல்வத்தைத் தந்து, அவன் இடுகின்ற பிச்சையைப் பெறுவதற்கென்றே இன்னொருவனை ஏழையாக வைப்பவன் கடவுளாயிருக்க முடியாது—என, வள்ளுவரையும் மேற்கோள் காட்டினார் பெரியார்.

சுற்றுப் பயணத்தால் உடல் நலம் பாதிக்கப்பட்டது பெரியாருக்கு. செயற்கைப் பல், நாவில் உரசிஉரசிப் புண்ணாக்கி விட்டது. 16-3-45 முதல் சென்னை பொது மருத்துவமனையில் பத்து நாள் தங்கிச் சிகிச்சை பெற்றார். அங்கு நாக்கில் புற்று நோய் இருப்பதாகக் கண்டு பிடிக்கப்பட்டு அதற்கான சிகிச்சை செய்யப்பட்டது. நாத்திகம் பேசி நாத்தழும்பேறியவர் என்று சொல்ல ஆத்திகர்க்கு வாய்ப்பில்லாது எல்லாமே குணமாகி விட்டது. முதலில் தமைய

ணாரின் சித்த வைத்தியம் பலிக்கவில்லை. அதன் பிறகு செயற்கைப் பல் செட்டைப் பொருத்தாமலே ஈறுகளால் நன்கு மென்று தின்னப் பழகிக் கொண்டார் பெரியார். முறுக்கும், இறைச்சியும்கூட நொறுக்கப்பட்டன!

மீண்டும் பொதுக்கூட்டங்களுக்குச் சென்றுவிட்டு, ஏற்காட்டில் ஏப்ரல் மாதம் பிற்பகுதியில் ஓய்வு எடுத்து வந்தார். அப்போது, சொந்த உபயோகத்திற்காகத், தமது சொந்த நிலத்தில் விளைந்த அரிசியைத் தாமும், தலைவனார் ஈ.வி.கே.யும், மணியம்மையாரும் எடுத்துச் சென்றதற்காகப், பெருந்தன்மையும் காருண்யமும் மிக்க சர்க்காரால், தலைக்கு 75 ரூபாய் அபராதம் கட்ட நேரிட்டது. ஈரோட்டில் மூன்றாம் முறையாக நடைபெற்ற திராவிட மாணவர் பயிற்சி முகாமுக்கு வந்து, வகுப்புகள் நடத்திவிட்டு, மறுபடியும் ஏற்காடு திரும்பினார் பெரியார்.

இரண்டாம் உலகப் பெரும் போரில் நேசநாடுகள் இறுதியாக வெற்றி பெற்று விட்டன. இதைப் பாராட்டிப் பெரியார் 12—5—1945 அன்று "குடிஅரசு" தலையங்கம் எழுதினார். இதற்குப்பின் ஜூலையில் நடைபெற்ற சிம்லா மாநாட்டில், வைசிராய் வேவல் கழகத்தை அழைக்காவிடினும், வகுப்புவாரி உரிமைக்கு ஒப்புதல் தந்தனர் என்பது குறித்துப் பெரியார் மகிழ்ச்சி தெரிவித்தார். இத்திங்களில் மணியம்மையார், ஏ.பி. சனார்த்தனம் இவர்களுடன் ஆந்திர நெல்லூர்ப் பகுதியில் பிரச்சாரம் செய்து வந்தார். அடுத்த திங்கள் பெங்களூருக்கும் சென்றிருந்தார் பிரச்சாரத்திற்கு.

போலி ஜஸ்டிஸ் கட்சியைத் துவக்க முயன்று தோல்வியுற்ற மாஜிப் பதவியாளர் சிலர், வேறொரு முனையிலிருந்தும் பெரியார் மீது பாணம் தொடுத்துப் பார்த்தனர். இமிடேஷன் சுயமரியாதைச் சங்கம் என்று 14—7—1945 "குடிஅரசு" இதனை வர்ணித்தது. தாங்களே மெய்யான சுயமரியாதைச் சங்கம், என ஒன்றைப் பதிவு செய்திட முனைந்தனர். இந்த முயற்சியை முளையிலேயே கிள்ளி எறியப் பெரியார் தொண்டர்கள் 1945-ஆகஸ்ட் 2-ம் நாள்

கரூரில் சுயமரியாதை இயக்க மாநாட்டைப் பெரியார் தலைமையில் நடத்தி, உண்மை இதுதான் என நாட்டினர்!

திராவிடர் கழக உறுப்பினர் பதியும் பணி விரைந்து முன்னேறி வந்தது. 1945-ஆகஸ்ட் 18-ஆம் நாள் வரையில் உறுப்பினர் எண்ணிக்கை 33,867; கட்டணத்தொகை ரூ-3367/—ஈரோட்டிலிருந்து பெரியார் "ஜஸ்டிசைட்" என்ற ஆங்கில வார இதழ் துவக்கினார், 1—9—45 அன்று. பின்னர் செப்டம்பர் 3-ஆம் நாள் கும்பகோணம் அரசினர் கல்லூரியில் தமிழ் மொழி பற்றிக் கருத்தாழமிக்க ஆய்வுப் பேருரை நிகழ்த்தினார். 17-வது நீதிக்கட்சி மாநாடு திருச்சியில் நடைபெற ஆயத்தமாயிற்று.

1945-செப்டம்பர் 29-ஆம் நாள் திருச்சி புத்தூர் மைதானத்தில் 17-வது நீதிக்கட்சி மாநாடு பெரியார் தலைமையில் நடைபெற்றது. என். அர்ச்சுனன் திறந்து வைத்தார். தராசுக்கொடி (இங்குதான் கடைசி) மிராண்டா கஜேந்திரன் அம்மையாரால் ஏற்றி வைக்கப்பட்டது. தி.பொ. வேதாசலம் வரவேற்புக் குழுத் தலைவர். அடுத்த நாள் டி. சண்முகம் தலைமையில் 4-வது சு.ம. இயக்க மாநில மாநாடு. கே.கே. நீலமேகம் திறந்துவைக்கக், கனகம்மையார் இராமசாமி கொடியேற்றினார். அண்ணாதான் வரவேற்புக் குழுவின் தலைவர். அழகர்சாமியின் சிறப்புரையும், எம்.ஆர். ராதாவின் நாடகமும் மாநாட்டில் பாராட்டுப் பெற்றன. இந்த மாநாட்டை ஒட்டி நடைபெற்ற ஊர்வலம், திட்டமிட்ட பாதையில் செல்லாதவாறு தடை செய்து, அரசு சிறுமதியைக் காட்டிக் கொண்டது. தொண்டர்கள் உணர்ச்சிமயமாய்த் தடை மீறத் துடித்தனர். பெரியாரோ தமது இயல்புக்கேற்ப, அரசு அனுமதிக்கும் வழியிலேயே செல்வோம் என்று அமைதிப்படுத்தினார். இதேபோல்தான் கடந்த ஜூலை 22-ஆம் நாள் புதுச்சேரியில் பாரதிதாசனால் துவக்கப்பட்ட திராவிடர் கழக விழாவுக்குப் பெரியார் சென்றபோது, அவர் உரை நிகழ்த்திய பின்னர், உள்ளூர்க் கயவர்கள் சிலர் கொடி மரத்தை வீழ்த்திக் கலவரம் செய்தனர். பெரியாரை ஒரு ரிக்ஷாவில் ஏற்றிப் பாதுகாப்பாக

அன்பர் ராமலிங்கம் இல்லத்திற்குத் தோழர்கள் அனுப்பி னார்கள். தனியே அகப்பட்டுக் கொண்ட மு. கருணாநிதி யைப் புடைக்கப் பட்டார் அங்கு "தொழிலாளர் மித் திரன்" இதழ் நடத்தி வந்த காஞ்சி கல்யாண சுந்தரம் தாக்கப்பட்டார். அப்போதும் பெரியார் அமைதி காத்து, அனைவரையும் ஆறுதல் பெறச் செய்து, அடுத்த நாள் வரை தங்கியிருந்து, பின்னர் ஈரோடு திரும்பினார்.

திருச்சி மாநாட்டில் பாடலாம் என்று பெண்ணாகரம் நடேசன் ஒரு பாடல் இயற்றிக்கொண்டு வந்திருந்தார். இன்னும் என்ன செய்யப் போறிங்க? சட்ட சபையை எந்த முறையில் நடத்தப் போறிங்க? சொல்லுங்க நீங்க! என்ற அந்தப் பாடலின் சந்தம் பெரியாரைக் கவர்ந்ததால், தாமே மெட்டமைத்துப் பாடிப் பார்த்தார். நன்றாக வந்தது. உடனே மகிழ்ந்து போய், அதில் 10,000 பிரதிகள் அச்சி யற்றித் திருச்சி மாநாட்டில் விநியோகம் செய்தார்; பாட லும் பாராட்டுகளை ஏராளமாகப் பெற்றது!

தராசுக்கொடி தென்னிந்திய நல உரிமைச் சங்கம் தந்த கொடி, அது புரட்சியின் சின்னமல்ல; மாற்ற வேண்டும்— என்பதாக ஒரு கருத்து திருச்சியில் உதயமாயிற்று. பின்னர் பெரியார் கேட்டுக் கொண்ட வண்ணம், பலரும் டிசைன் அமைக்க முயன்றனர். "குடிஅரசு" உதவி ஆசிரியராக அப்போது ஈரோடு வந்திருந்த மு. கருணாநிதி, கருப்பு மையும், தன் விரலின் நுனியிலிருந்து எடுத்த இரத்தமும் கொண்டு, இப்போதுள்ள திராவிடர் கழகக் கொடிக்கு வடிவமைப்பு எழுதித் தந்தார். அதுதான் பின்னர் 27—4—1946-ல் பெரியாரால் அங்கீகாரம் பெற்றது.

இனி திராவிடர் கழகத்துக்குப் பெரியார்தான் நிரந்தரத் தலைவர் எனத் திருச்சி மாநாடு தீர்மானம் இயற்றியது.

திராவிட விடுதலைப் படை என்பதாக ஒரு தொண்டர் படை திராவிடர் கழகத்துக்குத் தேவை என்றும் ஒரு தீர் மானம் நிறைவேற்றப்பட்டது. பெரியார் ஈரோடு திரும்பி யதும், இதைப்பற்றி மேலும் சிந்தித்து, 1945-செப்டம்பர் 29-ஆம் நாள் "குடிஅரசு" இதழில், கருப்புச் சட்டைப் படை

அமைப்பு என்பதாக ஓர் அறிவிப்பு வெளியிட்டார். ஈ.வி.கே. சம்பத், எஸ். கருணானந்தம் ஆகிய இருவரும் இதன் தற்காலிக அமைப்பாளர்கள் என்று கூறும் இத்தகைய அறிவிப்பு, 22—12—1945 "குடிஅரசு" இதழ் வரையில் தொடர்ந்து வெளியாயிற்று. கருப்புச் சட்டைப் படையின் முதல் தொண்டராக, மு. கருணாநிதி தம்மைப் பதிவுசெய்து கொண்டார் ஈரோட்டில்.

திருச்சி மாநாடு, தனிச் சுதந்திரத் திராவிட நாடு வேண்டும் என்றும்,தேர்தலைப் புறக்கணிப்பதாகவும் புரட்சி கரமான இரு முடிவுகளையும் மேற்கொண்டது. அடுத்த் திங்கள் 11-ஆம் நாள் சென்னையில் நடைபெற்ற மாபெரும் பொதுக்கூட்டத்தில் பெரியார்,தேர்தல்பகிஷ்காரம் ஏன் என விளக்கினார். நமது இழிநிலையை விளக்கிட எப்போதுமே கருப்புச் சட்டை அணியலாம்; பெண்டிரும் புடவை இரவிக்கை அணியலாம்; கூட்டங்களில் இனி மாலைக்குப் பதில் கருப்புத் துணிகளையே போடலாம் என்ற கருத்துக்களைப் பெரியார் கூறினார். இந்தியாவில் பிற இடங் களில் ராமதண்டு, அனுமான் சைன்யம், செஞ்சட்டை, நீலச் சட்டை, ஹிந்துஸ்தான் சேவாதள் ஆகியவை இருப்பது போல, இங்கும் கருப்புச் சட்டைப் படை இருக்கும்— என்றார் பெரியார்.

உடல்நலங் குன்றியதால் பெரியார் நவம்பர் 20-ஆம் நாள் முதல் டிசம்பர் 31 முடிய குற்றாலத்தில் தங்கியிருந் தார். இதற்கு ஒரு காரணம், கடந்த நவம்பர் முதல் நாள் என். எஸ். கிருஷ்ணன், எம். கே. தியாகராஜ பாகவதர் இருவருக்கும் 14 ஆண்டு கடின காவல் தண்டனை வழங்கப் பட்ட தீர்ப்பாகும். பெரியார் இதனால் மனங்குமைந்து போனார். நாடெங்கும் திராவிடர் கழகக் கூட்டங்களில் இவர்களிருவரையும் விடுதலை செய்ய வேண்டிக்கொள்ளும் தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன. நடிப்பிசைப் புலவர் கே. ஆர். ராமசாமி, கிருஷ்ணன் நாடக சபா ஒன்று துவக்கி யிருந்தார். இதில் டி.வி. நாராயணசாமி, சிவாஜிகணேசன், ஆர்.எம். வீரப்பன், எஸ். எஸ். ராசேந்திரன் ஆகியோர்

நடித்து வந்தனர். இந்த நாடக சபா தினந்தோறும் கிருஷ்ணன்-பாகவதர் விடுதலை செய்யப்படவேண்டும் என்ற கோரிக்கையைக் காட்சியாகக் காட்டி வந்தது. பத்திரிகா தர்மத்தின் பாதுகாவலனான மவுண்ட்ரோடு மகா விஷ்ணு, "இந்து" பத்திரிகை, என். எஸ். கே. சம்பந்தமான செய்திகளையே வெளியிடுவதில்லை. இதனால் மனம் வருந்திய பெரியார், நமக்கு நிதி வசதியும், ஒரு தினசரிப் பத்திரிகையும் தேவை என 1946 சனவரி 5-ஆம் நாள் "குடி அரசு" இதழில் குறிப்பிட்டிருந்தார். கழகப் பிரச்சாரம் செய்யும் தோழர்கள், கூட்டங்களுக்கு ஒத்துக் கொண்டு, போகாமல் தவறி விடும் ஒழுங்கீனத்தையும் பெரியார் கண்டித்திருந்தார். யுத்தப் பிரச்சாரத்திற்காகத் தரப்பட்ட "விடுதலை" நாளேடு திருப்பித்தரப்பட்டால், நடத்தலா மென விருப்பம் தெரிவித்தார். அதன்படி 1946 ஜூன் 6-ஆம் நாள் முதல் "விடுதலை" நாளேடு மீண்டும் தொடங்கப் பட்டது.

காங்கிரஸ் கட்சி தொடங்கிய 60-ஆம் ஆண்டு விழா 1946 சனவரியில் எங்கும் கொண்டாடப் பட்டது. இதை யொட்டி காந்தியார் சுற்றுப் பயணம் புறப்பட்டார். பெரியார், காங்கிரஸ் அய்ந்தாம்படை ஸ்தாபனந்தான் என்றாலும் காந்தியார் பகிஷ்காரம் இப்போது வேண்டாம்; காங்கிரசே தேர்தலில்வெற்றிபெறும் என்பதாக எழுதினார். இந்த முற்போக்கான காலத்திலும் சேலத்தில் மார்ச் 9, 10 தேதிகளில் சர் சி.பி. ராமசாமி அய்யர் தலைமையில் பிராமணர் மகாநாடு நடைபெற்ற அக்கிரமத்தைக் கண்டு பதைத்தார் பெரியார்! திராவிட மாணவர் கழகத்தின் இரண்டாவது மாகாண மாநாடு நீடாமங்கலத்தில் பிப்ரவரி 23, 24 நாட்களில் மிக எழுச்சியுடன் நடைபெற்றது. பெரியார், அண்ணா, ஏ. ராமசாமிக் கவுண்டர் ஆகியோர் கலந்து கொண்டனர். மாணவர் உள்ளத்தில் மூண்டிருந்த புரட்சிக்கனல் அணைந்திடாமல் பாதுகாத்தார் பெரியார்!

நாடெங்கும் கருப்புச் சட்டை அணிந்தோர் உலா வந்தனர். மதுரையில் கருப்புச் சட்டைப் படையின்

முதலாவது மாநாடு குழுமியது. மே திங்களில் 11, 12 நாட்களில் தொடங்கிய கருப்புச் சட்டை மாநாட்டிற்குத் தலைவர் பெரியார், திறப்பாளர் அண்ணா, கொடி உயர்த்தியோர் என். அர்ச்சுனன், "திராவிடநாடு" படத்திறப்பாளர் ஈரோடு எஸ்.ஆர். காந்தி அம்மையார் (மாப்பிள்ளை நாயக்கர் மகளார். சம்பத், பெரியார் விரும்பியவாறு இவரைத் திருமணம் செய்து கொண்டிருந்தால், பெரியாரின் வெறுப்பைச் சம்பாதித்திருக்க மாட்டார்!) அண்ணாவின் அவன்பித்தனா, ராதாவின் போர்வாள்—நாடகங்கள் ஏற்பாடாகி யிருந்தன. மதுரை வையையாற்று மணற்பரப்பில் வேயப்பட்டிருந்த மாநாட்டுப் பெரும் பந்தலில் கயவர் நெருப்பிட்டுக் கொளுத்தினர். தங்கியிருந்தோர் திசை தடுமாறி ஓடும் போது, காலிகள் தாக்கினர். இதைத் தொடர்ந்து தமிழ் நாடெங்கும் அமளி கட்டவிழ்த்து விடப்பட்டுக், கழகக் கொடிகளை ;வீழ்த்துவதும், கலாம் விளைப்பதும் தொடர்ந்தது. ஆனால் அடுத்த வாரமே கும்பகோணத்தில் திராவிடர் மாநாடும், சுயமரியாதை மாநாடும் நடைபெற்றன. இரவில் அண்ணாவின் சந்திரோதயம், சிவாஜி கண்ட இந்து ராஜ்யம் நாடகங்கள். உடல் நலிவோடு அண்ணாவும் இவற்றில் நடித்தார். சிவாஜிகணேசன் சிவாஜியாக வேடம் புனைந்தார்.(15-12-1945 அன்று இந்த நாடகம் சென்னையில் அரங்கேறியது. அதுவரை ஸ்திரீ பார்ட்டாக இருந்த நடிகர் வி.சி. கணேசனுக்கு சிவாஜி வேடந்தந்து, தாம் காகபட்டராக நடித்தார் அண்ணா) ஏ.வி.பி. ஆசைத்தம்பி சுயமரியாதை மாநாட்டுத் தலைமை தாங்கினார்.

விருதுநகரில் காமராசருக்கு உறவினராயிருந்தும் துவக்க முதல் இறுதிவரை மயங்காத்திண்மை படைத்த சுயமரியாதை வீரராக விளங்கிய ஏ.வி.பி. ஆசைத்தம்பி தமது பள்ளிப் படிப்பு முடிந்த 1943-ஆம் ஆண்டு முதல் இயக்கத்தில் ஈடுபட்டார். 1944-ஆம் ஆண்டு திராவிட மாணவர் மாநாட்டை அங்கே கே. ஆர்.சத்தியேந்திரன் (மாவட்ட நீதிபதி அளவுக்குப் பின்னாளில் உயர்ந்தவர். 1976-ல் இந்திரா காந்தியால் பழிவாங்கப் பட்டோரில் முக்கியமானவர்.) போன்ற தோழர்களுடன் நடத்

தினார். நகரமன்ற உறுப்பினராயிருந்தார். அண்ணா வுடன் தி.மு.க. அமைப்புக்கு வந்தார். காந்தியார் சாந்தி யடைய என்ற நூலை எழுதியதற்காக 6 மாதக் கடுங் காவல் தண்டனை பெற்றுச் சிறையிலிருந்தபோது, அரசு 1950-ல் இவர் தலையை மொட்டையடித்தது. 1957-ஆம் ஆண்டிலும் 1967–ஆம் ஆண்டிலும் சென்னையில் சட்ட மன்ற உறுப்பினரானார். கலைஞர் ஆட்சியில் சுற்றுலா வாரியத் தலைவராயிருந்தார். 1977-ல் வடசென்னை நாடாளு மன்றத் தேர்தலில் வென்றார். 1979 ஏப்ரல் 7–ஆம் நாள் அந்தமானில் திடீரென மறைந்தார். "தனி அரசு" இதழாகவும் நாளேடாகவும் நடத்தி—அச்சம் தயை தாட்சண்யமின்றி எழுதினார். தொலைவிலிருந்து கேட்பார்க்குத் தந்தை பெரியார் பேசுவது போலவே யிருக்கும் குரலும் பாணியும் இவர் கொண்டு, சிறந்து விளங்கினார். டாக்சி ஆட்டோரிக்ஷாத் தொழிற் சங்கத் தலைவராக நீண்ட நாள் இருந்தார். இன் சொல்லால் உரையாடும் பண்பாளர்.

குடந்தை கே. கே. நீலமேகம் தஞ்சை மாவட்டத் தில் சுயமரியாதை, திராவிடர் இயக்கப் பெருந்தூண். பெரியாரை விடுத்து அண்ணாவுடன் இவர் தி.மு.கழகத் திற்குச் சென்றது பெரியாருக்கு உட்பட எல்லார்க்குமே வியப்பு. ஓங்கிய குரலால் நீண்ட நேரம் மேடைகளில் பேசுவார். நிறைய சீர்திருத்தத் திருமணங்கள் நடத்தி வைத்துள்ளார்.

சேலம் முனிசிபல் கல்லூரித் தலைவர் ஏ. இராம சாமிக் கவுண்டரும், அவரது துணைவியார் கனகம்மை யாரும் திராவிடர் இயக்கத்தில் முழுமூச்சாக ஈடுபட் டார்கள். எந்தக் கூட்டமோ, மாநாடோ, தயங்காமல் பங்கேற்றுப் பணியாற்றுவார்கள். அம்மையார் அரசியல் நிகழ்ச்சிகளில் மிகத் துணிவுடன் கலந்துகொள்வார்கள்.

திருவெற்றியூர் சண்முகம் பெரியாரின் அன்பர். இடைவிடாது நீதிக்கட்சிக்காக உழைத்த பெருந்தகை யாளர். அண்ணாவிடமும் பெருமதிப்புப் பெற்றார்.

ஜூன் திங்கள் நடைபெற்ற இரயில்வேத் தொழிலாளர் வேலை நிறுத்தம், சென்னையில் பக்கிங்ஹாம் கர்நாடிக் மில் தொழிலாளர் வேலை நிறுத்தம் இவற்றை வரவேற்றும், வெற்றிபெற வாழ்த்தியும், பார்ப்பனர் சூழ்ச்சிக்கும்—பத்திரி

கையாளர் இழி தன்மைக்கும் பலியாகாமல் எச்சரிக்கையாய் நடந்துவர வேண்டுமென்றும் தொழிலாளர்களுக்கு அறிவுரை கூறினார் பெரியார்.

கழகத்துக்கு நிதி வசதியே இல்லாததால் ஆளுக்கு ஒரு ரூபாய் கொடுத்து உதவ வேண்டும் என்றும், அது சேரும் வரையில் கழகத் தோழர்கள் ஆங்காங்கு மாநாடு கூட்டி நிறையப் பணத்தைச் செலவழிக்க வேண்டாம் என்றும் பெரியார் கேட்டுக் கொண்டார்.

சூலைத் திங்கள் 31-ஆம் நாள் முதல் ஆகஸ்டுத் திங்கள் 8-ஆம் நாள் முடியப் பெரியார் தஞ்சை மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்தார். இதில் புதுமையாக விளம்பரம் ஒன்று செய்யப்பட்டது திருவாரூர் வி. எஸ். பி. யாகூப் என்னும் சிறந்த அமைப்புத் தொண்டரால். அதாவது, பெரியாருடன் நெடுஞ்செழியனும் வருவார்; ஒலி பெருக்கி அமைக்கப்பட்ட காரில் இருவரும் பயணம் செய்வார்கள் என்பதாக! 1946-ல் இதுவும் ஒரு புதுமை!

பெரியார் குடும்பத்தில் இந்த ஆண்டு இரு திருமணங்கள் நடந்தன. அண்ணாரின் சிறிய மகள் செல்லா என்கிற நாகலட்சுமிக்கும், சேலம் தாதம்பட்டி ராஜுவுக்கும் 19-4-46 ல் திருமணம் நடைபெற்றது. ஈ. வெ. கி. சம்பத்—திருப்பத்தூர் சாமி நாயுடு மகள் சுலோச்சனா இவர்கள் திருமணம் 15-9-1946 அன்று திருப்பத்தூரில் நடைபெற்றபோது பெரியார், பெண்கள் அலங்கார பொம்மைகளா—என்ற தலைப்பில், பெண்டிருக்கு உள்ள நகைப் பைத்தியம் முதலிய பழைமைக் கருத்துகளைச் சாடினார். (பெரியார் வலதுகை மோதிர விரலில் எப்போதும் அணிந்திருக்கும் பெரிய பச்சைக் கல் மோதிரத்தைக் குறும்புடன் பார்த்தனர் மணமகளார்!)

திராவிட மக்களுக்குத் தனியான நெறியில்லை; ஆரிய மதம் ஆரியவேதம் ஆரியக்கலை இவைகளையே தமது நெறியாகத் திராவிடர் தவறாகக் கருதுகின்றனர்; ஆதாரமேயில்லாத பாதக்கண்டம் அல்லது பாரத தேசம் தமது நாடு என நினைக்கின்றனர்; யார் நம்மவர், யார் அந்நியர்

என்பதும் புரிவதில்லை; திராவிடர் தவிர மற்ற எல்லாருமே நமக்கு அந்நியரே; காங்கிரஸ் ஏற்பட்டது, முஸ்லீம்களிட மிருந்து இந்துக்களைப் பாதுகாக்கவே; எனவே ஆரியம் ஒழிந்த திராவிடமே நமது இலட்சியம்—என்று பெரியார் சென்னையிலும் பிற ஊர்களிலும் நடந்த பொதுக் கூட்டங் களில் விளக்கினார். இந்நிலையில், இந்தியாவில் நடை பெற்ற அரசியல் நிர்ணயசபைத் தேர்தலில், காங்கிரஸ், போட்டியிட்டு, நூறு சதவீத வெற்றியைத் தேடிக் கொண்டது! வெள்ளையர் வெளியேறுமுன்பே காங்கிரசார் இங்கு பதவியில் அமர்ந்து, அரசியல் சட்டங்களை இயற்றத் தொடங்கினர். முஸ்லிம் லீகும், டாக்டர் அம்பேத்கார் இயக்கமும் நேரடி நடவடிக்கையில் இறங்கின. சர் ஸ்டா போர்டு கிரிப்சும், வைசிராய் வேவலும் திராவிடர்களின் பிரச்சினையைக் கேட்டறிந்தும், காலை வாரிவிட்டனர். பெரியாருக்கு அதிர்ச்சி தரும் வண்ணம், 24 வயது நிரம்பு முன்னர் என். அர்ச்சுனன் மறைந்துவிட்டார் 12-10-46 அன்று.

காங்கிரஸ் பொதுத் தேர்தலில் வெற்றி பெற்று ஆட்சி அமைத்தது. ஆனால் திட்டவட்டமான கொள்கையில்லாமல் குழம்பிக் கிடந்தனர் மந்திரிகள். மதுவிலக்கில் கட்டுப்பா டில்லாக் காங்கிரஸ் மந்திரிகள் என்று பெரியார் கண் டனம் தெரிவித்து எழுதினார். மேலும், முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும் என்ற தலைப்பிலும் எழுதினார். அதாவது, காங்கிரஸ் இடைக்கால சர்க்கார் அமைத்ததைச் சுட்டிக்காட்டி! , முன்பு நீதிக்கட்சி ஆட்சி முடிவுற்றுக், காங்கிரஸ், ஆட்சி அமைக்கத் தயங்கியபோது, 1936-ல், அற்பாயுள் மந்திரிசபையென இடைக்கால மந்திரி சபையைக் காங்கிரசார் வர்ணித்தார்களல்லவா—அதைப் பெரியார் நினைவூட்டினார்.

சென்னையில் டிப்புசுல்தான் நாள் என்பதாக 1946 நவம்பர் 16-ஆம் நாள் கொண்டாடப்பட்ட ஒரு விழாவில் பெரியார் கலந்து கொண்டு உரையாற்றியிருப்பது புதுமை யாகத் தோன்றுகிறது.

சென்னை மாகாணத்தில் பிரகாசம் தலைமையில் காங்கிரஸ் அரசோச்சத் தொடங்கியிருந்தது.

ஈரோட்டில் சண்முக வேலாயுதம், புலியூர் குகநாதன் இருவரும் சேர்ந்து நாதன் கம்பெனி என்ற புத்தக விற்பனை நிலையம் துவங்கினர். "குடிஅரசு" இதழ் சில காலம் இவர்கள் பொறுப்பில் நடைபெறப் பெரியார் அனுமதித் திருந்தார். பெரியாரின் சேலம் கல்லூரிச் சொற் பொழிவைத் தொகுத்து "தத்துவ விளக்கம்" என்ற அழகிய நூலையும் இவர்கள் வெளியிட்டனர் பின்பு. 1947 சனவரி 22 அன்று துவக்க விழா ஆற்றிய பெரியார், நூல்களைப் பற்றி அரிய கருத்துகளை அங்கு வெளியிட்டார்:—இப்போது நூல் படிப்பவர் தொகை அதிகமாகியிருப்பதால், வெளியீட் டாளர் நூல் விற்குமோ என அஞ்சவேண்டியதில்லை. ஆனால் படித்த கூட்டத்தார், பிறருக்கு உபகாரிகளாக இருப்பதில்லை. பண்டிதர்கள் எவ்வளவோ பெரிய நூல் களை எழுதி வெளியிட்டாலும் மூடநம்பிக்கையில்லாத, மானமற்ற தன்மையில்லாத, நூல் ஒன்றேனும் காண முடிவ தில்லை. அறிவியக்க நூல்களை வாங்குவோர் மிக அவசிய மானவற்றை வைத்துக் கொண்டு, மற்ற நூல்களைக் குறைந்த விலைக்கு, உடனே, பிறர்க்கு விற்று, நிறையப் பேர் படிக்க வழி செய்ய வேண்டும்—என்றெல்லாம் பெரியார் சிந்தனைச் செல்வத்தை வாரி வழங்கினார்.

மார்ச் 18-ஆம் நாள் திருச்சியில் தென்பகுதி ரயில்வே அலுவலர் சங்கத்தார் பெரியாருக்கு 1080 ரூபாய் நிதி வழங்கினார்கள். அவர்கள் குறை போகப், பெரியார் காட்டிய வழிகள், ஆழ்ந்த சிந்தனைக்கு உரியவையாகும், அலுவலர்களைத் தேர்ந்தெடுக்கும் ரயில்வே சர்வீஸ் கமிஷன் உறுப்பினர்கள் அய்ந்து பேரில் ஒருவர் முஸ்லிம்; அவரும் பார்ப்பன மாதை (கே. சந்தானம் அய்யங்காரின் மைத் துனியை) மணந்தவர்; மற்றவர் பார்ப்பனர். நீதி எப்படி நம்மவர்க்குக் கிடைக்கும்? காங்கிரசின் ராமராஜ்யம் நமது சூத்திரர்களுக்கு மட்டுமே தீங்கிழைக்கிறது. முஸ்லீமோ, வெள்ளையரோ, சட்டைக்காரரோ, மதம் மாறுவதாய்

மிரட்டும் அம்பேத்காரின் தாழ்த்தப்பட்டவரோ தமக்குரிய கோட்டாவைப் பெறுகிறார்கள். இந்து என்கிற பெயரில் பார்ப்பனர் முழுக் கோட்டாவும் அடித்து விடுகின்றனர். தப்பித்தவறி நம்மவர் யாராவது மேலே வந்தால், கெட்ட பெயர் உண்டாக்கி, ஆளையே அழித்துவிடுகிறார்கள். அதனால்தான் நாம் இந்து என்னும் பிடிப்பிலிருந்து விடுபட வேண்டும். நமக்கு அய்ந்தாண்டுகளுக்குப் பின் தாம் இந்து வல்ல என்று சொன்ன அம்பேத்காருக்குச் சலுகை கிடைக்கிறது; நாம் திராவிட நாடு கேட்ட மூன்றாண்டுகட்கு அப்பால் பாக்கிஸ்தான் கேட்ட ஜின்னாவுக்குப் பயப்படுகிறார்கள்; நம்மை மாத்திரம் மதிப்பதில்லை. ஆகையால் நமக்கு இருக்கிற இழிவு ஒழிய நாமெல்லாம் இஸ்லாம் மார்க்கத்தில் சேர்ந்து விடுவதுதான் ஒரேவழி—என்றார் பெரியார்.

பிரகாசம் தலைமையில் அமைந்திருந்த காங்கிரஸ் ஆட்சி சென்னை மாகாணத்தில் கொடுங்கோலாட்சி புரிந்து வந்தது. ஆந்திராவைத் தனியே பிரித்துக் கொண்டு போய் விட எண்ணிய பிரகாசத்தின் கனவு அப்போது கைகூடாததால் அவர் எரிச்சலுற்றுக் கிடந்தார். காமராசர் தமிழ் நாடு காங்கிரசின் தலைவராக ஆற்றலுடன் விளங்கியதால் பிரகாசம் தலைமையை மாற்றக் காமராசர் கண் விழிப்பாரா என்று பெரியார் எழுதினார். சி. என். முத்துரங்க முதலியாரும், டாக்டர் பி. சுப்பராயனும் போட்டியிட்டு, இரு முறையும் பிரகாசமே வென்றார். அதனால் காமராசர் புது யுக்தியைக் கையாண்டு, தெலுங்கு பேசும் தமிழரான ஓமந்தூர் பி. ராமசாமி ரெட்டியாரை மார்ச் மாதம் முதல்வராக்கினார். பிரகாசம் எதிர் வரிசையில் அமர்ந்து, தொல்லை கொடுப்பதைத் தொடர்ந்தார்! பிரகாசம், பந்துலு (அய்யர்) ஆயிற்றே! என்றார் பெரியார்.

பெரியாருக்கு இப்போது மகிழ்ச்சியளித்த ஒரே செய்தி என். எஸ். கிருஷ்ணன், தியாகராச பாகவதர் இருவரும் 25-4-47ல் விடுதலை ஆனதுதான்! அதனால் நோயுற்றிருந்த அவர் பூரித்தெழுந்தார். எடை ஒரு வேளை அதிகரித்

ததோ என்னவோ? திருவத்திபுரத்தின் கழகத் தோழர்கள், அடுத்த திங்கள், பெரியாருக்குத் துலா நிறை புகு விழா நடத்திக் களித்தனர்.

1947 ஆகஸ்ட் 15 நள்ளிரவில் வெள்ளையன் வெளியேறி னான். காந்தியார் கேட்ட இந்துஸ்தான் சுயராஜ்யம் முழு அளவில் கிடைக்கவில்லை. இந்தியாவைக் கூறு போட்டுப், பாக்கிஸ்தானைத் தனியாக்கிக், குடியேற்ற நாட்டு அந்தஸ் துடன்தான் சுயராஜ்யம் தந்தான். ஆடி, ஆனந்தப் பள்ளுப் பாடினர் காங்கிரசார். "இது நமக்குத் துக்க நாள்! வெள்ளையன் வெளியேறினானாலும், வட நாட்டுக் கொள்ளையன் நம்மீது சவாரி செய்கிறானே?" என்றார் பெரியார். திராவிடர் கழகத் தேனிசையில் அபசுரம் ஒலித்தது. அண்ணா எழுதினார்—"இரண்டு பேர் நம்மீது சவாரி செய்தனர்; ஒருவன் ஒழிந்ததில் பாதிச்சுமை குறைந்த தல்லவா? அதனால் ஆகஸ்ட் 15 மகிழ்ச்சிக்குரிய நாள்!" என்று. வெளியில் தெரியுமளவுக்குக், கழகம் இரு முகா மாகித், தாக்கிக் கொண்டது. ஏற்கனவே, எல்லாரும் எப்போதும் கருப்புச் சட்டை அணிய வேண்டும்; வெள்ளைச் சட்டையணியும் குள்ள நரிகள் எனக்கு வேண்டாம்—என்று பெரியார் சொன்னதில், அண்ணாவும் வேறு சிலரும் மனத் தாங்கலுடனிருந்தனர். ஆகஸ்ட் 15 புதிய விரிசலை உண்டாக்கியது.

செப்டம்பர் 14-ஆம் நாள் கடலூரில் நடைபெற்ற திராவிட நாடு பிரிவினை மாநாட்டில், திரு. வி. க. கலந்து கொண்டு திராவிட நாடு திராவிடருக்கே என்று முழங்கிய அற்புத மாறுதலைத் தமிழகம் கண்டது ஆயினும், அண்ணாவின் உள்ளம் அமைதியை இழந்திருந்தது. பெரியார் செயல்களில் அண்ணா ஏதோ குறை உணரத் தொடங் கினார். இதற்கு மேலும் உரமூட்டுவது போல், கரூர் வழக்கு நிதி அமைந்தது. நெசவாளர் போராட்டத்தில் ஈடுபட்ட கரூர்கழகத் தோழர்கள் சுமார் 100 பேர்மீது காங்கிரஸ்அரசு கடுமையான விதிகளின் கீழ் வழக்குத் தொடர்ந்து அலைக் கழித்தது. பெரியார், அவர்களை ஆதரித்துக் காப்பாற்ற

வில்லை என்பதாகக் கூறி அண்ணா, திருச்சியில், தமது நீதி தேவன் மயக்கம் போன்ற நாடகங்கள் வாயிலாய் நிதி திரட்டி உதவினார்.

'உடையார்பாளையம் வேலாயுதம் என்கிற ஒரு பள்ளி ஆசிரியர் கழகப் பிரச்சாரம் செய்தார் என்ற காரணத்துக்காகக் கொலை செய்து, தூக்கில் தொங்கவிடப்பட்டது, 1947 நவம்பரில்தான்!

ஏ.பி. சனார்த்தனம் "தோழன்" என்றொரு திங்களிதழ் தொடங்கினார். "அவரை நம்பலாம்" என்று பெரியார் 1-11-47-ல் நற்சான்றிதழ் வழங்கினார். இவர்தாம் பெரியாரில் பெரியார் என்றார் பட்டுக்கோட்டை அழகர்சாமி, அப்போது பெரியாரைப் பற்றி!

வால்மீகி ராமாயணத்தைப் பெரியார் மிக நுணுக்கமாக ஆராய்ந்து தெளிந்தவர். அந்த ஆதி காவியத்தைத் தமிழில் மொழி மாற்றம் செய்த கம்பனுக்கு, என்ன அவசியம் வந்ததோ தெரியவில்லை—அதில் உள்ள சாமான்ய மனிதர்களையெல்லாம் தெய்வங்களாகப் படைத்து உலவ விட்டான். கம்பராமாயணம் ஒரு சிறந்த இலக்கியம் என்பதால் கிடைத்ததைவிடப், பக்தி மார்க்க நூல் ஆண்டவன் அவதார மகிமை கூறும் இதிகாசம் என்பதால் கிடைக்கும் பெருமையே அதிகம். எனவேதான் கம்பன் தமிழ்க் கவிஞனென்கின்ற தயவு தாட்சண்யம் பாராமல் பெரியார் கண்டித்தார். மேலும், நாடகம், தெருக்கூத்துகள் வாயிலாகவே இராமாயணம் அதிகமாகப் பரவியிருப்பதால், அதே வழியைக் கையாண்டு. வான்மீகிப் படைப்பின்படி இராமாயணப் பாத்திரத்தைச் சிருஷ்டித்து, நாடகமாக நடத்த விரும்பிய பெரியார், உண்மை இராமாயணம் என்னும் பெயரில், நாடக உருவில், தொடர்ந்து "குடி அரசு" இதழில் எழுதி வந்தார்.

சுயராஜ்ய ஆட்சி என்ற பெயரால் கடைந்தெடுத்த முதலாளிகள் ஆட்சிதான் டெல்லியிலும், சென்னையிலும் நடைபெறுகின்றன என்பதைத் தக்க ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டி, 1948 சனவரித் திங்களில் தாம் சுற்றுப்

பயணம் செய்த எல்லா ஊர்களிலும் பெரியார் சொற்பொழி வாற்றுகையில், ஏழைப் பங்காளரான காந்தியார், பிர்லா மாளிகையில் தங்குவதும்; பெரும் முதலாளியான ஆர்.கே. சண்முகம் நிதிமந்திரியாக விளங்குவதும் நியாயமா என்று கேட்டார். சுய ஆட்சி என்பதைவிட, நல்ல ஆட்சியையே தாம் விரும்புவதாகக் கூறினார். 100க்கு 88 பேராகவுள்ள பிற்படுத்தப் பட்டோர்-தாழ்த்தப்பட்டோருக்குப்பிரதிநிதித் துவம் தரப்படாத கொடுமையை விவரித்தார்.

காந்தியார் படுகொலை நிகழ்ந்து விட்டது! அவரது வர்ணாசிரம தர்ம மோகத்தையே பெரியார் கண்டித்து வந்தார். ஆனால் பார்ப்பனரல்லாதாரான காந்தியார்மீது அளவற்ற பற்றுதல் கொண்டவர் பெரியார். சித்தம் கலங்கி விட்டார். நாடெங்கும் திராவிடர் கழகத்தின் சார்பில் 1948 பிப்ரவரி 29-ஆம் நாள் காந்தியாருக்காக அனுதாபக் கூட்டங்கள் நடத்திட அறிவித்தார். 31—1—48 "விடுதலை" ஏட்டில், மனம் பதறி அறிக்கை விட்டார். தொடர்ந்து பிப்ரவரிமாதம் முழுவதும் காந்தியாரைப் பற்றியே பேசியும், எழுதியும் வந்தார். காந்தியார் பாலூற்றி வளர்த்து வந்த பார்ப்பனீயப் பாம்பே அவரைத் தீண்டிய நன்றி கொன்ற செயலை வெளிப்படுத்தினார். கோட்சே, பார்ப்பனன் என் பதை மறைத்த, "இந்து", "மித்திரன்" பத்திரிகா தர்மத்தை அம்பலமாக்கினார். "அய் ஹாவ் நோ பிலீஃப் இன் பர்சனல் காட்" என்று சொன்ன காந்தியாரின் சாம்பலை ஊரூராய்க் கரைத்த மூடத்தனத்தைக் கண்டித்தார். காந்தியாருக்கு நினைவுச் சின்னமாக, இந்தியாவுக்கு காந்திஸ்தான் அல்லது காந்திதேசம் என்றும், இந்து மதத்துக்குக் காந்தி மதம் என்றும், நமது ஆண்டுக் கணக்குக்குக் காந்தி ஆண்டு என்றும், பெயர் மாற்றலாமெனப் பெரியார் ஆலோசனை வழங்கினார். இந்தப் பெருந்தன்மையைப் புரிந்து கொள்ளும் ஆற்றலின்றி, நேரு குழுவும் பட்டேல் குழுவும் தமக்குள் போராடிக் கொண்டிருந்தன, டெல்லிப் பட்டணத்தில்!

எல்லாவற்றுக்குமே கருஞ்சட்டைக்காரர்தான் காரணம் என்று இங்குள்ள பத்திரிகையாளர் தூண்டி விட்டதற்

கிணங்க, சென்னையிலிருந்த ஓமந்தூரார் அரசு, திராவிடர் கழகத்தின்மீது அடக்கு முறையைக் கட்டவிழ்த்து விட்டது. கிரிமினல் சட்டத் திருத்தம் 15-ஆவது பிரிவின்கீழ்க் கருப்புச் சட்டைப் படைக்குத் தடை விதிக்கப்பட்டது. கழக அலுவல கங்கள், பத்திரிகை அலுவலகங்கள், கழகத்தார் இல்லங்கள் யாவும் சோதனைக்குள்ளாயின. கருப்புச் சட்டைப்படை என்பதாக ஒரு படை இல்லை என்று எடுத்துக் காட்டியும் கேட்பாரில்லை. ஆகையால் பெரியார் இன்னும் விளக்க மாக-என்னை அழிக்க நினைத்தால் அது என் இயக்க அழி வல்ல; பிராமண அழிவேயாகும்-என்று 27-3-48 "குடிஅரசு" இதழில் எழுதி இடித்துரைத்தார். இனிப் பிராமணாள் என வழங்காமல், இலக்கிய ஆதாரத்தின்படிப், பார்ப்பான் என்றே அழைத்திட ஆணையிட்டார். திராவிடர் கழகம், என்றும் பலாத்காரத்தையோ வன்செயல்களையோ ஆதரிக்காது; ஊரெங்கும் தாக்கப்பட்டும், அடிக்கப் பட்டும் அவதிக்கு ஆளாவதெல்லாம் கழகத்துக்காரரே! வன்செயலை விரும்பாத அகிம்சாவாதியான காந்தியடி களையே இந்து மதவெறிப் பார்ப்பனன் சுட்டுக் கொன்றது போல, அறவழியில் செல்லும் கழகத்துடன் மோத வேண் டாம்—என எச்சரித்தார் பெரியார். சுயநலமிகளுக்கு மட்டுந்தான் எங்கள் கழகம் விரோதி. மற்ற அனைவர்க்கும் தோழன்—எனவும் விவரித்தார். ஜாதி மதமற்ற—வர்ணா சிரம அடிப்படை ஒழிந்த—சமுதாயம் அமைத்திட இனி யாவது பாடுபட்டு ஆவன செய்யுங்கள் என அரசியல் நிர்ணய சபைக்கும், காங்கிரசுக்கும் 1948 ஏப்ரல் 24-ஆம் நாள் பெரியார் ஆலோசனை வழங்கினார்.

17-4-48-ல் சென்னையில் மறைமலையடிகள் தலைமை யில் நடந்த இந்தி எதிர்ப்பாளர் மாநாடு ஒன்றில் பெரியார் கலந்து கொண்டார். அண்ணாவும், திராவிடர் கழகத்தவர் அல்லாத திரு. வி.க., அருணகிரி அடிகள், ம. பொ. சிவ ஞானம், டி. செங்கல்வராயன், நாரண துரைக்கண்ணன் ஆகியோரும் கட்டாய இந்தியை எதிர்த்துப் பேசினர்.

பெரியாருக்கும் அண்ணாவுக்கும் ஏதாவது அபிப்பிராய பேதம் உண்டா?என வெளிப்படையாகவும்,நேரிடையாகவும் தம்மிடம் வினவிய கழகத் தோழர்களிடம் பெரியார்—இம் மாதிரிக் கேட்பதே தவறு. ஒரு கட்சிக்கு ஒரு தலைவர்தான் இருக்க முடியும். மற்றவர், பின்பற்றுவோராகத்தான் இருக்க வேண்டும். அபிப்பிராய பேதம் சொந்தத் தனிப் பட்ட விஷயங்களில் வேண்டுமானால் இருக்கலாம்; கழக விஷயங்களில் இருக்கக்கூடாது! அப்படி ஏதாவது இருப்ப தாக வெளிப்படுத்தினால், அது குறுக்கு வழியில் தமக்கு விளம்பரம் தேடும் முறையாகவே கருதப்படும்...என்று திட்ட வட்டமாகவே அறிவித்து விட்டார். இந்நிலையில் "திராவிட நாடு" இதழில் அண்ணா எழுதிவந்த—லேபில் வேண்டாம், உள்ளம் உடையுமுன், ராஜபார்ட் ரங்கதுரை, மரத்துண்டு, இரும்பாரம் போன்ற உருவகக் கதைகள்,ஏதோ புயலுக்கு முன்னெச்சரிக்கை போலக் காட்சி தந்தன. அநேகர் 'எதிர்பார்த்தவாறு அறிஞர் அண்ணா தூத்துக்குடி மாநாட்டில் கலந்து கொள்ளவில்லை!

அனைத்துலகத் தொழிலாளர் நாளாகிய மே தினத் தைத், தொழிலாளர்களின் உண்மையான இயக்கமாகிய திராவிடர் கழகம் ஏன் கொண்டாடுகிறது என்பதை விளக் கினார் பெரியார். 1—5—48 "குடி அரசு" இதழில் மே தினமும் திராவிடர் கழகமும் என்று தலையங்கம் தீட்டி னார். மே திங்கள் 8, 9 நாட்களில் தூத்துக்குடியில் 18–வது திராவிடர் கழக மாகாண மாநாடு நடைபெற்றது. பெரியார் தலைமையேற்று, காந்தியடிகள் படத்தையும் திறந்து வைத்தார்; தி. பொ. வேதாசலம் திறப்பாளர்; கே.கே. நீலமேகம் கருப்பு சிவப்புக் கொடியினை உயர்த் தினார். திராவிடநாடு படத்தை அண்ணா திறக்க வேண்டும்; வரவில்லை! பன்னீர் செல்வம் படத்தை அழகிரி யும், தாளமுத்து நடராசன் படத்தை ஏ.பி. சனார்த்தனமும், வ.உ.சி. படத்தைத் திரு.வி.க.வும் திறந்து வைத்தனர். கழகத்தில் கட்டுப்பாடு காக்கப்படவேண்டிய அவசியம்

பற்றிப் பெரியார் வலியுறுத்தினார். அண்ணா வராததை எம். ஆர். ராதா கண்டித்துப் பேசவே, "நடிகவேள் மாநாட்டில் நஞ்சு கலந்தார்" என்றார் மு. கருணாநிதி.

வாழ்வில் ஒன்று சேராத உறவினர்கள்கூடத் தாழ்வில் ஒருங்கிணைவார்களல்லவா? ஓமந்தூரார் ஆட்சி கட்டாய இந்தியை மீண்டும் கொணர்ந்து தலைவரையும் தளபதியையும் இணைத்து வைத்தது!

விபரீதமான வெடி என்று பெரியாரால் வர்ணிக்கப்பட்ட ஒரு தாக்கீது, டெல்லி மத்திய அரசால் மாநிலங்களுக்கு மே.இறுதியில் அனுப்பப்பட்டது.பெரியாரின்உயிர் நாடியான கம்யூனல் ஜி.ஓ. கூடாது என்பதே அது! பெரியார் சிலிர்த்தெழுந்து "உடனே அரசியல் நிர்ணய சபையைக் கலைக்க வேண்டும்! வயது வந்தோருக்கு வாக்குரிமை அளித்த பின்பே, அரசியல் சட்டம் நிறைவேற்றுவோம், என்று காங்கிரசார் அளித்த வாக்குறுதியைக் காற்றில் பறக்கவிட்டு, நூற்றுக்குப் பத்துப்பேர் வாக்கைப் பெற்றுத், தாங்களே விருப்பமானவர்களை நியமித்துக்கொண்டு, இரண்டாண்டுகளாய்ச் செயல்பட்டுப், பல சட்டங்களை உருவாக்கி வரும் அரசியல் நிர்ணய சபையின் அமைப்பு செல்லாது; எங்களையும் கட்டுப்படுத்தாது" என்று இந்தியாவிலேயே ஓங்கிக்குரல் கொடுத்த ஒரே ஒரு முழு மனிதர் பெரியார்தான்! திராவிட நாடு பிரச்சினையைக் கேலி பேசிய பிரதமர் பண்டித நேருவுக்கும் பெரியார் விளக்கமுரைத்து, அடுத்த ஜூலை முதல் ஒவ்வோராண்டும் ஜூலை 1-ந்தேதி திராவிடப் பிரிவினை நாள் கொண்டாடுமாறு கழகத்தார்க்கு வேண்டுகோள் விடுத்தார்.

அரசு வாளா இருக்குமா? பாய்ந்தது "விடுதலை" மீது! 19—6 48 அன்று "விடுதலை" ஏட்டுக்கு 2000 ரூபாய் ஜாமீன் கட்ட வேண்டும் என்று, அதன் பதிப்பாசிரியரும் வெளியீட்டாளருமான மணியம்மையாருக்கு அரசாணை வந்தது. அம்மாதம் 24-ஆம் நாள், திருச்சியில் திராவிடர் கழக நிர்வாகக் குழு கூடி ஆராய்ந்தது.

இந்தி தமிழ் நாட்டில் விருப்பப்பாடமாகவும், கேரள ஆந்திரக் கர்நாடகப் பிரதேசங்களில் கட்டாயப் பாடமாக வும் இருக்குமென்று, G.O. 1643-பிரகாரம், 20–6–48 அன்று ஓர் அரசாணை வெளியாயிற்று. பெரியார் இராமசாமிக்கு ஓமந்தூர் இராமசாமி பயப்படலாமா என்று தமிழகத்துப் பார்ப்பன ஏடுகள் சிண்டு முடிந்து விட்டதில், தமிழ் நாட்டி லும் கட்டாயமாக்கினர். உண்மையில் கட்டாயப் பாடந் தான்; ஆனால் சொல்லிக் கொண்டதோ விருப்பப் பாடம் என்று. இதிலடங்கிய சூது, சூட்சுமத்தைப் பெரியார் உணர்ந்து கொண்டதால், 10—8—48 முதல் இரண்டாம் இந்திப் போரைப் பெரியார் துவக்கினார்.

இந்த இரண்டாம் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி துவக்கப் படுமுன்னர் நிகழ்ந்தவற்றைப் பெரியாரே வர்ணிக்கிறார்:— "கிளர்ச்சி துவக்கமானது மாபெரும் அஸ்திவாரத்தின்மீதே துவக்கப் பட்டது. 1948–ஆம் ஆண்டு ஆகஸ்டு 14–ம் நாள் இந்தி எதிர்ப்பு மாநாடானது சென்னை செயிண்ட் மேரிஸ் ஹாலில் மறைமலையடிகள் தலைமையில், தெருக்கள் எல்லாம் அடைபடும்படி, 25,000 மக்கள் முன்னிலையில், அந்த ஹாலும் அந்தத் தெருவும் அதுவரை கண்டிராதபடி மகா உற்சாகத்துடன் கூடியது.

அதில் மறைமலையடிகள், தமிழ்ப்பெரியார் திரு.வி.க. அவர்கள் முதல், தோழர்கள் கதர் பிரதிநிதி நாரண துரைக் கண்ணனார், காங்கிரஸ் பிரதிநிதி ம.பொ.சி., கிறிஸ்தவப் பிரதிநிதி ரெவரெண்ட் அருள் தங்கையா, முஸ்லிம் லீக் பிரதிநிதி அப்துல் மஜீத், டாக்டர் ஏ. கிருஷ்ணசாமி, வி. வி. ராமசாமி, மாஜிமேயர் ராதாகிருஷ்ணப்பிள்ளை, கே.ஏ.பி. விஸ்வநாதன் முதலிய திராவிடர் கழகத்தினரல்லாதவர் களும், அதன் எதிரிகளும் ஏராளமாக வந்திருந்தனர். இம் மாநாடு தவிர மற்றும் பல மாநாடுகள்—புலவர் மாநாடு, மாணவர் மாநாடு, பெண்கள் மாநாடு முதலிய பல மாநாடுகள் கூடி இந்தியை எதிர்த்துத் தீர்மானங்கள் செய்ததோடு நேரடிக் கிளர்ச்சியில் கலந்து கொள்ள ஏராள மான மக்கள் முன்வந்தார்கள்.

அந்த மாநாட்டுத் தலைவரை ஆதரித்து நான் காலையில் பேசுகையில், தமிழைவிட ஆங்கிலத்தைக்கட்டாய பாடமாக்கினால் அதற்கு ஒட்டுக் கொடுப்பேன் என்று கூறினேன். சிலர் அதைப் பற்றித் தவறாகவும் எண்ணியிருப்பார்கள். குறிப்பாக ம.பொ. சிவஞானம் அவர்கள், 'பெரியார் மந்திரியானால் அவ்விதம் செய்ய மாட்டார். ஏதோ பேச்சுக்கு அவ்வாறு கூறினார்' என்று தனது அதிருப்தியைக் காட்டினார்.இன்றும் கூறுகிறேன், நாம் ஆங்கிலத்தை வெறுக்கும் புத்தியை வளர்ப்போமானால் என்றுமே விடுதலை அடைய முடியாத அடிமைகளாகவேதான் இருப்போம்.

நான் இரண்டாம் இந்தி எதிர்ப்புக்குத் தேதி குறிப்பிட்டவுடன் 2 நாட்களுக்கு முந்தி தோழர் ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார், முதல் மந்திரி அவர்கள், என்னை நேரில் அழைத்தார். நான் சென்றதும் என்னை அன்பாய் வரவேற்று, துவக்க வாக்கியமாகக் கலக்கத்துடன், 'நீங்கள் இருக்க வேண்டிய இடத்தில் நான் இருக்கிறேன்' என்றார். 'இந்த இடத்தில் நான் இருக்க நினைத்தால் இந்த இடம் எனக்கும் கிடைக்காது. உங்களுக்கும் கிடைத்திருக்காது' என்றேன்.

'என்ன இருந்தாலும் நீங்கள் காங்கிரசை விட்டுப் போனது தவறு' என்றார்.

'நான் காங்கிரசில் இருந்திருந்தால், இன்று நீங்கள் செய்கிற அளவு காரியம் கூட நான்செய்ய எனக்கு வாய்ப்புக் கிடைத்திருக்காது' என்றேன். கல்வி மந்திரி அவிநாசிலிங்கம் செட்டியார், இந்தி கட்டாய பாடமாக்கப்படும் என்று அரசாங்கப் பத்திரிகையில் எழுதியதைக் காட்டினேன்.

'என்ன இந்தச் செட்டியாரின் தொல்லை பெரிய வம்பாக இருக்கிறதே' என்று சொன்ன பிறகு சில வார்த்தைகள் பேசிய பின், 'என்ன இப்படிக் கிளர்ச்சி ஆரம்பித்து எனக்கு நீங்கள் வேறு தொல்லை கொடுக்கப் போகிறீர்களே! அய்தராபாத் பிரச்சினைப் போராட்டம் துவக்கப்பட்டால் என்ன செய்வது?' என்றார்.

'என் நாட்டின் சுதந்திரத்தை முன்னிட்டுச் செய்கிறேன்; அய்தராபாத் போராட்டம் துவக்கப் பட்டால் என் கிளர்ச்சியை நிறுத்திக் கொள்வேன்' என்றேன்.

அதன்மீது அது பற்றிச் சிறு விவாதம் நடந்தது.முடிவாக 'நான் எப்படியோ மாற்றிக் கொள்ள முடியாத நிலையில் இப்போது இருக்கிறேன். என்னைப் பற்றித் தவறாய்க் கருதக் கூடாது' என்றேன்.'கலவரம் ஏதுமின்றி நடத்துங்கள் பார்த்துக் கொள்ளலாம்' என்று சொல்லிப், பேச்சு வார்த்தையை முடித்துக் கொண்டு என்னை வழியனுப்பினார்.

கிளர்ச்சி தொடங்கியதும் அவரும் அவரது கடமையைச் செய்தார். எப்படியோ முடிந்தது!"

நாள்தோறும் மறியல் நடைபெறுவதும், கர்ப்பிணிப் பெண்டிர் உட்பட மறியல் தொண்டர்களைக் கைதுசெய்து, சிறையில் அடைக்காமல், லாரிகளில் ஏற்றி, நகருக்கு வெளியில் காட்டுப்புறத்தில் இறக்கி வருவதுமாக அரசின் அடக்கு முறை விநோதமாயிருந்தது. போராட்டம் தொடரவே; சிறைத் தண்டனை அடி உதை வலுத்தது. ஊருக்கு ஒருவிதமாகப் போலீஸ் அடக்குமுறை வேட்டை தர்பார் நடந்தது. ஆகஸ்டு 23-ல் சென்னை வரும் ராஜாஜிக்குக் கருப்புக் கொடி காட்ட முடிவு மேற்கொண்டதை ஒட்டி, 22-ஆம் நாளே தலைவர் பெரியாரும், தளபதி அண்ணாவும் கைது செய்யப்பட்டு, 27-ஆம் நாள் விடுதலை செய்யப்பட்டனர். 28–8–48 அன்று பாரதிதாசனின் இரணியன் நாடகம் தடை செய்யப்பட்டது. தடையை மீறிப் பல ஊர்களில் இரணியன் வேடத்தோடு தொண்டர்கள் கைதாயினர்!

1948–செப்டம்பர் 11-ஆம் நாள் ஜின்னா மறைவு குறித்துப் பெரியார் பெரிதும் மனம் வருந்தி அறிக்கை வெளியிட்டிருந்தார். இந்தி எதிர்ப்பு மறியல் தொடர்ந்து நடைபெற்று வந்தது. ஆனால் 14-9-48 அன்று அய்தராபாத்தில் இந்தியப் போலீசு நுழைந்த செய்தி கிடைத்தவுடன், அரசுக்கு இந்த நேரத்தில் தொல்லை தர வேண்டாம் என்ற நன்னோக்கத்தில், தற்காலிக மறியல்நிறுத்தம் செய்தார்

பெரியார். ஆனால் 15-9-48 ஒரு நாள் மட்டும் எல்லா ஊர்களிலும் அடையாள மறியல் செய்யப் பணித்தார். (அன்று திருவாரூரில் தயாளு அம்மையாரை மணந்த மு. கருணாநிதி மணக்கோலத்திலேயே அடையாள மறியலில் பங்கேற்றார்.) "விடுதலை" பத்திரிகைக்கு 2000 ரூபாய் அரசு கேட்ட ஜாமீன் தொகை பறிமுதல் செய்யப்பட்டு, மேலும் 4000 ரூபாய் கேட்கப்படலாம் என்ற சூழ்நிலையில், கழகத் தோழர்கள், ஈடாகப் பதினைந்தாயிரத்துக்கு மேல் நன்கொடைத்தொகை அனுப்பிப், பெரியாரிடம் தங்களுக்கு உள்ள நம்பிக்கையைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

தூத்துக்குடியில் அண்ணா கலந்து கொள்ளாதது ஒரு குறைதான். அவரை அப்படியே ஒதுங்கிச் செல்ல விடக்கூடாது என்று பெரியாருக்கு அணுக்கமான சில தோழர்கள்—பி. சண்முக வேலாயுதம், தவமணி இராசன், கருணானந்தம் போன்றார்—கூறிய யோசனையைப் பெரியார் ஏற்றுக் கொண்டு, அண்ணா தலைமையில் ஈரோட்டில் 19-வது மாகாண திராவிடர் கழகத் தனி (ஸ்பெஷல்) மாநாடு 1948 அக்டோபர் 23, 24 தேதிகளில் ஏற்பாடு செய்துவிட்டார். அண்ணாவையும் பிற தலைவர்களையும் இரட்டை மாட்டுச் சாரட்டு வண்டியில் அமர்த்திப், பெரியார் ஊர்வலத்தில் நடந்தே வந்தது கண் கொள்ளாக் காட்சி! கருப்புச் சட்டை போட்டு, மேல் துண்டை இடுப்பில் கட்டி, வியர்க்க விறுவிறுக்கத்—தூத்துக்குடித் தொண்டர் படைத் தலைவரான கே.வி.கே. சாமி அதிசயிக்கப்—பெரியார் சிங்க ஏறு போல் ஈரோடு வீதிகளில் நடைபோட்டார்!

மாநாட்டை எஸ். குருசாமி தொடங்கி வைக்க, சென்னை இந்திராணி பாலசுப்ரமணியம் கொடி உயர்த்தினார். திருவள்ளுவர் படத்தைப் பெரியாரும், திராவிட நாடு படத்தைத் திரு.வி. கல்யாணசுந்தரனாரும், காந்தியார் படத்தைக் கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணனும், சிங்கார வேலர் படத்தை என். வி. நடராசனும், தியாகராயர் படத்தைத் தி. பொ. வேதாசலமும், நாகம்மையார் படத்தை அழகிரியும் (அவருக்கு அதுதான் கடைசி மாநாடு) தாள

முத்து நடராசன் படத்தை ஏ.வி.பி. ஆசைத்தம்பியும், பன்னீர் செல்வம் படத்தை ஏ. சித்தையனும், சுந்தரனார் படத்தை இரா. நெடுஞ்செழியனும், என். அர்ச்சுனன் படத்தை சி.டி.டி. அரசுவும் திறந்துவைத்தனர். (உண்மையில் மாநாட்டில் ஒரு படமும் வைக்கப்படவில்லை. கற்பனையாய்க் காணவேண்டும் என்று பெரியார் கூறிவிட்டார். எப்படி சிக்கனம்?) முதல் நாள் இரவில் கே. கே. நீலமேகம் தலைமையில் எம்.ஆர். ராதா நடித்த மகாத்மா தொண்டன் நாடகம். மறுநாள் இரவில் குஞ்சிதம் குருசாமி தலைமையில் மு. கருணாநிதி நடித்த தூக்குமேடை நாடகம். டி.கே. சீனிவாசன் நன்றி நவின்றார்.

ரேஷன் முறை தீவிரமாக அமுலில் இருந்ததால், மாநாட்டுக் கட்டணத்துடன் உணவுக்கும் சேர்த்து வசூலித்து விட்டனர். பெரியார் எதிர்பார்த்ததை விடப் பன்மடங்கு கூட்டம் பெருகி வழிந்ததால், நேரத்தில் உண வளிக்க முடியவில்லை. தோழர்கள் பெரியார் முகத்தைப் பரிதாபமாகப் பார்த்து விட்டு, வயிற்று உணவை மறந்து, செவி உணவை அருந்தினர்! ஈரோடு நகரமன்றம் அண்ணா, திரு. வி.க. இருவர்க்கும் வரவேற்பளித்துச் சிறப்பித்தது.

மீண்டும் அடுத்த திங்களே இந்தி எதிர்ப்பு அறப்போர் தொடங்கி விட்டது, நவம்பர் 2-ஆம் நாள். கும்பகோணத்தில் 144 தடையுத்தரவு பிறப்பிக்கப் பட்டதால், அதை மீற வேண்டிய நிர்ப்பந்தம் நேரிட்டது. தினமும் தோழர்கள் மறியல் செய்தனர். பெரியார் தாமே களத்தில் இறங்கிட முடிவு செய்தார்.

1948 டிசம்பர் 18-ஆம் நாள் குடந்தையில் பெரியார் மறியல் செய்து கைதானார். நள்ளிரவு 2–15 மணிக்கு கும்பகோணத்தில் கைதான பெரியாரை, வேனில் ஏற்றி, முதலில் திருச்சிக்குக் கொண்டு சென்று, மீண்டும் தஞ்சை வந்து, பின்னர் அய்யம்பேட்டை ரயில் நிலையத்தில் இறக்கி, சென்னை செல்லும் ரயிலில் ஏற்றி அலைக்கழித்தனர். அத்துடன் பத்தாம் முறையாகப் பெரியார் கைதானபோது— 'அடக்கு முறை எங்கே நடந்தாலும், எப்படி இருந்தாலும்,

அதை முகங்கொடுத்துச் சமாளிக்க வேண்டும். அப்போது தான் நமது மானம் காப்பாற்றப்படும். சமாதானத்துக்குப் பங்கமோ, ஒழுங்குத் தவறோ ஏற்படக் கூடாது''—என்று கண்டிப்பான கட்டளை பிறப்பித்தார் பெரியார்.

ஆனால், ஓமந்தூரார் ஆட்சி மறுநாளே வெறியாட்டந் தொடங்கியது. தடியடியால் குடந்தையில் இரத்த ஆறு ஓடிற்று. போலீஸ் அதிகாரியின் கோர தாண்டவத்தை எடுத்துக் காட்டிடப் போர்த்தளபதி அண்ணா, "ஆதித்தன் கனவு" என்று 'திராவிட நாடு' இதழில் தீட்டினார். பின்னர் டிசம்பர் 26-ஆம் நாள் முதல் அரசின் போக்கில் அமைதி காணப்பட்டது. தடியடியும் கைதும் நிறுத்தப்பட்டன. எனவே 28-ஆம் நாள் திராவிடர் கழகப் போராட்டக் குழு கூடி, அறப்போரை நிறுத்துவதென முடிவெடுத்தது.

59 நாள் அறப்போர் நடைபெற்றது, இந்த இரண்டாம் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில்!

# 13. பிரிந்தார்

**மணியம்மை திருமணம்—கழகம் பிளந்தது—சனவரி 26, 1950 துக்க நாள்—"பொன் மொழிகள்" தண்டனை — வகுப்புரிமைக்குத் தீங்கு—"அரசியல் சட்டம் ஒழிக" —சுரண்டல் தடுப்புப் போர்— 1949முதல் 1951 முடிய.**

---

திருக்குறள் மூடநம்பிக்கை குறைவாக உள்ள பழைய நூல். அதிலுள்ள முதலதிகாரமான கடவுள் வாழ்த்து கூடக் கடவுளுக்கு உருவமோ வடிவமோ கற்பிக்கவில்லை. புராணக் கற்பனைக் கதைகள் அதில் நிறைய இடம் பெற இல்லை. உரையாசிரியர்கள் வேண்டுமானால் பிற்காலத்தில் ஆரியக் கருத்துகளைப் புகுத்தியிருக்கலாம். மூல நூலில் வள்ளுவர் அறிவுக்குப் பொருத்தமாகவே எழுதி உள்ளார். அவர் தமிழனாக இருந்து விட்டதால், அதிலும் அவர் நூல் காலங்கடந்து, சிறப்புடன் பல தடைகளையும் தாண்டி, மங்காப் புகழுடன் விளங்குவதால், அந்த நூலாசிரியர் பார்ப்பானுக்குப் பிறந்தார் என்றும், அதனால்தான் அவருக்கு இவ்வளவு ஏற்றம் என்றும், கதை கட்டி விட்டார்கள். ஆரிய நச்சுக் கருத்துகளுக்குப் பெரிதும் இடந்தராமல், வள்ளுவர் உயர்ந்து நிற்கிறார். எனினும் வள்ளுவர் குறளைப் புலவர்கள்—பண்டிதர்கள்—தமக்குள் அடக்கிக் கொண்டார்கள். இராமாயணம், பாரதம், பாகவதம், கீதை இவற்றைப் புறக்கணித்துவிட்டுத் தமிழர் திருக்

குறளை ஏந்த வேண்டும். ஆரியப் பிடிப்பிலிருந்து விடுபட வேண்டும்—என்ற, தமது இனவுணர்வின் அடிப்படையில் எழுந்த வேட்கைக்குப், பெரியார் 1949 பொங்கல் திருநாள் வாரத்தில் நல்லதொரு விருந்து கண்டார். சென்னையில், சனவரி 15, 16 நாட்களில், வள்ளுவர் குறள் மாநாடு, பெரியார் நடத்தினார். தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், ச. சோமசுந்தர பாரதியார், திரு. வி. க., ஏ. சக்கரவர்த்தி நயினார் போன்ற தமிழறிஞர்கள் பங்கேற்றுப், பாமரர் கையில் குறளை ஒப்படைக்கச் செய்தார் பெரியார். குடி செய்வார்க்கில்லை பருவம்; மடி செய்து, மானம் கருதக் கெடும்—என்ற குறள் பெரியாருக்கு மிகமிகப் பிடித்தமான தாகும். மார்ச் 12-ஆம் நாள் திருச்சிராப்பள்ளி நகராட்சி மன்றமும், மே 24-ஆம் நாள் திருவரங்கம் நகர்மன்றமும் பெரியாருக்கு வரவேற்பளித்துப் பெருமை ஈட்டின.

பட்டுக்கோட்டை கே. வி. அழகர்சாமி 30 ஆண்டுகட்கு மேலாகத் தமிழ் மக்கள் மேன்மைக்குப் பொதுத் தொண்டாற்றி, மேடைதொறும் கதறிப், பணஞ்சேர்க்கத் தெரியாமலும், கிடைத்ததை ஒழுங்குடன் செலவு செய்யத் தெரியாமலும், உடல் மெலிந்து நலிந்து, 1949 மார்ச் 28-ஆம் நாள் தஞ்சையில் உயிர் நீத்தார். பெரியார் பெருந்துன்ப முற்றார். கலைவாணர் என். எஸ். கிருஷ்ணனைக் கொண்டு தஞ்சையில் மே 29–ஆம் நாள் அழகிரி குடும்ப உதவிக்காக 6000 ரூபாய் நிதி வழங்கச் செய்தார். ஒவ்வோராண்டும் மார்ச் 28–ஆம் நாளை அழகிரி நினைவு நாளாகக் கொண்டாடுமாறும் கழகத் தோழர்களைக் கேட்டுக் கொண்டார்.

1948–ல் ராஜாஜி கவர்னர் ஜெனரலாகச் சென்னை வந்தபோது, கருப்புக் கொடி பிடிக்கத் திட்டமிட்ட பெரியார்; 1949 மே 14-ஆம் நாள் ராஜாஜி திருவண்ணாமலை ரமணாசிரமத்தில் பாதாளலிங்கக் குகை திறப்பு விழாவுக்கு வந்தபோது, அங்கே சென்று, ராஜாஜி தங்கியிருந்த ரயில் சலூனில், காலை 6-46 முதல் 7-17 வரை சந்தித்துப் பேசினார். பின்னால் விளைந்த சில நிலைமைகளைக் கருத்திற் கொண்டு, பெரியார், அவரிடம் ஆலோசனை பெற்றதாக

ஓர் எண்ணம் .கழகத் தோழர்களிடம் 'நிலவிற்று. அது உண்மையன்று.

ஓமந்தூர் ரெட்டியாரைப் பெரியார் பாராட்டுகிறார் என்று ராஜாஜியிடம் கோள் மூட்டிய காங்கிரஸ்காரரிடம், "அதுதான் நல்லது! அவர் ஒருவரையாவது நாயக்கர் பாராட்டுகிறாரே! அவருக்கு இடைஞ்சல் வராமல் பார்த்துக் கொள்ளுங்கள்"—என்று அறிவுரை கூறினார். ஆயினும் அது எடுபடாமல், போட்டி ஏற்பட்டு, ஓமந்தூரார் விலகிட, குமாரசாமி ராஜா சென்னை மாகாண முதல் மந்திரியாகப் பொறுப்பேற்றார். மூன்றாண்டுகளுக்கு இவரே நீடித்தார். எப்படியும் ஒரு பார்ப்பனர் வரமுடியவில்லை என்பதால் பெரியார் மகிழ்வு பூண்டார்.

"நம் நாட்டிலுள்ள பார்ப்பனர்களாகிய ஆரியர்கள் ஜெர்மானியநாட்டு யூதர்களைப்போல்தான் இருக்கிறார்கள். அங்கே ஜெர்மனியிலிருந்து யூதர்களை விரட்டியடிக்க என்னென்ன காரணங்கள் கூறப்படுகின்றனவோ அதே காரணங்கள் இங்குள்ள ஆரியர்களுக்கு நாம் கூறமுடியும். இந்த நாட்டில் உள்ள ஆங்கிலோ, இந்தியர்களைப்போல், நம்மையே கேவலமாக எண்ணிக்கொண்டு, இவர்கள் இங்கே வாழ்கிறார்கள். எனவே இவர்களை வெறுக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்"—என்று பெரியார் விளக்கந்தந்தார்.

கஷ்டப்படும் மக்களின் துன்பத்தை நீக்கி, அவர்கள் அறிவு, ஆற்றல், இன்பம் ஆகியவற்றை அடைவதற்குள்ள தடைகளை உடைத்து, விடுதலையை உண்டாக்க வேண்டும் என்பது தவிரக், கடவுள், மதம், இவைகளைப் பற்றித் தமக்குச் சிறிதும் கவலையில்லை—என்றார் பெரியார். விஞ்ஞான ஆராய்ச்சி வளராத காலத்தில் அறிவுக்கு எட்டாத விஷயங்களைக் கடவுள் செயல் என்று மனிதன் நம்பினான். கடவுள் இல்லை என்று நாத்திகராகிய நாம் கூற முடிகிறதே, இது எப்படி? மதம், கடவுளுக்கும் மனிதனுக்கும் இடையில் தரகர்களை ஏற்படுத்தத்தான் உதவிற்று! மனிதனுக்குத், தானே சிந்தித்துச் செயல்படும் பகுத்தறிவு மிகுதியாக இருக்கும்போது, ஏன் கடவுள்

என்பதாக ஒன்று தேவைப்படுகிறது? ஆத்மாமீது நம்பிக்கை போனால் கடவுள் நம்பிக்கையும் தானாகவே போய்விடுமே! கடவுளை நம்புகிறவர்களைவிட நம்பாதவர்கள் எந்த வகையில் தாழ்ந்தவர்கள்?—என்று இப்படிப்பட்ட உயர்ந்த வகையான பிரகிருதிவாதம், தத்துவ விளக்கங்களையெல்லாம் மிகச் சாதாரணப்படிப்புள்ள—படிப்பில்லாத—பாமர மக்களுக்கும் விளங்குமாறு பெரியார் எடுத்து வைத்து உதாரணங்களுடன் உரைத்து வந்தார்.

கோவை மாவட்ட ஏழாவது திராவிடர் கழக மாநாடு 1949 மே 28-ஆம் நாள் கோயமுத்தூரில் நடைபெற்றது. தி.பொ. வேதாசலம்தலைமையில், அண்ணா திறந்து வைக்க, மூவலூர் இராமாமிர்தத்தம்மையார் கொடி உயர்த்தினார். "கடந்த ஆண்டு அக்டோபரில், ஈரோடு மாநாட்டில், அண்ணாவிடம் பெட்டிச் சாவி தரப் போவதாகக் கூறினீர்களே! அப்படியிருக்க, அவருக்கும் தெரியாமல் திருவண்ணாமலையில் ஆச்சாரியாரைச் சந்தித்த மர்மம் என்ன? அங்கு பேசிய ரகசியம் என்ன?" என்று பெரியாரை ஜி.டி. நாயுடு வினவினார். ஆனால் பெரியார் அங்கு எந்த விவரத்தையும் கூற விரும்பவில்லை. அய்யமும், திகைப்பும், ஆத்திரமும் பலருடைய முகங்களில் பிரதிபலித்தன; பலனேதுமில்லை!

ஓமந்தூராருக்குத் தாம் இளைத்தவரில்லை எனக் குமாரசாமி ராஜா காட்டிக் கொண்டார். "திராவிட நாடு" இதழுக்கு ஜாமீனாக மூவாயிரம் ரூபாய் 9–6–49 அன்றும், "விடுதலை" ஏட்டுக்கு ஜாமீனாகப் பத்தாயிரம் ரூபாய் 18–6–49 அன்றும், "குடி அரசு" இதழுக்கு ஜாமீனாக மூவாயிரம் ரூபாய் 2–7–49 அன்றும், கேட்கப்பட்டன!

இயக்கத்தைத் தொடர்ந்து நடத்திடத் தமக்கு நம்பிக்கையுள்ளவராக ஒரு வாரிசு வேண்டுமென்றும், சொத்துப் பாதுகாப்புக்கும் ஏற்பாடு ஒன்று செய்யப்பட வேண்டும் என்றும், பெரியார் கூறிவந்ததற்கிணங்க, 1949 ஜூன் 9-ஆம் நாள் சென்னை தியாகராயநகர் செ. தெ. நாயகம் இல்லத்தில் மணியம்மையைப் பதிவுத்திருமணம் செய்துகொண்டார். திருமணத்தைத் தடுத்து நிறுத்திட கே கே. நீலமேகம்,

என். வி. நடராசன், எஸ்.குருசாமி, வேலூர் திருநாவுக்கரசு போன்றார் முயன்றுபார்த்தனர். பெரியார் இணங்கவில்லை. அண்ணா இதைக் கேள்வியுற்றுக் காஞ்சியில் போய்ப் படுத்து விட்டார். தீவிரவாதிகள் சிலர் இயக்கச் சொத்துகளைக் கைப்பற்றுவோம் என்றனர். சுமார் இரண்டு வாரம் குழப் பத்தில் ஆழ்ந்திருந்த தோழர்கள், அவரவர் விருப்பத்திற் கேற்ப இரு கூறுகளாய்ப் பிரிந்தனர். பெரியார் செய்தது சரியே என்று கைவல்ய சாமியார் எழுதினார். சண்முக வேலாயுதம், தி. பொ. வேதாசலம் ஆகியோர் பெரியார் முடிவைப் பாராட்டினர். இதற்கிடையில் யாரோ குறும்பு செய்து, பெரியார், தாம் திருமணம் புரிந்த செயலுக்கு வருந்துவதுபோல, அவர் கையெழுத்திட்ட வெறுந்தாளின் மேற்புறத்தில், ஓர் அறிக்கை தயாரித்து, வருத்தமும் விஞ்ஞாபனமும் என்ற தலைப்பில், 28-7-49 "விடுதலை" நாளேட்டிலேயே வெளிவரச் செய்தனர். இது 30-7-49 "குடி அரசு" இதழிலும் மறுபதிப்புப் பெற்றது. அண்ணா, அன்பழகன், கருணாநிதி ஆகியோரது நடவடிக்கைகளில் அதிருப்திகொண்டு, அவர்கள் பெயர் "விடுதலை"யில் வரக்கூடாது என்று பெரியார் கூறியும், அது நிறைவேற வில்லை. "விடுதலை" அலுவலகத்தில் சம்பத், கணேசன், அரங்கண்ணல், கோவிந்தசாமி ஆகியோர்மீது பெரியாரின் சந்தேகம் படர்ந்தது. தம்மைக்கொல்ல யாரோ சதிசெய்கி றார்கள். சம்பத்தும் சூதனாகிவிட்டான்—என்று பெரியார் 13-7-49"விடுதலை"யில் எழுதினார். பெரியார்மீது அண்ணா வும் சம்பத்தும் வழக்குத் தொடுத்தபோது, பெரியார் விளக்க அறிக்கை ஒன்றை வெளியிட்டதால், வழக்கைத் திரும்பப் பெற்றனர்.

இராம. அரங்கண்ணல் 1946–ல்திருத்துறைப்பூண்டி யில் திராவிட மாணவர் மாநாடும், முதலாவது கருப்புச் சட்டை மாநாடும் நடத்தியவர்களில் ஒருவர். "விடுதலை", "குடி அரசு" இதழ்களில் சில காலம் பணி யாற்றிப், பின்னர் காஞ்சியில் "திராவிட நாடு" அலுவலகத்திலிருந்தார். 1962, 1967-ல் மயிலாப்பூர்,

1971-ல் எழும்பூர் தொகுதிகளின் தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர். கலைஞர் ஆட்சியில் குடிசை மாற்று வாரியத் தலைவராக அரும்பணி புரிந்தவர். இன்று அ. இ. அ. தி. மு. கழகத்தில் உள்ளார். திருவாரூரில் கலைஞர், தென்னன், பி. எஸ். இளங்கோ, மா. செங்குட்டுவன் ஆகியோர் இவருக்குப் பள்ளித் தோழர்கள்.

பெரியார்-மணியம்மை திருமணச் செய்தி வெளியானதும் அண்ணா தந்த அறிக்கையும், பின்னர் திருமணம் ஆனவுடன் தந்த அறிக்கையும் முக்கியமானவை. 3-7-49 அன்று ஓர் அறிக்கை வெளியிடப்பட்டது; பெரியார்—மணியம்மை திருமணத்தை இனித் தடுத்து நிறுத்திட முடியாது என்பது உறுதியாகிவிட்டபின்னர்! "சென்றஆண்டு நாம் பெரியாரின் 71-வது பிறந்தநாள் கொண்டாடினோம். இந்த ஆண்டு அவர் தமது திருமண வைபவத்தைக் காணும்படி அழைக்கிறார்; இல்லை, அறிவிக்கிறார். அய்ந்தாறு ஆண்டுகளாகப் பெரியாருடைய உடலைக் கவனித்துக்கொள்ளும் திருத்தொண்டிலே தன்னை ஒப்படைத்துக்கொண்டிருந்த மணியம்மையாரைத் தான் பெரியார் பதிவுத் திருமணம் செய்து கொள்ளப் போகிறார்; பெரியாருக்கு வயது 72. மணியம்மையாருக்கு வயது 26.

இதனால் நமக்குக் கோபம், கொதிப்பு ஏற்படலாம் என்று தமது 28-6-1949 "விடுதலை" அறிக்கையில் பெரியாரே குறிப்பிடுகிறார். அவை மட்டுமா? இந்தச் சேதியாலே ஏற்பட்ட கண்ணீர்! இந்தக் கண்ணீரை அவர் எதிர்பார்த்திருப்பாரா, அல்லது மதிப்பாரா என்பது ஒருபுறமிருக்க, எதற்கும் கலங்கா உள்ளம் படைத்த இளைஞர்கள் இந்தச் சேதிகேட்டுக் கண்ணீர் வடிப்பதுபோல் வேறு எப்போதும் நடைபெற்றதில்லை. உலகச் சம்பவங்களிலேயே இதற்கு இணையானதாக வேறு ஒன்றைக் காட்டவும் முடியாது.

நாம் பெரியாரை அரசியல்கட்சித் தலைவராக மட்டும் கொண்டிருக்கவில்லை. குடும்பத் தலைவரென, வாழ்வுக்கு வழிகாட்டியென, மானத்தை மீட்டுத் தரும் மகான் என, அடிமை ஒழிக்கும் வீரரென மரியாதையுடனும் அன்புடனும்

பேணிவந்தோம். பொருந்தாத் திருமணம் நாட்டுக்கோர் சாபக்கேடு என அவர் ஆயிரமாயிரம் மேடைகளில் முழங்கினார். இப்படிப்பட்ட அறிவுரை புகட்டியவர் தமது 72-ம் வயதில் 26 வயதுள்ள பெண்ணைப் பதிவுத்திருமணம் செய்து கொள்கிறார் என்றால் கண்ணீரைக் காணிக்கையாகத் தருவதைத் தவிர வேறென்ன நிலைமை இருக்கும்?

பொருந்தாத் திருமணம்; புனிதத் தலைவரின் பொருந்தாத் திருமணம்! பல நெருக்கடிகள் ஆபத்துகள் பார்த்திருக்கிறோம். இந்தப் பேரிடியைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை; எம்மை ஆளாக்கிவிட்ட தலைவரே! இந்தக் கதிக்கு எம்மை ஆளாக்கவா இவ்வளவு உழைப்பும் பயன்படவேண்டும்? நாங்கள் செய்த தவறுதான் என்ன? இந்தத் தகாத காரியத்தைத் தாங்கள் செய்து, எங்கள் தன்மானத்தை அறுத்தெறிவது ஏன்? எப்படித் தாங்குவோம் இந்த இழிவை? எத்தனை ஆயிரம் காரணம் காட்டினாலும் இது பொருந்தாத் திருமணம் என்பதை மறைக்க முடியாதே!

“பெரியாரே இப்படி ஒரு பொருந்தாத் திருமணம் செய்து கொள்கிறீர்களே, இது சரியா?” என்று கேட்கிறோம். “போடா, போ! நான் திருமணம் மட்டுமா செய்து கொள்ளப் போகிறேன். இயக்கத்தையே மணியம்மையிடம்தான் ஒப்படைக்கப் போகிறேன்” என்று கூறுகிறார் அறிக்கையில். நடைபெறப் போவது பொருந்தாத் திருமணம் மட்டுமல்ல; புதிய மகுடாபிஷேகமும். ஒரு தவறு இன்னொரு தவறுக்குக் காரணமாகக் காட்டப்படுகிறது. பொருந்தாத் திருமணத்தால் ஏற்படும் இழிவையும் பழியையும் நாம் தாங்கிக் கொள்வது மட்டுமல்ல. இந்தத் தகாத முறையினால் தலைவி ஆகப்போகும் மணியம்மையின் கீழிருந்து நாம் எதிர்காலத்தில் பணியாற்றவும் தயாராக வேண்டும். “என் ஆயுள் வரையும், கூடுமானவரை என் ஆயுளுக்குப் பின்னும், ஒழுங்காக இயக்கத்தை நடத்தும் தகுதி இந்த மணியம்மைக்கு உண்டு” என்று கூறிவிட்டாரே!

ஓர் இயக்கத்துக்கு வாரிசு முறை எதற்கு? ஜனநாயக முறைக்கு ஏற்றதுதானா? நடைமுறையிலே வெற்றி தரக்

கூடியதுதானா? "இயக்கத்திலே உள்ள எவரிடமும் எனக்கு நம்பிக்கையில்லை. என் நம்பிக்கைக்கு உரியவர்களாக யாரும் தென்படவில்லை. இயக்கத்தை நடத்திச் செல்லும் தகுதியும் திறமையும் வேறு யாருக்கும் இருப்பதாக நான் எண்ணவில்லை'' என்கிறார். ஏதோ கோபத்தால் பேசுகிறார் என்றெண்ணிச் சும்மா இருந்து வந்தோம். இயக்கத்திலுள்ள யாராவது துரோகி, கேடு நினைப்பவன் என்று நிரூபிக்க முடியுமானால், விரட்டி விடலாமே!

நம்மை நம்பாதவரை இனி நாம் எப்படி நம்புவது? "உன்னிடம் நம்பிக்கை அற்றவரிடம் இராதே! அவர் தலைமையில் பணியாற்றாதே! ஓடு ஓடு!" என்று விரட்டுகிறதே அவர் அறிக்கை! பொருந்தாத் திருமணம் என்று கேள்வியுற்றதும் வெட்கப்பட்டோம். இதற்குப் பெரியாரின் அறிக்கை, நமக்கு வேதனையும் ஊட்டுகிறது. இதோ, விரட்டப்படுகிறோம்! தந்தை மக்களை விரட்டியடிக்கிறார். வீட்டை விட்டு வெளியேறுகிறோம்!''

அண்ணா என்ன எழுதினால் என்ன? எப்படிக் கண்ணீர் சிந்தினால் என்ன? தத்தம் குடும்பத்தோடு பெரியாருக்குத் தங்களை முழுவதுமாக அர்ப்பணித்துக் கொண்ட பெருமக்கள் தமிழகத்தில் நிறையப் பேர் இருந்தனர். நிலக்கிழார்களாகவும், வணிகர்களாகவும், வசதி படைத்தவர்களாகவும் பலர் சுயமரியாதை இயக்கத்தில் பெரியாருக்காக மட்டுமே எதையும் செய்யச் சித்தமாயிருந்தனர். அப்படிப்பட்டோர் மீண்டும் பெரியார்பால் தங்கள் விசுவாசத்தைப் புதுப்பித்துக் கொண்டு, முன்பைவிட ஆழமாகப் பற்றுதல் காட்டத் தொடங்கினர்.

நீடாமங்கலம் அ. ஆறுமுகம், பெண்ணாகரம் எம். என். நஞ்சையா. திருச்சி டி. டி. வீரப்பா, குடந்தை டி. மாரிமுத்து, பட்டுக்கோட்டை ரத்தினசாமி சகோதரர்கள், சொரக்குடி வாசுதேவன், திருச்சி பிரான்சிஸ், சேலம் குகை கே. ஜெகதீசன், ரொ. சு. அருணாசலம், குனியமுத்தூர் (கோவை) சதாசிவம், மதுரை பழனிவேலு, நெல்லை தியாகராஜன், கன்னியாகுமரி வழக்கறிஞர் கிருஷ்ணன்,

சிவகங்கை வழக்கறிஞர் இரா. சண்முகநாதன், காரைக்குடி என். ஆர். சாமி, சிதம்பரம் கு. கிருஷ்ணசாமி, பண்ணுருட்டி நடேசன், திருப்பத்தூர் ஏ. டி. கோபால், ஆம்பூர் பெருமாள், திருவத்திபுரம் வேல். சோமசுந்தரம், காஞ்சிபுரம் சி. பி. இராஜமாணிக்கம், சென்னை எஸ். பி. தட்சணாமூர்த்தி, பலராமன், மு. பொ. வீரன், வில்லிவாக்கம் தியாகராஜன், சி. டி. டி. அரசு, பெங்களூர் நாராயணசாமி, கொடையரசன், டி. டி. அரசு, ஜனகம்மாள்... என்று இந்தப்பட்டியல் மிக நீண்டு கொண்டே போகும். உயிருள்ளவரை பெரியாரிடம் காட்டிய அன்பில் இம்மியும் குன்றாத சான்றாண்மையாளர்கள் இவர்கள்.

இவர்கள்மீது வைத்த அசையா நம்பிக்கையினால்தான் பெரியார், அண்ணாவும் பிறரும் சென்றதை வெகுவாகப் பொருட்படுத்தாமல் தன் பயணத்தைத் தொடர்ந்தார்! கட்டுப்பாடு காப்பாற்றாதவர்களைத் தனியே பிரித்தார் பெரியார், என்றும் சிலர் கருதினர்.

"திராவிடநாடு" பெரியாரின் செயலுக்கு வருந்துவோர் பட்டியலை 24–7–49 இதழிலிருந்து, கண்ணீர்த்துளிகள் என்ற தலைப்பில் தொடர்ந்து வெளியிட்டு வந்தது. அண்ணாவின் அணியிலும் எண்ணிக்கை பெருகியது.

குழம்பிய குட்டையில் மீன்பிடிக்க நினைத்த காங்கிரஸ் ஆட்சி, ஏராளமான கழக நூல்களைத் தடைசெய்தது; நாடகங்களுக்குத் தடைகள் விதிக்கப்பட்டன. அண்ணாவின் இலட்சியவரலாறு என்ற நூல் தடை விதிக்கப்பட்டுப் பறிமுதலும் செய்யப்பட்டது.

10–9–49 "குடிஅரசு" இதழில் ஈ. வெ.ரா. மணியம்மை என்று சட்டப்படிப் பெயர் திருத்தப்பட்ட செய்தி அறிக்கையாக வெளிவந்தது. திருச்சி மாவட்டத் திராவிடர் கழகம், புவனகிரி, நாகை இப்படிப் பல கழகங்கள் பெரியார் பக்கம் இருப்பதைக் காட்டிக்கொண்டன. 5-11-49 அன்று பெரியார், துரோகப்படலம் என்ற தலைப்பில், அண்ணாமீது குற்றச்சாட்டுகளைச் சுமத்திக், கழகநிதி வசூலுக்கு எதிராகப் பாரதிதாசனுக்கு நிதிவசூலித்தது போன்ற பல சம்பவங்

களை நினைவு கூர்ந்தார். குடம் குடமாய்க் கண்ணீர்த்துளி களை இப்போது சிந்துகிறார்களே—என்றார். தம் நிலை யைத் தெளிவுபடுத்த, அண்ணா, டி. எம். பார்த்தசாரதி யைக் கொண்டு, "மாலைமணி" நாளேடு, 10–8–49 முதல் துவக்கினார். சென்னையில் செப்டம்பர் 17-ஆம் நாள் திராவிட முன்னேற்றக் கழகம் துவக்கினார். ஆலமரத்துக்கு விழுதுபோல், திராவிடர் கழகத்துக்குத் திராவிட முன்னேற்றக் கழகம் விளங்குமென்றார்.

உடுமலைப்பேட்டையில் 1949 ஏப்ரல் 16–ஆம் நாள் 144 தடையுத்தரவைப் பெரியார் மீறியதாக, அரசு ஒரு வழக்குப் போட்டது. பலமுறை பெரியாரை வரச்சொல்லி, நீதிமன்றம் வழக்கை ஒத்திப் போட்டுக், கடைசியில் 2-8-49 அன்று அந்த வழக்கை, அரசு திரும்பப் பெற்றுக் கொண்டது. அதாவது, கழகம் பிளவுபடுமுன்னர் தொட ரப்பட்ட வழக்கு; பிளந்தபின் முடிந்தது! அதில் பெரி யாருடன் வழக்கில் சம்பந்தப்படுத்தப்பட்ட உடுமலை நாராயணன், பின்னாளில் தி. மு. க. மாவட்டச் செயலாள ரானார். மதியழகனும் தி. மு. க. ஆனார்.

சரியான பிரதிநிதித்துவம் வாய்ந்ததல்ல என்று பெரி யாரால் துவக்க முதலே எதிர்க்கப்பட்டுவந்த அரசியல் நிர்ணய சபை சுமார் மூன்றாண்டுகள் கூடி, இந்திய அரசியல் சட்டத்தை, 1949 நவம்பர் 26-ஆம் நாள் ஒருவாறாகச் செய்து முடித்திருந்தது. அது அடுத்த ஆண்டு சனவரி 26–ஆம் நாள் அமுலுக்கு வருமென அறிவிக்கப்பட்டது!

"சமஸ்கிருதமாகிய வடமொழி மூலமாக ஆரியக் கலாச்சாரம் தமிழ் நாட்டில் முன்னரே புகுத்தப்பட்டது. திராவிட மக்கள் ஆரியச் சூதினை நல்ல வண்ணம் உணர்ந்து கொண்டார்கள். எனவே வெள்ளையன் வடவரிடம் பேரம் பேசி நம்மை விற்றுவிட்டுப் போய் விட்டதால், இப்போது அரசியலின் பேரால், இந்தி தேசிய மொழி என்ற போர்வை யில், மீண்டும் ஆரியக் கலாச்சாரமே நம்மீது திணிக்கப்படு கிறது. இந்தி தேசிய மொழி என்பதையே நாம் மறுக் கிறோம். கட்டாயமில்லை என்பது மாய்மால வார்த்தை.

நாம் நம்பமாட்டோம்! எனவே 1950 சனவரி 10-ஆம் நாள் இந்தி எதிர்ப்பு நாளாக நாடெங்கும் கொண்டாடுவோம்!'' என்று சென்னையில் பெரியார் முழங்கினார். அத்துடன், வரவிருக்கும் சனவரி 26-ஆம் நாள் குடியரசு தினமும், நமக்குத் துக்க நாளே என்றும் அறிக்கை விட்டார்.

"புதிய குடிஅரசுத் தலைவராக டாக்டர் ராஜேந்திர பிரசாத் தேர்ந்தெடுக்கப்படுவதால், இராசகோபாலாச்சாரி தமது கவர்னர் ஜெனரல் பதவியை முடித்துக்கொண்டு தென்னாட்டுக்குத் திருப்பி அனுப்பப்படுவது நமக்கு வெற்றி தான். பார்ப்பனரானாலும் கூடத் தென்னாட்டுக்காரர் தேவையில்லை வடநாட்டார்க்கு, என நிரூபிக்கப்படுகிறதல்லவா? மேலும், விரைவில் சுமையை இறக்கி வைத்து விட்டு இங்கே வந்து விடுவதாக ஆச்சாரியார் முன்பே கூறிச் சென்றாராம். வந்தபின் நமக்குப் பயன்படுகிறரா பார்க்கலாம்! ஏனென்றால் பார்ப்பனர் நமக்கு அந்நியரல்லவே'' என்றார் பெரியார். சிதம்பரத்தில் பேசும்போது, நாம் சுயமரியாதைக் கொள்கைகளில் ஒன்றைக் கூடக் கைவிடவில்லை. நீதிக்கட்சியின் கொள்கைகள் தாம் சில நமது சு. ம. இயக்கக் கொள்கைகளோடு இணைந்துள்ளன! திராவிட நாட்டின் எல்லை இப்போதுள்ள சென்னை மாகாணத்தோடு நின்று விடாது; மேலும் வடக்கு நோக்கி வளரும். இத்தோடு அடங்காது!—என்றும் பெரியார் சொன்னார்.

சனவரி இறுதி வாரத்தில் சென்னையின் பல பகுதிகளில் பெரியார் சொற்பொழிவாற்றினார். ஆரிய—திராவிடப் போராட்டம் நீண்ட காலமாக நடக்கிறது. ஆரியக் கலாச்சாரத்தைப் பவுத்தர்கள் முயன்றும் அழிக்க முடியவில்லை; மொகலாயர் முயன்றும் முடியவில்லை; இந்தக் கழகத்தாரால்தானா முடியப் போகிறது? என்று மமதையுடன் ஆரியம் மார் தட்டுகிறது! இளைஞர்கள் எழுச்சியினால் கழகம் கட்டாயம் செய்து காட்டும்—என்றார். மேலும், குடிஅரசு நாள் பற்றிப் பேசுகையில், இது வெள்ளையனுக்கு லஞ்சம் கொடுத்து, அவன் சுரண்டலுக்கு நிரந்தர வசதி

செய்து கொடுத்துத், தங்கள் பேருக்கு மாற்றிக் கொள்ளப் பட்ட மேடோவர் ஆட்சிதான்!— என்றும் குறிப்பிட்டார் பெரியார்.

கான்பூரில் பிற்படுத்தப்பட்டோர் மாநாட்டுக்குப் பெரியார் அழைக்கப்பட்டிருந்தார். உடல் நிலை இடந் தராததால் செல்ல இயலவில்லை. அன்று 29-1-50-ல் கடலூ ரில் பொதுக்கூட்டத்தில் கலந்து கொண்டு, சனவரி 26, தடி யாட்சி நாள் என்பதுதான் உண்மை, என்பதாக ஆதாரங் களுடன் விளக்கினார்.

1950 பிப்ரவரி 4-ஆம் நாள் பெரியாரின் தமையனார் ஈ. வெ. கிருஷ்ணசாமி—வைத்திய வள்ளல்—தமது 74–ஆவது வயதில் காலமானார். அவருக்காக ஏற்பாடு செய்யப்பட் டிருந்த அனுதாபக் கூட்டத்தில் பெரியார் கலந்து கொண்டு, அவர் தமது தமையனார் என்பதற்காகவோ, செல்வந்தர் என்பதற்காகவோ அல்லாமல்; தமக்கென வாழாமல், சித்த மருத்துவம் இலவசமாகத் தினம் 100, 150 பேருக்குக் குறை யாமல் செய்தும், பொதுத் தொண்டில் ஈடுபட்டும், வாழ்ந்து வந்ததால்தான் இன்று பலராலும் பாராட்டப்படுகிறார் என்பதைச் சுட்டிக் காட்டினார் பெரியார். பம்பாய் சென்று 11,12 தேதிகளில் அங்கு திராவிடர் கழக இரண்டாவது மாநாட்டில் பெரியார் கலந்து கொண்டார்.

இச்சமயத்தில் கம்யூனிஸ்டுக் கட்சியினை அடக்கி ஒடுக் கிட அரசு மிகத் தீவிர நடவடிக்கையில் இறங்கியிருந்தது. முக்கியமானவர்கள் தலைமறைவானதால், கிடைத்தவர் களைச் சிறையிலடைத்துச் சித்திரவதை செய்தனர்; பலரை வேட்டையாடி ஒழித்தனர். தஞ்சாவூர் மாவட்டத்தில் விவசாயத் தோழர்கள் மிகக் கடுமையான அடக்கு முறைக்கு ஆளாயினர். "தஞ்சை மாவட்டத்தில் தடியடி ஆட்சி" என்று பெரியார் "விடுதலை"யில் ஒரு தலையங்கமே எழுதினார். மேலும், தமிழகத்தையே உலுக்கி விட்ட கொலை வெறியாட்டம் அரசுக்கு மிகுந்த அவப்பெயரைத் தேடித் தந்தது. அதாவது, சேலம் மத்திய சிறைச் சாலையில் அடைக்கப்பட்டிருந்த கம்யூனிஸ்டுக் கைதிகளை, உள்ளே

வைத்தவாறே, 15-2-50 அன்று, போலீசார் துப்பாக்கியால் சுட்டு, 22 பேர் மரணமடையவும், 100 பேர் படுகாயமடையவும் நேரிட்டது. மார்ச் 5-ஆம் நாளன்று இதற்குத் திராவிடர் கழகம் கண்டன நாள் கொண்டாடுமாறு பெரியார் கேட்டுக் கொண்டார்.

"விடுதலை" ஏட்டின்மீது தொடரப்பட்ட வழக்கில், 9-3-50 அன்று வாதம் தொடங்கி, 24-ந் தேதி பாதகமான தீர்ப்பு வழங்கப்பட்டது! ஒவ்வொரு மாதமும் 10-ந்தேதி இந்தி எதிர்ப்பு நாள் கொண்டாடி, இன்னும் கட்டாய இந்தி ரத்து செய்யப்படாததைப் பெரியார் நினைவூட்டி வந்தார். கடைசியில் 18-ந்தேதி, கட்டாய இந்தித் தொல்லை ஒழிந்தது என்று 1950 ஜூலை 20-ஆம் நாள் "விடுதலை"யில் பெரியார் தலையங்கம் எழுதி மகிழ்ந்தார்.

மார்ச் 18, 19 நாட்களில் சென்னை மாவட்ட திராவிடர் கழக 15-ஆவது மாநாடு சென்னையில் நடைபெற்றது. பெரியாருடன் தி.பொ. வேதாசலம், ஏ.பி. சனார்த்தனம், எஸ். குருசாமி, சி. இலக்குவனார், எம்.ஆர். ராதா, திருவாரூர் தங்கராசு ஆகியோர் பங்கு பெற்றனர். ஏப்ரல், மே மாதங்களில் பெரியார் தமிழகமெங்கும் சுற்றிச் சுழன்று, கட்டாய இந்தி, திராவிட நாட்டுப் பிரிவினை, வகுப்புவாரி உரிமை, காங்கிரசின் கொடுமை ஆகிய பொருள்கள் குறித்து நாட்டு மக்களுக்கு நல்ல வண்ணம் விளக்கி வந்தார். ஜூன் 22-ஆம் நாள் காய்ச்சலால் தாக்குண்டு, திருச்சியில் சிலநாள் ஓய்வெடுக்க நேரிட்டது. பிறகு சென்னை சென்று சிகிச்சை பெற்றுக்கொண்டார் பெரியார். உடல் சிறிது நலம் பெற்றதும் புறப்பட்டு விட்டார். திருப்பூரில் இந்தி எதிர்ப்பு நாளில் கலந்து கொண்டார் பெரியார். நாம் பொதுவான சங்கதிகளில் மட்டும் காலத்துக்கேற்ற மாறுதல்களை ஒப்புக் கொள்கிறோம்; ஆனால் ஆத்மார்த்த, சமுதாயக் காரியங்களில் இன்னும் காட்டுமிராண்டிக் காலத்தில்தான் இருந்து வருகிறோம்—என்று பெரியார் தக்க மேற்கோளுடன் விரித்துரைத்து வந்தார். இந்த நேரத்தில் பஞ்சாபில் மாஸ்டர்

தாராசிங் சீக்கிஸ்தான் என்ற பெயரில் தனிநாடு கேட்கத் துவங்கியதைப் பெரியார் வரவேற்று ஆதரித்தார். கவர்னர் ஜெனரல் பதவியிலிருந்து திரும்பி, பென்ஷன் பெற்று வந்த ராஜாஜி, மீண்டும் டெல்லி சென்று, இலாக்கா இல்லாத மந்திரியாக, நேரு மந்திரி சபையில் இணைந்தார்.

பெரியார் பொன் மொழிகள் என்ற நூல் ஆட்சேபகர மானது என்று மார்ச் மாதம் பெரியார் மீது தொடரப்பட்ட வழக்கு, 10 முறை ஒத்திப் போடப்பட்டு வந்தது. 22-7-50 அன்று கடைசியாக வாய்தா தந்தார்கள். அரசியலில் தமக்கு நாட்டம் எப்போதுமில்லை, சமுதாய இழிவு ஒழிப்பே முக்கியம் என்பதை அன்று ஈரோட்டில் பெரியார் வலியுறுத்தினார். அரசின் சில துறைகளில் கட்டாயம் கதர் உடைகள் வழங்கப்பட வேண்டும் என்ற உத்தரவை மாற்றிக் கைத்தறி உடைகளோ, மில்துணி உடைகளோ வழங்கலாம் என்ற நிலையைப் பெரியார் வரவேற்றார்.

சென்னை மாகாணத்தின் மொத்த மக்கள் தொகையில் பார்ப்பனர் 2.7 சதவீதம்.பேர்தான். ஆனால், 1949–50ஆம் கல்வி ஆண்டில் உயர்நிலைக் கல்லூரிக் கல்வியில் அவர்கள் எத்தனை சதவீதம் பெற்றிருந்தார்கள்? இண்டர்மீடியட் 33.8 சதவீதம்; பி.ஏ., பி.காம். 33.6 சதவீதம்; பி.எஸ்சி. 46.6 சதவீதம்; பி.ஏ. ஆனர்ஸ் 48.5 சதவீதம். கல்வித் துறையிலும் உத்தியோகத் துறையிலும் (இங்குள்ள மத்திய சர்க்கார் அலுவலகங்களில் உட்பட) மக்கள் தொகைக்கு ஏற்ற விகிதாசாரப்படி இவை மாற்றியமைக்கப்பட வேண்டு மென்றுதானே பெரியார் தமது அரசியல் வாழ்வு துவங்கிய நாள் முதல் போராடி வருகிறார்! திராவிடரின் உரிமைச் சாசனமான இந்த வகுப்புவாரிப் பிரதிநிதித்துவஉத்தரவைச் செல்லாமல் செய்திட ஆரியம் கச்சை கட்டி இறங்கிவிட்டது. 1950-ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் மருத்துவக் கல்லூரி யிலும், பொறியியற் கல்லூரியிலும் இடங் கிடைக்கப் பெறாத இரு மாணவர்கள் சென்னை உயர்நீதி மன்றத்தில் வழக்குகள் தொடுத்தனர். சென்னை மாகாண அரசு நடை முறைப்படுத்திவரும் வகுப்புவாரி இட ஒதுக்கீடு இந்திய

அரசியல் சட்டத்துக்கே முரணானது என 28-7-1950 அன்று சென்னை உயர்நீதி மன்றம் தீர்ப்பளித்தது. ஆலமரத்தின் ஆணிவேரில் வீழ்ந்த அரிவாள் வெட்டாக இது தோன்றியது. சென்னை மாகாண அரசு டெல்லி சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்தது. அரசுக்கு எதிராக, அந்த மாணவர்களைப் பாதுகாத்திட முனைந்து எழுந்து நின்றவர் யார் தெரியுமா? அரசியல் நிர்ணயசபை உறுப்பினரும், இந்திய அரசியல் சட்டத்தைச் செய்திடத் தென்னாட்டின் பிரதிநிதியாகச் சென்றவர்களில் ஒருவருமாகிய சர் அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர்! வழக்குத் தொடுத்த இரு மாணவரில் ஒருவர், சென்னை உயர்நீதி மன்றத்தில் எழுத்து மூலமாகக்கூட மனுதாக்கல் செய்யவில்லை எனினும், அவருக்காக அல்லாடி மல்லாடினார் என்ற கில்லாடி அரசியல் மோசடி பின்னரே வெளியாயிற்று! சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு மாத்திரம் எப்படியிருக்கும்? இது அரசியல் சட்டத்திற்கு முரணானதுதான் என்றே உச்சநீதி மன்றம் தீர்ப்பளித்தது. இதனால் வகுப்பு வாரி உத்தரவை மாகாண அரசு நடைமுறைப் படுத்தக் கூடாது எனவும் ஆணை பிறப்பிக்கப்பட்டது; 1950 செப்டம்பர் திங்களிலேயே!

பெரியார் சீறி எழுந்தார். சிங்க ஏறுபோல் கர்ச்சனை புரிந்தார். தமது ஜீவ நாடியே போய்விட்டதாகச் சினந்து பொங்கினார். 1921-ல் உருவாக்கப்பட்டு 1922-ஆம் ஆண்டும், 1924-ஆம் ஆண்டும் உறுதி செய்யப்பட்டு, 1929-முதல் அமுலில் இருந்து வந்த பெருஞ்சலுகை ஒரு சிறிய தீர்ப்பின் மூலம் தூள் தூளாவதா? இதன் கர்த்தாவான எஸ். முத்தையா முதலியார் பெரியார் பக்கம் நின்று, அநியாயத்தை எடுத்துரைத்தார். பாதிக்கப்பட்ட சமுதாய மான மாணாக்கர்கள் கல்லூரிகளுக்குச் செல்லாமல் ஊர் வலமாகச் சென்று முழங்கினர். திருச்சியில் "தொண்டு" ஆசிரியர் வீராசாமி துவக்கிய அம்பேத்கார் மாணவர் இல்ல நன்கொடைக்காக, 1950 ஜூலை 31-ஆம் நாள், என். எஸ். கிருஷ்ணனின் கிந்தனார் நிகழ்ச்சிக்குத் தலைமை ஏற்ற பெரியார், அங்கும், மறுநாள் திருச்சி பொதுக்கூட்டத்திலும்,

வகுப்புவாரி உரிமை பறிபோன கொடுமையை நொந்த மனத்துடன் சுட்டிக் காட்டினார். 6–8-50 அன்று விடுத்த அறிக்கையில் கட்டாய இந்தி ஒழிப்புக்காக வெற்றிவிழாக் கொண்டாடுமாறும், அதே நேரத்தில் வகுப்புவாரி உரிமைக் காகக் கிளர்ச்சி துவக்குமாறும் கேட்டுக்கொண்டார். 13–ஆம் நாள் சென்னைப் பொதுக் கூட்டத்தில் முழக்கமிட்டார். 14-ஆம் நாள் பெரியார் வேண்டுகோளுக்கிணங்க, நேரடி நடவடிக்கை முழு வெற்றியளித்தது. கடையடைப்பும், கல்வி நிலையங்கள் புறக்கணிப்பும், தொழிற்சாலைகள் வேலை நிறுத்தமும், பெரியார் தலைமையில் உரிமை முழங்கிய ஊர்வலமும் பரிபூரண வெற்றி! புதிதாகத் தோன்றிய திராவிட முன்னேற்றக் கழகமும் இவற்றில் முழு ஒத்துழைப்பு நல்கியது. பெரியாரும், அடுத்து நடக்கும் இது சம்பந்தமான எல்லா நடவடிக்கைகளுக்கும் அனைத்துக் கட்சியினரையும் அழைப்பதாகக் கருத்தறிவித்தார்.

சேலம் ஏ. இராமசாமிக்கவுண்டர் அவர்களின் திடீர் மறைவு கேட்ட பெரியார், மிகவும் துக்கம் மேலிட்டுச், சுற்றுப் பயணத்திலிருந்தவாறே, ஆகஸ்ட் 22–ஆம் நாள் சேலம் சென்று, இல்லத்தாரின் துயரத்தில் பங்கு கொண் டார். அடுத்து, மகிழ்ச்சி பெறத்தக்க சம்பவமாகப் பெரியார் கருதியது காமராசர் வெற்றி. அதாவது 1940– முதல் தொடர்ந்து தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவ ராக வீற்றிருந்த காமராசர், 29-8-50 அன்று நடந்த கட்சித் தேர்தலிலும், 155 வாக்குகள் பெற்று வென்றாராம். இவரை எதிர்த்த கோவை சி. பி. சுப்பையாவுக்கு 99 வாக்குகளாம்.

14-7-50 அன்று திருச்சி புத்தூரில் 50,00 ரூபாயில் கழகத்திற்கென ஒரு கட்டடம் வாங்கப்பட்டது. அதில் திராவிடர் கழக நிர்வாகக் குழு கூடி, அந்தக் கட்டடத் திற்குப் பெரியார் மாளிகை எனப் பெயர் சூட்டியது; 10-?-50 அன்று! வேலூர் ஈ. திருநாவுக்கரசு அதைத் திறந்து வைத்தார். வடநாட்டு ஆதிக்க ஒழிப்புக் கிளர்ச்சியாக, நமது நாட்டு நெசவாளர் துயர்துடைக்க, வட நாட்டுத் துணிக் கடைகள் முன்பாக மறியல் போராட்டம் துவக்குவது; ஒவ்

வொரு மாதமும் 14-ந் தேதியன்று வகுப்புவாரி உரிமை நாள் கொண்டாடுவது—என்று பல முடிவுகள் அன்று மேற் கொள்ளப் பட்டன. 10-9-50ல் திராவிட முன்னேற்றக் கழகம் மத்திய அமைச்சர் ஆர்.ஆர். திவாகருக்குக் கருப்புக் கொடி பிடித்தது. வகுப்புரிமை கோருவதன் நியாயத்தை இந்த ஒரு சிறிய புள்ளி விவரம் தெரிவிக்கும்: 1950–ஆம் ஆண்டில் மருத்துவக் கல்லூரியில் மாணவர் நிலைமை:

| | | மனுச் செய்தோர் | அனுமதி பெற்றோர் |
|---|---|---|---|
| 1. | பார்ப்பனர் | 458 பேர் | 77 பேர் |
| 2. | பார்ப்பனரல்லாதார் | 692 ,, | 172 ,, |
| 3. | கிறித்துவர் | 144 ,, | 22 ,, |
| 4. | முஸ்லிம் | 83 ,, | 21 ,, |
| 5- | ஆதித்திராவிடர் | 17 ,, | 17 ,, |

பல்லாவரத்தில் வாழ்ந்த தனித் தமிழ்க் காவலர் மறை மலையடிகள், வாழ்வின் இறுதிக் கட்டத்திலிருப்பதைப் பெரியார் கேள்வியுற்றார். 14-9-1950 அன்று சென்னையில் திரு.வி. கல்யாண சுந்தரனாரையும் பார்த்து விட்டு, நேரே பல்லாவரம் சென்று மறைமலையடிகளையும் கண்ணுற்று, நெஞ்சம் துணுக்குற்றார் பெரியார். மறுநாள் மறைமலை என்னும் அந்தத் தமிழ்ப் பெருமலை சாய்ந்தது!

1950-ஆம் ஆண்டு செப்டம்பர் 17-ஆம் நாள் தந்தை பெரியாரின் 72-ஆவது பிறந்த நாள். ஆகா! தமிழர்க்கு எத்துணை மகிழ்ச்சி! அந்த ஒரு நாள் மட்டும் திருநாள்! மறுநாள்?

பெரியார் பொன்மொழிகள் வழக்கு, திருச்சி நீதி மன்றத்தில் 11–3-50 முதல் நடந்துவந்ததல்லவா?அரசினர்க்கு என்ன கருணையோ? அண்ணாவின் ஆரியமாயை வழக்கும் அதே நீதி மன்றத்திலன்றோ நடந்தது! இரண்டு வழக்கு களுக்கும் 153 A பிரிவில் ஒரே நாளில் ஒரே மாதிரியான தீர்ப்பு! ஆளுக்கு 500 ரூபாய் அபராதம்; கட்டத் தவறினால் ஆறுமாதம் சிறை! இருவருமே அபராதம் கட்டத் "தவறி"

18-9-50 அன்று, திருச்சி சிறைக் கோட்டம் புகுந்தனர். பெரியாருக்குப் பன்னிரண்டாவது முறையாகச் சிறை; இருவர்க்கும் பக்கத்து அறை! பத்து நாள் வாசம்; விழிகள் தாம் பேசும்; தின்பண்டங்கள்தாம் பரிமாற்றம்; வேப்ப மரத்து நிழல்தான் குளிர்விக்கும்! என்ன வியப்பு! இருவருக்குமே 28-9-50 அன்று காலை 10 மணிக்குத் திடீர் விடுதலை! ஏன்? வெளியில் "பெரியாரை விடுதலை செய்! அண்ணாவை விடுதலை செய்!" எனத் திராவிடர் கழகமும், திராவிட முன்னேற்றக் கழகமும் ஒரே குரலில் எழுப்பிய இடிமுழக்கம்! எங்கே மீண்டும் இணைந்து விடுவார்களோ என்ற அச்சமா?

அண்ணாவை அழைத்துச் செல்லத் தோழர்களோ, வாகனமோ வரவில்லை! பெரியாரின் வேனிலேயே அண்ணாவை ஏறிக்கொள்ளுமாறு பெரியார் கண்களால் ஆணையிடத், தலைவரின் கருணை மழையில் நனைந்த தளபதி, தலைதாழ்த்தி, வாய் மூடி, அமர்ந்து வர—அடடா; என்ன உருக்கமான காட்சி! தாம் முன்னதாகத் தம் மாளிகையில் இறங்கிக்கொண்டு, அண்ணாவைச் சங்கரம் பிள்ளை வீட்டில் இறக்கிவரப் பணித்தார் பெரியார்!

அக்டோபர் முதல் வாரம் பெரியாருக்கு உடல் நலிவு. அதனால், 8-10-50 அன்று சென்னை மாவட்ட நிர்வாகக் குழு கூடியது. வணிக நிலையங்களின் முகப்புப் பலகை விளம்பரங்களில் பிராமணர் அல்லது இந்து அல்லது முஸ்லிம் என்ற சாதி, மத ஆணவங்களைக் குறிக்கும் சொல்லை அகற்ற வேண்டும்; வரும் 16-ஆம் தேதி முதல் சென்னையிலுள்ள வடநாட்டார் துணிக்கடை மற்றும் உணவுக் கடைகளின் முன் மறியல் துவக்க வேண்டும்—என்பவை முக்கிய முடிவுகளாகும். சென்னையில் மறியல் களமாக சைனா பஜாரில் ஆரியபவான், கிஷின்சந்த் செல்லாராம் கடைகளின் முன் புறமும், முதல் தளபதியாக ஏ. பி. சனார்த்தனமும்—எனவும் முடிவுசெய்யப்பட்டது. சென்னை மாவட்டக் கழகத் தோழர்கள் எம். கே. தங்கவேலரும், எம். கே. டி. சுப்ரமணியமும், மறியல் நாள்தோறும் தொடர்ந்து நடக்க ஆவன செய்து வந்தனர். மறியல் நேரம் மாலை 5 மணி

முதல் 7 மணி வரை. முதல் நாள் 8 பேர் கைதாகிப் பின்னர் விடுதலை,செய்யப்பட்டனர். 9-10-50 சேலம் சென்ற பெரியாரைப், புரட்சித் தலைவர் பெரியார் வருகை என வர்ணித்து வரவேற்றனர், சேலம் திராவிடர் கழகத்தினர்!

வடநாட்டார் ஆதிக்க எதிர்ப்பு உணர்ச்சி தமிழ் நாடெங் கணும் கொழுந்து விட்டு எரிந்தது. ஆங்காங்கு உள்ள பெயர்ப் பலகைகளில் பிராமணாள் என்ற எழுத்துகள் அழிக் கப்பட்டன. ரயில் நிலையப் பெயர்ப் பலகைகளில் இந்தி எழுத்துகள் தார்கொண்டு மறைக்கப்பட்டன. இவற்றை யார் செய்தார்கள் என எவர்க்குந் தெரியாது. அரசுக்கும் புரியாததால், அடக்குமுறை கோர தாண்டவமாடியது. அதனால், பெரியார் பொறுப்புடன் தாமே முன் வந்து, கழகத் தோழர்கள் இம்மாதிரி இரகசிய வேலைகளில் ஈடுபட மாட்டார்கள். எனினும், யார் செய்தாலும், இப்படி இரகசிய அழிப்பு வேண்டாம், என்று அறிக்கை விடுத்தார், 17-10-50 "விடுதலை" நாளேடு வாயிலாக! 24–10–50 அன்று சென்னைக்கு வருகை தந்த டெல்லி அமைச்சர் இராஜ கோபாலாச்சாரியாருக்கு எதிர்ப்பாக தி.மு.க. பெரிய கருப்புக் கொடி ஆர்ப்பாட்டம் நடத்தியது. பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் போன்றோர் அடித்து உருட்டப்பட்டனர். மக்கள் குழுமியுள்ள இடங்களிலெல் லாம் போலீசார் புகுந்து தடியடி நடத்தினர். அநாவசியத் தலையீட்டைக் கண்டித்துப் பொதுக்கூட்டம் ஒன்று நடை பெற்றது. 25-ம் நாள் சென்னையில் நடந்த மத்திய திராவிடர் கழக நிர்வாகக் குழுவில், நவம்பர் 1-ஆம் நாள் எல்லா ஊர்களிலும் வடநாட்டார் துணிக்கடை முன் மறியல் செய்வதெனத் தீர்மானிக்கப்பட்டது.

பெரியார் கடந்த 30 ஆண்டுகட்கு மேலாக லட்சக் கணக்கான கூட்டங்களில் சொற்பொழிவாற்றியுள்ளார். கைத்தடியை ஊன்றிக் கொண்டோ, இல்லாமலோ, ஒலி பெருக்கி முன்னாலோ, இல்லாமலோ — நின்றவாறேதான் இதுவரை பேசியிருக்கிறார். 1950 அக்டோபர் 21-ஆம் நாளன்று செம்பனார்கோவில் பொதுக் கூட்டத்தில்தான்

முதன் முதலில், நின்று பேச இயலாமல், ஒரு நாற்காலியில் அமர்ந்தவாறே, பேசத் தொடங்கினார்.

சென்னையில் காந்தியார் நினைவு நாள் கூட்டம் காங்கிரசார் நடத்தினர். அதில் பேசிய காங்கிரஸ் தலைவர் காமராசர், வீணே திராவிடர் கழகத்தாரைக் தாக்கிப் பேசினார். குழப்பம் விளைவிப்பதாகவும், ஒழுங்கீனமான முறைகளில் நடப்பதாகவும், சர்க்கார் கடுமையாக இவர்களை அடக்க வேண்டும் என்றும் காமராசர் அரசினரைத் தூண்டி விட்டார். போலிசாருக்கு இந்த ஜாடை போதாதா? மறு நாள் 1-11-50 அன்று நாடு முழுதும் நடந்த வட நாட்டார் துணிக்கடை மறியலில் ஈடுபட்ட கழகத் தொண்டர்களைக் கடுமையாகத் தாக்கினர்; கைது செய்து, வழக்குப் போட்டு, தண்டனை தந்து, மகிழ்ந்தனர். அடக்குமுறைச் செய்திகள் அடுத்தடுத்து வந்த வண்ணம் இருந்தபோதே, 2-11-50 அன்று ஆங்கிலப் பேரறிவாளன் பெர்னாட்ஷா மறைவுச் செய்தியும் செவிகளில் தாக்கியது!

சென்னையில் நடைபெற்ற பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்தில் பெரியார் வகுப்புரிமை, சுரண்டல் தடுப்புப் பிரச்சினைபற்றி 7-11-50 அன்று விளக்கவுரையாற்றினார். முன்னாள் அமைச்சர் எஸ். ராமநாதன், சாமி. சிதம்பரனார், பி. பாலசுப்ரமணியம் ஆகியோர் ஒரு கூட்டத்தில் “இந்து”, “மித்திரன்” பத்திரிகைகளுக்குத் தீ வைத்துக் கொளுத்தினர். காமராசர் தனக்குப் பிரதம தளபதியாக அப்போது சிலம்புச் செல்வர் ம.பொ. சிவஞானம் அவர்களை ஏவி விட்டார். 1948-ல் இந்தி எதிர்ப்புப் பிரச்சினையில் கழகத்தின் பக்கமிருந்த ம.பொ.சி. 1950-ல் திராவிடர் இயக்கங்களை ஒழிப்பதே தம் முதற்கடமை எனச் சூளுரைத்தார்.

> கண்ணகியின் வழக்குரை காதையினை விளக்கமாகக் கூறும் சிலம்புச் செல்வர் 1967-ல் தி.மு.க. தேர்தல் சின்னத்தில் வென்றதும், 1971-ல் தோற்றும், மேலவை உறுப்பினராகித், துணைத் தலைவர் பதவி பெற்றதும், 1977-ல் அ.இ. அ.தி.மு. கழகத்தின் ஆட்சியில் மேலவைத் தலைவர் பதவி ஏற்றதும், 1979-ல்

டாக்டர்பட்டம் பெற்றதும் அந்தச்சூளுரையின் விளைவு களோ என அரசியல் நோக்கர்கள் கேட்கின்றனர்!

நவம்பர் 20-ஆம் நாள் திருச்சியில் மத்திய நிர்வாகக் குழுவினர் கூடினர். டிசம்பர் 2-ல் சுரண்டல் தடுப்பு மாநாடும், 3-ல் வகுப்புரிமை மாநாடும் அங்கே நடத்துவ தென்றும், 25 பேர் கொண்ட பிரச்சாரப் படை ஒன்று மதுரையில் புறப்பட்டுச் சென்னைக்குச் செல்வதென்றும் முடிவாயிற்று. 12–11-50 வரை சென்னை மறியலில் 107 பேர் கைதாகியிருந்தனர். மறியல் களத்தின் இடத்தை மாற்றலாமா என்றும் யோசிக்கப்பட்டது. திருச்சி மாநாடு கட்கு முதல் நாள் நள்ளிரவு, பெரியாரின் கார் ஜப்தி செய்யப்பட்டது. தொண்டர்களை வழியில் இறக்கிவிட்டு, 1 மணியளவில் போலீசார் காரைப் பறித்தனர். 9-12-50 அன்று அண்ணாவின் "திராவிட நாடு" அலுவலகத்திலிருந்து காகிதக் கட்டுகள் பறிமுதல் செய்யப்பட்டன. திருச்சியில் இருவரும் அபராதம் கட்ட மறுத்துச் சிறை ஏகினரல்லவா? அதன் தொடர் நடவடிக்கையாம் இது!

டிசம்பர் 10-ஆம் நாள் "விடுதலை" ஆசிரியர் குருசாமி சென்னையில் மறியலில் குதித்துக் கைதாகிப், பின்னர் விடுதலை செய்யப்பட்டார்! 14-ந் தேதி வகுப்புரிமை நாள் கொண்டாடி முடிக்கு முன், 15-12-50 அன்று மத்திய உள் துறை மந்திரி, இரும்பு மனிதர் வல்லபாய் பட்டேல், காலமான துயரச் செய்தி கிட்டிற்று. பார்ப்பனரல்லாதவ ரென்பதால் அவரிடம் பெரியாருக்கு அளவற்ற மதிப்பு! மேலும், வகுப்புரிமை கோரிப் பெரியார் போராடுவது அறிந்து, அவரே முயன்று, அரசியல் சட்டத்தில் தேவை யான திருத்தம் செய்து கொள்ள ஏற்பாடு மேற்கொண்டிருந் தார். பட்டேல் மறைவையொட்டி மறியல் போராட்டம் 3 நாளைக்கு நிறுத்தி வைக்கப்பட்டது.

பட்டேல் இடத்துக்காகவே காத்திருந்தது போல் இராஜாஜி, 26–ஆம் தேதி உள்துறை அமைச்சரானார். இந்த நேரத்தில்தான் பெங்களூர் எல். எஸ். ராஜா என்ற அய்யங்கார் வக்கீல் மீது சாட்டப்பெற்ற கிரிமினல் குற்றத்

திலிருந்து அவரைத் தப்புவிக்க, அனந்தசயனம் அய்யங்காரும் ராஜாஜியும் தங்கள் பதவியைப் பயன் படுத்திக் கிரிமினல் :புரொசீஜர் கோடையே திருத்துவதற்கு முயன்றனராம்.

அன்றைய தினம் பெரியாரின் கார் திருச்சியில் 835 ரூபாய்க்கு ஒருவரால் ஏலத்தில் எடுக்கப்பட்டது. கழகத் தோழர்கள் அந்த ரூபாய் கொடுத்து, அதைத் திரும்பவும் வாங்கி, மேலும் 750 ரூபாய் செலவில் பழுது பார்த்து, 14-1-51 பொங்கலன்று பெரியாரிடமே வழங்கினர். 1951-ஆம் ஆண்டின் துவக்க நாளே வடநாட்டுத் துணிக்கடை மறியலின் 73-ஆவது நாள். அதுவரை சென்னையில் 312 பேரும் வெளியூர்களில் 20 பேரும் கைதாகியிருந்தனர். ஏராளமான வெளியூர்த் தோழர்கள் தம்து சொந்தச் செலவில் சென்னை வந்து மறியலில் கலந்து கொள்ள முந்தினர். ஆனால் ஓரணிக்கு இரண்டிரண்டு பேர்தான் என்று திட்டமிடப்பட்டிருந்தது. பொங்கல் திருநாளை ஒட்டி மறியல் 5 நாள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. மீண்டும் மறியல் போராட்டம் துவங்கியதும், பெரியாரே மறியலில் ஈடுபட்டுக் கைதாகிப், பின் விடுதலை செய்யப்பட்டார். திராவிடர் கழகத்தின் வெற்றி என்பதாக 20-2-51 "விடுதலை" ஒருதலையங்கம் எழுதியிருந்தது:—கட்டாய இந்தி ஒழிக்கப்பட்டது; பெரியாரின் எழுத்துச் சீர்திருத்தம் பற்றிக் காங்கிரஸ் அரசு பரிசீலனை செய்து வந்தது; கோயில்கள் அனைவருக்கும் திறந்து விடப்பட்டது; ஜமீன்தார் முறை ஒழிந்தது; 6 அவுன்ஸ் அரிசியை 7 அவுன்சாக உயர்த்தியது; தஞ்சையில் சேரிகளில் மக்களை வேட்டையாடியதை நிறுத்தியது; நெசவாளர்கள் விழிப்படைந்து, எழுந்தது; இறுதியாக சென்னைக் கடற்கரை மணற் பரப்பில் கூட்டம் நடத்த அனுமதி கிடைத்தது. (திராவிடர் கழகந்தான் முதல் கூட்டம் நடத்தியதாகத் தெரிகிறது!)

அகில இந்திய பிற்படுத்தப்பட்டோர் சங்கத்தின் தலைவரும், செயலாளரும் வடநாட்டிலிருந்து சென்னை வந்து, 3-2-51 அன்று பெரியாரைச் சந்தித்துக் கலந்து, ஆலோசனை

செய்து, விடை பெற்றுத் திரும்பினர். வடநாட்டுக் கடை முன்பு „சைனா பஜாரில் நடைபெற்று வந்த மறியல் 1–3–51 முதல் நிறுத்தி வைக்கப்பட்டது. 500 பேர் அது வரை கைதாகியிருந்தார்கள். ஒரு வார இடைவெளிக்குப் பின்னர் 8-3-51 அன்று 128-ஆவது நாளாக மவுண்ட் ரோட் செல்லாராம் கடை முன் மறியல் துவங்கிற்று; ஞாயிற்றுக்கிழமை கடைக்கும், மறியலுக்கும் விடுமுறை. இந்த மறியலின் முதல்நாள், "விடுதலை" ஆசிரியர் குத்தூசி குருசாமி தளபதி; ஒரே நிமிடத்தில் கைதாகி விட்டார். இங்கு மறியல் களம் மாற்றப்பட்ட பின்னர், அரசின் போக்கும் மாறியது. தண்டனை 6 மாதம் வரை போயிற்று. மறியல் செய்யத் தொடங்கியவுடன் அடுத்த நிமிடத்திலேயே கைது செய்யப் பட்டனர். பொதுமக்களின் ஆவலும் பரபரப்பும் ஆதரவும் பெருகியதே காரணம்! முன்பு சைனாபஜார் மறியலில் கடைக்காரர்கள், வாயில் முன் கார்களை நிறுத்தி, மறியல் தொண்டர்களுக்கு இடையூறு விளைத்த போதுகூட, அரசு கண்டுங் காணாமல் நடந்தது.

வகுப்புரிமைப் போரில் பெரியார் பெருவெற்றி பெற்றார். தமிழ்நாடு முழுதும் கண்டனக் கூட்டங்களும் மாநாடுகளும் ஏராளமான உணர்ச்சி எழுப்பின. சர்தார் வல்லபாய் பட்டேலின் முழு முயற்சி காரணமாக அரசியல் சட்டம் 15-வது விதியில் 4–வது உட்பிரிவு ஒன்று சேர்க்கப் பட்டது. அரசியல் சட்டம் ஏற்பட்ட ஓராண்டில் இதுதான் முதலாவது திருத்தமாகும். அதன்படி—சமூக நிலையாலும் கல்வியாலும் பிற்படுத்தப்பட்ட குடிமக்கள், அல்லது தாழ்த்தப்பட்ட, பழங்குடி மக்கள் ஆகியோரின் முன்னேற்றங் கருதி அரசு செய்யும் எந்தத் தனி ஏற்பாட்டையும் இந்த விதியின் ஒரு பிரிவோ; அல்லது 29-வது விதியின் 2-வது உட் பிரிவோ தடை செய்யாது; என்ற திருத்தம் நாடாளு மன்றத் தில் நிறைவேற்றப்பட்டது, 1951 பிப்ரவரியில்.

இதுவரை காங்கிரசுக்கு ஓட்டுப் போட்டுக் கண்ட பலன் பசியும், பட்டினியுந்தான்! வரவிருக்கும் 1952 பொதுத் தேர்தலில் யாரும் இனி காங்கிரசுக்கு வாக்களிக்காதீர்கள்

—என்று பெரியார் அணைக்கரைப் பொதுக்கூட்டத்தில் 13-3-1951-ல் முதல் முழக்கம் செய்தார். எங்களை உள்ளே போய்ச் சட்ட மன்றத்துக்குள் போராடச் சொல்கிறார்கள் சிலர்! அங்கே போய் ஒன்றும் சாதிக்க முடியாது! வெளியில் இருந்து கொண்டுதான் வீட்டை இடிக்க வேண்டுமே தவிர, வீட்டுக்குள் இருந்து இடித்தால், நம் தலைமீதுதான் விழும்—என்றார், ஈரோடு பொதுக்கூட்டத்தில் பெரியார்!

பகுத்தறிவின் இன்றியமையாமை குறித்து விளக்க வந்த பெரியார், மனிதன் மற்ற விலங்குகளிலிருந்து எவ்வளவோ மாறுபட்டு முன்னேற்றம் கண்டிருக்கிறான், விஞ்ஞானக் கண்டு பிடிப்புகளால். ஆனால் ஆன்மிகத் துறையில் மட்டும் அறிவை உபயோகிக்கத் தவறுகிறான். ஒரு விருந்தாளிக்கு இலைபோட்டுப் பதார்த்தங்கள் பரிமாறாமல் ஒரு உருண்டை சாணியை இலையில் வைத்தால், உடனே எழுந்து கோபித்துக்கொண்டு போய்விடுவான். அதே சாணி உருண்டைக்கு ஒரு பொட்டு வைத்து, இரண்டு அறுகம் புல்லை அதன் மேல் செருகினுல், பயபக்தியோடு கன்னத்தில் போட்டுக் கொள்வான். ஆரியம் அந்த அளவு அவன் புத்தியை மழுங்க அடித்து விட்டது. இவை எல்லாம் இன்று நேற்று ஏற்பட்டவை அல்ல. புத்தர் கொள்கைகளை அழித்தொழிக்க, நமது மன்னர்களைத் தூண்டி விட்டுத் தமிழ் நாட்டில் ஆரியர்கள் இவ்வளவு கோயில்களைக் கட்டினார்கள். இவ்வளவுதெய்வங்களை இறக்குமதிசெய்தார்கள். இவ்வளவு வண்டி வண்டியாகப் புராணக்கதைகளைப் புகுத்தினார்கள். இவ்வளவு கோயில் கட்டியிருக்கிறுர்களே, ஆரியன் எவனாவது ஒரு கல்லைச் சுமந்திருப்பானா? ஒரு ஆரியப் பெண் ஒரு கூடை மண் சுமந்திருப்பாளா? எந்த ஒரு ஆரியனாவது கோயிலுக்கென்று ஒரு காணி நிலம் எழுதி வைத்திருப்பானா?. எல்லாம்திராவிடர் உழைப்பு, திராவிடர் சொத்து. ஆனால் திராவிடர் உள்ளேபோக உரிமையில்லை! என்ன நியாயம்?—என்று பெரியார் வினாத் தொடுத்தார்.

நெடுங்காலம் விசாரணையின்றிச் சிறையிலிருந்த கம்யூனிஸ்டுத் தலைவர் ஏ.கே. கோபாலன் ஒரு ஹெபியஸ்

கார்ப்பஸ் மனுக்கொடுத்துச் சென்னை அய்க்கோர்ட்டால் விடுவிக்கப்பட்டார். "விடுதலை" ஏடு இதில் பெரும்பங்கு ஏற்றது. அதே போல் தெலிங்கானா போராட்டத்தில் 12 இளைஞர்களுக்குத் தூக்குத் தண்டனை விதித்ததை மாற்றுமாறு "விடுதலை" கோரியது. பின்னர் தூக்குத் தண்டனை ரத்தாகி அவர்கள் உயிர் காக்கப்பட்டது.

வடநாட்டுச் சுரண்டல் தடுப்பு மறியல் 151 நாள் நடைபெற்றது. 556 பேர் கைதாயினர். நெசவாளர் குரலுக்குச் செவிசாய்த்து, அரசு சில சலுகைகளை வழங்கியது. அதனால் மறியலை நிறுத்திக் கொள்ள, 1-4-51 திருச்சியில் கூடிய மத்திய செயற்குழு தீர்மானித்தது. காங்கிரஸ் மந்திரிகளுக்குக் கருப்புக் கொடி காட்டி, அவர்களை ராஜிநாமா செய்யக் கோருவது என்றும் முடிவு செய்யப்பட்டது. தமிழ் நாடெங்கும் காங்கிரஸ் ஒழிப்பு நாள் 1951 ஏப்ரல் 22-ல் கொண்டாடப்பட்டது. திருச்சிப் பொதுக் கூட்டத்தில் பெரியார் பங்கேற்றார். சென்னைக் கடற்கரையில் நடந்த முதல் கூட்டத்திற்கு, மாலை 8 மணி வரையிலுமே அனுமதி தந்திருந்தும் லட்சக் கணக்கில் மக்கள் வெள்ளம் திரண்டிருந்தது. சா. குருசாமி, கி. வீ. ராஜகோபாலாச்சாரி, எஸ். ராமநாதன், கே. டி. கே. தங்கமணி, மலேயா சாம்பசிவம் ஆகியோர் பேசினர். 14-4-51-ல் டாக்டர் அம்பேத்காரின் 59-வது பிறந்த நாள் விழா, தமிழகமெங்கும் திராவிடர் கழகத்தாரால் சிறப்புடன் கொண்டாடப்பட்டது. மே திங்களில் கோவை மாவட்டத்திலும், மதுரை மாவட்டத்திலும் நடந்த வகுப்புரிமை, சுரண்டல் தடுப்பு மாநாடுகளில் பெரியார் கலந்து கொண்டார். இலங்கையில் தனிநாடு கேட்டுத், தலைவர் எஸ்.ஜே.வி. செல்வநாயகம் உரிமைப் போர் தொடுத்ததைப் பெரியார் ஆதரித்தார். காஞ்சியில் அமைச்சர் பக்தவத்சலத்திற்கும், நாகை, மாயூரம் பகுதிகளில் அமைச்சர் கோபால் ரெட்டிக்கும், கழகத்தார் கருப்புக் கொடி காட்டினர். 17-5-51-ல் மத்திய அமைச்சர் ஜகஜீவன் ராமுக்குத் தி.மு.கழகம் கருப்புக் கொடி காட்டியது. பார்லிமெண்ட் தேர்தலில் பார்ப்பன

ருக்கு வாக்களிக்க வேண்டாம். காங்கிரசுக்கோ ஒருபிடி மண்ணைப் போடுங்கள்—என்று கடுமையாகப் பேசி வந்தார் பெரியார். ஜூலையில் தி.க. மாகாண மாநாடு நடை பெற்றது.

சேலத்தில் 22-7-51ல் நடைபெற்ற பிரம்மாண்டமான பொதுக்கூட்டத்தில்,பெரியார் திராவிடநாடு பிரிவினை ஏன் அவசியம் என விளக்கினார்:—வெள்ளைக்காரன் இன்னும் 300 கோடி ரூபாய்க்கு மேல் முதலை இங்கேயே விட்டு வைத்துச், சுரண்டிக் கொண்டிருக்கிறான். வடநாட்டான் கொள்ளையனாகவே மாறிச் சுரண்டுகிறான். இங்கேயிருந்து கொண்டே, பார்ப்பான் சுரண்டுகிறான். நாம் தனி நாடு கேட்டால், சிறிய நாடு; வாழ முடியுமா?என்கிறார்கள். பாக்கிஸ்தான் கேட்ட போதும், இப்படித்தான் சொன் னார்கள். நீயாகத் தருகிறாயா? நான் ரஷ்யாவை உதவிக் கழைத்து வாங்கிக் கொள்ளட்டுமா? என்று ஜின்னா கேட்ட தும் பணிந்தார்கள். நமக்கு அத்தகைய மான உணர்ச்சி வேண்டும்—என்றார் பெரியார்.

அரசியல் சட்டம் நியாயமாகச் செய்யப்படவில்லை. அம்பேத்கார் தவிர, டி.டி.கே., அல்லாடி, திருமல்ராவ், ஒரு கிறிஸ்தவர், ஒரு முஸ்லிம்–இருந்தார்கள். நமக்காக யார்? எனவே, சட்டப்படியோ, காங்கிரசார் தந்த வாக்குறுதிப் படியோ, அரசியல் சட்டம் இயற்றப்படவில்லை. அதை முதலில் ஒழிக்க வேண்டும். அதற்காக, வரும் தேர்தலில் காங்கிரசைத் தோற்கடிக்க வேண்டும்—என்பதாகத் திருச்சி யில் 17-9–51-ல் பெரியார் பேசினார்.

சமுதாயத்துறையில் வேலை செய்ய வேண்டுமானால் ஆட்சிக்குப் போய்ப் பயனில்லை. அதனால்தான் நாங்கள் ஒதுங்கி நிற்கிறோம். காந்தியார் கூடத் துவக்கத்தில் அப் படித்தான் கூறி வந்தார். பின்னர் அவரே மாறியதால்தான், அரசியல் நமக்கு வேண்டாமென, 'நான் காங்கிரசை விட்டு விலகினேன்—என்றெல்லாம் பாண்டமங்கலத்தில் பெரியார் தமது கருத்தைத் தெரிவித்தார். ராஜாஜி இப்போது தமது மத்திய மந்திரி பதவியை விட்டுவிட்டு வந்திருந்தார். இது

எதற்கோ என்று பெரியார் கூர்ந்து கவனித்து வந்தார். 30-10-51 அன்று கம்யூனிஸ்டுத் தலைவர் எஸ். ஏ. டாங்கே திருச்சிக்கு வந்து பெரியாரைச் சந்தித்தார். திராவிடர் கழகம் கம்யூனிஸ்டுக் கட்சிக்கு ஓட் செய்வதேன்? என்று பெரியார் 5-11-51 "விடுதலை"யில் எழுதினார். "காங்கிரஸ் எதிர்ப்பு முயற்சிகள் ஒருங்கிணைக்கப்படவேண்டும். எதிர்க் கட்சிகளுக்குள் கட்டுப்பாடு தேவை. சட்டசபைக்குச் செல் கிறவர்கள் திராவிடநாடு பிரிவினையில் நம்பிக்கை வைத்து, அதற்காகப் பாடுபடுவேன் என்று கையெழுத்துப் போட வேண்டும் என்பதில் அர்த்தமே யில்லை. அவர்கள் வாக்குத் தவற மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்? தவறினால் எப்படி, என்ன, நடவடிக்கை எடுக்க முடியும்? "திராவிட முன்னேற்றக் கழகம் தேர்தல் நேரத்தில் தன்னிடம் ஆதரவு கேட்டவர்களுக்கு விதித்த நிபந்தனையைப் பெரியார் இவ் வாறாக விமர்சனம் செய்தார். அவர் கணிப்புச் சரியான தென்றே, பின்னாட்களில் மாணிக்கவேலரும், ராமசாமிப் படையாட்சியாரும் நிரூபித்தனர்!

காங்கிரஸ் தோல்விதான் முக்கியம் என்றார் பெரியார். 16–12–51–ல் காங்கிரஸ் தோல்வி நாள் கொண்டாடப் பெரியார் வேண்டுகோள் விடுத்தார். திருச்சியில், ரஷ்யா சென்று திரும்பிய என்.எஸ். கிருஷ்ணனுக்கு அளித்த வர வேற்பில், 31–10–51 -ல் பெரியார் கலந்துகொண்டு பாராட்டி னார். திராவிடர் கழக மத்திய நிர்வாக சபைக் கூட்டம் திருச்சியில் 1951 நவம்பர் 25–ஆம் நாள் கூடியது. 25, 26, 27, தேதிகளில் கழகத் தோழர்களுக்குத் தேர்தல் பிரச்சார வகுப்பு நடத்தினார் பெரியார். திராவிடர் கழகமும் திராவிட முன்னேற்றக் கழகமும் தேர்தலில் தத்தம் ஆதரவு தருவதற்கு வெவ்வேறு விதமான முடிவுகளை மேற் கொண்டதுபோல் தோன்றினாலும், உண்மையில் இரு கழ கங்களின் முயற்சியும் காங்கிரசைத் தோற்கடிப்பதிலேயே இருந்தது. இறுதியில் தேர்தல் முடிவுகளும் அப்படித்தானே வந்தன? சில தொகுதிகளில் இரு கழகங்களும் ஒரே வேட் பாளரை ஆதரித்த சூழ்நிலையும் ஏற்பட்டது.

# 14. அழித்தார்

**வயது வந்தோர் வாக்குரிமை பெற்ற முதல் தேர்தல்—காங்கிரஸ் தோல்வி—ரயில் நிலைய இந்தி அழிப்பு — திராவிட விவசாயத் தொழிலாளர் சங்கம்—தென் பகுதி ரயில்வேமென் யூனியன் — சுய மரியாதைப் பிரசார நிறுவனம்— பிள்ளையார் உடைப்பு — புத்தர் மாநாடு — குலக்கல்வி எதிர்ப்பு— பர்மா மலேயா பயணம்—1952 முதல் 1954 முடிய.**

---

உனக்கு இருபத்தொரு வயதாகி விட்டதா; இந்தா வாக்குச் சீட்டு! ஜனநாயகத்தை நிலை நாட்டி விட்டோம்; எங்களை மறக்காதே!—என்று காங்கிரசார், தாம் நடைமுறைக்குக் கொண்டு வந்த புதிய வாக்குரிமைத் திட்டத்தின் கீழ் 1952-ஆம் ஆண்டில் புதிய பொதுத் தேர்தலை நடத்தினர்; வெற்றி தமக்கே என்று உறுதியாக நம்பினர். தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில்–அதாவது சென்னை மாகாணத்தைப் பொறுத்த வரையில்–375 சட்டமன்ற இடங்களில், 371 இடங்களுக்குக் காங்கிரஸ் கட்சி போட்டியிட்டது. கடந்த 1951 அக்டோபர் 21-ல் உருவாக்கப்பட்ட அய்க்கிய முன்னணி சார்பில் நிறைய வேட்பாளர்கள் நிறுத்தி வைக்கப் பட்டனர். கம்யூனிஸ்டுக் கட்சி பெரியாரின் பரிபூர்ண, நிபந்தனையற்ற, ஆதரவை முழுமையாகப் பெற்றிருந்தது. திராவிட முன்னேற்றக் கழகம், தனது மதுரைப் பொதுக்

குழுவின் தீர்மானப்படி, திராவிட நாடு பிரிவினைப் பிரச்னையில் நம்பிக்கை வைத்துப், பிரிவினைக் கோரிக்கை வெற்றி பெறச் சட்டமன்றங்களிலும், பாராளுமன்றத்திலும் வாதாட விருப்பமுள்ளவர்கள், கையெழுத்துப் போட்டுக் கொடுத்தால், அவர்களை ஆதரித்தது. சிறையிலிருந்தவர்கள், தலைமறைவாயிருந்தவர்கள் ஆகிய கம்யூனிஸ்டு வேட்பாளர் களும் போட்டியிட்ட அதிசயமெல்லாம் நடந்தது.

கடந்த 27 ஆண்டுகளாகத் தாம் செய்து வந்த காங்கிரஸ் எதிர்ப்புப் பிரச்சாரத்தை முழு வலிமையுடன் பெரியார் செய்து வந்தார். அது நல்ல பயனைத் தந்தது. இந்தப் பொதுத் தேர்தலில் சென்னை மாகாணத்தில், காங்கிரசு 152 இடங்களையே பெற முடிந்தது. காங்கிரசல்லாதார் 223 இடங்களைச் சட்டமன்றத்தின் தேர்தலில் கைப் பற்றினர். இதில் திராவிட முன்னேற்றக் கழக ஆதரவு பெற்றோர் 43 பேரும் இருந்தனர். காங்கிரசல்லாத மந்திரி சபை அமைய எல்லா வாய்ப்புகளும் இருந்தன. வெற்றி பெற்ற மணலி கந்தசாமி போன்ற கம்யூனிஸ்டு சட்டமன்ற உறுப்பினர்கள் மூவர் விடுவிக்கப் பட்டனர். முதல் மந்திரியா யிருந்த குமாரசாமி ராஜா தேர்தலில் தோல்வியுற்றும், பதவியை விடுவதாயில்லை. இந்நிலையில் டெல்லி ஆட்சி பீடம் சென்னை மாகாண கவர்னராக ஸ்ரீ பிரகாசாவை நிய மித்தது. இவர் பண்டித ஜவகர்லால் நேருவுடன் ஒருங்கே பயின்றவர், காங்கிரஸ் கட்சிக்காரர், இந்திப் பிரியர். எனவே இது ஒழுங்கற்ற நியமனம் என்று பெரியார் இதனைக் கண்டித்தார். 1952 மார்ச் 12-ஆம் தேதி கண்டன நாள் கொண்டாடி, கவர்னருக்குக் கருப்புக் கொடி பிடிப்பதெனப் பெரியார் முடிவெடுத்தார். அதன்படிச் சென்னையில் எம்.கே. தங்கவேலர், ஆற்காடு இளங்குப்பன் ஆகியோர் கைது செய்யப்பட்டுக் காவலில் வைக்கப் பட்டனர். போலீசார் தடியடி தர்பார் நடத்திப் பல தோழர்களைக் காயப் படுத்தினர். இந்தப் பிரச்சினையில், திராவிட முன்னேற்றக் கழகம், திட்டமிட்டபடிக் கருப்புக் கொடி பிடிக்கவில்லை. தனித் தன்மையுடன் திராவிடர் கழகம்

இந்தக் கருப்புக்கொடிக் கிளர்ச்சியினை நடத்திட வழிவிட்டு ஒதுங்கிக் கொள்வதாக, அண்ணா அறிவித்தார்.

காங்கிரஸ் மேலிடம், தனது கட்சிக்காரரர் எந்தக் காரியத்திற்கு அனுகூலமாயிருப்பாரென ஸ்ரீபிரகாசாவை அனுப்பியதோ, அதை அவர் செவ்வனே செய்து முடித்தார் காங்கிரஸ் இந்த முறை பெற்றிருந்த வாக்குகள் 66, 77, 58( ஆகும். ஆனால் காங்கிரசுக்கு எதிர்ப்பாக சென்னை மாகாணத்தில் அளிக்கப்பட்ட வாக்குகள் 1, 26, 65, 12( ஆகும். எனினும் 156 உறுப்பினர்களை உடைய காங்கிரஸ் சட்டமன்றக் கட்சியைக் கவர்னர் அழைத்து மந்திரிசபை அமைக்கக் கேட்டுக் கொண்டார். 166 உறுப்பினர்கள் காங்கிரசுக்கு எதிர்ப்பாகத் தமது எண்ணிக்கையை கவர்ன ரிடம் காட்டியும், உதாசீனம் செய்யப் பட்டனர். கம்யூ னிஸ்டுகள் தமது வழக்கம்போல் திருகிக் கொண்டனர். இ( நிலையில் சிறுபான்மை வாக்குப் பெற்ற, சிறுபான்மைக் காங்கிரஸ் கட்சி, அரியணை ஏறும் வாய்ப்பளிக்கப் பட்டது தலைவர் யார்? ஆந்திராவில் காங்கிரஸ் படுதோல்வி யடைந்து போனதால், இந்த 156 பேரில் சுமார் 50 பேர்தான் அந்தப் பகுதியைச் சார்ந்தவர் இருந்ததால், அவர்களில் யாரும் முந்தைய வழக்கப்படித் தலைவராக முடியவில்லை இருந்த ஏனைய உறுப்பினர்களில் யாருமே தலைவ( பொறுப்புக்குத் தகுதியானவராகக் காங்கிரஸ்காரர்களுக்குத் தோன்றாததால், அதிலும் குறுக்குவழி தேடினர்.

கொல்லைப்புற வழி என்று பெரியார் அவர்களால் வர்ணி கப்பட்டவாறு, சக்கரவர்த்தி ராசகோபாலாச்சாரியாரை மேல்சபை உறுப்பினராக்கிப், பின் கட்சித் தலைவராக்கிச் சென்னை மாகாண முதல்வராகத் திணித்துவிட்டனர் தமது வாழ்நாளில் எங்கும், எப்போதும், தேர்தலுக்( நின்று, பொது மக்களால், அவர்கள் வாக்குகளை பெற்றுத், தேர்ந்தெடுக்கப் பெற்ற வழக்கமே ராஜாஜிக்கு கிடையாது. எனவேதான் ஆச்சாரியாரின் இந்தக் குறுக்( வழிக்குக் கொல்லைப்புற வழி என்ற கொச்சையான பெயரே நாட்டில் நிலைத்து விட்டது. இந்தியாவின் கவர்ன

ஜெனரல், மேற்கு வங்க கவர்னர், மத்திய சர்க்கார் மந்திரி, சென்னை மாகாண முதன்மந்திரி, தமிழ்நாட்டு முதலமைச்சர் ஆகிய எந்தப் பதவியும் நியமனப் பதவிதான் ஆச்சாரியாருக்கு. அவர் எங்கேயாவது ஓட்டரா என்பதுகூடப் பெரியாருக்குச் சந்தேகம். அரசியல் துறையை ஒழுக்கக் கேடாகவும் நாணயக் கேடாகவும் ஆக்குகின்ற இந்தக் காரியம், "மன்னிக்க முடியாத துரோகம்" என்றார் பெரியார்.

எப்படியோ; ஆச்சாரியார் 1952 ஏப்ரல் 11-ல் முதல் மந்திரியானார். முடத் தென்னைமரம் என்று திராவிட முன்னேற்றக்கழகத்தால் வர்ணிக்கப்பட்ட மாணிக்க வேலர்—தாம் திராவிடநாடு ஒப்பந்தத்தில் காமல்வீல் கட்சிக்காகக் கையெழுத்தும் போட்டிருந்தும்—ஆச்சாரியார் வீசிய பதவி வலையில் சிக்கிவிட்டார். அந்த வலை விரித்த படியேதான் இன்னும் காத்திருக்கிறது என்றார் பெரியார். அதற்கேற்பப் பின்னாளில், உழைப்பாளர் கட்சித் தலைவர் இராமசாமி படையாட்சியார் அந்த வலையில் வீழ்ந்தார். ஆகவே இரு வன்னியகுல க்ஷத்திரியத் தலைவர்களும் திராவிடமுன்னேற்றக்கழகஆதரவுடன் வாக்குப்பெற்றதற்கு முரணாகக் காங்கிரசுடன் இணைந்தனர். இதில் விதி விலக்காக விளங்கிய கொள்கை வீரர், ஏ.கோவிந்தசாமி ஒருவரே!

(இவர் 1953-ல் திராவிட முன்னேற்றக் கழகப் பொறுப்பாளராகச் சிறப்புடன் பணியாற்றினார். தொடர்ந்து சட்டமன்ற உறுப்பினராக வெற்றி கண்டார். அண்ணா அமைச்சரவையிலும், கலைஞர் அமைச்சரவையிலும் வீற்றிருந்து, 1969-ல் மரண மடைந்து விட்டார். எளிமையும், இனிமையும், உறுதியும் படைத்தவர். இவர்க்குப்பின் இவர் துணைவியார் பத்மாவதி அம்மாள் அதே தொகுதியில் தி.மு.க. சட்டமன்ற உறுப்பினரானார்.)

அறுதிப் பெரும்பான்மை இல்லாவிடினும், காங்கிரஸ் ஒரே கட்சியாக அதிக இடங்களைப் பெற்றிருக்கிறதே என்று கவர்னர் கூறிய சமாதானம், நேர்மையானதல்ல என்றார் பெரியார். "இந்தத் தேர்தலால் மூன்று நான்கு கோடி

ரூபாய் செலவாகியிருக்கிறது. அதிகாரிகளுக்கும் சர்க்கார் சிப்பந்திகளுக்கும் எவ்வளவோ தொல்லை. பிரிட்டிஷார் ஆட்சி ஒழிய வேண்டுமென்றும், மக்களாட்சி ஏற்பட வேண்டும் என்றும் பாடுபட்டது, இந்த எதேச்சாதிகார நியமன மந்திரிகளைக் கொண்ட—மக்கள் பிரதிநிதித்துவம் இல்லாத சர்க்காரை, ஆட்சியை அமைக்கத்தானா? இது ஒழிய வேண்டாமா? இப்போது என்முன் உள்ள பிரச்னை இதனைத் தனியே ஒழிப்பதா? கூட்டு முயற்சியாலா? என்பது தான்! காங்கிரஸ் ஆட்சி ஒழியவேண்டும் என்பதில் கம்யூனிஸ்டுகள், பிரகாசம் குழுவினர், மற்றும் (தி.மு.க. ஆதரவு பெற்ற) சில சுயேச்சைகள் அக்கறையுடனிருப்பார்கள் எனினும், கம்யூனிஸ்டுகள் தங்கள் தலைமையின் கட்டளைப் படி நடப்பவர்கள்; பிரகாசம் குழுவினர் நமது கிளர்ச்சிகளை ஆதரிப்பார்களா என்பது புரியவில்லை; மற்றவர்கள் சிறை அடி உதை தண்டனைக்கு நம்மோடு வருவார்களா என்பது தெரியவில்லை—எனவே கழகத் தோழர்கள் எப்படியும் ஒரு கிளர்ச்சிக்குத் தயாராயிருங்கள்!'' என்று பெரியார், 1952 ஏப்ரல் 11, மே 4 ஆகிய நாட்களில் "விடுதலை'' தலையங்கம் வாயிலாகத் தமது எதிர்ப்பு முரசினை ஒலித்து விட்டார்.

சாம்பல் பூத்துக்கிடந்த இந்தித் தீயினை ஊதி விட்டனர் காங்கிரஸ்காரர். 1952–ல் ரயில் நிலையங்கள், அஞ்சல் நிலையங்கள் ஆகியவற்றில் இந்திப்பெயர்கள்தலைமையிடம் பெறுமாறு, பலகைகள் வண்ணம் தீட்டப்பெற்றிருந்தன. மத்திய அரசின் இந்தி திணிக்கும் இந்தப் போக்கினைக் கண்டித்து, அந்த இந்தி எழுத்துகளைத் தார்கொண்டு அழிப்பது என்று பெரியார் முடிவு செய்தார், ஆகஸ்டு 1–ஆம் நாள் இந்தி எதிர்ப்புக்கிளர்ச்சி; இந்தி எழுத்துகளை அழிப்பது; அவர்களாக அழிக்கும் வரையில் ஒவ்வோராண்டும் ஆகஸ்டு 1ஆம் நாள் இந்தி எதிர்ப்புநாள் என்று பெரியார் பிரகடனம் செய்தார். அதையே திராவிட முன்னேற்றக் கழகமும் பின்பற்றியது. 1952 ஆகஸ்டு 1-ஆம் நாள் திருச்சிராப்பள்ளி சந்திப்பில் ரயில் நிலையப் பெயர்ப் பலகைகளில் உள்ள இந்தி எழுத்துகளைத் தார்கொண்டு அழிக்கப் பெரியார்

வந்தார். தி. மு. க. போர்ராட்டக் குழு, திருச்சியில் இதே பணியினை ஆற்றிட மு. கருணாநிதியைத் தேர்ந்தெடுத்தது. தந்தை பெரியார் அதிகாலையில் ஒரு பக்கத்துப் பலகைகளி லிருந்து இந்தி எழுத்துகளை அழித்திருந்தார். தனயனும், தந்தையும் தனித்தனியே ஊர்வலமாகத் திருச்சி நகரில் எதி ரெதிராக வந்தனர். திருச்சிராப்பள்ளி ரயில்நிலையத்திற்குக் கலைஞரும் சென்று மற்றொரு பக்கத்தில் இந்திப்பெயரை அழித்தார்.

> இம்மாதிரியான இந்திப் பெயர்ப்பலகை எழுத்து களைத் திராவிடர் கழகமும், திராவிட முன்னேற்றக் கழகமும் தார்கொண்டு அழித்தபோது, காங்கிரசாரும், தமிழ் அரசுக் கழகத்தாரும் மண்எண்ணெய் கொண்டு துடைக்கும் பணியினைக், கழக எதிர்ப்பாகச் செய்து வந்தனர்.

இந்தப் போராட்டத்தில் ராஜாஜி ஆட்சி, யாரையும் கைது செய்யாமல் விட்டு விட்டது. ஆச்சாரியாருக்கும் அவரது அமைச்சர்களுக்கும் கருப்புக் கொடி பிடிக்க வேண்டும் என்று திராவிடர் கழகத் தொண்டர்கள் பெரி யாரை வேண்டினார்கள். ஆனால், நம்மவர்களே துரோகி களாக மாறி, அவர்களுடன் சேர்ந்துகொண்ட இழிசெயலைப் பார்க்கும்போது, அவர்களுக்குக் கருப்புக்கொடி போதாது என்று கருதுகிறேன். வேறு ஏதாவது செய்யலாம். வீணே காங்கிரஸ்காரரை மட்டும் குறைசொல்லிப் பயனில்லையே?- என்றார் பெரியார். நம்முடைய போராட்டம், இந்திய யூனியன் ஆட்சியையே ஒழித்துக்கட்டி, நமது சென்னைராஜ் யத்தை விடுவித்துத், தனிச் சுதந்திர நாடாக்க வேண்டும் என்பதுதானே? என்றும் பெரியார் 9-7-1952 ''விடுதலை'' தலையங்கத்தில் குறிப்பிட்டு எழுதினார்.

பின்னர், இந்தி எழுத்துகளை அழிக்கும் போராட் டத்தில், கைது செய்யாமல் விட்டதில் ஓரளவு ஏமாற்ற மடைந்த பெரியார், இந்தி ஆதிக்கத்தையும், வடநாட்டார்

ஆதிக்கத்தையும் ஒருங்கே எதிர்க்கும் ஒரே போராட்டமாக, அடுத்து, இந்திய அரசியல் சட்டத்தையே எரிக்க நேரிடும் என்றார். அவருடைய இந்த முதல் முழக்கம், 7–8–1952, 10-8-1952 "விடுதலை" தலையங்கக்கட்டுரைகள் வாயிலாக வெளிப்படுகின்றது. ஆனால், அது எப்போது என்பதைப், பின்னர் அறிவிப்பதாகவும் பெரியார் தெரிவித்தார்.

1952 தேர்தலில் இந்தியக் கம்யூனிஸ்டுகளை ஆதரித்துத் தாம் செய்த பிரச்சாரத்தின்போது, பெரியார் சில உண்மைகளை உணர்ந்து கொண்டார். விவசாயிகளிடத்திலும், தொழிலாளர்களிடத்திலும் அவர்கள் நல்லவண்ணம் பிடிப்பு வைத்திருந்தனர். சந்தா வசூலித்தனர். அவ்வப்போது கூலி உயர்வு முதலிய சில்லறைச் சலுகைகளைப் போராட்டத்தின் மூலமாகப் பெற்றுத் தந்து, அவர்களை நிரந்தரக்கூலியாட்களாகவே வைத்திருக்கத்தான் கம்யூனிஸ்டுகளின் உழைப்பு உதவியது; இதைப்பற்றியெல்லாம் பெரியார் தீவிரமாகச் சிந்தித்தார். தென்னாட்டில், அதுவும் தமிழகத்தில், விவசாயிகள் என்றாலும் தொழிலாளர்கள் என்றாலும் அனைவருமே திராவிடர்கள்தாம். இவர்களில் ஆரியர் யாரும் வயலிலோ, ஆலையிலோ, தொழிற்சாலையிலோ வேலை செய்வதில்லை. அவர்களுக்கு சாஸ்திரப் பாதுகாப்பே அப்படித்தான். ஆகவே, திராவிட மக்களாகிய வேளாண்மையில் ஈடுபடுவோர், தொழிற்சாலைகளில் உழைப்போர் ஆகியோரின் உரிமையினைப் பெற்றுத்தரத் திராவிடர்கழகச் சார்பில், தொழிற்சங்க ரீதியில், தனித்தனி அமைப்புகள் தேவை எனப் பெரியார் கருதினார் இவை, போட்டித் தொழிற் சங்கங்களாகப், பழைய பாணியிலேயே இருக்கக் கூடாது என்றும் நினைத்தார். அதன் விளைவாகத் திராவிட விவசாயத் தொழிலாளர் சங்கம், தென்பகுதி ரயில்வேமென் யூனியன் ஆகிய இரு தொழிற்சங்கங்களைப் பெரியார், 1952-ஆம் ஆண்டில் தொடங்கி வைத்தார். தொழிலாளர்களும் பங்குதாரர்களாக மாறவேண்டும் என்ற கொள்கை பெரியாருடையதல்லவா?

"நமக்கு வேண்டியது தன்மானமும், இனப்பற்றும், இன உணர்ச்சியும்தான். எதை எடுத்தாலும் இனத்தைக் குறிப்பதாக இல்லை. இருந்தால் ஆரிய இனத்தையோ, அதற்குட்பட்ட கிளையையோ குறிப்பதாக இருக்கிறது. இந்திய காங்கிரஸ், இந்திய கம்யூனிஸ்ட், இந்திய சோஷலிஸ்ட், இந்திய இந்து மகாசபை...இப்படியே! இப்போது ஏதோ தொழிலாளி, பாட்டாளி மக்களிடையே சிறிது உணர்ச்சி காணப்படுகிறது. இவர்கள் துணிந்து இந்தியத் தொடர்புள்ள நிறுவனங்களில் இருந்து வெளிவந்து, 'திராவிடர்' நிறுவனங்களில் சேர வேண்டும். இப்படித்தான் இனி, இனப்பற்றையும் நாட்டுப் பற்றையும் வளர்க்க வேண்டும். அதனாலேயே திராவிட விவசாயத் தொழிலாளர் சங்கம், தென்பகுதி (திராவிட) இரயில்வேத் தொழிலாளர் சங்கம் ஏற்படுத்த யோசனை சொன்னேன். "திராவிட" என்ற பெயரைக் கண்டு யாரும் முகம் சுளிக்க வேண்டாம். அப்படி முகம் சுளிக்கும் அந்தத் துரோகிகள் கூட்டுறவால் நமக்கு நன்மை கிடைக்காது"—என்று பெரியார் எழுதி வந்தார்.

திராவிட விவசாயத் தொழிலாளர் சங்கங்களைத் தொடங்கி வைத்தபோது, பெரியார் பேசிவந்ததாவது:- உடலுழைப்பு வேலை செய்கிறவர்கள் எல்லாம் திராவிட மக்கள். பார்ப்பானுக்கும் உடலுழைப்புக்கும் வெகுதூரம். வேறு சில சங்கங்கள் தொழிலாளர்களுக்காக இருந்தாலும், திராவிடர் கழகத்தின் கொள்கைகளை ஒத்துக் கொள்ளாதவர்களே அவர்கள். இன்றையத் தொழிலாளி, அன்றாடக் கஞ்சிக்கு அன்றாடம் வேலை செய்பவனாகவே வைக்கப்பட்டிருக்கிறான். போராடிக் கூலி உயர்வு பெற்றாலும் அவனுக்கு என்ன லாபம்? எங்காவது தேர் திருவிழாவுக்குப் போய் அர்ச்சனை செய்துவிடுகிறான்! தொழிலாளிக்கு இரண்டணா அதிகப்படுத்தித் தரும் முதலாளி, பண்டங்களின் விலையை ஏற்றி விடுகிறான். ஆகவேதான், கூலி உயர்வுக்காகப் போராடுவது கேலிக் கூத்து என்கிறேன். நீ ஏன் இப்படித் தொழிலாளியாகவே இருக்கிறாய்? என்றால்; போன ஜென்மத்தில்

செய்த பாவம், என்கிறான். அவனுக்கு உண்மை நிலைமை யாரும் எடுத்துச் சொல்வதில்லை. முதலாளியோடு வேண்டு மானால் முட்ட விடுவார்களே தவிர, முதலாளித்துவத் துக்குப் பாதுகாப்புத் தருகிற சர்க்காரையோ, பார்ப் பானையோ காட்டித் தரமாட்டார்கள். தேர்தலுக்கு நிற்கிற கட்சிகள் தொழிற் சங்கம் வைத்தால், அவர்கள் ஆளுக்குத்தானே ஓட்டுப் போட வேண்டும்? இருக்கிற 'இந்தியக்' கட்சிகளின் அய்க்கமாண்ட் இங்கே இருப்ப தில்லை. அதனால், நமது சங்கம் ஒன்றுதான் திராவிடத் தேசியச் சங்கமாகும். இதுதான் தொழிலாளத்தன்மையையே ஒழிப்பது ஆகும். மேலும், மேல் நாட்டார் போல விஞ்ஞான முறைகளையும் நாம் கையாண்டு வேளாண்மையைப் பெருக்க வேண்டும். என் காலத்திலேயே பூமியைப் பகிர்ந்தளிக்கும் முறை வந்துவிடும் என்று நம்புகிறேன். நிலத்துச் சொந்தக் காரன்—நிலத்துக் கூலிக்காரன் என்ற சொல்லே அகராதி யில் இல்லாதபடி நாம் செய்வோம்—என்று விளக்கிப் பெரியார் விவசாயத் தொழிலாளர் பிரச்னைகளை அணு கினார்.

தென்பகுதி ரயில்வேமென் யூனியன் என்ற அமைப் பினைத் தொடங்கும் போதும், பெரியார், திராவிட மக்களே தொழிலாளிகள்தாம்: என்றே தமது கருத்துரை யைத் தொடங்கினார்:—தொழிலாளிகள் ஸ்ட்ரைக் செய்வ தால் ஒரு நன்மையும் இல்லை. அவ்வப்போது சிறு சலுகை களைச் செய்து கொடுத்துவிட்டு, உரிமைக்குரலை எழுப்பாத வாறு கவனத்தைத் திருப்பி விடுவார்கள். வேலையில் தகுதி திறமை பார்த்தாலும், சம்பளத்தில் வேறுபாடு இல்லாமல் சரிசமன் செய்கிறார்களா? பொறுப்பும், பொதுத் தன்மையும் கெட்டுப்போய் நிர்வாகமும் தொழிலாளியும் ஒருவரை யொருவர் ஏமாற்றி வருகிறார்கள். சாதாரணமாக, ஒரு ரயிலைக் கவிழ்ப்பதாக வைத்துக்கொண்டால், இதனால் யாருக்கு நட்டம்? பார்ப்பானுக்கா? வடநாட்டு நிர்வாகத் துக்கா? ஆகவே, இந்த நாட்டுக்குத் தகுந்த முறையில் தொழி லாளர் பிரச்சினையை அணுக வேண்டும். இங்குள்ள விசித்

திரமான நிலைமை, இந்தப் பாழாய்ப்போன நாட்டில் தவிர உலகத்தில் வேறெங்கும் கிடையாது. சூத்திர சாதி, பார்ப் பானுக்கே உழைத்துப் போடவும்; அவர்கள் எல்லாவற்றை யும் தங்கள் வயிற்றுக்கே வாய்க்கால் வெட்டிவிட்டு, உயர் வாழ்வு வாழவும் ஆன அமைப்பு முறை இங்கு மட்டுமே உள்ளது. எல்லார்க்கும் எல்லாம் பொது என்று இங்கே பிரித்துக் கொடுத்தாலும்; பார்ப்பான் திதி, திவசம் பேரா லும், கடவுள் பேராலும் ஆண்டு முழுவதும் நம்மிடம் கறந்து கொண்டுதான் இருப்பான். ஆகையால் முதலாளித் தன்மையுடன் சேர்த்துப் பார்ப்பன உயர்வுத் தன்மை, கடவுள் மத சாஸ்திரக் கட்டமைப்பு யாவற்றையும் ஒழித் தால்தான் எல்லார்க்கும் எல்லாம் என்ற நிலை ஏற்பட முடியும்—என்றார் பெரியார்.

பெரியாரிடம், கலப்பு மணத்தால் சாதி ஒழியுமா? என்று கேட்டபோது; வசதி உள்ளவர்கள் கலப்புமணம் செய்து கொண்டால் சமூகம் ஒன்றும் சொல்லாது அவர் களும் தமது பிள்ளைகளுக்குக் கல்யாணம் செய்யும்போது, கலப்பு மணச் சாதியில்தான் பார்க்க வேண்டும்; மற்றவர்கள் முன்வர மாட்டார்கள். சாதி ஒழிப்புக்கு அரசாங்கமும் சட்டம் செய்வதோடு, உதவவும் வேண்டும். மத சாஸ்திரங் களை அப்படியே வைத்துக்கொண்டு, சாதியை ஒழிப்பது இயலாது—என்று கருத்தறிவித்தார் பெரியார்; 1952 பிப்ர வரி 22–ஆம் நாள் "விடுதலை"யில் இக்கருத்தை வெளி யிட்டுள்ளார்.

1952 ஜூன் மாதம் சேலத்தில் நடைபெற்ற சென்னை ராஜ்யத் திராவிடர் கழகப் பொது மாநாட்டில், பெரியார், தாம் தலைமை ஏற்க விரும்பவில்லை; வேறு யாரையாவது கேட்டுக் கொள்ள முயன்றும் நிறைவேறவில்லை; அதாவது, தகுந்தவர்களாக யாரும் ஒத்துக்கொள்ளவில்லை. அதனால் வரவேற்புக் குழுவின் தலைவராகிய பெண்ணாகரம் எம். என். நஞ்சையா, செயலாளராகிய சேலம் கே. ராஜா ராம் பி.ஏ. ஆகியோர் விரும்பியவாறு தாமே தலைமை ஏற்க நேரிட்டதாகவும், அதனாலேயே தாம் புதிய திட்டங்களோ

கிளர்ச்சிகளோ அறிவிக்க இயலவில்லை என்றும் பெரியார் வருந்தினார். தகுதியான நண்பர்கள் கிடைக்காதது குறித்தும், மிகுந்த ஆதங்கம் தெரிவித்தார். திராவிடர் கழகத்தின் முக்கிய கொள்கைகள் மூன்று:- முதலாவது வருணாசிரம மூடநம்பிக்கை ஒழிப்பு; இது கடவுள், மதம், பார்ப்பானுக்கு விரோதம்! இரண்டாவது, திராவிட நாடு பிரிவினை; இது சர்க்காருக்கு விரோதம்! மூன்றாவது வகுப்புவாரி உரிமை; இதையும் நம்மவர்கள், தம்வரையில் அனுபவிக்க முன் வருவார்களே தவிர, இதற்காகப் போராடப் பயப்படுவார்கள்! கழகத்தாரல்லாத வெளியார் கிடைக்காமல் நான் ஏமாற்றமடைந்தேன்!- என்கிறார் பெரியார்.

சேலம் நீதிக்கட்சிப் பிரமுகர் பி. கஸ்தூரிபிள்ளை பெரியாரின் உற்ற நண்பர். கூட்டுறவுத் துறையிலும் மோட்டார் போக்குவரத்திலும் ஈடுபாடு மிக்கவர். கஸ்தூரிபிள்ளையின் இளவல் அப்பாவுபிள்ளை மோட்டார் அதிபர். அதற்கடுத்த இளவல் பொன்னுசாமி பெரியாரின் அன்புத் தோழர். கஸ்தூரிபிள்ளையின் இரண்டாவது மகன் கே. ராஜாராம் சிறுவயது முதல் பெரியாரின் தொண்டராகத் தயாரானவர். பி.ஏ. முடித்ததும் நேரே கழகப் பணிக்குத் தன்னை ஒப்படைத்துக்கொண்டு, பெரியாருடைய அந்தரங்கச் செயலாளராக விளங்கினார். 1962- 1967 இரண்டு பொதுத் தேர்தல்களிலும் தி.மு.க. நாடாளுமன்ற உறுப்பினராகப் போட்டியிட்டு வென்றார். 1971-ல் சட்டமன்றத் தேர்தலில் போட்டியிட்டுக் கலைஞர் அமைச்சரவைச் சகாவாக விளங்கினார். 1977 தேர்தலில் தி.மு.க சார்பில் நாடாளுமன்றத் தேர்தலில் போட்டியிட்டுத் தோற்றார். பின், மக்கள் தி.மு.க, அமைத்தவர்களில் ஒருவரானார். இப்போது, அ.இ. அ.தி. மு.க. அரசின் தமிழகச் சிறப்புப் பிரதிநிதியாக டெல்லியில், அமைச்சர் தகுதியுடன், பணியாற்றி வருகிறார்.

காட்சிக்கு எளியராயும், கடுஞ்சொல் இலராயும், யார்க்கும் உதவும் இயல்பினராயும் உள்ளதால், அனைவர்க்கும் நல்லவர். பெரியாரும் அண்ணாவும் கலைஞரும் இவரிடம் அளவற்ற அன்பு கொண்டிருந்தனர்.

உலக நாடுகள் அனைத்திலும் சுற்றுப் பயணம் மேற் கொண்டுள்ளார் பலமுறை. சுறுசுறுப்பாக இயங்கித் தம் மிடம் தரப்பட்ட பணியினை வெற்றியுடன் முடிப்பது இவர்க்குக் கைவந்த கலையாகும்! ஒரே மகனைத் தந்த இவர் துணைவியாரும், பின் இவரது தந்தையாரும் 1978-ல் மறைந்தது பேரிழப்பாகும்!

1952-ஆம் ஆண்டில் பெரியார் செய்து வைத்துள்ள மற்றொரு மகத்தான செயல், சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம் அமைத்ததாகும். சுயமரியாதை இயக்கம்தோன்றிய நாள்தொட்டு, அதை ஒரு ஸ்தாபனமாக சொசைட்டி ஆக்டின் கீழ்ப் பதிவு செய்திடப், பெரியார் ஆவல் கொண்டு தொடர்ந்து முயன்று வந்தார். இதன் கொள்கை, திட்டம் விதிகள் எல்லாம் நிர்ணயம் செய்யப்பட்டன. கடைசியில் 1940-ஆம் ஆண்டில், 'இதை சொசைட்டி ஆக்ட்டின் படிப் பதிவு செய்ய முடியாது, கம்பெனி ஆக்டின்படி ரிஜஸ்டர் செய்யலாம்;என்று அதிகாரிகள் கூறிவிட்டனர்! கம்பெனி ஆக்டின்படிச் செய்தால் நிர்வாகத்திற்குக் கஷ்டம் ஏற் படுமே என்று பெரியார் சிறிது தயங்கிக் கொண்டிருந்த வேளையில், சேலம் மாநாட்டுத் தீர்மானத்தால் பெரி யாரிடம் கருத்து வேற்றுமை கொண்டிருந்த நண்பர் களான பட்டிவீரன்பட்டி சவுந்தரபாண்டியன், விருது நகர் வி.வி. ராமசாமி, பூவாளூர் பொன்னம்பலனார், கி.ஆ.பெ. விசுவநாதம்,ஜே.எஸ். கண்ணப்பர், சாமி.சிதம்பர னார், எஸ். இராமநாதன், வை. சு. சண்முகம் ஆகியோர் 1945-ல் சுயமரியாதைச் சங்கம் (செல்ஃப் ரெஸ்பெக்ட் லீக்) என்பதாக ஒன்றை ரிஜிஸ்டர் செய்துவிட்டனர்.

பின்னர், 1948-49 ஆண்டு வாக்கில், மீண்டும் ஓர் ஏற் பாடு செய்யத் திட்டமிடும்போது, அதில் தங்கள் பெயர் இருக்காது என்று கருதிய சிலர், ஏதோ சதி செய்வதாகப் பெரியார் யூகித்தார். அதன் விளைவுதான், அவசரத்தில் ஸ்தாபனத்தைப் பதிவு செய்வதைக் காட்டிலும், ஒரு பாது காப்பு ஏற்பாடாகவே மணியம்மையார் திருமணத்தைப் பெரியார் முடிக்க வேண்டியதாயிற்று. ஆகவே 1952-ல் வசதி

யான சூழ்நிலை வந்து விட்டதாகக் கருதியதால் பெரியார் திருச்சியில் 22-9-1952 அன்று பதிவு செய்தார்.

ஸ்தாபனத்தின் பெயர் பெரியார் செல்ஃப் ரெஸ்பெக்ட் பிராப்பகண்டா இன்ஸ்டிடியூஷன் என்பதாகும். புதிய மெமோராண்டத்தின்படி ஆயுள்கால உறுப்பினர்கள்:- ஈ.வெ. ராமசாமி, தி.பொ. வேதாசலம், ஈ. வெ. ரா. மணியம்மையார், ஏ.என். நரசிம்மன் (ஆனைமலை), ஈ. திருநாவுக்கரசு (வேலூர்); தேர்ந்தெடுக்கப்படும் நிர்வாக சபை உறுப்பினர்கள்:- எஸ். குருசாமி, வி. வீராசாமி, தஞ்சை ஆர். சொக்கப்பா மற்றும் அய்ந்துபேர்:-ஆனைமலை ஏ.சி.ராமகிருஷ்ணம்மாள், நாகரசம்பட்டி விசாலாட்சி அம்மாள், நாகரசம்பட்டி என். எஸ். சம்பந்தம், திருச்சி வி. ராமச்சந்திரன், திருச்சி எம்.எஸ். சுந்தரம். ஸ்தாபன சொத்து 3 முதல் 4 லட்சம் ரூபாய் வரை; ஆண்டு வருமானம் 10 ஆயிரம் முதல் 15 ஆயிரம் வரை.

> பெரியாருடைய வாழ்க்கையில் ஈரோடு, திருச்சி சென்னை தவிர, ஏதாவது வேறொரு ஊருக்கு அவர் அதிகமான தடவைகள் போயிருக்கிறார் என்றால், அந்தச் சிற்றூர் தர்மபுரி மாவட்டத்தில் உள்ள நாகரசம்பட்டிதான்! 1967-ல் அண்ணா முதல்வராகி அங்கு விழாவில் கலந்து கொள்ளச் சென்றபோது பெரியார், இதுவரையில் இது என்னுடைய ஊர். இனி இது உங்களுடைய ஊர் என்றே கூறினார். சேனைத் தலைவர் எனப்படும் சிறுபான்மைச் செட்டியார் வகுப்பைச் சார்ந்த மிகப் பெரிய சுற்றமுள்ள ஒரு குடும்பமே அங்கு தன்னைத் தந்தை பெரியாருக்கு அர்ப்பணித்துக் கொண்டுள்ளது அதில் சிறந்த என். வி. சுந்தரம் மூத்த சகோதரர். இவர் தங்கை என். வி. விசாலாட்சி அம்மாள், இயக்கத்தின் சகல நடவடிக்கைகளிலும் பங்குபெற்றவர். சுந்தரம் அவர்களின் மூத்தமகன், 8-10-1926-ல் பிறந்த சம்பந்தம்.
>
> கே. ராஜாராமும் இவரும் ஒன்றாக அ. ஆ. படிக்கத் தொடங்கி, சேலம் கல்லூரி வரை சென்றவர்கள். இயக்கத்தில் வெளியே தெரியக்கூடிய பொறுப்பு என்றால் பெரியார் சுயமரியாதைப் பிரச்சார

ஸ்தாபனத்தின் உறுப்பினர் 1949 முதல் இன்றுவரை. "விடுதலை" மேனேஜர் 1-11-1970 முதல் இன்றுவரை. ஆனால் தன் பெயரை வெளியில் காட்டிக்கொள்ளாமல், பெரியாரின் நிழலாக எப்போதும் உடனிருந்தவர். முக்கியமாகப் பெரியார், மருத்துவ மனைகளில் உடல் நலிவுற்றிருக்கும் போது, இவர் கட்டாயம் அங்கிருப்பார்.

பெரியாரைப் புரிந்து கொண்டவர்கள் இரண்டு வகையினர். பேச்சையும் எழுத்தையும் பார்த்துக் கேட்டுப் படித்துப் புரிந்து கொள்பவர் பலர். ஆனால் அவரது ஒவ்வோர் அங்க அசைவு அல்லது முக்கல் முனகல் போன்றவைகளுக்கும் பார்வைக்கும் பொருள் புரிந்து செயல்படுவோர் மிகமிகச் சிலர்; அந்த சிலரிலும் சிறப்பானவர் இந்தச் சம்பந்தம். அற்புதமான நினைவாற்றல் இவரது தனித்திறன். பெரியார் சம்பந்தப்பட்ட கழகக் காரியங்களில் இவரறியாதது ஏதுமில்லை. இன்றைக்கும் உட்கார்ந்த இடத்திலிருந்தே பல காரியங்களை இயக்கி வருகின்ற சூத்திரதாரி இவரென்பதை நெருங்கிப் பழகிய சிலர் நன்கறிவார்கள். அதனால் வேறுவகையில் பாதிக்கப்பட்ட சிலருக்கு இவரைக் கண்டால் வெறுப்பு!

நான்கு பெண்மக்களுக்குத் தந்தை. விபத்தில் இடுப்பில் ஏற்பட்ட ஊனம், அதிகம் நடமாடமுடியாத நிலை, எனினும் ஊக்கம் குறைவதில்லை. நண்பர்களும் நல்லுரை நாடுவோரும் ஏராளம். சுற்றம் பெரிதும் கற்றறிந்தார் கூட்டமே!

பெரியார் தொண்டராக மட்டுமில்லாமல், மணியம்மையாருடைய காலத்திலும், இளையவரான வீரமணி காலத்திலும் தனது பணிகளை எப்போதும் போல் தொடர்ந்து செய்து வருகின்றார்.

இந்த அமைப்பு ஏற்படுத்தப்பட்ட பிறகு, இனித் திராவிடர் கழகம் இயங்காது, என விஷமிகள் பிரச்சாரம் செய்தனராம். இதற்குப்பெரியார் அரியதோர் உதாரணம் கூறினார்; "துணியில் ஒன்று நீட்ட நூல்; மற்றொன்று குறுக்குநூல்; இரண்டுமிருந்தால்தான் துணியென்று பேர். நீதிக்கட்சியும் சுயமரியாதை இயக்கமும் சேர்ந்து பெற்ற குழந்தைதான்

திராவிடர் கழகம். இறுதி இலட்சியத்தில் சுயமரியாதை இயக்கத்துக்கும், திராவிடர் கழகத்துக்கும் எந்தவிதமான மாறுதலும் கிடையாது. சுயமரியாதைக் கொள்கைகளைக் கொண்டிராத தனித்திராவிட ஆட்சியைச் சுயமரியாதைக் காரர்கள் ஏற்க மாட்டார்கள். வைதிகத்திலும் மூடநம்பிக் கையிலும் மூழ்கிய தனித்திராவிட ஆட்சியைத் திராவிடர் கழகத்தார் விரும்பமாட்டார்கள்.

திராவிடநாடு கிடைத்தபிறகு திராவிடர் கழகம் கலைக் கப்படும் அவசியம் ஏற்பட்டாலும் ஏற்படலாம்; ஆனால் கடைசி மூடநம்பிக்கைக்காரன் இந்த நாட்டில் இருக்கின்ற வரையில் சுயமரியாதை இயக்கத்துக்கு வேலை இருக்கிறது! சுயமரியாதை இயக்கம் அரசியல் நாற்றம் இல்லாதது. சர்க்கார் ஊழியர் உள்ளிட்ட எவரும் இதில் கலந்து கொள்ள லாம். இது திராவிடர் கழகத்துக்கு உற்ற துணையாக இருந்துவரும். இதிலுள்ள உறுப்பினர் யாவரும் திராவிடர் கழகத்திலும் உறுப்பினராயிருக்க வேண்டுமென்ற கட்டாய மில்லை.

சுயமரியாதைக் கொள்கைகளைப் பிடிக்காத சிலர் ஜஸ்டிஸ் கட்சியிலிருந்தார்களே தவிரத், திராவிடர் கழகத் தில் கடந்த 10 ஆண்டுகளாக இருப்பவர்கள், சுயமரியாதைக் கொள்கைகளை அலட்சியப்படுத்தாததால்தான், சுயமரி யாதைக் கொள்கைப் பிரச்சாரத்தைத் திராவிடர் கழக மேடைகளிலேயே செய்து வந்தார்கள்" என்றார்.

பெரியாரின் அரிய இந்த விளக்கத்துக்குப் பிறகு விஷமிகள் வாயடைத்துப் போயிற்று. 1953–ஆம் ஆண்டுத் துவக்கத்தில், பெரியாருக்குச் சிறிது உடல் நலமில்லை. எல்லாம் இரண்டொருநாள்தான். சென்னை பெரம்பூரில், 1953–சனவரி இரண்டாம் நாள், தென்பகுதி ரயில்வே மென் யூனியனைத் தொடங்கிவைத்தார். எஸ். ராகவானந்தம், வி. வீராசாமி, என்.ஜீவரத்தினம் உடன் கலந்துகொண்டனர். ஆந்திரமாகாணம் சென்னையிலிருந்து பிரிந்து போகும் சூழ் நிலை உருவாகிவிட்டது. சென்னை மாநகரம் யாருக்கு

என்ற வினாக்குறி விசுவரூபமெடுத்து நின்ற நேரம். புகழ் வாய்ந்த சென்னை ராயப்பேட்டை லட்சுமிபுரம் யுவர்சங்கம் பெரியாரை அழைத்து, 5-1-53 அன்று, ஆந்திரப்பிரிவினை குறித்து அவர் கருத்தைப் பேசுமாறு வேண்டிற்று. ஆந்திரப் பிரிவினை பற்றித் திராவிடர் கழக மத்தியக்கமிட்டி 11–ஆம் நாள் கூடிக் கலந்து பேசியது. 12–ஆம் நாள் சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ் மன்றத்தில் பேசும்போது, அந்நியர் சுரண்டலையும் ஆதிக்கத்தையும் தவிர்க்கவே தாம் தனிநாடு கேட்பதாகப் பெரியார் விரிவுரை நிகழ்த்தினார். பொங்கல் விழாச்செய்தியாக, மக்கள் எல்லாரும் கைத்தறி ஆடைகளை அணிந்து, நெசவாளர்களை ஆதரிக்கவேண்டும் என்றும், மதச்சின்னங்களான நெற்றிக்குறி இடுதலை அனைவரும் தவிர்க்கவேண்டும்என்றும், பெரியார் அன்பும் கனிவும் பொங்கிடத் தமிழ் மக்களைக் கேட்டுக்கொண்டார்.

பெரியார் சுற்றுப் பயணங்களில், குடி அரசுப் பதிப்பக வெளியீடுகளுடன் திருக்குறள் மலிவுப் பதிப்பும் கிடைக்குமென்ற விளம்பரங்கள் இப்போதெல்லாம் "விடுதலை" நாளேட்டில் வெளிவந்தன. போலீஸ்காரர்கள் சங்கம் அமைத்ததை முதலமைச்சர் ராஜாஜி விரும்பவில்லை. கடுமையான அடக்குமுறை நடவடிக்கைஎடுத்து,அதைக்கலைக்குமாறு செய்துவிட்டார். போலீசாரே அடி உதை வாங்கிய நிலைமையை அன்று நாடு கண்டது. பெரியாருடைய தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் நடைமுறைப் படுத்தப்படலாம் என, மந்திரிசபை அமைத்திருந்த ஓர் ஆராய்ச்சிக்குழு அறிவித்திருந்தது. முந்திய அமைச்சரவையின் இந்த ஏற்பாட்டை ஆச்சாரியார் ஒழித்தார். எஸ். எஸ். எல். சி. தேர்வில் வடிகட்டும் பன்னாடை முறை (செலக்‌ஷன் தேர்வு) முந்திய அமைச்சரவையால் நிறுத்தப்பட்டதை, ஆச்சாரியார் மீண்டும் உயிர்ப்பித்தார். சலவைத்தொழிலாளர் தமது குலத்தொழிலையே செய்து வரவேண்டும் என்றார். மருத்துவப்—பொறியியல் கல்லூரிகளில், பார்ப்பனரல்லாத மாணாக்கர்க்கு ஒதுக்கப்பட்ட இடங்களைப், பார்ப்பன மாணவர்க்கே தைரியமாய் அளித்தார். இலஞ்ச ஊழலில்

சம்பந்தப்பட்ட ஐ. ஏ. எஸ். பார்ப்பன அதிகாரிகள் மீது நட வடிக்கை எடுக்காமல், பதவி உயர்வு தந்தும், பார்ப்பனரல் லாத அதிகாரிகளை அழுத்தி வைத்தும், ஆச்சாரியார் தமது இனப்பற்றைக் காட்டினார். இவற்றையெல்லாம் "விடுதலை" ஏடு வெளிப்படுத்திட வகை செய்தார் பெரியார். அண்ணா மலைப் பல்கலைக் கழகத்துக்கு, சர் சி. பி. ராமசாமி அய்யர் துணைவேந்தராக நியமனம் பெறுவதையும் 16-1-53–ல் பெரி யார் கண்டித்தார்.

சித்தூர், பெங்களூர் ஆகிய இடங்களில் பெரியாருக்கு நல்ல வரவேற்பு; தேநீர் விருந்து; பெரியாரின் கருத்துரை கேட்க மக்கள் திரண்டனர். மணியம்மையார் வயிற்று நோயினால் டாக்டர் ஏ. லட்சுமணசாமி முதலியார் நர்சிங் ஹோமில் அனுமதிக்கப்பட்டு, ஓர் அறுவை சிகிச்சை மூலம் கட்டி ஒன்று அகற்றப்பட 26-1-53முதல் இருவாரங்கள் தங்கி யிருந்தார். பெரியார் தனியே கூட்டங்களுக்குச் சென்றுவர நேர்ந்தது! இந்த நிலையிலும், ஜனவரி 26 துக்கநாள் என் பதை நினைவூட்டப் பெரியார் மறக்கவில்லை. நாடகமும் சினிமாவும் பொதுமக்கள் வாழ்வில் பெருமளவுக்கு ஊடுருவி, ஒழுக்கத்தையும் முன்னேற்றத்தையும் கெடுக்கின்றன என்ற முறையில் பெரியார் 30-1–53 "விடுதலை' யில் கட்டுரை தீட்டினார். அதேபோல் 4-2-53 அன்று "புரட்டு! இமாலயப் புரட்டு! அரசியலை மக்கள் முக்கியகாரியமாகக் கொள்வதில் பயனில்லை. முட்டாள்கள் உள்ளவரை அயோக்கியர்கள் ஆட்சி செய்வார்கள். அதுதான் ஜனநாயகம்! என்ன சொல்லுகிறீர்கள்? ஈ.வெ.ரா"—என்ற ஒரு பெட்டிச் செய்தி யும் வெளியிட்டார். 1-2-53 சென்னையில் நடந்த மாபெரும் பொதுக்கூட்டம் ஒன்றில், சென்னை தமிழ் நாட்டுக்கே சொந்தம் என்று முழக்கமிட்டார் பெரியார். மொழிவாரிப் பிரிவினை என்பது சுத்த சுயநலத்தின் அடிப்படையில் பிறந் ததே! தமிழ் தெலுங்கு மலையாளம் கன்னடம் யாவும் ஒரு மொழியே! என்றார் பெரியார். இந்தக் கூட்டத்தில் டி. கே. சண்முகம், எம்.ஜி.ராமச்சந்திரன் போன்ற நடிகர்களும் பங் கேற்றனர்.

1946-ல் ராஜகுமாரி திரைப்படத்தில் முதன் முதலாகக் கதாநாயக நடிகர் எம். ஜி. ராம்சந்தர், வசனகர்த்தா மு. கருணாநிதி. இருவரும் நண்பர்கள். 1953-ல் எம். ஜி. ஆர். புரட்சி நடிகராகிக் கலைஞரால் தி. மு. கழகத்தில் சேர்க்கப்பட்டார். வீரசாகசம் புரிதல், பண்பாளராக நடித்தல் ஆகிய புதிய உத்திகளால் பெருமளவு மக்களைத் தம் ஆதரவாளராக்கி வைத்துக் கொண்டார். 1967, 71, இருமுறை தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர். 1972–ல் கழகத்தை நீங்கி அண்ணா தி.மு.க. தொடங்கினார். தி.மு.க.வில் வாய்ப்புக் கிட்டாதென எண்ணியோர் அங்கு விரைந்தனர். தாய்க் கழகத்தை அழித்திடும் நண்டு சிப்பி வேய் கதலிபோல் அ.இ.அ.தி. மு.க. தோன்றி 1971-ல் தமிழக ஆட்சியைக் கைப்பற்றிட மாண்புமிகு எம். ஜி. ராமச்சந்திரன் தமிழக முதல்வரானார். பெரியார் எழுத்துச் சீர்திருத்தம், பெரியார் மாவட்டம், ஒலி ஒளி நாடகம், விழா முதலியவற்றை நடைமுறைப்படுத்தியுள்ளார்.

குடந்தைக்கல்லூரியில் பார்ப்பன பிரின்சிபாலின்அட்டூழியங்களையும், வாஞ்சூகமிஷன் சென்னையைப் பொதுத் தலைநகராக்கலாம் என்று பரிந்துரை செய்த அக்கிரமத்தையும், காமராசருக்குக் காங்கிரஸ்மத்தியக்காரியக் கமிட்டியில் இடந்தராத அநீதியையும், முதல் தமிழராக வி. என். சுப்பராயன் சென்னை மாநகராட்சி கமிஷனராக நியமிக்கப் பட்டதையும், இங்கிருந்த 69 அய்.சி.எஸ். அதிகாரிகளில் 44 பார்ப்பனர், 6 கிறிஸ்துவர், 2 வெள்ளையர், 1 வெளிமாகாணத்தார் போகப் பார்ப்பனரல்லாதார் 4 பேர் என்ற கொடுமையையும், 29 ஐ.ஏ.எஸ். அதிகாரிகளில் 19 பார்ப்பனர், 3 மலையாளி, 1 கிறித்தவர், தமிழரும் மற்றோரும் சேர்ந்து 6 பேர்தான் என்ற நிலைமையையும் “விடுதலை” வெளிச்சம் போட்டுக் காட்டியது. 16-2-53-ல் பெரியாரும், எம். பக்தவத்சலமும் தமிழக உரிமைப் பாதுகாப்புக் கூட்டத்தில் ஒன்றாகக் கலந்து கொண்டனர்.

திருச்சியில் 15-2-53 அன்று நடந்த திராவிடர் கழக நிர்வாகக் குழுவில், 22–ந் தேதியன்று வாஞ்சூ அறிக்கைக் கண்டன நாள் கொண்டாடி, முழுக்கடையடைப்பும்,வேலை

நிறுத்தமும் நடத்திட முடிவெடுக்கப்பட்டது. ஜனாதிபதி ராஜேந்திர பிரசாதுக்கு எஸ். குருசாமி தலைமையில் கருப்புக் கொடி பிடிப்பதென்றும், பெரியார் மேற்பார்வையிடுவதென்றும் முடிவு. இம்மாதிரிச் சிக்கல்களுக்குக் காரணமே பிரதமர் நேருதான் என்றும்,விருந்தாளி சர்க்கார் (ஆந்திரா) சென்னையில் தங்கவேண்டாம் என்றும் பெரியார் சாடினார். அன்றைய தினம் (22-2-53) டபிள்யூ. பி. ஏ. சவுந்தர பாண்டியனார் மறைந்து போனார். பெரியாரும் மணியம்மையாரும் கையெழுத்திட்டு, அனுதாபத் தந்தியை அன்னாரின் குடும்பத்துக்கு அனுப்பினர்.

1947-ல் சுதந்திரத் தமிழரசு கேட்கத் தமிழரசுக் கழகம் கண்ட ம.பொ.சி. 1953-ல் வெளியார் சுரண்டலற்ற தமிழகம் அமைந்தால் போதும் என்கிற அளவுக்குத் தமது கொள்கையைச் சுருக்கிக் கொண்ட போதிலும்; அவர் காங்கிரசில் இருந்து கொண்டே, பிரச்னைக்குரிய விஷயங்களைச் சொல்கிறார் என்று கருதி, அவர் சென்னை மாநகராட்சி மன்ற உறுப்பினர் தேர்தலில் நிற்கக், காங்கிரஸ் மேலிடம் அனுமதி மறுத்தது. 3-3-53 அன்று மதுரையில் பேசிய முதலமைச்சர் ராஜாஜி, பெரியார் மிகுந்த நுண்ணறிவு படைத்தவர்; பொதுத் தொண்டும் தன்னலமற்ற தன்மையுமே எங்களிருவரையும் பிணைத்தது என்று பெரியாரைப் பாராட்டினார். கவர்னர் ஸ்ரீபிரகாசா, "திராவிடர் கழகம் இந்தியை எதிர்த்தாலும் அதில் அவர்களுக்கு உள்ள ஈடுபாட்டைப் பாராட்டுகிறேன். தவறான கொள்கைக்கு இடைவிடாத உழைப்பை வீணாக்குகிறார்களே என அனுதாபப்படுகிறேன்" என்றார். சென்னை சட்ட மன்றத்தில், ஏ. கோவிந்தசாமி, திராவிட நாடு திராவிடருக்கே ஆகவேண்டுமெனக் கோரும் உத்தியோகப் பற்றற்ற தனியார் தீர்மானம் கொண்டு வந்தார். சோவியத் தலைவர் ஸ்டாலின், 1953 மார்ச் 6-ஆம் நாள் மறைந்தபோது, "இமயமலை சாய்ந்ததா?" என்று வினவிப் பெரியார் தமது ஆழ்ந்த இரங்கலைப் புலப்படுத்தினார். உலகப் பெரியார்களில் இவர்தான் கடைசிப் பெரியார் என்றும் அறுதியிட்டுக் கூறினார். கும்பகோணத்தை அடுத்த

சாக்கோட்டை தோழர் எஸ். ஆர். சாமி மறைந்ததற்கு மிகவும் மனம் வருந்திக், கொள்கை வீரரான அவர் அநாதவராக விட்டுச் சென்ற குடும்பத்திற்கு உதவி நிதி திரட்ட வேண்டுகோள் விடுத்துத், தாம் 100 ரூபாய் தந்து வழிகாட்டினார். அதேபோலத் தமது நெருங்கிய சகாவும் பகுத்தறிவுப் பேராசானுமாகிய கைவல்யம் 22-4-53–ல் மறைந்தபோது தலையங்கம் எழுதி "விடுதலை" வாயிலாக அங்கலாய்த்தார். கோவையில் 6-5-53–ல், சர் ஆர்.கே. சண்முகம் மறைவினால் மிகுந்த துயருற்று, அனுதாபக் கூட்டத்தில் கலந்து கொண்டார் பெரியார்.

சென்னையில் 23–3–53 அன்று நடைபெற்ற சிறப்பான சாதி ஒழிப்பு மாநாட்டில்,பெரியாருடன்,காமராசர்,டாக்டர் சுப்பராயன், டாக்டர் வரதராசலு நாயுடு முதலியோர் கலந்துகொண்டனர். பெரியார் பெங்களூர், புதுச்சேரி முதலிய இடங்களுக்குச் சுற்றுப் பயணம் சென்று வந்தார். நாடெங்கும் திராவிட விவசாயத் தொழிலாளர் சங்கம், தென்பகுதி ரயில்வேத் தொழிலாளர் சங்கம்—இவை நடத்திய கூட்டம், மாநாடுகளில் பங்கேற்றார். திருச்சி பெரியார் மாளிகையில், பெரியார் ஆசிரியர் பயிற்சிப்பள்ளி துவங்கினார். "விடுதலை"யில், பக்தியைப் பரப்பிடவே இசை பயன் படுத்தப்படுவதைக் கண்டித்தும், திராவிடக் கல்வி ஓடையில் ஆரிய முதலைகளின் அட்டகாசத்தை வெளிப் படுத்தியும் செய்திகள் வெளியிட்டார். டெல்லியில் பெரிய செயலாளர்களாக இருந்த அய். சி. எஸ். பார்ப்பன அதிகாரிகளான எஸ். ஏ. வெங்கட்ராமன், எஸ். ஒய். கிருஷ்ணசாமி ஆகியோர் மீது ஊழல் குற்றம் சுமத்தி, வழக்குத் தொடரப் பட்டிருந்தது. அவர்கள் நீதிமன்றத்தில் தண்டிக்கப்படுகிற வரை "விடுதலை" ஓயவில்லை. நினைவூட்டி வந்தது! 5-5-53 திருச்சியில் பேசிய முதலமைச்சர் ஆச்சாரியார், தனக்கும் பெரியாருக்கும் வெளியாரை நம்பிப் பிழைப்பது பிடிக்காது, என்றார். 25-4-53 லால்குடியில் நடந்த தி.மு.க. மாநாட்டில் நடிகர் சிவாஜிகணேசன் கடைசியாகவும், நடிகர் எம்.ஜி. ராமச்சந்திரன் முதன் முறையாகவும் பங்கேற்றனர்.

ஈரோட்டிலிருந்த சில பழைய கட்டடங்களை விற்று விட்டுப், புதிதாக ஒன்று நகரமன்றமாக (Town Hall) அமைக்க விரும்பிப், பெரியார், சுயமரியாதைப் பிரசார நிறுவனத்தின் செயலாளர் என்ற முறையில் அறிவிப்புத் தந்திருந்தார்.

1952–ல் கொல்லை வழியாக ஆட்சிக்கு வந்த இராச கோபாலாச்சாரியார், தமது வழக்கமான, சூத்திரர் கல்வி வளர்ச்சியில் கைவைக்கும் வேலையை, ஆரம்பித்தார். 6000 கிராமப்புறப் பள்ளிக்கூடங்களை மூடுமாறு ஆணையிட்டார். மீதமிருந்த பள்ளிகளிலும், பாதி நேரம் படிப்பு மீதிநேரம் பிள்ளைகள் அவரவர் அப்பன் தொழிலைச் செய்ய, அதை ஆசிரியர் கண்காணிக்க வேண்டும் என்று உத்தரவிட்டார். தமிழகத்திலுள்ள தமிழர் அனைவரும் கட்சி வேறுபாடு மறந்து, இதனைக் கண்டித்தனர். காமராசரே எதிர்த்தார். காங்கிரசிலிருந்த தமிழர்களும், பார்ப்பனர் அல்லாதார் ஏடுகளும் எதிர்த்தன. குல்லுகபட்டரின் குலக்கல்வித் திட்டத்தை எதிர்த்து நாடே கொதித்துக் குமுறிக் கிளர்ந் தெழுந்தது. ஆச்சாரியார் மூர்க்கத்தனமாக இருந்தார். திராவிட முன்னேற்றக் கழகம் ஈ. வெ. கி. சம்பத் தலைமை யில் குலக்கல்வி எதிர்ப்பு முனையை உருவாக்கிற்று. சட்ட மன்றம் நடந்த 15 நாளும் சென்னையில் அறப்போர் மறியலை நடத்திற்று.

“வருணாசிரம முறையை ஜனநாயகத்தின் பேரால் நிலைநாட்ட முனைகிறார் ஆச்சாரியார். இதோ, கடைசிச் சிகிச்சையாக 27-5-53 அன்று கணபதி உருவப் பொம்மையை மாலை 6-30 மணிக்குத் தூள் தூளாக்கி மண்ணோடு மண்ணாய்க் கலக்கிவிடுங்கள். புத்தர் விழாக் கொண்டாடிப் பிள்ளையாரைச் சரியாக உடையுங்கள். ஆச்சாரியாரே மாறிவிடுவார்”—என்று பெரியார் தம்முடைய போர்ப் பிர கடனத்தை அறிவித்தார். பெரியார் திருச்சியில் பிள்ளை யாரைத் தாமே உடைப்பதாக முடிவெடுத்தார். இதற்குள் பெரியாருக்குக் கொடும்பாவி கொளுத்திடவும், அவர் உருவத்தை உடைக்கவும் சில மாற்றார் முயன்றபோது,

பெரியார் தாமே முன்வந்து, "என் :படமும், அதைக் கொளுத்தப் பணமும் நானே தருகிறேன், வாருங்கள்"—என்று மாற்றாரை மனமுவந்து அழைத்தார். குன்றக்குடி அடிகளார் தமிழில் அர்ச்சனை செய்ய ஆணை பிறப்பிக்க வேண்டுகோள் விடுத்தார்; கணபதி உருவம் கல்தானே? உடைப்பதில் தவறில்லை என்றார். ஆனாலும் கயவர்கள் சும்மாயிருப்பார்களா? காலித்தனங்களில் ஈடுபட்டார்கள். திருச்சியில் பெரியார் மாளிகையைக் கொளுத்த வந்த ஒருவன் கையும் மெய்யுமாய்ப் பிடிபட்டான். இதனால் பெரியார் மாளிகையை இன்ஷ்யூர் செய்யும் ஒரு நன்மை தான் விளைந்தது! சென்னையில் நிரம்ப எண்ணிக்கையுள்ள கழகத் தோழர்கள் தாக்கப்பட்டு இரத்தக்காயமுற்றனர். அதனால் அடுத்து நடைபெற்ற கூட்டங்களில் எல்லாம் "27-ந்தேதி இரத்தத் துளிகள்" என்போர், பார்ப்பானே வெளியேறு! சி. ஆர். ஆட்சி ஒழிக! என முழக்கமிட்டு வந்தனர். திருத்தணியிலும் தமிழர்மீது தடியடி தர்பார் நடைபெற்றது.

மாயூரம் வட்டம் நடுத்திட்டு என்ற சிற்றூரில் ஒரு சைவக்குடும்பத்தில் சீனிவாசபிள்ளை–சொர்ணாம்பாள் தம்பதியரின் இளைய பிள்ளை அரங்கநாதன், பள்ளி யிறுதி வகுப்புத் தேர்ந்து, தருமபுரம் ஆதீனத்தில் கணக்கராகச் சேர்ந்து பண்டார சந்நிதியின் அருள் நோக்கால், தனது திறமை, புலமை, நேர்மைப் பண்புகளின் உயர்வால், கந்தசாமித் தம்பிரான் என்னும் துறவியானார். 1949–ல் தெய்வசிகாமணி அருணாசலதேசிக பரமாசாரிய சுவாமிகள் என்ற பெயரோடு குன்றக்குடி மடத்தின் இளைய பட்டம் சூட்டப்பெற்றார் 1952–ல் மகா சந்நிதானமாக உயர்ந்தார். பெரியாரின் பிள்ளையார் உடைப்புப் போராட்டத்திலுள்ள நியாயத்தை உணர்ந்து, இந்த நூற்றாண்டுக்கேற்ப மதவாதிகளைத் சீர்திருத்த எண்ணி, அருள்நெறித் திருக்கூட்டம் அமைத்தார். பின்னர் தெய்வீகப் பேரவையும் நிறுவினார். சம்பிரதாயத்தை முறியடித்து, இலங்கை, காய்லாந்து, மலேசியா, இந்தோசைனா, இந்தோனேசியா, சோவியத் ருஷ்யா முதலான வெளி

நாடுகட்கு விமானப் பயணம் செய்தார். நேரு, ராஜாஜீ போன்றாரைக் குன்றக்குடி மடத்துக்கு வருகை தரச் செய்தார். பறம்பு மலையில் ஆண்டுதோறும் பாரிவிழா நடத்துவார்.

பெரியார் அண்ணா கலைஞர் மூவரிடத்தும் அளவற்ற அன்பு பூண்டிருந்தவர். கலைஞராட்சியில் மேலவை உறுப்பினராகச் சட்டமன்றத்தில் அமர்த்தப் பெற்றார். தமிழில் அர்ச்சனைத் திட்டத்தின் கர்த்தா இவரே. இந்தியால் தமிழர் வாழ்வு சிதையும் என உணர்ந்தவர்; உணர்த்தியவர்.

பெரியாரும் குன்றக்குடி அடிகளாரிடம் மிகுந்த பிரியமும் மதிப்பும் கொண்டிருந்தார்; மரியாதையுடன் மகா சந்நிதானம் என்றே அழைப்பார். இவரும் அஞ்சாமல் கழகத்தாருடன் பல பொது நிகழ்ச்சிகளில் பங்கேற்றுவருகிறார். எந்த ஆதீனகர்த்தரிடமும் காணப் படாத முற்போக்கும் புதுமையும் துணிவும் தெளிவும் இவரிடம் காணப்படுவதால் குன்றக்குடி அடிகளாரைப் புரட்சித் துறவி என நாடு அழைக்கிறது.

13-6-53 திருச்சியில் திராவிடர் கழக நிர்வாகக் குழு கூடிற்று. அக்கிரகார ஆரம்பக்கல்வி எதிர்ப்புக்காக, ஜூலை 14 முதல் சட்டசபைமுன் மறியல் செய்வது, வி. வீராசாமி எம்.பி. இதற்குத் தலைமை ஏற்பது, 20-ந்தேதி முதல் வெளியூர்களிலும் மறியல் தொடங்குவது—என்று முதல் தீர்மானம். அடுத்து, வழக்கம்போல் ஆகஸ்டு 1-ல் ரயில் நிலைய இந்தி எழுத்து அழிப்பு. தமிழரின் எல்லைப் பாது காப்புக்காகப் போராடிய ம. பொ. சிவஞானத்தை நேரு பண்டிதர் முட்டாள்எனத் தாக்கியதைத் திராவிடர்கழகமும் திராவிடமுன்னேற்றக்கழகமும் தமிழர்களை இழிவுபடுத்திய செயலாக எடுத்துக்கொண்டன. தி.மு.க. இதனாலேயே ஜூலை 14-ல் ரயில் நிறுத்தப் போராட்டம் கலைஞர் மு. கருணாநிதி தலைமையில் தொடங்கிற்று. தி.மு.க. நாளேடு "நம்நாடு" 15-6-53 அன்று துவக்கப்பெற்றது.

30-6-53 காலை 9மணியளவில் 73வயதடைந்த முன்னாள் அமைச்சரும் வகுப்புரிமைக் காவலருமான எஸ்.முத்தையா முதலியார் தஞ்சை மாவட்டத்தில் தனதுகிராமத்தில் மரண

மடைந்த செய்தி பெரியாரைப் பேரதிர்ச்சிக்கு ஆளாக்கிற்று. இழப்பை வெகுவாக உணர்ந்து வருந்தினார் பெரியார்.

14-7-53 அன்று ஆச்சாரியாரின் அடக்குமுறை வெறியாட்டம் தலைவிரித்து ஆடியது. முதல் நாள் திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர்களில் முக்கிய அய்வராகிய அண்ணா, நெடுஞ்செழியன், சம்பத், மதியழகன், நடராசன் ஆகியோர் கைதுசெய்யப்பட்டுச் சென்னை மத்திய சிறையில் அடைக்கப்பட்டனர். 14–ம் நாள் சென்னையில் குருசாமி தலைமையில் 80தோழர்கள் கைது செய்யப்பட்டனர். பலர் அடித்து நொறுக்கப்பட்டனர். 16–ம் நாள் கணக்கின்படித் தமிழகமெங்கும் பெரியாரின் தொண்டர்கள் கைது செய்யப் பட்டவர்கள் 1700 பேர்; மருத்துவமனையில் 50பேர்; அடக்கு முறை துப்பாக்கிக் குண்டு தடியடிக்குப் பலி 10பேர்; கை கால் உறுப்பு இழந்தோர் 10 பேர். 20-7-53 மறியலில் திராவிடர் கழகத் தொண்டர்கள் 2450 பேர் கைதாயினர். ஆங்காங்கு நடைபெற்ற (தூத்துக்குடி, கல்லக்குடி) துப்பாக்கிப் பிரயோகங்களைக் கண்டிக்க 24-7-53 அன்று நாடெங்கும் கடையடைப்பும் வேலை நிறுத்தமும் கடைப்பிடிக்க வேண்டினார் பெரியார். சென்னையில், ஊர்வலமும் பொதுக் கூட்டமும் பெரியார் கலந்துகொள்ள, பிரம்மாண்டமாக நடைபெற்றன. முதல்வர் வீட்டுமுன் மறியல் தொடர்ந்தது. அண்ணா குழுவினர் அய்வரும் ஜாமீனில் 24–ம் நாள் வெளி வந்தனர். அவர்கள்மீது வழக்குத் தொடரப்பட்டது. 500ரு. அபராதம் கட்டமறுத்து அய்வரும் 3 மாதச் சிறைதண்டனை ஏற்றனர் 1-9-1953–ல். கலைஞர் ஆறுமாதக் கடுங்காவல் தண்டனை பெற்றுத் திருச்சி சிறைக்கு ஏகினார்.

ஆகஸ்டு 1–ஆம் நாள் ரயில் நிலைய இந்தி அழிப்புப் போர். தொண்டர்களைப் பெரியார் எச்சரித்தார். சென்ற ஆண்டு போலவே செய்யவேண்டும். அனைவரும் கருஞ் சட்டை அணியவேண்டும். இந்தி ஒழிக தமிழ் வாழ்க என்று மட்டுமே முழக்கமிடவேண்டும். ஜாமீனில் யாரும் வெளி வரக்கூடாது என்றும்—தாம் சேலத்தில் இந்தி அழிப்ப தாகவும்—பெரியார் அறிவித்தார். அத்துடன், தொண்டர்

களைச் சந்திக்கத் தாம் ரயில் மார்க்கமாக 28, 29 நாட்களில் சுற்றுப் பயணம் வருவதாகவும், ஆங்காங்கு தோழர்கள் வந்து ரயில்நிலையத்தில் தம்மைச்சந்திக்க வேண்டுமென்றும் பெரியார் கூறியிருந்தார். ஆகஸ்டு 1 போராட்டம் அமைதியாகவும் வெற்றியுடனும் நடைபெற்றதெனினும், ஜூலை 14, 20 ஆகிய இருநாட்களிலும் திராவிடர்கழகத் தொண்டர்கள் 5,000பேர் கைது செய்யப்பட்டதாவும், 3,000 பேர் விடப்பட்டதாகவும், 1,500 பேர் தண்டிக்கப்பட்டதாகவும், 500 பேர் இன்னும் சிறையில் அடைக்கப்பட்டிருப்பதாகவும் 12-8-53 "விடுதலை" கூறியது. பெரியார் ஈரலில் (லிவரில்) ஏதோ கெடுதல் என்று மருத்துவர்கள் கூற்றின்படி ஓய்வு எடுத்து 5,6 நாள் சிகிச்சை பெற நேர்ந்தது. எனினும், ஆகஸ்டு 15 துக்கநாள் அனுசரிக்கும் வழக்கம் அந்த ஆண்டும் கைவிடப்படவில்லை.

திருச்சி வீரபத்திரசெட்டியார் என்ற பெயர் 1953-ம் ஆண்டு பத்திரிகைகளில் மிகவும் பிரபலம்.பெரியார், பிள்ளையாரை உடைத்ததற்காக அவர்மீது 195, 195A பிரிவுகளின் கீழ், இவர் திருச்சி மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் 13-8-53-ல் வழக்குப் போட்டார். அது செஷன்ஸ் வரை சென்று 13-1-54-ல் தள்ளுபடி செய்யப்பட்டது, அத்துடன் சென்னை உயர்நீதி மன்றத்துக்கும் சென்று 13-10-54-ல் தள்ளுபடி செய்யப்பட்டது. (இம்மூன்று நீதிமன்றங்களிலும் தேதி 13.)

சுயமரியாதைத் திருமணங்கள் சட்டப்படிப் பதிவு செய்து கொள்ளப்படவேண்டும்; இல்லாவிட்டால் செல்லாது என்று 1953 ஆகஸ்ட் 31-ஆம் நாள் சென்னை உயர்நீதிமன்றம் தீர்ப்பளித்து விட்டது. பெரியார் அந்தத் துறையிலும் தொடர்ந்து போராட வேண்டியதாயிற்று. இந்திய வரலாற்றில் 1953 செப்டம்பர் 3-ஆம் நாள் ஒரு சிறப்புமிக்க மறப்பதற்கரிய திருநாள்! என்னி? டெல்லி மாநிலங்கள் அவையில், டாக்டர் அம்பேத்கார், தனது இனத்தாரிடம், உயர்சாதி இந்துக்கள் தொடர்ந்து இப்படியே நடந்துவந்தால், தானே அரசியல் சட்டத்தைக் கொளுத்தப்போவதாக அறிவித்தார்! இதற்கு ஏழெட்டுத் திங்களுக்கு முன்னரே

பெரியார் இவ்வாறு கூறிவிட்டார்! 17-9-53 அன்று பெரியாரின் 75-வது பிறந்த நாளைச் சிறப்புடன் கொண்டாடுமாறு, திராவிடர்கழகத்தின் நிர்வாகத் தலைவர் தி.பொ. வேதாசலம் வேண்டுகோள் விடுத்தார். மாயூரத்தில் 6-9-53 அன்று திராவிட எதிர்ப்பு மாநாடு நடத்திய சிலம்புச்செல்வர் ம.பொ. சிவஞானத்தை, யாரோ தாக்கி விட்டார்களாம்.

சென்னையில் தமிழ்ப்பெரியார் திரு.வி. கல்யாண சுந்தரனார், திருவுருவப் படத்தினை 13-9-53 அன்று பெரியார் திறந்து வைத்துப் பலபடப் புகழ்ந்தார். 17-ந் தேதி ஈரோடு சென்றிருந்தபோது, தமது 70-வது வயதில் அத்தமிழ்ப் பெரியார் மறைவுச் சேதி கேட்டுக், கதறித் துடித்துப் பதறிய பெரியார், உடனே புறப்பட்டு, மணியம்மையார், ஈ.வெ.கி. செல்வனுடன் சென்னை வந்தடைந்தார். 18-ந்தேதி "விடுதலை"யில் தமிழ்ப் பெரியார் மறைந்தார் என்று தலையங்கம் எழுதினார். நடைபெற்ற இறுதி ஊர்வலத்தில் அந்தோணிப்பிள்ளை போன்ற ஏராளமான தொழிற்சங்கத் தலைவர்களுடன் பெரியாரும் இடுகாட்டுக்கு நடந்து சென்றார். மதுரையில் 20-9-53 அன்று நடைபெற்ற பெரியார் பிறந்தநாள் விழாவில் நாவலர் சோமசுந்தர பாரதியார், கி.வீரமணி ஆகியோர் பங்கேற்றனர். பொன்மலையில் மிகச் சிறப்புடன் தென்பகுதி ரயில்வேத் தொழிலாளரின் முதலாம் ஆண்டு மாநாடுகள் 26, 27 தேதிகளில் நடைபெற்றபோது, பெரியார் மிகுந்த பெருமிதத்துடன் கலந்துகொண்டார்.

திருச்சியில் அக்டோபர் 2-ம்நாள் நடந்த தொழிலாளர் கூட்டத்தில் பேசும் போது, பிள்ளையார் உடைப்புக்குப் பிறகு இப்போது கிருஷ்ண விக்கிரகமும் உடைக்கப் போவதாகக் கூறிக் கிருஷ்ணனின் யோக்கியதை என்ன என்றும் பெரியார் விளக்கமுரைத்தார். பிள்ளையாரை உடைத்தபோது, பெரியாருக்கு மறுப்பாக, அப்போது எடுக்கப்பட்ட ஜெமினி அவ்வையார் திரைப்பட விளம்பரத்தில், நிறைய விநாயகர் உருவத்தை அச்சடித்து நாடெங்கும் ஒட்டினர்.

முதல்வரான ஆச்சாரியார் வேண்டுமென்றே இரண்டு முறை அந்தத் திரைப்படத்தைப் பார்க்கச் சென்றார். பெரியார் கிருஷ்ணன் பொம்மையையும் உடைப்பதாகச் சொன்னவுடன் திராவிட இயக்கங்களை "எறும்பும் மூட்டைப் பூச்சியும்போல் நசுக்கி விடுவேன்" என்பதாக ஆச்சாரியார் கூறுரைத்தார். (1967-ல் இவர் நிலை என்ன?) திராவிட ஆடுகள் மோதிக் கொள்ளும்போது சிந்தும் இரத்தத்தை ஆரிய நரியாகிய ஆச்சாரியார் வர்க்கம் நக்கிக் குடிப்பதாக "விடுதலை" கார்ட்டூன் வெளியிட்டது. உருவ வழிபாடு ஒழிப்புக் கழகம் என ஒன்றைத் திருச்சி மையத்தில் அமைத்துப், பேராசிரியர் சி. இலக்குவனார் அதன் பொறுப்பாளராக இருந்து, அதே பிரச்சாரத்தை நடத்தி வருமாறு பெரியார் ஓர் ஏற்பாடு செய்தார்.

சேலம் மாவட்டம் ஆத்தூரில் அக்டோபர் 10, 11 தேதிகளில் நடைபெற்ற சுயமரியாதை, திராவிடர் கழக மாநாடுகள் சரித்திரப் புகழ் பெற்று விட்டன. இங்கு தான் பெரியார், "திராவிடத் தோழர்கள் கத்தி வைத்துக் கொள்ள வேண்டும். தாக்குவதற்காக அல்ல; தற்காப்புக்காக!" என்று புதிய புரட்சித் திட்டத்தை அறிவிப்பாக்கினார். "பார்ப்பானே வெளியேறு; திராவிடனே தயாராயிரு" என்பது சுருக்கமான, சுருக்கென்று தைக்கும், உருக்கமான முழக்கம்! திராவிடர் கழகம், வியாதி வந்தபின் குணப்படுத்தும் வைத்திய இலாக்கா அல்ல. வியாதி தோன்றுவதற்கான மூலகாரணங்களைக் கண்டு பிடித்து, ஒழித்து, வியாதி பரவாமல் முன்கூட்டியே எச்சரிக்கையாகத் தடுக்கும் சுகாதார இலாக்காவாகும் — என்று எல்லாருக்கும் புரியவைத்தார் பெரியார்.

ஓமந்தூர் ராமசாமியார்கூட, ஆச்சாரியாரின் குலக் கல்வித் திட்டம் தீங்கானது எனச் சுட்டிக் காட்டினார். ஆனால் நம்மவராகிய பி.டி. இராசன் "பார்ப்பனர்மேல் துவேஷமோ குரோதமோ எதற்கு?" என்பதாக உபதேசம் செய்தார். அதேபோல், ஆச்சாரியாரின் சீடரான நிதி மந்திரி சி. சுப்பிரமணியம், திராவிடர் கழகப் போக்கு

சரியில்லை என, விஷயங்களைத் திரித்துக் கூறி, விஷமப் பிரசாரம் செய்தார். "விடுதலை" ஏடு இவற்றையெல்லாம் தக்க முறையில் எடுத்துக் காட்டியதோடு, ஆச்சாரியார் டெல்லி அமைச்சராக இருந்தபோது, 1947-ல் சப்ளை கைத் தொழில் இலாக்காவில், 50 லட்சம் ரூபாய்க்கு ஊழல் நடந்திருந்ததையும் அம்பலப் படுத்தியது. கொலை வழக்கில் கம்யூனிஸ்டு பாலதண்டாயுதம் ஆயுள் தண்டனை பெற்றார். ஜில்லா போர்டுகளை ஒழிக்க அரசு திட்டமிட்டது. திருச்சியில் மாணவர் கழக மாநாட்டில் கடலூர் வீரமணியும், பட்டுக்கோட்டை அழகிரி மகன் துலிப்பும் பங்கேற்றனர். பெரியார் 8-11-53 அன்று ஈரோடு சண்முகவேலாயுதம் துவக்கிய ஈரோட்டுப் பாதை என்ற தமிழ் வார ஏட்டைத் தொடங்கி வைத்தார்.

"கண்ணீர்த் துளிகளின் தொடர்ச்சியான பல கிளர்ச்சிகளால், பொதுமக்களுக்கு ஒரு விதமான அலுப்பும், சலிப்பும் ஏற்பட்டுவிட்டது. அவர்களுக்கு உண்மைகளை உணர்த்த வேண்டி ஆச்சாரியார் கல்வி எதிர்ப்புப் படை ஒன்று புறப்படும். 25 உறுப்பினர் கொண்ட இதற்குத் தலைவராக சி. இலக்குவனாரும், செயலாளராக டி. வி. டேவிசும் இருப்பார்கள்" என்று பெரியார் 13-11-53 அன்று அறிவித்தார். அடுத்து, திருச்சியில் நடந்த நிர்வாகக் குழுக் கூட்டத்தில் முடிவெடுத்து, டிசம்பர் 2, 3 தேதிகளில் மதுரையிலிருந்து ஒன்றும், ஈரோட்டிலிருந்து மற்றொன்றுமாக, ஆச்சாரியார் கல்வி எதிர்ப்புப் படைகள் புறப்பட்டுச் சென்னை சென்றடையும் என்றார். திருச்சிக் குழுவுக்கு முதல் நாளே பெரியாருக்குக் கடுங் காய்ச்சல் கண்டது. 21-11-53 முதல் ஒருவாரம் திருச்சியில் .தங்கிப் பார்த்தார். ஆனைமலை நரசிம்மன் உடனிருக்க, 28-ம் நாள் சென்னைப் பொது மருத்துவ மனையில் சேர்ந்தார். அன்பர்கள் நிறைய வந்து, தந்தை பெரியாருக்குத் தொந்தரவு தரவேண்டாமென அறிக்கையும் வெளியிடப்பட்டது. கிட்னி எனும் மூத்திர கோசத்தில் கோளாறு ஏற்பட்டிருந்தது. எப்படியோ, யாராலோ, 30-11-53 அன்று (20 ஆண்டுகட்கு முன்னதாக)

பெரியார் காலமாகி விட்டார், என்ற வதந்தி விரைவாகப் பரவி, மருத்துவ மனைக்கு ஏராளமானோர் படையெடுக்கத் தொடங்கினர். உண்மை தெரிய வந்த பின்னரே, மக்களுக்கு மன ஆறுதல் பிறந்தது. 7–12-53 அன்று மருத்துவமனை யினின்றும் விடுவிக்கப்பட்டு, நேரே ஈரோடு சென்று ஓய் வெடுத்து, 19-ந் தேதிதான் பெரியார் சென்னை திரும்பினார். முன்னரே கழகப் பொதுச் செயலாளர் குருசாமி, பெரியாரை எல்லாக் கூட்டங்களுக்கும் அழைத்துத் தொந்தரவு தர வேண்டாமென்றும்; கூட்டத்தில் தலைவர், இதர பேச்சாளர் யார் என்பதை முன்கூட்டியே தெரியப் படுத்த வேண்டு மென்றும் அறிவித்தார்.

சட்ட சபையில் முதலமைச்சர் ஆச்சாரியாருக்கு எதிராக டாக்டர் வரதராசலுநாயுடு போர்க் கொடி உயர்த்திச், சட்டமன்றக் காங்கிரஸ் உறுப்பினர்களிடம் கையெழுத்து வாங்க ஆரம்பித்தபோது நேருபிரான் தலையிட்டு, டாக்டர் நாயுடுவைக் கண்டித்து, ஆச்சாரியாரைக் காப்பாற்றினார். ஆந்திரம் பிரிந்ததால் இனிச் சட்டமன்ற நடவடிக்கைகள் தமிழிலேயே இருக்க வேண்டுமென்னும் கோரிக்கை எழுந்தது. ஆச்சாரியார் சட்டமன்றத்தில், இதுவரை நடந்த சுயமரியாதைத் திருமணங்களைச் சட்ட சம்மதம் உடையதாக்க முயற்சி எடுத்துள்ளதாகக் கூறி, இனி நடக்கும் சுயமரியாதைத் திருமணங்களைப் பதிவு செய்தால்தான் செல்லும் என்ற சென்னை உயர்நீதி மன்றத் தீர்ப்பை எடுத்துக் காட்டினார்.

1953 டிசம்பர் 20-ஆம் நாள் சென்னையில் நபிகள் நாயகம் பிறந்த தினவிழா. பெரியாரும் முதல் மந்திரி ராச கோபாலாச்சாரியாரும் கலந்து கொள்ளும் அதிசயத்தைக் காண, மக்கள் வெள்ளமாகத் திரண்டனர். மாலை 6 மணிக்குத் துவங்கும் கூட்டத்திற்குப் பெரியார் தமது வழக் கப்படி 5-30 மணிக்கே வந்து விட்டார். முதல்வர் 6-20க்கு வந்தார். பெரியார் எழுந்து பணிவுடன் வணங்க, முதல்வரும் பதிலுக்கு வணங்க, இருவரும் அடுத்தடுத்து இருக்கைகளில் அமர்ந்தனர். அன்பார்ந்த எதிரிகளான நண்பர்களை ஒருங்கே

கண்டு, நாடு வியந்தது! பெரியார் உடல் நலமில்லா திருந்ததை அறிந்திருந்ததால் அடுத்த நாள், 21-12-53 காலை 9-30 மணிக்கு, முதலமைச்சர் ராஜாஜி சட்ட மன்றம் சென்று கொண்டிருந்தவர், திடீரென்று பெரியாரின் இல்லம் போந்து,, நலம் விசாரித்து 45 நிமிட நேரம் தங்கியிருந்தார்! மணியம்மையாரிடமும் நலம் கேட்டறிந்தார்.

"ஒரு பெரியாரை நாம் கொண்டாடுவது ஏதோ பலன் கிடைக்கும் என்பதற்காக அல்ல. அவருக்கு அதனால் நன்மையும் இல்லை. அவருடைய போதனைகளைப் பின்பற்றுமாறும், அவருடைய நடத்தைகளைச் செயல்களை நம்முடைய வாழ்க்கையிலும் பின்பற்றுமாறும் மக்களுக்கு உணர்த்தவேயாகும். எந்த ஒரு கொள்கையும் உலகத்திலுள்ள எல்லாத் தரப்பு மக்களாலும் எல்லாக் காலத்திலும் ஏற்றுக் கொள்ளப்படுமாறு சொல்வது அரிது. ஆனால் நபி அவர்களின் உபதேசங்கள், கோட்பாடுகள், நடப்புகள் இவைகளில் பல எல்லாராலும் ஒப்புக் கொள்ளவும், ஏற்றுக் கொள்ளவும் தகுந்தவை. மறுக்க முடியாதவையாக இருப்பது பெரிதும் பாராட்டத் தக்கதாகும். என்னைப் பொறுத்தவரை நபி அவர்களை ஒரு மகான் என்று கருதுவதில்லை! மனிதத் தன்மை படைத்த சிறந்த மனிதனாகத்தான் கருதுகிறேன். ஒரு கடவுள் உண்டு, பல கடவுள் இல்லை என்று அவர் சொன்னாரே? இது உனக்கு ஏற்புடையதா? என்று கேட்டால் ஆயிரம் கடவுள்களைக் கட்டி அழுகின்ற நம் மக்களுக்கு இது எவ்வளவோ மேல்; முதலில் இதை ஒப்புக் கொள்ளட்டும்; பிறகு பார்த்துக் கொள்ளலாம்! என்பேன். அடுத்து நபி அவர்கள் சொன்னது, மனித சமுதாயத்தில் உயர்வு தாழ்வு பேதமில்லை; அனைவரும் சமமான பிறவியே என்பது. நம்மில் சிலர்கூட 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்றெல்லாம் சொல்லிப் பார்த்தார்கள்; ஆனால் நடப்பில் இல்லை! நபி அவர்களின் உபதேசம் அமுலில் இருக்கிறது. அடுத்து, விக்கிரக ஆராதனையைக் கண்டித்தார்; மேலும், தான் என்ன சொல்லியிருந்தாலும், தமது பகுத்தறிவு கொண்டு மக்கள் சிந்திக்க வேண்டும் என்றும் அவர் கூறி

யுள்ளார். அத்துடன், தான் கடைசி நபி என்றார். நீங்கள் இது பற்றி எப்படி எண்ணினாலும், அவருக்குப் பிறகு யாருமே இவ்வளவு சிறந்த கருத்துகளைக் கூறவில்லை என்பது நான் சொல்ல முடியும்!''—என்று பெரியார் நபிகள் விழாவில் சொற்பொழிவாற்றினார்.

சுற்றுப் பயணப் பொதுக் கூட்டங்களில், பார்ப்பானே வெளியேறு என்ற தத்துவத்தைப் பெரியார் விளக்கினார். ''வெள்ளைக்காரனாவது நம்மைத் தொடச் சம்மதித்த அந்நியன். இங்குள்ள அந்நியனாகிய பார்ப்பான் நம்மைத் தொட்டால் தீட்டு என்கிறானே! வெள்ளைக்கார அந்நியனை வெளியேற்ற என்னென்ன செய்தோமோ அப்படிப் பட்ட காரியங்களை இந்தப் பார்ப்பன அந்நியனை வெளியேற்றுவதற்கும் செய்துதான் தீர வேண்டும்! ஆனால் நாங்கள் முட்டாள்களல்ல; அவர்கள் செய்த காரியங்களைத் திருப்பிச் செய்ய! தண்டவாளத்தைப் பிடுங்கினாலும், தந்திக் கம்பியை அறுத்தாலும், ரயிலைக் கவிழ்த்தாலும், தபாலாபீசைக் கொளுத்தினாலும் நமக்குத்தான் நட்டமே தவிரப் பார்ப்பானுக்கல்லவே! ஆச்சாரியாரே சொல்லி விட்டார், இப்போது நடப்பது தேவாசுரப் போராட்டம் என்று. காந்தியார் இவர்களைஎவ்வளவோ உயரத்தில் தூக்கிநிறுத்தினாரே,அவரையே ஒரு பார்ப்பான் சுட்டுத்தள்ளிவிட்டானே! இந்தப் பார்ப்பனர் இப்போது நாம் படிக்கவே கூடாதென்று சட்டம் கொண்டு வந்து விட்டாரே! ஆகவே இன உணர்வு பெறுங்கள். பார்ப்பான் இன்னொரு பார்ப்பானை எதிர்த்ததாக வரலாறே கிடையாது. ஆனால் நாமோ?

முதலில் இன்று நடைபெறும் புரோகித ஆட்சியை ஒழிக்க வேண்டும். இந்தியப் பிரதமர் நேரு புரோகிதர் பரம்பரை. சென்னை மாகாண முதன் மந்திரி புரோகிதரின் பேரர். இப்போது ஆந்திராவில் முதன் மந்திரியானவரும் புரோகிதரின் மகன். ஆகவே அரசியலிலும் சமுதாயத்திலும் புரோகித ஆட்சி ஒழிய வேண்டும் என்பதற்குப் பொருள் ஒன்றுதான்! இந்தியாவுக்குச் சக்கரவர்த்தியாய் மூப்படை வைத்திருந்தவன் இன்று எங்கே? இந்தியாவில்

562 சிற்றரசர்கள் வாழ்ந்தார்களே, இன்று அவர்களின் கிரீடங்கள் எங்கே? ஜமீன்தார்கள் ஒழிந்தார்கள். பணக்காரன் ஒழிக்கப்படுகிறான். ஆகையால், அன்னக்காவடிப் பார்ப்பான் நமக்கு எம்மாத்திரம்?" என்று பெரியார் வினாவிலேயே விளக்கங்கள் தந்தார். பெரியாரின் போராட்டம் தன்னை நோக்கியே தவிர, வேறு யாரை நோக்கியும் அல்ல என்றார் ஆச்சாரியார். அது நூற்றுக்கு நூறும் மெய்தான் என்றார் பெரியாரும்.

50 ஆண்டுகட்கு முன் பெரியார், வீட்டைத் துறந்து, காசி வரை சென்றாரல்லவா? அதற்குக் காரணமே தந்தையார் வெங்கட்ட நாயக்கர் அவரைக் கோபித்துக் கொண்டதுதான்! தனது மானத்துக்கு இழுக்காக மகன் கைமாற்று வாங்கியதால் கோபம்கொண்டார். இராமசாமி ஏன் கடன் வாங்கினார்? ஈரோடு சிதம்பரனார் பூங்கா அருகில் இப்போதும் 30 ஏக்கர் பூமி மிகவும் மதிப்புள்ள சொத்தாக விளங்குகிறது. இது அப்போது 3000 ரூபாய்க்கு மலிவாக விலைக்கு வந்தது. இதை வாங்கிப் போடலாமா என்று கேட்டதற்குத் தந்தை பண விரயம் எனக் கூறி மறுத்தார். செல்வக் குமார முதலியார் என்பவரிடம் கடன்பெற்று, நிலத்தை வாங்கித் தந்தை பெயருக்கே சாசனம் செய்தார் இராமசாமி. இப்போது அந்தச் சொந்த இடத்திலேயே பிரம்மாண்டமான பந்தல் அமைத்து, ஆச்சாரியார் கல்வித் திட்ட மாநாடு 1954 சனவரி 24-ஆம் நாளும், புத்தர் கொள்கைப் பிரச்சார மாநாடு 23-ஆம் நாளும் நடைபெற ஆவன செய்தார் பெரியார். ஈரோட்டில் மக்கள் வெள்ளமாய்த் திரண்டனர். புத்தர் மாநாட்டு வரவேற்புக் குழுவுக்குத் தலைவர் தி.பொ. வேதாசலம், செயலாளர் சேலம் கே. ராஜாராம். தலைமை ஏற்றிட சிலோனிலிருந்து புத்தர்கொள்கை வித்தகரான டாக்டர் ஜி.டி. மல்லலசேகராவும், மாநாட்டைத் திறந்து வைக்க டாக்டர் அம்பேத்காரின் தளபதியான பி.என். ராஜ்போஜ் எம். பி.யும் வந்தனர். 23-1-54 காலை கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன் வில்லுப் பாட்டும்,

இரவு எம்.ஆர். ராதாவின் நாடகமும். 24-ந்தேதி காலை ராதா தலைமையில் மாபெரும் ஊர்வலம். கல்வித் திட்ட எதிர்ப்பு மாநாட்டின் வரவேற்புக் குழுத் தலைவர் குருசாமி, செயலாளர் டி.வி. டேவிஸ். மாநாட்டுத் தலைமை தாங்கிட டாக்டர் எஸ். ஜி. மணவாள ராமானுஜமும், திறந்து வைத்திடத் தினத்தந்திஉரிமையாளர் சி.பா. ஆதித்த னும் வந்திருந்தனர். பெரியாரின் பேருரை இருநாட் களும்! ஆச்சாரியாரின் குலக்கல்வித் திட்டத்தால், பள்ளிக்கு வந்துகொண்டிருந்த இளம் மாணவர்களில் 50 சதவீதமும், மாணவிகளில் 70 சதவீதமும் படிப்பை நிறுத்தி விட்ட மனம் பதறும் புள்ளி விவரத்தைப் பெரியார் வெளியிட்டார்.

"நமது கொள்கைதான் புத்தரின் கொள்கை என்று டாக்டர் மல்லலசேகராவே சொல்லி விட்டார். உலக புத்த அய்க்கிய சங்கம் போன்ற 53 சங்கங்களின் தலைவர் அவர். நமது இந்திய சர்க்காரும் புத்தருடைய தர்ம சக்கரத்தைக் கொடியிலும், அசோக ஸ்தூபியை சின்னத்தி லும் வைத்துள்ளது. புத்தர் பிறந்த நாள் அரசு விடுமுறை விடுகிறார்கள். ஆனால் இந்து மதத்துக்கு விரோதமாக புத்தர் சொன்னவைகளை ஏற்றுக் கொள்வார்களா? நாம்தான் எடுத்துக் காட்ட வேண்டியுள்ளது. அதாவது இன்றைய தினம் நம்மை அடிமைப்படுத்தி வைத்திருக்கும் கடவுள் மத சாஸ்திர புராண இதிகாச ஒழிப்பே புத்தர் சொன்னவை ஆகும். எனவே நாம் புத்தர் மாநாடு நடத்து கிறோம்"—என்று பெரியார் விளக்கம் உரைத்தார். தொடர்ந்து பற்பல ஊர்களிலும் புத்தர் கொள்கை விளக்கச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். பிப்ரவரி முதல் வாரத்தில் பெரியார் சில நாள் உடல் நலமின்றி ஓய்வில் இருந்தார்.

சென்னையில் ஒரு விழா நடத்திக், கோவை விஞ்ஞானி ஜி. டி. நாயுடு தாம் கண்டு பிடித்த அருமையான அறிவியல் கருவிகளைத் தொழில் ரீதியாகப் பெருமளவில் தயாரிக்க மத்திய அரசு தடையாயிருப்பதால், அவற்றை வரிசையாக வைத்துச், சம்மட்டியால் தூள் தூளாக உடைத்து நொறுக் கினார். கடிகாரம், ரேடியோ போன்ற அரிய பொருள்கள்

வீணாயின. பல அரசியல் கட்சித் தலைவர்கள் இந்த விழா வில் கலந்து கொண்டார்கள். நாயுடு தமது எதிர்ப்பைக் காட்டும் முகத்தான் இப்படிச் செய்ததுதான் சரி என்று அண்ணா உள்படப் பலர் கருத்துரைத்தபோது, பெரியார் மாத்திரம் மாறுபட்டு, நாயுடு செய்தது முட்டாள்தனம் என்று உரைத்தார். இது நடந்தது 30-1-1954 அன்று. ஆனால், அடுத்த திங்கள் சட்டமன்ற மேலவைக்கு நடந்த ஒரு தேர்தலில் (எம்.எல்.சி) ஜி.டி. நாயுடு போட்டியிட்ட போது, அவருக்கே அனைவரும் ஆதரவு நல்கிட வேண்டு மெனப் பெரியார் விரும்பி வேண்டிக் கேட்டுக் கொண்டார்.

மார்ச் மாதத் துவக்கத்திலும் பெரியாருக்கு உடல் நலங் குன்றியதேனும், சுற்றுப் பயணத்தை நிறுத்தாமல் தொடர்ந் தார். ஒத்துக்கொண்ட நிகழ்ச்சிகளுக்குத் தமக்கே உரிய தனித்த சிறப்பியல்பினுக்கேற்பத், தவறாமல், சங்கடத்துக் கிடையிலும் சென்றார். ஆச்சாரியார் கல்வித் திட்ட எதிர்ப்பு இன்னும் மங்காமல் மறையாமல் தீயாய்க் கனன்று கொண்டிருந்தது. ஆரிய ஆதிக்கத்தை ஒழிக்கும் எந்தப் போராட்டத்துக்கும் நான் தயார் என்று, தங்கள் ரத்தத் தால் கையெழுத்திட்டு, நூற்றுக் கணக்கான தோழர்கள் தந்தை பெரியாருக்குக் கடிதங்கள் அனுப்பிய வண்ணமிருந் தனர். மார்ச் 27, 28 தேதிகளில் நாகையில் நடைபெற்ற இயக்க மாநாடுகளில், தீர்மானம் ஒன்று நிறைவேற்றி; ஆச்சாரியார் கல்வித் திட்ட எதிர்ப்புப் படை ஒன்று நீடா மங்கலம் அ. ஆறுமுகம் அவர்கள் தலைமையில் தஞ்சை மாவட்டத்திலிருந்து மறுநாளே புறப்படுவதென்றும், வழி நெடுகப் பிரச்சாரம் செய்து கொண்டே சென்னை சென்றடைவதென்றும் திட்டமிடப்பட்டது.

மார்ச் மாதம் 30-ஆம் நாள் சக்கரவர்த்தி ராசகோபா லாச்சாரியார் சென்னை மாகாண அரசியலிலிருந்து வீழ்த்தப் பட்டார். அன்றோடு அவர் வகித்த அரசுப் பதவி ஆட்டங் கண்டது. புதிய சட்டமன்றக் கட்சித் தலைவரைத் தேர்ந் தெடுக்க நடந்த கூட்டத்தில், காமராசருக்கு 93 வாக்குகள். உடல் நலமில்லை என்ற போலிக்காரணங்காட்டி, எதிர்ப்

பினைத் தாங்க இயலாமல் ஒதுங்கிய ஆச்சாரியாரின் சீடரான சி. சுப்பிரமணியம் பெற்ற வாக்குகள் 41. "பார்ப்பனர் தோற்றனர். திராவிடர் வென்றனர். திராவிடர் பெற்ற வெற்றி நிலையாக இருக்க ஆவன செய்யவேண்டும்" என்றார் பெரியார். காமராசர் பெரியாரின் ஆதரவு கோரினார். கல்விச் சாலைகளிலும், அரசு அலுவல்களிலும் வகுப்பு வாரி உரிமையை அமுலாக்கம் செய்வதாக விருப்பம் தெரிவித்தார். எனவே, இனி ஆச்சாரியாரோ, அவர் தொண்டரடிப் பொடிகளோ முதலமைச்சராகாதவாறும் பார்த்துக் கொள்வதாகவும் காமராசர் கூறினார். இந்தச் சூழ்நிலையில் காமராசரை விட்டால் நல்ல தமிழர் ஒருவர் முதல்வராக வருவது சாத்திய மில்லாது போய் விடுமே என்று பெரியார் கவலைப் பட்டார். அதன் விளைவு 1954 ஏப்ரல் 13-ஆம் நாள் திருச்சி மாவட்டம் பெரம்பலூரில் வே. ஆனைமுத்து தலைமையில் நடைபெற்ற குலக் கல்வித் திட்ட எதிர்ப்பு மாநாட்டில், முதன் முதலாகப் பெரியார், காமராசருக்குத் தம் ஆதரவை வெளிப்படையாகப் பிரகடனம் செய்தார். முப்பதாண்டுகளாகத் தாம் மேற்கொண்டிருந்த காங்கிரஸ் எதிர்ப்புப் பிரச்சாரத்தில் ஒரு சிறிய மாறுதலைச் செய்து கொண்டார். காங்கிரஸ் ஆதரவு என்பதாக அது இல்லாமல், காமராசருக்கு ஆதரவு என்பதாகவே துவங்கியது. அதுகூடத் தமது வகுப்புரிமைக் கோரிக்கைக்குக் காமராசர் இணக்கம் தெரிவித்த அடிப்படையில்தான்!

தஞ்சை மாவட்டத்தில் நீதிக்கட்சியின் உறுதியான தலைவரும், பெரியாரிடம், பேரன்பு பூண்டவரும், இரா. சொக்கப்பாவின் (அத்தையன்பர்) மாமனுமாகிய நெடும்பலம் என். ஆர். சாமியப்பா மறைவு பெரியாருக்கு ஒரு பேரிழப்பாகும். (இரா. சொக்கப்பா பேங்க் ஆஃப் தஞ்சாவூர் செயலாளர், பெரியார் சுயமரியாதைப் பிரச்சார ஸ்தாபன டிரஸ்டில் உறுப்பினராயிருந்தார். நெருக்கடி நிலையின் போது ராஜிநாமாச் செய்து விட்டார்.)

திருச்சி வே. ஆனைமுத்து பி.ஏ., கொள்கைப் பற்றும், நல்ல விஷய ஞானமும் உள்ள தொண்டர்.

பெரியார் இவர்மீது நம்பிக்கை கொண்டிருந்தார். இயக்கத்திற்கு இவர் ஆற்றிய மற்ற பணிகளைவிடச் சிறந்தது பெரியார் சிந்தனைகள் என்ற நூல்தொகுப்பே ஆகும். திருச்சி சிந்தனையாளர் கழகம் அமைத்து, அதன் சார்பில் இதனை வெளியிட்டார். இவருக்கு உறு துணையாயிருந்தவர் நோபிள் பிரஸ் உரிமையாளரும், "பஞ்சாயத்துச் செய்தி" ஆசிரியருமான கோவிந்த ராஜலு. இருவரும் பாராட்டிற்குரியோரே.

குடந்தை ஏ.எம். ஜோசப் திராவிட விவசாயத் தொழிலாளர் சங்கம் தொடங்கப்பட்ட காலமுதல் அரும்பணியாற்றி வருபவர். தஞ்சை மாவட்டத்தில் கம்யூனிஸ்டுகளின் முழு ஆதிக்கத்திலிருந்து விவசாயத் தொழிலாளர்களை மீட்டு, திராவிட இயக்கத்தின் ஆதர வில் கொண்டு வர முயன்று வெற்றியும் பெற்றார். சிறந்த பேச்சாளர். தொய்வு இல்லாத இயக்கப் பணி யாளர்.

திருவாரூர் கே. தங்கராசு எழுதிய ரத்தக் கண்ணீர் என்ற நாடகத்தை எம்.ஆர். ராதா நடத்திப் புகழ் சேர்த்தார். திராவிட முன்னேற்றக் கழகம் பிரிந்த நேரத்தில் திராவிடர் கழக மேடையேறிய தங்கராசு மிகச் சிறந்த பேச்சாளராக விளங்கினார். பெரியார் காலத்தில் அவரது அன்புக்குப் பாத்திரமாய் இருந்து வந்தார். மறைந்த பிறகு, தனிக் கட்சி தொடங்கும் ஆவலினால் கூடம் மாறினார். இன்று அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் அர வணைப்போடும் "தங்கராசு திராவிடர் கழகம்" இயங்கி வருகின்றது. தங்கதுரை என்ற ஒரு திரைப் படமும் இவர் எழுதியதே.

ஏப்ரல் 10, 11 தேதிகளில் மதுரை மாவட்ட மாநாடு களிலும், அடுத்த நாள் நடந்த பொதுக் கூட்டங்களிலும், பெரியார் காமராசருக்கு வேண்டுகோளாக, டெல்லிக்குக் காவடி எடுக்கும் பழக்கத்தைக் கைவிட வேண்டும் என்றும், பார்ப்பனரைத் தனிமைப் படுத்தி ஒதுக்கிட வேண்டும் என்றும், தெரிவித்து வந்தார். காமராசர் பதவி ஏற்றவுடன் பெரியாரை வந்து சந்தித்து வணங்கி மாலை சூட்டினார்! முதல் நற்செயலாக, ஆச்சாரியாரின் குலக் கல்வித்

திட்டத்தை ஒழித்தார்! சட்டமன்றத்தில் ஆச்சாரியாரின் கல்வி அமைச்சராக இருந்து, இதைப் புகுத்திய சி. சுப்ர மணியமே தொடர்ந்து, கல்வி அமைச்சராக இருந்து, இதை ஒழித்திட வகை செய்து, தமிழ் மக்களின் ஒருமித்த பாராட்டைப் பெருமிதத்துடன் பெற்றார் காமராசர்! சிறப் புடன் சென்னையில் வரவேற்கப்பட்ட தந்தை பெரியார் "சனியன் ஒழிந்தது" என்று மகிழ்ச்சியில் திளைத்தார். 16-4-54 அன்று இதை ஒட்டி, விருந்தொன்றும் நடந்தது. சென்னையில் சர்தார் கே. எம். பணிக்கர் பெரியாரைச் சந்தித்து, ஒருமணியளவு, உரையாடி மகிழ்ந்தார்.

ஆச்சாரியார் குலக் கல்வித் திட்ட எதிர்ப்புப் படை தஞ்சையிலிருந்து சென்னை வந்து சேர்ந்த போது, திருவல்லிக்கேணி கடற்கரையில், 14-4-54 அன்று, பிரம் மாண்டமான மகிழ்ச்சி வரவேற்பு அவர்களுக்குக்கிடைத்தது. சென்னையில் மேடையில் அவர்களை நிறுத்தி, அறிமுகப் படுத்திய பெரியார், இவர்கள் வந்து, இங்கு போராடிச் சிறை செல்ல எண்ணினார்கள்! பாவம், ஏமாந்தார்கள்! காமராசர் இவர்களை ஏமாற்றி, ஆச்சாரியார் திட்டத்தை ஒழித்து விட்டார்—என்றார். நான் ஆச்சாரியார் முதல்வராக இருந்தபோதுகூட, லஞ்சத்துக்கு வழிவிட மாட்டாரென்று பாராட்டினேன். வந்ததும், பொது ஒழுக்கம் மிகுந்து,லஞ்சப் பழக்கம் ஒழியக் கண்ட்ரோலை எடுத்தார்; நமது சேலம் தீர் மானப்படிக் கைத்தறியாளர் பிரச்சினையைக் கவனித்தார்; நம் விருப்பப்படித் தஞ்சைப் பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம் கொண்டு வந்தார்!

இதைப் பார்த்த ஜீவானந்தமும் ராமமூர்த்தியும், ஆள்வது ராஜாஜியா ராமசாமிப் பெரியாரா என்றனர். சட்டசபைக்கோ, பதவிக்கோ செல்லாத நாம், யார் நல்லது செய்தாலும் பாராட்டுவதுபோல் இதையெல்லாம் பாராட் டினோம்! கல்வித்திட்ட எதிர்ப்பின் வலிமை புரியாமல், எடுத்துச் சொன்னவர்களெல்லாருமே இராமசாமி நாயக்க ரின் ஆள் என்று கருதி, ஆணவமாக இருந்ததால், ஆச்சாரி யார், இன்று நானே வருந்தும்படியாக வெளியேறி விட்டார்.

தமிழர் முதல் மந்திரியாக வந்திருப்பதால் மட்டுமல்ல; கல்வித் திட்டத்தை உடனே எடுத்ததால்தான் காமராசர் மந்திரி சபையை நான் பாராட்டுகிறேன் — என்பதாகப் பேசினார் பெரியார். அதே போல, 22, 23 தேதிகளில் சிதம் பரத்தில் நடைபெற்ற திராவிடர் கழக, திராவிட விவசாயத் தொழிலாளர் சங்க மாநாடுகளிலும், புதிய மந்திரி சபையை வரவேற்றார். நீண்ட நாட்களுக்குப்பின், பார்ப்பனரல்லாத—ஆந்திரரல்லாத—தெலுங்கரல்லாத—ஒரு தமிழர் முதன் மந்திரியாக வந்து, அதுவரை (பின்னர் ஆர். வெங்கட்ராமன் சேர்த்துக் கொள்ளப்பட்டார்.) ஒரு பார்ப்பன மந்திரிகூட இல்லாமல் அமைச்சரவை அமைந்துள்ளதைச் சுட்டிக் காட்டினார் பெரியார். இந்த மாநாடுகளில் எஸ். குருசாமி, வி. வீராசாமி எம். பி., என். ஜீவரத்தினம் ஆகியோரும் பங்கேற்றனர். கி.வீரமணி புத்தகக் கண்காட்சியைத் திறந்து வைத்தார். திருச்சியில் பிரச்சாரப் பயிற்சிப் பள்ளியை ஆனைமலை நரசிம்மனும், சேலம் ராசாராமும் 10 நாள் வரையில் நடத்தி வந்தனர். திராவிடர் கழக மத்திய நிர்வாகக் குழு 30-5-54 அன்று திருச்சியில் கூடிப், பல முக்கிய தீர்மானங்களை இயற்றியது. அதில் 16-ஆவது தீர்மானம், ஒருவர் அதிகபட்சமாக 10 ஏக்கர் நிலந்தான் வைத்திருக்கலாம் என்று காமராசர் ஆட்சிக்குப் பரிந்துரை செய்ததாகும்.

தபால் கார்டுகள் எழுதும்போது "நான் பார்ப்பனத் துவேஷி" என்று முதலில் குறிப்பிட்டுவிட்டுப் பிறகு எழுதத் துவங்குங்கள், என்று, 1-6-54 அன்று பெரியார் சிதம்பரத் தில் பேசும்போது, தோழர்களைக் கேட்டுக் கொண்டார்.

சர். சி.பி. ராமசாமி அய்யர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் பதவிவிட்டு விலகுவது கேள்வி யுற்றுப், பெரியார் மகிழ்ந்தார். கோயில் அர்ச்சனைகள் வடமொழியில் இல்லாமல் தமிழிலேயே நடைபெற வேண்டு மென்று குன்றக்குடி அடிகளார் கோரி வந்ததை; வட

மொழி விரட்டல் பாராட்டுக்குரியது என "விடுதலை" ஏடு 28-6-54-ல் தலையங்கம் தீட்டியது.

1–7–54 அன்று வழக்கம் போலவே திராவிட நாடு பிரிவினை நாள் கொண்டாடுமாறு பெரியாரின் வேண்டுகோள் வெளிவந்தது. அடுத்து 1-8-54 அன்று முந்தைய இரண்டு ஆண்டுகளிலும் செய்ததுபோல் ரயில் நிலையப் பெயர்ப் பலகைகளில் உள்ள இந்தி எழுத்துகளை அழிக்க வேண்டும். ஆனால், குடியாத்தம் தொகுதி சட்டமன்ற இடைத் தேர்தலில் காமராசர் போட்டியிட்டுத், தாம் முதல்வரானதை உறுதி செய்து கொள்ள வேண்டிய அவசியம் நேர்ந்தது. இந்த இடைத் தேர்தலில் காமராசரை வெற்றி பெறச் செய்ய வேண்டும் என்று பெரியார் விரும்பினார். அதனால், தாம் நடத்தும் ஆகஸ்டு 1-ந் தேதி போராட்டம் அவருக்கு ஏதாவது பாதகமான சூழ்நிலையைத் தோற்றுவித்து விடுமோ என அஞ்சி, அதை 8-ந் தேதிக்கு ஒத்தி வைத்தார் பெரியார். இதற்காக 4, 5 தேதிகளில் ரயில் மார்க்கமாகப் பல ஊர்களுக்கும் சுற்றுப் பயணம் சென்று, தோழர்களை ஆங்காங்கு சந்தித்து, ஊக்கமளித்தார். "தோழனே! தமிழ் நாட்டில் 500க்கு மேல் ரயில் நிலையங்கள் உள்ளன. நீ எந்த ஊரில் இந்தியை அழிக்கப் போகிறாய்? இந்தி படிக்காதவனுக்கு உத்தியோகமில்லை; நாடாளுமன்றமில்லை; நாட்டிலும் இடமில்லை என்கிறான். நாம் ஏற்கனவே இரண்டாண்டுகளாக இந்தி எழுத்துகளை அழிக்கிறோம். "அழித்தால் என்ன? நடவடிக்கை எடுத்தால் அதிகம் செலவாகும். ஆனால் 2,200 ரூபாய் செலவில் நாங்கள் உடனே எழுதி விடுகிறோம்!" என்கிறார் நமது துணை ரயில்வே மந்திரி அளகேசன்! எனவே இந்தத் தடவையும் நாம் அழித்ததை அவர்கள் எழுதினால், இனி வேறு முறைகளைக் கையாள்வோம் என எச்சரிக்கை தருவோம்" என்று பெரியார் பேசி வந்தார்.

"ஆந்திர மாகாணம் தனியே பிரிந்து சென்று விட்டது. கேரள மாநிலம் அமையவில்லை. மலையாளம், தென் கன்னடம் ஆகிய இரு ஜில்லாக்கள்தான் எஞ்சியிருக்கின்றன.

அவையும் நீங்கினால் தனித் தமிழ்நாடுதான். அப்படி யிருக்க, இன்னும் ஆந்திரர் மலையாளிகள் தொல்லையும், பார்ப்பனர் தொல்லையும் தமிழ் நாட்டில் நீடிப்பதா? மொத்த மக்கள் தொகையில் தமிழ் நாட்டில் பார்ப்பனர் 2¾ சதவீதம், கிறிஸ்தவர் 100க்கு 4 பேர், முஸ்லீம்கள் 100க்குச் சுமார் 5 பேர், மலையாளிகள் 100க்குச் சுமார் 8 பேர், கன்னடத்தார் 100க்குச் சுமார் 5 பேர்; ஆகவே நூற்றுக்கு 25 பேராக உள்ள இந்தத் தமிழரல்லாத கூட்டத் தார், தமிழ் நாட்டில் சாதாரண உத்தியோகங்களில் 100க்கு 60 பேராகவும், உயர்ந்த உத்தியோகங்களில் 100க்கு 75 பேராகவும் ஆதிக்கம் செலுத்தி வருகிறார்கள். இதில் குறிப்பாக, மலையாளிகள் தொல்லையே பெருந்தொல்லை! வகுப்புவாரி உரிமையில் இவர்களும் பார்ப்பனரல்லாதார் என்ற பாதுகாப்பில் நுழைந்து விடுகிறார்கள்! ஆனால் இவர்கள் ஆரியக் கலாச்சாரம், ஆரிய மொழி, நடையுடை பாவனை, ஆரிய வர்ணாசிரம ஏற்பாடு இவற்றையே முழுமையும் கையாளக் கூடியவர்கள். அதனால், பார்ப் பனர்களும் தாங்களில்லாத இடங்களுக்கு இவர்களிருப் பதையே ஆதரிக்கிறார்கள். சென்னை அரசாங்கத்தின் முக்கிய பதவிகளை எடுத்துக் கொள்ளுங்கள்:— தலைமைச் செயலாளர், தலைமை எஞ்சினியர், தலைமை மருத்து வர்கள், பிரின்சிபால்கள், போலிஸ் டிப்டி கமிஷனர்கள், மாவட்டப் போலீஸ் அதிகாரிகள் இப்படி முக்கிய பதவி களில் மலையாளிகளே வீற்றிருக்கிறார்கள். இவை ஆச்சாரி யாரின் காலத்தில் ஏற்பட்டிருக்கின்றன. இப்படியே நீடித் தால் தமிழன் வாழ்வது எப்போது?

சமீப காலத்தில் திருவாங்கூர்—கொச்சி சமஸ்தானப் பகுதிகளில் தமிழர்கள் கொடுமையாக நடத்தப்பட்டிருக் கிறார்கள். இதையெல்லாம் தமிழர்கள் நல்ல வண்ணம் யோசித்துக், கட்டுப்பாடான கிளர்ச்சி செய்வதன் மூலம் பரிகாரம் பெற வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். இதுவே எனது 76–ஆவது பிறந்த நாள் செய்தி'' என்று பெரியார், 17–9–54 "விடுதலை'' ஏட்டில் அறிக்கை வெளி

யிட்டுத் தமிழ் மக்களின் உறங்கும் இன உணர்வினைத் தட்டி எழுப்பிவிட்டார்!

தமது பிறந்த நாள் விழாக் கூட்டங்களிலும் ஏனைய பொதுக் கூட்டங்களிலும் பெரியார் இராமாயண, ஆபாசப் புரட்டுகளை விளக்கினார். குறிப்பாகச் சென்னையில் நாள் தவறாமல் ஒவ்வொரு வட்டத்திலும் இராமாயண விளக்கச் சொற்பொழிவுகள் நடந்து வந்தன. வால்மீகி இராமாயணத்தை ஓரெழுத்து விடாமல் படித்து, ஆய்வு செய்து, பாத்திரங்களின் தன்மைகளை முற்றிலும் உற்றுணர்ந்து, தெளிவாகப்புரிந்து வைத்திருந்த பெரியார், அந்த இதிகாசம் விளைத்த நாசத்தை எடுத்து அணுஅணுவாய்ப் பிளந்து காட்டிய வேகத்தை, "இந்து" பத்திரிகையே வயிற்றெரிச்சலோடு கூக்குரலிட்டு எழுத நேரிட்டது. பதவி நீங்கிய ஆச்சாரியாரும், பெரியாரின் எதிர்ப்பு அணியில் நின்று, பக்திப் பிரச்சாரங்களைச் சபாக்களில் நடத்திடத் துவங்கினார்.

ஆயிரம் விளக்குப் பகுதியில் போலீஸ் அதிகாரியின் வீடு இருந்ததால், அங்கு பெரியாரின் இராமாயணப் பிரச்சாரக் கூட்டத்துக்கு ஒலி பெருக்கி அனுமதி தரவில்லை! 14-11-54 அன்று, விடாமல் கூட்டத்தை ஏற்பாடு செய்யச் சொல்லிப், பெரியார், தமது தொண்டையும் வயிறும் வலிக்க வலிக்க, உரத்த குரலில், அந்த மாபெரும் பொதுக் கூட்டத்தில் இரண்டு மணி நேரத்துக்கு மேலாகப் பேசி விட்டுத்தான் வீடு திரும்பினார்.

புதுவை ராஜ்யத்தைவிட்டு 2–11–54 அன்று பிரெஞ்சுக் காரர்கள் வெளியேறினர். ராஜ்ய மக்கள் விடுதலை விழாக் கொண்டாடி மகிழ்ந்தனர்.

பெரியார் அன்பாக வளர்த்து வந்த சீட்டா 27–10–54 அன்று மறைந்து போனது. தமது பாசத்திற்கும் வாஞ்சைக்கும் வடிகாலாக விளங்கிய சீட்டாவின் மறைவு பெரியாரையும் சிறிது உலுக்கியது. பர்மா நாட்டின் தலைநகரான இரங்கூனில் நடைபெறும் மூன்றாவது பவுத்த மாநாட்டுக்கு

வருகை தருமாறு பெரியாருக்கு அழைப்பு வந்திருந்தது. மன ஆறுதலுக்காக, உடனே ஒத்துக்கொண்டார்.

பெரியாரின் வான்மீகி ராமாயணப் பிரச்சாரத்துக்கு எதிரொலி போல நடிகவேள் எம். ஆர். ராதா ஊரூராக ராமாயண நாடகத்தை நடத்தி வந்தார். அதில் வால்மீகியின் சித்தரிப்புப்படியே இராமன் குடிகாரன். ராதா இராமனாக வேடம் புனைந்து கையில் கள் மொந்தையுடன் மேடையில் வருவார். ஆத்திக மனம் புண்படாதோ! மதுரையில் 2–12–54 அன்று எதிரிகளின் கைக்கூலிகள் நாடகக் கொட்டகையில் புகுந்து பயங்கரமான கலகம் விளைத்தனர். அவர்களைக் கையோடுபிடித்து வழக்குகூடப் போடப்பட்டது. பின்னர் அவர்கள் விடுவிக்கப்பட்டனர். திருச்சியில் ராதா நாடகத்துக்குத் தடை விதிக்கப்பட்டது. அதை மீறி அவர் நாடகம் நடத்தப் போவதாக அறிவித்தார். 18–12–1954-ல் திருச்சியில் ராதா கைதானார். அதே போல மீண்டும் கும்பகோணத்திலும் கைதானார். நாடகங்கள் திராவிட இயக்கத்தாரின் ஆதிக்கத்தில் இருப்பதாகக் கணக்கிட்ட காங்கிரஸ் ஆட்சி, ஆரிய சூழ்ச்சிக்குப் பலியாகி, நாடகங்களைக் கட்டுப்படுத்தும் மசோதா ஒன்றினைச் சட்ட மன்றத்தில் கொண்டு வந்தது. திராவிடப் பார்லிமெண்டரி கட்சியும், பிற எதிர்க்கட்சியினரும் எதிர்த்தனர். நாட்டு மக்களும் வெளியில் எதிர்ப்பினை உணர்த்தினர். 7–12–54 அன்று இந்த மசோதா செலக்ட் கமிட்டியின் பரிசீலனைக்கு அனுப்பப்பட்டது. பெரியார் தாயகத்திலில்லாத நிலையிலும், தி. பொ. வேதாசலம் 19–12–54 கண்டன ஊர்வலம் திராவிடப் பார்லிமெண்டரி கட்சித் தலைவர் எஸ். சுயம்பிரகாசம் தலைமையில் நடைபெறுமென அறிவித்ததற்கிணங்க, மக்கள் தமது மறுப்பையும், வெறுப்பையும் கண்கூடாகக் காட்டினார்கள். என்ன செய்து, என்ன பயன்? 21-12-54 அன்று நாடகக் கட்டுப்பாடு சட்டம் நிறைவேற்றப்பட்டது.

1954-நவம்பர் 23–ஆம் நாள் சென்னையை விட்டுப் புறப்பட்ட பயணிகள் கப்பல் எஸ். எஸ். ஜலகோபால்,

சென்னைத்துறைமுகத்தில் இவ்வளவு பெரிய கருஞ்சட்டைக் கூட்டத்தைக் கண்டு, மறுப்புறத்திலுள்ள கருங்கடலுக்கு ஒப்பிட்டிருக்கும். ரங்கூன் பவுத்த மாநாட்டுக்குப் பயண மான தந்தை •பெரியாருடன் மணியம்மையார், ஆனைமலை ராமகிருஷ்ணம்மாள், ஆனைமலை ஏ.என். நரசிம்மன், சேலம் கே. ராசாராம் ஆகியோரும் புறப்பட்டுச் சென்றனர். அய்ந்து நாள் கழித்து, இரங்கூன் துறைமுகத்துக்கு, ஜலகோபால் கப்பல் 28–11-54 காலை 8-30 மணிக்குப் போய்ச் சேர்ந்தது. பெருமகனாரின் வருகை குறித்து பர்மாவிலுள்ள பர்மன், பர்மாஸ்டார், தொண்டன் ஆகிய ஏடுகள் பிரமாதமான முறையில் விளம்பரம் செய்து வந்த தால், பெரியாரைச் சிறந்த முறையில் வரவேற்றிட ஏராள மான பர்மிய மக்களும், தமிழ் மக்களும் திரண்டு காத் திருந்தனர். நன்கு அலங்கரிக்கப்பட்ட காரில் அமர்த்திப் பெரியாரை ஊர்வலமாக அழைத்துச் சென்றனர்.

பர்மிய விடுதலை வீரர் அவுங்சான் கல்லறைக்குப் பெரியார் 30–11-54 அன்றைய தினம் சென்று மலர் வளையம் வைத்து மரியாதை செலுத்தினார். பவுத்தர் மாநாட்டிற்கு வந்திருந்த ஏராளமான அறிஞர்கள் பெரி யாரைச் சந்தித்து உரையாடினார்கள். 3-12–54 அன்று பெரியார் தமது அரிய கருத்துரையினை பவுத்தர் மாநாட்டுப் பிரதிநிதிகளிடையே வழங்கினார். டாக்டர் மல்லலசேகரா பெரியாரைச் சந்தித்துத் தனியே உரை யாடினார். 5-12-64 அன்று டாக்டர் அம்பேத்கார் பெரி யாரைச் சந்தித்துத், தாம் பவுத்த மதத்தில் சேர முடிவு செய்து விட்டதாகக் கூறிப் பெரியாரையும் பவுத்த மதத்தில் சேர அழைத்தார். இந்து மதத்தில் இருந்து கொண்டே அதனை ஒழிக்கவே தாம் விரும்புவதாகவும், பவுத்தராக மாறிவிட்டால், இந்து மதத்தைத் திருத்தவோ, இந்துப் பிடிப்பிலிருந்து மக்களை மீட்கவோ தமக்கு உரிமையின்றிப் போகுமென்றும் விளக்கிப், பெரியார் அதற்கு உடன்பட வில்லை. ஆயினும், டாக்டர் அம்பேத்கார், பெருங்கூட்டத்

தோடு பவுத்தமதத்திற்கு மாற வேண்டுமென்ற தமது விழை வினைப் பெரியார் அம்பேத்காரிடம் தெரிவித்தார்.

பர்மாவிலிருந்த தமிழர்களான மயிலை பார்த்தசாரதி, தொண்டன் ஆசிரியர் ஏ.எம். இபுராகிம், கவிஞர் நாரா நாச்சியப்பன் ஆகியோர், பெரியாருக்கு நிறைய வரவேற்பும் தேநீர் விருந்தும், சிறப்பு நிகழ்ச்சிகளும் ஏற்பாடு செய் திருந்தனர். அவுங்சான் படத்திறப்பு, நபிகள் நாயகம்விழா, இந்திய தேசிய ராணுவ வீரர்கள் கூட்டம், தொழிலாளர் சங்கக்கூட்டம் ஆகியவற்றில் பெரியார் கலந்துகொண்டார். 8–12-54 ஒருநாள் மோல்மீனுக்கு விமானத்தில் சென்று வரு வதற்குள், இரங்கூனில் பெரியார் தங்கியிருந்த வீட்டில் வைக்கப்பட்டிருந்த கடிகாரம் போன்ற சில பொருள்கள் திருட்டுப் போயிருந்தன!

1954-டிசம்பர் 11-ஆம் நாள் இரங்கூனிலிருந்து சங்கோலியா என்ற கப்பலில் பெரியார் தமது குழுவினருடன் புறப்பட்டபோது பர்மாவிலிருந்த தோழர்கள், கண்ணீர் மல்க விடை கொடுத்து அனுப்பினர். 14-ந்தேதி காலை 11 மணியளவில் பெரியார் பினாங்குத் துறைமுகம் சென்று அடைந்த போது, அங்கும் மகத்தான வரவேற்பு பெரியாருக் காகக் காத்திருந்தது. மலேயா நாட்டில் பெரியாருக்கு ஒரு நாள்கூட ஓய்வு தராமல்—அவர் அதை என்றுமே விரும்பு வதில்லை என்பதை உணர்ந்தோ என்னவோ–ஏராளமான கணக்கற்ற நிகழ்ச்சிகளைத் தோழர்கள் அன்புடன் ஏற்பாடு செய்திருந்தனர். முன்கூட்டியே திட்டமிட்டுப் பெரியாரின் சுற்றுப்பயணம் அமைக்கப்பட்டிருந்தது. 1954 டிசம்பர் 16 பிறை, 17 அலோர்ஸ்டார், 18 கோலக் கங்சார்—தைப்பிங் 19 ஈப்போ, 20 தெலுக் ஆன்சன்-தாப்பா-கம்பார், 21 ஈப்போ பொதுக்கூட்டம், 22 தஞ்சோங்மாலிம்—கோலாலம்பூர், 25 சிரம்பான்-போர்ட் டிக்சன், 26 மலாக்கா, 27 மூவார். மலேயா சுற்றுப் பயணம் முடிந்ததும், அப்படியே 28-12-1954 முதல் 8-1-1955 வரை சிங்கப்பூரில் பெரியார் தங்கிப் பல்வேறு பொதுச் சிறப்பு நிகழ்ச்சிகளில் பங்கேற் றார். 1955 சனவரி 9–ஆம் நாள் காலை 11 மணிக்கு,

எஸ்.எஸ்.ரஜுலா கப்பலில், பெரியார் தம் உடன் வந்திருந்த குழுவினருடன் புறப்பட்டு, 17-1-55 காலை 7 மணிக்குச் சென்னைத் துறைமுகம் வந்து சேர்ந்தார். மலேயா ரேடியோவில் 'பெரியாரின் செய்தி ஒன்றினை ஒலிப்பதிவு செய்து கொண்டு போய் ஒலிபரப்பினார்கள். சிங்கப் பூரிலிருந்து புறப்பட்டபோது, தம் இயல்புக்கு மாறாகப் பெரியார், கண்களில் நீர் மல்க, விடை பெற்றார்! ஏறத் தாழ இரு திங்களுக்கு மேலாகவே தாய் முகங்காணாச் சேய் போல் வாடிய தமிழ்மக்கள் வாடியபயிருக்கு மழை போன்ற பெரியாரை வரவேற்றுக் களிப்பில் கூத்தாடினர்!

பெரியார் இங்கில்லாத காலத்தில் நாடகக் கட்டுப்பாடு சட்டத்தை நிறைவேற்றிய காமராசர் ஆட்சி, ஒரு நல்ல சட்டத்தையும் அறிமுகம் செய்திருந்தது. கோயில் டிரஸ்டி யாகத் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்தவரையும் சேர்த் துக் கொள்ளலாம் (கட்டாயமில்லை. கட்டாயம் ஒருவர் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும் என்று கலைஞர் ஆட்சி திருத்தியது.) என்று 30-11-54-ல் நிறைவேறிய சட்டமே அது.

"சமுதாயத்தில் மாற்றம்செய்ய விரும்பும்போது உலகத் தில் எதிர்ப்பு வருவது இயற்கையே. ஆனால் எந்த நாட்டுச் சரித்திரத்தைப் புரட்டினாலும் மாறுதல் இருந்தே தீரும். மாறுதல் செய்ய விரும்புபவன், கீழே விழுந்து, பல கஷ்டங் களை அனுபவித்துதான் ஆக வேண்டும்.

கட்டை வண்டி ஏறுகிறவன் ரயிலை வெறுப்பான்; பின் ரயிலின் அவசியத்தை உணர்ந்து ரயிலில் ஏறிப் பிரயாணம் செய்வான். நெய் விளக்கைத் தவிர வேறு எந்த விளக்கும் கூடாது; மண்ணெண்ணெய் கூடாது; என்று கூறியவர்கள் கூட, இன்று மின்சார விளக்குகளைப் பொருத்தியிருக் கிறார்கள்.

உலகம் நாளுக்கு நாள், மணிக்கு மணி, முன்னேறிக் கொண்டு போகும்போது, நமது தமிழர் சமூகம் மட்டிலும் சூத்திரப் பட்டத்துடன் பின்னேறிக்கொண்டு போகிறது. 2000 ஆண்டுகளாக சூத்திரர்கள் இருக்கிறார்கள். ஒரு

பாவமும் அறியாத ஒரு குழந்தை பிறந்ததும், நடமாட ஆரம்பித்ததும், ஏன் சூத்திரனாக இருக்க வேண்டும்? இந்த இருபதாம் நூற்றாண்டிலும் புராண சாஸ்திர சம்பிரதாயங்களில் ஏன் சூத்திரப் பட்டம் இருக்க வேண்டும் என்று கேட்பது தப்பா?

அடிமை முத்திரை குத்தப்பட்டவர்களாக, விலை கொடுத்து வாங்கும் அடிமைகளாக அமரிக்க நீக்ரோக்கள் நடத்தப் பட்டார்கள். லிங்கன் தோன்றினார்; மாறுதலைச் செய்தார். இன்று அந்தச் சமூகம் பிற இனத்தவர்களுடன் சரிசமானமாக வாழும் நிலையை ஏற்படுத்திக்கொண்டது!

சீனாவில் சன்யாட்சென் தோன்றினார்; மாறுதலை உண்டு பண்ணினார்! அய்ரோப்பாவின் நோயாளி என்று கூறப்பட்ட துருக்கி நாட்டிலே கமால்பாட்சா தோன்றி மாறுதலை ஏற்படுத்தினார்! ஆனால் தமிழ் நாட்டில் சித்தர்களும் புத்தரும் வள்ளுவரும் தோன்றிச் சாதி ஒழியவேண்டும் மாறுதல் வேண்டும் என்று கூறியும், மாறுதல் காண முடியவில்லையே!

அது போகட்டும்! நம் தாய் நாட்டுக்குத் தமிழ் நாடு என்று பெயர்; ஆனால் தமிழுக்கு இடமில்லை; கோயிலில், வடமொழியில் மந்திரம் ஓதப்படுகிறது; சாஸ்திரம், புராணம் எல்லாமே வடமொழியில்! இந்தி படித்தால்தான் பதவி கிடைக்கும்! சங்கீதம் தெலுங்கில்தான் வரும், தமிழில் வராது!

நீங்கள் ஒவ்வொருவரும் சமத்துவம் காண, மாறுதல் கொள்ளப் பாடுபடுங்கள்! உயர்ந்தவன்—தாழ்ந்தவன் என்ற பேதமொழிய உழையுங்கள்! இந்நாட்டில் தமிழர்களாகிய நீங்கள் ஒற்றுமையாக இருங்கள்! அதற்காகப் பாடுபடுபவர்களுக்கு உதவியாக இருங்கள்! என் தொண்டின் அடிப்படை நோக்கமெல்லாம் சாதி ஒழிப்பேயாகும்!" என்று மலேயா நாட்டில் முதல் 'கூட்டமாகக் கோலப்பிறை செயிண்ட் மார்க் பள்ளித் திடலில், 1954-டிசம்பர் 16-ஆம் நாள், பெரியார் சொற்பெருக்காற்றினார். பினாங்கு நகரிலிருந்து வெளிவரும் சேவிகா இதழ் இதனை வெளியிட்டிருந்தது.

# 15. எரித்தார்

தேசியக் கொடி எரிப்புக் கிளர்ச்சி
யும், நிறுத்தமும் — இராமன்
படஎரிப்பு — தட்சிணப் பிரதேச
எதிர்ப்பு — வினோபா சந்திப்பு
— மலையப்பன் வழக்கு — பிராம
ணாள் பெயர்ப் பலகை அழிப்பு—
சாதிப் பகுதி உள்ள அரசியல்
சட்டம் எரிப்பு — குத்துவெட்டு
வழக்கில் தண்டனை — 1955
முதல் 1957 முடிய.

பெரியார் தாயகத்தில் இல்லாத நேரத்தில்தான் காமராசர் ஆட்சி நாடகக் கட்டுப்பாடு சட்டத்தை நிறை வேற்றியது. எனினும் பெரியார் தொண்டர்கள் வாளா இருக்கவில்லை. முழுமூச்சாக எதிர்ப்புத் தெரிவித்தனர். எதிர்ப்பாளர்களை ஓரணியில் திரட்டியும் காண்பித்தனர். அதேபோல், பெரியார் சிங்கப்பூரிலிருந்து தாயகம் நோக்கிக் கிளம்பிய அதே வேளையில்—சிங்கப்பூர் தோழர்களின் பேரன்புப் பெருமழையில் நனைந்து தோய்ந்து, அதையே நினைந்து கனிந்து, உருகிக் கண்ணீர் பெருகிக் கன்னங்களில் வழிந்தோடித், தங்கத் தகட்டை மறைக்கும் வெள்ளிக்கம்பி கள்போல் முகத்தின் பெரும்பாகத்தை மறைக்கும் அந்த வெண்ணிறத் தாடியினூடே பளபளக்கப், பிரியா விடை பெற்று, எஸ். எஸ். ரஜூலா கப்பலில் தந்தை பெரியார் அடியெடுத்து வைத்த அதே வேளையில்—திருச்சியில், 9-1-55 அன்று, பெரியார் தொண்டர்கள், மாநாடு ஒன்று

கூட்டித், தலைவரில்லா நிலையிலும், தாம் எதற்கும் சித்த மாயுள்ளதை மொத்தமாய்த் திரண்டெழுந்து கூடி நின்று உலகுக்கு உணர்த்தினார்கள்.

17-1-55 அன்று பிற்பகல் 50,000 மக்கள் ஓரணியாய்க் கருஞ்சட்டைப் பேரணியாய் இணைந்து நின்று தந்தை பெரியார்க்கு மகத்தான ஊர்வலம் எடுத்து, வரவேற்புக் கொடுத்தனர், சென்னையில் திரண்டோர்! பின்னர், கீழ்த்திசை கொண்ட, வாழ்த்துக்குரிய தந்தை பெரியாருக்குத் தமிழகத்தார் தத்தம் ஊர்கள்தொறும் நல்வரவேற்பு நல்கினர். 23-ந் தேதி திருச்சியில் நிர்வாகக்குழு; 25 ஈரோட்டில் வரவேற்பு; 30- சென்னை சட்டக் கல்லூரி; அடுத்து 4—சென்னைப் பச்சையப்பன் கல்லூரி—என்று தொடங்கிய சுற்றுப் பயணத் திக்விஜயம், பிப்ரவரி மாதமும் தொடர்ந்தது. மார்ச் திங்களிலும் 'மார்ச்'செய்தார். ஆனால் 14-3-55 முதல் 17-3-55 வரையில் சிறிது நலக் குறைவு நேர்ந்ததால், சுற்றுப் பிரயாணத் திட்டத்தில் சற்றே மாறுதல்—ரத்துச்செய்யவில்லை —மாற்றம் செய்து, தொடர்ந்து கிளம்பிவிட்டார் பெரியார்!

1955 பிப்ரவரி 7—ஆம் நாள் பி.என். ராஜ்போஜ் சென்னை வந்து பெரியாரைச் சந்தித்து நீண்டநேரம் உரையாடிக்கொண்டிருந்தார். தமது கீழை நாட்டுச் சுற்றுப் பிரயாணத்தின்போது தாம் வாங்கிக் கொண்டுவந்திருந்த மான் கொம்புத் தடி ஒன்றினைப் பெரியார் ராஜ்போஜுக்கு அன்புடன் அளிக்க, அவரும் வேலைப்பாடமைந்ததும், லண்டனில் தமக்கு வழங்கப்பட்டதுமான பர்ஸ் ஒன்றினைப் பெரியாருக்குப் பண்புடன் அளித்தார்.

அகில இந்தியக் காங்கிரஸ், ஆவடியில், பிரம்மாண்டமான காமராசர் ஆட்சியின் ஏற்பாடுகளுக்கிடையே அழகாகக் கூடி, சோஷலிசத் தீர்மானம் நிறைவேற்றிக் கலைந்தது. வந்திருந்த மக்கள், மிகப்பெரிய இட்லி இயந்திரத்தைப் பார்த்து மலைத்து வாய்பிளந்து நின்றதாகப் பத்திரிகைகள் வர்ணித்தன.

1955 பிப்ரவரி 15—ஆம் நாள் இடைத்தேர்தலில் யாரை ஆதரிப்பது என்று கேட்ட கழகத் தோழர்களுக்குப் பெரியார்

தந்த விவர ஆணை எப்படியென்றால்—காங்கிரசிலுள்ள வேட்பாளர்களின் தன்மைக்கேற்றபடி, ஆதரிக்கலாம் என்பதே! காமராசருக்குப் பூரண ஆதரவு என்பதன் அடுத்த கட்டம் இது! பிப்ரவரி 16-ஆம் நாள் "விடுதலை"யில் 'டி.டி.கே. நாடகம்' என்ற தலையங்கம் வெளியாயிற்று. டி.டி. கிருஷ்ணமாச்சாரி மத்திய நிதியமைச்சர் பொறுப்பிலிருந்து விலகுவதாகக் குறிப்பிட்டதை, நம்பாத நிலையின் விளைவு இது!

1955 மார்ச் 22-ஆம் நாள்—அதாவது பெரியார் சிறிது அசவுக்கியமுற்றிருந்து, அந்த மாதம் முழுவதும் இடைவெளி இல்லாமல் நிரம்பியிருந்த நிகழ்ச்சிகளில், 14முதல் 17 வரை சிறு தொய்வு உண்டாகுமாறு செய்து, பின்னர் மேற்கொண்ட பிரயாணத் திட்டத்தின் இடையில்—பெரியார் வெளியிட்டிருந்த தன்னிலை விளக்க அறிக்கை மிகச் சிறப்பானதாகும்! "ஜனவரி 17-ஆம் நாள் கிழக்கு நாடுகளிலிருந்து திரும்பிய பின்னர், இதுவரை 60,70 ஊர்களுக்குமேல் சென்றுவந்துள்ளேன்; எல்லாக்கூட்டங்களிலும் நான்சொல்ல நினைத்த கருத்துகளைச் சொன்னதோடு, கூட்டத்தில் கண்ணீர்த்துளிகளும், கம்யூனிஸ்டுகளும் தொல்லை தரும் வகையில் கேட்ட, எல்லாக் கேள்விகளுக்கும் பதிலும் சொன்னேன். 1947-ல் வாங்கிய MSY 3500 எண்ணுள்ள என் கார் என்னைவிடக் கிழடாகிவிட்டது. இது ஏறத்தாழ மூன்று லட்சம் மைல் ஓடியிருக்கிறது. இதை சர்வீஸ் செய்தால் ஆயிரம் ரூபாயும், பழுது பார்த்தால் பதினேழாயிரத்து அய்ந்நூறுரூபாயும், ஆகும் என்கிறார்கள். ஆகையால் எனக்குவரும் அழைப்புகளைக் கட்டுப்படுத்த நினைக்கிறேன். சிறிது காலம் ஏற்காட்டில் ஓய்வெடுத்துக் கொள்கிறேன். இனி என்னை அழைப்பவர்கள், கூட்டமானால் அய்ம்பது ரூபாயும், திருமணமானால் நூறுரூபாயும் அனுப்பித்தர வேண்டும்" என்பதே அது.

இந்த அறிக்கையின் உட்பொருளை உணர்ந்த மெய்ப்பொருளன்பராகிய பொதுச் செயலாளர் எஸ். குருசாமி, பெரியார் கார் நிதி என்பதாக ஒன்றைத் துவக்கி, ஏறத்தாழ

ஒன்பது மாதங்கள் சிறுகச் சிறுகச் சேமித்துத் திரட்டிக், காரை சிம்ப்ஸன் கம்பெனியில் விட்டு, வசதியுள்ள வேனாக உருமாற்றிக், கேட்டதைவிட அதிகமாகவே 18,659 ரூபாய் 3 அணா நிதியும் சேகரித்துச், சென்னையில் ஒரு விழா நடத்தி, 1955 டிசம்பர் 25–ஆம் நாள், கிறிஸ்துமஸ் தினத்தன்று, புதிய வண்டியைப் பெரியாருக்கு வழங்கினார்! தொகை மேலும் மிகுந்ததால், ஒரு டேப்ரிக்கார்டரும் பெரியாருக்கு விழாக்குழுவினர் அன்பளிப்பாகத் தந்து உதவினர். அங்கு நன்றிப் பெருக்கால் பெரியார் அதிகம் பேசவில்லை. "எவ்வளவோ வகையான நாற்காலிகள் சோபாக்கள் எங்கள் மாளிகையில் இருந்தும், சாய்வு நாற்காலி எனப்படும் ஈஸிச்சேர் ஒன்று கூடக் கிடையாது. நான் அதை உபயோகிக்க விரும்புவதேயில்லை. சோம்பலாகச் சாய்ந்து கிடப்பதும் ஈஸிச்சேர் பாலிட்டிக்ஸ் பேசுவதும் எனக்குப் பிடிக்காது"—என்று பேசினார் பெரியார்.

27–3–1955 அன்று தஞ்சை நகரில் நடந்த வரவேற்பு விழாவில் பெரியாருக்கு வெள்ளிப்பட்டயத்தில் வாசகங்கள் பொறித்து, அன்புடன் வழங்கினார்கள். அதற்கு மறுநாள் பெரியார் தஞ்சையிலிருந்தார். அன்று அழகிரி நினைவு நாள். எனவே அழகர்சாமியின் கல்லறை அமைக்கப்பட்டிருந்த ராஜாகோரி என்னும், தஞ்சாவூர் கருந்தட்டாங்குடி வடவாற்றின் கரையிலுள்ள இடுகாட்டுக்குச் சென்று; ஒரு மலர்மாலை வைத்து வரலாம் என்று பெரியார் கருதினார். 19-2-1954 அன்று மறைந்த நெடும்புலம் சாமியப்பாவின் கல்லறையும் அங்குதானிருந்தது. பெரியார் அங்கு சென்ற போது இடுகாட்டில் 'சூத்திரர்கள் இடம்' என்பதாக அறிவிக்கும் கல் ஒன்று நடப்பட்டிருப்பதைக் கண்டு மனம் பதறினார். அருகிலிருந்த தோழர்கள் அப்போதே அதை அகற்றி வடவாற்றில் விட்டெறியத் துடித்தார்கள். ஆனால் இம்மாதிரி வன்முறைச் செயல்களில் என்றுமே விருப்பம் காட்டாத முதுபெரும் தலைவர் பெரியார், நகராட்சிக்கு விண்ணப்பம் செய்து, அதை அகற்றுமாறு கோரினார்; வேறு நகரங்களில் எங்காவது, இப்படி இடுகாட்டிலும்

இழிவுப்பட்டம் சூட்டப் பட்டிருந்தால், அவற்றையும் களைந்திடக் கேட்டுக் கொண்டார்.

1953 பொட்டி சீராமுலு பட்டினி மரணத்தால் ஆந்திர மாநிலம் பிரிந்தபோது, பெரியார் எதிர்க்கவில்லை. சென்னையை அவர்கள் கேட்டபோதும், இடைக்காலமாகத் தங்க விரும்பியபோதும் பெரியார் எதிர்த்தார். மொழிவாரி மாநிலங்கள் அமைந்தால், எஞ்சியுள்ள தமிழ்நாடே திராவிட நாடாகும். தமிழ் நாட்டுக்குத் தனியுரிமை கிடைத்தால் பிறரும் கூட்டாட்சியாக அப்போது இணைந்து கொள்ளலாம் என்பது பெரியார் முடிவு. ஆனால் டெல்லியிலுள்ள மத்திய அரசு, ஆந்திர மாகாணம் வன்முறைகளைக் கையாண்டு தன்னைத் தனியே பிரித்துக் கொண்டது குறித்து அஞ்சி, மொழிவாரி மாநிலங்கள் உரிமை கேட்கத் தொடங்கிவிடுமே எனவும் பயந்து, புதிதாகத் தட்சிணப் பிரதேசம் என்பதாக ஒரு அமைப்பினை உருவாக்கிட முனைந்தது. இதற்குத் தமிழ் நாட்டிலும் சில ஆதரவாளர்கள் கிடைத்தனர்.

ஆனால், பெரியார் அதன் உட்கருத்தையும், உள்ளுறையையும் சூட்சமத்தையும் நன்குணர்ந்ததால், தட்சிணப் பிரதேச அமைப்பை வன்மையாகக் கண்டித்தார். தட்சிணப் பிரதேசம் வந்தால் தமிழராகிய நமக்குத்தான் ஆபத்து. தமிழ் கன்னடம் மலையாளம் மூன்று நாடுகளும் ஒன்று சேர்ந்தால், பார்ப்பனருக்குப் போக மிகுதி உத்தியோகமெல்லாம் மலையாளி, கன்னடியர் கைக்குப் போய்விடும். நமக்குக் கக்கூஸ் எடுத்தல், போலீஸ் கான்ஸ்டபிள், ரயில்வே கூலி போர்ட்டர் உத்தியோகம்தான் மிச்சமாகும். இப்போதே நம்மை அடிமைபோல் நடத்துகிறார்கள். தட்சிணப் பிரதேசம் என்று சொல்லிக்கொண்டு அன்னியர் தான் ஆதிக்கம் செலுத்தி வருவார்கள். ஆந்திரா பிரிந்ததே நல்லது. இனி மலையாளியும், கன்னடியரும்-ஆளுக்கொரு ஜில்லாதானே?- இவர்களும் போகட்டும். மீதி 12 ஜில்லாக்களைக் கொண்ட தமிழ் நாடு தனிச் சுதந்திர நாடாகி, நமது சமய சமுதாய தேசிய சுதந்திர முயற்சிகளுக்கு எதிர்ப்பு

இருக்காது என்று நம்பினேன். இப்போது இதற்கும் தமிழ் நாடு என்று பெயர் தராமல் சென்னை ராஜ்யம் என்பதாகத்தான் பெயர் கொடுத்திருப்பதாகத் தெரிகிறது. இது சகிக்க முடியாத அக்கிரமம்; அவமானம்! இதைத் திருத்து மாறு தமிழ் நாட்டு மந்திரிகளையும், சென்னை—டெல்லி சட்டசபை, மேல் சபை அங்கத்தினர்களையும் இறைஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். தமிழ்நாடு என்ற பெயர்கூட இல்லாமல் எங்களுடைய வாழ்வு எதற்காக இருக்க வேண்டும்?

தட்சிணப் பிரதேச அமைப்புக்கு ஆதரவாக ஒரு மந்திரியே (சி. சுப்பிரமணியம்!) இருந்து வருகிறார். இவருக்குப் பின்னால் மத்திய சர்க்கார், நேரு பண்டிதர், பார்ப்பனர்கள், (ராஜாஜி,) பத்திரிகைகள், சமய சஞ்சீவிகள், காமராசரின் எதிரிகள் ஆகியோர் இருப்பதால், காமராசர் சும்மாயிருப்பது ஆபத்தென நமக்குத் தோன்றுகிறது.

இக்கேட்டினை முளையிலேயே கிள்ளும்படியாக எல்லாத் தமிழ் மக்களையும் வணங்கிக் கேட்டுக் கொள்கிறேன்—என்று பேசிவந்தார் பெரியார். தமிழ் நாட்டில் பெரிய பதவிகளில் கட்டாயம் தமிழர்களையே நியமிக்குமாறும், தாழ்மையுடன் மந்திரிமார்களைப் பெரியார் வேண்டிக் கொண்டார்!

பம்பாயிலிருந்து வெளிவரும் "பிளிட்ஸ்" வார இதழ் தென்னாட்டுக் காரல் மார்க்ஸ் பெரியார்தான் என வர்ணித்து, மே திங்களில் தொடர் கட்டுரை எழுதியது. 14-7-1955 டைம்ஸ் ஆஃப் இந்தியா பத்திரிகையில் இந்தி பற்றிப் பெரியாரின் கருத்துகள் விளக்கமாகவும் விரிவாகவும் எழுதப் பட்டிருந்தன. அகில இந்தியாவும் இந்தி எதிர்ப்பில் திராவிடர் கழகத்தின் நிலை என்ன என்று கூர்ந்து கவனித்து வந்த நேரம். இந்தி கட்டாய பாடமாகக் கற்பிக்கப் படல் வேண்டும் என்ற டெல்லியின் விருப்பம், ஆத்திரம், மீண்டும் தலைகாட்டிற்று! வடநாட்டார் தமது ஆதிக்க உணர்வின் அடிப்படையில், இந்தித் திணிப்புக்கான உத்தரவுகளைப் பிறப்பிக்கலாயினர். இதனைத் தடுத்து நிறுத்தும் துணிவோ அதிகாரமோ இன்றிக், காமராசரும் இயலாத

நிலையில் நின்றார். அமைதியான சூழ்நிலையில் தமிழகத்தைக் கட்டிக்காத்து வந்த பெரியாரைத் தூண்டி விட்டது ஆணவ ஆட்சி. சென்ற ஆண்டே எச்சரித்ததுபோல், இனி இந்தி எழுத்துகளை அழிப்பதோடு நிறுத்தமாட்டோம்; தீவிரமான முயற்சியில் இறங்குவோம் என்று கருத்தறிவித்த தற்கிணங்கத், திருச்சியில், 17-7-1955 அன்று நடந்த திராவிடர் கழக மத்திய நிர்வாகக்குழு, ஆகஸ்டு 1-ஆம் நாள் இந்தி எதிர்ப்பின் அறிகுறியாய், இந்தியத் தேசியக் கொடியைக் கொளுத்துவோம் என முடிவு செய்துவிட்டது! 20-7-55 "விடுதலை" நாளேட்டில் 'கொடி கொளுத்தும் தீர்மானம்' என்பது பற்றிப் பெரியார் தலையங்கப் பகுதியில் விளக்கமளித்திருந்தார்.

"குமரன் காத்த கொடியைக் கொளுத்தலாமா என்கின்றார்கள் நம் நாட்டுக் கம்யூனிஸ்டுகள்! உலகத்தில் அறிவாளிகள் பிறக்குமிடம் கம்யூனிஸ்ட் கட்சிதான் என்கிறார்கள். நம் நாட்டுக் கம்யூனிஸ்டுகளைப் பொறுத்த மட்டிலும் அது அத்தனையும் பொய்யாகி விட்டது.

குமரன் காத்த கொடி இதுவல்ல! காங்கிரஸ் கட்சி தோன்றிய நாட்களாய், எத்தனை முறை கொடியில் மாற்றங்கள் செய்யப்பட்டன என்பது, இவர்களைவிட எனக்குத் தான் நன்றாகத் தெரியும்! கடைசியாக இருந்த கட்சிக் கொடியின் அமைப்பில், ராட்டைக்குப் பதில் அசோக சக்கரத்தைப் பொறித்து, மத்தியில் வைத்து, இதுதான் அரசாங்கக் கொடி, தேசியக் கொடி என்கிறார்கள். நாம் கொளுத்தப் போவது சர்க்காரின் கொடியைத்தான்" என்று பெரியார் விளக்கினார். இதற்காக ஜூலை 22 முதல் 31 வரை ஊரூராக இரயிலில் பிரயாணம் செய்து, தோழர்களை நேரில் சந்தித்து, உற்சாகமளித்து வந்தார். எல்லா ஊர்களிலும் யார் யார் எந்தெந்த இடத்தில் கொடி கொளுத்துவார்கள் என்பது வெளிப்படையாக, விவரத்துடன், எப்போதும் போல் திராவிடர் கழகத்தால் முன்னதாகவே வெளியிடப்பட்டு வந்தது. பத்தாயிரம் தோழர்கள் இந்தப் பட்டியலில் இடம் பெற்றனர். ஆண்டாண்டு வெளியாகும்

தீபாவளி கொண்டாடாத தீரர்கள் பட்டியலைக் காட்டிலும் இது நீண்டிருந்தது. கடந்த 1952, 1953 ஆண்டுகளில் ராஜாஜி யும், 1954-ஆம் ஆண்டில் காமராசரும் முதல்வர்களாக வீற்றிருந்தபோது, இந்தி எழுத்து அழிக்கும் போராட்ட வீரர்கள் மீது நடவடிக்கை மேற்கொள்ளாமல் விட்டுவந் தார்கள். மற்றவர்கள் கேட்டபோது, தார் கொண்டு அழித்ததை மண்ணெண்ணெய் கொண்டு துடைத்தால் சீக்கிரமாகவும் சிக்கனமாகவும் விவகாரம் முடிந்து விடும்; ஆனால், நடவடிக்கை எடுத்தால் விரயமும் விபரீதமும் ஏற்படும் என்று ஆட்சியாளர் சமாதானம் கூறி வந்தனர்.

1955 கொடி கொளுத்தும் போராட்டம் பதற்ற நிலை யைத் தோற்றுவித்திருந்தது. என்ன நேருமோ என்ற கவலை மக்கள் முகத்தில் தோய்ந்திருந்தது. எது நேரினும் சரியே என்ற உறுதி கருஞ் சட்டையினர் முகத்தில் பொலிந்தது. இந்தச் சூழலில்தான் காமராசர் 30-7-1955 அன்றே, தேர்வுகளில் இந்தி கட்டாயப் பாடமாக இருக்காது. மத்திய அரசின் சார்பிலும், மாநில அரசின் சார்பிலும் இந்தி எப்போதும், எப்படியும் திணிக்கப்படமாட்டாது என நான் உறுதி கூறுகிறேன். இந்த என் உறுதி மொழியை நம்பித் திராவிடர் கழகத்தினர் தேசியக் கொடி கொளுத்தும் போராட்டத்தைக் கைவிடவேண்டும். மீறினால் சட்டப்படி நடவடிக்கை எடுக்கத் தயங்க மாட்டேன் என்று தமிழகத்து முதலமைச்சரான காமராசர் தெளிவாகக் குறிப்பிட் டார். குருடனுக்கு வேண்டியது கண்தானே? பின்னர், ரயில் நிலையைப் பலகைகளில் தமிழ் எழுத்து பெரி தாக மேலே எழுதப்பட்டு விட்டது. இது பெரியார்க்கு வெற்றிதானே?

தண்டவாளங்களைப் பெயர்ப்பதால் வெள்ளையனை விரட்ட முடியுமென நினைத்தவர்கள் ஆட்சியில், தேசியக் கொடியைக் கொளுத்துவதால் இந்தியை விரட்ட முடியு மென நினைப்பது தவறா? காமராசரின் உறுதிமொழியைப் பெரிதும் நம்பி, இது இப்போதைக்குப் போதும்; எனவே

கொடி கொளுத்தும் போராட்டம் தற்காலிகமாக ஒத்தி வைக்கப்படுகிறது ; நிறுத்தப்படவில்லை — என்பதாகப் பெரியார் தம் தோழர்களுக்கும், நாட்டுக்கும் ஒரே நற் செய்தியினை உடனே வழங்கினார்! ஆயினும், அத்துடன் பெரியாரை விடுவார்களா பத்திரிகையாளர்கள்? காமராசர் மிரட்டல், நாயக்கர் வாபஸ் என்றெல்லாம் தலைப்புத் தந் தார்கள். பெரியார்தான் அவர்களைச் சும்மா விட்டு வைப்பாரா?

"இந்தப் பிரச்சினையில் காமராசருக்கும் எனக்கும் பகைமூட்டிவிடப் பார்த்தார்கள். நடவடிக்கை எடுத்தாலும், எடுக்காமல் விட்டாலும், எப்படியும் அவரைத் தூற்று வார்கள்; உசுப்பி விடுவார்கள்! ஆனால் நாங்கள் அதைப் பற்றியெல்லாம் பொருட்படுத்தவில்லை. தேசியக் கொடி யைக் கொளுத்தினால் அரசாங்கம் கையைக் கட்டிக் கொண்டு, வேடிக்கை பார்க்கும் என்று எதிர்பார்க்கிற பைத்தியக்காரர்களல்ல நாங்கள். எந்தவித அடக்குமுறைக் குமே தயாராகத்தான் இதில் நாங்கள் இறங்கியுள்ளோம்! கொடி என்றால் என்ன பிரமாத மகத்துவம்? களிமண்ணைக் கடவுள் என்பதற்கும், முழக் கந்தல் துணியைத் தேசியக் கொடி என்பதற்கும் என்ன பிரமாத வித்தியாசம்? பாரத மாதாவின் கொடி என்றால், என் நாட்டில் அன்னிய மொழி யைப் புகுத்துவது ஏன்?

என்னைக்கூடப் போராட்டத்தை விட்டுவிட்டதாக அறிக்கை வெளியிடச் சொன்னார்கள். நான் அவ்வளவு ஏமாந்தவனல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்" என்று பெரியார் பேசினார்.

1955-ஆகஸ்ட் 7-ஆம் நாள் கல்வி மந்திரி சி. சுப்ரமணி யமும், இந்தித் திணிப்பு என்ற பேச்சுக்கு இடமில்லை என் பதாகக் கூறினார். வழக்கம்போலவே ஆகஸ்டு 15 துக்க நாள் என்று பெரியார் அறிவித்தார். அடுத்து, முடிவு பெறாமல் தொங்கிக் கொண்டிருந்த தட்சிணப் பிரதேச அமைப்புப் பிரச்சினையில் கவனம் செலுத்தினார். இதற்கு எப்போதுமே திராவிடர் கழக ஆதரவு கிடையாது என்று

திட்டவட்டமாக அறிவித்ததோடு, 1955 செப்டம்பர் 18-ஆம் நாள் தட்சிணப் பிரதேச எதிர்ப்பு ஊர்வலம் நடைபெறும் என்றும் தெரிவித்தார். இதனால் போராட்டம் ஒன்று நடந்துதான் தீரவேண்டும் என்றால், அதற்கும் தாம் தயாராயிருப்பதாகவும் பெரியார் கூறினார்.

பெரியாரின் 77-ஆவது பிறந்த நாள் நாடெங்கும் பெரும் சீர்சிறப்புடன் விழாவெடுக்கப்பட்டது. திருச்சியில் பெரியார் ஆசிரியர் பயிற்சிப் பள்ளி, தந்தை பெரியார் அவர்களுக்கு வரவேற்பு வழங்கி மகிழ்ந்தது. புதுவையில் அந்நிய ஆட்சி அகன்று, தேர்தலும் நடந்து, புதிய சட்ட மன்றம் தொடங்கியிருந்தது. 1-9-55 அன்று தமிழகக் கல்வித் துறையின் இயக்குநராக என். டி. சுந்தர வடிவேலு எம். ஏ. எல். டி. பொறுப்பேற்றார்.

இந்தியப் பிரதமர் பண்டித ஜவகர்லால் நேரு அவர்கள், 3-10-1955 அன்று சென்னை செயிண்ட் ஜார்ஜ் கோட்டையின் முகப்புக் கொத்தளத்தின்மீது, கொடி மரத்தினடியில் நின்று பேசினார். இந்தி தமிழர்கள்மீது திணிக்கப்பட மாட்டாது; இதை உறுதியாக நம்பலாம்; ஆனால் பார்ப்பானை விரட்டுவோம் என்றெல்லாம் வகுப்புவாதம் பேசுகிறார்களே—என்று வருத்தமுற்றார், நேரு பண்டிதர். கொடி கொளுத்துவது பைத்தியக்காரத்தனம்; சும்மா விட மாட்டோம் என்றும் மிரட்டினார்.

நேருபிரானுக்குப் பதில் கூறுமுகத்தான், பெரியார் அதே திங்கள் 8-ஆம் நாள் திருச்சியில் வீர கர்ச்சனை புரிந்தார்:—
"நேரு அவர்கள் தமது கடைசிக் கூட்டத்தில், கொடி கொளுத்துவதாகச் சொன்னவர்களைப் பற்றி மிகவும் துடுக்காகப் பேசியிருக்கிறார். அவருடைய பைத்தியக்காரத் தனமான காரியங்களில் இதுவும் ஒன்றாகும். திராவிடர் கழகத்தாரை மிரட்ட வேண்டும், திட்ட வேண்டும் என்பது தவிர இதில் வேறொன்றும் இல்லை. கொடி கொளுத்துவதாகச் சொல்லப்பட்ட விஷயம், ஒரு குறிப்பிட்ட தேதிக்குள் சமரசமாக முடிந்து போன பிறகு, அதை மறுபடியும் சர்க்கார் தரப்பிலிருந்தே ஏன் கிளப்ப வேண்டும்? இந்த

அரசாங்கத்தை ஏதாவது மிரட்ட வேண்டுமானால், கொடியைக் கொளுத்துவோம் என்று சொல்வதே போதுமானது என்று தெரிகிறது!

கொடியைப் பற்றிப் பிரமாதப் படுத்துவதும், அதை எரித்தால் உலகத்தையே சுட்டெரித்து விடுவதாக வீரப்பிரதாபம் பேசுவதும் வெறும் வீண் பேச்சே தவிர, மற்றபடிக் கொடியை எரித்தால் இவர்களால் என்ன செய்துவிட முடியும்? அரசியல் சட்டத்திலாகட்டும், இந்தியன் பீனல் கோடிலாகட்டும், கொடிக்கு என்ன மரியாதை இருக்கிறது? அதை எரிப்பதற்கு என்ன தண்டனை இருக்கிறது?

உலகத்தையே படைத்ததாகக் கூறப்படும் கடவுள்களே எங்களிடம் அகப்பட்டுத் திண்டாடும் நேரத்தில், உங்கள் அரசாங்கக் கந்தல் துணி எம்மாத்திரம்? நாங்கள் ஒளிவுமறைவாக எதையும் செய்யவில்லை. யாருக்கும் தெரியாமல், வீட்டுக்குள் கொளுத்தும் அண்டர் கிரவுண்ட் வேலை எங்களிடமில்லை. பகிரங்கமாக முச்சந்திகளில், தெருக்களில், அவரவர் வீட்டுக்கு முன்பு, பலபேர் அறியக் கொளுத்துகிறோம் என்றோமே. அரசாங்கத்துக்குத் தெரிவித்தோமே. உங்களால் என்ன செய்ய முடிந்தது? பாட்னாவில் மாணவர்கள் தேசியக் கொடியை எரித்தார்களே— என்ன செய்தீர்கள்? உங்கள் வீரப் பிரதாபம் அப்போது எங்கே போனது?'' என வினவினார்.

தர்மபுரி மாவட்டம், நாகரசம்பட்டியில், பெரியார் ராமசாமி கல்வி நிலையத்தை டாக்டர் பி. வரதராசலு நாயுடு திறந்து வைத்துப் பெரியாரின் தொண்டுகளை நினைவு கூர்ந்தார். 25-10-1955-ல் நடந்த இந்தத் திறப்பு விழா சிறப்புடன் அமைந்திருந்தது. மேற்கு வங்காள மாகாணத்தின் சிறந்த சமூகத் தொண்டரான ஹரேந்திரநாத் கோலே 9-12-55 அன்று சென்னைக்கு வந்து, பெரியாரைச் சந்தித்து, அளவளாவினார்.

கொடி கொளுத்தும் போராட்டம், தட்சிணப் பிரதேச எதிர்ப்புப் போராட்டம் இவற்றைப் போலவே—ஆண்டு தவறாமல் தஞ்சையைத் தாக்கும் புயலின் வெறியாட்டம்,

இந்த ஆண்டும் கரையோரப் பகுதிகளைப் பெரிதும் பாதித்தது. தமிழ் நாட்டினுடைய முதலமைச்சரின் புயல் நிவாரண நிதிக்காகப் பெரியார், 7-12-1955 அன்று காமராச ரிடம் ஆயிரம் ரூபாய் தந்து உதவினார்.

மனிதாபிமானத்தின் பாற்பட்ட இந்த நல்லெண்ணச் சமிக்ஞையினைத் தொடர்ந்து, மனித மானத்தின்பாற்பட்ட இந்தி எதிர்ப்புப் பிரச்சினை பெரியாரை ஈர்த்தது. பம்பாயில் முதலமைச்சராக இருந்த பி.ஜி. கெர் தலைமையில் மத்திய அரசு இந்திக் கமிஷன் ஒன்றை நியமித்திருந்தது. தமிழ கத்தில் இந்திக்குத் தனிப்பட்ட நிரந்தர எதிர்ப்பு இருந்து வருவது ஏன் என, நேரில் பலரையும் விசாரித்து, மெய் காணும் நோக்கத்துடன் அந்தக்குழு 9-1-1956 அன்று சென்னை வந்தது. சென்னையில் அந்த இந்திக் குழுவைத் திராவிடர் கழகம் புறக்கணிக்கிறது என்பதை எடுத்துக் காட்ட ஏ.பி. சனார்த்தனம் தலைமையில் கருப்புக்கொடி காட்டப்பட்டது. மனந்தளர்ந்தாலும் வெளியில் காட்டிக் கொள்ளாமல், அந்தக் குழுவின் தலைவர், "சென்னையில் சில நாள் தங்கியிருந்தபோது, எங்கள் அழைப்பினை ஏற்று ராமசாமிப் பெரியார் வந்து, குழுவின் முன்னர் தமது சாட்சி யத்தைப் பகர்வார் என எதிர்பார்த்தேன். அவர் வராதது உண்மையில் எனக்குப் பெரிய ஏமாற்றமே" என்றார்.

1953-ல் ஆந்திர மாநிலம் பிரிந்த பின்னர், கர்நாடகம் கேரளம் ஆகிய மாநிலங்களின் அமைப்பு 1956-ல் பூர்த்தி யடைய இருந்தது ஆனால் எல்லைத் தகராறு தீர்க்கப் படாமல் தொடர்ந்து வந்தது. தமிழகத்துக்கே உரிமை யான பல பகுதிகள் நமது ஏமாளித்தனத்தாலும், இளித்த வாய்த்தனத்தாலும் பறிபோகுமோ என்ற அச்சம் நாள் தோறும் இருந்து, மிரட்டி வந்தது. தமிழ் மக்கள் ஒருமித்த குரலுடன், எமது பிரதேசத்தை நாங்கள் விட்டுக் கொடுக்க மாட்டோம் என்று முழங்கிவராமல் இல்லை. சிலம்புச் செல்வர் ம.பொ. சிவஞானம் முனைவராக இருந்து, எல்லைப் பிரச்சினையில் தமிழர் உரிமையை நிலைநாட்ட ஆவலுடைய பிறகட்சிகளின் ஆதரவைத் திரட்டி வந்தார்.

அது சம்பந்தமாகப் பெரியாரை அவர் சந்தித்துப் பேசினார். பின்னர் ஓர் அனைத்துக் கட்சி ஆலோசனைக் கூட்டத்துக்குப் பெரியாரையும் அழைத்துக், கலந்து கொள்ளக் கேட்டுக் கொண்டார். பெரியார் அய்ந்து நிபந்தனைகள் சொல்லி, அவற்றை ம.பொ.சி. ஏற்றுக் கொள்வதானால், திராவிடர் கழகம் எல்லைப் பிரச்சினையில் அவருடன் முழு வலிமையோடு கலந்து, எதிர்ப்புப் போரில் ஈடுபடும்— என்றார். ம.பொ.சி. மழுப்பிவிட்டார்; குழப்பிவிட்டார்! ஆனால், பெரியார் வராததுபோல் குற்றம் சுமத்தப்பட்டபோது, 29-1-1956 அன்று வேலூரில் பெரியார், தமக்கும் சிவஞானத்துக்கும் இடையில் நடந்த பேச்சுவார்த்தைகளின் விவரத்தை வெளியிட நேரிட்டது:-

எல்லைகளைப் பாதுகாப்பது, அல்லது தக்க வைத்துக் கொள்வது என்பதில் முழுவதும் உடன்பாடு. அடுத்து, இந்தி எதிர்ப்பில் மற்றவர்களும் ஈடுபடவேண்டும். மூன்றாவது, படை, போக்குவரத்து, வெளியுறவு தவிரப் பிற இலாக்காக்களை மத்திய அரசு, மாநிலங்களிடமே முழுமையாகத் தந்து விடவேண்டும். நாலாவது, சென்னை ராஜ்யத்தின் பெயர் தமிழ்நாடு என்று மாற்றப்பட வேண்டும். கடைசியாக அய்ந்தாவது, தட்சிணப் பிரதேச அமைப்பை எதிர்த்துமுறியடிப்பது, ஆகிய அய்ந்துதான். முதல் சந்திப்பில் ஒத்துக் கொண்டு சென்றவர், கம்யூனிஸ்டு முதலிய மற்றக் கட்சியினர் இவ்வளவு நிபந்தனைகளுக்கு உட்பட மறுக்கிறார்கள் என்று காரணங்காட்டித் தயங்கினார். வெளியூரிலிருந்த பெரியாருக்குத் தந்தியும் கடிதங்களும் அனுப்பிச் சுற்றுப்பயணத்தை ரத்துச் செய்து கொண்டாவது சென்னை வந்து, தன்னை உடனே சந்திக்க விழைந்தார். அப்படியே பெரியார், இதற்கு முக்கியத்துவம் கொடுத்து, உடனே சென்னைக்கு விரைந்து, பொது நண்பர் வீட்டில் ம. பொ. சிவஞானத்தைச் சந்தித்தார். எல்லைகளை மீட்கும் பிரச்சினை மட்டும் இப்போதைக்கு எடுத்துக்கொண்டு, மற்றவற்றைப் பிறகு பார்த்துக் கொள்வோம். இதில் அனைத்துக் கட்சிகளும் வாருங்கள்; ஒருங்கிணைந்து

போராடலாம் என்றார் ம. பொ. சி.! அவர் இப்படிப் பின்னடைந்த காரணம் புரியாமல், பெரியார், தயவு செய்து என்னை மன்னிக்க வேண்டும்—என்று கூறித் திரும்பிவந்து விட்டார்! தன்னைப் பற்றி வெளியில் தவறாகத் திரித்துக் கூறக்கூடும் என்பதால் பெரியார், ம. பொ. சி. பல்டிபற்றி வேலூரில் ஒன்று விடாமல் கூறி முடித்தார்.

20-2-56 அன்று தேவிகுளம் பீர்மேடு தமிழருக்கே சொந்தம் என்ற போராட்டத்துக்கு ஆதரவாகப் பொது வேலை நிறுத்தம் வெற்றிகரமாக நடைபெறத் தி. மு. க., தமிழரசுக்கழகம், கம்யூனிஸ்ட், சோஷலிஸ்ட் கட்சிகள் முயன்று, வெற்றி பெற்றுத் தந்தன; திராவிடர் கழகமும் காங்கிரசும் இதில் கலந்து கொள்ளவில்லை.

திராவிட மாணவர் கழக மாநில மாநாடு, திருச்சியில், 5 2-1956 அன்று எழுச்சியுடன் நடைபெற்றது. பெங்களூரில் தட்சிணப் பிரதேச அமைப்பு குறித்து இறுதியாக முடிவு செய்ய பிப்ரவரி 1, 2 தேதிகளில் ஒரு கூட்டம் நடந்தது. காமராசர் அங்கே சென்று அதில் கலந்துகொண்டிருந்தபோது பெரியார் நேருவுக்கும் காமராசருக்கும் அவசரத் தந்திகள் அனுப்பினார்:- ''தட்சிணப் பிரதேசம் ஏற்படுவதென்பது தமிழர்களுக்கு வாழ்வா சாவா என்பது போன்ற உயிர்ப் பிரச்சினையாகும். உங்களுக்கும் மற்றெல்லாருக்கும் இது தற்கொலையானதும் ஆகும். தட்சிணப் பிரதேசம் ஏற்படு மானால் முன்பின் நடந்திராத கிளர்ச்சி செய்வதற்குத் தமிழ் மக்களை நெருக்குவதாகி விடும். அருள்கூர்ந்து நம் எல்லாரையும் தமிழ் நாட்டையும் காப்பாற்ற வேண்டுகிறேன்.'' பின்னர், 23-2-1956-ல் காமராசரே தீங்கையுணர்ந்து தட்சிணப்பிரதேச யோசனையை நிராகரித்தார். அக்டோபரில் இருந்து 15 மொழிவாரி மாகாணங்களும் 7 யூனியன் பிரதேசங்களும் இந்திய யூனியன் ஆட்சிக்குக் கீழே தனித் தனியே இயங்கும் என்பதாக அரசு ஆணையும் பிறப்பித்தது. மொழிவாரி மாகாணம் வேண்டுமென்பதாக, வெள்ளையன் தனது நிர்வாக வசதிக்காக வைத்திருந்த அப்போதைய அமைப்பு முறையைக் குறைகூறித், தாங்களாகவே, 21 மொழி

வாரி காங்கிரஸ் கமிட்டிகளைக், காந்தியாரே ஏற்படுத்தினார். அவ்வாறு ஏற்படுத்திய முதல் தமிழ்நாடு காங்கிரசின் செயலாளராகப் பணி தொடங்கியவரே பெரியார் தான்! அப்படியிருக்க, இப்போது ஏன் மொழிவாரி அரசியல் நிர்வாக அமைப்புக்கு இவர்களே இடையூறு செய்கிறார்கள்? என்று வினவினார் பெரியார்.

திருச்சியில் பெரியார் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் 17-3-1956 அன்று பெரியார், மனிதனுடைய வாழ்க்கை ஒரு குறிப்பிட்ட இலட்சியம் இல்லாமல் போய் விட்டதாக வருந்தினார். "வாழ்க்கை ஏணியின் முதல் படியில் கால் வைக்கும் போதே நாம் எதற்காக ஏறுகிறோம்? ஏறினால் எங்கே போய்ச் சேர்வோம்? என்பதெல்லாம் யோசிப்பதில்லை! பிள்ளை பெறுவதை ஒரு இலட்சியமாக நினைக்கிறோம். பிள்ளை பிறந்த பின் கல்விப் பயிற்சி தருவதை இலட்சியமாக எண்ணுகிறோம். படிப்பு முடிந்தால் உத்தியோகம் தேடுவதை இலட்சியமாகக் கருதுகிறோம். உத்தியோகம் எதற்கென்றால்; பொருள் சம்பாதிக்க! இப்படியே போனால், ஒரு இலட்சியத்தை அடைவதென்பதே இல்லாமல் போய் விடுகிறதே!

ஒருவன் வாழ்வதென்பது, அவன் வாழ்க்கையால் பிறர் சுகம் கண்டார்கள்; பிறர் நன்மையடைந்தார்கள் என்று இருக்க வேண்டும்! இதுதான் முக்கியமானது. மனித வாழ்க்கையின் தகுதியான இலட்சியம் இதுதான் என்றும் கூறலாம்" என்றெல்லாம் பெரியார் கூறினார்.

அண்ணாமலைநகரில் பல்கலைக் கழக மாணவர்களுக்காக 19-2-1956 ல் பெரியார் பேசிய கருத்துகள் மாணவ சமுதாயத்தின் சிந்தனைக்குரியவையாம்:- மாணவர்கள் பிஞ்சு அறிவு கொண்டவர்கள். அந்த அறிவு முற்றும்வரை அவர்களுக்கு எதிலும் உறுதியாகப் பற்றும் எண்ணம் பிறக்காது. அறிவு முற்றும் வரையில் மாணவர்கள் எதையும் கற்பதிலேயே மனத்தைச் செலுத்த வேண்டும். படித்துப் பரிட்சையில் தேர்ச்சி பெறுவதிலேயே முழு முயற்சியும் காட்ட வேண்டும்.

பட்டப் படிப்பெல்லாம் அனுபவப் படிப்பைவிட மட்டரகமானதுதான். வக்கீலுக்குப் படித்தவர், எதை எப்படிப் புளுகினால் கேஸ் ஜெயிக்கும் என்பதற்காகத், தனக்குப் பொய்யென்று தெரிந்ததையும்,மெய்யென்று தீர்ப்புக் கூறும்படிச்செய்ய, எனனென்ன தில்லுமுல்லுகள், புரட்டுகள் வேண்டுமோ அத்தனையும் செய்து, பொய்யை ஓங்கி அடித்துப் பேசினால், பெரிய வக்கீல் என்று பெயர் பெறுகிறார்? அதனால் வக்கீல்கள் அறிவாளிகள் என்று கூறிவிட முடியாது! அதேபோல் வாத்தியார்களும், புரொபசர்களும் ஏட்டுக்குள் இருப்பதை மட்டும் தெரிந்திருப்பார்கள். முக்கியமான உலக அறிவு இவர்களுக்கு இருக்காது! ஆகவே, உலகத்துடன் பழகினால்தான் பொது அறிவு வளர முடியும்— என்றார் பெரியார்.

பம்பாயில் புத்தர் கொள்கைப் பரப்பு மாநாடு, சாதி ஒழிப்பு மாநாடு, திராவிடர் கழக மாநாடு ஆகிய மூன்று மாநாடுகள் மிகுந்த சீரோடும் சிறப்போடும் ஏற்பாடு செய்யப்பட்டு வந்தன. பெரியாரும் அவரது அகலாத் தளபதிகளும் மூன்று நாட்களிலும் பங்கு பெற்றுக் கருத்துரைகளும், அறிவுரைகளும் வழங்கிட வேண்டுமெனத் தோழர்கள் விரும்பினர். நெடுநாட்களாக நல்ல முறையில் விளம்பரங்கள் செய்து வந்தனர். பெரியாரும் தமது சகாக்களோடு, தமது காரிலேயே, 17–3-1956 அன்று புறப்பட்டு, பம்பாய் போய்ச் சேர்ந்தனர். மாநாடுகள் 25, 26, 27 ஆகிய மூன்று நாட்களும் தொடர்ச்சியாகவே எழுச்சியுண்டாக்கும் வண்ணம் நடைபெற்றன.

புத்தருடைய 2500 ஆவது ஆண்டுவிழா 27-5-56 அன்று சென்னை ராஜாஜி மண்டபத்தில் அரசினர் சார்பில் நடைபெற்றபோது, அதில் பெரியாரும் கலந்து கொண்டார். அதற்கு முதல்நாள் சென்னையில் மிகப்பெரும் பொதுக் கூட்டம் ஒன்றிலும் பங்கேற்றுப் பெரியார், புத்தர் யாரென்பதைத் தெளிவுபடுத்தினார், நாடெங்கும் இந்தச் சமயத்தில் புத்தர் விழாவினை மக்கள் சிறப்புடன் கொண்டாட வேண்டுமென்றும் விழைந்தார். “நெஞ்சில் தீரமும் அறிவில்

விளக்கமும் ஏற்பட்டவர்கள், குறைந்த அளவுக்கு, இனிமேல் உருவ வணக்கம் செய்வதில்லை; உருவக் கடவுள்களுள்ள கோவில்களுக்கு வணக்கத்துக்காகப் போவதில்லை; எவ்வித மதக் குறியும் இட்டுக் கொள்வதில்லை; என்று உறுதி செய்து கொள்ள வேண்டும்! டாக்டர் அம்பேத்கார், துணிவுடன் ஆரியத்திலிருந்து அடியோடு விலகிவிட்டார்! நாடாளு மன்றத்திலேயே தனக்குக் கடவுள், ஆத்மா இவற்றில் நம்பிக்கை கிடையாதென்றும் கூறிவிட்டார்!

புத்தர் இந்நாட்டில் பிறந்தார், வளர்ந்தார், உண்மைகளைக் கண்டறிந்து பிரச்சாரம் செய்தார்! ஆனால் இங்கு தான் விரட்டியடிக்கப்பட்டார்! அவர் கொள்கைகளை இருட்டடிப்புச் செய்து விட்டார்கள். அவர் கொள்கைகளை நினைத்தால்கூட மனத்தைக் கழுவ வேண்டும் என்ற அளவுக்குப் புத்தரை வெறுக்கும் மனப்பான்மையை உண்டாக்கி விட்டனர். இராமாயணத்தில் இராமன் கூறுவதாக, 'புத்தன் ஒரு நாஸ்திகன்; திருடன் ; அயோக்கியன்' என்று இழிவு கற்பித்து வைத்தார்கள்! நாயன்மார்கள் ஆழ்வார்களெல்லாரும் உண்டாக்கப்பட்டு, அவர்களும் புத்தரை இழிவுபடுத்தி இருக்கின்றனர்.

டாக்டர் மல்லலசேகரா விளக்கமாகச் சொன்னார்:— புத்தர் என்பதாக ஒருவரும் பிறக்கவில்லை. சித்தார்த்தன் புத்தியை உபயோகித்ததால் புத்தரானான். ஆகவே அறிவை உபயோகிக்கச் சொன்னார் புத்தர் என்று! அறிவுக்குப் பொருத்தமானதை நம்பு என்று நாம் சொல்வதற்காக, ஏன் இந்து மதத்தை விட்டு வெளியேற வேண்டும் என்பதுதான் என்னுடைய வாதம்" என்றார் பெரியார்!

திருச்சியில் தி. மு. க. இரண்டாவது மாநில மாநாடு 1956 மே 17, 18, 19, 20 நான்கு நாட்கள் நடைபெற்றது. 1957 பொதுத் தேர்தலில் தி. மு. க. ஈடுபடலாமா எனப் பொது வாக்கெடுப்பு அங்கே நடத்திப் பார்த்ததில்; ஆதரவாக 56,942 வாக்குகளும், வேண்டாம் என 4203 வாக்குகளும் கிடைத்தன. தி. மு. க. தேர்தலில் ஈடுபட்டுத் தனது ஜனநாயகக் கடமையை நிறைவேற்றும் என்றார் அண்ணா.

மாசி மாதத்திலே ஸ்ரீராம நவமி வருகிறதல்லவா? அன்றைக்கு வடநாட்டில் ராம லீலா கொண்டாடி, இராவணன் முதலியோர் உருவங்களுக்குத் தீ வைத்துக் கொளுத்துகிறார்கள். வடநாட்டில் இராவணனைக் கொளுத்தும்போது, தென்னாட்டில் ஏன் இராமன் கொடும் பாவி கொளுத்தக் கூடாது? என்று பெரியார் கேட்டார். ஒரு பொய்யான கற்பனைக் கதையிலிருந்து தென்னாட்டு மக்களை அவமானப்படுத்தும் காரியத்தைப் பார்ப்பனரும் வடநாட்டாரும் செய்தால்—அதைச் செய்ய அவர்களுக்கு உரிமையிருந்தால்—அவர்களுக்குப் புத்தி வரும்படியான ஒரு காரியத்தை நாம் ஏன் செய்யக் கூடாது? இன்றைக்கு ராம நவமி என்கிறார்கள்; நமது இளைஞர்களும் மாணவர்களும் இம்மாதிரியான இழிவு படுத்தும் செயல்களில் ஏமாறாமல் இருக்க வேண்டும். இவற்றில் பங்கு கொள்ளக் கூடாது. அவர்கள் இராவணனைக் கொளுத்துவதற்குப் பதில்தருவது போல், நாம் ஏன் இராமனைக் கொளுத்தக் கூடாது? என்று சிந்தித்துச் செயல்பட வேண்டுகிறேன்! என்றார் பெரியார். மேலும், 1956–ஆம் ஆண்டு மாசி மாதத்தில் கும்பகோணம் மகாமகம். 12 ஆண்டுகட்கு ஒரு முறை வருவது. இதன் பித்தலாட்டங்களைப் பெரியார் ஆதார பூர்வமாக அம்பலப்படுத்திக், குளிக்கப் போய்ச் சேறு பூசிக் கொள்ளும் இம்மாதிரியான அறிவீனமான செயல்களில் நமது மக்கள் ஈடுபடவேண்டாமென அறிவுறுத்தினார். மிஸ் மேயோ நமது முட்டாள்தனமான பழக்க வழக்கங்களைக் கிண்டல் செய்தாள் என்று கோபித்துக் கொண்டோமே—நாம் அதற்குப் பிறகாவது திருந்தியிருக்கிறோமா? மேயோ கூற்று மெய்யா பொய்யா என்று கோவை அய்யாமுத்துவைக் கொண்டு அப்போதே, அறிவு விளக்கப் புத்தகம் போட்டேனே!— என்ன பயன்? என்று கேட்டார் பெரியார்.

மதுரையில் டி. கே. எஸ். சகோதரர்களின் ராஜராஜ சோழன் நாடகம் நடந்தது. ஒரே நாளில் பெரியாரும் குன்றக்குடி அடிகளாரும், 13-6-1956 அன்று, நாடகத்துக்குத் தலைமை தாங்கிக் கருத்துரை வழங்கினார்கள்.

மதுரை சங்கரன் பிள்ளை என்பவர் பெரியாரின் நண்பர். அவரே பின்னாளில் சங்கரதாஸ் சுவாமிகள் ஆகி, இன்றைய நவீன நாடகத்தின் தந்தையானார். டி. கே. எஸ். சகோதரர் நால்வரும், பெரியாரின் கொள்கைகளில் முழு ஈடுபாடு இல்லாவிடினும், நல்ல அன்பும் மதிப்பும், பெரியாரிடமும் அண்ணா விடமும் கொண்டிருந்தவர்கள். கலைஞர் ஆட்சியில் டி. கே. சண்முகமும், அவர் மறைந்த பின்பு டி. கே. பகவதியும் மேலவை உறுப்பினராக இருந்தார்கள். தமிழ் நாடக வளர்ச்சியில் அவர்கள் பெரும் பங்கு கொண்டவர்கள். டி. கே. சண்முகம் நன்கு பயின்று, தேர்ந்து, தெளிவு கொண்டு, அரசியல் ஆர்வமும் படைத்திருந்தார். அவர்கள் வளர்த்த நாடகக்கலை யாரிடமோ சிக்கித் தவிப்பதாக நாடு நினைக்கிறது.

குன்றக்குடியில் பெரியார் பேசும்போது, பொது ஒழுக்கம் கெட்டுப் போன வரலாற்றைக் கோடிட்டுக் காட்டினார்:— மிருகப் பண்புகளே நமக்குத் தெய்விகப் பண்புகளாய் ஆயின. கடவுள், சமயம், பார்ப்பான் முதலிய வற்றால், மனிதனுக்கோ, சமுதாயத்துக்கோ தேவை யில்லாதவைகளே கடமைகளாக ஆக்கப்பட்டன. மனிதனை மனிதன் இம்சிப்பது, வஞ்சிப்புது போன்ற துஷ்ட மிருகங் களின் குணமே தெய்விக குணங்களாய் அமைந்துவிட்டன. அயோக்கியர்களுக்கும், துரோகிகளுக்கும் அரசியலில் முதலிடம் கிடைப்பது போலக் கடவுள், சமயத் துறையிலும் ஆகி, ஒழுக்கக்கேடு மலிந்துவிட்டது. இதற்கு ஏதாவது பரிகாரம் தேட வேண்டுமானால், கடவுளும் சமயமும் பயன் படாது. ஒழுக்கமும் அன்பும் இல்லையானால் மனித சமுதாயமே வேண்டாம் என்று தோன்றுகிறது—என்றார் பெரியார்.

24–6–56 அன்று கடலூர் நகரசபை பெரியாருக்கு வரவேற்பளித்துச் சிறப்பித்தது. ஜூலை முதல் தேதி திருச்சியில் பெரியார் கலந்து கொள்ளும் மாபெரும் ஊர்வலம். அன்றைக்குப் பெரியாருக்கு உயர் இரத்த அழுத்தம்—ஹைபிளட்பிரஷர்—170 இருந்தது. இருந்தாலும் ஒத்துக் கொண்ட நிகழ்ச்சிகளை ரத்துச் செய்வதோ.

நிகழ்ச்சிகளுக்குத் தாமதமாய்ப் போவதோ பெரியாருக்கு அறவே பிடிக்காத செயல்களாதலால், அதே நிலையில் பெரியார், நிகழ்ச்சியில் கலந்துகொண்டது குறிப்பிடத்தக்க தாகும். தொடர்ந்து சுற்றுப் பிரயாணமும் சென்றார்.

1956 ஜுலை 8-ஆம் நாள் ஈரோட்டில் நடந்த புத்தர் மாநாட்டில் பெரியார் பங்கேற்று உரையாற்றும்போது, புத்தரைப் பின்பற்றி வேத மத சாஸ்திரங்களை ஒழிப்பதே எங்கள் இலட்சியம் என்றார். வான்மீகி ராமாயணம் சி. ஆர். சீனிவாசய்யங்கார் மொழி பெயர்ப்பிலிருந்து மேற் கோள் காட்டி, இராமன் சாதாரண மனிதனுக்குங் கீழான வன்; சீதை விபச்சாரி என்பதெல்லாம் எடுத்துக் கூறினார். இராமன் பட எரிப்புக்குக் கால் கோள் விழா போல, அன்றையப் பொதுக் கூட்டத்தில் இராமன் படம் எரிக்கப் பட்டது. அடுத்த வாரமே 15–8–56 அன்று சிதம்பரத்தில் நடந்த பொதுக் கூட்டத்தில் திராவிடர் கழகப் பொதுச் செயலாளரும் "விடுதலை" ஆசிரியருமான குத்தூசி குருசாமி ஒரு இராமன் படத்தைக் கொளுத்தினார். அவர் மீது ஒரு வழக்குத் தொடரப்பட்டு, இழுக்கடிக்கப்பட்டு, அவருக்கு 6–12–56 அன்று 5 நாள் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. 22–7–56 சிவகங்கையில் நடைபெற்ற திராவிடர் கழக மாநாட்டில் பெரியார் கலந்து கொண்டார். கி. வீரமணி பி. ஏ. (ஆனர்ஸ்) கொடி ஏற்றி வைத்தார்.

திருச்சியில் 21–7–56 அன்று கூடிய நிர்வாகக் குழுவில், 1–8–56 அன்றைய தினம், நாடு முழுவதும், பெயர் கொடுத்துள்ள 8000 தொண்டர்கள் இராமன் படம் எரிப் பார்கள் என்றும், சென்னை வேப்பேரி டிராம்ஷெட் இடத்தைக், கழகத்துக்காக 1 லட்சம் ரூபாய் விலைக்கு வாங்கப்பட்டது என்றும், அது 50 மனை (கிரவுண்டு) பரப் புள்ளது என்றும், தெரிவிக்கப்பட்டது.

இராமன் பட எரிப்புக் கிளர்ச்சிக்கு முந்திய வாரமே, அரசுத் தரப்பில் கெடுபிடிகள் துவங்கின. ஊர்வலம், பொதுக் கூட்டங்களுக்குத் தடைகள் விதிக்கப்பட்டன. எப்படியும் இராமன் படம் கொளுத்தத் தோழர்கள் தீவிரமாயிருந்

தனர். சென்னையிலும் ஊர்வலத்துக்கும் பொதுக் கூட்டத்துக்கும் தடையுத்தரவு பிறப்பிக்கப்பட்டது. பெரியார் "விடுதலை"யில் தொடர்ந்து எழுதி, விளக்கி வந்தார். பெரியாரிடம் பேரன்பு பூண்ட டாக்டர் வரதராசலு நாயுடு, குன்றக்குடி அடிகளார் இருவருமே இராமன் பட எரிப்புக் கிளர்ச்சியைக் கைவிடுமாறு கோரினர். பெரியார் அமைதியுடன் அவர்களிருவருக்கும்—அதன் மூலம் தெளிவில்லாத நெஞ்சங்களுக்கும் — தெளிவுரை புகன்றார். இராமன் அவதாரமல்ல; சாதாரண மனிதன்தான் என்று, ராஜாஜி, சங்கராச்சாரியார், வால்மீகி, டி. கே சி., மறைமலையடிகள், திரு. வி. க., காந்தியார் போன்ற அறிஞர்கள் கூறியுள்ளதை மேற்கோள் காட்டினார். "இராமன் படத்தை எரிக்கக்கூடாது என்பதற்கு எதிர்ப்புத் தெரிவிப்போர், வாத முறையில் ஏதும் கூறவில்லையே! என்னிடத்தில் உள்ள அன்பினால், உரிமையால், கேட்டுக் கொள்ளுகிறார்கள். இந்த இராமனோ, அல்லது பிற இந்துக் கடவுள்களோ எரிக்கப்பட வேண்டும், அல்லது உடைக்கப்பட வேண்டும் என்பதற்கு, நான் எடுத்துக் காட்டுகின்ற ஆதாரக் காரணங்களை மறுத்துவிட்டுப், பிறகு எரிக்க வேண்டாம், உடைக்க வேண்டாம் என்று கட்டளையிடட்டும்! நான் ஏற்றுக் கொள்கிறேன்! நான் தவறே செய்யலாம்; ஆனால் என்னைக் குறை கூறுவதனாலோ, தண்டிப்பதனாலோ என்னைத் திருத்துவதாகுமா?

எனக்குக் கெட்ட பெயர் வருவது பற்றியோ, தண்டனை கிடைப்பது பற்றியோ, என் ஆவி பிரிவது பற்றியோ நான் சிறிதாவது இலட்சியம் செய்வதாயிருந்தால் இந்தக் காரியத்தில் பிரவேசித்து இருக்கமாட்டேன். என் வாழ்நாளில், தமிழர்களுக்கு நீண்ட நாட்களாக இருந்து வருகின்ற காட்டுமிராண்டித் தன்மயான கடவுள்—சமயப் பற்றும், இழிவுத் தன்மையும் கடுகளவு குறைந்தாலும், நான் வெற்றி பெற்றவனாவேன்! மன்னித்தருள்க!" என்றார்.

பெரியாரையும் குருசாமியையும் எதிர்பாராத விதமாக 1-ந்தேதி காலையே கைது செய்து வைத்திருந்து, பெட்டி

படுக்கையுடன் தயாராகப் போயிருந்தும், அன்று மாலை இருட்டான நேரத்தில் வீட்டுக்கு அனுப்பி விட்டார்கள். பெரியாருக்கே ஏமாற்றந்தான்! முன்கூட்டியே தடை முதலியவை பிறப்பிக்கப்பட்டபோது, 1-ந்தேதியைத் தவிரத் தொடர்ந்தும் கொளுத்தலாம், எனப் பெரியார் அனுமதித்திருந்தார். ஆனால் ஒரே நாளிலும், முன்கூட்டியும், எல்லா ஊர்களிலும் இராமன் படம் எரிக்கப்பட்டது. அதில் 4000, 5000 பேர் ஈடுபட்டார்கள். 1000, 1500 பேரைக் கைது செய்திருந்தார்கள். என்றாலும், பெரும்பாலான ஊர்களில் போலீஸ் தடபுடல் குறைவாயிருந்ததால் பட எரிப்பு வெற்றியுடன் முடிந்தது! எனவே, தோழர்கள் விருப்பத்துக்கு மாறாக, ஒரு நாள் போதும் என்று அறிக்கை தந்து விட்டார் பெரியார்! இந்தக் கிளர்ச்சியும் பெரியாரின் இதர கிளர்ச்சிகளைப்போல், குறைந்த செலவில் நிறைந்த பலனைத் தந்ததில், பெரியாருக்கு அளவிலாக் களிப்பு! மறு கிளர்ச்சியை எதிர் பாருங்கள். இந்த முறை நல்ல முடிவுக்கு உதவிய அனைவருக்கும் நன்றி—என்று பெரியார் தமது அறிக்கையை முடித்திருந்தார். கொளுத்தியது குற்றமல்ல என்பதே பெரியாரின் வாதம்.

இப்போது திராவிடநாடு எது? அல்லது, ஏது? என்ற கேள்விகளுக்குப் பெரியார் 19-8-1956-ல் திருவண்ணாமலையில் பதில் கூறினார்:—வெள்ளைக்காரன் இருந்த காலத்தில் சென்னை மாகாணமாக இருந்ததைத்தான் திராவிடநாடு என்றும், தனியே சுதந்திர ஆட்சியுடன் பிரித்துத் தரப்படவேண்டும் என்றும் வெள்ளைக்காரரிடம் கோரியிருந்தேன். இதெல்லாம் உங்கள் குடும்பச் சண்டை; நீங்களே பார்த்துக்கொள்ளுங்கள்; எனினும் நாங்கள் முஸ்லிம்களுக்குப் பிரித்துக்கொடுத்துவிட்டுப் போய் விடுகிறோம்—என்று கூறி வெள்ளையன் நம்மைப் பார்ப்பனருக்கும், வடநாட்டாருக்கும் காட்டிக் கொடுத்து விட்டுப் போய்விட்டான். இப்போது ஆந்திரம் பிரிந்து விட்டது. அடுத்து சென்னை மாகாணத்தில் ஒட்டிக்கொண்டிருக்கும் இரண்டு மாவட்டம் தென் கன்னடம் கர்நாடகத்தோடும். தென் மலபார்

கேரளத்தோடும் போய்விடும். மிச்சமுள்ளது தமிழ்நாடு. அந்தத் தனித்தமிழ்நாடே திராவிடநாடு; அதற்குத்தான் இனிச் சுதந்திரம் கேட்போம்—என்று ஆய்வுரை புகன்றார் பெரியார்.

அடுத்து, 28-ஆம் நாள் மேலக்கற்கண்டார் கோட்டையிலும், 29-8-56 அன்று திருச்சி பெரியார் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியிலும் பெரியார் அரிய உரை ஆற்றினார். நமது இலக்கியங்கள் வெறும் பக்திப் பாடல்கள்தானே? தேவாரம் திருவாசகமெல்லாம் தமிழனின் வேதங்களாம்! கடவுளைக் கண்ணே மணியே என்றுபிரார்த்தித்தால் அது வேதமாகுமா? அல்லது இலக்கியமாகுமா? ஆரியம் இங்கு வருவதற்கு முன்பு இருந்த இலக்கியமோ கலையோஒன்றாவது நமக்குக் கிடைத்ததா? மிகப்பழைய நூல் என்று சொல்லப்படும் தொல் காப்பியத்திலேயே ஆரியம் கலந்து விட்டது! சிலப்பதிகாரத்தில் ஆரிய மடமை கலக்காமல் ஒரு பத்து வரியாவது கிடைக்கிறதா?

யாரோ சில புலவர்கள்தாம் வள்ளுவர் அவ்வை கபிலர் போன்றவர்கள், ஒழுக்கத்தைப் பற்றிப் பாடினார்கள். மற்றவர்கள் எதுகை மோனையுடன் பாடிப் பிச்சைக்கோ பக்திக்கோ எழுதிவைத்தனர். ஒழுக்கத்திற்கான இலக்கியம் இல்லை, கலை இல்லை, கல்வி இல்லை, மதம் இல்லை, அரசும் இல்லையே?—என்று பெரியார் மிக்க வேதனையுடன் குறிப்பிட்டார்.

பெரியாரின் 78-வது பிறந்தநாள் நாடெங்கிலும் மிக எழுச்சியும் உணர்ச்சியும் கொப்புளிக்கக் கொண்டாடப் பட்டது. "விடுதலை" ஏடு சிறப்பு இதழ் வெளியிட்டது. இந்தியத் துணை ஜனாதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் பெரியாரின் சேவைகளைப் புகழ்ந்து வாழ்த்துச் செய்தி அனுப்பினார். டாக்டர் வரதராசலு நாயுடு பெரியாருக்குச் சிலை எடுத்துச் சிறப்பிக்க வேண்டுமென எழுதினார். புரட்சிக் கவிஞர், டாக்டர் சுப்பராயன், கஜபதி நாயகர், ஆதித்தன், திருக்குறள் முனிசாமி, பி. ரத்னசாமிப்பிள்ளை ஆகியோரும் கட்டுரை தந்தனர். புதிதாக வாங்கப்பட்ட

டிராம் ஷெட் சீர்திருத்தம் செய்யப்பட்டுப் புதிய தோற்றமும் ஏற்றமும் பெரியார் திடல் எனும் போற்றற் குரிய பொலிவு மிக்க புதுமைப் பெயரும் கொண்டு அழகின் எழிலின் இருப்பிடமாய்க் கோலங்கொண்டிருந்தது. அங்கு தான் இந்த ஆண்டு பெரியார் பிறந்த நாள் விழா. பெரியார் தமது பிறந்த நாள் செய்தியாகப் பயங்கரமான ஒரு திட்டத்தைத் தெரிவித்தார். தம் தோழர்கள்மீது அவர்க் கிருந்த அசையா நம்பிக்கையைக் காண்பித்தது இது. அதாவது 5000 தோழர்கள் தூக்குமேடை ஏறவும் தயாரா யிருங்கள். தானேவரும் திராவிட நாடு—என்றார் பெரியார். துந்துபி முழங்கிடக் குடந்தை நகராட்சி மன்றம் பெரியாருக்கு 9-9-56 அன்று வரவேற்பு வழங்கிற்று. தலைவர் டாக்டர் வி. ஆர். மூர்த்தி, துணைத்தலைவர் பி. ஆர். பொன்னுசாமி, எஸ். கே. சாமி ஆகியோர் முன்னின்று விழா நடத்தினர்.

கோவையில் திவான்பகதூர் சி. எஸ். இரத்தின சபாபதி முதலியார் திடீரென்று 15-9-56 அன்று காலமானார். திராவிடர் இயக்கத் தொடர்பில்லாதவராயினும் திராவிட ராயிற்றே! பெரியார், அவரது இறுதியாத்திரையில் பங் கேற்று, ஈரோடு வந்து, இரவோடு இரவாகச் சென்னை புறப்பட்டார். மறுநாள் தமக்குப் பிறந்த நாளாயிற்றே! ஈரோட்டிலிருந்து வேன் புறப்பட்டபோது, சென்னையில் பெரியார் திடல் சீரமைப்பு வேலைகளுக்குத் தேவைப்பட்ட 10 ஒட்டர்களை (ஓட்டர்களை அல்ல!) வேனில் ஏற்றி வந்தார். 10 பேருடைய ரயில் சார்ஜ் மிச்சந்தானே! 20-9-56 அன்று பெரியாருக்கு, நெஞ்சுருக்கும் செய்தி ஒன்று கிட்டிற்று. தூத்துக்குடி மாவீரன் கே. வி. கே. சாமி படுகொலை செய்யப்பட்டதுதான் அது!

திருச்சியை அடுத்துள்ள பொன்மலைப்பட்டியில் பெரியாரின் 78-ஆவது பிறந்த நாளைப் புதுமை தவழக் கொண்டாடி மகிழ்ந்தனர் தோழர்கள். முதற் சிறப்பு—தலைமை ஏற்று, நாம் பெற்ற அருஞ் செல்வம் பெரியார்

என்று புகழ்ந்துரைத்தவர் தவத்திரு மகாசந்நிதானம் குன்றக்குடி அடிகளார். அடுத்த சிறப்பு—பெரியாருக்குச் சமுதாயப் புரட்சி வீரர் என்று பொறிக்கப்பட்ட தங்கப் பதக்கம் வழங்கல்! மேலும், பொற்கிழி அளித்தல்! பொன்னாடைபோர்த்தல்! ஆத்திகம்-நாத்திகம் பற்றி அங்கு நற்கருத்து நவின்றார் பெரியார். மக்களுக்கு ஆத்திகம்—நாத்திகம் என்பதற்குப் பொருள் தெரிவதேயில்லை. நாத்திகன் என்றால் கடவுள் இல்லை என்று சொல்பவனும் அல்ல; இருக்கிறது என்று ஒப்புக் கொள்பவனும் அல்ல. என்னால் கடவுள் என்பது என்ன? அது எப்படிப்பட்டது? என்பதை இன்றளவும் புரிந்துகொள்ள முடியவில்லை. நான் கண்டிப்பதெல்லாம் கடவுள்களைப் பற்றிய சேதிகளையே! யார் ஒருவன் பார்ப்பன ஆதாரங்களில் கைவைக்கிறானோ அவனுக்குத்தான் நாத்திகப்பட்டம் சூட்டியிருக்கிறார்கள், இது வரையில். குறைபாடுகளை, சமுதாய இழிதன்மையை ஒழிக்க நாங்கள் கையாள்வதுதான் சரியான முறை.

மதத்தின் மேல் குற்றம் இல்லை; அதைச் சார்ந்திருப்பவர்கள்தான் குற்றம் செய்து விடுகிறார்கள் என்று சிலர் வாதம் செய்கிறார்கள். சார்ந்திருப்பவர்களைத் திருத்தும் பொறுப்பு மதத்தினுடையது இல்லையா? மதத்தில் காலத்துக்கு ஏற்ற மாறுதல் செய்யவேண்டாமா? ஒரு கன்னத்தில் அடித்தால் மற்றொரு கன்னத்தையும் திருப்பிக்காட்டு என்று ஏசு சொல்லியிருக்கிறார். இன்று சாத்தியப்படுமா? மேல் துணியைக் கேட்டால் இடுப்புத் துணியையும் கொடுத்துவிடு என்று சொல்லியிருக்கிறார். இப்படிக் கொடுத்துவிட்டு நிர்வாணமாய் நிற்க இந்தக் காலத்தில் இயலுமா? காலப்போக்குக்குப் பொருத்தமல்லாதவற்றை மாற்றிக் கொள்ள வேண்டும்; திருத்திக் கொள்ள வேண்டும்—என்பதாக ஆய்ந்து மொழிந்தார் பெரியார்.

வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் பற்றிச் சரிவரப் புரிந்து கொள்ளாமல் ஆதித்திராவிட மக்கள் ஏதேதோ பிதற்றியதாக அறிந்து, பெரியார் தமது 78-ஆவது பிறந்த நாள்

விழாவில், சென்னை பெரியார்திடலில், அதைக் குறிப்பிட்டுச் சொற்பொழிவாற்றினார்:—“வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் பார்ப்பானுக்கு விரோதம் என்று புரிந்து, 1950–ல் அதை எடுத்துவிட்டார்கள். நாங்கள் இடையறாது செய்த கிளர்ச்சிகளின் பயனாய்ச் சில திருத்தங்கள் செய்துள்ளார்கள். படிப்பு, பதவி, சமூகம் ஆகியவற்றில் பின் தங்கியவர்களுக்குச் சலுகைகள் செய்யலாம் என்பதே அந்த அரசியல் சட்டத் திருத்தம். அதனால் ஆதித்திராவிட மக்களுக்கு அவர்களுக்குரிய விகிதாச்சாரம் முழுவதுமே கிடைத்து விடுகிறது. மற்ற திராவிட மக்களுக்கு விகிதாச்சாரம் கிடைக்கவேயில்லை என்பதைச் சுட்டிக் காட்டும்போது, ஆதித்திராவிட மக்கள், நாங்கள் அவர்களுக்கு எதிராக இதைச் சொல்லுகிறோம் என நினைப்பது நன்றி கெட்ட செயல். ஆதித்திராவிடர்களின் கோயில் நுழைவு, தெரு நுழைவுக்காக முதன் முதல் போராடிச் சிறை சென்ற எங்களையா சந்தேகப்படுவது? இன்றைக்கு ஆதித்திராவிட மக்கள் படித்தவர்களாகவும், உத்தியோகஸ்தர்களாகவும், சட்டசபை உறுப்பினர்களாகவும், மந்திரிகளாகவும் ஆனார்கள் என்றால், பார்ப்பனர்களாலா? இதற்கெல்லாம் அவர்கள் நமக்கு நன்றி செலுத்தவில்லை என்றாலும், நமக்கு விரோதிகளாகவாவது ஆகாமல் இருக்க வேண்டாமா?” வெம்பிய நெஞ்சத்தின் வேதனை தோய்ந்த வார்த்தைகளல்லவா?

திராவிட அய். ஏ. எஸ். அதிகாரியும், நரிக்குறவர் போன்ற நாதியற்ற கூட்டத்துக்கும் மனித வாழ்வு நல்கிய மாபெரும் அன்பாளரும் பண்பாளருமாகிய ஆர். எஸ். மலையப்பன், திருச்சி கலெக்டராக இருந்தபோது, பார்ப்பன நீதிபதிகள் அவரைப் பழிவாங்கி விட்டனர். இந்தத் தீர்ப்பின் உண்மை குறித்துத் திராவிடர் கழக நிர்வாகக் குழுத் தலைவர் தி. பொ. வேதாசலம் மனங்குமுறுதலுடன் ஓர் அறிக்கை வெளியிட்டார்; 26–10–56 அன்று! திருச்சியில் மத்திய நிர்வாகக் குழு கூடியதும் அன்றே! இதனுடைய பின் விளைவுகள் அடுத்த ஆண்டில் வெளிப்பட்டன.

அகிம்சையைப் பற்றிக் கேட்டவர்களிடையே பெரியார் பேசினார்:— அகிம்சையைப் பற்றி என்னைக் கேட்டால் அது கோழைத்தனம் என்பேன். இன்று அகிம்சை பிரயோசனப் படாது. நாம் அகிம்சையை நம்பிப் பேசி, நாசமாய்ப் போய்விட்டோம். இல்லாவிட்டால் நம்மைச் சூத்திரன், தேவடியாள் மகன், என்று சொல்வதைக் கேட்ட பின்னும், இங்கு ஒரு பார்ப்பாரக் குஞ்சு இருக்க முடியுமா? உலகத்தில் வேறெந்த ஜீவனும் தன் இனத்தைத் தானே அடித்துச் சாப்பிடுவதில்லை; மனிதனைத் தவிர! மனிதனை மனிதன் வஞ்சிப்பது, வதைப்பது, கொடுமைப்படுத்துவது இப்போது வளர்ந்துவிட்டது!

ஆகையினால் நமக்கு அவசியம் கத்தி வேண்டும். அரசர்கள் ஆயுதம் வைத்திருந்தார்கள்; கடவுளர்கள் ஆயுதம் வைத்திருக்கவில்லையா? அகிம்சை பேசிப் பேசித்தான் சமணமும் பவுத்தமும் அழிந்தன. சமணர்கள் கையிலும் கத்தியிருந்திருந்தால், சைவர்கள் அவர்களைக் கழுவில் ஏற்றியிருக்க முடியுமா? சைவம் ஆயுதத்தினால்தான் வென்றது! சைவம், அன்பு என்று சொல்வது; தாசி, காதல் என்று சொல்வது போலத்தான்! (திருச்சியில் 21–10–1956 அன்று)—எப்படி, பெரியாரின் உவமை?

கழகத்தில் நீண்ட நாள் பிரச்சாரம் செய்தும், மாணவர் இயக்கத்தைக் கட்டிக் காத்தும், சோதனையான நேரத்தில் பெரியாரை நீங்காமல் நிலைத்தும் கழகப் பணியாற்றி வந்த வேலூர் ஏ. பி. சனார்த்தனம்—கேளம்பாக்கம் பொன்னுசாமி அவர்கள் புதல்வியும், கழகப் பெண் பேச்சாளராக முன்னணியில் நின்று, பம்பரமாய்ச் சுழன்று, பணியாற்றிய வருமான மனோரஞ்சிதம்—இவர்களிருவரையும் பெரியாரே முன்னின்று தம்பதிகளாக்கினார். திருச்சியில் 4–11–56 அன்று, எளிமையாக நடைபெற்ற இந்த வாழ்க்கை ஒப்பந்த விழாவில், பெரியாருக்கு மனம் நிறைந்து தளும்பும் அளவு மகிழ்ச்சி; கழகத் தோழர்கள் தாமே முன் வந்து, மனமுவந்து, நிறைய அன்பளிப்புப் பொருள்கள் வழங்கியதில்! அன்று மாலை நடந்த பொதுக் கூட்டத்தில் பெரியார்

சொன்மாரி பொழிந்தார். ஆர். எஸ். மலையப்பன் பற்றித் தீர்ப்பு வழங்கிய இரு பார்ப்பன அய்க்கோர்ட் நீதிபதிகளை அங்குதான் கண்டித்துப் பேசினார்.

பெரியார் 28-10-1956 அன்று வேலூர் நகர் மன்ற வரவேற்பை ஏற்று, அங்கே டாக்டர் அம்பேத்கார் படத்தைத் திறந்து வைத்தார். 23-11-1956 அன்று மாயூரம் நகராட்சியின் வரவேற்பினைப் பெற்றுக், காமராசரின் திருவுருவப் படத்தினை அங்கு திறந்து வைத்தார். மறுநாள் மாயூரத்தில் நடைபெற்ற திராவிடர் கழக மாநாட்டிலும் பெரியார் பங்கு பெற்றார். 10-12-1956 அன்று, ஈரோட்டில், தமது அண்ணாரின் கடைசிப் புதல்வன் கஜராஜ் திருமணத்தைப், பெரியார் இருந்து நடத்தி வைத்தார்.

வடநாட்டின் இராமசாமிப் பெரியார் என்று உலக மக்களால் புகழ்ந்து ஏத்தப்பட்டவரும், அரசியல் சட்டத்தின் கர்த்தாவும், தாழ்த்தப்பட்ட ஒடுக்கப்பட்ட மக்களின் பாதுகாவலரும், ஆன டாக்டர் பி. ஆர். அம்பேத்கார், 7-12-1956 அன்று திடீரென மறைந்தார். பெரியார் ஆற்றொணாத் துயருற்றார், தமது அருமைச் சகாவின் மறைவினால்! டாக்டர் அம்பேத்கார் மறைவு இயற்கை மரணமா? அல்லவா? அவரது மகனின் நிலை என்ன? இரண்டாம் மனைவியின் நிலை என்ன?— இப்படியெல்லாம் அப்போது பத்திரிகைத் தலைப்புகள் ?

தமிழ் நாட்டில் தமிழை ஆட்சி மொழியாக்கும் மசோதா, 22-12-1956 அன்று சென்னை சட்ட மன்றத்தில் கொண்டு வரப்பட்டு, 27-12-56 அன்று சட்டமாகவும் நிறைவேற்றப்பட்டது. பெரியார் மகிழ்ச்சியுற்றுப் பாராட்டினார்.

கோவில்களில் தமிழில் அர்ச்சனை செய்ய வேண்டும்; தமிழரால் பூசை செய்யப்பட வேண்டும் என்று பெரியார் அறிவித்ததையும், அதையொட்டி ஒரு போராட்டம் நடத்தப் போவதையும், குறிப்பிட்டுச் சில விளக்கங்கள் கோரி, குன்றக்குடி அடிகளார், பெரியாருக்கு 26-12-1956

தேதியிட்டு ஒரு திருமுகம் அனுப்பினார். அதற்கு நல்ல ஆதார விளக்கங்களுடன் பெரியார் பதில் முடங்கலும் தீட்டியருளினார்: (1) தமிழ் நாட்டில் தமிழன் கோவிலில் உள்ள கடவுள் என்பவைகளுக்குத் தமிழில் பூசை செய்யப் படவேண்டும். (2) தமிழ் நாட்டில் தமிழன் கோயிலுக்குள் தமிழரால் பூசை செய்யப்பட வேண்டும். இந்த இரண்டு காரியங்களும் தமிழனின் தன்மானத்தையும், தமிழ்மொழி யின் தன்மானத்தையும் பற்றியவையாகும். தமிழ் மிலேச்ச மொழி என்பதாலும், தமிழன் சூத்திரன் என்ப தாலுமே இந்த உரிமைகள் மறுக்கப்படுகின்றன. நான் தமிழன் என்று கருதுவது நம் நாட்டிலுள்ள "சூத்திரர்" களையேயாகும்.

நாம் இருவரும் நட்பு முறையில் அன்பர்கள் ஆவோம். கொள்கைகளில் ஒன்றுபட்டவர்களாக இருக்க வாய்ப்பு இல்லாது போயினும், ஒன்றுபட்ட இலட்சியங்களுக்கு மக்கள் நலனையும் தமிழர் தன்மானத்தையும் முன்னிட்டுச் செய்ய இயன்றதைச் செய்வோம்! எனவே அருள் கூர்ந்து என் முயற்சிக்கு ஆதரவு அளிக்க வேண்டுகிறேன். குற்ற மிருப்பின் மன்னித்தருள்க — என்பதாக அமைந்தது பெரியாரின் கடிதம்.

காந்தியடிகளின் முதல் சீடரான ஆச்சாரிய வினோபா பாவே, திருச்சி மாவட்டத்தில் கால் நடையாகச் சென்று, நிலக்கொடை பெற்று வந்தார். சாதி ஒழிப்புப் பிரச்சினை யில் பெரியாருடன் ஒத்த கருத்துக் கொண்ட அவர், பெரி யாரைச் சந்திக்க விரும்பினார். இராமாயணம் முதலியவை களையும், கடவுள் புராணங்களையும் ஏன் ஒழிக்க வேண்டு மென அய்யுற்றார். திருச்சி தேசியக் கல்லூரியில், 18-1-1957 அன்று காலை 10–45 மணிக்கு, இருவரும் சந்தித்துச், சுமார் இரண்டு மணி நேரம் அளவளாவி, மகிழ்ந்தனர்.

நீங்கள் அரசியலில் நேரடிப் பங்கு பெறாமல் சாதி ஒழிப்புப் பணியில் ஈடுபடுவதைப் பெரிதும் பாராட்டுகிறேன் இராமாயணத்திலுள்ள நல்ல நீதிகளை எடுத்துக் கொள்ள

லாமே? கடவுள், புராண ஒழிப்பு வேலையை நீங்கள் விட்டுக் கொடுத்தால், சாதி ஒழிப்புப் பணியில் உங்களோடு நிறையப் பேர் வரக்கூடுமே? என்ற வினோபாவின் கேள்விக் குப், பெரியார், இராமாயணம் நீதி நூல் என்பதற்கு அதில் ஒன்றும் இல்லை. மக்களுக்கு நீதி சொல்ல நினைத்தால் உங்களைப் போன்றவர்கள் புதிய நூல் எழுதலாமே! விஷத் தின்மீது சர்க்கரை பூசிக் கொடுத்தால், பொது மக்களில் எத்தனை பேருக்குச் சர்க்கரையை மட்டும் சாப்பிட்டுவிட்டு, விஷத்தைத் துப்பத் தெரியும்? நான் வான்மீகி, கம்பராமா யணங்களைப் படித்தே சொல்லுகிறேன். கடவுள்கள், பதிவிரதைகள் என்று சொல்லப்படுகின்றவர்களிடம், கொஞ்சங்கூட நாணயமோ, யோக்கியதையோ, ஒழுக் கமோ இருக்கவில்லை. ஒரு கடவுள் உண்டு என்கிறவர் களிடம் நான் தகராறுக்குப் போவதில்லை. ஆனால் என் னுடைய சாதி ஒழிப்புப் பணிக்கு, அந்த ஒரு கடவுள் தடை யாயிருந்தாலும், அதுகூட ஒழிந்துதான் ஆகவேண்டும்!

நீங்கள் ஏழெட்டு மாதங்களாக, என் தமிழ்நாட்டு மக்களிடையே, சாதி ஒழியவேண்டுமென்று சொல்லிவரு கிறீர்கள்! ஆனால் இதைப் பத்திரிகைக்காரர்கள் போடுவதே யில்லை. நான்தான் எனது பத்திரிகையில் இந்தச் சங்கதி களைப் போடுகிறேன்; என்றார் பெரியார். தமக்கு அதிக மான அளவுக்கு பூமிதானம் கிடைத்திடப், பெரியாரும் ஆவன செய்ய வேண்டினார் வினோபா பாவே. பெரியார்— "என்னால் கூடுமான உதவிகளைச் செய்கிறேன். நான் அரசியலில் ஈடுபட்டு, ஆட்சியைப் பிடிக்கிறவனாயிருந்தால் உங்கள் பிரச்சினைக்கு ஒரே வரியில் உத்தரவு போட்டுவிட முடியும்! ஆனால், நான் மேற்கொண்டுள்ள சாதி ஒழிப்பு, சட்டத்தினால் மட்டும் ஆகக்கூடியதில்லை. இந்தப் பணியே எல்லாவற்றிலும் முக்கியமானதென்று, நான் கருதுகிறேன்" எனப் பதிலிறுத்தார். வினோபா பாவேக்கு ஓரளவு தமிழ் தெரியும்; எனினும், இடையில் ஒரு நண்பர் இந்தியில் மொழி பெயர்த்துக் கூறினார். இருவரும் மகிழ்வுடன் விடைபெற்றனர். இது ஓர் அரிய சந்திப்பாகும். பெரியாரை

அழைத்துவர, வினோபா ஜீப் அனுப்பியிருந்தார்; ஆனால் பெரியார் தமது காரிலேயே சென்று வந்தார்.

19–1–57, 20–1–57 இருநாட்களும் திருச்சியில் திராவிடர் கழக, சாதி ஒழிப்பு மாநாடுகள் சீருடன் நடந்தேறின. நாடு முழுவதும் தேர்தல் காற்று சூடாக வீசிக்கொண்டிருந்த நேரம். திருச்சியில் 1956–ல் நடைபெற்ற திராவிட முன்னேற்றக் கழக இரண்டாவது மாநில மாநாட்டில், பொதுமக்கள் வாக்கெடுப்பு மூலமாகக் கருத்தறிந்து, தேர்தலில் தி.மு.க. ஈடுபட்டது. காமராசர் கரத்தை வலுப் படுத்துவோம் என்ற கொள்கையினடிப்படையில், பெரியார் தமது ஆதரவு முழுவதையும் காங்கிரசுக்கே திரட்டித் தந்தார். காமராசர் ஆட்சியின் சாதனைகளைப் பெரியார் போல் ஒழுங்காகப் பட்டியல் போட்டுக் காண்பிக்கக், காங்கிரஸ்காரர்களாலும் இயலவில்லை. முக்கியமான பிரச்சார இயந்திரமே பெரியார்தான்! கண்ணீர்த்துளிப் பஞ்சபாண்டவர்களை முறியடிப்போம்! புறப்படுங்கள்!— என்று பெரியார் கழகத்தோழர்களை உற்சாகப்படுத்தினார். திட்டம் ஏதுமில்லா வைதாரிகள், கண்ணீர்த்துளிகள்—என்று விமர்சித்தார் பெரியார். காங்கிரஸ் ஆதரவு என்பது சில இடங்களில் பார்ப்பனரை ஆதரிக்கும் சூழ்நிலையைத் தோற்றுவித்தது. அப்போதும் பெரியார் பின்வாங்கவில்லை. டி.டி. கிருஷ்ணமாச்சாரியை ஆதரித்தும், டாக்டர் ஏ. கிருஷ்ணசாமியை எதிர்த்தும் பெரியார் பேசி வந்தார்.

காஞ்சிபுரத்தில் அண்ணா, உடுமலையில் மதியழகன், நாமக்கல் நாடாளுமன்றத் தொகுதியில் சம்பத், குளித்தலையில் கலைஞர் மு. கருணாநிதி, சேலத்தில் நாவலர் இரா. நெடுஞ்செழியன் (—இவருக்கு உதயசூரியன் சின்னம் கிடைக்காமல் கோழிச்சின்னம் கிடைத்ததையும் கிண்டல் செய்து பேசினார்கள்) ஆகிய அய்ந்துபேரையும் நிச்சயம் தோற்கடிக்க வேண்டும் என்று திட்டமிட்டார்கள் திராவிடர் கழகத்தார். அய்ந்தில் இரண்டு பழுதில்லை என்ற பழமொழியே மெய்யாயிற்று. தி.மு.கழக வேட்பாளர்கள் தோற்கத்தோற்க, மண்ணைக் கவ்விய கண்ணீர்த்

துளிகள் என்ற பட்டியல், கவிஞர் கண்ணதாசன், முதல் பெயராய்த் திகழ, நாள்தோறும் "விடுதலை"யில் வெளி வந்தது. இந்நிலையில் காமராசர் விருதுநகர் தொகுதியில் வெற்றி பெற்றார். அப்போது கிடைத்திருந்த முடிவின்படி வெற்றி பெற்ற 34 பேரில் 23 பேர் காமராசர் ஆதர வாளர்கள். எனவே பெரியார், வெற்றிப் பெருமிதத்தில் மிதந்தார். அன்று 6-3-1957. சென்னையில் 78 ஜோடிக் காளைகள் பூட்டிய ரதத்தில்–புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் முன்னின்று நடத்தப்—பெரியார் ஊர்வலம் வந்தார். காமராசர் ஆட்சி அமைந்தது. அண்ணாவைச் சேர்த்துப் பதினய்ந்து பேர் சட்டமன்றத்திலும், சம்பத்தைச் சேர்த்து இருவர் நாடாளுமன்றத்திலும் ஆக, முதன் முறையாகத் திராவிட முன்னேற்றக் கழகம், சட்டசபைப் பிரவேசம் செய்தது.

பெரியாருடைய வாழ்க்கையில் சுவையான நிகழ்ச்சி களுக்கோ, தீரமிக்க போர்ராட்டங்களுக்கோ பஞ்சமில்லை. எனினும் இந்தியாவின் வரலாற்றிலேயே குறிப்பிடத்தக்க தான கோர்ட் அவமதிப்பு வழக்கு–கண்டெம்ப்ட் ஆஃப் கோர்ட்– 1957–ல் நடைபெற்றது, பெரியாரின் வீர வரலாற்றுக் காவியத்தில், ஒரு பொன்னேடாகும். என்ன அந்த நீதிமன்ற அவமதிப்பு?

திருச்சி மாவட்டத்தில் கலெக்டராக இருந்த ஆர். எஸ். மலையப்பன் தஞ்சை மாவட்டத்துக் கள்ளர் வகுப்பில் பிறந்தவர். 30 ஆண்டுகட்கு மேலாக, சீரான நிர்வாகத் திறன் படைத்தவர். குளித்தலை வட்டத்தில் நிலக் குத்தகைத் தகராறில் அவர் வழங்கிய தீர்ப்புக்கு எதிராகப், பாதிக்கப்பட்ட நிலப்பிரபுக்கள், சென்னை உயர்நீதி மன்றத்தில், மேல் முறையீடு செய்தனர். அதனை விசாரித்த இரு பார்ப்பன நீதிபதிகள், கலெக்டர் தமிழர் என்பதால், எவ்வளவு தூரம் தாக்க முடியுமோ தாக்கி, அரசு உடனே இவரை வீட்டுக்கனுப்ப வேண்டுமென்றும் பரிந்துரைத்தனர். இதனை உச்சிமேல் வைத்து மெச்சிக் கொண்டது, "இந்து" ஏடு. திருச்சிவாழ் பொதுமக்களின் ஏகோபித்த அபிமானத்

தைப் பெற்றவராதலின், மலையப்பன் மீது தீர்ப்பைக் கண்டித்து, ஒரு லட்சம் பொதுமக்கள் திரண்டெழுந்த கூட்டத்தில், பழனியாண்டி (பிறகு நாடாளுமன்ற உறுப்பினர்) தலைமையில், தீயிட்டுக் கொளுத்தப்பட்டது "இந்து"ப் பத்திரிகை. இந்த நிகழ்ச்சியும், 4-11-56 அன்று பெரியார் பேச்சும், "விடுதலை" நாளேட்டில் வெளிவந்தன. இவை உயர்நீதி மன்றத்தை அவமதித்ததாகும் என்று பெரியார் மீதும், "விடுதலை" ஆசிரியர் ஈ. வெ. ரா. மணியம்மையார் மீதும், அரசு வழக்குத் தொடர்ந்தது. பெரியார் 4-11-56 திருச்சிப் பொதுக்கூட்டத்தில் மிகத் துணிவுடன் பேசியிருந்தது உண்மையே. இரு பார்ப்பன நீதிபதிகள், ஒரு தமிழராகிய உயர் அதிகாரிக்கு எதிராகத் தீர்ப்பெழுதினார்கள். அட்வகேட் ஜெனரலாகிய ஒரு பார்ப்பனர், கலெக்டருக்காக (அரசுக்காக) வாதாடத் தவறினார். இதை ஆதரித்துப் பார்ப்பன ஏடான "இந்து" கும்மாளம் போடுகிறது. இது ஆரியர் திராவிடர் பிரச்சினையே தவிர வேறில்லை—என்று பெரியார் ஆவேசத்துடன் பேசியிருந்தார்.

வழக்கு விசாரணை 9-4-1957 அன்று சென்னை உயர் நீதி மன்றத்தில் தலைமை நீதிபதி பி. வி. ராஜமன்னார், மற்றொரு நீதிபதி ஏ. எஸ். பஞ்சாபகேச அய்யர் அய். சி. எஸ். ஆகியோர் முன்னிலையில் எடுத்துக் கொள்ளப்பட்டது. "குற்றவாளி என நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்களா?" என்று நீதிபதிகள் பெரியாரைக் கேட்டார்கள். "இது சட்ட நீதிமன்றம்; நியாய நீதிமன்றமல்ல! (Court of Law; not Court of Justice) எனவே சட்டத்தின்படி நான் குற்றவாளியாகலாம். ஆனால் நியாயத்தின்படி அல்ல. நான் எதிர்வழக்காட விரும்பவில்லை. தகுந்த அவகாசம் கொடுத்தால் எனது கருத்துகளை ஒரு ஸ்டேட்மெண்ட் மூலமாகத் தெரிவிக்கிறேன்" என்று பெரியார் கோரவும் 15 நாள் கெடு தரப்பட்டது. 1957 ஏப்ரல் 23-ஆம் நாள் பெரியார் சிறை செல்லத் தயாராகப் படுக்கையுடன்தான் நீதிமன்றம் நோக்கிச் சென்றார். இலட்சியத்தைச் சாதாரண

மாக அடைய முடியாது; தக்க விலை கொடுக்கத்தான் வேண்டும் என்பது பெரியாரின் தத்துவமன்றோ?

நீதிபதிகள் அனுமதியுடன் சுமார் 1 மணி நேரம் பெரியார் தமது அறிக்கையைப் படித்தார். (நீதி கெட்டது யாரால்? என்ற 128 பக்கமுள்ள நூலாக அது வெளியாகியுள்ளது.) நீதிக்காகப் போராடும் உரிமை முழக்கம் என்றே அதனைக் குறிப்பிட வேண்டும். பெரியாரின் உரத்த குரலில் ஒலித்த அறிக்கையை, நீதிபதிகள் கவனமாகச் செவிமடுத்தனர். பெரியாருக்கு 100 ரூபாய் அபராதம் விதித்தனர். மணியம்மையாரை எச்சரித்து விடுவித்தனர். நீதி மன்றத் தீர்ப்பை விமர்சிக்கப் பொதுமக்களுக்கு உரிமையுண்டு, என்ற கருத்தையும் தீர்ப்பில் கூறியிருந்தனர்.

"பார்ப்பனர்கள் எந்தப் பதவியில் இருந்தாலும், அவர்களுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் பார்ப்பனரல்லாதவர்களை ஒழித்துக் கட்டுவதிலோ, அவர்களைத் தலையெடுக்கவொட்டாமல் செய்வதிலோ, முயன்று வருவார்கள் என்பதற்கு என்னால் ஏராளமான உதாரணங்கள் காட்டமுடியும். லஞ்ச ஊழல் குற்றம் சாட்டப்பட்ட பார்ப்பன அய்.சி.எஸ். அதிகாரிகளான டி.எஸ்.சாமிநாதன், எஸ்.ஏ. வெங்கட்ராமன், எஸ்.ஒய். கிருஷ்ணசாமி ஆகியோர் வழக்கிலெல்லாம், இப்போது திருச்சி கலெக்டரைத் தாக்கி எழுதியமாதிரி, எந்த நீதிபதியாவது எழுதியது உண்டா? இல்லை! காரணம், அவர்கள் பார்ப்பனர்கள்; இவர் பார்ப்பனரல்லாதவர். நான் 50 ஆண்டு காலமாய்ப் பாடுபட்டும், இன்னும் பார்ப்பனர்களால், பார்ப்பனரல்லாத மக்களுக்கு இழைக்கப்பட்டுவரும் கொடுமைகளைக் கணிசமான அளவுக்குக் குறைத்திருக்கிறேனா என்று என்னாலேயே சொல்ல முடியவில்லை. நான் பொதுநலத்துக்காகவே போராடுகிறேன். பார்ப்பான் நீதிபதியாய், ஆட்சியாளனாய் இருக்கும் நாடு,கடும்புலி வாழும் காடேயாகும். ஆதலால் நாங்கள் புலி வேட்டை ஆடுகிறோம். புலி, மேலே பாய்ந்தால்; ஒருவர் இருவர் கடிபடவேண்டியதுதான்! எல்லாப் பார்ப்பனர்களும் இப்படித்தானா? என்றால், ஆமாம்! வாயில்—நாக்கில் குற்றம்

மிருந்தாலொழிய வேம்பு இனிக்காது; தேன் கசக்காது; பிறவியில் மாறுதல் இருந்தால்ஒழிய புலி புல்லைத்தின்னாது; ஆடு மனிதனைத் தின்னாது! அதுபோலவேதான், பார்ப்பனர்கள் தன்மை! இந்த ஸ்டேட்மெண்டில் நான் எவ்வித குரோத, துவேஷ உணர்ச்சியுமில்லாமல், ஒரு பொது நலத் தொண்டனாய், விஷயங்களை எடுத்துக்காட்டி, நீதிபதிகள் முன் சமர்ப்பித்துள்ளேன். இதன்மீது கனம் நீதிபதிகளின் 'சித்தம் எதுவோ அதுவே என் பாக்கியம்' என்பதாகக் கருதி ஏற்கத் தயாராயிருக்கிறேன்''—பெரியாரின் நியாயக் கோரிக்கைச் சாசனத்தின் சில பகுதிகள் இவை!

இந்த முடிவு வெளியாகுமுன்பே, 18-4-1957 அன்று திருச்சியில் கூடிய மத்திய செயற்குழுவில், சாதி ஒழிப்புக் கிளர்ச்சியின் ஒரு கூறாக, 5-5-57 முதல், பார்ப்பனர் ஓட்டல்களின் முன்புறப் பலகைகளில் உள்ள பிராமணாள் என்ற 'எழுத்துகளை அழிப்பதாக முடிவெடுக்கப்பட்டது. கிளர்ச்சிக்கு முன்னோட்டமாகப் பெரியார் அவர்கள் சென்னை ஆட்சியாளருக்கும், கவர்னருக்கும் ஒரு கடிதம் எழுதி, 27-4-57 ''விடுதலை''யில் அதை வெளியிடச்செய்தார். அதில், தமது நோக்கம் சாதி மத பேதமற்ற சமுதாயம் நிறுவப்படவேண்டும் என்பதாகவும், அரசாங்க ஆணைகளில் கூடச் சாதியைக் காட்டக் கூடாது என்றெல்லாம் குறிப்பிடப்பட்டுள்ளதாகவும் எடுத்துக்காட்டி; சாதிப்பிரிவு என்பது, நம் நாட்டில் அனுபவப்பூர்வமாகப், பார்ப்பனர் பார்ப்பனரல்லாதார் என்றஇரண்டுக்குள் அடங்கிவிடுவதாக உதாரணத்துடன் விளக்கினார். சிலர் தங்களை க்ஷத்திரியர் என்றும், சிலர் வைசியர் என்றும் அழைத்துக்கொண்டாலும், பிராமணாள் இவர்களையும் சூத்திராள் என்றுதான் கருதுகிறார்கள்—''தெரிந்தோ தெரியாமலோ பிராமணாள் விடுதி என்று உணவுக் கடைகளை நடத்திட அரசு அனுமதி தந்து வருகிறது. பார்ப்பனர் வீடு என்று அவர்கள் தங்கள் சொந்த வீட்டில் போட்டுக் கொள்ளட்டும். அரசு அனுமதியோடு, மற்றவர்களை இழிவுபடுத்தும் அடையாளமாகவும், பணம் சம்பாதிக்கவும், ஏன் பிராமணாள் என்ற வார்த்தை பயன்

படவேண்டும்? 25 ஆண்டுகட்கு முன்பே நான் சில நகர சபைத் தலைவர்களையும் சேர்த்துக்கொண்டு, நகரசபை லைசன்ஸ் தர மறுத்தேன். அரசு, நகரசபை இதில் தலையிடக்கூடாதென்றது. பிறகு ரயில்வேயுடன் போராடி, அங்கேயிருந்த பிராமணாள் ஓட்டல், பிராமணாள் சாப்பிடுமிடம் ஆகியவற்றை எடுக்கச் செய்தேன். எனவே அருள் கூர்ந்து, 5-5-57க்குள் அமுலுக்கு வருமாறு, ஓர் அவசர உத்தரவு பிறப்பித்துப் பிராமணாளை அகற்றிவிட்டால், நேரடி நடவடிக்கையாக ஒரு கிளர்ச்சி செய்ய அவசியமிருக்காது, என்பதைப் பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன்!'' என்று முடிவடைந்தது பெரியார் கடிதம்.

'பிராமணாள்' அழிப்புக்கிளர்ச்சி ஏன்? என்ற தலைப்பில் பெரியார், 28-4-57 "விடுதலை" ஏட்டில் ஒரு விளக்கமான அறிக்கையினையும் வெளியிட்டார். எதற்கும் பதிலோ, நடவடிக்கையோ காணப்பெறாமையால், திட்டமிட்டபடி, 5-5-57 அன்று, சென்னை திருவல்லிக்கேணி, பைக்ராஃப்ட்ஸ் சாலையிலுள்ள முரளி கஃபே என்ற பார்ப்பனர் உணவு விடுதியைக் களமாகத் தேர்ந்தெடுத்துப், போராட்டம் தொடங்கியது. முதல் நாள் கணக்கற்ற மக்கள் கூட்டம். கடையின் முன்னர் மறியல் செய்து, பிராமணாள் என்ற எழுத்துகளை அழித்திட, ஈ.வெ.ரா. மணியம்மையார், விசாலாட்சியம்மாள், மனோரஞ்சிதம் அம்மாள், எஸ். குருசாமி, எம்.கே.டி. சுப்பிரமணியம், மு.பொ. வீரன், டி. எம். சண்முகம், திருவாரூர் தங்கராசு, ஏ.பி. சனார்த்தனம் ஆகியோர் முன்வந்தனர். பெரியாரும் வந்து மேற்பார்வையிட்டார். ஓட்டல் முதலாளியிடம் கேட்டுக்கொண்டும், இசையவில்லை. அழிக்க முயன்றவர்களைப்போலீசார் கைது செய்தனர். நாள்தோறும் இந்தக் கிளர்ச்சி இடைவிடாமல் நடத்தப்பட்டு வந்தது. 2-12-57 அன்று 210–ஆம் நாள் கிளர்ச்சி வரையில் கைதாகி தண்டனை பெற்றோர் 837 பேர்.

திருச்சியில் 16–6–57 அன்று நடைபெற்ற சாதி ஒழிப்பு மாநாட்டின் தலைவர் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்.

திறப்பாளர் ஏ. பி. சனார்த்தனம். பெரியார், குருசாமி, வீரமணி ஆகியோர் பங்கேற்றனர். பார்ப்பனர் ஓட்டலில் யாரும் உண்ணுவதில்லை என முடிவு மேற்கொள்ளப்பட்டு, அவ்வாறு புறக்கணித்தோர் பட்டியல் தினந்தோறும் "விடுதலை"யில் வெளிவந்து கொண்டிருந்தது. தஞ்சை மாவட்டத்திலிருந்து, சாதி ஒழிப்புப் பிரச்சாரப் படை ஒன்று, 20-6-57 அன்று புறப்பட்டு, நடந்தே பிரச்சாரம் செய்து கொண்டு, 30-7-57 அன்று சென்னை வந்து சேர்ந்தது. 22 கருஞ்சட்டை வீரர்களடங்கிய இப்பட்டாளத்தின் தலைவர் நீடாமங்கலம் அ. ஆறுமுகம்; தளபதி ஆனைமலை நரசிம்மன் பி. ஏ. வழியெங்கும் கழகத் தோழர்கள் வரவேற்று, வாழ்த்தி, வழியனுப்பி வைத்தனர் இவர்கள் செலவுக்கும், சென்னையில் அழிப்புக் கிளர்ச்சியில் ஈடுபடுவோர்க்கும் சேர்த்து, நிதியும், அரிசி, பருப்புச் சாமான்களும் குவிந்தன. பிரச்சாரப் படையினர் இவற்றையும் விடாமல் திரட்டி வர, இவர்கள் பின்னால் ஓர் இரட்டை மாட்டு வண்டியும் தொடர்ந்தது. சாதி ஒழிப்புப் படையினர் சென்னை சேர்ந்தபோது, அவர்களுக்குக் கழகம் மாத்திரம் வரவேற்புத் தந்து மகிழவில்லை! அரசும் அவர்கள் வழிமேல் விழிவைத்துக் காத்திருந்தது! சாதி ஒழிப்புப் படையின் தலைவருக்கும், தளபதிக்கும் 2-8-57 அன்று, 5 வாரம் சிறைத் தண்டனைப் பரிசு கிடைத்தது!

23-7-57 அதிகாலை 1-40 மணிக்கு டாக்டர் பி. வரதராசலு நாயுடு காலமாகி விட்டார். "தலைமையிடம் காலி" என்று பெரியார் "விடுதலை"யில் எழுதினார். 40 ஆண்டுகட்கு மேலாகப் பழகியவர். தமிழகக் காங்கிரசை நிலைநிறுத்திய நாயுடு—நாயக்கர்—முதலியார் ஆகிய மும்மூர்த்திகளில் ஒருவர். அவரைவிட ஜூனியர்களெல்லாம் பெரிய நிலைக்கு வந்தும், அவர் ஒரு பார்ப்பனரல்லாதாராக இருந்ததால், மேலே உயர முடியவில்லை. ஏராளமான வருமானத்தை இழந்து விட்டுத்தான், அவர் காங்கிரசில் உழைத்தவர். காங்கிரசால் பலனடையாத

தலைவரும் அவர்தான். இனி அவருக்குப் பின் அங்கு தலைவர்களே கிடையாது என்று டாக்டர் நாயுடுஅவர்களின் மனைவியார் ருக்மணியம்மாள் அவர்களுக்குப் பெரியார் அனுதாபம் தெரிவித்துக்கொண்டார். (கலைஞர் ஆட்சியில் டாக்டர் நாயுடுவின் மனைவியாருக்கு அரசினர் தோட்டத்தில் இலவசமாக வீடு ஒன்று குடியிருக்கத் தரப்பட்டிருந்தது)

1957 ஆகஸ்டு 15–வழக்கம் போல் பெரியார் கண்ணோட்டத்தில் துக்க நாள்! ஆனால், இந்த ஆண்டு பெரியாரின் ஆத்திரம், அந்த ஒரு குறிப்பிட்ட நாளின் மீது அல்ல; இதற்குக் காரண கர்த்தாவான காந்திமீது! திருச்சியில் கூடிய நிர்வாகக் குழுவில், காந்தி பொம்மையை உடைப்பது என்றும் முடிவெடுக்கப்பட்டது. அதற்கான நாளாக, ஆகஸ்டு 13 தேர்ந்தெடுக்கப்பட்டது. இதை நியாயப் படுத்திப் பெரியார் பல பொதுக் கூட்டங்களில் பேசினார். "காந்தியால் நமது சமுதாயத்திற்கு ஒரு நன்மையும் ஏற்படவில்லை. அவரால்தான் நாம் வட நாட்டார்க்கும், பார்ப்பானுக்கும் அடிமைகளாக இருக்கிறோம். காந்தியால் ஒழுக்கக் கேடும், பித்தலாட்டமும், அரசியல் சூதாட்டமும், ஜனநாயக வஞ்சகமும் வளர்ந்துவிட்டன. சுயராஜ்யம் பெற்றுப் பத்தாண்டுகளாகியும், என்ன பலன்? காந்தி ஒன்றும் அவதார புருஷரல்லர். பார்ப்பான், பாமர மக்களுக்கு அப்படி ஓர் நம்பிக்கையை உண்டாக்கினான். அவர், வர்ணாசிரம தர்மம் அப்படியே இருக்க வேண்டும் என்றவர். தீண்டாதவர்களுக்கு, எல்லாமே தனியாக அமைத்துத் தர வேண்டும் என்றவர். நானே இந்த நாட்டிற்கு 'காந்தி நாடு' என்று பெயர் வைக்கச் சொன்னேன்; அவர் மறைந்த அன்றைக்கே! இப்போது, காந்தி சிலையை உடைப்போம்; காந்தி படத்தைக் கொளுத்துவோம் என்கிறேன். காந்தி செய்த பித்தலாட்டங்களை ஜின்னாவும், அம்பேத்காரும் அறிந்ததைவிட, நான் நன்றாக அறிந்தவன். காந்தி செய்த மோசடிகளை மக்களுக்குத் தெரிவிப்பேன். அவர் தவறே செய்யவில்லை என்று வேண்டுமானால் யாராவது என்னிடம் வாதாடிப்பார்க்கட்டும்! காந்தி படத்தை எரிக்கக்

கூடாது என்பவர்கள், சாதி ஒழிய வேறு ஒரு வழி சொல்லட்டுமே!''—என்றார் பெரியார்.

18–8–57 அன்று வட ஆர்க்காடு மாவட்டத்திலிருந்தும், சாதி ஒழிப்புப் பிரச்சாரப் படை ஒன்று புறப்பட்டுக், கால் நடையாகச் சென்னை சென்றடைந்தது. ஆகஸ்டு 1-ந்தேதி எஸ். குருசாமியும் மற்ற சென்னை மாவட்டக் கழகத் தோழர்களும், பிராமணாள் அழிப்புப் போராட்டத்துக்கு நிதி திரட்டுவதற்காகக், கொத்தவால் சாவடிப் பகுதியில், உண்டியல் மூலம் வசூலித்து வந்தபோது, போலீசார், இவர்கள் பிச்சை எடுத்தார்கள் என்று கூறி, வழக்குப் போட்டு, 3 வாரம், 4 வாரம் சிறைத்தண்டனை வழங்கப் பட்டது. ஆனால், முன்னதாகவே 14-8-57 அன்று எல்லாரும் விடுதலையானார்கள். கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் 1957 ஆகஸ்டு 30–ஆம் நாள் சென்னையில் மறைந்து போனார். நாடகமும் சினிமாவும் நாட்டுக்குக் கேடு என்று நினைக்கும் பெரியாரையும் தம்பால் ஈர்த்த புரட்சிவீரர் கலைவாணர். கடைசி வரையில் திரையுலகில், பகுத்தறிவுக் கசப்பு மருந்தை நகைச்சுவைத் தேனில் குழைத்து ஊட்டி வந்தார். தாமே நொந்து போன நிலையிலும், வந்தாரை வரவேற்று ஆதரிக்கும் வள்ளல் மனம் படைத்தவர்! யார் யாரோ தமக்குச் சொந்தமானவரென்று நினைத்து உரிமை கொண்டாடினாலும், அவர் தொடர்பெல்லாம் திராவிட இயக்கத்துடனேதான்! அவர் சிறைப்பட்டபோது பெரியார் உள்ளமுருகினார். மறைந்தபோது அளவிறந்த துயருற்றார்.

இந்தித் திணிப்புக்கு மத்திய அரசு மீண்டும் வாலை நீட்டிப் பார்த்தது. ''விடுதலை'' ஏட்டில், கொட்டை எழுத்தில், 4–9–57 அன்றும், தொடர்ந்தும், ஒரு பெட்டிச் செய்தி வெளியிடப்பட்டது:—இந்திப் பிசாசு மீண்டும் தலையெடுக்கிறது; தமிழர்களே! மண்டையிலடிக்கத் தயாரா குங்கள்!—என்பதாக. பள்ளிப் பிள்ளைகளுக்குத் தேவை யான பாடப் புத்தகங்களை அரசே வெளியிட வேண்டு மெனப் பெரியார் யோசனை கூறிவந்தார். அதனை ஏற்றுக் கொண்டது போல், 13–9–57 அன்று அரசாணை

பிறப்பிக்கவே, இது பெரியாரின் வெற்றிதான் என்று கல்வி யாளர்களால் பேசப்பட்டது. இந்திப் பாம்பைக் கொல் லுங்கள் என்று, 6–9–57 அன்று தலையங்கம் தீட்டியது "விடுதலை" ஏடு.

நுங்கம்பாக்கத்தில் இந்தி எதிர்ப்பாளர்கள் கூட்டம் என்பதாக எல்லாக் கட்சிக்காரர்களையும் அழைத்து நடத் தப்பட்ட ஒரு கூட்டத்தில் தமது பேச்சைப் பற்றிப் பெரி யாரே குறிப்பிடுகின்றார்:— "அந்தக் கூட்டத்தில் பேசிய திருவாளர் இராஜகோபாலாச்சாரியார் அவர்கள் தமிழ் நாட்டுக்கு ஆங்கிலமே ஆட்சி மொழியாக இருக்கவேண்டும் என்று பேசினார். ஆங்கிலமே போதனா மொழியாக இருக்க வேண்டும் என்றும் பேசினார். பிறகு நான் பேசும் போதும் அதுபோலவே பேசிவிட்டு,— ஆங்கிலம் பேச்சு மொழியாக இருந்தாலும் மிகவும் பயன்படும் என்றும் சொன்னேன்.

அதே சமயம், இப்படி நான் சொல்வதால், மொழி வெறியர்கள் சிலர் என்னை, 'நீ யாருக்குப் பிறந்தாய்?' என்றுகூடக் கேட்டார்கள். 'அந்த மொழியைப் பேச வேண்டும் என்று சொல்வதனால், நாம் ஆங்கிலேயனுக்குப் பிறப்பதானால், மற்றபடி காப்பி குடிப்பது முதற்கொண்டு, இரயில், ரேடியோ, ஆகாயவிமானம், டெலிபோன், மருந்து முதலியவை ஆங்கிலேயனுடையவை என்று தெரிந்து அனு பவிக்கிற நாம், எத்தனை தடவை ஆங்கிலேயர்களுக்குப் பிறந்தவர்களாவோம் என்பதைச் சிந்தித்துப் பார்த்தால், மொழி பேசுவதனால் ஆங்கிலேயனுக்குப் பிறந்தவர்களாக மாட்டோம் என்று சொன்னேன்.

தமிழின் மூலமோ, தமிழ் இலக்கியத்தின் மூலமோ, தமிழ்ச் சமயம்—தமிழ்ப் பண்பாடு மூலமோ நாம் உலக மக்கள் முன்னிலையில் ஒரு நாளும் இருக்க முடியாது. தமிழ் வடமொழியைவிட, இந்தி மொழியை விடச் சிறந்தது என்பதிலும், பயன்படத்தக்கது என்பதிலும் எனக்கு அய்ய மில்லை என்றாலும், நாம் இன்றைய நிலைமையைவிட வேகமாக முன்னேற வேண்டுமானால் ஆங்கிலந்தான் சிறந்த

சாதனம் என்றும், ஆங்கிலமே அரசியல் மொழியாகவும், போதனா மொழியாகவும், இருந்தாக வேண்டும் என்றும், ஆங்கில எழுத்துகளே தமிழ் நெடுங்கணக்கு எழுத்துகளாக ஆவது அவசியம் என்றும், ஆங்கிலமே நம் பேச்சு மொழியாக ஆவது நலம்பயக்கும் என்றும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.”

தந்தை பெரியாரின் 79–ஆவது பிறந்த நாளைத் தஞ்சைத் தரணி புதுமுறையில் கொண்டாடிச் சிறப்பிக்கத் திட்டமிட்டது. சேலம் போன்ற ஊர்களில் பெரியார் பிறந்த நாளைப் பொலிவுடன் கொண்டாடி, இந்திச் சனியனைத் தாக்கவும், சாதியைப் போக்கவும், இழிவினை நீக்கவும் உதவியாகப் பெரியாருக்கு வெள்ளியாலான வாள், சம்மட்டி, கேடயம் போன்ற போர்க் கருவிகளைப் பரிசாக வழங்கினர். சென்னை பெரியார் திடலில் 23–9–57 அன்று நடந்த விழாவில் எஸ். ராமநாதன், சி. பா. ஆதித்தன் ஆகியோர் பங்கேற்றனர். “கரண்ட்” ஆங்கில வார ஏட்டின் ஆசிரியர் டி. எஃப். காரகா, 27–9–57 அன்று பெரியாரை வந்து சந்தித்துச் சென்று, 2–10–57, 9–10–57 தேதி இதழ்களில் நல்ல மதிப்பீட்டுக் கட்டுரை தீட்டியிருந்தார். 9–10–57 அன்று ஆத்தூரில் பேசிய பெரியார், சாதி ஒழிப்புப் போரில் ஈடுபட விரும்புவோர் இரத்தத்தில் கையெழுத்திட்டுத் தமக்கு அனுப்புமாறு கோரினார்.

தஞ்சையில் சாதி ஒழிப்பு (ஸ்பெஷல்) மாநாடு 4-11-57 அன்று கோலாகலத்துடன் கூடிற்று. இரண்டு லட்சம் ஈட்டிகள் திரண்டதாகப் பெரியாரே வர்ணித்தார். இந்த மாநாட்டில்தான் பெரியாரை ஒரு தராசில் அமர்த்தி இன்னொரு தட்டில், அவரது எடைக்குச் சரியாக வெள்ளி ரூபாய்களை அள்ளிக் கொட்டித், துள்ளும் உவகையில் உள்ளம் களிகொள்ளக், கருஞ்சட்டையினர் பெருஞ்சாதனை புரிந்தனர். வெள்ளிப் பணத்தைக் கண்டதும், உள்ளம் குளிர்ந்து, ஓய்ந்து விடவில்லை பெரியார். அங்குதான் புதியதொரு போர்ப் பிரகடனத்தைப் புலியேறு போல் முழக்கினார். சாதி ஒழிப்புக்குச் சர்க்கார் இணங்காவிடில்—

அதாவது, பிராமணன் என்று ஒரு சாதி கிடையாது சட்டத்தில் அந்த மாதிரிக் கருதமாட்டோம் என்று கூறா விடில்—அரசியல் சட்டத்தில் சாதியைப் பாதுகாக்கும் பிரிவுக்குத் தீ வைப்போம் என்றார் பெரியார். அக்கிர காரத்தைக் கொளுத்தி, 1000 பார்ப்பனர்களையாவது கொன்றால்தான் சாதி ஒழியுமென்றால் அவ்வாறே கொளுத்துவோம்; அவ்வாறே கொல்லுவோம் என்றார் பெரியார். மக்களே எதிரொலித்து, இப்படியாக முழங்கி னார்கள். தீ வைக்கும் நாள் 26-11-1957 என்பதையும் பெரியார் அங்கேயே அறிவித்துவிட்டுத் திருச்சி சென்றார். 6-11-57 அன்று அரசு பெரியாரைத் திருச்சியில் கைது செய்து, அவர்மீது 117, 323, 324, 326, 436, 302 ஆகிய ஆறு செக்ஷன்களில் வழக்குப் பதிவு செய்து, பின்னர் விடு வித்தது. பெரியார் தளர்ச்சியுறவில்லை. 26-11-57 அன்று நிச்சயம் நாங்கள் அரசியல் சட்டத்தைக் கொளுத்துவோம். சாம்பலை மந்திரிகளுக்கு அனுப்புவோம். நான் சென்னை மாநகரில் இந்திய அரசியல் சட்டத்தைக் கொளுத்துவேன்—என்ற வீர முரசு கொட்டினார். மீண்டும் பெரியாரை 25-11-57 அன்று, திருச்சியில் கைது செய்து, அந்தச் சிறைப் பறவையின் சிறைக்கோட்டம் நண்ணிய எண்ணிக்கையைப் பதினைந்தாக உயர்த்தி, அவரையும் உயர்த்தியது அரசு!

சட்டம் கொளுத்துவோர் பட்டியல் "விடுதலை" ஏட்டில் நாள்தோறும் 10 ஆயிரமாகப் பெருகி வந்தது. 26-ம் நாள் மட்டும் நாடு முழுவதும் 3000 பேர் கைதாயினர். 15 பேர் சிறைக்கொடுமையால் மாண்டனர். "நியூயார்க் டைம்ஸ்" ஏட்டில், இந்தியாவில் திராவிடர் கழகத்தினர் இந்திய அரசியல் சட்டத்தையே கொளுத்தி, 2000 பேருக்கு மேல் சிறை ஏகினர் என்று செய்தி ஒன்று பிரசுரமாயிற்று! அரசியல் சட்டத்தைக் கொளுத்தித் திராவிடர் கழகப் பொதுச் செயலாளரான எஸ். குருசாமி கைதாயினார். அவர் இத்தோடு ஒன்பதாம் முறையாகச் சிறை புகுந்தார்!

சென்னையில் 30-11-57 அன்று, பெரியாரும் வீரமணியும் பேசினார்கள். தனித் தமிழ்நாடு பெறுவதே எங்கள்

லட்சியம் என்றார் பெரியார். ''மனு தர்ம சாஸ்திரத்தின் மறுபதிப்பாகிய அரசியல் சட்டத்தைக் கொளுத்தியதில் தவறில்லை. எங்கள் உரிமையை, உணர்ச்சியை மதிக்காமல், நாங்களும் இந்த நாட்டு மக்கள்தான் என்பதைக்கூடக் கருதாமல், எங்களுக்கு அடக்குமுறைதான் பதில் என்றால், என்ன நியாயம்? நாங்கள் என்ன வயிற்றுப் பிழைப்புக்கும், விளம்பரத்துக்குமா இந்தக் காரியம் செய்கிறோம்?'' என்று கேட்டார் பெரியார். ''இந்த ராஜ்ய மக்களுக்கு எதில் அதிகாரமிருக்கிறது? அரிசி பற்றாக்குறை இருக்கையில், விலை விஷம் போல் ஏறும்போது, இங்கிருந்து கேரளாவுக்கு அரிசி போவதைத் தடுக்க முடிகிறதா? இங்கிருந்து 60 கோடி வரியைக் கொண்டு போய், நமக்குப் பிச்சைக்காசு 8 கோடி தருகிறானே, கேட்க முடிகிறதா? அங்கே பலகோடிக் கணக்கில் திட்டங்கள் ஆரம்பிக்கிறானே, இங்கென்ன செய்கிறான்? நெய்வேலியில் ஒரு திட்டம் ஆரம்பித்து. அதற்குள்ளாகவே வட நாட்டார்களைத் திணித்து விட்டனர். பெரம்பூரில் ஒரு கோச் ஃபேக்டரி ஆரம்பித்தான். அதிகாரமெல்லாம் வடநாட்டானுக்கும் பார்ப்பானுக்கும்தானே? திராவிடர்கள் வெறும் கூலிகளாகத்தானே, இருக்க முடிகிறது? இதை எதிர்த்து, இந்த ராஜ்ய அரசாங்கம், கேட்க முடிகிறதா? எனவே நாம் தனியாகப் பிரிந்து கொண்டாலொழிய, நம் மக்களுக்கு நன்மை செய்ய முடியாதென்று, ஆதாரப்பூர்வமாய்க் கூறுகிறேன்!'' என்றார் பெரியார்.

இதற்கிடையில் நேரு பிரான் ''இந்திய அரசியல் சட்டம் பிடிக்கவில்லையானால் நாட்டைவிட்டு வெளியேறி விடுங்கள்'' என்று கூறிப், பெரியாரைத் தூண்டிவிட்டார். அத்துடன் ''இந்த அரசியல் சட்டம் பிடிக்கவில்லையானால், ஜெயிலிலோ, பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலோ இருக்கத்தான் அவர்கள் லாயக்கானவர்கள்'' என்றும் ஆத்திரத்தைக் கொட்டினார். எப்போது? பெரியார் மீது வழக்கு நடந்து கொண்டிருக்கும்போது—எங்கே? அதே திருச்சி நகரில்!

''தமிழ் உணர்ச்சிக்குத் தாயகமான திருச்சி நகரில் 20, 30 ஆயிரம் மக்களிடையே இப்படிப் பேசிவிட்டுத்

திரும்பிப் பத்திரமாகத் தன் ஊருக்குப் பறந்து சென்றிருக்கிறார், 8000 போலீஸ் காவலுடன், இந்தியாவின் முதல் மந்திரியாயிருக்கும், பார்ப்பனப் புரோகித சாதியைச் சேர்ந்த, பண்டித ஜவகர்லால் நேரு! இது, தோலைக் கடித்துத் துருத்தியைக் கடித்து, ஆட்டைக் கடித்து மாட்டைக் கடித்துக், கடைசியில் மனிதனையே கடிக்க வந்துவிட்டது—என்னும் பழமொழி போல இருக்கிறது!

இந்த பனியா—பார்ப்பன ஆட்சி ஏற்பட்ட பின், தமிழர்கள் சிறைக் கைதிகள் போல்தான் இருக்கிறோம்! அங்குள்ள கான்விக்ட் வார்டர் போலத் தமிழ்ச் சேவகர்கள், தமிழ் அதிகாரிகள் இருக்கிறார்கள். தமிழர்கள் மந்திரிகளாக வந்தாலும், அதே கான்விக்ட் வார்டர் நிலைதான்!

தமிழ் மக்களே! இந்தச் சந்தர்ப்பத்தில் நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? உங்களுடைய கடமை என்ன? அரசியல் சட்டம் ஏன், யாருக்காகக் கொளுத்தப்பட்டது? நான் உட்பட 3000 பேர் எதற்காகச் சிறை பிடிக்கப் பட்டோம்?

பார்ப்பனர்களைக் குத்தியதற்கா? கொன்றதற்கா? பார்ப்பனச் சேரியில் நெருப்பு வைத்துக் கொளுத்தியதற்கா? பார்ப்பனப் பெண்களை இம்சித்ததற்கா? இல்லை. இல்லவேயில்லை! மற்றவர்கள் இதற்காகச் சிறையில் இல்லை! என் ஒருவன் மீதுதான் குத்தச் சொன்னதாகவும், கொல்லச் சொன்னதாகவும், கொளுத்தச் சொன்னதாகவும் வழக்குப் போட்டிருக்கிறார்கள்; அதுவும் 'வெள்ளரிப் பழத்திற்குப் பூண்போட்டுக் கெட்டிப் படுத்துவது' போன்ற குற்றம்தான் சாட்டப்பட்டிருக்கிறது.

சாதி காப்பாற்றப்படும் சட்டம்எங்களுக்கு வேண்டாம்; அதைத் திருத்து! என்பதற்கு அறிகுறியாக, அறிக்கையெல்லாம் வெளியிட்டு, ஒரு துண்டுக் காகிதத்தைக் கொளுத்துவதன் மூலம் அறிவுறுத்திக் காட்டினோம். அதற்காகக் குழந்தைகள், குஞ்சுகள், பெண்கள், வயோதிகர்கள், கர்ப்பிணிகள், இளைஞர்கள் உட்படப் பத்தாயிரம் பேர் கொளுத்தியதில், 7000 பேரை விட்டுவிட்டு, 3000 பேரைச்

சிறையிலடைத்து, ஊசிப் போன சோளக் கஞ்சியையும், களி மொத்தையையும் உண்ணச் சொல்லிக்; கடும் வேலை கொடுத்துக் கொடுமைப்படுத்தும் இந்த அட்டூழியத்துக்கு என்ன பதில் சொல்லுகிறீர்கள்? சிறையில் கொடுமைக்காளானவர்களில், லட்சக்கணக்கான ரூபாய்ச் சொத்து, ஆயிரக்கணக்கான ரூபாய் ஆண்டு வரும்படி உள்ள செல்வவான்களும், உயர்தர வாழ்க்கையில் உள்ளவர்களும் இருப்பது, இந்த அரசுக்கே தெரியுமே!

இதில் நேருவின் துணிவோ, தீரமோ, கெட்டிக்காரத்தனமோ ஒன்றுமில்லை; தமிழனின் மானமற்ற, சுயநல, ஈனப்பிழைப்பும்; காட்டிக்கொடுத்து வயிறு வளர்க்கும் தன்மையுந்தான் புரிகிறது!

என்மீது அடுத்த இரண்டொரு நாளில், கொலைக்குற்ற வழக்கு விசாரணை நடக்கப்போகிறது. என் தோழர்கள் சிறையில் கிடக்கிறார்கள். விசாரிக்கின்ற நீதிபதிகளை எதிரில் வைத்துக்கொண்டு, ஒரு பெரிய ஆட்சித் தலைவர், 'இவர்களைவிடாதே! இவர்கள் சிறையிலிருக்கத்தக்கவர்கள். மன்னிக்கத்தக்கவர்களல்ல' என்பது போல் பேசினால், இந்த ஆட்சி எவ்வளவு நீதியும், நேர்மையும், நாணயமும் உள்ள ஆட்சியாகும்?

12–ந் தேதி வழக்கு விசாரணை. திருச்சி மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் ஆறு செக்ஷன்களின் கீழ் தொடரப்பட்ட என் மீதான வழக்கு, இப்போது திருச்சி செஷன்ஸ் கோர்ட்டில் விசாரணை. 9–ந் தேதி திருச்சியில் வந்து நேரு இப்படிப் பேசினால், எக்காளமிட்டுச் சென்றால், இந்த ஆட்சியின் கொடி, ஆட்சியின் சட்டம் இவைகளை மட்டுமல்லாமல்; ஆட்சி முறை, ஆட்சி நீதி, ஆட்சிபீடம் இவற்றையும் சுட்டுப் பொசுக்குவதுதானே சரியாகும்! நமக்கு இப்போது நலமான வாழ்வோ, நீதியோ கிடைக்குமா? சிந்தித்துப் பாருங்கள்! தமிழர்களே! சிந்தித்துப் பாருங்கள், தமிழர்களே!"

11–12–1957 "விடுதலை"யில்—இது பெரியார் தலையங்கம்.

திருச்சியில் பெரியார், 6–11–1957 அன்று கைதாகி, அவர்மீது ஆறு செக்ஷன்களின்கீழ் வழக்குத் தொடரப்பட்ட

தல்லவா? திருச்சி மாவட்டத்திலுள்ள குளித்தலையில் 1957 அக்டோபர் 5-ஆம் நாளும், பசுபதிபாளையத்தில் 13-ஆம் நாளும் திருச்சியில் 20-ஆம் நாளும், பெரியார் பேசிய பேச்சுகளுக்காகத்தான் வழக்கு. திருச்சி மாவட்ட செஷன்ஸ் நீதிபதி எஸ். சிவசுப்பிரமணிய நாடார் 14-12-57 அன்று, இந்த மூன்று பேச்சுகளுக்கும் தனித்தனியே ஆறு மாதத் தண்டனை அளித்து, மூன்றையும் ஏக காலத்தில் அனுபவிக்குமாறு தீர்ப்பளித்தார்.

அந்தப் பிரசித்தி பெற்ற தீர்ப்பின் சில பகுதிகள், என்றும் நினைவில் கொள்ளத் தக்கவை; பெரியாரைப் பற்றிய சரியான மதிப்பீடு :—"மூவாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகத் திராவிடப் பெருங்குடி மக்கள் பார்ப்பன ஆதிக்கத்தின் கீழ் வருகிறார்கள். பார்ப்பானின் வைப்பாட்டி மகன் என்ற பொருளை உடைய சூத்திரன் என்ற இழிபட்டத்தை அவர்கள் ஏற்கும்படிச் செய்யப்பட்டதுடன், அதை நம்புவதற்காக வேத சாஸ்திர புராண இதிகாசங்களும் பார்ப்பனரால் எழுதப்பட்டன. திராவிடர்கள் சாதாரண ஊழியர்களாக உழல்கையில், பார்ப்பனர்கள் உத்தியோக மண்டலம் முழுவதையும் ஆக்கிரமித்துக் கொண்டுள்ளார்கள்.

வெள்ளைக்காரரர் ஆட்சி இந்நாட்டை விட்டுப் போனதும் நிலைமை மேலும் மோசமாயிற்று.

இந்திய அரசியல்சட்டம் பார்ப்பனர்களால் ஏற்படுத்தப் பட்டது. பிரதமரும் ஜனாதிபதியும் பார்ப்பனர்கள். இராஜ்ய மந்திரிகளோ, அதிகாரமற்றவர்கள். இந்நிலையில் அரசியல் சட்டத்தைத் திருத்துவதோ அவ்வளவு எளிதல்ல; எனவே சட்டவரம்புகளுக்கு உட்பட்டுச், சாதியை ஒழிப்பதென்பது, இயலாத காரியம். அதனால்தான் ஜின்னா அவர்கள் கத்தியைக் காட்டிப் பாக்கிஸ்தானைப் பெற்றுக் கொண்டார்.

ராஜகோபாலாச்சாரியார் ஆட்சிக்கு வந்ததும் குலக் கல்வித் திட்டத்தைக் கொண்டுவந்தார். 30 நாட்களில் அதைத் திரும்பப்பெறாவிடில் பார்ப்பனர்களைக் குத்தும்படி

எதிரி (பெரியார்) பொதுமக்களைப் பார்த்துச் சொன்னதும் ஆச்சாரியார் பதவியை விட்டே விலகினார். ஆகவே சாதிப் பாகுபாடுகளை ஒழிப்பதற்கு ஒரே வழி, பலாத்காரத்தைப் பயன்படுத்தித், தமிழ்நாட்டை விட்டுப் பார்ப்பனர்களை விரட்டுவதே ஆகும். இந்த அதி தீவிரத் திட்டத்தைக் கையாளுமுன்பு, இந்திய அரசியல் சட்டம் கொளுத்தப்பட வேண்டும். அதன்மூலம் சாதி ஒழிப்புக்கு வகை செய்யப் படாவிட்டால், காந்தி படத்தை எரிக்க வேண்டும். அதிலும் பயனில்லையானால், காந்தியார் சிலைகளை உடைக்க வேண்டும். இவற்றிலும் பயன் ஏற்படாவிட்டால், நேருவின் கொடும்பாவியையும், அடுத்து நேருவின் படத்தையும் எரிக்க வேண்டும்!

இவை அத்தனை முயற்சிகளிலும் வெற்றிகிட்டாவிடில், பார்ப்பனர்களை அடிக்கவும் உதைக்கவும் கொல்லவும் வீடுகளைக் கொளுத்தவும் வேண்டும். எதிரிக்கு 78 வயது முடிந்து 79 தொடங்கியுள்ளதால் இனி தாம் நீண்ட நாள் வாழ்ந்து வெற்றியைக் காண்போமா என்ற அய்யத்தால், விரைந்து இத்தகைய செயல்களைச் செய்ய நினைக்கிறார்; அதற்கேற்பத் திட்டங்களைத் தீட்டுகிறார்.

கண்ணை மூடிக்கொண்டு இவரைப் பின்பற்றுகிறவர்கள் நாட்டில் பல்லாயிரக்கணக்கில் இருக்கிறார்கள். அதனால் இவருடைய திட்டங்களால், பயங்கர விளைவுகள் ஏற்படத் தான் செய்யும்.

பிரதமர் பேச்சினால் இந்தத் தீர்ப்பு பாதிக்கப்படலாம் என எதிரி நினைக்கிறார், அவர் நம்பத் தயாராயிருப்பாரானால், அவருக்குத் தெரிவித்துக் கொள்வேன், இத்தீர்ப்பு நீதியுணர்வோடும் நல்ல மனச்சாட்சியோடும்தான் எழுதப் பட்டுள்ளது."

நீதிமன்றத்தின் இந்தத்தீர்ப்பை ஏற்றுத் தலைவணங்கித் தமிழர்களின் தன்மானத் தந்தை, இன்முகத்தோடும் அடலேறு போன்ற எடுப்பான தோற்றத்தோடும், ஆறு மாதச் சிறைத் தண்டனையை அனுபவிக்கச், சிறை புகுந்தார்!

உலக வரலாற்றில், தனது நாட்டின் அரசியல் சட்டத்தையே எரித்து, மாபெரும் கிளர்ச்சி செய்த முதல் தலைவர் பெரியார்தான்! இதனை நிகழ்த்திக் காட்டிய மாபெரும் நிகரற்ற வீரரைத், தமது பதவி காரணமாய்ப் பண்டித நேரு, 'அரசியல் சட்டத்தைக் கொளுத்துவது Childish nonsense. மூட்டை முடிச்சுகளோடு அவர்கள் இந்த நாட்டைவிட்டு வெளியேறட்டும்' என்றாரே—அதே நேரு பண்டிதர், 1958 ஜனவரி 6–ஆம் நாள் சென்னை மீனம்பாக்கம் வந்திறங்கியபோதும், மாலையில் சென்னை மவுண்ட் ரோடில் வலம் வந்தபோதும், லட்சக்கணக்கான கருங்கொடிகள் உயர்ந்து நிற்க, "நான்சென்ஸ் நேரு! Go back!—திரும்பிப்போ!"—என்ற முழக்கம், இடியோசையாய்ச் செவிப்பறையைக் கிழிக்க—போலீஸ் தடியடி தர்பார் நடத்த—இருவர் பலியாக—இப்படி ஓர் எதிர்ப்பை இது வரை கண்டதில்லை என நேரு திகில் கொள்ள—இம் மாதிரிப் போராட்டத்தின்போது, தலைவர்கள் முன் கூட்டியே கைது செய்யப்பட்டும்—நிகழ்த்திக் காட்டியது திராவிட முன்னேற்றக் கழகம்!

21–12–57 "விடுதலை"யில் இப்படி ஒரு வினா எழுப்பப் பட்டிருந்தது:—தேசியம் பேசும் தமிழா! இந்தநாட்டில் நீ இவற்றை எங்காவது காணமுடியுமா? — பிராமணாள் முடிதிருத்தகம், பிராமணாள் லாண்டிரி, கொத்து வேலை தோதாத்ரி அய்யங்கார், மரமேறி மகாதேவசர்மா, மாடு மேய்க்கும் மாதவராவ், பிணம்சுடும் பிச்சுமணி தீட்சிதர், ஏர் உழும் ஏகாம்பர அய்யர், நடவு நடும் நாகலட்சுமி சுப்புணி அய்யர், சாணம் எடுக்கும் விசாலாட்சி சீனு சாஸ்திரி,.........?

# 16. சூழன்றார்

விடுதலையானார்—வடநாடு பய ணம்—பெரியார் திடல் அமைப்பு—தமிழ்நாடு நீங்கிய இந்திய தேசப் பட எரிப்பு—காமராசர் கரத்தைப் பலப்படுத்துதல் — காமராசர் விலகல் — உச்சவரம்பில் சுப்ரீம் கோர்ட் தீர்ப்புக்குக் கண்டனம்—இந்தி எதிர்ப்புக் கலவரங்கள்—இராமாயண எரிப்பு—1958 முதல் 1966 முடிய

"கூண்டுக்குள் சிங்கம். இன்று 15–ஆம் நாள். இன்னும் எத்தனை நாள்?" என்ற பெட்டிச் செய்தி, பெரியார் படத்துடன், விடுதலை தலையங்கப் பகுதியின் மேல், தினந்தோறும் இடம் பெற்று வந்தது. அரசியல் சட்ட எரிப்புப் போரில் அரசின் கணக்குப்படி, 4000 பேர் சிறைக்கோட்டம் புகுந்தவர்கள். மாணவர்கள், பெரியார் சிறையிலிடப் பட்டதைக் கண்டித்து, வகுப்புகளுக்குச் செல்ல மறுத்தார்கள் சில ஊர்களில். விழாக் கொண்டாடுவதில்லை; சுவையான உணவு அருந்துவதில்லை; சுகபோகங்களை விரும்புவதில்லை; பெரியார் விடுதலையாகும் வரை பார்ப்பனர்களுக்கு முடிவெட்ட மாட்டோம்; சலவை செய்ய மாட்டோம்-என்ற ரீதியில் பல்வேறு வகையான சபதங்களை மக்கள் மேற்கொண்டார்கள். 30–12-1957 அன்றுதான் பார்ப்பனர் உணவு விடுதிமுன் கடைசிநாள் மறியல்! இது 5–5-1957 அன்று துவக்கப்பட்டதல்லவா?

9-12-1957 அன்றுதான் பிரதமர் நேரு திருச்சியில் பெரியாரை, மிகத் தரக்குறைவாகவும், தமது தகுதி பதவிகளுக்கு இழிவு நேரும் வகையிலும், இழித்தும் பழித்தும் பேசினார். அவர் மீண்டும் 1958 ஜனவரி 6-சென்னை வருவதாகத் திட்டமிட்டார். திராவிட முன்னேற்றக் கழகம் 29-12-57ல் தனது நாகர்கோயில் பொதுக் குழுவில் தீர்மானித்தபடிப், பெரியாரை இழிவாகப் பேசிய நேருவுக்கு, பிரம்மாண்ட அளவில் கருப்புக்கொடி காட்டித் தமிழ்மக்கள் ஏகோபித்த எதிர்ப்பினைத் தெரிவிக்க வேண்டுமெனத் திட்டமிடப்பட்டது. சிறையிலிருந்தவாறே பெரியார், அநாவசியக் குழப்பங்களைத் தவிர்க்கவேண்டி, 'இந்த முறை திராவிடர் கழகம் நேருவுக்குக் கருப்புக்கொடி காட்ட வேண்டாம்' என்று தெரிவித்து விட்டார். சட்ட மன்றம் நடந்து கொண்டிருந்தது. காமாராசர் முதல்வராயிருந்ததால், எப்படியாவது கருப்புக்கொடி ஆர்ப்பாட்டத்தைத் தவிர்த்திடப் பல வழிமுறைகளைக் கையாண்டார். "சண்டே அப்சர்வர்" பி. பாலசுப்ரமணியம் பகடைக் காயாகப் பயன்பட்டார். கருப்புக்கொடி வேண்டாம், அல்லது ஒரு இடத்தில் மட்டும் பிடிக்கலாமே—என்று இவர் அண்ணாவிடம் பேசினார்; அண்ணா இணங்க மறுத்தார். பெரியாரிடம் தவறான தகவல்—அதாவது அண்ணாவே பயந்து கொண்டு பின் வாங்குவதாகச் செய்தி—திரித்துக் கூறப்பட்டது! கருப்புக் கொடி பிடிக்க அனுமதி தரப்பட்டுள்ளதாகச் சட்டமன்றத்தில் உள்துறை அமைச்சர் பக்தவச்சலம் கூறினார். ஆனால் நடந்தது வேறு! 4-1-1958 மாலை அண்ணா, கலைஞர் ஆகிய முக்கிய தலைவர்கள் கைது செய்யப்பட்டனர். தி.மு. கழகத்தின் எம்.எல்.ஏ. 14 பேரும், எம்.பி. 2 பேரும் சிறைப்பட்டனர், நடிகர்களும் கைதாயினர். எனினும் மீனம்பாக்கத்திலிருந்து மவுண்ட்ரோடு வரை 6-1-58 அன்று நேரு கருங்கொடிக் காடு கண்டு, பாதை மாற்றிச் செல்ல நேரிட்டது!

பெரியாருக்குச் சிறையில் அஜீர்ணமும், பல தொல்லைகளும் ஏற்பட்டன. 5-1-58 அன்று சென்னைப் பொது

மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டார். டாக்டர் ரத்ன வேல் சுப்ரமணியம் போன்றார், பெரியாரின் வயதையும் உடல் நிலையையும் கருத்தில் கொண்டு, அவரை உதகையில் தங்கச் செய்வதே உசிதம் என்று பரிந்துரைத்தனர். ஆனால் பெரியாரோ, தாம் சிறையிலிருப்பதுதான் நியாயமென்று கூறி, வெளியில் வர மறுத்துவிட்டார். பின்னர் அவரை மருத்துவ மனையில் தங்கச் செய்வதே மிகுந்த சிரமமாகி விட்டது அவர்களுக்கு. எப்படியோ, இந்த முறை பெரியார் விடுதலையாகும்வரை சென்னைப் பொது மருத்துவ மனை யில் நீடிக்கும் நிலை வாய்த்தது! உண்மை தெரியாத சிலர், பெரியார் சிறைக்குப் பயந்து மருத்துவமனையிலிருப்பதாக எண்ணினர். "பெரியாரை விடுதலை செய்யக் கோரி நாங்கள் கிளர்ச்சி செய்யத் தயாராயிருக்கிறோம். ஆனால் பெரியாரே இதை விரும்பமாட்டார் என்பது எனக்கு நன்றாகத் தெரியும்— என்று அறிஞர் அண்ணா சொன்னது 7–1–58 "விடுதலை" ஏட்டிலும் வெளியாயிற்று. உண்மை தான்! பெரியாரை விடுதலை செய்யக் கோரி, யாரும் தீர்மானங்கூட நிறைவேற்றக்கூடாது எனத் திராவிடர் கழகம் ஆணையிட்டது. அத்துடன், பெரியார் மருத்துவ மனையிலிருந்தாலும் அது சிறைதான்; எனவே யாரும் பார்வையாளர் வரக்கூடாது என்பதும் வற்புறுத்தப் பட்டது. 8-5-58 அன்று, மணியம்மையார், சிறைப்பட்டிருந்த தோழர்களின் குடும்பத்தினரைக் கண்டு உரையாடினார்.

6–ந்தேதி சென்னையில் நடந்த அமளிகளுக்கு மூல காரணம் பிரதமர் நேருதான் என்றும், மேலும் இந்தித் திணிப்புக்குக் கண்டனம் தெரிவித்தும், ஆங்கிலம் நீடிக்க அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்றும் ராஜாஜி கருத்துரை வழங்கினார். அனைத்திந்திய காங்கிரஸ் கட்சியின் கூட்டத்தில், தென்னகத்துக் காங்கிரஸ் கல்வி அமைச்சர்கள் சார்பில், சி. சுப்பிரமணியம் வாதாடி, 1965–க்குப் பிறகு ஆங்கிலம் நீடிக்க வகை செய்யக் கேட்டுக் கொண்டார். அது ஏற்றுக்கொள்ளப் பெற்றது. டாக்டர் ராம் மனோகர் லோகியா, அரசு அனுமதியோடு பெரியாரை

23-1-68–ல் சந்தித்துப் பேசினார்; சாதி ஒழிப்புப் பணிகளைப் புகழ்ந்தார். பின்னர் தன் ஊருக்குச் சென்றதும் பெரியாரின் விடுதலை கோரிச் சொற்பொழிவாற்றினார். பின்னாங்கு நகரில் பெரியார் பிறந்த நாள் மணிமண்டபம் கட்ட முடிவு செய்யப்பட்டதாகச் செய்தி வந்தது.

பெரியார் வெளியில் இல்லாவிடினும் தொய்வின்றி ஆக்கப்பணிகள் நடைபெற்றன. திருச்சியில் சாதி ஒழிப்பு மாநாடு நடைபெற்றது. சனவரி 26 குடி அரசு நாள் துக்க நாள் என்று வழக்கம்போல் அறிவிக்கப்பட்டது. பேச்சாளர்கள் கண்ணியமாகவும், யாரையும் குறைகூறாமலும், தாக்காமலும் பேச அறிவுறுத்தப்பட்டது. இதற்கிடையில், யாரோ ஒருவர் நேரு படத்தைக் கொளுத்தி 3 நாள் சிறைத் தண்டனை பெற்றார். சீரங்கத்தில் அரசு வழக்கறிஞர் ஈ.வி. சீனிவாசாச்சாரியார் முகத்தில் அக்கினித் திராவகம் வீசியதாக, சின்னச்சாமி, தியாகு என்ற இருவர்மீது, 28-1–58–ல் வழக்குத் தொடரப்பட்டுப், பின்னர், 8-8-58-ல் அவர்கள் நிரபராதிகளென விடுவிக்கப்பட்டனர். இந்த இரு செயல்களுக்கும், திராவிடர் கழகத்துக்கும் தொடர்பில்லையென்பது கழகத்தின் சார்பில் தெளிவாக்கப் பெற்றது. சி.பா. ஆதித்தனார் 9–2-58 அன்று, தமிழ் நாடு விடுதலை இயக்கம் தொடங்கினார்.

சிறையிலிருந்தவாறே பெரியார், நேருமீது, நீதிமன்ற அவமதிப்பு வழக்கு ஒன்றைத் தாக்கல் செய்தார். வழக்கறிஞர்கள் துறையூர் ரங்கசாமி, எம்.எச். ராவ் இருவரும்! 12-2-58 அன்று எடுத்துக் கொள்ளப்பட்ட இவ்வழக்கு, ஆக்டிங் பிரதம நீதிபதி பி. ராஜகோபாலன், நீதிபதி எஸ். ராமச்சந்திர அய்யர் ஆகியோரால், 22-2–58 அன்று தள்ளுபடி செய்யப் பெற்றது. கோவைச் சிறைக்கு மணியம்மையார் சென்று, அங்கிருந்த தோழர்களைக் கண்டு பேசினார். சிறையிலுள்ள தோழர்களின் குடும்பத்துக்கு உதவுமாறு தி.பொ. வேதாசலனார் அறிக்கையில் வேண்டினார். வடவேற்குடி திருஞானசம்பந்தம், நீடாமங்கலம் சரவணன் (இராவணன்) போன்றார் சுறுசுறுப்புடன் பணியாற்றினர்.

முந்திரா ஊழலில் டி.டி. கிருஷ்ணமாச்சாரி பதவி விலகல், நெய்வேலியில் பார்ப்பனர் ஆதிக்கம், காமராசருக்கு ஏழை மாணவர் கல்வியில் அக்கறை, அபுல்கலாம் ஆசாத் மரணம், தண்டனை முடிந்து விடுதலையாகும் தோழர் தோழி யர்க்கு அன்றாடம் ஆங்காங்கு வரவேற்பு—ஆகிய செய்தி களை "விடுதலை" ஏடு நாடோறும் வெளியிட்டு வந்தது.

சிறைக்கொடுமை தாளாமல் தொண்டர்கள் அவதி யுற்றனர். 9 மாத தண்டனையில் இருந்த குருசாமி பொது மருத்துவ மனைக்குக் கொணரப்பட்டார். பல ஊர் சிறை களிலும் தோழர்கள் உடல் நலிவு கொண்டனர். துன்பத்தின் எல்லையாக 9-3-58 அன்று திருச்சி சிறையில், பட்டுக் கோட்டை ராமசாமியும், 10-3-58 அன்று மாயூரம் மணல் மேடு வெள்ளைச்சாமியும் பலி ஆயினர். பெரியார் கேள்விப் பட்டதும் சோகமே உருவாயினார். உடனே வீரமணி வாயிலாகச் சொல்லி அனுப்பினார். மணியம்மையார் திருச்சி விரைந்தார். முதலில் அரசு மறுத்துப், பின்னர், இரு சடலங்களையும் சுடலைக்கு எடுத்துச் செல்ல அனு மதித்தது. திருச்சியில் 11-3-58 அன்று லட்சக்கணக்கான மக்களடங்கிய ஊர்வலம், மணியம்மையார் தலைமையில், இரு சவங்களையும் ஏந்திச் சென்றது. நாடெங்கும் கண்டனக் கணைகள் பாய்ந்தன! சிறையிலிருந்த பிற தோழர்கள் சாப்பிட மறுத்தனர்! சென்னையிலும் மாபெரும் கண்டன ஊர்வலம் 16-3-58 அன்று நடந்தது. சட்டமன்ற மேலவை யில் வி.வி. ராமசாமியின் கேள்வி ஒன்றுக்குப், பெரியாரை, விடுதலை செய்ய முடியாது, என பதிலளித்தார் உள்துறை அமைச்சர் பக்தவத்சலம்!

எட்டுமாத காலமாக அன்றாடம் நடைபெற்று, 1,010 பேரைச் சிறைக்கோட்டம் அனுப்பிய முரளி கஃபே பிராமணாள் எழுத்து அழிப்புப் போராட்டம் வெற்றியில் முடிவுற்றது. 1958 மார்ச் 22–ஆம் நாள், முரளீஸ் அய்டியல் காபி சாப்பாடு ஓட்டல் என்று பெயர் மாற்றப்பட்டது. தொடர்ந்து சாதி ஒழிப்பு மாநாடுகள் பல மாவட்டங்களிலும் நடைபெற்ற வண்ணமிருந்தன. குன்றக்குடி அடிகளார்,

டாக்டர் மா. ராசமாணிக்கனார், டி.வி. சொக்கப்பா, பட்டுக்கோட்டை வழக்கறிஞர் எம். எஸ். கிருஷ்ணசாமி, பாவலர் பாலசுந்தரம், பாரதிதாசன் எம்.எல்.ஏ., வீர. கே, சின்னப்பன், வீரமணி, மணியம்மையார், எஸ். ராமநாதன், ச.சோ. பாரதியார் போன்றார் பங்கேற்று நடத்தினர்.

நாம் தமிழர் இயக்கம், இலங்கையில் தமிழர் வாழும் பகுதியும் சேர்ந்த தனித் தமிழ் நாடு கோரியது. இது அபத்தம் என்று கண்டித்தார் பண்டிதநேரு. தாம் பதவி விலகப் போவதாக ஓர் அதிர்ச்சி வைத்தியம் செய்தார். 'இவர் விலகமாட்டார்; பிரதமராகத்தான் சாவார்' என்று "விடுதலை" அறுதியிட்டுக் கூறியது. அவ்வாறே, பின்னர், சிலநாள் ஓய்வெடுக்கப் போகிறேன் என்று ஸ்டண்ட் செய்து விட்டார் நேரு. மொரார்ஜி தேசாய் டி.டி.கே. இடத்தில் நிதியமைச்சராக்கப்பட்டார்.

1958 மே 7–ஆம் நாள் மணியம்மையார் மீதும், தஞ்சை நெடுமாறன் மீதும் 153–A பிரிவுப்படி ஒரு வழக்குத் தொடர்ந்தது அரசு; இளந்தமிழா புறப்படு போருக்கு—என்ற கட்டுரையை வெளியிட்டதற்கும், எழுதியதற்கும்! பெரியாருக்கு மருத்துவமனையிலும் நல்லசுரம் கண்டிருந்தது. அப்படியும் அவர் தினந்தோறும், 'எப்போது ஜெயிலுக்குள் போவது?' என்று கேட்ட வண்ணம் இருந்தார். தேவிகுளம் இடைத்தேர்தலில் கம்யூனிஸ்ட் வேட்பாளர் வென்றார்; காங்கிரஸ், கண்ணீர்த்துளி வேட்பாளர்கள் தோற்றனர். தூத்துக்குடி இடைத் தேர்தலில் காங்கிரஸ் வென்று, கம்யூனிஸ்ட், கண்ணீர்த்துளி தோற்றன. பி.பாலசுப்ரமணியம் 22-5-58 அன்று மறைந்தபோது, பெரியார் தமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்தார்.

"கூண்டுக்குள் சிங்கம். இன்று 156–வது நாள், இன்னும் எத்தனை நாள்?" என்று 18-5-58 தேதிவரை "விடுதலை" வெளியிட்டது, ஆனால் 19-5-58 "விடுதலை" கூண்டுக்குள் சிங்கம். இன்னும் 25 நாட்களே" என்று முடிவாகச் செய்தி பிரசுரித்தது. 1958 ஜூன் 13–ஆம் நாள், பெரியார், காலை 10 மணியளவில் விடுதலை செய்யப் பட்டார். பொது

மருத்துவ மனையிலிருந்து சக்கர நாற்காலியில் அமர்ந்து, நகர்ந்து, வெளியில் வந்ததும், பல்லாயிரக்கணக்கான மக்கள் குழுமி, வரவேற்று, மகிழ்ச்சிப் பெருக்கால் மலைபோல் குவித்தனர் மலர் மாலைகளை. பெரியார் நேரே மத்தியசிறை சென்று, பின்னரே இல்லம் திரும்பினார். அன்று மாலை, யானைமேல் அம்பாரிபோல் அலங்கரிக்கப்பட்ட அழகுமிகு தேரில் பெரியார் அமர்த்தப்பட்டு, 4 மைல் நீள ஊர்வலம், எம். ஆர். ராதா தலைமையில் நடைபெற்றது. மாவட்டக் கழகத் தோழர்களான எம்.கே.டி. சுப்ரமணியம், எம்.எஸ். மணி ஆகியோர் முன்னின்று நடத்தினர். "நான் வெளியே வந்துவிட்டேன். நாலாயிரம் பேரில் இன்னும் 1500 பேர் சிறைச்சாலையில்தான் கொடுமை அனுபவிக்கிறார்கள்" என்றார் பெரியார். ஆறுமாத ஓய்வுக்கு விடைகொடுத்து, அடுத்தநாளே சுற்றுப்பிரயாணம் தொடங்கினார் பெரியார். மே 14 திருச்சி, 15 குடந்தை, 16 தஞ்சை, 17 திருவாரூர், 18 திருச்சி, 19 ஈரோடு, 20 சேலம், 22 மதுரை, 23 விருதுநகர், 24 பெரிய குளம், 25 தேனி, 26 காரைக்கால், 29 சிதம்பரம், ஜுன் 1 சின்னசேலம், 2 கடலூர், 3 சிதம்பரம், 5–6 மன்னார் குடியில் சாதி ஒழிப்பு, சுதந்தரத் தமிழ்நாடு மாநாடுகள். இங்குதான் பெரியார் அறிவித்தார், "சாதி ஒழிப்புக்கு நாடு பிரிவினையே முன்னணித் திட்டம். தமிழக விடுதலையை வற்புறுத்தத் தமிழ்நாடு நீங்கலாக உள்ள இந்திய யூனியன் படத்தை எரிக்கப்படும்" என்பதை.

17-6-58–ல் சென்னைத் துறைமுகத்தில் நடந்த துப்பாக்கிப் பிரயோகத்தில் 6 பேர் உயிரிழந்தனர். உடனே பகிரங்க விசாரணை நடத்த வேண்டும் என்று கோரப் பட்டது. பழைய நாள் தொழிற்சங்கத் தலைவரும், பெரியாரின் நண்பருமான சர்க்கரைச் செட்டியார் 14-6-58 அன்றும், சிறந்த மருத்துவமேதையும் வள்ளலுமான டாக்டர் குருசாமி முதலியார் 27-6-58 அன்றும், மறைந்தனர். சிறைக் கோட்டத்திலிருந்து குத்தூசி குருசாமி, ஏ.பி. சனார்த்தனம், ஆனைமலை நரசிம்மன் ஆகியோர் விடுதலை பெற்றனர். புரட்சிக்கவிஞரின் "குயில்" உரிமைக் குரலெழுப்பிப் பாடிப்

பறந்து கொண்டிருந்தது. 7-5-58 அன்று மணியம்மையார் மீது தொடரப்பட்ட வழக்கில், 18-8-58 அன்று, '100ரூபாய் அபர கட்டத் தவறினால் ஒரு மாதம் சிறை' என்று பபு வழங்கப்பட்டது. கழகத்தின் நடைமுறைக்கிணங்க அம்மையார் சிறைபுகுந்தார். நாடெங்கும் கண்டனக் கூட்டங்கள் நிகழ்ந்தன. சென்னையில் நடந்த கண்டன ஊர்வலம், பொதுக்கூட்டத்தில், 25-8-58 அன்று பெரியாரே பங்கேற்றார். வேலூரில் நாம் தமிழர் மாநாட்டைத் துவக்கி வைத்தபோது, "தமிழர் திராவிடரே! தமிழ்நாடும் திராவிடமே!" என்ற கருத்தைப் பெரியார் விளக்கி, வலியுறுத்தினார். ஆறுமாதம் வெளியில் வலம்வர இயலாமற் போனதை ஈடுசெய்வதுபோலப், பெரியார், 29-8-1958 ஒரு நாளில் மட்டும் தஞ்சை மாவட்டத்தில் 28 நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டு பேசினார்.

மணியம்மையாரைச் சிறைக்கு அனுப்பியும் திருப்தி அடையாத அரசினர், அவர்களுக்குச் சொந்தமான 4000 ரூபாய் மதிப்புள்ள எம் எஸ் சி 5880 எண்ணுள்ள காரை 30–8–58 அன்று ஜப்தி செய்து, ஒரு ஜீப்பில் கட்டி இழுத்துச் சென்றனர். இதற்கு மாறுபாடாகத் தண்டனைக் காலத்தில் 15 நாள் மீதமிருந்தபோதே, மணியம்மையாரைக் காரணமின்றி 1–9–58 அன்று அரசு விடுதலை செய்தது! பெரியார் தமது சுற்றுப்பயணத்தின்போது, செப்டம்பர் 1–ஆம் நாள் ஆவுடையார் கோயிலுக்குச் சென்று மிக நுட்பமான சிற்ப வேலைப்பாடுகளைக் கண்ணுற்றார். 5–ஆம்நாள் குன்றக்குடி மடத்திற்குச் சென்று, இளஞ்சிறார்கள் சாதிக் கொடுமை பற்றி நடத்திய நாடகம் ஒன்றினைக் கண்டு, உணர்ச்சி வயப்பட்டார்!

சிறைக் கொடுமைக்குள்ளாகியவர்களில் 10–ஆவது பலியாகத் திருச்சி சின்னசாமி 8–9–58 அன்று மறைந்தபோது, சவ அடக்கத்தில் பெரியார் கலந்துகொண்டார் இந்திய யூனியன் படம் கொளுத்தத் தமக்கு 50,000 பேர் தேவையென்று அழைப்பு விடுத்தார். எல்லாரும் பெயர் கொடுக்கத் தொடங்கலாம் என்றும் கூறினார். 7–9–58 அன்று பரமக்

குடியில் பேசும்போது பெரியார், "நம்மைப் பார்ப்பானுக்கு நிரந்தர அடிமையாக்கி விட்டுப்போன காந்தியின் படத்தை எரிப்போம்; சிலையை உடைப்போம்!" என்று முழக்க மிட்டார்- 17-9-58 பெரியாரின் 80-ஆம் பிறந்த நாள். 21-ந் தேதி சென்னையில் கோலாகலமாகக் கொண்டாடப் பட்டது. மெரினா கடற்கரையிலுள்ள புகாரி சிற்றுணவு விடுதியில் பெரிய அளவில் தேநீர் விருந்து அளிக்கப்பட்டது. மாலைப் பொதுக் கூட்டத்தில் பெரியாருக்கு வெள்ளி வாள், ஆதித்தனாரால் வழங்கப்பெற்றது. அதே போன்று மேலக் கற்கண்டார் கோட்டையில் வெள்ளித்தட்டு, இடைப்பாடி யில் வெள்ளித்தடி, தாதகாப்பட்டியில் வெள்ளிச் சம்மட்டி ஆகியவை பெரியாருக்கு அன்பளிப்புகள்! 24-9-58 "கரண்ட்" இதழில் பெரியாரின் கட்டுரையை வெளியிட்டுச் சிறப்பித் தனர். பம்பாயில் மான்கூர்டு பகுதியில் நடைபெற்ற பெரியார் பிறந்தநாள் விழா நிகழ்ச்சிகளில் 5-10-58 அன்று எஸ். எஸ். மிராஜ்கரும் பிறரும் கலந்து கொண்டு, பெரியாரைப் புகழ்ந்து பாராட்டினர்.

4-10-58 அன்று புஞ்சை சங்கேந்தியில் பெரியார் பேசும் போது கண்ணீர்த்துளிக் கட்சி பற்றிக் குறிப்பிட்டார். "இவர்களால் என்னதான் முயன்றாலும் மந்திரிசபை அமைக்க முடியுமா? அதற்கு வேண்டிய பணம் இவர்களிடம் ஏது? வெறும் அடுக்கு மொழியும் குறும்புப் பேச்சும் இருந்தால் போதுமா?" என வினவினார் பெரியார். 21-10-58ல் திருச்செங்கோட்டில் "சுதந்திரத் தமிழ் நாட்டுக் குள்ளே நேரு வருவதானாலும் பாஸ்போர்ட் பெற்றுத்தான் வரவேண்டும்" என்று பெரியார் உறுதியுடன் தெரிவித்துத் "தமிழ்நாடு தனியாகப் போனால் என்ன; காக்காயா தூக்கிப் போய்விடும்?" எனவும் கேட்டார். 26-ந் தேதி மாயூரம் அடுத்த பெரம்பூர் ஊராட்சி மன்றத்தில் பெரியார், முதலமைச்சர் காமராசரின் படத்தினைத் திறந்து வைத் தார். யூனியன் பட எரிப்புப் போராட்டத்தில் ஈடுபட எல்லாரும் குடும்பத்துடன் தயாராயிருங்கள் என்று பெரியார் அங்குக் கேட்டுக் கொண்டார். நவம்பர் 26-ஆம் நாள்

அண்ணாமலை நகரில் மாணவத் தோழர்கள் பெரியாருக்கு 2½ அடி நீளமுள்ள வெள்ளிவாள் பரிசளித்தனர். அக்டோபர் இறுதியில் சில நாட்கள் உடல் சுரமாக இருந்தும், அதிகம் பேசாமல் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு பெரியார் சுற்றுப்பயணம் தொடர்ந்து நவம்பரிலும் சென்றார். 29, 30 இரு நாட்களிலும் பெங்களூரில், அநேக நிகழ்ச்சிகளில், சிறிதுநேரம் கன்னட மொழியிலும் பேசினார். "எங்கள் மூதாதையர் கன்னட மொழிக்காரரர் ஆனாலும், வீட்டு மொழி தமிழ்தான்! நான் வாணிப சம்பந்தமாகப் பழகியதில் தெலுங்கும், மலையாளமும் தெரியும்! கன்னடம் அரைகுறை தான்!" என்றார் பெரியார்.

கடலூர் சி. எஸ். கிருஷ்ணசாமி அவர்கள் மகன் கி. வீரமணி, கோட்டையூர் சிதம்பரம் — ரங்கம்மாள் சிதம்பரம் அவர்கள் மகள் மோகனா ஆகியோர் வாழ்க்கைத் துணை நல விழா 7-12-58 அன்று திருச்சியில் நடைபெறும் எனப் பெரியாரும் மணியம்மையாரும் கையெழுத்திட்டு அழைப்பிதழ்அனுப்பியிருந்தனர். சிறப்போடு|நடைபெற்றது அந்தக் குடும்பவிழா. டாக்டர் அ. சிதம்பரநாதன், துணைவி யார், மற்றும் இயக்கத் தோழர்கள் எல்லாருமே மகிழ்வோடு கலந்து வாழ்த்தினர். 9–ந் தேதி திருமணம் திருச்சியில் பதிவு செய்யப்பட்டது. 10–ந் தேதி பெரியாரும், மணியம்மை யாரும், மணமக்களும் கடலூர் மணமகன் இல்லத்துக்கும், 11-ஆம் நாள் திருவண்ணாமலை மணமகள் இல்லத்துக்கும் சென்று, புது விருந்து அருந்திப், பாராட்டுவிழாவில் பங்கு பெற்றனர்.

திராவிடநாடு கேட்டதை மாற்றிக்கொண்டு பெரியார் இப்போது தமிழ்நாடு கேட்பது எப்படி நியாயம் என்ற அய்ய வினா திராவிட முன்னேற்றக் கழகத்தின் தரப்பில் சிலரால் எழுப்பப்பட்டபோது, பெரியார், திண்டுக்கல்லில் 23-11-58 அன்று பதில் கூறினார். அதாவது, "அன்று நாம் கேட்டது சென்னை ராஜதானியை. இன்று நாம் கேட்பது சென்னை ராஜ்யத்தை. வேறுபாடு இல்லை" என்றார் பெரியார். "முன்பு சென்னை ராஜதானி என்பது தமிழ்

நாட்டுடன் ஆந்திர, கேரள, கர்நாடகப் பகுதிகளும் இணைந்திருந்த பகுதி. இன்று மொழிவாரி மாநிலங்கள் அமைக்கப்பட்ட பின்பு, சென்னை ராஜ்யம் என்பது தமிழ் நாடு மட்டுமே. அதனால் நமது கோரிக்கை மாறவில்லை. எல்லைதான் சுருக்கப்பட்டுவிட்டது'' என்பது பெரியார் விளக்கம். அதே போன்று பொள்ளாச்சியில் ''கண்ணீர்த் துளிகள் 15 பேராயிருப்பவர்கள் 35 பேராக உயர்ந்தால் மட்டும் என்ன சாதிக்க முடியும்?'' என்றார் 17-12-58 அன்று. ஆட்சியைப் பிடிக்க இவர்களால் முடியாது. எதிர்க்கட்சி யாயிருக்கும்போது, எண்ணிக்கை உயர்வதால் என்ன லாபம் என்பது கருத்தாகும். காமராசர் இத்தருணத்தில், எஸ். எஸ். எல். சி. வரை இலவசக் கல்வி தருவது என்ற தமது திட்டத்தை அறிவித்தது பெரியாருக்கு இனிப்பான செய்தி. அத்துடன் 300 மக்கள் வாழும் கிராமத்திலும் ஆரம்பப் பள்ளி நிறுவப்படும் என்றும், இலவச மதிய உணவு 2,28,000 பிள்ளைகளுக்கு வழங்கப்படுவதாகவும் வெளியான செய்திகள் பெரியார் உள்ளத்தைக் குளிர்வித்தன. தோழர் களின் அன்புத்தொல்லை தாங்கமுடியாமல் ''இனிமேல் நான் முன் கூட்டியே ஒத்துக்கொள்ளாத நிகழ்ச்சிகளுக்குத் திடீர் என்று அழைக்காதீர்கள். உயரக் குறைவாக மேடை அமைத்து, உட்கார்ந்து பேசக் கட்டில் போலச் சமன நிலை யில் ஆசனமும், மேல் விரிப்போ மெத்தையோ மிருதுவாகப் பரப்பவும் வேண்டும். தங்குவதற்கு, அருகிலுள்ள முசாபரி பங்களா என்னும் பயணியர் விடுதி தேவை'' என்ற அறிக்கை யினைப் பெரியார் வெளியிடச் செய்தார். டிசம்பர் இறுதியில் பெரியார் நாஞ்சில் நாடு சுற்றுப்பயணத்திலிருந்த போது, சென்னையில் அகில இந்தியப் பகுத்தறிவாளர் மாநாட்டுக் குச் செய்தி அனுப்பியிருந்தார். அரசியல் சட்ட எரிப்புப் போராட்டத்தின் 12-ஆவது பலியாக, வாளாடி பெரியசாமி என்ற 15 வயதுச் சிறுவன் மாண்டபோது, 29-12-58 அன்று பெரியார் மிக்க வேதனையோடு எழுதியிருந்தார்.

1959 ஜனவரி 10, 11 நாட்களில் பெரியார் பெங்களூர் சென்றிருந்தார். அங்கே அகில இந்திய ஆட்சிமொழி

மாநாடு 11-1-59ல் நடந்தது. ஜெனரல் கரியப்பா, நீதிபதி மேட்ப்பா போன்றோர் கலந்துகொண்டனர். பெரியார் சிறப்புரையாற்றுகையில் "இந்த மாநாட்டில், வேண்டு கோள் தீர்மானங்களே நிறைவேற்ற வேண்டாம். இனி நேரடி நடவடிக்கைதான் தேவை. இந்தி எப்போதுமே வேண்டாம்! இங்கிலீஷே நீடிக்கத் திட்டம் வேண்டும்!" என்றார்.

தி. பொ. வேதாசலத்தின் 62-ஆவது பிறந்த நாள் 1959 சனவரி 20-ஆம் நாளாகும். அன்று பெரியார், கழகத் தோழர்கள் சிலருடைய நடவடிக்கைகளில் அதிருப்தி தெரி வித்து, மன வருத்தமுற்று, ஓர் அறிக்கை முன்னெச்சரிக்கை யாக வெளியிட்டார். அடுத்து, 30-1-59 அன்று வெளியான பெரியாரின் ஒழுங்கு நடவடிக்கை, மிகக்கடுமையாயிருந்தது. சார்பு மன்றங்கள் சுயமரியாதைச் சங்கங்கள் அனைத்தை யுமே கலைத்தார். எஸ். குருசாமி, டி. எம். சண்முகம், லோகநாதன், எம். கே. டி. சுப்பிரமணியம், எம். ஆர். ராதா ஆகியோர் கழகக் கூட்டங்களில் தற்காலிகமாகக் கலந்து கொள்ளக்கூடாது என்றும் தடை போட்டார்.

1–2–1959 அன்று பெரியார் கார் மூலமாகச் சுமார் 4000 மைல் நீளச் சுற்றுப்பயணம் ஒன்று மேற்கொண்டார். மணியம்மையார், ஆனைமலை ராமகிருஷ்ணம்மாள், ஏ.என். நரசிம்மன், கி. வீரமணி, புலவர் கோ. இமயவரம்பன் ஆகியோரும் பெரியாருடன் புறப்பட்டனர். சிகந்தராபாத், ஜான்சி, நாகபுரி, ஜப்பல்பூர் வழியே கான்பூர் சென்றார்கள். கான்பூரில் பெரியார் 2 மணிநேரம் பிற்படுத்தப் பட்டோர் பிரச்சினை குறித்து ஆங்கிலத்திலேயே உரையாற்றினார். பின்னர் லட்சுமணபுரி பல்கலைக்கழக யூனியனில் சொற் பொழிவு. 12-ந் தேதி டெல்லி பயணமானார். அங்கு ரிபப்ளிகன் கட்சியாரின் கூட்டத்திலும், தமிழர்கள் கூட்டத் திலும் பெரியார் பேசினார். 17-ந் தேதி அங்கிருந்து கிளம்பி பம்பாய்க்கு 20-ந்தேதி சென்றடைந்தார். அங்கும் மாபெரும் வரவேற்பு; கொள்கை முழக்கம்! 25-2-59 அன்று பம்பாய் விட்டுக் கிளம்பி, 28-2-59 சென்னை வந்து சேர்ந்தார்கள்

பெரியார் குழுவினர். வெற்றிகரமான இந்த வடநாட்டுச் சுற்றுப் பயணத்தைக் கொண்டாடச் சென்னை வாழ் பெரு மக்கள் 1-3-59 அன்று ஊர்வலத்தில் ஒரு லட்சம் பேரும், மெரினாப் பொதுக் கூட்டத்தில் 2 லட்சம் பேருமாகத் திரண்டு, பெரியாரை வாழ்த்தினர். பம்பாயிலிருந்தபோது "கரண்ட்" நிருபர் பி. ஜே. பெர்னாண்டஸ் பெரியாரைப் பேட்டி கண்ட விவரம் 4-3-59 "கரண்ட்" இதழில் சிறப்பாக வும், எடுப்பாகவும் வெளியிடப்பட்டிருந்தது. 8-3-59 "கல்கண்டு" இதழும், பெரியார் எல்லா மொழியிலுமே பேசுகிறார் என்று பெருமிதத்தோடு கூறியது. வடபுலத்து ஆங்கில ஏடுகளான ஸ்டேட்ஸ்மன், அட்வான்ஸ், பயனீர், நேஷனல் ஹெரால்டு, மற்றும் உருதுமொழி ஏடுகளான சியாசத், அல்ஜமயத் ஆகியவை பெரியாரின் பேச்சு, கொள்கை, போராட்டம் பற்றி விளக்கமான செய்திச் சித்திரங்கள் வெளியிட்டுச் சிறப்பித்தன.

> தஞ்சை மாவட்டம் குத்தாலம் பகுதியில் வசதி யான குடும்பத்தைச் சார்ந்த கோ. இமயவரம்பன், புலவர் பட்டம் பெற்றதும், நேரே பெரியாரிடம் சென்று, தன்னை அவர் தொண்டராகப் பிணைத்துக் கொண்டவர், திருமணமே செய்துகொள்ளாமல், முழு நேரப் பணிக்கு அர்ப்பணித்துக் கொண்டவர், நிழல் போல் பெரியாரைத் தொடர்ந்தவர், அவருக்குப் பின் னரும் இயக்க இணைப்பைக் கைவிடாதுள்ளவர். இன்று திருச்சியிலுள்ள பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனக் கல்விச்சாலைகள் அனைத்துக்கும் தாளாளர்.

அரசியல் சட்ட எரிப்புப் போரின் 13-வது பலியாக கண்டராதித்தம் சிங்காரவேலு மார்ச் 23-ல், 14-வது பலியாக சென்னை கந்தசாமி மார்ச் 24-ல், 15-வது பலியாக திருச்சி டி. ஆர். எஸ். வாசன் ஏப்ரல் 25-ல் — மரணமடைந்தனர். சேலத்தில் நீண்ட நாளையக் கழக அன்பர் கே. ஜெகதீசன் 20-3-59அன்று இயற்கை எய்தினார்.எல்லாத் துயரங்களையும் பெரியார் தாங்கிக்கொண்டார். திருச்சி சிறைச்சாலையில் இன்னும் தண்டனை அனுபவித்து வந்த தொண்டர்களை

17-3-59 அன்று பேட்டி கண்டார். 20-ம் நாள், சிறை சென்று திரும்பிய தோழர்களைப் பாராட்டிப் பெரம்பலூரில் சான்றிதழ் வழங்கினார். 28–ம் நாள் சீர்காழியில், 9 மாதச் சிறைத் தண்டனை பெற்று, விடுதலையான சில நாளில் மறைந்துபோன, தொண்டர் ஸ்டாலின் இல்லம் சென்று, அவர் தந்தையார்பால் துக்கம் விசாரித்தார். சீர்காழியில் பேசும்போது ஆத்மா, மோட்சம், நரகம் இவை பற்றிய தெளிவான, விஞ்ஞானப் பூர்வமான விளக்கங்களைத் தெரிவித்து, இவற்றில் பார்ப்பனர் புகுந்து, எப்படித் தங்களுக்கு வருமானத்தையும், நமக்கு அறிவீனத்தையும் தேடுகிறார்கள் எனவும் விரித்துரைத்தார் பெரியார்.

21-ம் நாள் தஞ்சையிலும், 27–ம் நாள் திருச்சியிலும் நடைபெற்ற வரவேற்புப் பொதுக் கூட்டங்களில் "தமிழனின் நல்லாட்சியைக் கவிழ்க்க முயல்கிறார்கள்; விடக்கூடாது! காமராசர் ஆட்சியைப் பலப்படுத்த, நகர சபைத் தேர்தல்களிலும் ஆளுங்கட்சிக்கே ஆதரவு காட்ட வேண்டும்" என்று பெரியார் பேசிவந்தார். ஆனால் சென்னை மாநகராட்சியை முதன் முறையாகத் திராவிட முன்னேற்றக் கழகம் கைப்பற்றியது, 1959-ல்! நேருவுக்குக் கருப்புக் கொடி பிடித்தபோது, போலீசாரின் தடியடிக்கு ஆளாகிச் சாலையில் உருண்டு கிடந்த அ. பொ. அரசு, சென்னையில் முதல் தி. மு. க. மேயராகவும், தாழ்த்தப் பட்ட தோழரான அ. சிவசங்கரன் முதல் தி. மு. க. துணை மேயராகவும் 22-4-79 அன்று வெற்றி கொண்டனர். மொத்தம் 53 நகராட்சி மன்றங்களின் தேர்தல்களில் 34 ஊர்களில் காங்கிரஸ் தோற்றது. 22-4-59ல் பெரியார், அரவக்குறிச்சி உயர்நிலைப் பள்ளியில் சிந்தனையைத் தூண்டும் கருத்துச் சுரங்கமான பகுத்தறிவுப் புதையலைச் சொற்பொழிவாக்கினார். உலகிலுள்ள 250 கோடி மக்களில் 150 கோடி மக்களுக்குக் கடவுள் இல்லையே, அவர்கள் என்ன கெட்டுவிட்டார்கள்? என்று கேட்டார் பெரியார்.

ஏப்ரல் 28, 29, 30 ஆகிய நாட்களில் பெரியார் தஞ்சை மாவட்டத்தின் பல பகுதிகளில் சுற்றுப்பயணம் செய்தார்.

காந்தியார் பார்ப்பனரல்லாத மக்களுக்குப் பெருத்த துரோகமும், தீங்கும் இழைத்துச் சென்றுவிட்டார் என்ற உண்மைகளை விதந்துரைத்தார். கம்யூனிஸ்டுகளோ, கண்ணீர்த்துளிகளோ சாதியைஒழிக்க முன்வரமாட்டார்கள் என்றார். அதற்கு எடுத்துக் காட்டாகப் பெரியாரிடம் சரியான இரண்டு சான்றுகள் சிக்கிக்கொண்டன. 1957–ஆம் ஆண்டு பொதுத் தேர்தல் வாக்காளர் பட்டியலில் ஏற்பட்டிருந்த இரு தவறுகள், பெரியாரின் வாதத்துக்கு அணி செய்தன. அவையாவன:— கம்யூனிஸ்ட் தலைவர் மணலி கந்தசாமியின் பெயர் வாக்காளர் பட்டியலில் சி. கந்தசாமித் தேவர் என்றும், அண்ணாவின் பெயர் சி. என். அண்ணாத்துரை முதலியார் என்றும் அச்சாகிவிட்டதால், மாற்றுவதற்கு நேரமின்றி, அவர்கள் இந்தப் பெயருடனேயே தேர்தலில் போட்டியிட நேரிட்டது. "இவர்களா சாதியை ஒழிப்பார்கள்?" என்று கேட்டார் பெரியார்!

மே மாதச் சுற்றுப்பயணத்தில், குறிப்பிடத்தக்க இதர நிகழ்ச்சிகள், பெரியார் 17–ந் தேதி கர்நாடக மாநிலம் மங்களூரில், அம்பேத்கார் சமரத் சமிதி எனும் நினைவு மன்றத்தில் கன்னட மொழியில் பேசியது; 21-ந் தேதி சென்னையில் புத்தரின் 2503-ஆவது ஆண்டு விழா ஊர்வலத்தில் தலைமை ஏற்றது! 25–5–59 "விடுதலை" ஏட்டில் பெரியார் மூன்று முட்டுக்கட்டைகள் என்ற தலையங்கத்தில், நாம் முன்னேற முடியாமல் போனதற்கு–முன்னோர்கள் சொன்னபடி கேட்பதும், எழுதியபடி நடப்பதும், நடந்தபடிப் பின்பற்றுவதும் தான் காரணம்—என்று முடித்திருந்த பாங்கு பாராட்டத் தக்கதாகும்.

24—5—59-ல் சேத்தியா தோப்பில் பேசும்போது, ஜெயில் வாசம் என்ற பெயரில் ஆஸ்பத்திரியில், அரசு செலவில் தங்கி, உடல் நலம் பெற்று, ஓராண்டாய்த் தொந்தரவில்லாமல் பணியாற்ற முடிவதாகப் பெரியார் பெருமைப்பட்டுக் கொண்டார். தாம் செத்திருந்தால் அதைச் சொல்லியே கண்ணீர்த்துளிகள் அசெம்பிளியில் 100 இடம் பிடித்திருப்பார்கள்; உயிரோடிருப்பதால் இந்த

மந்திரிசபையையே காப்பாற்ற முடிகிறதே என்று பெரியார் குறிப்பிட்டார்.

மே திங்கள் 4-ம் நாள் சிங்கப்பூர் சுதந்திர நாடாயிற்று. 11-ம் நாள் ராஜாஜியின் சுதந்திரக் கட்சி பற்றிப் பெரியார் கண்டித்திருந்தார். 23-5-1959-ல் திருச்சி வானொலி நிலையத்தில் ஆகாஷ்வாணி போராட்டத்தில் கி. ஆ. பெ. விசுவநாதம் கைதாயினார். இந்தப் போராட்டத்தைத் தாம் ஆதரிப்பதாகப் பெரியார் கூறியிருந்தார். 21-ம் நாள் திருச்சி சோதிபுரத்தில் பெரியாருக்கு வெள்ளிச் செங்கோல் வழங்கினார்கள். இந்தக் கூட்டத்துக்கு வருவதற்காகத் தஞ்சை மாவட்டத்திலிருந்து நள்ளிரவில் காரில் பிரயாணம் செய்தபோது, பெரியாரின் கார், தஞ்சையருகில் விபத்துக்குள்ளாயிற்று. வண்டிக்குச் சேதம்; சீட்டாவுக்குக் காயம்! 21-5-59-ல், சிறந்த சமூகசீர்திருத்தத் தலைவராகவும் முதல் இந்தி எதிர்ப்புப் போரின் வீராங்கனையாகவும் திகழ்ந்த டாக்டர் தர்மாம்பாள் அம்மையார் மறைந்தார். மதுரை மாவட்ட திராவிடர் கழகச் சார்பில் திண்டுக்கல்லில் 7-6-59 அன்று நடந்த சாதி ஒழிப்பு மாநாட்டில் குன்றக்குடி அடிகளார் தலைவர், வீரமணி திறப்பாளர், தங்கராசு கொடி ஏற்றுவோர், சொற்பொழிவு — மணியம்மையார், புரட்சிக் கவிஞர், தி. பொ. வேதாசலனார், சென்னை இளம் பரிதி ஆகியோர். சுதந்திரத் தமிழ்நாடு மாநாட்டில் தலைவர் ஆதித்தனார், திறப்பாளர் திருக்குறளார் முனிசாமி, சொற்பொழிவு—தமிழ்வாணன், பாவலர் பாலசுந்தரம் ஆகியோர். இரு மாநாடுகளிலும் பெரியார் பேருரை உண்டு!

கதர், கைத்தறி, தீக்குச்சி செய்தல் போன்ற சிறு கைத்தொழில்களைக் குடிசைத் தொழில்களாகச் செய்வதால், எவ்வளவு சக்தியும் பொருளும் விரயமாகி, நட்டமும் ஏற்படுகிறது, என்பதைப் புள்ளி விவரங்களுடன் பெரியார் விளக்கி வந்தார். விஞ்ஞான யுகத்தில், இயந்திரங்களுடன் போட்டி போட இவற்றால் நிச்சயம் முடியாது. தரமும் கிடைக்

காது. மலிவு விலையிலும் போட்டி போட முடியாது— என்பதெல்லாம் பெரியார் தெளிவுறுத்தினார்.

சென்னை பெரியார் திடலில் கட்டடம் கட்டுவதற்கு 50,000 ரூபாய் தேவை என்று, பெரியார் திருச்சி மத்திய நிர்வாகக் குழுக் கூட்டத்தில் கருத்து வெளியிட்டார். அவ்வளவுதான்! அடுத்து 2-10-59 "விடுதலை"யில் 'கட்டட நிதி அவசரம்' என்று ஒரு தலையங்கம் தீட்டப்பட்டது. சுற்றுப்பயணக் கூட்டங்களெல்லாம் நிதியளிப்புக் கூட்டங்களாகப் போட்டி போட்டு நடத்தப்பட்டன. வெள்ளப் பெருக்கென வெள்ளிப் பணம் விரைந்து நிறைந்தது. 13-10-59 அன்று, 30,0.0 ரூபாய்; 13-11-59 வரை அடுத்த ஒரு மாதத்தில் ரூ. 75,000. 2?-12-59 அன்று மொத்த நிதி வசூல் 1 லட்சம் ரூபாய். 1959-ஆம் ஆண்டின் இறுதி நாளில் உறுதியாகக் கிடைத்த மொத்த நிதி ரூ. 1,13,897. கேட்டது ரூ. 50,000 தானே!

19-10-59 அன்று பெரியார் சிதம்பரத்தில் சொற்பொழி வாற்றும் நேரத்தில், இதுவரை தாம் சேமித்த 7 லட்ச ரூபாய் சொத்து விவரங்களைக் கூறி, அனைத்துமே தமிழருக்காகக் கட்டிக் காத்துப் பெருக்கி வருகிறேன் என்றார். 31-ம் நாள் கும்பகோணத்தில் உரையாற்றுகையில், தஞ்சை மாவட்டம் திராவிடர் கழக நிதியாகவே திகழ்கிறது எனப் புகழ்ந்தார்; பூரித்தார்.

சிங்கப்பூரில் 7-11-59 அன்று பெரியார் பிறந்த நாள் விழா கொண்டாடப் பெற்றது. பெங்களூரில் 13-12-59 அன்று பெரியாரிடம் கட்டட நிதி வழங்கப்பட்டது. 2-11-59 ஈரோடு எஸ். அப்பாவு, திராவிட முன்னேற்றக் கழகத்திலிருந்து விலகி, வெள்ளக் கோயிலில், பெரியார் முன்னிலையில், மீண்டும் திராவிடர் கழகத்துடன் அய்க்கியமானார். திருவாரூரில் தண்டவாளம் ரங்கராசு எனப்படும் வீரமிக்க திராவிடர் கழக உழைப்பாளர் 23-11-59 அன்று இயற்கை எய்தினார். திரையுலகில் ஒரு காலத்தில் புகழ்க்கொடி பறக்கவிட்ட எம். கே. தியாகராஜ பாகவதர் 1-11-59 அன்று மறைந்தார். நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் 16-12-59ல்

காலமானார். 20-12-59 அன்று வேதாரணியம் சென்றிருந்த பெரியாரை, சர்தார் வேதரத்தினம்பிள்ளை எம்.எல்.ஏ. வரவேற்றுப் பாராட்டிப் போற்றிப் புகழ்ந்து, தம் கன்னியா குருகுலத்தைச் சுற்றிக் காட்டினார். பெரியார் வாழ்க்கையில் முதல் தவறு என்று அவரே குறிப்பிட்ட நிகழ்ச்சி ஒன்று 29-11-59 அன்று நடந்துவிட்டது! 28-ம் நாள் பெரியார் சேலம் மாவட்டம் ஆத்தூரில் நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு விட்டுத், தமது காரில் காஞ்சிபுரம் புறப்பட்டார். காஞ்சியில் மாபெரும் நிதியளிப்புப் பொதுக் கூட்டம். வழியில் பலத்த மழை. கார் பழுதாகி நகர மறுக்கிறது. எவ்வளவு முயன்றாலும் காஞ்சிக் கூட்டத்துக்குப் போய்ச் சேர வழியில்லை. வேறு நிலைமை சரியாகத் தோன்றாததால் பெரியார், கிடைத்த பேருந்து ஒன்றைப் பிடித்து, எப்படியோ திருச்சி போய்ச் சேர்ந்தார். இப்படி, ஒத்துக்கொண்ட பொதுக் கூட்ட நிகழ்ச்சிக்குப் போய்ச் சேர முடியாமல் போனதையே, பெரியார், முதல் தவறு என்று ''விடுதலை''யில் குறிப்பிட்டு, வருத்தமும் தெரிவித்து, மறு திங்களில் வேறு நாளில் காஞ்சி சென்று, அக்குறையை நிறைவு செய்துவிட்டார்.

1960 சனவரித் திங்களிலும் நாடெங்கும் நிதியளிப்புக் கூட்டங்களில் பெரியார் பெரிதும் கலந்து கொண்டார். சனவரி 16-ஆம் நாள் தஞ்சை மாவட்டத்தில் பேசும்போது, ''தஞ்சை மாவட்டம் புத்தரின் அறிவொளி பரவிய மய்யம் ஆயிற்றே; புத்தக் கொள்கைகளை ஒழித்து இவ்வளவு கோயில்களை இங்கு எழுப்பிவிட்டார்களே; இங்குள்ள பணக்கார மடையரும் பார்ப்பான் காலைக் கழுவித் தீர்த்தமென்று குடிக்கின்றார்களே'' என்று பெரியார் வேதனைப் பட்டார். கும்பகோணத்தில் 30-ம் நாள், பொதுக் கூட்டத்தில் பேசும்போது, பார்ப்பனர் நிலை மேலும் சரியாமல் முட்டுக்கொடுத்துக் காப்பாற்றத்தான் ஆச்சாரியார் இப்போது சுதந்திரக் கட்சியைத் தோற்றுவித்திருக்கிறார் என்பதைச் சுட்டிக் காட்டினார் பெரியார். தூத்துக்குடி இடைத் தேர்தலில் காமராசரின் கட்சியையே ஆதரிக்க

வேண்டும் என்று நாட்டு மக்களைப் பெரியார் கேட்டுக் கொண்டார்.

பிப்ரவரி முதல் நாள் திருச்சியில் எம்.ஆர். ராதாவின் மகன் வாசுதேவனுக்கும் லலிதகுமாரிக்கும் திருமணம். அழைப்பாளராகப் பெரியார் பெயர் போடப்பட்டிருந்தது. இந்த மாதம் முழுவதும் பெரியாருக்குச் சுற்றுப் பயணம் இருந்தது. நிகழ்ச்சிகளுக்கு நிறைய அழைப்புகள் வந்து கொண்டிருந்ததால் பெரியார் சில கட்டுப்பாடுகள் வரையறைகள் விதித்து 10-2-60 அன்று ஓர் அறிக்கை "விடுதலை" யில் வெளியிட்டிருந்தார். தோழர்களுக்கு வணக்கமான விண்ணப்பம் என்பது தலைப்பு. தன்னுடைய கார் ஒரு காலன் பெட்ரோலுக்கு சராசரியாக 11 மைல்தான் செல்கிறது என்பதைப் பொருளாதார அடிப்படையில் காண்பித்திருந்தார். உடல் நிலையை நினைவுபடுத்திக் கூட்டம் நடக்கும் ஊர்களிலோ, அருகிலோ உள்ள டி.பி. எனப்படும் பயணிகள் விடுதியில் தங்குவதற்கு ஏற்பாடும், தன்னிடமுள்ள சமையல் பொருள்களின் உதவிகொண்டு தனக்காகப் பத்தியமான சமையல் சாப்பாடு முதலியவை தயாரித்துக் கொள்வதற்கு அனுமதிக்குமாறும் கேட்டிருந்தார். வெளியில் தோழர்கள் வீடுகளில் சாப்பிடக் கூப்பிட வேண்டாம். அப்படி வந்துதான் தீர வேண்டுமென்றால் அதற்குக் கட்டணம் ரூ 10; புகைப்படம் பெரியாருடன் சேர்ந்து எடுத்துக் கொள்ள விரும்பினால் ஒரு (அமைப்பு) Sitting-க்கு ரூ. 5. கழகப் பொதுக்கூட்டங்களுக்கானால் ரூ. 75. திருமணம் ஆண்டுவிழா நீத்தார் நினைவு போன்ற நிகழ்ச்சிகளுக்கு ரூ. 150. அழைக்க வரும்போதே முதலில் தந்துவிட வேண்டும். சென்ற பிறகு சில இடங்களில் செலவுக்கான வழிச் செலவுத் தொகையைச் சரியாகத் தருவதில்லை என வருத்தப்பட்டிருந்தார்.

சென்னை சட்டக்கல்லூரித் தமிழ்ப் பேரவையில் பெரியார் 10-2-60 அன்று உரையாற்றினார், சட்டக்கல்வி இயக்குநர் நீதிபதி ஏ. எஸ். பி. அய்யர் தலைமை ஏற்றிருந்தார். தமிழ் இலக்கியங்கள் தமிழனைக் காட்டு

மிராண்டி நிலையிலேயே வீழ்த்தியுள்ளன. காரணம் அந்த இலக்கியங்களில் உள்ள கடவுள் மதப் பிணைப்புகளே ஆகும் என்னும் கருத்துப்படப் பெரியார் விரிவுரையாற்றினார். தமிழ்ச் சான்றோரும் பெரியாரின் நண்பருமான அ. சக்கரவர்த்தி நயினார் 13–2–60 அன்று மறைந்தபோது சவ ஊர்வலத்தில் பெரியாரும் சிறிது தொலைவு நடந்து சென்றார். விருதுநகர் செந்திக்குமார நாடார் கல்லூரியிலும் பெரியார் உரை நிகழ்த்தினார். பெங்களூரில் மீண்டும் ரூ. 3010 கட்டட நிதியாகப் பெரியாரிடம் 2-12-60 அன்று வழங்கினார்கள். திருச்சி, பெரியார் ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் கண்காட்சி பற்றிப் பெரியார் விளக்கினார்:– "இது அறிவுக்கு விருந்தே தவிரக் கண்ணுக்கு அழகு என்பது தவறு. மேல்நாடுகளில் அறிவு வளர்ச்சிக்காக ஆண்டு முழுவதும் காட்சிகளை நடத்துகிறார்கள். ஓர் இரயில் பெட்டி செய்யும் கண்காட்சி என்றால் முதலில் இரும்பு, மரம் இவை குவியலாய்க் கிடப்பதில் தொடங்கிப், பின், வரிசைக் கிரமமாய் அவை உருக்கப்பட்டு ஆணியாகித் தகடாகி, மரம் அறுக்கப்பட்டுக் கட்டையாகிப் பலகையாகி, இறுதியில் பெட்டியாக முழுமையடையும் வரையில் காண்பிக்கிறார்கள். பார்ப்பவர்களும் நேரடியாகக் கண்டு அறிவைப் பெருக்கிக் கொள்கிறார்கள். இங்கு இன்னமும் பெண்களுக்கான ரிப்பனும் வளையலுந்தானே வைக்கிறோம்" என்றார் பெரியார்.

"சமஸ்கிருதம் எனும் செத்தமொழியை உலகமெலாம் பரப்பவும், இந்தியாவில் அரசாங்க ஆதரவுடன் மரியாதை உண்டாக்கவும் அடிக்கடி பார்ப்பனர்கள் முயன்று வருகிறார்கள். கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியரான. கா. நமச்சிவாய முதலியாருக்குச் சம்பளம் 81 ரூபாயாயிருக்க, சமஸ்கிருத ஆசிரியரான சாஸ்திரிக்குச் சம்பளம் 350 ரூபாய். சமஸ்கிருதத்துக்குச் செல்வாக்கு குறைவதைக் கண்டுதானே 1947–ல் ஆச்சாரியார் இந்தியைப் புகுத்தி அதன் சரிவைத் தடுக்க முயன்றார். இன்று சமஸ்கிருதம் எதற்குத் தேவை?" என்று கேட்டார் பெரியார்.

அத்துடனல்லாமல் தமிழ் விஞ்ஞான ரீதியாக வளர்ச்சி யடையாமலிருப்பதையும் சுட்டிக் காட்டினார்:— தமிழ் தாய்ப்பால் என்றும் இங்கிலீஷ் புட்டிப்பால் என்றும் கூறு கிறார்கள். தாய்ப்பால் நல்லதுதான். ஆனால் தாயே நோயாளியாகவும், சத்தற்றவளாகவும் இருக்கும்போது தாய்ப்பால் குடிக்கும் பிள்ளை உருப்படமுடியுமா? தாய்க்கு நல்ல சத்துணவு இருந்தால்தானே அவளுக்குப் பாலும் ஊறும்; அந்தப் பாலுக்குச் சக்தி இருக்கும்? தமிழில் நல்ல உணவு எங்கேயிருக்கிறது? அய்ம்பெருங்காப்பியம், எட்டுத் தொகை, பத்துப்பாட்டு, இராமாயணம், பாரதம், கந்த புராணம், பெரியபுராணம் இவைதாமே தமிழ்த்தாய் உண்ட உணவுகள்? இவைகளில் சுவை இருக்கலாம். அழகு இருக் கலாம். முன்னேற்றத்துக்கான அறிவு இருக்கிறதா? மொழி என்பது ஒருவர் கருத்தை இன்னொருவர் அறியப் பயன் படுத்துவதுதானே? இதிலே கொண்டு போய்த் தாய்மொழி தகப்பன் மொழி, நாட்டுமொழி முன்னோர் மொழி என்று எதற்காகப் பொருத்துவது? நாம் தாய்மொழி தாய்மொழி என்கிறோம். பார்ப்பானுக்கு எது தாய் மொழி? ஏது தாய் மொழி? அவன் இங்கிலீஷைப் படித்து மேலே போகிறான். நாம் சாம்பிராணிகளாகிறோம்—என்றார் பெரியார். தொல்காப்பியம் இயற்றப்பட்ட காலத்திலேயே பார்ப்பனக் கருத்துகள் புகுந்துவிட்டன என்பதையெல்லாம் தக்க ஆதாரங்களுடன் பெரியார் எடுத்துக் காட்டினார்.

கட்டடநிதி அதிகரித்துக்கொண்டே வந்து 1-3-60 வரை யில் 1,34,213 ரூபாயாக உயர்ந்திருந்தது. மார்ச் மாதம் முழுவதும் சுற்றுப் பயணம் மேற்கொண்ட பெரியார், தம்மை நாடகம் முதலியவைகளுக்கு அழைக்க வேண்டா மென்றும் தம்மால் கண்விழிக்க இயலவில்லை என்றும் அறிவித்தார். தொடர்ந்து ஏப்ரல், மே மாதங்களில் தீவிரப் பிரயாணம் செய்து வந்தார். நாகரசம்பட்டியில் ராஜா சுப்ரமணியம் 35 ஆண்டுகளாகப் பஞ்சாயத்துத் தலைவராக வீற்றிருப்பதைப் பாராட்டி, 26-4-60 அன்று நடந்த சிறப் பான விழாவில், பி.கஸ்தூரிபிள்ளை, நஞ்சையா, குன்றக்குடி

அடிகளார் ஆகியோருடன் பெரியாரும் கலந்துகொண்டார். மே 15-ஆம் நாள் திருச்சியில் நடைபெற்ற மத்தியநிர்வாக சபைக்கூட்டத்தில் எஸ். குருசாமி தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

1960 ஜூன் திங்கள் 5-ஆம் நாள் மாலை, தமிழ்நாடு நீங்கலாக இந்திய யூனியன் எரிப்புப் போராட்டம் என்று பெரியார் அறிவித்து விட்டார் "நாடெங்கும் தீவத்தி ஊர்வலமும் நடைபெறும். இது அரசியல் போராட்டமல்ல; இனப் போராட்டம்! போராட்ட வீரர்களை நேரில் சந்தித்து உற்சாகப்படுத்த நான் மே 31, ஜூன் 1,2,3,4 தேதிகளில் ரயில் மார்க்கமாகப் பயணம் செய்வேன்" என்றும் பெரியார் கூறிவிட்டார். 25-5-60 "கரண்ட்" இதழில் பெரியார் படத்தையும் போட்டு; சுதந்திரத் தமிழ்நாடு தனியாகப் பிரிய வேண்டுமென்ற கோரிக்கைக்காகப் பெரியார் போராட்டம்! இது 23 ஆண்டுகாலமாய் இருந்துவரும் கோரிக்கை வெற்றிக்காகப் பெரியாரின் 1960-ம் ஆண்டு வேலைத்திட்டம்! இந்திய யூனியன் பட எரிப்பு (தமிழ் நாடு தவிர்த்து) என்ற செய்தி பிரதான இடத்தில் வெளியிடப்பட்டது.

நாம் தமிழர் இயக்கமும் இந்தப் போராட்டத்தில் ஈடுபடுவதாக முடிவெடுத்திருந்தது. பெரியார் அபாயச் சங்கு ஊதினார். ஆயிரம் வீரர்களாவது சிறை செல்வதாக மட்டுமில்லாமல் உயிரையும் பலி கொடுக்கத் தயாரான தன்னல மறுப்பு உணர்வுடன் வந்தால்தான், இந்தியக் கூட்டாட்சி என்னும் பார்ப்பனப் பிரசிடெண்ட், பார்ப்பனப் பிரதமர் எனும் ஏக போக ஆட்சியிலிருந்து விலகித் தமிழ் நாட்டைத் தனிச் சுதந்திர நாடாக ஆக்கித் தமிழ் நாடும் தமிழனும் தப்பிப் பிழைக்கலாம் என்றார் பெரியார். "தமிழ் நாடு என்ற பெயரை இந்த ராஜ்யத்துக்குச் சூட்டுகின்ற அதிகாரம், சக்தி எல்லாம் டெல்லி ஆட்சிக்கே உண்டு. ஆகையால் தமிழ் நாட்டு அரசோடு முட்டிக்கொள்ளாமல் அநீதிகளுக்குக் காரணமான ஆதிபத்ய டெல்லி ஆட்சியின் பிடியிலிருந்து விடுபடவேண்டும். தாய்த்திரு நாட்டுக்குத்

தமிழ்நாடு என்ற பெயர்கூட இல்லையே என்று கொதிக்கும் உள்ளங்கொண்ட இளைஞர்களே தோழர்களே புலவர்களே பெருமக்களே எழுத்தாளர்களே பேச்சாளர்களே நாடு பிரிவினையைத் தவிர வேறு வழியில்லை. ஜூன் 5–ல் யூனியன் படத்தை ஒரு கையிலும் தீப்பந்தத்தை மறு கையிலும் தூக்கி ஊர்வலம்வந்து டெல்லிஆதிக்க ஆட்சிக்குத் தீ மூட்டுங்கள்! ஊர்வலம் வருவதில் யாருக்காவது வெட்கமோ, பயமோ இருக்குமானால் அவரவர் வீட்டு வாயிலில் கொளுத்திவிட்டுப் பெயர் கொடுங்கள்'' என்றார்.

"பி.ஜி.கேர் தலைமையில் அமைந்த இந்திக் கமிஷன், அதில் ஓர் உறுப்பினரான டாக்டர் சுப்பராயனுடைய ஆட்சேபக் குறிப்பையும் புறக்கணித்து, இந்திதான் ஆட்சி மொழி என்று கூறிவிட்டது. நேருவின் உறுதிமொழிகள் அச்சாகி, மைஉலரும் முன்பே வேகவேகமாக வேறொரு புறத்திலிருந்து ஆணைகள் பிறப்பிக்கப்படுவதும் இந்தி பல இடங்களில் திணிக்கப்படுவதும் நடைபெற்றுக் கொண்டேயிருக்கிறது. இந்தியை எதிர்த்து நான் இந்திய யூனியன் கொடியைக் கொளுத்துவதைக் கூட, ஒத்திதான் வைத்தேன். இவர்கள் நாணயம் எனக்குத் தெரியும். வாக்குறுதியைப் பறக்க விடுவார்கள் என்றுதான் கொடி கொளுத்தும் கிளர்ச்சியை இன்னும் கைவிட்டு விடவில்லை. ஆனால் அதற்குள் சாமர்த்தியமாய் இங்குள்ள சட்டசபையைக் கொண்டு, கொடி கொளுத்தினால் மூன்றாண்டு தண்டனை எனச் சட்டம் போடச் செய்தார்கள். நண்பர் ஆச்சாரியார் கூட இரண்டாண்டுகாலமாய் இந்தித் திணிப்பு இந்திய அய்க்கியத்தைக் குலைக்கும் என்கிறார். அதன் அர்த்தம்–இந்தியை ஒழிக்க முடியாவிட்டால் நாம் தனியாகப் பிரிந்து கொள்ளலாம் என்பதுதானே? ஆகவே இந்தியெனும் விஷ விருட்சத்தின் ஆணிவேரைக் கெல்லி எறிய ஒரே வழிதான் உண்டு. அது நாட்டுப் பிரிவினை. இதற்காகவாவது இந்தியத் தேசப் படத்திற்குத் தீ வையுங்கள்!

தமிழ்நாடு எதற்காக இந்திய யூனியன் ஆட்சியின்கீழ் இருக்கவேண்டும்? டெல்லி ஆட்சி அப்படி என்ன நீதிக்கும்

நிர்வாகத்திறமைக்கும் நேர்மைக்கும் ஜனநாயகத்திற்கும் பாதுகாப்பிற்கும் பலத்திற்கும் சிறப்பான பேர்போன ஆட்சி? வரலாற்றுப்படியோ, பூகோளப்படியோ, புராணப்படியோ, கலாச்சாரப்படியோ நமக்கும் டெல்லிக்கும் சம்பந்தமே யில்லை.ஏக இந்தியத் தோழர்களே!சிந்தியுங்கள் தெளிவடை யுங்கள். வேறுவழி உண்டானால் சொல்லுங்கள்; வேறு மார்க்கம் இருந்தால் காட்டுங்கள்! இல்லையென்றால் என் வழிக்கு வாருங்கள். பந்தத்தை ஏந்துங்கள். படத்தைப் பொசுக்குங்கள்.''

மே மாதம் முழுவதும் தமிழகம் பெரியாரின் இந்த வீர முழக்கத்தால் எதிரொலித்துக் கிடந்தது. சிகரம் வைத்தது போல் 4-6-60 நாள் சென்னை திருவல்லிக்கேணிக் கடற் கரையில் டி.எம். சண்முகம் தலைமையில் மிகப் பிரம்மாண் டமான பொதுக்கூட்டம் நடந்தது. பெரியாரும் வீரமணியும் தவிர, நாம் தமிழர் இயக்கத்துச் சார்பில் ஆதித்தனார், ஈரோடு சின்னசாமி, வரதராசன், ஜெயச்சந்திரன் ஆகியோரும் பேசினார்கள். 2 லட்சம் படங்கள் கொளுத்து வதற்காக வழங்கப்பட்டிருந்தன. இது பட எரிப்பு அல்ல; படையெடுப்பு என 3-6-60 "விடுதலை" வர்ணித்தது. ஜூன் முதல் நாள் அமைச்சரவை கூடிற்று. சென்னையில் 41-ஆவது பிரிவின்கீழ் ஜூன் 4 முதல் 11 வரை தடையுத்தரவு பிறப்பிக்கப்பட்டிருந்தது. ஜூன் 5 காலை 10-30 மணி யளவில் 151-ஆவது தடுப்புக்காவல் சட்டத்தின்படிப் பெரி யாரும், வீரமணி, குருசாமி, புலவர் கோ. இமயவரம்பன் ஆகியோரும், ஆதித்தனாரும் கைது செய்யப்பட்டனர். நாடு முழுதும் அன்று பல இடங்களில் தேசப்படங்கள் தீக்கிரை யாயின. நள்ளிரவு வரையில் போலீசார் வேட்டையாடி 4000 பேரைக் கைது செய்திருந்தனர். சென்னையில் டி.எம். சண்முகம், லோகநாதன் உள்ளிட்ட 75 பேர் மீது வழக்குப் போட்டு 24-6-60ல் ஒருமாத சிறைதண்டனை வழங்கினார்கள். ஈரோடு திராவிடர் கழகத் தலைவர் அங்கமுத்து மீது 124A, 153 பிரிவுகளில் வழக்குத் தொடுத்து ஒருமாத சிறை அளிக்கப் பட்டது, 7-7-1960 அன்று.

இவ்வளவுக்குக்குப் பிறகும், "காமராசர் ஆட்சியின் சாதனைகள்" என்ற புத்தகம் திருச்சி பெரியார் மாளிகையில் கிடைக்கும் என்ற விளம்பரம் "விடுதலை"யில் தொடர்ந்து வெளியிடப்பட்டு வந்தது! ஜூலை மாதத்தில் இந்திய அரசைச் சார்ந்த ரயில்வே மற்றும் தபால் தந்தி ஊழியர்கள் பொதுவேலை நிறுத்தம் செய்தனர். 14-7-60 முதல் 5 நாள் நீடித்த வேலை நிறுத்தத்தின் விளைவாக அரசுக்கு 25 கோடி ரூபாய் நட்டம் ஏற்பட்டது. அரசு ஊழியர்கள் தொழிலாளர்கள் அல்லர். எனவே அவர்களுக்கு வேலை நிறுத்தம் செய்ய உரிமை கிடையாது என்பது பெரியாரின் வாதம். அதனால் வேலை நிறுத்தப் போராட்டத்துக்கு எதிரான செய்திகளே "விடுதலை" நாளேட்டில் வெளிவந்தன. ரயில்வே ஊழியர்கள் முழுமையாக இந்த வேலை நிறுத்தத்தில் பங்கேற்க வில்லை, எனினும், ஆர்.எம்.எஸ். ஊழியர்கள் உறுதியாய் நின்றதால், இறுதியில் பழிவாங்கப் பட்டவர் அவர்களே! பெரியார், வேலைநிறுத்தம் தவறுதான் என்றாலும் அனைவருக்கும் பொது மன்னிப்பு வழங்கலாம் என்ற ஆலோசனை வழங்கினார்.

1960 ஜூலை 22-ஆம் நாள் சென்னை திருவல்லிக்கேணி கடற்கரைப் பெருமணல் வெளியில் எஸ். குருசாமி தலைமையில், பட எரிப்புக் கிளர்ச்சியில் சிறை சென்று மீண்ட தோழர்களுக்குப் பாராட்டுப் பொதுக்கூட்டம். பெரியாருடன் கி. வீரமணி எம். ஏ., பி. எல். கலந்து கொண்டார். வீரமணி பி. எல். பட்டத் தேர்வில் வெற்றி பெற்றிருந்தார். திராவிடர் கழக மத்திய நிர்வாகத்தின் செயலாளர்களாக அவரும், ஆனைமலை ஏ. என். நரசிம்மன் பி. ஏ. அவர்களும் நியமிக்கப்பட்டிருந்தனர். திராவிட முன்னேற்றக் கழகம் 1-8-60 அன்று கோடம்பாக்கத்தில் ஒரு இந்தி எதிர்ப்பு மாநாடு கூட்டியது. ஜனாதிபதிக்குக் கருப்புக் கொடி காட்டுவதாக அங்கு முடிவாயிற்று. மேயரிடம் முதல் கருப்புக் கொடியைத் தந்தார் அண்ணா. ஆனால், மாநாட்டின் வரவேற்புக் குழுத் தலைவரான ஈ. வெ. கி. சம்பத் எம். பி., பிரதமர் நேருவுக்கு எழுதிய கடிதத்துக்கு, நேரு

உடனே பதிலளித்துத் தமது பழைய வாக்குறுதி நிலையான தென்றும், இந்தி திணிக்கப்பட மாட்டாது என்றும் கூறியிருந்தார். மேலும், குடியரசுத் தலைவரான டாக்டர் ராஜேந்திரபிரசாத்தும், 5-8-60 அன்று, இந்தி எவர் மீதும் கட்டாயமாகத் திணிக்கப்பட மாட்டாது என்று அழுத்த மாகத் தெரிவித்தார். திராவிட முன்னேற்றக் கழகம் கருப்புக் கொடி காட்டவில்லை; எனினும், நாம் தமிழர் இயக்கத் தலைவர் உட்பட 100 பேர் ஜனாதிபதிக்குக் கருப்புக் கொடி காட்டிக் கைதாயினர்.

16 வயதும், 17 வயதும் ஆகியிருந்த இரு இளம் பட எரிப்பு வீரர்களுக்குத் திருச்சியில் 11–8–60 அன்று இரண்டாண்டு சிறைத்தண்டனை விதிக்கப்பட்டது. "தமிழகத்தில் தமிழும், மத்தியில் இங்கிலீஷும் ஆட்சி மொழிகளாக இருக்கும். இதை நாம் உறுதியாகக் கூறி விட்டோம். அவர்களும் ஏற்றுக் கொண்டு விட்டார்கள்" என்று முதலமைச்சர் காமராசர் 1960 ஆகஸ்டு 14-ஆம் நாள் தெளிவாய்ச் சொன்னார்.

'அசல் ஒண்ணாம் நெம்பர் காலித்தனம்' என்று 25-8-60 "விடுதலை" தலையங்கம் தொடங்குகிறது. இதன் தலைப்பு "ஸ்ட்ரைக்—வேலை நிறுத்தம்" இதை எழுதியவர் பெரியார்தாம்! அழகிரிசாமி அரசாங்க வக்கீலாக நியமிக்கப் பட்டது செல்லாது என்று சில பார்ப்பனர்கள் தடை யுத்தரவு கோரித் தொடுத்த வழக்கு, அவர்களுக்குத் தோல்வியானது. இந்தப் பார்ப்பனர் போரைக் கண்டித்துப் பெரியார் 30–8–60 அன்று தலையங்கம் தீட்டியிருந்தார். பின்னாளில் அழகிரிசாமி, உயர்நீதிமன்றத்திலும், உச்ச நீதி மன்றத்திலும் நீதிபதி! 9–9–60 அன்று "இராவணன் பிறந்த நாள்" என்று "விடுதலை"யில் தலையங்கம் வெளி யாயிற்று. யார் அந்த இராவணன்? வேறு யாருமல்ல; பெரியாரைத்தான் வடநாட்டில் "தட்சிணப் பிரதேஷ் ராவண்" என்கிறார்களாம். அன்பினாலோ வம்பினாலோ உண்மையைக் கூறிவிட்டார்களே!

செப்டம்பர் 17-ஆம் நாள் பெரியார் 82-வது பிறந்த நாள் விழா; சிதம்பரத்தில் அதே நாளில் டாக்டர் ஆர். ஜி. கிருஷ்ணன் தலைமையில் வழக்கறிஞர் ரங்கசாமி முதலியோர் பங்கேற்றனர். திருச்சியில் அடுத்த நாள் டாக்டர் மணவாளராமானுஜம் தலைமையில் டி. ஏ. வி. நாதன் ஆகியோர் கலந்து கொண்டனர். இரு ஊர்களிலும் பெரியாரும் பங்கேற்றார். 17-9-60 தஞ்சையில் பெரியார் படத்திறப்பு விழாவில் எம். ஆர் ராதாவுடன் ஆர். எஸ். மலையப்பன் (ஓய்வு பெற்ற அய். ஏ. எஸ்.) பங்கு பெற்றார். 29-9-60 மணப்பாறையில் பெரியார், கலைவாணர் படிப்பகத்தைத் திறந்து வைத்தார். 25–9-60 ஈரோட்டில் எம். ஜி. அங்கப்ப செட்டியார் தலைமையில் பெரியாரின் எடைக்குச் சரியாகப் பேரீச்சம்பழம் வழங்கப்பட்டது. 30-9-60 சேலத்தில் பி. ரத்தினசாமிப்பிள்ளை தலைமையில் பெரியாரைத் தராசிலிட்டுச் சம எடைக்குக் கைத்தறி ஆடைகளை வழங்கினார்கள். 28-10-60 மாயூரத்தில் 82 பொற்காசுகளாலான தங்க மாலை பரிசளித்தார்கள்.

சிறப்பான ஒரு கூட்டத்தைச் சென்னை நகர மக்கள் சார்பில் திருச்செங்கோடு கே. பரமசிவம் நடத்திக் காட்டினார். 20-10-1960 அன்று சென்னை கோகலே ஹாலில் பெரியாரின் 82-ஆவது பிறந்த நாள் கொண்டாட்டம். நிகழ்ச்சியின் தலைவர் செட்டி நாட்டரசர். சிறப்புரையாற்றியவர்கள் டாக்டர் எஸ். ஜி. மணவாள ராமானுஜம், வி. ஆர். ராஜரத்னம் (ஓய்வு பெற்ற அய். ஜி.) சி. பா. ஆதித்தனார், பி. பரமேசுவரன் எம். பி., டி. ஏ. வி. நாதன், ஏ. வி. பி. ஆசைத்தம்பி எம். எல். ஏ., எம். எஸ். அப்துல் மஜீத், புத்த பிக்கு நந்தீசுவரதேரோ, தமிழ் வாணன், அகல்யா சந்தானம். பேருரை நிகழ்த்தியவர் சக்கரவர்த்தி ராசகோபாலாச்சாரியார். பெரியாரும் இந்த விழாவில் கலந்து கொள்வாரென நம்பி அவரும் வந்தாராம். வராததால் ஏமாற்றமடைந்தாராம். நீண்ட நேரம் ராஜாஜி மனம்விட்டுப் பேசினார்:—

"பெரியாரை 1939-ல் பெல்லாரி சிறையில் போட்டு வாட்டினேன் என்றார்கள். சென்னையிலிருந்து பெல்லாரிக்கு ஒரு டாக்டரையும் அனுப்பிக் கவனிக்கச் செய்தேன் என்பது உங்களில் பலருக்குத் தெரியாது. திருவண்ணாமலை யில் 1949-ல் என்னைச் சந்திக்க வந்த பின்னர்தான் அவர் திருமணம் செய்து கொண்டதாகக் கூறுகிறார்கள். உண்மை யில் எனக்கு அதைப்பற்றித் தெரியாது; 1953-ல்தான் நான் அந்த அம்மாளைப் பார்த்தேன். பெரியார் வீட்டில் நான் முன்பு பல நாள் சாப்பிட்டிருக்கிறேன். தேர்சையை எப்படி இவ்வளவு வெண்மையாகச் சுடுகிறீர்கள்? என்று நாயக்கரின் தாயாரை விசாரித்தேன். வெந்தயம் போட்டு அரைக்க வேண்டும் என்றார்கள். அப்போதுதான் அதைத் தெரிந்து கொண்டேன்"—என்று ராஜாஜி தமக்கும் பெரியாருக்கும் இடையே இருந்த நீண்ட கால நட்பை நினைவு கூர்ந்தார். "அடுத்த முறை பிறந்த நாளில் அவரை அவசியம் வரச் செய்து என்னையும் பேச அழைப்பதாகச் சொல்கிறார்கள். இது அவ்வளவு சரியல்ல. இன்றே அவரை அழைத்திருக்க வேண்டும்" என்றார்.

17-10-60 அன்று "விடுதலை"க்குத் தொலை பேசி மூலம் பெரியாரின் அறிக்கை ஒன்று தரப்படுகிறது. என்ன அது? 23-10-60 அன்று திருச்சியில் "ஹைக்கோர்ட் நீதிப்போக் கிற்குக் கண்டன நாள்" என்பதாக. அதே போலக் கொட்டும் மழையிலும் 10,000 பேர் நிறைந்திருக்க, அந்தக் கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்படுகிறது:— "சென்னை அய்க்கோர்ட்டின் நீதிப் போக்கை இக்கூட்டம் வன்மை யாகக் கண்டிப்பதோடு, பார்ப்பன வக்கீல்களின் ஆத்திர மூட்டத் தகுந்த, நேர்மைக்கும் மனிதத் தன்மைக்கும் கேடான போக்கை, இக்கூட்டம் வெறுப்பதோடு, இந்நிலை மாறாதிருக்குமானால், பார்ப்பன வக்கீல்கள் பெருங் கேடுகளைச் சமாளிக்க வேண்டியிருக்குமென எச்சரிக்கை செய்கிறது"—இதே காரியத்துக்காகப் பெரியார் அக்டோபர் 30-ஆம் நாள் சென்னை திருவல்லிக்கேணி கடற்கரையிலும்,

நவம்பர் 6-ஆம் நாள் கும்பகோணத்திலும் கண்டனக் கூட்டங்களில் பேசினார்.

கட்டட நிதி வசூலுக்காக ரசீது புத்தகம் பெற்றுச் சென்ற தோழர்கள் சிலர், ஒழுங்காகப் பணத்தையும் கணக்கையும் தரவில்லை என்பதைக் கண்டித்துப் பெரியார் 12-11-60 அன்று ஓர் குறிப்புப் பிரசுரித்தார். திருவையாறு சப்ஜெயிலில் இருந்த குருசாமியை, அனுமதி பெற்றுப், பெரியார் சந்தித்தார். அவர் உடல் நலிவுற்றதால், அவர் சொந்த ஜாமீனில் வெளி வரவும் பெரியார் இசைந்தார். அதன்படி குருசாமி 8-12–60 அன்று வெளியில் வந்தார். வழக்கு நடைபெற்று வந்தது. வீர. கே. சின்னப்பன் திருமணத்தில் பெரியார் 27–11–60 அன்று வாழ்த்துரை வழங்கினார். திருச்சி நகர சபையில் பெரியாருக்கு வரவேற்பளிக்கப்பட்டது, 13-11-60 அன்று. அங்கு காமராசர் படத்தைப் பெரியார் திறந்து வைத்தார். செயற்கரிய செய்யும் கர்மவீரர் என்றும் மனிதருள் மாணிக்கம் என்றும் 26,000 பள்ளிகள், 304 உயர்நிலைப் பள்ளிகள், 57 கல்லூரிகளை நிறுவியவர் என்றும் காமராசரைப் புகழ்ந்தார் பெரியார். பின்னர் இது ஒரு தொடர் நிகழ்ச்சியாகிவிட்டது. கரூர், புதுக்கோட்டை நகராட்சிகளிலும் காமராசர் படத்தைப் பெரியாரே திறந்து வைக்க அழைக்கப் பெற்றார்.

பெரியாருடைய கருத்துகளைத் தாம் மெத்தவும் ஆதரிப்பதாகச் சென்னைப் பத்திரிகையாளர்களிடையே 30–12-60 அன்று ஜெயப்பிரகாச நாராயணன் மகிழ்ச்சியோடு குறிப்பிட்டார். சென்னையில் இந்தியத் தலைமை நீதிபதி பி. பி. சின்ஹா, வழக்கறிஞர்கள் சாதி உணர்ச்சியுடன் நடந்ததைக் கண்டித்து உரையாற்றினார்.

"நான் ஒரு அதிசயமான மனிதன் அல்லன். ஆனால் துணிவு உடையவன். கண்டதை ஆராய்ந்து, அறிந்ததைத் துணிந்து அப்படியே கூறுபவன். மக்கள் எதிர்ப்புக்கு அஞ்சாது கூறுவதால் வெறுப்புதான் கிடைக்கிறது. இந்த நாட்டில் இன்று பார்ப்பன சாதி சூத்திர சாதி என்ற இரண்டே சாதிகளில் எல்லாம் அடங்கிவிடுகின்றனர். இந்த

சமூகக் குறையையும், வாழ்க்கை முறையையும், சரிநிலை, சரிபங்கு அடைய முடியாத தடைகளையும் ஒழிப்பதன் மூலமே சாதிக் கேட்டை ஒரு பெரும் அளவு ஒழிக்க முடியும். இதற்கு அரசு மூலமாக நடைபெற வேண்டிய காரியங்கள் இரண்டே இரண்டுதான் உண்டு. ஒன்று, இரண்டுசாதி மக்களுக்கும் சரி சமத்துவ விகிதத்தில் எல்லாப் படிப்பும் கிடைக்கும்படிச் செய்தல்; இரண்டு, இரண்டுசாதி மக்களுக்கும் உத்தியோகம் பதவி ஆட்சித் தலைமை ஆகியவற்றில் ஜனத்தொகை எண்ணிக்கைக்கேற்ற விகிதப்படி, சாதிவாரி உரிமையளித்து அந்தப்படி அந்தந்தச் சாதியை அமர்த்துதல். இந்த இரண்டு காரியமும் செய்வதற்குச் சட்டசபைக்கோ நாடாளுமன்றத்துக்கோ செல்வதால் சாதிக்கக் கூடியதாகி விடாது. ஏன்? ஆட்சி இந்தக் காரியங்களைச் செய்யக் கூடாது என்று அரசியல் சட்டம் தடுப்பதில்லை; செய் என்று நிர்ப்பந்தப்படுத்த இயலாதபடி மட்டுமே அந்தச் சட்டம் அமைக்கப்பட்டிருக்கிறது. உதாரணமாக, ஒரு பார்ப்பான் தானே தனது உச்சிக் குடுமி, பூணூலை எடுப்பதில் அவனுக்கு எவ்விதத் தடையுமில்லை. ஆனால் சாதித் திமிரைக் காட்டும் அவனது உச்சிக் குடுமியைக் கத்தரித்து விடு என்றோ பூணூலை அறுத்து எறிந்து விடு என்றோ சொல்ல நமக்கு அதிகாரம் கிடையாது. ஆகவே இக்காரியங்கள் செய்யப் படுவதற்குக் கிளர்ச்சிகள்தான் தேவை; 'சட்டசபை, பார்லிமெண்டு செல்வது தேவையில்லை. சட்டத்தால் சாதியை ஒழிக்க முடியாது என்பது இன்று நிலைமை''—என்று பெரியார் பேசினார், எழுதினார்.

1961—ஆம் ஆண்டின் துவக்க நாளிலேயே பெரியார் தமது புத்தாண்டுக் கோரிக்கை போலத் திண்டுக்கல் பொதுக் கூட்டத்தில் ஒன்று ஆசைப்பட்டார். அதாவது தமிழன் உருப்பட வேண்டுமானால் காமராசர் ஆட்சி மேலும் பத்தாண்டுகளுக்கு நீடிக்க வேண்டுமென்றார். பார்ப்பனப் பத்திரிகைகள் மறைமுகமாகக் காமராசர் ஆட்சிக்குத் தொல்லை தருவதைப் பொறுக்க முடியாமல் திருச்சியில் இதற்காகவே 9-1-61 அன்று ஒரு கண்டனப் பொதுக்

கூட்டம் நடத்தினார். 29-1-61-ல் சென்னைதிருவல்லிக்கேணி கடற்கரை வரை 6 மைல் நீள ஊர்வலமும், பொதுக் கூட்டமும் நடத்தினார். "மெயில்" என்னும் பார்ப்பன ஏட்டின் குறும்புகள் எடுத்துக் காட்டப் பெற்றன. 15, 16 நாட்களில் பெரியார், பெங்களூரில் ஊர்வலம், பொதுக் கூட்டம் ஆகிய நிகழ்ச்சிகளில் பங்கேற்றபோது, அவருக்கு வெள்ளியாலான கத்தி, குத்தூசி ஆகியவை பரிசளிக்கப் பட்டன. 3-1-61 அன்று திருமதி குஞ்சிதம் குருசாமி சென்னை மாநகராட்சியின் கல்வி அதிகாரியாகப் பதவி உயர்வு பெற்றார். கல்வித்துறை இயக்குநர் நெ. து. சுந்தரவடிவேலுவுக்குக் குடி அரசுத் தலைவரால் பத்மஸ்ரீ என்ற விருது வழங்கப்பட்டது. திருச்சியில் 22-1-61 அன்று நடைபெற்ற திராவிட மாணவர் மாநாட்டுக்குத் தலைவர் கிள்ளிவளவன், திறப்பாளர் சின்னப்பன், பேச்சாளர்கள் ஆனைமுத்து, செல்வேந்திரன், முத்துச்செழியன், புலவர் ராமநாதன் ஆகியோர். 1961-ஆம் ஆண்டு எடுக்கப்பட்ட சென்சஸ் கணக்கில் "எல்லாரும் நாத்திகர் என்றே சொல்லுங்கள். 50 லட்சம் பேராவது நாத்திகர் இருக்க வேண்டாமா?" என்ற உணர்வூட்டும் செய்தி "விடுதலையில்" வெளிவந்தது. வடநாட்டில் பஞ்சாபி சுபா கோரிக்கைக்காக மாஸ்டர் தாராசிங் சிறையிலிருந்தார். சாந்த் படேசிங் பட்டினிப் போராட்டம் நடத்தினார். நேரு பெருமகனார் மனமிரங்கி 4-1-61 அன்று தாராசிங்கை விடுவித்து, அவரைச் சந்தித்துப் பேசப் போவதாக அறிவித்தார். நாகர்களுக்குத் தனி நாடு வழங்கப்பட்டது. இந்தியக் குடி அரசுத் தலைவர் 15-2-61 முதல் அது அமுலுக்கு வருமென்று அறிவித்தார்.

திருச்சி என். செல்வேந்திரன் வணிகக்குடும்பத்தைச் சார்ந்தவர். எடுப்புடன் கூடிய சொல்வளமும் எழுச்சியுடன் கூடிய குரல்வளமும் கருத்துடன் கூடிய நடைவளமும் மிக்க சொற்பொழிவாளராய்த் தோன்றித் தொய்வின்றித் தொடர்ந்து தொண்டாற்றி இன்று திராவிடர் கழகத்தின் பிரச்சாரச் செயலாளராக விளங்குகின்றவர்.

தஞ்சை வட்டம் சித்திரக்குடி, பகுத்தறிவுப்புலவர் ந. இராமநாதன் கரந்தை, காரைக்குடித் தமிழ்க் கல்லூரிகளில் முதல்வராகப் பணியாற்றியவர். "பெரியார் பேருரையாளர்" எனும் சிறப்புமிகு பட்டத்துடன் திராவிடர் கழகத்தின் ஆற்றல்மிகு ஆராய்ச்சிப் பேச்சாளராக முன்னணியில் விளங்குகின்றவர்.

"தமிழர் தலைவர்" என்ற ஈடற்ற நூலின் வரலாற்றாசான் தமிழ்ப் பெரும்புலவர் சாமி சிதம்பரனார் 17-1-1961 இரவு 10-30 மணியளவில் தமது 61-ஆவது வயதில் சென்னையில் மறைந்தார். நாரணதுரைக்கண்ணன், முகவை ராசமாணிக்கம் போன்றாரும் இடுகாட்டில் இரங்கலுரை பகர்ந்தனர். சனவரி, பிப்ரவரி மாதச் சுற்றுப் பயணங்களில் பெரியாருடன், பொதுச் செயலாளர் ஏ. என். நரசிம்மன் பி.ஏ. கலந்துகொண்டார். பெரியார் திருவெற்றியூரில் சொற்பெருக்காற்றுகையில் கண்ணீர்த்துளிகளைக் கண்டித்தார். "பெயரில் மாத்திரம் முன்னேற்றம் என்று இருந்தால் போதுமா? நான் பார்ப்பான் என்றால், நீ பிராமணன் என்கிறாய்? நான் பார்ப்பானே வெளியேறு எனும் போது, நீ அவன் கழுத்தைப் பிடித்துக் தள்ளினால் முன்னேற்றம்; நான் பூணூல் போடாதே என்று சொல்லும் போது, நீ அவன் பூணூலையே அறுத்தெறிந்தால் முன்னேற்றம்; நான் கிராப் வைத்துக்கொள் எனும்போது, நீ என்னைவிட முன்னே போய் அவன் உச்சிக்குடுமியை அறுத்தால் முன்னேற்றம்! இதெல்லாம் செய்யாமல் பெயரில் மட்டும் முன்னேற்றம் சேர்த்துக்கொண்டால் அது வந்துவிடுமா?" என்று கேள்விக் கணைகளை மாரிபோல் தொடுத்தார் பெரியார்.

குருசாமிமீது திருவையாற்றில் தொடரப்பட்ட வழக்கில் 1-2-61 அன்று தீர்ப்பு. 150 ரூபாய் அபராதம் கட்ட மறுத்து, 12-வது முறையாகச் சிறைவாசம், 9 மாத தண்டனை! பெரியாரின் சுற்றுப் பயண நிர்வாகி கோ. இமயவரம்பன், பெரியாரைப் பொதுக்கூட்டங்களுக்கு அழைப்பவர் ரூ. 75 தராமல் விட்டுவிடுவதைச் சுட்டிக் காட்டி அறிக்கை

ஒன்று தந்தார். திருவாரூரில் 12-2-61 அன்று நடைபெற்ற எஸ்.ஆர். எம்.யூ. மாநாட்டில் பெரியார், எஸ்.எஸ். பாட்சா ஆகியோருடன், காங்கிரஸ் கட்சிச் சட்டமன்ற உறுப்பினர்கள் பெருவாரியாகக் கலந்து கொண்டது குறிப்பிடத் தக்கது. பாளையங்கோட்டை நகரசபையிலும் பெரியார், காமராசர் படத்தை 13-3-61-ல் திறந்து வைத்தார். மத்தியில் உள் துறை அமைச்சராயிருந்த பண்டித கோவிந்த வல்லப பந்த் 6-3-61-ல் காலமானார். ஆச்சாரியார் தம்மை ராமனாகவும், கண்ணீர்த்துளிகளை அனுமார் படையாகவும் வர்ணித்துக் கொண்டதைப் பெரியார் கண்டித்தார். பொன்மலையில் 12-3-61–ல் நடைபெற்ற சுயமரியாதை மாநாட்டில் மனுநீதி, கீதை, இராமாயணம் போன்றவை பட்டாசுபோல் கொளுத்தப்பட வேண்டியவை என்று பேசினார் பெரியார். பேராவூரணி வி.எஸ். குழந்தையின் மகன் லெனின் திருமணம் 5–2-61 அன்று புதுக்கோட்டையில் பெரியார் தலைமையில் நடந்தது. 19-2-61வேலூர் ஈ.திருநாவுக்கரசு மணிவிழாவிலும் பெரியார் வாழ்த்தினார். இங்கிலாந்து அரசி எலிசபெத்தும், அவர்தம் கணவர் எடின்பரோ கோமகனும் 19-2-1961 சென்னை வருகை தந்தனர். தமிழ் நாட்டை மிகவும் விரும்புவதாக அவர்கள், முதலமைச்சர் காமராசரிடம் செய்தி விடுத்தனர். சட்டசபை மண்டபத்தில் காமராசருக்குச் சிலை எடுக்க வேண்டும் என்று பெரியார் கருத்தறிவித்தார்.

மதுரை தியாகராயர் கல்லூரியில் 13-3-61 அன்று, சிந்திக்கின்ற தன்மையில்லாததால் தமிழர் சமுதாயத்துக்கு வந்த கேடுகளை விளக்கினார் பெரியார்: "மகான் சொன்னது, ரிஷி சொன்னது, அவதார புருடர்கள் சொன்னது என்று பார்க்கிறோமே தவிரப் புத்தி என்ன சொன்னது என்று பார்ப்பதில்லை. ஒரே மனிதனுக்கே வயதுக்கு வயது, ஆண்டுக்கு ஆண்டு அறிவு வளர்ந்து, புத்தி மாறும்போது, 2000,3000 ஆண்டுகளுக்கு முன்பே யாரோ சொன்னது இன்று பொருந்துமா? மனிதன் நடந்து கொள்ள வேண்டிய முறைகள், ஒழுக்கங்கள் என்ன என்று, யாரோ முனிவரும் ரிஷியுமா சொல்வது? யார் இவர்கள்? இந்த ரிஷிகளின்

பிறப்பு, அவர்களே எழுதியுள்ளபடி எவ்வளவு அசிங்கம்? கலைக் கோட்டு முனிவர் மானுக்கும், ஜம்புகர் நரிக்கும், கவுதமர் மாட்டுக்கும், மாண்டவ்யர் தவளைக்கும், காங்கேயர் கழுதைக்கும், கணநாதர் கோட்டானுக்கும், சவுனகர் நாய்க்கும், சுகர் கிளிக்கும், ஜாம்பவான் கரடிக்கும், அசுவத்தாமா குதிரைக்கும் பிறந்தார்கள் என்று புராணங்களில் எழுதி வைத்துக்கொண்டு இருக்கின்றனர். இவர்கள் நமக்கு வழிகாட்டிகளா?

ஆத்திகன் என்பவன் அறிவில் நம்பிக்கை வைக்காமல், சாஸ்திரம் புராணங்களை அப்படியே ஒப்புக்கொண்டு, ஆராயாமல் நடப்பவன். நாத்திகன் என்பவன் ஞானி, அறிவாளி, நீதியில் நம்பிக்கை வைப்பவன், அறிவை உபயோகப் படுத்துகிறவன்—'' என்று விளக்கமுரைத்தார் பெரியார். தொடர்ந்து மேலும் பேசுகையில் "நான் எதையும் முதலில் நன்கு தெரிந்துகொண்டு, எதையும் நிர்வாணமாகப் பார்த்துப், பிறகு வெளியில் எடுத்துச் சொல்லுகிறவன். ஒரு மனிதனை வர்ணிப்பது என்றால், அவன் ஆடை, நாமம் இவைகளை மட்டுமல்லாமல்; இவற்றுக்கு உள்ளே இருக்கின்ற அவனது கை கால் முதலிய அங்க அவயங்களை வர்ணிப்பதுதான் என்பதுபோல, நான் உண்மைகளை விளக்குகிறவன்'' என்றார்.

மத்திய உள்துறை அமைச்சராகப் புதிதாய் வந்த லால் பகதூர் சாஸ்திரி 'வகுப்புத் தகராறு தூண்டுவோர், தேசிய அய்க்கியத்தையும் ஒற்றுமையையும் கெடுப்போர் ஆகியோர்மீது தடுப்புக் காவல் சட்டத்தைப் பிரயோகிக்கலாம்' என ஆலோசனை கூறியது . மிரட்டலாகவே தோன்றியது. பெரியார் எழுதிய "காமராஜரை ஆதரிப்பது ஏன்?'' என்ற புத்தகம் ஒன்று வெளியாகியிருந்தது. 3-4-61-ல் சேலம் நகரசபையிலும் காமராசர் படத்தைப் பெரியார் திறந்தார். "எனக்கு வயது முதிர்ச்சியால் இந்திரியங்கள் சக்தி குறைந்து விட்டது. நடக்க முடியவில்லை. $1\frac{1}{2}$ மணி நேரத்திற்கு மேல் பேசுவது கஷ்டமாக இருக்கிறது ! என்னுடைய

வேன் மிகவும் அசிங்கமாக இருக்கிறது. புதிதாக ஒரு வேன் அல்லது கார் வேண்டும்'' என்ற பெரியாரின் வேண்டுகோள் 24-3-61 "விடுதலை"யில் பெட்டிச் செய்தியாக வந்திருந்தது. உடனே தென்னார்க்காடு மாவட்ட திராவிடர் கழகம் பெரியாருக்குப் புதிய கார் வாங்கித் தர முடிவு செய்தது. கழகத்திற்கு நிறைய உறுப்பினர்கள் சேர்க்க வேண்டுகோள் விடுத்தார் பொதுச் செயலாளர். குமாரபாளையத்தில் பெரியாருக்கு மணிமகுடம் எனும் அழகிய கிரீடம் சூட்டி அழகு பார்த்தனர் 2-4-61 அன்று. 9 வாரம் சிறைத்தண்டனை அனுபவித்த குருசாமி, 4-4-61 அன்று திருச்சியில் விடுதலையாகி, நேரே பெரியாரைச் சந்தித்து வணங்கினார். கோவையில் 50 ஏக்கர் நிலமும், லட்சரூபாய் பணமும், நாட்டு மருத்துவ ஆராய்ச்சிக்காக ஜி.டி. நாயுடு வழங்கினார். 13-4-1961 முதல் அரசு இலாக்கா அனைத்திலுமே தமிழ் வழங்குமென ஆணை இடப்பட்டது.

1961 ஏப்ரல் 19-ஆம் நாள் ஈ. வெ. கி. சம்பத் தன் தோழர்கள் சிலருடன் தமிழ் தேசியக்கட்சியைத் துவக்கினார். குளித்தலைப் பகுதியில் சுற்றுப் பயணம் மேற்கொண்ட முதலமைச்சர் காமராசர் கிராமப் புறங்களில் சென்றபோது, சில தாய்மார்கள் தமது கால்களில் விழுந்து வணங்கியதை வன்மையாகக் கண்டித்து, "இப்படிச் செய்தால் நான் ஏதோ உயர்ந்தவன். நீங்கள் என்னைவிடத் தாழ்ந்தவர்கள் என்று அர்த்தமாகிவிடும். வேண்டாம் இந்தப் பழக்கம்!'' என்றார். தாம் இன்னும் கொஞ்ச நாளைக்கு உழைக்க வேண்டுமென்று ஆசைப் படுவதால் சில கட்டுத் திட்டங்களை அறிவித்துத், தோழர்கள் கட்டுப்பாட்டுடன் அவற்றைக் காப்பாற்றுமாறு கேட்டுக் கொண்டார் பெரியார். இந்தப் பெரிய அறிக்கை 25-4-61 அன்று, பெரியார் அறிவிப்பு என்ற தலைப்பில் வெளியானது. உடல் நலம் குன்றி அஜீர்ணமும் மலக்கட்டும் ஏற்பட்டுள்ளது. அதனால் அவசியம் பயணிகள் விடுதியில் ஓர் அறை தங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட வேண்டும். உணவு தாமே சமையல் செய்து கொள்வார்கள். ஊர்வலங்கள் தவிர்க்கப்படவேண்டும். ஊராட்சி மன்றங்

களின் வரவேற்புகளை, முடிந்தால் பொதுக்கூட்டத்திலேயே தந்து விடலாம். நகரசபையானால் பரவாயில்லை, நேரில் போகலாம். கூட்டங்களில் பெரியாரோடு வருகின்றவர்கள் தவிர, வேறு யாரும் பேசித் தொல்லைகளையுண்டாக்க வேண்டாம். மாலைகளைச் சூட்டி வீணாக்குவதை விடப் பதிலுக்கு எட்டணா கொடுத்து விடலாம். பெட்ரோல் செலவும் ரிப்பேர் செலவும் வேன் சம்பந்தமாக நிறைய ஓடுகிறது—என்றெல்லாம் விவரமாக அனைத்தையும் குறித்திருந்தார் பெரியார்.

ஏப்ரல் 29, 30, மே 1, 2 நாட்களில் பெரியார் பெங்களூர் சென்று வந்தார். 27-4-61 அன்று ''விடுதலை'' துணைத் தலையங்கப் பகுதியில் சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப் பிள்ளை மறைவு, அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தராக வி. சுப்ரமணியம் நியமனம் ஆகியவை இடம் பெற்றன. காமராசர் தமிழர்களின் ரட்சகர், தியாகி என்று பெரியார் வர்ணித்து வந்தார். சிரிமாவோ பண்டாரநாயகா ஆட்சியில் தமிழர்கள் தாக்கப்படுவது கண்டனத்துக்கு இலக்காயிற்று. திருச்சியில் நாகம்மையார் அனாதைப் பெண்கள் இல்லம் ஒன்றினை மணியம்மையார் துவக்கினார். 10 வயதுக்குட்பட்ட பெண்களுக்கு உணவு கல்வி தங்குமிடம் யாவும் அங்கு இலவசமாய் வழங்கப் பட்டன.

27-4-1961 அன்று குழுமிய தஞ்சை மாவட்ட திராவிடர் கழகம் பெரியாருக்குப் பிரச்சார மோட்டார் அளிக்க முடிவு செய்தது. ஈ.வெ.கி. சம்பத், தான் பெரியாரைச் சந்தித்துத் தனது தமிழ் தேசியக் கட்சியின் கொள்கை முதலியவற்றைப் பெரியாரிடம் விளக்கியதாகவும், பெரியார் தன்னைப் பாராட்டியதாகவும் செய்தி வெளியிட்டிருந்தார். ஜூன் மாதம் பிற்பகுதியில் பெரியார் சுற்றுப் பயணத்தில் பொதுச் செயலாளர்களான வீரமணியும் நரசிம்மனும் உடன் சென்றனர், தென்னார்க்காடு மாவட்டத்தில். பெரியார் சுதந்திராக் கட்சியைச் சரியாக எடைபோட்டு 9-6-61 ''விடுதலை''யில் ஒரு தலையங்கக் கட்டுரை தீட்டினார்:—

''சுதந்திராக் கட்சி அரசியல் கட்சியல்ல; இனநலக் கட்சி.

காமராசர் ஆட்சியையும், காங்கிரஸ் ஆட்சியையும் கைப் பற்ற வேண்டுமென்றுதான் தமிழ் நாட்டிலுள்ள மற்ற கட்சிகள் சொல்கின்றன. ஆனால் சுதந்திராக் கட்சியோ காமராசர் ஆட்சியையும் காங்கிரஸ் ஆட்சியையும் கவிழ்க்க வேண்டுமென்றே சொல்கிறது. இதற்கு அரசியல் காரணம் ஒன்றுமில்லை. நாட்டிற்கு நல்ல ஆட்சி வேண்டும் என்கிற கவலை சுதந்தராக் கட்சிக்குக் கிடையாது. சுதந்திராக்கட்சி இனத்துக்கு (பார்ப்பனர்களுக்கு) நாட்டில் எந்தக் குறையும் இல்லை. ராஜாஜியை விட உயர்ந்த பதவியை வகித்தவர் வேறு யாரும் இலர். அதற்கு உள்ள ஒரேகுறை, படுபாதாளத்தில் கிடந்த மற்ற இனத்தாரும் இன்று மேலே வரும் படியான முயற்சிகளைச் செய்கிறார்களே என்கிற ஆத்திரந்தான். அதனால்தான் ஆச்சாரியார், இது தர்மத்தை நிலை நிறுத்தும் கட்சி என்கிறார். உலகில் தர்மம் வேறு, நியாயம் வேறு அல்லவா?

இன்றையக் காமராசர் ஆட்சிக் காங்கிரசானது சமுதாயத் துறையில் பச்சைநீதியை (bare justice) இலட்சியமாக வைத்து ஆட்சி செலுத்தி வருகிறது. வர்ணாசிரமக் கோட்டையைக் கல்வித்துறையில் தகர்த்து வருகிறது. இந்த முயற்சிக்கு அணுகுண்டு வைத்துத் தகர்த்து நாசமாக்கும் முயற்சிதான் ராஜாஜியின் சுதந்தராக் கட்சியாகும். கள்ள நோட்டு என்பதன் இலட்சியம் மக்களை ஏய்த்துப் பயன் அடைவதாகும். அதற்கும் மேலான தந்திரத்தினால் மக்களை ராஜாஜி ஏய்க்கப் பார்ப்பதால், சுதந்தராக் கட்சிக்குக் கள்ள நோட்டுக் கட்சி என்றே வேறு பெயர் வைக்கலாம். இதற்கு முன், பதவிக்கு வந்ததும் ஆச்சாரியார் என்ன செய்தார்? இப்போதும் என்ன செய்வார்?" —என்று பெரியார் 'வெளிச்சம்' உண்டாக்கியிருந்தார்.

காரினால் தமக்கு அடிக்கடி சுற்றுப் பயணத்தில் இடையூறு நேரிடுவதாகப் பெரியார் குறிப்பிட்டிருந்தார் அல்லவா? அது நல்ல பயனை அளித்தது. சென்னை நேஷனல் பிக்சர்ஸ் அதிபர் பி.ஏ.பெருமாள் உடனடியாகத் தம்முடைய டாட்ஜ் காரைத் தந்து விட்டார். பலரும் நிதியளித்து

வந்தனர். பெரியாரின் வேன் ரிப்பேரான சமயங்களில் ஜி.டி. நாயுடு, பொறையாறு சத்தி விலாஸ் பஸ் அதிபர் பார்த்தசாரதி ஆகியோர் பழுது பார்த்து உதவினர். திருச்சி டி. ஆர். சௌந்தரராசன் தமது 'நில்லாதே ஓடு' என்ற நாடக வாயிலாக வசூலான தொகை ரூ. 1322 நன் கொடையாய் வழங்கினார். இப்படி உதவிய எல்லாரையும் பெயர் சொல்லிக் குறிப்பிட்டுப், பெரியார் நன்றி பொங்கப் பொங்க ஒரு கட்டுரையே தீட்டியிருந்தார்!

ஜூலையில் சென்னையில் காமராசரின் 59-வது பிறந்த நாள் விழா கோலாகலமாகக் கொண்டாடப் பட்டது. மராட்டிய முதல்வர் சவான் கலந்து கொண்டார். முதலமைச்சரோ, தஞ்சைப் பகுதியில் பெருத்த வெள்ளச் சேதத்தைப் பார்வையிடப், படகுப் பயணம் செய்து கொண்டிருந்தார். அதேபோன்று, மதுரையில் மூன்றாவது தி.மு.க. மாநில மாநாடு 13, 14, 15, 16 நாட்களில் நடைபெற்றது. தலைமை தாங்கிய அண்ணாவும் இடையில் ஓர் நாள் தஞ்சைப் பகுதி சென்று, படகுகளில் ஏறிப்போய்ப் பார்வையிட்டு, பாதிக்கப் பட்ட மக்களுக்கு ஆறுதல் வழங்கி வந்தார். பெரியார் அரகண்டநல்லூரில் பேசும் போது, அடுத்த பொதுத் தேர்தலுக்குப் பின்னர் புதிய போராட்டம் துவக்குவதாக அறிவித்தார். கழகத் தோழர்கள் சில நேரங்களில் நாணயக் குறைவாக நடந்து, தமக்கு மாற்றாரை விட இவர்களே அதிகத் தொல்லை தருவதாகக் கூறி வருந்திய பெரியார், திருச்சியை அடுத்த சமயபுரத்தில் 500 ரூபாய் நிதி தருவதாகக் கூட்டத்திற்கு அழைத்துச் சென்று, கடைசியில் தராமல் தவறிய செய்தியையும் உதாரணமாகக் காண்பித்தார். இந்த அறிக்கை வந்த அடுத்த வாரமே, அதாவது 14-7-61 அன்று, தொலைபேசி வாயிலாகவே, திருச்சி வட்ட, திருச்சி நகர திராவிடர் கழகங்கள் கலைக்கப் பட்டதாகச் செய்தி தந்தார் பெரியார்.

29-7-1961 அன்று குஞ்சிதம் குருசாமி அம்மையார் தமது 52-ஆவது வயதில் மறைந்தார். ஆத்தூரிலிருந்த பெரியார் தகனத்துக்குள் சென்னை வந்துவிட்டார். இடுகாட்டில்

ஈ.வெ.கி. சம்பத், எஸ். ராமநாதன், என். வி. நடராசன், டி.கே. சண்முகம் ஆகியோரும் இரங்கலுரையாற்றினர். பின்னர் 16-8–61 அன்று நீத்தார் நினைவாகப் படத்திறப்பு நிகழ்ச்சியில் முதல்வர் காமராசர்,டாக்டர் மு.வரதராசனார், ப.ஜீவானந்தம்,இந்திராணிபாலசுப்ரமணியம்,டி.ஏ.வி நாதன் ஆகியோர் பங்குபெற்றனர். கண்ணீர்த்துளிக் கட்சியைச் சார்ந்த மதுரை முத்து 11-8–61 அன்று கைதானதாக "விடுதலை" செய்தி வெளியிட்டது.

நாகம்மையார் பெண் ஆசிரி''ப் பயிற்சிப் பள்ளி திருச்சி யில் நடத்திட அனுமதி வழங்கப் பட்டது அரசினரால். காமராசர், முதியோர் பென்ஷன் திட்டத்தை விரிவாக்கி இனி 60 வயது ஆனவர்களுக்கும் கிடைக்க (அதுவரை 70 வயது) ஆவன செய்தார். "நான் காங்கிரசில் சேர்ந்து விட்டேனா? என்று சிலர் கேட்கிறார்கள். நான் சேரா திருப்பதே நல்லது!" என்றார் பெரியார். "அரசியல் சுயநல மாகி விட்டது. சமுதாயத்தில் என்னுடைய வேலை பாக்கி யிருக்கிறது. வேறு யாரும் இதைச் செய்ய முன் வரமாட்டார்கள். 'எல்லா இந்தியக் காங்கிரசு' உள்ள வரையில் நான் காங்கிரசுக்கு எதிர்ப்பாளனாகவே இருந்து தீரவேண்டிய வனாக இருக்கிறேன். மற்றும், காங்கிரசின் கள் ஒழிப்பை, கதர் பரப்புதலை, காந்தியத்தை, சாதிமத கோயில் சம்பிர தாயப் பாதுகாப்பை நான் ஒப்புக்கொள்ள முடியுமா? நானே மானங்கெட்டுக் காங்கிரசில் நுழையலாம் என்று துணிந் தாலும், அவர்களும் சேர்க்க மாட்டார்கள்" என்றும் பெரியார் 20–7–61 தலையங்கப் பகுதியிலேயே, "விடுதலை" நாளேட்டில் கட்டுரையாய் எழுதினார்.

வேதாரணியம் காங்கிரஸ் தியாகி சர்தார் வேதரத்தினம் பிள்ளை எம்.எல்.ஏ. தமது 65 ஆவது வயதில் திடீரென்று, 1961 ஆகஸ்டு 25– ஆம் நாள் மறைந்தார். ஈரோடு என். கரிவரதசாமி, நீண்டநாள் குடிஅரசு அலுவலகக் காசாளரா யிருந்தவர், 22–ஆம் நாள் மறைந்தார். திருவாரூர் சிங்கராயர் செப்டம்பர் 23–ஆம் நாளும், திருச்சி ஃபிரான்சிஸ் அக்டோபர் 12-ஆம் நாளும் மறைந்தனர். 35 ஆண்டுகள்

"குடிஅரசு", "விடுதலை" அலுவலகங்களில் வாச்மேனாக இருந்த பழனி (கவுண்டர்) ஆகஸ்டு 29-ஆம் நாள் மறைந்த செய்தி "விடுதலை"யில் முக்கிய இடம் பெற்றிருந்தது. சம்பத்தும் கண்ணதாசனும், சாதி ஒழிப்பு மாநாடு நடத்த இருக்கிறோம், கலந்து கொள்வீர்களா? என்று கேட்டார்களாம்; நாம் தமிழர் கட்சி நடத்திய மாநாட்டுக்கே போனவன், உங்கள் கட்சிக்கு வ்ர மாட்டேனா? வருகிறேன்! என்றாராம் பெரியார். நாம் தமிழர் கட்சி, தேர்தலில் நிற்பதாக அப்போது முடிவெடுத்து விட்டது. தொலைபேசி மூலமாகப் பெறப்பட்ட இச்செய்தி 29-8-61 "விடுதலை"யில் காணக் கிடக்கின்றது.

பட்டுக்கோட்டை அழகிரி குடும்பத் திருமணங்களில் பெரியார் 6–9–61 அன்று தலைமை தாங்கி நடத்தித் தந்தார். அழகிரி மகன் துலீப், அழகிரி மகள் ராணி ஆகியோர் மணவினை நிகழ்ந்தது. திருச்செங்கோடு கே.பரமசிவம் நடத்தும்பெரியார் 83–வது பிறந்தநாள் விழா இந்த ஆண்டு 17–9–61 சென்னை ஆபட்ஸ்பரி மன்றத்தில் நடந்தது. செட்டிநாட்டரசர், சர் ஏ. ராமசாமி, ஆசைத் தம்பி, தமிழ்வாணன், சவுந்தரா கைலாசம், அகல்யா சந்தானம், குழந்தைவேலு (ஓய்வு பெற்ற காவல்துறை அதிகாரி) ஆகியோர் கலந்து கொண்டனர். நடிகவேள் ராதா 8300 ரூபாய் நன்கொடை வழங்கினார் பெரியாரிடம். தமிழ் தேசியக் கட்சியினர் சென்னை எஸ்.அய்.ஏ.ஏ. திடலில் 15, 16 நாட்களில் சாதி ஒழிப்பு மாநாடு நடத்தினர். பெரியாருடன் குன்றக்குடி அடிகளார், தேவநேயப் பாவாணர் ஆகியோர் கலந்துகொண்டனர். 21–ம் நாள் பெரம்பலூர் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ மாநாட்டுக்குப் பெரியார் தலைமை தாங்கினார். தஞ்சையில் திராவிடர் கழகத்துக்குக் கட்டடம் சொந்தமாகக் கட்டப்பட்டு, அதைப் பெரியார் 20–9–61 அன்று திறந்து வைத்தார். திருச்சியில் டாக்டர் மதுரம் தலைமையில் பெரியார் பிறந்த நாள் விழாவில் ரூ 6569 நிதியும் மணிமகுடமும் வழங்கப் பெற்றன. 11-10-61

"விடுதலை"யில் மிகச் சிறிய அளவில் ஒரு செய்தி காணப் படுகிறது: "எஸ். குருசாமி ராஜிநாமா வந்து சேர்ந்தது; ஈ.வெ.ரா."—என்று மட்டும் உள்ளது.

சிதம்பரத்தில் 8–10–61 அன்று கோலாகலமான கொண் டாட்ட விழாவில் நடமாடும் இல்லம் என வர்ணிக்கத்தக்க MSW 7007 வேன் பெரியாருக்கு வழங்கப்பட்டது. பி.ஏ. பெருமாள் தலைமையில் எஸ்.ஆர்.வி.எஸ். மானேஜிங் டைரக்டர் குடந்தை ஆரோக்கியசாமி, கார் சாவி வழங் கினார். சம்பத், கண்ணதாசன் ஆகியோரும் கலந்துகொண் டனர். சிம்சன் கம்பெனி அனந்தராமகிருஷ்ணன் மேற்பார் வையில் வேன் தயாரானது. "காமராசர் ஆட்சி சாதி ஒழிப் புக்குச் சாதகமாயிருக்கிறது. அதனால் இன்னும் ஓர் அய்ந் தாண்டு காலத்துக்குக் காமராசருக்கே வாக்களியுங்கள்!" என்று கேட்டார் பெரியார்.

பெரியார் தேர்தல் பிரச்சார இயந்திரத்தை முடுக்கிவிட் டார்! சென்னை மாநகரில் ஏராளமான பொதுக்கூட்டங்கள்! "கண்ணீர்த் துளிகள் சட்டசபையில் சாதித்தது என்ன?" என்று வீரமணி தொடர் கட்டுரை தீட்டி வந்தார். "தமிழ் நாடா? திராவிடநாடா?" என்ற விளக்கநூலும், வீரமணி எழுதக், குடிஅரசுப் பதிப்பகச் சார்பில் வெளியிடப்பட்டது. 17–11–61 அன்று, தேர்தலில் திராவிடர் கழகத்தின் நிலையை விளக்கிப் பெரியார் கட்டுரை வரைந்தார்.

"கொஞ்ச நாட்களுக்கு முன்பு, திராவிடர்கழக ஆதரவா ளர்களும், திராவிடர் கழகச் சார்புள்ளவர்களும், தங்களுக்கு அவசியம் என்றோ, சரி என்றோ பட்டால், அவர்கள் காங்கிரசில் சேர்ந்து கொள்ளுவதில் நமக்கு ஆட்சேபனை யில்லை, என்று எழுதியிருந்தேன். கழகத்தார்கள் சேர்ந்து கொள்ளலாம் என்று நான் கருதியிருந்தால் தெளிவாக, விளக்கமாக, சந்தேகத்திற்கு இடமில்லாமல், கழகத்தார் இஷ்டப்பட்டவர் சேர்ந்து கொள்ளலாம் என்று எழுதியிருப்பேன்.

வரப்போகும் பொதுத் தேர்தலில் காங்கிரஸ் சார்பில் மக்களுக்கு விளக்கம் சொல்லப் போதிய ஆட்கள் இல்லை.

கழகத்தோழர்கள், கழகச்சார்பிலேயே நல்லபடி விளக்கம் கூறலாம். நிற்க, தேர்தலில் கழகத்தின் நிலைமை என்ன வென்றால் கண்ணைமூடிக்கொண்டு காங்கிரசை ஆதரிப்பது தான்!

யார்யாரை நிறுத்துவது என்ற பொறுப்பு 100க்கு 100 காங்கிரசையே சேர்ந்ததாகும். ஆகவே காங்கிரஸ்காரர்கள் 'களிமண்ணையோ' 'மரக்கட்டையையோ' நிறுத்தினாலும் நாம் நமக்காகவே வேலை செய்வதுபோல் பாடுபட வேண்டும்.

ஆகவேதான், காமராசரையே நம்பி—எல்லாப் பொறுப்புகளையும் அவர்மீதே போட்டு—அவரால் நிறுத்தப் படுகிற ஆட்களில் 100க்குத் 90பேருக்குக் குறையாமலாவது வெற்றி பெறும்படிச் செய்யவேண்டியது நம்முடைய கடமை என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்." என்பதுதான் கட்டுரையின் முக்கிய கருத்தாகும்.

1962–ஆம் ஆண்டு, பெரியாரின் கடற்கரைச் சொற் பொழிவோடு துவங்கிற்று. இனநலம் என்ற கண்ணோட் டத்துடன்தான் பெரியார் காமராசரை ஆதரித்துவந்தார். அவரை நேரில் சந்திப்பதே கிடையாது. 23–7–57 அன்று டாக்டர் வரதராசலு நாயுடு மறைவின்போது பார்த்தது. அவரையே ஆதரிப்பதற்குக் காரணம் அவரது ஆட்சியைக் குறை சொல்கிற கண்ணீர்த் துளிகளுக்குக் கொள்கையும் கிடையாது; திறமையும் இல்லை என்றார் பெரியார். தமிழரசுக் கழகத் தலைவர் ம. பொ. சி. திராவிட முன் னேற்றக் கழகம் எதிர்க் கட்சியாக வருவதற்குக் கூட இலாயக்கில்லை என்று தமது கூட்டத்தில் பேசி வந்தார். 1–1-1962 "விடுதலை"யில் பெரியார் "பார்ப்பனத் தோழர் களுக்கு" என்று எழுதிய மிக உருக்கமான கட்டுரை, விருப்பு வெறுப்பின்றிப் படித்து, ஆழ்ந்து சிந்திக்கத்தக்கதாக அமைந்தது.

"பார்ப்பனத் தோழர்களே! நான் மனிதத்தன்மையில் பார்ப்பனர்களுக்கு எதிரி அல்லன். சமுதாயத் துறையில் பார்ப்பனர்கள் அனுஷ்டிக்கிற உயர்வும், அவர்கள் அனுப

விக்கிற, அளவுக்குமேற்பட்ட விசிதமும்—ஆகியவைகளில் தான் எனக்கு வெறுப்பு இருக்கிறது. நான் நமது நாட்டை யும் சமுதாயத்தையும் ஆங்கில நாட்டுத் தன்மைக்கும் நாகரித்துக்கும் கொண்டு வர வேண்டும் என்கிற ஆசை யுடையவன். பார்ப்பன சமுதாயம் இதற்கு முட்டுக்கட்டை யாக இருக்கிறது என்று, சரியாகவோ தப்பாகவே நான் கருதுகிறேன். தாங்கள் அப்படி இல்லை என்பதைப் பார்ப் பனர்கள் காட்டிக் கொள்ள வேண்டாமா? உண்மை யிலேயே எனக்கு மாத்திரம் பார்ப்பனர்களுடைய ஆதரவு இருந்திருக்குமானால், நமது நாட்டை எவ்வளவோ முன்னுக்குக் கொண்டுவர என்னால் முடிந்திருக்கும்.

பார்ப்பன சமுதாயம் இன்றைக்குத் தங்கள் போக்கை மாற்றிக் கொள்ள வேண்டும். இராஜாஜியின் கட்சிக்கு, அல்லது, அவர் கூட்டு ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிற கட்சிக்கு வோட்டுப் போட்டாலும், காங்கிரசுக்கே போட்டாலும், இரண்டுமல்லாத வேறு கட்சிக்குப் போட் டாலும் இந்தத் தேர்தலில் பார்ப்பனர்கள் பொது மக்கள் நம்பிக்கையைப் பெற முடியாது. பொது மக்கள் சந்தேகமும் மாறாது. அதனால் பார்ப்பனர்கள் இந்தத் தேர்தலில் எந்தக் கட்சிக்கும், யாருக்கும் வோட்டுப் போடா மல், விலகி இருப்பதே புத்திசாலித்தனமான வழியாகும்.

தேர்தலுக்குப் பிறகு அரசியல் திட்டம் எதுவாக இருந் தாலும், சமுதாயத் திட்டம் என்பது பார்ப்பனர் வெறுப்புத் திட்டமாகத்தான் இருக்கும். இனி, கண்ணீர்த் துளிக கட்சி தேர்தலுக்குப் பிறகு இந்த நாட்டில் உலவ வேண்டுமானால், பார்ப்பன வெறுப்புச் சாதனத்தைத்தான் கைத்தடியாகப் பிடித்துக் கொள்ள வேண்டியவர்கள் ஆவார்கள். இந்தக் காரியத்துக்கு என்னை அணுகலாம். நானும் ஆதரவளிக்கலாம். எனக்கு சமுதாயத் துறையில் பார்ப்பனர்களைத் தவிர வேறு யாரும் எதிரிகளல்லர்.

பார்ப்பனர்கள் நான் ஏதோ மிரட்டுகிறேன் என்பதாக கருதிவிடக்கூடாது. இதற்கேற்ற மாதிரிப் பார்ப்பனத் தலை வர்கள் அறிக்கை விடுவது நலம் என்று கருதுகிறேன்."

அறிக்கையில் பெரியார் நுணுக்கமான பல நிலைமைகளை நன்கு ஆராய்ந்து கூறியிருந்தார். ஆனால், எதிர்பார்த்தது போலவே ராஜாஜி, ஈ. வெ. ரா. மிரட்டுகிறார் என்ற பொருள்பட அந்த வாரக் 'கல்கி' இதழில் எழுதியிருந்தார். ஓட்டுச் சாவடியில் வன்முறை கையாள்வார்கள் போலும் என்றெல்லாம் திசை திருப்பிவிட்டார் ஆச்சாரியார்.

பெரியாருக்குக் காலில் சுளுக்கு ஏற்பட்டதால் நாற்காலியில் அமர்ந்தபடியே, 1962 சனவரி 6, 7 நாட்களில் பெரியார் திடலில் நடைபெறவிருந்த இரு மாநாட்டு முன்னேற்பாடுகளையும் நேரில் கவனித்து வந்தார். 6-ந் தேதி காலை சென்னை தியாகராய நகரிலுள்ள பர்க்கிட் சாலையில் வியூகம் வகுத்து மாபெரும் கருஞ்சட்டையினர் ஊர்வலம் புறப்பட்டது. லட்சம் பேருக்கு மேல் மக்கள் குழுமினர். தலைவர் பெரியார் அலங்கார ஊர்தியில் அமர்ந்து வந்தார். 250க்கு மேற்பட்ட பஸ்களும் டிரக்குகளும் அணிவகுத்து வர, 13 மைல் நீளத்தையும் கடந்து வந்தது அந்தப் பேரணி. ஊர்வலமே அன்றையப் பொழுதில் பெரு மளவை எடுத்துக் கொள்ளுமோ என அஞ்சிச் சிறிது குறுக்கு வழியில் வர நேரிட்டது. அதனால் தி.க. மாநாட்டில் முழுமையாகப் பெரியார் மட்டுமே பேசநேர்ந்தது. குருசாமி, வேதாசலனார், நரசிம்மன் சிறிது பேசினர். இரவு எம். ஆர். ராதாவின் லட்சுமிகாந்தன் நாடகம் சிறப்பாக நடை பெற்றது. மறுநாள் வோட்டர்கள் மாநாடு புதுமையாக, முதன் முறையாக, நடந்தது. ஈ. வெ. கி. சம்பத் வரவேற்க, ஆதித்தனார் திறந்து வைக்க, குன்றக்குடி அடிகளார் தலைமை ஏற்றார். அப்துல் மஜீத், கண்ணதாசன், டாக்டர் விஜயலட்சுமி, பெரியார் உரையாற்றினர். இரவு சிவாஜி கணேசன் குழுவினரின் நாகநந்தி நாடகம் நடைபெற்றது. பெரியார் தலைமை ஏற்று, சிவாஜி தலைசிறந்த நடிகராகவும் வள்ளலாகவும் விளங்குகிறார் எனப் பாராட்டினார். பெரியாரின் மூடநம்பிக்கை ஒழிப்புக் கொள்கைகளைத் தாமும் இனிப் பின்பற்றுவதாக, சிவாஜி கணேசன் நன்றி தெரிவிக்கையில் கூறினார்! ''நம்மை எதிரிகளாக மதித்து

வந்த நேரு, நமது பட எரிப்புப் போராட்டத்துக்குப் பின்னர், சாதி அமைப்புகள் ஒழிய வேண்டுமென்று கூறத் தொடங்கி யுள்ளார். காமராசர் ஆட்சியும் நமது சாதி ஒழிப்பிற்கு அனுகூலமாயிருக்கிறது. அதனால் அடுத்த தேர்தலில், சமத்துவ சமுதாய அமைப்புக்கு ஆக்கமளித்திடக், காமராசர் கட்சிக்கே வோட் செய்ய வேண்டும்'' என்று பெரியார், மாநாட்டில் வேண்டிக் கொண்டார். பொங்க லன்று திருச்சியில், தேர்தலும் மக்கள் கடமையும் என்ற தலைப்பில் பெரியார் சொற்பொழிவாற்றினார். தொடர்ந்து வீரமணியும் உடன்வர, நேரடியான தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்டார். 22-ந் தேதி லால்குடி தொகுதியிலும், 23-ந் தேதி சீரங்கம் தொகுதியிலும் ஒரு நாளைக்கு 13, 14 கூட்டங்களில் பேசிட, மின்னல் வேகச் சுற்றுப்பயணம் மேற் கொண்டார் பெரியார்.

திருச்செந்தூர் நாடாளுமன்றத் தொகுதியில் போட்டி யிட்ட காங்கிரஸ் வேட்பாளர் டி. டி. கிருஷ்ணமாச்சாரி, தம்மை எதிர்த்து நின்ற ஒரே சுதந்திர வேட்பாளர் வாபஸ் வாங்கியதால் போட்டியின்றி வெற்றி பெற்றார். தமிழ் தேசியக் கட்சி 15 இடங்களைத் தேர்ந்தெடுத்துச் சிறிய அளவில் தேர்தல் பணிகளை நடத்தியது. தலைவரான சம்பத் தென் சென்னை நாடாளு மன்றத் தொகுதியில் போட்டியிட்டார். இந்தி எதிர்ப்புப் போரில் சிறை சென்ற வீரராய், ஆங்கிலம் தமிழ் இருமொழி வல்லவராய், ஒரே நேரத்தில் திராவிடன், ஜஸ்டிஸ் இரண்டிலும் தலையங்கம் எழுதிய திறமைமிக்கவராய், இறுதி நாட்களில் அகராதித் தொகுப்பில் ஈடுபட்டவராய் விளங்கிய டி. ஏ. வி. நாதன் 20–1–1962 அதிகாலை தமது 58-ஆவது வயதில் இயற்கை எய்தினார். பெரியார் பெரிதும் துயரமுற்றார்.

தஞ்சையில் தென்பகுதி ரயில்வேத் தொழிலாளர் சங்க மாநாடு 28-1-62 அன்று, மத்திய அரசு ஊழியர்கட்குக் கல்விச் சலுகை வழங்கப்பட்டதைப் பாராட்ட நடைபெற்ற போது, பெரியாரும் கலந்து கொண்டார். கழகத் தோழர்கள் தேர்தல் கூட்டங்களில் பேசும்போது கண்ணியத்தைக்

காக்க வேண்டும்; "தனிப்பட்ட யாரையும் தாக்கிப் பேசக் கூடாது என 30–1–62 அன்றைய "விடுதலை"யில் பெரியாரின் அறிக்கை வெளியாயிற்று. காமராசர், சுதந்திரக் கட்சியினரின் சாதி வெறிப் போக்கை கண்டித்து, மாடு மேய்ப்பவன் மகன் மாடு மேய்க்க வேண்டியதுதான் என்கிறார்கள்; நாங்கள் அவன் படிக்கவேண்டும்|என்று சொல்லிவசதிசெய்து தருகிறோம், என்று சிதம்பரத்தில், 30-1-62-ல் பேசினார். பிப்ரவரி மாதம் நன்றாகத் தேர்தல் சூடு பிடித்துவிட்டது. மத்திய அரசு தென்னகத்திற்குப் பல சலுகைகளை வழங்கி வந்தது. தாம்பரம்—வண்டலூர் மின் ரயில் தொடங்கப் பட்டது. விருதுநகர்—அருப்புக்கோட்டை—மானாமதுரை ரயில் பாதை அமைப்பு தொடங்கியது. இது போன்ற பெரிய பெரிய விழாக்கள் காமராசர் தலைமையில் நடந்தன. நேரு சென்னைக்கு வந்து, காமராசர் மாபெரும் சக்தியாக இன்று நாட்டோர்க்குக் கிடைத்துள்ளார் என்றார், 6-2–1962 அன்று.

"விடுதலை" நாளிதழில் காமராசர் ஆட்சியின் சாதனைகள்—இந்தப் பத்தாண்டுகளில்—என்று தினந்தோறும் பட்டியலிட்டுக் காண்பிக்கும் பெட்டிச் செய்திகள் வந்து கொண்டிருந்தன. கண்ணீர்த் துளிக் கட்சியினரின் பித்தலாட்டம்; பொறுக்கித் தின்னுவது, தவிர எதிர்க் கட்சிகள் போய் வேறென்ன சாதிக்க முடியும்? மூலவருக்குக் காஞ்சியில் தோல்வி முகம்—நிருபர் சேகரித்த சிறப்புத் தகவல்—என்றெல்லாம் அப்பட்டமான பிரச்சார வன்மை படைத்த செய்திகள் முதலிடம் பெற்றன. நேரு பகுத்தறிவுப் பிரச்சாரம் செய்கிறார். பெரியார் பிரச்சாரம் இமயத்திலும் எதிரொலிக்கிறது. நல்லோர்களையே தேர்ந்தெடுத்து அனுப்புங்கள்—பெரியார் எச்சரிக்கை—நூற்றுக்கு நூறு வாக்குப் பதிவு அவசியம்—வாக்களிக்கத் தவறாதீர்கள். (1962 தேர்தலில் 70.7% வாக்குப் பதிவு செய்து இந்தியாவில் தமிழகமே முன்னணியில் நின்றது)—முஸ்லீம் பெருமக்களுக்குச் சமநீதியும் நல்ல உயர் பதவிகளும் வழங்கி வருபவர் காமராசரே ஆவார். If the electors are fools the legis–

**lators will be rascals** என்று பெர்னார்ட்ஷா கூறியதை மறவாதீர்கள்—பெரியார் பேசுகிறார்—சட்ட மன்றத் தொகுதியில் இன்னாரையும் நாடாளுமன்றத் தொகுதியில் இன்னாரையும் ஆதரியுங்கள் (காமராசரின் வேட்பாளர் தான் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?) என்றெல்லாம் பெரியாரின் தலையங்கப் பகுதிக் கட்டுரைகளும், சொற்பொழிவுகளும், செய்திச் சித்திரங்களும் வாக்காளரை ஊக்கப்படுத்தி வந்தன.

இவ்வளவு கடுமையான தேர்தல் பிரச்சார உழைப்பினால் பெரியாரின் உடல்நிலை பெரிதும் பாதிக்கப்பட்டது. 22-2-62 அன்று திருச்சியிலிருந்து புறப்பட்டுச் சென்னைப் பொதுமருத்துவமனைக்கு விரைந்தார். அங்கு இடநெருக்கடி காரணமாகப், பழைமைபோல் சுந்தரவதனம் நர்சிங் ஹோமில் அனுமதிக்கப்பட்டார். அடுத்து 4,5 நாட்களுக்குக் கூட்டங்களுக்குச் செல்லாமல் ஓய்வில் இருக்கவேண்டுமென்று மருத்துவர்கள் வற்புறுத்தினர். பின்னரும் முழு ஓய்வு தேவையெனப் பொது மருத்துவமனையிலேயே 2-3-62 முதல் தங்கினார் பெரியார். இடையில் தேர்தல் முடிவுகள் வெளிவரத் தொடங்கின. அதிர்ச்சி தரத்தக்க, ஆனால் எதிர்பார்க்கப்பட்ட விதத்தில், அண்ணா காஞ்சிபுரம் தொகுதியில் தோற்கடிக்கப்பட்டார். ஆயினும், நிறுத்தப் பட்ட 142 பேரில் 56 பேர் வெற்றி பெற்று, தி.மு.க. சட்ட மன்ற எதிர்க்கட்சியாயிற்று. நாடாளுமன்றத்துக்கு நிறுத்தப் பட்ட 18 பேரில் 7 பேர் தி.மு.க. வேட்பாளர் வென்றனர். காங்கிரஸ் அறுதிப் பெரும்பான்மை பெற்றதாயினும், 154 என்ற எண்ணிக்கை சட்டமன்றத்தில் 138 எனக் குறைந்து விட்டது. இருப்பினும் வடநாட்டில் பல மாநிலங்களில் காங்கிரஸ் வெற்றி பெற்ற செய்தி, "விடுதலை"யில் முதல் பக்கப் பெருஞ் செய்தியாக, வெளிச்சம் போட்டுக் காண்பிக்கப்பட்டது. மண்ணைக் கவ்விய கண்ணீர்த்துளிகள் பட்டியலும் வழக்கம் போலவே பிரசுரிக்கப்பெற்றது. ம.பொ.சி. —திராவிட முன்னேற்றக்கழகம் எதிர்க்கட்சியல்ல; எதிரிக் கட்சிதான்—என்றே வியாக்கியானம் செய்தார்.

பெரியார் மருத்துவமனையில் இருந்த வண்ணம், காங்கிரசின் வீழ்ச்சி பற்றிய சர்வே, நடத்தி, காங்கிரசுக்காரர்களில் ஒரு சிலரின் சிரத்தையின்மை, பகிரங்கமான துரோகம் இவை பற்றி வெளிப்படுத்தி வந்தார். "நடந்த சட்டமன்றத் தேர்தல்களில் அரசியல் வாழ்வுக் கட்சிகள் எல்லாமே தோல்வியடைந்துள்ளன. காரணம் காங்கிரஸ் உட்பட எல்லாக் கட்சித் தலைவர்களுக்கும் ஆணவமும் அகம் பாவமும் மிகுந்து விட்டது. என் நிலையும் அப்படித்தான். இந்தத் தோல்விகளால் ஆச்சாரியாருக்கு மட்டுந்தான் ஒன்றும் நட்டமில்லை. காரணம் அவருக்குக் கேபிடல் எதுவுமே கிடையாது—" என்று விவரித்தார் பெரியார். கண்ணீர்த்துளிகள் வெற்றி பெற்ற இடங்களில் தவறான முறைகளைக் கையாண்டதாகவும், சினிமா மோகத்தைப் பயன்படுத்திக் கொண்டதாகவும் குற்றம் சுமத்தப்பட்டது. தஞ்சைத் தொகுதியில் காலண்டர், சோப்பு, சுனோ, பவுடர் போன்ற பொருட்களைக் கொடுத்து ஓட்டுப்பெற்றதாக கம்யூனிஸ்ட் மணலி கந்தசாமி அவதூறு கூறினார். தேர்தல் நின்று போயிருந்த அந்தநல்லூர் தொகுதியிலும் காங்கிரசை வெற்றிபெறச் செய்யவேண்டும் என்றும், அதற்குத் திராவிடர் கழகத் தோழர்கள் வே. ஆனைமுத்து பொறுப்பில் பாடுபடவேண்டுமென்றும், 4-3-1962 அன்று பெரியார் சென்னைப் பொது மருத்துவ மனையிலிருந்தே அறிக்கை வெளியிட்டிருந்தார். அவர் விருப்பத்திற்கிசைய அந்தநல்லூரில் காங்கிரஸ் வென்று, திராவிட முன்னேற்றக் கழகம் தோற்றது.

பெரியார் 6-3-1962 "விடுதலை"யில் மைனாரிட்டி சமுதாயம் என்ற தலைப்பின்கீழ் தீட்டியுள்ள தலையங்கம் அருமையான நல்லதொரு கருத்தை உள்ளடக்கியுள்ளது. அதாவது:—ஒரு நாட்டில், மைனாரிட்டி சமுதாயம், மைனாரிட்டி மதம், மைனாரிட்டி கலாசாரம் கொண்ட மக்களுக்கு ஆதிக்கமோ செல்வாக்கோ இருக்குமானால், அந்த நாட்டின் நலத்துக்கும் பொது வளர்ச்சிக்கும் அவை கேடாகவே முடியும். பார்ப்பானுக்கு பயந்து நடந்ததாலும், முஸ்லீம்

களுக்கு அதிக இடம் கொடுத்து வந்ததாலும், அவர்கள் பச்சைத் துரோகம் செய்ய முற்பட்டு, அதன் பலனை இன்று தமிழ்நாடு நன்றாக அனுபவிக்கிறது. வெள்ளைக்காரனுக்குப் பயந்து, சுதந்திரம் கேட்டதானது, சாணிக்குப் பயந்து மலத்தின் மீது கால் வைத்தது போல் ஆகிவிட்டது. இன்றையச் சுதந்திரம் சுதந்திரமே அல்ல என்பது 'சுதந்திர உதயநாள்' முதல் எனது கருத்தாகும். இனிமேலாகிலும் தமிழ்நாடு சுதந்திரத்துடன், சுயமரியாதையுடன் வாழச் சிந்திக்கவேண்டும். நான் ஒரு மனிததர்மவாதி என்பதையும், எதையும் திரைமறைவு இல்லாமல் திகம்பரமாய்க் கண்டே கருத்துக்கொள்கிறவன் என்பதையும் யாவரும் அறிவார்கள் —என்பதாக முடிகிறது.

பெரியார், உடல் முற்றிலும் குணமாகாத நிலையில், உடனடியாக வெளியில் கூட்டங்களுக்கு வரப்போவதில்லை என்றும், சென்னை பெரியார் திடலில் $1\frac{1}{2}$ லட்சம் பெறுமான கட்டட வேலை நடைபெற ஓர் ஆறுமாத காலம் ஆகலாம் என்றும், அதுவரை மிக முக்கிய கூட்டம் மற்றும் நிகழ்ச்சிகளுக்கே வெளியில் வர இருப்பதாகவும் மார்ச் 6–ஆம் நாள் அறிவித்தார். தொடர்ந்து "விடுதலை" தலையங்கப் பகுதியில் பல்வேறு கருத்துகளை வெளிப்படுத்தினார். இந்தத் தேர்தலில் வெற்றி பெரியாருக்கே என்றாலும் லாபம் இராஜாஜிக்குதான். எப்படியென்றால், அவர் கண்ணீர்த்துளிகளின் கொள்கைகளையும் தனித் தன்மையையும், மாற்றியும் குறைத்தும் விட்டார். திராவிடநாடு பிரச்சினையை இராஜாஜி கேலி செய்கிறார். தி.மு.க.வினர் குரங்குகள்; நான் ராமன் என்கிறார். அவர்களும் கண்டுங் காணாமல் இருக்கிறார்கள். பார்ப்பன எதிர்ப்பும் போய் விட்டதே—என்று, பெரியார் ஆதாரங் காட்டினார். எலெக்ஷன் முடிந்ததால், இனி தாம் வர்ணாசிரம தர்ம எதிர்ப்புப் பிரச்சார நிறுவனம் ஒன்று துவக்கி, அந்தப் பணிகளைத் தீவிரப் படுத்தப் போவதாகவும், இதில் கண்ணீர்த் துளிகள், கம்யூனிஸ்ட், காங்கிரஸ்காரர் ஆகிய கட்சியினரும் மற்றும் வடநாட்டார், சினிமாக்காரர்கள், அதிகாரிகள்

ஆகிய மக்களும்—யாரும் சேரலாம் என்றும் பெரியார் பரந்த மனப்போக்கில் அழைத்திருந்தார்.

ஒன்பதே மந்திரிகள் கொண்ட—இந்தியாவிலேயே மிகச் சிறிய—மந்திரிசபையைக் காமராசர் 15–3-62 அன்று அமைத்திருந்தார். இதற்காகவும் பெரியார், தாம் காமராஜர் ஆட்சியை ஆதரிப்பதாக எழுதினார். விலைவாசியை அரசு குறைக்க ஆரம்பித்தால் அது உற்பத்தியைத்தான் பாதிக்கும்; விளைபொருள்கள் பெருகுவதைத்தடுக்கும் என்று பெரியார் புள்ளி விவரங்களுடன் அரசினர்க்கு ஆலோசனை வழங்கினார். சில இடங்களில் கழகத் தோழர்களைப் பழி வாங்குவது போலப் போலீசார் நடந்து வருவதை எடுத்துக் காட்டி, இடித்துக் கூறும்போது—"போலீசு இலாக்கா பழி வாங்குகிறதா?—இதற்குமேல் எழுதக் கை ஓடினாலும் மனம் ஓடவில்லை" என்று முடிகின்ற துணைத் தலையங்கக் கட்டுரையைப் பெரியாரே 19-3-62 "விடுதலை" ஏட்டில் எழுதினார்.

ஒய்வுக்கு ஓய்வு கொடுத்து விட்டுப் பெரியார் 8-4-62 முதல், சுற்றுப் பிரயாணத்தை மீண்டும்தொடங்கினார்.ஏறத் தாழ மார்ச் மாதம் முழுவதுமே படுக்கையிலிருந்தவர் 31–ஆம் நாள் ஒரு நாட்டிய நிகழ்ச்சியில் தலைமை ஏற்றுப் பேசினார். ஈ. வி. சரோஜாவின் நாட்டியம்; டாக்டர் ரத்தினவேல் சுப்ரமணியம் பெண்கள் உயர்நிலைப் பள்ளி நன்கொடைக்காக! பெரியாரே இதற்கு 500 ரூபாய் அன்புடன் வழங்கினார். ஏப்ரல் மாதம் முழுவதும் பெரியார் தனியாகவே சுற்றுப் பயணம் மேற்கொண்டார். வீரமணி ஆங்காங்கு கலந்துகொண்டார். 15–ந்தேதி தென்பகுதி ரயில்வேத் தொழிலாளர் விருந்து, மாநாடு இவற்றில் பெரியார் மகிழ்வோடு பங்கு பெற்றார். 14–4–62 சிதம்பரத்தில் ஜனார்த்தனன் - கிருஷ்ணா ஆகியோரின் கலப்புத் திருமணத்தைப் பெரியார் நடத்தி வைத்தார். பெரியோர்கள் சம்மதமில்லாமல் நடைபெற்றதாகப் பின்னர் அறிந்தும்—'ஒன்றும் தவறில்லை, வயது வந்து, விவரம் புரிந்தவர்கள் தான். மணமகனின் தந்தை திருச்சி வீரப்பா நமது [ இயக்க

முன்னோடியல்லவா?' என்று பெரியார் சமாதானப் படுத்திக் கொண்டார்.

'காமராசருக்கே துரோகம் செய்வோரும், காங்கிரசில் பிடிப்பில்லாமல் அக்கறையற்று இருப்போரும் மிகுந்து விட்டனர். கண்ணீர்த் துளிகள் ஆச்சாரியாருடன் கூடிக் குலவுகின்றனர். பிரிவினை கேட்கும் திராவிட முன்னேற்றக் கழகத்துடன் கம்யூனிஸ்டுகளும் சேர்கிறார்களே எனக் காமராசரே கண்டிக்கிறார். அண்ணா, தமது தம்பிமார் களின் விருப்பத்தையும் வேண்டுகோளையும் மதித்து, 20-4-62 அன்று மாநிலங்கள் அவை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் படுகின்றார்; இனி அண்ணாவின் குரல் டெல்லியிலும் எதி ரொலிக்கும்!'—பெரியாருக்கு மிகுந்த எரிச்சலூட்டும் செய்தி களல்லவா இவை? நன்றி மறவாமைக்கும், புத்திகூர்மைக்கும் இலக்கணமாயிருந்த (இன்னொரு) சீட்டா 1-5-62 அன்று இரவு 10 மணியளவில் செத்துப் போய் விட்டது. 7 வயது வரை பெரியாரிடம் பிரியத்துடன் வாழ்ந்து வந்த அந்தச் செல்ல வளர்ப்பின் மறைவு பெரியாரை வருத்தியது.

சம்பத்தின் தமிழ் தேசியக் கட்சி தனது தோல்வியைப் பொருட்படுத்தவில்லை. ராஜாஜி – தி. மு. க. உறவைக் கண்டித்து, சம்பத், கூட்டங்களில் பேசிவந்தார். "நாத்திகம்" பத்திரிகையின் போக்கு சரியில்லையென "விடுதலை" 20–4-62 அன்று செய்தி வெளியிட்டது. காமராசரின் அரசு 65 வயதான முதியோர்க்கு மாதம் 20 ரூபாய் உதவித் தொகை வழங்க ஆணையிட்டது; அங்கவீனராகவோ தொழு நோயாளராகவோ இருப்பின் 60 வயதிலிருந்தே இந்தத் தொகையினைப் பெறலாம்! இப்போதெல்லாம் கண்ணீர்த் துளிகளைத் தாக்கி வெளிவரும் செய்திகள் "விடுதலை"யில் நாடோறும் இடம்பெற்றன!

குன்றக்குடி அடிகளார் தலைமையில், மணப்பாறை தமிழ் மன்றத்தில் 6-5-62-ல் பெரியார் பேசும்போது, 'இந்தி எதற்காகப் பொது மொழியாக இருக்க வேண்டும்? இந்தியா என்பது என்ன, ஒரே நாடா? தமிழ்நாடு ஏன் இந்தியாவோடு இந்தியாவுக்குள் இருக்க வேண்டும்? தனிநாடாக விளங்கு

வதில் என்ன தடை? என்ன நட்டம்?' என்ற வினாக்களை வீரமுழக்கமாக வெளியிட்டார். மாநிலங்களவையின் உரையில் அண்ணா, திராவிட நாடு பிரச்சினையை விளக்கி, வலியுறுத்தினார். நேரு இந்த உரையை உதாசீனப் படுத்தியதாக "விடுதலை" செய்தி தந்தது.

பெரியார், "பிரதேசமொழி"என்று 12-5-62 "விடுதலை" ஏட்டின் தலையங்கப் பகுதியில் கட்டுரை எழுதும் போது, தமிழ் தமிழ் என்று கூறி இங்கிலீஷை ஒதுக்கி விடக் கூடாது என்னும் தமது கருத்தை வலியுறுத்தியிருந்தார். சென்னையில் புத்த ஜயந்திக் கூட்டத்தில் 20-5-62 அன்று திருமதி ஜோதி வெங்கடாசலம் (நல்வாழ்வு அமைச்சர்) தலைமையில் பெரியார் கலந்து கொண்டார். 19-ந் தேதி வாழப்பாடியில் உரையாற்றுகையில், ஒழிக்கப்படவேண்டிய மூன்று பேய்களைப் பற்றியும் அய்ந்து நோய்களைப் பற்றியும் பெரியார் குறிப்பிட்டது புதுமையாகத் தோன்றிற்று! கடவுள்—சாதி மதம்—சனநாயகம் ஆகியவை மூன்றுபேய்; பார்ப்பான், பத்திரிகை, அரசியல்கட்சி, தேர்தல், சினிமா ஆகியவை 5 நோய். இவற்றை விரட்டி ஒழித்துக் கட்ட வேண்டும் என்று பெரியார் பேசினார். திருச்சி மாவட்டத்திலுள்ள இடையாற்றுமங்கலம் திராவிட விவசாயத் தொழிலாளர்கள் பெரிதும் கழகத்தின் ஆக்கப் பணிகளில் ஈடுபாடுள்ளவர்கள். 24-5–62 அன்று மாவட்டச் செயலாளர் ஆனைமுத்து தலைமையில் பெரியாரிடம், ரூ. 3580-பெறுமானமுள்ள தென்னந் தோப்பு ஒன்றின் பட்டயத்தை வழங்கிப் பெருமை தேடினர். இவை யாவும் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனத்தின் பெயராலேயே இயங்கி வந்தன.

'இராமாயணம் மடமை நிறைந்த பொய்க் களஞ்சியம். காலம் பற்றிய மதியீனமான புரட்டு' என்னும் விதத்தில் பெரியாரால் எழுதப் பெற்ற பெட்டிச் செய்தி ஒன்று "விடுதலை" ஏட்டுக்கு அணி செய்தது. "விடுதலை" ஏட்டில் இப்போதெல்லாம் புதுமையாக போட்டோ பிளாக்குகள் அடிக்கடி அச்சியற்றப் பட்டு வந்தன. சென்னைக் கார்ப்பரேஷனுடைய நிர்வாகம் ஊழல் மலிந்ததாயிருப்பதாகவு

பல்வேறு செய்திகள் பிரசுரமாயின. டாக்டர் ராதா கிருஷ்ணன் ஜனாதிபதியானதும் தமது சம்பளத்தைக் குறைத்து ஆடம்பரங்களை ஓரளவு கட்டுப் படுத்தினார். மாயூரத்திலுள்ள தருமபுரம் பண்டார சந்நிதி ஆண்டுக்கு ஒரு முறை ஆள் சுமக்கும் பல்லக்கில் ஏறிப், பட்டணப் பிரவேசம் வருவது வழக்கம். இதை நிறுத்துமாறு மறியல் செய்வதெனத் தஞ்சை மாவட்ட திராவிடர் கழகத் தோழர்கள் பண்டார சந்நிதிக்கு பகிரங்கக் கடிதம் வரைந்தனர், 22-5-62 அன்று. பின்னர், தலைமைக்கழகம், விரைவில் வருணாசிரம எதிர்ப்புக் கிளர்ச்சி துவங்க இருப்பதால், இப்போது இது வேண்டாமெனக் கருத்துரைக்கப் பட்டது. ஏராளமான போலீஸ் பாதுகாப்புடன் அந்த ஆண்டு மே 29-ஆம் நாள் தருமபுரம் ஆதீனகர்த்தர் பல்லக்குப் பவனி வந்தார். ஆனைமலை நரசிம்மன் இப்போது பெரியாருடன் சுற்றுப் பயணங்களில் தொடராமல், திருச்சியிலுள்ள ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி முதலிய அமைப்புகளின் தாளாளராக இருந்து, கவனித்து வந்தார்.

இந்தி எதிர்ப்பு வீராங்கனை மூவலூர் மூதாட்டியார் இராமாமிர்தம் அம்மையார் 27-7-62 அன்று மாயூரத்தில் இயற்கை எய்தினார். திராவிடர் கழகச் சார்பில் சித்தர்காடு இராமையாவும், திராவிடமுன்னேற்றக் கழகச் சார்பில் நாவலர் நெடுஞ்செழியனும் மலர் வளையம் வைத்து மரியாதை செலுத்தினர்.

1962–ஆம் ஆண்டு பொதுத் தேர்தலுக்குப் பிறகு திராவிட முன்னேற்றக் கழகம் பெருமெடுப்பில் விலைவாசி எதிர்ப்பு மறியல் கிளர்ச்சியை நாடு தழுவிய அளவில் நடத்தியது. கழகத்தின் அனைத்துத் தலைவர்களும் பங்கேற்றனர். பல்லாயிரக்கணக்கில் சென்னையிலும் மாவட்டத் தலைநகரங்களிலும், பெரிய ஊர்களிலும் வருவாய்த்துறை அலுவலகங்களின் முன்னர் மறியல் செய்து கைதாயினர். அரசு, மிக்க உறுதியுடன் நின்று, அடக்குமுறை மிரட்டல் ஆகிய எல்லா முறைகளையும் கையாண்டு வந்தது. சிறை

யிருந்தோரிடம் வற்புறுத்தி மன்னிப்புக் கடிதங்கள் பெறப்பட்டு, விடுதலை செய்யப்பட்டனர். அரசின் சார்பான ஏடுகள் ("விடுதலை" உட்பட) இந்த மன்னிப்புக்கோரி விடுதலை பெறும் சேதிகளைப் பெரிது படுத்தின. 2-8-62அன்று எஸ்.எஸ். ராஜேந்திரன் 1000 ரூபாய் ஜாமீனில் விடுதலை என்ற துணுக்கு. சென்னையில் மன்னிப்புக் கேட்டவர் 1000 பேர் என்ற செய்தி. அறப்போரின் பெயரால் காலித்தனங்கள் நடக்கின்றன என்று, திராவிட முன்னேற்றக் கழகத்துக்கு எதிரான கருத்துரைக்கும் பிரமுகர்கள் பேச்சு. பத்திரிகைகளின் எண்ணம் ஆகியவை "விடுதலை"யில் தொகுத்து வெளியிடப்பட்டு வந்தன.

கலைஞர் மு. கருணாநிதி தஞ்சையில் மறியல் செய்து 3 மாத தண்டனை பெற்றார். சென்னைச் சிறையில் கொடுமைக்குள்ளான கோ. சு. மணி பிணமாக வெளியில் வந்தார். மதுரையில் அதே போலப் பொற்செழியன் மாண்டார். திருச்செங்கோடு தொகுதி நாடாளுமன்ற உறுப்பினராக இருந்த டாக்டர் சுப்பராயன், பம்பாயில் கவர்னராக நியமிக்கப் பெற்றதால் நடந்த இடைத்தேர்தலில், காங்கிரஸ் தோற்றது; திராவிட முன்னேற்றக் கழக வேட்பாளர் கந்தப்பன் வென்றார்.

"தேர்தலில் பொதுவாக ஒழுக்கக் கேடுகள் அதிகமாகி விட்டன. உட்பகை பெருகியுள்ளது. திராவிடர் கழகத்தார் தவிர மற்றவர் நேர்மையாக ஈடுபடுவதில்லை. கண்ணீர்த் துளிகள் கலவரம் செய்வது என்றே துணிந்து விட்டனர். இந்நிலையில், இம்மாதிரி வன் செயல்களில் இறங்கும் அரசியல் கட்சிகளைச் சட்ட விரோதமாக்கலாம்; கட்சிகளுக்குப் பண வசூல் செய்வதைத் தடுக்கலாம்; கட்சிகள் நடத்துவதற்கு அனுமதிபெறவேண்டுமென ஏற்படுத்தலாம். சர்வாதிகாரம் போலத் தோன்றினாலும் இவை தேவை" என்று பெரியார் வற்புறுத்திப் பேசியும் எழுதியும் வந்தார். திருவல்லிக்கேணி கடற்கரையில், கொட்டும் மழையில், பெருங்கூட்டத்தினிடையே 5-8-62 அன்று பேசியபோது, "'ஓட்டு முறையில்தான் நம்பிக்கை; வேட்டு முறையில்

அல்ல,' என்று கூறிய கண்ணீர்த்துளிக் கட்சியினர் இப்படி அராஜகச் செயல்களில் ஈடுபடலாமா? காவல் துறையினரும் பல நேரங்களில் தாட்சண்யமாக நடந்து விடுகின்றனரே; தலைமைக் காவல் அதிகாரிகளாக ஏன் வெள்ளைக்காரர் களையே நியமிக்கக்கூடாது?" என்று வினவினார் பெரியார். பட எரிப்புப் போரில் மன்னிப்புக் கேட்கச் சொன்னபோது மறுத்து, இரண்டாண்டு சிறைத்தண்டனை ஏற்று, மேஜர் ஆகாததால், நெல்லை தட்டாம்பாறை சிறுவர் சீர்திருத்தப் பள்ளியில் இருந்து, விடுதலைபெற்ற வீரன் நாகராசனுக்குத் திருச்சியில் மாபெரும் வரவேற்பு வைபவம் நடைபெற்றது. பெரியார், "இந்தச் சிறுவனுக்கு முன்பு, மன்னிப்புக் கேட்கும் கண்ணீர்த் துளிகள் எம்மாத்திரம்?" என்று பாராட்டினார்!

"வரவேற்கிறேன்" என்று "விடுதலை"யில் 10-8-62 அன்று பெரியார் ஒரு தலையங்கம் தீட்டினார். ஆமாம்! யாரை வரவேற்கின்றார்? படித்தால் புரியும்: "என் உடல் நிலை எனக்குத் திருப்தி அளிக்கத் தக்கதாய் இல்லை. இப்போது போல் சுற்றுப் பிரயாணம் செய்ய என்னால் இனி முடியாது. கழகம் நல்லபடி இயங்கவேண்டுமானால் பிரச்சாரமும் பத்திரிகையும் மிக அவசியமாகும். நான் ஒருவன்தான் இவை இரண்டிற்கும் முழுநேரத் தொண்ட னாகவும், கழகத்தில் ஊதியம் எதிர்பார்த்து வாழ்க்கை நடத்த வேண்டிய அவசியம் இல்லாதவனாகவும் இருந்து வந்தேன். இன்றும் அந்தப்படியே இருந்து வருகிறேன். இன்று கழகத்தின் மூலம் ஊதியம் எதிர்பார்த்து வாழ்க்கை நடத்தவேண்டிய அவசியமில்லாத தோழர்கள் கழகத்தில் ஏராளமான பேர் இருந்து, நல்ல தொண்டு ஆற்றி வருகிறார்கள். ஆனால் பிரச்சாரத்திற்கும் பத்திரிகைக்கும் தங்களை முழுநேரம் ஒப்படைக்கக் கூடிய தோழர்கள் கிடைக்கவில்லை.

தோழர் வீரமணியைக் கேட்டுக் கொண்ட போது, சென்னையில் வக்கீல் தொழில் நடத்திக்கொண்டு, கழக வேலைகளையும் பத்திரிகையையும் பார்த்துக் கொள்ளுவ தாகச் சொன்னார் அது எனக்குத் திருப்தி அளிக்கவில்லை.

கிடைத்த அனுகூலத்தை விடக்கூடாதென்று துணைப் பொதுக் காரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கச் செய்தேன். இன்னொரு துணைப் பொதுக் காரியதரிசியாகிய ஆனை மலைத் தோழர் நரசிம்மன், தவிர்க்க முடியாத சொந்த அலுவல்களால் ஊருக்குப் போய்விட்டார்.

பிறகு வீரமணி நான் உள்படப்பலர் வேண்டுகோளுக்கும் விருப்பத்திற்கும் இணங்கக் குடும்பத்துடன் சென்னைக்கே வந்துவிட்டார். கழகத்தின் முழு நேரத் தொண்டரா யிருந்து பிரச்சாரத் தொண்டையும் பத்திரிகைத் தொண் டையும் ஏற்கத் துணிந்தார்.

இது நமது கழகத்திற்குக் கிடைக்க முடியாத பெரும் நல்வாய்ப்பு என்றே கருதித் திரு வீரமணி அவர்களை மன தார வரவேற்பதோடு, கழகத் தோழர்களுக்கும் இந்த நற் செய்தியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்! வீரமணிக்குக் கடலூரிலேயே வக்கீல் தொழிலில் மாதம் 200, 300 வருமானம் வந்தது; அவர் வேறு உத்தியோகத்துக்குப் போனாலும் மாதம் 250 ரூ. கிடைக்கும். அதையெல்லாம் விட்டுக் கொடுத்துதான் இங்கு வந்திருக்கிறார்.

உண்மையைச் சொல்கிறேன்; தோழர் வீரமணி இந்த முழுநேரத் தொண்டிற்கு இசையாதிருந்தால், "விடுதலை" தினசரிப் பத்திரிகையை நிறுத்திவிட்டு, ஈரோடு அல்லது திருச்சியில் வாரப் பத்திரிகையாக நடத்த முடிவு செய்தேன். மணியம்மையாரின் தொண்டும் பாராட்டத்தக்க விதத்தில் கழகத்துக்குக் கிடைத்து வருகிறது. தோழர் இமயவரம்பன் புலவர் பட்டம் பெற்றவர். அவரும் உத்தியோகத்துக்குப் போகாமல் கழகத்தின் முழுநேரத் தொண்டு ஆற்றிவருவதும் பாராட்டத் தக்கதாகும்.

ஆகையால், இதுபோல இன்னும் முழுநேரத் தொண்டர்கள் கிடைத்தால் வரவேற்கத் தயாராய் இருக் கிறேன். ஆண்கள் வந்தாலும் சரி, பெண்கள் வந்தாலும் சரி; உடை, உணவு பெறலாம் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுவதோடு, அப்படி வருபவர்களை எதிர்பார்த்துக் காத்திருக்கின்றேன்."

20-8-62 அன்று சென்னைத் தோழர் கே. கோவிந்தசாமி மணிவிழாவினைத் தமிழ் தேசியக் கட்சி நடத்தியபோது, பெரியாரும் கலந்து கொண்டு பொன்னுடை போர்த்தித் "தவறுகாண முடியாத நாணயமான உழைப்பாளி" என்று பாராட்டினார். அண்ணாவுடன் திராவிட முன்னேற்றக் கழகத்துக்கும், சம்பத்துடன் தமிழ் தேசியக் கட்சிக்கும் சென்றாலும், நல்லவர் என்று பெயர் பெற்றவர் கோவிந்தசாமி.

கழகப் பணிக்குத், தமக்கு மேலும் சில முழு நேரத் தொண்டர்கள் தேவை எனப் பெரியார் கருத்துத் தெரிவித்தார். 23-8-62 அன்று, திருச்சி பெரியார் ஆசிரியப் பயிற்சிப் பள்ளியின் இலக்கிய மன்றக் கூட்டத்தில், பெரியாருடன் சம்பத்தும் கலந்து கொண்டார். புதுவையில் சாதி ஒழிப்பு மாநாடு குன்றக்குடி அடிகளார் தலைமையில் நடைபெற்றது. அமைச்சர்-மேயர்-குபேர் திறந்து வைத்தார். பெரியாருடன் சம்பத், கண்ணதாசன், தமிழ்வாணன், மீனாம்பாள் சிவராஜ், தி. பொ. வேதாசலம் பங்கேற்றனர். திராவிடர் கழகப் பணிகளில் இறுதிவரை பெருந்தொண்டு புரிந்துவந்த திருமதி இந்திராணி பாலசுப்ரமணியம் அம்மையார் 2-8-1962 அன்று மறைந்தபோது பெரியார் வருகை தந்து, அன்னாரின் சேவைகளை நினைவு கூர்ந்து பேசினார்.

"ஈ.வெ.ரா. வும் நானும் எப்போதும் சண்டை பிடித்துக் கொண்டிருக்கும் நண்பர்கள். என் பிறந்த நாளில் அவரும் அவர் பிறந்த நாளில் நானும் வாழ்த்துகள் பரிமாறிக் கொண்டுதான் வருவோம். நட்பும் இருந்து கொண்டே யிருக்கும். சண்டையும் இருந்து கொண்டே யிருக்கும். இதைப் பற்றி யாரும் கவலையோ குழப்பமோ கொள்ள லாகாது," என்று 14-9-62 அன்று சக்கரவர்த்தி இராச கோபாலாச்சாரியார் பெரியார் பிறந்த நாள் செய்தி அனுப்பியிருந்தார். "விடுதலை" சிறப்புமலரில் காமராசர், ம பொ.சி., அடிகளார், சம்பத், கண்ணதாசன், எம். ஆர். ராதா லட்சுமிரதன் பாரதி ஆகியோர் கட்டுரை வழங்கியிருந்தனர். 17-9-62 முதல் "விடுதலை" தலையங்கத்திற்கு மேற்புறம்

பெரியார் பொன் மொழிகள் தினம் ஒன்று வீதம் வெளியிடப் பட்டு வந்தது. திருச்சியில் உள்ள பள்ளிகளின் நிறுவனர் நாள் 17-9-62-ல் கொண்டாடப்பட்ட போது, பெரியார் அங்கே கலந்து கொண்டார், பெரியாரின் 84-வது பிறந்த நாள் விழா தமிழகமெங்கும், தமிழர் வாழும் பிறநாடு களிலும் குதூகலமாகக் கொண்டாடப் பெற்றது.

'பொதுத் தொண்டு' என்று மகுடமிட்டுப் பெரியார் தமது பிறந்தநாள் செய்தியினை அருளினார்:—மனிதனாகப் பிறந்தவன் உயிர் வாழ்வதற்காக உணவு தேடுகிறான். உண்டபின் ஓய்வுக்காக உறங்குகிறான். பிறகு காம உணர்ச்சிக்குப் பரிகாரம் தேடுகிறான். அதனால் பெண்டாட்டி பிள்ளை குட்டி உண்டாகிவிடுகிறது. இயற்கைத் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ள என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்பது சட்டமாகி விடுகிறது. அதில் பொதுத் தொண்டும் ஒரு காரியமாகி விடுகிறது.

பொதுத் தொண்டை ஒரு தொழிலாகக் கொள்பவரிடத் தில் நேர்மை ஒழுக்கம் நாணயம் இருக்க முடிவதில்லை. நீதிமன்றம், சிறைக்கூடம், பத்திரிகைத் துறை, ஜனநாயகம், கடவுள் தன்மை ஆகியவை எப்படியாவது மனிதன் தன்னை வளர்த்துக் கொள்ளும் வாய்ப்புகளாகிவிட்டன. யோக்கிய மான பொதுத் தொண்டு நிறுவனங்கள் இல்லாமற் போன தால், நடத்திச் செல்ல நல்ல தலைவர்களும் உண்டாவ தில்லை. தன்னலத்தை வெறுத்த பொதுத் தொண்டன் என யாரையும் அடையாளம் காட்ட முடிவதில்லை. அதனால்தான் சுயநலமற்ற பொதுத் தொண்டன் நான்கூட ஆகமாட்டேன். எனக்கும்கூட ஒரு மாதிரியான சுயநலம் இருக்கின்றது- அது என்ன சுயநலம்? இளமை முதல் இருந்துவரும் என் இயல்பின்படி, நிறைய சொத்துச் சம்பாதித்திருக்கிறேன். 15 லட்ச ரூபாய் மதிப்பிடலாம். அதில் பெருமளவு நல்ல பொதுத் தொண்டுக்கு உதவுகிறது. எனக்குச் சொந்தமான செல்வ வசதிகள் இருந்தும், என் வாழ்வு சராசரி மனிதனுடைய வாழ்வுதான். உணவுச்

செலவு மாதம் 50 ரூ.; உடைச் செலவு 50 ரூ. ஆண்டுக்கு ஆகலாம். மாதம் 200 ரூ. சம்பளத்தில் ஆட்கள் அமர்த்தாமல், அவர்கள் செய்கின்றவேலையைச் செய்கிறவர், என் மனைவியாக இருக்கிறார். அந்த அம்மாளுக்கும் மாதம் உணவு ரூ. 50க்குள்; உடை ஆண்டுக்கு ரூ. 150க்குள்; எங்களுக்குப் பல செலவுகள் போகிற இடங்களில் 'ஓசி'. பிரயாணம், ஒரு லாரி சாமானுடன், மோட்டாரில், இரவில்! மாதம் சராசரி 20 நாள் சுற்றுப்பயணம். சதா கழக வேலை, கட்டடவேலை, கழகச் செல்வத்தைப் பெருக்கிடும் வேலை, கணக்கு வைக்காமல் டயரியிலேயே குறித்துக் கொள்ளும் வேலை! சில பொறாமைக்காரர், வெந்து புழுங்குவோர் தவிர, மற்றவர்களால் நான் வெட்கப்படும் அளவுக்குப் போற்றுதல், புகழுதல், அன்புகாட்டுதல் இவற்றை நான் அனுபவிக்கிறேன் அல்லவா! இவைதான் எனக்குச் சுயநலம்!

ஒரு பத்து ஆண்டுகளுக்காவது காமராசர் ஆட்சி நீடித்தால் திராவிடர் கழக இலட்சிய வேலை பெரும் அளவுக்குப் பூர்த்தியாகும். ஒவ்வொரு பிறந்த நாள் விழாவிலும் அடுத்த ஆண்டுக்குள் முடிக்க வேண்டிய வேலைத் திட்டம் அறிவிப்பது என் வழக்கம். அவ்வாறு அறிவிக்கப்பட்ட சில வேலைத் திட்டம் சரிவர நடைபெறவில்லை; காரணம் காமராசர் ஆட்சிக்கு ஏற்படும் எதிர்ப்புகளை முறியடிக்க முனைந்து, அதில் ஓரளவு வெற்றியும் பெற்றதுதான்! வரப் போகும் ஆண்டுக்கு வேலைத் திட்டமாகப் பார்ப்பனப் பத்திரிகைகளின் ஆணவமும் ஆதிக்கமும் ஒழிக்கப்பட வேண்டும்; குறைக்கப்படவாவது வேண்டும்! சினிமா மோகம், வளர்ச்சி ஒழிக்கப்பட வேண்டும்! கோவில்களில் சாதி ஆதிக்கம் ஒழிக்கப்படவேண்டும்! கழகத்திற்கு உறுப்பினர், கிளைகள், கட்டுப்பாட்டுடன் அமைக்கப்பட்டு ஒழுங்கு முறையுடன் செயல் படவேண்டும்!—என்பன.

அடுத்து, 'எனக்கு ஏன் திராவிட நாடு வேண்டாம்; தமிழ் நாடு போதும் என்கிறேன் என்றால்'—என்று தொடங்கிச் சில புள்ளி விவரங்களை ஆதாரமாக்கித் தமது வாதத்தை வழக்கம் போலப் பிறர் ஏற்றுக் கொள்ளுமாறு

பக்குவமாக எடுத்து வைக்கிறார் பெரியார். தென்னகத்தி லுள்ள நான்கு மாநிலங்களின் சட்டமன்ற உறுப்பினர்கள், நாடாளுமன்ற உறுப்பினர்களின் எண்ணிக்கை வருமாறு:— ஆந்திரா 301, 43; கர்நாடகம் 208, 26; கேரளம் 126, 18; தமிழ் நாடு 205, 43. இவற்றில், தமிழ் நாடு நீங்கலாக மெஜாரிட்டி அவர்களாகவே இருப்பதால், இப்போதுள்ள சூழ்நிலையில் தமிழ்நாடு கேட்பதே புத்திசாலித்தனம்— என்று பெரியார் 20–9–62 "விடுதலை"யில் வரைந்திடுகின்றார்.

திராவிடர் கழகத்திற்கு மீண்டும் ஒரு சோதனை ஏற் பட்ட நிலவரத்தைப் பெரியார் வேலூரில் விளக்கித் தீர வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது. பழைய நண்பர்கள் துரோகிகளான கதையை அங்கே விவரித்தார் பெரியார். எஸ். குருசாமி, எம். கே. டி. சுப்ரமணியம், லோகநாதன், விவேகி, நாத்திகம் ராமசாமி ஆகியோரின் துரோகச் செயல் களை 29-9-62 அன்று வேதனையோடு வெளிப்படுத்தினார். இதனால் அக்டோபர் மாதத்தில் 7, 14, 15, 21, 22, 27, 28, 29 ஆகிய 8 நாட்களே கூட்டங்களில் பேசினார். "ஊன்றிப் படித்து உண்மையை உணருங்கள்" என்ற தலைப்பில் 8–10–62 அன்று, முதல் கட்டுரையும்; 10–ந் தேதி இரண்டா வது; 14–ந் தேதி மூன்றாவது கட்டுரைகளும் வரைந்தார். இவற்றிலிருந்து, பெரியார் நீண்ட நாட்களாகவே மனத்துக் குள்ளே மறைத்து வைத்துக்கொண்டு பொருமியது வெளியா யிற்று. துரோகத்தை அடையாளந்தெரியச் செய்தமைக்கு, உண்மையுள்ள கழகத் தோழர்கள் பெரியாரைப் பாராட்டி னர். காங்கிரசார் நடத்தும் தேசிய ஒருமைப்பாடு விழாவில் கழகத்தினர் கலந்து கொள்ளக்கூடாது எனக் கண்டிப்பாக அறிவித்த பெரியார், இந்தி மொழி மட்டுமல்ல, இந்திய ஒருமைப்பாடு பிரச்சாரங்கூட நாட்டுப் பிரிவினைக்குத் தூண்டிவிடக் கூடிய செயலாகும் என எச்சரித்தார். "நான் சரியாக அரசியலில் பிரவேசிக்காததால் டில்லி நிர்வாண மாக ஆட்டம் போடுகிறது. அந்த வேலையும் என்னைத் தான் வந்து தொத்தும் என நினைக்கிறேன்" என்றும் பெரியார் சூளுரை புகல நேர்ந்தது. இராம லீலாவும்

டெல்லியும்; ஒழிக யூனியன் ஆட்சி—என்றெல்லாம் தலைப் பிட்டுப் பெரியார் கடுமையான தலையங்கக் கட்டுரைகளை "விடுதலை"யில் எழுதினார். தொட்டதற்கெல்லாம் ஸ்ட்ரைக் ஏற்பட அரசாங்க பலவீனமே காரணம் என எடுத்துக் காட்டினார். 1‌‌‌‌‌‌7–10–1962 அன்று பெரியார் திடலில் 84–ஆவது பிறந்த நாள் விழா கொண்டாடப்பட்ட போது, நடிகவேள் ராதா 10,000 ரூபாய் அன்பளிப்பாக வழங்கினார் பெரியாரிடம்.

பம்பாய் கவர்னராக இருந்த டாக்டர் சுப்பராயன் சென்னைப் பொது மருத்துவமனையில் 6–10–62 அன்று காலை 9-30 மணிக்கு மரணமடைந்தார். பெரியார் திருச்சி யிலிருந்து தொலைபேசி வாயிலாக அனுதாபச் செய்தி அனுப்பினார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தராக இருந்த வி. சுப்பிரமணியம் இறந்து போனார். பின்னர் பார்ப்பனத் துணைவேந்தர் அமர்த்தப்பட, இது வழி வகுத்துவிட்டது!

நீண்ட நாட்களாக வடக்கெல்லைப் பகுதியில் வால் நீட்டி வந்த சீனா இந்தியா மீது போர் தொடுத்துவிட்டது. சமாளித்துத் தீரவேண்டிய கட்டாயத்திற்கு இந்தியா வலுவில் உந்தப்பட்டது. நாட்டிலுள்ள நல்லோரெல்லாம் சீனாவை எதிர்த்து முறியடிக்க வேண்டுமென ஆக்க பூர்வ மான ஆதரவைத் தாமே முன் வந்து, மனமுவந்து வழங்கிக் கொண்டிருந்த நேரத்தில், ராஜாஜி தமது இயல்பின்படிக் குதர்க்கமான சில ஆலோசனைகளைத் தெரிவித்து வந்தார்: பாதுகாப்பு அமைச்சர் கிருஷ்ணமேனனை விலக்கவேண்டும். மத்தியில் காங்கிரஸ் அரசு என்று, ஒருகட்சி அரசாக இல்லாமல், எல்லாக் கட்சிகளையும் இணைத்துத் தேசிய அரசு அமைத்திட வேண்டும். அய்ந்தாண்டுத் திட்ட நிறை வேற்றத்தைக் கைவிட வேண்டும் — என்பதாக! இந்த யோசனைகள் கவைக்குதவாதவை என 4-11-62-ல் மத்திய அரசு நிராகரித்தது. சென்னை சட்ட மன்றம் 30–10–62 அன்று சீன ஆக்கிரமிப்பைக் கண்டித்துத் தீர்மானம் நிறை வேற்றியது. பெரியார் சுற்றுப்பயணத்தில் இருந்தார்.

29-10-62 அன்று மாதிரிமங்கலத்திலிருந்து ஊர்வலமாக வந்து, குத்தாலம் பொதுக் கூட்டத்தில் பேசினார். பிறந்த நாளை ஒட்டிப் பெரியாருக்கு 84 கலம் நெல் அன்பளிப்பாக அளிக்கப்பட்டது. எது எப்படியானாலும், யுத்த முயற்சிகளுக்கு நாம் ஆதரவு தரவேண்டியதுதான்—என்றார் பெரியார்.

விலைவாசிப் போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறை வாசம் அனுபவித்து வந்த அண்ணா, வேலூர் சிறையிலிருந்து விடுதலை பெற்று வெளிவந்தவுடன் நடைபெற்ற வரவேற்புக் கூட்டத்தில், சீனாவை முறியடிக்க இந்திய சர்க்காருடன் ஒத்துழைப்பதாகவும், அதற்கு நல்லெண்ண சமிக்ஞையாகத் திராவிட நாடு பிரிவினைக் கோரிக்கையைக் கைவிடுவதாகவும், எனினும் பிரிவினைக்கான காரணங்கள் அப்படியே நிலையாக இருந்து வருவதாகவும், பிரகடனம் செய்தார். 9–12–62, 7–1–63 ஆகிய நாட்களில் சீனப் போர் பற்றி வானொலியில் உரையாற்றினார். 2-12-62 அன்று போர் நிதிக்காக ரூ 35,000 திரட்டி உதவினார் அண்ணா.

பெருமனம் படைத்த பெரியாரும் 15-11-62 அன்று அறிக்கையில், போர் முயற்சிக்கு உடல் பொருள் ஆவி அனைத்தையும் அளித்திட மக்களுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்தார். மேலும் திருச்சியிலுள்ள தமது கல்வி நிறுவனங்கள் சார்பில் ரூ 2000/– போர் நிதியாகத் திருச்சியில் காமராசரிடம் வழங்கச் செய்தார்.

"ஆங்கிலம் ஓர் இணை மொழியாக நீடித்து இருக்கும். இந்தி மொழி புழக்கத்தில் இல்லாத பிராந்தியங்களின் மக்கள் விரும்பும் வரை, ஆங்கில மொழியை அகற்ற மாட்டேன்." நேரு உறுதி மொழி—என்ற தலைப்பில், பிரதமரின் படத்துடன், மேற்கண்ட வாசகம் 11–11–62 "விடுதலை" நாளேட்டில் வந்தது போலவே, எல்லாப் பத்திரிகைகளிலும் விளம்பரமாக, இந்திய யூனியன் சர்க்காரால் வெளியிடப்பட்டது. போர் மேகம் சூழ்ந்திருந்த நேரத்தில் தமிழ் மக்களுக்கு இந்த வாக்குறுதி ஒரு பேரொளியாய் வழி காட்டியது. இன்றளவும் இதைத்தான்

இந்தி எதிர்ப்பாளர்கள் சுட்டிக் காட்டி, இதனை ஏன் சட்ட மாக்கக் கூடாது எனக் கேட்டு வருகின்றனர். தமிழ் மக்களின் விருப்பத்திற்கு மாறாக அண்ணாமலைப் பல்கலை கழகத் துணைவேந்தராக சர் சி. பி. ராமசாமி அய்யர் நியமனம் பெற்றார் 14–11–62 அன்று.

பெரியார், தமது 84-ஆவது பிறந்த நாள் விழா பெரியார் திடலில் கொண்டாடப்பட்டபோது, நடிகவேள் ராதா அளித்த 10,000 ரூபாய் நன்கொடையைப் பெற்றுக் கொண் டாரல்லவா? அப்போதே வாக்களித்தவாறு—ராதா பெயரில் அங்கே ஒரு மன்றம் — ஹால் — கட்டப்படும்; அரங்கு அமைக்கப்படும். அதற்கு ராதா மன்றம் என்றே பெயர் சூட்டப்படும் என்றெல்லாம் கூறியவாறு—18-11-62 அன்று பெரியார் தலைமையில், திரைப்படஅதிபர் பி.ஏ. பெருமாள் மன்றத்திற்கு அடிக்கல் நாட்டினார். ராஜாஜி சீனப் போர் குறித்துத் தாறுமாறான கருத்துகள் கூறுவதைக் கண்டித்து, அவருக்குப் பரம்பரைப் புத்தி, காட்டிக் கொடுப்பது போகுமா?— என்று எழுதினார் பெரியார். பார்ப்பான் புத்தி பார்ப்பனீயம்தான்; இன்றைய வடக் கெல்லை நெருக்கடிதான் எப்படி? என்ற தலைப்புகளிலும், சீனப்போர் குறித்து, நவம்பர் இறுதி வாரத்தில், "விடுதலை" தலையங்கப் பகுதியில் எழுதி வந்த பெரியார், இருவாரங்களுக்குத் தமது சுற்றுப்பயணத்திற்கும் சிறிது ஓய்வளித்திருந்தார்.

கிருஷ்ணமேனன் விலகி, பம்பாயிலிருந்து ஒய். பி. சவான் பாதுகாப்பு அமைச்சராகப் பொறுப்பேற்றார். ராஜாஜி பம்பாயில் பேசும்போது, வருணாசிரம அமைப்பு முறைகளும் சாதிகளும் இருக்க வேண்டியதுதான்—என்று பேசினார். தமிழ்நாட்டு அமைச்சர் ஆர். வெங்கட்ராமனே, ஆச்சாரியார் தேசிய அரசு அமைய வேண்டும் என்றும் சீனப் பிரச்சினையை அய். நா. சபைக்கு எடுத்துச் சென்று அமெரிக்க ஆதரவு பெற வேண்டும் என்றும் சொல்லி வருவது சரியல்ல என்றார். 22–11–62 வரை தமிழக முதல்வரின் போர்நிதி 1 கோடி ரூபாயாகத் திரண்டிருந்தது.

கரூரில் 15-12-62 நடந்த சாதி ஒழிப்பு மாநாட்டிற்குப் பெரியார் தலைமை தாங்கினார். வே. ஆனைமுத்து திறப்பாளர். மறுநாள் நடந்த திராவிடர் கழக மாநாட்டின் தலைவர் தி. பொ. வேதாசலம், திறப்பாளர் கி. வீரமணி. திருவாரூர் தங்கராசு, சிவகங்கை சண்முகநாதன், ஈரோடு அப்பாவு, காங்கிரசுக்குப் போன ஈரோடு பி. சண்முக வேலாயுதம், கம்யூனிஸ்ட் முகவை ராசமாணிக்கம், தமிழ் தேசியக் கட்சி சம்பத், கண்ணதாசன் ஆகியோர் இந்த மாநாடுகளில் பங்கேற்றனர். குடிஅரசுப் பதிப்பக வெளியீடுகளான பகுத்தறிவு நூல்கள் இந்த மாநாடுகளில் மலிவாக விற்பனைக்குக் கிடைக்கும் என்று பெரியாரே அறிவித்திருந்தார்.

திருச்சி மாவட்டம் இடையாற்றுமங்கலம் தோழர்கள் முன்பு தென்னந்தோப்பு வழங்கியது போக, இப்போது வேறொரு தோப்பும், கட்டடமும் பத்தாயிரம் ரூபாய் பெறுமானத்தில் அன்பளிப்பாகச் சாசனம் செய்து தந்தனர். திருவாரூர் தங்கராசு பகுத்தறிவு என்ற வார இதழ் துவக்கி நடத்தினார். குருசாமி துரோகம் செய்து போனபின்னர், "விடுதலை"யில் கண்ணீர்த் துளிகளைத் தாக்கி அன்றாடம் செய்தி வெளியிடும் பழக்கம் குறைந்திருந்தது. ஆனால் 26–12–62 அன்று "தென்றல் திரை"யில் வந்த ஒரு கார்ட்டூன் எடுத்தாளப் பட்டிருந்தது; 'சட்டி சுட்டதடா கை விட்டதடா' என்று அண்ணா திராவிட நாடு பிரச்சினையைப் போட்டு உடைப்பதாக!

தேசிய அரசு அமைக்கச் சொல்ல ராஜாஜிக்கு என்ன யோக்கியதை இப்போது?—என்ற கருத்தோடு பெரியார் 1963-ஆம் ஆண்டைத் துவக்கியிருந்தார். ராஜாஜியும் சும்மாயில்லாமல், கல்கியில், திராவிட முன்னேற்றக் கழகத்தினர் திராவிடநாடு பிரச்னையைத் தூங்கப் பண்ணியிருக்கிறார்கள் என்று எழுதினார். பெரியார், நமது பழங்கால அரசர்கள் பார்ப்பன தாசர்களாக இருந்து, தமது சொத்தில் பெரும்பகுதியை மான்யமாக வழங்கியுள்ள மடமை குறித்து எழுதினார். 'மது விலக்கு மாபெரும் முட்டாள் தனம்'

என்ற தலையங்கக் கட்டுரை 29-11-62 "விடுதலை"யில் பெரியார் எழுதியதன் எதிரொலியாக 22-1-63 அன்று கும்பகோணத்தில் மிகத் தைரியமான முயற்சியாகப் பெரியார் தலைமையிலேயே, மது ஆதரவாளர் மாநாடு ஒன்று நடத்தப் பெற்றது, புதுமையாய்த் தோன்றிற்று?

10–1–63 அன்று "விடுதலை"யில் பெரியாரின் சீரிய அறிவிப்பு ஒன்று வெளிவந்தது. திருச்சியில் கட்டடம் ஒன்று விற்க, முன்பணமெல்லாம் பெற்றுக் கொண்ட ஒரு கட்டடச் சொந்தக்காரர், பேராசையால், தவறு செய்ய முயன்ற போது, சட்டப்படி நடவடிக்கை எடுத்து, அக்கட்டடத்தை இறுதியாகப் பெரியார் வாங்கச் செய்தார். அதில் தொழில் பயிற்சி நிலையம் ஒன்று ஆரம்பிக்கப்படும். 10 முதல் 16 வயது வரை உள்ள ஆண்-பெண் அநாதைப்பிள்ளைகள் விண்ணப்பம் போடலாம். சாப்பாடும் இலவசம். தச்சு, அச்சு, தையல், இயந்திர சம்பந்தமான தொழில்கள் கற்றுத் தரப்படும்-என்பது பெரியாரின் அன்பழைப்பு!

நிறுத்தப்பட்டிருந்த பெரியாரின் 'நகரும் வீடு' புறப்படத் தொடங்கியது 11-1-63 முதல். இந்தச் சுற்றுப் பயணம் முழுவதும் பெரியார் பேசிய பொதுக் கூட்டங்கள் யாவுமே திராவிடர் கழகச் சார்பில், சீன ஆக்கிரமிப்புக் கண்டனக் கூட்டங்களாகும். உழவர் உழைப்பின் பயனை நுகரும் அறிவுத் திருநாள் என்ற தமது பொங்கல் வாழ்த்துச் செய்தியினைப் பெரியார் விடுத்தருளினார். "விடுதலை"யில் சீனப் போர் எதிர்ப்புச் செய்திகள்–மத்திய அமைச்சர்கள் நேரு மற்றவர்களின் படங்களோடு, அன்னாரின் வீரமிக்க பேச்சுகள் ஆகியவை பிரதான இடம் பெற்றன. பெரியார் வெளியூர்களில் பேசிய கூட்டச் சொற்பொழிவுகள் பெரும்பாலும் ஒரு வாரம் கழித்தே வெளியாகி வந்தன.

தமிழ் தேசியக் கட்சித் தலைவர் சம்பத் உடல் நலமின்றி மருத்துவ மனையிலிருந்துவிட்டு, 17-1–63 அன்று இல்லம் திரும்பியதாக அவரது "தமிழ்ச்செய்தி" கூறிய செய்தியினை "விடுதலை" எடுத்தாண்டிருந்தது. சுயமரியாதைச் சுடரொளியும், கம்யூனிஸ்ட் கட்சித் தலைவரும்,

தமிழாய்ந்தவருமான தோழர் ப. ஜீவானந்தம் 18-1-63 அன்று காலை 6-30 மணிக்கு சென்னைப் பொதுமருத்துவ மனையில் இயற்கை யடைந்தார். பின்னாளில், பெரியார் ஜீவாவின் படத்தினைத் திறந்து வைத்துப் பாராட்டியதோடு, அன்னாரின் சிலை அமைக்கப்பட விருப்பதாக பாலதண்டாயுதம் செய்தி சொன்னவுடன், ரூ 150-நன்கொடையும் வழங்கினார்.

தென்சென்னை நாடாளுமன்றத் தொகுதியில் 1962-ல் சம்பத் போட்டியிட்டபோது, பெரியார், அங்கு யாரையும் ஆதரிக்கவில்லை. இந்த நிலைக்கு முரணாக குருசாமி "விடுதலை"யில் சம்பத்தைத் தாக்கி வந்தார், நேரிடையாகவும் மறைமுகமாகவும். திராவிடர் கழகத்தில் சம்பத்தின் ஆதிக்கம் வந்து விடுமோ என்று அவர் அஞ்சினார். பெரியார் விரைவில் மறைந்து விடுவார்; பிறகு தாமே தலைவர், வாரிசு எனத் தாடி கூட வளர்த்தார் குருசாமி. இவரைப் போன்றே இன்னொருவரும் உட்பகையாய்இருந்திருக்கிறார். இவர் மணியம்மையைக் கண்டு பொறாமையால் புழுங்கியிருக்கிறார்.இவர்தான் திருச்சி ப்ளீடர் தி.பொ.வேதாசலம். இவர்கள் இருவருமே இன்கம்டாக்ஸ் துறைக்குக் கடிதம் எழுதிப், பெரியாரின் சொத்துகளுக்கு வரி விதிக்கச் சொன்னார்களாம்! 29-1-63 "விடுதலை" ஏடு மீண்டும் ஒரு துரோகத்தை வெளிப்படுத்திற்று. அதில் பெரியாரின் குறிப்பு கூறுகிறது—'வேதாசலம் 2, 3 ஆண்டுகட்கு முன்பே விலக்கப் பட்டார். போனால் போகிறதென்று கழக நிகழ்ச்சிகளில் பேச்சாளராக அனுமதித்து வந்தேன்' என்று. பெரியாரின் பெருந்தன்மைக்குச் சரியான எடுத்துக் காட்டாகவும், வேதாசலத்தை அவர் எந்த அளவு மதித்து வந்தார் என்பதைக் காண்பிக்கவும், அதே தேதியில் தி. பொ. வேதாசலனார் பெரியாருக்கு வரைந்த கடிதமும் பிரசுரிக்கப்பட்டுள்ளது. இதில் பின்னுமொரு பெருஞ்சிறப்பு, அன்றைய "விடுதலை"யிலேயே, பெரியார் கிழித்த கோட்டைத் தாண்டாத நீடாமங்கலம் அ. ஆறுமுகம் அவர்கள், துரோகிகளைப்பற்றித் திட்டிய முடங்கலும் வெளியாகி இருக்கிறது.

7-2-63 அன்று பண்ணுருட்டியில் பெரியார் பேசுகையில், "என்னைப் பொறுத்தவரையில் துரோகிகள் முளைப்பது புதிதல்ல. அவ்வப்போது நானும் வெட்டிக் கொண்டுதான் வந்திருக்கிறேன். அண்ணாதுரை போகும்போது அய்யா விடம் 5 லட்சம் சொத்தை விட்டுப் போகிறோம் என்றார். குருசாமி போகும்போது அய்யோ 30 லட்சம் சொத்தைப் பெரியார் வைத்துக் கொண்டிருக்கிறாரே என்றார். 13 வருடத்தில் 5 என்பது 30 ஆனது என்சாமர்த்தியம் தானே? முப்பது லட்சம் சரியல்ல, 15 லட்சம் என்றாலும், அதில் இவருக்கு என்ன கஷ்டம்?" என்று கேட்டார் பெரியார்.

ஆங்காங்கு தாமே நேரில் இருந்து மாவட்டத் தோழர் களை வரச் செய்து கழக அமைப்புகளைத் திருத்தி யமைத்துப் புதிய நிர்வாகிகளைத் தேர்ந்தெடுக்கப் பெரியார் விரும்பினார். முதல் கட்டமாகத் தென்னார்க்காடு மாவட்டக் கழகக் கூட்டம் 10-2-63 அன்று விழுப்புரத்தில் பெரியார்முன்னிலையில் கூடித், தலைவராக கு.கிருட்ணசாமி, துணைத் தலைவர்களாகப் பண்ணுருட்டி நடேசன், திண்டி வனம் ஜெயராமன், செயலாளர்களாகப் புவனகிரி சச்சி தானந்தம், நெல்லிக்குப்பம் சுப்ரமணியம், பொருளாள ராகக் கோ. சாமிதுரை ஆகியோரைத் தேர்ந்தெடுத்தது.

> தென்னார்க்காடு மாவட்டம் கல்லக்குறிச்சியைச் சார்ந்த கோ. சாமிதுரை எம். ஏ. பி. எல்., பட்டம் பெற்று வழக்கறிஞராகி மாவட்ட அளவில் கழகப் பணியாற்றி வந்தவர். அமைதியாகவும் அடக்கமாகவும் பெரியார் வழி நடந்து இன்று திராவிடர் கழகத்தின் அமைப்புச் செயலாளராக ஆற்றலுடன் விளங்கி வருகின்றார், மாநில அளவில்.

பிரிவினைத் தடைச்சட்டத்தை எதிர்த்து 25-1-63 அன்று மாநிலங்களவையில் அண்ணா பேசினார். பின்னர் ஒரு முறை 'உங்கள் பிரிவினைத் தடைச் சட்டம், தேர்தலில் ஈடு படுவதால் எங்களைத் தடுக்கலாம். ஆனால் தேர்தலில் நிற்காத திராவிடர் கழகத்தை உங்கள் பிரிவினைத் தடைச் சட்டம் என்ன செய்யமுடியும்?' என்று அண்ணா கேட்டதை

21-2-63 "விடுதலை" பிரசுரித்திருந்தது. சென்னை உயர்நீதி மன்ற நீதிபதியாக கே.எஸ். ராமமூர்த்தி என்ற பார்ப்பன வழக்கறிஞர் நேரடிநியமனம் பெற்றதைக்கண்டித்து 19-2-63 "விடுதலை", அய்க்கோர்ட்டில் பார்ப்பன ஆக்கிரமிப்பு என்ற மகுடத்தின் கீழ் தலையங்கம் தீட்டியிருந்தது. 20-ந் தேதி பெரியாரே எழுதியிருந்தார், பீடிக்கு வரி விதிக்கலாம் என்று அரசாங்கத்துக்கு யோசனை தெரிவித்து. பெண்ணாடத்தில் ஒரு திருமண விழாவில் பேசும்போது பெரியார், எங்கள் சுய மரியாதைப் பிரச்சாரத்தின் விளைவுதானே இரு தார மணத்தடைச் சட்டம் வந்தது? என்று கேட்டார். மேலும், பெண்களுக்குச் சொத்துரிமை, கல்வி, உத்தியோக உரிமை ஆகியவை பெருகியதும் எங்களால் தானே? என்று கேட்டார் பெரியார்.

இந்தியக் குடிஅரசுத் தலைவர் பாபு ராஜேந்திர பிரசாத் 28-2-63 இரவு 10-30 மணிக்குக் காலமானார். பெரியார் திருச்சியிலும் தஞ்சையிலும், குருசாமி, வேதாசலம் ஆகிய இருவரின் கடந்த கால நடவடிக்கைகள் பற்றியும், தாம் இவர்களுக்கு மரியாதை காரணமாக நீண்ட தவணை தந்து விட்டதாகவும், இவர்களைவிட அண்ணாத்துரை நூறு மடங்கு யோக்கியர் என்றும், மிக்க வேதனை கலந்த வருத்தத்துடன் உண்மைகளை ஒளிவிடச் செய்ய நேர்ந்தது. இன்னொரு சந்தர்ப்பத்தில், இவர்களை விட அண்ணாத்துரை ஆயிரம் மடங்குமேல் என்றே பெரியார் பேசி இருக்கிறார்.

ஆண்டுதோறும் சென்னை எழும்பூரில் நடைபெறும் கைத்தறிக் கண்காட்சியில், இந்த ஆண்டு, சட்டசபை சபாநாயகர் எஸ். செல்லபாண்டியன் தலைமையில் 11-3-63 அன்று பெரியார் பேசினார். 13-ந் தேதி "விடுதலை"யில், ஒழுங்கீனமான நடத்தைக்குத் தண்டனை என்ற மகுடத்தின் கீழ், தலையங்கக் கட்டுரையைப் பெரியார் எழுதி, சட்ட மன்றங்களில் வெளி நடப்புச் செய்வது தவறு, தேவை யற்றது என்று கண்டித்தார். மற்றும், பிரிவினைத் தடைச் சட்டத்தை வன்மையாக எதிர்த்தார். இதனால் ஒரு

பத்தாயிரம் இருபதாயிரம் பேரைச் சிறையில் தள்ளிட, டெல்லி திட்டமிடுகிறதா? நானும் விரைவில் பிரிவினைத் தடுப்புச் சட்ட மறுப்பு மாநாடு கூட்டப் போகிறேன் என்று முடித்திருந்தார் பெரியார். பிரிவினை உணர்ச்சியைச் சட்டத்தால் தடுத்துவிட முடியாது என்ற கருத்தை வலியுறுத்தி, முந்தின நாள் சென்னை திருவல்லிக்கேணி கடற்கரையில் நடந்த பொதுக்கூட்டத்திலும் பெரியார் முழக்கமிட்டார். சென்னைப் பொது மருத்துவ மனையில் சிகிச்சை பெற்று வந்த ஈரோடு வர்த்தகர் அண்ணாமலை கவுண்டரையும், கழகத்தோழர் மயிலை சம்பந்தனையும் பெரியாரும் மணியம்மையாரும் 12-ந் தேதியன்று மாலையில் கண்டு, விசாரித்து வந்தனர்.

காமராசர் ஆட்சியே தமிழர்களின் பொற்காலம் என்ற தலைப்பில் தொடர்ந்து ஒரு பெட்டிச் செய்தி. இதில் கல்வித்துறையின் சாதனைகள் — அதாவது எஸ்.எஸ்.எல்.சி. வரையில் இலவசக்கல்வி, மதிய உணவு, படிப்போர் எண்ணிக்கை பெருகியுள்ளது. 15% இப்போது 37% ஆகியிருக்கிறது. ஆரம்பக்கல்வி கட்டாயமாகியுள்ளது. கல்விக்கான பட்ஜெட் 1946–47-ல் 6.59 கோடி 1963–64-ல் 28.71 கோடி என்பன போன்ற புள்ளி விவரங்கள், பிற எழுச்சியூட்டும் செய்திகள், சாதனைகள் ஆகியவை நாள்தோறும் வேறு வேறாக "விடுதலை" ஏட்டில் 1963 மார்ச் 15 முதல் வெளியிடப்பட்டன. அதேபோல், ஆச்சாரியாரும் அவர் கும்பலும் ஆட்சிக்கு வந்தால், என்ற தலைப்பின் கீழ் இன்னொரு பெட்டிச் செய்தியில் — ராஜாஜியின் குலக் கல்வித் திட்டம், ஆரம்பப்பள்ளிகளை மூடியது, தொழில் கல்லூரிகளில் பார்ப்பனர்க்கே சலுகையளித்தது போன்ற விவரங்கள் தரப்பட்டு வந்தன. இன்னொரு புறத்தில், ராமநவமியை ஒட்டி, ராமாயணப் பாத்திரங்களின் யோக்கியதையைப் பெரியாரின் ஆராய்ச்சிக் கட்டுரைகள் தொடர்ந்து விளக்கி வந்தன. ஏழெட்டு ஆண்டுகளாய் இயங்காமலிருந்த திராவிட மாணவர் பிரச்சாரப் பயிற்சி நிலையம் இந்த ஆண்டு துவங்கும் எனப் பெரியார் அறிவித்தார்.

கந்த புராணத்தையும் இராமாயணத்தையும் பெரியார் ஒப்பிட்டு, ஆரியர்கள் முதன் முதலில் இந்தியாவில் நுழைந்த போது, இங்கே ஆரிய நாகரிகம் பரவாமல் தடுத்த திராவிட வீரர்களைப் போரிட்டு வென்றதாக முதலில் எழுதப்பட்ட சிவபரமான நூல் ஸ்கந்த புராணம் என்பது; பின்னர் வைணவபரமான நூலாக அதிலுள்ள சம்பவங்கள்-பாத்திரங் களைப் பேரும் இடமும் மாற்றி இராமாயணம் எழுதப் பட்டது. ஸ்கந்த புராணம் 18 புராணங்களில் அடங்கி விட்டது. அதன் பிறகு புராணமாக எழுத இடமில்லாத தால், இராமாயணம்-பாரதம் எல்லாம் இதிகாசம் என்று கூறி விட்டனர். இவையெல்லாம் ஏதோ உண்மையில் நடந்ததாகக் கற்பனை செய்து கொண்டனர் தமிழ்ப் புலவர்கள். முதலில் கச்சியப்ப சிவாச்சாரியார் என்னும் பூசாரி கந்த புராணம் எழுதினார். பின்னர் கம்பர் என்னும் மற்றொரு கோயில் பூசாரி ராமாயணம் எழுதினார். தமிழ் மக்கள் மூடத்தனத்தால், எல்லாம் மெய்யாகவே நடந்த கதை என்று, மோசம் போனார்கள்.

பெரியாரின் இந்த ஆராய்ச்சி ஆழ்ந்து சிந்தித்தற்குரிய தாகும். அடுத்தபடியாகத், தமிழ் நாட்டில் அய்ந்து சட்ட மன்றத் தொகுதிகள் காலியாகியிருந்தன. அவற்றுள் இரண்டு, வழக்குகளில் உட்பட்டிருந்தன. மிகுதியான மூன்றுக்கும் இடைத் தேர்தல்களுக்கான தேதிகள் குறிப் பிடப்பட்டன. தமிழர்களுக்கு இது சோதனைக்காலம் என்று சுட்டிக் காட்டிய பெரியார்,இடைத் தேர்தல்கள் மூன்றிலும் காமராசர் நிறுத்தும் காங்கிரஸ் வேட்பாளரையே தமிழ் மக்கள் வெற்றி பெறச் செய்ய வேண்டும்; உங்களுக்குக் காமராசரின் மனித தர்மம் வேண்டுமா? ஆச்சாரியாரின் மனுதர்மம் வேண்டுமா? என்று கேட்டார். தங்கக் கட்டுப் பாடு சட்டத்தால் பாதிக்கப்பட்டதாகக் கூறப்படும் பொற் கொல்லர் வீட்டுப் பிள்ளைகளெல்லாம் படித்து உத்தி யோகம் பார்க்க வேண்டாமா? என்று காமராசரும் மாயூரத் தில் 17-4-63-ல் கேட்டதையும், "விடுதலை" முக்கியத்துவம் கொடுத்துப் பிரசுரித்தது. சாதி ஒழிய வேண்டுமா? நீடிக்க

வேண்டுமா? சாதி ஒழிய வேண்டுமென்று காமராசர் ஆட்சி யும் அதை ஆதரிக்கும் திராவிடர் கழகமும் பாடுபடுகின்றன. சாதி நீடிக்க வேண்டுமென்று சுதந்திரா, கண்ணீர்த்துளி, நாம் தமிழர், தமிழரசு, கம்யூனிஸ்டு, சோஷலிஸ்டுக் கட்சிகள் கோருகின்றன. இராமன் ஆண்டால் நல்லதா? இராவணன் ஆண்டால் நல்லதா?—இப்படியெல்லாம் பளிச் சிடும் விளம்பர முறைகளை "விடுதலை" கையாண்டது! நான்குனேரி, போடிநாயக்கனூர், திருவண்ணாமலை என்னும் வரிசைப்படி, நிரலாக இடைத் தேர்தல்கள் நடை பெற இருந்தன; முறையே காங்கிரஸ்வேட்பாளர்களுக்கு எதிராகச் சுதந்திரா, சுயேச்சை, தி.மு.க. வேட்பாளர்கள் போட்டியிட்டனர் இம்மூன்று தொகுதிகளிலும்.

முன்னர் அறிவித்தவாறு பெரியார் நேரிலிருந்து தஞ்சை மாவட்ட திராவிடர் கழகக் கமிட்டியைத் திருத்தி அமைத் தார். அரியலூரை அடுத்த அயன் ஆத்தூர் என்ற சிற்றூரில் 20–4–63 அன்று சாதி ஒழிப்பு வீரர்களுக்குச் சான்றிதழ்கள் வழங்கும் விழா, உடல் புல்லரிக்க, உள்ளம் பெருமித மடையச் சிறப்புடன் நடைபெற்றது. தேசப்பட எரிப்புப் போரில் குதித்து இரண்டாண்டு தண்டனைகளை அனு பவித்து, மீண்டவர் ஒருவர், 1½ ஆண்டு ஏழுபேர், 9 மாதம் பன்னிரண்டு பேர், மைனர் - சிறையிலிருந்தவர் 4 பேர்! பெரம்பலூரை அடுத்த கூடலூரில், பெரியாரின் எடைக்குச் சமமாக மிளகாய் வழங்கப்பட்டது. 21–ந்தேதி சிதம்பரம் வட்ட சாதி ஒழிப்பு மாநாடும், திராவிடர் கழக மாநாடும் வல்லம்படுகையில் நடைபெற்றன. முன்னதை கி. வீரமணி தலைமையில் சேலம் ச. திரு. அழகரசன் திறந்து வைத்தார். பின்னதை பெரியார் தலைமையில் ஆர். சண்முகநாதன் திறந்து வைத்தார். இந்த மாநாட்டில் மீதமான பணத்தைக் கொண்டு, பெரியார் சுயமரியாதைப் பிரச்சார ஸ்தாபனத் திற்கு அங்கேயே ஒரு மனைக்கட்டு வாங்கப்பட்டது குறிப் பிடத்தக்க நிகழ்ச்சியாகும்.

நேருவின் வாக்குறுதி இந்திப் பிரச்சினையில் தகர்க்கப் பட்டு விட்டது என்று கூறி, சம்பத், அரசியல் சட்டத்துக்குத்

தீயிடும் கிளர்ச்சியை நடத்த இருந்தார். 28-4-63 அன்று அவர் கைது செய்யப்பட்டு 4–5–63 அன்று விடுதலை செய்யப்பட்டார். நேரு புதிய உறுதிமொழி ஒன்றைத் தெரிவித்தார். அதன்படி, 12 ஆண்டுகட்குப் பின்னர் ஆட்சி மொழி பற்றி ஆராயும் குழுவில் இந்தி பேசாத பகுதியைச் சார்ந்த பிரதிநிதிகள் அதிகம் இருப்பார்கள் என்பதே அது.

மன்னார்குடியில் வட்ட திராவிடர் கழகக் கட்டடத் துக்காகப் பெரியார், தாமே 1000 ரூபாய் வழங்கி, மேலும் நிதியளிக்குமாறு வேண்டுகோளும் வெளியிட்டார். நான் கூனேரி இடைத்தேர்தல் பிரச்சாரத்திற்காகப் பெரியாரும் "விடுதலை" ஆசிரியர் கி. வீரமணி எம்.ஏ.பி.எல். அவர்களும் மே 8 முதல் 10 வரை சுற்றுப்பயணம் செய்தார்கள். ஆச்சாரியாரால் என்னை, அதாவது சுயமரியாதைக் கொள்கையை அழிக்க முடியவில்லை அந்த ஆத்திரத்தில் தான் அவர் காமராசரை ஒழிக்கப் பார்க்கிறார். இங்கே இந்தி எதிர்ப்பு வீரராகக் காட்சி தருகிறாரே, அவரது சுதந்திராக் கட்சியின் கொள்கை அதுவா என்றால், இல்லை. கண்ணீர்த்துளிகள் இந்த மண் குதிரையை நம்புகிறார் களே?—என்றுபெரியார் உண்மை நிலவரத்தை விவரித்தார். இந்தியைத் தடுக்க முடியாவிடில் பதவி துறப்பேன் என்று வீர முழக்கமிட்டார் காமராசர்.

மே, ஜுன் மாதங்களில் பெரியார் நிறைய திருமணங் களை நடத்தி வைத்தார். சுயமரியாதைமுறைத் திருமணங் களைத் தமிழ் நாட்டில் அறிமுகப்படுத்திப் பெரியார் மகத் தான சாதனை புரிந்திருக்கிறார்; உயர்நீதி மன்றம், சுய மரியாதைத் திருமணம் சட்டப்படிச் செல்லாதெனத் தீர்ப்பு வழங்கிய பின்னும், அவரது சுயமரியாதை முறையிலான திருமணங்கள் பத்தாயிரத்துக்கும் அதிகமாக நடந்து வரு கின்றன. பெரியாரே இந்த வெற்றிகளுக்கெல்லாம் காரண கர்த்தர்—என்று 14-5-63 "லிங்க்" ஆங்கில இதழ் பாராட்டுக் கட்டுரை தீட்டியது. சிங்கப்பூர் திராவிடர் கழகம் தனது 16-ஆவது ஆண்டு விழாவினை மே முதல் நாள் சிறப்

புடன் நடாத்தியது. தாயகம் சென்று திரும்பிய மாயூரம் நாகரத்தினம் கழக வளர்ச்சி பற்றி விளக்கினார்.

இந்தி எதிர்ப்புக்குழு ஒன்று–சுதந்திரா, தி.மு.க., முஸ்லிம் லீக் கட்சிகளைக் கொண்டு அமைக்கப்பட்டது. ஏன் பிற எதிர்ப்புக் கட்சிகளை இணைக்கவில்லையென "விடுதலை" கேலி செய்தது. தற்கால அரசியல் நிலை என்ற தலைப்பில் சென்னைக் கடற்கரையில் டி. எம். சண்முகம் எம்.சி. தலைமையில் பெரியாரும் வீரமணியும் 2-6-63 அன்று விளக்கமளித்தனர். ஜூன் முதல்நாள், தேனாம்பேட்டை பிள்ளைப் பேறு விடுதி ஒன்று சென்னை மாநகராட்சியால் அமைக்கப்படவிருந்ததற்குப் பெரியார் அடிக்கல் நாட்டினார். திராவிடர் கழக சென்னை மாவட்டத் தலைவர் டி.எம். சண்முகம் தலைமை ஏற்றார். திராவிட முன்னேற்றக் கழக மேயர், துணைமேயர்களான குசேலரும், வேதாசலமும் வரவேற்றனர்.

7, 8 இரு நாட்களும் பெரியார் போடித் தொகுதியில் பிரச்சாரம் செய்தார். காமராசர் ஆட்சி நீடித்தால் தமிழர்கள் நூற்றுக்கு நூறு பேரும் படித்து விடலாம் என்று உறுதி தெரிவித்தார். நாங்குநேரியிலும், போடியிலும் காங்கிரஸ் வேட்பாளரே வென்றனர். பெரியாரும் அளவிலா ஆனந்தமுற்றார். முந்திய திங்கள் 27-ம் நாள் திருத்துறைப் பூண்டியில் பேசியகாலை பெரியார், ஓட்டளிக்கும்போது மக்கள் நலத்துக்குக் கேடானவர் வந்துவிடாதபடி பார்த்துக் கொள்ளுங்கள்; நேரு, காமராசர் கரத்தைப் பலப்படுத்துங்கள் என்றார்.

90 வயதை நெருங்கிக் கொண்டிருக்கிற பெரியார் ராமசாமி, இந்த வயதிலும் ஓயாது போராடுகிறார். அடுத்த கிளர்ச்சி என்ன என்று துடிக்கிறார். அறிவிக்கும் வரையில் அடுத்த போராட்டம் எதை எதிர்த்து என்பதை, அவரே அறிவாரோ என்னவோ—என்பதாக "பிளிட்ஸ்" இதழ் 8-6-63 அன்று பாராட்டி எழுதியது. பள்ளிகள், கல்லூரிகளில் விண்ணப்பம் போடும்போது சாதிப் பெயர் குறிப்பிட வேண்டாம் என்று தமிழக அரசு தரப்பில் ஒரு செய்தி வெளி

யான போது, உண்மையில் அப்படிக் கோரப் பட்டால், மீண்டும் பிராமணர் ஒட்டல் பெயரழிப்புப்போர் துவக்க நேரிடும் என்று "விடுதலை" எச்சரித்தது. இந்த ஏற்பாடு சாதியை ஒழிக்காது; மறைமுகமாகப் பார்ப்பனரை உயர்த்தி விடும் என்பது புரிந்தது.

ஈ.வெ.கி. சம்பத் திருவண்ணாமலை தேர்தல் பிரச்சாரத்திற்குக் காங்கிரஸ் ஆதரவாளராகப் பேசச் சென்றார். பெரியாரும் 24 முதல் 27 வரை தொகுதியில் பேசினார்:— காமராசரால்தான் தமிழ் மக்களுக்கு முன்னேற்றம் ஏற்பட்டு வருகிறது; இனியும் ஏற்படும். ஆச்சாரியாரின் அடிவருடிகளான கண்ணீர்த்துளிகளால் என்ன சாதிக்க முடியுமெனப் பெரியார் கேட்டார். எனினும் திருவண்ணாமலைத்தொகுதி இடைத்தேர்தலில் திராவிட முன்னேற்றக் கழக ப. உ. சண்முகம் வென்றார். பின்னர், பெரியார் சேலம் அன்னதானப்பட்டியில் 1-7-63 அன்று திருவண்ணாமலை தேர்தல் பிரச்சாரம் பற்றிக் குறிப்பிட்டார். "நான் பத்தாயிரம் பேர் அடங்கிய பெரிய கூட்டத்தில் பேசிக் கொண்டிருக்கிறேன். யாரோ ஒருவன் அதோ எம். ஜி. ஆர். என்று கூவிக்கொண்டே ஓடினான். கூட்டத்தில் 300 பேர்கூட மீதி இல்லை, அவ்வளவு பேரும் அவன் பின்னே ஓடினார்கள். பிறகு சினிமாக்காரன் வரவில்லை என்று தெரிந்ததும், எல்லாருமே திரும்ப வந்து உட்கார்ந்தார்கள். அவர்களை நன்றாக வெளுத்து வாங்கிவிட்டேன்" என்று, மக்கள் மனோநிலையைச் சுட்டிக் காட்டினார் பெரியார்.

மைசூர் மாநில அரசு 100க்கு 50 இடம் பிற்படுத்தப் பட்டோருக்கு என முன்னர் அறிவித்தது போக, இந்த ஆண்டில் கல்லூரிகளில் 100க்கு 25 இடம், குறைந்த மார்க் வாங்கியவர்களுக்கு ஒதுக்க வேண்டும் என ஆணை பிறப்பித்திருந்தது. வர்ணாசிரம தர்மக் காவலனான "சுதேசமித்திரன்" ஏடு இந்த ஏற்பாட்டைப் பாராட்டி எழுதியதைப் படித்ததும், பெரியாருக்கு ஆச்சரியம்! "அதிசயம்! அதிசயம்!" என்று தலைப்பிட்டு "விடுதலை" 27–6–63ல் தலையங்கம் தீட்டிவிட்டார். தஞ்சை திராவிடர் கழகத்

தலைவர் கோ. ஆளவந்தார் 7-7-63 அன்று இயற்கை எய்தினார். திருக்கோவிலூர் வட்டம் திருவெண்ணெய் நல்லூரில் சாதி ஒழிப்பு, திராவிடர் கழக மாநாடுகளில் கலந்து கொண்டிருந்த பெரியார் விரைந்து தஞ்சை வந்து, மறுநாள் மாலை 3 மணியளவில் அன்னாரின் சடலத்துக்கு மாலை சூட்டி மரியாதை தெரிவித்தார். தஞ்சை திராவிடர் கழகக் கட்டடம் பெரிதாக்கப்பட நிதி தேவை என்று பெரியாரே "விடுதலை"யில் அறிக்கை வெளியிட்டார்.

> இந்த நிதிக்குழுவில் இடம்பெற்ற தஞ்சை வர்த்தகர் கா. மா. குப்புசாமி, சுற்றத்தாருடன் கழகப்பணிகளில் ஈடுபடுத்திக் கொண்டவர். பின்னர் மாவட்ட அளவில் தனது தொண்டினை விரிவு படுத்தியவர். இப்போது மத்திய திராவிடர் கழகப் பொருளாளராக அரும் பணியாற்றி வருபவர். பொதுச் செயலாளருடன் கீழ்த்திசை நாடுகளில் சுற்றுப் பயணம் செய்து வந்தவர்.

பார்ப்பானுக்கே பதவி கொடுத்து நன்மை செய்து வந்த காங்கிரஸ், இப்போது தமிழர் கைக்கு மாறி, தமிழர்களுக்கு நன்மை செய்து வருகிறது. இதை எதிர்க்கின்ற பார்ப்பன ருக்குக் கண்ணீர்த் துளிகள் துணை போவதா? இது இனத் துரோகமல்லவா? என்று பெரியார் அடியக்கமங்கலத்தில் வினாத் தொடுத்தார்.

இந்த ஆண்டு பள்ளி இறுதித் தேர்வில் பன்னாடை முறையில்லை. யாரும் நிறுத்தப்படமாட்டார்கள் என்று சென்னை சட்ட மன்றத்தில் 8-8-63 அன்று மகிழ்வான செய்தி அறிவிக்கப்பட்டது அரசினரால்.

ஈரோடு பொதுக் கூட்டத்திலும், திருச்சியையடுத்த பொன்மலைப்பட்டி தென்பகுதி ரயில்வேத் தொழிலாளர் கூட்டத்திலும் கலந்து கொண்டு சென்னை வந்து சேர்ந்த பெரியாருக்கு, அதிர்ச்சி தரும் செய்தி ஒன்று காத்திருந்தது. "கே பிளான்" என்றழைக்கப்பட்ட, காமராசர் திட்டம் என்ற ஏற்பாட்டின்படிக் காங்கிரஸ் கட்சியின் முதிய தலைவர்கள் பதவி விலகுதல் என்பதாகும் அது. காமராசரைப் பதவியிலிருந்து இறக்கிடவே முக்கியமாய்

இது அறிவிக்கப்பட்டதாக, அப்போது சில அரசியல் நோக்கர்கள் கருதினர். பெரியார் இதைக் கேள்வியுற்றதும் காமராசருக்கு ஒரு தந்தி அனுப்பினார். தாங்களாகவோ, பிறர் அறிவித்த கருத்துக்கிசையவோ, முதலமைச்சர் பொறுப்பு நீங்குதல்—தமிழர்கட்கும், தமிழ் நாட்டுக்கும், தங்களுக்கும் தற்கொலைக்கொப்பானதேயாகும் என்பதே வாசகம்! 10–8–63 அன்று மயிலை வீரப்பெருமாள் கோயில் தெருவின் கூட்டத்தில் பேசுங்கால், பெரியார், காமராசர் போல் வேறு ஆள் கிடையாது. சீனப் படையெடுப்பு நேரத்தில், பொதுவாகவே முதலமைச்சர்கள் பதவிவிலகுவது பைத்தியக்காரத்தனம். தேசப்பற்று, தேச ஒற்றுமை இவை களைவிட மானந்தான் முக்கியம் என்றார். இதே கருத்தைப் பன்னிரண்டாந் தேதி "விடுதலை"யிலும் தலையங்கமாக வெளியிட்டார்.

திருவாரூர் தங்கராசு நடத்திய பகுத்தறிவு இதழில்—அடுத்த முதல்வராக பக்தவத்சலம் வரக்கூடாது என்ற கருத்து வெளியிடப்பட்டிருந்தது. 17-8-63 அன்று பெரியார் ஓர் அறிக்கையில், 'இது என் கருத்தல்ல; காமராசர் யாரை ஏற்படுத்தினாலும் வரவேற்கத்தக்கது' என்று கூறியிருந் தார். பெரியார் அடுத்துத் தமது சுற்றுப்பயணத்தை மேற் கொண்டு, ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில் நிறையக் கூட்டங்களில் பேசினார். செப்டம்பர் 30-ஆம் நாள் தாம் பதவி விலகுவதாகவும், புதிய தலைவர் அக்டோபர் 2–ஆம் நாள் தேர்ந்தெடுக்கப்படுவாரென்றும், காமராசர் 28–8–63 அன்று செய்தியை வெளியிட்டார். நீலகிரி மாவட்டத்தில் காமராஜ் சாகரை 7-9-63 அன்று ஆர். வெங்கட்ராமன் தலைமையில் காமராசரே திறந்து வைத்தார்.

நாடாளுமன்றத்தில் நேரு அரசு மீது நம்பிக்கை யில்லாத் தீர்மானம் எதிர்க்கட்சிகளால் கொண்டுவரப் பட்டது. இதைக் கண்டித்துப் பெரியார், வீரமணி, ஆனை மலை நரசிம்மன் ஆகியோர் திருச்சியில் டி. டி. வீரப்பா தலைமையில் 31–8–63 அன்று பேசினார்கள். ஆனால் ராஜாஜியோ, நாடாளும் மன்றத்தையே கலைத்துவிட்டு

ஜனாதிபதி ஆட்சியை நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டுமென்று "சுயராஜ்யா" இதழில் எழுதினார். செப்டம்பர் 8-ஆம் நாள் சென்னைக் கடற்கரையில் பெரியார், சமூக விரோதிகள் என்ற தலைப்பில் பேசினார். தமிழர்களுக்கு வேலை வாய்ப்புக் குறைந்து போய்விட்டது. பார்ப்பானும் அவனுக்கு அடுத்ததாக மலையாளியும் தமிழ் நாட்டை ஆக்கிரமித்துக் கொண்டுவிட்டார்களே—என்றார் பெரியார். 12-ம் நாள் சென்னை மாநிலக் கல்லூரியில் பெரியார், சென்னைக் கல்லூரிகள் தமிழ் மன்றத்தில் சொற் பொழிவாற்றினார். சென்னை பெரியார் திடலில் அமைக்கப் பட்ட ராதா மன்றத்தைப் பெரியார், சபாநாயகர் செல்லபாண்டியன் தலைமையில், 17-9-63 அன்று திறந்துவைத்தார். பெரியாரின் 85-ஆவதுபிறந்தநாள்விழாவில் சம்பத்,வீரமணி, ராதா, தங்கராசு, டி. எம். சண்முகம் பங்கேற்றனர்.

பெரியார் தமது 85 ஆவது பிறந்த நாள் செய்தி வழங்கினார்:— "நம் மக்கள் 100க்கு 90 பேர் எழுத்து வாசனை அற்றவர்கள். படித்த மக்களிலும் 100க்கு 99 பேர் மூட நம்பிக்கையில் மூழ்கிப் பேராசை கொண்டவர்கள். அப்படிப் பட்டவர்கள், நமது திட்டங்கள் தங்கள் சுயநலத்திற்குக் கேடு என்பதாகவே கருதி, நம்மீது வெறுப்புக் கொள்கிறார்கள். மருந்து சாப்பிடுவதற்குக், குழந்தைகள் எதிர்ப்புக் காட்டுவது போன்றதாகவே இந்த எதிர்ப்பை, வெறுப்பை நான் கருதி, இலட்சியம் செய்யாமல் தொண்டாற்றி வருகிறேன். என் தொண்டுகள் வீணாகிவிட்டன என்று சொல்ல முடியாமல் நாடும், கொடுமைக்கும் மடமைக்கும் உள்ளான நமது சமுதாயமும் நல்ல வண்ணம் முன்னேறி வருகின்றன.

மிகவும் பிற்படுத்தப்பட்ட நமது சமுதாயம் கல்வி, நல் வாழ்வு, ஆட்சி உரிமை முதலியவற்றில் எண்ணிக்கைக்கு ஏற்ற, விகிதாச்சாரம் அடைய வேண்டும் என்கிற இலட்சியத்தைப் பெறும்படியான பணியை இந்த 85-ஆம் ஆண்டு வேலைத் திட்டமாகக் கொள்ளலாமென்று நினைத்துக் கொண்டு இருந்தேன். பார்ப்பான் தன்னுடைய அழிவுக்கே

இதன் வெற்றி காரணமாகிவிடும் என்று புரிந்துகொண்டு, தன்னுடைய எல்லாவற்றையுமே செலவழித்து, இதை நிறைவேறவிடாமல் செய்வான் என்பதும் தெரியுமாதலால், இது மிகக் கடினமான வேலைத் திட்டம் என்றும் கருதினேன்.

இப்போது பார்ப்பானுக்குப் புதிய பலமும் சேர்ந்து கொண்டது. அது என்னவென்றால் பார்ப்பானைப் போலவே நம் நாட்டு மைனாரிட்டிகளான முஸ்லீம்களையும், கிறிஸ்துவர்களையும் இப்போது பார்ப்பான் தன்னோடு சேர்த்துக் கொண்டான். ஆச்சாரியார் முஸ்லீம்களை மயக்கிடவே, காஷ்மீரைப் பாக்கிஸ்தானுடன் சேர்க்க வேண்டும் என்று கூறிவிட்டார். நேருவின் சோஷலிசக் கொள்கை, இஸ்லாம் கிறிஸ்துவ சமுதாயத்தினர்க்குக் கேடு தரும் என்று புரளி கிளப்பி, அந்தக் கிறிஸ்துவர்களையும் இணைத்துக் கொண்டார். இந்த முக்கூட்டுக் குழுவினரும் தாங்களே எதிலும் வெற்றியடைய முடியாது எனக் கண்டு, தங்கள் சுயநலத்துக்காக, நம் இனத்துக்குக் கேடு செய்து வாழ முடிவு செய்து, ஆச்சாரியாரை அண்டியிருக்கும் கண்ணீர்த் துளிகளை ஆதரித்துத்தான் காமராசரைத் தோல்வி அடையச் செய்ய வேண்டும் என்று சதித் திட்டம் ஏற்பாடு செய்து கொண்டு இருக்கிறார்கள்.

முஸ்லீம்—கிறிஸ்துவ சமுதாயத்துக்குத் தனித்தொகுதி கொடுத்து ஒதுக்கிவிட்டால் பெரும் அளவிற்கு அவர்கள் தொல்லை ஒழியும். அத்தோடு கூடவே, வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவம் என்னும் பேரால் தமிழர், பார்ப்பனர், முஸ்லீம், கிறிஸ்துவர் என்கின்ற தலைப்பில் அவரவர் சமுதாய எண்ணிக்கைப்படி அரசாங்கத்திலுள்ள எல்லாத் துறைகளிலும் பிரித்துவிட்டால் தமிழ் நாட்டை, தமிழ் மக்களைப் பிடித்த எல்லாக் கேடுகளும் ஒழிந்தே போகும்.

முதலாவதாக, நம்நாட்டு ஆட்சியில் நாம் அடைய வேண்டிய வகுப்பு உரிமைக் கிளர்ச்சி செய்வதை உடனடித் திட்டமாய்க் கொண்டிருக்கிறேன். நம் இயக்கத் தோழர்கள் ஆயத்தமாய் இருக்க வேண்டிக் கொள்ளுகிறேன்.''

சென்னை மாநகராட்சியில் லஞ்ச ஊழல் பெருகி விட்ட தாகவும், கண்ணீர்த்துளி உறுப்பினர்கள் சொத்துச் சேர்த்து விட்டதாகவும், 'லிங்க்' இதழில் செய்தி வந்திருப்ப தாக "விடுதலை" 20-9-63 அன்று குறிப்பிட்டுக் காட்டியது. ஞானசூரியன் என்ற பகுத்தறிவு நூலாசிரியரும் வடமொழி வல்லுநருமாகிய சுவாமி சிவானந்த சரஸ்வதி 23–9-63 அபுரோடு என்ற இடத்தில் காலமானார். 1963 செப்டம்பர் 24-ஆம் நாள் தமிழ் நாடு சட்டமன்றக் காங்கிரசின் தலைவ ராக மீஞ்சூர் பக்தவத்சலம் தேர்தெடுக்கப்பட்டார். இந்திரா காந்தி பார்வையாளராக அனுப்பப்பட்டிருந்தார். "வரவேற் கிறோம், பாராட்டுகிறோம்" என்று, அவர் முதல்வரானதை ஏற்றுக் கொண்டு, "விடுதலை" தலையங்கம் தீட்டியது. தஞ்சையில் தந்தை பெரியாரின் 85 ஆவது பிறந்த நாள் விழாவை முன்னிட்டு 5-10–63 அன்று பெரியாருக்கு 85 பொருள்கள், வீட்டு உபயோகத்திற்குப் பயன் படுமாறு வழங்கி, மகிழ்ச்சி கொண்டாடினர். சென்னை மாநகராட்சி யினரால் அமைக்கப்பட்ட காமராசரின் முழு உருவச்சிலை யைப் பிரதமர் ஜவகர்லால் நேரு அவர்கள் 9–10-63 அன்று திறந்து வைத்தார்கள். தி. மு. க. ஆட்சியில் இது நடை பெற்றது, ஒரு சிறப்பு!

மேலும், உயிரோடிருக்கும் யாருடைய சிலையையும் பிரதமர் அதுவரை திறந்ததில்லை; காமராசருக்குத் தனிச் சலுகைபோல வந்து நிறைவேற்றினார் என்பதும் சிறப் பிலும் சிறப்பு. காமராசர் அகில இந்தியக் காங்கிரசின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 'கிங்மேக்கர்' என்ற பட்டம் சூட்டப்பட்டதற்கிணங்க, அவர் பின்னாளில் அம்மாதிரிச் செயல்களில் ஈடுபட நேர்ந்தது. காமராசர், நாடெங்கும் கிருபானந்தவாரியாரின் கதாகாலட்சேபம் நடைபெற்றால் நல்லதென்று கருத்துத் தெரிவித்தார். 18–12-63 அன்று சென்னை தேனாம்பேட்டையில் பேசிய பெரியார், "காமராசருக்குப் புத்திகெட்டுவிட்டதா?" என்று கேட்டார். காமராசரே ஆயினும் பகுத்தறிவுப் பிரச்சாரத்துக்குத் தடையாயிருக்கப் பெரியார் ஒருப்பட

மாட்டார் • என்பது இதன் மூலம் நாட்டுக்கு விளக்க மாயிற்று! அமெரிக்க ஜனாதிபதியும், உலக மக்களால் பெரிதும் விரும்பப்பட்டவருமான, ஜான் எஃப் கென்னடி 22–11–63 அன்று சுட்டுக் கொல்லப்பட்டார்.

திராவிட முன்னேற்றக் கழகம் 13-10-63 அன்று, சென்னையில் இந்தி எதிர்ப்பு மாநாடு கூட்டி, எல்லா ஊர்களிலும் அரசியல் சட்டம் 17 வது மொழிப் பிரிவுப் பகுதிக்குப் பொது இடத்தில் தீ மூட்டுவது என்று முடிவு செய்தது. சென்னையில் அரசியல் சட்டத்தை எரிப் பதற்காக, அறிஞர் அண்ணா வந்த போது, வழி யிலேயே 5-11-63 அன்று கைது செய்யப்பட்டுத், தண்டிக்கப்பட்டார். மாவட்டந்தோறும், அறிவிக்கப் பட்ட தி, மு. க. முன்னணியினர், அரசியல் சட்ட எரிப்பில் ஈடுபட்டுக் கைதாயினர். மதுரை முக்கிய களமாயிருந்தது. மதுரை முத்து, தென்னரசு குழுவினர் ஓராண்டு சிறைத் தண்டனை பெற்றனர். கலைஞர் கருணாநிதி, என். வி. நடராசன், மன்னை நாராயண சாமி ஆகியோர்மீது, தூண்டிவிட்டதாக வழக்குத் தொடரப்பட்டது. அரசியல் சட்ட எரிப்பு மூலம் இந்தி எதிர்ப்புப் பணிக்குத் திராவிட முன்னேற்றக் கழகமும் தன் பங்கினைச் செலுத்திவிட்டது!

"தேர்தல் பேய், தாண்டவம் ஆடப்போகிறது" என்று 1964 புத்தாண்டுச் செய்தி போலப், பெரியார், வரவிருக்கும் மாநகராட்சி நகராட்சி மன்றத் தேர்தல்களை மனத்திற் கொண்டு, "விடுதலை"யில் தலையங்கம் தீட்டினார். புவனேஸ்வரில் காமராசர் தலைமையில் கூடிய அகில இந்தியக் காங்கிரஸ், சமதர்மத்திட்டத்தை அமுல்படுத்தும் தீர்மானங்களை நிறைவேற்றியது. ஆவடியில் உருவாக்கப் பெற்ற ஜனநாயக சோஷலிசம், தீவிரமாகக் காங்கிரசால் பிரச்சாரம் செய்யப்பட்டது. அதில் மேலும் முன்னேற்றப் பாதையின் மைல் கல்லாகவே, புவனேஸ்வர மாநாடு விளங்கக் கண்டு, பெரியார் வரவேற்றார். டி. டி. வீரப்பா தலைமையில், 6 ந் தேதி திருச்சியில் பேசும்போது, பெரியார் 'காங்கிரஸ் இப்போது மிகவும் மாறிவிட்டது. ஆவடி மாநாட்டிற்குப் பிறகு நில உச்சவரம்புச் சட்டம் நிறை

வேற்றப்பட்டது. கல்வித்துறையில் பின்தங்கிய வகுப்பினர் முன்னேறுவதற்கான நல்ல திட்டங்கள் மேற்கொள்ளப்படுகின்றன. சாதி ஒழிப்பிலும் காங்கிரஸ் இப்போது அக்கறை காட்டிவருகின்றது. ஆகவே நானும் காங்கிரஸின் தீர்மானங்களை ஆதரிக்கிறேன். இப்போது காங்கிரசின் சோஷலிசப் போக்கினால், கம்யூனிஸ்டுகளும் காங்கிரசை ஆதரிப்பதால், நான் இனி கம்யூனிஸ்டுகளை எதிர்க்க மாட்டேன். அதனால், வரவிருக்கும் நகர மன்றத்தேர்தல்களில், காங்கிரசை வெற்றி பெறச் செய்ய வேண்டும். காங்கிரசை பலப்படுத்தாமல் இருந்ததால்தான், இதுவரை எல்லாருக்கும் கல்வி, உடை, உணவு, வீடு, கிடைக்கவில்லை. இனி கிடைக்கும்!' என்றெல்லாம் கூறியதோடு, எழுதவும் செய்தார். அதே நேரத்தில், காங்கிரஸ் இந்திய ஒருமைப்பாடுபற்றிப் பேசிவருவதையும், பெரியார் கண்டித்து, இது நாணயமாகாது என்று இடித்துக் கூறவும் தவறவில்லை. 'திராவிடர் கழகம் காங்கிரசோடு இணைவது இயலாது! ஆதலால் எங்களைத் தவிரத் தனிப்பட்டவர்கள் யாரும் காங்கிரசில் சேருவதை நான் பெரிதும் வரவேற்கிறேன்' என்று பெரியார் பச்சைக்கொடி காண்பித்தார்!

தமிழ்தேசியக் கட்சி, தானும் நகரசபைத் தேர்தல்களில் போட்டியிடுவதாக அறிவித்தது! ஈரோடு நகரமன்றத் தலைவராயிருந்த ஆர். கே. வெங்கடசாமி நாயக்கர் 8-1-64 அன்று மரணமடைந்தார். இவரது மாமனார் கரிவரதசாமி நாயக்கர் "குடி அரசு" கேஷியராக இருந்து பணியாற்றி வந்தவர். பெரியார் படத்துடன் "விடுதலை" காலண்டர்கள் வெளி வந்து விற்பனை ஆயின. குடி அரசு, பகுத்தறிவுப் பதிப்பக வெளியீடுகள், திருச்சி பெரியார் மாளிகையில் கிடைக்கும் என்று விளம்பரப்படுத்தப்பட்டது. பம்பாய் 'இல்லுஸ்ட்ரேடட் வீக்லி' இதழில், கேள்வி ஒன்றுக்குப் பதில்ளிக்கும் வாய்ப்பில், பெரியார், "நமது முன்னேற்றத்திற்குத் தடை—இந்து மதம், பார்ப்பனர், ஜனநாயகம் ஆகியவைதான்!" என்று ஆணித்தரமாகக் கூறியிருந்தார், 26-1-64 அன்று! விருதுநகர் பொதுக் கூட்டத்தில் பெரியார்

காமராஜரால்தான் சமதர்ம ஆட்சியே மலர்கிறது' என்று பேசினார். பொங்கல் வாழ்த்துச் செய்தியில், காஃபி சாப்பிடும் பழக்கத்தை நிறுத்திப், பால், மோர் சாப்பிடும்படியும், இறைச்சியுணவை அதிகமாகச் சாப்பிடும்படியும் மக்களைக் கேட்டுக்கொண்டார். தனி நாடு எப்போது கேட்கப்பட்டது; ஏன் கேட்கப்பட்டது என்பதற்கான தமது விளக்கத்தினையும் பெரியார் அளிக்க முன் வந்தார். "தினமணி" போன்ற ஏடுகளில், தமிழகத்தில் கல்வித்தரம் குறைந்து போனதாகக் கூக்குரல் எழும்பியதால், பெரியார் அதை மறுத்துக் "கல்வித்தரம் குறைந்து போனதாகக் கூறுவது அறிவிலிகள் அல்லது பார்ப்பனக் கூலிகளின் குற்றச்சாட்டு!" என்று வெகுண்டெழுந்து விளம்பினார்.

ஆந்திர மாகாணத்தில், பஸ்ரூட்டுகள் வழங்கப்பட்டது சம்பந்தமாக, சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு ஒன்று, மாநில அரசுக்கு விரோதமாக வழங்கப்பட்டதால், முதல் மந்திரியாயிருந்த நீலம் சஞ்சீவரெட்டி, தமது பதவியை ராஜிநாமாச் செய்து, மேலிடத்துக்குக் கடிதம் வரைந்தார்... 'இந்த ராஜிநாமாவை மேலிடம் ஒப்புக்கொள்ளவேண்டாம். உச்சநீதி மன்றத்தீர்ப்புக்காக இப்படிச் செய்வதே தவறு' என்று பெரியார் வாதாடி, பிப்ரவரி 5, 6, நாட்களில் "விடுதலை"யில் தலையங்கம் எழுதினார்.

நகரசபைத் தேர்தல் பிரச்சாரம், சூடாகவும் சுவையாகவும் இருந்தது. 'காங்கிரஸ், சுதந்தரா, முஸ்லிம் லீக், தி. மு. க. என்னும் கண்ணீர்த்துளிகள் இவர்களுக்கு ஓட்டுப் போடும் ஓட்டர்களுக்கு, ஓட்டு ஒரு கேடா? என்று ஆவேசமாகக் கேட்டார் பெரியார். 19-2-64 அன்று திருவல்லிக்கேணி கடற்கரையில், அவரோடு டி. செங்கல்வராயன், கி. வீரமணி, சம்பத், கண்ணதாசன், பாலதண்டாயுதம் ஆகியோரும் பேசினர். "சுதேசமித்திரன்" ஏடு, சென்னை மாநகராட்சி நிர்வாகத்தைக் கிண்டல் செய்து வெளியிட்ட கேலிச் சித்திரங்கள், "விடுதலை"யில் எடுத்தாளப்பட்டன. அதேபோல "இந்தியன் எக்ஸ்பிரஸ்" ஏடு 'சென்னையில் இப்போது ஆளுங்கட்சியின் (தி. மு. க.) கூட்டணிக்கு ஒரு

ஓட்டு கூடத் தராதீர்கள்' என்று மக்களைக் கோரிய வேண்டு கோள், "விடுதலை"யிலும் இடம் பெற்றது. காமராசர் தேர்தல் பிரசாரத்தில் பம்பரமாய்ச் சுழன்றார்.

வடசென்னைப் பகுதியில், 18–2–64 அன்று பேசும்போது "திமுகவினர் தி.க. விலிருந்து பிரிந்து பத்து வருடங்களில் நல்ல 'பிசினஸ்' செய்து விட்டார்கள். இவர்களை நம்பா தீர்கள். இவர்களுக்குச் சொந்தத் தலைமை கூட இல்லை; இரவல் (ராஜாஜி) தான்! வேட்டைக்காரன் (எம்.ஜி.ஆர்.) வருவான். ஏமாந்துவிடாதீர்கள்!" என்று காமராஜ் பேசினார். சென்னை மாநகராட்சி, அரசாங்க வேலை வாய்ப்பு அலுவலக வாயிலாகத், தனக்கு ஊழியர்களை நியமிக்க மறுக்கிறது-என்று உள்ளாட்சி அமைச்சர் மஜீத் குற்றம் சுமத்தினார்.'இது மாநகராட்சியின் உரிமைகளில் தலையிடுவதாகாதா?' என்றது நிர்வாகத்திலிருந்த தி.மு.க.! வரிகள் அதிகமாகி விட்டன; ஊழலும் லஞ்சமும் பெருகிவிட்டன– என்று கட்டுப் பாடான பிரச்சாரத்தில் "விடுதலை"யும் ஈடுபட்டிருந்தது. சென்னையே பிரதான மையமாக இருந்தது. எனினும் தேர்தல் முடிவுகள் வேறு விதமாயிருந்தன! 23-2–64 பிற்பகல் 3-30 மணி வரையில் "விடுதலை" வெளியிட்ட முடிவுகளின்படிக் காங்கிரஸ் 16, கம்யூனிஸ்டு 1, சுயேச்சை 1 கண்ணீர்த்துளிகள் 7. முற்றும் முடிந்தபின், 25–2–64 அன்று வெளியானவாறு, காங்கிரஸ் 40, கண்ணீர்த்துளிகள் 49, முஸ்லிம் லீக் 5, கம்யூனிஸ்டு 1, சுயேச்சை 4. காங்கிரஸ் 86 வட்டங்களிலும் தி.மு.க. 83 வட்டங்களிலும் சென்னையில் போட்டியிட்டன. தி.மு.க. ஆட்சியே சென்னை மாநகராட்சியில் தொடர்ந்தது!

9-2–64 அன்று பாபநாசத்தில் அஞ்சல் ஊழியர் மாநில மாநாட்டில் பெரியார் பேசினார். "தொழிலாளர்களின் சம்பளப் பிரச்னை தீர ஒரே பரிகாரம், சமதர்மத் திட்டம் தான். அதிகாரிகளுக்கும் ஊழியர்களுக்குப் சம்பளத்தில் வேற்றுமை அதிகமாயிருத்தல் கூடாது. தொழிலாளர்களும் தமது அரசிடம் விசுவாசமாயிருக்க வேண்டும். அரசியல் கட்சிகளின் சுயலாபத் தூண்டுதலால், தொழிலாளர்கள்

ஸ்ட்ரைக் போராட்டத்தில் இறங்கக்கூடாது, என்றெல்லாம் அறிவுரை புகன்றார் பெரியார். லாரி, பஸ், கார் விபத்து களைத் தடுக்கவும் பெரியார் ஓர் ஆலோசனை கூறினார். அதாவது, ஒருமுறை விபத்துக்குள்ளான வண்டிகளின் ஓட்டு நருடைய லைசன்சையே பறிமுதல் செய்துவிட வேண்டும் என்பதுதான் அந்த யோசனை. மேலும், நம்முடைய இழி வான நிலைமைகளுக்குக் காரணமே, நம்மில் ஒருவருக் கொருவர் அபிமானமில்லை; இழிவைப் பற்றி நமக்குக் கவலையே யிருப்பதில்லை—என்று காரணங் கூறினார் பெரியார்.

டெல்லி உச்சநீதி மன்றம், பெரியாருக்குப் புதிய பணி ஒன்றைத் தர, உதவியாயிருந்து விட்டது! தமிழ் நாட்டின் அரசு நிறைவேற்றிய உச்சவரம்பு நிலச்சட்டம் செல்லா தென், நிலச்சொந்தக்காரர் சிலரது ஆட்சேபணையில் தீர்ப்பு வழங்கியது, 9-3-64 அன்று டெல்லி சுப்ரீம் கோர்ட்! அரசியல் சட்டம் 14-ஆவது பிரிவுக்கு இந்தச்சட்டம் முரணானதாம்! சிலிர்த்தெழுந்தார் பெரியார்! "தயாராகி விட்டோம்!" என்று சூளுரைத்தார்! "நில உச்சவரம்புச் சட்டம் செல்லாதாமே?" என்று கெக்கலித்தார். நீதிமன்ற அநீதிகளைப் பட்டியலிட்டு, நிரல்படக் காண்பித்தார். ஆர். எஸ். மலையப்பன் என்ற கலெக்டர் மீது குற்றம் சுமத்திய தீர்ப்பு; அழகர்சாமி அரசுவக்கீலாக நியமிக்கப்பட அக்ரகார எதிர்ப்பு; வகுப்புவாரிப் பிரதிநிதித்துவச் சட்டம் செல்லாதென்ற சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு; மைசூர் அரசின் பிற் படுத்தப் பட்டோர் இட ஒதுக்கீடு செல்லாதென்ற தீர்ப்பு— ஆந்திர பஸ்ரூட் வழக்கில் அரசுக்கு எதிரான தீர்ப்பு— ஆகியவை இந்தச் சந்தர்ப்பத்தில் பெரியாரால் அழகுடன் எடுத்துக் காட்டப்பட்ட பாங்கு, பாராட்டத்தக்கதா யிருந்தது.

14-3-64 அன்று கரூரில், சுப்ரீம் கோர்ட் நீதிப் போக்குக் கண்டன நாள் பொதுக் கூட்டம்! கே. எஸ். ராமசாமி தலைமையில், பெரியாருடன், வீரமணி, ஆனைமுத்து இரு வரும் பேசினர். 29-3-64 எல்லா ஊரிலும் கண்டன நாள்

கொண்டாடுமாறு, முதலில் அறிக்கை வெளியிட்டுப், பின்னர் ஏப்ரல் 19–ஆம் நாள் என்று மாற்றிப், பெரியார் 20-3-64 அன்று திருத்தம் வெளியிட்டார். மார்ச் 15 திருவாரூர், 17 தஞ்சை, 18 கடலூர் சிதம்பரம், 19 சேலம், 20 திருச்சி, 21 நெல்லை, 22 மதுரை, 23 கோவை, 24 நாகர்கோயில்—என்று தமிழ் நாட்டில் பரந்த அளவில் உடனடியாகச் சுற்றுப் பயணம் செய்து, பெரியார் இந்த நீதிப்போக்கினைக் கண்டித்து முழக்கமிட்டார்! மற்ற ஊர்களிலும் 19-4-64 அன்று பொதுக் கூட்டம் நடத்தி, உச்சநீதி மன்றத் தீர்ப்பின் பாதகத்தை விளக்கி, இந்தத் தீர்ப்பு நீதியற்றது; உள் எண்ணம் உடையது; வெறுக்கத் தக்கது என்று தீர்மானம் நிறைவேற்றி, சுப்ரீம் கோர்ட்டின் தலைமை நீதிபதி, ஜனாதிபதி, பிரதமர், "விடுதலை" அலுவலகம் எல்லாருக்கும் அனுப்ப வேண்டும் என்று அறிவித்தார் பெரியார். "தமிழ் நாட்டிலுள்ள சட்டமன்றம் நிறைவேற்றிய, மந்திரி சபை முடிவான, இந்த உச்சவரம்புச் சட்டத்தை, ஓர் அன்னக்காவடிப் பார்ப்பான் மகன், யாரையோ கெஞ்சி, எப்படியோ பதவிக்கு வந்தவன், மாற்றி விடுவதா? ஜனாதிபதியை, கவர்னரை, பிரதமரை, மந்திரிகளைக் கண்டிக்கிற போது—இந்த ஜட்ஜ்களை நாங்கள் கண்டிக்கக் கூடாதா? பிறகு என்ன சுதந்திரம் வேண்டியிருக்கிறது நமக்கு? எனக்கு உள்ள பிரச்சினையெல்லாம் பார்ப்பான் ஜட்ஜாக வரக் கூடாது என்பது தான்! இந்த சுப்ரீம் கோர்ட் ஏற்பட்ட 1950 முதல் இந்த 1964 வரை ஒரு தமிழன் அங்கு ஜட்ஜாக நியமிக்கப் பட்டதுண்டா?"—என்று, பதில் பகர முடியாத கேள்விகளைக், கணைகளாகத் தொடுத்தார் பெரியார்!

'கல்கி' இதழில், 'நீதிமன்றத்தைப் பெரியார் மதிப்பதில்லை. சட்டத்துக்குத் தகுந்தபடி அரசியல் சாசனம் வளைந்து கொடுப்பதா? இல்லாவிடில் அரசியல் சாசனத்துக்குத் திருத்தம் தருவதா?' என்று கேட்டதற்கும் பெரியார் சொல்லி விட்டார்—'நீதியை மதிக்கிறேன். ஆனால் நீதி மன்றத்தை மதிக்க வேண்டிய கட்டாயம் எனக்கில்லை' என்று! 17–வது திருத்தம் கொண்டு வந்து நாடாளுமன்றத்

தில் நிறைவேற்றி, உச்சவரம்புச் சட்டம் செல்லுபடியாக்கப் படும் என்று, அரசுத் தரப்பில் நம்பிக்கை நல்கப் பட்டது.

புவனேஸ்வர் மாநாட்டுக்குத் தலைமை தாங்கிய பின், டெல்லி சென்ற காமராசருக்குத் தலைநகரம் சிறப்பு மிக்க வரவேற்பு வழங்கிற்று. சாரட்டில் அமர்த்தி, ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். சத்தியம்—நீதி—நேர்மையின் சின்னமாவார் காமராஜ் என்று டெல்லிப் பிரதேசக் காங்கிரஸ் தலைவர் வர்ணித்தார். சென்னை திரும்பிய காமராசர், 29–3–64 அன்று பெரியார் திடலில் நடிகவேள் எம்.ஆர். ராதாவுக்குப் புனித ஆடை போர்த்தினார். அந்த விழாவில் சம்பத், கண்ணதாசன், அனந்தநாயகி, சின்ன அண்ணாமலை, உமாபதி, ஜெமினி கணேசன், திருவாரூர் தங்கராசு, எஸ்.டி. சுந்தரம் ஆகியோரும் பங்கு பெற்றனர்.

சேலம் மாவட்டத்தில், 7–3–64 அன்று, இடைப்பாடியில், பெரியார் பேசும் போது, ராஜா ராம்மோகன் ராயின் சமுதாய சீர்திருத்தக் கருத்துகளுக்கு ஆங்கிலேயர் ஆதரவு தந்ததால், சநாதனிகள் ராணுவத்தாரைத் தூண்டிவிட்டு, அதற்குச் சிப்பாய்க் கலகம் என்று நல்ல காரணங்காட்டி, நல்ல பெயரைச் சுதந்தரத்தின் பேரால் உண்டாக்கினர். அவரது முற்போக்கான பிரம்ம சமாஜத்துக்குப் போட்டி யாகப், பழைமை வாதிகள் கூடி, ஆரிய சமாஜம் என்று ஒரு அமைப்பை ஏற்படுத்தி விட்டார்கள். சாதாரண மணி யடிக்கும் பூசாரிப் பார்ப்பானை, இராமகிருஷ்ண பரம ஹம்ஸர் என்று உயர்த்திவிட்டு, ஒரு முட்டாள் பார்ப்பன ரல்லாத பட்டதாரி வாலிபன் விவேகானந்தனை, அவனுக்குச் சீடனாக்கி, அமெரிக்காவுக்கும் அனுப்பினார்கள் பார்ப்பனர்கள்! ஒருவெள்ளைக்கார மாது அன்னிபெசண்ட். அந்த அம்மாளைக் கொண்டு, பிரம்ம ஞானசங்கம் ஏற்படுத் தினார்கள். சாதாரண ஆத்மா, தங்களுக்கு அனுகூலமாக இருந்த வரையில் அவரை மகாத்மா ஆக்கினார்கள்; பிறகு தீர்த்துக் கட்டினார்கள்—என்று, இரண்டு நூற்றாண்டுகளில் நிகழ்ந்த, வரலாற்று முக்கியத்துவம் நிறைந்த, சில நிகழ்ச்சி களை நினைவு கூர்ந்தார் பெரியார்!

கேரள மாநிலத்தில், மருத்துவம், பொறியியல் போன்ற தொழிற் கல்லூரிகளின் இட ஒதுக்கீட்டில், பிற்படுத்தப் பட்டோருக்குச் சலுகை காட்டியது செல்லாது என, அரசு உத்தரவையே ரத்துச் செய்தார் ஓர் அய்க்கோர்ட் பார்ப்பன நீதிபதி. அரசு டிவிஷன் பெஞ்ச் அப்பீலுக்குச் சென்ற போது, அதே அய்க்கோர்ட்டின் பார்ப்பனரல்லாத நீதிபதி இருவர், அரசு ஆணை செல்லும் என்று தீர்ப்புக் கூறி னார்கள். ஒரே அய்க்கோர்ட்டில் ஆளைப் பொறுத்து நீதி மாறுபடும் விசித்திரத்தை, "இதோ கேரளா உதாரணம்" என்ற தலையங்கத்தின் வாயிலாக, 8-4-64 "விடுதலை" எடுத்துக் காட்டியது. அன்றே, சுப்ரீம் கோர்ட் கண்டன நாள் கொண்டாடும் போது, நிறைவேற்றப்படும் தீர்மான வடிவம், "விடுதலை"யில் ஒரு நமூனா அமைப்பில், விளக்க மாகத் தரப்பட்டுமிருந்தது.

யானை வேட்டைக்குத்தானே நாம் செல்கிறோம் என்பதால், வழியில் எதிர்ப்படும் நரிகளை விட்டு வைப்ப தில்லை பெரியார்; ஆதரவின்றிக் கிடக்கும் ஆடுகளைத் தூக்கி விடவும் தவறுவதில்லை! அண்ணாமலை யூனிவர் சிட்டியில் பார்ப்பனர் ஆதிக்கம் என்ற தலையங்கத்தில் 6-4-64 அன்று, சர் சி. பி. ராமசாமி அய்யரின் ஆணவ அட்ட காசங்களைக் குறிப்பிட்டுக் 'காமராசர் போன பின்பு, பார்ப்பனர்க்குத் தைரியமும் துணிவும் ஏற்பட்டுவிட்டது. செட்டி நாட்டரசர் இதில் உடனே தலையிட வேண்டும். பார்ப்பனரல்லா மாணாக்கர்க்கு நீதி கிடைக்க வழி செய்ய வேண்டும்' என எழுதினார் பெரியார். "மாயூரம் வட்ட தி. க. தலைவர் சவுரிராசன், திருவிளையாட்டம் என்ற தம் ஊரில் தமது சொத்தெல்லாம் செலவழித்து நடத்தி வரும் உயர்நிலைப் பள்ளியை நானே பார்த்திருக்கிறேன். அதைச் சீர்திருத்த, நன்கொடையாக ரூ. 200/- இப்போது நானும் தந்திருக்கிறேன். தோழர்களும் உதவிட வேண்டுகிறேன்" என்று பெரியார் கனிவுரை நல்கினார்; 11-4-64 "விடுதலை" யில். வில்லிவாக்கத்தில் ஏப்ரல் 11-ஆம் நாள், குன்றக்குடி அடிகளார் தலைமையில் நடைபெற்ற சாதி ஒழிப்பு

மாநாட்டை சம்பத் திறந்து வைத்தார். இரவு, குலதெய்வம் ராஜகோபால் 'நாலுந் தெரிந்தவன்' நாடகம் நடத்தினார். மறுநாள் திராவிடர் கழக மாநாட்டையொட்டித், தலைவரான பெரியாரை ஊர்வலமாக அழைத்து வந்தனர். வீரமணி திறப்பாளர், இரவு கண்ணதாசனின் 'கோணிப் புளுகன் கோயபெல்ஸ்' நாடகம்!

அருப்புக்கோட்டை இடைத்தேர்தலில் பேசிய ராஜாஜி "காங்கிரஸ்காரர்களுக்கு நல்ல அடி கொடுக்கவேண்டும். அதுவும் செருப்படிபோல் விழவேண்டும்" என்று பேசியிருந்தார். "இவருக்கு என்ன, பைத்தியம் பிடித்துள்ளதா?" என்று கேட்டு, 'செங்கான் கடையில் ஆச்சாரியார்' எனும் மகுடமிட்ட தலையங்கத்தை, 14-4-64 "விடுதலை" பூண்டிருந்தது.

மிக்க எழுச்சியுடன் 50,000க்கும் மேற்பட்ட மக்கள் திருவல்லிக்கேணி கடற்கரையில் 19-ந்தேதி குழுமியிருந்தனர். 'சுப்ரீம்கோர்ட், அய்க்கோர்ட் ஆகிய இரண்டுமே அரசு நிர்வாகத்தில் எப்போதும் தலையிடாதவாறு, இனி வரும் 17-ஆவது திருத்தம் அமைந்து, அரசியல் சட்டத்தில் இடம்பெற வேண்டும்' என்று பெரியார் அழுத்தமாக உரைத்தார். இந்தச் சொற்பொழிவில் 'பார்ப்பனர் எதற்கும் துணிந்தவர்! எவ்வளவு உயரப் பறந்தாலும் ஊர்க் குருவி தான் பருந்தாகாது!' என்ற உண்மை ஒன்றை—மர்மமான விஷயம் ஒன்றைப்-பெரியார் திடீரென்று அம்பலப்படுத்தி, மக்களை அதிசயக் கடலில் அமிழ்த்தினார். சென்னை உயர் நீதி மன்றத் தலைமை நீதிபதிப் பார்ப்பனர், பொய்யான வயதைக் கொடுத்துப், பதவி நீடிப்புப் பெற்றுள்ள உண்மையே அது! அவர் கொடுத்துள்ள வயதின்படி, அவர் தம்பியைவிட அவர் இளையவராகிறார்! இந்தக் கூட்டத்தில் பெரியார் இரு குழந்தைகளுக்குக் காமராஜ் என்று பெயர் சூட்டினார்! 19-4-64 நாடெங்கும் சுப்ரீம் கோர்ட் நீதிப் போக்குக் கண்டன நாள் கொண்டாடிய விவரம், அடுத்த ஒரு மாதம் வரையில் தொடர்ந்து "விடுதலை"

ஏட்டில் வெளிவந்தது! தனிப்பட்டோர் பலரும் எதிர்த்துக் குரலெழுப்பிய பட்டியலும் இடம்பெற்று வந்தது.

தமது 74-ஆவது பிறந்த நாள் கொண்டாட்டத்திற்கு ஏழு நாட்களே எஞ்சியிருந்த நிலையில் ஏப்ரல் 22-ஆம் நாள் புதுவைக்குயில் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்—கனகசுப்பு ரத்தினக் கவிஞர் கோமான்–இயற்கை எய்தினார். காலை 8-30 மணிக்கு சென்னைப் பொது மருத்துவ மனையிலிருந்து, அன்னாரது சடலம் புதுவைக்குக் கொண்டு செல்லப்பட்டு, மகனார் மன்னர் :மன்னனால் எரியூட்டப் பெற்றது. சாகா இலக்கியத்துச் சகாப்தம் படைத்த புதுமைப் பாவேந்த னுக்குப் புதுவை அரசு பெருமையூட்டிற்று, பின்னாளில்!

இராமாயணக் குறிப்புகள் என்ற தலைப்புடன் ஏப்ரல் முதல் அக்டோபர் திங்கள் வரை நாள்தோறும் வெவ்வேறு விவரங்களுடன், வான்மீகன், கம்பன் புரட்டுகள் "விடுதலை" முதல் பக்கத்தில், பெட்டிச் செய்தியாக, 178 துணுக்குகள் பிரசுரமாயின. பின்னர் இது நூலாகவே தொகுக்கப் பெற்றது. திருச்சியிலுள்ள சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம் நடத்தும் பல்வேறு பள்ளிகளுக்கான விளம் பரங்கள் தினமும் "விடுதலை"யில் இடம்பெற்று வந்தன. கம்யூனிஸ்டுக் கட்சி இந்தியாவில் இரண்டாகப் பிளந்தது. பார்ப்பனத் தலைமையுடன் இடதுசாரிக் கட்சி உதயமாகி விட்டது. தமிழ் தேசியக் கட்சியின் சார்பில் 'தமிழ்ச் செய்தி' என்ற தினசரிப் பத்திரிகை ஒன்றினை சம்பத் தொடங் கினார். இதன் ஆரம்பவிழா சென்னை பெரியார் திடல் ராதா மன்றத்தில், ஏ. எல். சீனிவாசன் தலைமையில் காமராசரால் நிகழ்த்தப் பெற்றது. மணலி கந்தசாமி, உமாபதி, சின்ன அண்ணாமலை, பாலதண்டாயுதம், ஜெய காந்தன், கே. ராமதாஸ் ஆகியோர் வாழ்த்துரைத்தவர்கள். மே 24-ஆம் நாள் இது தொடங்கப் பெற்றது.

பெரிய நகரங்களில் மட்டுமே மாநாடு நடத்தி வந்த மரபினை மாற்றத்தான் பெரியார் வில்லிவாக்கத்தில் இரு மாநாடுகள் நடத்திக் காட்டினார். இதுகூடச் சென்னை மாநகருக்கு அருகே இருக்கிறது! ஆனால் தஞ்சை மாவட்

டத்தில் திருவாரூருக்கும் திருத்துறைப்பூண்டிக்கும் இடையிலுள்ள மிகச் சிறிய கிராமமாகிய கச்சணம் என்ற ஊரில், 26-4-64 அன்று, 50 காசு கட்டணத்துடன், திராவிடர் கழக மாநாட்டை நடத்திக் காட்டினார் பெரியார். வரவேற்புக் குழுத் தலைவராக வி. கணபதியும் செயலாளராக சு. சாந்தனும் இருந்தனர். மே மாதத்தில் பெரியார் சுற்றுப்பயணம் செல்ல வில்லை. 24-ந்தேதியன்றுதான் தொடங்கினார். இடையில் திருச்சியில் புதிய பணி ஒன்றைத் துவக்கினார்.

'சுயமரியாதை இயக்கத் தோழர்களுக்கு ஈ.வெ.ரா. அறிவிப்பு' என ஒன்று, மே ஏழாம் நாள் "விடுதலை"யில் காணப்பட்டது. "திருச்சியில் வே. ஆனைமுத்து நிர்வாகியாக இருந்து 30 நாள் பயிற்சி தந்து, பகுத்தறிவுப்பிரச்சாரப் படை ஒன்றினை உருவாக்கப்படும்; அறிவு, ஒழுக்கம், நாணயம் உள்ள தோழர்கள் இதில் சேர்ந்து பயிற்சி பெறலாம்" என்று பெரியார் வேண்டுகோள் விடுத்தார். இது பின்னர் ஜூன் திங்கள் 15.ஆம் நாளிலிருந்து செயல் பட்டது.

இதற்கிடையில் காரைக்கால் பகுதியிலுள்ள அம்பகரத்தூர் என்ற சிற்றூரில் காளிகோயில் ஒன்றில் எருமைக்கடா பலி கொடுக்கும் வழக்கம் இன்றும் நடைபெற்று வருவதைக் காரை சி.மு. சிவம் போன்ற தோழர்கள் சுட்டிக்காட்டி, இந்த பலியைத் தடுக்கக் கழகத்தின் சார்பில் முயற்சி எடுக்க விரும்பினர். அதனால் 21-ந்தேதியன்று மூடநம்பிக்கைத் தடுப்பு பற்றிப் பெரியார் அறிக்கை வெளிவந்து விட்டது. சென்னையிலிருந்து வீரமணியும், ஜீவபந்து டி.எஸ். ஸ்ரீபால் அவர்களும் காரைக்கால் பகுதிக்குச் சென்றனர். பிரச்சினை வலிவு பெற்று விட்டது. கழகத் தோழர்கள் அங்கே குவிந்தனர். காரைக்கால் நிர்வாக அதிகாரி முன் வந்து, இதை அடியோடு நிறுத்துவதற்கு இப்போது காலம் போதாது; இந்த ஆண்டு ஒரே ஒரு எருமைக்கடா பலியோடு நிறுத்துகிறோம். அடுத்தஆண்டு முதல் அடியோடு பலியை ஒழித்து விடுகிறோம் என உறுதி கூறவே, 26-ந்தேதி, அந்த விழா சிறப்புக்குன்றி, நடந்து முடிந்தது.

ஆனால் 1964 மே 27–ஆம் நாள் ஆசிய ஜோதியே அணைந்து போய்விட்டது. பிற்பகல் 2.30மணிக்குப் பண்டித ஜவகர்லால் நேரு அவர்கள் காலமாகி விட்டார்கள். செய்தி கேட்ட மனித குலமே கதறியழுதது. பூவும் (ரோஜா). அழுதது. புவியே அழுதது. தர்மபுரி மாவட்டத்திலிருந்த பெரியார், தமது தாள முடியாத துயரச் செய்தியைத் தொலைபேசி வழியே தெரிவிக்கச் செய்தார்.சமதர்மச்சிற்பி நேருவின் மறைவால் காங்கிரசுக்குத் தலைமையே போய் விட்டது. காமராசர் இருக்கிறார் என்றாலும், நேருவைப் போல், உலகம் சுற்றிய மேதாவிலாசம் குறைவுதானே? என்று பெரியார் அங்கலாய்த்தார்.

சென்னை மத்திய சிறையில் தண்டனை அனுபவித்து வந்த அண்ணாவைக் கலைஞர் சந்தித்துச் செய்தி கூறவே, அவரும் மனமுடைந்து, கலைஞர் வாயிலாகத் தமது எல்லையற்ற துயரை இயம்பினார் அண்ணா. பெரியார், சேலத்தில் கழகச் சார்பில் நடந்த பொதுக்கூட்டத்தில், 29-5-64 அன்று, தமது அனுதாப உரையைக் கண்ணீரோடு கலந்துரைத்தார். "கேட்டவுடன் பெரும் அதிர்ச்சியும் தாள முடியாத துக்கமும் அடைந்தேன். பிரதமர் நேரு அவர்களை இழந்ததன் மூலம் நாட்டில் பரிகரிக்க முடியாத ஒரு நிலை ஏற்பட்டுள்ளது. அவர் விட்டுச் சென்ற காரியம் நிறைவேறுமா என்று எண்ணிப் பார்க்கவே வேதனையாக இருக்கிறது. இனிநான் என்ன செய்வேன்? நமது தொண்டுதான் அவரும் செய்கிறார் என்று கண்ணை மூடிக்கொண்டு அவரது கட்சியை ஆதரித்தேன். பொது மக்களாகிய நீங்கள் இனியும் காங்கிரசை ஆதரித்து, அவர் விட்டுச் சென்ற காரியம் வெற்றிபெறச் செய்ய வேண்டும்." என்றார் பெரியார். நேரு மறைவில்கூட ஆகாசவாணி, அக்கிரகார வாணியாகப் பணியாற்றியது. நேருவைக் கேலி செய்து பேசிய ராஜாஜிக்குதான் வானொலியில் இரங்கலுரையாற்றும் வாய்ப்புத் தரப்பட்டது! நேருவின் உடலுக்குப் பேரன் சஞ்சய்யா எரியூட்டினார். இடைக்காலப் பிரதமராக நந்தா பொறுப்பேற்றார். நேருவின் உயிலைச்

சகோதரி விஜயலட்சுமி பண்டிட் நாட்டுக்கு அறிவித்தார். மூடநம்பிக்கையற்ற பகுத்தறிவு வாதியான நேரு, "நான் இயற்கையை ரசிப்பவன் ஆதலால் கையளவு சாம்பலைக் கங்கையில் கரைக்கவும். மிகுதியை உழவர்உழைக்கும் வயலில் போடவும். எனக்கு எத்தகைய மதச் சடங்குகளிலும் நம்பிக்கை கிடையாது" என்றார். 31-5-64 சென்னை கடற்கரையில் நடத்திய அனுதாபக் கூட்டத்தில் பெரியார், "நேரு பகுத்தறிவு வாதி. புத்தருக்குப் பின் தோன்றிய தத்துவ ஞானி" என்று புகழ்ந்தார். "விடுதலை"யில் 'பகுத்தறிவுவாதி நேரு' என்ற தலைப்பில் தினமும் ஒரு பெட்டிக் செய்தி, அவரது கருத்துகளைத் தாங்கிப் பல நாள் வரிசைபட வெளியிடப்பட்டு வந்தது. நில உச்சவரம்புச் சட்டத்தைச் செல்லுபடியாக்கிட, அரசியல் சட்டத் திருத்தம், 19-வது திருத்த மசோதாவை, நாடாளுமன்றம் நிறைவேற்றித் தந்தது.

"விடுதலை" ஏட்டின் வெள்ளிவிழா 6-6-64 அன்று, ஓராண்டுக்குள் 5,000 சந்தாக்களாவது சேர்க்கப்பட்டால் தான், அதில் ஏற்பட்டுவரும் நட்டத்தைச் சரிகட்ட முடியும் என்றும், அதிலும் 2,500 சந்தா அடுத்த 2 மாதத்திற்குள் தேவை என்றும், வீரமணியின் தொண்டுகளைச்சிறப்பித்தும் பெரியார் எழுதினார். அரசு விளம்பரங்களோ, பிற விளம்பரங்களோ "விடுதலை"யில் வருவதில்லை. மாதம் இரண்டொரு சினிமா விளம்பரங்கள் வந்தன. லால்குடி வட்டம் பெருவளப்பூரில், பெரியாரின் எடைக்குச் சரியாக மிளகாய் அன்பளிப்பாக வழங்கினார்கள், 10-ஆம் தேதி! அடுத்து, 13, 14 நாட்களில், திருவையாறு சாதி ஒழிப்பு, திராவிடர் கழக மாநாடுகள்! பெரியார் சிறப்புரையாற்றுகையில், "தோழர்கள் செருப்பையும், துடைப்பத்தையும் கையில் எடுத்துக் கொண்டு, ஊரூராய்ச் சென்று, வீதியில் அவைகளை அடித்துக்கொண்டே 'சாதியே ஒழிந்து போ!' என்று சொல்ல வேண்டும்—" என்று கூறினார். ஆத்திரம் கொப்பளிக்க அவ்வாறு கூறினரே ஒழியப், பிற்பாடு, அதற்கான திட்டமோ, நாளோ பெரியார் குறிப்பிடவில்லை.

காமராசர், சங்கரநயினார்கோயிலில் பேசும்போது, 12–6–67 அன்று, 1967-ல் என்ன, 1977—ல் கூடக் காங்கிரசை அசைக்க முடியாது என்றார். பெரியார் அதேநாளில் கீழ்வேளூரில் 'நாத்திகஆட்சியே சமதர்மம் அளிக்கும்' என்று பேசினார். ''விடுதலை'' சந்தா பற்றி மீண்டும் நினைவூட்டிப் பெரியார் விடுத்த வேண்டுகோள், ''விடுதலை''யில் பெட்டிச் செய்தியாக வந்தது. பெரியார் திருச்சியில் தங்கிப் பிரச்சாரப் பயிற்சி வகுப்புகளை நடத்த இருப்பதால், மே 17க்குப் பிறகு அந்த வகுப்புகள் முடியும் வரையில் தோழர்கள் பெரியாரைக் கூட்டங்களுக்கு அழைக்காதிருக்குமாறு புலவர் கோ. இமயவரம்பன் அறிவித்தார். புதுவையில் 17–6–64 அன்று நடந்த பாரதிதாசன் இரங்கல் கூட்டத்தில் நேரு, பாரதிதாசன் இருவர் மறைவுக்குமே பெரியார் வருந்தினார். அடுத்த நாட்களில் பெரியார் 10—7—64 வரை திருச்சியில் தங்கியிருந்தார். ஜூலை மாதத்தில் சுற்றுப் பயணம் குறைவு தான். ஆனால் ஆகஸ்டில் அதை நிறைவு செய்து விட்டார்.

காமராசரின் 62–ஆவது பிறந்த நாளான ஜூலை 15–ல், ''விடுதலை'' பிறந்த நாள் வாழ்த்துத் தெரிவித்தது; ''காமராஜரும் பார்ப்பன வீழ்ச்சியும்'' என்று, அடுத்துத் தலையங்கமும் தீட்டியது. 20-ந் தேதி காமராஜர் சென்னைக்கு வந்தபோது, பிரம்மாண்டமான வரவேற்பு வைபவங்கள், பார்த்தோரைப் பிரமிக்கச் செய்தன! ஊர்வலத்தில் 5 லட்சம் மக்கள், 1,000 அலங்கார டிரக்குகள், 500 பஸ்கள்! கடற்கரைப் பொதுக் கூட்டத்தில் 15 லட்சம் மக்கள்! அன்று சென்னைக்கு வருகை தந்த பெரியாரும், மணியம்மையாரும் காலையில் காமராஜர் இல்லம் சென்று, நேரில் வாழ்த்துக் கூறினர். வெளியில் வந்து, அழைத்துச் சென்று, அமர்த்தி, உரையாடி, வாயில் வரை வந்து, வழியனுப்பி வைத்தார் காமராசர். அன்று காலை 10–30மணிக்கு, சென்னைப் பொது மருத்துவ மனையில் சிகிச்சை பெற்று வந்த, முதலமைச்சர் பக்தவத்சலத்தையும், பெரியாரும் மணியம்மையாரும் கண்டு, நலம் விசாரித்தனர். காமராசர் பிறந்த நாள் விசேடங்களை நேரில் கண்ணுற்ற பெரியார்

இது பெரிய தேசிய விழா,போலிருந்தது என்றே குறிப்பிட்டிருந்தார். காமராசர் படத்துடன், அவரது "சமதர்மம் பற்றிய பொன்மொழிகள்", "விடுதலை"யில், கட்டத்துக்குள், தொடர்ந்து 15 நாட்கள் வரை பிரசுரமாயின.

ஆங்கிலத்தில் மெட்ராஸ் என்றும், தமிழில் தமிழ்நாடு என்றும் வழங்குவதுதான் அரசின் முடிவு என்று அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் 24-7-64-ல் அறிவித்தார்.

"எதிரிகளால் குறை சொல்ல முடியாத அரசாங்கம் காங்கிரஸ் அரசாங்கம். இதனிடம் சமதர்மத் திட்டம் இருப்பதால் காங்கிரசில் மக்கள் சேருவதும் இதை ஆதரிப்பதும் தவறல்ல" என்று ஜூலை 19 முதல் 21 வரை காங்கிரஸ் வேட்பாளர்களை ஆதரித்துப் பல கூட்டங்களில், காரைக்கால் பகுதிக்குள், பெரியார் சொற்பொழி வாற்றினார். சென்னையை அடுத்த ஆலந்தூரில் 23-ம் நாளன்று கடவுள் ஒழிப்பு மாநாடு, புதிதாக நடைபெற்றது; காஞ்சி சி.பி. ராசமாணிக்கம் தலைமையில், வீரமணி திறந்து வைத்தார். பெரியார், எம். ஆர். ராதா, தங்கராசு கலந்து கொண்டனர். தீர்மானங்களை விளக்கிப் பெரியாரே "விடுதலை"யில் எழுதினார். செப்டம்பர் 1-ம் நாள் "கேரவன்" இதழ் காமராசரைப் பாராட்டி எழுதிய கட்டுரையில், பெரியாரின் பணியினையும் சிறப்பித்திருந்தது!

19-4-1961-ல் உதயமான சம்பத்தின் தமிழ் தேசியக் கட்சி 6-9-1964 அன்று அஸ்தமனமாகி விட்டது; அதாவது காங்கிரசுடன் இணைந்து விட்டது. பெரியார் திடலில் காலை 9 மணிக்கு சம்பத், கண்ணதாசன், எஸ். சி. சி. அந்தோணிப் பிள்ளை ஆகியோர் காமராசரிடம் தங்கள் தமிழ் தேசியக் கட்சியை ஒப்படைக்கும் விழா. மாலையில், கடற்கரையில் நடைபெற்ற காங்கிரஸ் கூட்டத்திற்கு, இவர்கள் ஊர்வலமாகச் சென்று, அங்கு வரவேற்கப் பட்டார்கள். அதிலிருந்து, 1967 வரை சம்பத், காங்கிரசின் மிகப்பெரிய பிரச்சார பீரங்கியாக முழங்கி வந்தார்;ஒருநாள் கூட ஓய்வின்றிச் சுற்றுப் பயணம் செய்தார். த. தே. க. காங்கிரசுடன் இணைந்த செய்தி "விடுதலை"யில் விளம்பர

மாக வெளியிடப் பட்டது. அந்த ஆண்டு "விடுதலை", பெரியார் 86-வது பிறந்த நாள் மலர், 200 பக்கங்களுடன், ஒரு ரூபாய் விலையில், சிறப்பாகக் கொணரப் பட்டது. 10-9-64 அன்று கேரளாவில், தாழ்த்தப்பட்டவரும் காங்கிரஸ் முதலமைச்சருமான சங்கர் கவிழ்க்கப் பட்டு, ஜனாதிபதி ஆட்சி பிரகடனப் படுத்தப் பட்டது.

17-9-64 தந்தை பெரியார், 86-ஆம் ஆண்டில் அடி எடுத்து வைக்கும் நாள், திருச்சியிலுள்ள பெரியார் பயிற்சிக் கல்லூரிகளின் நிறுவனர் நாளில் பெரியாருடன் 1,000 பேர் விருந்துண்டனர்; சம்பத், வீரமணி சொற்பொழிவாற்றினர். திருச்சியில் கல்லூரி ஒன்றை நிறுவிட, 5 லட்சம் ரூபாய் வழங்கியருளினார் வள்ளல் ஈ.வெ.ரா. பெரியார். வழக்கம் போலப் பிறந்த நாள் செய்தியும் ஈந்திடத் தவறினாரல்லர்:- "நான் இப்புவியில் 85 ஆண்டுகள் வாழ்ந்து, 86-வது ஆண்டில் புகுகிறேன். என்ன செய்து விட்டாய்? என்று நீங்கள் கேட்கலாம். அதற்குப் பதில், நீங்களே தான் தேடிப் பார்த்துத் தெரிந்து கொள்ள வேண்டும். ஓய்வு ஒழிச்சல் இன்றி, கழிப்பிணித்தன்மை இன்றி, உழைத்தேன். திருட்டு புரட்டு மோசடி இன்றி வெள்ளையாய் நடந்துகொண்டேன். என் நடத்தையில் பல தவறுதல்கள் தகாத காரியங்கள் ஏற் பட்டு இருக்கலாம். என்னையே நீதிபதியாகக் கொண்டு, எனக்குச் சரியென்று பட்டதையும், தேவை என்று பட்டதை யும், செய்தேன். அதுவும், ஒளிவு மறைவு இல்லாமல் செய்து வந்தேன். வாழ்வில், செயலில் நான் பல ஏமாற்றம் அடைந்து இருக்கலாம். ஆனாலும், அதையே ஒரு படிப் பினையாகக் கொண்டு, முயற்சியில் சளைக்காமல், நடந்து கொண்டுதான் வருகிறேன். நான் ஒரு அநாமதேய வாழ்வு வாழவில்லை என்பதும், அநாவசியமான மனிதனாய் இருந்து வரவில்லை என்பதும், எனக்கு ஒரு ஆறுதல் தரத் தக்க விஷயம். நான் 1,034 பிறை கண்டவன்; அதனால் முழு வாழ்நாள் வாழ்ந்து விட்டேன்!

எனவே, கிரமப்படிப் பார்த்தால், உங்களிடம் நான் பயணம் சொல்லிக் கொள்ள வேண்டியதுதான், எனது

நேர்மையான கடன்! அதற்கேற்ப எனக்குப் புத்திக் கோளாறு ஒன்றும் இல்லை என்று நான் கருதினாலும், ஞாபகக் கோளாறு அதிகமாகிவிட்டது. பேசப் பேசப், பேச்சுத் தொடர் மறந்து போகிறது. வெகு கெட்டிக்காரத் தனமாய்ச் சமாளித்துக்கொள்கிறேன். காது 100க்கு 40பங்கு சப்தம் கேட்பதில்லை. (செவிடு) கண்கள் கண்ணாடி போட்டாலும் 10 அல்லது 20 வரி (அதுவும் மைக்கா 12 பாயிண்ட்டு)க்கு மேல் படிக்க முடிவதில்லை; கண்களில் கண்ணீர் வந்து மறைத்து விடுகிறது. நடை 10 எட்டு, அதாவது, 15 அடி தூரத்துக்குமேல் நடந்தால், நெஞ்சுத் துடிப்பு அதிகமாகிக் களைப்பு வந்து விடுகிறது. அதுவும் துணைப் பிடிப்பு இல்லாமல் நடக்க முடிவதில்லை. ஹெர்ணியா (குடல்வாதம்) என்னும் நோய் இருப்பதில், உட்கார்ந்திருக்கும் போது, ஒரு இளநீர் அளவு பரிமாணம் குடல் இறங்கி, சிறு வலி கொடுத்துக் கொண்டே இருக்கிறது. நின்றால் ஃபுட்பால் (உதை பந்து) அளவுக்குப் பெருகிப் பெரு வலி கொடுக்கிறது. இந்தக் காரணங்களில் நானே என்னைக் "கண்டெம்டு மேன்" (தள்ளப்பட்ட மனிதன்) என்றே கருதி வாழ்ந்து வருகிறேன்.

இப்படிப்பட்ட தொந்தரவுகளால் நான் அவதிப் படாமல் இருக்கும் வண்ணம், நோய் தெரியாமல் இருக்க, டாக்டர் குளோரோஃபார்ம் (மயக்க மருந்து) கொடுப்பது போல், பணம், பண்டம் தாராளமாகக் கொடுத்து உற்சாகப் படுத்தி விடுகிறீர்கள்.

திருச்சியில் ஒரு கல்லூரி ஏற்படுத்த 5 லட்சம் ரூபாய் செலுத்தப் பட்டுள்ளது. வகுப்பு வாரி உரிமைக்காகவும் சமதர்மத் திட்டத்தைச் செயல் படுத்துவதற்காகவும் நாம் கிளர்ச்சி செய்ய வேண்டியவர்களாக இருந்தாலும், இப்போது பிரச்சார அளவில் இருந்தால் போதும்! எப்போதுமே கிளர்ச்சிக்காரர்களாகவே இருக்க வேண்டும் என்று நாம் ஆசைப்படக் கூடாது!

இன்று தமிழர் சமுதாயத்திற்கு மாத்திரமல்லாமல், ஏழை எளியவர் சமுதாயத்திற்கும், இரட்சகர் என்கிற

முறையில் காமராசர் இருந்து வருகிறார். காமராசரை உற்சாகப் படுத்தும் அளவுக்கு நமது ஆதரிப்பு, ஆட்சிக்கும் காங்கிரசுக்கும் இருக்க வேண்டியது அவசியமாகும்.

இதுவரை நாம் ஒன்றும் செய்யவில்லை என்று கருதி விடாதீர்கள். அரசியல் ரீதியில் இன்று காங்கிரசுக்கு, காமராசருக்கு எதிர்ப்பு இல்லாமல் ஆக்கியது நமது இயக்கம் தான். பார்ப்பான் குள்ள நரி ஆகி விட்டான்; முஸ்லிம் லீக் இன்று செல்லாக்காசு ஆகிவிட்டது; கண்ணீர்த்துளி, நாட்டுக்கு நியூசென்சாகி விட்டது. இது யாரால்? இதற்குக் காங்கிரஸ் என்ன செய்து விட்டது?

சலிப்படையாமல் நமது தோழர்கள், கடவுள் மத சாஸ்திர சம்பிரதாய ஒழிப்புக் காரியங்களில், நம் தனிமையை எப்போதும் மறந்து விடாமல், தொண்டாற்றலாம்''—

1963-64 ஆகிய இந்த 85-வது வயதில் பெரியார் சுற்றுப் பயணம் மேற்கொண்ட நாட்கள் 165, பேசிய பொதுக் கூட்டங்கள் 139, கலந்து கொண்ட கழக மாநாடுகள் 6, நடத்தி வைத்த திருமணங்கள் 20 என்பதாக ஒரு புள்ளி விவரம் தெரிவிக்கிறது!

மண்ணச்சநல்லூரில் பெரியாருக்குக் காளைகள் பூட்டிய டிரக் வண்டி ஒன்று வழங்கப் பட்டது. சொந்த நகரமாகிய ஈரோட்டில் எடைக்கு எடை மஞ்சள் அன்பளிப்பு; நகர மன்ற வரவேற்பு, முதலாளி சாயபு அவர்களால். பெரியார் சுதந்திரப் போராட்ட வீரர் என்ற தகவலை அதிகார பூர்வமாக அந்தத் தகவலுடைய சேகரிப்பாளரான டாக்டர் எஸ். விஜயலட்சுமி அறிவித்தார். காஞ்சியில், பெரியாரின் எடைக்கு இருமடங்கு எடையுள்ள அரிசி வழங்கப்பட்ட போது, அதைக் கூட்டுறவுச் சங்க விநியோக முறை மூலம் மக்களுக்கே தரச் சொன்னார். கரூரில் துலாபாரம் நடத்திக் கைத்தறிப் போர்வைகள் அளித்தனர்.

தாழ்த்தப்பட்ட சமுதாயத் தலைவர் என். சிவராஜ் தமது 72-வது வயதில் 29-9-64 அன்று மறைந்தார். வீரமணி

யின் மைத்துனி சூரிய குமாரிக்கும், கல்லூரி விரிவுரையாளர் தோழர் சா.கு.சம்பந்தத்துக்கும் பெரியார் திடலில் 27-9-64 அன்று திருமணம் என்னும் செய்தி அறிவிப்பும், அழைப்பும், பெரியார்-மணியம்மையார் கையொப்பங்களுடன் வழங்கப் பட்டது. "உணவு நெருக்கடியை வியாபாரிகளே செயற்கை யாக உண்டாக்கி விடுகிறார்கள். அதனாலேயே அவர்களுக் கிருந்த மரியாதை போய் விட்டது. இல்லாததை இருப்ப தாகப் பத்திரிகையாளர்கள் பெரிதுபடுத்துகிறார்கள். உணவு சம்பந்தமான செய்திகளையாவது அரசு Pre-censor செய்ய வேண்டும்" என்ற கருத்துகளைப் பெரியார் "விடுதலை"யில் எழுதினார்.

சேலத்தில் அக்டோபர் 10, 11 தேதிகளில் நடந்த ஊர் வலம், பொதுக்கூட்டம் ஆகியவற்றில், பெரியார் கலந்து கொண்டார். பி.ரத்தினசாமிப் பிள்ளை, எஸ்.என்.ஏ. அஜீஸ் (தமிழ்நாடு காங்கிரஸ் செயலாளர்—மிக இளமையில் காலமாகி விட்டார்) பாலதண்டாயுதம், சம்பத், கண்ண தர்சன் பங்கேற்றனர். சிவாஜி கணேசன், தான் பெரியாராக நடித்து, ஒரு திரைப்படம் எடுக்கப்போவதாக அறிவித்தார். (இதுவரை எடுத்ததாகத் தெரியவில்லை!) நன்றி கூறும் முகத்தான் பெரியார், "கலையுலகில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நடிகர்கள் சிவாஜி கணேசன், எம். ஜி. ராமச் சந்திரன் ஆகியோர்—" என்று குறிப்பிட்டார். 15-10-64 அன்று பக்தவத்சலத்தின் 68-வது பிறந்த நாளில் "நாமும் வாழ்த்துகிறோம்" என்று எழுதிற்று "விடுதலை." "சிரிமாவோ—சாஸ்திரி ஒப்பந்தத்தின் மூலமாக இந்தியா இலங்கைச் சிக்கல் தீர்ந்தது. 3 லட்சம் தமிழர்கள் அங்கு குடியுரிமை பெறுவார்கள்; 5.25 லட்சம் பேர் இந்தியாவுக்கு அனுப்பப்பட்டு விடுவார்கள்!" என்ற செய்திக்கு முதற் பக்க முக்கியத்துவம் தந்தது "விடுதலை."

திருவள்ளூரில் பெரியாரின் எடைக்குச் சமமாகக் காய் கறிகள் வழங்கினார்கள். 21-10-64-ல் அங்கே பேசும்போது, "நண்பர் அண்ணாதுரையும், கருணாநிதியும் அடுத்தபடியாக நாங்கள்தான் ஆளப்போகிறோம்என்கிறார்களே—அப்படியே

ஆட்சிக்கு வந்தாலும் ஆச்சாரியார் சொல்படிதானே ஆளுவார்கள்?" என்று கேட்டார் பெரியார். (பதில் முரண் பாடாகிவிட்டதே 1967-ல்) நவம்பர் 15, 16, 17 தேதிகளில் பெரியார் பெங்களூர் சென்று வந்தார். 5-11-64 முதல் "விடுதலை"யில் "பெரியார் அன்று சொன்னார்" என்ற தலைப்பில் பெரியாரின் கருத்துகளை ஒவ்வொன்றாக வெளியிட்டு, இறுதியில் "இதனை ஆட்சி இன்று செய்கிறது" என்று முடியும் வண்ணமாகத், தொடர்ச்சியான பெட்டிச் செய்திகள் அன்றாடம் பிரசுரமாயின. ஆந்திர மாநிலத்தி லிருந்து சந்திராரெட்டி, தமிழ்நாடு பிரதம நீதிபதியாக நியமிக்கப்பட்டார்.

நவம்பர் 21, 22 ஆகிய இருநாட்களிலும் திருச்செங் கோடு கே. பரமசிவம் நடத்தும் பெரியார் பிறந்தநாள் விழா நடைபெற்றது. பெரியாருக்கு எம்.ஜி.ஆர். கருப்புச்சால்வை போர்த்திப் புகழ்ந்து போற்றினார். டாக்டர் ஏ. கிருஷ்ண சாமி, இந்தியன் ஓவர்சீஸ் பேங்க் ஏ. சுப்பையா ஆகியோர் முதல் நாளும், மந்தா கிருஷ்ணமூர்த்தி, தமிழ்வாணன், ஜி.டி. நாயுடு ஆகியோர் இரண்டாம்நாளும் பங்கேற்றார்கள். திருவாரூரில், டிசம்பர் 1-ம் நாள், பெரியார் பிறந்தநாள் விழாவில் துலாபாரம் நடத்தி, அரிசி வழங்கிய போது, பெரியார் அதனைப் பள்ளிப் பிள்ளைகளின் மதிய உணவுக்கு அளித்திடச் செய்தார். திருவாரூர் நகர்மன்ற வரவேற்பு, தலைவர் கே.டி.ஆர். கோபாலகிருஷ்ண ராஜுவால் வழங் கப்பெற்றது. விழாக்கோலம் பூண்டிருந்த ஆரூரில், சிவாஜி, கணேசன், கோபாலசாமி தென்கொண்டார், கவிஞர் கண்ண தாசன் கலந்துகொண்டனர். பெரியார் காவியம் பாடு வதாகக் கண்ணதாசன் அறிவித்தார் (இன்னும் பாடியதாகத் தெரியவில்லை!) தஞ்சையில் சீமைக்கறவைப்பசு பெரியாருக்கு அளிக்கப்பட்டது. திருச்சியில் பால்; திருப்பத்தூரில் 2 புதுக் காசு; சேந்தமங்கலத்தில் சவ்வரிசி ஆகியவை துலாபாரத்தில் தரப்பட்டவை. வ.ஆ. திருப்பத்தூரில் நகராட்சித் தலைவர் தி.மு. கழகச் சின்னராஜு வரவேற்பளித்தார். 25-12-64 "விடுதலை"யில் $1\frac{1}{2}$ பக்க அளவில் பெரியார், "நாட்டின்

பெருங்கேடு பார்ப்பனர்—வர்த்தகர்– வக்கீல்'' என்பதாக விளக்கங்களுடன் தலையங்கம் எழுதினார்.

1964 டிசம்பர் 25-ம் நாள், கிறிஸ்துமஸ் தினத்தன்று வீசிய கடும்புயலால், தனுஷ்கோடி கடற்கரை சேதமுற்றது. பெரியார்—மணியம்மையார், சிதம்பரம், ரெங்கம்மாள் சிதம்பரம் ஆகியோருடன்—29-ந்தேதி பாம்பன் பகுதியில் படகில் சென்றார். அங்கு மீட்புப்பணிகளைப் பார்வையிட அமைச்சர் ராமய்யா வந்திருந்தார். மூன்றாண்டுகளாக அமைச்சராயிருந்த அவரைப், பெரியாருக்கு அறிமுகம் செய்து வைத்தபோது, 'மன்னிக்கணும்; நான் இதுவரை அய்யாவைப் பார்த்ததில்லை' என்றார் பெரியார்! குற்ற உணர்வுடன் தலை குனிந்தார் ராமய்யா!

நாகை வழக்கறிஞரும், கழகப் பெரியவருமான டி.கே. விசயராகவலு, 28-12-64 அன்று இயற்கை எய்தினார்.

1965-ஆம் ஆண்டின் முதல் திங்கள் பெரியாருக்குத் துலாபார மாதமாகவே அமைந்ததோ? ஜனவரியில் இடைவெளியின்றிச் சுற்றுப்பயணம் செய்த பெரியாருக்குக் குளித்தலையில் எடைக்கு எடை பெட்ரோல், நக்கசேலத்தில் வெங்காயம், கோவையில் வெல்லம், சிதம்பரத்தில் காப்பிக் கொட்டை; பண்ணுருட்டியில் பிஸ்கட், அரகண்டநல்லூரில் மணிலா எண்ணெய், குடியாத்தத்தில் கைத்தறி நூல் நிறுத்து வழங்கப்பட்டன. எந்தப் பெரியாருக்கு அளிக்கப்படும் ஒரு சிறியபொருளும் வீணாகாமல்,நலிந்தமக்களுக்கு, நல்லமுறையில் பயன்படும், என்று நம்பி மக்கள் வழங்குகின்றார்களோ, அந்தப் பெரியார், அதற்கேற்பவே, தமக்குத் தரப்பட்ட பெட்ஷீட்டுகளைத் தனுஷ்கோடி புயலால் பாதிக்கப்பட்ட மக்களுக்குக் கலெக்டர் வழியாக அனுப்பி வைத்தார், பொங்கல் பரிசாக! புயல் நிவாரண நிதிக்கு ஒரு லட்சம் ரூபாய் வழங்க நினைத்துக் கொண்டிருப்பதாகப் புரட்சி நடிகர் எம்.ஜி.ஆர். அறிவித்ததும், பெரியார் மனமிக மகிழ்ந்து, அவர் படத்துடன் இச்செய்தியை "விடுதலை'' முதல் பக்கம் வெளியிடச் செய்தார். தி.மு.க. சார்பில் 3,000ரூபாயைக் கலைஞர் மு. கருணாநிதி 1-1-65 அன்று

முதல்வரிடம் வழங்கினார். துர்காபூரில் அகில இந்தியக் காங்கிரசுக்குக் காமராசர் தலைமை தாங்கித் தமிழில் உரையாற்றினார். அதன் ஆங்கிலமொழி பெயர்ப்பு, உறுப்பினர்களுக்கு அச்சிட்டு வழங்கப்பட்டது. கேளம்பாக்கம் சுயமரியாதை இயக்கப் பெரியவர் வி.தி. பொன்னுசாமி, தமது 65-ம் வயதில், 10-1-65 அன்று இயற்கை எய்தினார். தமது மூன்று பெண்களையும் வெவ்வேறு சாதி மாப்பிள்ளைகளாகத் தேடிக்கொடுத்துச், சாதி ஒழித்த தன்மான வீரர் இவரது மூத்த மருமகன் டார்ப்பிடோ ஜனார்த்தனம்!

"விடுதலை" பொங்கல் மலரில் 'பெரியார் அகராதி' ஒன்று புதுமையுடன் பொலிந்தது. தெரிந்து கொள்ள வேண்டிய, அர்த்தமுள்ள சொற்களாகிய அவை, வருமாறு:— அரசியல்—பித்தலாட்டக்காரர்களின் பிழைப்பு, ஆத்மா-அயோக்கியர்களின் கண்டுபிடிப்பு—மன்னிப்புக்கு அப்பாற்பட்டது, இராமாயணம்—பார்ப்பனரின் புரொசீஜர் கோட், கற்பு—பெண்ணடிமை ஆயுதம், சாதி-மனிதனை மனிதன் இழிவுபடுத்துவது, சமயம்—சாதிக்கு வித்து, கடவுள்—சமயத்தின் காவலன், பார்ப்பான்—இம் மூன்றையும் படைத்த கர்த்தா, குருக்கள்—மோட்சலோகக் கைகாட்டி, கோயில்—அறிவு பணம் இரண்டையும் இழக்கும் இடம், சத்தியாக்கிரகம்—சண்டித்தனம், உண்ணாவிரதம்—தற்கொலைக் குற்றமுள்ள நோய், தியாகம்—அர்த்தமில்லாச் சொல், சோதிடம்—சோம்பேறிகளின் மூலதனம், புராணங்கள்—புளுகு மூட்டைகள், புலவர்கள்—பழைமைக் குட்டையில் படிந்து ஊறிய பாசி, மோட்சம்—முடிச்சுமாறிகளின் புரட்டு, உற்சவம் — கண்ணடிக்கும் கான்பரன்ஸ், வக்கீல் — சேலை கட்டாத தாசி, வியாபாரி—நாணயமற்ற லாபவேட்டைக்காரர். எப்படி?

சம்பத்தின் "தமிழ்ச் செய்தி" ஏட்டின் பொங்கல் மலரில் "தமிழ் ஒரு நியூசென்ஸ், தமிழ்ப் புலவர்கள் சமூக துரோகிகள்" என்று பெரியார், புதிதாகக் கட்டுரை ஒன்று வழங்கியிருந்தார். தமிழ்ப் புலவர்களும் பண்டிதர்களும் தமிழ்க் கொலைஞர்கள்தான்! அறிவு வளர்ச்சிக்குப் பயன்படாத

வாறு புராண இதிகாச நூல்களையே திரும்பத் திரும்பப் புகுத்தி வந்தார்கள். தமிழ் மொழியால் மக்களுடைய வாழ்க்கையில் வளர்ச்சி ஏற்பட எதுவுமே செய்யவில்லை— என்று கடுமையாகச் சாடியிருந்தார். அதேபோல, மதுரை நெடுமாறனின் ''குறிஞ்சி'' இதழில் சில கேள்விகளுக்குப் பதிலளித்திருந்தார் பெரியார், அதன் பொங்கல் சிறப்பு மலரில்! மாணவர் அமைதியின்மைக்குக் காரணமென்ன என்ற வினாவுக்கு விடையளிக்க வந்த பெரியார்—அரசாங் கத்தின் பலவீனமும் தாட்சண்யமும் நம் மாணவர்க ளிடையே கட்டுப்பாடின்மையும் காலித்தனமும் பெருகு வதற்குக் காரணம்—என்றார். அதேபோலப், பெரியாரிசம் பொங்கல்மலர் கட்டுரையில், சமதர்மத் திட்டம் என்றால் எல்லாமக்களுக்கும், ஒன்றுபோல, ஒரே நேரத்தில் புகுத்தப் படவேண்டும், என்று கருத்தறிவித்தார் பெரியார்.

16–1–65 அன்று சிதம்பரத்தில், பெரியாரின் நாய் காணாமல் போய், ''விடுதலை''யில் அறிக்கை வெளியிடப் பட்டது. டேஷ்ஹவுண்ட் இனத்தைச் சேர்ந்த 6 வயதுள்ள டிட்டோ அல்லது மாதோர் என்ற பெயருடையது அது. சீர்காழித் தோழர்கள் மூலமாக ஒரு வாரத்திற்குள் அது திரும்பக் கிடைத்த பின்னரே பெரியாருக்குத் திருப்தி! 17-ந் தேதி பெரியார் விழுப்புரத்தில் பேசும்போது, இந்தித் திணிக்கும் பிரச்சினைக்கே இப்போது இடமில்லை—என்று குறிப்பிட்டதைப், பெரியார் இந்தியை எதிர்க்கவில்லை என்ற பொருள்பட, ''இந்தியன் எக்ஸ்பிரஸ்'' மிக அவசர மாகச் செய்தி வெளியிடவும், 19–ந் தேதி ''விடுதலை''யில் அந்தச் செய்தியை அப்படியே வெளியிட்டுத், தாம் பேசியதை யும் குறிப்பிட்டு, ''இப்படித் திசை திருப்புவது அசல் அக்கிர காரத்தனமல்லவா?'' என்று பெரியார் கேட்டார்!

26–1–1965 அன்று இந்தி அரியணை ஏறும் நாள் ஆட்சி மொழி என்கிற அந்தஸ்து பெறும் நாள். அது• நமக்குத் துக்க நாள். திராவிட முன்னேற்றக் கழகத் தோழர்கள் தங்கள் இல்லங்களில் கறுப்புக் கொடி பறக்க விடுங்கள். சுமார் 1,000 ஊர்களில் மட்டும் நமது

எதிர்ப்பினைக் காட்டினால் போதும் என்று அண்ணா கூறியிருந்தார். இந்தி ஆதிக்க எதிர்ப்பு மாணவர் நடவடிக்கைக் குழு ஒன்று அமைக்கப்பட்டு, 25-ந் தேதியே மறியல் செய்வதாக மாணவர் தீர்மானித்திருந் தார்கள். சென்னையிலும் மதுரையிலும் மாணவத் தலைவர்கள் அரசியல் சட்ட மொழிப் பிரிவுக்குத் தீ வைத்தார்கள். ஆறு பேர் தீக்குளித்தும் இரண்டு பேர் நஞ்சருந்தியும் தமிழகத்தில் இந்தியை எதிர்த்து உயிர்த் தியாகம் செய்தார்கள். உலக வரலாற் றில், மொழி காக்கும் போரில், இவ்வளவு அதிக விலை தரப்பட்டதில்லை!

'தமிழ் தாழவும், தரங்கெட்ட இந்தி ஆளவும், தருக்கர் தர்பார் ஆணையிடுகிறது. உன் கண் எதிரே கன்னித் தமிழுக்கு ஆபத்து சூழ்கிறது' என்று "முரசொலி" எழுதியதையும், ராஜாஜி, 'இந்தியால் தமிழ் கெடாது' என்று முரண்பாடாக எழுதியதையும், "விடுதலை" எடுத்துக் காட்டியதோடு, 20, 21, 22, 23 ஆகிய நான்கு நாட்களும் தொடர்ந்து, "இந்தி எதிர்ப்பல்ல; காங்கிரஸ் எதிர்ப்பே!" என்று தலையங்கமும் தீட்டியது. 25-ந் தேதி பெரியாரே, "பண்டிதர்களே! என்னைக் காயாதீர்கள், திருந்துங்கள்!" என்று ஒரு தலையங்கக் கட்டுரை தீட்டி, பாரதி பாடலில் "மெல்லத் தமிழினிச் சாகும்" என்ற பகுதியைத் தமக்கு ஆதரவாக்கியிருந்தார். அப்பாவி மாணவரைத் தூண்டி விட்டு, நாடெங்கும் அராஜகமும் காலித்தனமும் நடை பெறுவதாக, "விடுதலை" கூறியது. முன்னதாக, 25-ந் தேதியே தி. மு. க. தலைவர்கள் கைதானார்கள். கருப்புக் கொடி ஏற்றப்பட்ட வீடுகளில் சுதந்திரங் காக்கும் படை யினர் கலவரம் செய்து, போலீசார் துணையுடன் கொடிகளை இறக்க முயன்றார்கள். அப்படி ஒரு முயற்சியில், துப்பாக் கியைக் காட்டி மிரட்டியதாக, இலட்சிய நடிகர் எஸ். எஸ். ராஜேந்திரன், நடிகமணி டி. வி. நாராயணசாமி இருவரும் வழக்குக்கு ஆட்பட்டனர். முதலமைச்சர் பக்தவத்சலம், உரிய முன்னேற்பாடுகள் செய்யாமல், அலட்சியமாயிருந்து விட்டுப், பின்னர் அடக்கு முறையை அவிழ்த்து விட்டார். போலீஸ் போதாமல், ராணுவமும் சுட்டது பிப்ரவரி 12-ல்.

1965 சனவரி 25 முதல் பிப்ரவரி 13 வரையில் தமிழகத்தில் நிலவிய நிலைமைக்கு வரலாற்று ஆசிரியர்கள் என்ன பெயர் சூட்டுவரோ—பெரியார், இதை எழுச்சி என்று ஒத்துக் கொள்ளத் தயாராயில்லை. மொழிக்காக மாணவர்களால் நடத்தப்பட்ட போராட்டம் என்றும் நம்பத் தயாராயில்லை. தமிழ் நாடு முழுவதும் மூன்று நாட்களுக்கு ரயில்களே ஓடாத நிலைமை இதற்கு முன்னுமில்லை, பின்னுமில்லை! 'இந்தி ஒழிக' என்று பொறிக்கப்படாத வாகனங்களே தெருக்களில் நடமாட முடியவில்லை; சொல்லாத மனிதர்களே வீதிகளில் நடமாட முடியவில்லை; பெரிய மனிதர்களையே காணோம்! இளைஞர்கள்கூட அல்ல; சின்னஞ்சிறார்கள் நாட்டையே ஆக்கிரமித்து, ஆட்சி புரிந்தனர்! ராஜாஜியோ, அண்ணாவோ, மாணவர் கிளர்ச்சியைத் தூண்டவுமில்லை; இப்படி நடக்குமென எதிர்பார்க்கவுமில்லை! அரசினரே இந்நிலையை எதிர்பார்க்கவில்லையே!

"இந்தியைத் திணிப்பதில்லையென அன்றே காமராசர் எனக்கு எழுதித் தந்திருக்கிறாரே! அந்த உறுதி மொழியை அரசினரும் மீறாதபோது, ஏன் கிளர்ச்சி செய்ய வேண்டும்? பதவியைப் பிடிப்பதற்காகக், கண்ணீர்த் துளிகள் செத்த பாம்பை எடுத்து ஆட்டுகின்றனர்" என்று பெரியார் அரகண்டநல்லூரில் 1965 சனவரி 19-ம் நாள் பேசியது, பிப்ரவரி 1-ம் நாள் "விடுதலை"யில் வெளியிடப்பட்டது. சனவரி 26 குடியரசு நாளன்று சென்னைக் கடற்கரையில் பேசிய அகில இந்தியக் காங்கிரஸ் தலைவர் காமராசர், மத்திய துணை அமைச்சர் அளகேசன், தமிழக முதலமைச்சர் பக்தவத்சலம், அமைச்சர் வெங்கட்ராமன் ஆகியோர் "சட்டப்படி இந்தி கட்டாயமில்லை. இது தி. மு. க. தூண்டுதல்" என்று அபாண்டமாகக் குற்றஞ்சாட்டினர். சண்டிகாரில் பேசிய பிரதமர் சாஸ்திரி, "ஆங்கிலம் நீடித்து வரும்போது வீண் கிளர்ச்சி ஏன்?" என்றார். உள்துறை அமைச்சர் நந்தா உறுதிமொழி தந்தார். பெங்களூரிலிருந்து காமராசர் "இந்திக்காரர்கள் அவசரப்பட்டால்

விபரீத விளைவுகள் ஏற்படும்! ஆகையால் நேருவின் உறுதி மொழியை நாம் காப்பாற்றியே தீரவேண்டும்! அதே நேரத்தில் தமிழகத்தில் தி.மு.கழகம் இந்திப் பிரச்சினையைக் கட்சி நலனுக்கு உபயோகிப்பது வருந்தத்தக்கது'' என்றார். காலவரம்பின்றி இங்கிலீஷ் நீடிக்க வேண்டும். இதற்குத் தமிழக அரசும் போராடும்—என்றார் முதலமைச்சர் பக்த வத்சலம் 5–2-65 அன்று.

''அடக்கு முறைதான் அராஜகத்திற்குப் பரிகாரம்'' என்ற தலையங்கத்தில் 8–2-65 ''விடுதலை''யில் பெரியார் எழுதினார்:— ''அடக்குமுறையில்லாத ஆட்சி அநாகரிக ஆட்சி (Anarchism)யே ஆகும். சனவரி 26 அன்றைய தினம் கண்ணீர்த் துளிகளை லட்சியம் செய்யாமல் விட்டுவிடுங்கள் என்று அரசுக்குச் சொன்னேன். இல்லாவிட்டால் கடின மான அடக்குமுறை நடவடிக்கைகளை மேற்கொள்ளச் சொன்னேன். இரண்டும் செய்யவில்லை. தேர்தலைப்பற்றி இப்போதே நீங்கள் கவலைப்பட வேண்டாம். சுதந்திரக் கட்சி, கண்ணீர்த்துளிக் கட்சி இரண்டையும் சட்ட விரோதமென்று தடை செய்யுங்கள். பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டுச் சட்டம் போடுங்கள். அதே சமயம், இந்தி விஷயமாய் அரசாங்கத்தின் கொள்கை இன்னதுதான் என்று, தெளிவாக வெளியிடுமாறு காமராஜரை வேண்டு கிறேன்'' என்பதாக.

இதற்குப் பிறகு பெரியாரது வேன் திருச்சியில் மடக்கப் பட்டதாகவும், சென்னையில் ''விடுதலை'' அலுவலகம் தாக்கப்பட்டதாகவும், செய்திகளும், வதந்திகளும் பரவின. இவ்வளவு நாள் பொறுத்துப் பார்த்துத், தமக்குச் சம்பந்த மில்லாவிடினும், நல்ல எண்ணத்தினால், கிளர்ச்சியைக் கைவிடுமாறு அண்ணா 10–2–65 அன்று வெளியிட்ட அறிக்கையைப் பார்த்து, ''பூனை கோணியிலிருந்து வெளி வந்து விட்டது'' என்று ''விடுதலை'' கேலி செய்தது. 10-2–65 ''விடுதலை'' முதல் பக்கத்தில், கொட்டை எழுத் தில், பெரியாரின் பயங்கரமான அறிக்கை ஒன்று வந்தது. 'உஷார்! கத்தியையும் பெட்ரோலையும் விட வேறு வகை

இல்லை. என்னுடைய வேன் தாக்கப்படுகிறது. அரசாங்கம் வேடிக்கை பார்க்கிறது. நம்மை நாமே பாதுகாத்துக் கொள்ள வேண்டும். எல்லாரும் கத்தியும், பெட்ரோல் டின்னும் கையில் வைத்துக் கொள்ளுங்கள். நிலைமையைப் பார்த்து நான் மறுபடி சொல்லப் போவதை எதிர்பார்த் திருங்கள். இப்போது அடையாளம் கண்டு வைத்துக் கொண்டால் போதும்'' என்று அந்த அறிக்கை கேட்டுக் கொண்டது. அதற்கு மறுநாளே "பொறுத்திருங்கள், அரசாங்கம் நடவடிக்கை எடுக்கும்'' என்று அமைதிப்படுத்தி, "நான் யாருக்கும் பயந்து கொண்டு இந்த 2-வது அறிக்கை விடவில்லை'' எனவும் பெரியார் கூறியிருந்தார். ஆயினும், அதே ஏட்டின் 2-ம் பக்கத்தில் "என்னையே எச்சரிக் கிறார்கள்; அரசாங்கத்தின் யோக்கியதை அப்படியிருக் கிறது!'' என்று, கலெக்டரும் போலீஸ் சூப்பரின்டெண் டெண்டும் தம்மிடம் வந்து எச்சரிக்கை செய்ததையும் குறிப்பிட்டிருந்தார் பெரியார்!

மார்ச் 7-ம் நாள் வரை அரசு எல்லாக் கல்விக் கூடங் களையும் மூடிவிட்டது. மத்திய அமைச்சர்களான சி. சுப்பிர மணியமும், ஓ. வி. அளகேசனும் பதவிகளை ராஜிநாமாச் செய்தனர். பிறகு ராஜிநாமா ஏற்றுக்கொள்ளப்படவில்லை. "பார்ப்பனர் சிப்பாய்க் கலகத்தைத் தூண்டி விட்டது போலவே இப்போதும் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்ட இந்தக் கிளர்ச்சியைத் தூண்டிவிட்டனர். ஏனென்றால் அடி படுவது பார்ப்பானல்லவே!'' என்றார் பெரியார். தர்மபுரி யில் இடைத் தேர்தலைத் தள்ளிப் போடுங்கள் என்று "விடுதலை'' எழுதி, அவ்வாறே, 22-2-65 நடைபெற இருந்தது, 10-4-65க்குத் தள்ளிப் போடப் பட்டது. "விடுதலை''யில் பெரியார் பிறந்த நாள் விழாக்கள், துலா பாரக் காட்சிகள் புகைப்படங்களாய்த் தினந்தோறும் வெளி வந்தன. 'ஆட்சி மொழிச் சட்டத்தைத் திருத்திப் பயத்தைப் போக்க வேண்டும்' என்ற காமராசர் வேண்டுகோளும், 'காலித்தனத்தைப் படங்கள் போட்டுப் பத்திரிகைகள் தூண்டின' என்ற பக்தவத்சலம் 'கண்டு பிடிப்பும்'

"விடுதலை"யில் முதல் பக்கத்தின் ஏழு காலத் தலைப்புச் செய்திகள். "16-2-65 அன்று மு. கருணாநிதி கைது. பாது காப்புச் சட்டத்தின் கீழ் நடவடிக்கை எனத் தெரிகிறது" என்று "விடுதலை" ஏடு அறிவித்தது. "திருச்சியிலும் கண்ணீர்த் துளி சட்டமன்ற உறுப்பினர்களும், தோழர் களும் கைதாயினர்; கிளர்ச்சியினால் ரயில்வேக்கு 7 கோடி நட்டம்" என்றும் பிரசுரித்தது.

"சுதந்திரப் போராட்டத்திற்குப் பயந்து ஆங்கிலேயன் வெளியேறவில்லை. உலகயுத்தம் காரணமாய் இந்தியாவுக்கு விடுதலை தந்துவிட்டுச் செல்ல நினைத்தான்" என்று ராஜாஜி சென்னை கோகலே ஹாலில் 8-2-65 அன்று பேசியது கண்டு, "ராஜாஜி உண்மையைக் கக்கி விட்டார்!" என்றார் பெரியார்! ஏன் எனில், இதுவே பெரியார் கருத் தல்லவா? பிப்ரவரி, மார்ச் மாதங்களில், 4, 5 கூட்டங்களுக்கு மேல் பெரியார் வெளியில் பயணம் மேற்கொள்ளவில்லை. திருச்சியில் "திராவிடமணி" இதழ் நடத்திய டி. எம். முத்து 18-2-65ல் காலமானார்.

23-2-65 அன்று அறிக்கையில், தமிழ் நாடு மாணவர் கவுன்சில், நடந்த சம்பவங்களுக்கு வருத்தந் தெரிவித்து, இனி, உள்நாட்டு நிலவரம் சரியில்லாததை முன்னிட்டுக் கிளர்ச்சி நிறுத்தப்படுகிறது. முதியவர்கள் பார்த்துக் கொள்வார்கள் — என்று தெரிவித்துவிட்டது. "நான் மறியலில் கலந்து கொள்ளவில்லை. கலந்து கொண்ட மாணவர்களைத், தடையை மீறாதீர்கள் என்று சொல்லத்தான் போனேன்" என்று குன்றக்குடி அடி களார் தன்னிலை விளக்கம் தந்திருந்தார். இங்கிலீஷை இணை மொழியாக நீடிக்கும் என்று பிரதமர் சாஸ்திரி கூறினார். "சுதேசமித்திரன்", "மாலை முரசு", "தினத்தந்தி", "முரசொலி", "மாலைமணி" ஆகிய பத்திரிகைகள் மீது அரசு வழக்குத் தொடர்ந்தது. "மாலைமணி" இளங்கோ, முரசொலி மாறன், தினத் தந்தி டி. ஆர். பீம்சிங் கைதாயினர். மத்திய அரசு உபரி பட்ஜெட்டும், தமிழக அரசு புதுவரியில்லாத பட்ஜெட்டும், இந்த ஆண்டுக்குச் சமர்ப்பித்தன.

"சர்க்காருக்கு நல்ல படிப்பினை" என்று 2-3-65ல் பெரியார் "விடுதலை" தலையங்கம் தீட்டினார். "இப்போது

கட்டாய இந்தி கிடையாது! கட்டாய இந்தி நுழைந்த போதே எதிர்த்தவன் நான்தானே? இந்தியும் வேண்டும், ஆங்கிலமும் வேண்டும் என்று நான் சொல்லவில்லையே! அறிஞர் அண்ணாத்துரையும் நாவலர் நெடுஞ்செழியனும் முத்தமிழ்க் காவலரும்தானே சொல்லி வருகிறார்கள்? இந்தி அரசியல் மொழி என்ற நிலைமையிலிருந்து இனி அதை எடுக்க முடியாது! ஆங்கிலமும் இருக்கும் என்ற உறுதி மொழியைப் பெறலாம். ஆனால் 100க்கு 3 பேராக உள்ள பார்ப்பனர்கள் இவ்வளவு கலவரம் செய்தும்கூட அவர்களில் யாருமே இப்போது கைதாகவில்லையே?'' என்றார் பெரியார். அடுத்த நாளும், "நீதானே முன்பு இந்தியை எதிர்த்தாய்? இப்போது ஏன் இப்படிச் சொல்கிறாய்? என்று கேட்பீர்களானால், சொல்கிறேன்; இப்போதும் நான் இந்தியை எதிர்க்கத்தான் செய்கிறேன்! ஆனால்; நீங்கள் சொல்வது போல், தமிழ் கெட்டுவிடுமே என்று அல்ல; இனி மேல் கெட தமிழில் என்ன பாக்கியிருக்கிறது? ஆனால், நமக்கு ஆங்கில அறிவு தேவை என்பதால், இந்தியை எதிர்க்கிறேன்! இந்தி எதிர்ப்பு மொழிப்பிரச்சினை அல்ல; அரசியல் பிரச்சினைதான்! பதவியில் இருந்தபோது இந்தியைப் புகுத்திய ஆச்சாரியார், இப்போது பதவி கிடைக்காததால் எதிர்க்கிறார்! என்னைப் பொறுத்த வரையில் காமராசர் ஆட்சி அவசியமா? இந்தி ஒழிய வேண்டியது அவசியமா? என்றால், காமராசர் ஆட்சி இந்தியை ஒழித்துவிடும் என நம்புவதால், முதலில் காமராசர் ஆட்சி நிலைக்கவே பாடுபடுவேன்!''—என்று "என்னைப் பற்றி'' எனுந்தலைப்பின் கீழ், தலையங்கம் எழுதினார் பெரியார் "விடுதலை''யில்.

மார்ச் 6-ம் நாள் "கேரவன்'' இதழ் பெரியாரின் கருத்தையே ஆதரித்து, ஆட்சிக் கவிழ்ப்புக்கான சூழ்ச்சியே இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி, என எழுதிற்று. மாணவர்கள் மீது தொடரப்பட்ட எல்லா வழக்குகளையும் அரசு திரும்பப் பெற்றுக் கொண்டது. முன் கூட்டியே திட்டமிட்டிருந்தால் அரசு நாசத்தைத் தவிர்த்திருக்கலாமே என்று பெரியார், மார்ச் 8-ல் கருத்தறிவித்தார். அடுத்த நாள் முதல்

''விடுதலை''யில் பெரியாரின் மூன்று பெட்டிச் செய்திகள் கவர்ந்திழுத்தன. ''ஓ தமிழே! உனக்கு ஏன் 247 எழுத்து? 30, 35 போதுமே!'' என ஒன்று; ''ஹே தமிழா! நீ சுத்தத் தமிழனாயிருந்தால் இனி...... பத்திரிகையைப் படிக்க மாட்டேன் என்று கையெழுத்துப் போட்டு அனுப்பு. நான் அதற்கு நாள் குறிக்கிறேன்'' என்று இன்னொன்று; ''சிந்தி! சிந்தி! நீ தமிழன் என்று சொல்லிக் கொள்ள உன் நடத்தையில், உன் கடவுளில், உன் மதத்தில் உள்ள தனிக்குறிப்பு என்ன?'' என மற்றொன்று!

வைக்கம் வீரர் பெரியாரைக் கேரளா மீண்டும் வரவேற்று, அழைத்துச், சிறப்பித்துப் பாராட்டிப், போற்றிப் புகழ்ந்தது. 11-3-65 அன்று கார்த்திகைப்பள்ளியில், டி. கே. மாதவன் நினைவுக் கல்லூரிக் கட்டடத்துக்கான அடிக்கல் நாட்டினார் பெரியார். தலைமை தாங்கியவர் ஈழவ சமுதாயத் தலைவரும், அண்மையில் கவிழ்க்கப்பட்டவருமான கே. சங்கர், முன்னாள் முதலமைச்சர்! எஸ். என். டி. பி. யோகத்தைச் சார்ந்த தாழ்த்தப்பட்ட பெருமக்கள் பெரியாரை மிகவும் கொண்டாடினர்; ஆங்கிலத்தில் பெரிய வரவேற்பு மடல் வழங்கினர்; தென்காசி வந்து அழைத்துச் சென்று சிறப்புச் செய்தனர்! கேரளாவில் இடைத் தேர்தல் நடந்து, அதிக இடம் பெற்ற 'இடதுசாரிக் கம்யூனிஸ்டும் அறுதிப் பெரும்பான்மை பெறாமையால், மீண்டும் 25-3-65 அன்று, புதிய சட்ட சபையும் கலைக்கப்பட்டு விட்டது ஜனாதிபதியால்!

பெரியார் மார்ச் மூன்றாம் வாரத்தில் சென்னையில் பேசினார். ''சமீபத்தில் ஏற்படுத்தப்பட்ட நாசங்கள், இந்த ஆட்சியை ஒழிப்பதற்கான சதியே ஆகும்! இந்த ஆட்சி போய்விட்டால், அடுத்தது பார்ப்பன ஆட்சிதானே வரும்? சோஷலிச எதிரிகளால்தான், மாணவர்கள் அவர்களுக்குப் பகடைக் காய்களாக ஆனதால்தான், இவ்வளவு சேதங்கள் ஏற்பட்டன! இதை எழுச்சி என்று சொல்வது முட்டாள் தனம்! கோழைத்தனமாகும்! இதில் வெற்றி பெற்றுவிட்டதாக ஒவ்வொருவரும் ஒவ்வொரு கோணத்தில் நினைக்

கிறார்கள். இது வெற்றியா? வெட்கக்கேடான தோல்வியா? என்று சிந்திக்க வேண்டும்! இவ்வளவு அக்கிரமங்களையும் செய்த பார்ப்பானோ, பத்திரிகைக்காரர்களோ, பணங் கொடுத்துத் தூண்டிவிட்டவர்களோ அகப்படாமல் தப்பித் துக் கொண்டார்கள்! கூலிக்குச் செய்தவர்களைத் தேடிப் பிடித்து வருகிறது இந்த வீர அரசாங்கம். அப்பாவித் தமிழர்களே! பார்ப்பான் சூழ்ச்சியைப் புரிந்து கொள்ளுங்கள்! பாவம், கருணாநிதி மட்டும் மாட்டிக் கொண்டார்! அவர் தோழர்களே, அவரை மாட்ட வைத்திருப்பார்கள்.

இப்போது சங்கராச்சாரியார்கூட, ஆயுதம் வைத்துக் கொள்வது தற்காப்புக்காக அவசியந்தான், என்று சொல்லி விட்டார். காங்கிரசையும் நாம் ஏதோ பயன்படுத்திக் கொள்ளலாமே தவிர நம்ப முடியாது என்பது, அண்மையில் நடந்த சம்பவங்களால் அறிந்து கொண்டுவிட்டோம்'' என்று இந்தக் கருத்துகளைப் பேசியும் எழுதியும் பெரியார் வெளிப் படுத்தினார். தொடர்ந்து, தர்மபுரி இடைத் தேர்தலில் காங்கிரஸ் வேட்பாளரை ஆதரித்துப் பேசவும் புறப்பட்டு விட்டார்.

26-3-65 அன்று மதுரை முத்து குழுவினர் அய்வருக்குச் சிறைத்தண்டனை. மு. கருணாநிதி, என். வி. நடராசன் இருவருக்கும் ஆறுமாத தண்டனை செஷன்ஸ் கோர்ட்டில் ஊர்ஜிதமாயிற்று. கருணாநிதி வேறு வழக்கில் பாளையங் கோட்டைத் தனிமைச் சிறையில் அடைக்கப்பட்டிருந்தார். "கருணாநிதியை விடுதலை செய்" என்று ஒரு சுவரொட்டி யும், பக்கத்திலேயே, "கொலை கொள்ளை தீயிடல் அரசிய லாகாது, அறமும் அன்று, குற்றம் புரிந்தோரை விடாதே!" என்று வேறொரு சுவரொட்டியும் ஒட்டப்பட்டிருந்தன— என்று "விடுதலை" செய்திகளை வெளியிட்டது!

"தருமபுரி வோட்டர்களே, உஷார்! கலவரக்காரர் களை ஆதரிக்காதீர்!—கண்ணீர்த்துளிகள் கூட்டுச் சதிக்கு இடந்தராதீர்!" என்று "விடுதலை" எச்சரித்தது. "1962ல் ராஜாஜி சொற்படி நடப்போம் என்றார்கள். 1963ல் வல்ல வரே! நல்லவரே! வழி காட்டுங்கள்! என்றார்கள்" என்றும்

"விடுதலை" சுட்டிக் காட்டியது. தர்மபுரியில் 35,863 வாக்குகள் பெற்றுக் காங்கிரஸ் வென்றது; 24,000வாக்குகள் பெற்றுத் தி.மு.க. தோற்றது பெரியாரும், காமராசரும், சம்பத்தும் பத்திரிகைகளைச் சாடினார்கள்! பெரியாரோ— "தர்மபுரி ஜஸ்டிஸ் கோட்டையாகும். அதனால்தான் ஜெயித்தது. காங்கிரஸ்காரர்களே! மூடநம்பிக்கைகளை ஒழித்திடுங்கள்! நெற்றியைச் சுத்தப்படுத்துங்கள்! பகுத்தறி வில்லாமல் சமதர்மம் நிலைக்காது!" என்றார். "பார்ப் பானை பிராமணன் என்று சொல்கிறவன் முட்டாளாக இருக்க வேண்டும். அல்லது தன்னைக் கீழ்மகன், நாலாம் சாதி என்று ஒப்புக் கொண்டவனாக இருக்க வேண்டும்!" "கோயிலுக்குள் உருவச்சிலை இருக்கும் (கர்ப்பக் கிருகம்) இடத்துக்குள் செல்ல அனுமதிக்கப்படாதவன், 'சாமி' கும்பிடக் கோயிலுக்குச் செல்வது, தன்னை இழி பிறவி, கீழ்மகன் என்பதை ஏற்றுக் கொள்வதாகும்" இவ்வாறு சுவரொட்டிகள் ஒட்டுமாறு, பெரியார் வேண்டுகோள் விடுத்தார்.

இந்த ஆண்டின் வேலைத் திட்டமாக, ராமநவமியன்று, கம்பராமாயணம் என்று ஒரு காகிதத்தில் எழுதித், தீயிட்டுச் சாம்பலை விவரத்துடன், "விடுதலை" அலுவலகத்திற்கு அனுப்புமாறு, பெரியார் ஆணையிட்டார், ஏப்ரல் 8, 9 தேதி களில்! அதன்படியே, கவர்களில் சாம்பல் பொதித்துப் பத்தாந் தேதி முதல், "விடுதலை" அலுவலகத்துக்கு அஞ்சல் வந்து குவிந்தது தமிழ்நாடு எங்கணுமிருந்து! "வருணாசிரம தர்மம் தழைக்கிறது எப்போதோ, அப்போதுதான் பாரதம் க்ஷேமம் அடையும்" என்று சங்கராச்சாரியார் கூறியதை, மறுத்துக் கண்டித்து, "இது அறிவின்மையா? ஆணவமா?" என்று பெரியார் கேட்டார். "அய்க்கோர்ட்டும் அரசாங் கமும்" என்ற தலையங்கத்தில் பார்ப்பனரல்லாத ஜில்லா ஜட்ஜ், தலைமை மாகாண நீதிபதி ஆகியவர்களின் பெயர் களைக் குறிப்பிட்டு, "ஏன் இவர்களை அய்க்கோர்ட் ஜட்ஜாகப் போடக் கூடாது?" என்றே, வெளிப்படையாகக் கேட்டார் பெரியார்.

தஞ்சாவூரில் காய்கனி மார்க்கெட்டுக்குக் காமராசர் மார்க்கெட் என்று ஏப்ரல் 16-ம் நாள் பெரியார் பெயரிட்டார். கல்லக்குறிச்சியில் 18-ம் நாள் சாதி ஒழிப்பு மாநாடு நடைபெற்றது. "விடுதலை" ஏட்டுக்குச் சந்தா செலுத்தும் நிகழ்ச்சி, விமரிசையாக அங்கு நடைபெற்றது. பெரியாருக்கு வெல்ல துலாபாரமும் செய்யப் பட்டது. இந்த மாதத் திட்டத்தில் நெல், அரிசி, மணிலா, காய்கறி, கண்ணாடிக் குவளைகள், உப்பு, வெங்காயம் ஆகியவை பல ஊர்களிலும் பெரியாரின் எடைக்குச் சமமாக அன்புடன் அளிக்கப் பட்டன. 24 ராணிப் பேட்டை, 26 திருவண்ணா மலை நகராட்சிகள் பெரியாருக்கு வரவேற்பளித்தன. சென்னை மாநகராட்சியில் ஊழல்கள் நடப்பதாகவும், கண்ணீர்த்துளிக் கவுன்சிலர்களே தங்கள் நிர்வாகத்தைக் குறை கூறுவதாகவும், "விடுதலை"யில் அடிக்கடி சேதிகள் வந்தன. நீண்டகால இயக்கப் பிரமுகர் வேலூர் ச. திருநாவுக்கரசு 3-5-1965 மாலை 7.30 மணிக்கு மறைந்தார். "விடுதலை" துணைத் தலையங்கம் தீட்டி மரியாதை செய்தது.

திருநெல்வேலி நகரமன்றம் மே 8-ம் நாள் பெரியாருக்கு வரவேற்பளித்த போது, "அரசியல் கட்சிகளால் நகர நிர்வாகம் பாழாகிறது; நம்முடைய மக்கள் இன்னும் ஜன நாயகத்துக்குத் தயாராக வில்லை" என்று பெரியார் கருத்துக் கூறினார். கும்பகோணம் திராவிடர் கழகத் தோழர்களும், சட்டமன்ற உறுப்பினர் ஏ.ஆர். ராமசாமி, கா.பா. பழநி ஆகியோரும் முயன்று, 5,000 ரூபாய் செலவில், பெரியாருடைய வேனைப் புதுப்பித்துத் தருவதாக முடிவெடுத்து, அவ்வாறே, மே இறுதியில், பெரியார் பிறந்தநாள் விழா எடுத்து, அங்கு வண்டியை அளித்தனர். காமராசர் திருச்சியில், "தகுதி திறமை பேசுகின்ற மோசடி ஒழிய வேண்டும்" என்று தீவிரமாகப் பேசினார். தமிழ் நாட்டின் 9 மாவட்டங்களில் 18 நாட்களில் 1,600 மைல் சுற்றுப் பிரயாணம் செய்து சென்னை திரும்பியபோது, செண்ட்ரல் ரயில் நிலையத்தில் காமராசருக்கு மகத்தான வரவேற்புத்

தரப்பட்டது. பெரியாருடைய பிரச்சாரப் பயிற்சி வகுப்பு நடத்தும் முறையில், மேலும் சிறிது அபிவிருத்தியுள்ள திட்டம் ஒன்று வகுக்கப் பட்டிருப்பதாக, வே. ஆனைமுத்து அறிவித்தார். அதன் பிரகாரம், பெரியாரவர்கள் திருச்சி மாவட்டத்தில், ஜூன் 18 முதல் 28 முடிய சுற்றுப் பயணம் நிகழ்த்தும் போதே, சில குறிப்பிட்ட ஊர்களில், பகற் பொழுதில், பயிற்சி வகுப்புகளை நடத்துவார்கள் என்பதாகும்.

ஜூன் மாதம், பெரியாரைத் திருச்சியில் "ஆனந்த விகடன்" துணையாசிரியர்கள் சாவி, மணியன் இருவரும் பேட்டி கண்டு, கட்டுரை வெளியிட்டனர். அதில் வ.வே.சு. அய்யரைப் பற்றிப் பெரியார் குறிப்பிட்ட சில விவரங்களை மறுத்து, அய்யர் மகனும், இன்னொருவரும் தெரிவித்த கருத்துகளையும்; அவற்றுக்குப் பெரியார் அளித்த விளக்கத்தையும் "ஆனந்தவிகடன்" பிரசுரித்திருந்தது. அவற்றிலிருந்து, பெரியாரின் கருத்து சரியெனவே நிரூபணமாயிற்று. பெரியாருக்குத் திண்டுக்கல் தோழர்கள் தங்கள் பகுதி விளை பொருளான சிறுமலைப் பழத்தைத் துலாபாரம் செய்தனர். "ஆட்சியினரும் சமதர்மத் திட்டத்துக்கு எதிர்ப்பாகி வருகின்றனர்! சம உரிமை வழங்கப்படாவிடில் பிற்படுத்தப் பட்ட வகுப்புகள் முன்னேறுவது எங்ஙனம்?" என்று பெரியார் ஆத்திரத்தோடு கேட்டார். பக்தவத்சலம் ஆட்சியில், பார்ப்பனர் மீண்டும் ஆதிக்கம் பெற்றுப், படிப்படியே உயர்ந்து வருவதைக கண்காணித்ததால், இப்படிப் பேச நேரிட்டது! "செக்ரெடேரியட்டா? அக்ரகாரமா?" என்று "விடுதலை" ஜூன் 19–ந் தேதியில் தலையங்கமே எழுதியிருந்தது.

"கம்பனும் இராஜாஜியும் ஒரே தன்மையர்கள்—கம்பன் பார்ப்பன அடிமை, தமிழர் துரோகி; இராஜாஜி தமிழர் விரோதி; தமிழர் துரோகி;-இவர்கள் இருவரையும் பாராட்டுகின்ற தமிழனே கீழ்மகனாக்கப் படுகிறான்" என்று வேதனையோடு எழுதினார் பெரியார். மேலும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் துணை வேந்தராயிருந்து

கொண்டு, பல்லாற்றானும் தமிழர்க்கு இன்னல் விளைத்து வந்த சச்சிவோத்தமரைக் கண்டித்து, "சர்.சி.பி.யின் கறை கடந்த அக்கிரமம்'' என்று தலைப்பிட்டுப் பெரியார், 29–6-65 "விடுதலை''யில் எழுதினார் .முதலமைச்சர் கோயில் திருப்பணிகளில் அதிகக் கவனம் செலுத்துவது கண்டு, மிக்க எரிச்சலுடன், "பக்தவத்சலம் கோயில் குட்டிச்சுவர்களுக்குச் சாயம் பூசி வருகிறார். நாமெல்லாம் என்ன எருமை மேய்க்கி என்று நினைக்கிறாரா? முதன் மந்திரியார் துணிந்து விட்டார்! நமக்கென்ன? இனி நாமும் துணிவோமே!''என்று, கும்பகோணம் கூட்டத்திலேயே, பெரியார் தெரிவித்த கருத்துக்கிசைய, "விடுதலை''யும் "முதல் மந்திரியின் திருப் பணி'' என்ற தலையங்கம் தீட்டிற்று.

கரூரில், கவிஞர் தஞ்சை வாணன் எழுதி, சிவாஜி கணேசன் நடித்த 'களங்கண்ட கவிஞன்' நாடகத்துக்குப் பெரியார் தலைமை தாங்கி, 21-6–65 அன்று பாராட்டிப் பேசினார். அரியலூர், பெரம்பலூர் ஆகிய இடங்களில் நடந்த பிரச்சாரப் பயிற்சி வகுப்புகளில் பேசுகையில், இந்த ஆட்சியைத் தட்டிக் கேட்க நமக்குத் தானே உரிமை உண்டு? தவறான பாதையில் போகத் தொடங்கி விட்டது; இப் போதே தடுத்து நிறுத்த வேண்டும். அடுத்த மாதம் மாநாடு கூட்டிக் கிளர்ச்சி துவக்க முடிவு செய்வோம்'' என்று முழங் கினார் பெரியார். "தகுதி திறமை பேசும் அயோக்கியத் தனம்'' என்ற தலைப்பின் கீழ், "விடுதலை''யில் இரண்டு நாள் தலையங்கம் எழுதினார்; ரெவின்யூ அதிகாரிக ளிடையே பாகுபாடு பற்றி விளக்கினார். "சாதாரண தாலுக்காபீஸ் குமாஸ்தா, ரெவின்யூ இன்ஸ்பெக்டர், சிரஸ்ததார், தாசில்தார், டிப்டி கலெக்டர், ஜில்லாகலெக்டர் என்று படிப்படியே உயர்ந்து வந்து, சுமார் 25, 30 வருட அனுபவமும், ரெவின்யூ, சர்வே, அக்கவுண்ட் ஆகிய எல்லாத் துறைகளையும் கரைத்துக் குடித்து விட்டு வருகிறவரைவிட, எப்படியோ, யாரையோ பிடித்து, எங்கோ பாஸ் செய்து விட்டு, நேரே அய்.ஏ.எஸ். ஆக வருகிற பச்சகானாக்கள் (சிறு பிள்ளைகள்) எப்படிச் சிறந்தவர்கள் ஆக முடியும்?''

என்று விவரமாகவே கேட்டார், பெரியார்! "விடுதலை"யில், கிறிஸ்துவர்களுக்கு எண்ணிக்கை மீறிய உத்தியோகச் சலுகை தரப்படுவதைக் கண்டித்து எழுதியதைச் சுட்டிக் காட்டி, தூத்துக்குடி காங்கிரஸ் எம்.எல்.சி. யான ஜே. பொன்னுசாமி வில்லவராயர், கிறிஸ்துவர்கள் அந்நியர்களல்லவே, என்று கடிதம் எழுதியிருந்தார். அதையும் பிரசுரித்து, 22-6-65 அன்று, "விடுதலை" ஆசிரியர் பதிலும்— "அதாவது, யாராயிருந்தாலும் அவரவர் எண்ணிக்கை விகிதாச்சாரத்துக்கு மேல் அனுபவித்து வருவதை இடித்துக் காட்டுவதே எங்கள் பணி. அதை நாங்கள் சரியாகவே செய்து வருகிறோம்—" என்று வெளியாகியிருந்தது.

பெரியாரின் பேச்சுக்கு உடனடிப் பயனாக, இந்தக் கல்வி யாண்டில், தமிழகத்தில் 110புதிய உயர்நிலைப் பள்ளிகளுக்கு அனுமதி வழங்கப்பட்டுக், கல்வி நீரோடை தங்குதடையின்றிப் பொங்கிப் பரவியது, மகிழ்ச்சியூட்டும் செய்தியாக அமைந்தது. சென்னைப் பல்கலைக் கழகத்தில் இந்த ஆண்டு பி.யூ.சி.க்கு 7,000 இடங்கள் என்ற பூரிப்பான செய்தி தரப்பட்டதை யடுத்து, சென்னைப் பல்கலைக் கழகத்தைப் பாராட்டிய "விடுதலை", இதற்கு முரணான போக்கைக் கையாளும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தைக் கண்டிக்கவும் தவறவில்லை. 5 லட்சம் ரூபாய் பெரியார் வழங்கிட, இந்த ஆண்டு பெரியார் ஈ.வெ.ரா. கல்லூரி திருச்சியில் துவங்கப் படுவதற்கான சூழ்நிலைகள் தோன்றின். மூன்றாவது பல்கலைக் கழகம் அமையும் அறிகுறிகள் தென்பட்டதால், அது அமைவதற்கு ஏற்ற இடம் திருச்சிராப்பள்ளி தான், என்று பெரியார் எழுதினார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பி.யூ.சி. இடம் 350 ல் இருந்து 400 என ஆக்கியதால், சர்.சி.பி. பாராட்டப் பெற்றார்.

சென்னையில் நடைபெற்ற நீதித்துறைப் பெரியோர்களின் கருத்தரங்கு ஒன்றில், சுயமரியாதைத் திருமணங்களைச் செல்லுபடியாக்க ஒரு சட்டம் தேவை என்ற கருத்து முன்னிடம் பெற்றதை ஒட்டி, "விடுதலை"யும் அரசினரை வலியுறுத்தியது. மேலும், வகுப்புவாரி உரிமை

நம் பிறப்புரிமை; அதில் கைவைக்காதீர்கள், என்றும் அரசை எச்சரித்தது. ''கடவுள் நம்பிக்கை ஒழிந்தால், சாதியும் தானே ஒழியும்!'' என்றார் பெரியார். ''ராஜாஜி புராணக் கருத்துகளில் அழுத்தமான நம்பிக்கை கொண்டவர். அதை விட்டு விட்டு,அவர் எங்களுடன் சேரவில்லை. அது போலவே நாங்களும் எங்கள் கொள்கையை விட்டு விட்டு, அவர் கருத்தை ஏற்றுக் கொண்டு விடவில்லை'' என்பதாக, 11-7-65-ல் அண்ணா சொன்னார்; ஆறுதலான செய்தி! பெரியாரின் ''தகுதி திறமை பேசும் அயோக்கியத்தனம்'' என்ற தொடர் தலையங்கத்தின் 3-ம் பகுதியில், பணம் கொடுத்து, மார்க் வாங்கிப் பாஸ் செய்கிற மோசடி பற்றிப் பெரியார் விளக்கியிருந்தார்.

''காமராசர் பல்லாண்டுவாழ்க!'' என்று 15-7-65 அன்று, அவரது 63-வது பிறந்த நாளில், ''விடுதலை'' வாழ்த்துக் கூறியது. ''திருச்சியில் 1,26,000 ரூபாய் வழங்கியதைப் பெற்றுக்கொண்டு, ''காங்கிரசை முறியடிக்க யாராலும் முடியாது! மற்றக் கட்சிகளிடம் ஒரு திட்டமும் இல்லையே!'' என்றார் காமராசர். ''கண்ணீர்த்;துளிகளுக்கு ஆட்சிநடத்த யோக்கியதை ஏது? அதனால் இந்த முறையும் காங்கிரஸ் வெற்றி உறுதிதான்!'' என்று எழுதினார் பெரியாரும்! சம்பத்தும் சுற்றுப் பயணங்கள் தொடர்ந்தார். காமராசர் சமதர்மப் பிரசாரப் பயணத்தைத் தொடங்கினார். அடுத்த ஆண்டும் அகில இந்தியக் காங்கிரசுக்குத் தலைவராகக் காமராசரே நீடிக்க வேண்டும், என்ற கருத்து பலமாக இருந்ததால், அதற்கேற்பக் காங்கிரசின் விதிகளைத் திருத்த முயன்ற போது, பெங்களூரில், மொரார்ஜி தேசாய் தமது மனச்சாட்சி இடந்தரவில்லையென மறுப்புத் தெரிவித்தார். மொரார்ஜி பார்ப்பனரானதால், துரோக புத்தியும் பழி வாங்கும் உணர்ச்சியும் கொண்டிருப்பதாகப் பெரியார் எடுத்துரைத்தார்.

தம்முடைய மணிவிழாவில், பல்வேறு நல்ல பணிகளுக்காகப் பத்து லட்சம் ரூபாய் வழங்கிய செட்டி நாட்டரசர் ராஜா சர் முத்தையச் செட்டியார் அவர்களுக்குத் திருச்சி-

யில் ஒரு விழாவில் பெரியார் பொன்னாடை போர்த்தினார். பெரியாரும் மணியம்மையாரும் தோழர்களுடன் சென்னையில் ராஜா சர் இல்லம் சென்று, அவருக்கு நேரில் வாழ்த்துக் கூறினார்கள். 2-8-1965 "விடுதலை"யில் பெரியார் மிக்க மனவருத்தத்துடன் "நமது முதல்வர்" என ஒரு தலையங்கக் கட்டுரை தீட்டினார்:-"எஸ்.எஸ்.எல்.சி.தேறியவர்கள்எல்லாருக்குமே கல்லூரியில் இடந்தரமுடியுமா?என்று நமது முதலமைச்சர் கேட்டாரராம்! எந்த நாட்டிலுமே இது இயலாதே என்றாராம்; வேறு எந்த நாட்டிலும் ஜாதிகள் இல்லையே? இங்கு எப்படியும் பார்ப்பான் 100க்கு 100 இடம் பெற்று விடுவானே? நம்மவனுக்குத்தானே இடம் கிடைக்காது? இமய உச்சிக்கும், பசிபிக் ஆழத்துக்கும் ஒப்பிட முடியுமா? இந்த மாகாணத்தில் வருடந்தோறும் கல்விக்காகச் செலவழிக்கிற 40 கோடி ரூபாயில், இந்த நாட்டுக்கு உரியவனுக்குப் பங்கு இல்லையா? அரசாங்கம் உடனே ஒரு சுற்றறிக்கையாவது விடவேண்டும்-'பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு முதலுரிமை கொடுத்துவிட்டு, மற்றதை எப்படி வேண்டுமானாலும் பயன்படுத்திக் கொள்ளலாம்' என்று. நமது முதல் மந்திரியார் செய்வாரா? அவரோ மேல் ஜாதி!"

தொடர்ந்து பெரியார் எழுதி வந்தார்; சமுதாய நீதியை வழங்கித், தற்காலக்கல்வி நெருக்கடியைத் தீருங்கள்—என்று. "காங்கிரஸ் ஜாதியை ஒழிக்கிறது, பணக்காரனை ஒழிக்கிறது; அப்பேர்ப்பட்ட காங்கிரசை ஒழிக்கத் திராவிட முன்னேற்றக் கழகம் விபீஷணராக இருக்கிறது. உழவர் கட்சி, குடிஅரசுக் கட்சி, முத்துராஜா கட்சி, நாம் தமிழர், தமிழ்அரசு, இடதுசாரி கம்யூனிஸ்டு, ஆச்சாரியாரின் கட்சி, வியாபாரிகள் கட்சி இவை அத்தனையும்சேர்ந்து காங்கிரசை பலவீனப்படுத்துவது சமூகத் துரோகமல்லவா?" என்று பெரியார் வினவினார். "மரியாதைக்குரிய குன்றக்குடி அடிகளாரைக் கோர்ட்டுக்கு வரச்சொல்லி 500ரூ. அபராதம் போடுவதா? தமிழன் ஆட்சியே தமிழர்க்குக் கேடாவதா? பதவி முழுவதும் பார்ப்பானுக்கா? வகுப்புரிமை பெற இயலாதென்றால் இந்திய யூனியனிலிருந்து விலகுங்கள்.

தமிழகம் பிரிந்தாலன்றிக் குறைதீர வழியில்லை. மதவெறியுள்ள ஆட்சியில், சமதர்மம் எப்படி வரமுடியும்? இந்த மந்திரிகளே, எல்லாரும் தகுதியற்ற மந்திரிகள்! இந்த அரசாங்கமே நமக்குத் தகுதியில்லை!"—ஆகஸ்ட் 10 முதல் 16 வரை சென்னையின் பல முக்கிய பேட்டைகளில் நடந்த பொதுக்கூட்டங்களில் பெரியாரின் முழக்கம் இவ்வாறுதான் இருந்தது!

'குடும்பக் கட்டுப்பாடோ, கருத்தடை செய்வதோ இயற்கைக்கு மாறானது; சுயக்கட்டுப்பாடுதான் தேவை என்ற ராஜாஜியின் பிற்போக்கு வாதத்தைச் சாடியது "விடுதலை". கண்ணீர்த்துளிக் கட்சியைச் சார்ந்த நடிகர்களான எஸ்.எஸ். ராஜேந்திரன், டி.வி. நாராயணசாமி ஆகியோர் மீது நடந்த வழக்கில், 100 ரூபாய் அபராதம் அல்லது 6 மாதச் சிறைவாசம் விதிக்கப்பட்டது. இன்னொரு நடிகரான எம்.ஜி. ராமச்சந்திரன் 8–8–65 அன்று பெரியார் திடலில் நடந்த காமராசர் பிறந்தநாள் விழாக் கூட்டத்தில் கலந்துகொண்டு, காமராசர் என் தலைவர்; அண்ணா என் வழிகாட்டி என்றார். பெரியாரையும் பாராட்டினார். மலேயாவுடன் ஒப்பந்தம் செய்துகொண்டு, சிங்கப்பூர் தனி நாடாகப் பிரகடனம் செய்துகொண்ட நிகழ்ச்சி, ஆங்கிலேயருக்கு அதிர்ச்சி தந்தது! அறிஞர் அண்ணா கீழ்த்திசை நாடுகளில் வெற்றிகரமான ஒரு சுற்றுப் பயணம் சென்று 21-8-65 அன்று குதூகலத்துடன் திரும்பினார்.

நாகப்பட்டினத்தில், தஞ்சை மாவட்ட திராவிடர் கழகம் கூடி, பெரியாரின் 87-ம் பிறந்த நாளில், ரூ 40,000 நிதி திரட்டி உதவுவதெனத் தீர்மானித்தது. திருச்சி காஜாமலையில் பெரியார் ஈ.வெ.ரா. கல்லூரி 24-8–65 அன்று தமிழக முதல்வர் பக்தவத்சலம் அவர்களால் தொடங்கப்பட்டது. $5\frac{1}{2}$ லட்சம் ரூபாய் பணம் உதவிய கல்வி வள்ளல் பெரியாருக்கு, முதல்வர் பொன்னாடை போர்த்தினார். பெரியாரைப் பேசச் சொல்லவில்லை. கல்லூரி பிரின்சிபால் கமலக்கண்ணன் வரவேற்றார். மாவட்ட ஆட்சித் தலைவர் சொக்கலிங்கம் தலைமை ஏற்றார்.

"இந்திய அரசியல் சட்டம் மோசடியானது. இந்திய அரசியல் சட்டம் பித்தலாட்டமானது. தமிழர்களுக்குத் திராவிட மக்களுக்குத் துரோகமானது. இந்திய அரசியல் சட்டம் யோக்கியமற்ற தன்மையானது. இதை இயற்றிய அரசியல் நிர்ணயசபை, பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டதல்ல. அரசியல் சட்டம் இயற்றுகின்ற காரியத்துக் காகவும் அது தேர்ந்தெடுக்கப்பட்டது அல்ல! சுதந்தரமே மோசடியானதுதான்!" என்ற கருத்தினைப் பெரியார் எழுதி னார். ஆகாசவாணியில் பி. எஸ். சிவஸ்வாமி அய்யர், சேலம் விஜயராகவாச்சாரியார், எஸ். சத்யமூர்த்தி அய்யர், ரைட் ஆனரபிள் வி.எஸ். சீனிவாச சாஸ்திரியார் ஆகிய நான்கு பெரு மக்களின் பிறந்தநாள் விழாக்கள் மட்டுமே ஒலிபரப்பாகும்—என்ற வர்ணாசிரம தர்மச் செய்தியை, "விடுதலை" 1–9–65 அன்று பெட்டிச் செய்தியாக வெளி யிட்டுக் காண்பித்திருந்தது!

பாகிஸ்தான்–சீனா இருநாடுகளும் வட இந்தியப் பகுதி களில் தொல்லை தந்துவந்தன. "நம் துரோகிகளை நம்பியும், பார்ப்பனர்களின் — பத்திரிகைகளின் காட்டிக்கொடுக்கும் தன்மையை நம்பியும் படையெடுத்த பாகிஸ்தான், ஒரு போதும் நம்மை வெல்ல முடியாது. பொதுமக்கள் அய்ந் தாம் படையினரின் விஷமங்களுக்கு இடந்தரக்கூடாது. கண்ட்ரோல், ரேஷன் முதலியவற்றால் நமக்கு எவ்வளவு கஷ்டம் வந்தாலும் பொருட்படுத்தாமல், நம் அரசுக்குப் போர் முயற்சிகளில் நாம் உதவ வேண்டும்," என்று பெரியார் தமது சுற்றுப் பயணத்தின்போது பிரச்சாரம் புரிந்தார். இந்த ஆண்டு தமது 87வது பிறந்தநாள் விழா அன்று பெரியார் பெங்களூரில் இருந்தார். ஜி.டி.நாயுடு அங்கு சென்று வாழ்த்துக்கூறியதோடு, கோவையில் குறிப்பிடத் தக்க ஒருவிழாவுக்கு, அதன் விவரம்கூறாமலே, பெரியாரிடம் தேதி பெற்றுச் சென்றார். காங்கிரஸ்காரரான திருமதி கமலா யாதவ் அம்மையார் தலைமையில், பெங்களூரில், பெரியார் பிறந்த நாள் விழாவும், பாக்கிஸ்தான் ஆக்கிர மிப்புக் கண்டன நாளும் சீருடன் கொண்டாடப் பெற்றன

சனகம்மையார் பெரியாருக்குப் பண ஆடை போர்த்தினார். சி.டி. அரசு,விசாலக்குமி சிவலிங்கம் வாழ்த்திப்பேசினார்கள்.

பெரியாரின் 87-வது ஆண்டு பிறந்த நாள் செய்தி இப்படியாக அமைந்திருந்தது: "இந்தியாவுக்குச் சமீபத்தில் வந்திருந்த ஒரு ரஷ்யப் பிரமுகரிடம் ஒரு பார்ப்பனர்—இந்தியாவுக்கு யார் வந்தாலும் சங்கராச்சாரியாரைப் பார்த்துவிட்டு வருவதுதான் முக்கியமான காரியம் என்று சொல்லி, அவரைச் சங்கராச்சாரியாரிடம் அழைத்துப் போனாராம். அந்த ரஷ்யர், பல விஷயங்களைப் பற்றிச் சங்கராச்சாரியாரிடம் பேசிவிட்டுக் கடைசியில் உங்கள் நாட்டில் உங்கள் சம்பிரதாயத்திற்கும், உங்கள் மத சம்பிரதாயத்திற்கும் விரோதமாகப் பெரியார் ஓர் இயக்கம் நடத்துகிறாரே, அதைப்பற்றி உங்களுடைய கருத்து என்ன—? என்று கேட்டாராம். அதற்குச் சங்கராச்சாரியார்—ஆமாம்! அப்படி ஓர் இயக்கம் நீண்ட நாட்களாக நடைபெற்று வருகிறது என்றாலும், அது இன்றைக்குப் பதினேழு வருடங்களுக்கு முன் வரையில் நாங்கள் மிகக் கவலை கொள்ளவேண்டிய அளவுக்கு நடந்தது. இப்போது அதைப்பற்றிக் கவலைப் படவேண்டிய அவசியமில்லாத நிலை ஏற்பட்டு விட்டது. அதன்பாட்டுக்கு அது நடைபெறுகிறது என்றாலும், அதனால் இன்று எங்களுக்கு எந்தவிதத் தொந்தரவும் இல்லை என்றாராம்.

இப்படி அவர் சொல்லக் காரணம் என்ன? என்று அந்த ரஷ்யர் என்னிடம் வந்து கேட்டார். அவர் இப்படி என்னைக் கேட்கும்போது ஒரு பார்ப்பனரும் கூட இருந்தார். 'அது ஒரு நல்ல அளவுக்கு உண்மைதான். எப்படி என்றால், நம் நாட்டுக்குச் சுதந்திரம் வந்து 17–ஆண்டுகள் ஆகிறது. அது பார்ப்பனருக்கு வந்த சுதந்திரமே ஆகும். நம்மிலிருந்து விளம்பரமும் செல்வாக்கும் பெற்ற ஒரு கூட்டம் பார்ப்பனருக்கு நிபந்தனையற்ற அடிமையாகக் கிடைத்துவிட்டது. அதனால் பார்ப்பனர்கள், இடையில் இழந்ததையெல்லாம் திரும்பவும் பெற்றுக் கொண்டு, மேலேற நல்ல வசதி ஏற்பட்டது.

அது மாத்திரமல்லாமல் நானும் பார்ப்பனச் சுதந்திரத்தை எதிர்க்கின்ற வேலையை விட்டு விட்டேன். இராஜாஜியை ஆட்சியைவிட்டு வெளியேற்றி விட்டோம் என்ற ஆணவம் எனக்கு. காமராசரிடத்தில் வைத்த, அளவுக்கு மீறிய நம்பிக்கை வேறு. இப்போது காமராசர் ஆட்சியை விட்டுப் போய் விட்டாலும், அசல் பார்ப்பனீய ஆட்சியே நடைபெற்றாலும்கூட நான் அதை வெளியில் சொல்லி, அழுது, திருப்திப்படக் கூடிய நிலைமை கூட இல்லாமல், காங்கிரசை ஆதரித்துத் தீரவேண்டியவனாய் விட்டேன். இது பார்ப்பனர்களுக்கு லாபமான விஷயமாகி விட்டது' என்று நான் பதில் சொன்னேன். அந்த ரஷ்யப் பிரமுகர் இது கேட்டுப் புன்சிரிப்புடன், பரிதாபப்பட்டார்.

ஆம். இன்று பார்ப்பனர்கள் கூண்டோடு காங்கிரசை ஒழித்துக்கட்டத்—தோல்வியடையச் செய்யப் பாடுபட்டாலும், அப் பார்ப்பன சமுதாய நலத்திற்கேற்ப, எல்லாக் காரியங்களையும் நமது ஆட்சி மூலம் நிறைவேற்றிக் கொள்ள, பக்த கோடிகளான மந்திரிகளும், அதிகாரிகளும், காங்கிரஸ்காரர்களும் தெரிந்தோ தெரியாமலோ அவர்களுக்கு உதவி வருகிறார்கள்.

இந்த நிலையில் எனக்குள்ள ஆறுதல் என்னவென்றால், இவ்வளவு எதிர்ப்பிலும் ஏமாற்றத்திலும்கூட, எனது தொண்டுக்குச் சாதகமாக இருக்கும் சுயமரியாதை இயக்கத்திலும், திராவிடர் கழகத்திலும், சுயநலமற்றுத் தியாக உணர்வுடன், எவ்விதப் பிரதிப் பிரயோஜனமும் எதிர்பாராமல், ஒழுக்கம் நாணயம் என்பதிலிருந்து ஒரு சிறிதும் வழுவாமல், தமிழ் நாட்டில், சென்னை முதல் குமரி வரை, ஆர்வமும் முயற்சியும் உள்ள தோழர்கள் நல்ல அளவுக்கு இருந்து ஆதரவளித்து, உற்சாகமூட்டி வருவதுடன், படிந்து தொண்டாற்றியும் வருவது எனக்கு உயிரூட்டிச் சலிப்படையாமல் உழைக்கச் செய்து வருகிறது. நமது இயக்கத்தால், உழைப்பால், மனித சமுதாயத்தின் நடத்தையில் பெரிய மாறுதல், மனமாற்றம் ஏற்பட்டு வருவதை உணருகிறேன்.

நாம் காங்கிரசைக் 'காப்பாற்றும்' தொண்டில் இறங்காமல் இருந்து, இந்த 10, 12 ஆண்டுகளில் 2, 3 முறை பதினாயிரக் கணக்கில் சிறை சென்று, காங்கிரசை எதிர்த்திருந்தால், வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவ முறை, கல்வி முன்னேற்றம், சுயமரியாதைத் திருமணச் செல்லுபடி, முழு ஆலயப் பிரவேசம் ஆகியவற்றில் பல உரிமைகள் பெற்றிருப்போம். என்ன செய்வது? இனியும் நாம் ஒன்றரை ஆண்டுக் காலத்திற்கு இந்தப் போக்கிலேயே இருக்க வேண்டியவர்களாயிருக்கிறோம்! நமது தொண்டுக்கு நன்றி காட்டாவிட்டாலும், நமது இலட்சியத்திற்குக் கேடு பயக்கும் பணியையாவது காங்கிரஸ் ஆட்சி செய்யாமல் இருக்கலாம். ஆனால், அப்படிக்கல்லாமல், நம்மால் காங்கிரசாட்சிக்கு ஒரு பயனும் இல்லை, தொல்லைதான் என்று காங்கிரஸ் கட்சி கருதுகிறபோது; நமது நிவர்த்தி இல்லாத முட்டாள் தனத்தைப் பற்றி, வெட்கப்பட வேண்டியதைத் தவிர, வேறு என்ன செய்ய முடியும்?"

கும்பகோணத்தில் கவிஞர் கண்ணதாசனின் "நான் ராஜாவானால்?" என்ற நாடகம் 19–9–65–ல் நடந்தது. நாடகத்தில் ரசபாவம் வேண்டும். மூட நம்பிக்கைகள் அரசியல் துறையிலிருந்தும் ஒழிக்கப்படவேண்டும்—என்று பெரியார் பேசினார். சிவாஜி கணேசனோ—நாங்கள் கம்மர்ஷியல் ஆக்டர்கள். கண்ணதாசன் அரசியல் ஆக்டர்—என்றார். பெரியார், "நம்முடைய நாடு சுதந்தரம் பெறாமலும், நம்முடைய கடவுள் மதம் ஆகியவை யோக்கியமாக இராமலும், நம்மிடையே ஒழுக்கம் நாணயம் இராமலும் இப்படியே இருந்தால், நாமும் மடையர்களாகத்தான் இருந்து வருவோம்"—என்று எழுதினார். "இல்லுஸ்ட்ரேடெட் வீக்லி" என்னும் ஆங்கில இதழாசிரியர் ஏ. எஸ். இராமன் என்னும் பார்ப்பனர், அண்ணாவை பேட்டி கண்டார். தி.மு.க.வில் பிராமணர் சேரலாமா என்ற கேள்விக்குப், பிராமணர் சேருவதை வரவேற்கிறேன் என்றும், ராஜாஜி சேருவதானால் அவருக்கு உங்கள் கட்சியின் தலைமையான பதவியைத் தருவீர்களா என்னும்

வினாவுக்கு, ஆம். அது தி. மு. க.வுக்குச் சிறப்பான நாளாகும் என்றும், அண்ணா பதில் கூறியிருந்ததை, 30–9–65 "விடுதலை", எடுத்தாண்டு, 'நவீன விபீஷண சரணா கதி' என மகுடமிட்டிருந்தது. சீனா, பாக்கிஸ்தான் படையெடுப்பில் இந்திய அரசுக்கு விரோதமான கருத்துகளைக் கூறி வந்ததால் திண்டிவனத்தில் ராஜாஜியின் "சுயராஜ்யா" "கல்கி" இதழ்களுக்குத் தீயிடப்பட்டது. பின் சென்னை அலுவலக எதிரில் ஆர்ப்பாட்டமும் நடைபெற்றது.

2-10–65 அன்று, புதிதாக அமைந்த தர்மபுரிமாவட்டத்தை முதலமைச்சர் துவக்கி வைத்தார். கோவையில் அக்டோபர் 3–ம் நாள், விஞ்ஞான மேதையும் தொழில் முனைவருமான ஜி. டி. நாயுடு, ஓர் ஒப்பற்ற புதுமையினைப் புகுத்தினார். பெரியாருடைய தொண்டுக்குக் கிடைத்த பலன்; வேறெங்கோ போக வேண்டிய பணம் தொழிற் கல்விக்கு வருகிறது, என்று நாயுடு குறிப்பிட்டவாறு, அவரது நிர்வாகத்தில் அமைக்கப்பட்ட, சிருங்கேரி ஜகத்குரு சங்கராச் சார்ய வித்யா தீர்த்த சுவாமிகள் பயிற்சிப் பள்ளியைப், பெரியார் திறந்து வைத்து, "நான் என் Policyயை மாற்றுவ துண்டு. ஆனால் என் Principle என்றும் மாறாது. எனது தொண்டினால் சங்கராச்சாரிகள் மனமாற்றம் குறித்து நான் பெருமைப்படுகிறேன். அவரது உதவி, தொழில் கல்விக் கூடத்துக்குக் கிடைத்தது பற்றி மகிழ்ச்சியடைகிறேன். இதைப் பயன்படுத்திக் கொண்ட நாயுடுகாரு பாராட்டுக்கு உரியவர். எனக்குச் சென்னையில் டிராம் ஷெட் இடத்தை வாங்கித் தந்தவரே நாயுடுதான்" என்று பெரியார் பேசினார். சர் பி. டி. இராஜன் மேல் நாட்டில் இருந்து வர முடியாததால், ஈ. வெ. ராமசாமிப் பெரியார் பயிற்சிப் பள்ளியை, நாடாளுமன்ற உறுப்பினர் ராம கிருஷ்ணன் திறந்து வைத்தார். டி. எம். நாராயணசாமிப் பிள்ளை தலைமையில் தி. சு. அவிநாசிலிங்கஞ் செட்டியார் வாழ்த்திப் பேசினார். சர் சி. வி. ராமன் விஞ்ஞானக் கண் காட்சியைத் திறந்தார். இந்தியாவிலேயே முதன் முறையாக சங்கராச்சாரியாரின் பணி இதுதான் என்பது, அங்கு குறிப்

வினாவுக்கு, ஆம். அது தி. மு. க.வுக்குச் சிறப்பான நாளாகும் என்றும், அண்ணா பதில் கூறியிருந்ததை, 30–9–65 "விடுதலை" எடுத்தாண்டு, 'நவீன விபீஷண சரணாகதி' என மகுடமிட்டிருந்தது. சீனா, பாக்கிஸ்தான் படையெடுப்பில் இந்திய அரசுக்கு விரோதமான கருத்துகளைக் கூறி வந்ததால் திண்டிவனத்தில் ராஜாஜியின் "சுயராஜ்யா" "கல்கி" இதழ்களுக்குத் தீயிடப்பட்டது. பின் சென்னை அலுவலக எதிரில் ஆர்ப்பாட்டமும் நடைபெற்றது.

2-10-65 அன்று, புதிதாக அமைந்த தர்மபுரிமாவட்டத்தை முதலமைச்சர் துவக்கி வைத்தார். கோவையில் அக்டோபர் 3–ம் நாள், விஞ்ஞான மேதையும் தொழில் முனைவருமான ஜி. டி. நாயுடு, ஓர் ஒப்பற்ற புதுமையினைப் புகுத்தினார். பெரியாருடைய தொண்டுக்குக் கிடைத்த பலன்; வேறெங்கோ போக வேண்டிய பணம் தொழிற் கல்விக்கு வருகிறது, என்று நாயுடு குறிப்பிட்டவாறு, அவரது நிர்வாகத்தில் அமைக்கப்பட்ட, சிருங்கேரி ஜகத்குரு சங்கராச்சார்ய வித்யா தீர்த்த சுவாமிகள் பயிற்சிப் பள்ளியைப், பெரியார் திறந்து வைத்து, "நான் என் Policyயை மாற்றுவதுண்டு. ஆனால் என் Principle என்றும் மாறாது. எனது தொண்டினால் சங்கராச்சாரிகள் மனமாற்றம் குறித்து நான் பெருமைப்படுகிறேன். அவரது உதவி, தொழில் கல்விக் கூடத்துக்குக் கிடைத்தது பற்றி மகிழ்ச்சியடைகிறேன். இதைப் பயன்படுத்திக் கொண்ட நாயுடுகாரு பாராட்டுக்கு உரியவர். எனக்குச் சென்னையில் டிராம் ஷெட் இடத்தை வாங்கித் தந்தவரே நாயுடுதான்" என்று பெரியார் பேசினார். சர் பி. டி. இராஜன் மேல் நாட்டில் இருந்து வர முடியாததால், ஈ. வெ. ராமசாமிப் பெரியார் பயிற்சிப் பள்ளியை, நாடாளுமன்ற உறுப்பினர் ராமகிருஷ்ணன் திறந்து வைத்தார். டி. எம். நாராயணசாமிப் பிள்ளை தலைமையில் தி. சு. அவிநாசிலிங்கஞ் செட்டியார் வாழ்த்திப் பேசினார். சர் சி. வி. ராமன் விஞ்ஞானக் கண்காட்சியைத் திறந்தார். இந்தியாவிலேயே முதன் முறையாக சங்கராச்சாரியாரின் பணி இதுதான் என்பது, அங்கு குறிப்

பிட்டுக் காட்டப்பட்டது; இது பெரியாரின் அறிவுப் பணிக்குக் கிட்டிய பெரு வெற்றியாகும். இந்த நிகழ்ச்சிகளின் புகைப்படங்கள் "விடுதலை"யில் 20-11-65 அன்று அச்சாகி வெளிவந்தன.

"அந்தோ சுயமரியாதைச் சுடரொளி மறைந்தது" என்று 12-10-65 "விடுதலை" துணைத் தலையங்கம் எழுதி வருந்திட, முந்திய நாள், தமது'59-ஆம் வயதில், 17 ஆண்டுகள் "விடுதலை" ஆசிரியராகப் பணியாற்றிய குத்தூசி குருசாமி மறைந்தார்! அய்னாவரம் இடுகாட்டில் நடந்த அனுதாபக் கூட்டத்திற்குத் தி.பொ. வேதாசலம் தலைமை தாங்கினார். தொண்டு வீராசாமி, கி. வீரமணி, எம். கல்யாணசுந்தரம் எம். எல். ஏ., ஈ. வெ. கி. சம்பத், நடிகர் டி. கே. சண்முகம், அறிஞர் சி. என். அண்ணாதுரை எம். பி. ஆகியோர் இரங்கலுரையாற்றினர். அருப்புக்கோட்டை எஸ். எஸ். கருப்பையா விடுத்த ஒரு வேண்டுகோளில், பெரியார் தமது வேனிலிருந்தவாறே பிரச்சாரம் செய்ய நாம் வசதி செய்து தரவேண்டும் என்றார். (பின்னாளில் அவ்வாறே செய்யப் பட்டது)

சென்னை பெரியார் திடலில் அமைந்த "விடுதலை" பணிமனையின் புதிய கட்டடத்தைப் பெரியார் தலைமையில் குன்றக்குடி அடிகளார், 31-10-65 ஞாயிறு அன்று மாலை 5-30 மணிக்கு திறந்து வைத்துத் "தமிழர் இல்லம் என, ஒரு வீட்டை அறிவிக்கும் பலகை போல, எல்லா வீடுகளிலும் "விடுதலை" ஏடு வரவழைக்கப்பட வேண்டும்" என்று அறிவுரை இயம்பினார். "பத்திரிகைத் தொழில் பெரிதும் அயோக்கியர்களிடம் சரணடைந்துவிட்டது. அப்பத்திரிகைகளுக்கு அடிமையாகிறவன் கோழை; அப்பேர்ப்பட்ட பத்திரிகைகளை வெறுத்து ஒதுக்குகிறவனே வீர"னென்று பெரியார் எழுதினார்.

காஷ்மீர் பாக்கிஸ்தானுக்கா இந்தியாவுக்கா என அங்கே வாக்கெடுப்பு நடத்த வேண்டும், என்ற கருத்தினை ராஜாஜி தெரிவிக்கையில், தமிழ் நாட்டுக்குப் பார்ப்பான் வேண்டுமா வேண்டாமா என்று ஓட்டெடுக்கத் தயாரா என

"விடுதலை" வினா எழுப்பியது. திங்கட்கிழமை ஒரு வேளை பட்டினி இருந்து, மிச்சப்படுத்திப், போர் நிதிக்குத் தாருங்கள் என்று பிரதமர் சாஸ்திரி வேண்டுகோள் விடுத்தார். அத்துடன், தங்கம் நிறையத் தேவை என்றும் தெரிவித்திருந்தார். அவர் தமிழகத்துக்கு வருகை தந்தபோது, 1,11,11,111 ரூபாய் யுத்த நிதி தரப்பட்டது. சினிமா நடிகர்கள் நிறையத் தங்க நகைகளைத் தந்தார்கள். வாஜிகணேசன் அவ்வாறு தந்தபோது, "நன்கொடையா? கடன் பத்திரமா?" என்று பிரதமர் கேட்க, நன்கொடைதான் என இவர் பதில் சொல்ல, அவர் மகிழ்ந்து போனார்! "விடுதலை"போர்ச் செய்திகட்கும், மத்திய அமைச்சர்களின் பேச்சுகளுக்கும், முக்கியத்துவம் தந்தது. போரைப் பற்றிப் பெரியார் அக்டோபர் 29–ல் கும்பகோணத்தில், மாவட்டத் தலைவர் தோலி ஆர். சுப்பிரமணி தலைமையில் பேசினார். நவம்பர் 1–ம் நாள் மயிலாப்பூரில், டி. எம். சண்முகம் தலைமையில் பெரியாருடன் வீரமணியும் டி. வி. தெட்சணாமூர்த்தியும் பேசினார்கள். பெரியார், 4 வேலாயுதம் பாளையம், 5 ஈரோடு, 8 சிதம்பரம், 14 சேலம், 15 முதல் 19 வரை சென்னை, 21 22 பெங்களூர், 23 காஞ்சிபுரம் என்று சுற்றுப் பிரயாணம் சென்ற போதும், போர் நிலவரங் குறித்துப் பேசி வந்தார். சேலம் கல்லூரிச் சரித்திரப் பேராசிரியர் தி. வை. சொக்கப்பா, சிறந்த பகுத்தறிவாளர். அன்னார் ஓய்வு பெற்றதை முன்னிட்டுச் சேலம் அன்பர்கள் பெரியார் வாயிலாக 2,000 ரூபாய் பொற்கிழி வழங்கினர். பெரியார் தாமும் ரூபாய் 100–ம், அடிகளார் ரூ 101ம், அன்பளிப்பாகத் தந்தனர் . கல்வி அதிகாரி சு. செல்லப்பன் பாராட்டுரை நல்கினார்.

"உத்தியோக மண்டலத்தில் தமிழர்கள் கதி" என்று தலைப்பிட்டு, அய். ஏ. எஸ். அதிகாரிகள் பட்டியலை வெளியிட்டு,எவ்வளவு பார்ப்பனர் உயர்மட்டத்தில் ஆதிக்கம் செலுத்தி வருகின்றனர் எனப், பெரியார் "விடுதலை"யில் தலையங்கமே தீட்டினார். 27–4-65 முதல் 3-12-65 வரை உடல் நலிவுற்றுச் சென்னைப் பொது மருத்துவமனையில்

தங்கிச் சிகிச்சை பெற்றபின்னர், 4-12-65 முதல், பிரயாணம் தொடர்ந்தார். கும்பகோணம் இயக்கப் பெரியவர் கே.கே. நீலமேகம், டிசம்பர் 17-ம் நாள் மறைந்தார். "விடுதலை" அலுவலகம், 15-ம் நாள் முதல் ரண்டால்ஸ் ரோடுக்கு மாற்றப்பட்டுவிட்டது. ராதா மன்றத்தில், அரசுத்துறை சார்பில் நடந்த, காய்கறிகள் கோழிகள் காட்சி ஒன்றைச் சக்கர நாற்காலியில் அமர்ந்தவண்ணமே, பெரியார் சுற்றிப் பார்த்துக், "கோழி வளர்ப்பதால் நல்ல லாபம் கிடைக்கிறது. மேலும் அது நல்ல சத்துணவைத் தருகிறது, அதாவது கோழி முட்டை தவிரக் கோழியும் நல்ல உணவாகுமே" என்றார். (சம்பத் இதைக் கேட்டுத்தான் கோழிப்பண்ணை வைத்தாரோ, என்னவோ?)

கம்யூனிஸ்டுத் தீவிரவாதிகளான இடதுசாரிகளில், பாது காப்புக் கைதிகளாக இருந்த சிலரை, வெளியே விடுவதற்கு இணங்கிய உயர்நீதிமன்ற நீதிபதிகள், காவல் கைதிகளுக்குச் சந்தர்ப்பம் கொடுப்பது விரும்பத் தக்கதாகும் என்று கூறியதைப், பெரியார் வன்மையாகக் கண்டித்து, ஜட்ஜு களுக்குச் சிந்திக்கச் சக்தி வேண்டும் என்றார். திருச்சியில் ஒரு நீதிமன்றத்தில், பாமரர் ஒருவரைக் கூண்டிலேற்ற நேர்ந்த போது, எம்.எஸ். வெங்கட்ராமய்யர் என்ற வக்கீல் பார்ப் பனர் "நீதிமன்றம் இப்போது ஒரு காமராஜைப் பார்க்கப் போகிறது (The honourable court will see one Kamaraj now)" என்று பகிரங்கமாகக் கேலிசெய்தார். முத்துக்குமார சாமி என்ற தமிழ் வழக்கறிஞர், "ஏன் ஓர் அகில இந்தியத் தலைவரைக் கிண்டல் செய்கிறீர்கள்?" என்று கேட்டார். சிவசுப்ரமணிய அய்யர் என்ற இன்னொரு பார்ப்பன வக்கீல் "அதில் என்ன தப்பு?" என்று கேட்டார். பார்ப்பனரின் மனப்போக்கை வெளிப்படுத்த, இதைக் கண்டித்துப் பேசப் போவதாக விளம்பரப்படுத்தியே, பெரியார், டிசம்பர் 18-ல், திருச்சியில், ஒரு பொதுக்கூட்டமே நடத்திக் கண்டித்தார். சங்கராச்சாரியார், திருமணங்களைச் சிக்கனமாக 500 ரூபாய் செலவில் முடிக்கவேண்டும் என்று அறிவுரை கூறினார். "நல்ல யோசனைதான். நாட்டில் லஞ்சம் குறையும். பார்ப்ப

னர்கள்தான் லஞ்சம் வாங்கும் பழக்கத்தை ஏற்படுத்திய வர்கள். லஞ்சப் பணத்தில்தான் ஆடம்பரமாகப் பெண்களின் திருமணம் நடத்துவார்கள். இதில் சங்கராச்சாரியார் சொல் வதை எவன் கேட்பான்?'' என்று எழுதினார் பெரியார்.

யுத்த நிலைமை தொடர்வதால் 1967 பொதுத் தேர் தலைத் தள்ளி வைக்கலாம் என்ற கருத்துக் கூறப்பட்டது. உடனே பெரியார்—''எதிரிகள் வெள்ளைக்கொடி பறக்க விட்டுவிட்டார்கள். சுதந்தரா, கண்ணீர்த்துளி, தமிழ் அரசு ஆகிய கட்சிகள் 1967-ல் தேர்தல் வேண்டாம் என்கிறார் களாம். இவர்கள் தேர்தலில் நிற்பார்கள். நல்லவண்ணம் தோற்பார்கள். ஏன் தோற்றீர்கள்? என்றால், பாதுகாப்புச் சட்டம் பாய்ந்து விட்டது என்பார்கள். இவர்கள் பேச்சுக்குச் செவி சாய்க்கவேண்டாம்'' என்று எழுதினார். சேலத்தில் ராஜாஜியின் 88-வது பிறந்த நாள் விழாவில் 31-12-65 அன்று கலைஞர் மு. கருணாநிதி, மதுரை முத்து, கே. ராஜாராம் எம்.பி., சென்னை மேயர் மைனர் மோசஸ் ஆகியோர் பங்கேற்றதை, ''விடுதலை'' எள்ளி நகைத்தது! டெல்லியில் டி.டி.கே. ராஜிநாமாச்செய்யவும், சுசீந்திரசவுத்ரி என்ற வங் காளி நிதியமைச்சராகவும், சி.எம். பூனாச்சா என்ற கன்ன டியர் ராஜாங்க அமைச்சராகவும் நியமிக்கப்பட்டனர். கவர் னர்கள் தங்களுக்கு ஏதோ குறைகள் இருப்பது போல விண்ணப்பித்ததைக் கண்டித்து, ''இவர்களும் அரசாங்க சிப்பந்திகள்தானே? தனிச்சலுகை எதற்கு? பார்க்கப் போனால் இந்தப் பதவியே வீண்பளுதானே?'' என்று—கவர் னர்கள் முறையீடு கேலிக் கூத்தே என்னுந் தலையங்கம், ''விடுதலை''யில் 31-12-65 அன்று பெரியார் எழுதியிருந்தார். அடுத்து, கவர்னர் லீவின் தொல்லை என்று ஒரு கருத்தும் தெரிவித்தார். அதாவது கவர்னர்கள்அடிக்கடி லீவில் செல்வ தால், பிரதம நீதிபதி ஆக்டிங் கவர்னராகிவிடவே, நீதிமன்ற வேலைகள் பாதிக்கப்படுகின்றன. மேலும், அப்போது தமிழ் நாட்டைப் பொறுத்துப், பெரியார் விரும்பாத சிக்கல் ஒன்று! மைசூர் மகாராஜா தமிழக கவர்னர், இவர் அடிக்கடி லீவில் செல்லவே, பிரதம நீதிபதி சந்திராரெட்டி கவர்னராகத்

தற்காலிக அலுவல் பார்க்க; சீனியர் நீதிபதியாகிய மா. அனந்தநாராயணன் அய்.சி.எஸ். பிரதம நீதிபதியாக விளங்கிய சிக்கல்தான் அது! தேவையில்லாமல், சட்டம் பயி லாத ஒரு பார்ப்பனர், உயர்நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி யாக வந்ததைப், பெரியார் பலமுறை பகிரங்கமாகக் கண்டித்து எழுதினார், பேசினார்; இதற்காகப் பக்தவத்சலம் ஆட்சியைக் குறை கூறினார்!

தொழிலாளர் என்கிற இனத்தையே ஒழித்துவிட்டு, முதலாளி கண்ட்ராக்டர் பங்காளி என்கிற முப்பிரிவினர் தாம் தொழிற்சாலைகளை நடத்தவேண்டும். அப்போது தான் தொழிலாளர் வேலை நிறுத்தம் போன்ற தொல்லை களும், இதற்கேற்பத் தொழிலாளர் சட்டம் இயற்றுதலும் ஒழியும்—என்ற தமது கருத்தைப் பெரியார் 1-1-1966 தலை யங்கம் மூலமாகத் தெரிவித்து வலியுறுத்தினார். "திரு வள்ளூர் தட்டை கிருஷ்ணமாச்சாரி சும்மா ராஜிநாமாச் செய்யவில்லை. மிகபலத்த குற்றச்சாட்டுகளுக்கு உள்ளாகி யிருந்தார். டிடிகே டிவிஎஸ் கம்பெனிகளுக்கு, எண்ணற்ற சலுகை காட்டினாராம். அவர்மீது நடவடிக்கை வேண் டாமா? ராஜிநாமா போதுமா? பார்ப்பன நீதியும், தர்மமும் இப்படித்தானா? இதில் அரசாங்கத்தின் Stand என்ன?" என்று பெரியார் எழுதித் தீர்த்து விட்டார்!

சனவரி 8-ம் நாள் பெரியார் திடலில் சிவாஜிகணேசனின் "வேங்கையின் மைந்தன்" நாடகம் நடந்தது. திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் துணைமேயராயிருந்து, சம்பத்தோடு போன மணிவண்ணன் உதவிக்காக நடந்தது இது. பெரியாரும், காமராசரும்; அப்போதுதான் காங்கிரசில் சேர்ந்த டாக்டர் ஏ. கிருஷ்ணசாமியும் கலந்துகொண்டனர். கண்ணதாசன் வரவேற்றார். நமக்கு மான உணர்ச்சியும் துணிவும் ஊட்டியவர் பெரியார்தான்—என்று காமராசர் பாராட்டினார். தலைவர் காமராசரால்தான் நம் தமிழ் நாட்டுக்கு விமோசனம் ஏற்பட்டது; கல்விபெருகியது என்று பெரியார் பாராட்டினார். வசூலான தொகையாகிய 3,000 ரூபாயைக் காமராசர் வழங்கினார். நடிகர் திலகம் சிவாஜி

1,200 ரூபாய் வழங்கினார். வள்ளல் பெரியாரும் 100 ரூபாய் வழங்கியருளினார். இந்த நேரத்தில் பெரியார், தாம் ரஷ்யாவில், கருத்து மிக்க 3,4 நாடகங்கள் பார்த்ததாகக் குறிப்பிட்டு, அவற்றில் ஒரு கதையையும் சொன்னார்:- பாதிரி ஒருவர் ஒரு மகானுடைய சமாதிக்குப் பக்கத்தில் அமர்ந்து, அவர் பெருமைகளைச் சொல்லி, ஏராளமாகப் பொருள் குவித்து வந்தார். அவருடைய மகன் கட்டுப்பாடில் லாமல் திரிந்ததால், அவனிடத்தில் ஒரு கழுதையைக் கொடுத்து, இதை வைத்து எங்காவது போய்ப் பிழைத்துக் கொள் என்றாராம். சில நாள் கழித்து அவனும் ஏதோ ஒரு மகானுடைய சமாதி எழுப்பி, அதன் மூலமாக வருவாயை உண்டாக்கிப், பெருமையுடன் வாழ்ந்து வரக் கேள்விப்பட்டு, அவனைப் பார்த்து, யாரடா இந்த மகான்? என்று கேட்டா ராம். அப்பா, யாரிடமும் உண்மையைச் சொல்லி விடா தீர்கள்! நீங்கள் கொடுத்தீர்களே கழுதைக்குட்டி, அது செத்துப் போய்விட்டது. அதைத்தான் இங்கே புதைத்து விட்டுச், சமாதி கட்டி, மகான் சமாதி என்று மகத்துவம் உண்டாக்கினேன் என்றானாம். அட மடையா! நான் வைத் திருக்கும் சமாதி மட்டும் எந்த மகானுடையது என்று நினைத்தாய்? இதே கழுதையினுடைய தாய்க்கழுதையின் சமாதிதான் அது, என்றாராம் தந்தை! இதன்மூலமாகப் பாதிரிகளின் மோசடிகளை விளக்கி, மக்களுக்குப் பகுத் தறிவை உண்டாக்குகிறார்கள் ரஷ்யாவில். இங்கு அப்படி யில்லையே? என்றார் பெரியார்.

ரஷ்யாவில், டாஷ்கண்டில், கோசிஜின் முயற்சியால் சந்தித்துப் பேசிய அயூப்கான்—லால்பகதூர்சாஸ்திரி பேச்சு வார்த்தைகளில், நல்ல திருப்பம் ஏற்பட்டது. "டாஷ்கண்ட் முடிவினால் இந்தியாவுக்குத் தொல்லை நீங்கிற்று; பாகிஸ் தானுக்குத் தோல்வி நீங்கிற்று; கோசிஜின்னுக்கு உலகப்புகழ் கிடைத்தது"—என்று பெரியார் கருத்துக் கூறினார். ஆனால் அந்தோ! இந்த வெற்றியைத் தொடர்ந்து சாஸ்திரி யின் திடீர் மறைவுச் செய்தியும் கிட்டியது. பெரியார் திருச்சியிலிருந்து தொலை பேசி வாயிலாக "விடுதலை"க்கு

அனுதாபச் செய்தி அனுப்பினார். அடுத்த பிரதமர் சவானாக இருக்கலாம் எனப் பெரியார் யூகித்தார், அவர் மராட்டியர் என்பதால்! ஆனால் ராஜாஜி, தன் விருப்பம் நந்தா என்று தெரிவித்தார். இதற்குள் இந்திராகாந்தியின் பெயர் அடிப்பட்டது. காமராசரால் ஆதரிக்கப்பட்டவர் யாராயிருந்தாலும் சரிதான். அது இந்திராவானாலும் நல்லதே என்று பெரியார் கருதினார். 19-1-66 அன்று, பிரதமர் பதவிக்குப் போட்டி ஏற்பட்டது. இந்திராகாந்திக்கு 355 வாக்குகளும், மொரார்ஜி தேசாய்க்கு 169 வாக்குகளும் கிடைக்கவே, முறைப்படி இந்திரா பிரதமரானார். 66ல் ஆசைப்பட்ட மொரார்ஜிக்கு, 77-ல் கிடைத்தது இந்தியப் பிரதமர் பதவி! இந்தத் தேர்தல், சமதர்மத்திற்கும்—ஜாதி, பணதர்மத்திற்கும் இடையில் நடந்த போராட்டமே எனப் பெரியார் கணக்கிட்டார்.

மத்திய சுகாதார அமைச்சர் சுசீலா நய்யார் தகுதி திறமை பற்றிக் குறிப்பிட்டிருந்தார். "இவர் யாரென்றே நாட்டுக்குத் தெரியாது! இருக்கிற பதவியினால் இப்படிப் பேசுகிறார்களா இந்த அம்மையார்? இது என்ன முட்டாள் தனமா? அல்லது யோக்கியமற்றதனமா?" என்று பெரியார் மிகுந்த ஆத்திரமும் சினமும் கொப்புளிக்கக் கேட்டார். தஞ்சையில், கீழ ராஜ வீதியில், கழகத்திற்கென வாங்கப் பட்ட பெரியார் இல்லம், புதுப்பிக்கப்பட அவசியம் ஏற் பட்டது. ஏற்கனவே அந்தப் பழைய கட்டடம் வாங்கவும் பெரியாரே 12,500 ரூபாய் வழங்கினார். இப்போதும் 8,500 ரூபாய் தந்தார். நடிகவேள் ராதா ரூ. 3,000 பெறுமான இரும்பு வாரைகள் வாங்கித் தருவதாகச் சொல்லியிருந்தார். (ஆனால் தரவில்லை) தஞ்சை மாவட்டக் கழகத்தினரும் நன்கொடை திரட்டினர். அனைத்தும் சேர்ந்து, ரூ. 34,000 மதிப்புள்ளதாக உருவாக்கப் பட்ட அக்கட்டடத்தை எம். ஆர். ராதா, சனவரி 23-ம் நாள் திறந்து வைத்தார்; பெரியார் சிறப்புரை நிகழ்த்தினார். பெரியார் பிறந்த நாளையொட்டி 30-1-66 அன்று, சேலத்தில், 117 வெவ்வேறு பொருள்கள், சுமார் 3,000 ரூபாய் மதிப்புள்ளவற்றைப்

பெரியாருக்கு அன்பளிப்பாகப் பலரும் உதவினார்கள். 31-ம் நாள் சென்னை தண்டையார்பேட்டையில், ஜீவானந்தம் சிலை திறப்பு விழாவை ஒட்டி, ஜீவா வாழ்க்கை வரலாறு என்று, கே. பாலதண்டாயுதம் எழுதிய நூலைத், தாட்டே தலைமையில் பெரியார் வெளியிட்டார். முந்திய நாள் நடைபெற்ற சிலை திறப்பு விழாவுக்கே, பெரியாரை அழைத்த போதிலும், அந்த நிகழ்ச்சியில் கலந்து கொண்ட வேறு சிலருடன், தாமும் அன்று பங்கு பெற விருப்பமில்லை என்றே, மறுநாள் வந்தார் பெரியார். முதல் நாள் பி. சி. ஜோஷி, காமராசர், பக்தவத்சலம், இராஜாஜி, ம. பொ. சிவஞானம், ஈ. வெ. கி. சம்பத் ஆகியோர் கலந்து கொண்டனர்.

திராவிட முன்னேற்றக் கழகம் தேர்தல் நிதி திரட்டிட 1,000 ரூபாய், 100 ரூபாய் நன்கொடைச் சீட்டுகள் அச்சிட்டதைச் சுட்டிக் காட்டிப், பணக்காரர் ஆதரவு பெருகியிருப்பதாக "விடுதலை" செய்தி வெளியிட்டது. அத்துடன், நாட்டில் பணத்திருட்டுகளும், லஞ்சமும், ஊழலும் நிர்வாகத்தில் அதிகமாகியிருக்கக் காரணம், யாவும் பார்ப்பனமயமாயிருப்பதுதான், என்ற பெரியாரின் பெட்டிச் செய்தியும் பிரசுரமாயிற்று. குன்றக்குடி அடிகளார் கிண்டி பொறியியற் கல்லூரியில் உரையாற்றுகையில், பத்திரிகைகள் சோதிடத்தைப் பரப்பி வருவது கிரிமினல் குற்றமாக்கப்பட வேண்டும் என்றார். ஜெய்ப்பூர் காங்கிரசில் தலைமை ஏற்ற காங்கிரஸ் தலைவர் காமராசர், உற்பத்தியில் மாநில அரசே பெரும் பங்கு கொண்டு ஈடுபட வேண்டும், என்று வலியுறுத்தினார்.

பெரியார் பிப்ரவரி முதல் வாரம் சென்னையில் தங்கியிருந்தார். "விடுதலை" தலையங்கப் பகுதி பெரியாரால் ஆக்கிரமிக்கப்பட்டிருந்தது. நாட்டிலுள்ள கட்சிகளின் தன்மை, அவற்றின் தற்காலஎதிர்கால நிலவரம்,வரவிருக்கும் தேர்தல், இவை பற்றி "ஜனநாயகம்" என்ற தலைப்பில் மூன்று கட்டுரைகள். "சட்டசபை கவுரவம்" என்னும் மகுடமிட்டு, ஜனநாயகம், தேர்தல், சட்டமன்ற நடப்பு

இவை நல்லவண்ணம் பாதுகாக்கப்பட்டுப் பயனுடன் நடைபெற, உரிய சில சட்டங்கள் இயற்றப்படவேண்டும் என்று ஒரு கட்டுரை. "ரஷ்யப் படையெடுப்பை வரவேற்கிறேன்" என்ற புரட்சிகரமான கட்டுரை ஒன்று. பாக்கிஸ்தானோ, சீனாவோ இந்தியாமீது படையெடுத்தால், முறியடித்துத் துரத்திடவே நான் விரும்புகிறேன்; அதற்காக ஒத்துழைக்கிறேன். ஆனால் இந்தியாமீது ரஷ்யா படையெடுத்து வருமானால், அதை நான் எதிர்க்க மாட்டேன்; வரவேற்பேன்! ஏனென்றால், நானே ரஷ்யா சென்றிருந்தபோது, கம்யூனிஸ்ட் உறுப்பினர் ஆனவன்தான்! இங்கு வந்து கம்யூனிசக் கொள்கை பேசியதற்காக, என்னால் ஆதரிக்கப்பட்ட ஜஸ்டிஸ் கட்சி அரசால், சிறையிடப்பட்டவன்! இன்றுள்ள கம்யூனிஸ்டுகளைவிட, நான்தான் தமிழ் நாட்டில் உண்மையான கம்யூனிஸ்டு—என்றெல்லாம் விளக்கமாக இரு கட்டுரைகள் பெரியார் எழுதினார். இவற்றுக்குச் சில விளக்கங்களை அளிக்க பாலதண்டாயுதம் விரும்பியபோது, அதற்கும் பெருந்தன்மையுடன் வாய்ப்புத் தந்து, அவரது கட்டுரை ஒன்றையும் 26–2–66 "விடுதலை"யில் பிரசுரிக்கச் செய்தார் பெரியார்.

தமிழனது பழம் பெருமை என்பது காட்டுமிராண்டித் தனமேயாகும். கம்பனும், இளங்கோவனும் காட்டுமிராண்டிகளே ஆவார்கள். புளுகு இலக்கியத்துக்குப் பரிசு தருவதானால் இவர்களுக்குத் தரலாம். அறிவுப் பிரச்சாரம் செய்வதற்கு எங்களைத் தவிர இந்த நாட்டில் வேறுநாதி ஏது?—என்று சாடுவதற்கு ஒரு தலையங்கம். ஜோசியம் சொல்லுகிறவனுக்கு அடிப்படையானவை பித்தலாட்டம், மோசடி, ஆகியவை; ஜோசியம் கேட்பவனுக்கு அடிப்படை முட்டாள்தனம்,பேராசை ஆகியவை—எனப் படம்பிடித்துக் காட்டுவதற்கு ஒரு கட்டுரை. டி. டி. கிருஷ்ணமாச்சாரி மீது தனிப்பட்ட முறையில் நமக்கு விரோதமில்லை. ஆனால் பொது வாழ்க்கையில் உள்ளவர் ஒழுக்கமாயிருக்க வேண்டுமல்லவா? அதற்காகக் கட்டாயம் அவர்மீது விசாரணை நடத்தியே தீரவேண்டும்—எனவலியுறுத்தி ஓர் தலையங்கம்,

காங்கிரஸ் மாநாடு ஜெய்ப்பூரில் கூடிக் கலைந்துவிட்டது; இனிக் காங்கிரசின் அடுத்த வேலைத் திட்டம் என்ன? காமராசர் கவனம் செலுத்தியாக வேண்டும். காமராசரின் சமதர்மத் திட்டங்களை இன்னும் நல்ல முறையில் பிரச்சாரம் செய்யப் பத்திரிகைகள் வேண்டும். புதிதாகவும் துவங்க வேண்டும். ஆரம்பத்தில் நட்டம் வரும். அதற்காகப் பின் வாங்கக் கூடாது. என்னுடைய யோசனை ஏற்றுக் கொள்ளப்பட்டுப், பத்திரிகை நடத்தி நட்டமானால் ஒரு ஜில்லாவின் பொறுப்பை நானே ஏற்றுக்கொண்டு ஈடு செய்யத் தயார்!—என்று அறைகூவல் பாணியில் ஓர் தலையங்கம்.

பிப்ரவரி முதல் வாரம் 'கரண்ட்' இதழ், தென்னாட்டின் தலைவர் காமராஜ் அல்ல; அண்ணாதுரைதான்! என்று புகழ்ந்து எழுதிவிட்டது! மதுரைப் பல்கலைக்கழகம் துவக்கப் பட்டுப் பன்மொழிப் புலவர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் முதலாவது துணைவேந்தரானார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தராக சி. பி. ராமசாமி அய்யருக்குப் பிறகு யார் என்பது வினாக்குறியாகவே விளங்கியது. பெரியாருடைய சுயமரியாதைத் திருமண விளக்கவுரை கிராமபோன் தட்டாக வெளிவந்து, ஒரு செட் விலை எட்டு ரூபாய் எனக் கழகத்தின் மூலம் விற்பனை ஆகிவந்தது. 24-2-66 அன்று, என். எஸ். சம்பந்தம் அவர்களின் மாமனாரான மத்தூர் ராஜாகிருஷ்ணன் அவர்கள் மறைவுக்குப் பெரியாரும் மணியம்மையாரும் சென்று, துக்கம் விசாரித்தனர். 7-3-66 அன்று, சென்னையில் திரைப்பட அதிபர் ஜி. என். வேலுமணியின் மகன் சரவணனுக்கும் சாந்திக்கும் திருமணம், பெரியாரும் காமராசரும் கலந்து கொள்ள ஏற்பாடு. தவிர்க்க இயலாத காரணங்களால் காமராசர் இருக்க இயலவில்லை. வரவேற்றுப் பேசிய எம்.ஜி.ஆர். கலையுலக ரத்தினங்களில் ஒருவர்—என்றார் பெரியார். யாராவது ஒருவர் ஒரு உதவி நமக்குச் செய்தால் நன்றி என்று சொல்லலாம். பெரியாரைப்போல் நமக்காகவே வாழ்கின்றவர்களுக்கு நாம் செலுத்தும் நன்றி,

அவர்கள் சொல்வதுபோல் நடந்து காட்டுவதாகும் என்றார் புரட்சி நடிகர். மணமக்கள் சார்பில் பெரியாருக்கு வெள்ளிக் கைத்தடி வழங்கப் பெற்றது. மத்திய அரசும், மாநில அரசும், உபரி பட்ஜெட்டுகளைச் சமர்ப்பித்து, 1967-ம் ஆண்டு தேர்தல் வரவிருப்பதை நினைவூட்டின!

நம் நாட்டில் ஜனநாயகம் பெரும்பாலும் காலிகள் நாயகமாகவேயிருக்கிறது. சட்டம் மீறுகிறவர்கள் தேர்தலில் நிற்காமல் தடுக்க வேண்டும். இல்லாவிடில் Vagadonds ஆட்சியே வந்து சேரும்; எனவேதான் அடுத்த தேர்தலிலும் காங்கிரசே பெருவாரியாக வெற்றி பெறச் செய்ய வேண்டும். எதிர்க் கட்சிகளை உதாசீனம் செய்து விடுங்கள்! தமிழர் வரலாற்றிலேயே, காமராாசர் ஆட்சிக் காலந்தான் ஒரு திருப்பு மையமாகும். மறந்து விடாதீர்கள்!—என்று பெரியார் சென்னையில் ராமாயண எதிர்ப்புப் பிரச்சாரக் கூட்டத் தொடரில் கூறிவந்தார். "வால்மீகி ராமாயணம் கம்பராமாயணம் என்று எழுதப்பட்ட காகிதத்தைக் கொளுத்துங்கள், கூட்டத்தில் கூடி நின்று!" என்பதாகப் பெட்டிச் செய்தி "விடுதலை"யில் வந்து கொண்டிருந்தது. கும்பகோணத்தில் மார்ச் 19 சோஷலிச விழாவும், 20 பெரியார் பிறந்தநாள் விழாவும் சிறப்பாக நடைபெற்றன. பெரியாருடன், காங்கிரஸ்காரர்களான கோபாலசாமி தென்கொண்டார், பொறையாறு பார்த்தசாரதி ஆகியோரும் பங்கேற்றனர். 31-ல் திருச்சியில், ராமாயண எரிப்புப் பொதுக் கூட்டத்தில் பெரியாரும், ஆனைமுத்து, செல்வேந்திரன், வீரப்பா, பெரியசாமி ஆகியோரும் கலந்து கொண்டனர். "30-3-66 முதல் 5-4-66 வரை இராமாயண எரிப்பு வாரம் கொண்டாடிக், கொளுத்திச் சாம்பலாக்கிக் காட்டுங்கள்! கொளுத்துங்கள், கொளுத்துங்கள்!" என்று பெரியாரும் "விடுதலை"யும் ஊக்கம் தந்தது குறிப்பிடத் தக்கதாகும். வான்மீகியைவிடப் புளுகன் கம்பனே என்ற, தமிழாய்ந்த பொறியாளர் பா. வே. மாணிக்க நாயகரின் முடிவு, "விடுதலை"யில் பிரசுரமாயிற்று.

சென்னை உயர்நீதி மன்றத்துக்குப் பிரதம நீதிபதி யாகத், தகுதி வாய்ந்த உயர் அனுபவசாலி ஒருவரே நிய மிக்கப்பட வேண்டும்—அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் பதவி தமிழருக்கே தரப்பட வேண்டும்—என்பன பெரியாரின் வேண்டுகோள் துணுக்குகளாகும். இராமாயணம் ஆபாசக் களஞ்சியமே என்ற தலைப்பில் தொடர் துணுக்குகள் "விடுதலை" முதல் பக்கத்தில் முக்கிய கட்டடச் செய்திகளாக வந்தன. நாடெங்கும் ராமாயண எரிப்புப் போர்ச் செய்திகள் "விடுதலை" அலுவலகத்துக்கு வந்து குவிந்தன.

கல்லூரிகள், தொழில் கல்லூரிகள் அதிகரிக்கப்படும்; மின்சார பம்பு வசதிகள் பெருகும்; ரிசர்வ் பேங்க் அருகில் நால்வழிச் சுரங்கப் பாதை திறப்பு—என்ற அரசுத் தரப்புச் செய்திகள் தேர்தலுக்கான கட்டியங் கூறின!

ஏப்ரல் இரண்டாம் வாரம் சென்னையில் பல கூட்டங்களில் பெரியார் சொற்பொழிவு நிகழ்த்தினார். "காமராசரை ஒழித்தால், சமதர்மத் திட்டத்தை ஒழித்த மாதிரி ஆகும் என்பதால்தான், பார்ப்பனர் காங்கிரசை ஒழிக்க நினைக்கின்றனர். இன்று நம் நாட்டில் நடப்பது இனப் போரை ஆகும். மத மூட நம்பிக்கைக்காரர்களால் சமதர்மத் திட்டத்தைச் செயல்படுத்த முடியாது. மனு தர்ம ஆட்சியைக் கொண்டுவரப் பாடுபடும் ஆச்சாரியார்ருக்குக் கண்ணீர்த் துளிகளே நாற்காலிகளாகி விட்டனர். எனவே கண்ணீர்த் துளிகளின் புரட்டுப் பேச்சுகளைப் புறக்கணியுங்கள். ஏசு, நபி, புத்தர், அம்பேத்கார் நால்வருமே தியாக சீலர்கள். அவர்களைப் பின்பற்றி ஒழுக்க சீலர்களாக விளங்குங்கள்"—என்றெல்லாம் பெரியார் பேச்சு அமைந்திருந்தது. கொழுந்துவிட்டு எரியும் பெரு நெருப்பில், ஒரு டின் பெட்ரோலை ஊற்றினார் முதலமைச்சர் பக்தவத்சலம்.

3–5–66 அன்று, முதல் தமிழ் நாவலாசிரியரான மாதவய்யாவின், புதல்வர் அனந்தநாராயணன் அய்.சி எஸ். சென்னை உயர் நீதி மன்றத்தின் தலைமை நீதிபதியாக உயர்த்தப்பட்டார். "இது தமிழர்களுக்குப் பேரிடியான

செய்தி! பக்தவத்சலம் ஆட்சிக் கொடுமை! 10–5–66 துக்க நாள் கொண்டாடுங்கள். பார்ப்பன ஆதிக்கத்திற்கே பாடுபட்டு வருகின்ற இந்த பக்தவத்சலம், ஆச்சாரியாரின் அத்யந்த சீடர். இவரைப் போய்த் தமது இடத்தில் வைத்தாரே காமராாசர்! அது எவ்வளவு தவறாகப் போய் விட்டது? பக்தவத்சலம் ஒழிக!''' என்று பெரியார் போர்க் கொடி உயர்த்தினார்; தொடர்ந்து விளக்கக் குறிப்புகளும் எழுதி வந்தார்! 10–ந் தேதி சென்னையில் நகர் போலீஸ் 41-வது சட்டத்தின்படி ஊர்வலம் செல்லக் கூடாதென்று சொல்லி அதிகாரிகள் கேட்டதன் பேரில், கூட்டம் உண்டு; ஆனால் ஊர்வலம் இல்லை, அதையும் நானாக நிறுத்தவில்லை—என்றும், கூட்டத்தில், பக்தவத்சலம் பதவி விலகட்டும். தமிழ்நாடு தனிநாடு ஆவதே நம் இழிவுகள் எல்லாம் நீங்குவதற்கான ஒரே பரிகாரம்-என்றும் பெரியார் முழங்கினார்!

இவர் எதிரியின் ஒற்றர் ஆவார், என்னைத் தவறாக நினைக்காதீர்கள் காங்கிரஸ்காரர்களே! நான் காங்கிரஸ் விரோதி அல்லன்! தமிழர்களுக்கு விகிதாச் சாரப்படி உரிமை வேண்டும்! அது தடுக்கப்பட்டால், தடுக்கும் எதையுமே நான் எதிர்ப்பேன்! இப்போது சாதி—மத உணர்ச்சி வலுத்துவிட்டது. உயிரைக் கொடுக்க உறுதி கூறி உடனே நூறு தோழர்கள் ரத்தத்தில் கையெழுத்துப் போட்டுத் தாருங்கள். பார்ப்பான் வேறு; நாம் வேறுதான்; இதோ, பாருங்கள்! தவறு செய்த கிருஷ்ணமாச்சாரியைப் பார்ப்பனர்கள்தானே காப்பாற்றுகிறார்கள். சாணக்கியர் ஆச்சாரியாரிடம் நமது விபீஷணர்கள் சரணாகதி அடைந்து கிடக்கிறார்களே! பார்ப்பன உணர்ச்சியுடன் சலுகைகள் செய்து வருகிற நமது தொழிலமைச்சர் (ஆர். வெங்கட் ராமன்) விசாரணைக்கு உட்படத் தயாரா என்று, வேறு யாராவது கேட்கிறார்களா? சர்வம் பூணூல் மயம்! இதோ, பட்டியலைப் பாருங்கள்! எல்லாம் சரியாக வேண்டுமானால், மீண்டும் காமராசரே முதலமைச்சராக வரவேண்டும்.

சங்கராச்சாரியாரையும் பகிஷ்கரியுங்கள். இவர் நாடெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்வது மதத்தைப் பரப்ப அல்ல. காங்கிரசை ஒழிக்கவே, அரசியல் பிரச்சாரம் செய்கிறார்! —என்றார் பெரியார்.

13-6-66 அன்று மாலை 5 மணிக்கு 50 கழகத் தோழர்கள் அமைதியாக மயிலையில் சங்கராச்சாரியாருக்குக் கருப்புக் கொடி பிடித்தார்கள். மயிலாப்பூரில் திருவள்ளுவர் சிலை திறக்க வந்த தத்துவஞானி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் —இந்தியக் குடிஅரசுத் தலைவர்—"திருவள்ளுவர் நாத்திக வாதத்தை மறுக்கிறவர்" என்று, ஏனோ, எதனாலோ, எப்படியோ, தேவையில்லாத, தவறான, கருத்தைக் கூறிச் சென்றார். பெரியாரின் குற்றச்சாட்டுகளுக்குப் பக்தவத்சலத்தின் பதில் என்ன என்று மதுரையில் நிருபர்கள் கேட்டபோது, தாம் பதிலளிக்க விரும்பவில்லை என்று தப்பித்துக் கொண்டார் முதல்வர். 23-6-66 அன்று சர்தார் உஜ்ஜல்சிங் தமிழக கவர்னரானார்.

விழுப்புரத்தில் பிரச்சாரப் பயிற்சி வகுப்புகளைப் பகலில் நடத்திவிட்டு, மாலை நேரங்களில் வெளியூர் பொதுக் கூட்டங்களுக்குச் சென்று வந்தார் பெரியார். இராமாயண எரிப்புப் போரை மும்முரமாக நடத்துவதற்கு ஏன் பெரியார் முனைந்தார் என்பதை இங்கே விளக்குகின்றார்:—பார்ப்பனர்கள் வரப்போகின்ற தேர்தலிலே, கடவுள் மத சாஸ்திர புராண இதிகாசங்களின் பெயர்களால் ஏமாற்றி, மயக்கி, வெற்றி பெறலாம் என்கின்ற எண்ணத்தின் மீது, இப்போது எங்கு பார்த்தாலும், எந்த ஊரிலும் இராமாயணம், பாரதம், கந்தபுராணம் முதலிய புராண இதிகாசங்களின் மூலமாகப் பிரச்சாரம் செய்தும், செய்வித்தும் வருகிறார்கள்.

ஏற்கனவே நாம் இவைகளாலேயே முட்டாள்களாகவும் காட்டுமிராண்டிகளாகவும் மூடநம்பிக்கைக்காரர்களாகவும் ஆகிப், பல்லாயிர வருட காலமாக நமது நாட்டில் நாம் கீழ்சாதி மக்கள், ஈனப் பிறவிகள் என்பதை ஏற்று, பார்ப்பனருக்கு அடிமையாய் இருந்து வாழ்ந்து வந்தாலும், இன்று

காங்கிரஸ் ஆட்சியின் பயனாய்ச் சிறிது கண்திறந்து, அறிவு பெற்று வருவதை ஒழிப்பதற்கு, வேறு வகையில்லை என்று கண்ட பார்ப்பனர் மறுபடியும் இந்தப் பிரச்சாரத்தைத் துவக்கியிருக்கிறார்கள்.

பார்ப்பனர்களின் பிரச்சாரத்தைப் பற்றி எண்ணும் போது, அதில் 10-ல் ஒரு பங்குகூட நமது பிரச்சாரம் இல்லை என்றாலும், தயங்காமல் நம்மால் கூடியதைச் செய்து தீர வேண்டிய நிலையில் இருக்கிறோம். இதற்காக இப்போது நாம் செய்துவரும் பிரச்சாரம் நீங்கள் அறிந்ததேயாகும். இனியும் தேர்தல் வரையிலும் நமது கழகத் தோழர்கள் எல்லாருமே, நம் இயக்கப் புத்தகங்களைத் தருவித்து, விஷயங்களை உணர்ந்து, ஆங்காங்கு அந்தந்த ஊரில், மறுப்புப் பிரச்சாரம் செய்து வர வேண்டியது மிக்க அவசிய மாகும். இதை அனுசரித்து, நான் சொல்லும் விஷயங் களைச் சற்றுக் கவனமாகத் தெரிந்து, அதன்படி கூடுமான வரை நடந்து கொள்ளவேண்டுமெனக் கழகத் தோழர்களைக் கேட்டுக் கொள்கிறேன். ராமநவமி போன்ற பண்டிகை நாட்களில், பார்ப்பனர்களும் அவர்களது அடிமைகளும், நல்ல வண்ணம் பிரச்சாரம் செய்ய முற்படுவார்கள். அதனால் நம் மக்கள் ஏமாறாமல் காப்பாற்றப்பட, நம் கழகத் தோழர்கள் ஒவ்வொரு ஊரிலும் பொதுக்கூட்டங்கள் ஏற்பாடு செய்து, மேற்சொன்ன பாமர மக்களுக்கு எடுத்துச் சொல்வதோடு, இராமாயணம், வால்மீகி இராமாயணம், கம்ப இராமாயணம் ஆகியவை தமிழர்களை இழிவுபடுத்து வதற்கென்றே ஆக்கப்பட்ட பொய்யும் கற்பனையும் ஆபாச மும் நிறைந்த நூல்கள் ஆகும். ஆகவே இந்த மூன்று சொற்களையும் ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதிக் கையில் வைத்துக்கொண்டு, சொற்பொழிவின் முடிவில், கூட்டத்தில் மக்களுக்குத் தெரியும்படியாக நெருப்பினால் கொளுத்திச் சாம்பலாகும்படிச் செய்து காட்டவும்.

இந்தப்படி ஒவ்வொரு கூட்டத்திலும் எத்தனை பேர் செய்து காட்டக்கூடுமோ அத்தனை பேர்களும் அந்தப்படி எழுதப்பட்ட துண்டுக் காகிதத்தை, மக்கள் அறியும்படிக்

கொளுத்தி, எரித்துச் சாம்பலாக்கிக் காட்டவேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

பெரியார் கட்டளைப் படியே 11-8-66 அன்று சென்னையிலும், பிற இடங்களிலும் இராமாயணம் கொளுத்தப் பட்டது என்பதைக் கூறவும் வேண்டுமா?

> திராவிட முன்னேற்றக் கழகம் தேர்தலுக்கான முன்னேற்பாடுகளில் இறங்கி விட்டது. 10 லட்ச ரூபாய் தேர்தல் நிதி திரட்டும் பொறுப்பினை அண்ணா, தனது கழகப் பொருளாளர் கலைஞரிடம் நம்பிக்கையோடு தந்துவிட்டார். அவரும் கச்சை கட்டிக் கொண்டு களத்தில் குதித்து விட்டார். ஒரே நாளில் கொடி விற்பனையில் லட்ச ரூபாய் சேர்ந்தது. காமராசரையும் காங்கிரஸ் சமதர்மத்தையும் கேலி செய்யும் 'காகிதப்பூ' என்னும் நாடகத்தை எழுதித், தாமே நடித்து, நிதி திரட்டினார்; நிதியும் குவிந்தது! பெரியாருக்கு அறவே பிடிக்காத சுதந்திராக் கட்சி—அதாவது ராஜாஜி—யின் முழு ஆதரவும் தி. மு. க.வுக்கே கிடைத்து வந்தது. முஸ்லீம் லீக், இடதுசாரி கம்யூனிஸ்ட், நாம் தமிழர், தமிழரசுக் கழகம் போன்ற கட்சிகளும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் அணியில் உறுதியுடன் நின்றன.

நேரு மறைந்த பின்னர், காமராசரும் மாநில ஆட்சியை விட்டு விலகிப் போன பின்னர், பெரியாருக்குக் காங்கிரஸ் மீது நம்பிக்கையில்லை, எனினும், தம்மை நம்பியவரை நட்டாற்றில் விட மனமின்றித், தமக்கு நேரிட்ட ஏமாற்றங்களையும் அவமதிப்புகளையும் பொருட்படுத்தாமல், 1967 தேர்தலிலும் காங்கிரசுக்காகப் பிரச்சாரம் செய்து விடுவது என்ற முடிவில், தம்மைத் தாமே அடிக்கடி தேற்றிக்கொள்ள வேண்டிய சூழ்நிலைகளும், சலிப்பும், தளர்வும் பெரியாருக்கு நேரிட்டுவந்தன. தனிப்பட்டமுறையில், காமராசரைத் தவிர, பெரியாரிடத்தில் கனிவோடு நடந்து கொண்ட காங்கிரஸ் மந்திரிகள் வேறு எவருமிலர்! பார்ப்பனரல்லாத சட்டமன்ற காங்கிரஸ் உறுப்பினர்களிலும், இனவுணர்வு படைத்த மிகச் சிலரே, பெரியாரை மதித்துப் போற்றியவர். ஆட்சியிலுள்ள அதிகாரிகளிலும், பார்ப்பனரல்லாதாரும்கூடப் பெரியாரிடம் அணுக அஞ்சியே ஒதுங்கினர். அரசியல் ரீதியாகவும்,

துங்களுக்கு என்றே முழு நேரப் பிரச்சாரம் செய்து வரும் திராவிடர் கழகத்தைக், காங்கிரஸ் கட்சியோ, கட்சிச் சார்பான ஏடுகளோ அங்கீகரிப்பதில்லை. மாறாகத், தாக்கிய சம்பவங்கள் உண்டு! அரசு விளம்பரம், செய்தி முதலியவை "விடுதலை"க்குத் தரப்பட்டதே கிடையாது! இன மானங் காக்கும் ஒரே இலட்சியத்துக்காகப், பெரியார் இந்தத் தடவையும் காங்கிரசை ஆதரித்தார், மனப்பூர்வமாக!

17-9-1966 பெரியார் 87 ஆண்டுகளைக் கடந்து 88-ல் பொன்னடி பதித்திடும் நாள். வழக்கம்போல் கழகத் தோழர்களுக்குப் பெரியார் தமதுபிறந்தநாள் செய்தி ஒன்றை அருளினார்:—"எனக்கு இன்று 88—ஆம் ஆண்டு பிறக்கிறது. நான் பேராசைக்காரனாக இல்லாமல், இயற்கையை ஓரளவுக்காவது உணர்ந்தவனாக இருப்பவன். ஆனால், உங்கள் எல்லாரிடமும் முடிவுப் பயணம் சொல்லிக் கொள்ள வேண்டியவன் ஆவேன். அது மாத்திரமல்லாமல் நான் சிறிதளவு பகுத்தறிவு உடையவனாக இருந்தால் என் வாழ்வில் எனது லட்சியத்தில் முழுத் திருப்தியடைந்து ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டியவனாவேன். என் உடலைப் பற்றிய எவ்விதக் கவலையும் இன்றி, நேர்ந்தபடி நடந்து, கிடைத்ததை எல்லாம் நேர்கூறு இன்றி உண்டு, அனுபவித்து வந்த நான், 87 ஆண்டு முடிந்து 88-ம் வயதில் புகுகின்றேன் என்ற அதிசயத்தை நினைத்துத் தான், இனிமேலும் வாழ ஆசைப்படுவது பேராசை என்று குறிப்பிட்டேன்.

அது போலவே தான், ஒரு சார்பும் இல்லாதவனாகத், தனித்து, எந்த ஓர் ஆதரவும் அற்றவனாகி, என்னையே எண்ணி நின்று, பாமர மக்கள், படித்தவர்கள், பிறவி ஆதிக்கக்காரர்களாகிய பார்ப்பனர்கள், சர்வ சக்தியுள்ள பத்திரிகைக்காரர்கள், போதாக் குறைக்கு அரசாங்கத்தார் ஆகிய அனைவருடைய வெறுப்புக்கும் அதிருப்திக்கும் எதிர்ப்புக்கும் விஷமப் பிரச்சாரத்திற்கும் தண்டனை கண்டனங்களுக்கும் ஆளாக இருந்து, எதிர்ப்பையும், போராட்டங்களையும் சூழ்ச்சிகளையும் சமாளித்துப் பொது மக்களால் கனவு என்று கருதப்பட்ட எனது இலட்சியங்களை—இவை

கனவு அல்ல, உண்மை நினைவே, காரியசாத்தியமே—என்று கூறிவந்து, அவைகளின் நடப்புகளையும், நடப்புக்கு ஏற்ற முயற்சிகளையும் நேரில் கண்டு களிக்கிறேன் என்ற கருத்தில் தான், எனது இலட்சியத்தில் என் தகுதிக்கு ஏற்ற அளவில் முழுத்திருப்தி அடைகின்றேன் என்று குறிப்பிட்டேன்.

நான் காங்கிரசிலிருந்து விலகிய போதே, இனி இந்தியா வின் ஆட்சி ஜனநாயகமாகத்தான் இருக்க வேண்டும் என்று முதல் முதல் கருதியவன் நான்தான்! அதனால்தான் ஜன நாயகம் என்ற வடமொழிக்கு நேரான "குடிஅரசு" என்பதாக என் பத்திரிகை துவக்கினேன். குடிஅரசு ஆட்சியின் கொள்கை சமதர்மமாக இருக்க வேண்டுமென்று, 1927, 28 சுயமரியாதை மாநாடுகளில் தீர்மானங்கள் இயற்றி, 1930 ஈரோடு மாநாட்டில் சமதர்மத்துக்கு விளக்கத் தீர்மானங் களாகச் சில நிறைவேற்றினோம்:—நபர் ஒன்றுக்கு 6 ஏக்கருக்கு மேல் நிலம் இருக்கக் கூடாது. அதுவும் உழுகிற வனுக்குத் தான் நிலம் இருக்க வேண்டும். பண்டங்கள் உற்பத்தி செய்வோருக்கும் உபயோகிப்போருக்கும் இடை யில், எந்த உருவத் தரகர்களும் இருக்கக் கூடாது. கல்வி விஷயம், எல்லாருக்கும் பத்தாம் வகுப்பு வரை, அதாவது இன்றைய எஸ்.எஸ்.எல்.சி. வரை, சர்க்கார் அளிக்கும் இலவசக் கல்வியாக இருக்க வேண்டும். உயர்தரக் கல்லூரிக் கல்விக்கு அவரவர் தங்கள் செலவிலேயே கற்று வரும்படிச் செய்ய வேண்டும்.

ஆனால், இன்று எல்லா மக்களுக்கும் எல்லாச் செலவை யுமே சர்க்கார் ஏற்று, இலவசக் கல்வியாக ஆக்கப் போவ தாகத் தெரிகிறது. ஆகவே மேலே குறிப்பிட்ட எனது கனவுகள் நினைவாக, நேரிடையாகச் செயல் படுவது எனக்குத் திருப்தி அளிக்கக் கூடியவை அல்லவா? எனவே, நான் எனது இலட்சியத்தில் மனக் குறையடைய வேண்டிய நிலையில்லாதவனாக இருக்கின்றேன். இதை 4, 5 மாதங் களுக்கு முன் காமராசர் வெளியிட்டார். பெரியாருக்கு இன்று என்ன குறை? அவர் போட்ட பாதையில்தான் இன்று காங்கிரஸ் போய்க் கொண்டிருக்கிறது. அவர்

எதற்கும் கவலைப்பட வேண்டியதில்லை—என்பதாகப் பேசினார்.

இனி எனக்கேதாவது குறை, கவலை இருக்குமானால் அது, மக்களிடையில் காணப்படும் கவலையற்ற தன்மையும் எதிரிகளின் சூழ்ச்சிக்கு ஆளாகும் தன்மையும் பற்றித்தான். இந்த நிலைமை, காரியத்தைக் கெடுக்கும்படியான அவ்வளவு பலத்தை என்றுமே அடைய முடியாது என்பதோடு, அதிகக் காலம் நிலைக்கவும் முடியாது. ஆகையால் அதை ஒரு குறையாகக் கருத வேண்டியதில்லை. ஆனால், சண்டித் தொல்லையாகவே கருதுகிறேன். மனிதன் துன்பத்திற்கு ஆளாகாவிட்டாலும், தொல்லைக்கு ஆளாவது சகஜம்தான்!

எனது அருமைத் தோழர்களுக்கு—தேர்தல் முடியும் வரை காங்கிரசை நிபந்தனையின்றி ஆதரித்து, காங்கிரஸ் முழு வெற்றியடையப் பாடுபட வேண்டுமென்பதுதான் எனது கட்டளை போன்ற விருப்பமாகும். தேர்தலுக்குப் பிறகு பெரிய புரட்சிப் பணி நமக்கு இருக்கிறது. அதற்குள் தோழர்கள் தங்கள் குடும்பப் பணிகளையும் முடித்துக் கொண்டு, போர்முனைக்குச் செல்லும் போர்வீரன் போல், தாய் தந்தை மனைவி மக்களிடம் பயணம் சொல்லிக் கொள்ளத் தயாராய் இருக்கவேண்டும்...''

இந்த நிலையில், காங்கிரஸ் கட்சிக்கு ஆணவம் மிகுந்து விட்டது. இந்தத் தடவை அது ஆட்சியிலிருந்து இறக்கப்பட்டால்தான் அது வழிக்கு வரும் என்ற பரவலான கருத்தும் தமிழகத்து மக்களின் உள்ளத்தின் அடித் தளத்தில் முளைவிடத் தொடங்கியது. இராயபுரத்திலுள்ள அய்ந்தாறு சிறுவர்கள் இட்ட வேளாண்மை வீடு வந்து சேராது என்றே பெரியார் நம்பிக் கொண்டிருந்தார். பெரியாரின் எதிர்ப்பு, யானை தன் மத்தகத்தால் குட்டிகளை மோதியே, தாக்குதலுக்குப் பழக்குவதுபோல், எத்தகைய எதிர்ப்புகளையும் தாங்கச் செய்வதற்கான வல்லமையைத் தமக்குத் தருகின்ற பயிற்சி என்று அண்ணா கருதி வந்தார். அதனால், அண்ணா மிகுந்த ராஜதந்திரத்துடன்,

காங்கிரசுக்கு எதிர்ப்பான கட்சிகளை ஓரணிக்குள் கொண்டு வந்தார். கூட்டணி என்று அமைக்காமலே, தொகுதி உடன்பாடு முறையைப் புகுத்தி, வெற்றிகரமான உடன்பாடுகளை மற்றக் கட்சிகளுடன் அண்ணா செய்து கொண்டார்.எறும்பையும் மூட்டைப்பூச்சியையும் நசுக்குவது போல் அழித்து விடுவேன் என்று முன்பு மிரட்டிய ராஜாஜியே தன்னை ஆதரிக்குமாறு செய்து விட்டார் அண்ணா. நம்முடைய கட்டை விரலை வெட்டுவதாகச் சொன்ன காமராசர், தமிழ் நாட்டு அரசியலை விட்டு விலகி டெல்லி அரசியலில் கலந்துவிட்டார். அதனால் தமிழகத்து நிலவரம் புரியாமல், “நான் படுத்துக் கொண்டே ஜெயிப்பேன்” என்று சபதம் போட்டுவிட்டார். “ஆகட்டும் பார்க்கலாம்” என அண்ணா முனைந்து பணியாற்றினார். பெரியாரை எந்த மேடையிலும் தாக்குவதே கிடையாது!

பெரியாரால் பச்சைத் தமிழர் என்று பாராட்டப்பட்ட காமராசர், அகில இந்திய அரசியலில் இணையற்ற செல்வாக்குப் படைத்தவராக விளங்கினார். நேரு காலத்தில் கிடைத்த காங்கிரஸ் தலைமைப் பதவி, சாஸ்திரி காலத்தில் தொடர்ந்து, இந்திரா காலத்திலும் நீடித்தது. பிரதமர்களையே உருவாக்கும் மகா வல்லமை படைத்தவராக ஒரு பார்ப்பனரல்லாத தமிழர் உயர்ந்திருப்பதை, இந்தியப் பார்ப்பனர் எத்தனை நாளைக்குப் பொறுத்துக் கொள்ள முடியும்? பூரிசங்கராச்சாரியார் மற்ற சங்கராச்சாரியார்களைவிட முரடர். அரசியல் வாதிகளுக்கு உண்டான அழுத்தம் உள்ளவர். முன்பு பத்திரிகாசிரியராக இருந்திருக்கிறார். உணவுக்காகப் பசுக்களைக் கொல்வது பாவம்; இந்து தர்மத்துக்கு :விரோதம்; பசுவதையைச் சட்டப்படித் தடுக்க முழுமையான ஒரு சட்டம் நாடாளுமன்றத்தில் இயற்றப்பட வேண்டும் என்ற சாக்குச் சொல்லித், தான் உண்ணாவிரதம் தொடங்குவதாக விளம்பரம் செய்தார். காந்தியாருடைய உண்ணாவிரதத்தையே சண்டித்தனம்; வெற்றியளிக்காத சாதனம் என்றெல்லாம் கண்டித்த பெரியார், பூரிசங்கராச்சாரியாரை விடுவாரா?

"பசுவைக் கொல்வது மாத்திரம் கூடாதது என்பதற்கு என்ன அவசியம் என்பது நமக்குப் புரியவில்லை. பால் கறக்கும் பெண் மாடு நல்ல நிலையில் இருந்தால், அந்தப் பசுவை யாரும் கொல்லுவதில்லை. வேலைக்கு லாயக்காக இருக்கும் ஆண் மாட்டையேகூட நம் நாட்டில் யாரும் கொல்வதில்லை.

இது எப்படியோ இருந்தாலும், உலகில் பொதுவாக 100க்கு 95 மக்களுக்குப் பசு ஒரு ஆகாரப் பண்டமாய் இருந்து வருகிறது. குறிப்பாக, இந்தியாவில் உள்ள 46 கோடி மக்களில் முஸ்லீம்கள் கிறிஸ்தவர்கள் 10 கோடி போக, ஆதித் திராவிட மக்கள் சுமார் 6 கோடி போக, மீதி உள்ள 30 கோடி மக்கள் மாத்திரமே பசு மாமிசம் சாப்பிடாதவர்களாக இருக்கலாம். எனவே, இந்தியாவில் மூன்றில் ஒரு பாகம், அதாவது, 100க்கு 33 மக்களுக்கு ஆகாரமாய், உணவாய் இருக்கும் ஒரு ஜீவனைக் கொல்லக்கூடாது என்றால், இதில் ஆணவம் தவிரக், கூடாது என்பதற்கு என்ன சமாதானம் சொல்ல முடியும்? உலகில் உண்மையாய் மாமிசம் சாப்பிடாதவர்கள்—300 கோடியில் சுமார் 20 லட்சம் பேர் கூட இருக்க மாட்டார்கள். இவர்களுக்காக, இவர்கள் மனம் புண்படும் என்பதற்காக, அல்லது இவர்களது மத சம்பிரதாயத்துக்கு விரோதம் என்பதற்காக, யாரும் மாட்டைக் கொல்லக்கூடாது என்று சட்டம் செய்ய வேண்டும் என்று ஒருவர் உண்ணா விரதம் இருந்தால், அவரைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் வைத்துத்தான் காப்பாற்ற வேண்டும்!

நான் எனது 25 வயதிலிருந்தே மாட்டு மாமிசம் சாப்பிட்டு இருக்கிறேன். பல தடவை, மாட்டு மாமிசம் சாப்பிட வேண்டும் என்று மக்களுக்குச் சொல்லி, எழுதியிருக்கிறேன். இன்றைய நிலைமையில் ஏழைகள் மாமிசம் சாப்பிட வேண்டுமானால், மாட்டு மாமிசந்தான் மலிவாகக் கிடைக்கக் கூடியதாய் இருக்கிறது. மாட்டு மாமிசத்தில், நாம் சாப்பிடும் மற்ற மாமிசத்தைவிட உணவுச் சத்து அதிகமாக இருக்கிறது. மேலும், பன்றி, கோழி, மீன், பறவை

களைப் போல, மலம் பூச்சி புழு முதலிய அசிங்கத்தை மாடு சாப்பிடுவதில்லை! ஆதலால் மாடு வதை கூடாது என்பது ஒரு நாளும் அறிவுடைமை ஆகாது. அதை வலியுறுத்து கிறவர்கள் யாராயிருந்தாலும், அரசாங்கமானாலும், அவர்கள் மரியாதையாய் வேறு நாட்டிற்குப் போய் விடுவதே மானமுள்ள காரியமாகும்.'' [விடுதலை 17-10-1966]

டெல்லியில் உள்துறை அமைச்சரான நந்தா, பெரியார் கூற்றுப்படி ஒரு சரியான அழுக்கு மூட்டை. சோதிடப் பித்தர். சாது சந்நியாசிகளின் அடிமை. இவர் பிரதமர் பதவிக்கு ஆசைப்பட்டவர். நிறைவேறாத ஏக்கம் மிகுந்தவர். இவரது ஆதரவு பூரிசங்கராச்சாரிக்கு இருந்தது போலும்! 6–11–66 "விடுதலை" தலையங்கத்தில் பெரியார் இந்த போலிச் சாதுக்களின் போக்கிரித்தனத்தைக் கண்டித்துப், "பார்ப்பனர்களே இப்போது நாட்டில் அராஜகத்தைத் தூண்டுகிறார்கள். இனி அகிம்சையைக் கடைப்பிடிக்க வேண்டியதில்லை என்றெல்லாம் பேசி வருகிறார்கள். போகிற போக்கைப் பார்த்தால் இனி மந்திரிகளைத்தாக்கிக் கொல்ல வேண்டியதுதான் பாக்கி என்னும் விதத்தில், காலித்தனங்களையும் வன்முறைகளையும் செய்கிறார்கள். எச்சரிக்கையாயிருக்க வேண்டும்" என்று எழுதினார்.

7-11-66 அன்று டெல்லியில் மிகப்பெரிய ஆர்ப்பாட்டம் இந்துமத வெறியர்களால் நடத்தப்பட்டது. பூரி, சிருங்கேரி மட சங்கராச்சாரியார்கள் தலைமை ஏற்றார்கள். சாதுக்கள், சந்நியாசிகள் எனப்படுவோர், பல்லாயிரக் கணக்கில் திரண்டார்கள். பசுவதை கூடாது என்றுகூறி, மனித வதையில் இவர்கள் இறங்கினார்கள்! ஆர்ப்பாட்டத்தில், வழக்கம் போல் சம்பந்தமில்லாத காலிகளும் இறங்கினார்கள். போலீசார் சுடுவதைத் தவிர வேறு வழியில்லை. குண்டுக்குச் சிலர் இரையானார்கள். பல வீடுகள் தீக்கிரையாயின.

இந்த அமளி நடந்தபோது காமராஜர் தமது இல்லத்தில் தூங்கிக்கொண்டிருந்தார். காலிகள் திட்டமிட்டு அவர் இல்லத்தைத் தாக்கியதோடு, நாற்புறமும் சூழ்ந்து நெருப்பும் வைத்துவிட்டனர். கொல்லைக் கதவைத் திறந்து

கொண்டு காமராஜர் தப்பிப் பிழைக்க உதவியவர் கோதண்ட பாணி என்னும், திராவிட முன்னேற்றக் கழகத் தமிழ்த் தோழர் ஒருவராவார்!

இந்தக் காலித் தனத்தைக் கண்டு உண்மையிலேயே பெரியார் மிகவும் மனம் பதறிப், பதைத்துப் போனார். 15-11-1966 ''விடுதலை''யில் தீவிரமான ஓர் அறிக்கை வெளியிட்டார் பெரியார்.

''இந்தியா முழுவதிலுமிருந்து பார்ப்பன சாதுக்கள், சந்நியாசிகள் ஆயிரக்கணக்கில் டெல்லியில் கூடிக் கலவரம் செய்திருக்கிறார்கள். பசுவதை தடுத்தல் என்பது பொய்யான ஒரு காரணமேயாகும். காரணம், பார்ப்பனருடைய வர்ணாசிரம தர்மத்துக்குக் கேடு வந்துவிட்டது என்பது ஒன்றேதான். அந்தக் கேட்டை உண்டாக்கியதும் காமராஜர் என்கின்ற ஒரே காரணந்தான் காமராஜர் இருந்த வீட்டுக்கு நெருப்பு வைக்க முக்கிய காரணமாகும்.

பார்ப்பானுக்கு மாட்டுக் கொலையைப் பற்றி அக்கறை இருக்கிறதென்பது, அப்துல்காதர் ஆடி அமாவாசையன்று தன் தகப்பனாருக்குத் தர்ப்பணம் கொடுத்தார், என்பது போன்ற கதையேயாகும். எல்லா ஆரியர்களுக்கும் மாடு தான் முக்கிய ஆகாரமாய் இருந்திருக்கிறது. இவ்வுண்மை இன்றும் மனுதர்ம சாஸ்திரத்தில், பார்ப்பன தர்மமாய் இருந்து வருகிறது. இப்படிப்பட்ட மக்களுக்குப் பசுவதைத் தடுப்பு உணர்ச்சி ஏற்பட்டது என்றால், இதை எந்த மடையன்தான் நம்புவான்?

நமது சரித்திரம் தெரிய, இந்த நாட்டில் காமராஜரைப் போல் ஓர் இரட்சகர் இதுவரை தோன்றியதில்லை. அதனால்தான் பார்ப்பனர்களும், பார்ப்பன அடிமைகளும், காமராஜர் மீது ஒரு கண் வைத்து இருக்கின்றார்கள். அவர் இருந்த வீட்டைக் கொளுத்தினார்கள். காமராஜருக்கு ஏதாவது ஏற்பட்டால் அவருக்கு ஒன்றும் நட்டமில்லை. அவரது தாயார்கூட மயக்கம் வரும்வரை அழுவார்கள்; அவ்வளவுதான்! பிறகு நம் நாடு வர்ணாசிரம தர்ம நாடாகி

விடும். பலருக்கும் நாதியற்ற நிலை ஏற்படும். பிறகு நாடு என்ன ஆகுமோ? எப்படியோ இருக்கட்டும்; இனிக் காம ராஜர் தக்க பாதுகாப்புடன் இருக்க வேண்டும்.

பார்ப்பன எதிர்ப்புக் கட்சித் தோழர்கள் ஒவ்வொரு வரும் 6 அங்குல நீளத்திற்குக் குறையாத கத்தி ஒன்றைத் தற்காப்புக்காக வைத்துக் கொண்டிருக்க வேண்டும். சீக்கியர்களது மத தர்மம் போல், கண்டிப்பாகக் கத்தி வைத்துக் கொள்ள வேண்டும். இந்தக் காரியம் காம ராஜரைப் பாதுகாக்க அல்ல! நம் நாட்டில் உள்ள 3 கோடி கீழ்ஜாதி (சூத்திர)மக்களை இழிவிலிருந்தும், அடிமை நிலை யிலிருந்தும், படுகுழிப் பள்ளத்தில் இருந்தும் வெளியாக்கிப் பாதுகாக்கத்தான்!"

பூரிசங்கராச்சாரியார் பசுவதையைத் தடுக்கத் தம்மைத் தாமே வதைத்துக் கொண்டு உண்ணாவிரதம் இருக்கத் தொடங்கினார். இவ்வளவு காலித்தனங்களையும் மறைக்க இப்படி நாடகமாடினால் அரசு வேடிக்கை பார்க்குமா? அவரைக் கைது செய்தது. பெரியார் மிகவும் மகிழ்ச்சி யுற்றார். குன்றக்குடி அடிகளாரைக் கைது செய்தபோது சும்மாயிருந்தவர்கள், இதற்கும் சும்மாயிருக்க வேண்டியது தானே யோக்கியத் தன்மை என்றார். நாடெங்கும் நமது தோழர்கள் சர்க்கரை, மிட்டாய் வழங்கி மகிழ்ச்சி கொண் டாடுங்கள். சங்கராச்சாரியாரைக் கைது செய்ததற்காக டெல்லி அரசாங்கத்தை நான் பாராட்டுகிறேன் சட்டத்தை மீறுகிறவர்கள் யாராயிருந்தாலும், ஒன்று போல் சமமாக நடத்தப்படுவார்கள் என்று காட்டிக் கொண்டதற்காகப் பாராட்டுகிறேன்—என்று பெரியார் நவம்பர் 24-ம் நாள் "விடுதலை"யில் எழுதினார்.

காமராசரைத் தாக்க முயன்ற சங்கராச்சாரிக் கூட்டத்தைக் கண்டித்து, நாடெங்கும் கண்டன நாள் நடத்திப், பிரச்சினையைப் பெரிதாக்க முதலில் எண்ணிய பெரியார், இந்த ஒரு சங்கராச்சாரி என்ற தனிப்பட்ட மனிதரைக் கண்டித்துப் போராட்டம் நடத்தி, நாம் ஏன் ஆயிரக்கணக்கில் சிறை சென்று, நமது தோழர்களின்

சக்தியை விரயமாக்க வேண்டும், என்று சிந்தித்துக், கருத்தினை மாற்றிக் கொண்டார். "தேர்தல் நேரத்தில் எதிரிகள் இதைத் தங்களுக்குப் பலமாக எடுத்துக் கொள்வார்கள். ஆகையால், தோழர்களே! உங்கள் வேகத்தைத் தேர்தலில் காண்பியுங்கள்! தேர்தலுக்குப் பிறகு நமக்கு நம் வேலை நிறைய இருக்கிறது" என்றார் பெரியார்.

> சென்னை விருகம்பாக்கத்தில், திராவிட முன்னேற்றக் கழகம், 1966 டிசம்பர் 29, 30, 31, 1967 சனவரி 1 ஆகிய நான்கு நாட்களும் மாநாடு நடத்திற்று. அண்ணா தலைமையில், கலைஞர் மாநாட்டைத் துவக்கினார். காஞ்சி கல்யாணசுந்தரம் கொடியேற்றினார். ஏ. கோவிந்தசாமி, கலைவாணர் பெயராலமைந்த கண்காட்சியைத் திறந்தார். தீவுத்திடலில் இருந்து புறப்பட்ட ஊர்வத்தின் தலை விருகம்பாக்கத்தை அடைந்த போது, வால் தீவுத் திடலிலேயே இருந்தது. 15,000 சைக்கிள், 500 பஸ், பல லட்சம் மக்கள்! மாநாடும், ஊர்வலமும், மக்களின் ஆரவாரமும் ஓர் அரசியல் கட்சிக்கு வெற்றியைத் தேடித் தரும் என்று நம்பினால், அந்த வெற்றி தி. மு. கழகத்திற்கே கிடைக்கும்—என்று பத்திரிகைகள் கருத்துரைத்தன.

பார்ப்பனப் பத்திரிகை விளம்பரங்களும், சினிமாக் கவர்ச்சியும் கூட்டத்தைச் சேர்க்கலாம். ஆனால் கொள்கை அடிப்படையில் மக்களின் ஓட்டைச் சேர்க்க அவர்களால் முடியாது. இந்த முறையும் காமராஜரின் காங்கிரஸ்தான் தமிழ் நாட்டை ஆளும்—என்று திடமாக நம்பித், தம் பணியை முடுக்கிவிட்டார் பெரியார், 1966-ல்!

1967-ல்??

# 17. பிணைந்தார்

காங்கிரஸ் தோல்வி தம் தோல்வி. அண்ணா சந்திப்பும் பெரியார் ஆதரவும்—கடவுள் மறுப்பு வாசகங்கள் அறிவிப்பு—டெல்லி ஆதிக்கக் கண்டன நாள் —லக்னோ பயணம்—கோயில் கர்ப்பக்கிரக நுழைவுக் கிளர்ச்சி அறிவிப்பு. ஒத்தி வைப்பு—சிந்தனையாளர், பகுத்தறிவாளர் கழகங்கள் தோற்றம்—பிராமணாள் பெயர் அழிப்புக் கிளர்ச்சி—அனைத்துச் சாதியும் அர்ச்சகராகச் சட்டம்; சுப்ரீம் கோர்ட் தீர்ப்பும் கண்டனமும்—சேலம் மூடநம்பிக்கை ஒழிப்பு மாநாடு—1967 முதல் 1972 முடிய.

---

1967 சனவரித் திங்களில் தேர்தல் வேலைகள் மிகுந்த முனைப்புடன் நடைபெற்றன. பெரியாரின் பிரச்சாரப் பணி தொய்வின்றி நடந்துவந்தது. முழுநம்பிக்கையோடு காங்கிரஸ், மீண்டும் தமிழக ஆட்சிப்பொறுப்பில் அமரலாம் என்று எண்ணி, வேலை செய்தது. எதிர்க் கட்சிகளுக்கு எல்லாவகையான தொல்லைகளும் தரப்பட்டன. திராவிட முன்னேற்றக் கழகம் தனது விருகம்பாக்கம் மாநாட்டை வரலாற்றுச் சிறப்புடையதாக நடத்தி முடித்திருந்தது. "காமராஜர் படுத்துக்கொண்டே ஜெயிப்பேன் என்கிறார். படுப்பது நிச்சயம். ஆனால் ஜெயிப்பது சந்தேகம்" என்று

அந்த மாநாட்டில் பேசினார் ராஜாஜி. "சைதாப்பேட்டைத் தொகுதியில் திருவாளர் பதினொருலட்சம் போட்டியிடு வார்" என்று அண்ணா, கலைஞரின் பெயரை அறிவித்தார். ம.பொ.சி. உதயசூரியன் சின்னத்திலேயே தியாகராயநகர் தொகுதியில் போட்டியிட்டார். அண்ணா தென்சென்னை நாடாளுமன்றத் தொகுதியைத் தேர்ந்தெடுத்ததால், தி.மு.க. ஆட்சியைக் கைப்பற்றும் எண்ணமோ நம்பிக் கையோ இல்லாமல்தான் போட்டியிடுவதாக, மாற்றாரை நினைக்கத் தூண்டிற்று! அண்மையில் பக்தவத்சலம் ஆட்சியில் நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகங்கள் போதாது என்று, புரட்சிநடிகர் எம். ஜி. ராமச்சந்திரனை நடிகவேள் எம்.ஆர். ராதா கைத்துப்பாக்கியால் சுட்டுவிட்ட தாகச் செய்தி பரவியது. எம்.ஜி.ஆர். பரங்கிமலைத் தொகுதிக்கே செல்ல முடியாமல், மருத்துவமனையில் படுக் கையில் இருக்க நேர்ந்தது. திராவிட முன்னேற்றக் கழகத் தேர்தல் பணிகளில் இந்தத் தடவை மாணவச் சமுதாயத் தின் பங்கு அதிகமாயிருந்தது. போலீசார் ஆளுங்கட்சிக்கே அனுசரணையாகவும், எதிர்க்கட்சிகளை அடக்கி ஒடுக்கவும் பயன்படுத்தப்படுவது கண்டு, கலைஞர் மு.கருணாநிதி மனம் வெதும்பி, மயிலைப் பொதுக் கூட்டத்தில் பேசும்போது 'தேர்தல் முடிய இன்னும் ஆறு நாட்கள் உள்ளன. ஆறே நாளில் ஆட்சி மாறும். அட்டகாசம் வேண்டாம்' என்று எச்சரித்தார். 'என்ன, மிரட்டுகிறாரோ?' என்று பக்தவத் சலம் அலட்சியமாய்ப் பேசினார். தேர்தலுக்கு முதல் நாளிரவு கலைஞரையே தீர்த்துக் கட்டக் காலிகள் முனைந்தனர்.

எப்படியோ? எல்லாருடைய கணிப்புக்கும், எதிர்பார்த்த முடிவுக்கும் முரண்பாடாகத், தேர்தல் முடிவுகள் வெளிவரத் தொடங்கின! 'அய்யோ! இவர் தோற்றிருக்கக் கூடாதே!' என்று அண்ணாவே மனம் வருந்தக், காமராசர் விருதுநகரில் தோற்றார். 'தமிழர்களுக்கு மத்திய மந்திரிசபையில் இடம் போயிற்றே!' என்று; சி. சுப்ரமணியமும், ஆர். வெங்கட் ராமனும் தோற்றபோது, அண்ணா ஆதங்கம் தெரிவித்தார்.

கூட்டணி மந்திரிசபை அமையுமோ எனப் பலர் அஞ்சிக்கொண்டிருந்ததும் நடைபெறாமல், தி.மு.க. அறுதிப் பெரும்பான்மை பெற்றது. காங்கிரஸ் மிக மிக மோசமாகத் தோற்றது. தமிழகச் சட்டமன்றத் தேர்தலில் தி.மு.க. 137, காங்கிரஸ் 49, சுதந்திரா 20, இடதுசாரிக் கம்யூனிஸ்ட் 11, வலதுசாரிக் கம்யூனிஸ்ட் 2, முஸ்லிம்லீக் 3 என்ற முறையில் வெற்றிகள் பெற்றனர். நாடாளுமன்றத் தேர்தலில் தி.மு.க. 25, காங்கிரஸ் 3, சுதந்திரா 6, இடதுசாரிக் கம்யூனிஸ்ட் 4, முஸ்லிம்லீக் 1 என்பதாக வெற்றிகள் கிடைத்தன.

பெரியாரின் ஏமாற்றத்திற்கும், வருத்தத்திற்கும் ஈடு சொல்லவே முடியாது. காங்கிரஸ் தோற்றதில் ஏமாற்றமும், ஆச்சாரியார் கூட்டணி வென்றதில் வருத்தமும் மிகுந்தன! பெரியார்—

"பார்ப்பனர்கள் வெற்றி பெற்றுவிட்டனர்; பார்ப்பனர் ஆதரவில் பணக்காரரும் வெற்றி பெற்று விட்டனர்.

சோஷலிசம் சமதர்மம் பற்றி நம்மக்கள் கவலையற்றவர்களாக நடந்துகொண்டார்கள்.

எதிரிகளும் பொய்யும் புரட்டையும் ஆயுதமாகக் கொண்டு போராடினார்கள்.

இவைகளுக்குத் தமிழ்நாடுகாங்கிரஸ் ஆட்சி,தெரிந்தோ தெரியாமலோ நல்ல ஆதரவளித்து வந்திருக்கின்றது. தங்கள் தங்களை முக்கியப் படுத்திக்கொண்டு, காங்கிரஸ் வெற்றிபெற வேண்டும் என்பதுபற்றிக் கவலைப்படாததால், காங்கிரஸ்காரர்களிலேயே மிகப் பெரும்பாலானவர்களுக்கு வேலையில்லாமலேயே இருந்து வந்தது. பொதுவாகக் காமராசர் தோல்வியைத் தவிர, மற்ற தோல்வி எதுவும் எனக்கு அவ்வளவாகக் கவலை தரவில்லை. நமது மக்கள் ஜனநாயக உரிமைக்குத் தகுதியற்றவர்கள் என்பது எனது வெகு நாளைய கருத்து. இப்போதைய வெற்றியை மாற்ற வேண்டும் என்பதில், இந்த வெற்றியை அளித்த மக்களின் யோக்கியதையைச் சரிவர நிர்ணயிப்போமானால், நாம் ஒன்றும் தனி முயற்சி எடுத்துப் பாடுபட வேண்டியதில்லை.

மற்றும், நம் உயிர்போன்ற கொள்கைகளுக்கு இந்த ஆட்சியில் கேடு நேராதவரை, ஆட்சியின் போக்கைப்பற்றி நாம் கவலைப்பட அவசியமில்லை என்றே கருதுகிறோம். பொதுவாக, இதுபோன்ற பார்ப்பனர் வெற்றி (பார்ப்பன ரல்லாதார் தோல்வி) பற்றி எனக்கு இதற்குமுன் மூன்று அனுபவங்கள் உண்டு. மூன்றிலும் பார்ப்பனர் வெற்றி நிலைத்த பாடில்லை. ஆதலால் இன்றையப் "பார்ப்பனர் வெற்றி" பற்றியும் ஒன்றும் மூழ்கிப் போய்விடவில்லை என்றே நம் மக்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். நானும் அதிகக் கவலைப்படவில்லை.

பொதுவாக நம்நாட்டுக்கு இப்படி ஓர் நிலை வரக்கூடும் என்று கருதியே, 1963-ல், காமராசர் தமிழ்நாட்டு முதல் மந்திரி பதவியைவிட்டு அகில இந்தியக் கட்சிப்பணிக்குச் சென்றபோதே, நான் கூடாது என்று பத்திரிகையில் எழுதிய தோடு, 'தங்கள் ராஜிநாமா தமிழர்களுக்கும், தமிழ் நாட்டிற்கும், தங்களுக்கும் தற்கொலைக்கு ஒப்பாகும்' என்று தந்தியும் அனுப்பினேன்.

அவர் விலகியதன் பயனாகத் தமிழ்நாட்டில் பார்ப்பன ஆதிக்கத்திற்கு அனுகூலமான ஆட்சி ஏற்படுவதுடன், பொறுப்புள்ள ஆட்சிஅமைவதற்கில்லாமலே போய்விட்டது. வடநாட்டிலும் பொறாமை, துவேஷம், கோஷ்டி, ஏற்பட இடம் ஏற்பட்டுவிட்டது!

காமராசர் தோல்வியைப்பற்றி, பலர் என்னிடம் வந்து, துக்கம் விசாரிக்கும் தன்மைபோல், தங்கள் வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டார்கள். அவர்களுக்கு நான் அளித்த ஆறுதல்—1967 பிப்ரவரி 23-ந் தேதி தோல்வியைப்பற்றிக் கவலைப்படுவதைவிட, 1966 நவம்பர் 7-ந் தேதி டெல்லியில் நடைபெற்ற கொலை முயற்சியில், அவர் உயிர் தப்பியதை நினைத்து மகிழ்ச்சி கொள்ளுங்கள், என்று சொல்லி அனுப்பினேன். நானும் அப்படியே நினைத்துத்தான் சரிப்படுத்திக் கொண்டேன்!

இனி, நமது வேலை, நமது கொள்கைகளைத் தீவிர மாகப் பிரச்சாரம் செய்யவேண்டியதும், அதனால் ஏற்படும்

பலாபலன்களுக்கு நாம் தயாராக இருக்கவேண்டியதுமே நமது கடமையாகும்'' என்று 27-2-1967 "விடுதலை"யின் தலையங்கப்பகுதியில் கையெழுத்தியிட்டு எழுதினார்.

காங்கிரஸ் தோல்வியைத் தம் தோல்வியாகக் கருதும் பரந்த பெரிய உள்ளம், பிறர் நோயைத் தம் நோயாய்க் கருதும் பேராண்மை, ஈர நெஞ்சம் பெரியாருடையதாகும்! இடைக்காலத்தில் பதவியிலிருந்த பக்தவத்சலம், நாட்டில் விஷக்கிருமிகள் பரவிவிட்டன என்றார். அடுத்துவரும் அரசு, பழிவாங்கக்கூடும், என்று பயந்து, கோட்டைக்குச் சென்று,சிலமுக்கியமான இரகசிய ஃபைல்களைக் கொளுத்தி விட்டார் என்றும் அவர்மீது குற்றம் கூறப்பட்டது. சுதந்திராவில் 20சட்டமன்றஉறுப்பினர் வென்றதாலும், தி.மு.க. ஆட்சிப்பொறுப்பு அனுபவம் பெறாத கட்சி என்பதாலும் ராஜாஜி அன்பர்கள், ராஜாஜீ முதல்வராக வரவேண்டுமென அவரிடம் விருப்பம் கேட்டபோது, "அதை அவாள் சொல்லவேண்டாமோ'' என்றாராம். கே. ராஜாராம் வழியாக, இது அண்ணா காதுக்குப் போயிற்று. 6-3-67 அன்று அறிஞர் சி. என். அண்ணாதுரை தலைமையில் திராவிட முன்னேற்றக் கழக அமைச்சரவை, சென்னை ராஜாஜி மண்டபத்தில் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொண்டது. நாவலர் நெடுஞ்செழியன், கலைஞர் கருணாநிதி, கே.ஏ. மதியழகன், சத்தியவாணிமுத்து, ஏ. கோவிந்தசாமி, எஸ். மாதவன், எஸ்.ஜே. சாதிக்பாஷா, மா. முத்துசாமி ஆகியோர் அமைச்சர்கள். 'இந்தி எதிர்ப்பு நீடிக்கும்; கோயில்கள் முதலிய அறநிலையங்கள் பாதுகாக்கப்படும், குடிசை வாழ்வோர் நிலை மேம்படுத்தப்படும். மதுவிலக்கும் நீடிக்கும்; மொத்தத்தில் நல்ல ஆட்சி நடைபெறும்' என அறிவித்தார் புதிய முதலமைச்சர்! பல லட்சம் மக்கள் ராஜாஜி மண்டபத்தருகே குழுமி வாழ்த்து முழக்கினர்.

மதுவிலக்கு நீடிக்கும் என்று பத்திரிகையாளர்களிடையே அண்ணா கருத்தறிவித்ததும், பெரியார் தமது நீண்டகால வலியுறுத்தலான கொள்கையை நினைவு படுத்தலானார், 4-3-1967 "விடுதலை'' தலையங்கமூலமாய். "நான்

காங்கிரசை விட்டு வந்த பிறகு, சுமார் 30 ஆண்டுகளாகவே, இன்று உள்ள மதுவிலக்குக் கொள்கைக்கு எதிரி! இதற்காக, நான் மதுக்குடங்களைக் காவடி கட்டிச் சுமந்து போகிற மாதிரி, என்னைக் கேலிச் சித்திரம் போட்டுப் பத்திரிகைகளில் கண்டித்து எழுதியுள்ளார்கள். நான் காங்கிரஸ் மதுவிலக்குக்கு, உள் எண்ணம் கண்டுபிடித்து, "குடிஅரசு" இதழில் கட்டுரைகள், தலையங்கங்கள் எழுதியிருக்கிறேன்; நிறையக் கூட்டங்களில் பேசியிருக்கிறேன்!

1938-ல் ராஜாஜி தலைமையில் காங்கிரஸ் பதவிக்கு வந்த போது, நமது கல்வி வளர்ச்சியை ஒழித்துக் கட்டுவதற்கு ஓர் ஆதாரம் தேடப்பட்டது. அதாவது 100க்கு 5 வீதமே படித்த மக்களாயிருந்த நாம், ஜஸ்டிஸ் கட்சி ஆட்சிக்கு வந்த பிறகு, 100க்கு 7 பேர் படித்த மக்களானோம். இதைக் கண்டு ஆத்திரமடைந்த ராஜாஜி, 'கல்வியை இன்றுள்ள தன்மைப்படி நடத்துவதானால் அரசாங்கத்திடம் போதிய பணமில்லை. அதனால் வரவு செலவைச் சரிக்கட்ட 2,600 பள்ளிகளை (அதுவும் கிராமப் புறங்களில்) மூடவேண்டியது அவசியமாகிறது' என்று சொல்லியே, மதுவிலக்கினால் ஏற்பட்ட நட்டத்தைச் சரிக்கட்டினேன் என்று சாக்குக் கண்டு பிடித்துக் கொண்டார். ஆனால் அந்த மதுவிலக்கு அமலுக்கு வந்த நாள் முதல் நாளிதுவரைக்கும், அந்த மதுவிலக்குக் காரணமாக, அது ஒரு குடிசைத் தொழிலாக மாறி, இன்று குடிப்பது ஒரு பிரபுத்துவ நாகரிகமாகவே மக்களிடம் பரவியிருக்கிறது!

இந்த மதுவிலக்கினால் குடியர்களின் எண்ணிக்கை ஒரு சிறிதும் குறைந்தபாடில்லை என்பதோடு, இதற்காகக் குடிகாரர்கள் செலவிடும் பணமும் 50 முதல் 100 சதவீதம் உயர்ந்ததே யல்லாமல் குறையவில்லை என்பதோடு, முன்பு மதுக்கடைக்குச் சென்று வாங்கிக் குடித்தவர்களுக்கு, இன்று வீடு தேடிவந்து விநியோகம் ஆகும்படியான நிலை ஏற்பட்டிருக்கிறது. இந்த மது உற்பத்தித் தொழில் மூலம் நாட்டில் அயோக்கியர்கள், நாணயமில்லாதவர்கள் பெருகி இருக்கிறார்கள். அவர்கள் போலீசுக்கு நண்பர்களாக ஆகிவிடு

கிறார்கள். குடியர்கள் உடல் நிலையோ மிகமிகக் கேடடைந்தும் விடுகிறது.

இன்று 'மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு' ஆட்சிக்கு வந்திருக்கும் கட்சியார், ராஜாஜியைத் திருப்திப்படுத்த, அவருக்குப் பயந்து, மதுவிலக்கைத் தீவிரப் படுத்துவோம் என்று கூறி இருப்பதாகக் கருதவேண்டியிருக்கிறது. நம் மக்கள் சகல துறைகளிலும் கேடடைந்து, கெட்டு உழல வேண்டும் என்பதுதான் பார்ப்பன தர்மம். எந்த நிலையிலும் பார்ப்பனர் நம் யாருக்குமே நல்லவழி காட்டமாட்டார்கள்!

இந்த மதுவிலக்குத் துறையில், தேவைப்பட்டவர்களுக்கு எல்லாம் மது கிடைக்கும்படியும், மதுவினால் உடலும் புத்தியும், கெடாதபடியும் இருக்கத் தக்க வண்ணம், மது அனுமதிப்பு ஏற்படுத்தினால், சர்க்காருக்கு நல்ல நிதி வரும்படி ஏற்படுவதுடன், பார்ப்பனர் தவிர்த்த மற்ற சகல துறையிலும் உள்ள மக்களில், நல்ல அளவுக்கு, இந்த ஆட்சிக்கு ஆதரவு கிடைக்கும் என்றும் கருதுகிறேன்.''

திராவிடமுன்னேற்றக் கழகம் ஆட்சி அமைப்பது உறுதியானவுடனேயே, கழகத் தோழர்களுக்குப் பெரியாரின் நிலை இப்போது என்ன என்பதைத் தெரிந்துகொள்ள ஆர்வமும், அய்யமும் ஏற்பட்டது இயற்கைதானே? 'நான் வம்புச் சண்டைக்குப் போக மாட்டேன். அதாவது! இவர்களுக்கு எதிர்ப்புத் தெரிவிக்க மாட்டேன்' என்றார் பெரியார். ஏன்? காமராஜை ஒதுக்கி விட்டுப் பார்த்தால் பெரியாருக்குக் காங்கிரஸ்காரர்களைவிட வேண்டியவர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தில்தானே இருக்கிறார்கள்? பெரியார் அவர்கள் எல்லாரையும் எவ்வளவோ (ரிசர்வேஷன் இல்லாதபடி) திட்டியும், அவர்களில் யாரும் பெரியாரை மரியாதைக் குறைவாகப் பேசியதில்லை! ஒரு சிலர் சந்திக்க நேர்ந்தபோதும், மிகப் பணிவுடனும், பண்புடனும் நடந்திருக்கிறார்கள். இப்போது மந்திரியாகியிருப்பவர்கள் யாருமே பக்தவத்சலத்தைவிட மோசமாக நடந்து விட மாட்டார்கள் என்று திடமாக நம்பினார் பெரியார்!

பெரியாரின் கொள்கையான பகுத்தறிவு, ஜாதிஒழிப்பு, வகுப்புவாரி உரிமை இவைகளில் எதுவுமே காங்கிரஸ்காரர் களுக்கு உடன்பாடல்ல! ஆனால் திராவிட முன்னேற்றக் கழகத்தாருக்கு உடன்பாடு உண்டு! எதிர்த்துப் பேசியதே இல்லை என்பதும் உண்மை! தி.மு.க. தலைவர்கள் பகுத் தறிவு வாதிகள்; மந்திரிகளில் பார்ப்பனர் யாருமில்லை; பகுதிப் பேருக்குமேல் முன்பே திராவிடர் கழகம்—சுய மரியாதை இயக்கங்களில் இருந்தவர்கள்.

தி.மு.க. சோஷலிசத்துக்கு விரோதமாக இருக்காது என்பதால், இப்போது பார்ப்பனருக்குத்தான் இது நெருக் கடியான காலம்; சோதனைக் காலம்! எனவே, இந்த மந்திரி சபைக்கு நம்மால் தொந்தரவு வரக்கூடாது என்று பெரியார் உறுதியாகக் கருத்துக் கொண்டார். பெரியார் எப்படி எண்ணுவார் என்பது அண்ணாவுக்குத் தெரியாதா?

அரசியலில் கண்ணியத்தையும் நாகரிகத்தையும் கற்பித்து, நாட்டில் வேரூன்றச் செய்த அண்ணா பதவி ஏற்றவுடன், சென்னையில் உள்ள தோழமைக் கட்சித் தலைவர்களை எல்லாம் சென்று சந்தித்தார்; காங்கிரஸ் கட்சித் தலைவர்கள் இல்லங்களுக்கும் சென்று சந்தித்தார்! அவர் மனம் அமைதி பெறவில்லை! ஆட்சிக் கட்டிலில் ஏறி அமர்ந்தபோது, யாரை உளமார எண்ணி உணர்ச்சி வயப் பட்டாரோ, அவர் சென்னையில் இல்லை! திருச்சியிலிருக் கிறார் தந்தை பெரியார் என்று தெரிந்ததும், நாவலர் நெடுஞ்செழியன், கலைஞர் கருணாநிதி ஆகிய அமைச்சர் களோடும், வெற்றி வாய்ப்பிழந்த அன்பில் தர்மலிங்கத் தோடும், இரவோடிரவாகப் புறப்பட்டுத் திருச்சி சேர்ந்தார்.

செழியன் போன்றார் தடுத்த போது, என்னை நாட்டுக்கு அறிமுகப் படுத்தியவர் அவரே. முதலமைச்சராகி யும் நான் அவரைப் பார்க்காவிட்டால், மனிதப் பண்பே ஆகாது என்று கூறினார் அண்ணா.

பெரியாரின் வரலாற்றில் இதுதானே பெரிய வெற்றி! அவர் வளர்த்த பிள்ளைகள், அவரிடம் நேரிடையாகப் பயிற்சி பெற்ற தொண்டர்கள், இன்று தமிழகத்தின்

முதலமைச்சராக — அமைச்சர்களாக —வீற்றிருக்கிறார்கள். பதினெட்டு ஆண்டுகள் தம்மை விட்டுபிரிந்து, விலகிச்சென்று வாழ்ந்தவர்கள், தாம் கண்ணீர்த் துளிகள் என்று தாக்கியதையும், கேலியாகப் பேசியதையும், தேர்தல்களில் எதிர்த்தே பிரச்சாரம் புரிந்ததையும் பொருட்படுத்தாமல், தந்தை மகற்காற்றும் நன்றியாக, நம்மை அவையத்தில் முந்தியிருக்கச் செய்து விட்டார்; இனி மகன் தந்தைக் காற்றும் உதவிதான் பாக்கி! பதவியைப் பெரிதாக மதிக்காமல் உடனே நாமே சென்று அவரைப் பார்க்க வேண்டுமென்று போனார்களே—இந்த நிகழ்ச்சிக்கு ஈடான சரித்திர நிகழ்ச்சி உலக வரலாற்றிலேயே கிடையாதல்லவா?

தம்மைத் தேடிவந்து விட்டவர்களைக் கண்டதும், தமது கண்களையே நம்பாமல், பெரியார் கூச்சம் மேலிட்டுக், கூனிக் குறுகினாலும், தாங்கொணா மகிழ்வுப் பெருங் கடலில் மூழ்கிச், சிக்கித், தத்தளித்துப் போய்விட்டார்! அண்ணாவும் முதலில் தந்தையின் உடல் நலம், மணியம்மையாரின் உடல் நலம், ஈரோட்டு வீடு, இப்படி எதைஎதையோ விசாரித்து விட்டுப், புறப்படும்போதுதான், "அய்யா! நாங்கள் அவ்வப்போது எப்படி எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை எங்களுக்குச் சொல்லி வரவேண்டும்" என்றார். பெரியாரும் "அப்படியே ஆகட்டுங்க" என்று சொல்ல வேண்டி வந்தது.

அண்ணாவும் அமைச்சர்களும் சென்றார்கள், கண்டார்கள், பெரியாரின் இதயத்தை வென்றார்கள், மீண்டார்கள்! ஆனால் பெரியாருக்குத் தலைவலி ஒன்றை உண்டாக்கி விட்டார்களே? கண்ணை மூடிக்கொண்டு கிணற்றில் விழச்சொன்னாலும் பெரியாரின் ஆணையைச் சிரமேற்கொள்ளும் இலட்சிய வீரர்களின் கூடாரமல்லவா திராவிடர் கழகம்? அதிலுள்ள சிலர் (அணுக்கமான சிலர்) பெரியார் தவறு இழைத்து விட்டார் என்றே கருதினார்கள்; பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளாகப் பின்பற்றி வந்த கோட்பாட்டிலிருந்து பெரியார் விலகி விட்டதாக நம்பினார்கள்! வருத்தத்தோடு சிலரும், கோபத்தோடு பலரும் கடிதம்

எழுதினார்கள். பெரியார், அவர்களைச் சமாதானப் படுத்தி, விளக்கமாக ஒரு தலையங்கம் 9–3-67 "விடுதலை" ஏட்டில் எழுதினார்.

"தேர்தல் முடிவுக்குப் பின்னிட்டு நான் தெரிவித்த எனது கருத்தாகிய அறிக்கைகளைப் பற்றி எனது தோழர் களிடையிலும், காங்கிரஸ்காரர்களிடையிலும், பொது மக்களிடையிலும் ஒரு தவறான எண்ணம் ஏற்பட்டிருப்ப தாகத் தெரிகிறது.

சிலரை நேரில் பார்த்த அளவிலும், சிலரால் எனக்கு எழுதப்பட்ட கடிதங்களைப் பார்த்த அளவிலும் எதிர்க் கட்சித் தலைவர்கள் என்னைக் கண்டு பேசிய பிறகு, எனது கருத்து மாறிவிட்டதாகவும், எனது எதிர்ப்பு உணர்ச்சியை நான் கைவிட்டு விட்டதாகவும், எதிரிகளுக்கு ஆதரவாகப் போவதாகவும், இதனால் எதிர்காலம் மிகவும் மோசமாய்ப் போய் விடுமென்றும், நாம் ஆதரிக்க ஆரம்பித்து விட்டால் எதிரிகள் தலைகால் தெரியாமல் ஆடுவார்கள் என்றும், இதனால் சாதாரண மக்களும், நம் கழகத் தோழர்களும் பழி வாங்கப் படுவார்கள் என்றும், என்னை நம்பியவர்களை நான் காட்டிக் கொடுத்து விட்டதாக ஆகுமென்றும், முடிவாக நானும் எதிரிகளைக் கண்டு பயந்து போய் வளைந்து கொடுத்து விட்டேன் என்றும், 'பிளேட்டைத் திருப்பிப் போட்டு விட்டேன்' என்றும், இந்த நிலைமையை யாருமே எதிர்பார்க்கவில்லையென்றும் தெரிவித்திருப் பதோடு, சிலகடுமையான பதங்களைப் பிரயோகப்படுத்திக், கீழ்த்தரமான தன்மையில், கையெழுத்தில்லாத கடிதங்கள் மூலமும் சிலர் தெரிவித்திருக்கிறார்கள்.

இவற்றைக் கண்டு நான் ஆச்சரியப் படவில்லை! என் மனத்திலும் இதைப்பற்றி எவ்விதக் கலக்கமும் கொள்ள வில்லை! ஏனென்றால், இப்படிப்பட்ட சமயத்தில், நான் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதில், யாருடைய யோசனையையும் நான் கேட்க வேண்டுமென்று கருதி இருந்தவனல்ல; அன்றியும், பிறர் என்ன நினைப்பார்கள் என்பது பற்றிச் சிந்தித்து நடக்க வேண்டும் என்ற கவலை

கொண்டவனும் அல்ல. மற்றென்னவென்றால், இப்படிப் பட்ட சமயத்தில், மக்கள் எப்படி நடந்துகொள்ளவேண்டும், என்பதைத் தெரிவிக்க வேண்டிய பொறுப்பில் உள்ளவனென்றும், அதற்கு நான் ஒருவன்தான் நடுநிலைமையாய் இருப்பவன்—இருக்க வேண்டியவன்—என்றும் கருதிக் கொண்டு இருப்பவன்! ஆனதால், எனது கருத்தைத் தெரிவித்துக் கொண்டதற்கு ஆக மற்றவர்கள் என்மீது ஆத்திரப் பட்டார்களானால், அதற்காக வருத்தப்படுவதோ, அல்லது என் கருத்தைத் திருத்திக் கொள்ளுவதோ மாற்றிக் கொள்ளுவதோ என்றால், அது எனது பதவிக்கு அழகல்ல என்றுதான் நான் கருதிக் கொள்ள வேண்டும்!

இன்றைய நிலைமை மிகமிகஅதிசயமானதும், நெருக்கடியானதும் ஆகும். இராஜாஜி இவர்களைப் பயன்படுத்திக் கொள்ளும்போது என்ன சொன்னார்? இராமன் குரங்குகளைப் பயன்படுத்திக் கொண்டது போல், நான் இவர்களைப் பயன்படுத்திக் கொள்ளுகிறேன். இவர்கள் கைக்கு ஆட்சி வரும்படியாகக் காங்கிரசைத் தோற்கடித்தால்தான், காங்கிரசுக்கும் காங்கிரஸ் ஆதரவாளர்களுக்கும் வெட்கம் வரும். காங்கிரசுக்குச் செருப்பால் அடித்தது போன்ற அடி கொடுக்க வேண்டுமானால் இவர்களைக்கொண்டு காங்கிரசைத் தோற்கடிக்க வேண்டும் என்பதாக ஒன்றுக்கு மேற்பட்ட தடவைகளில் சொன்னார். அந்தப்படியே காங்கிரசைத் தோற்கடித்து, இவர்களைக் கொண்டுவந்து பதவியில் வைத்துவிட்டார். பதவிக்கு வந்தவர்களும் இராஜாஜியால்தான் பதவிக்கு வந்தோம் என்று கருதி நன்றிமேல் நன்றி தெரிவித்து, ஆசீர்வாதத்தின்மேல் ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டு இருக்கிறார்கள்!

இந்த நிலையில் நமது கடமை என்ன? உட்கார்ந்து கொண்டு, அவமானப்பட்டதாகக் காட்டிக்கொண்டு, அதிலிருந்து தப்பித்துக் கொள்ள, நாமாக அவர்களுக்குத் தொல்லை கொடுப்பதா? கூடுமானவரை தொல்லை கொடுக்க வேண்டிய அவசியம் நேரிடாமல் பார்த்துக் கொள்ளும் முயற்சியையாவது செய்து பார்த்து விடுவதா?

நாம் தொல்லை கொடுப்பதென்று ஆரம்பித்து விட்டால், குதூகலமாய்ப் பின் விளைவுகளைப் பற்றிக்கூட எண்ணாமல், நமக்கு ஆதரவு கொடுக்க மக்கள் முன்வருவார்கள் என்பது எனக்குத் தெரியும்! இதனால் பதவியிலிருப்பவர்கள் தொல்லைப்படலாமே தவிர,மாறுதலடைந்துவிட முடியுமா? அவர்களைப் பாதுகாப்பதற்கென்று பார்ப்பனர், பத்திரிகைக்காரர், பணக்காரர் முன்வருவார்கள்! நாம் இந்த நான்கு தரப்பாரையும் சமாளிக்க வேண்டும்! நம்மால் சமாளிக்க முடியும்; ஆனால் பொது மக்கள் மீது இப்போது, அவ்வளவு சுமை ஏற்ற வேண்டுமா? அவ்வளவு அவசியம் நமக்கு இருக்கிறதா?

ஏனென்றால் திரு அண்ணாதுரை தீர்க்கதரிசி அல்லவானாலும், கெட்டிக்காரர்! எவ்வளவு சீக்கிரம் அவர்களை விட்டு, வெளியேற முடியுமோ வெளியேறி, நமது மந்திரியாக ஆனாலும் ஆகக்கூடும். நமக்கே, அண்ணாதுரை மந்திரிசபையை ஆதரித்து, மறுபடியும் அவரே வந்தால் தேவலாம் என்று கருதும்படியான நிலைமை வந்தாலும் வரலாம்!

நாம் காமராஜர் கையைப் பலப்படுத்த வேண்டும் என்கின்ற கொள்கையில் இருந்தோம்; இருக்கிறோமே தவிர காங்கிரசின் அடிமை அல்லவே! அதுவும் நிபந்தனையற்ற அடிமை அல்லவே! அப்படியிருந்தால் 'பக்தவத்சலம் கண்டன நாள்' கொண்டாடி இருப்போமா? இன்றுதான் ஆகட்டும்; நாம் எந்த அளவில் இந்த மந்திரி சபையை ஆதரிப்பவர்களாக ஆகிவிட்டோம்? கொஞ்ச நாளைக்கு எதிர்ப்புக் காட்டவேண்டாம் என்கின்ற நிலையில்தானே இருக்கிறோம்?

காங்கிரஸ்காரரை நினைத்துக்கொண்டு நாம் ஒன்றும் செய்ய வேண்டியதில்லை. பக்தவத்சலமே இவர்களுக்கு 6 மாத வாய்தா கொடுத்திருக்கிறாரே; நான் அப்படி வாய்தா கூடக் கொடுக்கவில்லையே? சமயம் எதிர்பாருங்கள் என்பதாகத்தானே சொல்கிறேன்? இதனால் நான் பயந்துவிட்டேன் என்று சொல்லப்படுவதானால், எனக்கு உள்ள

மரியாதை எவ்வளவு? தோழர்களே! மனதை விட்டுவிடாமல், உறுதியான மனத்தைக்கொண்டு எதையும் சிந்தியுங்கள்!"

அடுத்த நாளே, அதிகநாள் தாமதிக்க மனம் பொறுக்காமல், பெரியார், மந்திரிகளுக்குச் சில அறிவுரைகள், உடனடித் தேவையாகத் தர ஆரம்பித்துவிட்டார்! "தேர்தல் காலத்தில் எப்படி எப்படியோ வாக்குறுதிகள் தரலாம். அதற்காக ஆட்சிப் பொறுப்பேற்ற பின்னரும், அவசரமாக எதையும்சொல்லிவிடக்கூடாது. அரிசிப் பஞ்சமும் ஒருகாரணமாகி, இவர்கள் ஆட்சிக்கு வந்திருந்தாலும், அது ஒரு பலமான காரணமல்ல. அதற்கு இவர்களால் என்ன பரிகாரம் காண முடியும்? தலையை மொட்டையடிப்பதால் ஆள்பாரம் குறைந்து விடுமா?" என்று கேட்டார் பெரியார். "அரிசியை வெளி மாகாணங்களுக்குச் செல்லவொட்டாமல் தடுப்பது, லெவி கொள்முதல் முறையைச் சீர்திருத்துவது, குறைந்த நிலமுள்ளவர்களுக்குக் கிஸ்தியில்லாமல் செய்வது, பஸ் கட்டணம் குறைப்பது போன்றவைகளைச் செய்வது தேவையேயில்லை. அப்படிச் செய்வதானாலும் நிதானமாக, ஆழ்ந்து யோசித்துச் செய்ய வேண்டும்.

அரிசி நிலவரி முதலிய பிரச்சினைகள் இயற்கைப் பிரச்சினைகளல்ல; செயற்கைப் பிரச்சினைகள். அதனால் இவற்றை நம்பியே வெற்றியைக் கணித்துக் கொள்ளக் கூடாது. உத்தியோகம், பதவிகள் அளிப்பதில் பக்தவத்சலத்தை முன் மாதிரியாகக் கொள்ளக்கூடாது; இனநலம் மறக்கக்கூடாது."

இன்றைக்குத் தங்களுக்கு வரும் கூட்டத்தையும் ஆரவாரத்தையும் நம்பி, மந்திரிகள் ஏமாந்து விடக்கூடாது என்றார் பெரியார். விபூதி வீரமுத்துவுக்கு ஒரு காலத்தில் இருந்த பெருமை என்ன? இன்றைக்கு ஒரு கிருபானந்த வாரியார் சுவாமிக்கோ, சங்கராச்சாரிய சுவாமிக்கோ இருக்கிற பெருமை என்ன? இதெல்லாம் நிலையானதா என யோசிக்க வேண்டும். சிபாரிசுகள், இலஞ்சங்கள் விஷயத்தில் எச்சரிக்கையாயிருக்க வேண்டும். எதுவாயிருந்தாலும் மந்திரிகள் தாங்கள் நேர்மையாக நடந்து கொள்வதாகவும்,

தங்கள்மீது தவறில்லை என்றும் பெரும்பான்மையான மக்களுக்குக் காட்டிக் கொள்வதுடன், அறிவாளிகளாகச் சிந்திக்க வேண்டும்—என்றும் பெரியார் கேட்டுக் கொண்டார்.

அடுத்த படியாகப் பெரியாருக்குக் கடினமான வேலை ஒன்று காத்திருந்தது. அதாவது அதிருப்தி கொண்டுள்ள தமது தோழர்களுக்குத் தொடர்ந்து சில சான்றுகள், ஆதாரங்கள் காட்டித் திராவிட முன்னேற்றக் கழக ஆட்சியால், திராவிடர் கழக—சுயமரியாதை இயக்கக் கொள்கைகளுக்கு ஒன்றும் கேடு நேர்ந்துவிடாது, என்று நிரூபிக்க வேண்டும். அதற்காகப் பத்திரிகைகளை நல்லவண்ணம் துருவித் துருவிப் படித்து வந்தார் பெரியார்!

மந்திரிகள் பதவிப்பிரமாணம் எடுத்துக்கொண்டபோது கீதை, இராமாயணம், குரான், பைபிள் போன்ற நூல்கள் பக்கத்திலிருந்தும் அவற்றைத் திரும்பிக்கூடப்பார்க்கவில்லை. அறநிலைய மந்திரி உள்பட அனைவரும், 'மனப்பூர்வமாக' என்றே பதவிப் பிரமாணம் செய்தார்களே, என்று பத்திரிகைகள் அங்கலாய்த்தன. இது பெரியாருக்கு ஆதரவான முதல் சான்று! அடுத்து, தேர்தல் நேரத்தில் இராஜாஜி, திராவிட முன்னேற்றக் கழகத்ினரைத் தமது இனத்தாருக்கு அறிமுகப்படுத்தும் போது, இவர்கள் தி.க. வாசனையை அடியோடு கழுவிவிட்டு வந்தவர்கள் என்றாரே, அது பொய்யென்று இந்த மந்திரிகள் பதவி ஏற்ற நாளிலிருந்தே தெரிய ஆரம்பித்து விட்டது, இரண்டாவது சான்று பெரியாருக்கு ஆதரவாக! மூன்றாவதாக, நீங்கள் தாம் திராவிடர் கழகத்தை விட்டு வந்தவர்களாயிற்றே; திராவிட முன்னேற்றக் கழகம் என்பதற்குப் பதிலாக, தர்ம முன்னேற்றக் கழகம்—அப்போதும் D.M.K. தானே—என்று பெயரை மாற்றச் சொன்னதற்கு இணங்கவில்லை இவர்கள்! நான்காவதாக, உங்கள் கொடியில் எதற்குக் கருப்பும் சிவப்புமாக இரு நிறங்கள்? பேத உணர்ச்சி எங்களுக்குக் கிடையாது என்று காட்ட, ஒரே நிறத்தில் கொடியை

மாற்றி விடுங்களேன்—என்ற பார்ப்பனர் ஆலோசனைகளை தி.மு.க. அலட்சியப்படுத்தியது.

இப்போதைக்கு இந்தச் சான்றுகளே போதும் என்று பெரியார் எடுத்துக்காட்டி, திராவிட முன்னேற்றக் கழக ஆட்சி சிறிதளவு நன்மை செய்தாலும் அதைப் பெரிதாக எடுத்துக்கொள்ளும் மனப்பக்குவம் பெறவேண்டும். கோர்ட்டில் வாதாடுகிறபோது,வழக்கின் தன்மை ஒரு மாதிரியாக இருக்கும். பஞ்சாயத்தாரைக்கொண்டு ராஜி பேசுகிறபோது, வழக்கின் தன்மை வேறு மாதிரியாகத்தானே இருக்கும்-என்பதை மக்க்ள் விளங்கிக் கொள்ளவேண்டும்—என்றார் பெரியார்.

அடுத்து இரண்டொரு நாட்களுக்குள், பெரியாருக்குத் தமது கருத்தை வேடிக்கையாகச் சொல்ல இன்னொரு வாய்ப்பைத் தந்துவிட்டார், பொதுப்பணி, போக்குவரத்து, வீட்டுவசதித் துறை அமைச்சரான கலைஞர். மு.கருணாநிதி. பெரியாரின் 16–3–1967 "விடுதலை" தலையங்கத்தின் ஒரு பகுதியே விவரங்களை விளக்கும்:—"அட பாவமே! மந்திரி கலைஞர் கருணாநிதி 'தமிழுக்குக் கேடு வந்தால் மந்திரி பதவியை விட்டுவிடுவேன்!' என்று எதற்காகச் சொல்ல வேண்டும்? ஏன் அநாவசியமாய் முட்டாள்கள் வைத்த கண்ணியிலே மாட்டிக் கொள்ளவேண்டும்? அப்துல் காதருக்கும் ஆடி அமாவாசைக்கும் என்ன சம்பந்தம்?

ஒழுக்கம்-நாணயம் கெட்டால், நீதிகெட்டால், நம்பிக்கை கெட்டால், நன்றி கெட்டால் என்பது போன்ற மனிதத்தன்மை எங்களிடம் இல்லையானால், எங்களால் காப்பாற்ற முடியாவிட்டால், பதவியை விட்டுவிடுவேன்—(ஏன்) உயிரையும்கூட விட்டு விடுவேன்-என்று கூறலாம்! 'கப்சா'வும் விடலாம்! அதை விட்டுவிட்டு, தமிழைக் காப்பாற்றா விட்டால், அதற்குக் கேடுவந்தால் பதவியை விட்டு விடுகிறேன் என்றால், அதற்கா மக்கள் ஓட்டுக் கொடுத்தார்கள்? ஒவ்வொன்றுக்காகவும் மந்திரி பதவியை விட்டு விடுவேன் என்றால், அப்படி ஒரு மனிதனுக்கு எத்தனை மந்திரிப் பதவி இருக்கிறது?

நாம் வீட்டில் தமிழ் பேசுகிறோம். கடிதப் போக்கு வரத்து, நிர்வாகம், மக்களிடம் பேச்சு இவைகளைத் தமிழில் நடத்துகிறோம். சமயத்தைச் சமய நூல்களை இலக்கியத் தைத் தமிழில் கொண்டு இருக்கிறோம்! சரி! இதற்கு மேலும் சனியனான தமிழுக்கு என்ன வேண்டும்?

எவ்வளவோ வேலை செய்ய வேண்டி இருக்கிறது. மந்திரி 'பதவியில் உட்கார்ந்து கொண்டு, 'தமிழுக்குக் கேடு வந்தால் பதவியை விட்டுவிடுகிறேன்' என்கின்ற மந்திரிக் கும், ஊர் ஊராய்த் திரிந்து குட்டிச் சுவராக வேண்டிய கோயில்களை எல்லாம் கட்டி முடிக்கின்ற திருப்பணியில் இருந்த மந்திரிக்கும் (பக்தவத்சலம்) தரத்தில் என்ன வித்தி யாசம்? நான் இதை மந்திரி மீது குறைகூற எழுதவில்லை; மந்திரிக்கு உள்ள பகுத்தறிவு எனக்கு நன்றாய்த் தெரியும்!

ஏன், பாமர மக்களுக்கு வழியல்லா வழியில் பயப்பட வேண்டும்? என்பதற்காகவே எழுதுகிறேன்! தமிழ் பற்றிய இந்தக் கருத்து, என் இன்றையக் கருத்தல்ல! இந்தி எதிர்ப்புக் காலந்தொட்டு எனக்கு இந்தக் கருத்துதான். இது மந்திரிகளுக்கும், தமிழுக்காக இன்று பாடுபடுபவருக் கும் தெரியும்!

அடகெடுவாய் பலதொழிலும் இருக்கக், கல்வி
அதிகமென்றே கற்றுவிட்டோம், அறிவில் லாமல்!
திடமுளமோ கனமாடக், கழைக்கூத் தாடச்,
செப்பிடுவித் தைகளாடத் தெரிந்தோ மில்லை!
தடமுலைவே சையராகப் பிறந்தோ மில்லை;
சனியான தமிழைவிட்டுத் தைய லார்தம்
இடமிருந்து தூதுசென்று பிழைத்தோ மில்லை!
என்னசென்ம மெடுத்துலகில் இரக்கின் றோமே?

தமிழ் படித்தால் பிச்சைகூடக் கிடைக்கவில்லை; தமிழ் படித்தது பிச்சை எடுப்பதைத் தவிர வேறு உயிர் வாழ ஒன்றுக்கும் பயன்படவில்லை என்பதோடு, இதற்காகச் செலவு செய்த காலத்தை வேறு துறையில் செலவிட்டால் வாழ்வில் பயன் ஏற்பட்டிருக்கும் என்பதையும், 100 ஆண்டு

களுக்கு முன்பே ஒரு தமிழ் கற்ற அனுபவப் புலவர் மேற்கண்ட பாடல் மூலம் எடுத்துக் காட்டி இருக்கிறார்.''

யார் ஆட்சிக்கு வந்தால் என்ன? அரசியல் நிலையினை இனநலம் என்ற அளவு கோலால் அளந்து பார்த்து, இந்த ஆட்சி நமக்குப் பயன்படுமா? தமிழர் நலனுக்குப் பாதுகாப்பாக இருக்குமா? உரிமைகள் பறிபோகாமல் காப்பாற்றப்படுமா? சமதர்மம் தழைக்குமா? பகுத்தறிவு ஓங்குமா? என்று பார்ப்பதுதானே பெரியாரின் கொள்கை! 'இந்தப் பொதுத் தேர்தலுக்கு 5 ஆண்டுகளுக்கு முன்னரே பெரியார் தீர்க்க தரிசனத்துடன், அரசியல் முன்கணிப்புத் திறனுடன், ஒன்று கூறியிருந்தார். 1–1–62 "விடுதலை" தலையங்கப் பகுதியில் "இனி கண்ணீர்த்துளிக் கட்சி, தேர்தலுக்குப் பிறகு இந்த நாட்டில் உலவ வேண்டுமானால், பார்ப்பன வெறுப்புச் சாதனத்தைத்தான் கைத்தடியாகப் பிடித்துக் கொள்ள வேண்டியவர்கள் ஆவார்கள்! இந்தக் காரியத்துக்கு என்னை அணுகலாம்; நானும் ஆதரவளிக்கலாம்!'' என்று எழுதியிருந்தது இருதரப்பாருக்கும் அனுசரணையான வாசகமல்லவா? வந்து சந்தித்தவர்களுக்கும் வந்த பின் ஆதரிக்கத் தொடங்கியவருக்கும் இது ஓர் எழுதா ஒப்பந்தம்—உடன்படிக்கை—தானே?

எனவேதான் பெரியார், தமிழர்களின் பிறப்புரிமையான வகுப்புரிமை முழக்கத்தை இப்போதும் தொடங்கினார்:— "தமிழ் நாட்டில் தமிழர்கட்கு வகுப்பு உணர்ச்சி ஏற்பட்ட காலமான 1920–ஆம் ஆண்டு முதல், நாட்டில் ஒழுக்கம், நாணயம், அமைதி, கண்ணியம், நீதி, நேர்மை முதலிய எல்லா நற்குணங்களையும் ஒழியும்படிச் செய்துவிட்டார்கள்! யோக்கியன் அயோக்கியன் என்ற பேதமேயில்லாமல் செய்து விட்டார்கள். மனிதனுக்கு மனிதன், தான் எப்படிப்பட்ட ஈனத்தன்மையான காரியங்களைச் செய்தாவது வாழ வேண்டியதுதான் மனிதப் பண்பு என்று ஆக்கிவிட்டார்கள். ஆண்களோ பெண்களோ, யாரும் ஒழுக்கத்தைப் பற்றியோ நாணயத்தைப் பற்றியோ சிந்திப்பது முட்டாள்தனமென்றே ஆக்கிவிட்டார்கள்.

இன்றைய நிலைமை, ஒரு ராணுவ ஆட்சி ஏற்பட்டுச் சர்வாதிகார அரசு ஏற்பட்டால் ஒழிய மக்களுக்குப் பாது காப்பு ஏற்படாது; நல்வாழ்வு ஏற்படாது என்கிற நிலையை உண்டாக்கிவிட்டார்கள்! காரணம், தங்கள் நிலை பாது காப்பாய்விட்டது; மற்ற எவன் எக்கேடு கெட்டால்தான் நமக்கென்ன என்கிற முடிவுதான்! மனுதர்மத்துக்கு மாறான தன்மையைக் காங்கிரஸ் தனது கொள்கையாகக் கொண்டவுடன், நாட்டை அந்நியன் வசப்படுத்தியாவது தங்களைப் பாதுகாத்துக் கொள்ளத் துணிந்துவிட்டார்கள். நாட்டில் இமயம் முதல் குமரி வரை உள்ள எல்லாச் செல் லாக் காசுகளையும், கீழ்த்தர மக்களையும், சமுதாய எதிரி களையும், எதைச் செய்தாவது வயிறு பிழைக்கும் தன்மை யில் உள்ளவர்களையும் தேடிப் பிடித்துத் தங்கள் வச மாக்கிக் கொண்டு, பேடி யுத்தம் நடத்துகிறார்கள்! இதனால் பொறுப்பும் நேர்மையும் உள்ள மக்கள் பயந்து மறைந்து வாழ்கிறார்கள்.

நாட்டின் நிலைமைக்கு ஒரு சின்ன எடுத்துக்காட்டாக அண்மையில் நடந்த தேர்தலையே பார்க்கலாம். தேர்தலில் ஒவ்வொரு அபேட்சகர் ஒரு லட்சம், ஒன்றரை லட்சம், இரண்டு லட்சம் ரூபாய் வரை செலவு செய்தும், சிலர் தோற்றுப் போய் இருக்கிறார்கள். சில காலிகள் தேர்தலில் நின்றதன் மூலம் 10,20,30 ஆயிரம், ஒரு லட்சம் ரூபாய் வரை பணம் சேர்த்துக் கொண்டார்கள். காமராசரைத் தோற் கடிப்பதற்காக 2, 3 லட்சம் செலவாயிற்று என்றும் சொல்லு கிறார்கள்!

இந்த நிலைபற்றி நான் சொல்லுவது, அபேட்சகர் களைப் பொறுத்தோ, கட்சிகளைப் பொறுத்தோ, அரசியல் தன்மையைப் பொறுத்தோ மாத்திரம் அல்ல; மக்களைப் பொறுத்துமேதான் கூறுகிறேன். இப்படிப்பட்ட நாட்டில் பொதுத் தொண்டு, அரசியல் தொண்டு, சமுதாயத் தொண்டு என்று எதைச் செய்கிறது என்பது நமக்குத் தோன்றவில்லை!

இப்போது உள்ள வசதியைக் கொண்டு, நமது வகுப்பு விகிதாச்சார உரிமையை நாம் முதலில் பெற்று ஆக வேண்டும். அதற்குப் பல சங்கடங்கள் ஏற்படலாம் என்றாலும், எதிரிகள் கையாளும் எல்லா முறைகளையும் நாம் கையாளப் பின் வாங்கக்கூடாது. மற்றும், மூடநம்பிக்கைகளை ஒழிக்கும் வேலையில் நாம் தீவிரமாய், அதி தீவிரமாய் ஈடுபட வேண்டும். இதற்குப் பார்ப்பனரும், இமிடேஷன் பார்ப்பனரும் தவிர மற்றவர்கள் குறுக்கிட மாட்டார்கள்! நம்முடன் சேருவார்கள்; ஆதரவளிப்பார்கள்!

நாம் இந்த எண்ணம் கொண்டுதான் காங்கிரசை ஆதரித்தோம்; ஆனால் காங்கிரஸ் நம்மை ஆதரிக்கவில்லை; சிறிதுகூட ஆதரிக்கவில்லை! அரசியல் தன்மையில் நெருங்கியதால், பாமர மக்கள் நம் மீது பற்றுக் கொண்டிருந்தும், நம்மை ஆதரிக்கவில்லை! கடைசியாய்ச் சொல்லுகிறேன்; எனக்கு வயது 88. இனி நான் எவ்வளவு நாளைக்கு இருக்க ஆசைப்பட முடியும்? எவ்வளவு நாளைக்குத்தான் இருக்க முடியும்? என் நிலை எனக்குத் தெரியும்! அதனால்தான் சொல்லுகிறேன், வகுப்புரிமை பெற்றே ஆகவேண்டும் என்று!" ("விடுதலை"—தலையங்கம் 18-3-1967)

திராவிட முன்னேற்றக் கழக ஆட்சி நடைபெறுவதால் பெரியார் தமது பிரிவினைக் கொள்கையைக் கைவிட்டு விடுவாரோ? அவர்கள் திராவிட நாடு பிரிவினைக் கோரிக்கையை அடியோடு கைவிட்டு விட்டோம் என்று சொல்லித் தானே, தேர்தலுக்கு நின்று, வெற்று பெற்று, இன்று ஆட்சிக்கும் வந்து விட்டார்கள்! பெரியார் 1938 முதல் நாட்டுப் பிரிவினை கேட்டவராயிற்றே! இதிலுள்ள நியாயத்தை, ஜின்னா, அம்பேத்கார் மாத்திரமல்லாமல், காந்தியார், இராஜாஜி போன்றவர்களும் ஒத்துக்கொண்டார்கள்! வெள்ளைக்காரன் ஓடிய அவசரத்தில் தராமல் போய்விட்டான்! நாடு காங்கிரஸ்காரர் கையில் கிடைத்ததும், இந்தியா இனி ஒரே நாடுதான்! பிரிக்கக்கூடாத நாடு! என்று சட்டம் செய்து கொண்டார்கள். திராவிடர் கழக

மும், அதிலிருந்து பிரிந்த திராவிட முன்னேற்றக் கழகமும் பிரிவினைக் கோரிக்கையை விடாமல்தான் வலியுறுத்தி வந்தன.

பெரியார் 30–3–67 "விடுதலை"யில் "நாட்டுப் பிரிவினை" பற்றித் தலையங்கம் எழுதினார்:— "காங்கிரஸ் ஆட்சி பலத்தால், திராவிட நாடு பிரிவினை கேட்பவர்கள் தேர்தலுக்கு நிற்க முடியாது என்று விதி செய்து கொண்டவுடன், தி.மு.க. 'நாங்கள் திராவிட நாடு பிரச்சினையை விட்டுவிட்டோம்' என்று சொல்லித், தேர்தலுக்கு நின்று, இன்று ஆட்சிக்கும் வந்துவிட்டார்கள்! தேர்தலுக்கு அது ஒரு தடைப் பிரச்சினை ஆகிவிட்டதால், அவர்கள் அதைப் பற்றிப் பேச்சு மூச்சுக்கூட விடக்கூடாத நிலையில் இருக்கிறார்கள்!

மத்திய அரசாங்கம் காங்கிரசார் கையிலிருப்பதால், அவர்களுக்குப் பயந்து கொண்டு, அடிக்கடி தி. மு. க.வினர் காலாகாலம் பார்க்காமல், 'நாங்கள் திராவிட நாடு பிரச்சினையைக் கைவிட்டு விட்டோம். விட்டுவிட்டோம். விட்டே விட்டோம்!' என்று சொல்ல வேண்டிய அவசியத்திற்கு வந்துவிட்டார்கள். நாமோ தேர்தலுக்கு நிற்கிறவர்கள் அல்ல. ஆனாலும், நமது திராவிடர் கழகத்தில் அது (திராவிட நாடு பிரிவினையே) ஒரு கொள்கையாய் இருந்தாலும், காமராஜர் காங்கிரஸ் தலைவரானவுடன், சமதர்மம்–சோஷலிசம் காங்கிரசின் கொள்கையாக ஆக்கப்பட்டுவிட்டதால், அது தக்கபடி அமுலுக்கு வந்தால், திராவிட நாடு பிரச்சினை அவசியமாக இருக்காது— அல்லது கூடாததாய் இருக்காது—என்று கருதி, அதிகமாய்ப் பிரஸ்தாபிக்காமல் இருந்தோம்.

என்றாலும், காங்கிரசின் பலக்குறைவையும், பார்ப்பனரின் கட்டுப்பாடு பலத்தையும் பார்க்கும்போது, சோஷலிச அமுலுக்குத் தொல்லை ஏற்படும் என்று பயப்பட வேண்டியிருப்பதால், இப்போது திராவிட நாடு பிரச்சினையைப் பிரச்சாரம் செய்ய வேண்டியதும் அவசியமென்றே தெரிகிறது.

இந்தியாவில் சோஷலிசத்திற்கு அனுகூலமானவர்கள், முழுமூச்சுடன் பாடுபடுகிறவர்கள் எத்தனை பேர் என்றே கணக்கிட முடியவில்லையே! மொழி பேதத்தால் ஒருவருக்கொருவர் கலந்து பேசிக்கொள்ள முடிவதில்லை. கலாச்சார பேதத்தால் நாம் ஒரு நாட்டு மக்கள், சகோதரப் பிரஜைகள் என்கின்ற உணர்ச்சியே ஏற்படுவதில்லை. கூட்டுப் பொறுப்பு என்பதே எதில் என்று தெரிந்து கொள்ள முடிவதில்லை!

நான் தமிழ் நாட்டில், கிராமம் பட்டி தொட்டி முதலிய எல்லா ஊருக்கும், எல்லா மக்களுக்கும், தெரிந்தவனாக இருந்தாலும், கேரளாவில், வைக்கம் கிளர்ச்சியில் தெரிந்து கொண்டதால், ஒரு 5,000 பேருக்கு என்னைத் தெரிந்திருக்கலாம். கர்நாடகத்தில், பெங்களூரில், சில ஆயிரக்கணக்கான மக்களுக்கு என்னைத் தெரிந்திருக்கலாம். ஆந்திராவில் ஒரு சிலர் இருக்கலாம். பிறகு, மற்ற நாடுகளில் என்னைத் தெரிந்தவர்கள் எத்தனை பேர் இருப்பார்கள்? 55 கோடி இந்திய மக்களில் 55 ஆயிரம் வெளி மாநில மக்கள் தவிர, மற்றவர்களுக்கு நானே தெரியாதவனாக இருக்கும்போது, இந்தியா எப்படி ஒரே நாடாக இருக்க முடியும்? இந்திய மக்கள் எப்படி ஒரே சமுதாய மக்களாக இருக்க முடியும்? இப்படி இருப்பதனால் தனிப்பட்ட மாநில மக்களுக்கு வரும் இலாபம் என்ன?

55 கோடி பேருக்கும் ஒரே நாடு, ஆயிரக்கணக்கான சாதியாருக்கும் ஒரே நாடு, ஆயிரக்கணக்கான மொழி பேசுகிறவர்களுக்கும் ஒரே நாடு, நூற்றுக்கணக்கான கலாச்சாரம் கொண்ட மக்களுக்கும் ஒரே நாடு, பல்வேறு மதம் உடைய மக்களுக்கும் ஒரே நாடு—அதாவது இவ்வளவு பேர்களுக்கும் ஆட்சிக்கு ஒரே ஒரு நாடு! இத்தனை பேரையும் அடக்கி ஆள ஒரே ஒரு கட்சி என்றால், இது என்ன நாடா? பாழா? நரகமா? ஜெயிலா? சர்க்கஸ்காரன் வளையத்துக்குள் இருக்கும் மிருகப் பிராணி போல், இப்படி இருக்க என்ன அவசியம் உள்ளது? இதுதான் சுதந்திரமா? மானம்—ரோஷம் கண்ணாடி போட்டுக்கொண்டு பாருங்கள்!

உலகில் எங்கே இப்படி ஒரு நாடு இருக்கிறது? ஓர் ஆட்சி இருக்கிறது என்று கேட்கிறேன்?"

சுயமரியாதை இயக்க, திராவிடர் கழகத் தனிக்கூட்டம் (Special Meeting); காலம் 9–4–1967 ஞாயிறு காலை 10 மணி; இடம் திருச்சி பெரியார் மாளிகை; விஷயம் தற்கால நிலை, எதிர்காலப் போக்கு, ஸ்தாபன விஷயம், மற்றும் அப்போது அவைக்குத் தோன்றும் விஷயங்கள்—ஈ. வெ. ராமசாமி, தலைவர், சுயமரியாதை ஸ்தாபனம், திராவிடர் ழகம்–என்று "விடுதலை"யில் விளம்பரப்படுத்தப்பட்டது, கழகத் தோழர்களின் கலக்கம், குழப்பம், அச்சம், தயக்கம், மயக்கம், வியப்பு, வேதனை அனைத்துக்கும் ஒரே அருமருந் தாய் அமைந்தது! அவ்வாறே, சுமார் 2,500 தோழர்கள், உறுப்பினர் தாளில் கையொப்பமிட்ட பின் உள்ளே நுழைந்து, விவாதங்களில் பங்கேற்றனர். நம் கொள்கைக்குப் பாதகமில்லாத வரையில், தி.மு.க. ஆட்சியை எதிர்க்கத் தேவையில்லை, என்று பெரியார் பேசினார். கமிட்டியில் காமராஜர் தோல்விக்கு வருத்தம் தெரிவிக்கப்பட்டது. ஆட்சி மாற்றம் குறித்துப் பெரியாரின் அறிக்கை, அப்படியே ஏற்றுக் கொள்ளப்பட்டது. தொடர்ந்து, வகுப்புரிமை, தனிநாடு கிளர்ச்சிகளை மேற்கொள்வதென்றும் தீர்மானிக் கப்பட்டது. திருச்சிக் கமிட்டித் தீர்மானங்களை விளக்கி "விடுதலை" 6 நாட்கள் தொடர்ந்து தலையங்கம் தீட்டிற்று.

சட்ட மன்றத்தில், "தி.மு.க.வுடன் தேனிலவு முடிந்து பட்டதாக ராஜாஜி சொல்கிறாரே, உங்கள் பதிலென்ன?" என்று கேட்டபோது "ஆமாம்! இப்போது குடும்ப வாழ்க்கை நடக்கிறது!" என்று முதல்வர் அண்ணா சமத்காரமாய்ப் பதிலுரைத்து விட்டார். ஆயினும், வெளியில் ராஜாஜி, தி.மு.க. அரசின் சில கொள்கைகளைக் கண்டித்து வந்தார். அவற்றுள் ஒன்று, பதுக்கி வைக்கப்பட்ட நெல்தானியங் களை வேட்டையாடி வெளியில் கொணர்வது. இதை "விடுதலை" பெட்டிச் செய்தியாகப் பிரசுரித்தது:—

"சுதந்திராவுடன் தி.மு.க. குடும்ப வாழ்க்கை நடத்துவதாகத்

திரு அண்ணாதுரை கூறுகிறார். ராஜாஜியோ (சுதந்திரா) மனைவியின் (திமுக) நடத்தை சரியில்லை என்கிறார். நடக்கட்டும் கதை; ஊர் சிரிக்கிற வரை'' என்று!

லட்சுமிபுரம் யுவர் சங்கத்தில் ஒரு நாள் பேசும்போது தி.மு.க உறவு பற்றி ராஜாஜி குறிப்பிட்டார்:—இராமன் சொன்னான்—'சீதா நான் உன்னை மீட்பதற்காகப் போரிட வில்லை; இராவணனை அவமானப்படுத்தவே போரிட்டேன்' என்று. அது போல, ''நான் தி.மு.க.வை ஆட்சியில் அமர்த் தப் பாடுபடவில்லை; காங்கிரசை (காமராஜை) ஒழித்து அவமானப்படுத்தவே பாடுபட்டேன். அதில் ஜெயித்தேன்'' என்றார். இதை எடுத்தாண்டு, ''விடுதலை'' ஏளனம் செய்தது!

பெரியார் சிம்மாசனத்தில் அமர்ந்திருக்க, மந்திரிகள் பயபக்தியுடன் எதிரில் நிற்க, ராஜாஜி மெதுவாய் எட்டிப் பார்க்க, 'சுதேசமித்திரன்' கார்ட்டூன் போட்டது; ''நானிருக்க பயமேன்?'' என்று தலைப்பு! இதையும்— ராஜாஜி—''எனக்கு இந்தக் கண்ட்ரோலைக் கண்டால் பிடிக்காது''; அண்ணா—''அதனாலேதான் என் மேலே உங்களுக்கு இருக்கிற கண்ட்ரோலை கொஞ்சம் கொஞ்சமா எடுத்திட்டுவாரேன்'' என்பதாக 'ஆனந்த விகடன்' வெளி யிட்ட கார்ட்டூனையும், ''விடுதலை'' வெளியிட்டு, அவாள் உள்ளத்தை எக்ஸ்ரே படம் பிடித்துக் காட்டிற்று!

9–ந் தேதி திருச்சிக் கமிட்டிக்கு முன்பும், பெரியார் ''விடுதலை''யில் தொடர்ச்சியாகச் சில தலையங்கப் பகுதிக் கட்டுரைகள், ஆட்சியாளர்க்கு அறிவுரைகளாகத் தீட்டி வந்தார்:—''இது பகுத்தறிவாளர் ஆட்சி என்பதால் கூறு கிறேன். நான் சமதர்மவாதிதான்என்றாலும், முதலில் பகுத் தறிவுவாதி! பத்திரிகைகளில் ஒரு குறிப்பிட்ட சதவீதம் சர்க்கார் தரும் அதிகார பூர்வமான செய்திகளை, இன்ன மாதிரியான முறையில் பிரசுரிக்கவேண்டும் என்பதாக உத்தரவிட வேண்டும். உணவுப் பிரச்சினையைச் சமாளிக்க மக்கள் உணவுப் பழக்கத்தை மாற்றும்படிப் பிரச்சாரம் செய்ய வேண்டும். சர்க்காரே உணவுப் பண்டங்களை

(ரொட்டி போன்றவை) மலிவு விலையில் தயாரிக்கவேண்டும். கல்வியில், உயர்நிலைப் பள்ளி வரை இலவசக் கல்வி போதும். அல்லது பி.யூ.சி. வரை கொடுக்கலாம். எதற்காக நிலவரியை ரத்துச் செய்ய வேண்டும்? அவசியமில்லை. உயர் படிப்புகளைக் கல்லூரியில் உட்படத் தமிழில் ஆக்கப் போகிறோம் என்கிறீர்கள்; இதுகூடாது. நம்மைத் தமிழும் இந்தியும் படிக்கச் சொல்லிவிட்டுப், பார்ப்பானும் பணக் காரனும் இங்கிலீஷ் கான்வென்டில் படித்து மேலே போய் விடுவார்கள்! பிறகு நம் கதி என்ன? அதனால், இங்கிலீஷ் இப்போது உள்ள நிலையிலிருந்து, எந்த மாற்றமும் செய்து விடாதீர்கள்!'' என்பதாக.

6-4-67 அன்று "பொற் காலம்'' என்ற தலைப்பில் அலசி ஆய்ந்து, கழகத் தோழர்களுக்கு அறிவுரை புகன்றார். "சமதர்மத் திட்டத்தை அமுல்படுத்துகிறார்கள் என்பதற் காகவே நாம் இதுவரை காங்கிரசுக்கு ஆதரவு தந்தோம். ஆனால் எதனாலோ காங்கிரஸ் தோற்றுவிட்டது. தமிழ் நாட்டில் மாத்திரம் அல்லாமல் இந்தியா எங்கும் பரவ லாகத் தோற்றுப் போனது. ஒவ்வொரு மாகாணத்துக்கும் ஒவ்வொரு காரணம் இருக்கலாம். பொதுவான காரணம் சொல்ல வேண்டுமானால், சோஷலிச எதிரிகளின் சூழ்ச்சி, சதி என்று சொல்லலாம்! மேலும், வாக்களர்களின் பலவீன மான பல பழக்க வழக்கங்கள் (Voters' Weaken mind). தேர்தலில் முடிவுகள் (Heart Failure) மாரடைப்பு போலத் திடீரென்று மாறிவிட்டன! இங்கே இப்போது புதிய ஆட்சி அமைந்திருக்கிறது. மற்ற விஷயங்களில் இந்த ஆட்சி நமக்குப் பயன்படுகிறதோ இல்லையோ, நிச்சயமாய் நமது பகுத்தறிவுப் பிரச்சாரத்திற்கு எதிர்ப்பாக இருக்காது என்பதை நம்பலாம். நமது லட்சியம் என்ன? சுயமரியாதை, பகுத்தறிவுக் கொள்கைகள் பரவ வேண்டும்; கல்வி, பதவி, இவைகளில் மக்கள் தொகை அடிப்படையில் விகிதாச்சார முறையில் உரிமை தரப்படவேண்டும்—என்பவைதானே? 9-4-67 அன்று திருச்சியில் எல்லாரும் கூடுவோம்; திட்டம் தீட்டுவோம்! தோழர்கள் பலர் கடுஞ்சொல்லால் என்னைக்

கடிந்து கொண்டார்கள். நோய் முற்றிப் போன ஒரு நோயாளிக்கு, ரணசிகிச்சை செய்யாவிட்டால் நிச்சயம் உயிர் போய்விடும்; ரணசிகிச்சை செய்தால், 70% பிழைக்கலாம் என்ற நிலை இருந்தால், ரணசிகிச்சை செய்து பார்த்து விடுவதுதானே நல்லது? அது போல், இந்த ஆட்சியை அணைத்துப் போக முயல்வோம்; முடியாவிட்டால் அது நமக்கு ஏமாற்றமல்ல''—என்றார் பெரியார்!

அடுத்த படியாகப் பெரியார் கல்வி அமைச்சரைப் பாராட்ட ஒரு நல்ல வாய்ப்புக் கிடைத்தது! 16–4–67 அன்று கோட்டையின் முகப்பில் தமிழக அரசு தலைமைச் செயலகம் என்று தமிழில் அமைந்த நியான் சைன் போர்டை முதலமைச்சர் திறந்து வைத்ததும்; ஸ்ரீ, ஸ்ரீமதி, குமாரி என்ற வடமொழிச் சொற்களுக்குப் பதிலாகத் திரு,திருமதி, செல்வி என்ற மரியாதை அடைமொழிகள் வழங்கப்படும் என அறிவித்ததும்; (26-4-67 அன்று ஆணை பிறப்பிக்கப்பட்டது) பெரியாருக்கு மகிழ்வைத் தந்தன. அத்துடன், அறநிலையத் துறையும் அவர் (நெடுஞ்செழியன்) பொறுப்பிலிருந்ததால், சிதம்பரம் நடராசர் கோயிலுக்கு அலுவலாகச் சென்ற போது, வழங்கப்பட்ட திருநீற்றைக் கீழே கொட்டியது, தன்னை நாத்திகன் என்று காட்டிக் கொள்ளவே, எனப் பெரியார் கருதினார். அதனால், "பலே நெடுஞ்செழியன்! பலே பலே நெடுஞ்செழியன்'' என்று தலைப்பிட்டு, ஒரு பெட்டிச் செய்தி வெளியிட்டார். "விடுதலை''யில் "தமிழ்ப் புத்தாண்டை'' முன்னிட்டுத் "தமிழ் மகனுக்கு ஒரு வேண்டுகோள்'' என்ற தலைப்பில்—இந்து மதம், கோயில், உருவக் கடவுள், பண்டிகை, நெற்றிக்குறி இவைகள் வேண்டுமா? என்று கேட்டிருந்தார் பெரியார்.

தமது ஆராய்ச்சிக்குத் துணையாகப் பழைய நூல் ஒன்றை Referenceக்காகத் தேடிய போது தம் நூலகத்தில் அது கிடைக்காததால், "வாசகர்களுக்கு ஒரு வேண்டுகோள்—1878–ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பட்ட, தேசிக தாத்தாச்சாரியார் மொழி பெயர்த்த,இராமாயணம் உத்தரகாண்டம் யாரிடமாவது இருந்தால், பழைய புத்தகக் கடைகளில்

கிடைத்தாலும், வாங்கி அனுப்பித் தந்தால், அதற்குரிய விலையைத் தந்துவிடுகிறேன்!'' என்று கையொப்பத்துடன், 18–4–67 "விடுதலை''யில்பெரியார் செய்தி வெளியிட்டிருந்த பாங்கினைக் கண்ணுற்றோர் அந்த 88 வயது மாணவரின் ஆர்வத்தை வியந்து, மெய்ம்மறந்து நின்றனர்!

"தனியார் மின் நிறுவனங்கள் அரசுடைமையாகும்'' முதல்வர் சி.என். அண்ணாதுரை அறிவிப்பு. இது ஏழு காலச் செய்தி, 19–4–67 "விடுதலை''யின் முதல்பக்கம்! அடுத்த நாள், அமைச்சர் மதியழகனும் தலைவர் காமராசரும் ரயிலில் ஒரே பெட்டியில் பயணம் செய்து, மதுரையில் இறங்கினர்; காங்கிரஸ், கண்ணீர்த் துளித் தோழர்கள், தங்கள் தங்கள் தலைவர்களை வரவேற்றனர்—என்றொரு செய்தி! சென்னை மத்திய சிறையிலுள்ள நடிகவேள் எம்.ஆர். ராதா நெஞ்சுவலி காரணமாகச் சென்னை பொது:மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டார் – என்றொரு துணுக்கு. நீதிக்கட்சியின் நிர்வாக அனுபவம், சுயமரியாதை இயக்கத்தின் தீவிரக் கொள்கை, காங்கிரசின் ராஜதந்திரம்—இவை எங்கள் ஆட்சிக்கு வழிகாட்டப் பயன்படுத்திக் கொள்வேன்—என்று அண்ணா கூறியதைப், பலமுகங்களோடு, கேலிச் சித்திரம் போட்டது Mail ஏடு. இதை எடுத்துக் காட்டியது "விடுதலை''. மைல் கற்களைக் கூடச் சாமி என்று கும்பிடுவதா? அமைச்சர் மா. முத்துசாமியின் அணுகுண்டு—என்று ஒருநாள் "விடுதலை''ச் செய்தி!

பெரியார் ஏப்ரல் மாதத்தில் நிறையத் திருமண நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டார். சிதம்பரத்தில் வெற்றி பெற்ற இருகாங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர்களுக்குத், திராவிடர் கழகம் நடத்திய பாராட்டுக் கூட்டத்திலும், பெரியார் கலந்து கொண்டார். 28-ந் தேதி, காலையில் பெரம்பலூர் வட்டம் ஒகளூர், அரசினர் உயர்நிலைப் பள்ளிப் புதுக் கட்டடத்தை, வேளாண்மை அமைச்சர் ஏ. கோவிந்தசாமி திறந்து வைத்த போது, பெரியார் தலைமை தாங்கியதுடன் அண்ணா படத்தையும் திறந்து வைத்தார். இப்படிப்பட்ட நிகழ்ச்சிகட்கு இதுதான் தொடக்கமாயிருந்தது! இதற்குமுன் 23–ந் தேதி திருச்சியில் பேசும்போதுதான், ஒரு விளக்கம்கூறியிருந்தார் பெரியார். "இந்த ஆட்சிக்கு ஆதரவுதரச் சொல்லி

நான் இன்னும் நமது தோழர்களுக்குக் கூறவில்லை! தொல்லை தரவேண்டாம் என்றுதான் சொன்னேன்! இந்த ஆட்சிக்கு நாம் எதிரி அல்ல, தி.மு.க. நகரசபைகளில் என்னைக்கூட இப்போது அழைக்கிறார்கள். போகலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்'' என்றார்.

"பார்ப்பான், பணக்காரன், பெரியமனிதன்'' என்கின்ற தலைப்பிட்டு, 24-ந்தேதி பெரியார் "விடுதலை"யில் தீட்டிய தலையங்கக் கட்டுரை, தீவிர சிந்தனைக் குரியதாகும்:— "இன்று நமது நாட்டில் சுயமரியாதை இயக்கம் அல்லது பகுத்தறிவு இயக்கம் என்பதாக ஒன்று தோன்றிய பின், நாளாவட்டத்தில் பார்ப்பனருக்கும், பணக்காரர்களுக்கும், பெரிய மனிதர் என்பவர்களுக்கும் இருந்த மரியாதை, பெருமை என்பது படிப்படியாய்க் குறைந்து கொண்டு வருகிறது; வந்துவிட்டது என்றே சொல்லலாம்! முதல் மாறுதலான பார்ப்பானின் மரியாதைகெட ஆரம்பித்தவுடன், மற்றெல்லா மரியாதைகளும் கெடுவதற்குப் பார்ப்பானே முயற்சியாளனாகவும், உறுதுணைவனாகவும் இருந்து தீர வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது!

கடவுளும் மதமும் கெடவேண்டுமானால் பார்ப்பான் கெட்டாக (இல்லாமல் போக) வேண்டும். அவன் கெட்ட இடந்தான் கடவுள், மதம் கெட்ட இடமாகும். அதுபோலவே நீதி கெடவேண்டுமானால் அரசன் கெட்டாக (இல்லாமல் போக) வேண்டும். அரசன் கெட்ட இடம்தான் ஜனநாயகம் என்பது. பார்ப்பான் இல்லையானால் எப்படி கடவுள் மதம் இல்லையோ, அப்படித்தான் அரசன் இல்லையானால் நீதி நேர்மை இல்லை என்பது உறுதி!

1926 முதல் 47 வரை நாட்டில் சுயமரியாதை இயக்கமும், பகுத்தறிவு இயக்கமும், ஜஸ்டிஸ் கட்சியான திராவிடர் கழகமும் செய்து வந்த பிரச்சாரத்தினால் பார்ப்பான் பெருமையும், பணக்காரன் பெருமையும், பெரிய மனிதர்கள் என்பவர்கள் பெருமையும் நாளுக்கு நாள் தேய்ந்துவர ஆரம்பித்தது! வெள்ளையன், ஆதிக்கத்தை இந்தியரிடம் ஒப்படைத்து விட்டுப் போனவுடன், அதாவது இந்தியன்

என்பது காங்கிரஸ்காரர்களாகவும், காங்கிரஸ்காரன் என்பது பார்ப்பனராகவும் இருந்து வந்ததால்—பார்ப்பான் கைக்கு ஆட்சி, ஆதிக்கம் வந்தது! வந்தவுடன் முதல் காரியமாக, இந்தப் பார்ப்பான், பணக்காரன், பெரியமனிதன் ஆகிய மூன்றையும் பாதுகாத்துக் கொள்ளும் அளவுக்கு ஆட்சிச் சட்டம் செய்து கொண்டுவிட்டான்! அதனால் சாதி மதத்தையும், பணக்காரனையும் அதாவது பொருளாதார சொத்துரிமையையும், பெரிய மனிதத் தன்மையையும் அதாவது அந்த ஸ்தானத்தையும் அசைக்க முடியாதபடி சியல் சட்டம் செய்து கொண்டான்!

இவை மூன்றும் சட்டத்தினால்தான் ஒழிக்கப்பட முடியாமல் இருக்கின்றனவே ஒழிய, அஸ்திவாரமில்லாததால், பாரம் தாங்காமல் இடிந்து விழும் மாடிக் கட்டடம் போல், சாய்ந்து விழுந்து வருகின்றன. அதாவது பார்ப்பான் என்பதாலோ, பணக்காரன் என்பதாலோ, பெரிய மனிதன் என்பதாலோ நாட்டில் இன்று எவருக்குமே பெருமையோ, மரியாதையோ இல்லாமல் போய்விட்டது!

பகுத்தறிவு வளர்ச்சித் தன்மைதான் சமதர்மக் கொள்கைக்கு மக்களை இழுத்துச் சென்றது என்றாலும் இன்று சமதர்மத்தை எதிர்க்கக்கூட அதே பகுத்தறிவு வளர்ச்சிதான்—அதாவது எதையும் செய்யலாம் என்ற நிலை ஏற்பட்டதும்—ஆகும். விளக்கமாகச் சொல்ல வேண்டுமானால் இன்றைய சுதந்திர ஜனநாயகத்தால்—ஜனநாயக ஆட்சியில்—உண்மை சமதர்மத்தை அமுல் படுத்துவது ஒரு நாளும் முடியாத காரியமாகத்தான் இருக்கும். யார், எவ்வளவு பாடுபட்டாலும், வெள்ளரிப் பழத்திற்குப் பூண் (கட்டு) போடும் காரியமாகத்தான் முடியும்! இதைச் சமாளிக்க வேண்டுமானால், சுதந்திர ஜனநாயக ஆட்சியால் முடியாது; இரும்புக்கை அடக்கு முறை ஆட்சியால்தான் முடியும்! இந்த நிலையில், இனியும் சமதர்மத்தைக் கட்டிக் கொண்டு அழுவதென்றால், சமதர்மத்தின் பேரால் வண்டி ஓடினவரை ஓட்டும் என்பதல்லாமல், அதில் உண்மை என்ன இருக்கமுடியும்?

இந்த நிலையில், உண்மையான சமதர்மவாதிகள், சமதர்மத்தில் நம்பிக்கையும் அக்கறையும் கொண்டவர்கள் இருப்பார்களேயானால், அவர்கள் சமதர்மம் என்கிறதை மாற்றிக்கொண்டு, பொதுவுடைமைத் தத்துவத்தை இலட்சியமாக்கிக்கொண்டு முயன்றால், பயன் ஏற்படலாம் என்று கருதுகிறேன். 'பொது உடைமை' என்பது பகுத்தறிவின் எல்லையாகும்!

எனது சமுதாயத்துறை சுயமரியாதைப் பகுத்தறிவுக் கொள்கை இனியும் தீவிரமாகப் பிரச்சாரம் செய்ய வேண்டி இருப்பதால், அது பொதுவுடைமைக்கு நல்ல வண்ணம் பயன்படலாம்."

மேதினத்தன்று பெரியார் வேலூர் பொதுக்கூட்டத்தில் பேசினார்:—"காங்கிரசை விட தி.மு.க. தேவலாம். நமது தோழர்கள் அவர்களிடம் அன்புடன் பழகவேண்டும். எந்தக் காரணத்தாலோ நமக்குள் தகராறு இருந்தது, இப்போது போச்சு. போச்சு என்றால் போனதுதானே? பிறகு என்ன?" என்று கேட்டு முடித்தார் பெரியார். "கம்யூனல் ஜி.ஓ.வை அந்தந்த மந்திரிகளே தமது இலாக்காவில் அமுல் படுத்தத் தொடங்கலாமே! தி.மு.க. ஆட்சி என்ன, வைதிக ஆட்சியா? இதற்கும் நாள் நட்சத்திரம் பார்க்க வேண்டுமா?" என்றும்—"காமராஜர் இவர்களுக்கு ஆறுமாதம் தவணை தந்தார். நான் ஒரு அய்ந்து வருடம் தவணை தருகிறேன். என்ன இருந்தாலும் அசல் நாத்திகர், பகுத்தறிவாளர் ஆட்சி தமிழ் நாட்டில் நடப்பது இதுதானே முதல் தடவை?" என்றும்—"ரூபாய்க்கு ஒருபடி அரிசி போடுவது தவறு. மிகுந்த நட்டம் ஏற்படும், சிந்தித்துச் செயல்பட வேண்டும். இந்த அரிசிவிலைக் குறைப்பே ஒரு நியூசென்ஸ், அநாவசியத் தொல்லை" என்றும்—பெரியார் அறிவுறுத்தல் தலையங்கம் தீட்டினார். "இந்த மந்திரிசபை ஒழிந்தால், அடுத்த மந்திரி சபை எதுவானாலும், அது பார்ப்பன ஆதிக்க, அல்லது பார்ப்பனக் கலப்பு மந்திரி சபையாகத்தானே இருக்கும்?" என்றும் கேட்டார் பெரியார்.

முதலமைச்சர் அண்ணா மருத்துவக் கல்லூரி அட்மிஷன் சம்பந்தமாய்த் தெரிவித்த கருத்துகளைத், தங்கள் தங்கள் விருப்பத்திற்கிணங்கத் திரித்துக் கூறி, ''மெயில்'', ''இந்து'', ''எக்ஸ்பிரஸ்'' ஏடுகள் எழுதியதைக் கண்டித்து, Wishful thinking என்று ''விடுதலை'' ஏடு தலையங்கம் எழுதியது—''முதல்வர் பேட்டி, பார்ப்பன ஏடுகளின் விஷமம்'' என்ற தலைப்பில்! தமிழகத்தில் ஆகாஷ்வாணி ஒழிந்து, வானொலி வரப்போவதாக 9–5–67 அன்று, செய்தி விளம்பரத் துறை அமைச்சர் சத்தியவாணி முத்து கூறினார். இந்தியக் குடி அரசுத் தலைவராக டாக்டர் ஜாகீர் உசேன் தேர்ந்தெடுக்கப் பட்டபோது, சங்கராச்சாரியாரும், ராஜாஜியும் எதிர்ப்புத் தெரிவித்தனர். ''விடுதலை'' வாழ்த்துக் கூறியது. துணைத் தலைவராக வி.வி. கிரி தேர்ந்தெடுக்கப் பட்டபோதும் ''விடுதலை'' வரலாறு வெளியிட்டு, வரவேற்றது! திருமணங்களை இனிமேல் சப்ரிஜிஸ்ட்ராரும், கோயில் நிர்வாக அதிகாரிகளும் கூடப் பதிவு செய்யலாம் என்ற அரசாணை 11–5–67 அன்று இடப்பட்டது.

'உண்மைத் தலைவர் காமராஜர்' என்றும், 'மந்திரிகளுக்குத் தலைவலி உதயம்' என்றும் 12, 13 தேதிகளில் பெரியார் முக்கியமான இரு தலையங்கக் கட்டுரைகள் எழுதினார். ''காமராசர் தன் கட்சித் தோழர்களுக்கு அறிவுரை கூறியிருந்தார். உண்மையான எதிர்க் கட்சியாகக் காங்கிரசார் செயல் படவேண்டும். (தமிழ் நாட்டில்) ஆக்க ரீதியான கண்டனங்கள் தெரிவிக்க வேண்டும். எல்லாவற்றையும் மூர்க்கத்தனமாக எதிர்க்கக் கூடாது என்றார். இதை தி.மு.க. மந்திரிகள் சிந்தனையில் வைத்துக் கொள்ள வேண்டும். இந்தக் குறுகிய காலத்தில் மதுவிலக்குக் கொள்கையிலும், ஜனாதிபதி தேர்தலிலும் இரண்டு முறை கரணம் போட்டுவிட்டார்களே! அது கூடாது! திரு கருணாநிதி, திரு அண்ணாதுரையை இராஜாஜியிடம் அழைத்துச் சென்றார்.

அவரிடத்தில் 2 காரியங்களுக்கு ஒத்துக் கொண்டு வந்திருக்கிறார்கள். ஒன்று ஜனாதிபதி தேர்தலில் காங்கிரஸ் கட்சி வேட்பாளரை எதிர்த்து, ஜஸ்டிஸ் சுப்பாராவுக்கு

வாக்களிப்பது, இன்னொன்று ம. பொ. சி.க்கு மந்திரி பதவி தருவது. திரு அண்ணாதுரைக்குக் காரியம் வெற்றி பெற லாம். ஆனாலும் வாசனை போய் விடுமே! ஆச்சாரியாரை நம்பி இனியும் ஏமாற வேண்டாம்!''— என்று எச்சரித்தார் பெரியார். இந்திய யூனியனிலிருந்து தமிழர் வெளியேறும் வாய்ப்பு ஏற்பட்டால்தான் மானத்தோடு வாழ முடியும், என்று 13-ம் நாள் எழுதினார். ம. பொ. சி. க்கு மந்திரிப் பதவி தர வேண்டாம். அவர் ராஜாஜியின் கையாள்—என்று தொடர்ந்து வேண்டுகோள் விடுத்து வந்தார், பெரியார். ராஜாஜிக்குத் தாமே முதல்வராக வர வேண்டுமென்ற நைப்பாசை இருந்தது என்ற செய்தி பெரியாருக்கும் தெரியும். மதுவிலக்குக் குற்றங்கள் பெருகி வரும் விவரப் பட்டியலை வெளியிட்டு, வெற்றி பெறாத மதுவிலக்கு இன்னும் வேண்டுமா? இது அண்ணாதுரைக்கு அர்ப்பணம்— என்றும் செய்தி வெளியிட்டார் பெரியார்.

இந்த ஆண்டில் பெரியாரின் முக்கிய பணியாகத் தஞ்சை மாவட்டத்தில், திருவாரூர்—தஞ்சை ரயில் மார்க்கத்தில், திருமதிக்குன்னம் நிலையத்தில் இறங்கி, ஒரு மைல் செல்லக் கூடிய விடையபுரம் கிராமத்தில், சுயமரியாதைப் பகுத் தறிவுப் பிரச்சாரப் பயிற்சி வகுப்புகள் மே மாதம் தொடங்கி நடைபெறும்; வரக் கூடியவர்கள் 24-ந் தேதிக்குள் வர வேண்டும் என்பதான அறிக்கைகள் ''விடுதலை''யில் பிரசுர மாயின. நாகரசம்பட்டியில் மே 21-ல், என். எஸ். சம்பந்தம் அவர்களின் தங்கை, மற்றும் மகள் ஆகியோரின் திருமண விழாக்களில் பெரியார் கலந்து கொண்டார்.

ஜனாதிபதி, துணை ஜனாதிபதி இரண்டும் தேவையில் லாத 'வெள்ளையானைப் பதவிகள்.' சிறுபான்மையினர் இந்த இடங்களைப் பிடித்துக் கொண்டார்கள். அதிகார மில்லாத அரசர் பட்டத்துக்கு வந்திருக்கிறார் என்றாலும் முன்னவர் முஸ்லீம், பின்னவர் பார்ப்பனர், பிரதம மந்திரியோ பார்ப்பனத்தி—என்று பெரியார் குறிப்பிட்டார். ''மந்திரிகளே! மெல்லப் போங்கள்! ஜாக்கிரதையாக

போங்கள்! அரிசிவிலை குறைந்தால்தான் மந்திரிகள் சம்பளம் வாங்குவோம் என்றுசொல்லி விட்டதால், இப்போது எப்படி யாவது சம்பளம் வாங்கிவிட வேண்டுமே என்பதற்காகத் தான் 1ரூபாய்க்கு 1 படி அரிசி போடுகிறீர்கள் என்று மக்கள் பேசுவார்கள்! கூட்டுறவுச் சங்கங்களில் நிறைய மோசடிகள் நடக்கின்றன. கமிஷனர் போன்ற நிர்வாக அதிகாரிகளைப் போட்டுக் கண்காணிக்க வேண்டும். ம. பொ. சி. விஷயத்தில் சிந்தித்துச் செயல்பட வேண்டும். உரல் தேய்ந்து உளிப் பிடிக்கும் தகுதியற்றதாக ஆகிவிடக் கூடாது. தண்ணீர் எவ்வளவு தான் சூடாக ஆனாலும் நெருப்பை அணைக்கத் தான் முடியும்; எரியச் செய்ய முடியாது! நம் நாட்டு அரசியல் வாழ்வு மிகக் கேடு கெட்டதாகி விட்டது. கட்சி மாறிகள் பற்றி எச்சரிக்கையாக இருக்க வேண்டும். உங்கள் காலத்தில் ஏற்பட்ட சமுதாய மாற்றம் என்ன என்பதற்கு, நல்ல ரிக்கார்டு ஏற்படுத்த வேண்டும். சமுதாய சீர்த்திருத்தத் திற்கும் பார்ப்பனருக்கும் சம்பந்தமில்லை என்பதை உணரவேண்டும். ஜனநாயகத்தில் பொது மக்களுக்குப் பாதுகாப்பில்லையே! தொழிலாளர், மாணவர், பார்ப்பனர் பிரச்சினைகள்தான் நாட்டின் கேடுகெட்ட நிலைக்குக் காரணம். ம. பொ. சி. அவர்களை அழைக்கின்றீர்களே; அதன் உள்நோக்கம் என்ன?'' இப்படி வேறுபட்ட பிரச்சினை களிலும் தமது நாட்டத்தைப் பதித்து வந்தார் பெரியார்!

சுயமரியாதைப் பிரச்சாரத்துக்குச் செல்லும் தோழர்கள் ''நான் கடவுளை மறுக்கிறேன்; பார்ப்பானை ஏற்றுக் கொள்ள மாட்டேன்; சாதி மதம் பாராட்டமாட்டேன்'' என்றெல்லாம் பகுத்தறிவுக் கருத்துகளை ஏற்றுக் கொள்வ தாக ஒரு நமுனாவில் கையொப்பமிட்டு ஆங்காங்கே ஆயிரக் கணக்கில் சேகரிக்க வேண்டும் என்று ஒரு பணி தந்திருந்தார் பெரியார்! 23-5-67 அன்று, இது வரை 10, 000 கையெழுத்து கள்தான் திரட்டியிருக்கின்றீர்கள்; இந்தப் பணியை இன்னும் மும்முரமாகச் செய்யுங்கள், என்று முடுக்கிவிட்டார். திருச்சி பெரியார் மாளிகையில், 7-6-67 அன்று, காலஞ் சென்ற ஜீவானந்தம் மகள் உஷாவுக்கும், அருணாசலத்

துக்கும் திருமணம் என்று பெரியாரும், மணலி கந்தசாமியும் அழைப்பு விடுத்தனர்.

அழைப்பினை ஏற்று முதலமைச்சர் அண்ணாவும் குன்றக்குடி அடிகளாரும் மணமக்களை வாழ்த்திட வந்திருந் தனர். அண்ணா பேச்சு:– "என்னுடைய பொது வாழ்வில் எனக்குக் கிடைத்த ஒரே தலைவரான பெரியார் அவர்களே!

நமது தமிழ் நாட்டில் மட்டும் வயதானவர்கள் வீட்டிற்குப் பெரியவர்களாக வீட்டிலேயே இருப்பார்கள். அவரது பிள்ளைகள் வெளியூர்களில் ஒருவர் டாக்ட ராகவும் ஒருவர் எஞ்சினீயராகவும் ஒருவர் வக்கீலாகவும் இருப்பர். வீட்டில் நடைபெறும் விழா நிகழ்ச்சியின்போது அந்தப் பெரியவர் தன் மகன்களைச் சுட்டிக் காட்டி, அதோ போகிறானே அவன்தான் பெரியவன் டாக்டராக இருக் கிறான். இவன் அவனுக்கு அடுத்தவன் எஞ்சினீயராக இருக் கிறான். அவன் சிறியவன் வக்கீலாக இருக்கிறான். இவர்கள் எல்லோரும் எனது பிள்ளைகள் என்று கூறிப் பூரிப்பும் மகிழ்ச்சியும் அடைவார்.

அதுபோலப் பெரியாரவர்கள் தம்மாலே பயிற்சியளிக்கப் பட்டவர்கள் பல்வேறு கட்சிகளிலிருந்தாலும், அவன் என்னிடமிருந்தவன்; இவன் என்னுடன் சுற்றியவன் என்று சொல்லிக் கொள்ளக் கூடிய பெருமை இந்தியாவிலேயே, உலகிலேயே, பெரியார் ஒருவருக்குத் தான் உண்டு! காங்கிரசில் இருப்பவர்களைப் பார்த்துத், தி. மு. க. வில் இருப்பவர்களைப் பார்த்து, கம்யூனிஸ்ட், சோஷலிஸ்ட் கட்சிகளில் ;இருப்பவர்களைப் பார்த்து; இவர்கள் என்னிட மிருந்தவர்கள். இவர்களுக்கு நான் பயிற்சி கொடுத்தேன். இன்று இவர்கள் சிறப்போடு இருக்கிறார்கள்—என்று சொல்லிக் கொள்ளக் கூடிய பெருமை அவர் ஒருவரையே சாரும்!

அவர் என்னுடைய தலைவர். நானும் அவரும் பிரிகிற போதுகூட நான் அவரையேதான் தலைவராகக் கொண் டேன். வேறு ஒருவரைத் தலைவராகப் பெறவில்லை! அந்த அவசியமும் வரவில்லை. அன்று ஏற்றுக் கொண்டது

போல் இன்றும் அவரையே தலைவராகக் கொண்டுதான் பணிசெய்து வருகிறேன்.

சுயமரியாதை இயக்கம் ஒழுக்கச் சிதைவு இயக்கம் அல்ல. மனித சமுதாயத்தை ஒழுக்க நெறிக்குக் கொண்டு வந்து முன்னேற்ற வேண்டும் என்பதற்காகப் பாடுபடும் இயக்கமாகும் சுயமரியாதை இயக்கம். பகுத்தறிவு இயக்கம் தமிழ் இயக்கத்தோடும் பிணைத்துக் கொண்டது.

பகுத்தறிவு வாதிகளாகிய நாங்கள், பகுத்தறிவால்தான் மனித சமுதாயத்தை முன்னேற்றத்திற்குக் கொண்டுவர முடியும். அதற்கு எதிராக இருக்கிற மதம், புராணம் இவைகள் எல்லாம் மக்களின் எண்ணத்திலிருந்து அகற்றப் படவேண்டும் என்பதற்காகப் பாடுபட்டு வருகிறோம். சுய மரியாதை இயக்கம் வளர்ந்து வளர்ந்து, பெண்ணுரிமையைப் பெற்றிருக்கிறது. ஆலயங்களில் நுழையும் உரிமையைப் பெற்றிருக்கிறது. இன்னும் பல உரிமைகளைத் தமிழர் களுக்குப் பெற்றுத் தந்திருக்கிறது. தமிழர்களின் குடும்பங் களில் பல, சுயமரியாதைத் திருமணங்களை ஏற்றுநடத்தியிருக் கின்றன. சட்டப்படி செல்லாது என்று தெரிந்தும் அதனால் ஏற்படும் தொல்லைகளைப் பொருட்படுத்தாது, மக்களுக் காகத் தானே சட்டம் என்பதை உணர்ந்து, சுயமரியாதைத் திருமணம் செய்து கொண்டவர்கள் நமது வணக்கத்திற்கு உரியவர்கள் ஆவார்கள்!

எங்களது ஆட்சியில், விரைவில் சுயமரியாதைத் திரு மணத்தைச் சட்டப்படிச் செல்லத்தக்கதாக்கச் சட்டம் கொண்டுவர இருக்கிறோம். ஏற்கனவே நடத்தி வைக்கப் பட்ட திருமணங்களும் சட்டப்படிச் செல்லத்தக்கதாகும் என்று சட்டம் கொண்டுவர இருக்கிறோம். பெரியாரவர்கள் நீண்ட நாட்களாக எதிர்பார்த்துக் கொண்டிருந்ததை, நாங்கள் வந்து செய்யும் வாய்ப்புக் கிடைத்தமைக்காகப் பெருமகிழ்ச்சி அடைகிறேன். நெடுந் தொலைவு பிரிந்து சென்றிருந்த மகன் தன் தந்தைக்கு மிகப் பிடித்தமான பொருளைக் கொண்டுவந்து கொடுப்பதைப் போல, நாங்கள்

பெரியாரவர்களிடம் இக்கனியை (சட்டத்தை)ச் சமர்ப்பிக்கிறோம்.

எனக்கு முன் இருந்தவர்கள்கூட இதைச் செய்திருக்க முடியும்! எனினும் நான் போய் நடத்த வேண்டிய வாய்ப்பு எனக்குக் கிடைத்தமைக்காகப் பெருமகிழ்ச்சியடைகிறேன்'' என்று முதலமைச்சர் சி. என். அண்ணாதுரை பேசினார்.

மகிழ்ச்சிப் பேருவகையில் திளைத்த பெரியாரவர்கள், தமது முடிவுரையில், "முதலமைச்சரின் இந்த அறிவிப்பை, நான் அருள் வாக்காகவே கருதி வரவேற்கிறேன். பாராட்டுகிறேன்!'' என்று குறிப்பிட்டார்கள்.

குன்றக்குடி அடிகளாரும், முன்னதாக மணமக்களை வாழ்த்தினார். தந்தையும் தனயனும் மீண்டும் சந்தித்து, ஒரே மேடையில் பேசிய இந்த முதல் நிகழ்ச்சியே, வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்ததாய் அமைந்தது.

மே 24, 25 இருநாட்களும் பெரியார் தஞ்சை மாவட்டம் விடையபுரம் சுயமரியாதைப் பிரச்சாரப் பயிற்சி வகுப்பு மாணவர்க்குப் பாடம் நடத்தினார். பகுத்தறிவின் முதற் பகை கடவுள் நம்பிக்கைதான் என்று கருத்தறிவித்தார்.

கேள்வி: சாதி ஒழிப்பது என்றால் என்ன? பதில்: நாட்டில் லைசென்ஸ் பெற்ற திருடர்களை அயோக்கியர்களை மடையர்களை ஒழிப்பது என்பது. இதில் யாருக்கும் எவ்விதச் சந்தேகமும் வேண்டாம்—என்று, பெரியாரின் பெயர் போடாவிட்டாலும், அவர்தான் என்று காண்பிக்கும் பெட்டிச் செய்தி ஒன்று, "விடுதலை'' 6–6–67 முதல் பக்கம் பிரசுரமாகி யிருந்தது. 7-ந்தேதி பெரியார் அறிக்கை எனுந் தலையங்கத்தில், பெரியார் விடையபுரம் பயிற்சி வகுப்பில் உருவாக்கிய கடவுள் மறுப்பு வாசகங்கள் முதன்முறையாக உலகுக்கு அறிமுகம் செய்யப்பட்டன. அதன்படி, ஒவ்வொரு கழக நிகழ்ச்சியின் தொடக்கத்தின்போதும், அமைப்பாளர் முதலாவதாக முன்வந்து, இவற்றைக் கூறவேண்டும். கூட்டத்தினர் ஒவ்வொன்றாக எதிர் முழக்கமாக எதிரொலிக்கவும் வேண்டும். அன்று முதல் இன்று வரை இத்திட்டம்

வழக்கத்தில் கையாளப்பட்டு வருவது குறிப்பிடத்தக்க தாகும். பெரியார் அறிவித்தது:-

கடவுள் இல்லை.

கடவுள் இல்லை.

கடவுள் இல்லவே இல்லை.

கடவுளைக் கற்பித்தவன் முட்டாள்.

கடவுளைப் பரப்பியவன் அயோக்கியன்.

கடவுளை வணங்குகிறவன் காட்டுமிராண்டி.

எதார்த்தம் பொன்னுசாமி நாடக உலகில் பழம் பெரும் நடிகர். பலநடிகர்களை உருவாக்கி ஓய்ந்துபோனவர் அவருக்கு நிதிதிரட்ட நடிகர் கே. ஏ. தங்கவேலு குழுவினர் திருச்சி தேவர் மன்றத்தில் 9-6-67 அன்று நடத்திய 'மனைவி யின் மாங்கல்யம்' நாடகத்திற்குப் பெரியார் கட்டணம் வாங்காமல் தலைமை தாங்கினார். அந்த வகையில் பெரி யாரின் நன்கொடை ரூ. 150 என்று கணக்கிடப்பட்டது. அங்கே பேசும்போது பெரியார், தாம் ரஷ்யாவில் பார்த்த மூன்று நாடகங்களைப் பற்றிக் குறிப்பிட்டார். 36 ஆண்டு களாக அவற்றை மறக்காமல் இருந்தார். அவற்றில் ஒரு கதையை 8-1-66 அன்று சென்னையில் கூறினார். அடுத்த இரண்டு கதைகளுங்கூடக் கிறிஸ்துவப் பாதிரிமார்களைப் பற்றியவைதாம்:-இரண்டு கைதிகள் சிறையிலிருந்து தப்பி ஓடி வந்தார்கள். அவர்களைப் போலீசார் துரத்தி வந்தனர். மாதாகோயில் ஒன்று எதிர்பட்டது. அதன் முன்புறம் ஒரு கட்டிலில் எப்போதும் அமர்ந்து பிச்சை கேட்கும் ஒரு நொண்டியை எல்லாரும் அறிவார்கள். அவன் எங்கோ வெளியில் போயிருந்தான். ஒரு கைதி அவனுடைய இடத்தில் நொண்டிபோல் அமர்ந்து கொண்டான். இன்னொருவன் மாதா கோயிலுக்குள் ஓடினான். அங்கிருந்த பாதிரிமார்கள் ஏற்கனவே ஒரு சாதாரண ஆளுக்குப் பயிற்சி கொடுத்து, அவனை மகான் என்று சொல்லி ஊரை ஏமாற்ற, அவனைக் கட்டாயப்படுத்தி ஓர் அறையில் அடைத்து வைத்திருந் தார்கள். ஓடிவந்த கைதி, இரவில் அவனைத் தப்பிப் போக

விடுத்துத்,தான் அவன் இடத்தில் அமர்ந்து கொண்டான். பாதிரியார்கள் வந்து, மகானின் மகத்துவத்தை மக்களிடம் புகழ்ந்தனர். அவனும் பாசாங்கு செய்து, தனது மகிமையால் வெளியிலுள்ள நொண்டிப் 'பிச்சைக்காரனுக்குக் காலை வரவழைப்பதாய்க்கூறி, நிரூபித்துக் காட்டினான். பாதிரி மார்களுக்கே ஏமாற்றம்; ஆனால் வெளியில் சொல்ல முடியாதே! மகான் கைதிக்குப் பெண்ணையும், பொன்னையும் கொடுத்து அனுப்பினர். கைதிகள் இருவருக்கும் வெளியில் மரியாதை கூடிவிட்டது!

இன்னொரு கதையில்—தூக்குத் தண்டனைக் கைதி ஒருவனுக்குக் கடைசி நேர ஜெபம் செய்ய வந்த பாதிரியாரை, அவன் கொன்றுவிட்டு, அவர் உடையில் இவன் வெளியேறுகிறான். அவருக்கு இணக்கமான கன்னியா ஸ்திரீகளை இவனும் வசியப்படுத்திக் கொண்டான். அவர்களும் விஷயத்தை மறைத்து இவனைப் போப்பாக்கி விடுகிறார்கள். போப்புக்குப் பதவிப் பிரமாணம் செய்து வைக்க ஒரு ஜட்ஜ் வருகிறார். அவர் இவனுக்கு, முன்பு மரண தண்டனை வழங்கியவர். இவனை அடையாளம் கண்டுகொண்டு காட்டிக்கொடுக்க முனையும்போது, இவன் மதத்துறையில் தனக்குள்ள செல்வாக்கால், அந்த ஜட்ஜையே தொலைத்து விடுவதாக மிரட்டிப், பதவியில் நிலைத்து விடுகிறான்.

இப்படியாக மதத் துறையினரின் அக்கிரமங்களை அம்பலப்படுத்தும் நாடகக் கதைகளை நினைவுகூர்ந்தார் பெரியார். அதற்குப்பின், தொடர்ந்து நான்கு நாட்கள் சுற்றுப் பயணம் செய்ய முடிந்தது. 12-ந் தேதி திட்டக் குடியில் கலைஞர் மு. கருணாநிதியின் படத்தைத் திறந்து வைத்தபோது, பெரியார் அவரைப்பற்றிச் சிறப்புடன் குறிப்பிட்ட மொழிகள் மறக்கவொண்ணாதவை:-

"கருணாநிதியின் உழைப்பும், முயற்சியும், இல்லாவிட்டால் கழகத்தின் செல்வாக்கு இந்த அளவு வளர்ந்திருக்காது. அண்ணாதுரை கெட்டிக்காரர்தான். ஆனால் கருணாநிதிக்கு இருக்கிற முன்யோசனை அவருக்குக் கிடையாது. 1949-ல் திராவிட மாணவர் பயிற்சி முகாம் ஒன்றி

னைத் திருவாரூர் தோழர்கள் ஏற்பாட்டின்படி, மாவூரில் நடத்தினோம். பார்ப்பனரானாலும் சர் ஆர். எஸ். சர்மா, தமது பங்களாவில் முழு உரிமை தந்து, உணவு வசதிகளும் எல்லாருக்குமே செய்து, சில நாட்கள் வகுப்புகள் நடைபெற அழைப்பும், ஒத்துழைப்பும் தந்தார். இதைக் கருணாநிதி கண்டித்துப், பெரியார் பார்ப்பனர் வலையில் வீழ்ந்து விட்டார், என்று பேசினார். இதைத் தவிர வேறு எந்த விஷயத்திலும் அவர் என்னைக் குறை கூறிப் பேசியது கிடையாது!" என்றார் பெரியார்.

ஒரு வாரமாகச் சமாளித்துப் பார்த்து, இயலாமற் போய்ச், சென்னை சென்று, பொது மருத்துவ மனையில் சேர்ந்துவிட்டார் பெரியார். 18–ந்தேதி வீரமணியின் அறிக்கை "விடுதலை" முதற்பக்கத்தில் வெளியாயிற்று:— பெரியாருக்கு 'ஹெர்ணியா' வளர்ச்சி ஏற்பட்டு, நீர் இறங்குவதில் நோயும், மூலத்தில் கோளாறும் உண்டாகி, ஒருவாரம் கஷ்டப்பட்டுப், பிறகு சென்னை வந்ததில், 15 நாட்கள் ஓய்வில் இருக்கவேண்டும் பொது மருத்துவமனையில், என்று மருத்துவ நிபுணர்கள் கூறிவிட்டனர். அதனால், ஏற்கனவே பெரியார் ஒத்துக்கொண்ட சுமார் பத்து நிகழ்ச்சிகளுக்குச் செல்ல முடியாததற்கு வருத்தம் தெரிவித்துக் கொள்ளுவதோடு, அவற்றுக்காகப் பெற்றுக்கொண்ட பணத்தையும் திருப்பி அனுப்பச் சொல்லியிருக்கிறார்—என்பதாக.

இந்த வயதில் ஆப்பரேஷன் தேவையில்லை, எப்படியும் நோயைக் குணப்படுத்தலாம் என்றே டாக்டர்கள் முயன்றனர். 21–ந்தேதி காலையில் வந்த செய்திப் பத்திரிகைகளிலிருந்து, வீரமணி ஒரு செய்தியைப் படித்துக் காண்பித்ததும், படுத்துக் கிடந்த பெரியார் வாரிச் சுருட்டி எழுந்து உட்கார்ந்து, மிகுந்த மகிழ்ச்சியுடன், "இந்த அன்பான சேதியினால் எனக்குத் தொல்லை அதிகம் ஏற்படலாம் என்ற போதிலும், எனக்குப் பெருமளவுக்கு வலியை இது குறைத்து விட்டது" என்றார் பெரியார்.

அப்படி என்ன செய்தி அது? 20-6-67 சட்டமன்றத்தில் தி. மு. க. உறுப்பினர் ஒருவர், "பெரியாருக்குத் தியாகிகள்

பென்ஷனும், மான்யமும் வழங்கப்படுமா?'' என்று கேட்டார். இதற்குப் பதிலளித்த முதலமைச்சர் அண்ணா, "இந்த அமைச்சரவையையே அவருக்குக் காணிக்கையாகக் கொடுத்திருக்கிறோமே?'' என்றார்.

"விடுதலை'' அன்றாடம் பெரியாரை வந்து பார்த்த பிரமுகர்கள் பெயரை வெளியிட்டு வந்தது. சுகாதார அமைச்சர் சாதிக் பாட்சா திடீரென்று வந்து பார்த்தார். அமைச்சர்கள் ஏ. கோவிந்தசாமி, நாவலர் நெடுஞ்செழியன், மா. முத்துசாமி ஆகியோரும் பார்த்து விசாரித்தனர். 30–6–67 இரவு 7–30 மணிக்கு முதலமைச்சர் உயர்திரு சி. என். அண்ணாதுரை வந்து பார்த்து விசாரித்தார். மற்றும் திருவாளர்கள் எம். ஜி. ராமச்சந்திரன், ம. பொ. சி. சம்பத். ஏ. எஸ். கே., பேளுக்குறிச்சி சோமசுந்தரம், நடிகர் அசோகன், அன்பில் தர்மலிங்கம், வி. வி. இராமசாமி, என். வி. நடராசன், ஜி. டி. நாயுடு, இலக்குவனார், து. ப. அழகமுத்து, நாகசுந்தரம், மதுரை முத்து, ஏ. பி. சனார்த்தனம், க. ராஜாராம், டி. எம். பார்த்தசாரதி, எஸ். இராமநாதன், கி. ஆ. பெ. விசுவநாதம் ஆகியோரும், கழகத் தோழர்கள் பலரும் வந்து, பெரியார் உடல் நலம் விசாரித்துச் சென்றனர்.

ஆனைமலை ஏ. என். நரசிம்மன் பி. ஏ., 2–7–67 அன்று இயற்கை எய்தினார். பெரியார் உடனே ஆனைமலை செல்ல வேண்டுமென்று துடித்தார். டாக்டர்கள் அனுமதிக்க அடியோடு மறுத்துவிட்டனர்! அதனால், மணியம்மையாரும் போக முடியவில்லை! 3-ந்தேதி "விடுதலை''யில் பெரியார் எழுதினார்—கழகத்தின் கண் போன்ற தோழர். எவ்வளவோ செல்வக் குடும்பத்தில் பிறந்தும், துறவிபோல், என்னிடம் உண்மை அன்பு வைத்து, என்னோடு சுற்றிக் கொண்டிருந்தார். அருமை நண்பர். அனைவரும் பின்பற்றத்தக்க மனிதர் (Exemplary), என்று.

முன்னாள் அமைச்சர்களில், நாடாளுமன்றத் தேர்தலில் தோற்றும், சட்ட மன்ற மேலவை உறுப்பினர் பதவியை விடாமல் வைத்திருந்த ஆர். வெங்கட்ராமன்,

'கலப்புமணத் தம்பதிகளைப் பாராட்டித் தங்கப்பதக்கம் வழங்குவது தேவையற்றது; சமூக விஷயங்களிலெல்லாம் அரசு தலையிடக்கூடாது,' என்று அறிவுரை கூறித், தம்மை இன்னாரென்று காட்டிக் கொண்டார்! அலுவலகங்களிலும், நீதிமன்றங்களிலும், படிப்படியே தமிழ் நடைமுறைக்கு வரும் என்று, அரசுத் தரப்பில் அறிவிக்கப்பட்டது. கருணாநிதி, மதியழகன் ஆகிய அமைச்சர்களின் மான்யக் கோரிக்கைகள், ஏ. கோவிந்தசாமி, மா. முத்துசாமி ஆகிய அமைச்சர்களின் சுற்றுப் பயணத்திட்டங்கள் இவையெல்லாம் "விடுதலை"யில் இடம் பெறத் தொடங்கின. சென்னையில் குடிசைப் பகுதிகளில் தொடர்ந்து தீவிபத்துகள் நடைபெற்று வந்தன. 15-7-67 அன்று காமராசரின் 65-ஆவது பிறந்த நாள். காமராசர் நீடூழி வாழ்க என்று "விடுதலை" முதல் பக்கம் வாழ்த்தியிருந்தது. திருச்சியில் 17-9-67 அன்று பெரியார் சிலையைத் திறக்கக் காமராசர் ஒத்துக் கொண்டதாகவும், அடிபீடம் தயாரென்றும் 6-7-67 அன்று, சிலை அமைப்புக் குழுவின் செயலாளர் நோபில் கோவிந்தராஜுலு அறிவித்தார்.

பொது மருத்துவமனையிலிருந்து 4-7-67 அன்று பெரியார் வீடு திரும்பி, 9-ந்தேதி தர்மபுரி திருமணத்துக்குச் சென்று, அப்படி 3, 4 நிகழ்ச்சிகளுக்கும் செல்லத் தொடங்கினார். ஆனால், மீண்டும் உடல் நலிவுற்றுச் சுரம் வந்து, 17-ந்தேதி திருச்சியிலிருந்து புறப்பட்டு, அதே 18-ந்தேதி மீண்டும் சென்னைப் பொது மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார். நீர் இறங்குவதில் பழையபடி தொல்லை! பரிதாபத்துடன் பார்த்த டாக்டர்களிடம், "இந்த முறை நீங்கள் எவ்வளவு நாள் என்னை இங்கே இருக்கச் சொல்கிறீர்களோ அவ்வளவு நாள் இருக்கிறேன்" என்று பெரியார் உறுதியளித்தார். மருத்துவமனையில் தங்கியிருந்த நாட்களில், முதல்வர் அண்ணா, கலைஞர் மு. க., சத்தியவாணி முத்து, ஏ. கோவிந்தசாமி, மா. முத்துசாமி, சி. பா. ஆதித்தனார், மேயர் இரா. சம்பந்தம், ஜி. டி. நாயுடு, அவினாசிலிங்கம் செட்டியார், டாக்டர் ஆர். ஜி. கிருஷ்ணன், பி. ஜி. கருத்திருமன், கே. டி. கே. தங்கமணி, மன்றாடியார், மும். கல்யாணசுந்தரம், வ. சுப்பையா, பாலதண்டாயுதம்,

மோகன் குமாரமங்கலம், தங்கவேலர், டாக்டர் அண்டே ஆகியோர் வந்து, விசாரித்துச் சென்றனர். 4-8-67 இரவு காமராசர் வந்து பார்த்துச் சென்றார். அதன் பிறகு அன்றிரவே வீடு திரும்பி, உடனே திருச்சி புறப்பட்டார் பெரியார்.

இதற்கிடையில் 18-7-67 அன்று, தமிழகச் சட்ட மன்றத்தில், மெட்ராஸ் ஸ்டேட் கிடையாது. ஆங்கிலத்திலும் தமிழிலும் இது தமிழ் நாடுதான் என்ற தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது. சபாநாயகர் அனுமதியுடன், முதல்வர் அண்ணா மும்முறை முழங்க, அனைவரும் 'வாழ்க' என்று பின் தொடர்ந்து முழக்கமிட்டது, வரலாறு தழுவிய உணர்ச்சி மிக்க நாளின் வெற்றிக் குறிப்பாகும். 23-7-67 அன்று, மத்திய அரசின் கவனத்தை ஈர்த்துக், காரியம் விரைவில் நடைமுறைக்கு வரத் தி. மு. க. எழுச்சி நாள் கொண்டாடியது. அதாவது சேலம் இரும்பாலைத் திட்டமும், தூத்துக்குடி ஆழ்கடல் துறைமுகத் திட்டமும் முன்னுரிமையுடன் நிறைவேற்றப்பட! காங்கிரசார் இதனை எதிர்த்து ஆர்ப்பாட்டம் முதலியவற்றில் ஈடுபடவேண்டாம், என்று கூறிவிட்டார் காமராசர். "இதற்கெல்லாம் ஒரே வழி நாட்டுப் பிரிவினைதான்! அதுதான் Surgeon's Cure பெரியார் வழி! எழுச்சி நாள் Physician's Cure தி. மு. க. வழி" என்று 25-ந்தேதி "விடுதலை" எழுதியது. அடுத்த நாள் 'வரவேற்கத்தக்க பிரகடனம்' என்று, அனைவருக்கும் கல்வி வசதியளிக்கப்படும் என்ற திட்டம் குறித்து எழுதியது. நடிகர் எம். ஜி. ராமச்சந்திரன், நடிகவேள் எம். ஆர். ராதா சம்பந்தப்பட்ட துப்பாக்கிச் சூடு வழக்கு, செங்கற்பட்டு செஷன்ஸ் கோர்ட்டில் 27-ந்தேதி முதல் விசாரணை என்றும், வழக்கு விசாரணையில் பப்ளிக் பிராசிக்யூட்டர் பி. ஆர். கோகுலகிருஷ்ணன், சர்க்கார் தரப்பில் வாதாடுவார் என்றும், செய்தி வெளியானது. 3-8-67 அன்று, நன்னிலம் தாழ்த்தப்பட்ட தொகுதிச் சட்டமன்ற உறுப்பினர் ஜெயராஜின் காலை யாரோ வெட்டித் துண்டாக்கிவிட்டனர் என்று கேள்வியுற்று, முதலமைச்சர், வருந்தித் தந்தி அனுப்பியதாகவும் "விடுதலை" செய்தி தந்தது. ஆனைமலை தோழர் ஏ. என். நரசிம்மன் அவர்களின் மறைவுக்கு அனுதாபந் தெரி

வித்து,நாடெங்கிலும் உள்ள திராவிடர் கழகக்கிளைகள் நிறைவேற்றி அனுப்பிய இரங்கல் தீர்மான விவரம் "விடுதலை"யின் கடைசிப் பக்கத்தை நிறைத்து வந்தது.

15–8–67 அன்று, சென்னைக் கடற்கரையில், திராவிடர் கழகம் நடத்திய காமராசர் பிறந்த நாள் விழாவில், பெரியார் சமதர்மம் பற்றிப் பேசிவிட்டு "நாம் எதில் இன்று விடுதலை பெற்றிருக்கிறோம்? நான் அரசியலின் பெயரால் துன்பப்பட்டவன். நட்டப்பட்டவன். மானத்தையும் பறி கொடுத்தவன். மந்திரி பதவியை உதறித் தள்ளியவன். ஆனதால் எனக்கு இந்த இழி வாழ்வு வெறுப்பாகத் தோன்றுகிறது" என்றார் பெரியார். "சில இடங்களில் தி.மு.க—காங்கிரஸ் மோதல்கள் இன்னும் நடந்து வருவ தாக எனக்குச் சேதிகள் வருகின்றன. தலைவர்கள் இவற்றைத் தவிர்க்க முயற்சி செய்ய வேண்டும். சில்லுண் டிகள் சில்லறைத்தனம் செய்யலாம். அதை லட்சியம் செய்ய வேண்டாமென்று தலைவருக்கு (காமராஜருக்கு) விண்ணப்பித்துக் கொள்ளுகிறேன்!" என்று முடித்தார். நாட்டில்காலித்தனம் அதிகரித்துவிட்டது என்று "விடுதலை" யில் ஒரு தலையங்கமும் எழுதினார்.

மூன்றாம் முறையாகப் பெரியார் உடல் நலங்குன்றி, சுந்தரவதனம் நர்சிங்ஹோமில் 23–8–67 அன்று சேர்க்கப் பட்டார். டாக்டர் ரத்தினவேல் சுப்பிரமணியமும் கவனித்து வந்தார். எம். ஆர். ராதாவின் இரு மகள் களுக்குச் சென்னையில் நடைபெற்ற திருமண விழாவுக்கு, மருத்துவர்களின் அனுமதியுடன், பெரியார் 26-ந் தேதி சிறிது நேரம் சென்று, தலைமை ஏற்றுத், திரும்பினார். எம்.ஆர்.ஆர். வாசு வரவேற்றார். கி. வீரமணி, திருவாரூர் தங்கராசு, சிதம்பரம் கு. கிருஷ்ணசாமி, பாலதண்டாயுதம், ஈ. வெ. கி. சம்பத், கவிஞர் கண்ணதாசன்—மணமக்களை வாழ்த்திப் பேசினார்கள். மருத்துவமனையிலிருந்த பெரி யாரை 6–9–67 அன்று அமைச்சர் மாதவனும், அன்பில் தர்ம லிங்கமும் சென்று பார்த்தனர். 7-ந் தேதி வடசென்னையில் லோட்டஸ் ராமசாமியின் மகன் திருமணத்தையும் நடத்தி

வைக்க, மருத்துவமனையினின்று சென்று வந்தார். ஓரளவு நலம் பெற்று 9-ந் தேதி திருச்சிக்குப் புறப்பட்டுச் சென்றார் பெரியார். மருத்துவமனையிலிருந்து கொண்டே "விடுதலை"க்குப் பெட்டிச் செய்திகளும், தலையங்கமும் எழுதுவதை நிறுத்த வில்லை. "வேலியில் போகிற சுக்குட்டியைக் காதில்விட்டுக்கொண்டு குடையுது குடையுது என்கிற கதை" என்பதாக ஒரு பெட்டிச் செய்தி! இது பதவி கிடைக்காததால் சலிப்புற்ற ம. பொ. சி. பற்றியது. இன்றையக் காங்கிரஸ் நிலை பற்றி எழுதுகையில்—காங்கிரஸ்—(மைனஸ்) காமராசர் = 0 (ஜீரோ)தானே? நான் இன்னமும் காமராஜர் தலைமையில் உள்ள காங்கிரஸ், சிறு மாறுதல்களுடன் நாட்டை ஆளவேண்டுமென்று ஆசைப்படுகிறவன்; ஆனால் அடுத்த தேர்தல் என்ன ஆகுமோ என்று பயமாயிருக்கிறது—என்று பெரியார் குறிப்பிட்டார்.

பம்பாயில் சிவசேனைக்காரர்களின் அட்டகாசம் உச்ச கட்டத்திலிருந்து, தமிழர்கள் பயங்கரமாகத் தாக்கப் பட்டனர். அரசு எந்தப் பாதுகாப்பும் தர இயலவில்லை. பெரியார் இந்தப் பிரச்சினையைத் தமது சொந்தப் பிரச்சினையாகப் பாவித்தார். "தமிழனுக்கு மானம் வேண்டாமா? பம்பாயில் சிவசேனைக்காரன் தமிழனை அடித்தால் அதற்குப் பரிகாரமாக இங்கிருக்கிற பம்பாய்க்காரனை நாம் விரட்ட வேண்டாமா? வெறுக்கத் துணிந்தவன்தான் வெற்றி பெறுவான்!" என்றெல்லாம் எழுதினார். திருச்சி சென்றவுடனே, சிவசேனை எதிர்ப்பு மாநாடு நடத்திட ஆவன செய்து வந்தார்; தமது பிறந்த நாளுக்கு முதல் நாள் என்று, தேதியும் குறித்தார்!

அமைச்சரவை விஸ்தரிப்பு கிடையாது என்று முதலமைச்சர் வெளியிட்ட செய்தி, "விடுதலை"க்கு கரும்பு சாப்பிட்டதுபோல இனித்தது; 6-9-67 அன்று அதைப் பிரசுரித்த போது, 8-ந் தேதி வெளியான மலர் மணம் என்ற விளம்பரத்தில்தான், முதல் தடவையாக (பிணைந்த பின்னர்) அறிஞர் சி. என். அண்ணாதுரை தரும் "அந்த வசந்தம்" எனக் காணப்பட்டது

கிறார்கள். இது தும்பை விட்டுவிட்டு வாலைப் பிடிக்கிற கதையாகத்தான் முடியும். காங்கிரசார் தங்களைப் பகுத்தறிவுவாதிகள் என்று காட்டிக் கொள்ளாத வரை, நாம் எப்படி இன்று காங்கிரசை ஆதரிக்க முடியும்?

தி.மு.க.காரரும், என்ன செய்தாவது பதவியைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்கிற ஆர்வத்தில், தாங்கள் இருக்கும் படகில் ஓட்டை ஏற்படும்படிச் செய்து கொள்வதும் ஒரு வழியென்று நினைப்பார்களானால், அது தங்களைக் காப்பாற்றிக் கொள்வதாகாது; மூழ்கடித்துக் கொள்வதுதானாகும்! அவர்கள் முயற்சியில் கூடியவரை சுயமரியாதைக்காரரையும், திராவிடர் கழகத்தாரையும் விரோதித்துக் கொள்ளாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். தங்கள் மக்களுக்கு அடக்கத்தைப் போதிக்க வேண்டும். சிறு தகராறு, கோளாறுகளை சிறிது விட்டுக் கொடுத்தாவது, பொறுமை காட்டிச் சரிப்படுத்திச் கொள்ள வேண்டும். இன்னும் இரு கூட்டத்திலும் தங்களை ஒருவருக்கொருவர் விரோதிகள் என்று எண்ணிக் கொண்டிருப்பவர்கள் இருக்கிறார்கள்; அது தவறு!

இன்று பார்ப்பனரும், காங்கிரசாரும் ஒன்றாகிவிடவில்லையா? ஒருவருக்கொருவர் எவ்வளவு சிபாரிசு! எவ்வளவு ஆதரவு! அந்தப் புத்தி நமக்கு வரவேண்டாமா?

ஒரு நாள் இரண்டு நாள் அல்ல; இன்னும் நாலரை வருடம் இருக்கிறது. அடுத்த எலெக்ஷன் எப்படியானாலும் எனக்குக் கவலையில்லை. அதுவரை தி.மு.க. ஆட்சி நல்லபடி நடைபெற வேண்டும்!

நமது தோழர்கள் இனி பகுத்தறிவுப் பிரச்சாரத்தில் தான் கவலை கொள்ள வேண்டும். பகுத்தறிவுவாதிகள் என்று லட்சக்கணக்கில் மக்களிடம் கையெழுத்து வாங்க வேண்டும்.

எனது காயலா சற்றுக் கடினமானதுதான்; எளிதில் குணமாகாது. மூத்திர வழியில் கற்கள் இருக்கின்றன அவை கரைய மாதக் கணக்கில் காலமாகும். ஒரு சமயம் ஆப்பரேஷன் (அறுவை சிகிச்சை) தேவை இருந்தாலும்

இருக்கலாம், ஆனாலும் நான் பயப்படவில்லை. எதற்கும் தயாராக இருக்கிறேன். மணியம்மையார் கவனிப்பும், உதவியும் அளவிடற்கரியது. உங்கள் கடமையிலிருந்து தவறாதீர்கள்!''

17-9-67 காலையில் கண்விழித்த ஞாயிறு, காணருங் காட்சிகளைத்—தமிழகமே ஒரே நகரில் திரண்டு, திருச்சியை மூழ்கடித்த நிகழ்ச்சியைக்—கண்டு முகம் சிவந்தது! காலை 9-30 மணிக்குத் திருச்சி மெயின்கார்டு கேட்டிலிருந்து மாபெரும் ஊர்வலம் புறப்பட்டது. தந்தையும் தனயனும் மீண்டும் ஒருங்கே அமர்ந்த விந்தைமிகு காட்சியினைக் கண்டோர் சிந்தை பறிகொடுத்தனர். அன்று காலையிலேயே முதலமைச்சர் அண்ணா திருச்சி பெரியார் மாளிகை சென்று மணமிக்க மல்லிகை மாலை ஒன்றைத் தந்தைக்குச் சூட்டினார். நான் வாடாத மாலையினைச் சூட்டுகிறேன் என்று சரிகைமாலை அணிவித்தார் பெரியாரும். ஊர்வலம் ஊர்ந்தும், நகர்ந்தும், பிளாசா டாக்கீஸ் அருகில் சிலை அமையும் இடத்தையொட்டிய அலங்காரப் பெரும்பந்தலை 11.30 மணிக்குச் சென்றடைந்தது. விழாக் குழுத்தலைவரும், பெரியாரின் மிக நீண்டகால நண்பருமான சே.மு.அ. பால சுப்பிரமணியம் வரவேற்றார். விழாக்குழுச் செயலாளர் கோவிந்தராஜுலு (''பஞ்சாயத்துச் செய்தி'' ஆசிரியர்) முன் மொழிய, டி.டி. வீரப்பா வழிமொழிய, முதலமைச்சர் அண்ணா தலைமை ஏற்றார். டாக்டர் ராஜாசர் முத்தையா செட்டியார் பெரியாருக்குப் பொன்னாடை போர்த்த, ராணி மெய்யம்மை ஆச்சி அன்னை மணியம்மையாருக்குப் பொன்னாடை போர்த்தினார். விழாவில் அமைச்சர் மா. முத்துசாமி, சி.பா. ஆதித்தனார், டாக்டர் எஸ்.ஜி.மணவாள ராமானுஜம், கி. வீரமணி ஆகியோர் பேச, பெரியார் ஏற்புரை நல்கினார்.அதே மேடையில் அன்றுமாலை 6மணிக்குக் குன்றக்குடி அடிகளார் தலைமையில், பெரியாரின் முழு உருவச்சிலையினை (நின்றுகொண்டிருக்கும் தோற்றம்) காங்கிரஸ் தலைவர் காமராசர் திறந்து வைத்தார்.ஈ.வெ.கி. சம்பத், டாக்டர் ஏ. கிருஷ்ணசாமி ஆகியோர் உரையாற்றப்

பெரியார் சிறப்புச் சொற்பெருக்கு நிகழ்த்தினார். இந்தவிழா மேடையில் பெரியாரின் வேன் டிரைவர் மானுவேல் ராஜ், மூன்று குழந்தைகளின் தாயான அலமேலுவைப் புரட்சித் திருமணம் புரிந்து கொண்டார். மேலும் 3 ஜோடி மணமக்களும், தங்கள் திருமணத்தை இங்கேயே நிறைவேற்றிக் கொண்டார்கள். பெரியார் டிரம்வாசிப்பது போலும், காமராசர் புல்லாங்குழல் ஊதுவதுபோலும், அண்ணா ஜால்ரா போடுவது போலும் 'மெயில்' ஏடு கார்ட்டூன் வெளியிட்டுத், தன் வயிற்றெறிச்சலைக் காட்டிக் கொண்டது.

பெரியாரின் 89—வது பிறந்த நாள் விழா நிகழ்ச்சிகளுக்குத் தலைமை ஏற்றுப் பேசிய முதலமைச்சர் அண்ணா கூறினார்:—

"நான் முதலமைச்சரான பிறகு எனக்கு ஏதாகிலும் ஒரு பெரிய மகிழ்ச்சி ஏற்பட்டிருக்குமானால், இந்த விழாவிலே நான் கலந்து கொள்வதுதான் மிகப் பெரிய மகிழ்ச்சியைத் தருவதாகும். ஆனால் உங்களிலே பலருக்கு இது புதுமையானதாகத் தெரியும். என்னைப் பொறுத்தவரையில், இடையில் சில நாள் இல்லாமல் இருந்த பழைய நிகழ்ச்சிதானே தவிர, இது புதிதல்ல! பெரியாரவர்களுடைய 89—வது பிறந்த நாள் விழாவானது, இன்றைய தினம் தமிழகத்திலுள்ள எல்லாப் பண்பாளர்களாலும் கொண்டாடப்பட்டு வருவது இயற்கையானது. கட்சிக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சியாக, எல்லாக் கட்சியிலுள்ள பண்பாளர்களும் வரவேற்கத் தக்கதாகத், தமிழகமக்கள் நல்வாழ்வில் அக்கறையுள்ளவர்கள் போற்றத்தக்க நிகழ்ச்சியாக, இந்த மாபெரும் நிகழ்ச்சி அமைந்திருக்கிறது.

தமிழகத்திற்கும், தமிழ் நாட்டு மக்களின் நல்வாழ்விற்கும், இன்னும் உலகிற்கே என்று கூடச் சொல்லலாம், அவர்கள் செய்திருக்கிற அரிய பெரிய காரியங்கள், ஆற்றியிருக்கிற அருந்தொண்டுகள், ஏற்படுத்தியிருக்கிற புரட்சி உணர்ச்சிகள், ஓடவிட்டிருக்கிற அறிவுப்புனல், உலகம் என்றுமே கண்டதில்லை; இனியும் காணப்போவதில்லை.

பிறந்த நாள் கொண்டாடுகிற நேரத்தில், என்னுடைய நினைவுகள் திராவிடர் கழகமாகவும், அதற்குமுன், தமிழ இயக்கமாகவும், சுயமரியாதை இயக்கமாகவும் இருந்த நேரங்களில் அவர்களோடு இணைந்து பணியாற்றிய பல எண்ண அலைகளை நெஞ்சில் பாயவிட்டுக் கொண்டிருக்கின்றன.

ஒரு போர்வீரன் களத்தில் புகுந்து, இந்தப் படையை முறியடித்தேன்; அந்தப் படையை வென்றேன் என்று காட்டி, மேலும்மேலும் செல்வதுபோல் பெரியார் அவர்கள் வாழ்நாள் முழுதும் களத்தில் நிற்கிற போராட்டமயமாகும். முதல் போராட்டம் புத்தரைப் போன்று மக்களுக்காகச் சுக போகங்களைத் துறந்ததாகும். பெரியார் அவர்களின் குடும்ப நிலை எப்படிப் பட்டது? எந்தப் பக்கம் திரும்பினாலும் குடும்பச்செல்வாக்கு ; வாணிபத்தில் ஆதாயம்; நிலபுலன்கள்; வீடுவாசல்-இவைகளையெல்லாம் பெரியாரவர்கள் திரும்பி ஒருமுறை பார்த்து விட்டு, இவைகள் எனக்குத் தேவையில்லை; வீட்டை மறப்பேன்; செல்வத்தை மறப்பேன்; செல்வந் தருஞ் சுகபோகங்களை மறப்பேன்; அறியாமையில் மூழ்கிக் கிடக்கும் என் நாட்டுமக்களுக்கு அறிவுச் செல்வத்தைத் தரப் போகிறேன்! நல்லது கெட்டது ஆராய்ந்து பார்க்கும் பக்குவம் அற்ற மக்களுக்குச் சிந்தனைச் செல்வத்தைத் தரப்போகிறேன். பகுத்தறிவுச் செல்வத்தைத் தரப்போகிறேன்—என்று துணிவுடன்; குறுக்கிடுவோரின் ஆற்றலைமுறியடிப்பேன் என்று கிளம்பினார்களே அதுதான் முதல் போராட்டத்தில் பெற்ற வெற்றியாகும்! அதற்குப் பிறகு, அவர்கள் சந்தித்த ஒவ்வொரு களத்திலேயும் வெற்றிதான் கிடைத்திருக்கிறது. இந்தியாவின் தேசியமொழி இந்திதான் என்று சொன்னவுடன், தேசியம் என்பது மகாபுரட்டு! இந்தியா என்கிறீர்களே அது மிகப் பெரிய கற்பனை என்று கூறி, அவை இரண்டையும் உடைத்தெறிவதுதான் என்னுடைய வேலை என்று கிளம்பினார்கள். பிறகு, ஆட்சிமொழி என்று சொல்லி, எதிர்த்த பின்னர், இப்போது இந்தி, இணைப்பு மொழி இடத்துக்கு வந்திருக்

கிறதென்றால்,அது பெரியாரவர்கள் நடத்திய போராட்டத்தினால்தான்!

மொழிப்பிரச்சினை அவர்களைப் பொறுத்தவரை மிகச் சாதாரண பிரச்சினை. தமிழ் மக்களிடையே பரவியிருக்கிற காட்டுமிராண்டித்தனமான கொள்கைகள் ஒழிந்து, மனிதத் தன்மையும் ஒழுக்கமும் பண்பும் வளரத்தக்க விதத்தில் அறிவுப்புரட்சி செய்ய வேண்டும் என்பதே அவர்கள் நாட்டம். எந்த நாட்டிலும், இரண்டு நூற்றாண்டுகளில் செய்து முடிக்கக் கூடிய காரியங்களை இருபது ஆண்டுகளில் அவர்கள் செய்து முடித்திருக்கிறார்கள். ஆங்கிலத்தில் Putting centuries into capsules என்பார்களே அதுபோல!

20 ஆண்டுகளுக்கு முன் வடநாட்டுக்கு நான் அவர்களோடு போயிருந்த நேரத்தில், சில பெரியவர்கள் கேட்டார்கள், 'உங்களை இன்னுமா விட்டு வைத்திருக்கிறார்கள்? நீங்கள் சொல்வதிலே பத்தாயிரத்தில் ஒரு பங்கு நாங்கள் இங்கே சொன்னாலும், நீங்கள் செய்வதிலே ஆயிரத்தில் ஒரு பங்கு செய்தாலும்கூட, எங்களை அடியோடு அழித்திருப்பார்களே' என்று. அப்படிப்பட்ட வீரமிக்க காரியங்களை நடத்திக் காட்டித், தாம் பெற்ற வெற்றிகளை இப்போது நம்மிடத்திலே ஒப்படைத்திருக்கிறார்கள் பெரியார் அவர்கள்.

இதே திருச்சியிலே, 1945ல் நடைபெற்ற மாநாட்டுக்கு முதல்நாள் பெய்த பெருமழையால், பந்தலும் திடலும் நாசமாயின. ஒரே இரவுக்குள் தண்ணீர் இறைக்கப்பட்டு, மணல் தூவப்பட்டுப், பந்தல் பக்குவப்படுத்தப்பட்டது பெரியாரின் தொண்டர்களால். அதேபோலத்தான் பழைமைச் சேறும் இப்போது துடைக்கப்பட்டுவிட்டது. ஒருமுறை சிவகங்கையிலே, செருப்புத் தோரணங்களைத் திரும்பிய பக்கம் எல்லாம் தொங்கவிட்டு, எங்களை வரவேற்றார்கள்.

இன்று அவர்களுடைய பிள்ளைகளெல்லாம், இந்தப் பந்தலுக்குள் குழுமியிருக்கிறார்கள். அன்று வெறுத்தவர் இன்று போற்றுகின்றனர்! இப்படி ஒரு சமூகத்தை, ஒரு

நாட்டு மக்களை ஆளாக்கிவிட்ட பெரியார், அவர் காட்டியுள்ள லட்சியப் பாதையில் நாமெல்லாம் நடந்து செல்ல நமக்கு ஆற்றல் தந்து, அவர் நமக்கு வாழ்த்துச் சொல்ல வேண்டும். அந்த வாழ்த்துப் பெறவே, நாம் இங்கே கூடியிருக்கிறோம். பெரியார் கட்டளைப்படி நடந்து தமிழகத்தைப் பொன் மயமாக்குவோம்."

17–9–67 திருச்சியில் குன்றக்குடி அடிகளார் தலைமையில் பெரியாரின் முதலாவது உருவச் சிலையைத் திறந்து வைத்த காமராசர் பேச்சு: "பெரியார் அவர்களுடைய திருவுருவச் சிலையைத் திறந்து வைத்திருக்கிறோம். தந்தை பெரியார் அவர்கள் 50 ஆண்டுகளுக்கு மேலாகச் சமுதாயத்திற்காகச் சிறந்த தொண்டுகளைச் செய்து வருகிறார்கள். அவர்கள் தொண்டின் பலனால் நம்முடைய தமிழகத்தில், சமுதாயத்தில், ஓர் பெரும் எழுச்சி ஏற்பட்டிருக்கிறது. அந்த எழுச்சியைப் புரட்சி என்றும் சொல்லலாம். அவர்கள் எப்படிச் சமுதாயத்தில் ஏற்றத் தாழ்வுகள் மறைய வேண்டுமென்று விரும்புகிறார்களோ, அப்படியே அரசியலிலும், பொருளாதாரத்திலும் ஏற்றத் தாழ்வுகள் மறைய வேண்டுமென்று விரும்புகிறார்கள்.

40 ஆண்டுகளுக்கு முன்பே அவர்கள் ரஷ்யா சென்று வந்து, சோஷலிச லட்சியத்தைத் தமிழ் நாடு எங்கும் பரப்பினார்கள். அது தமிழகத்தோடு நின்றுவிடாமல், இந்தியா பூராவும் பரவியது. பெரியார் ஜஸ்டிஸ் கட்சியிலிருந்த போதும், பொருளாதாரப் புரட்சியை உண்டுபண்ணிவிடுவாரோ என்று பயந்து,ஜஸ்டிஸ் ஆட்சியே இவரை ஜெயிலில் போட்டார்கள்!

அவர்கள் பாடுபட்டு, விதை விதைத்துக், களை எடுத்து விட்டார்கள். நாம் செய்ய வேண்டியது அறுவடைதான். அதைக்கூட நாம் செய்ய மாட்டோமென்று சொல்ல முடியுமா என்ன? மனதில் பட்டதை மறைக்காமல் சொல்லக்கூடிய துணிவு, எனக்குத் தெரிந்த வரையில், அவர் ஒருவருக்குத்தான் உண்டு! யாருடைய தயவு தாட்சண்யத்தைப் பற்றியும் அவருக்குக் கவலையில்லை. தனக்கு நியாயமாகப்

பட்டதைச் சொல்லி வரும் தலைவர், நீண்ட நாள் இருக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். ஏன் இப்படி ஊர் சுற்றுகிறீர்கள்? என்றுகூட நான் கேட்டேன். பத்து நாள் வெளியிலும், பத்து நாள் ஆஸ்பத்திரியிலும் இருக்கிறார்; மக்கள் நல்வாழ்வு வாழவேண்டுமென்ற லட்சியத்துக்காக!''

பெரியாருக்கு மிக விருப்பமானதும், தமிழ் நாட்டில், ஏன் இந்தியாவிலேயே, முதன்முதலாகக் குடும்பக்கட்டுப் பாடுபற்றிக் கர்ப்ப ஆட்சி என்ற தலைப்பில் பெரியார் எடுத்துக் காட்டியதுமான—குடும்பநலவிழா ஒன்று 20–9–67 மண்ணச்சநல்லூர் ஆரம்ப சுகாதார நிலையத்தில் நடந்தது. மலர் வெளியிடும் நிகழ்ச்சியில் பெரியார் மகிழ்ச்சியுடன் கலந்து கொண்டார். அடுத்து ஒரு சிறப்பான விழா, சென்னை மயிலைப்பகுதி தி.மு.க. நடத்திய அண்ணா பிறந்தநாள் விழா! 22–9–67 மாலை ஒஷியானிக் ஓட்டல் பின்புறம் நடந்தது. மயிலை எஸ்.வி.வேலு தலைமை தாங்கினார். அதில் கலந்துகொண்டு, இருகழகத்தவரும் பிணைந்தபின்னர், அண்ணாவைப் பாராட்டிப் பெரியார் பேசிய முதல் தி.மு.க. பொதுக்கூட்டம் இது. பல்லாயிரக் கணக்கில் மக்கள் குழுமி நின்றனர். பெரியார் உரை யாற்றினார்:

''பேரன்பிற்குரிய தாய்மார்களே! பெரியோர்களே! தலைவர் அவர்களே! மகாசந்நிதானம் அவர்களே! கனம் கருணாநிதி அவர்களே! மாதவன் அவர்களே! மற்றும் உள்ள தோழர்களே! இன்றையதினம் இங்கு கூட்டப்பட்ட இந்தக் கூட்டமானது தமிழக முதல் அமைச்சர் அறிஞர் அண்ணா அவர்களுடைய பிறந்தநாள் பாராட்டுக் கூட்டம். அண்ணா அவர்களுக்கு வாழ்த்துக் கூறும் கூட்டம். அண்ணா அவர் களைப் பாராட்டவோ, வாழ்த்துக் கூறவோ நான் வர வில்லை. ஆனால் இப்படிப்பட்டவர்களைத் தேர்ந்தெடுத்த உங்களைப் பாராட்டவும் வாழ்த்துக் கூறவுமே வந் திருக்கிறேன். நீங்கள், இந்த ஆட்சி, நீண்ட நாள் நீடித்து இருக்கும்படியாகப் பார்த்துக் கொள்ள வேண்டும், என்று எடுத்துக் கூறவே இங்கு வந்திருக்கிறேன்.

அண்ணாதுரை அவர்கள் வெற்றிபெறுகிறவரையிலும், அந்தச் சேதி என் காதில் விழுகிறவரையிலும், அண்ணா துரையும், அவரது கட்சிக்காரர்களும், நல்லவண்ணம் தோல்வி அடையவேண்டுமென்றும், காங்கிரசு நல்லவண்ணம் வெற்றிபெற்று ஆட்சிக்கு வரவேண்டுமென்றும் மனதாரப் பாடுபட்டேன். வேண்டியவர்கள் தோல்வியடைந்து விட்டார்களே என்று நான் துக்கப்படும் முன்பே, வெற்றி பெற்ற இவர்கள் என்னிடம் வந்துவிட்டார்கள். தைரிய மாக வந்து என்முன் உட்கார்ந்துவிட்டார்கள். எனக்கு ஒரே வெட்கம்!

இவர்கள் என்னைப் பார்த்துவிட்டுப் போனதும், இந்த ஆட்சியை நாம் ஆதரிக்கவேண்டுமென்று அறிக்கை விட்டேன். என்மேல் பலருக்குக் கோபம். என்னைக் கண்டித்துக் கடிதம் எழுதினார்கள். பின்பு, மாறுபட்டவர் களும் தாங்களாகவே பாராட்ட ஆரம்பித்துவிட்டனர். இந்த ஆட்சி நிலைக்க நானும் என்னால் இயன்றவரை எந்த வித மன ஒதுக்கலும் (without any reservation) இல்லாமல் மனதாரப் பாடுபடுவேன்!

நம்மை எதிர்ப்பவர்கள், இவர்கள் வெள்ளைக்காரன் பூட்ஸ் நக்கிய தேசத்துரோக ஜஸ்டிஸ்கட்சிக் கும்பல் என்று, 15ஆண்டுகளாக நான் யாருக்காகப்பாடுபட்டேனோ, அந்தக் காங்கிரஸ்காரர்கள், மிகவும் கீழ்த்தரமாக இப்போது பேசு கிறார்கள். இந்த நாட்டில் தமிழன் என்று சொல்லிக் கொள்ளவும், தலை நிமிர்ந்து நடக்கவும் செய்தது ஜஸ்டிஸ் கட்சிதான்! நான் தலைவனான அந்தக்கட்சிதான் இப்போதும் ஆள்கிறதென்றால், என்னைவிட மகிழ்ச்சி அடைபவர் வேறு யாராக இருக்க முடியும்? ஆகவே நம்முடைய மக்கள் (இந்திய) தேசத் துரோகிகளாகவும் (தமிழ்) நாட்டுப் பற்றாளர்களாகவும் வாழவேண்டும். இன்றையதினம் மொழித்தகராறு வந்து ரொம்பவும் தொல்லை செய்கிறது. மாதவன் அவர்கள் டெல்லியில் மிகக் கண்டிப்பாகப் பேசி உள்ளார், அவரைப் பாராட்டுகின்றேன். தி.மு.க. ஆட்சி இந்தி வேண்டாம் என்பதில் மிகவும் கண்டிப்போடும், விழிப்

போடும் இருக்கவேண்டும். இந்தி வேண்டாம் என்கிற தி.மு.க. காரர்களும், இந்தியா வேண்டாமென்கிற நாங்களும், ஒரே படகில்தான் இருக்கிறோம்.

இன்றைய தினம் சரித்திரமே கண்டிராத அளவுக்கு நமக்குப் பகுத்தறிவாளர் ஆட்சி கிடைத்திருக்கிறது. இரண்டாயிரம் ஆண்டு சரித்திரத்தில் ஒரு பகுத்தறிவுவாதி ஆட்சி கூட நமக்குக் கிடைக்கவில்லை. இனி எந்தக்காலத்திற்கும் ப்படிப்பட்ட ஆட்சி கிடைக்கவே கிடைக்காது!

பதவி போனதால் காங்கிரஸ்காரன், நிர்வாணமாய் நெருப்பின்மேல் நிற்பதுபோல் குதிக்கிறான். எப்படியாவது இவர்களைக் கவிழ்த்துவிட்டுத், தான் வரவேண்டுமென்று துடிக்கிறான். அடுத்து வருவதானாலும் பக்தவத்சலம் போன்றவர்கள்தானே வருவார்கள்?

1965–ல், இந்தத் தமிழ்நாடு மந்திரிகள் யாவரும், இன்றைக்கு ஆட்சி நடத்த யோக்கியதை அற்றவர்கள், என்று எழுதிப் புத்தகமே போட்டிருக்கிறேன்! அன்றைக்கு இதையெல்லாம் கேட்டுக்கொண்டு, என்னைத் தலைவன் என்று அன்றைக்குச் சொன்னவன், இப்போது பதவி போனதும் குதிக்கிறீர்களே!

நான் முதலில் இந்த ஆட்சி 5 வருடம் இருந்தால்போதும் என்று நினைத்தேன். நீ நடந்து கொள்வதைப் பார்த்தால், இந்த ஆட்சியே இன்னும் பத்து ஆண்டுகள் தொடர்ந்து இருக்கவேண்டும் என்றல்லவா நினைக்கவேண்டியிருக்கிறது. நீங்கள் இந்த ஆட்சியைப் பாதுகாக்கவேண்டும். யாருக்காக? நம் (தமிழர்கள்) நன்மையைக் கருதி.

காமராசர் வந்தபின், கல்வி—தொழில் அபிவிருத்தியும், பொருளாதார உயர்வும் ஏற்பட்டதால், நான் காமராசரை, காமராசர் ஆட்சியை, ஆதரித்தேனே தவிரக் காங்கிரசை அல்ல!'' என்று விளக்கினார் பெரியார்.

''காங்கிரஸ்காரர்களே! உங்கள் போக்கை மாற்றிக் கொள்ளுங்கள்! தி.மு.க.வை எதிர்க்காதீர்கள்! ஆதரியுங்கள்!'' என்று வேண்டுகோள் விடுத்தார் பெரியார். ''தமிழ்நாடு தமிழருக்கே'' என்று, 23–9–67 அன்றையத் தலையங்கத்தில்

சிவசேனைக் கொடுமைகளை விவரித்துவிட்டு, "இப்போது நாம் கொண்டாட இருக்கும் கண்டனநாள் நாசவேலையல்ல. யாருடைய சொத்துக்கும் சிவசேனைக்காரர்களைப் போல் நாம் சேதம் விளைக்கமாட்டோம். பம்பாயிலுள்ள நமது தமிழனை மேலும் உதைபடாமல் இங்கே அழைத்துக் கொள்ள; இங்கிருந்து நமது செல்வம் ஒரு துளியும் வெளியே போகாமல் தடுக்கத்; தமிழ்நாடு சுதந்தர ஸ்தாபனம் ஒன்றை உருவாக்குவோம்" என்று பெரியார், உருக்கமிக, ஒன்றரைப் பக்கம் எழுதினார்.

சென்னையிலுள்ள நண்பர்கள் கழகம், பெரியார்திடலில் பெரியாருக்கு நடத்திய பிறந்தநாள் பாராட்டு விருந்தில், அமைச்சர் மாதவன், ஏ. என். சட்டநாதன், டாக்டர் ஆர். ஜி. கிருஷ்ணன், மேஜர் ஜெனரல் அழகப்பன் ஆகியோர் கலந்துகொண்டனர். சண்முகம் நன்றி கூறினார். இங்கு பேசும்போது, பக்தவத்சலம் தமது ஆட்சியில் செய்த ஓர் இனத்துரோகத்தைப் பெரியார் வெளியிட்டார். பஞ்சாயத்துப் படிப்பகங்களுக்கு அனுப்பப்பட்டு வந்த "விடுதலை" 2,000 பிரதிகளை நிறுத்திப், பதிலுக்கு, ராமசுப்பய்யரின் "தினமலர்" அனுப்ப ஏற்பாடு செய்தாராம், அந்த மகானுபாவர்!

24–ந்தேதி அதிகாலை திண்டிவனம் அருகில் நடந்த ஒரு கார்விபத்தில் அமைச்சர் கலைஞரும், அவரோடு சென்ற மதுரை முத்து, கவியரசு பொன்னிவளவன், கருணானந்தம் ஆகியோரும் சிக்குண்டனர். கார் பெருத்தசேதத்துக்குள்ளாகி டிரைவர் பாண்டியும், பலத்த காயத்துக்காளானார். கலைஞருக்கும் பெரிய ஆபத்து, மயிரிழையில் தப்பினார்! அன்று காலை அண்ணாவும் பிற அமைச்சர்களும் திண்டிவனம் வரை சென்று அழைத்துவந்து, மாலையில் சென்னைப் பொது மருத்துவமனையில் கலைஞரைச் சிகிச்சைக்காக அனுமதித்தனர். பெரியாரும் மணியம்மையாரும் அவரைப் பார்க்க 25-9–67 காலை 10 மணிக்கு மருத்துவமனை சென்ற போது, 50 கார்களாம்; ஆவல் நிறைந்த முகத்துடன் ஏராளமாக மக்கள் காத்திருந்தார்களாம்; பெரியாரே

குறிப்பிடுகின்றார்! அடுத்து இருவரும் 11-15 மணிக்கு அடையாறு அரண்மனை சென்று ராஜாசர் முத்தையச் செட்டியார் அவர்களையும், ராணியார் அவர்களையும் கண்டு சிறிது பொழுது அளவளாவித் திரும்பினர். அரசு சார்பில் குடும்பக்கட்டுப்பாடு நாள் என 16/9 முதல் 30/9 வரை கொண்டாடப்பட்டதைப் பெரியார் வரவேற்று எழுதினார்.

"திருவள்ளுவர் பகுத்தறிவுவாதியா என்று கேட்டால் ஆம் என்பதற்கும் என்னிடம் ஆதாரமுண்டு; இல்லை என்பதற்கும் ஆதாரமுண்டு. ஆகவே அவர் எந்தக் குறளில் பகுத்தறிவுக் கருத்துகளைக் கூறியுள்ளாரோ, அதற்காக நான் வள்ளுவரைப் போற்றுவேன்; மடமைக் கருத்துக்காகத் தூற்றுவேன். இரண்டும் செய்வேன்" என்று பெரியார் கருத்தெழுதினார். "ஜனநாயகம் என்பது தலையை எண்ணுவதே தவிரத் தலைக்குள் இருக்கும் சரக்கை எண்ணுவதல்ல என்று பகுத்தறிவு வாதிகள் கருதுவோம். காங்கிரஸ்காரர்கள் ஜனநாயக வாதிகளா என்றால், இல்லை! பக்தவத்சலமும், அளகேசனும் இப்போது ஊரூராய்ச் சென்று, காமராசருக்கு எதிர்ப்பு அணி உருவாக்குகிறார்கள். "நவசக்தி" ஏடு, நம்மையே நன்றிகெட்டதனமாகத் தாக்கத் தொடங்கியிருக்கிறதே!" என்றும் எழுதினார் பெரியார்.

1–10–67 அன்று சிவசேனை எதிர்ப்பு ஊர்வலத்தில் சென்னையில் பெரியாரும் கலந்து கொண்டார். ஒழிக கோஷங்களே கூடாது என்று கூறிவிட்டார். போலீசார் நல்ல முறையில் பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்திருந்ததாகப் பெரியாரே பாராட்டிக் கூறினார். அடாதமழையிலும் விடாது கூட்டம் நடந்தது. பெரியார், வீரமணி, பாலசுந்தரப்பாவலர் பேசினர். சுரண்டல் தடுப்புக்கிளர்ச்சியில் பங்கு பெற, மணமாகாத ஆண், பெண் தொண்டர்கள் முன்வரலாம் என்றார் பெரியார்.

சிங்கப்பூரிலும், பம்பாயிலும், தமிழ்ப்பெருமக்கள் வாழுமிடங்களிலெல்லாம் பெரியார் பிறந்தநாள் விழா சீரும் சிறப்புமாய்க் கொண்டாடப்பட்டது. முன்னாள் சுப்ரீம் கோர்ட் தலைமை நீதிபதி கஜேந்திரகட்கார்

பம்பாய்ப் பல்கலைக் கழகத் துணை வேந்தராக நியமிக்கப்பட்டார். எம். ஆர். ராதாவுக்காக மோகன் குமாரமங்கலம் வழக்காடினார். அரசுத் தரப்பில் பி. ஆர். கோகுலகிருஷ்ணன் வாதத்தை முடித்திருந்தார். தருமபுரியில் நவம்பரில் பெரியார் சிலை திறக்கப் படும் என்று செய்தி வெளியாயிற்று. சட்டமன்ற உறுப்பினர்கள் கட்சி மாறுவது அரசியல் அவகேடாகும் என்று அண்ணா சொன்னார்.

பெரியாருடைய தூண்டுதலால் (ஒத்துழைப்பால்) நலம் நாடுவோர் கழகத்தின் சார்பில் 3–10–67 அன்று அண்ணா வுக்கும், அமைச்சர்களுக்கும், முக்கியமான சட்டமன்ற உறுப்பினர்கள், மேல்மட்ட அரசு அதிகாரிகள் ஆகியோருக் கும் எழும்பூர் இம்பீரியல் ஓட்டலில், பிரியாணி விருந்து, மிகப்பெருமளவில் சிறப்புடன் அளிக்கப்பட்டது. தென் சென்னை நாடாளுமன்றத் தொகுதியில் தேர்தெடுக்கப் பட்ட அண்ணாவின் ராஜிநாமாவால், இடைத் தேர்தல் ஏற் பட்டது. புது முகமாயிருக்கவேண்டுமென்ற அண்ணாவின் ராஜதந்திர மூளையினால் தேர்ந்தெடுக்கப்பட்ட முரசொலி மாறன் தி. மு. க. வேட்பாளர்; ராஜம் ராமசாமி காங்கிரஸ் வேட்பாளர். "ஆங்கிலம் வேண்டுமானால் முன்னவரையும், இந்தி வேண்டுமானால் பின்னவரையும் ஆதரிக்க வேண்டியதே தென்சென்னை நாடாளுமன்றத் தேர்தலில் நமது கொள்கையாகும்" என்றார் பெரியார்.

"மனிதனே சிந்தித்துப்பார்! உன்னையும் ஆரியனையும் ஒப்பிட்டுப்பார்? இந்தி ஏகாதிபத்யம் ஒழிய, இந்திய ஏகாதிபத்யமோ, யூனியனோ, ஒழியவேண்டும். இது உடை யாதவரையில் ஜாதித்திமிரும், ஆணவமும், ஈனத்தனமும் ஒழியாது ஒழியாது ஒழியாது! தமிழ்த் தம்பிமார்களே! என்னை நீங்கள் ஒன்றும் செய்துவிடமுடியாது! நான் துறவி; அதிலும் இந்தத் துறவிக்குக் கடவுளே துரும்பு! காமராஜர் அமைத்த அஸ்திவாரத்தின்மீது ஆட்சி நடத்த ஆளில்லை. அதனால் வெட்கப்படாமல், அண்ணாதுரை ஆட்சியைப் பலப்படுத்துங்கள், ஆரியனுக்கு அடிபணியாத

ஆட்சி இது! காங்கிரஸ்காரர்களே! இந்தியை தேசிய மொழியாக்கி, இருக்கிற மரியாதையையும் கெடுத்துக் கொள்ளாதீர்கள். புலவர்களே! நீங்களே முன் வந்து இப்போது கடவுள் இல்லை என்று சொல்லவேண்டும். தமிழன் காட்டுமிராண்டி என்பதற்கு இன்னும் தீபாவளி கொண்டாடுகின்ற ஒரு சான்றே போதாதா?" இந்தக் கருத்துகள் அக்டோபர் திங்களில் பெரியார் சுற்றுப் பயணங்களிலும், கட்டுரைகளிலும் சிதறிய முத்துகளாகும். திருச்சி வழக்கறிஞர்கள் அளித்த தேநீர் விருந்தில் கலந்து கொண்டு, உதகை குன்னூர் ஆகிய நீலமலைப் பகுதிகள், சிதம்பரம், சீரங்கம், வாழ்குடை போன்ற ஊர்களுக் கெல்லாம் சென்று வந்தார் பெரியார்.

தென் சென்னையில் முரசொலி மாறன் வெற்றி பெற்றதும், மக்கள் தமிழராட்சிமீது நம்பிக்கை வைத்துள்ளார்கள் என்பதற்கும், தமிழரின் இந்தி எதிர்ப்பு உணர்ச்சி மங்க வில்லை என்பதற்கும் இது நல்ல சான்றாகும் என்றார் பெரியார். திருக்குறளில் காணப்படும் மூட நம்பிக்கைச் சொற்களைப் பட்டியலிட்டு, 82 இருப்பதாகப் பெரியார் எடுத்துக் காட்டியிருந்தார். காட்டுமிராண்டிகளுக்கு 37 வகையான அடையாளங்கள், சோதிடம்பார்ப்பதுபோல் பல் வகை,உண்டு என்று ஒரு நாள் விளக்கியிருந்தார். பூணூலும் நெற்றிக்குறியும் அணிகின்றவர்களே! நீங்கள் பேசுகின்ற சமதர்மத்துக்கு இவை நேர்ப் பகையாயிற்றே—என்று ஏளனம் செய்தார் ஒரு நாள்!

8-11-67 அன்று திருச்சி பெரியார் பள்ளிகளின் நிறுவனர் நாளில் கல்வி அமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் கலந்து கொண்டு, நாட்டில் விழிப்பு உணர்ச்சியை உண்டாக்கியவர் பெரியார் என்றுகூறினார். பெருமக்கள் 1,000 பேர் பிரியாணி விருந்தில் பங்கேற்கப்; பெரியாரும் மணியம்மையாரும் உபசரித்தனர். கோயில்களின் உபரிப்பணம் சமூக நலனுக்கே செலவிடப்படும் என்றார் முதலமைச்சர் அண்ணா. அவரது இந்த அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழா உரையினை 19, 20-11-67 இரு நாட்களும் வெளியிட்டு

"விடுதலை," அண்ணாவின் கூரிய பகுத்தறிவுக்கருத்துகளை யும், ஆங்கில மொழி உபயோகத்தின் மேன்மையையும் சுட்டிக்காட்டிற்று. 4-11-67 அன்று, ஏழாண்டுச் சிறைத் தண்டனை பெற்ற நடிகவேள் எம்.ஆர். ராதா, 15-ந் தேதி ஜாமீனில் வெளிவந்திருந்தார். சென்னை போயஸ்ரோடு அவரில்லம் சென்று, 16-11-67 அன்று, பெரியாரும் மணியம் மையாரும் ராதாவைச் சந்தித்து வந்தனர்.

"காங்கிரஸ்காரர்களே! நான் காங்கிரசுக்கு எதிரி அல்ல. உங்களில் காமராசரை நீக்கி விட்டால், மீதி உள்ளவர் களின் தரம் என்ன? தி. மு. க. வில் உள்ள கடைசிமனிதனை விட மேலானவர் உங்களில் யாருமில்லை! ஆதலால் உங்கள் தரத்தை உயர்த்திக் கொள்ளுங்கள். தி. மு. க. ஆட்சி யாளர்களே! உங்களைப் பகுத்தறிவாளர் என்றும், ஜாதி ஒழிப்பாளர் என்றும் பிரகடனப் படுத்திக் கொள்ளுங்கள். நீங்கள் 9 மாதக் குழந்தைகள்தானே! உங்களைப் பார்ப்பன க்ஷயக்கிருமிகள் சுற்றும்; எச்சரிக்கையாயிருங்கள்! அய்க் கோர்ட் தலைமை நீதிபதியோ பார்ப்பனர்; நமது நீதிபதிகள் நிறைய வரவேண்டும்!" என்ற ரீதியில் பெரியார் அறிவுரைகள் இருந்தன. சென்னை மாநகராட்சி, பெரி யாருக்கு 22-11-67 அன்று மை லேடீஸ் பூங்காவில் வைத்துச் சிறப்பான வரவேற்பு வழங்கிப் பெருமை கொண்டது. அப்போது மேயர் இரா. சம்பந்தம்.

28-11-67 அன்று சட்டமாக்கப்பட்ட இந்து திருமண (தமிழ்நாடு திருத்த) மசோதா திராவிடருக்கு ஆயிரக்கணக் கான ஆண்டுகளாகக் கிட்டாதிருந்த பெருவாய்ப்பை அளித்தது. அதாவது இதுவரை நடைபெற்றிருந்த சுயமரி யாதைத் திருமணங்கள் அனைத்துமே செல்லுபடியாவதற்கு (With retrospective effect) இச்சட்டம் வழிவகுத்தது. பார்ப் பனரின் மதகுருத்தன்மை ஒழியவும், மூடச் சடங்குகள் அகல வும் வழிவகுத்து, உரிமையளித்த இச்சட்டத்தை நிறை வேற்றியதன் மூலமாகப், பெரியாரின் நீண்ட நாளையக் கனவை நனவாக்கினார் முதல்வர் அண்ணா. நாம் இருக் கின்ற காலத்துக்குள், நமக்குப்பின் வேறு யார் வந்து

ஆண்டாலும் மாற்ற முடியாதபடி, சில நிலையான காரியங்களை, அவை மூன்று நான்காயிருந்தாலும்கூடப் போதும்; செய்து முடிக்க வேண்டும், என்று சொல்லிய வண்ணமே அண்ணா, தமிழ்நாடு பெயர் மாற்றம், சு. ம. திருமணச்சட்டம், பி. யூ. சி. வரை இலவசக்கல்வி ஆகிய திட்டங்களைக் கொண்டு வந்தார்.

கல்விக்கு நிறையச் செலவிடுவேன் என்ற அண்ணா கூற்றை, முதல் பக்க ஏழுகாலப் பெருஞ்செய்தியாக, 11–12–67 வெளியிட்டு, அடுத்த நாள் பாராட்டுத் தலையங்கமும் தீட்டியிருந்தது "விடுதலை" ஏடு. ஆனால், உலகத் தமிழ் மாநாடு சிறப்புடன் நடத்தப் போவதாக அண்ணா அறிவித்தது பெரியாருக்குச் சினத்தையே வரவழைத்தது! "உலகத் தமிழ் மாநாடாம் — வெங்காய மாநாடாம். இது எதற்கு? கும்பகோணம் மாமாங்கத்துக்கும் இதற்கும் என்ன வித்தியாசம் இருக்கப் போகிறது? காங்கிரசை விட இந்த மந்திரி சபை தேவலாம் என்கிறார்கள்; இந்த நேரத்தில் ஏன் இந்தக் கூத்து? கனம் அண்ணாதுரை 1972–ல் பதவிக்கு வரமாட்டேன் என்று சொல்லி விடட்டும்! உலகத் தமிழ் மாநாடு கூடிக் கலைந்த பின் சூத்திரன் சூத்திரனாகத்தானே இருக்கப் போகிறான்! இழிவு ஒழியப் போகிறதா? கண்ணகி சிலையும், கம்பன் சிலையும் எதற்கு? இவர்கள் நமது இனப் பெருமையை ஒழித்தவர்களல்லவா? தமிழர்களே! நம் எதிர் காலம் சுத்தத் தமிழில் இல்லை, ஆங்கிலம் கலந்தே பேசுங்கள்! தாயாரை மம்மி என்றே சொல்லுங்கள்!" என்றார் பெரியார் ஆவேசமாக. "அரசியல் சட்டப் பூச்சாண்டி என்னிடம் காட்ட முடியாது" என்றும் காட்டமாக 15–12–67 அன்று எழுதினார்.

6–12–67 விருதுநகரில், ஆசைத்தம்பி மகள் திருமணத்தில், சுயமரியாதைத் திருமணச் சட்டம் பெரியாருக்கே காணிக்கை என்றார் அண்ணா. டிசம்பரில் 7, 8, 9 மூன்று நாள் கூட்டங்கள் மழையால் ரத்தானது பெரியாருக்கு வருத்தந் தரும் செய்தி. 6–12–67 அன்று "கைத்தறித்

தொழில் ஒரு நியூசென்ஸ்" என்று பெரிய தலையங்கம் விவரமாக எழுதினார். "கைத்தறியாளரின் வாழ்க்கை நிலை, அவர்கள் குடும்பத்திலுள்ள குழந்தை குட்டி முதல் அனைவரும் ஒவ்வொரு வகையில் பாடுபட்டும், தரித்திரம் தான்? அவர்களில் பலரும் உழைப்புக்குத் தகுந்த ஊதியம் கிடைக்காததால் பிச்சை எடுக்கக் கிளம்பிவிட்டனர். அவர்கள் நிலை உயர நிரந்தரமான பரிகாரம் கண்டு பிடிக்க வேணும். ரிபேட் தருவது அரசாங்கப் பணத்தை வீணடிப்பதே ஆகும். அதனால் சில ரகங்களைக் கைத்தறிக் கென்றே கட்டாயமாய் ஒதுக்கித் தீரவேண்டும். அதற்கான சட்டங்களைச் செய்ய வேண்டும்" என்றார். 19-ந் தேதி நாகரசம்பட்டியில் பெரியார் ராமசாமி கல்வி நிலையம்—வீரமணி தலைமையில், அறிஞர் சி. என். அண்ணாதுரை திறந்து வைப்பார். பெரியார் அறிவுரை கூறுவார். க. ராஜாராம் எம். பி. கலந்து கொள்வார் என "விடுதலை"யில் செய்தி வந்தது.

இந்த விழாவில் பெரியார், அண்ணாவுக்குப் பொன்னாடை போர்த்தினார். "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயம் செய்து விடல்" என்ற குறளைச் சொல்லி, "நான் இவர்கள் தோற்க வேண்டும் என்று மனப் பூர்வமாகப் பாடுபட்டேன். இருந்தும் எல்லாவற்றையும் மறந்து, தீமை செய்த என்னைத் தண்டிப்பது போல், இதற்காகத் திருச்சிக்குப் புறப்பட்டு வந்து என்னைப் பார்த்தார்கள். இவர்களது பெருந்தன்மையால் எனக்குத்தான் வெட்கமாகப் போய்விட்டது. தலை நிமிர்ந்து பேச முடியவில்லை. சங்கடப்பட்டேன்" என்றார். அண்ணா பேசும் போது, "பெரியாரின் கருத்துகளுக்கெல்லாம் சட்ட வடிவம் தருவோம். அதற்காகத்தான் பதவியில் இருப்போம். பெரியார் அவர்கள் பதவியை விட்டு எப்போது வரச் சொன்னாலும், அவரோடு சேர்ந்து எந்தப் போராட்டத்திலும் ஈடுபடுவோம். பதவியை விட்டு வரவா? இருக்கவா?" என்று கேட்டு, உணர்ச்சி மயமாக்கினார்! இடையிலே ஒரு நகைச்சுவை:— "என். டி. சுந்தரவடிவேலுவைத் தமிழக

அரசின் கல்வித்துறை ஆலோசகராகப் போட்டு, இப்போது தான் ஃபைலில் கையெழுத்திட்டு வருகிறேன்'' என்று அண்ணா பெரியார் காதில் கூறினார். பெரியார் உடனே பரபரப்புடன் எழுந்து, மைக் முன்பு வந்து, ''ஒரு நல்ல சேதி...'' என்று தொடங்கு முன்பு அண்ணா அவரை இழுத்து அமர்த்தி, ''இப்போது சொல்லி விடாதீர்கள். காரியம் கெட்டுப் போகும். இது ரகசியம்'' என்றார்.

டெல்லி நாடாளுமன்றத்தில் ஆட்சி மொழி மசோதா நிறைவேற்றப்பட்டது வடநாட்டாருக்கு இருக்கிற மெஜாரிட்டி பலத்தால்! ''மொழி பற்றிய பார்லிமெண்ட் தீர்ப்பு'' என்ற தலையங்கத்தில் 17–ந் தேதி பெரியார், ''205 பேர் ஆதரித்தும் 41 பேர் எதிர்த்தும் ஆட்சி மொழி மசோதா நிறைவேறியிருக்கிறது. இது விஷயத்தில் தென்னக எம். பி.க்களின் தனித்த கூட்டத்தில் மெஜாரிட்டி பார்த்து, முடிவெடுக்கும் முறை கையாளப்படவேண்டும். இந்தி பேசும் பகுதியினர் மெஜாரிட்டியாக இருந்து கொண்டு இருக்கும் வரையில், நாம் நினைப்பது எதுவும் நடக்காது! அதனால் இந்திய யூனியனில் இருப்பது நமக்குக் கேடு தரும் விஷயமே''—என்று குறிப்பிட்டார். காமராஜர்கூட ''மொழி மசோதாவால் விபரீதமே விளையும். நாடு பிரிய வழி வகுக்கும்'' என்று எச்சரித்ததை ''விடுதலை'' முதல் பக்க பேனராக வெளியிட்டது 18-ந் தேதி. தலையங்கமும் ''ஆட்சி மொழி மசோதாவா? இந்தித் திணிப்பு மசோதாவா?'' என்று எழுதிற்று. முதல் பக்கம் ''தமிழ் நாடு தனிச் சுதந்திர நாடாக மாறினால் ஒழியத் தமிழர் தன்மானத்தோடு வாழ முடியாது. ஈ. வெ. ராமசாமி'' என்றும், 3–ம் பக்கம் ''தோழர்களே! காமராஜர், ராஜாஜி, அண்ணாதுரை ஆசி நமக்கு இருக்கிறது. நமது நாடு முழுச் சுதந்தரம் அடைய சுதந்தரப் படையில் சேருங்கள்— ஈ. வெ. ரா.'' என்றும் கட்டம் கட்டிய கொட்டை எழுத்து வாக்கியங்கள் பிரசுரமாயின.

காமராஜர் தலைவர் பதவியை நிஜலிங்கப்பாவுக்குத் தர இருப்பதாகச் செய்திகள் வந்தன. மாணவர் இந்தி

எதிர்ப்புக் கிளர்ச்சிகளை நாடெங்கும் துவக்கினர். 21-ந் தேதி நாடாளு மன்றத்தில், சட்ட விரோத நடவடிக்கைகள் தடுப்பு (பிரிவினைத் தடுப்பு) மசோதா நிறைவேற்றப்பட்டது. திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினர்களும், கம்யூனிஸ்ட் உறுப்பினர்களும் மசோதாவை எதிர்த்து வெளி நடப்புச் செய்தனர். தமிழக காங்கிரஸ் எம். பி.க்கள் துரோகம் செய்து விட்டதாக முரசொலி மாறன் எம். பி. குற்றம் சாட்டியிருந்தார். "விடுதலை" ஆசிரியர் வீரமணி, தமது மனைவி, பிள்ளைகளுடன், விமான மூலம் மலேசியா, சிங்கப்பூர் பயணமானார். 25–12–67 அன்று மாலை 3-30 மணிக்கு அவர்களை வழியனுப்பி வைக்க, மணியம்மையார் விமான நிலையம் வந்திருந்தார். பெரியார் சுற்றுப் பயணத்திலிருந்தார். 21-ந் தேதி "விடுதலை"யில் பிரிவினை எதிர்ப்புச் சட்டம் என்ற தலையங்கத்தில், "தி. மு. க. மந்திரிகள் தவிர, மற்றத் தோழர்களெல்லாரும் முன் வாருங்கள். போராட்டம் துவக்குவோம்" என்று பெரியார் எழுதினார்.

சென்னை அண்ணாமலை மன்றத்தில் தமிழ் இசைச் சங்க மாநாட்டில், இராஜாஜியையும் வைத்துக் கொண்டு அண்ணா, "பெரியார் கருத்தை ஒப்புக் கொள்ளாதிருக்க முடியுமா? பிரிவினை வேண்டாம் என்று சொல்ல எனக்கும் மனம் இடந்தரவில்லையே!" என்று சொன்னார். உடனே பெரியார் இதனை ஏந்திக் கொண்டு, 22-12–67 தலையங்கத்தில் "பிரிவினை அவசியமா இல்லையா?" என்று கேட்டு; "நான் வேண்டுமானால் என்னுடைய ஜாதிப் போராட்டத்தை ஒத்தி வைக்கிறேன்; இந்தத் தென்னாடு விடுதலைப் போராட்டத்தை முன்னிட்டு! அண்ணாவின் அண்ணாமலை மன்றப் பேச்சு எனக்கு மிகுந்த தைரியத்தைக் கொடுத்தது. போராட்டம் துவக்க வேண்டியதுதான்! இந்திய அரசாங்கம் இருக்குமா, விலகுமா?" என்று துணிவுடன் எழுதினார். இராஜாஜியின் 90–ஆவது பிறந்த நாள் விழாவில், 26–12–1967 அன்று பேசிய தமிழகத்தின் முதலமைச்சர் அண்ணா, "இந்தி ஆதிக்கம் ஒழிய, என்னுடைய

இரத்தம் சிந்தவும் நான் தயாராக உள்ளேன்''' என்று வீர முழக்கமிட்டார்.

வட ஆர்க்காடு மாவட்டம் ஆம்பூரில், பெரியார் தலைமையில், அமைச்சர் மாதவன், சலவையாளர் துறையைத் திறந்து வைத்தார். பின்னர் கூட்டுறவு வங்கியின் கட்டடமாகிய நடேசன் நிலையத்தையும் பெரியார் தலைமையில் அமைச்சர் திறந்தார். ஆம்பூர் நகர மன்றத் தலைவர் சம்பங்கி, இருவருக்கும் வரவேற்பு மடல் வழங்கினார். மறுநாள் டிசம்பர் 25 அன்று பெரியார் ஈரோடு நகரமன்றத்தில் நடந்த விழாவிலும், விருந்திலும் பங்கேற்றார். அடுத்த நாள் வேலாயுதம்பாளையத்தில் பேசும்போது ''காமராஜருக்கு முன் புத்தி இருந்தது. இப்போது என்ன கோளாறு ஏற்பட்டதென்று தெரியவில்லை. தி.மு.க. ஆட்சி தவறு செய்தால், மக்களிடம் அதை எடுத்துச் சொல்வோம்; 5 வருஷம் ஆனதும் பார்த்துக் கொள்வோம் என்று சொல்லி வந்தவர், இப்போது மாறிப் பேச ஆரம்பித்துவிட்டாரே'' என்றார் பெரியார். 27ந்தேதி லாலாப் பேட்டையில் ''பதவிக்கு வருபவர்கள் யாராயிருந்தாலும் அவர்களையெல்லாம் ஆதரிப்பது எங்கள் வேலையல்ல! நம் தமிழர் சமுதாயத்திற்குக் கேடான காரியம் செய்தால் அவர்களைக் கண்டிக்கத் தவறமாட்டோம்'' என்று சொன்னார் பெரியார். 31ந்தேதி திருச்சியில் காலை 11 மணிக்கு அரசு மருத்துவமனையில் ''பெரியார் ஈ. வெ.ரா. – மணியம்மை குழந்தைகள் பகுதி''யைக் கலைஞர் தலைமையில் அண்ணா திறந்து வைத்தார். இதற்காகப் பெரியார் 1 லட்ச ரூபாய் வழங்கியதைப் பாராட்டிய கலைஞர், பிற மாவட்டங்களுக்கும் பெரியார் அன்பளிப்புகள் தரவேண்டுமெனக் கோரினார். மணியம்மையாருடன் இந்த விழாவுக்கு வருகையளித்திருந்த பெரியார், ''மாண்புமிகும் பொதுப் பணித்துறை அமைச்சர் அவர்கள் கேட்டுக் கொண்டபடி என் சக்தி அனுசாரம் நன்கொடை தருகிறேன். குடும்பக் கட்டுப்பாடு நமது கொள்கையாக இருந்தாலும், பெற்று

விட்ட குழந்தைகளை வீணாக்காமல் பாதுகாக்கவே இந்த நிலையம் பயன்படும்'' என்று கருத்தறிவித்தார்.

அன்று காலை 10 மணியளவில், "பெரியார் ஈவெரா அரசினர் கல்லூரி''க்கான புதிய கட்டடத்தைப் பொதுப் பணி அமைச்சர் தலைமையில், முதலமைச்சர் திறந்து வைத்தார். அன்பில் தர்மலிங்கம் வந்திருந்தார். "பெரியார் கல்லூரியில் பயின்ற நாங்கள், சிக்கனத்தைக் கையாண்டு, இம்மாதிரிக் காரியங்களை நிறையச் செய்ய விரும்பு கிறோம்'' என்றார் கலைஞர். பெரியாரின் சிக்கனத்தைக் குறிப்பிட அண்ணா ஒரு நிகழ்ச்சியை நினைவு கூர்ந்தார்:- "பெரியாரோடு ஈரோட்டிலிருந்தபோது, ஜங்ஷனில் உள்ள ஹிக்கின்பாதம்ஸ் ஸ்டாலில், ஹிட்லர் பற்றிய நல்ல புத்தகம் ஒன்று வந்திருந்தது. விலையைப் பார்த்தால், பெரியார் வாங்கித் தருவாரோ என்ற சந்தேகம் என்னுள் எழுந்ததால், 4, 5 தடவை புக் ஸ்டாலுக்குப் போய்க், கொஞ்சம் கொஞ்சமாக, அந்தப் புத்தகத்தைப் படித்து முடித்துவிட்டேன். ஒரு நாள் அந்தப் புத்தகத்தின் சிறப்பு பற்றிப் பெரியாரிடம் குறிப்பிட்டு, அதை வாங்கச் சொன் னேன். நீங்கள்தான் படித்துவிட்டீர்களே, இனி எதற்காக அது? என்று மறுத்துவிட்டார் பெரியார்.

ஈரோடு மகாஜன உயர்நிலைப் பள்ளியின் பொறுப்பாள ராக இருந்த பெரியார், 3,000 ரூபாய் மிச்சப்படுத்திவிட்டுத் தான், பொறுப்பைத் திரு சிக்கையா நாயக்கரிடம் ஒப்படைத்து, வந்தார்'' என்றார். குடும்பக் கட்டுப்பாடு பிரச்சாரத்துக்குக் கடவுளரே வழி காட்டி என நகைச்சுவை யோடு குறிப்பிட்ட அண்ணா, "சிவனாருக்குப் பிள்ளைகள் இரண்டுதான். அதில் ஒருவருக்குத் திருமணமே ஆகவில்லை, இன்னொருவருக்கு மனைவி இரண்டானாலும் பிள்ளை இல்லை'' என்றார். பத்திரிகையாளரிடம் பேசும் போது, "பள்ளிகளில் தமிழும் இங்கிலீஷும் கட்டாயப் பாடங்கள். மத்திய அரசு, இந்தியையும் போதிக்க வேண்டும் என்று எங்களை நிர்ப்பந்தம் செய்தால், பதவியிலிருந்து விலகி,

அதை எதிர்த்துப் போராடுவோம்" என்றார் முதலமைச்சர் அண்ணா.

கழகப் பிரசாரத்திற்காகவும், சிங்கை-மலேசிய நாடுகளில் பல்வேறு நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ள அழைக்கப்பட்டதாலும், 25-12-67 அன்று பிற்பகல் 3-30க்கு சென்னையிலிருந்து புறப்பட்ட வீரமணி குடும்பத்தினர், இரவு 8-30 மணிக்கு சிங்கப்பூர் விமான நிலையம் சென்றடைந்தபோது, "தமிழ் முரசு" தமிழவேள் கோ. சாரங்கபாணி அவர்களும், தோழர்களும் வரவேற்று, உபசரித்தனர். மறுநாள் காலை 11 மணிக்கு சிங்கப்பூரை விட்டு விமானத்தில் புறப்பட்டுப் பிற்பகல் 11மணிக்கு, ஈப்போ விமான நிலையம் சென்றடைந்தனர். அங்கே மர்க்கண்டைல் பிரஸ் உரிமையாளரான வீரமணியின் மைத்துனர் சந்திரனின் குடும்பத்தார், மற்றும் தமிழ்ப் பெரு மக்கள் திரண்டிருந்து வரவேற்றனர். ஒரு மாதகாலம் மலேசியாவில் தங்கிய வீரமணி, ஏராளமான நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டு பெரியாரின் கருத்துக்கனல் கமழச் செய்தார்.

2-1-68 அன்று சென்னை மவுண்ட்ரோடு ரவுண்டானாவில் சர் ஏ. ராமசாமி முதலியார், அண்ணா சிலையைத் திறந்து வைத்துத் "திறமை மிக்கவர். தளராமல் உழைத்து முன்னேறியவர் அண்ணா" என்று புகழ்ந்து பாராட்டினார். 11-1-68 அன்று அதிகாலை 3-30 மணிக்குப் பூவாளூர் அ. பொன்னம்பலனார் சென்னைப் பொது மருத்துவமனையில் காலமானார். அன்னாரின் சடலம் பூவாளூர் கொண்டு செல்லப்பட்டு, அங்கே எரியூட்டப் பெற்றது. நடிகவேள் எம். ஆர். ராதா, கோவை, சேலம் நகரங்களிலுள்ள சினிமா ஸ்டூடியோக்களில் மட்டும் நடிக்கலாம் என, ஜாமீன் தளர்த்தப்பட்டது, சென்னை உயர் நீதிமன்ற நீதிபதி என். கிருஷ்ணசாமி ரெட்டியாரால். இந்தியாவில் காங்கிரசல்லாத ஆட்சி நடைபெறும் மாநிலங்களில், தமிழ் நாட்டின் தி.மு.க. ஆட்சியே சிறந்து விளங்குவதாக, அய்தராபாத் அ. இ. கா. கமிட்டியில், தமிழ் நாடு காங்கிரஸ் தலைவர் சி. சுப்ரமணியம் புகழ்ந்தாராம். நாடாளுமன்ற சபா நாயகர் நீலம் சஞ்சீவரெட்டி, மொழி மசோதாவில் தக்க மாறுதல்கள் தேவை என்ற கருத்தைத் தெரிவித்தார். அண்ணா, நாவலர், கலைஞர்

முன்னிலையில் தஞ்சையில்கூடி, கடலூர், அண்ணாமலை நகர், திருச்சி முதலிய இடங்களில் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியைக் கைவிடுவதாக, மாணவர் கவுன்சில் முடிவெடுத்தது.

உலகத் தமிழ் மாநாட்டையொட்டிக் கடற்கரைச் சாலையில் கம்பன், கண்ணகி, அவ்வை போன்றார்க்குச் சிலையெடுத்தது பெரியாருக்கு அறவே பிடிக்கவில்லை. பொங்கலன்று குணியமுத்தூரில் "நமது இழிவை, சூத்திரத் தன்மையை நிலைநாட்ட விழாவா? மடமை இலக்கியங்களுக்கெல்லாம் விழாவா? மூடநம்பிக்கை கொண்ட கதாபாத்திரங்களுக்கு வரிசையாகச் சிலைகளா? இதெல்லாம் மக்கள் பணத்தைப் பாழாக்கும் வீண் செலவுதானே?" என்று கேட்டுக், கண்டித்தார் பெரியார். 19-ந் தேதி "விடுதலை"யும், "சென்னையில் மூன்று விழாக்கள் நடந்தன. தேவையில்லாத உலகத் தமிழ் மாநாடு ஒன்று. உடல் வலிமை காட்டும் அகில இந்திய விளையாட்டுப் போட்டி ஒன்று நேரு ஸ்டேடியத்தில் நடந்தது; இது தேவைதான். மூன்றாவதாக அண்ணா நகரில் வர்த்தகத்தொழில் பொருட்காட்சி துவங்குகிறது; இதுவும் மிக அவசியமானதுதான்" என்று தலையங்கம் தீட்டியது.

சுயமரியாதைத் திருமணச் சட்டத்துக்கு 17-1-68 அன்று குடிஅரசுத் தலைவர் ஒப்புதலளித்துவிட்ட நல்ல செய்தி கிடைத்தது. சேலம் பி. ரத்தினசாமிப் பிள்ளையின் மாமாங்கப் பண்ணையில் நடந்த மாட்டுப் பொங்கல் விழாவில் பங்கேற்ற பெரியார், "உழைப்பின் பயனைக்கண்டு மகிழ்வுறும் பொங்கல் விழாவே அறிவுக்குப் பொருத்தமான விழா" என்றார். தமக்குப் பொங்கல் வாழ்த்து அனுப்பியவர்களுக்கெல்லாம் "விடுதலை"யில் நன்றியும் தெரிவித்தார். 22-1-68 "விடுதலை" பெரியாரின் பேனா ஓவியங்களால் செறிந்திருந்தது. முதல் பக்கத்தில் இரண்டு பெட்டிச் செய்திகள்; தமிழ்நாடு பிரிந்தாலென்ன? என்னுந் தலைப்பில். தமிழ்நாடு இந்திய யூனியனிலிருந்து பிரிந்து தனிச்சுதந்திர நாடாகிவிட்டால் தமிழ் நாட்டிற்கோ, அல்லது இந்தியா

விற்கோ, அல்லது இந்த உலகத்திற்கோ என்ன கேடு ஏற்பட்டுவிடும். அப்படிப் பிரியாது இருந்து வருவதால் யாருக்கு என்ன நன்மை உண்டாகும்?'' என ஒன்று. மற்றொன்று நாட்டுப்பற்று என்ற தலைப்புடன்—ஒருவன் அவனது சரித்திர அனுபவ பூர்வமான 'தாய்' நாட்டைச் சுதந்திர நாடாக ஆக்கப்பட வேண்டும் என்று வாயால் சொல்வதற்குக்கூட (அவன்) பயப்படுவானே ஆனால் அவன் எந்த அளவுக்கு நாட்டுப்பற்றுடையவன் ஆவான்?'' என்பதாக. "தமிழர் நிலைபற்றி எனது கருத்து'' என்ற தலையங்கக் கட்டுரையில் இந்தியக்குடிஅரசின் துணைத்தலைவர் வி.வி. கிரி சிக்கித் தவித்தார். "அவர் சமஸ்கிருதம் நாட்டு மொழியாக வேண்டும் என்று கூறிவிட்டாராம். துணிச்சலான பேச்சல்லவா? கட்சிச் சார்பற்ற முறையில் தமிழர்கள் மாநாடு ஒன்று கூட்டி, இந்தி ஆட்சி மொழியாக இருக்கக் கூடாது; தமிழ் நாட்டை முழுச்சுதந்தரமுள்ள நாடாக ஆக்கிக் கொள்ள வேண்டும் என்று தீர்மானிக்க வேண்டியது மானம் அறிவு சுதந்தரம் உணர்ச்சி உள்ள மக்களின் கடமையாகும்.'' அடுத்த நாளும் "மான உணர்ச்சி உள்ளவர்கள் பிரிவினைக் கொடி உயர்த்த வேண்டும்'' என்று எழுதியதோடு, சென்னை 80–வது வட்ட அண்ணா படிப்பகத் திறப்பு விழாவிலும் பெரியார் அவ்வாறே பேசினார்.

மலேசிய நாட்டின் எல்லா ஊர்களிலும், பெரியாரின் கொள்கை மணம்பரப்பும் ஊதுவத்தியாகச் சென்ற வீரமணி சிறப்புடன் வரவேற்கப்பட்டார். தமிழகச் சட்டமன்றத்தின் அவசரக் கூட்டம் ஒன்று 23-1-68ல் அழைக்கப்பட்டு, மொழி மசோதாவைத் தமிழகம் ஏற்காது; தேசிய மாணவர் படையின் ஆணைச் சொற்கள் இந்தியில்தான் இருக்கவேண்டுமெனக் கட்டாயப் படுத்தினால் தமிழகத்தில் என்.சி.சி. படையே கலைக்கப்படும்—என்ற தீர்மானங்களை நிறைவேற்றியது. இதை விளக்கி நேப்பியர் பூங்காவில் அடுத்த இரண்டாம் தேதி பேசிய அண்ணா "இதனால் எங்கள் ஆட்சி கவிழ்க்கப்பட்டு, நாங்கள் சிறை செல்ல நேர்ந்தாலும் சரி; சிறைவாசம் எங்களுக்குப் புதியதல்ல! அல்லது உயிரே

போவதானாலும் சரி; இந்த உயிர் ஒரு முறைதானே போகும். நல்ல காரியத்துக்காகப் போகட்டுமே'' என்று வீர முழக்கமிட்டார்! 26-1-68 ''விடுதலை''யில், அண்ணாவுக்கு... என்ற தலைப்பின் கீழ் பெரியார் தலையங்கம் தீட்டினார்:— ''23-ந் தேதி சட்டசபை தீர்மானங்களைப் பாராட்டுகிறேன். ஆனால் காலேஜில் பயிற்று மொழியாகத் தமிழ் எதற்கு? கல்லூரியில் மாணவர்கள் கற்பது மொழியறிவை வளர்த்துக் கொள்வதற்கல்ல; அறிவுப் பெருக்கத்துக்காகவே! இங்லீஷ் மொழியைக் கற்றுதான் நிபுணர்கள் பலதுறைகளில் உண்டாயினர். முதலில் அறிவியல், தொழில், விஞ்ஞானம் இவற்றுக்குத் தேவையான சொற்களைத் தமிழில் உண்டாக்குங்கள். புத்திமான் பலவானே தவிர, தமிழ் வித்துவான் பலவானாக மாட்டான். எதையோ மனதில் வைத்துக் கொண்டும், யாரையோ திருப்தி செய்யவும், ஓட்டு வாங்கிடவும் இவ்வளவு கேடான காரியத்தை நம்முடைய சமுதாயத்திற்குச் செய்யக் கூடாதென்றுதான் பணிந்து வேண்டிக் கொள்கிறேன்'' என்று!

மொழிப்பிரச்சினை குறித்து மத்தியஉள்துறை அமைச்சர் சவான், தமிழக முதல்வர் அண்ணாவுடன் பேசக்கூடும் எனச் செய்தி வெளியாயிற்று. ''சுதந்திரப் போராட்டத்துக்காக முதன் முதலில் இந்தியாவிலேயே குடும்பத்தோடு சிறைக்குப் போனவன் நான்தானே. அதனால், தமிழ் நாடு பிரிவினைக்கான காரியங்களையும் இப்போது நானே பார்த்துக் கொள்கிறேன்! துணிவில்லாதவர்கள் சும்மா ஒதுங்கியிருந்தால் போதும்;'' என்று—அடுத்து, ''பிரிவினை பயம்'' என்ற தலையங்கமும் பெரியார் எழுதியிருந்தார். ''ஆங்கிலம் நமக்கு அந்நிய மொழியாகாது. மிகமிகப் பழகிப் போன மொழி. நம்மால், நாம் விரும்பினாலும், புறக்கணித்து ஒதுக்க முடியாத மொழி'' என்று அதற்கடுத்த நாள் எழுதினார். 30-ந் தேதி, ''இன்று காந்தியார் கொல்லப் பட்ட நாள். அவர் இருந்திருந்தால், இன்று இந்திய யூனியனும் இருக்காது; அரசியல் சட்டத்தை இப்படி இயற்றிடவும் அனுமதித்திருக்க மாட்டார்'' என்ற ஒரு பெட்டிச்

செய்தியும் பெரியார் தந்தார். "நமது நீதி இலாகா யோக்கியதை" என்று 31-ந் தேதி எழுதிய தலையங்கத்தில் "சென்னை உயர் நீதி மன்றத்தில் நீண்ட நாட்களாக இரண்டு காலியிடங்கள் பூர்த்தி செய்யப் படாததால் வழக்குகள் தேங்கிக் கிடக்கின்றன. சட்டந்தெரியாத ரங்க ராஜன் என்ற பார்ப்பன ஜில்லா ஜட்ஜுக்குப் பதவி உயர்வு தந்தே ஆகவேண்டுமெனப், பார்ப்பனத் தலைமை நீதிபதி தலை கிழாய் நிற்கிறார். கீழ்க் கோர்ட்டில் விதிக்கப்பட்ட அபராதத் தொகை மேல் கோர்ட்டில் இருக்கும் தன்னால் குறைக்கப்படமுடியாது என்ற சாதாரண சட்ட நுணுக்கங் கூடத் தெரியாத அந்தப் பார்ப்பனருக்காக இவ்வளவு முயற்சி!" என்று துணிவுடன் எழுதிக்காட்டினார் பெரியார். 31-1-68ல் ஆந்திர மாநிலத் தெனாலியில், "சமூக நீதி கிடைக்காமல் நீண்ட நாட்களாகக் கொடுமைக்கு ஆளாகிக் கிடந்த மக்களுக்காகப் போராடி வருபவர் பெரியார்" என்று தமிழக முதல்வர் அண்ணா புகழ்ந்து போற்றினார்.

"மதுவிலக்கு என்கிற மடமைக் கொள்கைகாக்கத் தமிழக அரசு ஆண்டுக்கு 20 கோடி ரூபாய் வருமானத்தை இழப்பதா?" எனப் பெரியார் உத்திரமேரூர் பொதுக் கூட்டத்தில் பேசினார். "கணவன் மனைவியிடம் நீ என் மீது பிரியமாய் இரு என்று சொல்லிக் கொண்டே அவளை முள் கம்பியால் அடிப்பது போன்றே, மத்திய அரசு நம்மை இந்திய யூனியனில்தான் இருக்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டே, இந்தித் திணிப்பு போன்ற பாதக மான காரியங்களைச் செய்வதாகும்" — என்பது போன்ற கருத்துகளை வலியுறுத்தும் தலையங்கப் பகுதிக் கட்டுரை களைப் பெரியார் எழுதிவந்தார்.

31–1–68 அன்று சென்னை அசோகா ஓட்டலில் டி. சி. கோங்கா என்ற வடவர்—ஒரு மோட்டார் கம்பெனி மேலாளர்—நடுவயதை அடைந்தவர்—குடந்தை திராவிடர் கழகப் பெரியவரான (15–11–1979ல் தமது 86 வயதில் மறைந்த) டி. மாரிமுத்துவின் மகள் — மருத்துவத் துறையில் நற்பணியாற்றும்—வயது வந்த பெண்—ஜெய

லட்சுமியை மணந்து கொண்டதற்கான பாராட்டு விழா வில், பெரியாருடன் அண்ணாவும் கலந்து கொண்டு சிறப் பித்தார். சிங்கப்பூரில் 1–2–68 நடந்த வரவேற்பில் சிறப் பிடம் பெற்ற வீரமணி எஸ். எஸ். ரஜுலா கப்பலில் புறப் பட்டு, 4–ந் தேதி காலை 8 மணிக்கு நாகைத் துறைமுகம் வந்தடைந்தார். நாகைப் பகுதிக் கழகத் தோழர்கள், படகிலேறிக் கப்பலுக்குச் சென்று, வீரமணியைக் கண்டு, மரியாதை தெரிவித்து வந்தனர். மறுநாள் சென்னை வந்த டைந்தபோது, காலை 9–30 மணிக்கு, பெருமிதமான வரவேற்பு காத்திருந்தது. 5-ந் தேதி பெரியார் தர்மபுரியில் திருமண விழாவில் பங்கேற்றுப், "பெண்களே! படிப்புக்கு முதலிடம் தாருங்கள்! பெண்களை அடிமைப் படுத்தி வைக்கும் முறையை மாற்றிக் கணவனும் மனைவியும் சிநேகித ராக நடக்க வேண்டும். கோயிலுக்கும், சினிமாவுக்கும் போகாமல், பொருட்காட்சி போன்ற அறிவு வளர்க்கும் இடங்களுக்கே செல்லுங்கள்" என்று அறிவுரை புகன்றார்.

2–2–68 அன்று தமிழக அரசு தலைமைச் செயலக ஊழியர் சங்கத்தில், நாவலர் தலைமையில் பெரியார், அண்ணாவின் உருவப் படத்தினைத் திறந்து வைத்தார். வயிற்று வலி காரணமாக அண்ணா, சென்னைப் பொது மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டு, 13–2–68 முதல் 26–2–68 வரை சிகிச்சை பெற்றார். சட்ட மன்றம் நடந்து வந்த காலமாகையால், இடையிடையே மருத்துவர்களின் அனுமதியோடு அங்கே சென்று வந்தார். தஞ்சை திலகர் திடலில், பிப்ரவரி 8-ந் தேதி பேசிய பெரியார், "தமிழ்நாடு பிரிந்தே ஆகவேண்டும். எனக்குத் தெரியும்; சுயமரியாதை இயக்கத் தோழர்கள் 100க்கு 100 பேரும் பிரிவினையை ஆதரிப்பவர்கள்தான்! தி.மு.க.வில் 99 பேரும், காங்கிரசில் 75 சதவீதம் பேரும் நிச்சயம் பிரிவினைக் கொள்கையை ஆதரிப்பவர்களே! எல்லாருமே தமிழர் என்பதை உண ருங்கள்! குடும்பம், பதவி, படிப்பு, பந்தம், பாசம் இல்லாத தமிழர்கள் என்னோடு போராட்டத்தில் சேர வாருங்கள்! தி. மு. க. காரர் பதவியிலேயே இருங்கள். பிறகு நீங்களும்

தேவைப்பட்டால், அப்போது உங்களையே கூப்பிடுகிறேன்'' என்று பெரியார் முழக்கமிட்டார்.

21-ந் தேதி சட்ட மன்றத்தில் அண்ணா ''நாங்கள் இந்தியை ஒழிக்கவேண்டிய இடத்தில் ஒழித்தோம்! மத்திய அரசு மொழித் தீர்மானத்தை வாபஸ் பெற வேண்டும்'' என்று கோரினார். அன்று மேலவையில் பேசும்போது, மொழிப் பிரச்சினை குறித்துத் தாம் விரைவில் காமராசருடன் பேசப் போவதாகக் குறிப்பிட்டவாறு, 23-ந் தேதியன்றே, இரவு 9 மணி முதல் 11 மணிவரை, ஏ.வி.பி. ஆசைத் தம்பி இல்லத்தில் காமராசருடன் பேச்சு வார்த்தை நடத்தினார் அண்ணா. ''மோசடியான இந்திய யூனியனும், சுப்ரீம் கோர்ட்டும், பார்ப்பனர்களும் தமிழன் முன்னேற்றத்துக்குத் தடையாக இருக்கின்றனர். பார்ப்பான் பண்ணையில், அதாவது டி. டி. கிருஷ்ணமாச்சாரி, ஆர். வெங்கட்ராமன் மந்திரிகளாயிருந்ததில், பார்ப்பனத் தொழிலதிபர்கள் கொழுத்தனர்! தமிழ் நாடு தனிப்பண்ணையாவது மிகமிக அவசியம். உரிமையின் பாற்பட்ட பிரிவினை, சட்ட விரோதம் என்கிறார்கள். சட்ட விரோதமாகவே நாச வேலையில்லாமல் அமைதியாகத் தனி நாடு பெறுவோமே', என்றும்; ''நம் நாட்டில் பொருளாதார வளர்ச்சியும்' வீக்கமும் அளவுக்கு மீறிப் போனதால், நம் மக்கள் மேலும் காட்டுமிராண்டி நிலைமைக்குப் போகிறார்கள்! ஒவ்வொருவனும் 2, 3 லட்சத்துக்கு வீடு கட்டுகிறான். 20 ஆயிரம் 30 ஆயிரம் நகை செய்து கொள்கிறான். 3,000 ரூபாயில் சேலை எடுக்கிறான். 30, 40 லட்சம் திருப்பதி உண்டியலில் போடுகிறான்'' என்றும்; ''உலகத்தில் 75 கோடி கிறிஸ்துவர்களுக்கு ஏராளமான நாடுகள், 40 கோடி முஸ்லீம்களுக்கும், பலகோடி பவுத்தர்களுக்கும் எத்தனையோ நாடுகள், ஆனால் 40 கோடி இந்துக்கள் — அதிலும் பலசாதிகளுக்கு — ஒரே நாட்டான் ஆட்சி தேவையா?'' என்றும், பெரியார் கருத்தை எழுத்தில் வடித்தார்.

23-2-68 அன்று ''விடுதலை'' பணிமனை ஊழியர்கள், மலேசியா சென்று வந்த ஆசிரியர் வீரமணிக்குப் பெரியார்

தலைமையில் பாராட்டு விருந்து நடத்தினர். சிங்கப்பூர் ''தமிழ் முரசு'' ஏடு வீரமணியின் பேட்டியைச் சிறப்புடன் வெளியிட்டிருந்தது: பெரியாருக்குப் பின்? என்ற கேள்விக்கு; திராவிடர் கழகம் தொடர்ந்து செயல்படும், பெரியாரின் நூல்களே எங்களை வழிநடத்தும் என்றார். உங்கள் பத்திரிகை அதிக விநியோகமுள்ளதா? என்று கேட்டபோது; அதிகமாகப் படிக்கப்படும் பத்திரிகை ''விடுதலை'' என்றார் வீரமணி. சென்னை 2.வது வட்டத்தில் எஸ். ஆர். சாண்டோ தலைமையில் பெரியார் பேசும்போது, ''தீ பரவட்டும் நூலின் ஆசிரியர்தான் இன்றைய முதல்வர் அண்ணாதுரை. ஆனால் தேர்தலின்போது இராமாயண எரிப்புச் சம்பந்தமாக ஒன்றும் சொல்வதில்லை. அண்ணா துரை அவர்களுக்கு அவ்வளவு ஞானமிருந்தும், ஓட்டுக்காக வாயை மூடிவிட்டார். ஓட்டும் தடதடவென்று விழுந்தது. பதவி வந்தது. பழைய ஞானமும் வந்துவிட்டது! இப்போது பகுத்தறிவு வாதியாகவே நடந்து கொள்கிறார்; நாத்திக ராகவே காட்டிக் கொள்கிறார். பார்ப்பான் ஜெயித்து விட்டான்; நான் தோற்றுவிட்டேன் என்று அறிக்கை விட்டேனே—ஆனால் மீண்டும் பார்ப்பன ஆதிக்கத்தை வளர விடாமலிருந்தால், தமிழர்களை முன்னேற்றும் ஆட்சியாகவே தி. மு. க. ஆட்சி விளங்கும்'' என்று சிறப்புடன் குறிப்பிட்டார்.

1968-69க்கான மாநில அரசின் பட்ஜெட் 0·74 கோடி உபரியாகவும், மத்திய அரசின் பட்ஜெட் 290 கோடி துண்டு விழுவதாகவும் அமைந்தன. 5-3-78 ''மெயில்'' ஏடு, தி. மு. க. தனது ஓராண்டுச் சாதனை பற்றிப் பெருமை கொள்ளலாம் என்று புகழ்ந்தது. சேலம் உருக்காலையை அவசியமானால் தமிழக அரசே ஏற்று நடத்தும் என அண்ணா அறிவித்தார். மருத்துவக் கல்லூரி நுழைவுப் பேட்டி நடக்கும் என்றும், பிற்படுத்தப்பட்ட மாணவரின் நலன் கருத்தில் கொள்ளப்படும் என்றும், தெரிந்தது. அண்ணா நகரில் நடைபெற்ற பொருட்காட்சியை 50 நாட்களில் 30 லட்சம் மக்கள் கண்டு களித்ததாக முதல்வர் அண்ணா

பூரிப்படைந்தார். கல்வி நீரோடை வெள்ளமாய்ப் பெருகியது. துவக்கப் பள்ளிகள் 31,000; உயர்நிலைப் பள்ளிகள் 2,345; கல்லூரிகள் 116; பயிற்சிப் பள்ளிகள் 130; பயிற்சிக் கல்லூரிகள் 20. பேரறிஞர் அண்ணாவை அமெரிக்க அரசு அழைத்தது. யேல் பல்கலைக் கழகமும் அழைப்பு விடுத்ததையொட்டி, அடுத்த திங்கள் புறப்பட இருப்பதாக அண்ணா அறிவித்தார். தாழ்த்தப் பட்ட வகுப்பில் ஒருவர் கலப்புத் திருமணத்தைச் சு. ம. முறையில் செய்தாலும், தங்கப் பதக்கத்துக்குத் தகுதி பெறுவார் என அமைச்சர் சத்தியவாணிமுத்து தெளிவு படுத்தினார். "மொழிப் பிரச்சினை மத்திய அரசால் சுமுகமாகத் தீர்க்கப்படாவிட்டால், பிரிவினைக்கு வித்திட்டதாகும், என்பதை மத்திய ஆட்சியினர்க்குப் புரிய வைக்கிறேன்" என்று காமராசர் மனந்திறந்து பேசினார், வாலாஜா அருகே 5–3–68 அன்று!

"பக்குவம் அற்ற மக்களின் கையில் ஓட்டுரிமை வந்தது தான் இந்திய ஆட்சியால் ஏற்பட்ட கேடு. அதனால் சட்ட அவமதிப்பு, ஒழுங்கீனம், நாசவேலை ஆகியவை பெருகி விட்டன. மனிதப்பண்பே அடியோடு கெட்டு விட்டது. யாவுமே அலங்கோலமாகக் காட்சி தருகின்றன. இப்போது மாணவர்களே நாட்டுப் பிரிவினை கேட்கத் தொடங்கி விட்டார்கள். அது பாவம் என்று ஆச்சாரியார் சொல்கிறாராம்; அதுசரி! ஆனால் அண்ணாதுரையும் கருணாநிதியும் கூடாது என்கிறார்களாமே! சுதந்தரம் கேட்பது குற்றமல்லவே?" என்று எழுதினார் பெரியார். 5–3–68 "விடுதலை"யில் "காங்கிரஸ் கவனிக்க வேண்டும்" என்னுந் தலையங்கத்தில் "தி.மு.க. ஆட்சி காங்கிரசை விட நலமான ஆட்சி. அது விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அந்த ஆட்சியைப் பாதுகாக்க வேண்டியது நமது கடமை. தண்ணீரில் தன் மகள் விழுந்து தத்தளிக்கும் போது, தாய், தன் மானத்தைப் பற்றிக் கவலையில்லாமல், தன் சீலையை அவிழ்த்து, ஒரு முனையை வீசி, தண்ணீருக்குள் எறிந்து தவிக்கும் மகளை அந்த முனையைப் பிடித்துக் கொள்ளச் செய்து, கரைக்கு இழுத்துக் காப்பாற்றும் தாய்போல் நாம் காப்பாற்றக் கடமைப் பட்டிருக்கிறோம். நான் எப்படி

1954 வரையில் காங்கிரசை எதிர்த்து வந்தேனோ, அதே போல், 1967 வரையில் தி.மு.கழகத்தையும் எதிர்த்து வந்தவன்தான்! இப்போதுகூட 3,000 பேர் வரையில் போராட்டத்தில் சிறை செல்லத் தயாராய் இருந்து கொண்டுதான், இந்த ஆட்சியை ஆதரிக்கிறோம். இதையெல்லாம் புரிந்துகொண்டு, காங்கிரஸ் தமது எதிர்ப்புப் போக்கைக் கண்ணியமாய் மாற்றிக் கொள்ள வேண்டும்!" என எழுதினார் பெரியார்.

சென்னைப் பொது மருத்துவ மனையில் சிறுநீரகச் சிகிச்சைக்காகப் பெரியார் 15–3–68 முதல் சிலநாட்கள் தங்க நேரிட்டது. மணியம்மையார் உடனிருந்தார்கள். முதலில், 27–ந் தேதி வரையில் தங்க நேரிடலாம், அது வரை நிகழ்ச்சிகளைத் தள்ளி வைப்பதைப் பொறுத்தருள வேண்டும் என்று அறிவித்த வீரமணி, 28–ந் தேதியன்று, 15 நாள் ஆகியும் மூத்திரம் இறங்குவதில் நோய் தணியவில்லை. எனவே இன்னும் 10, 20 நாள் தங்கவேண்டியிருக்கும் என்றார். பெரியார் 7-4-68 அன்று, மருத்துவமனையிலிருந்து வீடு திரும்பி, ஒருவாரம் ஓய்வெடுக்கத் தங்கினார். ஆயினும் தலையங்கம், பெட்டிச் செய்திகள், அறிக்கை எழுதுவதில் ஓய்வில்லை!

"மாணவரின் திறமை பண்பு ஆகியவற்றை மார்க்கினால் அறியமுடியாது. பரிட்சை முறை ஏற்பட்டதே, உயர் ஜாதிக்காரரின் கொலைபாதகச் செயலால்தான். பரிட்சையில் ஒருவனுக்கு விருப்பம்போல் பாஸ் பெயில் போட்டுவிடலாம். தொழிலில் ஈடுபடும் ஒரு மாணவனுக்கு அவன் வாங்குகிற மார்க் எவ்விதம் பயன்படும்? தகுதியும் திறமையும் என்ன மேல் ஜாதியாருக்கு மட்டுமே உரிமையா? விகிதாச்சார [illegible]மையை மறுப்பது, மேல்ஜாதியாரின் ஜாதிக் குறும்பினால் [illegible] ஆகையால், பிற்படுத்தப்பட்ட மக்களை எப்படியும் [illegible]குக் கொண்டுவர வேண்டியது ஆட்சியில் உள்ளவர் [illegible]ங்காக் கடமையாகும்" என்று மார்ச் 16–ல் [illegible] 17—ல் "மதச்சார்பற்ற ஆட்சியும் நமது [illegible] என்ற தலையங்கம், "மாண்புமிகு கல்வி

அமைச்சருர் நெடுஞ்செழியன் இராமாயண—பாரதக் கதைகளைப் பள்ளிக்கூடப் பாடப் புத்தகங்களில் சேர்ப்பது குற்றமல்ல; அது மதச் சார்பற்ற ஆட்சிக்கு விரோதமுமல்ல என்கிறாராமே! இதைச் சொல்வதற்குப் பழைய பக்தவத்சலமே போதுமே—இவர் தேவையில்லையே! மூடநம்பிக்கை நூல்களைப் பள்ளிகளில் நுழையவிடாதீர்கள்! அப்படி அவை நுழையாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது நமது மந்திரிகளின் அருளாக இருக்க வேண்டும். என் மனதில் பட்டதை எழுதினேன். இவற்றில் குற்றமிருப்பின் மன்னித்தருள்க'' இவ்வாறு கோரினார். "நமது ஜனநாயகம் சுத்த காட்டுமிராண்டி ஜனநாயகமாகும்'' என்று 19-ந் தேதி பெரியாரை எழுதத் தூண்டியது பாண்டிச்சேரியில் சட்டமன்ற உறுப்பினர் கட்சி மாறிய சம்பவமாகும். "இதற்குப் பரிகாரம் பிறகு எழுதுகிறேன்; இது வடமாநிலங்களில் இருந்து பரவிய தொத்து நோய்'' என்றார்.

விளை நிலங்களை யாராவது வேண்டுமென்றே தரிசு போட்டால் தண்டிக்கப்படுவார்கள். இரண்டாம் முறையும் அப்படிச் செய்தால் நிலத்தைப் பறிமுதல் செய்யப்படும்—என்று அண்ணா சட்ட மன்றக் கேள்வி நேரத்தில் பதிலாகச் சொன்னார். தஞ்சாவூர் மாவட்டத்திற்கான உள்ளாட்சித் தொகுதியில் கோ.சி.மணி, ஆசிரியர் தொகுதியில் வி. ராஜகோபால் பி.ஓ.எல். ஆகியோரைச் சட்டமன்ற மேலவை உறுப்பினர்களாக வெற்றி பெறச் செய்யுமாறு, தஞ்லைமாவட்ட தி.க. தோழர்களுக்குப், பெரியார் அறிக்கை மூலமாக, 22–3–68 அன்று வேண்டுகோள் விடுத்தார். சட்டமன்ற மேலவை உறுப்பினராக எஸ். ராகவானந்தம் தி.மு.க. சார்பில் நியமிக்கப் பட்டார்—21–4–68 முதல் ஆறு ஆண்டுகளுக்கு! மார்ச் மாத இறுதியில் சென்னையில் மாணவர்–பஸ் தொழிலாளர் கலவரம் பயங்கரமாக உருவெடுத்தது! ஒருவர் மாண்டு போகவும் நேரிட்டது!

மருத்துவ மனையிலிருந்த பெரியார் மனம் பதறினார். "நமது நாடு சிவில் ஆட்சிக்கே லாயக்கில்லாமல் போய் விட்டது. இந்த நேரத்தில் போலீசுக்கு முழு அதிகாரம்

கொடுத்து விடவேண்டும். வெறியாட்டங்களை, வன்முறை களை ஒழிக்க வேண்டும்! டாக்டர்களே! மாணவர்களே! அண்ணாவை நம்புங்கள்! அவரைப் பெருமைப் படுத்துங்கள்! நம் எதிரிகள் சிரிக்கும்படிச் செய்து விடாதீர்கள்! என் நோய்கூட அதிகமாகி விட்டது'' என்று கதறினார்.

அண்ணாவின் அரசு ராஜிநாமாச் செய்ய வேண்டும் என் கிற அளவுக்குக் காரியம் மிஞ்சிவிட்டது. 1–4–68 ''விடுதலை'' யில் ''இராஜிநாமாவுக்கு அப்புறம் என்ன?'' என்ற தலை யங்கம் பெரியாரால் தீட்டப் பட்டது. ''இரண்டு கோஷ்டி களுக்கு இடையில் அடிதடி கலவரம் ஏற்பட்டால், அந்த வன்செயல்களுக்கும் அரசுதான் பொறுப்பா? அதற்காக இராஜிநாமா செய்யச் சொல்வதா? காங்கிரஸ் ஆட்சியில் இதைவிட மோசமாக நடக்க வில்லையா? 25-1-1965 முதல் 12-2–1965 வரை 18 நாள் பாரத யுத்தநாள் அளவு கலவ ரங்கள் தமிழ் நாட்டில் நடக்க வில்லையா? பாறைபோல் நின்று சமாளித்தார் என்று பக்தவத்சலத்தைக் காங்கிரசார் பாராட்டவில்லையா? பிறகு, இதே பக்தவத்சலம், இந்த வன் முறைகளை யார் தூண்டிவிட்டாரோ, அதே இராஜாஜியை, அவர் வீட்டுக்குப் போய்ச் சந்திக்க வில்லையா? சந்தித்து, வன்முறை தூண்டிய அவர் பத்திரிகை மீது அரசாங்கம் எடுத்த நடவடிக்கையை வாபஸ் பெறவில்லையா? நான் தானே அப்போதும் தாக்குதலுக்கு உள்ளானவன்! கத்தி எடுத்துக் காலிகளைக் குத்துங்கள் என்று துணிச்சலாகச் சொன்னது நான்தானே? என்னுடைய காரை மறித்துச் சேதப்படுத்தினார்கள். 3,000 ரூபாய் ரிப்பேர் செலவு ஆனது. அப்படியிருந்தும் அன்றையப் போலீஸ் மந்திரி (எம் பக்தவத் சலம்) என் அறிக்கையைப் பறிமுதல் செய்தார். அதிகாரி களை அனுப்பி, என்னைத்தான் மிரட்டினார். சரி, அண்ணா மந்திரிசபை இராஜிநாமாச் செய்துவிட்டால் அப்புறம் என்ன ஆகும்? சிந்தியுங்கள்!'' என்று பெரியார், உருக்கமிகக் கேட்டிருந்தார். இடையிலே குறுக்கிட்ட ராமநவமியையும் மறக்காமல் ''மானமுள்ள தமிழர்கள் ராமநவமி கொண்டா

டாதீர்கள்! இராமாயணக் கதை கடவுள் கதை அல்ல. இராமன் மெய்யன் அல்ல!'' என்று எழுதினார்.

''1968 ஏப்ரல் 14-ஆம் நாள் டில்லி ஆதிக்கக் கண்டன நாளை நம் சுதந்தர எழுச்சி நாளாகக் கொண்டாடுங்கள்! பொதுக் கூட்டங்கள் நடத்தி, வகுப்பு நீதிக்காகவும் வகுப்புரிமைக்காகவும் தமிழர் சுயமரியாதைக்காகவும் தமிழ்நாடு இந்திய யூனியனில் இருந்து பிரிந்து, சுதந்தரத் தமிழ்நாடாக வேண்டியது அவசியமாகும், என்று தீர்மானம் நிறைவேற்றுங்கள். கிராமந்தோறும் ஊர்வலங்களும் நடத்துங்கள். காங்கிரஸ், கம்யூனிஸ்ட், திராவிட முன்னேற்றக் கழகத் தோழர்களும் இதற்கு ஆதரவு தாருங்கள். நாடெங்குமிருந்து கண்டனத் தீர்மானங்கள் குவியட்டும்'' என்று பெரியார் 4, 5 தேதிகளில் எழுதியிருந்தார். 7-ந்தேதி நண்பகல் வீடு திரும்பி, அன்று மாலை நேரு ஸ்டேடியத்தில் ஜி.டி.நாயுடுவின் 75-வது பிறந்தநாள் விழாவில் பங்கேற்றார். சென்னை மேயர், அங்கேயே நாயுடுவுக்கு வரவேற்பளித்தார். பி.டி.ராஜன் தலைமையில் பெரியார், அண்ணா, காமராஜர், ஓமந்தூரார், மத்திய அமைச்சர் டாக்டர் வி.கே.ஆர்.வி. ராவ் ஆகியோர் பாராட்டுரை பகர்ந்தனர். கருமுத்து தியாகராயச் செட்டியார் பொன்னாடை போர்த்தினார். 7 லட்ச ரூபாய் நிதி வழங்கப்பட்டது. கி.ஆ.பெ. விசுவநாதம் நன்றியுரைத்தார்.

''இந்த மந்திரிசபையை மாற்ற நினைப்பது கொள்ளிக் கட்டையை எடுத்துத் தலையைச் சொறிந்து கொள்வது போலாகும். தமிழர்களின் நல்வாய்ப்பாக இப்போது அண்ணாவின் ஆட்சி வந்தது. யார் ஆண்டாலும், தமிழ்நாடு தனியாகப் பிரிந்தே ஆகவேண்டும். நாம் தனியாகப் பிரிந்தால், ராணுவச் செலவு குறைந்து, இப்போது போல பெரிய சுமையாக அது நம் தலையிலும் விழாமலாவது இருக்குமே!'' என்று 8-ந் தேதியும், ''மதுவிலக்கு ஒரு முட்டாள்தனமான சீர்திருத்தம். மதுவைத் தடைசெய்வதற்குப் பதிலாக அதில் நிறையச் சத்து இருப்பதால், நல்ல பயனுள்ள உணவாக அதை மாற்றலாம் ''என்று 9-ந் தேதியும்

"“தமிழா! நீக்ரோக்களைப் பார்! 18 கோடி அமெரிக்கரில் நீக்ரோக்கள் 2 கோடிதான். நீக்ரோக்களோடு கலந்தால், தங்கள் குழந்தைகளின் நிறம் மாறி விடுமே என்றுதான் வெள்ளையர் பயப்படுகிறார்களே தவிர, நம்மைப் போல் தீண்டாத சாதியென்று அவர்களை ஒதுக்கி வைக்கவில்லை. அவ்வளவு உரிமை தந்தும், இப்போது தங்கள் தலைவரான மார்ட்டின் லூத்தர் கிங் கொலை செய்யப்பட்டதால், நீக்ரோக்கள் சட்டத்தைத் துச்சமாக மதித்துக், களிநடனம் புரிகிறார்கள்! இப்போது அங்கே நீக்ரோ மக்களின் துப்பாக்கியே சட்டம்!” என்று 13–ந் தேதியும், “நாம் உயிர்த் தியாகத்துக்குத் துணியவேண்டும்; அப்போது தான் பிரிவினை சாத்தியமாகும். காங்கிரஸ்காரர்களைப் போலப் பதவிக்கு அலையக்கூடாது. தேர்தலில் தோற்றார்கள். மந்திரி பதவி பறிபோனது. இப்போது Side business ஆக சி. சுப்ரமணியம், வெங்கட்ராமன், அளகேசன் ஆளுக்கு ஒன்று தேடிக்கொண்டார்கள். கவர்னர் பதவி கிடைக்குமா என்று பக்தவத்சலம் அலைகிறார். இப்படிப்பட்ட அரசியல் காரர்களால்தானே மக்களின் ஒழுக்கம் பாழாகிறது?” என்று 14–ந்தேதியும்,பெரியார் “விடுதலை”யில் தலையங்கம் தீட்டியுள்ளார்.

தமிழகப் பொதுப் பணி—போக்கு வரத்துத் துறை அமைச்சர் கலைஞர் மு. கருணாநிதி அவர்களின் மூத்த மகன் முத்து—கலைஞரின் மைத்துனர் சிதம்பரம் இசைச் சித்தர் சி. எஸ். ஜெயராமன் அவர்களின் மகள் சிவகாம சுந்தரி ஆகியோருக்கும்; கலைஞரின் மகள் செல்வி, கலைஞரின் சிறிய தமக்கையார் மகனும் முரசொலி மாறனின் தம்பியுமான செல்வம் ஆகியோருக்கும்; 12–4–68 மாலை 5–30 மணிக்கு, சென்னை ஆபட்ஸ்பரி திறந்த வெளியில், அண்ணா தலைமையில் திருமணம். பெரியாரை அடுத்து அமர்ந்த இராஜாஜி, “நாங்கள் இப்படி அமர்வதே உண்மைத் திருமணம்” என்றார். “இவர்கள் அன்புடன்தான் பழகுகிறார்கள். இதனால் இன்றைய மணமக்களைத் தமிழ் நாடே வாழ்த்துவதாக அமைகின்றது, நாம்தான் இவர்கள்

இருவரையும் பற்றி விவரம் தெரியாமல் விழிக்கிறோம்'' என்றார் அண்ணா! 15–4–68 அன்று அண்ணா அமெரிக்கா புறப்பட்டுச் சென்றார். வழியில் ரோமில் போப்பைச் சந்தித்தார். பாரீசில் டாக்டர் மால்க்கம் ஆதி சேஷய்யா, வாஷிங்டனில் ஊதாண்ட் ஆகியோரையும் சந்தித்தார் அண்ணா. யேல் பல்கலைக் கழகம் முதல் முறையாக அமெரிக்கரல்லாத ஒருவருக்கு — அண்ணாவுக்குச்—சப் ஃபெல்லோஷிப் வழங்கிச் சிறப்படைந்தது. திரும்பி வரும் போது ஜப்பானில் சேலம் இரும்பாலை பற்றியும் அண்ணா பேச்சு நடத்திவிட்டு வந்தார்.

14–4–68ல் பெரியார் அறிவிப்புக்கிணங்க, சென்னையில் பெரியார் திடலில், டெல்லி ஆதிக்கக் கண்டனநாள் பொதுக் கூட்டத்தில் பெரியார் முழங்கினார். "தமிழர் மான வாழ்வுக்காக சுதந்திரத் தமிழ்நாடு பெற்றே தீருவோம். 3,500 கிலோ மீட்டர் தூரத்துக்கு அப்பாலுள்ள டெல்லிக்கு நாம் ஏன் அடிமையாயிருக்க வேண்டும்? நாங்கள் என்ன, போரில் அடிமைப்பட்ட கைதிகளா?'' என்று கேட்டார் பெரியார். தமிழகம் எங்கணும் நிறைவேற்றப்பட்ட கண்டனத் தீர்மானங்கள் (ஆங்கில வாசகமும் முன்பே "விடுதலை' யில் தரப்பட்டிருந்தது) டெல்லியில் குடிஅரசுத் தலைவர், உள்துறை அமைச்சர், சென்னை "விடுதலை" அலுவலகம், இங்கெல்லாம் குவிந்தன என்ற செய்தி. "விடுதலை" ஏட்டின் நாலாம் பக்கத்தை, அந்த மாதம் முழுதும் நிறைத்தது! பெரியார் உடல்நிலை சுற்றுப் பயணத்துக்குத் தகுதியற்றதாக இருந்ததால், தோழர்கள் அழைக்காதிருக்க வேண்டுகோள் விடப்பட்டது.

எம். ஆர். ராதா வழக்கு அப்பீலில் சென்னை உயர்நீதி மன்றத் தீர்ப்பு அவருக்குப் பாதகமாக அமைந்ததால், சுப்ரீம் கோர்ட் செல்லவிருப்பதாகச் செய்தி வெளியானது. 17-11-1951 "கரண்ட்" இதழில் ஆசிரியர் கரகா, ஒரு செய்தி தெரிவித்திருந்தார் இராஜாஜி பற்றி. மைசூர் ஜட்ஜ் மேடப்பாவைக் கொல்ல முயன்ற சதி வழக்கில், சம்பந்தப் பட்டதாக, எஸ். எஸ். ராஜு என்ற பார்ப்பன வக்கீல்

தண்டிக்கப்பட்டார். ஆனால் அதே இரவில், காரணமின்றி, விடுவிக்கப்பெற்றார். அப்போது டெல்லியில் உள்துறை மந்திரி இராஜகோபாலாச்சாரிதான் என்று 17ம் ஆண்டு கழித்து இதை எடுத்துக் கூறி, இராஜாஜியின் "நேர்மை"க்கு விளக்கம் தந்தது "விடுதலை" 17-4-68 அன்று. பெரியாரின் வள்ளல் தன்மைக்கு ஓர் எடுத்துக் காட்டு: 1966–ம் ஆண்டு, ஈரோடு சிக்கய்யாநாயக்கர் மகாஜனக் கல்லூரியில், பெரியார் 1,000 ரூபாய் நன்கொடை தந்து, நிறுவனர் நாளில், ஆண்டு தோறும் பகுத்தறிவுத் துறையில் சிறந்து விளங்கும் ஒரு மாணவனுக்குப் பரிசு தரவேண்டும் என்பதற்காக ஓர் அறக்கட்டளை நிறுவினார்; என். டி. சுந்தரவடிவேலு அவர்கள் பெயரால்! முன்பு 1951ல் சென்னையிலும் 1961-ல் சிதம்பரத்திலும் பெரியாருக்கு அன்பளிப்பாகக் கார் வழங்கினார்கள். இப்போது படுக்கை முதலிய வசதிகளுடன் நகரும் வீடு போல ஒரு வேன் விலைக்கு வந்துள்ளது. சுமார் 20 ஆயிரம் ரூபாய்க்குக் கிடைக்கலாம். தோழர்கள் அன்பளிப்புத் தாருங்கள்! அதை வாங்கிப் பெரியாருக்கு, வழங்குவோம்!—என வீரமணி ஒரு வேண்டுகோள் விடுத்தார் 4-5-68 அன்று.

காமராசருக்கு எதிராக விருந்து நடத்தி, எதிர்கோஷ்டி சேர்த்துவந்தனர் சில மாஜிமந்திரிகள்; இது எப்படியோ பெரியாரின் கவனத்துக்கு வந்துவிட்டது. இவர்கள் இரகசியமாக இராஜாஜியின் சீடர்களாயிருப்பதும் தெரிந்தது. விடுவாரா? பூனைக் குட்டி பையிலிருந்து வெளியே வந்துவிட்டது என அவர்கள் முகமூடியை எடுத்து, அடையாளம் காட்டினார் பெரியார். "விடுதலை" யின் தலையங்கம் 23-4-68, 29-4–68, 2-5–68 எல்லாம் இவர்களுக்கே சமர்ப்பணம்! "காங்கிரசின் போக்கு இப்போது சரியில்லை. காலமெல்லாம் சமுதாய சாதி வேறுபாடுகளை ஒழித்துக்கட்ட வாழ்நாள் முழுதும் போராடி வரும் பெரியாரின் அருந்துணையைக் காங்கிரஸ் பெற வேண்டும்" என்று "மெயில்" பத்திரிகையே எழுதிற்று. "பசுவதையும் டெல்லி அரசும்" என்று 10–5–68 "விடுதலை"

யில் ஒரு தலையங்கம், அப்போதைய நிலையை விளக்கிற்று. முதல் முறையாகத் தமிழக அரசின் விளம்பரம் ஒன்று 14–5–68 அன்றைய "விடுதலை"யில் ஒருநாள் மட்டும் காணப் பட்டது புதியதோர் அதிசயமாகத் தெரிந்தது! அறிஞர் அண்ணா மேல், கீழ் நாடுகளின் சுற்றுப் பயணத்திலிருந்து 12–ந் தேதி இரவு 10 மணிக்குத் திரும்பினார். மறுநாள் கடற்கரை மணற்பரப்பில், "உலகெங்கும் தமிழர் என்கிற உணர்வு பெருக்கெடுத்து ஓடக் கண்டேன். எங்கள் இரு மொழிக் கொள்கையிலிருந்து என்றும் பிறழவேமாட்டோம்" என்றார் அண்ணா! வாகை சூடிய வீரரை வரவேற்கிறோம் என "விடுதலை" எழுதியிருந்தது.

மதசம்பந்தமான பண்டிகைகளுக்கு விடுமுறை விடும் பழக்கத்தை அண்ணாவின் ஆட்சி நிறுத்தவில்லை. இது பெரியாரின் பகுத்தறிவு உள்ளத்தை உறுத்தியது. "தமிழன் (திராவிடன்) காட்டுமிராண்டிதான்!" என்று கட்டுரை உதயமாயிற்று 18–5–68 "விடுதலை" தலையங்கப் பகுதியில். "தி. மு. க. வின் கொள்கை பகுத்தறிவுக் கொள்கை. இந்தக் கொள்கையின்படியே நடப்பார்கள் என்று நம்பியே மக்கள் இவர்களுக்கு வோட்டளித்திருக்கிறார்கள். அப்படியிருக்கும்போது, தி. மு. க. ஆட்சியே, உனக்கும் பேப்பே உங்க அப்பனுக்கும் பேப்பே என்ற கதைபோல நடந்து கொள்ளலாமா? தி. மு. க. மந்திரிகள் தங்கள் பதவிகளைப் பிரதானமாகக் கருதுகிறார்களே ஒழிய, கொள்கைகளையோ, வோட்டளித்த மக்களது நம்பிக்கை களையோ இலட்சியம் செய்யாமல் துரோகந்தான் செய்து வருகிறார்கள் என்று சொல்வதற்கு நான் மிகுதியும் துன்பப்படுகிறேன்!" பெரியாரின் வேதனையும் வெந்த உள்ளமும் வெளியாகிறதல்லவா? "சூத்திரன் படித்த மேதாவியானாலும் பிராமணனுக்குச் சமமாக முடியாது என்று சங்கராச்சாரியார் கூறியதைக் கேட்டு உள்துறை அமைச்சர் சவான் ஆத்திரப்படுகிறார். சட்டத்தினால் இதற்குப் பரிகாரம் தேடமுடியாது; மக்கள் மனம் மாற வேண்டும் என்கிறார். தமிழ் நாட்டைப் பொறுத்த

வரையில் இங்கே மூடநம்பிக்கை ஒழிப்பு இலாகா என ஒன்று உண்டாக்க வேண்டும். திருக்குறளுக்குப் பதில், பாரதிதாசன் பாடல்கள் பாட புத்தகங்களில் இடம் பெற்றால் அய்ந்தாண்டு அறிவை ஓராண்டில் பெற்று விடலாம். சமுதாயத்துக்குப் பயன்படும் காரியங்களைச் செய்ய முடியாவிட்டால் பதவியிலிருக்கமாட்டோம் என்று அண்ணாவே சொல்லியிருக்கிறார். எனவே அரசினரின் கல்வி இலாகா இதைப்பற்றி நல்லவண்ணம் சிந்திக்க வேண்டும்'' என்று அடுத்த நாள் தலையங்கத்திலேயே பெரியார் உரைத்தார். மறுநாள் "காமராஜர் கவனிப்பாரா?'' என்கிற மகுடமிட்டுப் பெரியார் "தி. மு. க. ஆட்சிக்கு வந்த இந்தப் பதினய்ந்துமாதங்களில் எவ்வளவோ கேடுகள் குறைந்திருக்கின்றன. உங்கள் கையிலிருந்த ஆட்சி பார்ப்பானுக்குப் போகாமல் தமிழர் கைக்குத்தானே வந்திருக்கிறது? அப்படியிருக்க, மதுரையில் ஏன் மந்திரி களுக்குக் கருப்புக் கொடி பிடித்தார்கள்? எந்தக் காங்கிரஸ் கமிட்டி அப்படி முடிவு எடுத்தது? கடும் மழையால் இடி மின்னல் ஏற்படாமல் காமராஜர்தான் பார்த்துக் கொள்ள வேண்டும்! உங்கள் தொல்லைகளால்தானே அண்ணா, மதுவிலக்கு நீடிக்கும் என்கிறார்; நாவலர், பாடத்தில் இதிகாசம் இருக்கட்டும் என்கிறார்; கலைஞர், தமிழ் தமிழ் என்கிறார்'' என்று எழுதினார்.

தமிழக அமைச்சர் ஏ. கோவிந்தசாமி உடல் நலங்குன்றி, 3–5–68 அன்று பொது மருத்துவ மனையில் அனுமதிக்கப் பட்டிருந்தார். அவரைப் பெரியாரும், மணியம்மையாரும், 23ந்தேதி மாலை 5 மணிக்குச் சென்று பார்த்து நலம் விசாரித்தனர். அடுத்த 22–6–68 அன்றுதான் அமைச்சர் நலமுற்று வீடு திரும்ப முடிந்தது! இந்திராகாந்தி ஆஸ்தி ரேலியா சென்றிருந்தார்; அங்கு, உங்கள் நாட்டில் ஏன் மூடநம்பிக்கை அதிகமாயிருக்கிறது என்று கேட்டதற்கு, எங்கள் நாடு மிகப் பெரியதாயிருப்பதுதான் காரணம் என்று கூறியிருந்தார். பெரியாருக்குப் பிரதம மந்திரி ஒரு பிடி கொடுத்துவிட்டாரே! "சுய மரியாதை இயக்க,

திராவிடர் கழகத் தோழர்களே! இந்தப் பேச்சை நீங்கள் ஒரு கட்டளையாக ஏற்றுக் கொள்ள வேண்டும்! சிறிய நாடாயிருந்தால், மூடநம்பிக்கைகளை எளிதில் ஒழிக்கலா மென நமது பிரதமரே கூறியிருக்கிறார். அதனால் நாம் தமிழ் நாட்டைப் பிரித்துச் சிறிய நாடாகவே வைத்துக் கொள்ள, நீங்கள் பாடுபட வேண்டும்'' என்றார் பெரியார். சென்னை எழும்பூரிலுள்ள மகா போதி சங்கக் கட்டடத்தில் அநாதைச் சிறார்கள் நிலையத்தை, 26–5–68 அன்று, பெரியார் திறந்து வைத்து, அறிவும் சிந்தனையுமே புத்தரின் கொள்கைகளாகும் எனச் சுருக்கிக் கூறினார்!

அமைச்சர் கலைஞர் கருணாநிதிக்குச் சிலை அமைக்க முடிவு செய்து, சிலையும் தயாராகி, இடமும் தேர்ந்தெடுக் கப்பட்ட நிலையில், யாரோ எதிர்ப்புத் தெரிவித்ததற்காக, அவரே தனக்கு வைக்கக்கூடாதெனத் தடுத்துவிட்ட செய்தி பெரியாருக்கு எட்டி விட்டது. "கருணாநிதிக்குச் சிலை வைத்தே ஆகவேண்டும்'' என்கிற தலைப்பில் 28, 29 இரு நாட்களும், சூடான தலையங்கம் தோன்றியது. "கலைஞர் அறிவில் சிறந்தவர். நிர்வாகத்தில் சிறந்தவர். பொதுத் தொண்டுக்காக தியாகம் செய்வதில் சிறந்தவர். பார்ப்பன ஆதிக்க ஆட்சியைத் தமிழர்க்கு ஆக்கித் தந்தவர். எனவே, தயாரான கலைஞரின் சிலையை, ஏற்பாடு செய்யப்பட்ட இடத்தில், நிலை நிறுத்தியே ஆகவேண்டும். அறிஞர் அண்ணா அவர்கள், இடையூறுக்கு இடந்தராமல், தமிழர் மானத்தைக் காப்பாற்ற வேண்டும். இதில் கலைஞரும், தனது அபிப்பிராயத்தை வெளியிட, அவருக்கே உரிமை கிடையாது! யாருக்காவது சங்கடம் இருக்குமானால், இந்தச் சிலை அமைக்கும் பொறுப்பை நானே ஏற்றுக் கொண்டு, எப்படியும் நிறைவேற்றியே தீருவேன்'' என்று பெரியார் விடுத்த சவால், எப்படியும் அவருக்குப் பிற்காலம் மணியம்மையாரால் சிறப்புடன் பூர்த்தி செய்யப்பட்டது உயரியதோர் வரலாறாகும்! இதையொட்டி அடுத்த மாதம் 2-ந்தேதி குடந்தையில் "காங்கிரஸ்காரனே! நீ ஒரு கலைஞர்

சிலையை உடைத்தால், நாங்கள் உங்களுடைய 2, 3 சிலை களை உடைக்க மாட்டோமா?" என்றும் பேசியிருக்கிறார் பெரியார். 8-6-68 "பிளிட்ஸ்" இதழ் கடைசிப் பக்கத்தில் கே. ஏ. அப்பாஸ், பெரியாரை அபாரமாகப் புகழ்ந்து, கடவுளை மறுக்கும் மாமேதையென அளவிலாப் பாராட்டு நல்கியிருந்தார்.

பெரியாருக்கு "நகரும் குடில்" வழங்கும் முயற்சியில் ஈடுபட்ட வீரமணி, 14-6-68 வரை ரூ. 10,115—50 சேர்ந் துள்ளதாகவும், இன்னும் ஒரு மாதத்துக்குள் மீதத் தொகை யும் கிடைத்துவிட்டால், ஆகஸ்ட் திங்களில் கரூர் வட்ட திராவிடர் கழகத்தினர் கோரியுள்ளவாறு, அங்கே விழா நடத்தி அளித்திடலாம் எனவும் அறிவித்திருந்தார். இராஜாஜியை அடிக்கடி சி. சுப்ரமணியம் சந்திக்கிறார். இது எதற்கோ என வினா எழுப்பியது "விடுதலை". தென்காசி இடைத் தேர்தல் 3-7-68 அன்று நடைபெறுவ தாக இருந்தது. பெரியார் ஜூன், ஜூலை மாதங்களில் பெருமளவில் சுற்றுப்பயணம் மேற்கொண்ட போதிலும், தேர்தல் பிரச்சாரத்துக்காக அந்தப் பகுதிக்குச் செல்லவில்லை!

"காமராஜர் காலத்தில் எஸ். எஸ். எல். சி.யில் பரிட்சைத் தேர்வு பெற்றவர்கள் 50 சதவீதம். இப்போது அது 2 சத வீதம்தான் அதிகரித்துள்ளது. இது எப்போது 75 சதவீதம் ஆவது? ஏழைப் பிள்ளைகள் எப்போது கடைத்தேறுவது? இந்த ஆட்சியிலும் இதுதான் கதி என்றால், யாரைக் கொண்டு, எங்கே போய், எப்போது இதற்குப் பரிகாரம் காண்பது?" என்று கவலை தெரிவித்தார் பெரியார். "இவ்வளவு நாள் கழித்துக் காமராஜர், தி. மு. க. பணம் கொடுத்து ஓட்டு வாங்கியதாகக் கூறலாமா? இது இன்றைய ஆட்சியைக் கவிழ்க்க நினைப்போரின் சூழ்ச்சியான கருத் தல்லவா? எந்த விதத்திலும் காங்கிரஸ் ஆட்சியைவிட இன்றைய தி. மு. க. ஆட்சி மேலானதுதான் என்பது என்னுடைய 50 ஆண்டு அனுபவம் சொல்வதாகும்" என்று திருச்சியில் 10-6-68 அன்று பேசினார் பெரியார். 13-ந் தேதி

சென்னை வெள்ளாள தேனாம்பேட்டையில், கலைஞர் பிறந்த நாளில் பேசும்போது, "மந்திரி பதவியை விட்டு விட்டுக் கட்சி வேலைக்குப் போகிறேன் என்கிறார் கலைஞர். இவரைத் தவிர வேறு யாரும் இப்படிச் சொல்வார்களா? நல்ல பின்பற்றக் கூடிய தொண்டுள்ளம் படைத்த கொள்கை வீரர் கலைஞர்!" என்று புகழ்ந்தார். புதுச்சேரியில் ஒரு பொதுக் கூட்டத்தில் "ரிஷிகளும், மகாத்மாக்களும் நாட்டு மக்களிடையே முட்டாள் தனத்தை வளர்த்தார்கள். மடமையை வளர்க்கும் பத்திரிகைகளும், புலவர்களும் மேலும் தூண்டினார்கள். கடவுளை ஒழித்தால் மட்டுமே நாம் பேதமற்ற சமுதாயம் காண முடியும். கடவுள் என்கிறார்களே, அது என்ன ஒரு பொருளா? அது இயற்கைப் பொருளா? செயற்கைப் பொருளா? எந்த மருந்தானாலும் அதற்கு ஒரு formula இருப்பது போல, எந்தப் பொருளுக்கும் ஒரு formula இருக்க வேண்டுமே? கடவுளின் கூட்டு முறை, அல்லது செய்முறை formula என்ன? யாராவது சொல்ல முடியுமா?" என்று உலக மேதைகளின் சிந்தனைக்கும், கேள்விக்குறி ஒன்றை எழுப்பினார் பெரியார்.

'சென்னை வானொலியில் பூணூல் மயம்' என்று "விடுதலை" 27-6-68 அன்று, பட்டியலிட்டுக் காட்டியது. தென்காசி இடைத்தேர்தல் பற்றி, "இந்து" பத்திரிகையின் கருத்தைக் கண்டித்து, 'மவுண்ட்ரோடு மகாவிஷ்ணுவின் சாதிப்புத்தி' என 1-7-68 தலையங்கம் வந்திருந்தது. 4-ந்தேதி தென்காசியில் தி. மு. க 15,000 வாக்குகள் முன்னணி என்ற செய்தி—5-ந் தேதி கதிரவன் எம். எல். ஏ. ஆனார்; வாக்கு வித்தியாசம் 23,256—இதைக் கேட்டு டெல்லியே திகைக்கிறது என 'மெயில்' கூற்று. விழுப்புரம் அரசினர் கல்லூரித் திறப்பு விழாவில், கல்வியில் அனைவருக்கும் சம வாய்ப்பு வேண்டும் என்று அண்ணா கருத்துரைத்தார். மாயூரம் வட்டம் மணல் மேடு கிராமத்தில் கிட்டப்பா எம். எல். ஏ. முயற்சியால் 12, 13 தேதிகளில் சமுதாய சீர்திருத்த—விவசாய மாநாடுகள் நடைபெறவிருப்பதைப் பாராட்டி "விடுதலை" துணைத் தலையங்கம் தீட்டியது. 13-ந் தேதி முதல் அச்சு, தட்டச்சு முறை

களில் எளிதாக இருக்கும் பொருட்டு, எழுத்துச் சீர் திருத்தம் (தமிழில் அல்ல) கேரளாவில் அமுலுக்கு வருமென அரசாணை பிறப்பிக்கப்பட்டது. இந்த ஆண்டும் காமராசரின் 66-வது பிறந்த நாள் வாழ்த்து 15–7–68 அன்று "விடுதலை"யில் வெளிவந்திருந் திருந்தது—வழக்கம் போலல்லாமல், சிறிய அளவில்!

காங்கிரஸ் தலைவர்களான சி. சுப்ரமணியம், நிஜலிங் கப்பா ஆகியோர், இராமாயணம், பாரதம் ஆகிய பகுத் தறிவுக்குப் புறம்பான கதைகளை அரசியல் பிரச்சாரத் துடன் இணைத்துப் பேச, இவர்கள் பார்ப்பனரல்லாதாரா யிருந்தும், எப்படி மனம் வருகிறது—என்று பெரியார் கண்டித்தார். 13-7-68 அன்று "விடுதலை" பெரியாரின் வேகமான தலையங்கம் ஒன்றைத் தாங்கி வெளி வந்தது. "தமிழ் நாடு சுதந்தர நாடு ஆகவேண்டும்" இது தலைப்பு. இடம் 2 பக்கங்கள். "காங்கிரசுக்கு வெட்கம் மானம் வேண்டாமா? 48க்கு 139 ஆக வெற்றி பெற்றவர்களை, ரவிக்கையைக் கிழித்தான்—வெங்காயத்தை உரித்தான்—சபாநாயகர் பிரச்சாரம் செய்தார் (ஆதித்தனாருக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? 7, 8 மந்திரிகள் போகையில்!) அரிசி கொடுக்கவில்லை—கருப்புக் கொடி காட்டியவர்களை அடித் தான் என்று—அளிச்சான் புளிச்சான் ஆட்டம் ஆடி, ஒழிக்கப் பார்ப்பதா வீரம்? காங்கிரஸ் சந்ததியையே புற முதுகு காட்டும் பேடி வீரர்களாக அல்லவா ஆக்குகிறது? முதுகில் தட்டினால் பல்லு உதிர்ந்து போச்சு என்பது தானே இது? பிரிவினை முயற்சியை நசுக்கிவிடுவோம் என்று நம்மைப் பார்த்துச் சொல்கிறார்களே! புருஷனிடம் வாழ இஷ்டமில்லாமல் வெளியேறிய பெண்டாட்டியை, கோர்ட்டு அமீனாவை விட்டு, படுக்கை அறையில் தள்ளச் சொல்வது போல் அல்லவா இருக்கிறது இது!"—விஷயச் சுருக்கம் இவ்வளவே!

எஸ். எஸ். எல். சி. தமிழ்ப் பாட புத்தகத்தில் மறைமலையடிகளின் "தமிழ்த்தாய்" என்ற கட்டுரை இடம் பெற்றுள்ளதை "மெயில்" ஏடு எதிர்த்து எழுதியது. இதை "விடுதலை" தலையங்கம் சுட்டிக் காட்டவே, தமிழுணர்வு

யடைத்த மக்கள், ஆரியப் பத்திரிகைகளைப் பேனா முனை யால் தாக்கத்' தொடங்கினர். இன்னொரு பேரிடியாகப் பழமையாளர் மீது வீழ்ந்தது அரசாணை ஒன்று! இதை யும் "இந்து"விலிருந்துதான் "விடுதலை" சேகரித்தது. அதாவது, அரசு அலுவலகங்களில் கடவுள் படங்களை மாட்டி வைக்கக்கூடாது என்பதே அது. இதுவும் அடுத்து வந்த நாட்களில் பெரிய கருத்து மோதலை ஏற்படுத்திற்று! அடுத்த அக்டோபர் 2 முதல் கலப்பு மணத் தம்பதியர்க்குத் தங்கப் பதக்கம் வழங்கப்படுமென அமைச்சர் சத்தியவாணி முத்துவால் அறிவிக்கப்பட்டது.

அரூரில் 12-7-68 அன்று இரவு, பெரியார் 89-வது பிறந்த நாளையொட்டி நடைபெற்ற விழாவில், எச். எல். முருகேசன் தலைமையில் பெரியார், முதல்வர் அண்ணா வுக்குப் பொன்னாடை போர்த்தினார். மாண்புமிகு அறிஞர் அண்ணா பெரியாரைப் பாராட்டிப் பேசினார்:— "பெரியாரவர்கள் மூலம் நாம் பெற்றிருக்கிற பகுத்தறிவுக்கு, நல்லறிவுக்கு நன்றிக் கடனைச் செலுத்துவதற்கு நாம் கூடி யிருக்கிறோம். தமிழ்ச் சமுதாயத்திற்குச் செய்த தொண்டில் ஆயிரத்தில் ஒரு பங்கு பார்ப்பன சமுதாயத்திற்குப் பெரியார் செய்திருந்தாரானால், அவரைக் கடவுள் அவதாரமாக்கி, சங்கராச்சாரியாரைவிட அதிக மதிப்பும் மரியாதையும் கொடுத்து, மிகப் பெரியவராக்கி இருப்பார்கள்.

ஈரோட்டுக்கருகிலுள்ள ஈங்கூரில் 30 ஆண்டுகளுக்கு முன் ஒரு பொதுக்கூட்டத்தில் பெரியார் பேசிக் கொண்டிருந் தார். கூட்டத்திலிருந்த ஒரு பெரியவர், பெரிய மூட்டை ஒன்றைக் கையில் வைத்துக் கொண்டு, அதிலிருந்த சாம்பலை அள்ளி அள்ளிக் காற்று வீசிய பக்கம் அதைத் தூவிவிட்டார். அந்தச் சாம்பல் தூளானது பெரியாரவர்களின் மேல் பட்டது. அதைப்பற்றியெல்லாம் லட்சியம் செய்யாது, பெரியார் பேசி முடித்தார். அடுத்து, நான் பேச ஆரம் பித்ததும், சொன்னேன்:— 'பெரியவரே! நீங்கள் 30, 40 வருடங்களுக்கு முன் இதுபோல் செய்திருந்தால், பெரியாரின் கருமை நிறமான தாடி உங்கள் சாம்பல் பட்டு வெள்ளை

யாகி இருக்கும். இப்போது நீங்கள் தூவிய சாம்பல், அவர் தாடியை மேலும் வெண்மையாக்கிப் பளபளப்பூட்டியிருக்கிறது' என்றேன். அந்தக் காலத்தில் இது போன்ற எத்தனையோ இடையூறுகள் நிகழ்ந்துள்ளன.

என்னுடைய நண்பர்கள் எல்லாம், நான் பிரிந்து சென்று விட்டேன் என்று குறிப்பிட்டார்கள். இருக்க வேண்டிய கடினமான நாளில் இருந்தேன். பிரிந்தேன் என்பது கூடத் தவறு. இந்த நாட்டு அரசியலை நமக்கு நேர் மாறான கருத்து உடையவர்களிடம் கொடுத்து விட்டு அவர்களுக்கு நாம ஆளாகி இருப்பதைப் போக்க வேண்டும் என்பதற்காக, அரசியலில் நுழைந்து, அதனைக் கைப்பற்றியும் இருக்கின்றேன்! நம்மிடம்தான் ஆட்சி வந்து விட்டதே; எல்லாவற்றையும் உடனே செய்துவிட முடியும் என்று நீங்கள் நினைத்துவிடக் கூடாது!

30, 35 ஆண்டுகளுக்கு முன், க்ஷத்திரியர் என்று தங்களைச் சொல்லிக் கொண்டிருந்த சமுதாயத்தினருக்குக் கூடக் கோயிலுக்குள் நுழைய உரிமையில்லாமல் இருந்தது. 'கோயிலுக்குள் கல்தானே இருக்கிறது. நீ அங்கு போகாதே!' என்று பெரியார் பிரச்சாரம் செய்தார். இவர்கள் எல்லாம் கோயிலுக்குள் வராவிட்டால் வருமானம் வராதே என்று, இவர்கள் கோயிலுக்குள் வரலாம் என்றாக்கினார்கள்.

இந்த நள்ளிரவில் இவ்வளவு கூட்டம் வந்திருக்கிறீர்கள்; ஒருவர் நெற்றியில் கூடத் திருநீறோ, திருநாமமோ காணோம். இந்த இரண்டுமே பெரியாரின் சலியாத தொண்டினால் விளைந்த பலன்தானே! தம் வாழ்நாளில் சொல்ல வேண்டியதைச் சொல்லிச், செய்ய வேண்டியதைச் செய்த பெருமை பெரியார் ஒருவரைத்தான் சாரும்! சமுதாயத்தின் அடித்தளம் வரை சென்று, சுயமரியாதைப் பிரச்சாரம் செய்த புரட்சி எழுத்தாளரோ சீர்திருத்தவாதியோ வேறு யாருமே இல்லை. பெரியாருக்கு நிகர் பெரியார்தான் என்றால் இது மிகையல்ல; உண்மைநிலை!

பெரியாரவர்கள் எந்தெந்த நேரத்தில் எந்தெந்த அரசியல் கட்சிகளை ஆதரித்து வந்தபோதிலும், அவர் தமது சமுதாயக் கருத்துகளைச் சொல்லாமல் இருப்பது கிடையாது. காங்கிரசை ஆதரித்துப் பிரச்சாரம் செய்த போது, 'பெரியார் எவ்வளவு அழகாகக் காங்கிரசைப் பற்றி மக்களுக்குப் புரியும்படி எடுத்துச் சொல்கிறார் தெரியுமா?' என்று அவரைப் புரிந்துகொள்ளாத சிலர், என்னிடம் சொல்வதுண்டு. 'அவர் பேச்சில், காங்கிரசுக்கு எவ்வளவு நேரம்? சமுதாயத்துக்கு எவ்வளவு நேரம்? என்பதை நீர் கூர்ந்து கவனித்ததுண்டா?' என்று நான் கேட்பேன்!

இவரைப் பாராட்டாதவரே ஒருவர் கூட இல்லை. பெரியார் எங்கள் பகுதியில் பிறக்கவில்லையே என்று ஜெகஜீவன்ராம் என்னிடம் வருத்தப் பட்டுக் கொண்டார். அமெரிக்காவில் பெரியாரைப் பற்றி நிறையத் தெரிந்து வைத்திருக்கிறார்கள். இவரைப் போலத் தன்னைப் பின்பற்றிவர லட்சோபலட்சம் தொண்டர்களைக் கொண்ட பகுத்தறிவுவாதி, உலகில் வேறெங்குமில்லை. 90 வயதாகியும் இவருக்குள்ள சுறுசுறுப்பு, 45 வயது உள்ளவருக்கும் வராது! தொலைவிலிருந்து பேச்சைக் கேட்டால் 'இவர் வயது என்ன நாற்பத்தய்ந்தா, அய்ம்பத்தொன்றா?' என்று கேட்பார்கள். சற்றுக் கோபமாகப் பேசக் கேட்டால், 'முப்பத்தய்ந்தா, முப்பத்தெட்டா?' என்று கேட்பார்கள்!

இவரது கொள்கைகளை நிறைவேற்ற என்னால் இயன்றவரை பாடுபடுவேன். இந்த ஆட்சியால் பயனில்லை; எதுவும் செய்ய இயலாது என்றால், ஒட்டிக்கொண்டிருப்பேன் என்று யாரும் கருத வேண்டாம்! எனக்கு இப்பதவி இனிப்பானதல்ல. இப்பதவிக்கு வருகிற நாள் வரை, நான் கடிகாரத்தையும், காலண்டரையும் பார்த்ததில்லை; காரணம் அதுவரை நான் சம்பளம் வாங்கும் உத்தியோகஸ்தனல்ல! (பெரியாரணிந்திருந்த கெடிகாரம், ஒருமோதிரம்கூட, அண்ணா அணிந்ததில்லை!)

நம்முடைய கழகத் தோழர்கள் திராவிடர் கழகத் தோழர்களை விரோதிகளாகக் கருதக் கூடாது. இரண்டு

கொடிகளும், ஒரே அளவுதான்; இரண்டிலும் நிறம் கருப்பும் சிவப்பும்தான்! தந்தை பெரியாரவர்கள் சமுதாய மாற்றத்தைக் காணப் பாடுபடுகிறார்கள். சமுதாயமும் மாறி இந்த ஆட்சியும் இருந்து செயல்பட்டால், சுதியோடு சேர்ந்த இசையாக அமையும்; இல்லாவிடில் அபசுரமாகத் தானிருக்கும்!

எனக்கு முதல்முதல் நகரசபை வரவேற்புத் தர, ஈரோட்டில் ஏற்பாடு செய்தவரே பெரியார்தான். என்னை ஊர்வலத்தில் அமர வைத்துத், தான் நடந்தே வந்தார்கள் (1948ல்). இன்று அதே பெரியாரே, எனக்குப் பொன்னாடையும் போர்த்தினார்கள். நான் ஈரோட்டில் அவர் வீட்டில் தங்கியிருந்தபோது, இரவில் வெகுநேரம் கழித்துப் படுக்கச் செல்வதால், காலையில் கண் விழிக்காமல், அதிக நேரம் தூங்குவேன். அவர் அதிகாலையில் எழுந்தவுடன், என்னைத் தாண்டித்தான் செல்லவேண்டும். சில சமயங் களில், நான் அணிந்திருக்கும் துணிகள் விலகி இருக்கும். அப்போதெல்லாம் அவர், தான் மேலே போட்டிருக்கிற சால்வையை எடுத்து, என்மீது போர்த்திவிட்டுப் போவார். அதைவிட இந்தப் பொன்னாடை எனக்குப் பெரிதாகத் தோன்றவில்லை!

என்றையதினம் நான் சுயமரியாதைக் கருத்துகளை ஏற்றுக் கொண்டேனோ, அன்றிலிருந்து இன்றுவரை, நான் சுயமரியாதைக்காரனாகத்தான் நடந்து வருகிறேன்!'' என்று பேசிவிட்டு அண்ணா அவர்கள், பெரியார் தனக்குப் போர்த்திய பொன்னாடையை, அரூர் முத்துவிடம் 500 ரூபாய்க்குத் தந்து, அந்தத் தொகையைப், பெரியாரிடம் கார் நிதிக்காக வழங்கினார், அதே மேடையில்!

சென்னை மாநில சுயாட்சிக் கருத்தரங்கு 20–7–68-ல் நடைபெற்றது. அண்ணா பங்கு கொண்டு, ''மத்திய அரசின் கையில் அநாவசியமான, தேவையற்ற ஏராளமான அதிகாரங்கள் குவிந்துகிடக்கின்றன. பாதுகாப்பு, போக்கு வரத்து, நாணயச் செலாவணி தவிர மற்றவற்றை மாநிலங் களுக்குப் பிரித்தளிக்க வேண்டும்!'' என்றார். பெரியாரின்

'நகரும் குடில்'' நிதிக்காக 24-7-68 வரை, ரூ. 17,140.01 சேர்ந்துள்ளதாக, வீரமணி அறிவித்தார். சென்னை உயர் நீதிமன்றத்தின் தற்காலிகப் பிரதம நீதிபதியாக கே. வீராசாமி 26-7-68 முதல் நியமிக்கப்பட்டது, பெரியாருக்கு ஓரளவு ஆறுதலளித்த செய்தியாகும்.

20-7-68 முக்கிய தலையங்கம் பெரியாரால் வரையப்பட்டது. "மத்திய ஆட்சி ஜார் (Czar) ஆட்சியே!" என்பது தலைப்பு. "ரஷ்யாவில் பொதுவுடைமை ஆட்சியை லெனின் மலரச் செய்வதற்கு முன்பு இருந்ததுபோல், இந்தியாவிலும் இப்போது மத்திய ஆட்சி செயல்படத் துவக்கியுள்ளது. இம் என்றால் சிறைவாசம். அம் என்றால் வனவாசமாம். நமது இயக்கத்தை, திராவிடர் கழகத்தைச், சட்ட விரோதமாக்க மத்திய அரசு கத்தி தீட்டுகிறதாம்! நம்மைக் கைது செய்து, சிறையில் நீண்டகாலம் அடைக்கவும் திட்டம் தயாராகிறதாம். தோழர்களே! தயாராகுங்கள்!" என்று வீரமுரசு ஒலித்தது. துணைத் தலையங்கமோ 'கடவுளர் பட நீக்கமும் பூணூல்களின் கொதிப்பும்' என்பதுபற்றி. பெரியாரும், இது சம்பந்தமாய்த் தமது மகிழ்ச்சியைத் தெரிவித்து, "இந்த ஆணை பிறப்பித்தது மிகவும் நல்லது. இதே காரணத்தால் அலுவலகங்களிலுள்ள திருவள்ளுவர், காந்தியார் படங்களையும் அகற்றி விடலாம். பட்டாளத்தில் உள்ள ஒழுங்கு முறைபோல் அரசு ஊழியர்களும் பூணூல், நெற்றிக் குறிகளை நீக்க வேண்டுமென உத்தரவிடலாம்," என்று எழுதினார்.

"அலுவலகங்களில் சாமி படம் வைத்தது யார்? கீழ்த்தரச் சிப்பந்தி தானே? செத்துப்போன 'சுதேசமித்திரன்' இதை வைத்து, நடமாடப் பார்க்கிறது. மாண்புகள் அறிஞர் ஒன்று சொல்லுகிறார். நாவலர் ஒன்று சொல்லுகிறார். ஞாபக மறதியா, பார்ப்பனப்புரட்டா?" என்று பெட்டிச் செய்தி ஒன்று 23-7-68 அன்று பெரியாரால் வெளியிடப் பெற்றது. இதற்குக் காரணங்கள்—"சுதேசமித்திரன்" ஏடு, கடவுளர் பட நீக்கத்துக்கு ஒரேயடியாகக் கூக்குரலிட்டு, எதிர்த்தது ஒன்று; அண்ணா இந்தச் சுற்றறிக்கையில்

கையெழுத்திடவில்லை என நாவலர் கூறிய செய்தி இரண்டு! "பார்ப்பான் சொன்னால் தமிழனுக்குப் புத்தி எங்கே போச்சுது? Secular என்ற வார்த்தை, இங்கிலீஷ் வார்த்தை. இதற்கு இங்கிலீஷ்காரன் சொல்லுகிற அர்த்தம்தானே சரியானது? மதச்சார்பற்ற என்றால் எல்லா மதத்தையும் அனுமதிப்பது என்றா பொருள்? தமிழர்களே! முதலில் நீங்கள் உங்கள் வீடுகளிலுள்ள கடவுளர் படங்களையாவது எடுத்து எறிந்து விடுங்கள்!" என்று 29–ந் தேதியில் பெரியார் எழுதினார். அண்ணாவுக்கு உடல் நலங்குன்றியதால் 30-ந் தேதி, சுற்றுப்பயணம் ரத்து செய்யப்பட்டது.

ஆகஸ்டுமுதல்வாரம் முழுவதும் பெரியாரின் எழுத்துகள் "விடுதலை"க்கு விறுவிறுப்புத் தந்தன. "பார்ப்பனர் (ஆரியர்) சுத்தக் காட்டுமிராண்டிகள். பார்ப்பனக் கடவுளரின் ஆபாசமான, கீழ்த்தரமான நடவடிக்கைகளை விளக்கும் வடமொழி நூல்களிலுள்ள விஷயங்களை நாம் அப்படியே மொழி பெயர்த்துத் தந்தாலே போதும்; இவர்கள் வண்டவாளம் விளங்கிவிடும். அதற்காக என்றே ஒரு பத்திரிகை துவக்க இருக்கிறேன். எழுதுவதற்குத் தமிழறிஞர்களைப் பணிபுரியுமாறு அழைக்கிறேன். இன்றையக் கடவுள் படப் பிரச்சினை நமக்கு ஒரு நல்ல வாய்ப்பு. படத்தைச் சுவரில் தொங்க விடுவது, அவனவன் சொந்த பக்திக்காகவா, இல்லை பிரச்சாரத்துக்காகவா என்பதைக் கேளுங்கள். பார்ப்பனர்கள் இதை எதிர்க்கத் துவங்கியதே, நமக்கு நல்லதாயிற்று! ஆச்சாரியாரையே கேட்போம்; பதில் கூறுவாரா? ஒரு பெண் கன்னி என்றால், ஆண் சம்பந்தமே இல்லாதவள் என்பதல்ல; எல்லா ஆண்களையும் சமமாகப் பாவித்துக் கூப்பிட்டவனோடெல்லாம் போகிறவள்தான், என்று அர்த்தம் சொல்வது போல், செக்குலார் ஸ்டேட்டுக்கும் அர்த்தம் சொல்கிறார்களே!

முதல் அமைச்சரும் கல்வி அமைச்சரும் பதவி போய் விடுமோ? நாம் கொல்லப்பட்டுவிடுவோமோ? என்கிற பயமில்லாமல் துணிவுடன் செய்ய வேண்டும். பகுத்தறிவாளர் ஆட்சியில் தானே இம்மாதிரிக் காரியங்கள் நடைபெற

முடியும்? பாரதிதாசன் கவிதைகள் பாடங்களில் நிறைய இடம் பெறுமாறு, கல்வி இலாக்காவைச் சீர்திருத்த வேண்டும். எனக்கப்புறம் இந்த விஷயங்களைச் சொல்லவும் ஆளில்லை. தி.மு.க.வுக்கு அப்புறம், இதைச் செய்யவும் ஆட்சியில்லை. அரசு அலுவலகங்களில் உள்ள கடவுளர் படங்களை அவர்களாகவே அகற்றி விடாவிட்டால், நானும் எனது தோழர்களுமே, புகுந்து நீக்குவோம்.

அதேபோல் தெருவோரம், அலுவலக வளைவு இங்கெல்லாம் பார்ப்பான் ஆதரவுடன் கோயில்கள் முளைக்கின்றன. தமிழர்கள் கோர்ட்டுக்குச் சென்றாவது இவற்றைத் தடுக்க வேண்டும்.'' (திருவரங்கத்தில் 4-8-68 அன்று இம்மாதிரி ஒரு தடையுத்தரவைத் திருச்சி மாவட்டத் திராவிடர் கழகம் பெற்றது) என்பன சில கருத்துகள். 7-8-68 பத்திரிகை நிருபர்களிடையே ''அரசு அலுவலகங்களில் கடவுளர் படம் அகற்றும் பிரச்சினையில் பதில் கூற வேண்டியவர் அலுவலர்களே தவிர, அரசியல் வாதிகளுக்கு இதிலேன் அக்கறை?'' என்று கேட்டார் முதலமைச்சர் அண்ணா.

''காங்கிரஸ்காரர்கள் பசுத்தோல் போர்த்திய புலிகள், அவர்களின் தீண்டாமை ஒழிப்பு கபட நாடகமே'' என்பதைப் பெரியார் சான்றுடன் எழுதினார். ''பிறப்பால் உயர்வு தாழ்வு கற்பித்தல்—தீண்டாமை போன்றவற்றை அடியோடு ஒழிக்கவேண்டும் என்று, திடீர் ஞானோதயம் உண்டானவர் போல், சி. சுப்ரமணியம் கூறுகிறார். இவர்தான் சங்கராச்சாரியார் காலில் விழுந்து, பூமியை முத்தமிட்டு வணங்கித், தனக்கு மந்திரி பதவி கிடைக்குமாறு ஆசி கோரியவர் மேலும், இவரது தலைவரும் குருவுமான ஆச்சாரியார் சங்கதி என்ன தெரியுமா? ராஜாஜி யாரையும் தொடுவார், யார் வீட்டிலும் சாப்பிடுவார், யாருக்கும் பெண் கொடுப்பார், ஆனால் ஜாதி ஒழியச் சம்மதிக்கமாட்டார்! தான் பிராமணன், மற்றவர் சூத்திரர் என்பதைச் சொல்லி, ஜாதி தர்மத்தைக் காப்போம் என்பார்.

1963 க்குப் பிறகு காமராஜர் தொடர்பு தமிழ் நாட்டில் இல்லாமல் போய்விட்டது. காமராஜர் இல்லையென்றால்

காங்கிரஸ் அநாமதேயந்தான். கல்விக் கண்கொடுத்ததற்குப் பரிசாக இன்று காமராஜரையே குறை சொல்கிறார்கள். அவரும் நமது பொது எதிரிகளுக்கு இடம் கொடுத்து விடாமல் எச்சரிக்கையாயிருக்க வேண்டும். அவர் காலத்தில் காங்கிரசுக்குப் பெருமை குறையாதிருக்க, அவர் சார்புள்ள பத்திரிகைகளை அடக்கிட வேண்டும்'' என்று பெரியார், விட்ட குறை தொட்ட குறையோ என்னவோ; இவ்வாறும் எழுதினார்.

ஆகஸ்டு மாதம், நிறையத் திருமண நிகழ்ச்சிகளில் கலந்துகொண்ட பெரியார், பெண்கள் முன்னேற்றத்துக் கான அறிவுரைகளை வழக்கம் போல் வழங்கினார். டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி தேவதாசிகள் ஒழிப்பு மசோதாவை ஆதரித்துச் சட்ட மன்றத்தில் பேசியபோது, சத்தியமூர்த்தி அய்யர் அதை எதிர்த்து, "அப்படியானால் கடவுளுக்கு சேவை செய்ய தேவதாசிகள் வேண்டுமே என்ன செய்வது?'' என்று கேட்க, "எங்கள் சமூகத்தார் ஆண்டாண்டு காலமாய்ப் பொட்டுக் கட்டியிருந்தோம். இனிமேல் அந்த வேலையை உங்கள் சமூகத்துப் பெண்கள் செய்தால் தெய்வ சேவையாயிருக்குமே'' என்றாராம். அந்தப் பொட்டுக் கட்டும் வழக்கம் சட்ட விரோதமாக்கப்பட்டது போல், பெண்களுக்கு இப்போது தாலி கட்டுகின்ற வழக்கமும் சட்ட விரோதமாக்கப்பட வேண்டும் என்றார் பெரியார்.

தந்தை பெரியார் உடல்நலங் குன்றியிருக்கிறார்கள். என்வே ஏற்கனவே ஒப்புதல் தந்துள்ள நிகழ்ச்சிகள் தவிரப் புது நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள இயலாதிருப்பதால், தோழர்கள் அழைக்காதிருக்கக் கேட்டுக் கொள்ளும் அறி விப்பு, 27-8-68 அன்று பிரசுரமாயிற்று. அண்ணாவும் தளர்வு உற்றிருப்பதால் தர்மபுரியில் பெரியார் சிலை திறப்பு விழா 30-8-68 அன்று நடைபெறாமல் தள்ளி வைக்கப்பட்ட தாக, என். எஸ். சம்பந்தம் செய்தி அறிவித்தார். இங்கிலீஷ் நமக்கு மிக மிக அவசியம், அதைப் புறக்கணித்தால் நமது முன்னேற்றமே தடைபடும் என்று மத்திய தோல் ஆராய்ச்சி நிலையத்தில் அண்ணா கருத்துரைத்தார். லாட்டரி சீட்டு

நடத்தக் கூடாதென ராஜாஜி கூறுவதைத் தாமும் ஆதரிப்பதாகப் "புதுப் பெரியவாள்" சி. சுப்ரமணியம் தெரிவித்தபோது, ராஜாஜியின் சுதந்தரக் கட்சியினர் ஆளும் ஒரிசா மாநிலத்தில் நடைபெறும் பரிசுச் சீட்டுகளை முதலில் ராஜாஜி தடுக்கட்டுமே, என்றார் அண்ணா. மேலும், ஆச்சாரியார் ஆண்ட காலத்திலேயே, நமது மாநிலத்தில் குதிரைப் பந்தயம் இருந்ததே! அதை அவர் ஒழித்திருப்பதுதானே என்றும் கேட்டார். மத்திய அரசு, சென்னை ராஜ்யத்தின் பெயரைத் (Tamilnad) தமிழ் நாட் என்று மாற்றக்கோரி சென்னை அரசுக்கு அனுப்பியிருந்த தீர்மானத்தில், (Tamil Nadu) தமிழ் நாடு என்று திருத்தம் செய்து, சட்டமன்ற இரு அவைகளிலும் நிறைவேற்றினார் அண்ணா, 17–8–68 அன்று. அமைச்சர் சாதிக்பாஷாவின் திருமணம் சென்னையில் 22–8–68 அன்று நடைபெற்றபோது பெரியார் வள்ளியூரில் இருந்து வாழ்த்து அனுப்பினார். தமிழ் நாடு அரசின் கல்வி ஆலோசகராக, இணைச் செயலாளர் அந்தஸ்துடன், என். டி. சுந்தரவடிவேலு நியமனம் பெற்றதற்குத் "தமிழக அரசைப் பாராட்டுகிறோம்" என்று "விடுதலை" 4-9-68 அன்று தலையங்கம் தீட்டியது. 6-9-68 அன்று அண்ணாவுக்கு 2 முறை 'பேரியம் டெஸ்ட்' செய்யப்பட்டது. Entoseopy முறை கையாளப்பட்டு, உணவுக் குழலில் சதை வளர்ச்சி இருப்பது தெரிந்து, அறுவை சிகிச்சை செய்ய வேண்டுமென மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார்.

அண்ணா சென்னைப் பொது மருத்துவ மனையிலிருப்பதை அறிந்தவுடன், திருச்சியிலிருந்த பெரியார், மணியம்மையாருடன் விரைந்து வந்து, 7 ந்தேதி 11-30 மணியளவில் அண்ணாவைப் பார்த்துவிட்டு, "தமிழ் நாட்டின் நிதி போன்றவரை, உங்களை எல்லாம் நம்பி ஒப்படைக்கிறோம்" என்று அங்குள்ள மருத்துவ நிபுணர்களிடம் கூறியபின், காரைக்கால் நிகழ்ச்சிக்காகப் புறப்பட்டுச் சென்றார். அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வழங்கிய டாக்டர் பட்டத்தைக்கூட நேரில் பெற முடியாமல், அண்ணாவுக்காக

நாவலர் சென்று பெற்று வந்தார். பாளையங்கோட்டை நகராட்சியில் பெரியார் படம் திறந்து வைத்துத் திரும்பினார் நாவலர். ராணி அண்ணியார் திருப்பதி சென்று வந்ததாக "சுதேசமித்திரன்" ஏடு செய்தி வெளியிட்டது கயமைத்தனமான பொய் என்று கலைஞர் அறிவித்தார்.

10ந்தேதியன்று சிகிச்சைக்காக அண்ணா அமெரிக்கா செல்லுவார் என்று தெரிவிக்கப்பட்டது. இதைக் கேள்விப் பட்டதும் சென்னை திரும்பினார் பெரியார். நேரே குன்றக்குடி அடிகளாருடன் மருத்துவமனை சென்றபோது, ஜன சமுத்திரத்தில் நீந்தித்தான் உள்ளே செல்ல நேர்ந்தது. அடிகளார் தந்த பொன்னாடையைத் தந்தை தனயனுக்குப் போர்த்தி, நலமுடன் திரும்புக என வாழ்த்தினார். தமது மடியில் 25,000 ரூபாய் வைத்திருந்த பெரியார் அண்ணாவின் காதருகே வாயை வைத்து, அதைத் தருவதாகவும் செலவுக்கு வைத்துக் கொள்ளுமாறும் கேட்டுக் கொண்டார். அண்ணா மறுக்கமுடியாமல் கருணாநிதியிடம் சொல்லுங்கள் என்றார். கலைஞரோ நன்றியுடன் மறுத்து, இப்போது பணம் இருக் கிறது அய்யா என்றார். மீண்டும் பிற்பகல் 2 மணிக்கு மீனம் பாக்கம் விமான நிலையம் சென்ற பெரியார், தமது சக்கர நாற்காலியில் அமர்ந்தவாறு, விமானத்தினருகில் காரில் சென்றுகொண்டிருந்த அண்ணாவைக் கண்டுகையசைத்தார். பெரியாரைக் கண்டவுடன் அண்ணா காரை நிறுத்திக் கீழே இறங்க முயன்று, கதவைக்கூடத் திறந்துவிட்டார். பெரியார் வேண்டாமெனச் சைகை செய்யவே, அண்ணா தனது இரு கரங்கூப்பிப் பெரியாரை வணங்கி விடை பெற்றார்!

பம்பாய், நியூயார்க் நகரங்களில் நல்ல வரவேற்புப் பெற்ற அண்ணாவுக்கு, டாக்டர் மில்லர் சிறந்த முறையில் சிகிச்சை நடைபெறுமென நம்பிக்கையளித்தார். அண்ணா வுடன் அண்ணியார், டாக்டர் சதாசிவம், மகன் பரிமளம் இரா. செழியன், க. ராஜாராம் ஆகியோரும் சென்றிருந் தனர். 16ந்தேதி அறுவை சிகிச்சை நடைபெறும் என ராஜாராம், பெரியாருக்குக் கடிதம் எழுதியிருந்தார். 15-9-68 அண்ணா 60-வதுபிறந்த நாள். "ஆனந்த விகடன்" கூடப்

பாராட்டித் தலையங்கம் எழுதியிருந்தது. திருச்சியிலும், தஞ்சையிலும் இரு அண்ணா சிலைகள் திறந்து வைக்கப் பட்டன; நிகழ்ச்சியில் கலந்துகொள்ள வந்த கலைஞரும் நாவலரும், திருச்சியில் பெரியாரைச் சந்தித்து, முன் கூட்டியே 90-வது பிறந்த நாள் வாழ்த்துத் தெரிவித்தனர். 17-9-68 திருச்சியில் பெரியார் கல்வி நிறுவனங்களின் சார்பில் வழக்கம் போல நடைபெறும் நிறுவனர் நாள் விழாவில் பெரியார், குன்றக்குடி அடிகளார், அமைச்சர் சத்தியவாணி முத்து ஆகியோர் பங்கேற்றனர். பர்மாவில் பெரியார் 90 வது பிறந்த நாளைச் சிறப்புடன் கொண்டாடக் குழுவமைத்துச் செயல்பட்டனர்.

"அண்ணாவின் அறுபதாம் ஆண்டு பிறந்த திருநாள்" என்ற பொன் மகுடமிட்டு, வைர வரிகளால் பெரியார் "விடுதலை"யில் தமது மரகதப் பேனாவினால் மாணிக்க முத்திரை பதித்திருந்தார்:- "அண்ணாவை அறிஞர் அண்ணா என்று சொல்லக் காரணம் அவருடைய அறிவின் திறம்தான். தம்முடைய அமைச்சரவையில் அவர் ஒரு பார்ப்பானைக் கூட மந்திரியாகப் போடவில்லை என்பதோடு, தி. மு. க. வுக்கு எதிரான கொள்கையுடையவர், தமிழரானாலும், அவர்களிலும் யாரையும் போடவில்லையே! இதற்காக அண்ணா அவர்களை எவ்வளவு வேண்டுமானாலும் பாராட்டலாமே! மேலும், அவருடைய இந்த $1\frac{1}{2}$ ஆண்டு ஆட்சிக் காலத்தில் எந்தத் தமிழனுடைய உரிமையையும் அவர் புறக்கணிக்கவில்லை. அதனாலேயே தமிழர் சமுதாயத் தினுடைய அன்பை இதுவரை யாரும் பெற்றிராத அளவு அண்ணா பெற்றிருக்கிறார் என்பது மகிழ்ச்சிக்கு உரிய விஷயமாக இருக்கிறது. அண்ணா வாழ்க-என்று இந்த அறுபதாவது பிறந்த நாளில் நாமும் வாழ்த்துவதோடு, தமிழர்களுக்கு நல்ல வாய்ப்பு உள்ளவரை அண்ணா வாழ்வார் என்பதில் நமக்குச் சிறிதும் சந்தேகமில்லை!" முத்தான பவளச் சொற்களல்லவா?

தமிழகத்தில் குடும்பக்கட்டுப்பாடு அறுவை சிகிச்சைக்கு அமோக ஆதரவு இருப்பதாகவும், இதனால் கெடுதலில்லை

என்பதை மக்கள் புரிந்துகொண்டதாகவும், நீண்டநாளாகப் பெரியாரின் இயக்கம் செய்த பிரச்சாரமும் உதவியாக இருக்கிறது என்றும், சுகாதார அமைச்சர் சாதிக்பாஷா கூறினார். அமெரிக்காவில் மருத்துவமனையிலிருந்த அண்ணாவின் அன்றாட நிலவரம் குறித்து, மகிழ்ச்சி தரும் செய்திகள், தொடர்ந்து வந்தவண்ணம் இருந்தன. இந்தியப்பிரதமர் இந்திராகாந்தி, 21–ந்தேதியும், துணைப்பிரதமர் மொரார்ஜி தேசாய் 28–ந் தேதியும் நியூயார்க்கில் அண்ணாவைக் கண்டு நலம் விசாரித்தனர். இந்தியாவின் அய்.நா சபைப்பிரதிநிதி ஜி. பார்த்தசாரதி, நல்ல துணையாக இருந்து வந்தார். ரூ 1.50 விலையில் வெளியிடப்பட்ட பெரியார் 90–வது பிறந்தநாள் மலரில், பெரியாரே பத்து கட்டுரைகள் வரைந்திருந்தார். அதில் ''எனது நிலை'' என்னுந் தலைப்பில் எழுதும்போது, ஒருவித சலிப்பு உணர்வுடன், நான் துறவியாய்ப் போய்விடலாமா என்ற எண்ணம் உண்டாகிறது, என்பதாகக் குறிப்பிட்டிருந்தார் பெரியார்.

கரூரில் பெரியாருக்கு ''நகரும் குடில்'' வழங்கும் விழா அக்டோபர் 6–ம் நாள் நடைபெறும் என்றும், குன்றக்குடி அடிகளார் தலைமையில் கலைஞர் காரை வழங்குவார்; மதியழகன் பொன்னாடைபோர்த்திப் பொற்கிழி அளிப்பார்; பெரியார் அறிவுரை நல்குவார்; அன்பில் தர்மலிங்கம், ஆசைத்தம்பி, திருவாரூர் தங்கராசு, வீரமணி ஆகியோர் பங்கேற்பர் என்றும் செய்தி வெளியிடப்பட்டது. மத்திய சுகாதாரக் குடும்பநலத்துறை ராஜாங்க அமைச்சர் டாக்டர் சந்திரசேகர் ''தலைசிறந்த மனிதாபிமானி பெரியார் ஈ. வெ. ராமசாமி, சீர்மிகுந்த எழுத்தாளர், தேர்ந்த பகுத்தறிவுவாதி, அயராது பாடுபடும் உயர்ந்த பேச்சாளர்'' என்று பெரியாரைப் புகழ்ந்துரைத்தார். சென்னைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழா உரை நிகழ்த்திய கஜேந்திர கட்கார் மாணவர்களை நோக்கி ''சாதிகளை ஒழித்திட முன்வாருங்கள்! பகுத்தறிவுக் கொள்கைகளை இணைத்து, நவீன விஞ்ஞான முறைகளில் கருத்தைச் செலுத்துங்கள். பழைமையில் ஊறிக்கிடக்கும் நமது சமுதா

யத்தைப் புதுமையைக் கையாளும் நவீன சமுதாயமாக மாற்றுங்கள்'' என்று பேசியது, பெரியாரின் எதிரொலி யாகவே தோன்றியது.

பெரியாரின் 90–வது ஆண்டு பிறந்தநாள் செய்தி சுருக்க மாகவே இருந்தது:—''சுயமரியாதை இயக்கத்தைச் சேர்ந்த வர்களும், திராவிடர் கழகத்தைச் சேர்ந்தவர்களும், தி.மு.க. விலும், காங்கிரசிலும் உள்ளவர்களும்—அரசில் அதிகாரி களாய், குமாஸ்தாக்களாய், பணியாளர்களாய் உள்ளவர் களில் தமிழர் உணர்ச்சியாளர்களாய் இருப்பவர்களும், தங்கள் தங்கள் வீட்டில், தொழில்மனைகளில், வாகனங்களில் உள்ள கடவுள், மத, புராண, இதிகாசக்கதைகள் முதலியவை சம்பந்தமான உருவப் படங்கள் எவையானாலும், அவற்றை அப்புறப்படுத்திவிடவேண்டும்! கண்டிப்பாய் அப்புறப்படுத்தி விடவேண்டும் என்று மிக்க மரியாதையாய், வணக்கமாய் வேண்டிக்கொள்ளுகிறேன்.

அரசாங்கப் பணிமனைகளில் தொங்கும் படங்களை எடுத்துவிடுங்கள் என்று சொன்னவுடன் எல்லாப் பார்ப்பனர் களுக்கும் எவ்வளவு ஆத்திரம் வந்தது? நீங்கள் தான் பார்த் தீர்களே, இராஜாஜி மிரட்டுகிறார். 'மித்திரன்', 'தினமணி', 'இந்து', 'மெயில்', 'எக்ஸ்பிரஸ்' முதலிய பார்ப்பனப் பத்திரிகைகள் மிரட்டுகின்றன; விஷமப் பிரச்சாரங்கள் செய் கின்றன? இந்த ஒரு பிரச்சினையைக்கொண்டே தி.மு.க. ஆட்சியையே கவிழ்க்கப் பார்க்கின்றனர். ஏன்?

தங்கள் சாதி உயர்வும், நம் சாதி இழிவும் அந்தப் படங்கள் தொங்குவதில் உயிர் வாழ்கின்றன. அவை (படங்கள்) போய்விட்டால், உயர்வு—தாழ்வு போய்விடுமே என்கிற கவலைதானே? மற்றபடி, அப்படங்களில் என்ன இருக்கின்றது? அவர்கள் சமுதாய உயர்வுக்கு அவர்கள் (பார்ப்பனர்கள்) அவ்வளவு பாடுபடுகின்றார்கள்.

நமக்கு புத்தி, மான, ஈன, உணர்ச்சி இருக்கவேண் டாமா? அந்தப் படங்களில் கடவுள் இல்லை என்பதற்காக அவற்றை எடுத்து எறியாவிட்டாலும், நமது ஈனநிலை,

இழிவுநிலை, பார்ப்பான் உயர்வுநிலை அதில் இருக்கிறது என்பதற்காகவாவது அவற்றை நமது அரசுப் பணிமனைகளிலிருந்தும், அதைவிட நமது வீடுகளிலிருந்தும், தொழில் ஸ்தாபனங்களிலிருந்தும், எடுத்து எறியவேண்டாமா என்று கேட்கிறேன்.

தோழர்களே! இனியாவது நீங்கள் இழிசாதி மக்கள் அல்ல என்பதைக் காட்டிக்கொள்ள வேண்டாமா? உங்கள் தாயார்சகோதரி மனைவிமகள் பார்ப்பானுக்கு வைப்பாட்டி காமக்கிழத்தி ஆனவர்கள் அல்ல, ஆகவேண்டியவர்கள் அல்ல என்பதைக் காட்டிக்கொள்ள வேண்டாமா? நான் 45 ஆண்டுகளாகப் பாடுபட்டு வருகிறேன். அதன் பலன் இதற்காகவாவது (இந்தப் படங்களை அப்புறப்படுத்தவாவது) பயன் பட்டது என்று இருக்க வேண்டாமா?

நம் நல்வாய்ப்பாக தி.மு.க. ஆட்சி ஏற்பட்டது. அதை ஒழியும்படிச் செய்தீர்கள் ஆனால், பிறகு உங்கள் கதி என்ன ஆவது? நானும் இனியும் (90 க்கு மேல்) வாழமுடியுமா? எனக்கு அப்புறம் உங்களுக்கு இதை யார் சொல்லுவார்கள்? தி.மு.க. ஆட்சிக்கு அப்புறம் யார் இந்த உத்தரவு போடுவார்கள்? எல்லோரும் மாறான காரியத்தை அல்லவா செய்வார்கள்! நீங்கள் பழைய நிலைக்குதான் போகவேண்டி இருக்கும். ஆகவே எனக்கு 90–வது ஆண்டு பிறந்தநாள் பரிசாக இதையாவது செய்யுங்கள்; செய்து காட்டுங்கள் என்று வணங்கிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இது கிடைக்கப்பெற்ற ஒவ்வொருவரும் இதை மற்றவருக்குப் படித்துக் காட்டுங்கள்!''—எப்படி? எதிரில் உட்கார்ந்து நம்மிடம் பேசுவது போல் இல்லையா?

19-9–68 அன்று பெரியார் வாலாஜாபாத் கூட்டத்தில் ''மக்களுக்கு அறிவிருந்தால் தங்களை இழிவு படுத்தும் கோயில்களைத் தரைமட்டமாக்கி இருக்கமாட்டார்களா? நம்மை நிரந்தரமாய் இழி மக்களாகவே வைத்திருக்கத்தானே கோயில்கள் இருந்து வருகின்றன!'' என்று பேசினார். அதே நாளிட்ட ''விடுதலை'' தலையங்கப் பகுதியில் ''எனது கொள்கை, ஆதரவு மாற்றத்திற்குக் காரணம்'' என்ற

தலைப்பில் ''எனது ஆசையெல்லாம் மக்கள் பகுத்தறிவாளர் (நாத்திகர்) ஆகவேண்டும்; ஜாதி ஒழியவேண்டும்; உலகில் பார்ப்பனர் இருக்கக் கூடாது—இந்த மூன்றுதான் எனது கொள்கை. பல கட்சிகளை எதிர்த்ததும், பல கட்சிகளை ஆதரித்ததும் இதற்காகத்தான். இனியும் எந்தக் கட்சியை ஆதரிப்பேனோ, எதிர்ப்பேனோ தெரியாது''—என்று எழுதி முடித்தபின், அடியில் 'குறிப்பு' என்று போட்டு, ''இந்த மூன்றுக்கும் தி. மு. க. எதிரியானால் என் நிலை இப்படியே இருக்கும் என்று சொல்லமுடியாது'' எனவும் எச்சரிக்கை போல எழுதியிருந்தார் பெரியார்.

இந்தியா சுதந்தரம் பெற்றது 15–8–1947. இந்தியா மதச் சார்பற்ற நாடு என்று அறிவிக்கப்பட்டது 7-12–1947. காந்தியார் கொல்லப்பட்டது 30-1–1948 முன்னது நடைபெற்ற 165–வது நாள், பின்னது அறிவிக்கப்பட்ட 53-வது நாள், காந்தியார் கொல்லப்பட்டுவிட்டார். ஏன் தெரியுமா? சுதந்தரத்துக்குப் பின் பார்ப்பனர் நடத்தையைப் பார்த்து காந்தியும் சு. ம. ஆகிவிட்டார்; அதனால்தான் தீர்த்துக் கட்டிவிட்டார்கள்—எனப் பெரியார் பெட்டிச் செய்திபோல ஒரு புள்ளிவிவரம் தந்து சிந்தனையைத் தூண்டிவிட்டார்!

20–9–1968 வேலூரில் எம்.ஜி. ஆர். மன்றத்தின் சார்பில் நடைபெற்ற அண்ணா பிறந்தநாள் விழாவில் கலந்து கொண்டு பெரியார் பேசினார். எம்ஜியாரின் நூறாவது பட நிறைவு விழாவாகவும் இது நடைபெற்றது. ''நான் தோற்றுவிட்டேன், பார்ப்பான் வெற்றி பெற்றுவிட்டான்; என்றாலும் கழகத்தோழர்கள் அவசரப்பட வேண்டாம்; இவர்களை ஒழிக்கும் வேலையை என்னிடம் விட்டு விடுங்கள்—என்று 1967–ல் தி. மு. க. மகத்தான வெற்றி பெற்றவுடனே சொன்னேன். சொன்ன வண்ணம் நான் பெரிய போராட்டம் துவக்குவேன் என்று எதிர்பார்த்த தி. க. தோழர்கள் ஏமாந்தார்கள். காரணம், கிடைத்தற்கரிய நிதியாக அண்ணா நமக்கு வாய்த்துவிட்டார். பகுத்தறிவோடு காரியங்களைச் செய்து வருகிறார். அதே போலக் கலைத் துறையிலும் எம். ஜி. ஆர். அவர்கள் ஒரு

விளக்காக இருந்து வருகின்றார். நான் இவருடைய திறமையைப் போற்றுவேனே தவிரத், தொண்டினைப் போற்றுவது என்பது கிடையாது. ஏனெனில், நம் நாட்டில் சினிமாவானது அறிவை வளர்க்காமல், உணர்ச்சியைத்தான் தூண்டுகிறது. பணம் சம்பாதிக்கும் குறிக்கோளுடன் படங்கள் தயாரிக்கப் படுகின்றன. சம்பாதித்தது போதும் என்று, இவர் மக்களுடைய அறிவைவளர்க்க, சிந்தனையைத் திருப்ப, இனிமேல் பாடுபட வேண்டும்'' என்பதாகப் பெரியார் தமது உள்ளக் கிடக்கையைத் தெள்ளத்தெளிவாக வெளிப்படுத்திக் காண்பித்தார்.

தமிழ்நாடெங்கும் பெரியார் பிறந்தநாளும், அண்ணா பிறந்தநாளும், தனித்தும் இணைத்தும் பெருமெடுப்பில் நிகழ்த்தப்பெற்று வந்தன. போளூர் தி. மு. க. நடத்திய அண்ணா பிறந்தநாள் விழவில் 21-ந் தேதி பேசிய பெரியார் "தி. மு. க. நீடித்து இருந்தாக வேண்டும். இவர்கள் சட்டத்திற்கு உட்பட்டே ஆட்சி செய்யட்டும். மற்ற பிரச்சினைகளை நாம் பார்த்துக் கொள்வோம். காங்கிரசார் இந்த ஆட்சியைக் கவிழ்த்திடச் செய்யும் எந்த முயற்சிக்கும் நாம் சிறிதும் இடம் கொடுக்கக்கூடாது'' என்று வலியுறுத்தினார். புதுக்கோட்டையிலுள்ள மன்னர் கல்லூரியில் மாணாக்கர்கள் மத்தியில் பெரியார் பேசும்போது "நமது சமுதாயத்தைப் பிடித்திருப்பது மிகக் கடுமையான நோயாகும். அந்தக் கடுமையான நோய்க்கு ஏற்பவே நானும் கடுமையான மருந்து கொடுக்கிறேன். நம் நாட்டு மனித சமுதாயம் ஒரு பைத்தியக்கார ஆஸ்பத்திரி போலத்தான் காணப்படுகிறது. ஆகையால் பேதமற்ற, கவலையற்ற ஒரு நிலையடையக் கடவுள் மதம் சாஸ்திரம் ஆகியவை ஒழிக்கப்பட வேண்டும். மனிதன் எதற்காகக் கடவுளை வணங்குகிறான்? எதற்காகப் பக்தி செலுத்துகிறான்? தனது தகுதிக்கு மேற்பட்ட பதவியோ பலனோ அடைய வேண்டும் என்கிற பேராசைதானே காரணம்? கடவுள் நம்பிக்கை என்பதே ஒருவர்மீது மற்றவரால் திணிக்கப்படுவதே ஆகும். கடவுள் பிரார்த்தனை என்பதெல்லாம் கைதேர்ந்த மோசடி

வேலையாகும். இன்று நடக்கின்ற பார்ப்பனர்-பார்ப்பனரல்லாதார், அல்லது ஆரியர்-திராவிடர் போராட்டம், அன்றைக்கே — பழங்காலத்திலேயே — இருந்தது என்பதை எடுத்துக் காட்டுவதுதானே தசாவதாரம் என்கிற பத்து அவதாரக் கதைகள்! ஒவ்வொரு அவதாரத்திலும், புகழ் பெற்ற திராவிடர்களை ஒழிக்கத்தானே கடவுளே பிறந்திருக்கிறான்? இதையெல்லாம் நல்ல வண்ணம் சிந்தித்து, நமது இளைஞர்கள் பகுத்தறிவோடு நடந்துகொள்ள வேண்டும்,'' என்று கருத்து விளக்கங்களைப் பெருத்த அளவில் தொகுத்துத் தந்தார் பெரியார்.

காரைக்குடியில், ''அண்ணாவைத் தெரிந்தோ தெரியாமலோ தென்னாட்டு காந்தி என்கிறார்கள். அருள் கூர்ந்து அண்ணாவைக் காந்தியோடு ஒப்பிடாதீர்கள்! அண்ணா முற்போக்குவாதி, மிகச் சிறந்த பகுத்தறிவுவாதி. நாட்டில் எழுந்த பல கலவரங்களுக்குக் காரணமே காந்தியார்தான்! அதனால் அவர் பெயரோடு அண்ணாவின் பெயரை இணைக்க வேண்டாம். நமது சமுதாயத்தில் பல விஷயங்கள் சீர்கேடடைந்து, புரையோடிய புண்ணாக இருந்து வருகின்றன. உடல் உறுப்பில், கெட்டுப் போன பாகத்தை வெட்டியெறிந்து விட்டுப், புதிய பாகத்தைப் பொருத்துகின்ற பிளாஸ்டிக் சர்ஜரி போன்ற முறைதான் நமது சமுதாயத்துக்கு இப்போது தேவை'' என்று பெரியார் பேசினார். காந்தி ஜெயந்தி கொண்டாடுகிறவர்களில் எத்தனை பேர் காந்தி சொன்னவைகளைப் பின்பற்றுகிறவர்கள்? கோயில் குச்சுக்காரி விடுதி, காங்கிரசில் அயோக்கியர் புகுந்துவிட்டதால் கலைத்துவிட வேண்டும், காங்கிரஸ் அரசு மதச்சார்பற்றது—என்று சொன்னாரே, கேட்டார்களா? என்று கேட்டார் பெரியார்.

அடுத்து 6-10-68 அன்று, கரூரில் பெரியாருக்கு ''நகரும் குடில்'' வழங்கும் விழா பெருத்த கோலாகலத்துடன், ஊரே திருவிழாக் காட்சியாகச், சிறப்புடன் நடைபெற்றது. மாலையில் நடைபெற்ற ஊர்வலத்தில் கலைஞர் கலந்து கொள்ள முடியவில்லை. பெரியாருடன் மதியழகன் ரதத்தில்

அமர்ந்து வந்தார். தலைமை தாங்க இருந்த குன்றக்குடி அடிகளார் வர இயலாது போனதால், கருத்துச் செறிந்த அவர் உரையை, வீர. கே. சின்னப்பன் படித்தார். மழை வந்ததைக் குறிப்பிட்டுக், "காரோடு பெரியாருக்குக் கார் தருவோம்" என்றார் கலைஞர். காஞ்சிபுரம் மாநாட்டில் காங்கிரசை ஒழிப்பேன் என்று சூளுரைத்தவர்—ஆதரித்தே அதை அழித்தாரே! எனவும் வியந்து போற்றினார். மதியழகன் பெரியாருக்குப் பொன்னாடை போர்த்தி, 1,001 ரூபாய் பொற்கிழியும் வழங்கினார். "நகரும் குடில்" அன்றிரவு கரூரில் புறப்பட்டு, உடனடியாகத் தொலை தூரப் பயணம் ஒன்றை மேற்கொண்டது. பெரியார், மணியம்மையார், வீரமணி ஆகியோருடன் அதில் வடநாடு பயணம் சென்றார்.

7–10–68 அன்று சென்னையிலிருந்து புறப்பட்டு செகந்தராபாத்தில் 9–ந்தேதி தங்கி, அங்கு பத்திரிகையாளரிடம் பேட்டியளித்து, 12–ந் தேதி லக்நோ சேர்ந்தார். அங்கே உத்தரப் பிரதேச மாகாணத்தின் தாழ்த்தப்பட்டோர் — பிற்படுத்தப்பட்டோர் — சிறுபான்மையினர் மாநாட்டைத் துவக்கி வைத்து ஆராய்ச்சி மிக்க அரிய கருத்துரைகள் வழங்கினார். பெரியாரின் தமிழ்ப் பேச்சை வீரமணி ஆங்கிலத்தில் தர, அதை இந்தியில் மொழி பெயர்த்து அப்பகுதி மக்களுக்குச் சொன்னார்கள். திரும்பும் வழியில் அய்தராபாத்தில் இருநாள் தங்கிய பின், 20–10–68 இரவு பெரியார் குழுவினர் சென்னைக்குத்திரும்பினார்கள். இதற்கிடையில், அண்ணா ஓரளவு நலம்பெற்றுப் பூங்காவில் உலவினார்; பொருட்காட்சி பார்த்தார் என்றெல்லாம் செய்திகள் கிடைத்தன. 19–ந் தேதி கிடைத்த செய்தியில், பசியின்மையும் களைப்பும் இருப்பதாகவும், எனினும், அதைப் பொருட்படுத்தாமல் அண்ணா, மாநகராட்சித் தேர்தல்கள் சென்னையில் எப்படி நடைபெறுகின்றனவோ எனக் கவலை கொண்டதாகவும் தெரிந்தது.

பெரியார் 90–வது பிறந்தநாள் மலர், நியூயார்க் மருத்துவமனைக்கு அனுப்பி வைக்கப்பட்டிருந்தது. அதில் பெரியாரின் சில கட்டுரைகளைப் படித்தவுடன், தனது

எண்ணங்களைப் பெரியாருக்கு எழுதிய ஒரு கடிதத்தில் வடித்திருந்தார் அண்ணா:—பேரன்புடைய பெரியார் அவர்களுக்கு வணக்கம். என் உடல் நிலை நல்ல விதமாக முன்னேறி வருகிறது. வலியும் அதற்குக் காரணமாக இருந்துவந்த நோய்க்குறியும் இப்போது துளியும் இல்லை. பசியின்மையும் இளைப்பும் இருக்கிறது. டாக்டர் மில்லரின் யோசனையின்படி இந்தத் திங்கள் முழுவதும் இங்கு இருந்து விட்டு, நவம்பர் முதல் வாரம் புறப்பட எண்ணியிருக்கிறேன். இங்கு ராணி, பரிமளம், செழியன், ராஜாராம், டாக்டர் சதாசிவம் ஆகியோர் உடனிருந்து கனிவுடன் என்னைக் கவனித்துக் கொள்கிறார்கள். சென்னை மருத்துவ மனையிலும், விமான தளத்திலும் தாங்கள் கவலையுடனும் கலக்கத்துடனும் இருந்த தோற்றம் இப்போதும் என்முன் தோன்றியபடி இருக்கிறது. ஆகவேதான், கவலைப்பட வேண்டிய நிலை முற்றிலும் நீங்கி விட்டது என்பதனை விளக்கமாகத் தெரிவித்திருக்கிறேன். தங்கள் அன்புக்கு என் நன்றி. தங்கள் பிறந்தநாள் மலர் கட்டுரை ஒன்றில், மனச்சோர்வுடன், துறவியாகிவிடுவேனோ என்னவோ, என்று எழுதியிருந்ததைக் கண்டு, மிகவும் கவலை கொண்டேன். தங்கள் பணி, மகத்தான விழிப்புணர்ச்சியைச் சமூகத்தில் கொடுத்திருக்கிறது. புதிய தோர் பாதை, மக்களுக்குக் கிடைத்திருக்கிறது. நான் அறிந்த வரையில் இத்தனை மகத்தான வெற்றி வேறு எந்த சமூக சீர்திருத்தவாதிக்கும் கிடைத்ததில்லை; அதுவும் நமது நாட்டில்! ஆகவே சலிப்போ, கவலையோ, துளியும் தாங்கள் கொள்ளத் தேவையில்லை. என் வணக்கத்தினைத் திருமதி மணி அம்மையார் அவர்களுக்குத் தெரிவிக்கவும். அன்பு வணக்கங்கள்.

நியூயார்க் — தங்கள் அன்புள்ள

10–10–68 — **அண்ணாதுரை**

இந்தக் கடிதம் ''விடுதலை''யில் 22–10–68 அன்று பிரசுரமாகியிருந்தது.

புதுவையில் முதலமைச்சராயிருந்த எம். ஓ.எச். ஃபாரூக் காங்கிரசை விட்டு விலகி 13-10-68 அன்று சென்னையில் கலைஞர் முன்னிலையில் திராவிட முன்னேற்றக் கழகத்தில் சேர்ந்தார். சென்னை மாநகராட்சித் தேர்தல் முடிவுகள் 29-10-68 அன்று தெரிந்து விட்டன. தி. மு. க. 54, காங்கிரஸ் 52, முஸ்லிம் லீக் 7, சுதந்தரா 3, கம்யூனிஸ்ட் 1, உழைப்பாளர் கட்சி 1, தமிழ் அரசுக் கழகம் 1. பெரியார் இதில் குறைபாடுகள் நிலவக்கண்டார். 30-ந்தேதி தலையங்கத்தில் ''காமராஜரைப் போல் அண்ணாவும் சென்னையில் இருக்க நேர்ந்து, பிரச்சாரம் செய்திருந்தால், தி.மு.க.வுக்கு மேலும் 10, 15 இடங்கள் கிடைத்திருக்கக்கூடும்! அதனால்தான் இப்போது தி. மு. க. வுக்குத் தனிப் பெரும்பான்மை கிடைக்காது போயிற்று. உடனே தி.மு. க. குடும்பத்திற்குள் நல்லபடி பழுதுபார்த்துச் சீர்திருத்தம் சில செய்ய வேண்டும். அண்ணாவே தி. மு. கழகத்தின் சர்வாதிகாரியாக ஆகிவிட வேண்டும்! தலைவருக்குக் கீழ்ப்படிதல், கொள்கைக்குக் கீழ்ப்படிதல், ஸ்தாபனத்துக்குக் கீழ்ப்படிதல் ஆகிய மூன்று வகையான கட்டுப்பாடு உணர்ச்சியும் தி. மு. க. உறுப்பினர்களுக்கு உண்டாக வேண்டும். இந்தத் தேர்தலில் அண்ணா—காமராஜர் ஒற்றுமை ஏற்பட்டால் தமிழர் இன நலனுக்கு உகந்ததாயிருக்கும். இதை இருசாராரும் மறக்கக்கூடாது. திராவிடர் கழகம் இந்தத் தேர்தலில் தோல்வி, என்று பத்திரிகைகளில் குறும்புத் தனமாக எழுதுகிறார்கள். எப்போதும் எந்தத் தேர்தலிலும் நிற்காதது திராவிடர் கழகம்! இரண்டுபேர் சுயேச்சையாக நின்றார்கள்; நல்ல வண்ணம் தோற்றார்கள்; அவ்வளவுதான்!''—என்று பெரியார் மனந்திறந்து வரைந்திருந்தார். மாநகராட்சியின் விசேஷ அதிகாரத்தில், தாழ்த்தப்பட்டோர், பெண்கள் போன்றாரை இணைத்துத் தி. மு. க. மாநகராட்சி உறுப்பினர் எண்ணிக்கை 64 ஆக உயர்ந்து, தனிப்பெரும்பான்மை பெற்றது.

அண்ணா அமெரிக்காவிலிருந்து 2-11-68 அன்று கிளம்பி, லண்டனில் இரண்டு நாள் தங்கி, 6-ந் தேதி

சென்னை வந்து சேர்ந்தார். தமிழகமே திரண்டு வந்து அவரை வரவேற்றுக் களித்தது. இதற்கு முன்னர் இவ்வளவு மாபெரும் வரவேற்பைச் சென்னை மாநகரம் கண்டதேயில்லை! உடல் இளைத்துப் பொலிவு குன்றிக் காணப்பட்டாலும், அண்ணா நலம் பெற்றுத் திரும்பினாரே எனத் தமிழ் மக்கள் ஆறுதல் பெருமூச்சு விட்டனர். காஞ்சியிலுள்ள தமது வயதுமுதிர்ந்த தாயார் பங்காரு அம்மாளைக் காண, மறுநாள் காஞ்சி சென்று,தங்கினார் அண்ணா. "விடுதலை" அண்ணாவை வாழ்த்தி வரவேற்றது. மலேசியாவில் கோலாலம்பூரில் நடைபெற்ற பெரியார் 90-வது பிறந்த நாள் விழாவில், பிரதமரின் அரசியல் துறைத் தனிச் செயலாளர் யாப்சின்குவீ கலந்து கொண்டு சிறப்பித்தார். கேரள மாநிலத்தைத் தனியாகப் பிரிக்க வேண்டுமென்றும், இந்தியைக் கேரளாவில் திணிக்கக் கூடாதென்றும் கோரிக்கைகள் எழுந்து, தமிழ்நாட்டுக் காற்று அங்கும் வீசத் தொடங்கியதை உணர்த்திற்று. "விடுதலை" முன்னாள் துணையாசிரியர் பூ. கணேசன் தமிழ்நாடு குடும்ப நலத் துறையின் துணை இயக்குநர் என்னும் சிறப்பு அதிகாரியாக நியமிக்கப்பட்டார். அண்ணாவின் அமெரிக்கப் பயணத்துக்கு அனுமதிக்கப்பட்ட அந்நியச் செலாவணி எவ்வளவு என நாடாளுமன்றத்தில் ஜார்ஜ் பெர்னாண்டஸ் கேள்விக்கு, நிதியமைச்சர் மொரார்ஜி தேசாய் 8,165 டாலர் (61,000ரூபாய்) என அறிவித்தார். (இந்த ரூபாயை அரசுக்குத் தி.மு.க. கட்சியே செலுத்தி விட்டது.)

11-11-68 அன்று அண்ணாவின் நுங்கம்பாக்கம் இல்லத்துக்குப் பெருமதிப்பிற்குரிய பெரியார், மணியம்மையார், வீரமணி ஆகியோர் சென்று, அண்ணாவைக் கண்டனர். "நான் வந்து அய்யாவைக் காண இருந்தேன். அதற்குள் தாங்கள் முந்திக் கொண்டீர்களே" என்று கூறியவாறு, அண்ணா பெரியாருக்கு ஆப்பிள் ஒன்றை வழங்கினார்.

நாகர்கோயிலில் நாடாளு மன்ற உறுப்பினராயிருந்த மார்ஷல் நேசமணி காலமானதை அடுத்து, அங்கே இடைத் தேர்தல் வர இருந்தது. காமராஜர் நிற்கப்போவதாகச் செய்தி பரவிற்று. "நின்றால் ஜெயித்து விடுவாரே! ஜெயித்தால் மத்தியமந்திரி ஆகிவிடுவாரே என்று இராஜாஜி

அங்கலாய்க்கிறார். ஜுரமே வந்துவிட்டது இவருக்கு! ஆனால் நமது கருத்து அவர்மத்திய மந்திரியாவதால் தமிழ் நாட்டுக்கு ஒன்றும் லாபமில்லை. அவருடைய உழைப்பு தமிழ் நாட்டுக்குத்தான் தேவை'' என்று பெரியார் தமது எண்ணத்தை இயம்பினார். ''தமிழர் நிலை மாறவேண்டு மானால் நம்மைக் கைதூக்கி விடுவதற்கு ஏற்ற மாதிரிக் கலைகள் நம்மிடமில்லை. நம்முடைய கல்வியில் பகுத்தறி வுக் கருத்துகளைப் புகுத்த வழியில்லை. கிராம உத்தி யோகஸ்தர்களும் போலீஸின் அடிமட்டத்துச் சேவகர்களும் தாழ்த்தப்பட்டவர்களாகவே நியமிக்கப்பட வேண்டும். அய்க்கோர்ட் ஜட்ஜ்களை வக்கீல்களிலிருந்து தேர்ந்தெடுக் கக்கூடாது. படிப்படியாக உயர்வு பெற்றுத்தான் வர வேண்டும். நேரடியாக அய். ஏ. எஸ். அதிகாரிகளை நியமிக்கக்கூடாது. அதுவும் ரெவின்யூ இலாகாவின் கீழ் நிலையிலிருந்து பதவி உயர்வு தரவேண்டும். எல்லா நிலை யிலும், கல்வி இலவசமாகவும், கட்டாயமாகவும் ஆக்கப்பட வேண்டும். இவையெல்லாந்தான் உண்மையான முன்னேற் றத்துக்கு வழிகளாகும். துருக்கி நாடு பழைமைப் பிடிப்பில் சிக்கிக் கிடந்தபோது எப்படி இருந்தது? கமால்பாட்சாவின் புரட்சிகரமான சீர்திருத்தம், அய்ரோப்பியரோடு வித்தி யாசம் காண முடியாதபடி துருக்கியரை நாகரிகப்படுத்தி விட்டது. அதே போல நமது பிள்ளைகளையும் இளமையி லிருந்தே பழக்க வேண்டும். தமிழில் பேசக்கூடாது. கையால் சாப்பிடக்கூடாது. வேட்டி சட்டை புடவை எல்லாம் மாற்றி, ஆங்கிலேய முறை உடை உணவு மொழி ஆகிய வற்றுக்கு மாறுதல் செய்யப்படவேண்டும்'' என்றெல்லாம் நவீனக் கருத்துகளைப் பெரியார் வலியுறுத்தினார்.

''மதுவிலக்கு என்பது இமயமலை அளவு முட்டாள் தனம். காந்தியாரின் காட்டுமிராண்டித்தனமான கொள்கை களில், வெற்றி பெறாத ஒன்றாகும் இது. மது விலக்கால் எந்தப் பயனும் கிடையாது. இதனால் தொழிலாளரின் தேசிய சக்தி (Energy) தான் குறைந்து போய்விட்டது. காங்கிரஸ்காரர்களைக் கெடுத்துப் பதவியிலிருந்து விரட்டி

யது போலவே இந்த மதுவிலக்கு இவர்களையும் கெடுத்து விரட்டிவிடுமோ என்றே நான் பயப்படுகிறேன்'' என்று பெரியார் ஒரு தலையங்கத்தில் அச்சந்தெரிவித்தார். பூம்புகாரில் கண்ணகிக் கோட்டம் எழுப்பும் செய்தி கேள்வியுற்று "பத்தினி பதிவிரதை'' என்று 11-11-68-ல் பெரியார் தலையங்கத்தின் வாயிலாகச் சீற்றம் தெரிவித்தார்:— "இடித்தொழிக்க வேண்டிய கோயில்களைப் பாதுகாக்க வேண்டிய சின்னங்களாகக் கொள்ளுவதும், கண்ணகிக்குக் கோயில் கட்டுவதும், முன்னேற்றக் கழகத்தின் முக்கியமான முதல் பணி என்றால், இந்தப் பரிதாபத்திற்குரிய தமிழர்களின் எதிர்காலம் என்ன ஆவது? மாண்புமிகு கருணாநிதி அவர்களை மனம் மொழி மெய்களால் .பாராட்டுகிறவன் நான். ஆனால் கம்பன் கண்ணகி பாரதிகளுக்குச் சிலைகள் வளர்ந்து கொண்டே போனால், கையும் மெய்யும் சகித்தாலும் மனம் சகிக்க மாட்டேன் என்கிறதே! இந்தச் சிலைகள் எழுப்புவதிலுள்ள அக்கறை தன்னுடைய சிலை விஷயத்தில் மாறுபட்டு, செய்த சிலை மூலைக்குப் போய் விட்டதே!'' என்று.

8-11-68 அன்று பெரியார், அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பொதுப் பேரவையின் சிறப்புக் கூட்டத்தில் பேருரை ஆற்றினார். துணைவேந்தரான டாக்டர் எஸ். பி. ஆதிநாராயணன் தலைமை ஏற்றார். பெரியார் மாணாக்கருக்கு அறிவுரைகள் வழங்கினார்:— "எந்தக் காரியமானாலும் ஏன் எதற்கு எதனால் என்று சிந்தியுங்கள். கலவரம் செய்வதும் காலித்தனம் விளைப்பதும், மாணாக்கர் இங்கு அறிவுப் பெருக்கத்திற்காக வந்துள்ள பெரிய ஒரு இலட்சியத்திற்கே கேடானதாகும். நம்முடைய கடவுள் மதம் இவை யாவும் மக்களை மடையர்களாக்கவே பயன்படுகின்றன. அவற்றை அறவே ஒழித்துக் கட்டுங்கள்'' என்று பேசினார் பெரியார்.

" விடுதலை '' — எழுத்துகள் புதுப்பிக்கப்பட்டுப் பொலிவுடன் காட்சி தந்தது. நாள்தோறும் "பெரியார் பொன் மொழிகள்'' தவறாமல் இடம் பெற்றன. உலக

பாங்க் தலைவர் மக்னமாரா தமிழ் நாடு அரசின் சிறந்த நிர்வாகத்தைப் பாராட்டிப் புகழ்ந்தார். டெல்லி மக்களவையில் 'தமிழ் நாடு' பெயர் சூட்டும் தீர்மானம் வெற்றியுடன் மலர்ந்தது. அண்ணா வாரந்தோறும் சனி ஞாயிறுகிழமைகளில் காஞ்சியில் தங்கி ஓய்வெடுத்து வந்தார். வேலூர் நாராயணன் சென்னை மாநகர மேயரானார். நடைபாதைக் கோயில்களை அகற்று வதென அவர் உறுதி பூண்டார். மிரட்டல் கடிதங்கள், காகிதப் புலிகளின் கதறல்களை அவர் பொருட்படுத்த வில்லை!

திருச்சியில் நவம்பர் 15-ம் நாள் கி. ஆ. பெ. விசுவநாதம் 70-வது பிறந்த நாள் விழா நிகழ்ச்சிகளில் பெரியார் பங் கேற்றார். சி. சுப்ரமணியம் அவர்களின் மகள் அருணா—ஈரோடு டாக்டரும் பெரியாரின் அன்பருமான எல். கே. முத்துசாமி அவர்களின் மகன் ராமகிருஷ்ணன் ஆகியோரின் திருமணம், 24-11-68 அன்று சென்னை ஆபட்ஸ்பரியில் நடை பெற்றபோது, பெரியார் சென்றிருந்தார். காமராஜ், நிஜலிங்கப்பா ஆகியோர் பெரியாரிடம் வந்து, வணக்கம் தெரிவித்து, நலம் விசாரித்தனர். அடுத்த நாள் "விடுதலை" யில் பெரியார் "கூலிக்காகவும் வரும்படிக்காகவும் காங்கிர சில் இருக்கிறவர்கள் நீங்கலாக மற்றவர்கள் காங்கிரசைக் கைகழுவிவிட்டு வெளியே வாருங்கள்! காங்கிரஸ் பத்திரி கைகள் என்பவைகளை உங்கள் கைகளாலும் தொடா தீர்கள்! எவ்வளவு மோசமான தமிழன் ஆனாலும் தமிழன் என்கிற உணர்வு கொள்ளுங்கள்" என்று வேண்டினார். இதற்கு முன்னதாகச் சேத்தியாதோப்பு பொதுக் கூட்டம் ஒன்றில் "அரசு அலுவலகங்களிலுள்ள கடவுள் பட நீக்கக் கிளர்ச்சி ஒன்று நடத்த இருக்கிறேன். உருவமில்லாதவர் கடவுள் என்று சொல்லிக்கொண்டே, பலவிதப் படங்களை மாட்டித் தொங்கவிடும் மடமையை ஒழிக்கப் பெருவாரி யாகக் கிளர்ச்சியில் ஈடுபட முன் வாருங்கள்!" என்று அழைப்பு விடுத்தார் பெரியார்.

தமிழ் நாடு பெயர் மாற்ற வெற்றி விழாக் கூட்டத் தில் அண்ணா 1-12-1968 அன்று பேசினார். மூன்று

மாதமாகப் பேசவிடாமல் உடல் நலிவு தடுத்ததல்லவா? அன்றுங்கூடப் பொதுக் கூட்டத்தில் பேச வேண்டா மென்றுதான் மருத்துவர்கள் ஆலோசனை கூறினார்கள். "இன்றைய தினம் நான் பேசுவதால், என் உடலுக்கு ஊறு நேரிடுமானால், இந்த உடலிருந்து எனக்கு என்ன பயன்?" என்று கேட்டுவிட்டு அண்ணா, தமது அரசின் மாற்றிட முடியாத முப்பெரும் சாதனைகளைக் குறிப்பிட்டார். பள்ளிகளில் இந்தியை ஒழித்தது; சுயமரியாதைத் திருமணச் சட்டம்; தமிழ் நாடு பெயர் மாற்றம் ஆகியவை.

ஆனால் பெரியார் என்ன கருதினார், தமிழ் நாடு பெயர் மாற்றம் பற்றி? 6-ந் தேதி தலையங்கம்—"இந்தப் பிரச்சினை வெற்றி பெற்றதற்கு அண்ணாவின் ஆட்சிதான் காரணம். ஆனால் தமிழ் மக்களுக்கு இந்தப் பெயர் மாற்றத்தினால் என்ன பயன்? இது எப்படியிருக்கிறதென்றால், நமது ஆள் எதிரியிடம் உதை வாங்காமல் தப்பித்து வந்துவிட்டான், என்பது போலத்தான் இருக்கிறது. ஆசாமிக்குக் கண் பொட்டை தான்; என்றாலும் பெயர் கண்ணப்பன் என்பது போல் தோன்றுகிறது எனக்கு. இப்போதும், டில்லி ஆட்சி இந்தப் பெயர் மாற்றத்தை மறுத்திருந்தால் நம் கதி என்ன? ராஜிநாமா செய்வோம். அது நமது பலவீனத்தைத்தானே காட்டுகிறது? எப்படியானாலும், இது மற்ற கட்சியாரால் செய்து முடித்திருக்க இயலாது என்பதை ஒத்துக்கொள்ள வேண்டியதுதான்! ஆயினும், இதற்கு "அண்ணாதுரை நாடு" என்பதாகப் பெயர் மாறினாலும், தமிழர்கள் அடிமை நாட்டில் அடிமையாக வாழ்வது மாற்றமடையுமா?" என்று வினவியது!

பூரிசங்கராச்சாரியாரின் திமிர்வாதத்துக்கு உதாரணமாக அவரே எழுதிய வாசகம் ஒன்று இதோ:— "சூத்திரர்கள் கிறிஸ்தவர்கள், முஸ்லீம்கள் நாட்டுப் பற்றாளர் அல்லர். இந்தக் குழுவைச் சேர்ந்தவர்களால், சமைக்கப்பட்ட உணவை உண்ணுகின்ற மற்றவர்கள்— சமைத்தவர்யாரென்பதைப் பற்றியே கவலை கொள்ளாமல் தின்றுவிடுகின்ற நாய், பூனை, போன்ற விலங்குகளுக்கு ஒப்பானவர்கள்!" இந்த எழுத்துக்காக அவர்மீது

சட்டப்படி நடவடிக்கை எடுக்க இடமில்லை என்று மத்திய உள்'துறை அமைச்சர் சவான் கூறியது சரியல்ல; இ.பி.கோ. 295-A பிரிவின்படி நடவடிக்கை எடுக்கலாம் என "விடுதலை" 7-12-68 அன்று எடுத்துக் காட்டிற்று. புதுவை மாநில நகரசபைத் தேர்தல்களில் தி. மு. க. கூட்டணி பெருவாரியாக வெற்றி பெற்றிருந்தது. ஃபாரூக் தொலைபேசியில் இதைக் கூறியபோது அண்ணா அவரை வெகுவாகப் பாராட்டினார்.

சென்னை மேயருக்கு நடைபெற்ற பாராட்டுக் கூட்டத்தில், பெரியாரும் வீரமணியும் பங்கேற்றுச் சிறப்பித்தனர். நீதிபதி பி. எஸ். கைலாசம்-திருமதி சௌந்தராகைலாசம் (ஒரு காலத்தில் இந்த அம்மையாரின் தாத்தா, பெரியாருக்கு அணுக்கத் தொண்டராம்) ஆகியோரின் மகள் நளினி—ராஜாசர் முத்தையச் செட்டியாரின் தங்கைமகன் சிதம்பரம் ஆகியோரின் திருமண விழாவில் பெரியார், மணியம்மையார். ஆளுநர், சர்தாரிணி உஜ்ஜல் சிங், பி. டி. ராஜன், நாவலர், கே. ஏ. மதியழகன், சி. சுப்ரமணியம், பி. வி. ராஜமன்னார் முதலியோர் கலந்து கொண்டு சிறப்பித்தனர். மறு நாள் 11-12-68 "விடுதலை" யில் பெரியார் "இந்த வழிகாட்டித் திருமணத்திற்குச் செட்டி நாட்டரசர் போன்ற செட்டியார்கள் வந்து கவுரவித்திருக்க வேண்டும். கவுண்டர்—செட்டியார் கலப்புத்திருமணம் என்று பயந்துவிட்டார்கள். செட்டிநாட்டில் நான்நடத்திய எத்தனையோ கலப்புத் திருமணங்களில் ராஜாவும் கலந்து கொண்டாரே!" என்று எழுதினார்.

14-12-1968 அன்று, சிறுநீர் இறங்குவதில் தொல்லை ஏற்பட்டவற்காகப் பெரியார் சென்னை பொதுமருத்துவ மனையில் சேர்ந்து, 28-ந் தேதி மாலை இல்லந் திரும்பி, 31-ந் தேதி முதல், நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டார்.

நீண்ட இடைவெளிக்குப் பின் அண்ணா 21-ந் தேதி கோட்டை சென்றிருந்து, டெல்லியில் திட்டக் குழுக் கூட்டத்தில் கலந்து கொள்ளப் புறப்பட்டார். மற்ற சிற்றூர்களுக்கெல்லாம் எடுத்துக் காட்டான கழகக் கோட்டையான இடையாற்றுமங்கலம் தோழர்

களிடையிலும், சிறிது சுய நலம் தலை தூக்கவே, அங்கே, சுயமரியாதைப் பிரச்சார நிறுவனத்துக்கு வழங்கப் பெற்றிருந்த சொத்து சம்பந்தமாக வழக்கு ஒன்று எழுந்தது. திருச்சி வழக்குரைஞரும், நீண்ட நாள் கழகத் தலைவருமான தி.பொ. வேதாசலம், எதிர் தரப்பில் சாட்சி கூறும் அவலத்தை நாடு கண்டது! ஆனால் வழக்கு, கழகத்துக்கே வெற்றியாய் முடிந்தது 23-12-68 செய்தியின்படி!

மருத்துவமனையில், வாய் சும்மாயிருந்தாலும் பெரியாருக்குக் கை சும்மாயிருக்குமா?:"நாகர்கோயில் தேர்தலில் காமராஜர் வெற்றி பெற்றே ஆகவேண்டும். அவரால் தமிழ் மக்களுக்கு அளவிட முடியாத நன்மைகள் கிடைத்துள்ளன. அவரை எதிர்க்க வேண்டாம் என்று சொல்வதற்கு, நான் தி. மு. க. வுக்கு ஒன்றும் உதவி செய்திடவில்லை. ஆனாலும், அவர்களுக்கு இராஜாஜியைத் திருப்திப்படுத்துவது எப்படி கடமையாக இருக்கிறதோ அப்படியே தி. மு. க. வுக்கு ஞாபகப்படுத்துவதும் என் கடமையாக இருப்பதால், சொல்லுகிறேன்!" என்று தலையங்கமே தீட்டினார். "நமது பிற்படுத்தப்பட்ட மக்கள் சீக்கிரம் படித்து முன்னேற, 4-வது வயதிலிருந்தே படிப்பு தொடங்கவும், கட்டாயக் கல்வியைக் கண்டிப்பாக அமுல் செய்யவும், பகுத்தறிவின் அடிப்படையில் பாடத் திட்டங்களை அமைக்கவும் நமது முதலமைச்சரும் கல்வி அமைச்சரும் ஆவன செய்ய வேண்டும்" என்று இன்னொரு தலையங்கமும் எழுதினார் பெரியார்.

தஞ்சை மாவட்டம் கீழவெண்மணி கிராமத்தில் 42 தாழ்த்தப்பட்ட மக்களை வீட்டோடு கொளுத்திச் சாம்பலாக்கிய கறைபடிந்த வரலாறு, 24-12-68 அன்று எப்படியோ நிகழ்ந்து, அண்ணாவின் உடல் நலத்தை மேலும் குலைத்துவிட்டது. "இந்தியாவை ஆள இந்தியருக்குத் தகுதியில்லை. இது ஜனநாயகத்தால், ஏற்பட்ட மிகப்பெரிய கேடாகும். எத்தனையோ பல வன்செயல்கள் தொடர்ந்து நடைபெற்று, இன்று கீழவெண்மணி போன்ற

நடுங்கத்தக்க அக்கிரமம் வரை கொண்டு வந்து விட்டு விட்டது. நம்முடைய நாடு மீண்டும் அரசநாயகமாகப் போகவேண்டும். அல்லது தனித்தமிழ் நாடு பிரித்துத் தரப்படவேண்டும். அல்லது அந்நிய ஆட்சி வேறு ஏதாவது வரவேண்டும். Patriotism is the last refuge of a scoundral- Dr. Johnson. தேசபக்தி என்பது அயோக்கியனின் கடைசிப் புகலிடம்—ஜான்சன்'' —என்று வேதனையை வெளியில் காட்டும் தலையங்கம், பெரியாரால் 28–12-78 ''விடுதலை''யில் எழுதப்பட்டது.

நாகர்கோயிலில் தேர்தல் பிரச்சாரத்துக்காகச் சென்ற இடத்தில், அமைச்சர் ஏ. கோவிந்தசாமி இரத்த வாந்தி எடுத்து, 6-1-69 அன்று அங்கேயே சிகிச்சை பெற்று, சென்னைக்குக் கொண்டு வரப்பட்டார். நம்முடைய அமைச்சர்களும், என்னைப் போலவே உடல் நலமில்லாதவர்களாகப் போய்விட்டார்களே என அண்ணா கவலைப்பட்டார் நாகரசம்பட்டியிலுள்ள உயர் நிலைப் பள்ளிக்குப் பெரியார் ராமசாமி கவர்ன்மெண்ட் (போர்டு) உயர் நிலைப் பள்ளி எனப் பெயர் மாற்றும் அரசு ஆணை 8–1–69 அன்று வழங்கப்பட்டது. பொங்கலன்று தியாகராய நகர் வாணிமகால் அருகே, கலைவாணர் என். எஸ். கிருஷ்ணனுடைய முழு உருவச் சிலையை, உடல் நலிவோடு அண்ணா திறந்து வைத்து உரையாற்றினார். இதனுடைய அவலங்கலந்த முக்கியத்துவம், அப்போது தெரியவில்லை! இந்த விழாவில் கலைஞர், எஸ். எஸ். வாசன், ஏ. எல். சீனிவாசன், திலீப்குமார் ஆகியோரும் பங்கேற்றனர். 14–1–69 முதல் தமிழ் நாடு என்ற பெயர் புழக்கத்தில் வருவதற்கான அரசாணையும் பிறப்பிக்கப்பட்டது. சென்னை உயர்நீதி மன்ற நீதிபதிகளாக கே. நாராயணசாமி முதலியார், கே. எஸ். பழனிச்சாமி கவுண்டர், எஸ். கணேசன் (நாடார்)ஆகியோர் நியமனம் பெற்றனர்.

காமராஜர் நாகர்கோயிலில் வெற்றி பெற்றதும், பெரியார் 11–1–69 அன்றே தலையங்கம் தீட்டிவிட்டார். ''காமராஜர் ஜெயித்தார். தி. மு. க. (தேர்தலில் நிற்கா விட்டாலும்) தோற்றது. காமராஜர் 2, 49, 437. தோற்றவர்

1,21,236. இருந்தாலும், காங்கிரசைவிட தி. மு. க. பெரிய கட்சிதான்! அவர்களுடைய கெட்ட வாய்ப்பாக இப்போது இருந்து வருவது இராஜாஜியின் சம்பந்தம்தான். இது எப்படி என்றால் ஒரு படி அரிசியும் ஒரு படி உமியும் ஒன்றாய்க் கலந்து, உமியைப் புடைத்து ஊதித்தள்ளி, மீதியைச் சாப்பிடுவது போன்றதாகும். இதில் இப்போது எனக்குள்ள கவலை, நடக்க இருக்கும் நகரசபைத் தேர்தல்களிலும் தி. மு. க. வைப் பாதிக்குமே என்பதுதான். ஆகையால் அண்ணா அவர்கள் இதற்குப் பிராயச் சித்தம் தேடித், தோல்வியைச் சமாளிக்கவேண்டும். என்னைப் பொறுத்த வரையில் காமராஜர் எப்போதும் தமிழராகவே இருப்பார் என்பதில் நம்பிக்கை உண்டு.'' 18-ந் தேதி விருதுநகரில் காமராஜரின் அன்னை சிவகாமி அம்மையார் மரணம் அடைந்தார். அண்ணா அனுதாபச் செய்தி அனுப்பினார். ''விடுதலை'' துணைத்தலையங்கம் தீட்டியது.

அண்ணாவின் உடல் நலம் நாள்தோறும் சீர்கேடு அடைந்து கொண்டே வந்தது. ஏ. கோவிந்தசாமி இருந்து வந்த திருவரங்கம் என்ற இல்லம், குளிர்சாதன வசதியுடன் திருத்தி அமைக்கப்பட்டது. அங்கு செல்ல விரும்பாமல் அண்ணா நுங்கம்பாக்கம் சொந்த வீட்டிலேயே இருந்தார். உணவு ஒரு பருக்கையும் உட்செல்லவில்லை. வேலூர் செல்ல ஏற்பாடுகள் நடந்தன. அண்ணா புறப்படுந் தறுவாயில் மறுத்துவிட்டார். உடனே டாக்டர் கிருஷ்ணமூர்த்தி உதவியுடன் அடையாறு கான்ஸர் இன்ஸ்டிட்யூட்டில் ஏற்பாடுகள் செய்யப்பட்டன. 20-1-1969 அன்று, சிங்க ஏறுபோல் விறுவிறுப்புடன் நடந்து சென்று, தமது அறையில் நுழைந்தார். மருத்துவ நிபுணர் குழு அமைக்கப் பட்டது. அமெரிக்க மருத்துவர் டாக்டர் மில்லர் அழைக்கப்பட்டார். (இரகசியமாக வைத்திருந்த இச்செய்தியைச் செழியனே அண்ணாவுக்குத் தெரியச் செய்துவிட்டார்) பம்பாயிலிருந்து டாக்டர் பேமாஸ்டர், டாக்டர் ஜகாவாலா வந்தனர். வேலூரிலிருந்தும் மருத்துவர்கள் வந்தனர். உணவுக் குழலில பழைய நோயின் அறிகுறி மீண்டும் தென்படுவதாக அறிவித்தனர். அமெரிக்காவிலிருந்து

மில்லருடன் டாக்டர் ஹென்ஸ்கேயும் வந்தார். 25ந் தேதி அறுவை நடந்தது. மறுநாள் முதல் ரேடியோக் கதிர் சிகிச்சை தொடங்கப்பட்டது.

22ந் தேதி காமராசரும், 24ந் தேதி இரவு 10–30 மணிக்குப் பெரியாரும் வந்து பார்த்தனர். 27–ந் தேதி அமெரிக்க டாக்டர்கள் திரும்பிச் சென்றனர்.

1969 மார்ச் 1, 2 தேதிகளில் சேலத்தில் இழிவு நீக்கக் கிளர்ச்சி மாநாடு நடத்தப் போவதாகப் பெரியார் 26–1–69 அன்று அறிவித்தார். "இது விளம்பர மாநாடல்ல; இரண்டில் ஒன்று பார்த்துவிடும் மாநாடு. 5,000 பேராவது சிறை செல்லத் தயாராக வேண்டும். 4, 5 இடங்களில் தொடர்ந்து 100 நாள் 150 நாள் நடத்தப்பட வேண்டும். தோழர்கள் நன்கொடையாகப் பணம், அரிசி, கருப்புத்துணி ஆகியவற்றை அனுப்பி உதவுங்கள்" என்று எழுதிய பெரியார், அடுத்து, அண்ணாவின் உடல் நிலை மோசமானது கேட்டு, மாநாட்டை ஒத்திவைத்துவிட்டுச் சேலத்திலிருந்து 30ந்தேதி சென்னைக்கு விரைந்தார்!

தமிழ் நாட்டின் பட்டி தொட்டிகளில் மக்கள் கூட்டம் வானொலிப் பெட்டிகளுக்கு முன்பாகக் குவிந்து கிடந்தது. சென்னை அடையாறுப் பகுதியில் சாலைகளிலும் தெருக்களிலும், இரவும் பகலும், நகர இடமின்றி, வெள்ளம் போல் தமிழர் கூட்டம் மொய்த்துக் கிடந்தது. சட்டமன்றம் நடந்துகொண்டிருந்த நேரம். அன்றாடம் அண்ணாவின் உடல் நிலை பற்றி மன்றத்துக்கு அறிவிக்கப்பட்டு வந்தது. 28ந்தேதி முதல்வரின் இலாக்காக்கள் மற்ற அமைச்சர்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டன. 29 காலை 11மணிக்குத் திடீரென்று நெஞ்சைக் குலுக்கும் ஒரு செய்தி! சட்டமன்றம் ஒத்திவைக்கப்பட்டு, அமைச்சர் பெருமக்கள் அடையாறு நோக்கிப் பறந்தனர்! காமராஜர், சி. சுப்ரமணியம், சம்பத் ஆகியோரும் வந்தனர். ஈசல் கூட்டமென மக்கள் வெருண்டோடி வந்தனர். செய்தி வதந்தியென அறிந்ததும், அனைவருடைய முகத்திலும் நிம்மதி படர்ந்தது! 30ந்தேதி சிறிது அபிவிருத்தி என்றனர். அண்ணா படுக்கையிலிருந்தபடியே கார்ட்டூன்படங்கள் வரைந்து கொண்டிருந்தார்.

பெரியார், அடையாறுப் பகுதியிலேயே, வீரமணியின் இல்லத்தில் தங்கிக்கொண்டு, மருத்துவமனைக்கு, நாள் தோறும் கவலை தேங்கிய முகத்துடன் வந்து போனார். 31–1–69 கவலைக்கிடம் நீடிக்கிறது. 1-2.1969 நம்பிக்கை தென்படுகிறது. 2–2–69 டாக்டர்கள் போராடி வருகின்றனர். காலை முதல் மருத்துவமனையிலிருந்த பெரியார், வீரமணியின் இல்லம் சென்றார்; நள்ளிரவில்!

அதே நள்ளிரவு!

மணி 12–40. அந்தோ! பேரிடி, பூகம்பம், பிரளயம்! என். எஸ். சம்பந்தம் பெரியாரை அழைத்து, அண்ணாவின் மறைவு குறித்துச் சொன்னார். திடுக்கிட்டெழுந்து பெரியார் தம் வலது கையால் ஓங்கிச் சுவரில் அறைந்து அறைந்து, "போச்சு போச்சு. எல்லாம் போச்சு!" என்று கதறினார். உடனே மணியம்மையாருடன் வேனில் ஏறிப் புறப்பட்டு, அடையாறு மருத்துவமனை சேர்ந்தனர். அண்ணாவின் உடலை ஆம்புலன்சில் ஏற்ற, எடுத்து வந்தனர். தந்தை தனயனை வெறிச்சென்று பார்த்தார். "அய்யா நாங்கள் அநாதையாகிவிட்டோமே!" என்று கலைஞர் பெரியாரைக் கட்டிக்கொண்டு அழுதார். ஏ. கோவிந்தசாமியும் அலறித் துடித்தழுதார். மக்கள் வெள்ளம் கண்ணீர் வெள்ளத்தில் மறைந்தது!

3ந்தேதி காலை 11 மணியளவில் கையில் ஒரு மலர் வளையத்துடன் பெரியார், அண்ணாவின் சடலம் வைக்கப் பட்டிருந்த ராஜாஜி மண்டபத்துக்குள் செல்ல முனைந்தார். அன்று சென்னை மாநகரத்தில் காணப்பட்ட ஈடு இணையில்லாச் சோகச்சூழ்நிலையில் அவரால் உள்ளே நுழையவே முடியவில்லை. எனவே மலர் வளையத்தை ராஜாராமிடம் தந்துவிட்டுப் பெரியார் திரும்பிச் செல்ல நேரிட்டது.

"நடக்கக் கூடாதது நடந்துவிட்டது. எதிர்காலம் இருட்டாகவே இருக்கிறது. நாலு கோடி மக்களையும் பொறுத்த, பெரிய, பரிகாரம் செய்ய முடியாத துக்க சம்பவம் ஆகும்" என்று—உடனடிச் செய்தியாகப், பெரியாரால் இவ்வளவுதான் சொல்லமுடிந்தது! 3–2–69 "விடுதலை"

யில் "அண்ணாவின் முடிவு" என்று பெரியாரின் தலை யங்கம் வெளியாயிற்று:— "இன்று அண்ணா அவர்கள் முடிவு எய்திவிட்டார். இந்த முடிவு தமிழ் நாட்டின் நான்கு கோடி மக்களை மாத்திரமல்லாமல், இந்தியாவி லுள்ள மக்களை மாத்திரமல்லாமல், உலகில் பல பாகத்தி லுள்ள மக்களையும் பெரும் துக்கத்தில் மூழ்கடித்திருக்கும் முடிவாகும்.

அண்ணாவுக்குச் செய்த வைத்திய சிகிச்சை உலகத்தில் உள்ள வேறெவருக்கும் செய்திருக்க முடியாது. டாக்டர் சதாசிவம் தலைமையில் அமைந்த குழுவினரும், மற்றும் வேலூர் டாக்டர்கள் டாக்டர் ஜான்சனும் டாக்டர் பதம் சிங்கும், டாக்டர் கிருஷ்ணமூர்த்தியும் அரும்பாடு பட்டிருக் கிறார்கள்.

அண்ணாவின் மறைவு தமிழ் நாட்டிற்கு மாபெரும் நஷ்டம் என்றே சொல்லவேண்டும். தமிழ் நாடும், தமிழர் சமுதாயமும் அண்ணா ஆட்சியில் எவ்வளவோ அதிசயமான முன்னேற்றம் அடையக் காத்திருந்தது. நான் இந்த மந்திரி சபையையே பெரியாருக்குக் காணிக்கையாக வைத்து விட்டேன் என்று அண்ணா சொன்னதை—பெரியாரின் கொள்கைப்படி நான் நடப்பேன் என்று சொன்னதாக நான் கருதினேன்.

நாட்டில் எல்லாக் கட்சியாருடனும், எல்லா மக்களுட னும் மிக்க அன்புக்குரியவராகவும், நேசமாகவும் இருந்து வந்தார். அண்ணாவின் குணம் மிக தாட்சண்ய சுபாவ முடையது. யாரையும் கடிந்து பேசமாட்டார். தன்னால் முடியாத காரியமாய் இருந்தாலும், முடியாது என்று சொல்லத் தயங்குவார்.

காங்கிரஸ் ஸ்தாபனம் என்பது அதிகார சக்தி கொண்ட ஸ்தாபனமாகும். அண்ணாவின் முன்னேற்றக் கழக ஸ்தாபனமானது, அதிகார சக்தி இல்லாதது என்பதோடு, அன்பினாலேயே கட்டுப்படுத்தப்பட்ட ஒரு நட்பு நிலை ஸ்தாபனமாகும். இதற்கு உதாரணம் என்னவென்றால், தி. மு. க.வில் ஏமாற்றமடைந்த எத்தனையோ பேர்

(சி. பி. சிற்றரசு, என். வி. நடராசன், அன்பில் தர்மலிங்கம், சி. பா. ஆதித்தனார், ம. பொ. சிவஞானம், எட்மண்ட் பெர்னாண்டோ, இரெ. இளம்வழுதி, பெ. சீனிவாசன், ஆகிய அமைச்சுப் பதவி வேட்பாளர்களைப் பெரியார் குறிப் பிடுகிறார்) இருந்தாலும் கழகத்திற்குள் ஒரு பூசலோ, தனிப்பிரிவோ, கருத்து வேற்றுமைக் கோஷ்டியோ இல்லாமல், ஒரு குடும்பம் போலவே வாழ்ந்து வருகின் றார்கள் என்றால், இதற்கு அண்ணா நடந்து கொள்ளும் தன்மையேதான் காரணமாகும்.

நான், தி. மு. க. தேர்தலில் வெற்றி பெறும் வரை, அக்கழகத்திற்குப் படு எதிரியாக இருந்தவன். தேர்தலுக்குப் பிறகு அண்ணா என் எதிர்ப்பை மறந்து, அடியோடு மறந்து, மிக்க பெருந்தன்மையுடன், நட்புக் கொள்ள ஆசைப்பட்டு, என்னை அவர் பிரிவதற்கு முன் இருந்த மரியாதையுடன், நண்பராகவே நடத்தினார்.

இப்படிப்பட்ட ஒரு அற்புத குணம் படைத்த அண்ணா முடிவானது, தமிழருக்கும் தமிழ் நாட்டிற்கும் பரிகாரம் செய்ய முடியாத நட்டமேயாகும். மனிதன் தன் வாழ் நாளில் அடைந்த வெற்றிக்கு, மேன்மைக்கு அறிகுறி, முடிவின்போது அடையும் புகழ்தான் என்பது எனது கருத்து. அதுபோலவே அண்ணாவின் புகழ், மிகமிகப் பாராட்டுக்குரியதாகும். இப்படி எல்லாரும் துக்கம் கொண்டாடும்படியான அரிய வாய்ப்பு, எல்லாருக்கும் கிடைக்காத வாய்ப்பாகும்!

இனியும் அவர் புகழ் ஓங்கவேண்டுமானால், அண்ணா வுக்குப் பிறகும் அண்ணா இருப்பது போலவே காரியங்கள் நடைபெற வேண்டும். தி. மு. க. தோழர்களையும் நான் எனது தி. க. தோழர்களைப் போலவே கூட்டுப் பணியாளர் களாகவே கருதுகிறேன். பொது மக்கள் எல்லாருமே ஒத்துழைத்து, மக்களுக்கு வேண்டிய நலன்களைப் பெறப் பாடுபட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.''

மறுநாள் வானொலியில் பெரியார் இரங்கலுரை ஆற்றினார்: ''அண்ணா முடிவெய்தி விட்டார். அண்ணா

வாழ்க! அதாவது அண்ணா கொள்கை வாழ்க! நோய் வருவதும், முடிவெய்துவதும் மனித ஜீவனுக்கு இயற்கையே ஆகும். அதற்காக மக்கள் வருந்துவதும், துக்கம் கொண்டாடுவதும் மக்களுக்கு ஒரு சம்பிரதாயமே ஆகும். என்றாலும், இவ்விஷயத்தில் அறிஞர் அண்ணா அவர்கள் சம்பிரதாயத்தையெல்லாம் தாண்டி, மக்களின் உச்சநிலைத் துக்கக் கொண்டாட்டத்தைப் பெற்று விட்டார்!

யானறிந்த வரை, சரித்திரம் கண்டவரை, அண்ணா முடிவுக்குப் பொதுமக்கள் காட்டிய துக்கக் கொண்டாட்டத்தில் 4-ல், 8-ல் ஒருபங்கு அளவுகூட வேறு எவருடைய முடிவுக்கும் காட்டியதான நிகழ்ச்சி, கிடையவே கிடையாது!

அந்த அளவுக்கு அண்ணா தமிழ் மக்கள் உள்ளத்தில் இடம் பெற்றுவிட்டார்கள். இது அண்ணாவின் இரண்டாண்டு ஆட்சியால் தமிழர்களுக்கு ஏற்பட்ட உணர்ச்சி என்பதோடு, இவ்விஷயத்தில் மனித வாழ்வில் வேறு யாருக்கும் கிடைக்க முடியாத பெருமையை அண்ணா அடைந்துவிட்டார்! எனவே, அண்ணாவின் நற்குண, நற்செய்கை, பெருமைக்கு, இதற்கு மேல் எடுத்துக் காட்டு, காட்ட முடியாது.

இன்றும் மக்களுக்கு உள்ள கவலை எல்லாம், நானறிந்த வரை, அண்ணா முடிவடைந்து விட்டாரே; இனி ஆட்சி எப்படியிருக்குமோ? என்பதுதான்! நான் சொல்லுவேன். 'அண்ணா இறந்துவிட்டார்; அண்ணா வாழ்க!' என்பதற்கிணங்க, இனி நடைபெறும் ஆட்சியில் எவ்வித மாறுதலும், திருப்பமும் இல்லாமல், அவரது கொள்கை வளர்ந்து, ஆட்சியாளர்கள் தாங்கள் தமிழர்கள், தமிழர்களுக்காகத், தமிழர்களாக ஆட்சி செய்கிறோம் என்கின்ற உணர்ச்சியோடு, மற்ற இனத்தார் காட்டும் இன உணர்ச்சியைத் தங்களுக்கு வழி காட்டியாக வைத்துக்கொண்டு, அதன்படி நடந்து கொள்வார்கள் என்றே கருதுகின்றேன். இயற்கையும் அவர்களை அந்தப்படியே நடக்கச் செய்யும் என்பது உறுதி. அதற்காக யாரும் கவலைப்பட வேண்டாம் என்று வேண்டிக் கொள்ளுகிறேன்.

தமிழ் மக்கள் அண்ணாவிடம் காட்டிய அன்பு போலவே இன்றைய நமது மந்திரிகள் எல்லோரிடமும் அன்பு காட்டிப் பரிவாய் நடந்து கொள்ள வேண்டுமென்று வேண்டிக் கொள்ளுகிறேன்." 4–2–69 இரவு 8 மணிக்கு இது ஒலிபரப்பாகியது. மக்கள் கூட்டம் 15 லட்சம் பேர் என்று பெரியார் குறிப்பிட்டிருந்தார்.

அண்ணா இயற்கை எய்தியவுடனே, நுங்கம்பாக்கம் இல்லத்துக்குச் சடலம் கொண்டு செல்லப்பட்டது. கூட்டம் சமாளிக்க முடியாமல் போகவே, விடியற் காலையில் ராஜாஜி ஹாலில் பொது மக்கள் இறுதி மரியாதை தெரிவிக்கும் பொருட்டு அண்ணாவின் உடல் வைக்கப்பட்டிருந்தது. ஆளுநர், அரசு சம்பிரதாயப் படி நாவலரைத் தற்காலிக முதல்வராக நியமித்து, அவருக்கும் மற்ற அமைச்சர்களுக்கும் இரவிலேயே ஆளுநர் மாளிகையில் 1–15 மணிக்கு பதவிப் பிரமாணம் செய்து வைத்தார். சர்தார் உஜ்ஜல் சிங், அவரது துணைவியார் இருவருமே அண்ணாவிடம் அளவிடற்கரிய அன்பும் மரியாதையும் காட்டி வந்தவர்கள்!

அண்ணாவை ஒருமுறை கண்டுவிட வேண்டுமென்ற ஆர்வமேலீட்டால், தமிழகமே, கிடைக்கின்ற வாகனங் களிலெல்லாம் ஏறிச் சென்னை நோக்கித் திரண்டது. மாநகரின் மக்களிலே 95 சதவீதம் பேராவது, நேரில் கண்டு செல்ல வந்தனர். இந்திய வரலாற்றிலேயே யாருடைய மறைவுக்கும் இவ்வளவு பெரிய கூட்டம் திரண்டதுமில்லை; திரண்டவர் அனைவருமே கதறி அழுததுமில்லை; இதற்கு முன்னும், பின்னும்! அண்ணா மறைந்தார் என்ற சேதி கேட்டுப் பலர் மாரடைப்பால் மறைந்தனர். ரயில் கூரை மீது ஏறிவந்து, அறியாமை யால் பாலத்தில் சிக்குண்டு, சிதம்பரம் அருகில் மாண்டவர் பலபேர். ராஜாஜி ஹாலில் உடலைக் கண்டு அங்கேயே மாரடைத்து மாண்டவர் சிலபேர். தங்கள் உயிரையும் பொருட்படுத்தாமல், ஏறியும், குதித்தும், தாண்டியும், மிதிபட்டும், சிக்கியும், நசுக்குண்டும், சிதைந்தவர் பல்லாயிரம் பேர்! ராஜாஜி ஹாலின் உட்புறம் வைத்துச் சமாளிக்க முடியாமல், காமராஜர் யோசனையின்படி, வெளியிலே படிக்கட்டு மீது, சிறிது நேரம் வைத்துக் காண்பிக்கப் பட்டது.

3–ந் தேதி இரவு ஒருமுறை ராஜாஜிஹால் சென்று வந்த பெரியார், 4–ந்தேதி அதிகாலையிலேயே புறப்பட்டுத் தமது வேனிலேயே அமர்ந்து, இறுதி ஊர்வலத்தில் சென்றார். இந்திய வரலாறு காணாத இறுதி ஊர்வலம்–40 லட்சம் மக்கள் கோவெனக் கதறிக்—குலுங்கிக் குலுங்கி அழ—ஏழை மாந்தரின் இதய சிம்மாசனத்தில் வீற்றிருந்த ஏந்தல்—தமது 60–வது வயது பூர்த்தியாகு முன்னரே வாழ்வு நீத்துப் புறப் பட்டார். கலைஞரின் மதியூகத்தினால் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு எதிரே கடலோரத்தில், அண்ணா வின் சடலம் சந்தனப் பேழையில் வைக்கப்பட்டு, இராணுவ மரியாதைகளுடன் அடக்கம் செய்யப்பட்டது. எதையும் தாங்கும் இதயம் இங்கே உறங்குகிறது – என்று பொறிக்கப் பட்ட கல்லும், நினைவுச் சின்னமாய் நெடுந்தூணும், அணையா விளக்கும், உதய சூரியனும், இரைதேடும் பொம்மை விலங்குகளும், அழகிய பூங்காவும், அகலாத பொன்மொழிகளும் பொலிந்திடப் பின்னாளில் அண்ணா சதுக்கமாய் உருவாக்கிக் காட்டினார் அண்ணாவின் தம்பி கலைஞர். பெரியார், அருகே செல்ல இயலாமல், சதுக்கத்தின் வெளியிலேயே காத்திருந்தார். காமராஜர், சி. சுப்ரமணியம், சவான், மற்றும் மத்திய—மாநில அரசுப் பிரதிநிதிகள், ஆளுநர் அனைவரும் வந்திருந்தனர்—இராஜாஜி தவிர!

5–2–69 அன்று "அண்ணாவின் இறுதி நிகழ்ச்சி" எனப் பெரியாரே தலையங்கம் எழுதியிருந்தார் "விடுதலை"யில்: "இது அகிலமே கர்ணாத அரும்பெரும் நிகழ்ச்சியாகும். நான் வானொலியில் பேசும் போது, அண்ணாவுக்கு இறுதி மரியாதை செலுத்த வந்த கூட்டம் 15 லட்சம் இருக்கும் என்று சொன்னேன். எனக்குத் தோன்றியதைச் சொல்லி விட்டேன். அது குறைவு என்றார்கள். ஆமாம் 25 லட்சம், 30 லட்சம் என்று சொல்லப்பட்டது.

சவ ஊர்வலத்தில் கலந்து கொண்டு, சடலத்தைக் கண்டு துக்கப் பட்டுக், கதறிக் கூப்பாடு போட்டுக், கூவி அழுத மக்களின் எண்ணிக்கையைப் போல்—நான் இதுவரை எங்கும் எப்போதும் பார்த்ததே இல்லை!

நான் கண்ட மிகப் பெரிய கூட்டம், ரஷ்யாவில் Red Square (ரெட்ஸ்கொயர்) செஞ்சதுக்கம் என்னும் இடத்தில் மேதினம் கொண்டாடுவதற்காகக் கூடும் 10லட்சம் மக்களின் உணர்ச்சி மிகுந்த கூட்டம். ஆனால் இங்கேயோ அதைவிட மூன்று மடங்கு கூட்டம்; துக்கமும் சோகமும் துயரமும் அழுகையும் கூக்குரலும் கொண்ட மக்கள் கூட்டம்!

இராஜாஜி வந்திருந்ததாகப் பொய் சொல்லி, இந்த நேரத்திலும் பார்ப்பனர்கள் தம் புத்தியைக் காட்டத் தவற வில்லை. அண்ணா மறைவு, தமிழர் சமுதாயத்துக்கு மாபெரும் நட்டம் என்பதும், சங்கடமான நிலையை உண்டாக்கி விட்டது என்பதும் உண்மையே! அண்ணா இல்லாத மந்திரி சபைக்குப் புதிய கருத்தோ, புதிய கொள்கையோ, புதிய மந்திரிகளோ கூடத் தேவையில்லை. வேண்டியதெல்லாம் ஒற்றுமை, ஒற்றுமை, ஒற்றுமையே யாகும்.

இன்றைய ஆட்சி வெறும் தி.மு.க. ஆட்சி அல்ல தமிழர்கள் ஆட்சி. தமிழர்களின் நலத்தை அடிப்படையாகக் கொண்ட ஆட்சி. ஆகவே இந்த நேரத்தில் கடமை கண்ணியம் என்பதைவிடக், கட்டுப்பாடே முக்கியமானதாகும்."

7ந்தேதி "விடுதலை"யில் "முதல் மந்திரி தேர்தல்" என்ற தலைப்பிட்ட பெட்டிச் செய்தி ஒன்று, பெரியாரால் தரப் பட்டது. "முதல் மந்திரி தேர்தல், வரும் 9ந்தேதியன்று நடைபெற இருப்பதாகச் சேதி வந்தது. மிக்க மகிழ்ச்சி! எவ்வளவு சீக்கிரம் தலைவர் தேர்தல் நடைபெறுகிறதோ, அவ்வளவுக்கு நன்மை அதிகம். எனக்கு இன்றுள்ள இந்த எட்டு மந்திரிகளில் யார் முதல் மந்திரியாக வந்தால் தேவலாம் என்ற சிந்தனைகூடக் கிடையாது. பிளவும், கருத்து வேற்றுமையும் இல்லாமல் தேர்தல் முடிவு இருக்க வேண்டும். வளைய முடியாத கல்தூணில் பிளவு ஏற்பட் டால், பிறகு அபாயத்தை எதிர்நோக்க வேண்டியதுதான்.' அன்றையத் தலையங்கமும் பெரியாருடையதே; "புதிய மந்திரிகள் தேவையில்லை" என்பது தலைப்பு. "இதைப்

பற்றிப் பல தடவை எழுதியிருக்கிறேன். மீண்டும் ஓரிரு வர்க்கு மந்திரி பதவி தந்தால், பதவி கிடைக்காத மற்றவர் பூசல் உண்டாக்கக்கூடும். யாருடைய யோசனையும் கேட்டு, Coalition Government கூட்டு மந்திரி சபை அமைக்கும் எண்ணமும் வேண்டாம்; வேண்டவே வேண்டாம். முதலில் நெருக்கடியிலிருந்து தப்பி, நம்மை நிலை நிறுத்திக்கொண்டு, பிறகே மற்றவைகளைப் பற்றிச் சிந்திப்பது நல்லது" என்பதாக எழுதிக் காட்டினார்.

9ந்தேதியன்று பெரியார் நாகப்பட்டினம் சென்றிருந்தார். அன்று காலை சென்னையில் தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர்கள் கூட்டம் நடந்தபோது, கலைஞரின் பெயர் தலைவருக்காக முன் மொழிந்து, வழி மொழியப்பட்டது. நாவலரின் பெயரை எஸ். ஜே. ராமசாமி முன் மொழிய, வி. டி. அண்ணாமலை ஆதரித்தார். வேறு யாரும் ஆதரிக்காத நிலையில், நாவலர், தாம் போட்டியிலிருந்து விலகிக் கொள்வதாக அறிவித்தவர், உள்ளேயிருக்காமல் வெளியேறினார்! பத்திரிகை நிருபர்கள் கேட்டபோது, தாம் அமைச்சரவையில் இருக்கப் போவதில்லை எனவும், வெளியிலிருந்து கழக வளர்ச்சிக்குப் பாடுபடப் போவதாகவும் கூறினார். இந்த நிலையில் அவர் பிடிவாதமாயிருந்ததால், மீதமுள்ள 7 பேர் கொண்ட கலைஞரின் அமைச்சரவை 10-2-69 மாலை 3-30 மணிக்குப் பதவிஏற்றது. அமைச்சர்கள் நேரே கோட்டைக்குச் சென்று, தமது அறைகளில் அமர்ந்து, சில ஃபைல்களில் கையெழுத்திட்ட பின்னர், அடையாறு வீரமணி இல்லத்தில் தங்கியிருந்த பெரியாரைச் சந்திக்கச் சென்றனர். கலைஞர் பெரியாருக்கு ரோஜா மாலை சூட்டினார். பெரியார் "நேற்று நான் நாகையில் இருந்தேன். உங்கள் பெயர் அறிவிக்கப்பட்டதாகக் கூறி, எல்லாருமே வரவேற்றார்கள். என் ஆதரவும், ஒத்துழைப்பும், எப்போதும் உண்டு!" என்றார்.

10, 11 இரண்டு நாட்களும் "விடுதலை" பெரியாரின் தலையங்கம் தாங்கி வந்தது. முதல் நாள் "வரவேற்க வேண்டியதும் வருந்த வேண்டியதுமான நிகழ்ச்சிகள்"

என்ற தலைப்பில்; "தி. மு. க.வுக்கு இந்த நிலையில் முதல்வராகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றவருக்குத் தேவையானது தகுதி—திறமை மாத்திரமல்ல, கட்சியைத் திறமையுடன் பாதுகாக்கும் திறமையும் தேவைப்படுகிறது. கலைஞர் அவர்கள் கட்சிக்காக அரும்பாடுபட்டவர் என்பதை எதிரிகளும் ஒப்புக் கொள்வார்கள். கலைஞருக்குக் கட்சி உறுப்பினர்களிடத்திலும், சட்ட சபை உறுப்பினர்களிடமும் பெருவாரியான ஆதரவு இருக்கிறது. நாவலர், மந்திரி சபையிலிருந்து விலகிக் கொள்வதானது, மிகவும் வருந்த வேண்டிய விஷயமாக இருக்கிறது.

இந்த நெருக்கடியான நேரத்தில், நாவலரும், மற்றவர்களும் கண்ணை மூடிக்கொண்டு கலைஞரை ஆதரிக்க வேண்டும், என்பதோடு, 2, 3 ஆண்டுகளுக்கு முன் இராஜாஜி கூறிய ஆப்த வாக்கியத்தைக் கூறி இதை முடிக்கிறேன்: 'எப்படிப்பட்ட பாதகமான காரியத்தைச் செய்தாவது, நம் இனத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். அது பாவமாகாது.' என்பதுதான் அது-"

அடுத்த நாள் தலைப்பு "ஊடல் ஒழிக!" என்பது. "தமிழ் நாட்டு ஆட்சியில் மந்திரி பதவிகள் என்பது கலைஞருக்கோ நாவலருக்கோ சொந்தமான பதவிகள் அல்ல. அது தமிழர் சொத்தாகும். நாவலரும் கலைஞரும் டிரஸ்டிகள்—பாதுகாவலர்கள். நாவலர் அவர்கள் என்னதான் ஆயிரம் சமாதானம் சொன்னாலும், பதவி கிடைக்காததால்தான், இந்த ஊடல் ஏற்பட்டது என்பார்கள். நான் நமது பரிதாபத்திற்குரிய தமிழர் நல சார்பாய்ச் சொல்கிறேன். இரண்டு பக்கமும் தூண்டிவிடுகின்றவர்கள் இருப்பார்கள். அவைகளுக்கு இணங்காமல், அருள் கூர்ந்து ஒன்றுபடுங்கள்!" இது வேண்டுகோள்! ஆனால் பலனளிக்கவில்லை; அப்போது!

நாவலர் இல்லாததால் நான்கு பேர் புதிய அமைச்சர்களாக இணைத்துக்கொள்ளப்பட்டார்கள். ப.உ. சண்முகம், சி. பா. ஆதித்தனார், கே. வி. சுப்பய்யா, ஓ. பி. இராமன் ஆகியோர். "மந்திரி சபை விஸ்தரிப்பு" என்ற பெட்டிச்

செய்தியில், 13–ந் தேதி பெரியார் எழுதியிருந்தார்— "புதிய மந்திரிகளை மனப்பூர்வமாக வரவேற்கிறேன். நாவலர் இருந்திருந்தால் இலாகா பிரிவினையும், அவர் இஷ்டப்படியே நடந்திருக்கும். ராஜிக்கே இடமில்லாமல் அவர் போய் விட்டதால், கலைஞர் அவர்கள் மிக்க ஜாக்கிரதையோடும், பொறுப்போடும் செய்திருக்கிறார். பலர் ஏமாற்றமடைந்திருக்கலாம். அவர்கள் செய்யும் எந்தவிதமான சலசலப்பும், முணுமுணுப்பும், எதிரிகளுக்குக் காட்டிக் கொடுப்பதோடு, 15 நாட்களுக்குள் 'அண்ணாவை மறந்துவிட்டதாகும்'' என்று.

பெரியார் திருச்சிக்கு விரைந்தார். ஏன்? அவரிடமே மந்திரி பதவிக்காகப் பலர் சிபாரிசுக்கு வந்தார்களாம். சலசலப்புக்காட்டவேண்டாம்என்று எழுதினாரே-காரணமாகத்தான்! அப்படியும் ஒருவருடைய முணுமுணுப்பு வெளியில் வந்துவிட்டது. துறையூர் து.ப. அழகமுத்து, ஆளுங்கட்சிக் கொறடா, சொன்னதாகச் செய்தி பரவிற்று; "நான் மந்திரி பதவிக்கு ஆசைப்படுவதற்கு எனக்கு ஜாதியும் இல்லை; படிப்பும் இல்லை" என்றாராம். பெரியார் இதையே குறிப்பிட்டு, 17–ந் தேதி, "தமிழனின் பரிதாபநிலை" என்று தலையங்கம் எழுதினார். "ஜனநாயக ஆட்சியில் இன்னின்ன யோக்கியதாம்சம் உள்ளவர்தான் மந்திரியாக வரவேண்டும் என்று கிடையாது. இந்த 11 பேர் கொண்ட தி.மு.க. மந்திரிசபையில் என்னைப் பொறுத்தவரை குறைபாடு இல்லை. கட்சியைக்கொண்டோ, ஆட்சியைக்கொண்டோ வாழ்க்கைக்கு வசதி செய்து கொள்ளாதவர்கள், அதிருப்தி காட்டமாட்டார்கள். இதுவரை அண்ணா செல்வாக்கால் பிணக்கு வெளிப்படையாய்த் தெரியமுடியவில்லை. அண்ணாவுக்குமேல்—கட்சி நிலைப்பையும், பலப்படுத்தலையும் கவனித்து வந்தவரிடம் தலைமை போய்விட்டது. மந்திரி பதவிக்காக என்னிடம் சிபாரிசுக்கு வந்தவர்களிடம் சொல்லி விட்டேன், தி.மு.க. பற்றிப் பேச எனக்கு உரிமை இல்லை என்பதை." அய்யாவிடம் இரகசியம் தங்காது என்பதை அந்தப் பலரும் புரிந்திருப்பார்கள்!

நெய்வேலியில் புராணப் பிரசங்கம் செய்ய அடிக்கடி செல்கின்ற கிருபானந்தவாரியார், "தெய்வநிந்தனை செய்ததால் அண்ணாவுக்குப் புற்றுநோய் ஏற்பட்டு மரண மடைந்தார்" என்று—ரமண மகரிஷியை மறந்து—பேசியிருக்கிறார். கழகத் தோழர்கள் கனன்றெழுந்து, அவரைச் சூழ்ந்து கொண்டு, அவரிடம் மன்னிப்புக்கடிதம் எழுதி வாங்கினார்களாம், 18–ந்தேதியன்று. இதைக் குறித்துப் பலவிதமான செய்திகள், நம் நாட்டுப் பத்திரிகாதர்மத்திற்கேற்ப, வெளியாயின. "யோக்கியமற்ற கூப்பாடுகள்" என்று 24ந் தேதி பெரியாரே தலையங்கம் தீட்டிட நேரிட்டது. "கிருபானந்த வாரியாருக்குப் புத்திகற்பித்ததற்காக, உலகமே முழுகி விட்டதுபோல் கூப்பாடு போடுகிறார்களே! இந்த மாதிரி அவர்மன்னிப்புக்கேட்டது, இது முதல்தடவையும் அல்லவே! 1944–ல் தொடங்கி நமது தோழர்கள் அவர்மீது பலதடவை பகுத்தறிவுக் கணைகளை வீசி, மடக்கியிருக்கிறார்களே! இவரே பத்து ஆண்டுகளுக்கு முன்பு ஒரு முறை என்னோடு ரயிலில் இரண்டாம்வகுப்பில் கோயமுத்தூர்வரைபிரயாணம் செய்தார். நான் அவரைச் சந்தித்தது அப்போதுதான்! 'தங்கள் ஆட்கள் என்னைத் தவறாக நினைக்கிறார்கள். நான் ஏதோ வயிற்றுப் பிழைப்புக்காக இந்தப் பிரசங்கம் செய்து வருகிறேன். நான் தமிழர் விரோதியல்ல; எதையும் தவறாகக் கூறமாட்டேன். உறுதி!' என்று என்னிடம் சொன்னவர்தானே!

இராஜாஜி ஒரு கூட்டத்தில் பேசும்போது 'சூத்திரன்' என்று சொல்லிவிட்டார். பக்கத்திலிருந்த காமராஜருக்குக் கோபம் வந்து முதலில் இதை வாபீஸ் வாங்கிவிட்டுப் பிறகு பேசுங்கள் என்றார். அவரும் அதன்படியே செய்தார். ஆகையால் இதில் ஒன்றும் தவறில்லை.

இன்று நாடெங்கும் காலித்தனங்கள், அமளிகள், கலாட்டாக்கள் நடக்கின்றன. நாட்டிற்கு வந்த சுதந்தரத்தால் பெரும்பான்மையான மக்களுக்கு உரிமையில்லை. நாட்டை ஆள்பவர்களுக்கு எதற்கும் அதிகாரமில்லை. கோழிப்

பண்ணையில் கோழிகள் அடைக்கப்பட்டு இருப்பதுபோல், மனிதப்பண்ணையில் மனிதனாக நாம் இருந்து வருகிறோம்.

காலித்தனங்கள் ஒழிக்கப்பட வேண்டுமானால் முதலில் பத்திரிகை அதிபர்கள் யோக்கியர்களாக இருக்கவேண்டும். என்ன செய்தாவது பத்திரிகை சர்க்குலேஷன் குறையாமல் இருக்க வேண்டும் என்பதில்தான் இவர்களுக்குக் கவலை எல்லாம். எப்படி என்றால், தேவதாசி முறை இருந்த காலத்தில், எப்படி ஒரு மனிதன் தாய், தங்கை, மகளுக்கும் நாயகன் தேடும் பணியில் ஈடுபட வேண்டியிருந்ததோ அதுபோல, நாட்டில் சமதர்மம் வேண்டுமென்று சொன்னால், யோக்கியனும் அயோக்கியனும் ஒன்றாகி விடுவதா? மனிதனை மனிதன் செருப்பால் அடித்தால், வலி பொறுக்காமலா கதறுகிறான்? மானக்கேட்டுக்கு ஆகத்தானே? அந்த மாதிரி இப்போது தமிழர் பத்திரிகைகளும் ஈன நிலைக்குப் போய்விட்டன.''

பெரியார் 16–2–69 அன்று மேலக்கற்கண்டார் கோட்டையில் பேசும்போது, சென்னை உயர்நீதி மன்றத்தில் இப்போது உள்ள 16 நீதிபதிகளில் 10 பேர் தமிழர்கள் என்று கூறிப் பூரிப்படைந்தார். தமிழகச் சட்ட மன்றத்தின் துணைச் சபாநாயகராக எட்மண்டு பெர்னாண்டோ தேர்ந்தெடுக்கப் பட்டார். கலைஞரின் அமைச்சரவையை வரவேற்றும், கலைஞரின் தனிப்பட்ட திறன், ஆற்றல் இவற்றைப் பாராட்டிப் புகழ்ந்தும் "ஆனந்தவிகடன்'' எழுதிய தலையங்கத்தை, "விடுதலை'' 20-2-69 அன்று வெளியிட்டிருந்தது. நாகரசம்பட்டி என். எஸ். சம்பந்தம் இளவல் என். எஸ். ஏகாம்பரம் பி. ஈ.—டாக்டர் சரோஜினி எம். பி. பி. எஸ். இவர்களின் கலப்புத் திருமணத்தையொட்டி நடந்த வரவேற்பு விழாவில் 20-2–69 அன்று, பெரியார்—மணியம்மையாரால் அழைக்கப் பட்டுக், கலைஞரும் பிறரும் வந்திருந்து, பெரியார் திடலில் பாராட்டிப் பேசினர். சென்னை மாநகராட்சி உறுப்பினர் களால், தமிழகச் சட்டமன்ற மேலவைக்குத் திருமதி ராணி

அண்ணா 2–3–69 அன்று உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

மார்ச் 3–ஆம் நாள் தலையங்கம் "தமிழர் நிலை ஊர் சிரிக்கிறதே" என்பது. பெரியார், தமிழர்களே இப்படி ஒருவர்மீது மற்றவர் சேற்றை வாரி இறைத்துக் கொள்கிறார்களே; இதனால் பார்ப்பனர் நிர்வாணமாய் ஆட்டம் போடுவரே; மேலும் மக்கள் ஆதரவும் குறைந்து போய்விடுமே; இதனால் அரசியலில் ஏதாவது ஆதாயம் கிட்டலாமே ஒழிய, மனிதப் பண்பு வளராதே—என்று கவலைப்பட்டிருந்தார். சட்டமன்ற எதிர்கட்சித் தலைவரான கருத்திருமன், வெளியில் தலைவரான சி. சுப்ரமணியம் ஆகியோர், தி. மு. க. அரசுமீது குற்றஞ் சுமத்துவதையும், இதற்குப் பதில் சொல்லக் கலைஞர், ஆதித்தனார் போன்றோர் முனைவதையுமே பெரியார் குறிப்பிட்டிருந்தார். அடுத்த 5–ந் தேதி "அரசாங்கம் கவனிக்க வேண்டும்" என்ற தலைப்பில் நல்ல அறிவுரை ஒன்றை வலியுறுத்தினார். "தி. மு. க. ஆட்சி ஒவ்வொரு பதவி, உத்தியோகம் பற்றிக் கையெழுத்துப் போடும் போதும்–இந்த ஆள் பார்ப்பானா, கிறிஸ்துவனா, முஸ்லீமா, சைவனா, மலையாளியா, தமிழனா என்பதைப் பார்த்துத் தான் கையெழுத்துப் போட வேண்டும். காமராஜர் தமிழனுக்குக் கல்விக் கண் கொடுத்தார். ஆனால் கண்ணிருந்தும் குருடராயிருப்பதில் பயனில்லை. ஆகையால் தி. மு. க. ஆட்சி தமிழர்களை எழுந்து நடக்கச்செய்ய ஆவன செய்திட வேண்டும். கண்டிப்பாய் இதில் கவனம் செலுத்திட வேண்டும்."

9–3-69 அன்று திருவரங்கத்தில் திருச்சி மாவட்ட சமுதாய சீர்திருத்த மாநாடு வீரமணி தலைமையில் நடந்தது. செல்வேந்திரன் திறந்து வைக்க, வீரப்பா கொடி ஏற்றினார். பாடபுத்தகங்களில் மூடநம்பிக்கைக் கதைகளை அகற்றல், கோயில் கருவறை நுழைவு, வானொலியின் அறிவுக்குப் புறம்பான ஒலிபரப்பு, கோயில் சொத்துகளை

நாட்டுடைமை ஆக்கல், காலாண்டு சிவில் லிஸ்ட் பிரசுரித்தல் ஆகியவை பற்றித் தீர்மானங்கள் இயற்றப்பட்டன. புதுவையில் ,காங்கிரஸ் நல்ல வகையாகத் தோல்வியைத் தழுவியது பற்றி "விடுதலை" 11, 12 இரு நாட்களும் தலையங்கம் தீட்டியது. 17-ந் தேதி அங்கே ஃபாரூக் தலைமையில் தி.மு.க. அமைச்சரவை பதவி ஏற்றது. தி.மு.க. அமைச்சர்களின் சுற்றுப் பயணம், சொற்பொழிவு ஆகியவை "விடுதலை"யில் நிரம்ப இடம் பெற்றன. பெரியார், மார்ச் மாதம் நிறைய சுற்றுப்பயணம் மேற்கொண்டார். எல்லா இடங்களிலும் அண்ணாவின் சிறப்புகளை நவிலத் தவறுவதில்லை. சென்னை சட்டக் கல்லூரி விடுதியில் பெரியார் 15-ந் தேதி அண்ணா படத்தினைத் திறந்தார். சட்டக் கல்லூரி வளைவில் 12.ந் தேதி டாக்டர் ஏ. எல். முதலியார் அண்ணா சிலையைத் திறந்து வைத்தார். காஞ்சியில் 13-3-69ல் பேசிய நாவலர், தான் கட்சிப்பணிகளைக் கவனித்துக் கொள்வதாகவும், கலைஞர் ஆட்சிப்பணிகளைக் கவனிக்கட்டும் என்றும் கூறினார். நாவலரும், செழியனும் பெரியாரை ஒருமுறை சந்தித்துக், கலைஞரின் கீழ் அமைச்சராக இருக்க இயலாமை குறித்துப் பேசினார்கள். பெரியார் அதை அவ்வளவாக இரசிக்கவில்லை!

தஞ்சை மாவட்டத்தின் ஈடு சொல்ல முடியாத செயல் வீரர் வி. எஸ். பி. யாக்கூப் சென்னைப் பொது மருத்துவமனையில் 15-ந் தேதி மறைந்தார். அன்னாரின் உடல் திருவாரூர் கொண்டு செல்லப்பட்டுச் சிறப்புடன் அடக்கம் செய்யப்பட்டது. யாக்கூபால் அழைக்கப்பட்டுத், தஞ்சை மாவட்டத்தில், சுற்றுப் பிரயாணம் செய்யாத தலைவர்களே, இயக்கத்தில் கிடையாது! 14-ந் தேதிதான் பெரியாரும், மணியம்மையாரும் யாக்கூபை மருத்துவமனையில் கண்டு நலம் விசாரித்தனர். அப்போதே கவலைக்கிடமான நிலைதான்! அப்போதுகூட, அங்கே சிகிச்சை பெற்று வந்த கே.ராஜாராம், திருச்சி அருணாசலம் ஆகியோரையும் இருவரும் கண்டு திரும்பினர். 17-3-69 "விடுதலை,"

யாக்கூப் மறைவுக்காகத் துணைத் தலையங்கம் எழுதிச் சிறப்பித்தது.

14, 15, தேதிகளில் பெரியார் தி. மு. க. கட்சிக் கட்டுப்பாடு பற்றி மூன்று தலையங்கக் கட்டுரைகள், தீட்ட நேர்ந்தது. பேராசிரியர் அன்பழகன் அந்த நிலைமையை உண்டாக்கி விட்டார். சென்னை நேப்பியர் பூங்காவில் பேசும்போது, "நான் கருணாநிதியைத் தலைவர் என்று ஏற்றுக் கொண்டால், என் மனைவியே என்னை மதிக்க மாட்டார்" என்றாராம்! "அதிருப்தியாளர்கள் கட்சியி லிருந்து விலகி விடுவதே நல்லது; பெருந்தன்மையுமாகும். கட்சியில் இருக்கிறவரையில் தலைவருக்குக் கட்டுப்பட்டு தான் தீரவேண்டும். தனி நபரைப்பற்றி எனக்குக் கவலை யில்லை. கருணாநிதியே, அண்ணா எனக்குப் பயந்து கொண்டு இருந்த காலத்தில், என்னை வெளிப்படையாக எதிர்த்துப் பேசி, விலக முயன்றவர்தான். இன்றைக்குக் கருணாநிதி இடத்தில் அன்பழகன் இருந்து, கருணாநிதி தலைவரை மதிக்காமல் பேசினால், அவரையும் இப்படித் தான் நான் கண்டிப்பேன்! உள் விவகாரம் என்ன என்பது எனக்குத் தெரியாது. கட்சியின் கவுரவத்தைக் காப்பது தலைவரின் கடமை. தி. மு. க. இனியும் குறைந்தது 2 பீரியட் (Period) பொதுத் தேர்தலில் வெற்றி பெற்றாகவேண்டும். தி. மு. க. என்னை மதித்தாலும் மதிக்காவிட்டாலும், அவர்கள் என்னை விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் தி. மு. க. வைப் பாதுகாப்பதில் அண்ணா எனக்குப் பங்கு ஏற்படுத்திவிட்டார். அதற்காகத்தான் நிபந்தனையற்ற unreserved தொண்டு ஆற்றி வருகிறேன். தி. மு. க. வில் சிலருக்கு ஜாதி உணர்ச்சி, வகுப்பு உணர்ச்சி, படிப்பு உணர்ச்சி, பண உணர்ச்சி இருக்கிறது. தம்மையே மறக்கும் படியான அளவுக்குப் பதவி உணர்ச்சி, பொறாமை உணர்ச்சி இருக்கிறது. இவற்றை யெல்லாம் மறந்து விட்டு இன உணர்ச்சி ஒன்றை மட்டும் பெறவேண்டும். இதற்காக எதையும் விட்டுக் கொடுக்கும் துணிவும் தாராளமும்

வேண்டும்!'' என்று பெரியார், உரிமையுடன், உருக்கமுடன் எழுதியிருந்தார். காஞ்சிபுரம் பச்சையப்பன் கல்லூரியில் அமைச்சர் ப. உ. சண்முகம் தலைமையில், பெரியார் அண்ணா படம் திறந்தார். "தி. மு. கழகம் பிரிந்தவுடன் நான் அண்ணாவை ரொம்பக் கண்டித்தேன். குறை சொல்லிக் கொண்டேயிருந்தேன். எதற்குமே பதில் சொல் லாமல், மாறாக என்னைப் புகழ்ந்து பேசிவந்தார் அண்ணா! இந்த உயர்வான பண்பைப் பாராட்டித்தான், மக்கள் அவரை அன்போடு ஆட்சிக்கு அனுப்பினார்கள். என்னுடன் இருந்த காலத்திலும்கூட நாங்கள் இருவரும் கூட்டத்திற்குச் சென்றால், அண்ணாவைப் பேசச் சொல்லுங்கள் என்று தான் மக்கள் பிரியமுடன் கேட்பது வழக்கம்,'' என்று புகழ்ந்துரைத்தார் பெரியார்.

அண்ணா திராவிடநாடு பிரச்சினையை ஒரு ஏற் பாடு செய்து ஒதுக்கி வைத்திருக்கிறார்; அடியோடு கைவிடவில்லை என்பதற்காக ஏ. வி பி. ஆசைத்தம்பி, திருவரங்கத்தில், ஒரு சம்பவம் பற்றிக் குறிப்பிட்டார். அரசாங்கத்துக்குச் சேர வேண்டிய அபராதத் தொகையினை வசூலிக்க அண்ணா வீட்டில் சோபாவை யும், கருணாநிதி ஆபீசில் பேப்பரையும், சம்பத் வீட்டில் சாமானையும் கைப்பற்றி விட்டு, என் வீட்டுக்கும் வந்து, ஏதோ சோபாவை எடுத்தார்கள், "இதை நீங்கள் தொடமுடியாது! எல்லாம் என் மனைவிக்குச்சொந்தம்'' என்றேன், "உங்கள் பேரில் என்னதான் இருக்கிறது?'' என்றார்கள், "என்னுடைய எம். எல். ஏ. சம்பளத்தில் அட்டாச் செய்து கொள்ளுங்கள்'' என்றேன். சென்றார்கள்; அதில் அட்டாச் செய்ய முடியாது என்பது தெரியாமல். கடைசியில், என்னிடமிருந்து அபராதத் தொகையே வசூல் செய்ய முடியவில்லை. அப்படியானால் நான் என்ன பாப்பரா? இல்லை. அப்படி ஓர் ஏற்பாடு; யாரும் சொத்தை அபகரிக்க முடியாதபடி!—என்றார். "தமிழர் நல ஆட்சியான தி. மு. க. வின் மற்றொரு சாதனை'' என்று "விடுதலை' முதல் பக்க ஏழு காலச் செய்தியில் கே. வீராசாமி -தலைமை நீதிபதியாக மே மாதம்முதல் நியமனம் பெற்றதைப் பாராட்டியது.

“இப்போதைய சுதந்தரம், கணவனுக்கு அடிமையாவதன் மூலம் மனைவி வைரக்கம்மல், வைர நெக்லஸ், அதிசய அற்புதப்பட்டு ஜரிகை உடைகள் அணிந்திருப்பது போன்றதேயாகும்”— என்றும்; “மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் கேட்பது, வெறும் செருப்பால் அடிக்காதே, பட்டுக்குஞ்சம் கட்டி, அதால் அடி என்று சொல்வது போன்றதேயாகும்” என்றும்; பெரியார் உவமைகள் வாயிலாகத் தமிழ் நாடு பிரிவினையின் அவசியத்தை எழுத்தால் உணர்த்தினார். பூரி சங்கராச்சாரியார் எப்போதுமே வாய்க் கொழுப்பு மிகுந்தவரல்லவா? தீண்டாமை இந்து மதக் கோட்பாடுதான் என்று கூறியிருந்தார். குன்றக்குடி அடிகளார் கண்டித்தார். உள்துறை அமைச்சர் சவான், சங்கர் ராவ்தேவ் ஆகியோர் தவறென்றனர். அண்ணாமலை நகர் மாணவர்கள் கொடும்பாவி கொளுத்தினர். மைசூருக்கோ, தமிழகத்துக்கோ வந்தால் கைது செய்வோம் என்றனர் மாநில அதிகாரத்திலிருந்தோர்! ஜகஜீவன் ராம், “பொது - இடத்தில் தீண்டாதவரை அனுமதிக்க மாட்டோம் என்று யாராவது சொன்னால், மீறி நுழைய வேண்டும்” என்றதற்காக, “சுதேசமித்திரன்” அவரைக் கண்டித்திருந்தது. பெரியார் சும்மாயிருப்பாரா? “பொது இடத்தில்தானே நுழையச் சொன்னார். பார்ப்பான் வீட்டில் அல்லவே! சட்டவிரோதமாய் நடந்து, தங்கள் ஜாதி உயர்வை எப்படியும் காப்பாற்றிடப் பார்ப்பனர் நினைக்கும்போது, போலீஸ் ஸ்டேஷனுக்கே நெருப்பு வைக்கிற இந்தக் காலத்தில், பார்ப்பான் வீட்டுக்கு நெருப்புவைப்பது கஷ்டமா? பார்ப்பனர்களே, ஜாக்கிரதை! வாயை அடக்குங்கள்!” என்று ஆவேசமாய் எழுதினார் பெரியார்.

புதுவை அமைச்சர்களைப் பாராட்டிப் பேசும்போது “பைத்தியக்காரத்தனமாய் உங்கள் ராஜ்யத்தில் மதுவிலக்கு கொண்டுவர முயலாதீர்கள்! பகுத்தறிவோடு நடந்து கொள்ளுங்கள்!” என்றார் பெரியார். “நம் அரசியலில் மதுவிலக்கும், கதரும் இருபெரும் மடமைகள். நான் ரயில்

பிரயாணத்தில் கூட ராட்டினம் சுற்றிய மடையன். சாணி வழிக்கும் துணியாகக் கூடப் பயன்படாத கதரை உடுத்தியவன்; காந்தியாரே, 'Mr. Ramaswamy! you need not spin hereafter. I exempt you for three months' என்று எனக்கு எழுதியும், விடாதவன்'' என்றார்.

ஏப்ரல் மாதமும் பெரியார் தீவிர சுற்றுப் பயணம் மேற்கொண்டார். மன்னார்குடியில், மாவட்ட தி. க. தலைவர் தோலி சுப்ரமணியம் தலைமையில் பேசும்போது, நம் சமுதாய இழிவை ஒழிக்க விரைவில் மாபெரும் கிளர்ச்சி துவக்குவோம் என்றார். சென்னை மாவட்ட சமூக சீர்திருத்த மாநாட்டிலும், கடவுள் மத சாஸ்திரங்களைப் பாதுகாக்கும் மத்திய ஆட்சி ஒழிந்தாக வேண்டும், என்றார் பெரியார். 20–4–69 அன்று இந்த மாநாடு வே. ஆனைமுத்து தலைமையில் நடந்தது. சேலம் பச்சைமுத்து திறப்பாளர்; மயிலை சம்பந்தமூர்த்தி கொடி ஏற்றியோர்; தே. மு. சண்முகம் வரவேற்பாளர்.

பிற்படுத்தப் பட்டோர் நலனுக்குத் தனி இலாக்கா ஏற்படுத்தப்படும். வறட்சி நிவாரணத்துக்கு 20 கோடி ரூபாயில் திட்டம் தந்துள்ளோம். மத்திய அரசு இதற்குப் போதிய அளவு உதவாவிடில் மக்கள் நாட்டுப் பிரிவினை கோரக் கூடும். இப்போதெல்லாம் தி. மு. க. ராஜாஜியைக் கலந்தோசிப்பது இல்லை என சி. சுப்ரமணியம் ஏன் அங்கலாய்க்கிறார்? மாணவர்களுக்குப் பகுத்தறிவுக் கல்வியை ஆசிரியர்கள் போதிக்கவேண்டும். நகர சபைத் தேர்தலில் தி. மு. க. கூட்டணிக்கே மகத்தான வெற்றி! ஏழாக இருந்தது; இப்போது 47 நகரசபை தி. மு. க. வசம்—என்றெல்லாம் முதல்வர் கலைஞர் தந்த செய்திகளை, முக்கியத்துவம் கொடுத்துப் பிரசுரித்தது ''விடுதலை''. 107 ஆண்டுகளில், முதல் தமிழர் பிரதம நீதிபதி என்று பாராட்டியது ''விடுதலை'' 2–5–69 அன்று. 3ந் தேதி முதல் பி. ஆர். கோகுலகிருஷ்ணன் அட்வகேட் ஜெனரல் ஆனார். ஜனாதிபதி ஜாகீர் உசேன் 3–5–69 அன்று 11, 20 மணிக்குக் காலமானார். வி. வி. கிரி தற்காலிக ஜனாதிபதியாய்ப் பொறுப்பேற்றார்.

1-5–69 மே நாள் சென்னைக் கடற்கரையில் பேசிய பெரியார், புதிய வரலாறு படைத்த தலைமை நீதிபதி

நியமனத்தைப் பாராட்டி, இதே போல் சாதி–மத விகிதா சாரத்தின்படி, அரசாங்கம் எல்லாப் பதவிகளிலும் நியமனம் செய்துவர வேண்டும் என்றார். 3–ந் தேதி பொது மருத்துவ மனையில் அனுமதிக்கப் பட்டிருந்த வேளாண்மைத்துறை அமைச்சர் ஏ. கோவிந்தசாமியைப், பெரியாரும் மணியம்மை யாரும், 16ந் தேதி சென்று கண்டனர். "அந்தோ பெருந் தகையாளர் மறைந்தார்" என்று "விடுதலை" கதறியழு தவாறு, 18ந் தேதி மாலை 3–30 மணிக்கு மறைந்த அன்னாரது சடலத்தின் மீது, 19 காலை 9–30 மணியளவில் பெரியாரும் மணியம்மையாரும் மலர்வளையம் வைத்து மரியாதை செலுத்தினர். பின்னர் 1–6–69 அன்று பெரியார் தலைமையில் கலைஞர், ஏ. கோவிந்தசாமியின் திருவுருவப் படத்தினைத் திறந்து வைத்தார். நாம் மானம் பெறவும், நமது ஈனஜாதித்தனம் ஒழியவும், நான்கு காரியங்களை நாம் கடைப்பிடிக்க வேண்டும். நெற்றிக்குறி இடக்கூடாது, கோயில்களுக்குச் செல்லக்கூடாது, பண்டிகைகள் எதையுமே கொண்டாடக்கூடாது, பார்ப்பானை பிராமணன் என்று சொல்லக்கூடாது என்பதைக் கோட்பாடுகளாகவே பெரியார் கூறிவந்தார்.

> கடவுளர் படம் அகற்றும் சுற்றறிக்கை வாபஸ் பெறப்படவில்லை என்று கலைஞர் வேலூரில் 26ந் தேதி கூறினார். வேலூர் சிறையில் ஞாபகார்த்தமாக, அண்ணா சிலை ஒன்றைக் கலைஞர் திறந்து வைத்தார். வறட்சியினால் தமிழகத்தில் பாதிக்கப்பட்ட மக்களின் எண்ணிக்கை 1 கோடியே 86 லட்சம். வரும் கல்வி யாண்டில் பி. யூ. சி. வகுப்பில் சேர 73,680 பேருக்கு இடவசதி செய்யப்பட்டுள்ளது—என்றார் முதல்வர்.

தர்மபுரியில் பெரியாரின் முழுஉருவ வெண்கலச்சிலை ஏழடி உயரமுள்ளதாக அமைக்கப்பட்டுத், திறப்பு விழா பல முறை ஒத்தி வைக்கப்பட்டு, 24–5–69 அன்று மிகுந்த எழுச்சி யோடும் சிறப்போடும் நடைபெற்றது. மதியழகன் தலைமையில் கலைஞர் திறந்து வைத்தார். சிலை அமைப்புக் குழுத்தலைவர் எம். என். நஞ்சையா வரவேற்றார். சி. பா. ஆதித்தனார், அன்பில் தர்மலிங்கம், கே. ராஜாராம் எம். பி.,

அரூர்முத்து எம். பி., கி. வீரமணி, பெரியார் ஆகியோர் உரையாற்றினார்கள். நீதிபதி கே. நாராயணசாமி வந்திருந்தார். அமைச்சர் பெருமக்களுக்கும், பெரியார் அவர்களுக்கும் தர்மபுரி நகராட்சி மன்றத்தின் சார்பில், மாலையில் வரவேற்பு வழங்கப்பட்டது. சிலையடியில் பீடத்தின் ஒரு புறத்தில் கடவுள் மறுப்பு வாசகங்கள் கல்லில் பொறிக்கப்பட்டிருந்தன. இது புதிதல்லவெனினும், வெறும் வாயை மெல்லும் பத்திரிகைகளுக்கு ஒரு பிடி அவலாகக் கிடைத்தது! இது, மேலும் இப்படிச் செய்யவே தூண்டும் என்றார் பெரியார்.

தர்மபுரியில் 25–5–69 பெரியார் சிலையைத் திறந்து வைத்த தமிழக முதலமைச்சர் கலைஞர் மு. கருணாநிதி அவர்களின் சொற்பொழிவு:–

"என்னுடைய பெற்றோர்கள் வேறொரு பள்ளிக்கூடத்துக்குப் போபோ என்று என்னைத் துரத்திய நேரத்தில், அந்தப் பள்ளிக்கூடத்திற்குப் போகமறுத்து, நான் பெரியார் பள்ளிக்கூடத்துக்கு வந்தவன். நண்பர் வீரமணி அவர்கள், அய்யா அவர்களுக்கு இருபுறமும் உள்ளவர்களையெல்லாம் சுட்டிக்காட்டிப், பெரியார் அவர்களது பெருந்தொண்டினால் விளைந்த பயன் என்று சொன்னார்கள். அவர்கள் மனிதர்களைத்தான் சுட்டிக் காட்டினார்கள்! பெரியார் அவர்களுக்குப் பக்கத்திலேயே இருக்கிற நாய்க்குட்டியை வீரமணி சுட்டிக்காட்டவில்லை. நாய் நன்றியுள்ள பிராணி. பெரியார் பக்கத்திலே எப்போதும் நன்றியிருக்கிறது என்பதற்கு அடையாளமாகத்தான் நாங்கள் அவர்கள் பக்கத்திலே இருக்கிறோம்.

பெரியார் அவர்களோடு நாங்கள் இரண்டறக் கலந்து இருந்தோம். இடையிலே ஒரு பதினெட்டு ஆண்டுக்காலம், பெரியார் அவர்களுக்கும் எங்களுக்கும் இடையிலே 'ஊடல்' அதைப் பெரியார் அவர்கள் பல மேடைகளிலே குறிப்பிட்டிருக்கின்றார்கள். அந்த ஊடல் உள்ளபடியே எங்களுக்குள் வியூகம் வகுத்து ஏற்படுத்திக் கொண்ட ஊடல் என்று அண்ணா சொல்வார்கள்.

அய்யா அவர்கள் சொல்வார்கள் 'பதினெட்டு ஆண்டுக் காலம் நான் இவர்களைத் தாக்கினேன்; ஏசினேன்! எல்லா வற்றையும் பொறுத்துக் கொண்டார்கள்' என்று. ஆனால் அய்யா அவர்கள் தாக்குதலையும் ஏசல்களையும், எங்களுக்கு அவர்கள் தருகின்ற பயிற்சியாக நாங்கள் எடுத்துக் கொண்டோம்.

நெல் பயிரிடுகின்ற விவசாயிகளுக்கு நன்றாகத் தெரியும். நெற்கதிரோடு வைக்கோலைக் களத்தில் போட்டு, மாடு களைவிட்டு மிதிக்கச் சொல்வார்களே, அது எதற்காக? அந்த நெற்பயிருக்குத் துன்பம் உண்டாக்க வேண்டும் என் பதற்காகவா? அல்ல அல்ல; மாடுகள் மிதிக்க மிதிக்க, நெல் மணிகள் கிடைக்கும் என்பதற்காக! அதைப்போல நெல் கதிர்களாகிய எங்களைப் பெரியார் பதினெட்டாண்டுகளாக மாடுகளை விட்டு மிதிக்கச் செய்து, போரடித்து, இப்போது கிடைத்திருக்கிற நெல்மணிகளைக் கையிலெடுத்து, அள்ளிப் பார்த்து, ஆகா மரகதமணிகள்! மாணிக்க மணிகள்! என் றெல்லாம் பாராட்டிக் கொண்டிருக்கின்றார்!

காஞ்சியில் திரு.வி.க. தலைமையில் நடைபெற்ற காங் கிரஸ் மாநாட்டில், துண்டை உதறித் தோளிலே போட்டுக் கொண்டு, தன்னுடைய கைத்தடியைத் தரையிலே வேகமாக ஊன்றிக், காங்கிரசை ஒழித்துக் கட்டி விட்டுத் தான் மறு வேலை பார்ப்பேன், என்று வெளியேறினார் பெரியார். அப்படி வெளியேறியவர் பதினெட்டு ஆண்டுக்காலம் காங் கிரஸ் வெற்றிக்காகப் பிரச்சாரம் செய்தார் என்றால் யாரும் நம்பமாட்டார்கள்; அவரும் ஒத்துக் கொள்ளமாட்டார்! ஏனென்றால், அவரே சொல்லியிருக்கிறார். நான் காமராச ரைத்தான் ஆதரிக்கிறேன்; காங்கிரசை அல்ல என்று!

நாங்களெல்லாம் இல்லாத நேரத்தில், மிச்சமிருப்பவர் களுக்குச் செலவு வைக்க வேண்டாம் என்றுதான் காங்கிரஸ் காரர்கள் மேடை போட்டுக் கொடுக்க, மைக் வைத்துக் கொடுக்க, அவர்கள் செலவிலேயே, அவர்கள் பெரியார் வாழ்க என்று சொல்லச் சொல்லத், தைரியமாக அதேமேடை யிலிருந்து கொண்டு, நான் காங்கிரசை ஆதரிக்க மாட்டேன்

காமராசரை மாத்திரமே ஆதரிப்பேன், என்று சொல்லக் கூடிய புரட்சிக்காரர், பெரியாரைத் தவிர, இந்தத் தரணி முழுதும் வேறு ஒருவரைக் காணமுடியுமா?

அப்படிப்பட்ட ஆற்றல் பெற்றவர்! அறிவின் சுரங்கம்; பகுத்தறிவுப் பேழை; கருத்துக் கருவூலம்; தமிழகத்திலே மண்டிக் கிடந்த மூடநம்பிக்கைகளை எல்லாம் உதறி விடுவதற்காக கிளர்ந்து எழுந்த புயற்காற்று, பெரியார் ராமசாமி அவர்களாவார்கள்!

எத்தனையோ சீர்திருத்தச் சிற்பிகளெல்லாம் தோன்றினார்கள். ஆனால் அவர்களெல்லாரும் தெய்வங்களாக ஆக்கப்பட்டு, அவர்களுடைய கொள்கைகள் அழிக்கப் பட்டன.

தன்னுடைய அயராத உழைப்பால், அறுபதாண்டுக் காலம், அவருடைய கால்படாத இடம் தமிழகத்திலே இல்லை; அவர் செல்லாத குக்கிராமம் இல்லை; அவர் பேசாத பட்டிதொட்டி இல்லை; அவருடைய குரலை எதிரொலிக்காத மனைகளே இல்லை! நான் எண்ணிக் கொள்வதுண்டு; பெரியாருக்கென்று ஒரு வீடு எதற்காக என்று! அதையும் கேட்டுவிடப் போகிறேனோ என்று பெரியார் அவர்கள் பயந்துவிட வேண்டாம். அவர் இருப்பதெல்லாம் காரிலேதான்; அவர் வாழ்வதெல்லாம் காரிலேதான்!

வேளாண்மைத்துறை அமைச்சர் கோவிந்தசாமிக்கு உடல் நலமில்லை. பெரியார் பொது மருத்துவமனைக்கு வந்து பார்த்துச் செல்கிறார். அடுத்த நாள், “பெரியார் எங்கே?” என்று வீரமணியைக் கேட்டால், “ஜெயங்கொண்டத்திலே நிகழ்ச்சி” என்கிறார். அன்றைக்கு மறுநாள் கோவிந்தசாமி அவர்கள் மறைந்தவுடன், சடலத்தைக் காணப் பெரியார் விரைந்து வருகிறார். கொளுத்துகிற வெய்யிலில், தள்ளாத பருவத்தில், மயான பூமிவரை வந்து விடுகின்றார்.

என்ன காரணம்? தான் பெற்ற பிள்ளைகள், தான் வளர்த்த பிள்ளைகள், தான் ஆளாக்கிய பிள்ளைகள், ஆட்சிபுரிகிறார்களே என்று மகிழ்ந்திருக்கிற நேரத்தில்,

இப்படிச் சோதனைக்கு மேல் சோதனையாக வருகிறதே என்று, சோகமுகத்தோடு, அவர் அமர்ந்திருந்த காட்சியை நாங்கள் கண்டோம். அது எங்கள் வேதனையை அதிகப் படுத்தியதென்றாலும், ஒருபுறத்தில்எங்களை ஆறுதலுக்கும் ஆளாக்கியது.

அண்ணனை இழந்திருக்கிற எங்களுக்குத் தந்தை பெரியார் அவர்கள்பெரும் ஆறுதலாகத் தோன்றுகிறார்கள். அவர்களை எண்ணிக்கொள்கிறபோது, எங்களுக்கு ஏற்படு கின்ற சங்கடங்களையெல்லாம் போக்கிக்கொள்கின்றோம். பகுத்தறிவாளர் ஆட்சி நடைபெற வேண்டுமென்று பெரியார் விரும்பினார். நடைபெறுகிறது, அவர் மகிழ் கிறார்; பாராட்டுகிறார்! பெரியார் நீண்டநாள் இருந்து, எங்களைப் பாராட்டிக் கொண்டே யிருக்கவேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம்.''

3-6-69 அன்று முதல்வர் கலைஞரின் 46-ஆம் ஆண்டு பிறந்த நாளுக்குப், பெரியார், "அன்பும் பண்பும் நிறைந்த அருமைக் கலைஞர் கருணாநிதி அவர்களது 45-ம் ஆண்டு கழிந்து, 46-ம் ஆண்டுத் தோற்றத்தை, மகிழ்ச்சியுடன் வரவேற்கிறேன்!" என்று வாழ்த்துக் கூறினார். ஆனால் 2-ந் தேதியே பெரியார் சென்னைப் பொது மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு, ஓரிருவாரம் தங்க நேரிடும் என்று தெரி விக்கப்பட்டிருந்தும், 7, 8, தேதிகளில் தஞ்சை, திருத்தணி, அரக்கோணம் இங்கெல்லாம் சென்று, மீண்டும் மருத்துவ மனை சேர்ந்து, 15 சென்னையிலும் 21 திருச்சியிலும் நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டார். எனினும் 25-ந்தேதி வேலூர் சி.எம்.சி. மருத்துவமனையில் டாக்டர்கள் பட், கோஷி, ஜான்சன் ஆகியோர் சிகிச்சை தர, அங்கே தங்கினார். மணியம்மையார், ஆம்பூர்பெருமாள், ஏ. டி. கோபால் ஆகியோர் உடனிருந்தனர்.

16-6-69 அன்று பெரியார் "இலண்டனில் அண்ணா ஆட்சி" என்று குறிப்பிட்டு, மகிழ்ச்சியோடு ஒரு தலையங்கம் "விடுதலை"யில் தீட்டியிருந்தார். 'கூடி வாழ இஷ்ட மில்லை, என்று தம்பதிகளில் ஒருவர் வாயினால் . கூறினாலே

போதும்! மணவிலக்குத் தந்துவிடலாம்' என்று காமன்ஸ் சபையில் இங்கிலாந்து ஒரு Divorce சட்டத்தை 14-6-69 அன்று நிறைவேற்றியது. "இது அண்ணாவின் சுயமரியாதைத் திருமணச் சட்டம் போலப் புரட்சிகரமானது, இதைப் பெரிதும் வரவேற்கிறேன்" என்றெழுதினார் பெரியார்.

மாநிலசுயாட்சிப் பிரச்னைபற்றி ஆராய நீதிபதிகள் பி.வி. ராஜமன்னார், சந்திராரெட்டி, மற்றும் டாக்டர் ஏ. லட்சுமணசாமி முதலியார் ஆகிய மூவர் கொண்ட குழுவைத் தமிழக அரசு நியமித்தது. கீழத்தஞ்சை விவசாயக் கூலி நிர்ணயம் செய்ய கணபதியா பிள்ளை கமிஷனையும் நியமித்தது, சென்னை உயர்நீதி மன்றத்தில் நீதிபதிகளாக பி.ஆர் கோகுலகிருஷ்ணன், ஜி. இராமானுஜம் நியமிக்கப்பட்டதை அடுத்து, கோவிந்த சுவாமிநாதன் அட்வகேட் ஜெனரல், வி.இராமசாமி பப்ளிக் பிராசிக்யூட்டர், பி. இராசமாணிக்கம் அடிஷனல் பப்ளிக் பிராசிக்யூட்டர், எஸ். மோகன் கவர்ன்மெண்ட் ப்ளீடர்—நியமனம் பெற்றனர் 10-7-69 அன்று. சென்னைக் கடற்கரையில், கலைஞர் பிறந்தநாள் விழாப் பொதுக் கூட்டத்தில், இந்த ஆண்டு அண்ணா பிறந்த நாளன்று தமிழகம் எங்கணும் 60 ஊர்களில் அண்ணா சிலை நிறுவப்படும் எனக் கலைஞர் அறிவித்தார்.

Shankar's Weekly ஜூன் 1-ந்தேதி 8-ந் தேதி இரண்டு இதழ்களில், பெரியாருக்கு மிகுந்த மரியாதை செலுத்தியிருந்தது. முதல் இதழில் 4 வித போஸ்களில் தர்மபுரி பெரியார் சிலை. அடியில் கடவுள் மறுப்பு வாசகங்கள். ராஜாஜி திகைப்போடும், வெறுப்போடும், அச்சத்தோடும் முதல் மூன்று படங்களில்! கடைசிப் படத்தில் கைத்தடி கிடக்க, ஆள் மறைந்துபோயிருக்கிறார், Quo Vadis? என்ற தலைப்பில் இந்த கார்ட்டூன் தொகுப்பு. அடுத்த வாரம், Pen Portrait பகுதியில், படத்துடன் விளக்கம். பெரியார் சாதி ஒழிப்பில் காந்தியாரையும் விஞ்சியவர். இருண்ட தமிழகத்தில் பகுத்தறிவு ஒளிபரப்பிய மாமேதை, நாத்திகக் கோட்பாட்டில் Bertrand Russel in England and Alfaro Sequieros in Mexico ஆகியோரை ஒத்தவர்—என்றெல்லாம் ஏராளமாகப் புகழ்ந்து, போற்றிப் பாராட்டியிருந்தது!

## *Quo Vadis?*




*The pedestal of a life-size statue of E. V. Ramaswamy Naicker, recently unveiled by Mr. Karunanidhi at Salem, bears inscriptions denying the existence of God.—Report.*

நன்றி: "[illegible]" 1-6-69

காரைக்குடி குறள் விழாவில் பேசிய அமைச்சர் மா முத்துசாமி, 'குறளிலும் குற்றம் தி ள்ளதென்று தம் மனத் திற்பட்ட உண்மையை, மறைக்காமல் துணிந்து கூறக் கூடியவர், பெரியார் ஒருவரே!' என்றார். 1-7–79 அன்று திருச்சியில் மதுரம் விளையாட்டரங்கில், கலப்பு மணத் தம்பதியர் 8 ஜோடிகளுக்கு, அரசு தங்கப்பதக்கம் வழங்கும் விழா! பெரியார் ரதத்திலும், தம்பதிகள் ஜீப்பிலும் ஊர் வலமாக அழைத்து வரப்பட்டனர். பெரியார் தலைமையில் முதல்வர் கலைஞர் பதக்கம் வழங்கினார். சமுதாய சீர் திருத்தத் தொண்டர்களுக்குக் கடவுள் மத சாஸ்திர நம்பிக்கை இருக்கக் கூடாது என்று பெரியார் கூறினார்.

15-7-69 காமராஜரின் 67-வது பிறந்தநாள். வழக்கம் போலல்லாமல், "விடுதலை" சிறிய அளவில் வாழ்த்துச் செய்தியைப் பிரசுரித்திருந்தது. தலையங்கப் பகுதியில் பெரியார், "தி.மு.கவுக்குச் சோதனைக் காலம்" என்று எழுதினார். பொதுச் செயலாளர் தேர்தலில் கலைஞர், நாவலர் இருவருமே போட்டியிடப் போவதாக வந்த செய்தி கேட்டு வருந்தினார். கட்சித் தலைவர் ஒருவராகவும், முதல்வர் வேறு ஒருவராகவும் இருப்பதும் தவறுதான் என்றார். தஞ்சை மாவட்டத்தில் விவசாயப் பணிகளுக்கு tractor உபயோகிக்கக்கூடாது என்று இடது கம்யூனிஸ்டுகள் போராடியபோது, இது பார்ப்பன ஆதிக்கத்திலுள்ள கட்சி, இது அவர்கள் சூழ்ச்சிதான் என்று எழுதினார் பெரியார். ராஷ்டிரபதி தேர்தலை யொட்டி, டெல்லியில் சிக்கல்கள் எழுந்தன. அதிகார பூர்வமான வேட்பாளர் சஞ்சீவரெட்டியைக் காமராஜரும், நிஜலிங்கப்பாவும் ஆதரித் தனர். இந்திராகாந்தி, வி.வி, கிரியைத் தூண்டிவிட்டு, நிற்கச் சொல்லி, ஜகஜீவன்ராம் ஆதரவைத் தேடிக் கொண்டார். மொரார்ஜிதேசாய் ராஜிநாமாச் செய்து விட்டார். 'இதிலிருந்து, இந்திய அரசியலிலும் ஆரிய திராவிட உணர்ச்சிப் போராட்டம் முகமூடியைக் கிழித்து வெளிவந்து விட்டது' என்றார் பெரியார்— "வகுப்பு வாதம் டில்லிக்கு எட்டி விட்டது" என்னுந் தலைப்பில்!

காமராஜரின் பிறந்த நாள் விழா சென்னை பாலர் அரங்கில் மாணவர்களால் 18–7–69 அன்று நடத்தப்பட்டது. கலைஞரது பிறந்தநாள் விழாவில் காமராஜர் கலந்து கொள்ள மறுத்தபோதிலும், கலைஞர் இந்த விழாவில் பங்கேற்றார். சி.சுப்ரமணியம், சம்பத், ஹண்டே, என். வி. நடராசன், சிவாஜி கலந்து கொண்டனர். பெரியார் சார்பில் வீரமணி, பெரியார் வேலூர் மருத்துவமனையிலிருந்து தந்த செய்தியை வாசித்தார்— "தமிழர்களுக்குக் கல்வி கொடுத்த பெருமையில் பங்கு பெற வேறு யாருக்கும் உரிமை கிடையாது" என்று! 20–7-69 உலக அறிவியலில் குறிப்பிடத் தக்க நாள். ஆம்ஸ்ட்ராங், அல்டிரின் இருவரும், நிலாவில் காலடி வைத்த நாள்! இந்திய அரசியலிலும் குறிப்பிடத் தக்க நாள்; 14 பேங்குகள் தேச உடைமை ஆன நாள்!

தென்னார்க்காடு மாவட்ட திராவிடர் கழக மாநாடும், பகுத்தறிவாளர் மாநாடும் 26, 27 தேதிகளில் நடைபெற்றன. தி.க. மாநாட்டின் தலைவர் நீடாமங்கலம் அ. ஆறுமுகம்; திறப்பாளர் திருவாரூர் தங்கராசு; கொடி உயர்த்தியோர் கி. வீரமணி; பகுத்தறிவாளர் மாநாட்டுத் தலைவர் பெரியார்; திறப்பாளர் ஃபாரூக். இந்த நாளில் சென்னையில் தி.மு.க. பொதுக் குழு கூடிப், பேச்சு வார்த்தைகள் மூலமே சுமுகமான முடிவுக்கு வந்து, தலைவராகக் கலைஞர், பொதுச் செயலாளராக நாவலர், பொருளாளராகப் புரட்சி நடிகர் எம்.ஜி.ஆர்., துணைப் பொதுச் செயலாளர்களாகக் காஞ்சி மணிமொழியார், கே. ராஜாராம் என்ற வகையில் போட்டி யின்றி அறிவிக்கப் பட்டது கேட்டுப்' பெரியார் நிம்மதி யடைந்து "தலைவர் ஸ்தானம் 20 ஆண்டுகளாகக் காலியா யிருந்தது நிரப்பப்பட்டது" என்றார். 29-ந் தேதி "விடுதலை" யில் ரசிக்கத்தக்க செய்தி ஒன்று:—குன்றக்குடி அடிகளார் பூசையில் அணியும் 7,000 ரூபாய் பெறுமான சாமான்கள் திருட்டுப் போயின. போலீசார், பழைய பணியாள் ஒருவ னிடமிருந்து கைப்பற்றினர். இதில் கடவுள் கைகொடுக்க வில்லை—என்று!

புதிய அமைச்சர்களாக நாவலர், என். வி. நடராசன், கா. வேழவேந்தன் ஆகியோர் நியமிக்கப்பட்டனர். என். டி. சுந்தரவடிவேலு சென்னைப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராக நியமிக்கப்பட்டதைப் பாராட்டி "விடுதலை" 31–7–69 அன்று தலையங்கம் தீட்டியது. "நாடு பஞ்சம் வறட்சி என்று தவித்துக் கொண்டிருக்கையில், பார்ப்பான் பாரத ராமாயணம் படிப்பதை நிறுத்துகிறானோ? ஆட்சி மீது குறை சொல்லுவதை நிறுத்துகிறானோ? என் உயிர் உள்ளவரை தி. மு. க. ஆட்சியை ஒழியவிடமாட்டேன்!" என்று உறுதி தெரிவித்த பெரியார், நீதித்துறையில் யாரும் தொட்டுக் காட்டாத ஓர் அக்கிரமத்தைக் குறிப்பிட்டார். "ஜில்லா ஜட்ஜ்கள் 16 பேர்தான் இருக்கிறார்கள். அவர்கள் தீர்ப்பு மீது அப்பீலை விசாரிக்க, அய்க்கோர்ட்டில் ஏன் 18 நீதிபதிகள்?" என்ற கேள்விக்கு, என்ன பதில்? ஜட்ஜுகளை வக்கீலில் இருந்து நேரடியாக நியமிப்பதைப் பெரியார் இடைவிடாமல் எதிர்த்து வந்தார்.

ஆகஸ்டு மாதம், பெரியாருக்கு, இயல்புக்கு மாறான மாதமாகிவிட்டது. 30–7–69 வேலூர் சி. எம். சி. மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டு, மறுநாள் அறுவை சிகிச்சை நடந்தது. ஆகஸ்டு 2-ஆம் நாள் கலைஞர், நாவலர், ப. உ. சண்முகம், முரசொலி மாறன் ஆகியோர் சென்று கண்டு வந்தனர். 4-ந் தேதி மாலை 3-30 மணிக்கு திருமதி–திரு எம். ஜி. ராமச்சந்திரன், காலையில் கே. ராஜாராம் ஆகியோர் பார்த்தனர். அன்று பெரியாருக்கு மூத்திரப் பையில் அறுவை நடந்து, உடல் நிலையில் முன்னேற்றம் தெரிந்தது. 6-ந் தேதி மதியழகன், ஜி. டி. நாயுடு, பி. ஜி. கருத்திருமன் கண்டனர். 7-ந் தேதி புதிய மந்திரி என். வி. நடராசன் தமது குடும்பத்தாருடன் சென்று பெரியாருக்கு மாலையணிவித்தார். அப்போது அங்கிருந்த Dr. பட் அவர்களிடம் பெரியார், "He is honourable Mr. N. V. Natarajan. Today he has become a minister. He was once my private secretary" என்று அறிமுகம் செய்துவைத்தார்.

10-8-69 அன்று ப. உ. சண்முகம், பொள்ளாச்சி மகாலிங்கம் ஆகியோரும் பெரியாரை நலம் விசாரித்தனர். அன்றைய தினம் பெரியார் திருச்சியில் நடைபெற்ற நீதித்துறை அலுவலர்களின் மாநாட்டில் கலந்து கொள்ள ஒப்புதல் தந்திருந்தார். "எவ்வளவோ விஷயங்களை உங்களுக்குத் தெரிவிக்கவும், உங்களிடமிருந்து தெரிந்து கொள்ளவும் இருந்தேன். உடல் நலக் குறைவால் இயலாமல் போனது. பாமர மக்களுக்கு நீதி முறையிலுள்ள கொடுமைகள் நீங்க வேண்டுமென்று ஆசைப்படுகிறேன்" என்று பெரியார் வேலூரிலிருந்து செய்தி அனுப்பியிருந்தார். 11-ந் தேதி காலை 11-45 மணிக்குக் காமராசர், வேலூரில் பெரியாரைச் சந்தித்து, அளவளாவினார். 14 அன்று ம. பொ. சிவஞானம், டி. கே. சண்முகத்துடன் வந்து சென்றார். மறுநாள் அய். ஜி. மகாதேவனும், பிரதம எஞ்சினீயர் சி. வி. பத்மநாபனும் பார்த்து நலம் விசாரித்தனர். 18-ந் தேதி இரவு குன்றக்குடி அடிகளார் பெரியாரைக் கண்டனர். 19-ந் தேதி மாலை 3-30 மணிக்குப் புறப்பட்டு நேரே நாகரசம்பட்டி சென்று திருமணத்தை நடத்திவிட்டு, மறுநாள் ஆம்பூரிலிருந்து, அடுத்த நாள் மீண்டும் வேலூர் மருத்துவமனைக்கே வந்தார் பெரியார். 25-ந் தேதி டிஸ்சார்ஜ் ஆகித் திருச்சி சென்றுவிட்டார். செப்டம்பர் மாதம் வரை ஓய்விலிருப்பார் என்று செய்தி கிடைத்தது. அதற்குள் 28-ந் தேதியே வேலூர் சென்று, புது டியூப் பொருத்தி வந்தார். சோர்வும், களைப்பும் அதிகமிருந்தது.

ஜனாதிபதி தேர்தலில் தி. மு. க. உறுப்பினர்கள், வி. வி. கிரிக்கு வாக்களித்தது தெரிந்ததும், பெரியார் "தி. மு. க. தலைமை சிந்திக்க வேண்டும். பார்ப்பானோ அல்லது சூத்திரனல்லாதனோதான் இதுவரை ராஷ்ட்ரபதியாக வர முடிகிறது" என்று எழுதினார். மதுரை திராவிடர் கழகக் கட்டட நிதிக்காகப் பெரியார் 1,000 ரூபாய் அன்பளிப்பாகத் தந்து, மற்றவர்களும் வழங்கிட, வேண்டுகோள் விடுத்தார். 26-8-69 அன்று "ஆனந்த விகடன்" அதிபர் எஸ். எஸ். வாசன் மறைவுக்கு "விடுதலை" துணைத் தலை

யங்கம் தீட்டியது. "குடி அரசு" துவக்க நாட்களில், வாசன் விளம்பரந் திரட்டும் ஏஜண்டாகப் பணியாற்றி யிருக்கிறார். பெரியாரிடம் மிக்க அன்பு பூண்டவர். ஜெமினி தயாரித்த எல்லாப் படங்களுக்கும் "விடுதலை"யில் விளம்பரம் வெளியிட்டு வந்தார். 2–9–69 அன்று பெரியாரும், மணியம்மையாரும் — திருமதி பட்டம்மாள் வாசனிடம் துக்கம் விசாரிக்கச் சென்றனர். மகன் பாலுவும், மணியனும் வரவேற்றனர். 5–ந் தேதி மயிலை இசபெல்லா நர்சிங் ஹோமில் சிகிச்சை பெற்று வந்த ராணி அண்ணியாரைப் பெரியாரும், மணியம்மையாரும் சென்று பார்த்தனர். முதல்வர் கலைஞருடைய முயற்சியால், வானொலியில் "பிராந்தியச் செய்தி"களாயிருந்தது, 1–9–69 முதல் "மாநிலச் செய்தி"களாக மாறிற்று. 26–8–69 அன்று தியாகராயநகர், தருமபுரம் ஆதீன நிலையத்தில், துணை வேந்தரான சுந்தர வடிவேலு, மேலவை உறுப்பினரான குன்றக்குடி அடிகளார், இவற்றுக்குக் காரணமான கலைஞர் ஆகியோருக்குப் பாராட்டு வழங்கப் பெற்றது.

மதுவிலக்கு அமுலினால் மாநிலத்துக்கு ஏற்படும் இழப்பை ஈடுகட்ட, மத்திய அரசு மான்யம் தராவிட்டால், மதுவிலக்கை ரத்து செய்ய நேரும், என்று முதல்வர் கலைஞர் கூறியதை, "விடுதலை" முதல் பக்க பேனர் செய்தியாக 7–9–69 அன்று வெளியிட்டது. 9-ந்தேதி சென்னை உயர்நீதி மன்ற நீதிபதிகளாக எஸ். மகராஜன், பி. எஸ். சோமசுந்தரம் நியமனம் பெற்றுப், பெரியாரின் கனவு நனவாகச், செய்தியாயினர். தேசிய மாணவர் படை யின் ஆணைச் சொற்கள் ஆங்கிலத்திலேயே இருக்கும் என்று, மத்திய அமைச்சரவையைச் சார்ந்த எம். ஆர். கிருஷ்ணா சென்னையில் 12-ந்தேதி நேரில் கூறினார். அண்ணாவின் உறுதி வென்றது! 12-ஆம் நாள் பெரியார் வேலூர் மருத்துவ மனை சென்று வந்தார்.

இந்த ஆண்டு பெரியார் 91–ஆவது பிறந்த நாள் விழா, தஞ்சை மாநகரில் கோலாகலமாகக் குதூகலத்துடன் கொண்டாடப் பட்டது. இராமநாதன் மன்றத்தில்

கவியரங்கம் 11–30க்குத் துவக்கம். வீரமணி வரவேற்றார். அடிகளாரும், பெரியாரும் அமர்ந்திருந்தனர். வேலூர் மருத்துவ நிபுணரான டாக்டர் பட், திருமதி பட், டாக்டர் ஜான்சன் ஆகியோர் மேடையில் அறிமுகம் செய்யப்பட்டனர். அமைச்சர் மா. முத்துசாமி கவியரங்கத்தலைவர். கவிஞர்களான கருணானந்தம், பாலசுந்தரம், புதுவை சிவப்பிரகாசம், பழம் நீ, முத்தன், குடி அரசு ஆகியோர் பெரியாரின் சிறப்பியல்புகளைக் கவிதைகளில் பொழிந்தனர். பிற்பகல் 2–30 மணிக்குத்தான் முடிந்தது. "நான் போதையில் இருக்கிறேன். இப்பேர்ப்பட்ட புகழ் மொழிகளைக்கேட்டு, நான் சகித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தது தான் கஷ்டம்!" என்றார் பெரியார். அனைவர்க்கும் பெரியார் இல்லத்தில் செஞ்சோறு (பிரியாணி) வழங்கப்பட்டது. மாலையில் மாபெரும் ஊர்வலம். பெரியாரும் என். வி. நடராசனும் முத்துப் பல்லக்கில் அமர்ந்து வந்தனர். முதல்வர் கலைஞர், சிறிது தூரத்தில் வந்து ஏறிக் கொண்டார். மணிக்கூண்டருகில் வந்ததும், அங்கே எதிரில் அமர்ந்திருக்கும் அண்ணாவைப் பார்ப்பதுபோல, முழு உருவ அளவில் வெண்கலத்தால் செய்யப்பட்ட, நிற்கும் நிலையில் நிறுவப்பட்ட பெரியார் சிலையினைக், கலைஞர் திறந்து வைத்தார், நாவலர் தலைமையில். ஊர்வலம் திலகர் திடலை அடைந்ததும், பிரம்மாண்டமான பொதுக்கூட்டம் நடைபெற்றது.

கலைஞர் பேசும்போது "பெரியார்தான் தமிழக அரசு. தமிழக அரசுதான் பெரியார். நாங்கள் பகுத்தறிவாளர்கள் என்பதற்கு ஒரே சான்று, அதிர்ஷ்டமில்லாததென்று சொல்லப்படும் 13 தான் இன்றைய அமைச்சர்களின் எண்ணிக்கையாகும். நாங்கள் பெரியாரின் ஆதரவு பெற்றவர்கள் அல்ல. பெரியாராலேயே ஆளாக்கப்பட்டவர்கள்" என்று உணர்ச்சி பொங்க உரைத்தார். நாவலர் 1,001 ரூபாய் கொண்ட பொற்கிழியினைப் பெரியாரிடம் வழங்கியபோது, நகைச் சுவையாகப் பெரியார் "சரியாயிருக்குமா?" என்று கேட்க,

அந்த லட்சக்கணக்கான மக்கள் வெள்ளம் கொல்லெனச் சிரித்தது, அலையோசையாக ஒலித்தது. என். வி. நடராசன், மா. முத்துசாமி, திருவாரூர் கே. தங்கராசு ஆகியோரும் பேசினர். மணியம்மையார் டாக்டர் பட் அவர்களிடம் மருத்துவமனைக்கு அன்பளிப்பாக ஏதோ தொகை வழங்கினார்கள். டாக்டர் இருவருக்கும் முதல்வர் பொன்னாடை போர்த்தினார். வீரமணி வரவேற்றுப் பேச, கா. மா. குப்பு சாமி அனைவர்க்கும் மாலை சூட்டினார். தோலி ஆர். சுப்ரமணியம் நன்றி நவின்றார்.

இந்த ஆண்டு திருச்சியில் பெரியார் கல்வி நிறுவனங்களின் நிறுவனர் நாள் 27–ந்தேதி நடைபெற்றது. அமைச்சர் என். வி. நடராசன், கல்வி இயக்குநர் சை. வே. சிட்டிபாபு, போலீஸ் அதிகாரி ராஜ்மோகன் ஆகியோர் பங்கேற்றனர். 28–ந்தேதி பெரியார் 91–ஆவது பிறந்த நாள் விழா, சுயமரியாதைக் குடும்பங்களின் விருந்து, கருத்தரங்கு, பாராட்டு விழா அனைத்தும் சிறப்புற நடந்தன. மதியழகன், சாதிக் பாஷா, ஓ. பி. இராமன், என். டி. சுந்தரவடிவேலு ஆகியோர் கலந்துகொண்டனர். வழக்கம் போல் இரு நாட்களிலும் பெரியார் உபசரிப்பும் பேருரையும் உண்டு. “நம்முடைய எந்தச் சமுதாயப் புரட்சிக்குமே முட்டுக்கட்டை போடுவது பார்ப்பனர்தான். பார்ப்பன ஏடுகளை வாங்காதீர்கள். அவர்கள் மிரட்டலும் இனிப் பலிக்காது. ஒரு மலையாளப் பழமொழி என் நினைவுக்கு வருகிறது. “பொரைக்கொரு முத்தி அரைக்கொரு கத்தி” என்றால் வீட்டுக்கு ஒரு கிழவியும், இடுப்புக்கு ஒரு கத்தியும் அவசியம் தேவை என்பது. ஆமாம்!” என்று பேசினார் பெரியார். சென்னை இராஜாஜி மண்டபத்தில் அண்ணா படத்தைப் பிரதமர் இந்திராகாந்தி 6–10–69 அன்று திறந்து வைத்தார். ஒரு படம் சட்ட மன்றத்திலும் வைக்கப்பட்டது.

91-வது ஆண்டு பிறந்தநாள் செய்தியாகப் பெரியார் ‘எனது நிலை’ என்ற தலைப்போடு கட்டுரை வரைந்தார்:— எனது 90-வது ஆண்டு பிறந்தநாள் விழா மலரில் எனது

நிலை என்கிற கட்டுரை எழுதும்போது, 91—வது ஆண்டு பிறந்தநாள் விழா மலருக்கு எனது நிலை என்பதுபற்றி எழுத வேண்டிய வாய்ப்பு இருக்குமா என்ற சந்தேகத்தில் எழுதினேன். என்றாலும் எப்படியோ வாய்ப்பு ஏற்பட்டது. முன்பு, ''எனக்கு வயது 90; உடல் நிலை மிகவும் மோசம்; கைகால் நடுக்கம் அதிகம்; சிறுநீர் கழிக்கும் போது சப்தம் போட்டுக் கொண்டுதான் கழிக்கிறேன்; அதாவது அவ்வளவு வலி; தூக்கம் சரியாய் வருவது இல்லை; நினைத்த போது உடலில் ஏதாவது ஒரு பாகத்தில் வலி ஏற்பட்டு, சில ஏப்பமோ காற்றுப் பிரிவோ ஏற்பட்ட பிறகு நோய் விலகுகிறது; உண்ட உணவு சரியானபடி ஜீரணமாவதில்லை; முன்போல் உணவும் சரியாய் உட்கொள்ள முடியவில்லை; எந்தக் காரியம் பற்றியும் மனத்திற்கு உற்சாகம் ஏற்படுவதில்லை; களைப்பு அடிக்கடி ஏற்படுகிறது; நெஞ்சில் வலி திடீரென்று ஏற்படுவதும், ஏப்பம் வந்தபிறகு குறைவதுமாக இருக்கிறது; எதைப் பற்றியும் சலிப்பும் வெறுப்பும் ஏற்பட்டு விடுகிறது.

சுருக்கமாகச் சொல்லுவதானால், வாழ்வே வெறுப்பாக இருக்கிறது. என்றாலும் தற்கொலை செய்து கொள்ள மாட்டேன். நினைத்தபடி நினைத்த ஊருக்கெல்லாம் என்னை அழைக்காதீர்கள். அப்படி என்னை மக்கள் அழைக்காமல் இருப்பதற்காகவே எனது வழிச்செலவுத் தொகையை ரூ. 100ல் இருந்து ரூ. 150 ஆக ஏற்படுத்தி விட்டேன். ரூ. 100 எனக்கு வண்டிச் செலவு, ரிப்பேர் செலவு, வைத்தியச் செலவு முதலியவைகளுக்கு அநேகமாகச் சரியாகப் போய்விடும். சில சமயங்களில் போதாமல் போகும். ஒரு தடவையில் 2, 3 பயணம் ஏற்பட்டால் ஓரளவு மீதியாகி, பிரச்சாரத்திற்குப் பயன்படும். எனக்கு இனிப் பிரச்சாரத்தில் ஆசை இல்லை. ஒரு வாரப் பத்திரிக்கை துவக்கி, அதற்கு ஆசிரியனாக இருந்து எழுதிக் கொண்டு இருக்க வேண்டும் என்பதில்தான் ஆசை அதிகமாக இருக்கிறது. இன்னும் என்னால் வெளியாக்கப்பட வேண்டிய விஷயம் அதிகம் இருக்கிறது.

இதற்காக, எளிதில் என்னைக் காணமுடியாத ஒரு தனி இடத்திற்குப் போய் விடலாமா, அல்லது ஈரோட்டிற்கே போய விடலாமா, என்று கூட எண்ணுகிறேன். இனி என் ஆயுள் எவ்வளவு இருக்க முடியும் என்பதில் எனக்குக் கவலை இல்லை. இருந்தவரை தொண்டு செய்யலாம் என்றுதான் திட்டம் போடுகிறேன். ஆனால் எதிர்பாராத சம்பவங்கள் நடப்பதும் ஏற்படுவதும் இயற்கையேயாகும். அதுபோல் என் முடிவும் இருக்கலாம்.

பொதுவாக என் மனம் குழப்பமாக இருக்கிறது. துறவி ஆகிவிடுவேனோ என்னமோ?''

—இந்தப்படி எழுதியிருக்கிறேன். அதை ஊன்றிப் படித்தாலே நான் எழுதியதன் தன்மை விளங்கும்.

இப்போது எனக்கு 90 முடிந்து 91 நடக்கிறது என்றாலும், இடையில் ஓராண்டில் என் உடல் நிலையானது 94, 95 என்று கருதும்படியான கிழத்தன்மை ஏற்பட்டு விட்டது. உடல்நிலை மாத்திரமல்லாமல் பஞ்சேந்திரியங்களோடு, புத்தி, மனது, சிந்தனாசக்தி முதலிய தன்மைகளும் மிகக் குறைந்து பலவீனப்பட்டு விட்டன. என்றாலும் இவ்வோராண்டு நாட்டுநிகழ்ச்சிகளைப் பார்த்தால், எனக்கு மற்ற கருவி கரணாதிகளின் பலக்குறைவு எப்படி இருந்தாலும், மனம் உற்சாகம் அடையும்படியான பல நிகழ்ச்சிகள் காணப்படுகின்றன.

முதலாவது நிகழ்ச்சி நமது தி.மு.க. ஆட்சியில் 13 மந்திரிகளில் 13 பேரும் தமிழர்கள் என்பதோடு, 18 அய்க்கோர்ட் ஜட்ஜுகளில் 14 பேர்கள் தமிழர்கள் (பார்ப்பனர் அல்லாதவர்கள்). டெல்லி ஆதிக்கமில்லாத அதிகாரங்களில் 100க்கு 50-முதல் 75 வரை பார்ப்பனரல்லாதவர் இருக்கும்படி ஆகிவிட்டது. அரசியலில், ஆளும் கட்சியிலும், எதிர்க்கட்சியிலும் தலைவர்கள் பணியாளர்கள் யாவருமே 100க்கு 100-ம் தமிழர்களேயாவார்கள். இதை அனுசரித்தே, மற்ற நிலைகளும் மாற்றமடைந்து வருகின்றன. இவ்வளவுக்கும் காரணம் தி.மு.க ஆட்சி என்றே சொல்லுவேன்.

காங்கிரஸ் மத்திய ஆட்சியிலும், பச்சையாகப் பார்ப் பனர்—பார்ப்பனரல்லாதார் பிளவும், வடநாடு—தென்னாடு என்கின்ற உணர்ச்சியும் காணப்படும் தன்மை உருவாகி விட்டது. இவையெல்லாம் நம் தமிழர் சமுதாய விடுதலைக் கும், சுயமரியாதைக்கும் நல்ல வெற்றி வாய்ப்பு என்றே சொல்லத் தக்கவையாகும்.

மற்றும் 90-வது பிறந்தநாள் மலரில் குறிப்பிட்ட சலிப்பு இப்போது எனக்குக் குறைவென்றே சொல்லலாம். உதாரணமாகத் துறவியாய்ப் போய்விடலாமா என்று எழுதி யிருந்தேனே—இன்று எனக்கு அப்படி எண்ணம் இல்லை. அந்த எழுத்தைப் பார்த்து உயர் காமராசரும், அறிஞர் அண்ணாவும் எனக்குத் தெரிவித்ததுபோல், அதாவது, 'இப்போது உங்களுக்கு எதற்காகக் கவலை? நீங்கள் நினைத்த காரியம் எது நடவாமல் இருக்கிறது? கவலையை விட்டு விடுங்கள்!' என்று சொன்ன சொற்கள் எனக்கு உற் சாகத்தைக் கொடுக்கின்றன.

இன்று எனக்குள்ள குறையெல்லாம், தமிழர் சமுதாயத் தில் 'விபீஷணப் பரம்பரை' வளர்ந்து வருவதுதான். இது தமிழரில் சில 'சாதிக்கு' (வகுப்புக்கு) இயற்கை என்றாலும் இது வருந்தத் தக்கதேயாகும். எனது 90-வது வயதைவிட, 91-வது வயது திருப்தியையும், மகிழ்ச்சியையும், உற்சாகத் தையும் கொடுக்கக்கூடியதாக இருக்கிறது என்பது என் கருத்து.

விபீஷணர்கள் திருந்துவார்களாக!

தி.மு.க. ஆட்சி, இனியும் குறைந்தது 10 ஆண்டுகளுக் காவது இருக்கும்படி, மக்கள் பார்த்துக்கொள்ள வேண்டும். எனக்கு இதற்குமேல் கருத்தும் ஓடவில்லை; எழுதவும் முடியவில்லை

அக்டோபர் மாதத்தில் கோயில் கருவறை நுழைவுக் கிளர்ச்சி பற்றியே பெரியாரின் சிந்தனை ஓட்டம் மிகுத்துக் காணப்பெற்றது. ''விடுதலை'' முதல்பக்கம் பெரிய எழுத்தில் கட்டம் போட்ட செய்தி: சூத்திரன் என்கிற இழிவு நீக்கக் கிளர்ச்சி. காலம் வீணாய்ப் போய்க் கொண்டிருக்கிறது.

அய்ப்பசி மாத வாக்கில் சூத்திரன் என்கிற இழிவு நீக்கக் கிளர்ச்சி துவக்கப்படும். அதில் ஈடுபட இஷ்டமுள்ளவர்கள் ஈ.வெ.ரா.வுக்குத் தெரிவியுங்கள்—என்று! "விடுதலை" 9-ந் தேதி தலையங்கமே, காலம் வீணாய்ப் போய்க் கொண்டிருக்கிறது என்பதுதான். பெரியார் அந்த வாரத்தில் எழுதினார்:-"வடநாட்டில் உள்ள காசி, பூரி, பண்டரிபுரம் முதலான ஊர்களின் பிரபலமான கோயில்களில், பக்தர்களே பூசை செய்யலாம். கர்ப்பக்கிரகத்தில் யாரும் போகலாம். இந்து மதம், ஆகமம் என்றெல்லாம் சொல்லிக் கொள்வது, இந்தத் தமிழ் நாட்டில்தான். இந்துக்கள் எல்லாருக்கும் பொதுவான இடமாகிய கோயிலில் பேதம் காட்டுவது ஏன்? சிலை இருக்கும் இடத்திற்குப் பார்ப்பான்தான் போகலாம். சிலைகளுக்குப் பார்ப்பான்தான் பூசை செய்யலாம். கடவுளுக்கு வடமொழியில்தான் மந்திரம் சொல்ல வேண்டும். ஆகவே இந்த இழிவுகளை ஒழிப்பதற்காக நாம் நடத்த இருக்கும் கர்ப்பக்கிரகப் பிரவேசக் கிளர்ச்சியில் ஈடுபடத் தயார் என்று கையெழுத்துப் போட்ட கடிதத்தை எனக்கு, திருச்சி-17 என்ற முகவரிக்கு அனுப்புங்கள். கிளர்ச்சி துவக்கப்படும் இடம் சென்னை, திருச்சி, திருவரங்கம், தஞ்சாவூர் அல்லது மன்னார்குடி ஏதாவது ஓர் ஊராக இருக்கலாம். இதில் பார்ப்பனர் அல்லாத இந்துக்கள் எனப்படுவோர், எந்தக் கட்சிக்காரராயிருந்தாலும், எல்லாரும் கலந்து கொள்ள வேண்டும். இந்தக் கிளர்ச்சி அவசியமா, இல்லையா, என்று கொஞ்சம் யோசனை செய்து பாருங்கள். அவசியம் என்று தெரிந்தால் வாருங்கள்; போகலாம்! இந்தக் கிளர்ச்சியின் தத்துவம், நம்மேல் சுமத்தப்பட்டிருக்கும் தாழ்த்தப்பட்ட சாதி என்கிற இழிவை ஒழிப்பதுதான். ஈரோட்டில், முதன்முதலில் கோயில் பிரவேசம் செய்து காட்டியது நான்தான். நாம் இப்படிக் கோயிலுக்குள் செல்வதால், நம்மீது இரண்டு கிரிமினல் குற்றங்கள்தான் சுமத்தப்பட முடியும்! அதையும் பார்த்து விடுவோம்!"

மேலும், இராஜாஜி பெரியாரைப்பற்றி, என்ன சொன்னாராம்:- "என்னை யோக்கியமானவன், உண்மை

யானவன் என்று இராஜாஜி கூறியதாகத் "தினமணி" ஏடு தெரிவிக்கிறது. அவரைப்பற்றியும் நானும் அப்படியேதான் கருதிக்கொண்டு இருக்கிறேன். நாங்கள் ஏற்றுக்கொண்டிருக்கிற தொண்டிற்கு ஏற்பக் கருத்துவேறுபாடுகள் இருக்கலாம். அது எங்கள் கடமையாகப் போய்விட்டதே!" என்றார் பெரியார்!

பிற்படுத்தப்பட்டோர் நலம்பற்றி ஆராயத் திரு.ஏ.என். சட்டநாதன் தலைமையில் குழு ஒன்று அமைக்கப்பட்டு உள்ளதாக அமைச்சர் என்.வி. நடராசன், 17–ந் தேதி தெரிவித்தார். இழிவு ஒழிப்புக் கிளர்ச்சியில் ஈடுபடுவோர், பெரியாரின் கட்டளையை ஏற்றுப் பெயர் கொடுத்தோர், பட்டியல் 17–ந்தேதி முதல் "விடுதலை"யில் பத்தி பத்தியாய் வெளிவரத் தொடங்கிவிட்டது. ஊக்கம் பெற்ற பெரியார் 18, 19 நாட்களில் இரு தலையங்கக் கட்டுரைகள் தீட்டினார். மூலஸ்தானப் பிரவேசம் என்பது தலைப்பு:–மூலஸ்தானத்தில் எல்லா மக்களும் பிரவேசிக்கக்கூடாது என்பது கோயில் சம்பந்தமாக, அல்லது ஒரு பொது இடம் சம்பந்தமாக, அரசாங்கத்தார் செய்து கொண்ட ஒரு ஏற்பாடு தானே ஒழிய, அது எந்தவிதத்திலும் ஒரு ம்தசம்பந்தமான தத்துவமாகாது. கோயிலுக்குள்ளாகவோ, மூலஸ்தானத்திற்குள்ளாகவோ இன்ன மதத்தார்தான், இன்ன சாதியார் தான் செல்லலாம்; இவரிவர் செல்லக்கூடாது என்பதற்கு எந்தச் சட்டமும், மத ஆதாரமும், சரித்திர நியமமும் இல்லை. இன்ன மொழியில்தான் பூசைக்குச் சொற்கள் சொல்ல வேண்டும் என்கிற கட்டாயமும் இல்லை. கோயில் நிர்வாகத்துக்கு, டிரஸ்டி பதவிக்கு இன்ன சாதியாகத் தானிருக்கவேண்டும் என்பதற்கு ஒரு நிர்ப்பந்தமுமில்லை. மதவிரோதமும், சாஸ்திரவிரோதமும், சட்டவிரோதமும் இல்லை.

நான் நாஸ்திகக் கொள்கை உடையவனாக இருந்து கொண்டே, சுமார் 20 ஆண்டுகாலம் ஈரோடு, கோபி, பவானி, திருப்பூர் தாலுக்காக்களின் தேவஸ்தானக்கமிட்டித் தலைவராக இருந்திருக்கிறேன். இவன் நாஸ்திகன் என்று

கலெக்டரிடம் புகார் செய்த போதுகூட, அவர் சிரித்துக் கொண்டே,இந்துதானே? என்று கேட்டிருக்கிறார். இன்றும் விஷ்ணு கோயில்கள் பலவற்றில் நாம் வெளியிலிருந்து கையை நீட்டினால், எட்டக்கூடிய தூரத்தில் சிலை இருக்கக் காணலாம்.பூசாரிக்குக்கூட, நெற்றியில் நாமமோ விபூதியோ இருக்க வேண்டுமேயொழிய, அவன் ஸ்நானம் செய்து, சுத்தமாக உடுத்திவரவேண்டும் என்ற திட்டங்கூட இல்லை. நெற்றிக்குறி என்பதும், அதிகாரத்தாலும் செல்வாக்காலும் ஏற்பட்டதேயொழிய, அதற்குச் சட்டமோ சாஸ்திரமோ நிர்ப்பந்தமோ கிடையாது. ஆக, மூலஸ்தானப் பிரவேசத் திற்கும், கர்ப்பக்கிரகப்பிரவேசத்திற்கும் சட்டம், சாஸ்திரம் ஒன்றும் கிடையாது. ஆச்சாரம், அனுஷ்டானம் என்பதற்கும் எந்தத் திட்டமும்—இந்துமதம் என்பதற்கே—கிடையாது!

எங்கள் தோட்டத்தில் மட்டுமே பூக்கக்கூடிய சண்பகப்பூ மனோரஞ்சிதப் பூவை மாலைகட்டி, சாமிக்கு அனுப்புவேன்; அது இரவில் தாசிகளின் தலையில் இருப்பதைப் பார்த்திருக் கிறேன். எப்படி வந்தது? அர்ச்சகர் 'மாமா' வேலை பார்ப்பவராயிருப்பார்!

எனவே, ஆட்சியாளர் இதைப்பகுத்தறிவோடு கவனிக்க வேண்டும் என்றும் வேண்டிக்கொள்கிறேன்.

அடுத்த நாள் இழிவு நீக்கக் கிளர்ச்சி என்ற தலைப்பு:- சூத்திரர் என்கிற இழிவை நீக்கக் கிளர்ச்சி செய்வது என்பது சமுதாய சம்பந்தமான (சோஷியல்) காரியமே தவிர இதில் அரசியல் (பொலிடிகல்) ஏதுமில்லை, பலாத்காரமும் இதில் ஏதுமில்லை.

நம்நாட்டில் 100க்கு 97 பேராயுள்ள படித்தவர்கள், செல் வவான்கள், நீதிபதிகள், கலெக்டர்கள், துணைவேந்தர்கள், மடாதிபதிகள், மகாராஜாக்கள், ஜமீன்தார்கள், பிரபுக்கள் ஆகிய யாராயிருந்தாலும் சமுதாயத்தில் கீழ்பிறவியாக, கீழ் மக்களாக, அவர்களுடைய கடவுள் என்கிற சிலையிடம்கூட நெருங்கக்கூடாதவர்களாக, அறைக்கு வெளியே நிற்க வேண்டியவர்களாகத், தலைமுறை தலைமுறையாகத் தடுக் கப்பட்டு, நிரந்தரமான இழிவுக்கு உள்ளாக்கப்பட்டிருப்பதி

லிருந்து விலக்கி, மானமுள்ள மக்களாக ஆக்கப்படவேண்டும் என்பதற்காகக், கிளர்ச்சி செய்வதென்றால்—இதுவரை செய்யாமல் இருந்ததுதான் மானங்கெட்ட தன்மையும், இமாலயத்தவறும் ஆகுமே ஒழிய, இப்போது கிளர்ச்சி செய்வதென்பது ஒரு நாளும், ஒருவிதத்திலும், தவறாகவோ கூடாததாகவோ ஆகாது; ஆகவே ஆகாது!

நீக்ரோக்களுக்கும் வெள்ளையருக்கும் உள்ள அளவு பிறவிபேதம் நிறபேதம் நாகரிகபேதம்-நமக்கும் பார்ப்பனருக்கும், பூசாரிகளுக்கும் கிடையாது. அவ்வளவு பேதமுள்ள—மைனாரிட்டியான நீக்ரோக்கள் மெஜாரிட்டியான, ஆளும் ஜாதியான, பிரபுக்களான, வெள்ளையரோடு எல்லாத் துறைகளிலும் சரிசமமாய்க் கலந்து, உண்பன, உறங்குவன; பெண்கொடுக்கல், வாங்கல்; உட்படக் கலந்து புழங்குகிறார்கள். ஆனால் நம் நாட்டில் 100 க்கு 3 பேரே உள்ள கூட்டம் பிச்சை எடுப்பதையும், உழைக்காததையும், கூலிக்குப் புரோகிதம் செய்வதையும் உரிமையாய்ப்-பிழைப்பாய்க் கொண்ட கூட்டம், மற்றும் வாழ்வில் யோக்கியமாக நேர்மையாக நாணயமாக இருக்கவேண்டும் என்கின்ற தர்மம் இல்லாததும், தாங்கள் எது வேண்டுமானாலும் செய்து பிழைக்கலாம், எப்படி வேண்டுமானாலும் நடக்கலாம் என்கின்ற அனுபவத்தில் இருக்கின்ற கூட்டம், தங்களை மேல் பிறவி என்றும், நாம் கீழ்ப்பிறவி என்றும் பொது இடமாகிய கடவுள் என்னும் கல்சிலையிருக்கும் இடத்தில் பிரவேசிக்கக்கூடாத, மிகமிக இழிதன்மையானவர்கள் என்பதான நிபந்தனையை நம்பேரில் ஏற்றிவைத்து, அறைக்கு வெளியில் நின்று வணங்கவேண்டும் என்பதை, நிலைக்க விடலாமா? என்பதுதான் கிளர்ச்சியின் தத்துவமாகும்.

மேலும், குருக்கள் என்பவர்கள் பார்ப்பனரல்லாத சைவர்கள் என்பதற்கான ஆதாரங்களுமிருக்கின்றன. ஒரு குறிப்பிட்ட சாதியார்தான் பூசாரியாக இருக்க வேண்டுமென்கிற நிபந்தனை எந்த ஆதாரத்திலுமில்லை; குருக்கள் அர்ச்சகர்கள் வீட்டில் மற்றப் பார்ப்பனர்கள் சாப்பிடவோ,

பெண் கொடுக்க, எடுக்கவோ மாட்டார்களாம். அந்த நிலையிலிருப்பவர்கள் பூசை செய்யும் இடத்திற்கு, மற்ற இந்துக்கள், பார்ப்பனரல்லாதவர் மட்டும்—நுழையக் கூடாது என்றால் அது எப்படி நியாயமாகும்?

நாம் மூலஸ்தானத்திற்குள் செல்லலாம்; ஆனால் சிலையைத் தொடக் கூடாது என்று வேண்டுமானாலும் திட்டம் வைத்துக்கொள்ளட்டும். ஆனால் நெருங்கக் கூடாது; அறையின் படியைத் தாண்டக் கூடாது என்பது என்ன நியாயம்?

எனவே, இந்தக் கர்ப்பக்கிரகம் என்கிற பூச்சாண்டிகள், பார்ப்பனரல்லாத மக்களை இழிமக்கள் என்றாக்கப்படுவ தற்காகத்தான் இருந்து வருகின்றன. வேறு எந்தப் புனிதத் தன்மையையும் பாதுகாக்க அல்ல. நாம் உள்ளே சென்று வணங்குவதால், எந்தப் புனிதத் தன்மையும் கெட்டு விடாது; இருந்தாலும் கெடுக்க வேண்டுமென்கிற எண்ணம் நமக்கு இல்லவேயில்லை.

நமது இழிவு நீக்கப்பட வேண்டும் என்கிற ஒரே காரியத் திற்காகத்தான் இதைச் சொல்லுகிறோம். உடனே பெயர் கொடுங்கள்!''

கரூர்வட்ட திராவிடர் கழக மாநாடும், சமூக சீர்திருத்த மாநாடும் 26-10-69-ல் நடைபெற்றன. வீரமணி தலைமை ஏற்க, செல்வி தன்மானம் பி.எஸ்சி. கொடி உயர்த்த, செல்வேந்திரன் திறந்துவைக்க, அமைச்சர் ப.உ. சண்முகம், பெரியார் ஆகியோர் சிறப்புரையாற்ற, மாநாடுகள் முடிவுற்றன. 27-ந் தேதி ''விடுதலை'' யில் பாராட்டத்தக்க நியமனப்பகுதியில் வந்த செய்தி ஒன்று:—தமிழக அரசின் பிரச்சார அதிகாரியாக கவிஞர் திரு கருணானந்தம் நியமிக்கப்பட்டுள்ளார். இவர் எழுத்துத் துறையிலும் பேச்சுத் துறையிலும் ஆற்றல் உள்ளவர். ''குடிஅரசு'' போன்ற ஏட்டில் பல ஆண்டுகளுக்கு முன்பே, துணை ஆசிரியராகப் பணியாற்றியவர் ஆவார். பிற்படுத்தப்பட்ட வகுப்பைச் சார்ந்தவர்.

இழிவு நீக்கக் கிளர்ச்சிக்காகப் பெயர் கொடுத்த தொண்டர்களின் எண்ணிக்கை 24-10-69 அன்று 202 பேர். கர்ப்பக்கிரக நுழைவுக் கிளர்ச்சி, நவம்பரில், மன்னார்குடி ராஜகோபாலசாமி கோயிலில் துவங்கும்; அலுவல்களைக் கவனிக்கக் குழு ஒன்று நியமனம்; என்ற போர்ப்பிரகடனமும் அன்றே வெளியாயிற்று. 29-ந் தேதி திருச்சி சவுந்தரராஜன் நாடக மன்றத்தார் நடத்திய குமரிக்கோட்டம் நாடகத்திற்குப் பெரியார் தலைமை தாங்கினார்.

சென்னை "விடுதலை" அலுவலகத்தில், 'விக்டோரியா 820' என்ற புதிய அச்சு இயந்திரம் இறக்குமதி செய்யப்பட்டு, 4–11–69 அன்று, அதனை இயக்கி வைக்க, ஒரு விழா ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது; ஆசிரியர் வீரமணி, மேலாளர் சம்பந்தம், மற்றும் தோழர்களால். அமைச்சர் என். வி. நடராசன் தலைமையில், முதல்வர் கலைஞர் இயந்திரத்தை ஓட்டினார். அமைச்சர் மாதவனும் கலந்து கொண்டார். பெரியார், அண்ணா படத்தைத் திறந்து வைத்தார். முன்னதாக அருமையான தேநீர் விருந்தொன்று நடைபெற்றது. விழா முடிந்து, அழைப்பாளரெல்லாரும் விடைபெற்ற போது, பெரியார் ஆச்சரியம் தாங்காமல்; மணியம்மையாரை அழைத்து, 'தேநீர் விருந்து இவ்வளவு காஸ்ட்லி (Costly)யாக எப்படிச் செய்தார் வீரமணி?' என்று நயமாக விசாரித்தார். அம்மையார் சிரித்தார்கள்: 'நேற்று இங்கு நமது வழக்கறிஞர் கஜபதியின் குழந்தைக்குப் பிறந்த நாள் விழா சிறப்பாகக் கொண்டாடினார். அதில் மீதமான இனிப்பு, காரம் வகையராதான் இது' என்றார் அம்மையார். குருவுக்கேற்ற சீடர்கள் எப்படி?

9-ந் தேதி திருச்சியில், சந்தேகந் தீர்க்கும் முறையில், பெரியார் விளக்கமுரைத்தார். நாம் தி. மு. க. அரசை ஆதரித்தாலுங்கூட, திட்டப்படி, கர்ப்பக்கிரக நுழைவுக் கிளர்ச்சி நடந்தே தீரும். மனிதன் சந்திரனுக்குச் சென்று வரும் விஞ்ஞான யுகத்தில்கூடச் சூத்திரன் என்ற இழிவை நாம் ஒழித்தாக வேண்டாமா? என்று கேட்டார் பெரியார்.

இந்திரா காந்தியைக் காங்கிரசின் அடிப்படை உறுப்பினர் பதவியிலிருந்தும் 12-ந் தேதி நீக்கப்பட்டதாகச் செய்திகள் வந்தன. இந்திரா அரசு முற்போக்காகச் செயல்படும் வரையில் அதற்குத் தி. மு. க. ஆதரவு உண்டு என்பதாக முதல்வர் கலைஞர் கூறியது, இராஜாஜிக்குப் பதிலென்றாலும், தன்னிலை விளக்கமாகவும் அமைந்தது. கடவுள் அருகில் எல்லாரும் போகலாம், எல்லாரும் தொடலாம் என்பது தான் என்னுடைய கருத்தும் ஆகும். ஆனாலும், பெரியாரின் கிளர்ச்சியைக் கைவிடுமாறு நான் கேட்டுக் கொள்வேன், என்பதாகவும் முதல்வர் கூறினார்.

கர்ப்பக்கிரக நுழைவுக் கிளர்ச்சியில் ஈடுபடுவோர்மீது வழக்குகள் தொடரப்பட்டால், தோழர்களுக்காக வாதாடத் தயார் என்று கூறிய வழக்கறிஞர்களின் பட்டியல் "விடுதலை"யில் தினமும்பிரசுரமானது. 16-11-69 திருச்சியில், தி. க. மத்திய நிர்வாகக் கமிட்டியில், இழிவு நீக்கக் கிளர்ச்சிக்கான குழு ஒன்று அமைக்கப்பட்டது. பெரியார் தலைவர், வீரமணி செயலாளர், புலவர் கோ. இமயவரம்பன் பொருளாளர், டி. டி. வீரப்பா, அ. ஆறுமுகம், து. மா. பெரியசாமி உறுப்பினர்கள். 1970 ஜனவரி 26-ந் தேதி இழிவு நீக்கக் கிளர்ச்சி துவக்கப்படும் நாள்; களமாக மன்னார்குடி தவிர, மற்ற ஊர்களையும் பின்னர் சேர்த்துக் கொள்ளலாம்; அது வரையில் இடையிலுள்ள நாட்களில் தீவிரமாகப் பிரச்சாரம் மேற்கொள்ள வேண்டும்; தேவைப்பட்டால் எதிர் வழக்காடலாம்; கிளர்ச்சியைக் கைவிடுமாறு தவத்திரு குன்றக்குடி அடிகளார் எழுதிய கடிதத்தை ஏற்க முடியாமைக்கு வருத்தந் தெரிவித்தல்—ஆகிய முக்கியமான தீர்மானங்கள் இயற்றப் பட்டன. பாராட்டத் தக்க நியமனங்கள் பகுதியில், 13-11-69 "விடுதலை"யில் இடம் பெற்றவை:— இ. பி. ராயப்பா முதல் அய். ஏ. எஸ். அதிகாரியாகத் தலைமைச் செயலாளரானார்; தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த அய். ஏ. எஸ். அதிகாரி பாலசுந்தரம் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் தலைவரானார்; எஞ்சினியர் கே. ஆர். ராதா கிருஷ்ணன் மின்வாரியத் தலைவரானார்.

"காங்கிரஸ் பிளவுக்குக் காரணம் இந்திராகாந்தி செய்த தவறுதான். அதிகார பலத்தை வைத்துக்கொண்டு ஸ்தாபனத்தைப் பாழ்படுத்தி விட்டார். பதவியில்லா விட்டால் தம்மால் வாழமுடியாது என்று கருதுகின்றவர் களுக்கு இனிக் காங்கிரஸ் கட்சி பயன்படாது. இந்திரா காந்தியை ஆதரிப்பதாகச் சொல்கின்ற தி.மு.க. நிலை சரி தான். தங்கள் ஆட்சிக்குக் கேடில்லாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது அவசியந்தான்" என்று பெரியார் ஒரு தலையங் கத்தில் குறிப்பிட்டார். 28-ந்தேதி "விடுதலை"யில் தலை யங்கம் மூலமாகவும், ஒரு பெட்டிச் செய்தி மூலமாகவும் பெரியாரின் வேண்டுகோள் ஒன்று பிரசுரமாகியிருந்தது. "ஜனவரி மாதத்திலிருந்து 'உண்மை' என்னும் மாத சஞ்சிகை, 25 காசு விலையில், புலவர் கோ. இமயவரம்பனை ஆசிரியராகக் கொண்டு, திருச்சியிலிருந்து வெளிவரும். நிறையச் சந்தா எதிர்பார்க்கப்படுகிறது. பின்னர் ஆங்கிலத் திலும் அதேபோல ஒரு இதழ் ஆரம்பிக்கும் ஆசையும் இருக் கிறது" என்பதுதான் விஷயம்.

5-12-69 அன்று அமைச்சர் ஓ.பி. இராமன் திருமணம். அதன் பொருட்டுத் திருச்சி வந்த முதல்வர் கலைஞர், தம் குடும்பத்தாருடன் பெரியாரைக் காலை 9 மணிக்குச் சந்தித்தார். அப்போது ஈரோடு மருத்துவமனை விரிவுக்காக என்று, பெரியார், முதல்வரிடம் ஒரு லட்சம் ரூபாய் நன்கொடை வழங்கினார். 5-ந்தேதி பெரியார் அண்ணா மலை நகரில் பொதுக் கூட்டத்தில் பேசினார். 13-ந்தேதி மதுரை நகர மன்றத்தின் சார்பில், தலைவர் எஸ். முத்து பெரியாருக்கு வரவேற்பளித்தார். அன்றைய தினம் துவங்கப்பட்ட அண்ணா பேரவையில் பேசிய கா. காளி முத்து, விடுதலை பெற்ற தமிழகத்தின் முதல் ஜனாதிபதி யாகப் பெரியார் வரவேண்டுமெனத் தமது விருப்பத்தைத் தெரிவித்தார்.

ஈரோடு செங்குந்தர் உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் ஏதோ காரணமாய் வேலை நிறுத்தம் செய்தபோது, பெற் றோர்களில் 200 பேர் ஒன்று திரண்டு, கம்பு, பிரம்பு,

சகிதமாய், மாணவர்களை விரட்டிச் சென்று, பள்ளியில் விட்டதைப் பாராட்டி, "ஈரோடு பெற்றோர்களின் சீரிய நடவடிக்கை" என்று "விடுதலை" தலையங்கம் பாராட்டிற்று, 12ந் தேதி.

டிசம்பர் 16, 17 தேதிகளில் கடவுளைப் பற்றிப் பெரியார் எழுதிய இரு தலையங்கக் கட்டுரைகள் சிந்தனைக்கு விருந்தாகும்:— "பெரு மழையால், பூகம்பத்தால், இடி விழுவதால், பெரும்புயல் காற்றுகளால் பயிர்கள், கால் நடைகள், வீடுகள் சேதமாகின்றன. பல நாசங்கள் ஏற்படுகின்றன. இதில் சிந்திக்கும்படியான விஷயம் என்னவென்றால், மேற்கண்ட கேடுகளில், சேதங்களில், நாசங்களில், ஜீவ அழிவுகளில் எந்த ஒரு சிறு அளவுக்கும் ஆறறிவு படைத்த மனித வர்க்கத்தால், எந்த விதமான பாதுகாப்பும் செய்து கொள்ள முடியாத நிலையில், அனுபவித்தே தீர வேண்டியதாகவும், பல நேரங்களில் அவை நிகழும் வரை தெரிந்துகொள்ள முடியாததாகவும் இருக்கும் விசித்திரம்தான்.

இந்த நிலைக்குக் காரணம் என்ன? 'கடவுள் சித்தம்' என்பதுதானே? அது உண்மையாயிருக்குமானால், இதிலிருந்து கடவுளை எவ்வளவு அயோக்கியன் என்று கருத வேண்டியிருக்கிறது? இந் நிலையில் கடவுள் இருப்பானேயானால், அவன் உலகத்தைப் படைத்ததே முட்டாள் தனம் அல்லது அயோக்கியத் தனம் என்றுதானே சொல்ல வேண்டியிருக்கிறது? ஏனெனில் இந்த மாபெரும் உலகத்தைப் படைத்து, அதில் ஏராளமான ஜீவன்களைப் படைத்து, அவை திருப்தியாய் வாழ்வதற்கில்லாமல், பசி பட்டினி நோய் துன்பம் தொல்லை வேதனைகள் உண்டாக்கி, நாசமடையச் செய்வது என்றால், இதில், அறிவுடைமையோ கருணையுடைமையோ நேர்மையுடைமையோ ஒழுக்கமுடைமையோ என்ன இருக்கிறது?

இந்த நிலையிலுள்ள ஒரு கடவுளுக்காக என்று, பகுத்தறிவு உள்ள மனிதனால், எவ்வளவு பொருள் நேரம் ஊக்கம் முயற்சிகள் செலவழிக்கப்படுகின்றன? கடவுள் பெயரைச்

சொல்லி எத்தனை மக்கள் முட்டாள்களாக்கப்பட்டு, ஏய்க்கப்படுகின்றனர்!

எல்லா மக்களும் குறைவற்ற செல்வத்துடனும், நிறைவுற்ற ஆயுளுடனும் வாழ்வதற்குப், பகுத்தறிவுப் பள்ளிகள் மாத்திரம் வைத்து, 'நிர்வாணமான' சிந்தனா சக்தி தரும் படிப்பைக் கொடுத்தால், நாட்டில் இன்று வீணாகும் செல்வம் நேரம் ஊக்கம் எல்லாம் மீதமாகும்.''

''மதத்திற்கும், சாத்திரங்களுக்கும் கடவுளை எஜமானனாக, மூலகர்த்தாவாக வைத்து உண்டாக்கினார்கள் என்றாலும்; கடவுள் வேறு, மதம் சாஸ்திரம் வேறு என்றுதான் சொல்லவேண்டும். ஏனெனில் கடவுள் அறியாமையில் இருந்து தோன்றியதாகும். மதமும் சாத்திரங்களும் அயோக்கியத்தனத்திலிருந்து, அதாவது மக்களைப் பயப்படுத்தி அடிமைகளாக்க வேண்டும் என்ற எண்ணத்தின்மீது உண்டாக்கப்பட்டவைகளாகும். கடவுளைக் கற்பித்தவனை மன்னித்து விடலாம். ஆனால், மதம் சாத்திரங்களைக் கற்பித்தவனை மன்னிக்கவே கூடாது என்றார் பெர்ட்ரண்ட் ரஸ்ஸல். கடவுளைக் கற்பித்தவன், உலக உற்பத்திக்கும் நடப்புக்கும் ஒரு கடவுள் அல்லது கர்த்தா இருக்க வேண்டுமே என்று சந்தேகத்தின் பலனை (Benefit of doubt) கடவுளுக்குக் கொடுக்கிறான். ஆனால் மதமும் சாஸ்திரமும் முழுப்பொய்யாகவே கற்பனை செய்து, மக்களை ஏய்ப்பதற்கென்றே, பயப்படுத்துவதற்கென்றே பாகுபடுத்தி அமைத்திருக்கின்றான். அதனால்தான் அவற்றில் மாறுபாடும், முரண்பாடும் இவ்வளவு அதிகமாக உள்ளன.

இந்து மதத்தைப் பார்ப்பனர் வேதமதம் என்கிறார்கள். பார்ப்பனர் தங்களை ஆரியர் என்று சொல்லிக் கொள்கிறார்கள். அதனால் அதை ஆரிய மதம் என்றும் சொல்லிக் கொள்கிறார்கள். ஆங்கில அகராதிகளில் இந்து மதம் என்றால், பிராமண மதமென்றும், கிறிஸ்துவர் முகமதியர் அல்லாதார் மதம் என்றும் குறிப்பிடப் பட்டிருக்கிறது.

ஆகவேதான் கடவுள் நம்பிக்கை, மதம், சாஸ்திரம்,

புராணம், இதிகாசம் ஒழிக்கப்பட்டே ஆகவேண்டுமென்று கூறுகிறோம்.''

கடவுள் நம்பிக்கைக்காரர்களைப் பற்றிப் பெரியார் என்ன கருதுகிறாராம்;—''ஒரு தேவதாசியை விபசாரி என்று சொன்னால், ஒரு வக்கீலை அவர் காசுக்காகப் பேசுகிறவர் என்று சொன்னால், ஒரு வியாபாரியை அவர் பொய் பேசுகிறவர் என்று சொன்னால், எப்படிக் கோபித்துக் கொள்வார்களோ—அதேபோல் கடவுள் நம்பிக்கைக்காரர்களை முட்டாள் அயோக்கியன் காட்டுமிராண்டி என்று சொன்னால்—கோபித்துக் கொள்கிறார்கள்.

சர்வவல்லமையுள்ள கடவுள் ஒன்று இருக்கிறது என்பதை நான் என் மனம் மொழி மெய்களால் நம்புகிறேன், அதற்கேற்பவே நடந்து கொள்கிறேன் என்று யாராவது ஒருவர் முன்வந்து சொல்லித் தனது நடத்தையைக் கொண்டு நிருபித்துக் காண்பிக்கட்டும்; நான் பதினாயிரம் ருபாய் பந்தயம் கட்டுகிறேன். யோக்கியமானவர்கள் யார் வேண்டுமானாலும் வரட்டும் என்று சவால் விடுகிறேன்.

சில காரியங்களில் மக்கள் பொய் சொல்லியாக வேண்டும். சில காரியங்களில் மக்கள் அயோக்கியர்களாகித் தீரவேண்டும். சில காரியங்களில் மக்கள் முட்டாள்களாகித் தீரவேண்டும். ஆனால் கடவுள் விஷயத்தில் மக்கள் இந்த மூன்றும் ஆகித் தீர வேண்டும்.

கடவுளைப் பற்றிய பிரச்சாரத்தினாலேயே பலர் பிழைத்து வருகிறார்கள். அவர்கள் பல கொலை பாதகங்களைச் செய்திருக்கிறார்கள். ஆழ்வார்கள், நாயன்மார்கள் செய்துள்ள அயோக்கியத்தனங்கள் கொஞ்சமா? தொண்டரடிப்பொடி ஆழ்வார் என்ற வைணவப் பார்ப்பான், சம்பந்தன் என்ற சைவப் பார்ப்பான், சமண பவுத்தர்களைக் கொலை செய்யவில்லையா?''

குன்றக்குடி ஆதீனத்தைச் சார்ந்த கோயில்களில், டிசம்பர் 24 முதல், கர்ப்பக் கிரகத்துக்குள் அனைவரும் செல்லலாம் என்று ஆதீன கர்த்தரான அடிகளார் அறிவித்தது, பெரியாரின் பெரிய வெற்றி என்று கருதப்

பட்டது. 27–ந்தேதி வெளியான செய்தியின்படி, டால்மியா புரம் ரயில்வே ஸ்டேஷன் பெயரைக் கல்லக்குடி—பழங்கா நத்தம் என்று மாற்ற மத்திய அரசு ஒப்புக் கொண்டதாம். "இந்தப் பிரம்மாண்ட வெற்றிக்குப் பாராட்டுதல்" என்று பெரியார், கலைஞருக்குத் தந்தி அனுப்பினார்.

30–ந் தேதி பெரியாருக்கு வேலூரில் புதிய டியூப் பொருத்தினார்கள். 31-12-69 வரை கோயில் கர்ப்பக் கிரக நுழைவுக் கிளர்ச்சிக்குப் பெயர் கொடுத்த தொண்டர்களின் எண்ணிக்கை 1,710. அன்றைய "விடுதலை"யில் பெரியார் புத்தாண்டுச் செய்தி வழங்கினார்:— "தமிழனுக்கு இன்றுள்ள கடமை (1) பார்ப்பனப் பத்திரிகைகள் வாசிப்பதைத் தடுத்தல் (2) கோயில்களுக்குப் போவதைத் தடுத்தல் (3) அப்படியே போனாலும் வெறுங்கையோடு போய் வருதல், அப்படியே தேங்காய் எடுத்துப் போனாலும் தானே உடைத்துத் திரும்பக் கொண்டு வருதல் (4) பூசாரி அல்லது அர்ச்சகனுக்குத் தட்சிணை கொடுக்காதிருத்தல் (5) நெற்றியில் மதக்குறிகள் தீட்டுவதைத் தடுத்தல் (6) பார்ப்பனரைப் பிராமணர் என்று சொல்லாமல் பார்ப்பனர் என்றே சொல்லுதல்—இவை 1970–ஆம் ஆண்டில் கண்டிப்பாய் எல்லா மக்களாலும் கைக்கொள்ளத் தக்கவையாகும்!"

1970 புத்தாண்டு நாளில் எஸ். குருசாமியின் மகள் டாக்டர் கே. ஜி. ரஷ்யா, நாயுடு வகுப்பைச் சார்ந்த சித்தரஞ்சனைத் திருமணம் புரிந்தார். என். டி. சுந்தரவடிவேலு—காந்தம்மாள் இருந்து நடத்தி வைத்தனர்.

5–1–70 அன்று, திருச்சி வானொலி சார்பில் மாறன் என்பார் பெரியாரைப் பேட்டி கண்டு, அந்தப் பெரிய, முழு அளவு உரையாடலும், ஒலிபரப்பானது. இது பின்னர், 1–3–70 "விடுதலை"யில் பிரசுரமாயிற்று. 9-1-70 "இந்து" பத்திரிகை இந்தப் பேட்டி குறித்துப் பாராட்டியிருந்தது. பெரியாரிடம் சரளமாகக் கேட்கப்பட்ட அனைத்துக் கேள்விகட்கும், ஒளிவு மறைவின்றிப் பதில் சொன்னார். அந்தக் காலத்தில் பெரியார் வீட்டில் தர்மத்துக்காக வைத்த

தண்ணீர்ப் பந்தலிலேயே தீண்டாதவர்க்கு மூங்கில் குழாயும், மற்ற வகுப்பாருக்குத் தம்ளரும் வைத்தார்களாம். மதத்துக்கு விரோதமாகப் பேசாமல், சாதியை மட்டும் ஒழிக்கப் பிரச்சாரம் செய்யலாமே என்ற கேள்விக்கு, "அதைப் பிரிக்க முடியாதுங்களே அய்யா! மதம் வேறே சாதி வேறேன்னு பிரிக்கவே முடியாதே!" என்றார் பெரியார். ஒழுக்கம் குறைந்து வருவதால், ஒன்று அரச தண்டனைக்கு மக்கள் பயப்பட வேண்டும். அல்லது ஆண்டவன் தண்டிப்பாரே என்றாவது பயம் இருக்க வேண்டாமா என்ற வினாவுக்குப் பெரியார்—இனிமேல் எந்தக் காரணம் சொல்லியும் மக்களைக் கட்டுப்படுத்த முடியாது. ஒரு எல்லை வரை போய்த்தான் திரும்புவார்கள். அது வரையில் ஒழுக்கம் என்று பேசுவதால் ஒரு பயனுமில்லை என்றார். தம் கருத்தே, ஜனநாயகம் வந்த பிற்பாடுதான் அதிகமாக ஒழுக்கம் கெட்டுப் போனது, என்றார் பெரியார். சிக்கனத்தைப் பற்றிக் கேட்டபோது, காசை இழுத்துப் பிடித்தோம். புத்திசாலித்தனம் என்று சொல்ல முடியாது. சிக்கனம் நமக்கு ஒரு ஹேபிட் (habit) அவ்வளவுதான்! பணத்தை என்ன செய்வது என்று இப்போதுதான் யோசித்துக் கொண்டு வருகிறோம் என்றார். 'பொது நலத்துக்காக ஒருவன் வரவேணும்னா அவன் கிட்டே ரெண்டு குணம் இருக்கணும். அதிலேயே சாப்பிடறோம்கிற நிலைமை இருக்கக் கூடாது. பொது நலத்தினாலே அவன் சுயநலத்துக்காக ஒரு பலன்கூட எதிர் பார்க்கக்கூடாது. அவன் வாழ்க்கைக்கு வேறே ஏற்பாடுகள் பண்ணிக்கணும்" என்றார் பெரியார்.

பெரியாரின் ராமாயணப் பாத்திரங்கள் என்ற நூலை இந்தியிலும் இங்லீஷிலும் பெயர்த்தெழுதி, உத்தரப் பிரதேச மாநிலத்தில் புத்தகங்களாக வெளியிட்டிருந்தார்கள். அதற்கு அங்கு நல்ல வரவேற்பு! காங்கிரஸ் ஆளும் அந்த மாநிலத்தின் அரசு, இந்தி, ஆங்கில நூல்களைத் தடைசெய்து விட்டது! மதவாதிகளின் மனத்தை அது புண்படுத்துகிறதாம். 3–ந் தேதி இச்செய்தி கிடைத்தது.

சென்னையின் முன்னாள் துணைமேயராம் டி. ஜி. லெட்சுமணசாமி என்பவர் அரசுத் தலைமைச் செயலாளருக்கு ஒரு கடிதம் எழுதிப், பெரியார் சிலைக்கு அடியில் பொறிக்கப் பட்டுள்ள கடவுள் மறுப்பு வாசகங்களை அகற்றக் கோரியிருந்தாராம். ஒருவருக்குச் சிலை எழுப்புகையில், அடியில் அவரது சிந்தனைகளைப் பொறிப்பது வழக்கந்தான் என்று பதில் தரப்பட்டது அவருக்கு!

"கண்ட்ரோல், ஜனங்களுக்கும் அரசாங்கத்துக்கும் நியூசென்சாக இருந்தது. அதை எடுத்தது இருவருக்கும் அனுகூலமாகும். கண்ட்ரோல் துறையிலுள்ள அதிகாரிகளில் 75 சதவீதம் நேர்மையில்லாதவர்கள்தான். இனி அந்த இலாகா நேர்மையாகிவிடும். 200 ரூபாய் அதிக வருமானம் உள்ளவர்களுக்கு, ரூபாய்க்குப் படி அரிசி என்பதை 100 ரூபாய் உயர்ந்த வருமானம் என்று வைக்கலாம். உணவுக் கட்டுப்பாட்டை நீக்கியதற்காக முதலமைச்சர் அவர்களையும், உணவு அமைச்சர் அவர்களையும் பாராட்டுகிறேன்—ஈ. வெ. ராமசாமி."

"உண்மை—மாத இதழ் ஆண்டுச் சந்தா 3 ரூபாய். கடவுள் புரட்டு, மதப் புரட்டு, சமுதாய இயல் புரட்டு, தேசியப் புரட்டு, புராண இதிகாசப் புரட்டு, சாஸ்திரப் புரட்டு இவைகளை விளக்கிடும் பகுத்தறிவு இதழ். எல்லாரும் சந்தாதாரராகுங்கள். ஈ. வெ. ராமசாமி."

முறையே ஜனவரி 9, 10 தேதிகளில் "விடுதலை"யில் வெளியான பெட்டிச் செய்திகள் இவை. 14–1–70 பொங்கல் திருநாள் அன்று மாலை 5 மணிக்குத் திருச்சியில் "உண்மை" இதழ் வெளியீட்டு விழா நடந்தது. பெரியார் வரவேற்புரை நிகழ்த்தினார். சே. மு. அ. பாலசுப்ரமணியம் தலைமையில், வீரமணி வெளியிட்டார். இப்போதே 6,000 பேர் சந்தா செலுத்தியுள்ளனர், நானே உட்கார்ந்து எழுதப் போகிறேன் என்றார் பெரியார். விழாவில் செல்வேந்திரன், அன்பில் தர்மலிங்கம், ஜி. பராங்குசம், டி. டி. வீரப்பா, வே. ஆனைமுத்து, கே. கோவிந்தராஜலு, து. ம.

பெரியசாமி ஆகியோர் உரையாற்றினர். புலவர் கோ. இமயவரம்பன் நன்றி கூறினார்.

"உண்மை" முதலிதழில் பெரியாரின் தலையங்கத்தி லிருந்து சில பகுதிகள்:— "மக்களைப் பகுத்தறிவு வாதி களாக ஆக்க வேண்டும். மூடநம்பிக்கைகளை ஒழித்து, மக்களை அறிவாளிகளாக்கும் பணியில் நான் பல முறை சிறை சென்றிருக்கிறேன். வாழ்க்கையில் பல இன்னல்களை அடைந்திருக்கின்றேன். அரசாங்கத்தால் வெறுக்கப்பட் டிருக்கிறேன். கடந்த காலத்துக்கு என்று 15 லட்சம் ரூபாயும், இந்த ஆண்டுக்கு என்று 1 லட்சம் ரூபாயும் இன்கம்டாக்ஸ் போடப்பட்டு, என் முயற்சியைத் தடுக்க நினைக்கிறார்கள். இது தவிர நம் நாட்டில் உள்ள எல்லாப் பார்ப்பனராலும், மேல் சாதியாராகத் தங்களைக் கருதிக் கொள்ளும் சைவர்களாலும், 100க்கு 90 கிறிஸ்தவர்களாலும் நான் வெறுக்கப்படுகிறேன். இஸ்லாமியர்களால் வெளிப் படையாய் வெறுக்கப்படவில்லை என்றுதான் நினைக் கிறேன். ஓர் அதிசயம், ஆதித்திராவிட மக்களுள், பதவியில் உள்ள சிலர் தவிர, ஒருவர்கூட எனக்கு ஆதரவாளர் கிடையாது.

இதில் நான் மகிழ்ச்சியும் பெருமையும் அடையத்தக்கதும் உண்டு. என் கட்சியில் கட்டுப்பாடும் கடமைப்பாடும் அதிகம். பிடிக்காவிட்டால் வெளியில் போய்விடுவார்கள். "குடிஅரசு" துவக்க காலம், மோசமாக இருந்தது. இப்போதும் "உண்மை"யின் தொண்டும் எதிர் நீச்சல் தொண்டுதான். "குடிஅரசு" இதனைஒழிக்கக் கிறிஸ்தவர்கள் அமெரிக்காவிலிருந்தும் பணம் வரவழைத்தார்கள். பார்ப் பனர்கள் எதிர்ப்புப் பத்திரிகை ஆரம்பித்தும், காலிகளை ஏவியும் எதிர்ப்புக் காட்டினார்கள். "குடிஅரசு" வாரப் பத்திரிகை, "விடுதலை" தினப் பத்திரிகையாக வளர்ந்தது; ஒழிந்து விடவில்லை! "உண்மை" சமுதாய இழிவு, மடமை ஒழிக்கும் தொண்டுக்காக என்றே பிறந்திருக்கிறது.

"உண்மை" நாத்திகப் பத்திரிகைதான். சாக்ரடீஸ் த்திகர், பெர்ட்ரண்ட் ரஸ்ஸல், பெர்னார்ட்ஷா நாத்திகர்

கள்தான். இயேசுநாதரும் நாத்திகர் என்றே சொல்லப் பட்டுக் கொலையுண்டார். முகமது நபியும் நாத்திகர் என்றே சொல்லப்பட்டு அடித்து விரட்டப்பட்டார். பவுத்தர் களும், சமணர்களும் நாத்திகர்கள் என்றே சொல்லப்பட்டுக் கழுவேற்றப்பட்டனர்; கொல்லப்பட்டனர்! உலகத்தில் பல நாத்திகச் சங்கங்களில் உறுப்பினர்களாக அமெரிக்காவில் 3 கோடி, இங்கிலாந்தில் ½ கோடி, ஜெர்மனியில் 1 கோடி, சீனாவில் 60 கோடி, ரஷ்யாவில் 40 கோடி, ஸ்பெயினில் ¼ கோடி, பிரான்சில் ¼ கோடி, பர்மாவில் ½ கோடி, சயாமில் 1 கோடிப் பேர் இருக்கிறார்கள்.

இந்தியாவில் தமிழ்நாட்டில் இன்று நாத்திக அரசாங்கம். கேரளாவில் நாத்திக அரசாங்கம். இவற்றால் உலகம் என்ன முழுகியா போய்விட்டது? நாத்திகம் கூடாததல்ல; இல்லாத தல்ல; வேண்டாததல்ல! நமது கடவுள்களில் ஒருவனான சந்திரன் இன்று அமெரிக்கர்களால் உதைபடுகிறான்! ஆகை யால் "உண்மை"யை வரவழைத்துப் படியுங்கள். விரைவில் வாரப் பத்திரிகையாக ஆக்குங்கள்!"

15–ந் தேதி வரை கிளர்ச்சியாளர் பட்டியலில் 1,820 பேர் தங்களைப் பதிவு செய்து கொண்டவர்கள் ஆவார்கள். இந் நிலையில் 17-1-70 அன்று "விடுதலை" முதல்பக்கம் ஏழுகாலக் கொட்டை எழுத்துச் செய்தியாக— "முதல்வர் அறிக்கை; தகுதியினால் அனைவரும் அர்ச்சகராகலாம் என்று சட்டம் கொண்டுவர அரசு முன் வருகிறது. பெரியாரவர்கள் கிளர்ச்சியினை நிறுத்தி வைக்குமாறு அன்புடன் வேண்டு கிறேன்" என்று வந்தது. 18-ந் தேதி பெரியார் கும்ப கோணத்தில் இருந்தார். அங்கே சமூகசீர்திருத்த மாநாட்டை முத்துத் தனபால் தலைமையில் ஏ. ஆர். ராமசாமி திறந்து வைத்தார். வீரமணி தலைமையில் கருத்தரங்கம் நடந்தது. அமைச்சர் என். வி. நடராசன் பேசினார். பெரியார் பேசும் போது, முதல்வரின் அறிக்கையை ஏற்று, அவசியமான அளவுக்குக் கிளர்ச்சியை ஒத்திப்போடலாம் என்றார். நம் இனத்திற்குக் கேடு செய்யும் பத்திரிகைகளைக் கொளுத்த ஒரு போராட்டம் நடத்தியே தீரவேண்டும் என்றார்

பெரியார். 22–ந் தேதியன்று "விடுதலை"யின் முதல் பக்கச் செய்தி, பெரியார் திருச்சியிலிருந்து தொலை பேசியில் கூறியதாகும்:— "முதல்வரின் உறுதி மொழியை ஏற்றுப் பெரியார் அறிக்கை. கிளர்ச்சி ஒத்தி வைக்கப்படுகிறது. தத்துவத்தைப் புரிந்து கொண்ட அரசுக்கு நன்றி. விரைவாக நடவடிக்கை எடுக்க வேண்டுகிறேன்."

பிற்படுத்தப்பட்டோர் நலக் கமிஷன் 22—மாலை 4–30 மணிக்குப் பெரியாரைத் திருச்சியில் சந்தித்தது. பெரியார் தமது நீண்ட நாளைய எண்ணங்களைத் தெரிவித்தார். ஆதித்திராவிடர்களுக்கு அக்கிரகாரத்தினுள் சொந்த வீடு கட்டித் தந்து குடியிருக்கச் செய்ய வேண்டும். சட்ட சபையில் 25 சதவீத இடத்தைத் தேர்தல் மூலம் நிரப்பாமல், போட்டியிட்டு வரமுடியாத ஜாதிகளிலிருந்து, அரசே நாமினேஷன் செய்ய வேண்டும். யாரும், எந்தப் பதவியிலும், இரண்டு term க்கு மேல் இருக்கக் கூடாது.

24-ந் தேதி கடவுள் என்ற தலையங்கத்தில் பெரியார்— "மதமும் கடவுளும் மனிதனை முட்டாளாக்கும் கருவிகள். கடவுள் மறைய மறைய மனிதனுக்கு அறிவு வளரும்; சுதந்தரம் அதிகமாகும். உண்மையான தி. மு. க.காரர்களுக்குக் கடவுள் நம்பிக்கை கிடையாது என்பது எனக்குத் தெரியும். இன்னும் இது மாதிரி 2 லட்சம் தி. மு. க. உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டால், யாரும் ஆட்சியையோ, கழகத்தையோ அசைக்க முடியாது. நிலாக்கல் கொண்டு வரும் காலத்தில் கல்லுச்சாமியைக் கட்டிக் கொண்டு அழ வேண்டுமா?" என்று கேட்டார். இந்தி சகவருட முறையைத் தமிழக அரசு ஏற்கவில்லை என 31–ந் தேதியும், தமிழில் அர்ச்சனை தொடங்கப்பட்டது என 1–ந் தேதியும் அரசு தரப்பில் செய்திகள் வெளி வந்தன.

'நாத்திக உலகத்துக்கு ஈடு செய்ய முடியாத பேரிழப்பு' எனப் பெரியாரால் வருந்தி மொழியப்பட்டவாறு, பிரிட்டிஷ் பேரறிஞர் பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் 3–2-1970 அன்று 96–வது வயதில் காலமானார். பேரறிஞர் அண்ணா நினைவு நாளான

அன்றைய தினம், சென்னைப் பல்கலைக்கழக நூற்றாண்டு விழா மண்டபத்தில், மத்திய அமைச்சர் பேராசிரியர் ஷேர்சிங், அண்ணா நினைவுத் தபால் தலை வெளியிட்டார்.

35 லட்சம்ரூபாய்க்கு ஸ்டாம்புகள்வெளியிடப்பட்டதாக அவர் கூறினார். 6-ந் தேதி வித்தியாசமான ஒரு தலையங்கம் பெரியார் எழுத நேர்ந்தது. 'ஆனந்த விகடனின் ஜாதிபுத்தி' என்பது தலைப்பு, என்ன கோபம்?—"வாசன் இருந்தவரை ஆனந்தவிகடன் பத்திரிகை சமுதாய சம்பந்தமான விஷயங் களில் நடுநிலை வகித்து வந்தது. இப்போது அது அசல் பார்ப்பன சாதி புத்திக்கு வெற்றிலை பாக்கு வாங்கும் நிலைக்கு வந்து விட்டது. அனைத்துச் சாதியும் அர்ச்சகராக வேண்டும். அல்லது கோயில் கருவறைக்குள் எவரும் செல்ல அனுமதிக்க வேண்டும் என்பதற்காக ஒரு கிளர்ச்சி நடத்த நாங்கள் முடிவெடுத்தோம். அரசாங்கம் உறுதி சொன்னதன் பேரில் கிளர்ச்சியை ஒத்திவைத்தோம். இனியும் அரசு தாமதப் படுத்தினால் நாங்கள் ஒத்திப் போட்ட காலத்தைச் சுருக்க நேரிடும்!" என்பதுதான் கருத்து. "பஞ்சேந்திரியங்களுக்கும் தட்டுப்படாத விஷயம், பொருள், நடப்பு ஆகிய எதுவானாலும் அது பொய் என்று சொல்வது தான் பகுத்தறிவு வாதியின் கொள்கை" என விளக்கினார் பெரியார். "பழங்கால வைத்தியமுறை இப்போது எதற்காக? சித்த மருத்துவத்துக்குப் புத்துயிர் தரப்போகிறார்களாம். நவீன இரத்தப் பரிசோதனை போன்ற காரியங்களை இயந்திர மூலந்தானே செய்ய முடியும்! இதைப் பற்றிக் கவலையோடு சிந்திக்க வேண்டும்" என்றார் பெரியார்.

மத்திய சுகாதாரத்துறை ராஜாங்க அமைச்சர் டாக்டர் எஸ். சந்திரசேகருடன் பெரியார் பேட்டி, 14-ந்தேதி நடந்தது. இது அடுத்த மார்ச் 8-ந் தேதி சென்னை வானொலியில் ஒலிபரப்பாகியது, "விடுதலை" 9-ந் தேதி பிரசுரித்தது. இதனடிப்படையில் தானோ என்னவோ, பெரியார், அடுத்த முறையும் டாக்டர் சந்திரசேகரை ராஜ்ய சபை உறுப்பினராக்க வேண்டுகோள் விடுத்தார். அது பின்னர் வெற்றி பெறவில்லை.

தோழர்கள் நிறையப் பேர் தம்மிடம் சிபாரிசுக்கு வந்து தொல்லை தருவதாகப் பெரியார் மிக எரிச்சலுற்றார். நாள்தோறும் தொந்தரவும், வீண் கெட்ட பெயரும் வருவதாக வருத்தத்துடன் எழுதியிருந்தார்.

10-2-70 அன்று, கலைஞர் ஆட்சிக்குவந்த ஓராண்டு நிறைவு நாள். அண்ணாவின் இடத்தில் தானிருப்பது, மின்விளக்குக்குப் பதில் மெழுகுவத்தி போலிருந்தாலும், இயன்றவரை ஒளிதருவதாகக் குறிப்பிட்டார். இடிப் பாரையில்லா ஏமரா மன்னன் கெடுப்பார் இலானும் கெடும் என்ற குறளை நினைவூட்டிப், பெரியார் போன்றவர்கள், தான் தவறு செய்தால் எடுத்துக்காட்ட வேண்டினார். 19-ந் தேதி திருச்சியில் தி.மு.க. மாநாடு எழுச்சியுடன் நடந்தது. சி.பி. சிற்றரசு தலைமையில் புரட்சிநடிகர் எம்.ஜி. ராமச்சந்திரன் துவக்கிவைத்தார். பஞ்சாப் முதல்வர் குர்ணாம்சிங், புதுவையின் தி.மு.க. முதல்வர் ஃபாரூக் ஆகியோர் பங்கேற்றனர். அண்ணா வழியில் அயராதுழைப்போம்; ஆதிக்கமற்ற சமுதாயம் அமைத்தே தீருவோம்; இந்தித் திணிப்பை என்றும் எதிர்ப்போம்; வன்முறை தவிர்த்து வறுமையை வெல்வோம்; மத்தியில் கூட்டாட்சி, மாநிலத்தில் சுய ஆட்சி என்ற அய்ந்து முழக்கங்களைக் கலைஞர் அங்கே தந்தார். தி.மு.க. வின் அரசியல் தீர்மானம் வரவேற்கப் படத்தக்கதே; மத்திய ஆளுங்கட்சிக்கு வரையறுத்த ஆதரவு தருவதாகக் கூறியது சரிதான் — என்று "விடுதலை" 21-ந் தேதித் தலையங்கத்தில் குறிப்பிட் டிருந்தது. இந்தி கட்டாயமாக மத்திய அரசு ஊழியர் மீது திணிக்கப்படுவதை எதிர்த்து, நாடாளுமன்ற உறுப் பினரான முரசொலி மாறனும், தபால்துறை ஊழிய ரான ஜி. லட்சுமணனும் ரிட்மனு தாக்கல் செய்தனர்.

16-2-70 மதுரையில் சுயமரியாதைக் குடும்பங்களின் விருந்து விழாவில் பெரியார் கலந்து கொண்டார். தமிழர் ஒரே இனம், நாம் ஒரே சாதி என்றார். டாக்டர் சந்திர சேகருக்களித்த பேட்டியில் பெரியார் பல நல்ல கருத்துகள் சொன்னார். இளமையில் பிரத்தியட்சமாகப் பலகுழந்தை பெற்ற குடும்பத்தினர் பட்ட கஷ்டங்களைக் கண்டார். கடவுள் கொடுத்தது என்று நம்பியே துன்பங்களை மக்கள் அனுபவித்ததை உணர்ந்தார். அதனால் தான் 1920-ல்

எழுதினார், கர்ப்ப ஆட்சி என்று. "மத்திய அரசு குடும்ப நலத்துறைப் பிரச்சாரத்துக்காகப் போடும் பணியாளர்கள் பகுத்தறிவுவாதிகளாக இருந்தால் நல்லது. பெண்களின் திருமண வயதை 20-ஆக உயர்த்தினால் இந்த பிராப்ளம் ஓரளவு சால்வ் ஆகும். உத்தியோகங்களில் 50 சதவிதம் பெண்களுக்குத்தான் என்றாக்கினால், அவர்களுக்குத் தன்னம்பிக்கை உண்டாகும். அபார்ஷனை லீகலைஸ் செய்வது நல்லதுதான்." என்றார் பெரியார்.

செட்டி நாட்டரசர் எம். ஏ. முத்தையச் செட்டியாரின் மனைவியார் ராணிமெய்யம்மைஆச்சி 1-3-70 காலை 9-30க்கு இறந்து போனார். பெரியாரும் மணியம்மையார், வீரமணியுடன் 2-ந் தேதி மாலை 5-30 மணிக்கு, அடையாறு அரண் மனை சென்று, துக்கம் விசாரித்து வந்தார். 9-ந் தேதி எஸ். இராமநாதன் ஸ்டான்லி மருத்துவ மனையில் இயற்கை எய்தினார். 10-ந் தேதி "விடுதலை" அன்னார் மறைவுக்கு வருந்தி ஓர் துணைத் தலையங்கம் தீட்டியது. 14-ந் தேதி தமிழ்நாடு சட்ட மன்றம், அந்த முன்னாள் அமைச்சரின் றைவுக்காக ஒரு நிமிடம் அஞ்சலி செலுத்திற்று. 11-3-70 அன்று பெரியாரும் மணியம்மையாரும் சைதாப்பேட்டை சென்று, இராமநாதனுடைய துணைவியார் மற்றும் குடும்ப உறுப்பினர்களிடம் துக்கம் விசாரித்து வந்தனர்.

12-3-70 சட்டமன்றத்தில் கேள்வி ஒன்றுக்கு பதிலளித்த முதல்வர், கர்ப்பக்கிரகம் வரை கோயிலுக்குள் எல்லா இனத்தவரும் செல்லலாம் என்பது தான் இந்த அரசின் கொள்கை. ஆயினும், தகுதி அடிப் படையில் அனைத்துச் சாதியினரும் அர்ச்சகராகி, அர்ச்சனை செய்யலாம் என்கிற அளவில் இப்போது சட்டத் திருத்தம் கொணரப்படும் என்றார். சேலம் உருக்காலை நிறுவ, மத்திய அரசு முடிவெடுத்து விட்ட தாகவும், தமது முயற்சி வெற்றி பெற்று விட்டதாகவும் கலைஞர் கூறியிருந்தார். 14-ந் தேதி பண்ணுருட்டி நீதி மன்றத்தில், கிருபானந்தவாரியார் சாட்சியமளிக்கையில் நெய்வேலியில் தாம் யாரையும் தாஷிக்கவில்லை என்றும், தாம் தாக்கப்பட்டதற்கும் தி.மு.க.விற்கும் சம்பந்தமில்லை என்றும் கூறினார்.

நம் நாட்டுப் பார்ப்பனர் வாழ வேண்டுமானால்—என்ற தலைப்பில் பெரியாரால் எழுதப்பட்ட தலையங்கம் 14–ந் தேதி "விடுதலை"யை அலங்கரித்தது:—"நாம் ஒரு சிறிதாவது அறிவு பெற்றுப் பகுத்தறிவு வாதிகள் ஆகி விட்டோமானால் 'கொல்லுவாரின்றியே பார்ப்பனன் செத்தான்' என்ற நிலைதான் ஏற்படும். அவர்கள், மேல் வகுப்பு மக்களாக வாழ்வதற்காகவே, கடவுள் மத நம்பிக்கைகளை நம்மிடையே பரப்புவதுதான் பார்ப்பனர் கொள்கை. அவர்கள் கடவுள் நம்பிக்கை உள்ளவர்கள் போல் காட்டிக் கொள்வது நம்மை நிரந்தரமாய் ஏமாற்றி வைக்கவே ஆகும்," என்றார். பாப்பிரெட்டிப் பட்டியில் பேசும்போது பெரியாரின் ஆத்திரம் மிகவும் மேலெழுந்து நின்றது, 22-2-70 அன்று! "நம் நாட்டிலுள்ள கோயில்களை இடித்துத் தரைமட்டம் ஆக்கும் வரை சாதி ஒழியாது; கோயில்களி லுள்ள சிலைகளை உடைத்து, ரோட்டுக்கு ஜல்லியாகப் போடும் வரை சாதி நிலைபெற்றுதான் இருக்கும்" என்றார் பெரியார்!

அறநிலையத்துறை அமைச்சர் கே.வி. சுப்பய்யா, 24–ந் தேதி, விவாதத்துக்குப் பதிலளித்தபோது; கர்ப்பக்கிரகத்தில் அனைத்துச் சாதியினரையும் அனுமதிக்கும் சட்டத் திருத்தம்; தமிழில் அர்ச்சனை; கோயில் சொத்துகளின் மதிப்பீடு; கோயில் நிலங்களைக் கணக்கெடுத்தல்; பெண்களையும் அறங்காவலர்களாய் நியமித்தல் ஆகிய முற்போக்கான கருத்துகளை உரைத்தமைக்காக "விடுதலை" 25–ந் தேதி, பாராட்டியிருந்தது. 23–ந் தேதி திருச்சி சிந்தனையாளர் கழகத்தில், "மீண்டும் பிராமணாள் போர்டு அழிப்புக் கிளர்ச்சி தொடங்க வேண்டியிருக்கும்" என்று பெரியார் பேசினார்.26–ந் தேதி முதல் 4 நாள் பெரியார் பெங்களூரில் ஓய்வு எடுத்தார்.

பெரியாரின் சாதி ஒழிப்புப் பணிகளை வெகுவாகப் புகழ்ந்தும், மாணவர்கள் கலப்பு மணம் புரிந்து கொள்ள வேண்டுமென்றும், 26–3–70-ல் அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாச் சொற்பொழிவில் டாக்டர் எஸ்.

சந்திரசேகர் வலியுறுத்தினார். மாயூரத்தில் ஏப்ரல் 11-ஆம் நாள் திராவிடர் கழக மாநாடு, இரா. சண்முகநாதன் தலைமையில்; பெங்களூர் விசாலக்குமி சிவலிங்கம் திறப்பாளர்; சுந்தரலீலா சிங்கம் கொடி உயர்த்தல். மறுநாள் சமூக சீர்திருத்த மாநாட்டின் தலைவர் கி. வீரமணி; திறப்பாளர் புதுவை அமைச்சர் எஸ். இராமசாமி. தடை செய்யப்பட்ட நூல்களின் மீதுள்ள தடையை ரத்துச் செய்ய வேண்டும். ஏப்ரல் 26 முதல் மீண்டும் 'பிராமணாள்' அழிப்பு. முதல் நாளே சம்பந்தப்பட்டவர்க்கு அறிவித்து விடவேண்டும்; என்று தீர்மானங்கள் நிறைவேற; இருநாளும் பெரியார் பேச்சு, திருநாளாக அமைந்தது! இதனையடுத்துப் பல ஊர்களில் தாமே பெயர்ப் பலகைகளில் "பிராமணாள்" எழுத்தை அழித்திட முன்வந்தனர், உணவுவிடுதி உரிமையாளர்கள்.

15-4-70 இரவு 8 மணிக்கு, சேலம் ராவ்சாகிப் பி. இரத்தினசாமிப் பிள்ளை தமது 62-வது வயதில் காலமாகி விட்டார். பெரியாரும் வீரமணியும் ஏதோ ஒரு காரை இரவல் பெற்று, உடனே சேலம் விரைகின்றனர். மறுநாள் திரும்பவும் சென்னையில் நிகழ்ச்சி இருக்கிறது பெரியாருக்கு! உளுந்தூர்பேட்டையருகில், கார் ரிப்பேராகி விடுகிறது. பெரியாரை இறக்கி விட்டுக், காரை எடுத்துப் போய், வீரமணி ஒரு மெக்கானிக்கைப் பிடித்துச், சரி செய்கிறார். இதற்குள் நேரமாகி விடவே, சேலம் செல்வதால் பயனில்லை என்ற முடிவுக்கு வந்த பெரியார், சென்னை செல்லும் லாரி ஒன்றில், டிரைவருக்கருகில் ஏறி அமர்ந்து கொண்டு புறப்படுகிறார். வழியில் நின்றுகொண்டிருந்த வீரமணிக்குச் சைகை காட்டியபடியே, பெரியார் லாரியில் விரைகிறார். வீரமணி திகைத்துப்போய், லாரியை வெகு தூரம் துரத்திச் சென்று, வழிமறித்து,முந்தி நின்று, பெரியாரை இறங்கி வருமாறு வேண்டுகிறார்.

"இந்த லாரிக்காரர் எவ்வளவு பிரியத்தோடு என்னை அழைத்துத் தன்னருகில் அமர்த்திக் கொண்டார். சென்னையில் கொண்டுபோய் விடுவதாக அவர் அன்புடன் ஒப்புக்

கொண்டுள்ளார். பாதியில் இறங்கி வந்துவிட்டால் அவர் மனம் நோகாதா?'' என்று, பெரியார் மறுக்கிறார். பிறகு லாரி டிரைவரே முன்வந்து பெரியாரிடம் வேண்டி, இறக்கி வந்து காரில் ஏற்றி விடுகிறார்! 18-ந்தேதி காஞ்சிபுரம் செல்லப் புறப்படும்போது பெரியாரின் உடல்நிலை கெடுகின்றது; ஜுரம் வந்து விட்டது. மறுநாள் பண்ணுருட்டி நிகழ்ச்சிக்குத் தமக்குப் பதில் வீரமணியைப் போகச் சொல்லித், தொடர்ந்து, மதுரை, நெல்லை, கன்னியாகுமரி மாவட்டச் சுற்றுப் பயணத்தையும் ரத்து செய்துவிட அறிவித்தார் பெரியார்.

23-ந் தேதியன்று சி. பி. சிற்றரசு தமது 64-வது வயதில் சட்டமன்ற மேலவையின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். 24-ந் தேதி வந்து பெரியாருக்கு மாலை சூட்டி வணங்கினார். ''நானல்லவா அய்யாவை வந்து பார்த்திருக்க வேண்டும்!'' என்றார் பெரியார். அன்றே ஒரு பெட்டிச் செய்தியில் ''நானும் 30-ந்தேதி வரை ஓய்வில் இருக்கிறேன். முதலமைச்சரும் கண் நோயினால் சிகிச்சையில் இருக்கிறார். அதனால் மே 6-ந் தேதி வரை தவணை தரப்பட்டிருக்கிறது. தோழர்கள் சலிப்படைய வேண்டாம்'' என்று, பலகையில் 'பிராமணாள்' பெயரழிப்புப் போராட்டம் குறித்து எழுதியிருந்தார். நான் சொன்னால் உனக்கு ஏன் கோபம் வர வேண்டும்? என்று தலையங்கமும் எழுதினார் பெரியார். ''நீ கோபிப்பதால் கடவுளையே அவமதிக்கிறாய்! ஆத்திரப் படுபவன் இரட்டை முட்டாள் என்பேன். கடவுளுக்கு உருவமில்லை என்று ஒருபுறம் சொல்லிக் கொள்கிறாய்! பின் அதற்கு பெண்டாட்டி வைப்பாட்டி பிள்ளைகுட்டி ஏது? இதைக் கேட்டால் மனம் புண்படும் என்கிறாய்! மடையர்களின் மனம்தான் புண்படும்! உலக மாறுதலின் வேகம் என்ன தெரியுமா? இன்றைக்குப் போப்பாண்டவரையே கல்லால் அடித்ததாகச் சேதி வந்ததே-இந்த சங்கராச்சாரிக்கு அந்த நிலை ஏற்படாதா? நாட்டில் பகுத்தறிவு பரவுவதற்குத் தடையாக இருப்பதே இவர்தானே?'' என்றும் வினா எழுப்பினார்.

30-ந்தேதி ஓரளவு உடல்நலம் பெற்றுக் கண்கொடுத்த வனிதம் நிகழ்ச்சிக்குச் சென்று, சுற்றுப் பயணம் தொடர்ந்தார் பெரியார். அங்கு பேசும்போது, பெண் கடவுள்களுக்குப் பூசை செய்யவாவது, பெண் பூசாரிகளை நியமிக்கலாமே என்ற கருத்தைத் தெரிவித்தார். 6–5–70 அன்று சேலம் பி. ரத்தினசாமிப் பிள்ளை அவர்களின் நினைவு நாளில் பங்கேற்றுச், சென்னை கண் மருத்துவ மனையில் முதல்வர் கலைஞரை மறுநாள் காலை 11–30 மணிக்குப் பார்த்து, நலம் விசாரித்தார். முதல்வரை 2–ந்தேதியன்று ஆளுநர் உஜ்ஜல்சிங், ஜனாதிபதி வி.வி.கிரி ஆகியோர் பார்த்துச் சென்றனர். 8–ந்தேதி வீடு திரும்பிய கலைஞர் 1 மாதம் ஓய்வில் தங்கினார். 9-5–70 தலையங்கப் பகுதியில் "விடுதலை"யில் பெரியார் "மாவட்டத் தலைவர்களுக்கு வேண்டுகோள்" விடுத்தார். "தஞ்சை, வேலூர், சேலம், தர்மபுரி, காஞ்சி நீங்கலாக மற்ற மாவட்டத் தலைநகர்களில் அழிக்கப்பட இன்னும் ஒரு வார வாய்தா இருக்கிறதே! முக்கால் வாசிப் பேர் பலகையை எடுத்து விட்டார்கள். பிராமணாள் எழுத்தை அவர்களாகவே சிலர் அழித்து விட்டார்கள். சில இடங்களில் மறைத்து விட்டார்கள். நாம் இந்தப் பிரச்சினையில் எந்தவிதமான அசம்பாவிதத்துக்கும் இடம் தரக்கூடாது. இந்தக் கிளர்ச்சி இன்னும் 3 மாதமோ 6 மாதமோகூட நீடிக்கலாம். பாதகமில்லை. இதில் நாம் தோல்வியடைந்தால் கூடப் பரவாயில்லை" என்றார். "பகுத்தறிவுப் பள்ளி; அரிய வாய்ப்பு" என்று வீரமணி (ஆசிரியர்) எழுதிய துணைத் தலையங்கத்தில் "என்.எஸ். சம்பந்தம் பிரச்சாரப் பள்ளிப் பொறுப்பாளராயிருப்பார். 10 நாள் நடைபெறும். கட்டணம் ரூ. 20. நமக்குப் பிரச்சாரமே மிக இன்றியமையாததாக இருப்பதால் இளைஞர்கள் இந்த வாய்ப்பினை நல்ல வண்ணம் பயன்படுத்திக் கொள்ளவேண்டும்" என்று கோரியிருந்தது.

15–ந்தேதி மதுரையில் "பிராமணாள்" அழிப்பு வெற்றி பெற்றது. தொடர்ந்து பல ஊர்களிலும் அகற்றப்பட்டது.

மாற்றமில்லாவிட்டாலும் இரண்டு கழகங்களாய்த் தனித் தனியே பிரிந்து பணியாற்றியவர்கள், இப்போது இணைந்து விட்டோம்! இதைப்பற்றிப் பொறாமையால் யாரும், ஏதும் சொல்லலாம்! இதனால் ஒன்றும் குற்றமில்லை. இன்றையத் தி.மு.க. ஆட்சி, என் ஆயுள்வரை இருந்தால், நான் மனக் குறை இல்லாமல் சாவேன்!'' என்று, உணர்ச்சி மேலிடக் கூறினார்.

கலைஞர் தமது பிறந்த நாள் விழாவில், ''நான் பெரி யாரின் மாணவன் என்பதில்தான் எனக்குப் பெருமை அதிகம்'' என்று பூரிப்புடன் புகன்றார். தமிழக அரசின் சார்பில் "தமிழரசு'' என்று ஒரு மாதமிருமுறை இதழ் வெளிவரும் என முதல்வர் கூற்றுக்கிணங்க, ஓர் அழகிய விளம்பரம், ''விடுதலை" முதல்பக்கம் காணப் பெற்றது 15–6–70 அன்று.

பெரியார் கொட்டாம்பட்டியில் 5–ந் தேதி பேசினார்: ''ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்பது முட்டாள் தனமான பேச்சு. ஒரு கடவுளை நம்புவதால் ஏற்படும் முட்டாள் தனந்தான் ஆயிரம் கடவுளை நம்புவதாலும் ஏற்படுகின்றது. ஒன்றே குலம் ஒருவனே தேவன் திராவிட முன்னேற்றக் கழகத்தின் கொள்கையாயிருக்காது. தேர்தலில் ஓட்டு வாங்குவதற்காகச் சொல்லப் பட்டதாயிருக்கும்'' என்று மிக்க நம்பிக்கையோடு சொன்னார் பெரியார். கோவையை அடுத்த ஆலந்துறையில் 7–ந் தேதி ஒரு திருமண விழாவில் பேசும்போது, அங்கு விளக்கேற்றி வைத்திருந்ததாலோ என்னவோ, அதைப் பற்றிக் குறிப் பிட்டார். ''யாரோ விளக்கை லட்சுமி என்று சொல்லி விட்டார்கள். அதை நம்புகின்ற மக்கள், அது லட்சுமி என்பதற்காக, மண வீட்டில் மட்டுமல்லாமல், பிணத் தருகிலும் கொளுத்தி வைக்கிறார்கள். சரி, நான் கேட்கிறேன்; இந்த மணமகனுக்கோ, அல்லது மண மகளுக்கோ தெரியுமா, விளக்கு ஏன் வைக்கிறார்கள் என்று?'' பெரியாரின் கேள்விக்கு என்ன பதில்!

17–5–70 அன்று சென்னை கடற்கரை சீரணி அரங்கில், மேலவைத் தலைவர் சி.பி. சிற்றரசுவுக்கு வீடு, கார் ஆகியவை அன்பளிப்பாக வழங்கப்பட்ட நிகழ்ச்சியில் கலைஞருடன், பெரியாரும் பங்கேற்று, "இது தனித்தமிழர் ஆட்சி. தமிழ் நாட்டில் இனி வேறு ஆட்சி வர விட மாட்டோம். நான் செய்ய எண்ணும் காரியங்களைத் தி.மு.க அரசு செய்து வருகிறது. அதனால் என் வேலை குறைகிறது" என்றார். 19–ந்தேதி 'தமிழர்களின் பொதுத் தொண்டு' என்னுந் தயைலங்கத்தில், "இழிவு ஒழிப்பு நடவடிக்கை எனக்கு மட்டுந்தான் சொந்தமா? விளம்பரம் பெற்ற தமிழன் வேறு யாராவது எதிர்காலத் தமிழர்களின் நிலைபற்றிக் கவலைப்படுகின்றானா? இப்போது நமக்குத் தி.மு.க ஆட்சி கிடைத்திருப்பதே மிகப் பெரிய வெற்றி. காங்கிரஸ்காரன் ஆட்சி இப்போது இருந்தால் இதெல்லாம் நடக்குமா? இனி அவன் வந்தாலும் இதை நடக்க விடுவானா? என்ன காரணம்? நமது திராவிடர் கழகமும் திராவிட முன்னேற்றக் கழகமும் இலட்சியத்தில் ஒன்றாயிருப்பதுதானே காரணம்!" எனப் பெரியார் தீட்டியிருந்தார்.

காந்திக்கும் நேருவுக்கும் பிறகு அண்ணாவின் மறைவுதான் இந்தியாவின் மிகப் பெரிய தேசிய இழப்பு என்று சென்னை வந்திருந்த மத்திய துணையமைச்சர் கடில்கார் 29–5–70 அன்று புகழ்ந்து கூறினார். "விடுதலை" 19-5-70 ஆசிரியருக்குக் கடிதம் பகுதியில் நெய்வேலி கு. வீராசாமி என்பார், "தந்தை பெரியாரின் முழு வாழ்க்கை வரலாறு எழுதப்பட வேண்டும்" என்று கோரியிருந்தார். அந்தக் கடிதத்தினடியில் ஆசிரியர் குறிப்பாக, "விரைவில் அப்பணி தொடங்கப்பட இருக்கிறது" என்று காணப்படுகிறது. (அப்பணி தொடங்கப்பட்டதாகத் தெரியவில்லையே!) 1-6–70 அன்று பேராசிரியர் டாக்டர் சி. இலக்குவனார் நாகர்கோயில் இந்துக் கல்லூரி முதல்வராகப் பொறுப்பேற்றார். 10-ந்தேதி காஞ்சி மணிமொழியார் பிறந்த நாள் விழாவில் கலந்து கொண்டு பெரியார், "ஒரு குடும்பம் போலிருந்து நாம் பொதுத் தொண்டாற்றி வந்தோம். கொள்கையி

13-ந்தேதி ஜோலார்பேட்டையில் பெரியார் ''அண்ணா போலத் தனியான ஒரு கொள்கை ஏற்படுத்தி, அதன் பேரில் தேர்தலுக்கு நின்று, ஆட்சியைப் பிடித்தவர், உலகிலேயே லெனின் ஒருவர்தான், என்று பெரியதொரு வரலாற்றுச் சிகரமான உண்மையை உரைத்தார். அன்றே திருப்பத்தூரில், ஆசிரியர்கள் சங்கத்தில், எனக்கு அதிகாரமிருந்தால் கல்யாணமானவர்களுக்கே ஆசிரியர் வேலை தரமாட்டேன்; அல்லது, கல்யாணமானாலும், பிள்ளை பெற்றால் அவர்களுக்குத் தரமாட்டேன், கடவுளை நம்பாத பகுத்தறிவு வாதிகளுக்கே ஆசிரியர் வேலை தருவேன்; அப்போது தான் இளமையிலேயே பிள்ளைகள் பகுத்தறிவோடு வளர்வார்கள்'' என்றார் பெரியார். அடுத்த ''பிராமணாள்'' போர்டு அழிப்புக் களமாகத் திருச்சி தேர்ந்தெடுக்கப் பட்டது. 18ந் தேதியும் 21-ந் தேதியும் மறியலுக்குத் தேதி குறிப்பிட்டுச் சென்றபோது, தாமே அழித்துவிட்டுப் போராட்டத்தை வெற்றியாக முடிக்க உதவினர் ஓட்டல் உரிமையாளர்கள்.

திருச்சியிலுள்ள கிறிஸ்துவப் பிணங்களைப் புதைக்கும் இடுகாட்டில், தாழ்த்தப்பட்டோருக்குத் தனியிடம் இருந்தது. சுவர் எழுப்பியே அதைத் தனிமையாகப் பிரித்திருந்தார்கள். இதை எதிர்த்து 20–6–70ல் நடந்த கண்டனக் கூட்டத்தில் பேசிய பெரியார்–''இது கிறிஸ்துவ மதத்துக்கே இழிவு. உலகில் வேறெங்கும் இப்படிக் கிடையாது. நீக்ரோக்களைக் கொடுமைப்படுத்தும் அமெரிக்காவிலும் இல்லை. இடையிலுள்ள சுவரை நீங்களே உடைத்தெறியுங்கள். இல்லாவிட்டால் நாங்கள் இந்துவாகப் போய்விடுவோம் என்று மிரட்டுங்கள்'' என்பதாக வழி சொல்லிக் கொடுத்தார் பெரியார். ''இப்போது இந்தியாவின் மானத்தைக் காப்பாற்றுவதே, தமிழகத்தில் நடைபெறும் தி.மு.க. ஆட்சி தான். காங்கிரஸ் ஆட்சியைவிட இது எவ்வளவோ நலமான ஆட்சியாகும். தி.மு.க. ஆட்சியைக் காப்பதில் நமக்குப் பொறுப்பு அதிகம். ஒரு தாயின் நிலையில் இருந்து நாம் காப்பாற்றவேண்டும். காமராஜரே, நான் இந்த ஆட்சியைக்

கவிழ்க்க மாட்டேன் என்பதாக, ஒன்றுக்கு மேற்பட்ட தடவைகளில் சொல்லியிருக்கிறார். பொறுப்பும், மரியாதையும் உள்ள பத்திரிகைகள் இல்லாததால் தாறுமாறாக ஏதோ எழுதிவருகிறார்கள்'' என்று 22ந்தேதி பெரியார் தலையங்கம் எழுதினார். 15 ஸ்டாண்டர்டு ஏக்கரா உச்சவரம்பு கட்டி நிலச் சீர்திருத்தச் சட்டம் இயற்றித் தமிழ்நாடு அரசு அனுப்பிய மசோதா, ஜனாதிபதியின் ஒப்புதல் பெற்று விட்டதாக 25-ந் தேதி செய்தி வந்தது.

அனைத்துலக அய்க்கிய நாடுகள் சபையைச் சார்ந்த கல்வி கலாச்சார நிறுவனம் (Unesco) பெரியாருக்கு விருது வழங்கிச் சிறப்புப் பெற்றது. சென்னை இராஜாஜி மண்டபத்தில் 27-6-70 மாலை 5.30 மணிக்கு மத்தியகல்வி அமைச்சர் திரிகுணசென் தலைமையில், தமிழக முதல்வர் மாண்புமிகு கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் பெரியாருக்கு இந்த விருதினை வழங்கினார். citation எனப்படும் அறிமுக உரையில்—புது உலக தீர்க்கதரிசி, தென்கிழக்கு ஆசியாவின் சாக்ரடீஸ், சீர்திருத்த இயக்கத்தின் தந்தை, அறியாமை மூடநம்பிக்கை அர்த்தமற்றசம்பிரதாயம் இழிந்த வழக்கங்கள் ஆகியவற்றின் கடும் எதிரி—என்று பெரியார் அவர்களைப் பாராட்டி அந்த விருதுப்பட்டயத்தில் பொறித்திருந்தார்கள். பெரியார் நன்றியுரையில், ''மற்ற புகழ்ச்சிகளுக்கு நான் பாத்திரனல்ல, ஆனால் கடும் எதிரி என்பதை ஒப்புக்கொள்கிறேன். இன்னும் என் கருத்துகளை முழுவதும் விரிவாக எடுத்துச் சொல்ல எனக்குப் பத்திரிகை வசதியில்லை. இருப்பதை வைத்துக்கொண்டு இவ்வளவாவது செய்ய முடிகிறதே என்று மகிழ்ச்சியடைகிறேன். இந்த நாட்டில் இந்தக் கருத்துகளைச் சொல்கிறவன், இதுவரை கொலை செய்யப்படாமல் உயிர் வாழ்வதே ஓர் அதிசயமாகும்'' என்றார்.

சென்னை பாலர் (கலைவாணர்) அரங்கத்தில் ஒரு புதுமைத் திருமணம் நடைபெற்றது. நரிக்குறவர்

சமுதாய மக்களை உயர்த்துவதையே குறிக்கோளாய்க் கொண்டு உழைத்துவரும் ஆசிரியர் ஏ.கே. ரகுபதி (வெள்ளாள வகுப்பு), அந்தச் சமுதாயத்தைச் சார்ந்த பெண்மணி எம்.ஏ. ஞானசுந்தரியை 28-6-70 அன்று கலப்புத் திருமணம் புனைந்து புரட்சி நிகழ்த்தினார். அதில் கலந்து கொண்டு மணமக்களை வாழ்த்திய எம்.ஜி.ஆர். அவர்கள் "எந்தச் சீர்திருத்தவாதியும் பெறாத பெருவெற்றிகளைப் பெற்றவர் தந்தை பெரியார் அவர்கள். கலப்புத் திருமண விழாக்களில், முதலில் அவரது தியாகத்துக்குத் தலை வணங்குவதே நம் கடமை" என்றார்.

29-ந்தேதி சென்னை அசோகா ஓட்டலில், நலம் நாடுவோர் குழுவின் சார்பில், அய்ரோப்பா செல்லும் முதலமைச்சர் கலைஞரைப் பாராட்டி நடந்த விருந்தும், கூட்டமும்; பெரியாரின் வாழ்த்துகளோடு இணைந்திருந்தது குன்றக்குடி அடிகளார், வீரமணி, என்.டி. சுந்தரவடிவேலு, ஏ.என் சட்டநாதன், ஈ.பி. இராயப்பா ஆகியோர் கலந்து கொண்டனர். டாக்டர் எஸ்.ஜி. மணவாள ராமானுஜம் வரவேற்றார். "எனக்குச் சூட்டப்படுகின்ற புகழ்மாலைகள் அனைத்தையும் பெரியார் காலடிகளுக்கே சமர்ப்பிக்கிறேன். நாங்கள் செய்யாத காரியங்களுக்காக எங்களை மன்னிக்க வேண்டும்" என்று உணர்ச்சி பொங்கும் நன்றியுரை நவின்றார் முதலமைச்சர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள். சீரணி சார்பில் நேரு ஸ்டேடியத்தில் பேசிய டாக்டர் ஏ. லட்சுமணசாமி முதலியார், "வெளிநாடு செல்லு முன்பே அங்கெல்லாம் புகழ்பெற்ற முதல்வர் நமது கலைஞர்" என்று பாராட்டினார்.

அய்ரோப்பிய சுற்றுப்பயணத்துக்காக 1-7-70 அன்று புறப்பட்ட கலைஞர், "என்னை அடிமை கொண்ட அன்பு நெஞ்சங்களே! உங்கள் அடிதொழுது விடைபெறுகிறேன்" என்று கூறிச்சென்றார். கல்வியாளர் எஸ்.வி. சிட்டிபாபுவின் மகள் திருமண விசாரிப்புக்காகப் பெரியார், மணியம்மையாருடன் சென்று வந்தார். ஜூலை மாதம் கடும்பயணம் பெரியாருக்கு! கலைஞரை வழியனுப்பியபின் 2 சிவகங்கை,

3 பரமக்குடி, 4 தேவகோட்டை, 5 காலை பட்டுக்கோட்டை, மாலை காரைக்குடி,6இராமநாதபுரம், 7 அருப்புக்கோட்டை 10திம்மராயசமுத்திரம், 11 திருச்சி, 12 சீரங்கம் திருவானைக் கோயில், 14 15 16 17 18 சென்னை, 19 கும்பகோணம், 20 லாலாபேட்டை 21 தாளக்குடி ஆலம்பாடி, 22 பச்சாம் பேட்டை, 26 சேலம், இப்படி! இதற்கிடையில் நாவலர் நெடுஞ்செழியனின் 51–வது பிறந்தநாளான 11-7-70 அன்று வீரமணி மூலமாகப் பெரியாரின் வாழ்த்துச்செய்தி "தி.மு.க. தலைவர்களில் தலைசிறந்தவர். தி.மு.க. கொள்கைகளை முழுக்க முழுக்க ஆதரித்து நடந்து கொள்பவர் நாவலர்" என்று எடுத்துக் கூறியது. 15–ந்தேதி காமராஜரின் 68–வது பிறந்தநாளன்று, வழக்கத்தைவிடாமல், ஒரு சிறிய புகைப் படமும், 4 வரியில் வாழ்த்துச் செய்தியும் "விடுதலை" முதல் பக்கத்தில் இடம் பெற்றன. இந்தியன் பேங்கில் பார்ப்பன ஆதிக்கம் மிகுந்து, நிர்வாகம் சீர்கெட்டதாக "விடுதலை" ஆதாரங்களை அள்ளி இறைத்ததால், அரசு,கண்காணிப்புத் தனி அதிகாரிகளை நியமித்தது.

ஈ. வெ. கி. சம்பத்தின் மகள் டாக்டர் நாகம்மாள்— நீதிபதி அழகர்சாமியின் மகன் டாக்டர் வெங்கடேஷ் இருவரின் திருமணம் பெரியார் திடலில் 15-7–70 காலை 10–30 மணிக்குப் பதிவு செய்யப்பட்டபோது, பெரியார், மணியம்மையார், காமராஜர், கக்கன், சி. சுப்ரமணியம் ஆகியோர் வந்திருந்தனர். மாலையில் 5-30 முதல் 7–30மணி வரை நடந்த வரவேற்பு விழாவில், பெரியார்தான் பிரதம வரவேற்பாளர். முதல்வர் கலைஞர் 16ந்தேதி லண்டன் மாநகரில், "அண்ணா வலியுறுத்திய மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டும் என்பதே தி. மு. க. கொள்கை" என் பதை விளக்கினார். தமிழில் மதராஸ் என்பதற்குப் பதில் சென்னை என்றே வழங்கப்படுவதற்கான அரசாணை 19-ந் தேதி வெளியிடப் பெற்றது.

15-ந்தேதி "கோயில்களை' இடிக்க நேரலாம்" என்ற தலையங்கம் பெரியாரின் கோபத்தைக் காண்பித்தது. "இருக் கின்ற கோயில்கள் போதாதா? இப்போதும் அரசாங்க

பெரியார். 22–ந் தேதியன்று ''விடுதலை''யின் முதல் பக்கச் செய்தி, பெரியார் திருச்சியிலிருந்து தொலை பேசியில் கூறியதாகும்:— ''முதல்வரின் உறுதி மொழியை ஏற்றுப் பெரியார் அறிக்கை. கிளர்ச்சி ஒத்தி வைக்கப்படுகிறது. தத்துவத்தைப் புரிந்து கொண்ட அரசுக்கு நன்றி. விரைவாக நடவடிக்கை எடுக்க வேண்டுகிறேன்.''

பிற்படுத்தப்பட்டோர் நலக் கமிஷன் 22—மாலை 4–30 மணிக்குப் பெரியாரைத் திருச்சியில் சந்தித்தது. பெரியார் தமது நீண்ட நாளைய எண்ணங்களைத் தெரிவித்தார். ஆதித்திராவிடர்களுக்கு அக்கிரகாரத்தினுள் சொந்த வீடு கட்டித் தந்து குடியிருக்கச் செய்ய வேண்டும். சட்ட சபையில் 25 சதவீத இடத்தைத் தேர்தல் மூலம் நிரப்பாமல், போட்டியிட்டு வரமுடியாத ஜாதிகளிலிருந்து, அரசே நாமினேஷன் செய்ய வேண்டும். யாரும், எந்தப் பதவியிலும், இரண்டு term க்கு மேல் இருக்கக் கூடாது.

24-ந் தேதி கடவுள் என்ற தலையங்கத்தில் பெரியார்— ''மதமும் கடவுளும் மனிதனை முட்டாளாக்கும் கருவிகள். கடவுள் மறைய மறைய மனிதனுக்கு அறிவு வளரும்; சுதந்தரம் அதிகமாகும். உண்மையான தி. மு. க.காரர்களுக்குக் கடவுள் நம்பிக்கை கிடையாது என்பது எனக்குத் தெரியும். இன்னும் இது மாதிரி 2 லட்சம் தி. மு. க. உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டால், யாரும் ஆட்சியையோ, கழகத்தையோ அசைக்க முடியாது. நிலாக்கல் கொண்டு வரும் காலத்தில் கல்லுச்சாமியைக் கட்டிக் கொண்டு அழ வேண்டுமா?'' என்று கேட்டார். இந்தி சகவருட முறையைத் தமிழக அரசு ஏற்கவில்லை என 31–ந் தேதியும், தமிழில் அர்ச்சனை தொடங்கப்பட்டது என 1–ந் தேதியும் அரசு தரப்பில் செய்திகள் வெளி வந்தன.

'நாத்திக உலகத்துக்கு ஈடு செய்ய முடியாத பேரிழப்பு' எனப் பெரியாரால் வருந்தி மொழியப்பட்டவாறு, பிரிட்டிஷ் பேரறிஞர் பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் 3–2-1970 அன்று 96–வது வயதில் காலமானார். பேரறிஞர் அண்ணா நினைவு நாளான

அன்றைய தினம், சென்னைப் பல்கலைக்கழக நூற்றாண்டு விழா மண்டபத்தில், மத்திய அமைச்சர் பேராசிரியர் ஷேர்சிங், அண்ணா நினைவுத் தபால் தலை வெளியிட்டார்.

35 லட்சம்ரூபாய்க்கு ஸ்டாம்புகள்வெளியிடப்பட்டதாக அவர் கூறினார். 6–ந் தேதி வித்தியாசமான ஒரு தலையங்கம் பெரியார் எழுத நேர்ந்தது. 'ஆனந்த விகடனின் ஜாதிபுத்தி' என்பது தலைப்பு, என்ன கோபம்?—"வாசன் இருந்தவரை ஆனந்தவிகடன் பத்திரிகை சமுதாய சம்பந்தமான விஷயங்களில் நடுநிலை வகித்து வந்தது. இப்போது அது அசல் பார்ப்பன சாதி புத்திக்கு வெற்றிலை பாக்கு வாங்கும் நிலைக்கு வந்து விட்டது. அனைத்துச் சாதியும் அர்ச்சகராக வேண்டும். அல்லது கோயில் கருவறைக்குள் எவரும் செல்ல அனுமதிக்க வேண்டும் என்பதற்காக ஒரு கிளர்ச்சி நடத்த நாங்கள் முடிவெடுத்தோம். அரசாங்கம் உறுதி சொன்னதன் பேரில் கிளர்ச்சியை ஒத்திவைத்தோம். இனியும் அரசு தாமதப் படுத்தினால் நாங்கள் ஒத்திப் போட்ட காலத்தைச் சுருக்க நேரிடும்!" என்பதுதான் கருத்து. "பஞ்சேந்திரியங்களுக்கும் தட்டுப்படாத விஷயம், பொருள், நடப்பு ஆகிய எதுவானாலும் அது பொய் என்று சொல்வது தான் பகுத்தறிவு வாதியின் கொள்கை" என விளக்கினார் பெரியார். "பழங்கால வைத்தியமுறை இப்போது எதற்காக? சித்த மருத்துவத்துக்குப் புத்துயிர் தரப்போகிறார்களாம். நவீன இரத்தப் பரிசோதனை போன்ற காரியங்களை இயந்திர மூலந்தானே செய்ய முடியும்! இதைப் பற்றிக் கவலையோடு சிந்திக்க வேண்டும்" என்றார் பெரியார்.

மத்திய சுகாதாரத்துறை ராஜாங்க அமைச்சர் டாக்டர் எஸ். சந்திரசேகருடன் பெரியார் பேட்டி, 14–ந்தேதி நடந்தது. இது அடுத்த மார்ச் 8–ந் தேதி சென்னை வானொலியில் ஒலிபரப்பாகியது, "விடுதலை" 9–ந் தேதி பிரசுரித்தது. இதனடிப்படையில் தானோ என்னவோ, பெரியார், அடுத்த முறையும் டாக்டர் சந்திரசேகரை ராஜ்ய சபை உறுப்பினராக்க வேண்டுகோள் விடுத்தார். அது பின்னர் வெற்றி பெறவில்லை.

தோழர்கள் நிறையப் பேர் தம்மிடம் சிபாரிசுக்கு வந்து தொல்லை தருவதாகப் பெரியார் மிக எரிச்சலுற்றார். நாள்தோறும் தொந்தரவும், வீண் கெட்ட பெயரும் வருவதாக வருத்தத்துடன் எழுதியிருந்தார்.

10-2-70 அன்று, கலைஞர் ஆட்சிக்குவந்த ஓராண்டு நிறைவு நாள். அண்ணாவின் இடத்தில் தானிருப்பது, மின்விளக்குக்குப் பதில் மெழுகுவத்தி போலிருந்தாலும், இயன்றவரை ஒளிதருவதாகக் குறிப்பிட்டார். இடிப் பாரையில்லா ஏமரா மன்னன் கெடுப்பார் இலானும் கெடும் என்ற குறளை நினைவூட்டிப், பெரியார் போன்றவர்கள், தான் தவறு செய்தால் எடுத்துக்காட்ட வேண்டினார். 19-ந் தேதி திருச்சியில் தி.மு.க. மாநாடு எழுச்சியுடன் நடந்தது. சி.பி. சிற்றரசு தலைமையில் புரட்சிநடிகர் எம்.ஜி. ராமச்சந்திரன் துவக்கிவைத்தார். பஞ்சாப் முதல்வர் குர்ணாம்சிங், புதுவையின் தி.மு.க. முதல்வர் ஃபாரூக் ஆகியோர் பங்கேற்றனர். அண்ணா வழியில் அயராதுழைப்போம்; ஆதிக்கமற்ற சமுதாயம் அமைத்தே தீருவோம்; இந்தித் திணிப்பை என்றும் எதிர்ப்போம்; வன்முறை தவிர்த்து வறுமையை வெல்வோம்; மத்தியில் கூட்டாட்சி, மாநிலத்தில் சுய ஆட்சி என்ற அய்ந்து முழக்கங்களைக் கலைஞர் அங்கே தந்தார். தி.மு.க. வின் அரசியல் தீர்மானம் வரவேற்கப் படத்தக்கதே; மத்திய ஆளுங்கட்சிக்கு வரையறுத்த ஆதரவு தருவதாகக் கூறியது சரிதான் — என்று "விடுதலை" 21-ந் தேதித் தலையங்கத்தில் குறிப்பிட் டிருந்தது. இந்தி கட்டாயமாக மத்திய அரசு ஊழியர் மீது திணிக்கப்படுவதை எதிர்த்து, நாடாளுமன்ற உறுப் பினரான முரசொலி மாறனும், தபால்துறை ஊழிய ரான ஜி. லட்சுமணனும் ரிட்மனு தாக்கல் செய்தனர்.

16-2-70 மதுரையில் சுயமரியாதைக் குடும்பங்களின் விருந்து விழாவில் பெரியார் கலந்து கொண்டார். தமிழர் ஒரே இனம், நாம் ஒரே சாதி என்றார். டாக்டர் சந்திர சேகருக்களித்த பேட்டியில் பெரியார் பல நல்ல கருத்துகள் சொன்னார். இளமையில் பிரத்தியட்சமாகப் பலகுழந்தை பெற்ற குடும்பத்தினர் பட்ட கஷ்டங்களைக் கண்டார். கடவுள் கொடுத்தது என்று நம்பியே துன்பங்களை மக்கள் அனுபவித்ததை உணர்ந்தார். அதனால் தான் 1920-ல்

எழுதினார், கர்ப்ப ஆட்சி என்று. "மத்திய அரசு குடும்ப நலத்துறைப் பிரச்சாரத்துக்காகப் போடும் பணியாளர்கள் பகுத்தறிவுவாதிகளாக இருந்தால் நல்லது. பெண்களின் திருமண வயதை 20–ஆக உயர்த்தினால் இந்த பிராப்ளம் ஓரளவு சால்வ் ஆகும். உத்தியோகங்களில் 50 சதவிதம் பெண்களுக்குத்தான் என்றாக்கினால், அவர்களுக்குத் தன்னம்பிக்கை உண்டாகும். அபார்ஷனை லீகலைஸ் செய்வது நல்லதுதான்." என்றார் பெரியார்.

செட்டி நாட்டரசர் எம். ஏ. முத்தையச் செட்டியாரின் மனைவியார் ராணிமெய்யம்மைஆச்சி 1-3-70 காலை 9–30க்கு இறந்து போனார். பெரியாரும் மணியம்மையார், வீரமணியுடன் 2–ந் தேதி மாலை 5–30 மணிக்கு, அடையாறு அரண்மனை சென்று, துக்கம் விசாரித்து வந்தார். 9–ந் தேதி எஸ். இராமநாதன் ஸ்டான்லி மருத்துவ மனையில் இயற்கை எய்தினார். 10–ந் தேதி "விடுதலை" அன்னார் மறைவுக்கு வருந்தி ஓர் துணைத் தலையங்கம் தீட்டியது. 14–ந் தேதி தமிழ்நாடு சட்ட மன்றம், அந்த முன்னாள் அமைச்சரின் றைவுக்காக ஒரு நிமிடம் அஞ்சலி செலுத்திற்று. 11–3–70 அன்று பெரியாரும் மணியம்மையாரும் சைதாப்பேட்டை சென்று, இராமநாதனுடைய துணைவியார் மற்றும் குடும்ப உறுப்பினர்களிடம் துக்கம் விசாரித்து வந்தனர்.

12–3–70 சட்டமன்றத்தில் கேள்வி ஒன்றுக்கு பதிலளித்த முதல்வர், கர்ப்பக்கிரகம் வரை கோயிலுக்குள் எல்லா இனத்தவரும் செல்லலாம் என்பது தான் இந்த அரசின் கொள்கை. ஆயினும், தகுதி அடிப்படையில் அனைத்துச் சாதியினரும் அர்ச்சகராகி, அர்ச்சனை செய்யலாம் என்கிற அளவில் இப்போது சட்டத் திருத்தம் கொணரப்படும் என்றார். சேலம் உருக்காலை நிறுவ, மத்திய அரசு முடிவெடுத்து விட்டதாகவும், தமது முயற்சி வெற்றி பெற்று விட்டதாகவும் கலைஞர் கூறியிருந்தார். 14-ந் தேதி பண்ணுருட்டி நீதி மன்றத்தில், கிருபானந்தவாரியார் சாட்சியமளிக்கையில் நெய்வேலியில் தாம் யாரையும் தூஷிக்கவில்லை என்றும், தாம் தாக்கப்பட்டதற்கும் தி.மு.க.விற்கும் சம்பந்தமில்லை என்றும் கூறினார்.

நம் நாட்டுப் பார்ப்பனர் வாழ வேண்டுமானால்—என்ற தலைப்பில் பெரியாரால் எழுதப்பட்ட தலையங்கம் 14-ந் தேதி "விடுதலை"யை அலங்கரித்தது:—"நாம் ஒரு சிறிதாவது அறிவு 'பெற்றுப் பகுத்தறிவு வாதிகள் ஆகி விட்டோமானால் 'கொல்லுவாரின்றியே பார்ப்பனன் செத்தான்' என்ற நிலைதான் ஏற்படும். அவர்கள், மேல் வகுப்பு மக்களாக வாழ்வதற்காகவே, கடவுள் மத நம்பிக்கை களை நம்மிடையே பரப்புவதுதான் பார்ப்பனர் கொள்கை. அவர்கள் கடவுள் நம்பிக்கை உள்ளவர்கள் போல் காட்டிக் கொள்வது நம்மை நிரந்தரமாய் ஏமாற்றி வைக்கவே ஆகும்," என்றார். பாப்பிரெட்டிப் பட்டியில் பேசும்போது பெரியாரின் ஆத்திரம் மிகவும் மேலெழுந்து நின்றது, 22-2-70 அன்று! "நம் நாட்டிலுள்ள கோயில்களை இடித்துத் தரைமட்டம் ஆக்கும் வரை சாதி ஒழியாது; கோயில்களி லுள்ள சிலைகளை உடைத்து, ரோட்டுக்கு ஜல்லியாகப் போடும் வரை சாதி நிலைபெற்றுதான் இருக்கும்" என்றார் பெரியார்!

அறநிலையத்துறை அமைச்சர் கே.வி. சுப்பய்யா, 24-ந் தேதி, விவாதத்துக்குப் பதிலளித்தபோது; கர்ப்பக்கிரகத் தில் அனைத்துச் சாதியினரையும் அனுமதிக்கும் சட்டத் திருத்தம்; தமிழில் அர்ச்சனை; கோயில் சொத்துகளின் மதிப் பீடு; கோயில் நிலங்களைக் கணக்கெடுத்தல்; பெண்களையும் அறங்காவலர்களாய் நியமித்தல் ஆகிய முற்போக்கான கருத்துகளை உரைத்தமைக்காக "விடுதலை" 25-ந் தேதி, பாராட்டியிருந்தது. 23-ந் தேதி திருச்சி சிந்தனையாளர் கழகத்தில், "மீண்டும் பிராமணாள் போர்டு அழிப்புக் கிளர்ச்சி தொடங்க வேண்டியிருக்கும்" என்று பெரியார் பேசினார். 26-ந் தேதி முதல் 4 நாள் பெரியார் பெங்களூரில் ஓய்வு எடுத்தார்.

பெரியாரின் சாதி ஒழிப்புப் பணிகளை வெகுவாகப் புகழ்ந்தும், மாணவர்கள் கலப்பு மணம் புரிந்து கொள்ள வேண்டுமென்றும், 26-3-70-ல் அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாச் சொற்பொழிவில் டாக்டர் எஸ்.

சந்திரசேகர் வலியுறுத்தினார். மாயூரத்தில் ஏப்ரல் 11-ஆம் நாள் திராவிடர் கழக மாநாடு, இரா. சண்முகநாதன் தலைமையில்; பெங்களூர் விசாலக்குமி சிவலிங்கம் திறப்பாளர்; சுந்தரலீலா சிங்கம் கொடி உயர்த்தல். மறுநாள் சமூக சீர் திருத்த மாநாட்டின் தலைவர் கி. வீரமணி; திறப்பாளர் புதுவை அமைச்சர் எஸ். இராமசாமி. தடை செய்யப்பட்ட நூல்களின் மீதுள்ள தடையை ரத்துச் செய்ய வேண்டும். ஏப்ரல் 26 முதல் மீண்டும் 'பிராமணாள்' அழிப்பு. முதல் நாளே சம்பந்தப்பட்டவர்க்கு அறிவித்து விடவேண்டும்; என்று தீர்மானங்கள் நிறைவேற; இருநாளும் பெரியார் பேச்சு, திருநாளாக அமைந்தது! இதனையடுத்துப் பல ஊர் களில் தாமே பெயர்ப் பலகைகளில் ''பிராமணாள்'' எழுத்தை அழித்திட முன்வந்தனர், உணவுவிடுதி உரிமையாளர்கள்.

15-4-70 இரவு 8 மணிக்கு, சேலம் ராவ்சாகிப் பி. இரத்தினசாமிப் பிள்ளை தமது 62-வது வயதில் காலமாகி விட்டார். பெரியாரும் வீரமணியும் ஏதோ ஒரு காரை இரவல் பெற்று, உடனே சேலம் விரைகின்றனர். மறுநாள் திரும்பவும் சென்னையில் நிகழ்ச்சி இருக்கிறது பெரியாருக்கு! உளுந்தூர்பேட்டையருகில், கார் ரிப்பேராகி விடுகிறது. பெரியாரை இறக்கி விட்டுக், காரை எடுத்துப் போய், வீரமணி ஒரு மெக்கானிக்கைப் பிடித்துச், சரி செய்கிறார். இதற்குள் நேரமாகி விடவே, சேலம் செல்வதால் பயனில்லை என்ற முடிவுக்கு வந்த பெரியார், சென்னை செல்லும் லாரி ஒன்றில், டிரைவருக்கருகில் ஏறி அமர்ந்து கொண்டு புறப்படுகிறார். வழியில் நின்றுகொண்டிருந்த வீரமணிக்குச் சைகை காட்டியபடியே, பெரியார் லாரியில் விரைகிறார். வீரமணி திகைத்துப்போய், லாரியை வெகு தூரம் துரத்திச் சென்று, வழிமறித்து,முந்தி நின்று, பெரியாரை இறங்கி வருமாறு வேண்டுகிறார்.

''இந்த லாரிக்காரரர் எவ்வளவு பிரியத்தோடு என்னை அழைத்துத் தன்னருகில் அமர்த்திக் கொண்டார். ;சென்னையில் கொண்டுபோய் விடுவதாக அவர் அன்புடன் ஒப்புக்

கொண்டுள்ளார். பாதியில் இறங்கி வந்துவிட்டால் அவர் மனம் நோகாதா?'' என்று, பெரியார் மறுக்கிறார். பிறகு லாரி டிரைவரே முன்வந்து பெரியாரிடம் வேண்டி, இறக்கி வந்து காரில் ஏற்றி விடுகிறார்! 18–ந்தேதி காஞ்சிபுரம் செல்லப் புறப்படும்போது பெரியாரின் உடல்நிலை கெடுகின்றது; ஜுரம் வந்து விட்டது. மறுநாள் பண்ணுருட்டி நிகழ்ச்சிக்குத் தமக்குப் பதில் வீரமணியைப் போகச் சொல்லித், தொடர்ந்து, மதுரை, நெல்லை, கன்னியாகுமரி மாவட்டச் சுற்றுப் பயணத்தையும் ரத்து செய்துவிட அறிவித்தார் பெரியார்.

23–ந் தேதியன்று சி. பி. சிற்றரசு தமது 64–வது வயதில் சட்டமன்ற மேலவையின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். 24–ந் தேதி வந்து பெரியாருக்கு மாலை சூட்டி வணங்கினார். ''நானல்லவா அய்யாவை வந்து பார்த்திருக்க வேண்டும்!'' என்றார் பெரியார். அன்றே ஒரு பெட்டிச் செய்தியில் ''நானும் 30–ந்தேதி வரை ஓய்வில் இருக்கிறேன். முதலமைச்சரும் கண் நோயினால் சிகிச்சையில் இருக்கிறார். அதனால் மே 6–ந் தேதி வரை தவணை தரப்பட்டிருக்கிறது. தோழர்கள் சலிப்படைய வேண்டாம்'' என்று, பலகையில் 'பிராமணாள்' பெயரழிப்புப் போராட்டம் குறித்து எழுதியிருந்தார். நான் சொன்னால் உனக்கு ஏன் கோபம் வர வேண்டும்? என்று தலையங்கமும் எழுதினார் பெரியார். ''நீ கோபிப்பதால் கடவுளையே அவமதிக்கிறாய்! ஆத்திரப் படுபவன் இரட்டை முட்டாள் என்பேன். கடவுளுக்கு உருவமில்லை என்று ஒருபுறம் சொல்லிக் கொள்கிறாய்! பின் அதற்கு பெண்டாட்டி வைப்பாட்டி பிள்ளைகுட்டி ஏது? இதைக் கேட்டால் மனம் புண்படும் என்கிறாய்! மடையர்களின் மனம்தான் புண்படும்! உலக மாறுதலின் வேகம் என்ன தெரியுமா? இன்றைக்குப் போப்பாண்டவரையே கல்லால் அடித்ததாகச் சேதி வந்ததே–இந்த சங்கராச்சாரிக்கு அந்த நிலை ஏற்படாதா? நாட்டில் பகுத்தறிவு பரவுவதற்குத் தடையாக இருப்பதே இவர்தானே?'' என்றும் வினா எழுப்பினார்.

30-ந்தேதி ஓரளவு உடல்நலம் பெற்றுக் கண்கொடுத்த வனிதம் நிகழ்ச்சிக்குச் சென்று, சுற்றுப் பயணம் தொடர்ந்தார் பெரியார். அங்கு பேசும்போது, பெண் கடவுள் களுக்குப் பூசை செய்யவாவது, பெண் பூசாரிகளை நியமிக்க லாமே என்ற கருத்தைத் தெரிவித்தார். 6-5-70 அன்று சேலம் பி. ரத்தினசாமிப் பிள்ளை அவர்களின் நினைவு நாளில் பங்கேற்றுச், சென்னை கண் மருத்துவ மனையில் முதல்வர் கலைஞரை மறுநாள் காலை 11-30 மணிக்குப் பார்த்து, நலம் விசாரித்தார். முதல்வரை 2-ந்தேதியன்று ஆளுநர் உஜ்ஜல்சிங், ஜனாதிபதி வி.வி.கிரி ஆகியோர் பார்த்துச் சென்றனர். 8-ந்தேதி வீடு திரும்பிய கலைஞர் 1 மாதம் ஓய்வில் தங்கினார். 9-5-70 தலையங்கப் பகுதியில் "விடுதலை"யில் பெரியார் "மாவட்டத் தலைவர்களுக்கு வேண்டுகோள்" விடுத்தார். "தஞ்சை, வேலூர், சேலம், தர்மபுரி, காஞ்சி நீங்கலாக மற்ற மாவட்டத் தலைநகர் களில் அழிக்கப்பட இன்னும் ஒரு வார வாய்தா இருக் கிறதே! முக்கால் வாசிப் ·பேர் பலகையை எடுத்து விட் டார்கள். பிராமணாள் எழுத்தை அவர்களாகவே சிலர் அழித்து விட்டார்கள். சில இடங்களில் மறைத்து விட்டார்கள். நாம் இந்தப் பிரச்சினையில் எந்தவிதமான அசம்பாவிதத்துக்கும் இடம் தரக்கூடாது. இந்தக் கிளர்ச்சி இன்னும் 3 மாதமோ 6 மாதமோகூட நீடிக்கலாம். பாதக மில்லை. இதில் நாம் தோல்வியடைந்தால் கூடப் பர வாயில்லை" என்றார். "பகுத்தறிவுப் பள்ளி; அரிய வாய்ப்பு" என்று வீரமணி (ஆசிரியர்) எழுதிய துணைத் தலையங்கத்தில் "என்.எஸ். சம்பந்தம் பிரச்சாரப் பள்ளிப் பொறுப்பாளராயிருப்பார். 10 நாள் நடைபெறும். கட்டணம் ரூ. 20. நமக்குப் பிரச்சாரமே மிக இன்றியமை யாததாக இருப்பதால் இளைஞர்கள் இந்த வாய்ப்பினை நல்ல வண்ணம் பயன்படுத்திக் கொள்ளவேண்டும்" என்று கோரியிருந்தது.

15-ந்தேதி மதுரையில் "பிராமணாள்" அழிப்பு வெற்றி பெற்றது. தொடர்ந்து பல ஊர்களிலும் அகற்றப்பட்டது.

17–5–70 அன்று சென்னை கடற்கரை சீரணி அரங்கில், மேலவைத் தலைவர் சி.பி. சிற்றரசுவுக்கு வீடு, கார் ஆகியவை அன்பளிப்பாக வழங்கப்பட்ட நிகழ்ச்சியில் கலைஞருடன், பெரியாரும் பங்கேற்று, "இது தனித்தமிழர் ஆட்சி. தமிழ் நாட்டில் இனி வேறு ஆட்சி வர விட மாட்டோம். நான் செய்ய எண்ணும் காரியங்களைத் தி.மு.க அரசு செய்து வருகிறது. அதனால் என் வேலை குறைகிறது" என்றார். 19–ந்தேதி 'தமிழர்களின் பொதுத் தொண்டு' என்னுந் தலையங்கத்தில், "இழிவு ஒழிப்பு நடவடிக்கை எனக்கு மட்டுந்தான் சொந்தமா? விளம்பரம் பெற்ற தமிழன் வேறு யாராவது எதிர்காலத் தமிழர்களின் நிலைபற்றிக் கவலைப்படுகின்றானா? இப்போது நமக்குத் தி.மு.க ஆட்சி கிடைத்திருப்பதே மிகப் பெரிய வெற்றி. காங்கிரஸ்காரன் ஆட்சி இப்போது இருந்தால் இதெல்லாம் நடக்குமா? இனி அவன் வந்தாலும் இதை நடக்க விடுவானா? என்ன காரணம்? நமது திராவிடர் கழகமும் திராவிட முன்னேற்றக் கழகமும் இலட்சியத்தில் ஒன்றாயிருப்பதுதானே காரணம்!" எனப் பெரியார் தீட்டியிருந்தார்.

காந்திக்கும் நேருவுக்கும் பிறகு அண்ணாவின் மறைவுதான் இந்தியாவின் மிகப் பெரிய தேசிய இழப்பு என்று சென்னை வந்திருந்த மத்திய துணையமைச்சர் கடீல்கார் 29–5–70 அன்று புகழ்ந்து கூறினார். "விடுதலை" 19-5-70 ஆசிரியருக்குக் கடிதம் பகுதியில் நெய்வேலி கு. வீராசாமி என்பார், "தந்தை பெரியாரின் முழு வாழ்க்கை வரலாறு எழுதப்பட வேண்டும்" என்று கோரியிருந்தார். அந்தக் கடிதத்தினடியில் ஆசிரியர் குறிப்பாக, "விரைவில் அப்பணி தொடங்கப்பட இருக்கிறது" என்று காணப்படுகிறது. (அப்பணி தொடங்கப்பட்டதாகத் தெரியவில்லையே!) 1-6–70 அன்று பேராசிரியர் டாக்டர் சி. இலக்குவனார் நாகர்கோயில் இந்துக் கல்லூரி முதல்வராகப் பொறுப்பேற்றார். 10-ந்தேதி காஞ்சி மணிமொழியார் பிறந்த நாள் விழாவில் கலந்து கொண்டு பெரியார், "ஒரு குடும்பம் போலிருந்து நாம் பொதுத் தொண்டாற்றி வந்தோம். கொள்கையி

மாற்றமில்லாவிட்டாலும் இரண்டு கழகங்களாய்த் தனித் தனியே பிரிந்து பணியாற்றியவர்கள், இப்போது இணைந்து விட்டோம்! இதைப்பற்றிப் பொறாமையால் யாரும், ஏதும் சொல்லலாம்! இதனால் ஒன்றும் குற்றமில்லை. இன்றையத் தி.மு.க. ஆட்சி, என் ஆயுள்வரை இருந்தால், நான் மனக் குறை இல்லாமல் சாவேன்!'' என்று, உணர்ச்சி மேலிடக் கூறினார்.

கலைஞர் தமது பிறந்த நாள் விழாவில், ''நான் பெரியாரின் மாணவன் என்பதில்தான் எனக்குப் பெருமை அதிகம்'' என்று பூரிப்புடன் புகன்றார். தமிழக அரசின் சார்பில் ''தமிழரசு'' என்று ஒரு மாதமிருமுறை இதழ் வெளிவரும் என முதல்வர் கூற்றுக்கிணங்க, ஓர் அழகிய விளம்பரம், ''விடுதலை'' முதல்பக்கம் காணப் பெற்றது 15–6–70 அன்று.

பெரியார் கொட்டாம்பட்டியில் 5–ந் தேதி பேசினார்: ''ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்பது முட்டாள் தனமான பேச்சு. ஒரு கடவுளை நம்புவதால் ஏற்படும் முட்டாள் தனந்தான் ஆயிரம் கடவுளை நம்புவதாலும் ஏற்படுகின்றது. ஒன்றே குலம் ஒருவனே தேவன் திராவிட முன்னேற்றக் கழகத்தின் கொள்கையாயிருக்காது. தேர்தலில் ஓட்டு வாங்குவதற்காகச் சொல்லப் பட்டதாயிருக்கும்'' என்று மிக்க நம்பிக்கையோடு சொன்னார் பெரியார். கோவையை அடுத்த ஆலந்துறையில் 7–ந் தேதி ஒரு திருமண விழாவில் பேசும்போது, அங்கு விளக்கேற்றி வைத்திருந்ததாலோ என்னவோ, அதைப் பற்றிக் குறிப்பிட்டார். ''யாரோ விளக்கை லட்சுமி என்று சொல்லி விட்டார்கள். அதை நம்புகின்ற மக்கள், அது லட்சுமி என்பதற்காக, மண வீட்டில் மட்டுமல்லாமல், பிணத் தருகிலும் கொளுத்தி வைக்கிறார்கள். சரி, நான் கேட்கிறேன்; இந்த மணமகனுக்கோ, அல்லது மண மகளுக்கோ தெரியுமா, விளக்கு ஏன் வைக்கிறார்கள் என்று?'' பெரியாரின் கேள்விக்கு என்ன பதில்!

13-ந்தேதி ஜோலார்பேட்டையில் பெரியார் "அண்ணா போலத் தனியான ஒரு கொள்கை ஏற்படுத்தி, அதன் பேரில் தேர்தலுக்கு நின்று, ஆட்சியைப் பிடித்தவர், உலகிலேயே லெனின் ஒருவர்தான், என்று பெரியதொரு வரலாற்றுச் சிகரமான உண்மையை உரைத்தார். அன்றே திருப்பத்தூரில், ஆசிரியர்கள் சங்கத்தில், எனக்கு அதிகாரமிருந்தால் கல்யாணமானவர்களுக்கே ஆசிரியர் வேலை தரமாட்டேன்; அல்லது, கல்யாணமானாலும், பிள்ளை பெற்றால் அவர்களுக்குத் தரமாட்டேன், கடவுளை நம்பாத பகுத்தறிவு வாதிகளுக்கே ஆசிரியர் வேலை தருவேன்; அப்போது தான் இளமையிலேயே பிள்ளைகள் பகுத்தறிவோடு வளர்வார்கள்" என்றார் பெரியார். அடுத்த "பிராமணாள்" போர்டு அழிப்புக் களமாகத் திருச்சி தேர்ந்தெடுக்கப்பட்டது. 18ந் தேதியும் 21-ந் தேதியும் மறியலுக்குத் தேதி குறிப்பிட்டுச் சென்றபோது, தாமே அழித்துவிட்டுப் போராட்டத்தை வெற்றியாக முடிக்க உதவினர் ஓட்டல் உரிமையாளர்கள்.

திருச்சியிலுள்ள கிறிஸ்துவப் பிணங்களைப் புதைக்கும் இடுகாட்டில், தாழ்த்தப்பட்டோருக்குத் தனியிடம் இருந்தது. சுவர் எழுப்பியே அதைத் தனிமையாகப் பிரித்திருந்தார்கள். இதை எதிர்த்து 20–6–70ல் நடந்த கண்டனக் கூட்டத்தில் பேசிய பெரியார்–"இது கிறிஸ்துவ மதத்துக்கே இழிவு. உலகில் வேறெங்கும் இப்படிக் கிடையாது. நீக்ரோக்களைக் கொடுமைப்படுத்தும் அமெரிக்காவிலும் இல்லை. இடையிலுள்ள சுவரை நீங்களே உடைத்தெறியுங்கள். இல்லாவிட்டால் நாங்கள் இந்துவாகப் போய்விடுவோம் என்று மிரட்டுங்கள்" என்பதாக வழி சொல்லிக் கொடுத்தார் பெரியார். "இப்போது இந்தியாவின் மானத்தைக் காப்பாற்றுவதே, தமிழகத்தில் நடைபெறும் தி.மு.க. ஆட்சி தான். காங்கிரஸ் ஆட்சியைவிட இது எவ்வளவோ நலமான ஆட்சியாகும். தி.மு.க. ஆட்சியைக் காப்பதில் நமக்குப் பொறுப்பு அதிகம். ஒரு தாயின் நிலையில் இருந்து நாம் காப்பாற்றவேண்டும். காமராஜரே, நான் இந்த ஆட்சியைக்

கவிழ்க்க மாட்டேன் என்பதாக, ஒன்றுக்கு மேற்பட்ட தடவைகளில் சொல்லியிருக்கிறார். பொறுப்பும், மரியாதையும் உள்ள பத்திரிகைகள் இல்லாததால் தாறுமாறாக ஏதோ எழுதிவருகிறார்கள்'' என்று 22ந்தேதி பெரியார் தலையங்கம் எழுதினார். 15 ஸ்டாண்டர்டு ஏக்கரா உச்சவரம்பு கட்டி நிலச் சீர்திருத்தச் சட்டம் இயற்றித் தமிழ்நாடு அரசு அனுப்பிய மசோதா, ஜனாதிபதியின் ஒப்புதல் பெற்றுவிட்டதாக 25-ந் தேதி செய்தி வந்தது.

அனைத்துலக அய்க்கிய நாடுகள் சபையைச் சார்ந்த கல்வி கலாச்சார நிறுவனம் (Unesco) பெரியாருக்கு விருது வழங்கிச் சிறப்புப் பெற்றது. சென்னை இராஜாஜி மண்டபத்தில் 27-6-70 மாலை 5.30 மணிக்கு மத்தியகல்வி அமைச்சர் திரிகுணசென் தலைமையில், தமிழக முதல்வர் மாண்புமிகு கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் பெரியாருக்கு இந்த விருதினை வழங்கினார். citation எனப்படும் அறிமுக உரையில்—புது உலக தீர்க்கதரிசி, தென்கிழக்கு ஆசியாவின் சாக்ரடீஸ், சீர்திருத்த இயக்கத்தின் தந்தை, அறியாமை மூடநம்பிக்கை அர்த்தமற்றசம்பிரதாயம் இழிந்த வழக்குங்கள் ஆகியவற்றின் கடும் எதிரி—என்று பெரியார் அவர்களைப் பாராட்டி அந்த விருதுப்பட்டயத்தில் பொறித்திருந்தார்கள். பெரியார் நன்றியுரையில், ''மற்ற புகழ்ச்சிகளுக்கு நான் பாத்திரனல்ல, ஆனால் கடும் எதிரி என்பதை ஒப்புக்கொள்கிறேன். இன்னும் என் கருத்துகளை முழுவதும் விரிவாக எடுத்துச் சொல்ல எனக்குப் பத்திரிகை வசதியில்லை. இருப்பதை வைத்துக்கொண்டு இவ்வளவாவது செய்ய முடிகிறதே என்று மகிழ்ச்சியடைகிறேன். இந்த நாட்டில் இந்தக் கருத்துகளைச் சொல்கிறவன், இதுவரை கொலை செய்யப்படாமல் உயிர் வாழ்வதே ஓர் அதிசயமாகும்'' என்றார்.

சென்னை பாலர் (கலைவாணர்) அரங்கத்தில் ஒரு புதுமைத் திருமணம் நடைபெற்றது. நரிக்குறவர்

சமுதாய மக்களை உயர்த்துவதையே குறிக்கோளாய்க் கொண்டு உழைத்துவரும் ஆசிரியர் ஏ.கே. ரகுபதி (வெள்ளாள வகுப்பு), அந்தச் சமுதாயத்தைச் சார்ந்த பெண்மணி எம்.ஏ. ஞானசுந்தரியை 28-6-70 அன்று கலப்புத் திருமணம் புனைந்து புரட்சி நிகழ்த்தினார். அதில் கலந்து கொண்டு மணமக்களை வாழ்த்திய எம்.ஜி.ஆர். அவர்கள் "எந்தச் சீர்திருத்தவாதியும் பெறாத பெருவெற்றிகளைப் பெற்றவர் தந்தை பெரியார் அவர்கள். கலப்புத் திருமண விழாக்களில், முதலில் அவரது தியாகத்துக்குத் தலை வணங்குவதே நம் கடமை" என்றார்.

29-ந்தேதி சென்னை அசோகா ஓட்டலில், நலம் நாடுவோர் குழுவின் சார்பில், அய்ரோப்பா செல்லும் முதலமைச்சர் கலைஞரைப் பாராட்டி நடந்த விருந்தும், கூட்டமும்; பெரியாரின் வாழ்த்துகளோடு இணைந்திருந்தது குன்றக்குடி அடிகளார், வீரமணி, என்.டி. சுந்தரவடிவேலு, ஏ.என் சட்டநாதன், ஈ.பி. இராயப்பா ஆகியோர் கலந்து கொண்டனர். டாக்டர் எஸ்.ஜி. மணவாள ராமானுஜம் வரவேற்றார். "எனக்குச் சூட்டப்படுகின்ற புகழ்மாலைகள் அனைத்தையும் பெரியார் காலடிகளுக்கே சமர்ப்பிக்கிறேன். நாங்கள் செய்யாத காரியங்களுக்காக எங்களை மன்னிக்க வேண்டும்" என்று உணர்ச்சி பொங்கும் நன்றியுரை நவின்றார் முதலமைச்சர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள். சீரணி சார்பில் நேரு ஸ்டேடியத்தில் பேசிய டாக்டர் ஏ. லட்சுமணசாமி முதலியார், "வெளிநாடு செல்லு முன்பே அங்கெல்லாம் புகழ்பெற்ற முதல்வர் நமது கலைஞர்" என்று பாராட்டினார்.

அய்ரோப்பிய சுற்றுப்பயணத்துக்காக 1-7-70 அன்று புறப்பட்ட கலைஞர், "என்னை அடிமை கொண்ட அன்பு நெஞ்சங்களே! உங்கள் அடிதொழுது விடைபெறுகிறேன்" என்று கூறிச்சென்றார். கல்வியாளர் எஸ்.வி. சிட்டிபாபுவின் மகள் திருமண விசாரிப்புக்காகப் பெரியார், மணியம்மையாருடன் சென்று வந்தார். ஜூலை மாதம் கடும்பயணம் பெரியாருக்கு! கலைஞரை வழியனுப்பியபின் 2 சிவகங்கை,

3 பரமக்குடி, 4 தேவகோட்டை, 5 காலை பட்டுக்கோட்டை, மாலை காரைக்குடி, 6இராமநாதபுரம், 7 அருப்புக்கோட்டை 10திம்மராயசமுத்திரம், 11 திருச்சி, 12 சீரங்கம் திருவானைக் கோயில், 14 15 16 17 18 சென்னை, 19 கும்பகோணம், 20 லாலாபேட்டை 21 தாளக்குடி ஆலம்பாடி, 22 பச்சாம் பேட்டை, 26 சேலம், இப்படி! இதற்கிடையில் நாவலர் நெடுஞ்செழியனின் 51-வது பிறந்தநாளான 11-7-70 அன்று வீரமணி மூலமாகப் பெரியாரின் வாழ்த்துச்செய்தி "தி.மு.க. தலைவர்களில் தலைசிறந்தவர். தி.மு.க. கொள்கைகளை முழுக்க முழுக்க ஆதரித்து நடந்து கொள்பவர் நாவலர்" என்று எடுத்துக் கூறியது. 15-ந்தேதி காமராஜரின் 68-வது பிறந்தநாளன்று, வழக்கத்தைவிடாமல், ஒரு சிறிய புகைப் படமும், 4 வரியில் வாழ்த்துச் செய்தியும் "விடுதலை" முதல் பக்கத்தில் இடம் பெற்றன. இந்தியன் பேங்கில் பார்ப்பன ஆதிக்கம் மிகுந்து, நிர்வாகம் சீர்கெட்டதாக "விடுதலை" ஆதாரங்களை அள்ளி இறைத்ததால், அரசு,கண்காணிப்புத் தனி அதிகாரிகளை நியமித்தது.

ஈ. வெ. கி. சம்பத்தின் மகள் டாக்டர் நாகம்மாள்— நீதிபதி அழகர்சாமியின் மகன் டாக்டர் வெங்கடேஷ் இருவரின் திருமணம் பெரியார் திடலில் 15-7-70 காலை 10-30 மணிக்குப் பதிவு செய்யப்பட்டபோது, பெரியார், மணியம்மையார், காமராஜர், கக்கன், சி. சுப்ரமணியம் ஆகியோர் வந்திருந்தனர். மாலையில் 5-30 முதல் 7-30மணி வரை நடந்த வரவேற்பு விழாவில், பெரியார்தான் பிரதம வரவேற்பாளர். முதல்வர் கலைஞர் 16ந்தேதி லண்டன் மாநகரில், "அண்ணா வலியுறுத்திய மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டும் என்பதே தி. மு. க. கொள்கை" என்பதை விளக்கினார். தமிழில் மதராஸ் என்பதற்குப் பதில் சென்னை என்றே வழங்கப்படுவதற்கான அரசாணை 19-ந் தேதி வெளியிடப் பெற்றது.

15-ந்தேதி "கோயில்களை' இடிக்க நேரலாம்" என்ற தலையங்கம் பெரியாரின் கோபத்தைக் காண்பித்தது. "இருக்கின்ற கோயில்கள் போதாதா? இப்போதும் அரசாங்க

நிலங்களில் கோயில்கள் கட்டி வருகிறார்களே! இதை இந்த அரசு அனுமதிக்கலாமா? எங்களுக்கு ஆத்திரம் உண்டாக்கக் கூடிய காரியங்கள் தொடர்ந்து நடைபெறுகின்றன. இவை களைத் தடுத்து நிறுத்தவேண்டியது தி. மு. க. அரசின் கடமையாகும். இல்லையானால் இப்படிப்பட்ட கோயில் களை அழிக்கின்ற வேலையைத் துவக்குகின்ற சங்கடம் எங்களுக்கு ஏற்படலாம் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.''

16–7–70 அன்று கிண்டி பொறியியல் கல்லூரியில் தமிழ் மன்றத் துவக்க விழாவுக்குப் பெரியாரை ஏன் அழைத்தார் களோ? பெரியார் பேச்சின் துவக்கமே இப்படி: ''பொறி யியல் கல்லூரியில் தமிழ் மன்றம் எதற்காக? என்ன அவசியம் உங்களுக்கு? நீங்கள் மொழி ஆராய்ச்சி செய்யவா எஞ்சினீரிங் காலேஜுக்கு வந்தீர்கள்? தமிழில் முதலாவதாக ஒரு மரியாதைச் சொல் உண்டா? வா, தா, கொடு, இரு என்கிறோம். மேல் ஜாதியாக இருந்தால் வாருங்கள், தாருங்கள், கொடுங்கள், இருங்கள் என்கிறோம். இதிலேயே ஜாதிப் பாகுபாடு! இங்கிலீஷில் அரசனாயிருந்தாலும் Come, go, give; ஆண்டியாயிருந்தாலும் அதே வார்த்தைதானே! இதைச் சொல்லி, அறிவியல் மொழியல்ல தமிழ்; காட்டு மிராண்டி மொழி என்று நான் சொன்னால்; என்னோடு அதே விழாவில் கலந்துகொண்ட முதலமைச்சர் சொல் கிறார்; பழைமையான மொழி என்பதற்காகப் பெரியார் காட்டுமிராண்டி மொழி என்கிறார்; என்று சப்பைக் கட்டு கிறார். நானும், சரி, விழாவில் ஏன் தகராறு? என்று விட்டு விட்டேன். அதே முதல் அமைச்சர் இப்போது பாரீசில் போய் —ஏதோ உலகத் தமிழ் மாநாடாம் அதில் சொல்கிறார்; விண்வெளி வேகத்திற்கு ஏற்பத் தமிழ் வளரவேண்டும் என்று. அப்படியானால் வளரவில்லை என்பதை இவரே ஒத்துக் கொண்டதாகத்தானே அர்த்தம்? நேற்று எங்கள் சம்பத்து வீட்டுத் திருமணத்தில்கூட விளக்கு, பாத பூஜை எல்லாம் நடத்துகிறான். கேட்டால், பிள்ளை வீட்டாருக் காக என்கிறான். என்ன நியாயம்?''

சென்னைப் பல்கலைக்கழக நூற்றாண்டு விழா மண்டபத்தில் காஞ்சி மணிமொழியார் தலைமையில், 18-ந்தேதி, நாவலர் பொன் விழா மலரைப் பெரியார் வெளியிட்டு உரையாற்றினார். "நாவலர் நெடுஞ்செழியன் அண்ணாவுக்கு அடுத்த பேச்சாளர். புள்ளி விவரங்களை ஏராளமாக அள்ளி வீசுவார். ஒழுக்கத்தில் குற்றம் கூற முடியாதவர். இவர் நூறாண்டுக்கு மேலும் வாழ்க என்று வாழ்த்துகிறேன். தம்பியும், இவரும் படித்து முடித்தவுடன், வேலைக்குப் போக விரும்பாமல், என்னிடம் வந்து பொதுத் தொண்டு செய்ய விரும்புகிறோம் என்றார்கள். ஆனால் நாவலரிடத்தில் இப்போது எனக்குப் பிடிக்காதது, தமிழைப் பயிற்சி மொழி ஆக்குகின்ற திட்டந்தான். நீங்கள் என்னதான் செய்தாலும் இங்கிலீஷின் இடத்தைத் தமிழால் நிரப்ப முடியுமா? நல்ல வண்ணம் சிந்திக்க வேண்டும். மற்றபடி என்னைப் பொறுத்த வரையில் தி. மு. க. என்பது தி. க. வின் கிளைதான்!" என்று.

அன்புள்ள தந்தை பெரியார் அவர்கட்கு வணக்கம். சுற்றுப் பயணம் தமிழகத்திற்குப் பயன்படும் வகையில் அமைந்துள்ளது. தங்கள் நலமும் நண்பர்கள் நலமும் அறிய ஆவல், அன்புள்ள மு. கருணாநிதி—12-7-70ல் ஆம்ஸ்டர்டாமிலிருந்து எழுதப்பட்ட இந்தக் கடிதம், 21-ந்தேதிதான் சென்னையில் கிடைத்தது. அன்றே பிற்பகல் 2–30 மணிக்கு, அழகிய அய்ரோப்பிய உடையில், சென்னை வந்து இறங்கினார் முதல்வர் கலைஞர்.

"பழைய காங்கிரசும், இராஜாஜியின் சுதந்தராக் கட்சியும் இப்போது ஒன்று சேர்கிறார்கள். இந்திராவை எதிர்ப்பது என்ற போர்வையில், தி. மு. க. ஆட்சியை ஒழிக்கவே இவர்கள் மறைமுகமாகக் கூட்டு சேர்ந்துள்ளனர். தன் ஜாதி நலத்துக்காக ஆச்சாரியார் தி. மு. க. வை எதிர்க்கிறார், டில்லித் தலைமைக்குக் கட்டுப்பட்டுக் காமராஜர் தி. மு. க, வை எதிர்க்கிறார்" என்று பெரியார் அறிவித்த கருத்து "இந்தியன் எக்ஸ்பிரஸ்" ஏட்டிலும் இடம் பெற்றது.

2–8–70 அன்று தாழ்த்தப்பட்டோர் கலாச்சார மன்றம் பெரியாருக்குப் பொன்னாடை போர்த்திக் கவுரவித்தது. அமைச்சர் சத்தியவாணிமுத்து, மேயர் வை. பாலசுந்தரம், நீதிபதி கோகுலகிருஷ்ணன் ஆகியோர் கலந்து கொண்ட விழாவில்– "சென்னை உயர்நீதி மன்றத்தில் இதுவரை தாழ்த்தப்பட்டோர் யாரும் நீதிபதியாக நியமிக்கப்படவே இல்லை. கிரமப்படி இரண்டு பேர் இடம்பெற வேண்டும், உடனடியாக ஒருவரையாவது நியமிக்கவேண்டும்" என்று பெரியார் அங்கு விடுத்த கோரிக்கை, தமிழக அரசின் காதில் உடனே விழுந்தது எவ்வளவு பெரிய வியப்பு!

3ந் தேதி "வேண்டுகோள் எச்சரிக்கை" என்ற தலையங்கத்தில் பெரியார்—"தமிழ்நாட்டில் பஞ்சாயத்துத் தேர்தல் முடிவுகள் திருப்தியாயில்லை. முக்கியமான காரணம், கழகத்தின் நாடாளுமன்ற சட்டமன்ற உறுப்பினர்களின் ஒத்துழைப்போ, கட்டுப்பாடோ குறைவானதுதான், என்று நான் கவலைப் படுகிறேன். இது எப்படி இருக்கிறதென்றால், பெட்டி கெட்டி; பூட்டு பலமில்லை என்பது போல் எனக்குத் தோன்றுகிறது. தலைமையான ஆட்சி சரியாயிருந்தும், கீழ்மட்டத்தில் இப்படிப் போகவிடலாமா? உள்ளாட்சி போன்ற இலாக்கா மாற்றமோ, அல்லது மிகுந்த எச்சரிக்கையோ தேவை என்று நினைக்கிறேன். இதைப் பற்றி நான் கழகத் தலைவரிடமும் சொல்வேன்; முக்கியமாக இப்போ செய்தாகவேண்டும். இப்போதுள்ள பெரிய அதிகாரிகள் பரவாயில்லை. எப்போதுமே சிறிய அதிகாரிகள் தான், யார் ஆட்சிக்குவந்தாலும் எதிரிகளாகி விடுவார்கள்— என்று தமது மனக்குறைகளை வெளிப்படுத்தவும்; முதல்வர் கலைஞர் 4ந் தேதி பெரம்பூரில் பேசும்போது, "தந்தை பெரியார் அவர்களின் கருத்தைக் கழகத் தோழர்கள் ஏற்றுக் கொள்ளவேண்டும். நம்மிடையே இன்னும் கட்டுப்பாடு தேவை என்பது உண்மைதான். ஆயினும் பெரியாரவர்கள் கவலைப்படத் தேவையில்லை. ஊராட்சித் தேர்தல்களில் நமக்கு முன்னேற்றந்தானே ஒழியச் சரிவில்லை. 1,500 ஆக இருந்தது 3,500 ஆக உயர்ந்துள்ளது. காங்கிரஸ் 5,000 ஆக

இருந்தது 3,000 ஆக வீழ்ந்துள்ளது'' என்று புள்ளி விவர ஆதாரங்களுடன் விளக்கமளித்தார்.

ஆச்சார்ய கிருபளானி என்னதான் வயது முதிர்ந்த தலைவரானாலும், இனஇயல்பு போகவில்லை. தமிழ்நாடு அமைச்சரவையில் பிராமணர் யாருமே இல்லையே எனப் பகிரங்கமாகத் தனது கவலையை வெளிப்படுத்தினார். 31–7–70, 1–8–70 இரண்டு நாட்களும் ''கிருபளானியின் ஏக்கம்'' என்ற இரு தலையங்கக் கட்டுரைகளால் ''விடுதலை'' அவரைச் சாடியிருந்தது. டாக்டர் ரத்தினவேல் சுப்பிரமணியம் ஓய்வு பெற்றதால் அவரது இடத்துக்குத் தலைமை மருத்துவராக டாக்டர் கே. ராமச்சந்திரா 6–ந் தேதி முதல் நியமிக்கப் பெற்றார். தமிழ்நாட்டுக்குத் தனிக்கொடி வைத்துக்கொள்ள மத்திய அரசிடம் அனுமதி கோரியுள்ளதாக, முதல்வர் கலைஞர், 14ந் தேதி அறிவித்தார். 19ந் தேதி தித்திக்கும் செய்தி ஒன்றை வழங்கி நல்ல முன்னுதாரணம் ஒன்றும் படைத்தார் முதல்வர். N.G.G.O.க்களின் இரகசியக் குறிப்பு முறை (C.R.) ஒழிக்கப்படும் என்பதே அது! சென்னை ஆபட்சுபரியில் சி. என். ஏ. கவுதமன், துளசிபாய் திருமணம் பெரியார் தலைமையில் 21–ந் தேதி நடைபெற்றது. முதல்வர் கலைஞர் வரவேற்றார். அதே போல் கலைஞரே முன்னின்று, காஞ்சியில் நாவலர் தலைமையில் சி. என். ஏ. ராஜேந்திரன் (பாபு), சாந்தா திருமணத்தையும் நடத்திவைத்தார், 6-9-70 அன்று.

ஆகஸ்ட் 25ல் முன்னாள் முதல்வர் ஓமந்தூர் பி. ராமசாமி ரெட்டியார் மறைந்தார். தமிழ்நாடு சட்டமன்றம் அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றி 20 நிமிடம் அலுவலை ஒத்திப்போட்டது. டெல்லி சென்று திரும்பிய முதல்வர், மீண்டும் இந்தி எதிர்ப்புப் போர் தொடங்க நேரலாம், என்றார் 27ந் தேதி. ''சபாஷ் கலைஞர் கருணாநிதியாரே!'' என்று பெரியார் மகிழ்ச்சிப் பெருக்கால் துள்ளிக் குதித்தார். ''கண்டறியாதன கண்டேன். எந்த ஆட்சியிலும் நடத்த முடியாத அதிசயம், அற்புதம்; கலைஞரின் புரட்சிக் கொள்கைகள் என்னை மெய்சிலிர்க்க

வைக்கின்றன—" என்று பெரியார் தமது இயல்புக்கு மீறிப் புகழ்ந்து பாராட்டுகின்றார். "இத்தனைக்கும் கலைஞரை முள் பீப்பாய்க்குள் போட்டு உருட்டுவதுபோல், அவருக்கு ஓயாத தொல்லை கொடுக்கிறார்கள். மின்சார ஊழியர்கள், பால்வள நிறுவன ஊழியர்களின் தொல்லை ஒருபுறம். தனியார் பஸ் முதலாளிகளின் தொல்லை ஒருபுறம்; நிலப்பறி இயக்கம் என்று கம்யூனிஸ்டுகளின் மிரட்டல் ஒருபுறம். இவ்வளவு மலைபோல் வந்த துயரங்கள் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கிவிட்டன. அனைத்துச் சாதியாரும் கடவுள் அருகில் போய் மணியாட்டலாம் பூசை செய்யலாம் என்றார்; இப்போது N. G. O. இரகசியக் குறிப்பை ஒழித்தேன் என்கிறார்; இது சரித்திரங் காணாத அதிசயம். கலைஞர் ஆட்சி நீடூழி வாழ்க என வாழ்த்துகிறேன். ஏன்? காங்கிரஸ் ஆட்சியிலே, என் வீட்டிலே கூடக் காலிகள் அட்டகாசம் செய்ததால், எனக்கே போலீஸ் காவல் தேவைப்பட்டதே." உள்ளக் குமுறலும், பீரிட்டுவந்த உணர்ச்சிப் பிரவாகமும், 21–ந் தேதி "விடுதலை"யில் தலையங்கமாய்ப் பொங்கி வழிந்தன! 1–9–70 பொள்ளாச்சியில் கலைஞர் படத்திறப்பு விழாவில் பெரியார்—"இவருக்குப் படம் திறப்பது போதாது, கட்டாயம் உடனே சிலை அமைத்தாக வேண்டும்" என்றார்.

6–9–70 அன்று சென்னையில் முதன்முறையாகப் பகுத்தறிவாளர் கழகம் துவக்கப்பட்டது. சி. டி. நடராசன் தலைமையில், நாவலரும், பெரியாரும் கலந்து கொண்டனர். ஆகஸ்டு மாதம் 10 ந் தேதி முதல் 20 வரை ஓய்விலிருந்த பெரியார் செப்டம்பர் முழுவதும் கடும் பயணம் மேற்கொண்டார். 1-ந் தேதி முதல் 4-ந் தேதி வரை கோவை மாவட்டச் சுற்றுப் பயணம். பல கூட்டங்களில் பேசினார். கோயிலை நானே இடிப்பேன் என்று ஓர் நாள் கர்ச்சித்தார். "இந்தக் காமராஜர் புத்தி ஏன் இப்படிக் கீழாகப் போய்விட்டது? இவர் ஏன் ஆச்சாரியார் வீடு தேடிப் போகிறார்? தி.மு.க. ஆட்சியை ஒழிக்க, கவிழ்க்க அவருடனா கூட்டு சேருவது? பார்ப்பான் குடுமியை அறுத்தால் 3 மாதம், பூணூலை அறுத்தால் 6 மாத தண்டனை! செய்து பார்த்து

விடுவோமே! அடுத்த முறை இதே தி. மு. க. ஆட்சியில் நானே கடப்பாரை எடுத்துக் கோயிலை இடிக்கிறேனா இல்லையா, பாருங்கள்'' என்று முழங்கினார் தந்தை பெரியார்.

செப்டம்பர் மாதம் 12, 13 நாட்களில் சென்னை அசோக் நகரில் மாநில சுயாட்சி மாநாடு நடத்த தி. மு. க. ஆவன செய்து வந்தது. இதற்கிடையில் 9-9-70 அன்று கலைஞர் அமைச்சரவையில் அமைச்சர்களாயிருந்த கே. ஏ. மதியழகன், மா. முத்துசாமி, கா. வேழவேந்தன் ஆகிய மூவரும் பதவி நீக்கம் செய்யப்பட்டதாகச் செய்தி வந்தது. காரணம் ஏதும் தெரிவிக்கப்படவில்லை. பதவி இழப் பினும், அன்னார் மூவரும் கழகப் பணிகளில் தொடர்ந்து ஈடு பட்டனர். இவர்களது பதவி நீக்கம் பற்றி, முதல்வர், தந்தை பெரியாரிடம் முன்பே கலந்ததாகச் சில வட்டாரங்கள் கருத்தறிவித்தன! கலைஞர் தலைமையில் அஜாய் முக்கர்ஜி மாநில சுயாட்சி மாநாட்டைத் தொடங்கிவைத்தார். "தலைவரை உருவாக்கிய தலைவர் பெரியார் இப்போது பேசுவார்'' என்று, 13-ந் தேதி, கலைஞர் அறிவித்ததும், பெரியார் பேசினார்:- "சுதந்திரம் பெற்று 23 ஆண்டுகள் கழிந்த பின்பு ஓர் மாநாடு கூட்டி, எங்களுக்கு இன்னும் சுதந்தரம் கிடைக்கவில்லையே என்று கேட்கிறோம். இது வெட்கக் கேடான நிலைமை அல்லவா? இந்த மாநாட்டின் கோரிக்கைகள் விரைவில் வழங்கப்படாவிட்டால், இன்னும் மூன்றே ஆண்டுகளில் தமிழ் நாட்டுக்கு மாநில சுயாட்சி அல்ல; முழுச் சுதந்தரம், விடுதலை, கிடைத்தே தீரும்! அதை யாரும் அப்போது தடுக்க முடியாது'' என்றார் பெரியார். நாவலர் நெடுஞ்செழியன் மேல்நாடுகள் சுற்றுப்பயணத்துக் காக 17-9-70 அன்று மாலை புறப்பட்டார். பின்னர் இவர் 28-10-70 இரவு 10மணிக்குத்தான் சென்னை திரும்பினார்.

இந்த ஆண்டு பெரியார் 95-வது பிறந்த நாள் விழா மதுரைத் திருநகரில் பெருவிழாவாகக் கொண்டாடப் பட்டது, 17- 9- 70 அன்று. பெரியாரும் நேரில் கலந்து கொண்டார். இந்த ஆண்டும் "விடுதலை'' மலரில், பெரி

யாரின் அறிவுக்கு விருந்தான சிலகட்டுரைகள் வழக்கம்போல் இடம் பெற்றன. பிறந்த நாள் செய்தி, வேலைத் திட்டம் ஆகியவை தரப்பட்டன:— "என்னுடைய 91 வ ஆண்டு எனக்கு உற்சாகமாகவே கழிந்ததுடன், மனச்சலிப்பு அடையவேண்டிய அவசியமில்லாமல், வாழ்நாள் நீண்டால், மேலும் பல முன்னேற்றகரமான காரியம் செய்யலாம் போல் தோன்றுகிறது. அதாவது கடவுள், மதம், சாதி முதலிய விஷயத்தில் மக்கள் எந்த அளவு வேண்டுமானாலும் மாறுதலடையப், பக்குவமாய், மாறுதலுக்கு இணங்குபவர் களாய் இருக்கிறார்கள் என்றே காணுகிறேன். இந்த நிலை தான் எனது உற்சாகத்திற்கும், மேலும் இருந்து தொண்டு செய்யலாம் என்ற நம்பிக்கைக்கும், அவாவிற்கும் காரணம் ஆகும்.

நமது நாட்டு ஆட்சியானது பகுத்தறிவு ஆட்சி என்ப தோடு எந்தவித மாறுதலுக்கும் எவ்வளவு தூரம் துணிந்து செயலாற்றுவதற்கும் துணிவுள்ள ஆட்சியேயாகும். இந்த ஆட்சி ஏற்பட்ட பிறகு பொதுவாகவே மக்கள் வாழ்வில் சுபீட்சம் ஏற்பட்டிருக்கிறது. மக்கள் எண்ணத்தில் பெருத்த முன்னேற்றத்தையும் அடைந்து வருகிறார்கள்.

இந்த நிலையில் நான் எனது 92-வது ஆண்டுச் செய்தி யாக மக்களுக்குத் தெரிவித்துக்கொள்வது என்னவென்றால் இந்த ஆட்சியை இன்னும் ஒரு பத்தாண்டுக்குப் பாதுகாத்து வரவேண்டும் என்பதேயாகும். இந்த நிலையில் நமது நாட்டு ஆட்சிக்கு ஏதாவது மாறுதல் ஏற்படுமானால் காமராஜர் ஆட்சி ஒரு நாளும் அந்த இடத்திற்கு வராது. மற்றெது வருமென்றால், பார்ப்பனர் ஆட்சி—இராஜாஜி ஆதிக்க ஆட்சிதான்—வரும். அதுவோ, வேறு எதுவோ, வந்தாலும் பழிவாங்கும் ஆட்சியாய்த்தான் இருக்கும்! அல்லது, அசல் காலித்தன, பலாத்காரத் தாண்டவ ஆட்சி யாகத்தானிருக்கும். இதில் யாருக்கும் சந்தேகம்வேண்டாம். இதை எனது 91ஆண்டு அனுபவச் செய்தியாகக் கூறுகிறேன்!

நான் எனது 92-வது ஆண்டின் வேலைத் திட்டமாகப் பார்ப்பனப் பத்திரிகைகளை நம் மக்கள் பகிஷ்கரிக்கும்படிச்

செய்ய ஓர் இயக்கத்தைத் துவக்கி நடத்தலாமென்று ஆசைப்படுகிறேன். ஆத்திரப்படுகிறேன்.

இதற்காக மாநாடுகள் பொதுக்கூட்டங்கள் நடத்திப் பிரச்சாரம் செய்வது; கூடுமானவரை எல்லாகிராமங்களிலும் 'நம் எதிரிகளின் பத்திரிகை பகிஷ்கார சங்கம்' என்பதாக ஸ்தாபனம் ஏற்பாடுசெய்வதும்; இந்தக் காரியத்திற்காக ஒரு லட்சம் ரூபாய் நிதி திரட்டுவதும்; பல தொண்டர்களை ஏற்பாடு செய்து முழுநேர வேலையாக நாடெங்கும் பணி யாற்றச் செய்வதும் என்று திட்டமிட முடிவு செய்திருக் கிறேன்.

கண்டிப்பாய் இதற்கு எல்லாரும் நன்கொடை அளித் தாக வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். அதிகாரி களும், அமைச்சர்களும், உதவவேண்டும். நண்பர் வீரமணி யிடம், நன்கொடை அளிப்பவர்கள் இரகசியமாகத் தரலாம். நன்கொடையாளர்களின் பெயர்கள் கண்டிப்பாய்த் தெரி விக்கப்படமாட்டாது.

இந்தப் பணியானது, கடவுளை, மதத்தை ஒழிக்கும் பணியைவிடக், கோயில்களை இடிக்கும் பணியைவிட,முக்கிய மானதும் பயனளிக்கத் தக்கதுமாகும் என்பது என் உறுதி யான எண்ணமாகும். இந்தக் காரியத்தைச் செய்வதால் எனது வாழ்நாளில் ஒரு பயனுள்ள காரியத்தை நான் செய்த தாகக் கருதிக்கொண்டு முடிவடைவேன்.

மேலும், இப்போது நமக்கு வேண்டியதெல்லாம், இன்னும் பகுத்தறிவும் ஒற்றுமையும் இன உணர்ச்சியும் ஆகும். நமது அதிகாரிகளும், ஆட்சிச் சிப்பந்திகளும், பொதுமக்களும் தங்கள்சுயநலங்களில் சிறிதுவிட்டுக்கொடுத் தாவது, தமிழர்க்கான பொது நல்வாழ்வுக்காக ஆட்சியை ஆதரிக்கவேண்டும் என்பது எனது தாழ்மையான வேண்டு கோளாகும்.''

20-9-70 அன்று சேலத்தில், ஜி.டி. நாயுடு தலைமையில் எஸ். சந்திரசேகர் பெரியார் சிலையைத் திறந்து வைத்து, ''மூடநம்பிக்கை சாதி ஒழிப்புக்குப் பாடுபடும் 92 வயது இளைஞர் பெரியார்'' என்று பாராட்டினார். வருகை

றந்திருந்த பெரியார், "பார்ப்பனப் பத்திரிகைகள் வாங்கும் தமிழர்களைத் தடுத்து நிறுத்துங்கள். இந்த என் சிலை உங்களைப் பார்த்துப் பேசுவது அதுதான்!" என்றார். 25-ந் தேதி திண்டுக்கல்லில், குன்றக்குடி அடிகளார் தலைமையில் பெரியார் சிலையைத் திறந்த முதலமைச்சர் கலைஞர், "பெரியார் எப்போதுமே தேவை" என்றார். பெரியார் பேசும்போது, "பகுத்தறிக் கொள்கைகள் நாடெல்லாம் பரவிட, தெருவுக்குத் தெரு ஒரு பகுத்தறிவாளர் சிலை நிறுவப்பட வேண்டும்" என்றார்.

திருச்சியில் பெரியார் கல்வி நிறுவனங்களின் சார்பில் 26-ந்தேதி நடைபெற்ற நிறுவனர் நாள் விழாவில், பெரியார், வீரமணியுடன், அமைச்சர்கள் க. ராஜாராம், செ. மாதவன் ஆகியோர் பங்கேற்றனர். 27-ந்தேதி திருச்சி சிந்தனையாளர் கழகச்சார்பில் பெரியாருடன், அமைச்சர் என்.வி.நடராசன், ஏ.என். சட்டநாதன் ஆகியோர் பேசினர். சுப்ரீம் கோர்ட் தீர்ப்பிற்குக் கட்டுப்பட்டே, பிற்படுத்தப் பட்டோருக்குக் கல்வி-உத்தியோகங்களில் 49சதவீதம் ஒதுக்கிட, இப்போதே இடமிருப்பதாகத் தாம் கருதுவதாகப் பெரியார் தெரிவிக்கவும்; அமைச்சர் என். வி. என். அவ்வாறாயின் பெரியார் கருத்தை ஏற்பதாக அறிவித்தார். (பின்னர் கலைஞர் அவ்விதமே ஆணை பிறப்பித்தது வரலாறாகும்!) பன்மொழிப் புலவரும் தனித்தமிழ்ச் சான்றோரும் சிறந்த ஆராய்ச்சி நிபுணருமான ஞா. தேவநேயப் பாவாணர்,அன்று திருச்சியில் பெரியாரைப் பற்றி ஒரு வெண்பா இயற்றிப் பாடினர்:—

**பைந்தமிழ் நாட்டுப் பகுத்தறிவுத் தந்தையென**
**அய்ந்துகண்டத்தும் அரும்பெயரை—மைந்துடனே**
**தொண்ணூற் றிரண்டாம் தொடராண்டும் நாட்டிய நீ**
**எண்ணீட்டி இங்கே இரு!**

வானொலிநிலையங்களிலும் இனி மதராஸ்என்பதற்குப் பதிலாகச் சென்னை என்றே சொல்லப்படுமென முதல்வர் கலைஞர் 29-9-70 அன்று அறிவித்கார். கல்வியிலும் வேலை

வாய்ப்புகளிலும் தாழ்த்தப்பட்டோருக்கும், பிற்படுத்தப் பட்டோருக்கும் தொடர்ந்து சலுகைகள் வழங்கப்பட்டு வரு மெனவும் முதல்வர் 2-10-70 காந்தியடிகள் பிறந்த நாள் விழாவில் அறிவித்தார்'.

பிறக்கின்ற குழந்தைகளுக்கெல்லாம் இனி அண்ணாத் துரை என்றே பெயரிடுமாறு எழுமலை என்னும் ஊரின் பொதுக் கூட்டத்தில் பெரியார் கேட்டுக் கொண்டார். தியாகராய நகரில் திடீர்ப் பிள்ளையார் ஒன்று திடுமெனக் கிளம்பிய மோசடி பற்றிப் பெரியார் புதுவையில் பேசும் போது, சாணக்யன் கற்றுக் கொடுத்த ராஜதந்திர முறை தான் திடீர்ப்பிள்ளையார். அரச வருமானத்தைப் பெருக்க அவன் சொல்லிக் கொடுத்த தந்திரத்தைப், பார்ப்பனர் தமது வருமானம் .பெருக இப்போது கையாள்கின்றனர் என்றார். 12–10–70 அன்று, தியாகராயநகர் சிந்தனை யாளர் மன்றத்தின் சார்பில், கவிஞர் சுரதா தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் தியாகராயநகர் பேருந்து நிலையம் அருகில் ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. திடீர்ப் பிள்ளையார் பிரச்சினை குறித்துப் பெரியார் பேசுவதாகவும் அறிவிப்பு. திடீரென்று பெரியார் வேலூர் மருத்துவ மனை சென்று, tube பொருத்திக் கொண்டு, அப்படியே 13-ந் தேதி தர்மபுரி நிகழ்ச்சிக்காகப் புறப்பட்டு விட்டார்; அதனால் 12–ந் தேதி கூட்டம் ஒத்திவைக்கப் பட்டது என்று செய்தி தரப்பட்டது. ஒத்திவைக்கப்பட்ட இந்தக் கூட்டம், பின்னர் மூன்றாண்டு கழித்து நடந்தது, பெரிய வரலாற்றுச் சின்னமாகவே ஆகிவிட்டது! காரணம், அது நடைபெற்ற தேதி 19–12–1973 ஆகும். இப்போது திடுமென ஒத்தி வைக்கப் பட்டதற்குக் காரணம், கூட்டம் நடத்துவோர் பேசுவோர் இருவருக்குமே, அரசுத் தரப்பிலிருந்து ஏதோ நெருக்கடி தரப்பட்டதாக, மக்களிடையே கருத்துப் பரவியது!

திருவரங்கம், திருவானைக் கோயில் முதலிய ஊர்களில் 'பிராமணாள்' எழுத்துகளை அழிக்குமாறு எச்சரிக்கை தரப் பட்டது, 16-ந் தேதியே வெற்றி பெற்றுவிட்டது! 27-10-70

முதல், பார்ப்பனப் பத்திரிகைகளைப் பகிஷ்கரிப்போர் பட்டியல் தொடர்ச்சியாக "விடுதலை"யில் வெளிவந்தது. நாள் தோறும் வளர்ந்து வந்த இந்தப் பட்டியலின் புள்ளி விவரம் படிக்கச் சுவையானதாகும்:—23-11-70–ல் 1005 பேர், 23-12–70–ல் 1503 பேர், 17–1–71–ல் 2014 பேர், 22–2-71-ல் 2509 பேர், 20-3-71–ல் 3000 பேர், 4-4-71–ல் 3500 பேர், 15-4-71–ல் 4014 பேர், 25–4-71–ல் 4518 பேர், 7-5-71–ல் 5037 பேர், 24-5-71–ல் 5528;பேர், 15-6–71–ல் 6001 பேர், 12–7-71-ல் 6501 பேர், 9–8-71-ல் 7005 பேர், என்று நீண்டுகொண்டே போயிற்று!

28–10-1970 பிற்பகல் 2–15 மணிக்குப் பெரியார், மணியம்மையார், வீரமணி, என்.எஸ். சம்பந்தம் ஆகியோர் வேனிலும், தஞ்சை கா. மா. குப்புசாமி முதலியோர் இன்னொரு தனிக்காரிலும் பம்பாய் புறப்பட்டனர். சிவ சேனையின் பிறப்பிடத்திலேயே—சிங்கத்தின் குகையிலேயே நுழைந்து, அதன் பிடரி மயிரைப் பிடித்துக் குலுக்குவது போல்—அண்ணா பிறந்த நாள் விழாவில் கலந்து கொள்ளப், பெரியார் பெரும்படை அணி திரண்டது. பம்பாயில் வழியெங்கும் வரவேற்புகள். மேடையில் பெரியாருக்கு மாலைகள் சூட்டி முடிக்கவே 30 நிமிடங்கட்கு மேலாயிற்று. பி. என். ராஜ்போஜ் தலைமை ஏற்றுப், "பெரியார் நாட்டில் செய்த பெரிய புரட்சிகரமான பணிகளால், தமிழ் நாட்டில் இந்து மதத்தின் பிடி தளர்ந்து, அதன் காரணமாக இப்போது அங்கே அண்ணாவின் ஆட்சியும், அடுத்துக் கலைஞர் கருணாநிதியின் ஆட்சியும் நடைபெற முடிகிறது" என்றார். டாக்டர் பொராலே பெரியார் படத்தைத் திறந்து வைத்து, இந்தியாவிலேயே சிறப்பான ஆட்சி நடப்பது தமிழ் நாட்டில் மட்டுந்தான் எனப் புகழ்ந்தார். தொல் காப்பியன், நன்னிலம் அ. நடராசன் ஆகியோர் சிறப்புரை யாற்றினர்.

பெரியார் பேசும்போது, "இந்திய வரலாற்றில் வேறெந்த ஆட்சியாளரும் சாதிக்காத அருஞ்சாதனைகளைச் சாதித்துக் காட்டியவர் அறிஞர் அண்ணா. ஒரு பகுத்தறிவு

ஆட்சியை நிறுவியது சாதாரணம் அல்ல. அண்ணா பகுத் தறிவாளர் ஆகையினால், சாதி மதத்தில் நம்பிக்கை உள்ள வர்கள் தயவு செய்து அவர் சிலையைத் திறக்காதீர்கள். கடவுள் இல்லாமல் ஒரு மயிர்கூட அசையாது என்று நம்பிக்கையோடு சொல்கிறவன்; இவன்தானே சீப்பை எடுத்துத் தன் தலையைச் சீவிக்கொள்கிறான்? நம்மை ஒரு நாய் கடித்தால், நாயைக் கோபிப்பதில்லை; நாயை ஏவி விட்டவனைக் கோபிக்கிறோம். அதைப் போல் நம்மை ஒரு மனிதன் அடித்தால், ஏவிவிட்ட கடவுளைக் கோபிக் காமல், நம்மை அடித்த மனிதனையேதானே கோபிக் கிறோம். இது எப்படி நியாயமாகும்? என்னிடம் ஒரு கோடி ரூபாய் பணத்தைக் கொடுத்து, கொஞ்சம் அவகாசம் தந்தால், கழுதையைக்கூட மகாத்மா ஆக்கிக் காட்டுவேன்! நாம் சாதாரணமாக ஒரு பொருளைத் தொலைத்து விட்டால், தொலைத்த இடத்தில்தானே தேடுவோம். அதே போல் நாம் நமது அறிவைத் தொலைத்த இடமாகிய கடவுள் சாஸ்திர புராணங்களில்தானே தேடவேண்டும்?'' என்றெல்லாம் அற்புதமான கருத்து விளக்கம் செறிந்த உரை நிகழ்த்தினார் பெரியார்.

''விடுதலை'' மேனேஜராக இருந்த தாதம்பட்டி எம். ராஜுக்குப் பதிலாக, நாகரசம்பட்டி என். எஸ். சம்பந்தம் 1-11-70 முதல் மேலாளர் எனப் பெரியார் கையெழுத்துடனான ''விடுதலை'' செய்தி தெரி வித்தது. சென்னை குருநானக் கல்லூரிக் குழுவின் செயலாளர் பி. என். தவான் அண்ணாவைப் பற்றி ஒரு அருமையான தகவல் சொன்னார். அண்ணா முதலமைச்சராக இருந்த போது, குடிசைகள் தீப் பிடித்து எரிந்தன அல்லவா? அப்போது நிவாரண நிதியாக சீக்கியர்கள் சங்கத்தில் முதல்வர் அண்ணா விடம் 10,000 ரூபாய் நன்கொடை வழங்க முன் வந்த போது, பெற்றுக் கொண்ட அண்ணா, ''இந்த சீக்கிய சமுதாயம் போர் முனையில் நமக்காகக் காலமெல்லாம் இரத்தம் சிந்துகின்ற வீர சமுதாயம். இந்தத் தியாக வரலாறு படைக்கும் மக்கள் தந்த 10 ஆயிரம் ரூபாய்க் காக, நான் நன்றி சொன்னால், இவர்கள் என்னைப்

பற்றி என்ன நினைப்பார்கள்?'' என்று பெருந்தன்மை துலங்கப் பேசினாராம்.

பெரியார் பம்பாய் சுற்றுப்பயணம் முடித்துக்கொண்டு, 8-11-70 சிவகங்கை நிகழ்ச்சிக்குச் சென்றார். பண்ணுருட்டியில் பேசும் போது, ''தி.மு.க. ஆட்சி நடப்பதால்தான் நாம் இப்போது நாடெங்கும் பகுத்தறிவாளர் மன்றங்கள் திறக்க முடிகின்றது. வேறு ஆட்சியாக இருந்தால் இந்த நேரம் தடை போட்டிருப்பார்களே'' என்றார் பெரியார். ''இராஜாஜி (ஒப்பாரி) அழுகை'' என்ற மகுடத்தின் கீழ் ''சுதந்தரமும் ஜனநாயகமும் இந்திய மக்களுக்கு உயிர்நாடி. இந்திராகாந்தி உதவியுடன் கம்யூனிசம் இவை இரண்டுக்கும் பேராபத்தை விளைவிக்கிறது என்று ''சுயராஜ்யா'' இதழில் இராஜாஜி பிரலாபிக்கிறார். இவருடைய அழுகையை நாம் மதிப்பதா? கம்யூனிசம் வெற்றி பெறப் பாடுபடுவதே நம் கடமையாகும். அதற்காகவே நாம் இந்திராவை ஆதரித்திட வேண்டும் (பார்ப்பனர் தவிர்த்து). எவ்வளவு பெரிய திருட்டு அயோக்கியனும், மேல் ஜாதிக்காரனாக, எஜமானனாக, முதலாளியாக எப்போதும் இருக்கவேண்டும் என்பது தான். இராஜாஜியிசமா?'' எனப் பெரியார் வினவினார்.

நாடெங்கும் பகுத்தறிவாளர் கழகம் ஏற்படுத்துங்கள். கொள்கையை அனுசரிப்பதில் கண்டிப்பாயிருங்கள். நெற்றிக் குறி மதச்சின்னம் அணியாதீர்கள். உறுப்பினர் குறைவானாலும் ,பகுத்தறிவாளர்களையே உறுப்பினர்களாய்ச் சேருங்கள்—என்று பெரியாரின் பெட்டிச் செய்தி வேண்டுகோள் வெளியாயிற்று. 30-11-70-ல் ''தமிழர் நிலை'' என்ற பெரியாரின் தலையங்கம் ஆழ்ந்த கவலையோடும் பொறுப்போடும் தீட்டப்பட்டிருந்தது:—''தமிழ் நாட்டில் இன்று தன் காலில்நிற்கும் தமிழன்கட்சி ஒன்றுமில்லை.காமராஜரும் நிஜலிங்கப்பாவும் தங்கள் கட்சியோடு போய் இராஜாஜியிடம் சரணடைந்து விட்டார்கள். நடிகர் ஒருவரை மக்கள் கடவுளாகக் காண்கின்றார்களாம். தி. மு. கழகத்துக்குக் கஷ்டம் வருமானால் நிச்சயமாக அது வெளியிலிருந்து வராது. என்னதான் திராவிடர்கழகத்தை அவர்கள் மதிக்கா

விட்டாலும், கோபுரம் தாங்கும் பொம்மைபோல் என்னை நானே நினைத்துக்கொண்டு, குடும்பஸ்தனைப் போலப் பெரிய ,கவலையோடு, தி. மு. கழகத்தை ஆதரிக்கிறேன் என்பதில் மாற்றமில்லே! கலைஞர் கருணாநிதி அவர்களின் புத்திசாலித்தனத்தைப் பற்றி நிறையப் படித்து வருகிறோம். அடுத்தபடியாகவும் இவர் ஆட்சி வந்தால்தானே வேலை. இல்லாவிட்டால் தமிழ் நாடே சூத்திர நாடாகி விடுமே!'' என்றெழுதினார்.

எல்லா வகுப்பாருமே பயிற்சி பெற்று அர்ச்சகராகலாம் என்கிற மசோதாவை, அற நிலையத் துறை அமைச்சர் கே. வி. சுப்பய்யா 30-11-70-ல் சட்டமன்றத்தில் முன் மொழிந்தார்; 2-12-70 அன்று எதிர்ப்பின்றி அம்மசோதா நிறைவேறியது. பகுத்தறிவாளர் கழகம், சொசைட்டி ஆக்டின்படி 2-12-70 அன்று பதிவு செய்யப் பட்டது. "ஆச்சாரியார் தி. மு. க. ஆட்சியைக் கவிழ்க்கவோ ஒழிக்கவோ தமிழ்ப் பயிற்சிமொழித் திட்டத்தை ஆயுதமாக எடுத்தாளப் பார்க்கிறார். அதற்கு ஆட்சியாளரும் இடந் தரக் கூடாது. எனக்குத் தமிழ்மீது வெறுப்பில்லை. நான் வீட்டிலும் வெளியிலும் பேசுவது தமிழ். படிப்பது தமிழ். எழுதுவதும் தமிழ். தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்று, சில முறைகளைப் புகுத்தியவனும் நான்தான். தமிழ், வளர்ச்சியடையாத பழங்கால மொழியாக அப்படியே இருந்து வருகின்றது. விஞ்ஞான மொழியாகவும், பகுத்தறிவு மொழியாகவும் ஆகவில்லை. ஆகையால் தமிழில் பயிற்சி மொழியாக எடுத்துப் படிக்கும் பட்டதாரிகளுக்கு வேலை வாய்ப்பில் சலுகை தருவதாக அரசு கூறவேண்டிய தாகிறது. இது வரவேற்கத் தக்கதே. ஆனாலும் இதைச் சாக்காக வைத்து, ஆட்சியை எதிர்க்கிறார்கள். இனி காங்கிரஸ் ஆட்சி வந்துவிட்டால் என்ன செய்வது? என்னால் எழுந்து நிற்கக்கூட முடியவில்லை. எப்படிப் போராடுவது?'' என்று பல அய்ய வினாக்களை, "நமது கடமை''என்ற தலைப்பின் கீழ்த் தாமே எழுதிய''விடுதலை''

டிசம்பர் 1ந் தேதி தலையங்கவாயிலாகப் பெரியார் உருவாக்கினார். சேலத்தில் மூடநம்பிக்கை ஒழிப்பு மாநாடு 20-12-70ல் நடைபெறும் என 4ந் தேதி ஒரு செய்தி வந்தது; பிறகு, ஜனவரி 16,17ல் நடக்கும் என 8ந் தேதி திருத்தமான செய்தி; கடைசியாக 1971 ஜனவரி 23, 24 என ஒரு முடிவான செய்தி! சரித்திரத்தில் முதன் முறையாக ஒரு பார்ப்பனரல்லாதார் ரெவின்யூ போர்டு முதல் உறுப்பினராக 9-12-70 முதல் நியமிக்கப் பட்டார். அவர் பி. சபாநாயகம் அய். ஏ. எஸ்.

பெரியார் ஆத்தூரில் 3-12-70ல் பேசும்போது, "பகுத்தறிவாளர் என்றால் அவர்களுக்கு நாடு, மொழி, இன்ன ஆட்சி என்பதுபோன்ற பற்று பாசம் இருக்கக்கூடாது. ஆனால் நாட்டால், மொழியால், ஆட்சியால் மக்களுக்கு என்ன பயன் என்று பார்க்கவேண்டும்"—என்றார். கண்ணை மூடிக்கொண்டு நாம் யாவரும் முனிசிபல் தேர்தல்களில் தி.மு.க. கட்சியைத்தான் ஆதரிக்க வேண்டும் என்று எழுதினார் பெரியார். கவிஞர் கண்ணதாசன் ஒரு சுவையான செய்தி தெரிவித்ததாக "விடுதலை" 11-12-1970 ஏடு தெரிவித்தது. தமிழ் பயிற்சி மொழியாக இருக்கவேண்டும் என்று மூன்றாண்டுகளுக்கு முன்பே சொன்னவர் காமராசர். இப்போது ஏன் எதிர்க்கிறார் என்பது அரசியல். அப்போது தமிழ் பயிற்று மொழி என்பதை "தினமணி," "இந்தியன் எக்ஸ்பிரஸ்" ஏடுகள் எதிர்த்தபோது, "இந்தப் பாப்பாரப் பையங்க ஆங்கிலம் இருந்தால்தான் தங்க கையில் ஆதிக்கம் இருக்கும்னு பாக்கிறாங்க, படிச்சா தமிழ் படி; இல்லைனா இந்தி படின்னு சொல்லிப் போடுவோம்" என்றாராம் காமராசர்.

12ந் தேதி சிண்டிகேட் காங்கிரஸ், சுதந்தரா, ஜனசங்கம் ஆகிய கட்சிகளின் கடையடைப்பு ஹர்த்தால் வேண்டுகோள் தோல்வியுற்றது. "எதிர்க் கட்சிகளின் நிலை" என்ற தலையங்கத்தில் பெரியார் அபாய அறிவிப்புத் தெரிவித்தார்; —"காமராசரிடம் இப்போது ஆட்களே இல்லை. இருப்பதெல்லாம் கக்கன், சம்பத்து, சிவாஜிகணேசன் இவர்கள் தவிரச், சரியான கொலைபாதகக் கூட்டத்திடம் சிக்கிக்

கொண்டிருக்கிறார். பத்திரிகை வசதியும் கிடையாது. எல்லா யோசனைகளுக்கும் ஆச்சாரியார்தான். ஆகையால் பொது மக்களே! மாணாக்கர்களே! ஆசிரியர்களே! அரசுப் பணியாளர்களே! தி. மு. க. ஆட்சி கவிழ்ந்தால் நீங்கள் தொலைந்தீர்கள்! ஆகவே நன்றாகச் சிந்தியுங்கள்!'' என்று.

15-12-70 அன்று சுப்ரீம்கோர்ட், நாடாளுமன்றம் நிறை வேற்றிய ராஜமான்ய ரத்துச் சட்டம் செல்லாதென, அரசுக்கு எதிர்ப்பாகத் தீர்ப்பு வழங்கி விட்டதால், நாடாளு மன்றம் கலைக்கப்படுமோ என்ற கேள்வி பிறந்தது. வீர மணியின் சகலையான பேராசிரியர் சா. கு. சம்பந்தம் கால மானார்; ஒட்டேரி இடுகாட்டில் பெரியார் தலைமையில் 16-12-70ல் இரங்கல் கூட்டம் நிகழ்ந்தது. 18-12-70 அன்று சேலம் ரோசுசெட்டியார் என்றழைக்கப்படும் ரொ. சு. அருணாசலம் மறைவு, பெரியாருக்கு ஒரு கை போனது போலாயிற்று. 19ந் தேதி அவருடைய அடக்கத்துக்குப் பெரியார் சென்றிருந்தார். 30ந் தேதி நினைவு நாளில் அவர் படத்தையும் பெரியார் திறந்து வைத்தார். 16, 18 தேதி களில் பெரியார், காமராஜர்—ராஜாஜி உறவு பற்றித் தலை யங்கம் தீட்டியிருந்தார். ''ஆச்சாரியாரின் ஜாதிப்புத்தியே இப்போது காமராஜரின் புத்தியாகி விட்டது. காமராஜரும் நானும் ஒன்றுதான் என்று ஆச்சாரியார் சொல்கிறார். ராஜாஜியும் நானும் ஒன்றுதானெனக் காமராஜரும் சொல்லுகின்றார். இவர்கள் இருவரையுமே தலையெடுக்க வொட்டாமல் தோல்வியுறச் செய்து, தமிழ்மக்கள் ஏமாற வில்லை என்று காட்டவேண்டும். ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம் என்பது போல் செய்து விடாதீர்கள்'' என்பது பெரியார் கருத்து.

''மட்டக் குதிரையையும் எருமையையும் ஒரு வண்டியில் கட்டி ஓட்டினால் எப்படி இருக்கும்? அதுபோலக் காமராஜரும் இராஜாஜியும் சேர்ந்து இழுக்கும் ஜனநாயக வண்டியின் கதி என்னாகும்? வண்டி ஓடுமா? போய்ச் சேருமா?'' எனவும் 25ந் தேதி பெரியார் பெட்டிச் செய்தி தந்தார். அடுத்த நாளும் இன்னொன்று, ''கலைஞர்

டிசம்பர் 1ந் தேதி தலையங்கவாயிலாகப் பெரியார் உருவாக்கினார். சேலத்தில் மூடநம்பிக்கை ஒழிப்பு மாநாடு 20-12-70ல் நடைபெறும் என 4ந் தேதி ஒரு செய்தி வந்தது; பிறகு, ஜனவரி 16,17ல் நடக்கும் என 8ந் தேதி திருத்தமான செய்தி; கடைசியாக 1971 ஜனவரி 23, 24 என ஒரு முடிவான செய்தி! சரித்திரத்தில் முதன் முறையாக ஒரு பார்ப்பனரல்லாதார் ரெவின்யூ போர்டு முதல் உறுப்பினராக 9-12-70 முதல் நியமிக்கப் பட்டார். அவர் பி. சபாநாயகம் அய். ஏ. எஸ்.

பெரியார் ஆத்தூரில் 3-12-70ல் பேசும்போது, "பகுத்தறிவாளர் என்றால் அவர்களுக்கு நாடு, மொழி, இன்ன ஆட்சி என்பதுபோன்ற பற்று பாசம் இருக்கக்கூடாது. ஆனால் நாட்டால், மொழியால், ஆட்சியால் மக்களுக்கு என்ன பயன் என்று பார்க்கவேண்டும்"—என்றார். கண்ணை மூடிக்கொண்டு நாம் யாவரும் முனிசிபல் தேர்தல்களில் தி. மு. க. கட்சியைத்தான் ஆதரிக்க வேண்டும் என்று எழுதினார் பெரியார். கவிஞர் கண்ணதாசன் ஒரு சுவையான செய்தி தெரிவித்ததாக "விடுதலை" 11-12-1970 ஏடு தெரிவித்தது. தமிழ் பயிற்சி மொழியாக இருக்கவேண்டும் என்று மூன்றாண்டுகளுக்கு முன்பே சொன்னவர் காமராசர். இப்போது ஏன் எதிர்க்கிறார் என்பது அரசியல். அப்போது தமிழ் பயிற்று மொழி என்பதை "தினமணி," "இந்தியன் எக்ஸ்பிரஸ்" ஏடுகள் எதிர்த்தபோது, "இந்தப் பாப்பாரப் பையங்க ஆங்கிலம் இருந்தால்தான் தங்க கையில் ஆதிக்கம் இருக்கும்னு பாக்கிறாங்க, படிச்சா தமிழ் படி; இல்லைனா இந்தி படின்னு சொல்லிப் போடுவோம்" என்றாராம் காமராசர்.

12ந் தேதி சிண்டிகேட் காங்கிரஸ், சுதந்தரா, ஜனசங்கம் ஆகிய கட்சிகளின் கடையடைப்பு ஹர்த்தால் வேண்டுகோள் தோல்வியுற்றது. "எதிர்க் கட்சிகளின் நிலை" என்ற தலையங்கத்தில் பெரியார் அபாய அறிவிப்புத் தெரிவித்தார்;—"காமராசரிடம் இப்போது ஆட்களே இல்லை. இருப்பதெல்லாம் கக்கன், சம்பத்து, சிவாஜிகணேசன் இவர்கள் தவிரச், சரியான கொலைபாதகக் கூட்டத்திடம் சிக்கிக்

கொண்டிருக்கிறார். பத்திரிகை வசதியும் கிடையாது. எல்லா யோசனைகளுக்கும் ஆச்சாரியார்தான். ஆகையால் பொது மக்களே! மாணாக்கர்களே! ஆசிரியர்களே! அரசுப் பணியாளர்களே! தி. மு. க. ஆட்சி கவிழ்ந்தால் நீங்கள் தொலைந்தீர்கள்! ஆகவே நன்றாகச் சிந்தியுங்கள்!'' என்று.

15-12-70 அன்று சுப்ரீம்கோர்ட், நாடாளுமன்றம் நிறைவேற்றிய ராஜமான்ய ரத்துச் சட்டம் செல்லாதென, அரசுக்கு எதிர்ப்பாகத் தீர்ப்பு வழங்கி விட்டதால், நாடாளுமன்றம் கலைக்கப்படுமோ என்ற கேள்வி பிறந்தது. வீரமணியின் சகலையான பேராசிரியர் சா. கு. சம்பந்தம் காலமானார்; ஓட்டேரி இடுகாட்டில் பெரியார் தலைமையில் 16-12-70ல் இரங்கல் கூட்டம் நிகழ்ந்தது. 18-12-70 அன்று சேலம் ரோசுசெட்டியார் என்றழைக்கப்படும் ரொ. சு. அருணாசலம் மறைவு, பெரியாருக்கு ஒரு கை போனது போலாயிற்று. 19ந் தேதி அவருடைய அடக்கத்துக்குப் பெரியார் சென்றிருந்தார். 30ந் தேதி நினைவு நாளில் அவர் படத்தையும் பெரியார் திறந்து வைத்தார். 16, 18 தேதிகளில் பெரியார், காமராஜர்—ராஜாஜி உறவு பற்றித் தலையங்கம் தீட்டியிருந்தார். "ஆச்சாரியாரின் ஜாதிப்புத்தியே இப்போது காமராஜரின் புத்தியாகி விட்டது. காமராஜரும் நானும் ஒன்றுதான் என்று ஆச்சாரியார் சொல்கிறார். ராஜாஜியும் நானும் ஒன்றுதானெனக் காமராஜரும் சொல்லுகின்றார். இவர்கள் இருவரையுமே தலையெடுக்கவொட்டாமல் தோல்வியுறச் செய்து, தமிழ்மக்கள் ஏமாறவில்லை என்று காட்டவேண்டும். ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம் என்பது போல் செய்து விடாதீர்கள்'' என்பது பெரியார் கருத்து.

"மட்டக் குதிரையையும் எருமையையும் ஒரு வண்டியில் கட்டி ஓட்டினால் எப்படி இருக்கும்? அதுபோலக் காமராஜரும் இராஜாஜியும் சேர்ந்து இழுக்கும் ஜனநாயக வண்டியின் கதி என்னாகும்? வண்டி ஓடுமா? போய்ச் சேருமா?'' எனவும் 25ந் தேதி பெரியார் பெட்டிச் செய்தி தந்தார். அடுத்த நாளும் இன்னொன்று, "கலைஞர்

ஆட்சிக்கு அனுகூலமான இந்திரா ஆட்சியும், இந்திராவைக் கட்டுப்படுத்தக் கூடிய வசதியும் வாய்ப்புங் கொண்ட கலைஞர் ஆட்சியும் நமக்கு நல்ல ஆட்சியா? அல்லது இரண்டுக்கும் கேடான, எதிரான, இராஜாஜி—காமராஜர் கூட்டணி ஆட்சியா?" என்பதாக!

27–12–1970 நள்ளிரவுச் செய்தி, நாடாளுமன்றம் கலைக்கப்பட்டது!

பழனியில் அர்ச்சகர் பயிற்சிப்பள்ளி துவங்கப்படுமென அமைச்சர் கே. வி. சுப்பய்யா அறிவித்தார். தமிழ் இசைச் சங்கம் நடத்தும் இசைவிழா நிகழ்ச்சிகளில் 100க்கு 3 பேரா யுள்ள பார்ப்பனர்கள்தான் 100-க்கு 99 இடத்தை ஆக்கிர மித்திருப்பதாக "விடுதலை" சுட்டிக் காட்டியிருந்தது. தி.மு.க. ஆட்சியைப் பாதுகாக்க வேண்டும்—ஏன்? என்று பெரியார் எழுதிய புத்தகம் ஒன்று; தி.மு.க. ஆட்சியின் சாதனைகள்-என்று வீரமணி எழுதிய புத்தகம் ஒன்று—ஆக இரண்டும் தக்க சமயத்தில் பிரசுரமாகி விற்பனையாகி வந்தன. 29-12-70-ல் பெரியாருக்குக் காய்ச்சல், தலைவலி, மயக்கம், தலைகீழாய்க் கீழே தள்ளுவது போல் இருக்கிறது. சென்னை செல்வார்– என்று செய்தி. 3-1-71 அன்று சென்னை பொது மருத்துவ மனையில் பெரியார் அனுமதிக்கப்பட்டார். 4–1-71 அன்று தமிழ் நாடு சட்டசபையும் கலைக்கப்பட்டது. அன்று இரவு பெரியார் மருத்துவ மனையிலிருந்தவாறே, மயிலாப்பூர் சென்று, கலைஞர் எழுதிய "நானே அறிவாளி" என்ற தேர்தல் பிரச்சார நாடகத்தை, ஆர். ஆர். சபாவில் பார்த்தார். 5–ந்தேதி பகல் கலைஞர், நாவலர், ப. உ. சண் முகம் ஆகியோர், பெரியாரை மருத்துவ மனையில் கண்டு நலம் விசாரித்தனர். பெரியார் 6-ந்தேதி இல்லந் திரும்பினார். 5–1-71 முதல், நீண்டகால இயக்கப் பாடகர் நாகூர் இசை முரசு இ. எம். அனீஃபா, மேலவை உறுப்பினரானார்.

நாங்கள் நான்காண்டு காலம் கொள்கைப்படி ஆண் டோம். நாங்கள் செய்த எத்தனையோ காரியங்களில் எங் களுக்கு அனுபவம்போதாததால் எங்களுடைய judgement-ல் ஏதாவது தவறு இருந்தாலும் இருக்கலாம். இனி அப்படியும்

நேராமல் பார்த்துக் கொள்ளுவோம். நமக்கு இப்போது முக்கியமானது இந்த இராஜாஜி—காங்கிரஸ்கூட்டு ஒழிந்தால் தான், மான வாழ்வு ஏற்படும். தவறியும் அவர்கள் வெற்றி பெற இடந்தரக்கூடாது. தாம் ஆட்சியில் அமர்த்திய இந்திராகாந்தி அம்மையாரையே இப்போது காமராஜர் எதிர்ப்பது ஏன்? சமுதாயப் பொருளாதாரத்துறையில் அந்த அம்மையார் ஏற்படுத்திய மாற்றந்தானே? அதேபோல இங்கேயும் தாம் ஏற்படுத்திய தி.மு.க. ஆட்சியை ஆச்சாரியாரே எதிர்ப்பது ஏன்? சமுதாய பேதங்களைப் பாதுகாப்பதற்குத் தி.மு.க. இணங்காததுதானே காரணம்! இதைப் பொதுமக்கள் நல்லவண்ணம் சிந்திக்க வேண்டும்—என்பதாகப் பெரியார் எழுதிவந்தார்.

உத்தரப்பிரதேச மாநிலத்தில், முன்பு பெரியாரின் ராமாயணப் பாத்திரங்கள் நூலைப் பறிமுதல் செய்தது செல்லாது என அந்த மாநில உயர்நீதி மன்றம் தீர்ப்பளித்த செய்தி 20-1-71 அன்று பிரசுரமாயிற்று. ஜனவரி 23, 24 தேதிகளில் தமிழ்நாடு இருபெரும் மாநாடுகளை ஒருங்கே கண்ணுற்றது. சென்னை அசோக நகரில் தி.மு.க. சிறப்பு மாநாடு, ஊர்வலம். வேட்பாளர் பட்டியல் இங்கு வெளியிடப்பட்டது. பிரச்சினைகள், வழக்குகள், வாதப் பிரதிவாதங்களுக்கு நிறைய இடமளித்த சேலம் மூட நம்பிக்கை ஒழிப்பு மாநாடும் இந்தத் தேதிகளில் நடந்தது. சேலம் ரத்தின சாமி பந்தலில் ரோசு அரங்கில் மாநாடு. 1½ மைல் நீளமுள்ள பிரம்மாண்டமான ஊர்வலம், கருங்கடல் அலைகள் பெருங்குரல் எடுத்து அருங்காட்சி சமைத்திட ஒருங்கே திரண்டதோ என 50,000 கருஞ்சட்டை வீரர்களின் அணிவகுப்பு. ஊர்வலத்தில் தீமிதி, அலகு குத்திக்கொள்ளுதல், கரகம், காவடி ஆட்டம் முதலியவை. 10 அடி உயரமுள்ள ராமன் எரிக்கப்பட்ட ராவணலீலாக் காட்சியை 2 லட்சம் மக்கள் கண்டு களித்தனர். ஊர்வலத்தில் மத நம்பிக்கையைப் புண்படுத்தும் காட்சிகளை எடுத்துச் செல்ல வேண்டாமெனக் காவல்துறை அதிகாரிகள் கூறியபோது, எழுத்து மூலமாக அப்படித் தடைபோடும் உத்தரவு தரச்

சொன்னார் பெரியார். தரப்படவில்லை. ஊர்வலம் சென்று கொண்டேயிருந்த போது, எட்ட இருந்து யாரோ ஒரு கயவன், செருப்பு ஒன்றை வீசி எறிந்தான். கழகத் தோழர் ஒருவர், கையில் கிடைத்த அதைவீணாக்காமல், ஊர்வலத்தில் எடுத்துச் செல்லப்பட்ட இராமன்படத்தின்மேல் செருப்பால் அடித்துக் கொண்டே வந்தார். இந்தப்படிச் செய்ய எந்த விதமான திட்டமும் கிடையாது; ஆனால் இதைத்தான் பின்னர் பார்ப்பனப் பத்திரிகைகள் பெரிது படுத்தின!

மாநாட்டின் வரவேற்புக் குழுத் தலைவர் டி. வீ. சொக்கப்பா எம்.ஏ.,எல்.டி.; தலைவர் பெரியார்; திறப்பாளர் ஜி.டி. நாயுடு. மூட நம்பிக்கைக்குப் பெரியார் (definition) இலக்கணம் கூறினார். Observation and experiment இரண்டுக்குமே உட்படாதது மூடநம்பிக்கை என்றார். மத உணர்ச்சியைப் புண்படுத்துவதாகக் கூறும் இ.பி.கோ. சட்டத்தை எடுத்துவிட வேண்டும்; கடவுளுக்கும் மதத்துக்கும் அரசு பாதுகாப்புத் தரக்கூடாது; சுப்ரீம் கோர்ட்டை எடுத்துவிட வேண்டும்; பார்ப்பனப் பத்திரிகைகளைப் பகிஷ்காரம் செய்து புறக்கணிக்க வேண்டும்; ஒருவன் மனைவி மற்றவனை விரும்புவது என்பதைக் குற்றமாக்கக்கூடாது—என முற்போக்கான தீர்மானங்கள் மாநாட்டில் நிறைவேறின. இதில் கடைசித் தீர்மானத்தை, மனம் போன போக்கில், அயோக்கியத்தனமாகப் பொய்யாகத் திரித்துக் கூறிவிட்டார்கள் என்றார் பெரியார். இதை அவ்வாறு தவறாக வெளியிட்ட "இந்து", "இந்தியன் எக்ஸ்பிரஸ்", "தினமணி" பத்திரிகைகள் மீது வழக்குத் தொடரப்பட்டது. 1-2-71-ல் அவர்களுக்கு நோட்டீஸ் வழங்கப்பட்டது. 9-ந்தேதி அய்ந்தாவது மாகாண மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் வழக்குத் தொடங்கியது. இடையில், வழக்கு நடைபெறும் போதே, "இந்து"ப் பத்திரிகை மீண்டும் பழைய முறையிலேயே ஒரு தடவை அந்தத் தீர்மானத்தைப் பிரசுரித்ததற்காகச், சென்னை உயர்நீதி மன்றத்தில், அவமதிப்பு வழக்குத் தொடுத்தபோது, 16-3-71 அன்று, "இந்து" நிப்ந்தனையற்ற மன்னிப்புக் கோரியது.

30–1–71–ல் திருவாளர்கள் வி. ராமசாமியும், என். எஸ். ராமசாமியும் அய்க்கோர்ட் ஜட்ஜானார்கள். 18–ல் 15 பேர் தமிழராகிவிட்டார்கள்; ஏன் பார்ப்பனருக்கு ஆத்திரம் வராது? என்று கேட்டார் பெரியார். 31–1–71–ல் சென்னையில் கா. து. நடராசன் தலைமையில் நடந்த பகுத்தறிவாளர் கூட்டத்தில் கா. திரவியம் அய். ஏ. எஸ்., கி. வீரமணி, பெரியார், சி. பி. சிற்றரசு ஆகியோர் உரை நிகழ்த்தினர். மயிலையில் ஒரு திருமண விழாவில் வீரமணி பேசிக் கொண்டிருக்கும்போது, விவேகானந்தா கல்லூரி மாணவர்கள் வெளியில் கூச்சல் போட்டனராம். தேர்தல் முடிவு தோல்வி என்பதாகத் தெரிந்து போனதால், கலவரம் காலித்தனத்தில் பார்ப்பனர் இறங்குவார்கள்; ஜாக்கிரதை என்று பெரியார் 1-2-71ல் எழுதினார். 2–ந் தேதி மயிலையில் பேசும்போது, தாங்கள் ஜெயிக்கும் நம்பிக்கையிருந்தால் காமராசர், கக்கன், சம்பத்து ஆகியோர் பார்லிமெண்டுக்கு நிற்பார்களா? எனக் கேட்டார் பெரியார்.

கற்பு என்ற சொல்லைப் பற்றிப் பெரியார் நிரம்ப ஆராய்ச்சி செய்திருக்கிறார். ‘இது ஆண் பெண் இருபாலருக்கும் பொதுவானது. ஆனால், ஆரியக் கலாசாரத்தின்படி கற்பு என்பதற்குப் பதிவிரதத்தன்மை என்று பொருள் கொண்டு, அதைப் பெண்களுக்கு மட்டும் உரித்தாக்கி விட்டார்கள். ஆங்கிலத்தில் Chastity அல்லது Virginity என்பதுகூட இருவர்க்கும் பொதுவானதுதான். ஒரு முறை ஆண் பெண் சம்பந்தம் ஏற்பட்டுவிட்டால் இருவருடைய கற்பும் கெட்டதாகத் தானே பொருளாக முடியும்? குழந்தை சுமப்பது ஒன்று தவிர பெண்களுக்கு மட்டுமே சொந்தமென்று சொல்ல என்ன இருக்கிறது? திருவள்ளுவர் கூடப் பெண்களுக்கு மட்டுமே கற்பை வலியுறுத்துகிறார். அதனால்தான் குறள்கூடப் பிற்போக்கான நூல்’—என்று பெரியார் கருதினார். பெண்ணடிமை தீர்ந்து ஆண் பெண் சமத்துவம் ஏற்படக் கற்பு என்ற சொல்லை இருவருக்கும் பொதுவாக ஒழுக்கம் என்ற பொருளில் வைத்துக் கொள்ளலாம் என்றார். பெண் ஏன் அடிமையானாள் என்ற

நூலில் மிக நுட்பமாகவும் திட்பமாகவும் விரிவாகவும் விளக்கமாகவும் பெரியார் பல விஷயங்களையும் அலசி யுள்ளார்.

மார்ச் மாதம் 1, 4, 7 தேதிகளில் மூன்று கட்டமாக வாக்குப் பதிவு நடைபெறத் திட்டம். அதனால் பிப்ரவரி முழுதும் தேர்தல் பிரச்சாரம் மும்முரமாயிருந்தது. தமிழ் நாட்டில் இந்திராகாங்கிரசின் ஒத்துழைப்போடு தி. மு. க. களத்தில் நின்றது. வலது கம்யூனிஸ்டுகள் ஆதரவும் உண்டு. மற்ற அணிகள் ஒன்றாக இணைந்தன. நடிகர் சோ என்னும் பார்ப்பனரும், சிவாஜிகணேசனும் காமராஜர் ராஜாஜி அணியில் பாடுபட்டனர். பெரியார் பிப்ரவரி மாதம், நிறையச் சுற்றுப் பயணம் செல்லாமல், எழுதுவதில் அதிக அக்கறை மேற்கொண்டார். காமராஜர் கண்ணாடி வீட்டிலிருந்து கொண்டு கல்லெறிய வேண்டாம். திடீர்ப் பிள்ளையார் போச்சு, பாடமொழிப் பிரச்சினை போச்சு, சேலம் வந்தது டும்டும். சாதனை புரிந்து வரலாறு படைத்த தி. மு. க. வை ஆதரிப்பீர். மாட்டுச் சாணியை மிதிக்கத் தப்பி மனிதச் சாணியை மிதிப்பதா? இந்திரா மீது உள்ள கோபத்தில் இராஜாஜியை ஆதரிப்பதா? இதுவும் போதா தென்று இன்னொரு பார்ப்பனக் கட்சியான ஜனசங்கத் திடம் காமராஜர் சரணாகதி அடைவதா? தமிழராட்சி ஏற்படத் தமிழர்களான தி.மு. க.வுக்கே வோட்டளியுங்கள். ஆதாரமற்ற செய்தி பிரசுரித்த Hindu, Indian Express, தினமணி மீது கிரிமினல் வழக்குத் தொடரப்பட்டது. வோட்டர்களே! ஆதாரமற்ற செய்திகளை நம்பாமல் தி. மு. க. வுக்கே ஓட்டளியுங்கள்—என்கிற வாசகங்கள் ''விடுதலை''யை நிறைத்தன.

12–2–71-ல் "பொறுமையாய் இருங்கள் தோழர்களே!" என்ற தலையங்கத்தில் பெரியார் எழுதினார்:— "சேலம் மாநாட்டைச் சாக்காக வைத்து, தி. மு. க.வை வரவிடாமல் செய்ய முயலுகிறார்கள். மக்கள் இன்று இருக்கின்ற மனப் பக்குவமான நிலையில், அவர்களை ஒன்றும் அசைக்க முடியாது என்கிற தைரியம் எனக்கு உண்டு. ரஷ்யாவில்

பாதிரியார்களைக் கொன்று, மாதா கோயிலை வெடி வைத்துத் தகர்த்து, சிலுவைகளைப் பிளந்து நெருப்பி லிட்டுக் கொளுத்தி, வேதங்களையும் தீயிலிட்டு எரித்தார் களே. அங்கு என்ன கெடுதல் வந்து விட்டது? அதனால் பொது மக்களுக்கு என்ன நட்டம் ஏற்பட்டுவிட்டது? ஒன்று மில்லையே! இங்கு அவ்வளவா நடந்துவிட்டது? இப்போது, நம்மால் ஏதாவது கலவரம் மூண்டுவிட்டால், பார்ப்பா னுக்கு அது லாபமாகிவிடும். ஆகையால் என்னதான் ஆத்திரமூட்டினாலும் பொறுமையாக இருங்கள்!'' என்று பெரியார் தமது தோழர்களைக் கேட்டுக் கொண்டார். ஆனால் எதிரிகள் சும்மாயில்லையே! பெரியார் கொடும் பாவி கொளுத்தினார்கள். சிலையில், உருவப் படத்தில், செருப்படி நடத்தினார்கள். அப்போதும் பெரியார் என்ன எழுதியிருந்தார்—''என் உருவத்தை மட்டுமல்ல; என்னையே செருப்பால் அடித்தாலும், லட்சியமோ கவலையோ கொள்ளாதீர்கள்! இது நமக்குப் புதிதல்ல. இதெல்லாம் கிடைத்தால்தான் நமது கொள்கையில், லட்சியப் பாதை யில் நாம் வேகமாய்ச் செல்வதாக அர்த்தம். இதற்குப் பதில் காரியமாக, எதிரிகள் வெட்கப்படும்படி, தி. மு. க. வெற்றி பெறச் செய்யுங்கள், போதும்'' என்றுதான்!

மணியம்மையாருக்குக் கொஞ்சம் ஆத்திரம் மூண்டு விட்டது. ''தாய்மார்களே, சிந்தியுங்கள்! பார்ப்பனர் முயற்சி யால் பெரியார் படத்தையும், சிலையையும் செருப்பால் அடிக்கிறார்களாம்! பெரியார் இல்லாவிட்டால் நமக்கு ஏது இந்த உயர்நிலை என்று எண்ணிப் பார்த்துப் பெரியாருக்கு நன்றி பாராட்டச் சொல்லவில்லை உங்களை. தேர்தலில் உங்கள் கடமை என்ன? சிந்தித்துப் பாருங்கள்! நமக்கு அனுகூலமான ஆட்சி ஏற்பட வேண்டாமா, என அன்புடன் கேட்கிறேன்!'' என்பதாக ஒரு பெட்டிச் செய்தி 18-ந் தேதி அம்மா அவர்களின் பெயரில். ''ஒரு ஆரியனாவது தவறியும் திராவிடன் பக்கம் இருக்கிறானா? திராவிட மாணவர்களே! நீங்கள் இதிலாவது ஆரிய மாணவர்களைப் பார்த்து நடந்து கொள்ளுங்கள்! இனி ஆரியர் திராவிடர் வெளிப்படையாக

இரண்டாய்ப் பிரிய வேண்டியதுதான்'' என்று 19-ந் தேதி பெரியார் எழுதியிருந்தார். 17-ந் தேதியன்று திருச்சியில், மாணவர்கள் திரளாக வந்து பெரியாரைச் சந்தித்துத், தமது நல்ல எண்ணத்தைத் தெரிவித்து வாழ்த்துப் பெற்றுச் சென்றனர்.

மாத இறுதியில் பெரியார் பயணத்தை முடுக்கி விட்டார்; 20 திருச்சி, 21 தஞ்சை, 22 நன்னிலம், 23 சேலம், 24 திருப்பத்தூர் (வ. ஆ.), 25 சீரங்கம், 26 சிதம்பரம் என்பதாக. 20-2-71 காலை 8 மணியளவில் பெரியார்பால் பேரன்பு பூண்ட நண்பர் சே. மு. அ. பாலசுப்ரமணியம் திருச்சியில் காலமான உடன், பெரியாரும் மணியம்மையாரும் சென்று துக்கம் விசாரித்தனர்.

25-2-71 அன்று இரவு 11-45 மணிக்கு ஈரோட்டில் பெரியாரின் இலட்சியத் தங்கையான எஸ்.ஆர். கண்ணம்மாள் மறைந்தார். பெரியார் சீரங்கத்திலிருந்து ஈரோட்டுக்கு விரைந்தார். முதல்வர் கலைஞர் அனுதாபத் தந்தி அனுப்பியிருந்தார்.

சென்னைக் கடற்கரைப் பெருமணற் பரப்பில் 21-ந் தேதி சோ என்ற ஜனசங்கவாதியும், 25-ந் தேதி இராஜாஜி, காமராஜர் ஆகியோரும் பேசிய இருபெரும் பொதுக்கூட்டங்களுக்கு வந்திருந்த கார்கள், சென்னையில் இதுவரை எப்போதும் வந்ததில்லை. காமராஜர் நெற்றியில் இராஜாஜி வெற்றித் திலகமிட்டு ஆசீர்வதித்தார். இந்த இரு கூட்டங்களையும் கண்டு, ஈசிச்சேர் பாலிடீஷியன்ஸ், நிச்சயம் இத்தோடு தி.மு.க. வீழ்ந்தது; இந்திராவும் ஒழிந்தார் என மதிப்பிட்டனர்.

முதல் கட்ட வாக்குப் பதிவு முடிந்த பின் திருச்சியில் 3-3-71 அன்று நிருபர்களிடையே பேசிய முதல்வர் கலைஞர் "முன்பு பார்ப்பனர்—பார்ப்பனரல்லாதார் பிரச்சினையைப் பெரியார் துவக்கினார். இந்தத் தேர்தலில் இராஜாஜி துவங்கியிருக்கிறார்'' என்றார். 8-3-71 அன்று காமராஜர் இராஜாஜி வீட்டுக்குச் சென்றிருந்தார். முடிவுகள் வரத் தொடங்கும் நேரமாகையால், தமிழ் நாட்டு மந்திரி சபையை

எப்படி அமைப்பது என்பது குறித்து இருவரும் பேசியதாக ஒரு சாரார் கூறினர். தேர்தல் பயம் மிகுந்ததால் போனதாகவும் இன்னொரு தரப்பில் கூறப்பட்டது. எதற்குப் போனார்களோ? 11-3-71 அன்று "விடுதலை'யில் முதல் பக்கச் செய்தி—இது தேர்தல் அல்ல இனப்போர் என்று சொன்ன தந்தை பெரியார் வெற்றி—இதுவரை வெளி வந்த முடிவுகளில் சட்ட மன்றத்திற்கு தி. மு. க. 111, சிண்டி. காங்கிரஸ் 6, சுதந்தரா 5, பார்வர்ட் பிளாக் 3, வலது கம்யூ. 1, லீக் 3, பி. சோ, 1, விவசாயி 1, சுயே. 2.

"உங்களைப் பாராட்ட எனக்குத் தமிழில் வார்த்தை இல்லை. எனக்குப் பழி நீங்கியது. உங்களுக்கு உலகப் புகழ் கிடைத்தது.

ஈ. வெ. ராமசாமி."

என்று 11–ந் தேதி பெரியார், கலைஞருக்குத் தந்தி அனுப்பினார். 12–ந் தேதி காலை எல்லா அமைச்சர்களும் வந்து தந்தை பெரியாருக்கு மாலை சூட்டினார்கள். பெரியாரோடு சேர்ந்து அனைவரும் அண்ணா சதுக்கம் சென்று மலர் வளையம் வைத்தனர். அண்ணா சிலை அருகே இராஜாஜி காமராஜர் படங்கள் நெற்றியில் பட்டை நாமத்துடன் விளங்கியதை மக்கள் அனைவரும் கண்டு நகைத்தனர். பத்திரிகை உலகம் படுத்திய பாட்டை நினைத்தோ என்னவோ, பெரியார், 12–ந் தேதி ஏட்டில், சீக்கிரம் ஓர் ஆங்கில தினசரி துவக்கிட வேண்டும் என்ற வேண்டுகோளை முன் வைத்தார். (இன்னொரு பெட்டிச் செய்தியில் அண்மையில் எடுக்கவிருக்கும் (Census) மக்கள் தொகைக் கணக்கெடுப்பில், எல்லாரும் தங்களைப் பகுத்தறிவு வாதிகள் என்றும், தங்களுக்கு ஜாதி இல்லை என்றும் தகவல் தருமாறு வேண்டுகோள் விடுத்தார் பெரியார்.

13-3-71 "விடுதலை"யில் இராஜாஜிக்குப் பதிலளிக்கும் தலையங்கத்தைப் பெரியார் தீட்டினார். "இது தேர்தல் அல்லவாம்!" என்பது தலைப்பு, "இது தேர்தல் அல்ல, அசிங்கமான பர்மிட், லைசன்ஸ், பணபலம் பெற்ற வெற்றி தான் என்கிறார் இராஜாஜி. இப்படி எழுத இவருக்கு

மானம் வெட்கம் இல்லையா? அன்னக்காவடிப் பார்ப்பனர் எத்தனையோபேர் இன்று தொழிலதிபர்—கோடீஸ்வரர் ஆகியிருக்கிறார்களே யாரால்? எப்படி? நீங்கள் அதற்குள் கற்பனை மந்திரி சபை அமைத்தீர்களே, எந்த நம்பிக்கையில்? தோற்றுப் போனதோடு, தவறான காரணம் வேறா காட்டுகிறீர்கள்? என்னைப் பொறுத்தவரையில் இது சேலம் சம்பவத்துக்குக்கிடைத்த பாராட்டுதல் என்றே கருதுகிறேன். (அங்கே வெற்றி பெற்ற திமுக எம். எல். ஏ. இருவரில் ஒருவர் ராஜாராமன், இன்னொருவர் ஜெயராமன், தமிழர்கள் இனியும் ஏமாந்து சும்மாயிருக்கமாட்டார்கள். ஆகையால் நீங்கள் உங்கள் இனத்தாருக்கு இனியும் தவறான வழிகாட்டாதீர்கள்!'' என்று.

''முரசொலி''யோ இந்துவின் திமிர் இன்னும் அடங்கவில்லை; அண்ணா எவ்வளவோ பாடுபட்டு வகுப்பு ஒற்றுமை உண்டாக்கிவைத்தார்; இந்த ஒரு மாதத்தில் அதையெல்லாம் தரைமட்டமாக்கிவிட்டீர்களே! என்றே இடித்துக் காட்டிற்று. 234 சட்டமன்ற உறுப்பினர்களில் 184 பேர் தி. மு. க. (1967-ல் 138) இந்த முறை தி. மு. க. தவிர்த்த மற்றக் கட்சிகள் எல்லாம் சேர்ந்து 50 தான். 14-3-71 அன்று தி. மு. க. சட்டமன்றக் கட்சிக் கூட்டத்தில், என். வி. நடராசன் தலைமையில், நாவலர் முன் மொழிய, எம். ஜி. ஆர். க. அன்பழகன், மதுரை எஸ். முத்து வழிமொழிய, மீண்டும் கலைஞரே தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். 15—3—71 அன்று பல்கலைக்கழக நூற்றாண்டு விழா மண்டபம் கொள்ளாமல், வெளியில் கடலோடு கலந்த மக்கள் வெள்ளம்; உள்ளே பதவி ஏற்ற 14 அமைச்சர்களும் அவ்வப்போது வந்து தந்தை பெரியாரிடம் வணங்கி வாழ்த்துப் பெற்ற காட்சி மறக்க வொண்ணா மாட்சி, வரலாற்றின் ஆழமான சாட்சி.

''நமது மந்திரிசபை'' எனும் சிறப்புத் தலைப்பிட்டுப் பெரியார் 15.ந் தேதி எழுதிய ''விடுதலை''யின் தலையங்கத்தில், ''இந்தப் புதிய மந்திரிசபையில் எல்லா ஜில்லாக்களுக்கும் பிரதிநிதித்துவம் இருக்கிறது. கன்னியாகுமரி நீலகிரி, தர்மபுரி போன்ற சிறிய மாவட்டங்களுக்கு இல்லை; தஞ்சைக்கு மூன்று போய்விட்டது. அதேபோல்

பார்ப்பனர் தவிர மற்ற ஜாதிகளுக்குப் பிரதிநிதிகள் இருக்கிறார்கள். சைவருக்கு இரண்டு, அதிகம் தான். என்றாலும் மொத்தத்தில் பரவாயில்லை. வஞ்சனையாக ஒன்றுமே செய்யப்படவில்லை என்று திருப்தி கொள்ளலாம். இந்த நேரத்தில் கலைஞர் தலைவராயில்லாமல் வேறு யாரிருந்தாலும், நாம் ஒழிந்திருப்போம். இதைப் பற்றி எனக்குத் தெரிந்த அளவு விஷயங்கள், மற்றவர்களுக்குத் தெரிந்திருக்காது! இது போதாது. கலைஞர் கட்சியின் சர்வாதிகாரியாகவே ஆக்கப்படவேண்டும். அவர் இப்போது செய்துள்ள எல்லாக் காரியங்களையும் நான் மனநிறைவோடு ஏற்றுக் கொள்ளுகிறேன். என்னைப் பொறுத்தவரையில் தனியே பார்ப்பனர் மீது எந்த வெறுப்புணர்ச்சியுமில்லை. அவர்கள் உயர்ந்தவர்கள் என்கிற மனப்பான்மையை ஒழிக்க வேண்டும் என்பது தான்! மற்றபடி இனி கடவுள் ஒழிப்பிற்காக 5,000 10, 000 பேர் சிறை செல்ல, சிலர் கொல்லப்படத் தயாராகுங்கள்! என் அடுத்த அறிவிப்பிற்காகக் காத்திருங்கள்'' என விளக்கியிருந்தார் தந்தை பெரியார். இவரைப்பற்றி முதலமைச்சரின் கருத்து என்ன? என்று, நிருபர்கள், பதவி ஏற்றவுடனேயே கலைஞரிடம் கேட்டனர். "தந்தை பெரியார் சமூக சீர்திருத்தப் பணிபுரிபவர். அவரது சமுதாய சீர்திருத்த வேலையில் அரசு தலையிடாது. யாருடைய மனமாவது புண்படுவதாகப் புகார் கூறப்பட்டால், அப்போது அரசு கண்காணிக்கும்'' என்றார் கலைஞர் 15–3–71 அன்று.

மாபெருந் தலைவரான காமராஜர், நாகர்கோயில் தொகுதியிலிருந்து நாடாளுமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டார். தமிழ் நாடு, கேரளம், கர்நாடகம், ஆந்திரம் ஆகிய நான்கு தென்மாநிலங்களுக்கும் சிண்டிகேட் காங்கிரசின் ஒரே பிரதிநிதி அவர்தான். அது மட்டுமல்ல சிண்டிகேட், சுதந்தரா, ஜனசங்கம், சம்யுக்த சோஷலிஸ்ட் கட்சிகளின் கூட்டணிக்கே ஏகப்பிரதிநிதியும் அவரேதான். சேலம் நகராட்சியிலும், பாளையங்கோட்டை நகராட்சியிலும் உள்ள படிப்பகங்களில், பார்ப்பனப் பத்திரிகைகளை வாங்குவதில்லையென முடிவெடுக்கப்பட்டது 26–3-71 முதல் இது தவறு எனச் சென்னை உயர் நீதிமன்றத்தில்

ஒருவர் ரிட் மனு தாக்கல் செய்தார். நீதிபதி ராமப்ரசாதராவ் அவர்கள், தவறாகாது என 21-5-71-ல் தீர்ப்பளித்தார்.

மதுவிலக்கு நீடிப்பால் மக்களுக்கு எவ்வித நன்மையுமில்லை எனப் பெரியார் எழுதினார். "கடவுள் இழிவு" பற்றித் தனது தர்மசங்கடமான நிலை குறித்தும் 28 ந் தேதி பெரியார் ஒரு தலையங்கம் தீட்டினார்:— "இராமனை இழிவுபடுத்தியதாக என்மீது சுமத்தப்பட்ட தவறான குற்றச் சாட்டுகளுக்கு நான் இதுவரை எந்தவிதமான பதிலோ சமாதானமோ சொல்லவில்லை. அதற்குக் காரணம் தி.மு.க. விஷயத்தில் எனக்குள்ள தாட்சண்யம்தான். பல ஊர் களிலும் எனது தோழர்கள் இந்தப்படியாக இராமனை அல்லது கடவுளை இழிவு செய்யப்படவே விரும்புகிறார்கள். போலீசார் அங்கெல்லாம் தலையிட்டு, நிறுத்திவிடுமாறு கேட்டுக் கொள்கிறார்கள். இப்படிக் கேட்டுக்கொள்வதும், தடை செய்வதும் ஒன்றுதான் என நான் நினைக்கிறேன். இந்தக் காரியங்களுக்கு இது அனுகூலமான காலம். இது வெறும் ஆத்திக நாத்திகப் பிரச்சினையே அல்ல. மானாவமானப்பிரச்சினை. இவற்றைச் செய்வதில் எனக்கு மக்கள் ஆதரவு நிரம்ப உண்டு. இது சம்பந்தமாய் ஆட்சியாளர்க்குச் சந்தேகம் வேண்டாம். இப்படி ஏதாவது நான் செய்யாமலிருந்தால் மக்கள் என்னைக் கைவிட்டு விடுவார்கள்!" என்பதாக.

1-4-71 அன்று இரவு 11 மணிக்கு சென்னை பொது மருத்துவ மனையில் பாவலர் பாலசுந்தரம் மறைந்தார். 3-4-71-ல் அவர் சடலம் கண்ணம்மா பேட்டை இடுகாட்டில் அடக்கம் செய்யப்பட்டது. 2, 3 தேதிகளில், "நாளை ஸ்ரீ ராம நவமி. ராமன் படத்தை உங்கள் வீடுகளில் கீழே வைத்துச் செருப்பால் அடித்துவிட்டு, விரும்பினால் உங்கள் பெயரைக் கொடுங்கள். வெளியிடலாம்" எனப் பெரியார் விடுத்த வேண்டுகோளை ஏற்று, இராமன் படத்தைச் செருப்பாலடித்தோர் பட்டியல் 7-4-71-முதல் 22-4-71 வரை "விடுதலை"யின் கடைசிப் பக்கத்தை நிறைத்து வந்தது. 4-4-71 அன்று, சுயமரியாதைத் திருமணங்கள்

புதுச்சேரி ராஜ்யத்திலும் சட்டப் பிரகாரம் செல்லுபடியாகுமெனச் சட்ட ஆணை பிறப்பிக்கப்பட்டது. ஏப்ரல், மே, மாதங்களில் பெரியார் இடையறாத சுற்றுப் பயணம் மேற்கொண்டார். மதுரையில் பகுத்தறிவாளர் கழகம் துவங்கப்பட்டபோது, பெரியார் முன்னிலையில் பெண்கள் ஒன்றுகூடி, சேலம் மூடநம்பிக்கை ஒழிப்பு மாநாட்டுத் தீர்மானங்களை வரவேற்பதாகக் கூறினர். பார்ப்பன ஏடுகளுக்கும் அங்கே தீயிடப்பட்டது.

கவிஞர் சலகண்டபுரம் ப. கண்ணன் (முன்னாளில் ஜே.பி. கிருஷ்ணன்) 21-4-71 இரவு 9-30-க்கு மறைந்தார். "ஆரம்ப காலந்தொட்டுக் கடைசிவரை கொள்கைக்காகப் பாடுபட்டவர். இலட்சியவாதி. சிறந்த சீர்திருத்த எழுத்தாளர்" எனப் பாராட்டி இரங்கலுரைத்தார் பெரியார். பி. சபாநாயகம், அய். ஏ. எஸ். தலைமைச் செயலாளராகவும், சி. ஜி. ரங்கபாஷ்யம் அய். ஏ. எஸ். மின்வாரியத் தலைவராகவும் 8.4.71–ல் நியமிக்கப்பெற்றனர். புரட்சிக் கவிஞரின் 80–வதுபிறந்த நாளை ஒட்டி 29–4–71அன்று புதுவை அரசு விடுமுறைவழங்கியது. பாரதிதாசன்இல்லத்தைஅரசுடைமை ஆக்கி அங்கே நூலகமும் அமைத்தது. 1-5–71 முதல் மதுரை நகராட்சி, மாநகராட்சி அந்தஸ்து பெற்றது. மதுரைக் கார்ப்பரேஷன் முதல் மேயராக எஸ். முத்து நியமிக்கப் பெற்றார். (சென்னை கார்ப்பரேஷன் முதல் மேயர் குமாரராஜா M.A. முத்தையாச் செட்டியார்) 2-5–71 அன்று இராஜாஜி வீட்டு முன்னர், அவர் பென்ஷன் வாங்கக் கூடாது; தமிழகத்தை விட்டு வெளியேற வேண்டும் என்று ஆர்ப்பாட்டம் நடைபெற்றது. 2–5–71–ல் தஞ்சையில் பெரியார், பகுத்தறிவாளர் கழகம் தொடங்கி வைத்தார். 7-ந்தேதி சென்னையில், பகுத்தறிவாளர் கழகத்தின் சார்பில் அமைச்சரவைக்குப் பாராட்டுவிழா பெரியார் திடலில் நடைபெற்றது. முதல்வர் கலைஞரும் அமைச்சர்களில் நாவலர் நெடுஞ்செழியன், அன்பில் தர்மலிங்கம், சத்தியவாணிமுத்து ஆகியோரும் பகுத்தறிவாளர் கழகத்தின் உறுப்பினர் ஆயினர்.

திருவாரூரில் 15–5–71 அன்று பகுத்தறிவாளர் மாநாடு; தலைவர் வீரமணி; திறப்பாளர் உலகநம்பி எம். ஏ. பி. எல். எம். பி. ரெங்கராசு திடலில், சிங்கராயர் பந்தலில், முத்துக் கிருஷ்ணன் அரங்கில்! மறுநாள் திராவிடர்கழக மாநாடு பெரியார் தலைமையில்; T. V. சொக்கப்பா எம். ஏ. எல். டி. திறப்பாளர். வி. எஸ். பி. யாகூப் மன்றத்தில் பகுத்தறிவுப் புத்தகக்காட்சி, ஓவியக் காட்சி நடைபெற்றது. 16-5-71 அன்று மாபெரும் ஊர்வலம் புறப்படத் தயாரா யிருந்த நேரத்தில், பெரியார் தங்கியிருந்த முசாபுரி பங்களா வுக்கு, மாவட்ட ஆட்சித் தலைவர் டி. வி. அந்தோணி அய்.ஏ.எஸ்.(முன்னாள் தலைமைச் செயலாளர் டி.ஏ.வர்கீசின் மகன்) வந்து, பெரியாரைச் சந்தித்து, ஊர்வலத்தில் இராமன், சீதை ஆகிய உருவங்களை எடுத்துச் செல்லக் கூடாது, என்றார். அதில்லாமல் எங்கள் கொள்கை நிறை வேறாதுங்களே என்றார் பெரியார். அப்படியானால் ஊர்வ லத்தை அனுமதிக்க முடியாதே என்றார் கலெக்டர். எழுத்து மூலமான உத்தரவு தருவீர்களா என்று பெரியார் கேட்க வும், அங்கேயே டைப் செய்து கையெழுத்திட்டு, மாவட்டக் கலெக்டர் மற்றும் மாஜிஸ்டிரேட் என்கிற தகுதிகளில், திராவிடர் கழக ஊர்வலம் நடத்த அனுமதி மறுப்பதாக ஆணை பிறப்பித்து, நகலைப் பெரியாரிடம் தந்தார். மேலிடத்தின் தொடர்பு இல்லாமல் இவ்வளவும் நடை பெறாது என யூகித்தார் பெரியார்! அப்போது பெரியார் கூறிய ஒரு பழமொழியைக் கேட்டு ஆத்திரமாயிருந்த தோழர்களும் சிரித்துவிட்டனர். "என்ன செய்வது மாமியாருக்குத் தொடையிலே புண். மருமகன் தான் டாக்டர்!" என்றார் பெரியார். தங்கும் விடுதிக்கு வெளியே உணர்ச்சிப் பிழம்புகளாய்க் கொதித்துக் கொண்டிருந்த கருஞ்சட்டையினரைத் தாமே அமைதிப்படுத்தி, ஊர்வலம் ரத்து என அறிவித்து, நேரே மாநாட்டைத் துவக்கினார்.

"இன்னும் 15 நாளில் இராமாயணம் தடைசெய்யப்பட வேண்டும். தவறினால் விபச்சாரி சீதை, குடிகார ராமன் சூத்திர சம்பூகன் வெட்டிக் கொல்லப்படுதல்—இந்தக்

காட்சிகள் தமிழ் நாடு முழுவதும் ஊர்வலமாக எடுக்கப் படும்'' என்ற ஏகமனதான ஒரு தீர்மானம் எழுச்சி மயமாக நிறைவேற்றப்பட்டது, திருவாரூரில் 16-5-71 அன்றைய தினம்!

அடுத்த 17, 19 தேதிகளில் "விடுதலை"யில் ஆசிரியர் தலையங்கம் மிகுந்த வேதனையுடன் தீட்டப்பட்டிருந்தது. 18-ந் தேதி புலவர் குழந்தையின் இராவண காவியம் நூல் மீதிருந்த தடை, அரசால் நீக்கப்பட்டது. பத்திரிகை நிருபர்கள் கேட்டபோது, முதல்வர் கலைஞர், இனியும் "சேலம்" நடந்தால் "திருவாரூர்" நடக்கும் என்றார்; அதாவது, இராமன் உருவம் ஊர்வலத்தில் இழிவு செய்யப் படுமானால், தி. க. ஊர்வலமே தடை செய்யப்படும் என்ற பொருளில்! "அரசின் இந்தப் போக்கு விரும்பத்தக்கதல்ல என்ற கசப்பான உண்மையைச் சுட்டிக் காட்ட வேண்டியது நமது கடமையாகிறது. நாம் நடத்தும் ஊர்வலம் எதிரி களைப் புண்படுத்த அல்ல; நம்மவர்களுக்கு ஏற்பட்டுள்ள புண்ணை ஆற்றவே! சேலம் நடந்தால் திருவாரூர் நடக்கு மென்று முதல்வர் கூறிவிட்டதாகச் சிண்டு முடிவோர் ஏமாறுவர். அரசு கடமையாற்றட்டும். நாமும் செய லாற்றுவோம். அடுத்து ஒரு மாநாடு கூட்டி, வேலைத் திட்டம் வகுப்போம்!" என்றார் வீரமணி. 21-ந் தேதி பெரியாரோ—"நான் தி. மு. க. அமைச்சர்களை மதிக்க வில்லையா? பிறகேன், இந்த முடிவு? தி. க.வை ஒடுக்கும் திட்டமா? ஆட்சியின் காரியத்துக்காக நான் இவற்றைக் கைவிட முடியுமா? அப்படிச் செய்தால் திராவிடர் கழகத்தை நானே கொல்லுபவன் ஆவேன்!" என்று மனம் பொருமினார். அரசின் போக்கைக் கண்டித்துத் திராவிடர் கழகத் தோழர்கள் மனங்குமுறி ஆத்திரத்துடன், இரத்தக் கண்ணீர் வடித்து, எழுதிய எண்ணற்ற கடிதங்கள் "விடுதலை"யில் "ஆசிரியருக்கு" என்ற பகுதியில் தினந் தோறும் நிறைந்தன.

22–5–71 நாத்திகர் மாநாடு; தலைவர் எஞ்சினியர் கே. எம். சுப்பிரமணியம் பி. இ. திறப்பாளர் ஜி. டி. நாயுடு.

23-ந் தேதி பார்ப்பனரல்லாதார் மாநாடு. தலைவர் பெரியார்; திறப்பாளர் டி. வி. சொக்கப்பா. திருச்சியில் சிந்தனையாளர் கழகம் நடத்திய இந்த மாநாடுகளில் "மது விலக்கை விரைந்து நீக்க வேண்டும். சிறுபான்மையினரான முஸ்லீம்கள் மதுவிலக்கு நீடிக்க வேண்டும் என்று சொல்ல உரிமையில்லை. திராவிடர் கழகக் கொள்கைகளை, ஆட்சிக்குச் சென்று சாதிக்கத்தானே திராவிட முன்னேற்றக் கழகம் பிரிந்தது. பிறகென்ன தயக்கம்?" என்று பெரியார் கருத்துரைத்தார். திருக்கோயிலூர் அருகே உள்ள சென்னகுணம் கிராமத்தில் "இப்போது தி. மு. க. ஆட்சியாளர் ஓடாத தேரையெல்லாம் ஓட வைக்கக் காரணம், பார்ப்பானின் செல்வாக்குக்கு அரசு இன்னும் பயப்படுகிறது என்பதுதான். வேதம் ஒழியும் இடத்தில்தானே பேதம் ஒழியும். கடவுளைச் செருப்பால் அடிப்பதால் நமக்கு ஒன்றும் கேடு நேர்ந்து விடாது என்பதற்கு என் வயதே சான்று!" என்று மொழிந்தார் பெரியார்.

சேலத்தில் இராமனுக்குச் செருப்படி தந்ததாகப் பெரியார் மீதும் ஒருவர் வழக்குத் தொடர்ந்தார். கோர்ட்டில் 4-6-71-ல் அது தள்ளுபடி செய்யப்பட்டது. "கல்கியார் கனைக்கிறார்" என்பதாக "விடுதலை"யில் 4-ந் தேதி ஒரு தலையங்கம்; இராமாயணத்தைத் தடை செய்ய முடியாது என்பதால் இராவண காவியம் நூலுக்கு விதிக்கப்பட்டிருந்த தடையைத் தாம் நீக்கியதாக முதலமைச்சர் கூறினாராம், என்பதை விளக்கி. இராமாயணம் தடை செய்யப்படவேண்டும்—ஏன் என்கிற தலைப்பில் தினம் சில காரணங்களை விவரித்து "விடுதலை"யில் பெரியதொரு பெட்டிச் செய்தி அந்த மாத முழுதும் வெளியிடப் பெற்றது. பெரியாரின் உடல் நிலை கருதி அவரைக் குறைவான நிகழ்ச்சிகளுக்கே அழைக்க வேண்டுமென்கிற கருத்திலும் பெட்ரோல் விலை உயர்வாலும் இனிமேல் பெரியாரைப் பொதுக்கூட்டங்களுக்கு அழைப்போர் ரூ 200/-ம், திருமணங்களுக்கு அழைப்போர் ரூ 250/-ம் அனுப்ப வேண்டுகிறோம் என்பதாக வீரமணி 6-6-71ல் அறிவித்தார். "பெரியாரின்

பகுத்தறிவுப் படை மூட நம்பிக்கைகளுக்குக் கொடுத்த சவுக்கடி, நயவஞ்சகர்களைக் கலகலக்க வைத்தது. அப்படிப் பட்ட பகுத்தறிவுப் பிரச்சாரத்திற்குத் தகுந்த ஆதாரங் களைத் திரட்டி வழங்கியவர் சிந்தனைச் சிற்பி சிங்கார வேலர்!'' என்று முதல்வர் கலைஞர் 6-ந் தேதி இராயபுரம் சிங்காரவேலர் படகு கட்டும் நிலையம் திறந்த போது கூறினார்.

14-ந் தேதி பெரியார் நாச்சார்கோயிலில் பேசும்போது, 10 கல்லூரிகளைத் திறப்பதைவிட எல்லாக் கிராமங்களிலும் உயர்நிலைப் பள்ளிகளைத் திறக்கலாம்; கல்லூரிகளால் எப்போதும் தொல்லைதானே? என்றார். 25-6-71 அன்று பேளுக்குறிச்சி ஜி. பி. சோமசுந்தரம் மறைந்தார். திராவிட முன்னேற்றக் கழகத்திலும் கருப்புச் சட்டையை விடாம லிருந்த பெரியவர் இவர். அன்றைய தினம் பெரியார் பொள்ளாச்சியில் பேசும்போது கீதையையும் கிருஷ்ணனை யும் செருப்பாலடிக்காமல் நாம் ஏற்றுக் கொண்டால் என்றென்றும் சூத்திரர்தானே? என்று கேட்டார் மது விலக்கு ஆகஸ்டு 30 முதல் ரத்தாகும் என்பது துணிச்சல் மிக்க முடிவு என ''விடுதலை'' 19-6-71-ல் எழுதிற்று. இந்த முடிவைப் பாராட்டி ஏராளமான கடிதங்கள் வெளிவரத் தொடங்கின.

திருநெல்வேலி மாவட்டத்துச் செய்துங்கநல்லூரில் தேவேந்திர குல வேளாளர் கல்லூரிக்கு 4-7-71 அன்று பெரியார் அடிக்கல் நாட்டினார். பிற்படுத்தப்பட்டோர் நலக்குழுவின் அறிக்கை வெளியாகியிருந்தது. அரசுத் துறை களில் மட்டுமின்றிப் பொதுத் துறைகளிலும், தனியார் துறை களிலுங்கூட இட ஒதுக்கீடு செய்யப்பட வேண்டுமென அதில் பரிந்துரைக்கப்பட்டதைப் பாராட்டிப், பிற்படுத்தப்பட்ட சமுதாயத்தினருக்கு ஒரு பொற்காலம், என்று ''விடுதலை'' 16-7-71 அன்று தலையங்கம் தீட்டிற்று. பிற்படுத்தப் பட்டோர் நல விழாக்கள் நடத்தப்படுமா? என கிட்டப்பா எல். எல். ஏ. கேட்டபோது, சட்டமன்றத்தில், 6-7-71 அன்று, அமைச்சர் ராஜாராம், அன்றாடம் நாட்டில் நடை

பெற்று வரும் பெரியார் பொதுக் கூட்டங்களும், அண்ணா—கலைஞர் பிறந்த நாள் விழாக்களும் உண்மையில்' பிற்படுத்தப் பட்டோர் நல விழாக்களே ஆகும். எனவே தனியாக விழாத் தேவையில்லை என்றார்! The Modern Rationalist என்ற ஆங்கில மாத சஞ்சிகைக்கு ஆசிரியராக வீரமணியும், அச்சிடுவோராக ஈ. வெ. ரா. மணியம்மையாரும் என 8–7–71 அன்று பதிவு செய்யப்பட்டது.

சேலம் தமிழ்ச் சங்கச் செயலாளரும், கழகப் பிரமுகரும், மிக்க ஆர்வமுள்ள இளைஞருமான ஆர். வி. கணபதி சென்னையருகில் கார் விபத்தில் 10-7-71 அன்று காலமானார். பகுத்தறிவுச் சுடர் நாவலர் நெடுஞ்செழியன் 52-வது பிறந்த நாள் இன்று என, "விடுதலை" 11-7-71ல் வாழ்த்தியிருந்தது. பெரியார் 15–ந் தேதி தஞ்சையில் House Surgeons Association–ல் சொற்பொழிவாற்றினார். அன்றைக்கே தஞ்சையிலுள்ள திறந்த வெளிச் சிறைச் சாலையினையும் பார்வையிட்டார். தன்னுடைய ராஜி நாமாவை ஏற்கக்கூடாது எனச் சட்டமன்ற மேலவை உறுப்பினராயிருந்த எஸ். இராகவானந்தம், உயர்நீதி மன்றத்தில் தாக்கல் செய்த ரிட்மனு தள்ளுபடி செய்யப் பட்டுவிட்டது, 15–ந் தேதியன்று! மேலவை உறுப்பினரான தவத்திரு குன்றக்குடி அடிகளார், ரஷ்ய சுற்றுப்பயணத் திற்காக 18-ந் தேதி புறப்பட்டபோது, மேலவைத் தலைவர் சி. பி. சிற்றரசு, கி. வீரமணி ஆகியோர் வழியனுப்பி வைத் தனர். இதுவரை தான் எந்தக் கோயிலுக்கும் போனதில்லை யென, 25-ந் தேதி ஒரு தன்னிலை விளக்கமளித்தார் மேலவைத் தலைவர் சி. பி. சி.

23–7–71 அன்று அண்ணாமலைப் பல்கலைக் கழகம் முதலமைச்சர் கலைஞர் கருணாநிதிக்கு டாக்டர் பட்டம் வழங்கிற்று. பகுத்தறிவுக் ,கொள்கைக்கு அளிக்கப்பட்ட விருது என "விடுதலை" பாராட்டியது. "எதிரிகளுக்குக் காலித்தனமின்றி கதி இல்லை" என்ற தலையங்கத்தில் 24-ந் தேதி பெரியார், "அண்ணாமலை நகரில் பார்ப்பனர் பின்னணியில் இருந்து கொண்டு மாணவரைத் தூண்டி

விட்டுக் கலவரம் விளைவித்திருக்கின்றனர். போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்யாமலே சாமர்த்தியமாகச் சமாளித்ததைப், பாராட்டியே ஆகவேண்டும். தமிழர்களே! பொறாமைக்காரர்கள் இப்படி, எரியும் பந்தத்திற்கு நெய்யூற்றி வருகிறார்களே! உங்கள் கடமை என்ன? பேசாமல் பார்த்துக் கொண்டிருக்கலாமா?'' என்பதாக எழுதியிருந்தார். துணைத் தலையங்கத்தில், பட்டமளிப்பு விழாவில் பகுத்தறிவு வெள்ளம் பாய்ச்சிய கலைஞர் கருணாநிதிக்கு வாழ்த்துத் தெரிவிக்கப்பட்டிருந்தது. 24–7–71 அன்றைய தினமே முதல்வர் கலைஞர் சென்னை பொது மருத்துவமனையில் பெரியாரைச் சந்தித்தார். பெரியாரும் டாக்டர் கலைஞரைப் பாராட்டி மகிழ்ச்சி தெரிவித்தார். 28–7–71 அன்று சட்ட மன்றத்தில் டாக்டர் அண்டே, இது நாலாந்தர அரசு என்று, குற்றஞ் சுமத்திப் பேசினார். முதல்வர் கலைஞர் எழுந்து, "ஆமாம் இது நாலாந்தர மக்களுக்காக நாலாந்தர மக்களால் நடத்தப்படும் அரசு தான். பெரியார் மொழியில் சொல்கிறேன்; நாலாஞ் சாதி சூத்திரர்கள் ஆட்சிதான் நடக்கிறது!'' என்று கல்மேல் எழுத்தாய்ப் பொறித்தார்.

27–ந் தேதி சட்டமன்றத்தில் கேள்விக்குப் பதிலாக, அறநிலைய அமைச்சர்; இருக்கின்ற 5,000 கோயில்களில், இப்போது 3,000 இடங்களில் தமிழில் அர்ச்சனை நடைபெறுகிறது என்ற.தகவல் தந்தார். நடிப்பிசைப் புலவர் கே. ஆர். ராமசாமி 5–8–71 நள்ளிரவில் அடையாறு இல்லத்தில் தமது 57 வது வயதில் மரணமடைந்தார். மறுநாள் இறுதி ஊர்வலத்தில் கழகத் தலைவர்கள், கலையுலக நண்பர்கள் பெருவாரியாகக் கலந்து கொண்டனர். ஒரு நாள் இரவில், பெரியாரின் வேன் ரிப்பேராகி, வழியில் நிற்கக் கண்ட கே.ஆர். ராமசாமி, தம்முடைய காரில் வரச்சொல்லி; மிக அன்புடன் அழைத்தும், பெரியார் தமது வழக்கப்படி, நன்றியுடன் மறுத்துவிட்டார். எனினும் சிலநாள் கழித்துக் கே.ஆர்.ஆர். இல்லம் தேடிச்சென்று, அவரது அன்புக்கு நன்றி பாராட்டித், திரும்பினார் பெரியார். கலையுலகில்

தன்னை அழித்துக்கொண்டு, மற்றவர்க்கு ஒளி காட்டி உயர்த்திய வள்ளல் கே.ஆர்.ஆர். உருகிக் கரைந்து போன மெழுகுவத்தியானார்! 14–8–71 அன்று பெரியாரும், மணியம்மையாரும் சென்று, கே.ஆர். கல்யாணி அம்மையாரையும், பிள்ளைகளையும் கண்டு துக்கம் விசாரித்தனர்.

''இது தான் பாரதம்'' என்ற தலைப்பில், மகாபாரத இதிகாசத்தின் பல்வேறு ஆபாசக் கருத்துகள், நாள்தோறும் ''விடுதலை''யில் கட்டங்கட்டி வெளியிடப்பட்டு வந்தன. 4–8-71–ல் சேலத்தில் முதல்வர் கலைஞர், பெரியாரைப் பற்றிப் பெருமை பொங்கக் குறிப்பிட்டார்: — ''இந்தத் தொண்ணூற்று மூன்றாவது வயதிலும் தன்னைப் படாத பாடு படுத்திக்கொண்டு, தமிழர்களுக்குத் தன்மானம் *ஊட்டி வருகிறார் பெரியார். 'ஏன் அய்யா உடம்பு சரியில்லையாமே?' என்று விசாரிக்கச் சென்றால், 'ஆமாமுங்க இரண்டு நாளாய்க் கூட்டம் பேசவில்லை; அதனால் தானுங்க—'என்கிறார். எனக்கு மிகுந்த பொறாமையாக இருக்கிறது!'' என்றார் கலைஞர்.

''திருச்சியி லுள்ளது போல் கடவுள் மறுப்புக் கல்வெட்டுகள் எல்லா ஊர்களிலும் பதிக்கப் பெறும். இதற்கு யாராவது எதிர்ப்புத் தெரிவித்தால், பிறகு கோயில்களும் இருக்கக் கூடாதென்று நாங்களும் ஆரம்பிப்போம்'' என்றார் பெரியார் 8–8–71 அன்று. சென்னை பகுத்தறிவாளர் கழகம், டாக்டர் பட்டம் பெற்ற கலைஞரைப் பாராட்ட, 14–ந் தேதி பெரியார் திடலில் ஒரு விழா நடத்திற்று. பெரியார், கலைஞருக்குப் பொன்னாடை போர்த்தி, அவரது கன்னங்களைத் தமது விரல்களால் தடவிக் கொடுத்தார். பெரியார் தலைமையில் குன்றக்குடி அடிகளார், என்.டி. சுந்தரவடிவேலு, ஏ.என். சட்டநாதன், கி. வீரமணி மற்றும் அமைச்சர் பெருமக்கள் கலந்து கொண்டனர். கலைஞருக்குச் சிலை அமைக்க வேண்டுமென்று, பெரியார் பிடிவாதமாகக் கூறி, அங்கேயே குழுவும் அமைக்கப் பட்டது. பெரியார் புரவலர்; அடிகளார் தலைவர்; மேயர் சா. கணேசன், என்.டி. சுந்தரவடிவேலு, ஏ.என். சட்டநாதன் துணைத்தலை·

வர்கள்; கி. வீரமணி செயலாளர், அவ்விடத்திலேயே 2,756 ரூபாய் நன்கொடையும் வசூலாகி விட்டது. கலைஞரால் மறுக்க முடியவில்லை; எனினும் தந்திரமாய் ஒரு நிபந்தனை வெளியிட்டார்—அதாவது நாங்கள் முதலில் பெரியாருக்குச் சிலை அமைப்போம். அதன் பிறகு பார்க்கலாம், என்றார். "சும்மா சொன்னாலோ, கேட்டுக் கொண்டாலோ கூட நான் மறுத்திருப்பேன். அய்யாவின் கட்டளையை என்னால் மீற முடியாது. பதவி ஏற்ற போது நான் சொன்ன எதையும் மறக்கவுமில்லை; மாறவுமில்லை. பெரியார் வழிதான் அண்ணா வழி; அது தான் எங்கள் வழி! முறைகளில் சில வேறுபாடு இருக்கலாம்; ஆனால் முரண்பாடு இருக்க முடியாது! நாலாந்தரத்தாரை நாலாந்தளத்தாராக மாற்று வோம், என்று சூளுரைத்தபடியே செய்து காட்டுவோம்—அய்யாவின் திருக்கரங்கள் என் கன்னத்திலே பட்டது, என் தாயின் முத்தத்தைவிடச் சிறந்தது. வாழ்நாள் முழுவதும் நினைந்து நினைந்து மகிழ்ந்திருப்பேன்" என்றார் கலைஞர். இந்தக் கூட்டத்தில் பெரியார், புதிய தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடலைப் பற்றிக் குறிப்பிடும் போது, "கடவுள் வாழ்த் துக்குப் பதிலாக இது என்றால், ஒரு முட்டாள் தனத்துக்குப் பதிலாக இன்னொரு முட்டாள்தனம் என்றுதானே அர்த்தம்?" என்றார்.

24–ந் தேதி சென்னையில் நடந்த சலவைத் தொழிலாளர் மாநாட்டில் பெரியார், "இது சாதி அடிப்படையில் இருப்பதால், இந்தச் சங்கம் ஒழியவேண்டும் என்றுதான் நான் சொல்வேன். உங்கள் பிள்ளைகளை நன்றாகப் படிக்க வைத்து, வேறு தொழில்களில் ஈடுபடுத்துங்கள்" என்றார். பெரியாரின் 93–வது பிறந்தநாள் விழாவையொட்டி 17-9-71 அன்று பெரியார் சிலை ஈரோட்டில் நிறுவப்படும் என்றும் 26-9-71 அன்று சேலத்தில் வெள்ளிச் சிம்மாசனம் வழங்கப் படும் என்றும் முன்னதாகவே செய்திகள் வெளியாயின. லால்குடி வட்டம் திருமங்கலம் கிராமத்தில், பெரியார் மின் விளக்கேற்றிய போது, "பள்ளிகளில் தருவது போலக் கல்லூரிகளிலும் மதிய உணவு தந்தால், நம் பிள்ளைகள்

இன்னும் பலர் உயர் கல்வி பெற முடியும். இப்போது நடந்துள்ள மருத்துவக் கல்லூரிக்கான மாணவர் தேர்ந்தெடுப்பதில் 1,000 க்கு 950 பேர் நம் பிள்ளைகள் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளனர் இந்த ஆட்சியில், என்று மகிழ்ந்தார் பெரியார். "திராவிடர் கழகம் ஏற்பட்டது கடவுளை ஒழிப்பதற்காக அல்ல; இன இழிவை ஒழிப்பதற்குத்தான். ஆனால் நம் இன இழிவை ஒழிக்கும் பணியில் கடவுள் குறுக்கிடுவதால், அதை ஒழிக்க முற்படுகிறோம்" என்று பெரியார் தாதம்பேட்டை பழுவூரில் கூறினார்.

துவாரகையிலுள்ள சாரதா பீடம் சங்கராச்சாரியாரின் விழாவில் கலந்து கொள்ளத் துணை ஜனாதிபதி ஜி.எஸ். பாடக் மறுத்து விட்டார்; காரணம், அவர் தீண்டாமையை ஆதரிப்பவர் என்பதால்! இந்தச் செய்தியை "விடுதலை" வெற்றியுடன் பிரசுரித்தது. நாகரசம்பட்டி தன்மானக் குடும்பத்தின் தலைமை மூதாட்டியும் என்.வி. சுந்தரம் சகோதரர்கள், என்.வி. விசாலாட்சி அம்மாள் சகோதரிகள் ஆகியோரின் தாயாரும், என்.எஸ். சம்பந்தம் சகோதரர்களின் பாட்டியாருமான தாயாரம்மாள் 15–8–71 அன்று மறைந்தார். அவரது நினைவு நாளான 29–8–71 அன்று பெரியார்,,அம்மையாரின் படத்தினைத் திறந்து வைத்துத், தமது கொள்கையில் அன்னாருக்கிருந்த ஈடுபாட்டை நினைவு கூர்ந்தார்.

சென்னை பாலர் அரங்கத்தில் கலைவாணர் நினைவுநாள் விழா 4–9–71 அன்று கொண்டாடப் பட்டது. கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன், நடிப்பிசைப்புலவர் கே.ஆர். ராமசாமி ஆகியோருக்குப் பகுத்தறிவுப் பாடல்கள் இயற்றித் தந்தவரும், பெரியாரின் நண்பரான உடுமலை முத்துசாமிக் கவிராயரின் சீடருமான உடுமலை நாராயணக் கவிராயருக்கு, முதல்வர் கலைஞர் 15,000 ரூபாய் பொற்கிழி வழங்கினார். "உயிரும் மயிரும் இல்லா உருவச் சிலைகளுக்கு வயிர முடிகள் வேணுமா? வாயும் வயிற்றில்லாச் சாமிக்கு மானியமாகவே வயலும் வாய்க்கால் வேணுமா?" என்பது போன்ற அறிவார்ந்த பாடல்களை அவர் இயற்றித்தர, நடிகமணி டி.வி. நாராயணசாமி,

கணியூர் கே.ஆர். செல்லமுத்து போன்றார் இயக்க மேடைகளில் இசையோடு முழங்க...வாழ்க, உடுமலைக் கவிராயர்! அன்று மாலை, விழாவில், பாலர் அரங்கத்துக்குக் கலைவாணர் அரங்கம் என்று பெயர் சூட்டுவதாக, முதல்வர் கலைஞர் அறிவித்தார். மறுநாள் காலையே, நியான் சைன் போர்டில், கலைவாணர் அரங்கம் என்ற எழுத்துகள் மின்னக் கண்டனர் மக்கள்! நன்றியுடன் கலைவாணரை நினைந்து மகிழ்ந்தனர்! 5-ந் தேதி Shankar's weekly யில் "கலைஞரைப்பற்றிக் கணித்ததில் பார்ப்பனர் ஏமாந்து விட்டனர்" என்பதாக எழுதப் பட்டிருந்தது, "விடுதலை"யில் எடுத்துக் காட்டப் பெற்றது.

17-9-71 பெரியாரின் 93-வது பிறந்தநாள் விழா பெரியாரைத் தந்த ஈரோட்டில் மரியாதை தெரிவிக்க மக்களுக்குச் சரியான வாய்ப்பு! பெரியார் நகரமன்றத்தில் தங்கியிருந்த தந்தைக்கு நல்வாழ்த்துக் கூறி, மாலை சூட்டிட, முதல்வர் கலைஞர், அமைச்சர்கள் ப. உ. சண்முகம், ராஜாராம், கண்ணப்பன் ஆகியோர் காலை 10-30க்கு வந்தனர். மாலையில் எல்லாருக்கும் ஈரோடு நகராட்சி மன்றம் வரவேற்பளித்தது. குன்றக்குடி அடிகளார் தலைமையில் முதல்வர் கலைஞர் பெரியார் சிலையினைத் திறந்து வைத்தார். அமைச்சர் ப. உ. சண்முகம் 93 நூறு ரூபாய் நோட்டுகளாக, 9,300 ரூபாய் பொற்கிழி, பெரியாருக்கு வழங்கினார். கி. வீரமணி, அமைச்சர்கள் க. ராஜாராம், மு. கண்ணப்பன்ஆகியோரும், பெரியாரும் உரையாற்றினர். சிலையின் பீடத்தில்;"ஆத்மா, மோட்சம், நரகம், மறுபிறவி, பிதிர்லோகம் ஆகியவற்றைக் கற்பித்தது யோக்கியமற்ற செயல், இவற்றை நம்புவது மடமை; இவற்றினால் பயன் அனுபவிப்பது வடிகட்டிய முட்டாள்தனம்!" என்பதாக ஒருபுறத்தில் பொறிக்கப்பட்டிருந்தது. 19-9-71 திருச்சியில் பெரியார் கல்வி ஸ்தாபனங்களின் நிறுவனர் நாள் விழாவில், இந்த ஆண்டில் அமைச்சர் எஸ். இராமச்சந்திரன் பங்கேற்றார். மறுநாள் பெரியார் சென்னையில், முடிதிருத்துவோர் முன்னேற்றச் சங்க மாநாட்டில் பேசும்போது, "போலீஸ்

துறையிலுள்ள எல்லா வேலைகளுக்கும் பிற்படுத்தப் பட்ட சமூகத்திலிருந்தே தேர்ந்தெடுக்க வேண்டும். அதே போல மந்திரிப் பதவியில் கூட Rotation முறை கொண்டுவந்து, எல்லாச் சமூகத்தாரும் மந்திரிகளாகின்ற வாய்ப்புத் தரவேண்டும்'' என்ற கருத்தைப் புகன்றார்.

ஜனாதிபதி வி. வி. கிரி சிங்கப்பூர் சென்றிருந்த போது, ஹில்டன் ஹோட்டலில் தங்கியிருந்தாராம். அங்கு சமைத்ததைச் சாப்பிட மறுத்துத், தனக்குப் பார்ப்பன சமையற்காரர் வேண்டுமென்று கேட்டாராம். விலாநோகச் சிரிப்பை வரவழைக்கும் விசித்திரமான இந்தச் செய்தியை 16-9-71 "விடுதலை" வெளிப்படுத் திற்று. 19-ந் தேதி கடற்கரை சீரணி அரங்கத்தில் முதல்வர் கலைஞர், அண்ணா பிறந்த நாள் விழாவில் பேசும்போது, "கைபர் கணவாய் வழியாக வந்த நரிக் கூட்டம்—விஷ நாகங்கள்—சமுதாயத்திலும், சர்க் காரிலும் இன்றும் இருக்கின்றன! காலம் வரும்போது நடவடிக்கைகை எடுப்போம்!'' என்று எச்சரித்தார். சம்பந்தப்பட்டவர்கள் கதிகலங்கிப் போனார்களாம்!

செய்தித்துறை இயக்குநர் பொறுப்பிலிருந்த டி. வி. வெங்கட்ராமன் அய். ஏ. எஸ். அவர்களுக்குப் பதிலாக ஆர். நாகராஜன் நியமிக்கப்பட்டார். தேசிய நெடுஞ்சாலைத் துறையின் தலைமைப் பொறியாளராக சி. வி. பத்மநாபன் நியமனம் பெற்றார். 26—9—71 அன்று கோவையில் விவசாயப் பல்கலைக் கழகத்தை முதல்வர் கலைஞர் துவக்கினார். அமெரிக்கா வருகை தருமாறு முதல்வருக்கு அழைப்பு வந்திருப்பதாக 25-ந் தேதி செய்தி தரப்பட்டது. எப்போது புறப்படுவார் என்று கூறப்படவில்லை அப்போது!

திராவிடர் மாணவர் கழகம் ஒன்று அவசியம் இருந்திடல் வேண்டுமெனப் பெரியார் கருத்தறிவித்ததற் கிணங்க, 23—9—71 அன்று எஸ். துரைசாமியை அமைப்பாளராகக் கொண்டு, உறுப்பினர் சேர்க்கும் பணி துவக்கப் பெற்றது. மணப்பாறை பகுத்தறிவாளர் கழகத்தில் பெரியார் பேசும் போது— "அரசு ஊழியர்கள் சாதியைப்பற்றிப் பேசினால் கம்யூனல் என்கிறார்கள். சமுதாயத்தைப் பற்றிப் பேசினால் பொலிட்டிகல் என்கிறார்கள். இந்தச் சங்கட

மான அவதியில் அவர்கள் எதைத்தான் பேசமுடியும்?'' என்று கேட்டார்.

4—10—71 மதுரையில் கூடிய திராவிடர் கழக மாவட்டக் குழுக் கூட்டத்தில், பெரியார் சிலை அமைப்புக் குழு தேர்ந்தெடுக்கப்பட்டு, அப்போதே 10, 562 ரூபாய் நன்கொடை வசூலாயிற்று, மலேசியா வில் பிணம் புதைக்கும் இடத்தில் ஜாதிவேறுபாடு நடைமுறையிலிருந்ததை எதிர்த்து, அங்குள்ள திராவிடர் கழகம் வழக்குத் தொடுத்ததில், 6—10—71 அன்று, வென்று விட்டது! ''பெண்கள் கூந்தலை வகிடு எடுத்து இரண்டாகப் பிரித்திடுவதே, மீண்டும் ஒன்றாகப் பின்னு வதற்காகத்தான்! அது போல தி.க.வும் தி.மு.க.வும் பிரிந்ததே, மீண்டும் பிணைவதற்காகத்தான்!'' என்று முதல்வர் கலைஞர் தஞ்சையில் 8-10-71-ல் பேசினாராம். 1/-ம் நாள் சென்னையில், தமிழில் Ph. D. என்னும் ஆராய்ச்சிப் பட்டம் பெற்ற பெரும் புலவர் அனைவரும் ஒன்று கூடிக், கலைஞருக்குத் ''தமிழவேள்'' என்ற சிறப்புப்பட்டம் வழங்கினர்; Dr. மெ. சுந்தரம் அமைப் பாளராயிருந்து நடத்தினார்! சட்ட மன்றத்தில் ஆப்காரி சட்டத்திருத்தம் 23-ந் தேதி கொண்டுவரப் பட்டபோது, ஆதரவாக 121 வாக்குகள்; சுதந்தரா முஸ்லீம் லீக், சிண்டிகேட் உட்பட எதிர்ப்பான வாக்குகள் 19.

''எனது 93-வது ஆண்டு பிறந்த நாள் மலருக்கு ஒரு செய்தி வேண்டும் என்று நண்பர் திரு வீரமணி அவர்கள் கேட்டார். 10 ஆண்டுகளாகவே சேதி கொடுத்துக் கொண்டு தான் வருகிறேன். எனது பிறந்த நாள் என்பதே, பிரச்சாரத் திற்கு ஒரு சாதனமாக, ஓர் ஆதாரமாக விளங்குகிறது என்பது, ஒரு கல்லுப் போன்ற செய்தியாகும்.

நான் சமுதாய சமத்துவத்திற்குப் பாடுபடுகின்ற ஒரு தொண்டனாவேன். அதாவது சாதி அமைப்பை அடியோடு ஒழிக்கப் பாடுபடுபவன். நான் எனது பிரச்சாரத்தில், கடவுளே இல்லை என்று சொல்லுவதற்காக, அது மூட நம்பிக்கை என்று நல்ல வண்ணம் மக்களுக்கு விளக்குவதற் காகக், கடவுளையே செருப்பால் அடிக்கும்படிச் சொல்லும் அளவுக்கு நான் ஆளாகியிருக்கிறேன். இந்த நிலையிலேயே

நான் 92 வயது கடந்து, 93 வயது தோன்றிவிட்டவனாக இருக்கின்றேன். கடவுள் இருந்தால், என்னை விட்டுக் கொண்டு இருப்பானா?

உண்மையில் எனது தொண்டு சாதி ஒழிப்புத் தொண்டு தான் என்றாலும், அது நமதுநாட்டைப் பொறுத்தவரையில் கடவுள், மதம், சாஸ்திரம், பார்ப்பன ஒழிப்புப் பிரச்சார மாகத்தான் முடியும்! இந்த நான்கும் ஒழிந்த இடம்தான் சாதிஒழிந்த இடமாகும்! நாகரிகத்திற்காகச் சிலர் சாதிஒழிய வேண்டும் என்கிறார்கள். அவர்கள் இந்த மேற்கண்ட நான்கையும் ஒழிக்கத் துணிய மாட்டார்கள். சுதந்தர உணர்ச்சியும் அறிவும்ஏற்படாமல் சாதியைஒழிக்கமுடியாது! மடமைக்கும், அடிமைத் தன்மைக்கும் ஆக்கம் அளித்துச், சாதியைநிலை நிறுத்துவதுதான், சாதியை ஒழியாமல் பாது காப்பதுதான், கடவுள் மதம் சாஸ்திரம் பார்ப்பனர் என்ற நான்குமாகும்!

சாதி ஒழியவேண்டும் என்று மனப்பூர்வமாகச் சொல் பவர்கள், இந்த நான்கு ஒழிப்பிற்கும் சம்மதித்தவர்களாகவே தான் இருப்பார்கள். நமது மக்களில் பெரும்பாலோர் இன்று அப்படி ஆகிவிட்டார்கள் என்பதுதான் எனது உற்சாகத்திற்குக் காரணம் ஆகும். எதனால் அப்படிச் சொல்கிறேன் என்றால், சேலம் மூட நம்பிக்கை ஒழிப்பு மாநாட்டையும், அதனை அடுத்து நடந்த பொதுத் தேர் தலில் தி. மு. க. பெற்ற பெரிய வெற்றியையும் கொண்டு தான் இப்படிச் சொல்லுகிறேன்!

அதாவது, கடவுளைச் செருப்பால் அடித்ததாக 10 லட்சக்கணக்கான பத்திரிகைகள், 10 லட்சக்கணக்கான துண்டுப்பிரசுரங்கள், மாணவர்கள், வக்கீல்கள், அதிகாரிகள், சில பெண்கள், மற்றும் காங்கிரஸ் இயக்கம், சுதந்தரா இயக்கம், ஜனசங்க இயக்கம் முதலிய பலவும் எதிர்ப்பாகப் பாடுபட்டும்; இவ்வளவு பெரிய வெற்றி தி.மு.க. பெற முடிந்தது என்றால், என்னுடைய கருத்து மெய்யாகி வெற்றிபெற்றது என்பது யாருக்கும் விளங்கும்.

இனி நமது சாதி ஒழிப்புக்கு, மக்களில் யாரும் எதிர்ப்பு இல்லை என்பது உறுதியான செய்தியாகிவிட்டது. இந்த நிலையில் நான், நமது மக்களை அடிபணிந்து வேண்டிக் கொள்வதெல்லாம், கோயில்களுக்குப் போகாமல் இருக்க வேண்டும்; உற்சவங்களில் கலவாமல், மதப் பண்டிகைகள் கொண்டாடாமல், நெற்றிக்குறி அணியாமல் இருக்க வேண்டும் என்பதே ஆகும்!

மற்றும் நான் நினைக்கின்றேன்; அண்மையில் ஓர் மாநாடு கூட்டிக், கோயில்களுக்குப் போகிறவர்களை அடிபணிந்து வேண்டிக் கொள்வதன் மூலம், போகாமல் இருக்கச் செய்யலாமா என்று. யோசனை கேட்டுக் காரியத்தில் தொடரலாமா என்று சிந்திக்கிறேன்.''

—இதுதான் பெரியாரின் 93-வது பிறந்த நாள் விண்ணப்பமாகும்.

10-10-71 அன்று திருச்சியில் சிந்தனையாளர் கழகம் பெரியாரின் 93-வது பிறந்த நாள் விழாவைக் கொண்டாடியது. கே. எம். சுப்பிரமணியம் பி. இ., கோவிந்தராஜலு, ஆனைமுத்து ஆகியோர் முயற்சியில் பெரியாருக்கு வெள்ளித் தட்டு, வைரமோதிரம் ஆகியவை வழங்கப்பெற்றன. விழாவில் அன்பில் தர்மலிங்கம், சத்தியவாணிமுத்து, எஸ். இராமச்சந்திரன், Dr. வி. சி. குழந்தைசாமி, மா. கி. தசரதன், என். திருஞானசம்பந்தம் பி. இ., கே. வி. சுப்பய்யா, கி. வீரமணி ஆகியோர் பெரியாருடன் பங்கேற்றனர். அன்று மாலை பெரியார், பொதுக் கூட்டத்தில், ''நான் இப்போது பதினான்கு அமைச்சராக அல்லவா இருக்கிறேன்'' என்றார்! இரவு 7-15 மணிக்குத் தி. பொ. வேதாசலனார் மறைந்ததாகச் செய்தி கிடைத்தது. மறுநாள் காலை பெரியார், மணியம்மையார், ரங்கம்மாள் சிதம்பரம், என். எஸ். சம்பந்தம் ஆகியோர் 9 மணிக்குத் தென்னூரில் வேதாசலனார் இல்லம் சென்றனர். அன்று மாலை 6 மணிக்கு இடுகாட்டிலும் பெரியார் இரங்கலுரை ஆற்றினார். பழமையை நினைவு கூர்ந்து மிகவும் வேதனைப்பட்டார்.

பர்மாவில் பெரியார் சுய மரியாதை இயக்கம் என்பதாக ஒன்று தோற்றுவிக்கப்பட்டு, நல்லவிதமாக அது செயல்படத் துவங்கிற்று. "இப்போது ஏன் கடவுள் அவதாரம் எடுப்பதில்லை? நாட்டில் கொடுமைகள் நடக்கவில்லையா என்ன? மனிதனுக்கு இப்போது அறிவு வளர்ந்துவிட்டது என்பதற்குச் சான்றுதானே அது!" என்று பறங்கிமலையில் ஒரு பொதுக்கூட்டத்தில் பெரியார் வினவினார் 20–10–71-ல். வீரமணி ஓர் அறிக்கை வாயிலாகப், பெரியாரின் உடல் நிலை கருதி, அவர்களைப் பல முறை காரிலிருந்து இறங்கி இறங்கி ஏறாவண்ணம் நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்யுங்கள். கூட்ட மேடையில் பெரியார் அவர்களையும் உட்காரவைத்து விட்டுப், பலரை முன்னதாகப் பேசச் சொல்லிப், பெரியார் களைப்படைந்த பின்பே அவர்களைப் பேச அனுமதிக்காதீர்கள்! இதைத் தவிர்க்க, முன்னதாக அதிகமான தோழர் பேசாதபடி ஏற்பாடு செய்யுங்கள், என்றெல்லாம் அன்பு வேண்டுதல் தந்திருந்தார்.

பவானியில், இராவண காவியம் இயற்றிய புலவர் குழந்தை அவர்களுக்கு 6–10–71-ல் பெரியார் பொன்னாடை போர்த்தி, "இராவணகாவியம், இராமாயண ஆராய்ச்சி போன்ற நூல்களைப் பிள்ளைகளுக்குப் பாடமாக வைக்க வேண்டும்" எனக் கழறினார். நெய்வேலி பொதுக்கூட்டத்தில் 17ந்தேதி பெரியாருக்கு 93 கத்திகளை மாலையாகத் தொடுத்துச் சூட்டினார்கள். "ஆச்சாரியார் குலக்கல்வித் திட்டம் கொண்டு வந்த நேரத்தில், 1953–ல், நான் கேட்டேன். அப்போது ஒரு மாதத்திற்குள் எனக்கு 600, 700 கத்திகளை அன்பளிப்பாகத் தந்தார்கள் மக்கள். ஆனால் இப்போது கத்தி தேவைப்படவில்லையே" என்பதாகப் பகர்ந்தார் பெரியார்.

சட்ட மன்றத்தில் கேள்வி ஒன்றுக்கு பதிலளித்த போது முதலமைச்சர், பெரியாருக்கு அரசு விழா நடத்தவும், தபால்தலை வெளியிடவும் யோசனை இருப்பதாகவும், இதற்கு அனைத்துக் கட்சியாரும் சம்மதமளித்ததாகவும் கூறினார். 1-11-71 அன்று, சேலம்

வழக்கைத் தள்ளுபடி செய்யக்கோரி, அய்க்கோர்ட்டில் Hindu, Indian Express, தினமணி சார்பில் மனுச் செய்யப்பட்டதை ஏற்காமல், 5வது மாகாண மாஜிஸ்ட்ரேட் தொடர்ந்து விசாரிக்கலாம் எனத் தீர்ப் பளிக்கப்பட்டது. நவம்பர் 1ல் புதுச்சேரியில் பெரியார் சிலை வைக்க முடிவு செய்து, அங்கேயே 14,000 ரூபாய், உடனே வசூலாயிற்று.

சேலம் நேரு ஸ்டேடியத்தில் 4-11-71 ல் புதுமையான பெருவிழா; மாலை 5–30 மணிக்கு, அமைச்சர் கே. ராஜா ராம் தலைமையில் பெரியாருக்குக் கலைஞர் வெள்ளிச் சிம்மாசனம் வழங்கல். ஈ. ஆர். கிருஷ்ணன் எம். பி. வர வேற்றார். சேர்மன் பழனியப்பன், வீரபாண்டி ஆறுமுகம் எம். எல். ஏ., எம். என். நஞ்சையா, மா. முத்துசாமி எம்.பி, செ. கந்தப்பன் எம். எல். ஏ., கி. வீரமணி ஆகியோர் உரை நிகழ்த்தினார்கள். வெள்ளிச் சிம்மாசனத்தில் தந்தை பெரியாரைக் கலைஞர் அமர்த்தினார். எதிர்பாராத விதமாகப் பெரியார் எழுந்து, கலைஞரை இழுத்து, அதில் அமர்த்திய காட்சி, பெருத்த ஆரவார ஆனந்தக்களிப்பினை வருவித்தது.

கலைஞர் அப்போது ஆற்றிய உரை:—

மனிதன் வாழ்விலே எல்லா நாட்களும் உணர்ச்சிமய மான கட்டங்கள் உள்ள நாட்கள் அல்ல. ஏதாவது உள்ளத் தைத் தொடும் சம்பவங்களும், வாழ்வில் மறக்க முடியாத நினைவுகளை ஏற்படுத்தும் சம்பவங்களும்தான் அவனை உணர்ச்சிமயமாக்கி வரும் நாட்களாகும்.

தந்தை பெரியாரவர்களை நான் வெள்ளிச் சிம்மாசனத் திலே அமரவைத்தபோது மிகுந்த மகிழ்ச்சி அடைந்தேன். திரும்ப அவர்கள் என் கையைப் பிடித்திழுத்து என்னை அதில் உட்காரவைத்த போது என் உடல் சிலிர்த்தது; நா தழுதழுத்தது; கண்கள் கண்ணீர் சிந்தின. உள்ளபடியே என்னால் பேச முடியவில்லை. மிகவும் உணர்ச்சி வயப்பட்டு இருக்கிறேன்! இது என் வாழ்நாளிலேயே மறக்க முடியாத பொன்னாளாகும்.

இங்கே தரப்பட்ட வெள்ளிச் சிம்மாசனத்தில் பெரியார் அவர்களை உட்காரவைத்தபோது அவர்கள் சிறிது நேரம் தான் அதில் உட்கார்ந்திருந்தார்கள். இந்த சிம்மாசன அமைப்பு அவர்களை வெகு நேரம் உட்கார வைக்க முடியாத ஒன்றாகும். பின்னால் சாயமாட்டார்கள், கைகளை இரண்டு பக்கமும் ஓரளவுக்கு வைப்பார்கள். பிறகு எழுந்து வழக்கமாக அவர்கள் அமரும் சுதந்தர மான இந்த இடத்தில் அமர்ந்து கொள்வார்கள். அவர்களது பொதுவாழ்க்கையே இப்படிப்பட்ட ஒன்றாகும். வெள்ளிச் சிம்மாசனமானாலும்.பெரியாரைக் கட்டுப்படுத்தி உட்கார வைக்க முடியாது. பெரியார் அவர்களை ஒரு கட்டுக்குள் கொண்டு வருவது என்பது எவராலும் செய்ய முடியாத ஒன்று. அவ்வளவு சுதந்திரமானவர் அவர். அவர் தமிழ் நாட்டிலே இருக்கிற 4 கோடித் தமிழர்களின் இதயச் சிம்மா சனங்களில் என்றென்றும் வீற்றிருப்பவர்.

சிம்மாசனத்திற்குத் தமிழில் அரியணை என்று பெயர். தமிழை அரியணை ஏற்றியவர். தமிழர்களை அரியணைக்குத் தகுதியாக்கியவர். தன்மான உணர்வுகளை அரியணையில் ஏற்றி அமரவைத்த பெருந்தலைவர் அவர்களுக்கு இந்த வெள்ளிச் சிம்மாசனம் மிகச்சாதாரண பரிசாகும். எவ்வளவு பெரிய பரிசுகளை அளித்தாலும் அவரது தொண்டுக்கு எடைக்கு எடை அளித்ததாக ஆகவே முடியாது.

தந்தை பெரியார் அவர்களின் கொள்கைகளை லட்சி யங்களை நாம் எந்த அளவுக்குக் கடைப்பிடிக்கின்றோம் என்பதில்தான் அவர்களின் வாழ்வு நீடிப்பு இருக்கிறது. பெரிய ஆலமரமாய் இன்று அவர்கள் காட்சி அளிக் கிறார்கள். எனவே அதன் கீழே நிற்கும் நாங்கள் எங்களுக்கு வரும் எதிர்ப்புகளை எல்லாம் துச்சமெனக் கருதுகிறோம்.

பெரியார் அவர்கள் சாவைக் கடந்தவர்கள். பெரியாரின் கொள்கைகள் என்றென்றைக்கும் சாகாதவை. நாட்டில், உலகில் மனிதனுடைய பகுத்தறிவு எதுவரை வேலை செய்து கொண்டு இருக்கிறதோ அதுவரை பெரியார் அவர்கள் வாழ்வார்கள்; வாழ்வார்கள்!

சுயநலம்-பிறநலம் என்ற இருசொற்களுக்கும் பெரியாரைப் போல் இதற்கு முன்போ, பின்போ யாரும் விளக்கமளித்திருக்கவே முடியாது. என்ன நயமான வர்ணனைகள்:- "சுயநலத்துக்கு அறிவே தேவையில்லை. எந்த ஒரு ஜீவனும் உணவுக்கு அலைவதும், உயிரைக் காப்பதும் இயற்கையே. ஒவ்வொரு உயிரிடத்தும் சில அருமையான, அற்புதமான குணங்கள் உண்டு என்றாலும், அவையெல்லாம் அந்தந்த உயிரினத்தின் சுயநலத்துக்கேதான் பயன்படுகின்றன. மனிதன் மற்ற உயிர்களைவிட வேறாகிப், பகுத்தறிவு உள்ளவன் எனினும், அவனது வாழ்க்கையும் தன்னலம், புகழை, அடிப்படையாய்க் கொண்டே அமைகிறது.

மனிதன் தன்னுடைய நலத்தை மட்டுமின்றித் தாய், தகப்பன், பெண்டு, பிள்ளை முதலியோரின் நலத்தைப் பற்றியும் கவலை கொள்கிறான் என்றால், அதுவும் பெரிதும் சுயநலத்தை உத்தேசித்ததே ஆகும். மனிதன் ஏன் தன் மனைவியை அழகுபடுத்துகிறான்? தான் பயன்படுத்தும் மாடு கன்றுகளின் நலத்தை எதற்காகக் கவனிக்கிறான்? தனது நாய்க்கு எதற்காக நல்ல போஷணை கொடுக்கிறான்? எதற்காகத் தான் குடியிருக்கும் வீட்டைப் பாதுகாக்கிறான்? எதற்காகத் தனது பணத்தைப், பொருளைப் பத்திரப்படுத்திப், பெருக்குகிறான்? ஓட்டல்காரன் எதற்காகத் தனது வாடிக்கைக்காரர்களுக்கு நல்ல சாப்பாடு போடுகிறான்? பத்திரிகைக்காரன் எதற்காக நல்ல, அதிசய, புதிய செய்திகளைக் கண்டு பிடித்துப் பிரசுரிக்கிறான்? வைத்தியன் எதற்காகத் தன்னிடம் வரும் நோயாளிகளையெல்லாம் சவுக்கியப்படுத்த வேண்டுமென்று கவலைப்படுகிறான்? வக்கீல் தன்னிடம் வரும் கட்சிக்காரர்களுக்கு அனுகூலம் ஏற்பட வேண்டுமென்று பல வழிகளிலும் பாடுபடுவது எதற்காக? தாசிகள் தங்களிடம் வருபவர்களிடம் தங்களுக்குத் காமம் இல்லாவிட்டாலும், எதற்காக மேல்விழுந்து இன்பமளிக்கிறார்கள்? இவர்கள் எல்லாரும் பிறர் நலத்தைப் பேணுவதாக நமக்குக் காணப்பட்டாலும்,

அவற்றின் பயனாய்ச் சுயநலம் அடைவதற்கேயாகும் என்பதில் அய்யமுண்டோ? இது தெளிவாய்த் தெரிகிறதல்லவா? ஆதலால் ஜீவசுபாவமே சுயநலந்தான் என்பதில் சந்தேகமே இல்லை!

மனிதனுக்கு நலம் என்பவற்றுள் எல்லாம் தலைசிறந்த நலம் அவன் மனத்திருப்தியே ஆகும். பிறர்நலத்துக்காக அவன் செய்யும் காரியம், அவனுக்குப் பூரண திருப்தியளித்தால், அதுவே அவனது (சுய) நலமாகும்.

ஒரு மனிதன் தெருவில் நடக்கிறான். அங்கே ஓர் அழிந்து போன வேலிக்குள், பூஞ்செடியில், 6 அங்குல சுற்று வட்டமும் பல இதழ்களும் கொண்ட ஒரு ரோஜா மலர் இருக்கிறது. அது அவனுக்கு அதிசயமும், அழகும் நிறைந்த காட்சியாகக் காணப்படுகிறது. அங்கு யாரும் இல்லாததால், அவன் பறித்துக் கொண்டு போனால் யாரும் கேட்க மாட்டார்கள். பறித்துக் கொண்டு போய்த் தன் காதலிக்குத் தரலாம். ஆனால் அவன் நினைக்கிறான்—நாம் பறித்துச் சென்றால் இருவரும்தானே மகிழ முடியும். இந்த வேலியைச் செப்பனிட்டு, மலரை யாரும் பறிக்க முடியாமல் செய்தால், இவ்வழியே செல்லும் ஆயிரக்கணக்கானோர் மகிழ்ச்சியடைவார்களே—என்று! அவ்விதமே செய்கிறான். பலர் மகிழ்வதை அவன் கண்டு இன்பம் அனுபவிக்கிறானே—அது சுயநலமில்லையா?

ஒரு மனிதன், இன்னொருவன் பசியால் கஷ்டப்படும் போது, தனக்கு மட்டும் உள்ள உணவில் பாதியை அவனுக்குத் தந்து, அவன் பசியை ஆற்றிவிட்டுத், தான் சிறிது பசிக் கஷ்டத்தை அனுபவித்தாலுங்கூட, ஒரு மனிதனின் பசியைப் போக்கினோம் என்று, ஒரு இன்பத் திருப்தி அடைவதில் சுயநலம் இல்லையா?

ஒரு மனிதன் ரயிலில் போகும்போது, மற்றொருவன் கதவைச் சாத்தியதில் இவன் விரல்கள் நசுங்கிவிடுகின்றன. இதைப் பார்த்த இன்னொருவன் மனம் பதறி, வேதனை அடைந்து, வேறு யாரும் முந்துவதற்குள், இவன் தனது வேட்டியைக் கிழித்து, நசுங்கிய விரல்களில் சுற்றித், தான்

குடிப்பதற்கு வைத்திருந்த தண்ணீரையெல்லாம் அதில் ஊற்றி, நனைத்துக் கட்டி விடுகிறான். அடுத்த ஸ்டேஷன் வந்ததும் இவன் சொல்லிக் கொள்ளாமலே இறங்கித், தன் வழியே போகிறான். தன் வேட்டியின் கிழிசலைப் பார்க்கும் போதெல்லாம் அது பயன்பட்ட காரியத்தை எண்ணி மகிழ் கிறான். இதில் சுயநலம் இல்லையா?

திருடுகிறான். தாசி வீட்டுக்குச் செல்கிறான். அடுத்தவன் குடும்பத்தைக் கெடுக்கிறான். பழிவாங்குகிறான். இதிலெல் லாம் அவனுக்கு ஒருவித மனத்திருப்தி ஏற்படுகிறதே—பிறர் துன்பத்தினால் ஏற்படும் சுயநலம் இல்லையா?

இன்பமும் திருப்தியும் ஏற்படுகிற காரியம் எல்லாம் சுயநலம். ஆதலால் மனிதன் பிறர் நலம் பேணித், தன்னலம் இல்லாமல் செய்கின்ற காரியம், எதுவுமே இல்லை என்பதே உண்மை.''

சென்னை கோகலே ஹாலில் நண்பர்கள் கழகம் ஏற்பாடு செய்திருந்த ஒரு கூட்டத்தில் பெரியார் ''நாம் கோயிலுக்குள் செல்ல உரிமை கேட்டுப் போராடி, உள்ளே சென்று விட்டோமானால், உடனே பார்ப்பான் வெளியில் வந்து, இப்போது நாம் செய்யும் காரியத்தைப், பிரச் சாரத்தைத், தொடங்கி விடுவான். நாம் பேதங்களை ஒழிக்கத்தானே கோயிலுக்குள் செல்ல விரும்புகிறோம்! இப்போது போய்க் கோயில் ரிப்பேருக்காக அரசு 4½ கோடி ரூபாய் செலவழிக்கிறதாம். என்ன நியாயம்? இந்தப் பணத் தில் விஞ்ஞான ஆய்வுக் கூடங்கள் அமைக்கலாமே!'' என்று கருத்துரைத்தார்.

> முதல்வர் கலைஞர் 8-11-71 மாலை அமெரிக்கா புறப்பட்டுச் சென்றார். உடுமலை நாராயணன் மறைவால் ஏற்பட்ட பொள்ளாச்சி பார்லிமெண்ட் இடைத் தேர்தலில், தி.மு.க. வேட்பாளர் மோகனராஜ் அமோக வெற்றி பெற்றார். தனக்கு இந்தத் தொகுதி வேண்டுமென்று கேட்ட, மதியழகன் தம்பி கே. ஏ. கிருஷ்ணசாமிக்கு, ராஜ்யசபை உறுப்பினர் பதவியைத் தருவதாகக் கலைஞர் உறுதி கூறினார். பொள்ளாச்சி இடைத்தேர்தலும் புதிய பாடமும், என்ற தலையங்

கத்தில், 16-11-71-ல் "விடுதலை" எதிர்க்கட்சிகள் திருந்த வேண்டும் என்று கேட்டுக்கொண்டது.

பெரியாருக்கும் சேலம் வழக்கில் நோட்டீஸ் அனுப்புமாறு உயர்நீதி மன்றம் 18-11-71-ல் தீர்ப்பளித்தது. 28-ந் தேதி திராவிடர் மாணவர் கழகம் துவக்கப்பட்டது. பெரியார் 30-11-71 அன்று பொது மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டார். அமைச்சர்களும், புதிதாக மேயரான திருமதி காமாட்சி ஜெயராமனும், பெரியாரைச் சந்தித்து, விசாரித்தனர். சிகாகோவிலிருந்த முதல்வர் கலைஞரிடம் ஆசிரியர்களும், மாணாக்கர்களும் பெரியாரைப் பற்றியும் அன்னாரின் சமூகத் தொண்டு குறித்தும் நிரம்பக் கேட்டு விளக்கம் பெற்றதாக "விடுதலை"யில் செய்தி வந்தது. 1971 ஜூன் 7-ந் தேதி முதல், பிற்படுத்தப்பட்டோருக்கு 31 சதவீதமும், தாழ்த்தப்பட்டோருக்கு 18 சதவீதமும் பதவிகளைக் கணக்கிடுமாறு 2-12-71ல் அரசாணை பிறப்பிக்கப் பெற்றது.

நமது கடவுள்களாக நாம் கருதிக் கொண்டிருக்கிற எல்லாமே காப்பியடிக்கப்பட்டவை; ஒரிஜினல் அல்ல என்ற பெரியாரின் ஆராய்ச்சி பூர்வக் கருத்துகள், ஆழ்ந்த சிந்தனைக்குரியவையாகும்:— "கடவுள் என்பதற்கு ஒரு சொல் வடமொழியிலும் கிடையாது. தமிழிலும் கிடையாது. தமிழில் கடவுள் என்னும் இந்தச் சொல் தமிழனுக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்குள் கற்பிக்கப்பட்ட சொல்லேயல்லாமல் பழங்காலச் சொல் என்று கூற முடியாது. இருக்கின்ற இலக்கியங்கள் தொல்காப்பியத்திற்குப் பிற்பட்டனவேயாகும். தொல்காப்பியமும் ஆரியர் வருகைக்குப் பிற்பட்டதேயாகும். அதுதான் தமிழனுக்கு ஆதி நூலாம்!

இன்றைய நம் கடவுள்கள் அத்தனையும், பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியோரும், அவர்களது பிள்ளை குட்டிகளும் ஆரியக் கற்பனையே. ஆரிய வேதங்களில் அவர்களால் கொண்டு வரப்பட்டவையேஎன்பதல்லாமல்,தமிழர்க்குரியதாக ஒன்றைக்கூடச் சொல்ல முடியவில்லை. சிவன், விஷ்ணு தமிழருடையதென்று சிலர் சொல்லிக் கொண்ட

போதிலும், அவற்றின் இலக்கணம் வடமொழி முறையே யாகும். லிங்கம், சதாசிவம் முதலிய சொற்களும், அவற்றின் கருத்துகளும் ஆரிய மொழியேயாகும். கடவுளர்க்கு ஆரியர் இட்ட பெயரனைத்தும், மேல் நாட்டுக் கடவுளர்க்கு இட்ட பெயர்களை அனுசரித்தே என்பதைப் பின்வரும் பட்டியல் மூலம் ஒப்பிட்டுக் காணலாம்:—

சிவன், இந்திரன்—ஜுபிடர்; பிரம்மா—சாட்டர்னஸ்; எமன்—மைனாஸ்; வருணன்—நெப்டியூன்; சூரியன்—சோல்; சந்திரன்—லூனாஸ்; வாயு—சயோனஸ்; கணபதி—ஜுனஸ்; குபேரன்—புளூட்டஸ்; கிருஷ்ணன்—அப்போலோ; நாரதர்—மெர்க்குரி; இராமன்—பர்க்கஸ்; கந்தன்—மார்ஸ்; துர்க்கை—ஜுனோ; சரஸ்வதி—மினர்வா; அரம்பை—வீனஸ்; உஷா—அரோரா.

கடவுள்களின் பிறப்பு பற்றி வழங்கப்படுகின்ற கதைகளைப் போன்ற ஆபாசக் குப்பை எங்குமே காண முடியாது.”

4–12–71 அன்று பாக்கிஸ்தான் அதிபர் யாஹ்யாகான் இந்தியா மீது போர்ப் பிரகடனம் செய்து விட்டார். அமெரிக்காவில் கண் மருத்துவம் வெற்றிகரமாக நடைபெற்ற பின்னர், கலைஞர் சிக்காகோ, நியூயார்க் முதலிய மாநகரங்கட்குச் சென்று விட்டு, 5-12-71ல் சென்னை வந்து சேருவார் எனத் தகவல் கிடைத்தது. கண்ணின் இடப்புறம் இருந்த தொல்லை நீங்கி, மூக்கடைப்பும், தொண்டைக் கமறலும் அறவே அகன்று, தெளிவோடும் தென்போடும் வெண்கலக் குரலோடும், பிற்பகல் 1 மணிக்குப் பதிலாக 7 மணிக்கு வந்த கலைஞரைப், பெரியார், விமான நிலையத்தில் வரவேற்றார். அன்றே கலைவாணர் அரங்கில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த பாக்கிஸ்தான் கண்டனக் கூட்டத்தில் முதல்வர் கலைஞர், தந்தை பெரியார், மற்றும் அனைத்துக் கட்சித் தலைவர்கள் பங்கேற்றனர். “55 கோடி மக்கள் மீதும் 6 கோடி மக்கள் போர் தொடுத்திடவா?” என்று முழங்கினார் பெரியார்.

முதல்வர் கலைஞர் நியூயார்க்கிலிருந்து தந்தை

பெரியாருக்கு எழுதிய கடிதம் ஒன்று 3-12-71 "விடுதலை" யில் பிரசுரிக்கப்பட்டிருந்தது:-"அன்புமிக்க அய்யாபெரியார் அவர்கட்கு தங்கள் கருணாநிதி வணக்கம். இன்று நயாகரா நீர்வீழ்ச்சி பார்த்துவிட்டு, அமெரிக்காவில் மிகஉற்சாகமாகக் கொண்டாடப்படும் (Thanks giving day) நன்றியறிவிப்பு நாள் விழாவில் நயாகரா கிளப் விருந்தினராக இருந்து விட்டு, நியூயார்க் செல்லும் வழியில் இந்த மடல் எழுதுகிறேன்.

தாங்களும் அம்மையாரும் வீரமணியும் நலமாக இருப் பீர்கள் என நம்புகிறேன். தங்களுக்குத் தேவைப்படும் ஓய்வுபற்றி நான் அதிகம் கூறவேண்டியதில்லை.

சிக்காகோ பல்கலைக் கழகத்தில் அரசியல் பிரிவில் அரசியல் கருத்தரங்கில் கலந்து உரையாற்றினேன். அங்கு தங்களைப் பற்றியும், நமது இயக்க வரலாறு பற்றியும் அமெரிக்க மாணவர்களும் பேராசிரியர்களும் நிறையத் தெரிந்து வைத்திருக்கிறார்கள். நம்மவர்கள் தாம் தமிழகத் தில் நமது வளர்ச்சியை, சூரியனை மேகத்தால் மூட நினைப்பது போல், இருட்டடிப்புச் செய்ய முனைகிறார் களே தவிர, உலகின் பல்வேறு நாடுகளில் நமது பணியின் பயன்பற்றிப் பேசப்படுகிறது.

சிக்காகோ பல்கலைக்கழகத்தில் சுயமரியாதை இயக்கத் தின் வளர்ச்சி, தங்கள் ஓயாத தொண்டு, தங்கள் காலத்தி லேயே கொள்கைகள் பெற்றுவரும் வெற்றிகுறித்தெல்லாம் குறிப்பிட்டேன். பேச்சுக்குப் பிறகு தங்களைப்பற்றியும், தன்மான இயக்க வளர்ச்சி பற்றியும் நிறைய வினாக்கள் எழுப்பினார்கள். பதில்களை விளக்கமாக அளித்தேன்.

கண்ணில் அறுவை சிகிச்சை வெற்றிகரமாக முடிந்தது. பயணத்தை முடித்துக் கொண்டு, தங்களையும், தமிழகத்து அன்பு முகங்களையும் காண, டிசம்பர் முதல்வாரத்தில் வந்து சேருகிறேன். அமெரிக்காவில் விஞ்ஞானக்கூடங்கள் பல வற்றையும் கண்டேன், அவைகளின் சிறப்புகளை நேரில் தான் விளக்கவேண்டும். தங்கள் அன்பு மறவாத, மு. கருணாநிதி. வணக்கம்."

வங்கதேச அரசை இந்தியா அங்கீகரித்ததாக 6-12-71 அன்றைய முதல் பக்கத் தலைப்புச் செய்தியாக "விடுதலை" ஏடு தந்தது; 1965-ல் இந்தியாமீது பாக்கிஸ்தான் படையெடுத்தபோது ஆச்சாரியார் என்ன எழுதினாரோ, அதையே இப்போதும் செய்வது பச்சை துரோகப்போக்கு—என்று 10-ந்தேதி தலையங்கமும் எழுதியது. 16-ந்தேதி வங்கதேசம் பாகிஸ்தான் பிடியிலிருந்து விலகிப் பரிபூரண விடுதலை பெற்றது. சுதந்திர வங்கதேசத்துக்கு வாழ்த்துத் தெரிவித்தும்; முஜிபூர் ரஹ்மானை விடுவிக்கக் கோரியும் தமிழ்நாடு சட்ட மன்றம் 17-12-71 அன்று தீர்மானங்கள் இயற்றியது.

பெரம்பலூர் வட்டம், குன்னம், குடும்பநல விழாவில் பெரியார், "பெண்களின் திருமண வயதை உயர்த்திச் சட்டம் கொண்டுவரவேண்டும். குறைவாகப் பிள்ளைபெற இது அனுகூலமாயிருக்கும்" எனக் கருத்தறிவித்தார். 28-ந்தேதி ஆனைமலையில், ஏ.என். நரசிம்மன் நினைவுப் பகுத்தறிவாளர் மன்றம், நரசிம்மன் நகர் காலனிஆகியவை திறக்கப் பட்டன. மன்றம் துவக்கியவர் ஆனைமலை நகரத்து மாப்பிள்ளையும், தமிழ்நாடு சட்டமன்றப் பேரவைத் தலைவருமான கே.ஏ. மதியழகன்! பெரியாரும், ஈ.வெ.கி. சம்பத், அமைச்சர்கள் செ. மாதவன், க. ராஜாராம் ஆகியோரும் விழாக்களில் பங்கு பெற்றனர்.

29-12-71 திருச்செங்கோட்டில், "உயிர்ச்சேதம் எதுவுமே இல்லாமல் பகுத்தறிவு ஆட்சியை நிறுவியவர் உலகிலேயே அண்ணா ஒருவர்தான். ரஷ்யாவில் நிறுவினார்கள் என்றாலும் அங்கே பலாத்காரப் புரட்சிதான் தேவைப் பட்டது" என்று பெரியார், புத்தம்புதிய நற்கருத்தொன்றை நவின்றார்!

பெரியாரின் புத்தாண்டுச் செய்தியினைப் பெறுகின்ற பெருவாய்ப்பைப் பெற்றுப் பிறந்தது 1972. "கடந்த ஆண்டில் தமிழ் நாட்டுக்கும், தமிழர் சமுதாயத்துக்கும், மிகவும் பாராட்டத்தக்க நன்மையும், வளர்ச்சியும், தி.மு.க. ஆட்சியின் காரணமாய் அடைந்திருக்கிறோம்! வரப்போகிற

ஆண்டிலும், அதற்குக் குறைவில்லாமல், மிகுதியாகவே நன்மையும், வளர்ச்சியும் அடைவோம் என்பதில் அய்ய மில்லை! சாதி, 'மத, கட்சி வேறுபாடில்லாமல், அறிவுக்குப் பிரதானம் கொடுத்து, நாடும் சமுதாயமும் முன்னேற வேண்டும்!'' (''விடுதலை'' முதல்பக்கப் பெட்டி 1-1-72)

2-1-72 அன்று தஞ்சையில் பெரியார் பிறந்த நாளை ஒட்டி நடந்த விழாவில், தோழர்கள் திரட்டிய 93 கிராம் தங்கம் சி. பி. சிற்றரசு வாயிலாகவும், தோழர் கா. மா. குப்புசாமி அளித்த ரூபாய் 2,000, மதுரை மேயர் முத்து மூல மாகவும் பெரியாரிடம் வழங்கிடப் பெற்றன. எஸ். இராமச் சந்திரன் தலைமையில் பல்லவன் போக்குவரத்துக் கழகத்தை முதல்வர் கலைஞர் 3-1-72 அன்று தொடங்கி வைத்தார். முதல்வர் திரட்டும் ரூ. .10 கோடி தேசப் பாதுகாப்பு நிதிக்கு, எல்லோரும் தாராளமாக உதவுங்கள். மாவட்டந் தோறும் 2 கோடி 1 கோடி என்று வழங்கிடுங்கள் என்ப தாகப் பெரியார், தாம் செல்லும் ஊர்களில் வேண்டுகோள் விடுத்துவந்தார். பொதுப்பணித்துறையின் முதல் தலைமைப் பொறியாளர் (பொது நிர்வாகம்) என்ற பதவியில், முதல் தமிழராக, எஸ். பி. நமசிவாயம் 11-1-72ல் நியமிக்கப் பட்டார். 11-ந்தேதி முதல் புதுவை அரசின் நாட்டு வாழ்த்துப் பாடலாகப் புரட்சிக் கவிஞரின் ''வாழ்வினில் செம்மையைச் செய்பவள் நீயே மாண்புகள் நீயே என் தமிழ்த்தாயே'' என்னும் பாடல் இருக்குமென்றும்; அரசு நிகழ்ச்சிகள் அனைத்திலும் ஏதாவதொரு பாரதிதாசன் பாடல் இடம்பெற வேண்டுமென்றும் ஆளுநர் பி. டி. ஜாட்டியின் பேரால் ஆணை பிறப்பிக்கப்பட்டது.

9-1-72 அன்று பெரியார், திருச்சி சிந்தனையாளர் கழகத்தின் சார்பில், ''கம்யூனிசம்'' என்ற தலைப்பில் உறை யூரில் பேசிய சொற்பெருக்கு, அற்புதமான கொள்கைப் பெருக்கு; கருத்துப்பெருக்கு; காவிரியின் ஆடிப்பெருக்கு:— ''கம்யூனிசம் என்பதற்குத் தமிழில் பொதுவுடைமை என் பார்கள். இன்றைய தினம் உடைமை என்று கருதப்படுவ தெல்லாம் தனித்தனி மனிதனுக்குச் சொந்தம். பொது

வுடைமை என்றால் எந்தச் சொத்தும் எந்த மனிதனுக்கும் சொந்தமல்ல; எல்லாம் சர்க்காருக்குச் சொந்தம். எல்லோரும் உழைப்பது; உழைப்பினால் வரும் பொருளை எல்லோரும் அனுபவிப்பது.

உதாரணமாக இந்த உறையூர் ஒரு பொதுவுடைமை நாடாக ஆகின்றது என்றால், உறையூர் மக்கள் எல்லோரும் ஒரே குடும்பம் போன்றவர்கள். குடும்பத்தின் சொத்து எல்லாருக்கும் பொது என்பதுபோல், உழைப்பு எல்லாரும் செய்யவேண்டியது என்பதுபோல், வருவாயை எல்லாரும் சேர்ந்து அனுபவிப்பது என்பதுபோல், ஊரில் எல்லாமே பொதுவுடைமையாகிவிடுகிறது!

இதன் அடிப்படைத் தத்துவம் என்ன? மனிதன் கவலை உள்ளவனாகவே இருக்கிறான். பிரதமரானாலும், முதன் மந்திரியானாலும், நாட்டை ஆள்பவர்களுக்குப் பல பிரச்சினைகள்; சமாளிக்க வேண்டிய கவலைகள். கோடீசுரவன் ஆனாலும் எப்படி ஒரு கோடியைக் காப்பாற்றுவது என்று கவலை; அல்லது அடுத்தவனுக்கு 2 கோடி இருக்கிறதாமே என்று தம்மினும் மேம்பட்டவரைப் பார்த்துக் கவலை; ஏழை தனக்குச் சாப்பாடில்லையே; குச்சு வீட்டில் வாழ்கிறோமே; என்று, கவலைப் படுகிறான். மற்றவன் வசதியாக மச்சு வீட்டில் வாழ்கிறானே என்று மனம் புழுங்குகிறான். சொந்த உடைமை இருப்பதால் கவலை நிறைந்த வாழ்வாகி விடுவதால், பொதுவுடைமை ஏற்பட்டால் கவலையற்ற வாழ்வு பெறலாம் என்பதே தத்துவமாகும். இன்றைக்கு இந்தப்படிக்குப் பொதுவுடைமைக் கொள்கையினை ஏற்றுக்கொண்ட மக்கள் ரஷ்யா, சீனா, அங்கேரி, போலாந்து, ஆஸ்ட்ரியா, செக்கோஸ்லாவாகியா, கிழக்கு ஜெர்மனி ஆகிய நாடுகளில் 100 கோடிக்கு மேல் வாழ்கிறார்கள். இந்த நாடுகளில் கடவுளோ, மதமோ, சாஸ்திரமோ, முன்னோர்கள் நடப்போ ஒன்றும் கிடையாது; அறிவுதான் பிரதானம்.

நம் நாட்டுக் கம்யூனிஸ்டுகளுக்கு, வயிற்றுப் பிழைப்புச் சாதனமே தவிர, பொதுமக்கள் கடைத்தேறப் பொது

வுடைமைக் கொள்கையைப் பிரச்சாரம் செய்வதில்லை. மோட்சம், முக்தி என்ற வார்த்தைக்குத் துக்கநாசம், சுகப் பிராப்தி என்பது பொருள். இந்தக் துக்க நிவர்த்திக்கும், குறைபாடுகள் ஒழிப்பிற்கும் பரிகாரம் பொதுவுடைமை தான். ஆசையினால் ஏற்படும் குறைபாடும், தேவையினால் ஏற்படும் குறைபாடும் பொதுவுடைமையால் ஒழிந்துவிடும்.

ரஷ்யாவில், கணவன் மனைவியாக வாழ்கின்றவர் களுக்கு வசிக்க அறை கொடுக்கின்றார்கள். மற்ற வசதி களும் செய்து கொடுக்கின்றார்கள். இருவரும் இஷ்டப் பட்டுச் சேர்ந்து வாழ்கின்றனர். இஷ்டமில்லாதபோது பிரிந்து கொள்கின்றனர். ஏதாவது விவகாரம் என்றால், குழந்தைகள் யாரிடமிருப்பது என்பதாக வந்தால், அதற் கென்று தனிக் கோர்ட்டுகளில் தீர்த்துக் கொள்வார்கள். ஒருவன் மனைவியை இன்னொருவன் அனுபவித்தான் என்ற பேச்சே அங்கு வராது; அனுபவிக்கப் பலாத்காரம் பண்ணினான் என்றால்தான் கேஸ்! அங்கு பிள்ளைகளை அரசாங்கமே வளர்த்துக் கொள்கின்றது. இங்குதான் கொள்ளிபோட, சொத்துக்கு வாரிசாகப், பிள்ளை வேண்டும் என்கிறோம்.

அங்கு, கீழ்மேல் என்று உத்தியோகத்தில் வித்தியாசம் இல்லை. ஒரே சம்பளம், சமமான அந்தஸ்து. வேலைதான் வேறுவேறாக இருக்கும். உடலில் வலுவிழந்த வயோதிகர் களை அரசாங்கமே காப்பாற்றுகிறது. அங்கு புரட்டோ திருட்டோ கிடையாது. அங்கு கழிப்பிணித்தனம் அவமான மாகக் கருதப்படும். நாணயம் என்பது மக்களிடம் கரை புரண்டு ஓடும். மக்களுக்கு எந்த விதமான கவலைகளோ, குறைபாடுகளோ, கிடையாது. அதனால்தான் அங்கு, 100 வயது 120 வயது வரை பல்லாயிரக் கணக்கானவர்கள் உயிரோடு வாழ்கிறார்கள்.

அங்கு 1915-ல் புரட்சி ஏற்பட்டது. 1920–ல் சோவியத் ஆட்சி என்று பிரகடனம் செய்தார்கள். இந்தக் காலத்துக் குள்ளாக எவ்வளவு மேம்பாடு அடைந்து விட்டார்கள்.

எனவே எனக்குத் தோன்றிய பொதுவுடைமை சுருக்கமாய்ச் சொன்னேன்!''

20–ந் தேதி சென்னையில் பகுத்தறிவாளர் கழகக் கூட்டம், கா. திரவியம் தலைமையில் நடந்தது. அமைச்சர்கள் க. ராஜாராம், எஸ். ராமச்சந்திரன் ஆகியோர் பேசியபின் பெரியார், ''எதிரிகளை வென்று விடலாம், இனத் துரோகிகளை அடையாளம் காண்பது சிரமம். பகுத்தறிவுவாதி போல வேஷம் போடுவோரிடம் தான் நாம் மிகுந்த எச்சரிக்கையாயிருக்கவேண்டும்'' என்று உஷார்படுத்தினார். 23-ந் தேதி கடலூரில் ''இல்லாத கடவுளை இருப்பதாகக் கூறும் மடமையை ஒழிக்கவேண்டும் என்கிறோம் நாங்கள். இதிலென்ன தவறு?'' என்று பெரியார் கேட்டார்.

''தமிழரசு'' இதழின் சிறப்பு மலர் ஒன்றில் பெரியார் கட்டுரையொன்று வழங்கியிருந்தார். அதன் முடிவுரையாக, சாதி ஒழிப்பு போன்ற பணிகளுக்கு மத்திய அரசு தடையாக இருந்து வருவதால், தமிழ் நாடு தனியாகப் பிரிந்தால்தான் வழிபிறக்கும் என்ற எண்ணம் ஏன் உண்டாகக் கூடாது என்று கேட்டிருந்தார். அரசு இதழில் பிரிவினை வாடை வீசுவதாகச் சட்டமன்றம் வரையில் சிலர் பிரச்னை உருவாக்கினர். 22, 24 ஜனவரி 72 ''விடுதலை'' இதற்கான விளக்கங்களை நல்ல வண்ணம் தீட்டிக் காட்டிற்று. ''26-1-1950 Hindu ஏட்டில், பெரியார், ஏன் தனித் திராவிட நாடு வேண்டும் என்பது பற்றி விளக்கிக் கட்டுரை எழுதியிருந்தார். அதனால் ''இந்து''வின் கொள்கை திராவிட நாடு பிரிவினை என்றாகி விடுமா?'' என்று கேட்டது ''விடுதலை''.

25–ந்தேதி பகல் 11. 30 மணியளவில் சென்னை தேவி குருப் :தியேட்டர்களின் உரிமையாளர்கள் வேண்டியவாறு, பெரியாரும் மணியம்மையாரும் அங்கு சென்று, சுற்றிப் பார்த்து, வியந்து, ''மேல் நாட்டை ஒப்ப நம் நாட்டுத் தமிழர் ஒருவர் இதனை அமைத்துள்ளதற்காகப் பாராட்டுகிறேன்'' என்று வருகையாளர் பதிவேட்டில்

எழுதினார் பெரியார். 27–ந் தேதி மயிலாப்பூரில், "சாதி ஒழிந்த சமுதாயம் அமைக்கின்றாயா? அல்லது எங்களைப் பிரித்து விட்டு விடுகின்றாயா? என்று மத்திய அரசுக்கு நோட்டீஸ் விடவேண்டும்" எனப் பெரியார் முழங்கினார். அடுத்த இரண்டாம் நாள் வேலாயுதம்பாளையத்தில், "மாநில சுயாட்சி கேட்டு மத்திய அரசைக் கெஞ்சுவது எப்படியிருக்கிறதென்றால், ஒருத்தி ஒருபடி மிளகை அடுத்த வீட்டுக்காரியிடம் கொடுத்துவிட்டு, ஒரு டம்ளர் ரசத்துக்குப் பிச்சைகேட்டுக் கையேந்தி நின்றாளாம்; அது போல இருக்கிறது" என்ற அழகான எளிய உவமை கூறினார் பெரியார்.

5-2-72 சென்னை பொதுமருத்துவ மனையில், சுய மரியாதைப் பிரச்சார நிறுவனத்தின் துணைத்தலைவர் கோட்டையூர் சிதம்பரம் அவர்கள், மாலை 5 மணியளவில் இயற்கை எய்தினார். 1934 ல் இவருக்கும், திருவண்ணாமலை ரங்கம்மாளுக்கும் பெரியார் தலைமையில் சுயமரியாதைக் கலப்புத் திருமணம் நடைபெற்றது செல்லாது எனப் பிறகு ஒரு முறை கோர்ட் தீர்ப்பளித்திருந்தது. சந்திரன், ஜெயம் என இரு ஆண்மக்களும், மோகனா—வீரமணி, சூரியகுமாரி—சம்பந்தம் என இரு பெண்மக்களும் இவருக்கு உண்டு. பெரியார் திடலில், அன்னாரின் சடலம் பார் வைக்கு வைக்கப்பட்டிருந்தது. செய்தியறிந்து பெரியார் விரைந்து வந்து சேர்ந்தார். முதல்வர் கலைஞர், அமைச்சர் ப. உ. சண்முகம் ஆகியோர் அனுதாபத் தந்தி அனுப்பி யிருந்தனர். 6–2-72 காலை 10 மணிக்கு ஓட்டேரி இடு காட்டில் அடக்கம் நடைபெற்றது.

11-ந் தேதி சுப்ரீம் கோர்ட்டில் அர்ச்சகர் சட்டத்தை எதிர்த்து 28பார்ப்பனர் செய்திருந்த ரிட்மனுமீது விசாரணை நடந்தது. தமிழக அரசு சார்பில் அட்வகேட் ஜெனரல் கோவிந்த சுவாமிநாதன் வாதம் புரிந்தார். 14-2-72 அன்று ஜார்ஜ் பெர்னாண்டஸ், பம்பாயில் நிருபர்களிடையே பரபரப்பான ஒரு செய்தியை வெளியிட்டதாக "விடுதலை" பிரசுரித் திருந்தது. தமிழகத்தில் கலைஞர் ஆட்சியைக் கவிழ்க்க, இந்திராகாந்தி சதி செய்வதாகவும், தி. மு. க. வில் முக்கியப்

பொறுப்பிலுள்ள மூன்று பேரைப் போட்டித் தலைமைக்குத் தேர்ந்தெடுத்து, அவர்களுக்கு விளம்பர வெளிச்சம் தரப் படுவதாகவும். பெர்னாண்டஸ் தெரிவித்தார். அந்த மூன்று பேர் யாரென்று தாம்சொல்வதற்கில்லை என்றார். எனினும் நிருபர்கள் ஊகம் ஓரளவு சரியாகவே இருந்தது. மூவரில் ஒருவர் அடுத்த சில மாதங்களில் வெளியேறித் தனிக் கட்சி தொடங்கினார்; இரண்டாமவர் 1977–ல் வெளியேறி, அந்த முகாமில் இப்போதுள்ளார்; மூன்றாமவர் இப்போதும் கலைஞரிடமிருந்தே செயல்படுகின்றார்!

15–2–72 அன்றிரவு, கொரடாச்சேரி கூட்டம் முடிந்து, மறுநாள் சின்னமனூருக்குச் செல்லப் புறப்பட்டபோது, பெரியாருக்கு வாந்தியும், வயிற்றுப் போக்கும் ஏற்பட்டது. தஞ்சையில் மருத்துவக் கல்லூரி முதல்வர் டாக்டர் பூபதியிடம் செல்லவும், அவர் அங்கேயே பெரியாரைப் படுக்கையில் தங்கிடச் செய்தார். அதன் காரணமாக 16 சின்னமனூர், 17 ஒட்டன் சத்திரம், 18 போடிநாய்க்கனூர், 19 வேடசந்தூர், 20 காரைக்குடி கூட்டங்கள் ரத்து செய்யப் படுவதாக, உடனிருக்கும் புலவர் கோ. இமயவரம்பன் அறிவித்தார். 17ந்தேதியன்று, மணியம்மையார் உடனிருந்து கவனிப்பதாகவும், மருத்துவமனையில் மன்னை நாராயணசாமி, தஞ்சை பெத்தண்ணன், நடராசன் எம். எல். ஏ., திருவையாறு இளங்கோவன் எம். எல். ஏ. போன்ற தி. மு. க. தோழர்களும், கா. மா. குப்புசாமி போன்ற தி. க. தோழர்களும் பார்த்ததாகவும், வீரமணி தகவல் தந்தார். அத்துடன், பெரியாருக்குத் தங்கள் வீடுகளில் விருந்தளிக்கும் பழக்கத்தை இனியாவது தோழர்கள் கைவிடுங்கள், என்று வீரமணி வேண்டினார். 18–ந்தேதி கலைஞர் தொலைபேசி மூலம் விசாரித்தார். என். வி. நடராசன் மணியம்மையாரிடம் தொலைபேசி வாயிலாகக் கேட்டார். அன்பில் தர்மலிங்கம் நேரில் வந்து விசாரித்தார். கலெக்டர் அந்தோணி, பெரியாரைச் சந்தித்துத், தஞ்சை மாவட்டத்தில் குடும்பக் கட்டுப்பாடு திட்டம் வெற்றி பெற்றுள்ளதாகவும், பெரியாரின் பிரச்சாரம் உதவியதாகவும் கூறி; நலம்

விசாரித்தார். 19-ந்தேதியன்று ஏ. வி. பி. ஆசைத்தம்பி, சி. பி. சிற்றரசு ஆகியோர் வந்து பார்த்தனர். அன்று மாலை 4-30 மணிக்குப் பெரியார் திருச்சி போய்ச் சேர்ந்தார். அங்கு 20-ந்தேதி பேராசிரியர் அன்பழகனும், 21-ந்தேதி காமராஜரும் பெரியாரைக் கண்டனர்.

22-2-72 அன்று பெரியார் சென்னை வந்து சேர்ந்தார். பெரியார் திடலில், அன்றைக்குப் பெரியாரை, இலங்கைத் தமிழர் தலைவர் செல்வநாயகம், அவரது தளபதி அமிர்தலிங்கம், திருமதி மங்கையர்க்கரசி அமிர்தலிங்கம், மணவைத் தம்பி ஆகியோர் சந்தித்து உரையாடினர். அமைச்சர் ராஜாராமும், துணைவேந்தர் சுந்தர வடிவேலுவும் உடனிருந்தனர். இலங்கைத் தமிழர் பிரச்சினைகளில் தமது அனுதாபமும் ஆதரவும் எப்போதும் உண்டு என்றார் பெரியார். மறுநாள் 23-ந் தேதி பெரியார் பெங்களூருக்குக் கிளம்பினார். 29-ந் தேதி சென்னையில் பகுத்தறிவாளர் கழகத்தின் சார்பில் டாக்டர் நாவலர் நெடுஞ்செழியனுக்குப் பாராட்டு விழா; பெரியார் தலைமையில், அமைச்சர்கள் மாதவன், அன்பில் தர்மலிங்கம், வீரமணி, கா. து. நடராசன், நெ. து. சுந்தரவடிவேலு, ஏ. என். சட்டநாதன் ஆகியோர் பாராட்டுரை பகர்ந்தனர். "சாதாரணக் குடும்பத்தில் பிறந்தவர், அந்தக் காலத்தில் M. A. பட்டம் பெறுவதென்பது சாமான்யமல்ல, இவர் தம்பியும் எம். ஏ. பட்டதாரி; படித்து முடித்ததும் இவர் நேரே என்னிடம்தான் வந்தார். எனக்குச் சோறு போதும்; தங்களுடன் பொதுத் தொண்டு செய்கிறேன் என்றார்! இவர் சந்து பொந்து இல்லாத பகுத்தறிவாளர்! என்னைப் போல இவரும், தன் வரையில் சிக்கனமானவர்!" என்று பெரியார் நாவலரைப் புகழ்ந்தார்.

1–3–72 அன்று தமிழ் நாடு அரசு சமர்ப்பித்த பட்ஜெட் 2-49 கோடி ரூபாய் உபரி. பெரியார் இதனை வெகுவாகப் பாராட்டினார். "மதுவிலக்கு ரத்து செய்யப்பட்டதால்தான் உபரி பட்ஜெட் தர முடிந்தது. மேலும் பல நல்ல திட்டங்களை அறிவிக்கமுடிந்தது. உச்சவரம்பை, ஒரு குடும்பத்துக்கு

40 ஸ்டாண்டர்டு ஏக்கரா எனக் குறைக்கலாம், குத்தகை பாக்கிச் சுமையை ரத்துச் செய்தது நல்ல காரியம், கிராமச்சாலை அமைப்பும் மிக முக்கியமானது" என்றெல்லாம் எழுதினார். 7–ந்தேதி "விடுதலை"யில் எனது விண்ணப்பம் என்ற தலையங்கம் பெரியார் எழுத்தில் வடிக்கப்பட்டது :– "ஆட்சிக்குத் தொந்தரவு தராமல் ஏதாவது கிளர்ச்சி செய்ய வேண்டுமென நினைக்கிறேன். அரசியலில் செய்தால், உடனே நம்மையும் ஆட்சியையும் எதிர்க்க, மோகன் குமாரமங்கலம், சி. சுப்ரமணியம், காமராஜர், பக்தவத்சலம் கூட்டத்தார் கிளம்பிவிடுவார்கள். அதனாலும், அதைவிடச் சமுதாயக் கிளர்ச்சி முக்கியம் என்பதாலும், சட்டத்தை மீறுவதா, அல்லவா? மறியல் செய்தா, அல்லவா? என்றெல்லாம் யோசனை செய்து வருகிறேன். தோழர்களும் தங்கள் கருத்துகளைத் தெரிவியுங்கள். 1 லட்ச ரூபாய் நிதியும், 10,000 தொண்டர்களும் இதற்காகத் திரட்டுவோம்!" என்று.

8-3-72 அன்று, அமைச்சர் அன்பில் தர்மலிங்கத்துக்குப் பதில் மன்னை நாராயணசாமி அமைச்சராக்கப்பட்டார். உடல் நிலை குன்றியதால் அன்பில் ராஜிநாமா செய்ததாக அறிவிக்கப்பட்டது. திருச்சியில் 11, 12 தேதிகளில் மூன்று மாநாடுகள்–திடுக்கிடும் தீர்மானங்கள்–திரளாக வாருங்கள்! என்று விளம்பரம் செய்யப்பட்டது. 11-3–72 காலை 9 மணிக்குத் திராவிடர் மாணவர் மாநாடு, வரவேற்பு டி. டி. வீரப்பா, தலைவர் எஸ். துரைசாமி, திறப்பாளர் வீரராக்கியம் கே. சின்னப்பன். ஜி. டி. நாயுடு, பூ. சி. இளங்கோவன் ஆகியோர் உரை. அன்று மாலை 3 மணிக்குப் பெண்கள் விடுதலை மாநாடு. பிரபாவதி பி. ஏ., தலைவர்; வீரமணி, பராங்குசம், வெற்றிச் செல்வி, சக்தி கோதண்டம் பி. ஏ. சிறப்பு உரை. அன்பில் தர்மலிங்கம் சாதி ஒழிப்புப் போராட்டத்தில் உயிர் நீத்த வீரர்களின் குடும்பத்தினருக்கு விருதுகள் வழங்கினார். மறுநாள் 12-3–72 காலை 9 மணிக்கு ஊர்வலம். இதில் மத சம்பந்தமான வேடமணிந்தவர்கள் ஊர்வலத்தில் வரவேண்டாம் எனப் போலீசார் கேட்டுக்

கொள்ளவே, சரியென இணக்கம் தெரிவிக்கப்பட்டது. ஊர்வலத்தில் பெரியாரும், வீரமணியும் அலங்கார ரதத்தில் அமர்ந்து சென்றனர். மூடநம்பிக்கை ஒழிப்பு மாநாட்டின் வரவேற்பாளர் செல்வேந்திரன், தலைவர் வீரமணி; சி. பி. சிற்றரசு, திருவாரூர் தங்கராசு, எஸ். எஸ். பாட்சா, இறையன் பி.ஏ. பி.டி. ஆகியோரின் உரை. பெரியாரின் பேருரையோ இரு நாட்களுமே! இது ஜாதிப் பாதுகாப்பு மாநாடல்ல, இது ஓட்டு வேட்டை மாநாடல்ல, மானத்துக்கு உயிர் கொடுக்கத் துடிக்கும் மாநாடு—எனவும், திடுக்கிடும் தீர்மானங்கள் நிறைவேற்றப்படும், எனவும் விளம்பரம் செய்யப்பட்டதால்; ஏராளமான பொது மக்கள் குழுமியிருந் தனர்! சுதந்திரத் தமிழ் நாடு பெறக் கிளர்ச்சி துவக்குவது என்றும்; கோயில்களில் அனைவருமே பூசை செய்வதற்கான உரிமையை நிலை நாட்டுவது என்றும்; கோயில்களைப் புறக்கணிக்குமாறு பொது மக்களை அமைதியாக வேண்டு வது என்றும் தீர்மானங்கள் இயற்றப் பெற்றன. "இந்த அரசு நீடித்து இருந்தால்தான் நமது இந்தக் காரியங்கள் வெற்றி பெற முடியும். அரசுக்கு ஏதாவது இடையூறு வருமென்று கருதி, நம்மைக் கைவிடக்கோரினால், அப்படியே கேட்க வேண்டியதுதான் நமது கடமை! ஏனென்றால், கண்ணைக் குத்திக்கொண்ட பின் சித்திரம் வரைய முடி யுமா?" என்றார் தந்தை பெரியார்.

14-3-72 அன்று அர்ச்சகர் வழக்கில் சுப்ரீம் கோர்ட்டின் தீர்ப்பு வழங்கப்பட்டு விட்டது. அதாவது, அர்ச்சகர் தொழிலுக்குப் பரம்பரை பாத்யதை கிடையாது. ஆனால் அர்ச்சகர் நியமன விஷயத்தில் அந்தக் கோயிலின் ஆகமம் பின்பற்றப்படவேண்டும். "விடுதலை" விமர்சித்தவாறு, இது ஆப்பரேஷன் வெற்றி; நோயாளி இறந்தார் என்பது போன்றதே! 15-ந்தேதி தலையங்கத்தில் "விடுதலை" எழுதிற்று:–"டாக்டர் அம்பேத்கார் முன்பு சொன்னதுதான் சரி; We are bound by the decision; but we do not bound to respect the decision." அர்ச்சகர் சட்டத் திருத்தத்துக் காக தி.மு.க. நாடாளுமன்றத்தில் போராடும் என, முதல்வர்

கலைஞர் கருத்துரைத்தார். 15-3-72 அன்று பெரியார் ஒரு தீர்க்கதரிசனமான (?) உரையினை நாகைப்பட்டினத்தில் நிகழ்த்தினார்:–"இன்றைய ஆட்சியைக் கவிழ்க்க எவ்வளவோ சூழ்ச்சிகள் நடைபெறுகின்றன. அப்படியே கவிழ்க்கப் பட்டாலும் நமது கருணாநிதி ஒன்றும் பயந்துவிடமாட்டார். தி.மு.க. என்பதில் உள்ள 'மு'வை எடுத்துவிட்டு, நாங்கள் இரண்டு பேரும் ஒன்றுதான் என்று கூறித், தீவிரமாக வந்து விடுவார்" என்றாரே தந்தை பெரியார்!

இந்த ஆண்டு தஞ்சை மாவட்டம் வேளாங்கண்ணியில், மாவட்ட திராவிடர் கழகச் சார்பில், பிரச்சாரப் பயிற்சி வகுப்புகள் 10–3–1972 முதல் நடைபெற்றன. பெரியார் 14, 15 நாட்களில் வகுப்பு நடத்தினார். மற்ற நாட்களில் தோழர்களான கி. வீரமணி, திருவாரூர் தங்கராசு, வே. ஆனைமுத்து, செல்வேந்திரன், கலியராசுலு, வி. பொ. பழனிவேலனார் ஆகியோர் விளக்கவுரைகள் ஆற்றி வந்தனர்.

ஏப்ரல் 1–முதல், இந்தியா முழுதும் கருக்கலைப்பு சட்ட சம்மதம், என்பது தொடங்கப்படுகிறது. இங்கே முதலில் 22 மருத்துவ மனைகளில் செய்து கொள்ளலாம் என, நல் வாழ்வு அமைச்சர் பேராசிரியர் அன்பழகன், 31-3-72 அன்று கூறினார். 4–4–72 மாலை, சென்னை ஷெரீஃப் எம்.ஏ.எம். ராமசாமி, சிகப்பி ராமசாமி, ராஜா சர் முத்தையாச் செட்டியார் ஆகியோர் அளித்த விருந்துக்குப் பெரியார் வீர மணியுடன் சென்றிருந்தார். ஆளுநர் கே.கே.ஷா, முதல்வர் கலைஞர், தலைமை நீதிபதி வீராசாமி, அமைச்சர்கள், பிரமுகர்கள் வந்திருந்தனர். ஸ்டான்லி மருத்துவமனையில் அபாயக் கட்டத்திலிருந்த முஸ்லீம்லீக் தலைவர் கண்ணியத் துக்குரிய காய்தேமில்லத் முகமது இஸ்மாயில் சாகிப் அவர்களைப் பெரியார் பார்த்து வந்தார். ஆனால் அன்னார் மரணமடைந்து விடவே, சடலம் புதுக்கல்லூரில் வைக்கப் பட்டிருந்தது. இரவே மணியம்மையாருடன் சென்று, மரி யாதை செலுத்தினார் பெரியார். மறுநாள் "விடுதலை"யில்

துணைத் தலையங்கம் தீட்டப்பட்டதோடு, 5-4-72 அன்று கடற்கரையில், தி.க. சார்பில், அனுதாபக் கூட்டமும் நடைபெற்றது. தெ.மு. சண்முகம் தலைமையில், நெல்லிக்குப்பம் சுப்பிரமணியம், எஸ். துரைசாமி, கி. வீரமணி ஆகியோர் இரங்கலுரை ஆற்றினர். பெரியாரும் அனுதாபம் தெரிவித்தார்; மேலும், பேசும்போது, "மந்திரிகள்மீது லஞ்சம் ஊழல் என்றெல்லாம் இப்போது பேசத் துவங்கியிருக்கிறீர்களே! இதற்கெல்லாம் வழிகாட்டிகளே நீங்கள்தானே! ராஜாஜி, டாக்டர் டி.எஸ்.எஸ். ராஜன், பக்தவத்சலம் இவர்கள் ஊழல் பேர்வழிகள் அல்லவா? உருப்படியாக எதையும் சொல்லத் தெரியாமல், ஊரிலே பேசிக் கொள்கிறார்கள் என்பதுதான் கடைந்தெடுத்த அயோக்கியத்தனம். இது சோதாக்களின் பேச்சு. காமராஜர்தான் ஆதாரத்தோடு ஏதாவது கூறட்டுமே! இவர்களை ஒழித்துவிட்டு என்ன செய்யப் போகிறாராம்? பார்ப்பான் காலில் தானே விழப் போகிறாய்?" என்றார் சூடாக.

6-ந்தேதி பிற்பகல் 3-30 மணிக்குப் பெரியார் திடலில், பெரியார் தங்கும் விடுதியில், ஒரு திடீர்த் திருமணம்! திரு எம்.எச். ராவ் பி.ஏ.பி.எல். அவர்களின் மகன் ரவீந்திர நாத் எம்.எஸ்சி.யும் கணபதி சேண்டப்பிரியர் மகள் ராஜேஸ்வரி எம். எஸ்சி. யும், 10 நண்பர்கள் சூழ வந்திருந்து, பெரியார் தலைமையில் தங்கள் திருமணத்தை முடித்துக் கொண்டனர். 25 ரூபாய் நன்கொடை வழங்கினர். இவர்கள் புகைப்படம் "விடுதலை"யில் இடம் பெற்றது. சென்னை ராஜாஜி மண்டபத்தில், முதல்வர் கலைஞருக்கும், பெரியாருக்கும், என்.ஜி. ஜி. ஓ. ரகசியக் குறிப்பு முறை ஒழிப்பிற்காகப் பாராட்டுக்கூட்டம் நடைபெற்றது. "மத்திய அரசிலும் ரகசியக் குறிப்பு முறை ஒழிந்தால், அங்கு கொஞ்சநஞ்சமிருக்கிற நம்மவர்களும் தலையெடுக்க முடியும். இல்லாவிடில் காலம் முழுவதும் பார்ப்பானுக்குப் பயந்துதான் கிடக்க வேண்டும். அரசு ஊழியர்கள் ஆட்சியிடம் விசுவாசமாயிருங்கள்" என்றார் பெரியார். கலைஞர் "பெரியார் சுய ஆட்சிக்குப் பதில்

சுதந்திர ஆட்சி ஏன் கூடாது என்கிறார். தமது வாழ் நாளிலேயே தம் கருத்துகளும் எண்ணங்களும் நிறைவேறு வதனைக் கண்டு வருகின்ற தலைவர் உலகத்திலேயே நமது பெரியார் ஒருவரேதான்! பெரியாரிடமும் அண்ணாவிடமும் நான் பயின்றது அடக்குமுறை வழியல்ல; அடக்க முறை தான்'' என்று பேசிவிட்டு, ஊழியர்கள் எதிர்பாராமலிருந்த போதே,அங்கு அவர்கட்குப் பஞ்சப்படி உயர்வு அறிவித்தார். அன்றிரவு 8 மணிக்குப் பெரியார் திடலில், ஜார்ஜ் கோமகன் எம்.எல்.சி. ஆனதற்குப்பாராட்டுக்கூட்டத்தில்,அமைச்சர்கள் என்.வி. நடராசன், சத்தியவாணிமுத்து ஆகியோருக்குப் பின்னர், பெரியார் இன்னொரு தீர்க்கதரிசன உரை (?) நிகழ்த்தினார்:—"தி.மு.க. அமைச்சரவை ஆதரவால் இப்படி வெற்றி பெற்றவர், ஆட்சியை ஆதரிக்க வேண்டும்; அநாவசி யமாய்த் தொல்லை கொடுக்கக் கூடாது. காமராஜர் அப் படித்தான் என்னுடனிருக்கும்போது அசல் மனிதராயிருந் தார். இப்போது ராஜாஜிக்குக் கையாள் ஆகிவிட்டார். இப்போதே இப்படி என்றால், இன்னும் பதவிக்குப் போனால் அவரிடம் எப்படி, எவ்வளவுக்குப் போவாரோ? காமராஜர் நிலை மிகப் பரிதாபமாயிருக்கிறது. அம்மா கட்சியிலாவது சேரலாமா என்றும் பார்க்கிறார். அது, கிட்டே சேர்க்கமாட்டேன் என்கிறது!'' என்று, வவ்வால் மனிதர் நிலைமையைப் பெரியார் விண்டுரைத்தார்.

பகுத்தறிவாளர் மாநில மாநாடு, இழிவு ஒழிப்பு மாநில மாநாடு இரண்டும் சென்னையில் மே மாதம் நடக்கும் என்ற அறிவிப்புகள் வெளியாயின. 8–4–72-ல் காஞ்சிபுரத்தில் தி. மு. க. மாநாடு நடைபெற்றது. பெரியார் திண்டுக் கல்லில் பேசும்போது "பிரிவினை கேட்டால் 7 வருடம் தண்டனை கிடைக்கும் என்று தெரிந்தேதான் நாங்கள் கேட்டு வருகிறோம். தி. மு. கழகத்தை மிரட்டுவது போல எங்களை மிரட்ட முடியாது. நாங்கள் தேர்தலுக்கு நிற்கும் கட்சியல்ல!'' என்று மத்திய அரசுக்குத் தாக்கீது விடுத்தார். 29–4–72 அன்று புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் 81–வது பிறந்த நாள். கடற்கரைச் சாலையிலுள்ள அவரது

சிலைக்குப், பகுத்தறிவாளர் கழகச் சார்பில், கா. நடராசன், என். எஸ். சம்பந்தம், எஸ். துரைசாமி ஆகியோர் மாலை சூட்டினர். சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் சட்ட மன்ற மேலவையின் துணைத் தலைவராக அன்றைய தினந்தான் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

மன்னார்குடியில் மே, 6, 7 தேதிகளில் நடந்த தி. மு. க. மாநாட்டில் பெரியாரும் பங்கேற்று, 6-ந் தேதி அண்ணா படத்தினைத் திறந்து வைக்கும் போது, "இன்றும் இரட்டையாட்சி முறைதானே இங்கு நடைபெறு கிறது? அது நீங்கி, நம் சொந்த ஆட்சி நடைபெற வேண்டும்! அதற்கு என்ன வழி? முதலில் கோயில் சொத்துக்களை அரசுடைமை ஆக்குங்கள். கடவுளைப் பார்துகாக்க ஒரு இலாக்கா இருப்பதை ஒழியுங்கள்!" என்றார். 9-ந் தேதி தொட்டியத்தில் "தி. மு. க. ஆட்சி மேலும் 50 ஆண்டுகள் நீடிக்க வேண்டும். பொது மக்களாகிய நீங்கள் இன்னும் பக்குவமடையாத காரணத் தால்தான் ஆட்சியாளர் துணிவாக எதையும் செய்யாமல், பயப்படுகிறார்கள்," என்று பெரியார் எடுத்துக் காட்டினார்.

மே 27 மாநிலப் பகுத்தறிவாளர் மாநாடு. 28-ல் மாநில இழிவு ஒழிப்பு மாநாடு. முந்தியதற்குத் தலைவர் நாவலர், திறப்பாளர் கலைஞர். பிந்தியதற்குத் தலைவர் பெரியார், திறப்பாளர் சி. பி. சிற்றரசு. காரைக்குடி ஆர். சுப்ரமணியம் குழுவினரின் தீ பரவட்டும் நாடகம் நடை பெற்றது. பெரியார் நேரடி மேற்பார்வையில் மாநாட்டின் ஏற்பாடுகள் நடைபெற்றன. இடையில் பெய்த மழையின் பாதிப்புகள் சமாளிக்கப்பட்டன. புத்தகக் கண் காட்சி, ஓவியக் கண்காட்சி, பாட்டரங்கம், படத்திறப்பு விழாக்கள் எல்லாம் நடைபெற்றன. பக்குவமடையவும், மான உணர்ச்சி பெறவும், கோயில்களுக்குச் செல்ல வேண்டா மெனக் கேட்டுக் கொள்ளவும், செயலில் இறங்கிடச் சிந்தனை செய்யவும் இந்த மாநாடு பயன்படும் என்றார் பெரியார். அன்பில் தர்மலிங்கம் கண்காட்சி திறந்தார். "இந்தக் கண்காட்சி ஆபாசம் என்றால் கோயில்களில்,

தேர்களில் உள்ள ஓவியங்கள், சிற்பங்கள், புராணச் சித்திரிப்புகள் ஆபாசமல்லவா?'' என்று கேட்டார் கலைஞர்.

தாமலில் ஒரு திருமணத்தில் பெரியார், "திருமணம் என்ற சொல் இந்தி எதிர்ப்புக் காலத்தில்தான் வழக்கத்திற்கு வந்தது. வாழ்க்கை ஒப்பந்தம் என்ற சொல்லை சுயமரியாதைக்காரர்களாகிய நாம் உருவாக்கினோம். ஏன் இதற்குரிய சரியான தமிழ்ச் சொல் இல்லை? கூடி வாழும் இந்த வாழ்க்கைக்கு என்னதான் பெயர்? தொல்காப்பியனே கூட "மேலோர் மூவர்க்கும் புணர்த்த காரணங்கள் கீழோர்க் காக்கிய காலமும் உண்டே'' என்கிறான், எனச் சரியான அய்ய வினா ஒன்றை எழுப்பினார். 15–5–72 மயிலை கற்பகாம்பாள் திருமண மண்டபத்தில், நாகரசம் பட்டி ராஜாசுப்ரமணியம் பேரனும் விசுவநாதன் மகனுமான சம்பத்குமார் எம். எஸ்சி., மாயூரம் வேணுகோபால் மகள் வனிதாமணி எம். எஸ்சி. இருவரின் கலப்புத் திருமண விழா, பெரியார் தலைமையில் நடைபெற்றது. வழுவூர் ராமய்யா பிள்ளை, நெ. து. சுந்தரவடிவேலு, தொகரப்பள்ளி கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் வாழ்த்துரைத்தனர்.

இந்த முறை 20 கல்லூரி மாணவர்களுக்கு, சுயமரியாதைப் பிரச்சாரப் பயிற்சி வகுப்புகள், தர்மபுரி மாவட்டம் தாதம்பட்டியில், கிருஷிபண்டிட் பட்டம் பெற்ற கோவிந்தசாமி—துரைசாமி சகோதரர்களின் சாந்தி நிகேதன் போன்ற குளுமையான மாந்தோப்பினிடையே, நாகரசம்பட்டி என். வி. சுந்தரம், என். வி. விசாலாட்சி அம்மையார் நேரடி மேற்பார்வையில் வெகு சிறப்புடன் நடை பெற்றன, 9–5–72ல் துவங்கி! கொண்டல் மகாதேவன் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சித் துறை இயக்குநராக 11–ந் தேதி பொறுப் பேற்றார். ஏ. பத்மநாபன் அய். ஏ. எஸ். பொதுப்பணித் துறை செயலாளராக 25–ந் தேதி நியமனம் பெற்றார். 21-5-72 அன்று சென்னை வந்த பிரதமர் இந்திராகாந்தியிடம், முதல்வர் கலைஞர், போர் நிதியாக 6 கோடி ரூபாய் வழங்கினார். 3-6-72 அன்று கலைஞரின் 49-வது பிறந்த நாளன்று, பெரியார் எழுதித்தந்திருந்த பிறந்த நாள்

வாழ்த்துச் செய்தியை வீரமணி நேரில் படித்தளித்தார், காலை 8–30 மணிக்கெல்லாம்.

கோயில்கள் ஏற்பட்டது ஏன் என்ற தொடர் கட்டுரை "விடுதலை"யில் ஆசிரியர் வீரமணியால் எழுதப்பட்டு வந்தது; கடவுளரின் ஆபாசக் கதைகளும் பெட்டிச் செய்தியாகப் பிரசுரமாகி வந்தன. ஜூன் மாதம், மற்ற முந்திய மாதங்களை விட அதிகமாகப் பெரியார் சுற்றுப்பயணம் மேற் கொண்டார். 11-6-72 அன்று கூடிய சென்னை மாவட்ட திராவிடர் கழகம், அடுத்த 16–6–72 முதல் மயிலை கபாலி கோயில் முன் பகிஷ்காரக் கிளர்ச்சி துவக்குவதாக முடிவெடுத்து, முன்னேற்பாடுகளில் தீவிரமாக இறங்கிற்று. 14–ந் தேதி கோவையில் கூட்டத்தில் பேச்சைத் துவக்கிய பெரியார், "பரிதாபத்திற்குரிய சகோதரர்களே! உணர்ச்சியற்ற தாய்மார்களே! இனி இப்படித்தான் உங்களை அழைக்கப் போகிறேன்!" (என்று துவக்கினார்)

15–6–72 அன்று பெரியாரிடமிருந்து Trunk Call–ல் வந்த செய்தி, "விடுதலை"யில் கட்டம் கட்டிப் பிரசுரிக்கப் பட்டது. "நமது கிளர்ச்சிக்கு அரசு தடை விதித்திருப்பதை இன்று அறிந்தேன். நம்முடைய கிளர்ச்சி பலாத்காரம் சிறிதுமில்லாத வேண்டுகோள் முறைதான். இதைத் தடை செய்திருக்க நியாயமேயில்லை. இனி நமக்கு மானத்தோடு வாழ வாய்ப்பில்லை. தடையை மதிப்பதும், தடைக்கு ஆளாவதும் மானக்கேடு என்றுதான் கருதுகிறேன். என்றாலும், நம்மாலான வரையில் இந்த ஆட்சிக்குச் சங்கடமும் அதிருப்தியும் ஏற்படாதவாறு நடந்து கொள்ளக் கருதி, நீதியாய் நடந்து கொள்வார்கள் என்று எதிர்பார்த்துச், சிறிது நாட்களுக்கு ஒத்தி வைக்கிறேன்!"—கபாலி கோயில் கிளர்ச்சி இவ்வாறாயிற்று!

சென்னை பகுத்தறிவுக் கண்காட்சியில் வைக்கப் பட்டிருந்த கடவுளர் ஆபாசப் படங்கள் சிலவற்றை "Illustrated Weekly" 18–6–72 இதழ் வெளியிட்டது. "துக்ளக்" இதழிலும் சில படங்கள் வெளியாயின. சேலம் எஸ். கி. ஜெயராம ரெட்டியார் என்ற தனி நபர் ஒருவர்

கூட்டங்கள் நடத்துவது, என ஆளுங்கட்சியின் தோழமையி லுள்ள கட்சிகள் முடிவெடுத்தன. "இந்திரா அம்மையாரின் பணந்தான் வருகிறது, தமிழ் நாட்டில் இந்த மாதிரிக் கிளர்ச்சிகள் நடத்த! இந்தப் பிரதமர் அம்மா யோக்கியதை, நகர்வாலா ஊழலில் தெரியவில்லையா?" என்று பெரியார் 12-ந் தேதி திருவாரூரில் அம்பலப்படுத்தினார். 12-7-72 முதல் ஆர். தில்லைநாயகம் நெடுஞ்சாலைத் துறையின் பிரதமப் பொறியாளரானார். 31–7–72 முதல் வே. தில்லைநாயகம், நூலகத் துறை தனியாக்கப்பட்டதில், அதன் இயக்குநரா னார். நெ. து. சுந்தரவடிவேலு இரண்டாம் முறையாகச் சென்னைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தரானதில் பெரியாரின் பரிவு மிகுதி!

"அரசியல் வாழ்வு, நாளுக்குநாள் மனிதப்பண்பையே கெடுத்தது. நமது பின் சந்ததிகளையே பாதிக்கின்ற அளவு, கீழ்த்தரத்துக்குப் போய்விட்டது. அரசியல் போட்டி யாளர்களின் காரணமாக இன்றையச் சமுதாயம், சட்டம் அமைதி ஒழுங்குத் தன்மைகளை அலட்சியமாய்க் கருதும் அகம்பாவம் ஏற்படுத்திக் கொண்டது. ஜனநாயகம் என்பதும் இதற்கு முக்கிய காரணமாகும்.

நமது நாட்டில் பார்ப்பனர்கள் இருக்கும்வரை மனு தர்மசாஸ்திரம் இருக்கும் வரை, இத்தகைய வன்முறை பலாத்காரம் காலித்தனம் இருக்கத்தான் செய்யும். இதைப் பொதுமக்கள் செயலாக ஆக்கியவர் காந்தியார்தான். இந்த நிலைமை வளர்ச்சிக்கு உற்சாகம் தருபவர்கள் பார்ப்பனப் பத்திரிகைக்காரர்களே ஆவார்கள்.

பொதுவாழ்வில் பார்ப்பனர்களுக்குள்ள ஆதிக்கம் குறையக் கண்டவுடன், உண்மையில் பெருமையும் கவுரவ மும் உள்ளவர்களை ஒதுங்கும்படிச் செய்து, அயோக்கி யர்கள், காலிகள், பொறுப்பற்ற கீழ்மக்கள் ஆகியவர் களையே பெரிதும் வேட்டையாடி விளம்பரம் கொடுத்துப் பொது ஒழுக்கத்தையே பாழாக்கினார்கள்.

கட்டுப்பாடும் சமாதானமும் அற்ற தன்மையை சத்திய சோதனை என்னும் பேரால் உண்டாக்கிவிட்டு, ஜனநாயகத்

த்தையும் உண்டாக்கிவிட்டால்—எந்தக் குணம், எத்தத் தன்மை கொண்ட மக்கள் பெருவாரியாக இருக்கிறார்களோ—அந்த மக்களின் ஆட்சிதானே நிலவும்? தொழிலாளர் தொல்லை, கூலிக்காரர் தொல்லை, இவர்களைத் தூண்டிவிட்டு வாழும் காலிகள் தொல்லை என்றால், இந்த நாட்டில் இந்த இனம் தானே மெஜாரிட்டியாக உள்ளனர்.

இந்த நிலையில், சமதர்மம் ஜனநாயகம் என்றால், நாடும் மனித சமுதாயமும் எக்கதிஆகும் என்பதைச் சிந்திக்க வேண்டாமா? ஆகவே நமது அரசியல் வாழ்வு என்பதைப் பொதுவுடைமை வாழ்வாக ஆக்கிக் கொண்டால்தான் மக்கள் சமுதாயம் கவலையற்று, சாந்தியும் சமாதானமும் பெற்று வாழ முடியும். இல்லாவிட்டால் மக்கள் சித்திர வதைக்கு ஆளாகத்தான் நேரிடும்.'' இது பெரியார் 6–7–72 அன்றைய ''விடுதலை''யில் தீட்டிய தலையங்கப் பகுதியாகும்.

இந்த ஆண்டு 15–7–72 அன்று பெரியார்—காமராஜ் படங்களுடன், ''காமராஜ் அவர்களைக் கட்சிக் கண் கொண்டு பார்ப்பதில்லை. பார்ப்பனரல்லாதார் என்பதில் உள்ள தனிப்பற்று கொண்டு பார்க்க வேண்டும். பார்ப்பனர் எந்தக் கட்சியிலிருந்தாலும் கவலைப்படாமல், தங்கள் நலனில் மட்டும் அக்கறை காட்டுவது போல, நம்மவர்களுக்கும் வரவேண்டும்'' என்ற செய்தி காமராஜர் பிறந்தநாளையொட்டி ''விடுதலையில்'' தரப்பட்டது.

''அரசாங்கத்தின் முக்கிய கவனத்துக்கு'' என்று பெரியார் 17–7–72 அன்று எழுதிய தலையங்கம் கவலையோடு கூடியிருந்தது:-கல்வித்துறையில் அரசாங்கம் பெரிய பார்ப்பனீயம் செய்து வருகிறது. அடுத்த ஆண்டு முதல் உயர்நிலைப் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் சேர்வதற்கு, நுழைவுத் தேர்வுகளை நடத்தத் தமிழ் நாடு அரசு உத்தேசித்துள்ளதாம்! எதற்காக? பாஸ் செய்த சர்ட்டிபிகேட்டில் காலேஜில் சேர்த்துக் கொள்ளத் தகுதியுடையவர் (Eligible for college course) என்று எழுதிக், கையெழுத்தும் செய்து கொடுத்துவிட்டுக், காரியத்தில் மார்க்குபார்த்து,

திறமை பார்த்துப், புகுமுகப் பரிட்சை வைத்துச் சேர்க்க வேண்டும் என்று உத்தரவு போடுவதும், தராதரம் பார்க்காமல் சேர்க்கக்கூடாது என்பதும், பார்ப்பனீயமா, அல்லவா? ஏனென்றால் இவை பார்ப்பானின் மூளையில் தோன்றியவை தானே?

பிற்படுத்தப்பட்ட வகுப்பு, தாழ்த்தப்பட்ட வகுப்பு என்பவர்களைக் கல்வி விஷயத்தில் குழியில் தள்ளி மூடுவது தானே இந்த யோசனையின் பலன்? கல்வித்துறை அதிகாரத்தில் பிற்படுத்தப்பட்ட வகுப்பார், தாழ்த்தப்பட்ட வகுப்பார் இருந்தால், இந்த எண்ணம் அவர்களது ஞாபகத்தில் வருமா? கல்வித்துறையில் பார்ப்பன ஆதிக்கத்தை, உயிருக்குத் துணிந்து ஒழித்ததன் பலன் இதுதானா? இராஜாஜி, பக்தவத்சலனார் உத்தரவுகளுக்கும் இதற்கும் என்ன பேதம்?

உத்தியோகத்தில் தகுதி திறமை பார்ப்பதே யோக்கியமற்ற காரியம் என்று, 40 ஆண்டுகளாய்ச் சொல்லிப் போராடி வருகிற நான், பாஸ் செய்தவர்களைப் பள்ளியில் சேர்ப்பதற்குத் தரம் பார்க்க வேண்டுமென்றால், பெரிதும் சாதித் தரம் தவிர வேறு தரம் என்ன என்று கேட்கிறேன்! நாம்தான் பாஸ் பண்ணாதவனை பெயில் ஆக்கி விடுகிறோமே!

நான் மனித சமுதாயத்தின் தகுதி, திறமை, தரம் என்பவைகளைப் பார்த்து வந்த அனுபவமுடையவன். அவைகளைப்பற்றி நான் எழுதி வந்த கருத்துகள் இன்னமும் இருக்கின்றன. பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட வகுப்புகளுக்காக உழைத்து வந்தவன்; வருபவன் நான். மந்திரிகள் முதல், அவர்களிலும் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் ஆகித் தீரவேண்டும் என்பவன்.

கல்வி விஷயத்தில், இந்த ஆட்சியைவிடக் காமராஜர் ஆட்சி, மிக்க தேவலாம் என்று ஆகிவிடக்கூடாது.

கண்டிப்பாய் அரசாங்க அகராதியில், தகுதி திறமை தரம் என்ற சொற்களை எடுத்துவிட வேண்டும். இது என் சொந்தக் கருத்து.

பெரியார் உடல்நலம் சீர்கெட்டது. ஹெர்னியா தொல்லையால் சோர்வும் களைப்பும் ஏற்பட்டதால், சென்னை அரசினர் பொது மருத்துவ மனையில் 19-7-72 அன்று சேர்க்கப்பட்டு, டாக்டர் கே. ராமச்சந்திரா அவர்களின் மேற்பார்வையில் சிகிச்சை பெற்று வருகிறார் என வீரமணி அறிவித்தார். 18-7-72 அன்று "என்னைப்பற்றி" எனப் பெரியார் ஓர் அரிய விஷய விளக்கத் தலையங்கம் எழுதியிருந்தார்: "பெரியோர்களே, நண்பர்களே, தோழர்களே! சில தெரிவித்துக் கொள்ளுகிறேன்! நான் செய்து வந்த, வருகிற, தொண்டு நீங்கள் அறிந்ததேயாகும். என் நலத்தை, செல்வத்தை, செல்வாக்கைப் பொதுநலத் தொண்டுக்குக் கொடுத்தேனா, அல்லது பொதுத் தொண்டால் இவற்றைப் பெருக்கினேனா என்பது உங்களுக்குத் தெரியும்!

இராஜாஜி அவர்களும், இருகவர்னர்கள், இருகவர்னர் ஜெனரல்களும் வேண்டியும், கேட்டுக் கொண்டும், மந்திரிப் பதவியை வெறுத்தவன் நான். வேறெந்தப் பதவியையும் விரும்பியவன் அல்லன்.

என் பொதுத் தொண்டால் கூட்டம் மாநாடுகள் மூலமாக வரும்படி 1 லட்ச ரூபாயிருக்கும். மற்ற சொத்துகள் டிரஸ்ட் ஆக்கப்பட்ட எங்கள் குடும்பச் சொத்தாகும். நான் அவற்றிலிருந்து திருச்சி காலேஜுக்கு 5 லட்சம், திருச்சி குழந்தைகள் ஆஸ்பத்திரிக்கு 1 லட்சம், ஈரோடு குழந்தைகள் வார்டுக்கு 1லட்சம், மற்றும் சில்லறையாகக் கொடுத்தது 2, 3 லட்சம் ரூபாய்க்குக் குறையாது.

இயக்கத்துக்கு நான் வாங்கியிருக்கிற சொத்துகள் 30 லட்ச ரூபாய் பெறும். எங்கள் டிரஸ்ட் சொத்துகள் 20, 30 லட்ச ரூபாய் பெறும். இவ்வளவும் இயக்கத்தின் பெயராலேயே இருக்கின்றன. இருந்தாலும் தலைவர் என்கிறமுறையில் என் ஆதிக்கத்தில் உள்ளதால், சொத்து வளர்கின்றது; பெருகுகின்றது! இதனால் எனக்கென்ன பலன் என்றால், கவலை தொல்லை அதிகமாகிறது. இன்கம்டாக்ஸ் மூலம் எவ்வளவு சொத்து குறையுமோ?

எனது தொண்டின் பயனாய்ப் பலர், நினைக்க முடியாத பதவி அந்தஸ்து செல்வாக்கு அடைந்துள்ளார்கள். நான் அவர்கள் யாரிடத்தும் கைநீட்டாமல், இயக்கத்துக்காக வருவாய் சம்பாதித்துக் கொண்டுதான் வருகிறேன். எனது நிலை தாழாமல் வளர்ந்து கொண்டுதான் வருகிறது.

ஏன் இவற்றையெல்லாம் சொல்லுகிறேன் என்றால், உங்களிடம் மன்னிப்புக் கேட்பதற்கு! ஏன் மன்னிப்பு என்றால், சுற்றுப் பிரயாணப் பிரச்சாரத்திலிருந்து ஓய்வு எடுத்துக் கொள்வதற்கு!

சென்னையிலோ, திருச்சியிலோ, வேறு தொல்லையற்ற இடத்திலோ இருந்துகொண்டு, துண்டுப்; பிரசுரம், வால் போஸ்டர், சிறு சித்திரப் புத்தகம் பிரசுரித்துக் கொண்டு இருக்கலாம்; அலைய வேண்டாம் என்று பார்க்கிறேன். இனி யார் தயவையும் விரும்பாமல், யார் விஷயத்திலும் தயவு தாட்சண்யம் காட்டாமல், சுதந்திரமாய் இருந்து பார்க்கலாம் என்று கருதுகிறேன்.

நான் சென்னைக்கு வந்தால் 'உண்மை' மாத இதழையும் கொண்டு வரலாம். பல சங்கடங்களும் இருக்கின்றன! மணியம்மையார் திருச்சியில் இருக்க வேண்டியிருக்கின்றது, பல பள்ளிகள், ஒரு பண்ணை, பல வீடுகள் திருச்சியில் உள்ளன. நான் சென்னைக்கு வந்து தனியாய் இருக்க மணியம்மையார் சம்மதிக்க மாட்டார்கள். அவர்கள் சென்னைக்கு வந்தால் திருச்சி நடப்புகள் பாதிக்கப்படும். என் உடல்நிலை மன நிலையைப் பொறுத்துதான் இந்தச் சிந்தனைகள் ஏற்பட்டன.

மற்றொரு முக்கியமான விஷயம்; சினிமா பகிஷ்கார மாநாடு போட்டு, சினிமா பார்க்காதீர்கள் என்று பிரச்சாரம் செய்ய வேண்டும்.

கோயில் பகிஷ்காரம் செய்துவிட்டாயா என்று கேட்பீர்கள். அது எனக்கு அவமானம்தான். ஆனாலும் நான் கலைஞர் அவர்களுக்கு ஆட்பட்டதால் ஏற்பட்ட நிலை என்றாலும், கலைஞர் தடையை நீக்கும்போது ஆரம்பிப்பேன். ஆனால் சினிமா பகிஷ்காரத்துக்கு யாருக்கும் ஆட்

படமாட்டேன். அது அண்மையில் துவக்கப்படும். இவை பற்றிய திட்டங்களை அடுத்து வெளியிட இருக்கிறேன். வணக்கம்''

சிலபடங்கள் புராண, மத, கடவுள் பிரச்சாரம் அதிகம் செய்து வருவதால், அத்தகைய சினிமாக்களையே பகிஷ்காரம் செய்ய இருப்பதாக மறுநாள் விளக்கமளித்தார் பெரியார்.

''மொழி உணர்ச்சி இல்லாதவர்களுக்கு, நாட்டு உணர்ச்சியோ நாட்டு நினைவோ எப்படி வரும்? நம் பிற்காலச் சந்ததிக்காவது சிறிது நாட்டு உணர்ச்சி ஏற்படும்படிச் செய்யவேண்டுமானாலும், மொழி உணர்ச்சி சிறிதாவது இருந்தால்தான் முடியும். அன்றியும், சமுதாய இன உணர்ச்சி சிறிதாவது இருக்கவேண்டுமானாலும், மொழி உணர்ச்சி இருந்தால்தான் முடியும்.

உதாரணமாக இன்று பார்ப்பனர்களுக்கு, அவர்கள் எந்த வகுப்பார்களானாலும், சமுதாயத்துறையில் எவ்வளவு பேதம் கொண்டவர்களானாலும், (சமஸ்கிருதம்) வடமொழி என்கிற ஒரு மொழி உணர்ச்சியாலேயே அவர்கள் பிரிக்க முடியாத கட்டுப்பாடான இன உணர்ச்சி உள்ளவர்களாக இருக்கிறார்கள். உண்மையைச் சொல்லவேண்டுமானால், ஆரியம் சமயத்துறையில் ஆதிக்கம் பெற்றதாலும், ஆங்கிலம் அரசியல் முதலிய பலதுறைகளில் ஆதிக்கம் பெற்றதாலுமே, தமிழர்களுக்குள் இனவுணர்ச்சி புலப்படவில்லை; குறைந்து வந்துவிட்டது. இப்போது பாக்கி உள்ள துறைகளிலும், இந்தி ஆதிக்கம்பெற்று, இந்தி மயமாகி விட்டால், இந்தியும் ஆட்சி பீடம் ஏறிப் பெருமை பெற்றுவிட்டால், தமிழன் நிலை என்ன ஆகும் என்பதைச் சிந்தியுங்கள்!'' இந்த ஆழ்ந்த கருத்தினைப் பெரியார் ''விடுதலை''யில் 24-7-72 அன்று வடித்திருந்தார்.

கர்நாடகமாநிலத்தில், ஒரு மாணவன் குடுமி வைத்துக் கொள்ள மறுத்ததால், அவனுக்கு மாணவர் உணவு விடுதியில் அனுமதி கிடைக்கவில்லைஎன்பதை வன்மையாகக் கண்டித்து பெங்களூரில், 23-7-72 அன்று சட்டமன்றத்தில், எஸ்.எம்.

சந்திரசேகர் பேசினார். "தமிழ்நாட்டுப் பெரியார் இங்கேயும் பிறக்கவேண்டும்; நமது மாநிலத்தில் ஒவ்வொரு கிராமத்துக்கும் ஒரு பெரியார் தேவை" என்றும், தமக்குப் பெரியாரிடம் மிகுந்த மதிப்பும் மரியாதையும் உண்டு எனவும் அவர் கூறினார்.

மதுரையில் 4,5,6 தேதிகளில் தி.மு.க. மாநாடு வெகு சிறப்பாக நடந்தேறியது. முதல் நாள் பிரும்மாண்டமான ஊர்வலம், பல லட்சம் மக்கள் பங்கேற்றனர். இறுதியாகச் சிறப்புப் பேருரை ஆற்றிய முதல்வர் கலைஞர் அரைமணி நேரம் பேசியபின், உடல் நலிவுற்றுப் பேச்சை முடித்துக்கொண்டார். புரட்சி நடிகர் எம்.ஜி. ராமச்சந்திரன் முன்னதாகப் பேசும் போது, "மாநில சுயாட்சிபெறப் போராடுவோம்! நம்மை எதிர்த்து மத்திய அரசு இராணுவத்தை ஏவினாலும் சமாளிப்போம்" என்றார். முரசொலி மாறன் இந்த மாநாட்டின் தலைவர், மதுரை மேயர் எஸ். முத்து வரவேற்புக் குழுத் தலைவர்.

9–8–72 அன்று பெரியார் மதுரை மாநாட்டைப் பாராட்டித் தலையங்கம் வரைந்தார்: "மதுரை மாநாடுகள் வெற்றியுடன் நடந்ததை அறிந்து, இதற்குக் காரணமானவர்களை வாயார மனமாரப் பாராட்டுகிறேன். இது இவ்வளவு நல்லவண்ணம் நிறைவேறக் காரணம் தி.மு.க. ஆட்சியின் சிறப்பு என்றுதான் கூறவேண்டும். அரசு பகுத்தறிவுவழி மாறாமல் தன் பயணத்தை நடத்தி வருகிறது. கலைஞரின் திறமையான நிர்வாகத்தினால் நல்ல ஆட்சி நடைபெறமுடிகிறது. கல்வித் துறையில் முன்னேற்றம், உணவுத் துறையில் பஞ்சம் இன்மை, போக்குவரத்து வசதிகள், சாலை அமைப்புகள், சிறு தொழிலுக்கு ஊக்கம், தாழ்த்தப்பட்டோருக்கும் பிற்படுத்தப்பட்டோருக்கும் கல்வியிலும் உத்தியோகத்திலும் நியாயமான விகிதாச்சாரம், ஏழை உழவர்களுக்கு நிலப்பட்டா வீட்டுமனைப்பட்டா வழங்குதல். இப்படி அடுக்கடுக்காய் நன்மைகள் குவிக்கிறார்கள். இந்த ஆட்சியைக் கண்போல் காப்பது நமது கடமையாகும்."

"கவர்னர் பதவி தேவையற்ற ஒன்று. எப்போதும் அவர்கள் டில்லியின் ஏஜண்டாகத்தான் பணியாற்றுவார்கள். இதுவரையில் எந்த கவர்னர் வந்தாலும்,அவரது தனிக்காரிய தரிசி பார்ப்பானராகவேதான் இருக்கிறார்" என்று 7–ந்தேதி "விடுதலை"யில், ஆசிரியர் வீரமணியின் தலையங்கக் கட்டுரை வெளியானது.

வேடிக்கையான வேதனையான பெட்டிச் செய்தி ஒன்று "விடுதலை"யில் வெளியாகியிருந்தது. "ஈ.வெ.ரா. வேண்டுகோள். அன்புள்ள நண்பர் திருவண்ணாமலை பாலகிருஷ்ணன் அவர்களே! நீங்கள் வீட்டை விட்டு வெளியேறி நாள் ஆகிவிட்டதாம். நீங்கள் எங்கிருந்தாலும் திருச்சி பெரியார் மாளிகைக்கு உடனே வாருங்கள். உங்களுக்கு என்ன குறை இருந்தாலும் நானே தக்கது செய்கிறேன்.

உங்கள் நண்பன் ஈ.வெ.ராமசாமி

திருச்சி 12–8–72

13-7-72 அன்று கடலூரில் அரிய பெருவிழா. கெடிலம் பாலத்தருகில் பெரியார் சிலை திறப்புவிழா, மஞ்சகுப்பம் மைதானத்தில் மாபெரும் பொதுக்கூட்டம். ஊரே மக்கள் திரளால் மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கி வழிந்தது. மாலை 5 மணிக்குத் தந்தை பெரியார் முத்துப்பல்லக்கில் அமர்ந்து வர, மக்கள் முழங்கிவரக், கடலலை போல் மனிதத்தலை அணி அணியாய் ஊர்ந்துவர, அழகு மிகு எழுச்சி ஊர்வலம் புறப்பட்டதுவே! இடையிடையே முதல்வர் கலைஞர், அமைச்சர்கள் ப.உ. சண்முகம், எஸ். இராமசந்திரன், சி.பி. சிற்றரசு, அன்பில் தர்மலிங்கம், ஆகியோர் பல்லக்கில் ஏறி அமர்ந்து கொண்டனர். ஊர்வலம் வரும் வழியில், அனைவரும் இறங்கி, தந்தை பெரியார் நிற்கும் பாங்கில் அமைக்கப் பெற்ற முழுஉருவ வெண்கலச் சிலையினைக் கலைஞர் திறந்துவைக்க, மீண்டும் ஊர்வலம் முன்னேறி, நகராட்சி மன்றம் அடைய, அங்கே பெரியார், முதல்வர், அமைச்சர்கட்கு நகராட்சிமன்றம் வரவேற்பு வழங்கி, இரவு 9 மணிக்கு முடிக்க, பொதுக்கூட்டம் 9–30மணிக்கு தொடங்கியது.

மேலவைத்தலைவர் சிந்தனைச்சிற்பி சி.பி. சிற்றரசு தலைமை ஏற்றார். கண்காட்சியின் பகுத்தறிவுக் கோலத்தை மக்கள் கண்டு விழிப்புணர்வு பெறுமாறு, ப.உ. சண்முகம் திறந்து வைத்தார். வீரமணி—கடலூர்க்காரராயிற்றே— வரவேற்றார். மாவட்ட அமைச்சர் எஸ். இராமச்சந்திரன் 10,000 ரூபாய் பொற்கிழி பெரியார்பால் ஈந்தார்.

முதல்வர் கலைஞர் பேசும்போது, "சிக்காகோ பல் கலைக் கழகத்தில் பெரியாரின் நூல்களெல்லாம் இருந்தது காணப் பெருவியப்பும் மகிழ்ச்சியும் பெருமையும் உற்றேன். பெரியாரிடம் நாம் தரும் செல்வம் வீண்போகாது. மருத்துவ மனையாக, கல்விச்சாலையாக மக்களுக்கே திரும்பிவரும்" என்றார். மேலும், "இன்று பெரியாருக்குச் சிலை. சிலை என்றால் வில் என்றும் ஒரு பொருளுண்டு. பெரியாரின் வில்லில் இருந்து புறப்பட்ட அக்கினியாஸ்திரம் அழகிரி; வருணாஸ்திரம் அண்ணா; நாகாஸ்திரம்சி.பி. சிற்றரசு; நான் என்ன அஸ்திரமோ நீங்களேமுடிவுசெய்யுங்கள்" என்றார். புதுவைமுதல்வர் ஃபாரூக், அன்பில் தர்மலிங்கம், சிதம்பரம் டாக்டர் ரங்கசாமி, ஆர். கனகசபை, எம். செல்வராஜ் எம். எல்.ஏ. ஆகியோருக்குப்பின், பெரியார் சீருரை நிகழ்த்தினார். செருப்பொன்று போட்டால் சிலையொன்று முளைக்கும் என்று, 1944–1972 இரு நிகழ்ச்சிகளுக்கும் eye witness ஆன கவிஞர் கருணானந்தம், கவிதை யொன்று தீட்டியவாறு, பெரியார் சிலை பீடத்தில் குறிக்கப்பட்ட சொற்கள் மிகப் பெரிய வரலாற்று உண்மை ஒன்றை நினைவூட்டுகின்றன.

## சரித்திரக் குறிப்பு

29–7–1944 அன்று தந்தை பெரியார் அவர்கள்மீது செருப்பு, பாம்பு வீசப்பட்ட இதே இடத்தில், இன்று (13—8—1972) அவருக்கு சிறப்புடனும் அன்புடனும் சிலை எழுப்பப்படுகிறது. வாழ்க பெரியார்! வளர்க பகுத்தறிவு!

15–8–1972 சுதந்திர தின வெள்ளி விழா. சென்னைக் கடற்கரையில் முதல்வர் கலைஞர் தலைமையில் பேசிய மத்திய அமைச்சர் ஜெகஜீவன் ராம், பெரியார் வழியில்

அண்ணாவும் கலைஞரும் ஆட்சிப் பொறுப்பின் வாயிலாகச் செய்து வரும் சாதி ஒழிப்புப் பணிகளைப் பெரிதும் பாராட்டினார். அன்று மாலை அவர் அரசினர் அம்பேத்கார் நினைவுக் கல்லூரிக்கு அடிக்கல் நாட்டினார்.

ஆனால், இந்தச் சுதந்திர நாள் பெரியாரின் உள்ளத்தில் எப்பேர்ப்பட்ட சிந்தனையைத் தந்தது:—என்னைப் பொறுத்த வரையில், நான் இதை, அடிமையும் மடமையும் ஒழுக்கக்கேடும் நேர்மைக் கேடும் ஏற்பட ஏதுவான, துக்க நாள் துவங்கிய 25–ம் ஆண்டு நாள் என்றுதான் கூறுவேன். இந்தியாவுக்கு என்றைக்குச் சுதந்தரம் வெளியிடப் பட்டதோ, அன்றைக்கே இதை நான் சொல்லிவிட்டேன்.

சுதந்தரம் என்று முதலில் விஷயம் வெளியானவுடன். உயர்திரு அண்ணா, அதைச் சுதந்தர நாள் என்று பாராட்டினார். காங்கிரஸ்காரர்கள் அதைத் துணித் தோரணங்களில், பெரிதாக எழுதி, அடியில் அண்ணாதுரை. என்றும் எழுதி, தெருத் தெருவாகக் கட்டி வைத்தார்கள். பத்திரிகைகளிலும் கொட்டை எழுத்துகளில் விளம்பரம் போல் பிரசுரித்தார்கள். அநேகமாக இந்தச் சம்பவம்தான் அண்ணாதுரைக்கும் நமக்கும் மாறுபாடு வெளியான சம்பவ மாக இருக்கலாம்.

அது மாத்திரமல்லாமல், அடுத்த விஷயத்தை மாண்பு மிகு நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள், ஒரு கூட்டத்தில் (பொள்ளாச்சி என ஞாபகம்) இது சுதந்தர நாள் என்று பேசினார் என்பதைக் கேள்விப்பட்டு, நான் கண்டித்தேன். அப்போது அதற்குப் பதிலளிக்க நாவலர் அவர்கள் "தலைவர் கருத்து இப்படிப்பட்டது என்பதை எங்களுக்கு முதலிலேயே தெரிவித்திருக்க வேண்டாமா? எங்களுக்கு எப்படித் தெரியும்" என்று சொன்னார்.

ஆகவே இது துக்க நாள், மனித சமுதாயத்திற்குக் கேடானநாள் என்பதை அப்போதே சொன்னேன். அது எப்படியோ இருக்கட்டும்; இன்று இந்த நாட்டில் ஓர் ஆட்சிக்கு இருக்கக்கூடாத ஒழுக்கக்கேடு, நாணயக்கேடு, புரட்டு, பித்தலாட்டம், மானங்கெட்ட தனம், கட்சி

மாறல், கட்சிக்குத் துரோகம், இழிதன்மையான சுயநலம், அபாண்டமாய்க் குறைகூறல் முதலிய கூடாஒழுக்கக் காரியங்கள் எந்தக் கட்சியில் யாரிடம் இல்லாமல் இருக்கின்றன? இப்படிப்பட்ட காரியத்திற்காக யார் வெட்கப்படுகிறார்கள்?

முதலாவதாக, அயோக்கியத் தனத்துக்கு ஓர் உதாரணம் சொல்கிறேன். இந்தத் தேசத்தில் எவன் ஒருவன் தன் நாட்டுக்குச் சர்வ சுதந்தரம் கேட்கிறானோ, அவன் ஏழாண்டுகள் வரை தண்டிக்கப்படத்தக்க குற்றவாளியாக ஆக்கப்படுவான் என்ற சட்டம் உலகில் எந்த நாட்டில், தேசத்தில் இருக்கிறது?

அடுத்துச் சொல்கிறேன்; எவனொருவன் தேர்தலில் நிற்பதானாலும் 10,000 ரூபாய் முதல் 3 லட்சம் வரை செலவு செய்துதான் வெற்றியோ, தோல்வியோ அடைய முடியும் என்பது, எப்படி யோக்கியமான நிலையாகும்?

காலித்தனத்துக்குப் பெயர் வேலை நிறுத்தம்; அயோக்கியத்தனத்துக்குப் பெயர் அகிம்சை; சண்டித்தனத்திற்குப் பெயர் சத்தியாக்கிரகம்! தான் பதவி பெற்ற கட்சிக்குத் துரோகம் செய்து விட்டு, எதிர்க்கட்சியின் ஆளாக ஆவது முதலியவை, எப்படி யோக்கியமான சுதந்தரமாக இருக்க முடியும்?

பூரண சுதந்தரம் கிடைத்து 25 ஆண்டுகள் ஆனபின்பும் 54 கோடி மக்களில், ஆண்களில் 70 சதவீதம், பெண்களில் 82 சதவீதம் தற்குறி, கையெழுத்துப் போடத் தெரியாதவர்கள் என்றால், இதற்குப் பெயர் "சுதந்தர ஆட்சியா? அடிமை ஆட்சியா? 100க்கு 3 பேராயுள்ள பார்ப்பனர் மேல்சாதி 97 பேராயுள்ள சூத்திரர் கீழ்சாதி என்ற நிலை நீடிக்கையில், இது சுதந்தரம் பெற்ற தேசமா? அடிமைச் சாசனம் பெற்ற தேசமா?

இதற்கு மேலும் நமது சுதந்திர நாள் விழாவைப்பற்றி விளக்குவதென்றால், மனம் மிகுந்த பரிதாபப்படுகிறது.

தோழர்களே! இப்படிப்பட்ட நிலைபற்றி எந்தக் குடிமக்களாவது வெட்கப்படுவதாக இருந்தால், நமது சமுதாயத்

திற்குக் கேடாக உள்ள பார்ப்பனப் பத்திரிகைகளை வாங்குவதில்லை, படிப்பதில்லை என உறுதி எடுத்துக்கொள்ளுவதன் மூலம் காட்டுங்கள் என்று கேட்டுக்கொள்கிறேன். இது தான் இன்று பொது மக்களுக்கு நான் தெரிவித்துக் கொள்ளும் 'இஞ்செக்ஷன்' செய்தியாகும்.

துக்க நாள் ஒழிக! உண்மைச் சுதந்தர நாள் தோன்றுக!

தாழ்த்தப்பட்டோர் ஒருவர் கட்டாயமாக ஒவ்வொரு கோயிலிலும் அறங்காவலர் குழுவில் இடம் பெறவேண்டும் என்ற மசோதா 18—9—72 அன்று தமிழ் நாடு சட்டமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டது, "விடுதலை" அலுவலகத்தில் பெரியாரிடம் 14 வயதில் அச்சுக்கோப்பாளராக வேலையில் சேர்ந்து Foreman ஆக உயர்ந்து, 25 ஆண்டு பணியாற்றிய பின் ஓய்வு பெற்ற நாகேஷ் என்ற தோழருக்கு, ஊழியர்கள் சார்பில் அளிக்கப் பட்ட பிரிவுபசார விருந்தில் பெரியாரும், வீரமணியும் பங்கேற்று, வாழ்த்தினர். அரசவைக் கவிஞராக வீற்றிருந்த நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை, 24—8—72 அன்று மறைந்தார். கலைஞர் ஆட்சி இவருக்கு சிறப்பு ஊதியம் ஒன்று வழங்கி வந்தது, இரக்கத்தினடிப் படையில்! அன்பில் தர்மலிங்கம் 26—8—72 முதல் மீண்டும் வேளாண்மைத்துறை அமைச்சராகவே நியமிக்கப் பெற்றார். அன்று மாலையே பெரியாரைச் சந்தித்து வணங்கினார். ஆனால் 2-9-72 அன்றுதான் இவர் பதவிப்பிரமாணம் செய்து வைக்கப்பட்டார். வாடிப்பட்டி ரயில் நிலையம் அருகிலுள்ள 6 ஏக்கர் புஞ்சை நிலத்தில் தந்தை பெரியார் குடியிருப்பு என்ற பெயரில் சிற்றூர் உருவாகி வருவதாகப் பத்திரிகைச் செய்தி ஒன்று பிரசுரமாகியிருந்தது. இந்த ஆண்டு பெரியார் பிறந்த நாள் பரிசாக, வீடு வீடாகச் சென்று தோழர்கள் எளிமையாக வழங்கும் பொருட்டுப், பத்துகாசு விலையில் "உயர் எண்ணங்கள்" என்ற அழகிய சிறிய நூல் பெரியாரின் சிந்தனைகளைத் தாங்கி, வெளியிடப்பட்டு, லட்சக்கணக்கில் விற்பனையை எட்டியது. ($1\frac{1}{2}$ லட்சம் பிரதிகள்) இவ்வாண்டு "விடுதலை" மலர் விலை ரூ 2- 50; பக்கம் 200.

கோயில் திரை மறைவில் பக்தியின் பெயரால் 12,750

ஏக்கரா ஏப்பம். கோயில்பெருச்சாளிகளின் மர்மம் அம்பலம். தமிழ்நாடு அரசு நடத்திய விசாரணையின் விளைவு—என "விடுதலை"யில் முதல் பக்கத் தலைப்புச் செய்தி 1-9-72 அன்றுவெளியாயிற்று. தூத்துக்குடியில் 5-ந்தேதி கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரனார் அவர்களின் சிலையைப், பிரதமர் இந்திரா திறந்தவைத்துத், துறைமுகத்துக்கும் அவர் பெயரே சூட்டப்படும் என்றார். 6-9-72 அன்று திருச்சியில் திருவாளர் டி. எம். நாராயணசாமிப் பிள்ளையின் 80-வது வயது பாராட்டு விழாவில் கலந்துகொண்டு, அன்னாரின் கல்வித் தொண்டுகளைச் சிறப்பித்துக் கூறினார் பெரியார். 10-ந் தேதி தர்மபுரியில் பேசும்போது பெரியார் "டில்லி ஆட்சியின் அதிகார பலத்தைக்கொண்டு எப்படியாவது தமிழக அரசை டிஸ்மிஸ் செய்து விடவேண்டும் என்று சிலர் சூழ்ச்சி செய்கிறார்கள்" என்று தீர்க்கதரிசனமான செய்தி ஒன்றைக் கூறினார். சேலம் ஊர்வல வழக்கு, மாவட்ட நீதிபதி சாமிக்கண்ணு அவர்கள் முன்னிலையில், ரிவிஷன்மனுவாகச் செய்யப்பட்டபோது, அதனைத் தள்ளுபடி செய்தார், 12-9-72 அன்று.

இந்த ஆண்டு பெரியார் தமது 94-வது பிறந்த நாளன்று திருச்சியிலிருந்தார். சிந்தனையாளர் கழகச்சார்பில் நடந்த விழாவில், அமைச்சர்கள் அன்பில் தர்மலிங்கம், எஸ். ராமச்சந்திரன், கே. ராஜாராம், துணைவேந்தர் சுந்தரவடிவேலு ஆகியோர் பங்குபெற்றனர். பெரியாருக்கு அன்பளிப்பாக வெள்ளிவாளும், வெள்ளித்தட்டும் வழங்கப்பட்டன. "பார்ப்பனர்கள் எப்படி சங்கராச்சாரியாரைப் போற்றிப் புகழ்ந்து பாராட்டி வருவதால், அவர்கள் சமுதாயத்துக்கே லாபம் ஏற்படுகிறதோ, அதேபோல, நீங்கள் என்னைப் பாராட்டுவதால், எனக்கொன்றும் லாபமில்லாவிட்டாலும், நமது சமுதாயத்துக்கு நிச்சயம் நன்மை ஏற்படும் என்பதால் செய்கிறீர்கள். இல்லாவிட்டால் கொஞ்சம் அவர்கள் பக்கம் நான் சாய்ந்தால், வெகு சுலபமாகப் பகவான் ராமசாமி அல்லது மகான் ராமசாமி ஆகிவிடுவேனே" என்று அந்த விழாவில் பெரியார் குறிப்பிட்டார்.

"விடுதலை" பெரியார் 94–வது பிறந்தநாள் விழா மலரில் இரண்டொரு கட்டுரைகள் பெரியார் தீட்டியிருந்தார். பிறந்த நாள் செய்தி போலத் தந்திருந்தது—கடந்த 93 ஆண்டுகளில், நான் பிறந்து, 1,116 மாதங்கள், 34,045 நாட்கள், பிறைகள் 1,635 ஏற்பட்டு மறைந்து விட்டன. இனி எத்தனை காலத்துக்கு நான் வாழ்ந்தாலும், வாழ்வில் தேய்மானந்தான். வளர்ச்சி காண்பது முடியாத காரியமாகும்.

தெய்வம் என்பதாக எதுவும்இல்லை; மனிதத்தன்மைக்கு மேற்பட்டதாக தெய்வசக்தி-தெய்வீகத்தன்மை என்பதாக எதுவுமில்லை என்று திண்ணமாய்க் கருதி, உறுதியான பணி ஆற்றி வருகின்றேன். இதனால் யாதொரு குறையும், மனச் சங்கடமும், அதிருப்தியும் இத்த 93 ஆண்டுகளில் எனக்கு ஏற்பட்டதில்லை. எனது இந்தக் கொள்கையால் உலகுக்கு, மக்களுக்கு யாதொரு கெடுதியும் ஏற்பட்டதில்லை என்பதோடு, நாட்டுக்கும், மக்களுக்கும், பிற்படுத்தப்பட்ட—தாழ்த்தப்பட்ட மக்கள் யாவருக்குமே நல்ல வளர்ச்சியும், முன்னேற்றமும் ஏற்பட்டு வருகின்றன என்றே சொல்லலாம்.

எல்லாம் கடவுள் செயல், நம்மாலாவது ஒன்றுமேயில்லை என்று கருதி மக்கள் நிம்மதியுடன் இழி நிலையைத், துன்பங்களை ஏற்றுக்கொண்டு இருந்த காலத்தில், நான் ஒருவன் மாத்திரமே தீவிரமாய்ச் சிந்தித்து, இந்த நிலைக்குக் காரணம் நமது முட்டாள்தனமும் இதுவரை சிந்திக்காததுமேதான் என்று கருதித், துணிந்து, கடவுளையும் மதத்தையும் சாஸ்திரங்களையும் முன்னோர் கூற்றையும் அழித்து, ஒழித்துக் கட்டி, மக்களுக்குப் புது எண்ணங்களையும், அறிவையும் உண்டாக்கவேண்டும் என்று பாடுபட்டு வந்ததே, இம்மாற்றங்களுக்குக் காரணமாயிற்று.

எனவே நான் 93 ஆண்டுகள் வாழ்ந்ததை வீண் வாழ்வு என்று கருதவில்லை. என் பணிகளை வீண்பணி என்றும் கருதவில்லை. இனிமேலும் வாழ்வதைத்தான் கஷ்டமாகக் கருதுகிறேன். என் உடல் நிலைமை மிக மோசமாகிவிட்டது.

நினைவு சரியாக இல்லை. மறதி அதிகம். காண் காது சரியாக இல்லை. கால்கள் நடக்கவே முடிவதில்லை. அசதி அதிகம்.

இப்படிப்பட்ட நிலையிலும் சற்று மகிழ்ச்சி உற்சாகம் கொள்ளுகிறேன் என்றால், இன்று நமக்கு வாய்த்திருக்கும் தி.மு.க. ஆட்சிப் பணிகளால்தான்!

ஏதாவது பொல்லாத வாய்ப்பால், இப்போதைய இந்தத் தி.மு.க. ஆட்சிக்கு ஏதாவது மாறுதல் காலம் ஏற்பட்டால், வேறு எந்த ஆட்சி வரும், அதன் பலன் என்ன ஆகும் என்பவைகளைச் சிந்தித்தால் பெரும்பயம் ஏற்படுகிறது. மற்றபடி மகிழ்ச்சியோடு இதை முடிக்கிறேன்.

அடுத்த ஒரு கட்டுரையில் பெரியார், இன்றையச் சுதந்திர இந்தியாவில் நடைபெறும் சில அட்டூழியங்களைப் படம் பிடித்துக் காட்டுகிறார்:—"அரசியலில் நாம் பெற்ற மாறுதல் என்பது கெட்டதிலிருந்து கழிசடைக்குச் சென்று கொண்டிக்கிறோம் (from bad to worse). இதனால் வரவர நம் நாட்டுப் பெண்களும், மாணவர்களும் தவறான காரியங்களால் சூழ்ந்து தழுவிக்கொள்ளப் படுவார்கள் போல் தெரிகிறது.

ஒரு கல்லுருவத்திற்கும், அயோக்கியத் தனங்களைப் பரப்பும் ஸ்தாபனமான ஒரு கோயிலுக்கும், ஒரு மடத்திற்கும், ஒரு சபையாருக்கும், ஒரு சாமியாருக்கும், ஒரு சங்கராச்சாரியாருக்கும் ஒரு கோடி ரூபாய் வருமானமிருந்தாலும், சொத்து இருந்தாலும், வரவு–செலவு இருந்தாலும் அனுமதிக்க வேண்டியது. கணக்கு வரி கேட்கக்கூடாது. ஆனால், உழைத்துப் பாடுபட்டு, திருடாமல், ஏமாற்றாமல், தேடிய சொத்துகளுக்கு அளவு–அதாவது ஒருவனுக்கு இவ்வளவுதான் உரிமை—என்பது ஆட்சிக் கொள்கைத் திட்டம் என்றால், இந்திய ஆட்சியின் தன்மை எப்படிப்பட்டது? முன்னவர் செல்வம் எப்படி நாசமாகிறது? யாருக்குப் பயன்படுகிறது? பின்னவர் செல்வம் யாருக்குப் பயன்படுகிறது?

கார்த்திகை என்கிறான்;குடம்குடமாய்ப் பீப்பாய் பீப்பாயாக நெய் வெண்ணெய் எண்ணெய் பால் பாழாகிறது.

இலட்சதீபம் என்கிறான்; அபிஷேகம் என்கிறான்; எல்லாம் குடம் குடமாக ஜலதாரைக்குப் போகிறது. கேள்வி கேட்பாரே கிடையாது. இந்தப் பார்ப்பனர் வாழும் நாட்டைத் தவிர வேறு எந்த நாட்டிலும் இப்படிப்பட்ட பழக்கமோ, வழக்கமோ, சர்க்கார் அனுமதியோ கிடையாதே!

மேலும், தேசத்தில் உள்ள 50 கோடி மக்கள் ஒன்று சேராதபடி, 16 மாகாணங்களாகப் பிரித்து, பல நிபந்தனைகளைக் கட்டாயச் சட்டமாக ஆக்கிக்கொண்டான். இது உலகம் உள்ளவரை நிரந்தரமாகப் பிரிந்திருக்க வேண்டும் என்று நிர்ப்பந்தமும், பிரிந்துகொள்ள விரும்புகிறவனுக்குப் பிரதிநிதித்துவ உரிமை இல்லை, கிரிமினல் தண்டனை என்றும் ஆக்கிக்கொண்டு, மேல் சாதியானுடைய சர்வாதிகார ஆட்சியை ஏற்படுத்திக் கொண்டு, பரம்பரைச் சொத்து போல், அனுபவித்து வரும் ஓர் ஆட்சியின் கீழ் நாமிருக்கின்றோம். இதை அடிமை ஆட்சி என்றும் சொல்ல முடியாமல், அந்நிய ஆட்சி என்றும் சொல்ல முடியாமல் தவிக்கின்ற நிலைமையில் இருக்கின்றோம்.

நாட்டின் சுதந்தரம் இந்த யோக்கியதையில் இருக்கிறது. நமக்கு உண்மையான சுதந்தரம் வேண்டுமானால், தமிழ்நாடு தனித்த ஏகபோக ஆட்சியாய் இருக்கவேண்டும்.''

21-ந் தேதி முதலமைச்சர் கலைஞர் ஹைதராபாத்தில் பேசும்போது, "பெரியாரைப்போல் உங்கள் மாநிலத்தில் யோகி வேமண்ணா, சவுதுரி ராமசாமி ஆகியோர் உள்ளனர்'' என்று சிறப்பித்துக் கூறினார். 22-ந் தேதி கும்பகோணம் அருகில் பெரியார் வேனில் ஒரு டிராக்டர் மோதி, வேன் கதவு நசுங்கிவிட்டது. பெரியாருக்கும் மற்றவர்களுக்கும் அதிர்ச்சி தவிர, ஒன்றும் ஆபத்தில்லை. டிராக்டர் ஓட்டி மீது நடவடிக்கை எடுக்க ஏற்பாடு செய்து விட்டுப் பெரியார் மாயூரம், திருவையாறு, மண்ணச்சநல்லூர் நிகழ்ச்சிகளுக்குத் தொடர்ந்து செல்கிறார் என்று, வீரமணி அறிவித்தார். இராவண காவியம் பாடிய புலவர் குழந்தை

24-ந் தேதி மறைந்தார். பஞ்சாபின் சீர்திருத்த வாதியும் அங்கே பெரியாரைப் போலப் பிற்படுத்தப்பட்டோருக்காகப் பாடுபடுபவருமான சந்த்ராம் பி.ஏ., ஹோஷியார்பூரிலிருந்து பெரியார் பிறந்த நாளை ஒட்டி ஒரு கடிதம் எழுதியிருந்தார். பெரியாரும், அண்ணாவும் எங்கள் கண்களிலேயே எப்போதும் நிற்கிறார்கள். இவர்கள் தொண்டு பாராட்டத் தக்கதாகும் என்று புகழ்ந்தார் அவர்.

இராஜாஜி காலத்தில் சட்டமன்றச் செயலாளராயிருந்த ஆர். வி. கிருஷ்ணய்யரின் மகன் ஆர். கே. பாலசுப்ரமணியம் சென்னையில் பாராளுமன்றப் பணிகளுக்கான ஆய்வகம் ஒன்றை நடத்தி வருகிறார். "தமிழ்நாட்டில் பெரியாரின் ஒய்வற்ற பணிகளால் பல்வேறு துறைகளில் மக்களிடையே குறிப்பிடத்தக்க மனமாற்றம் நிகழ்ந்துள்ளது. அவரது தொண்டுகளை அங்கீகரித்து அவரை நட்புடன் அணைத்துச் செல்வது ஆட்சிக்கு நல்லது" என்று அவர் பிரதமர் இந்திரா காந்திக்கு ஒரு விவரமான கடிதம் எழுதியிருந்தார் 30–9–72 அன்று. அதற்குப் பிரதமரின் அந்தரங்கச் செயலாளர் என். கே. சேஷன் "மேற்கண்ட கடிதம் கிடைக்கப்பெற்றது. மிக்க நன்றி பிரதமர் கடிதத்திலுள்ள விஷயங்களைப் பார்த்துக் கொண்டார்" எனப் பதில் விடுத்திருந்தார் 3-10-72–ல்.

4-ந்தேதி வள்ளலார் விழாவில் பேசிய முதல்வர் "அடிகளார் போன்றவர்கள் எவ்வளவு பேசினாலும் நமது தமிழ் மக்களை எழச்செய்ய முடியாது. அவர்களது கும்பகர்ணத் தூக்கத்திலிருந்து எழுப்பப் பெரியார் எனும் யானைதான் மிதிக்கவேண்டும்" என்றார். கல்வி சம்பந்தமாக அடைந்துள்ள முன்னேற்றம் 1967ல் 27 கல்லூரிகள், 72–ல் 52. மாணாக்கர் எண்ணிக்கை 1967-ல் 80,000, 1972ல் 1,83,000 என்றார். "நாங்கள் பெரியாரிடம் கற்ற பாடத்தை மனத்தில்கொண்டு பணியாற்றுவதால், கோயில் வருமானம் பெருகியுள்ளது. மழையில் போகவேண்டாம் என்று குழந்தையிடம் சொல்லியும் அது கேட்காமல், அடம்பிடித்து மழையில்தான் போவேன் என்றால், குடையைக் கொடுத்து அனுப்புவது போலப், பிடிவாதமாகக் கோயிலுக்குப் போவோம்

என்கிற மக்களுக்காகக் கோயில்களில் வசதிகளைப் பெருக்குகிறோம்'' என்றார் முதல்வர் கலைஞர்.

6-10-72-ல் திருச்சி பெரியார் மாளிகையிலிருந்து மணியம்மையார், நாயைக்காணவில்லை, என்று ''விடுதலை'' யில் செய்தி தந்தார்கள். பப்பி என்னும் 2 வயதுடைய அல்சேஷன் அது. செயிண்ட் ஜோசப் கல்லூரியருகே கிடைத்ததாக யாரோ 9-ந்தேதி அதனைக் கொண்டு வந்து விட்டனர். அம்மையார் மகிழ்ச்சியுற்றார்.

8-ந்தேதி பெரியமெட்டில் பேசிய பெரியார் ''கடமை கண்ணியம் கட்டுப்பாடு என்று அண்ணா அவர்கள் சொன்னார்கள். இதில் கடமைக்கும் கண்ணியத்துக்கும் நேரம் இடம் காலம் பார்த்து வெவ்வேறு அர்த்தம் சொல்ல முடியும். ஆனால் கட்டுப்பாடு என்பதற்கு, எப்போதும் எல்லாருக்கும் ஒரே அர்த்தம்தான். வியாக்கினம் வேறுபட முடியாது. தி.மு.க. வுக்கு இப்போது மறுபடியும் கட்டுப்பாடு பற்றி நான் ஞாபகப்படுத்த வேண்டியவனாயிருக்கிறேன். முன்பு நேப்பியர் பார்க்கில் மாண்புமிகு அன்பழகன், கலைஞரைத் தலைவரென்று ஒத்துக் கொண்டால் என் மனைவியே என்னைக் கோபிப்பாள் என்று சொன்ன போதும் நான் இதையே குறிப்பிட்டேன். கட்டுப்பாடு குலைந்தால் நீதிக்கட்சியின் கதிதான் உங்களுக்கும் ஏற்படும்'' என்று எச்சரித்தார். பூண்டி பொறியியல் விஞ்ஞானி, தலைசிறந்த பகுத்தறிவாளர் குமாரசாமி அவர்கள் தலைமையில் பெரியார் பூண்டியில் பகுத்தறிவாளர் கழகத்தை 9-10-72 அன்று துவக்கினார். இதன் செயலாளர் கோபால சாமி, சிறந்த சுயமரியாதை வீரராவார். 10ந்தேதியன்று ''விடுதலை''யில் தி.மு.க.வும் கட்டுப்பாடும் என்ற தலையங்கக் கட்டுரை ஆசிரியரால் எழுதப்பட்டிருந்தது.

10-10-1972 சென்னையில் தி. மு. கழகத்தின் தலைமை நிர்வாகிகள், 12, மாவட்டச் செயலாளர்கள், தவிர சத்தியவாணிமுத்து, ப. உ. சண்முகம், க. ராஜாராம், காஞ்சி கல்யாணசுந்தரம், டி. கே. சீனிவாசன் ஆக 26 பேர் கையெழுத்திட்டு, கழகக் கட்டுப்பாட்டை மீறியதாகப் பொருளாளர் புரட்சி நடிகர் எம். ஜி. ராமச்

சந்திரனைத் தற்காலிகமாக சஸ்பெண்ட் செய்து, பதில் தரப் பத்து நாள் அவகாசம் தந்தனர். 11-ந்தேதி நிருபர்களின் கூட்டத்தில் முதல்வரும் கழகத் தலைவருமான கலைஞர் “15 லட்சம் உறுப்பினர்களையும், 18 ஆயிரம் கிளைகளையும் கொண்ட கழகம் இது. என்னுடைய 27 ஆண்டு கால நண்பரான அவரையோ, அல்லது என்னையோ காப்பதைவிடக் கழகத்தைக் காப்பாற்றுவதே முக்கியம். கழகத்தில் ஊழல் என்று பொது இடத்தில் பேசியதற்காக அவரை விலக்கிவைக்கும் நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது” என்று விளக்கினார்.

11-ந்தேதி பெரியார் மயிலாப்பூரில் பொதுக்கூட்டத்தில் உரையாற்றினார்: தி. மு. கழகத்தின் பொருளாளரே இவர்தான். கணக்குத் தெரிய வேண்டுமென்றால், இரகசியமாக, உறவு முறையில் கேட்டிருக்கலாமே! பொது மேடையில் பேசியதால் கழகத்துக்குத்தான் கேடு செய்தார்கள். இதற்கு நடவடிக்கை எடுக்காமல் விட்டால் கழகத்தின் கதி என்ன? எதிர்காலம் இருக்குமா? வெளியில் போவதற்குச் சாக்குத் தேடியதுபோல் போய், இப்போது குப்பை போடுகிறார்கள். ஆகையால் தமிழ் மக்கள் ஜாக்கிரதையாகக் கவனிக்க வேண்டும்” என்றார். 12-ந்தேதி பெரியாரே முன்னின்று நடத்திய மணிவிழா ஒன்று. நெ. து. சுந்தரவடிவேலு அவர்கட்கு 12-10-72 அன்று வயது 61. காந்தம்மையாருடன், இருவரையும் மணமேடையில் அமர்த்தி விழா எடுத்தனர், பெரியார் சார்பில் வீரமணியும் சம்பந்தமும். முதல்வர் கலைஞர், அமைச்சர்கள் நாவலர், அன்பில் தர்மலிங்கம், க. ராஜாராம் ஆகியோரும், மற்றும் சிலம்புச் செல்வர் ம. பொ. சி., குன்றக்குடி அடிகளார், செட்டி நாட்டரசர் ராஜாசர் முத்தையாச் செட்டியார், எம். ஏ எம் ராமசாமி, கா. திரவியம், கா. து. நடராசன், சை. வே. சிட்டிபாபு, பொள்ளாச்சிமகாலிங்கம் ஆகியோரும் வாழ்த்துரைத்தனர். மகனுக்குத் தந்தை நடத்தும் புதுமையான அறுபதாண்டு நிறைவு விழா இது என்றார் நாவலர். கலைஞர் பேசுகையில் “தந்தை பெரியார் கையில் தி. மு. கழகக் குழந்தையை ஒப்படைத்திருக்கிறோம். நோய் போக்கும் பச்சிலை

மூலிகை வைத்திருக்கும் தாய்தான் நமது பெரியார். இந்தத் தாயார் இந்தக் குழந்தைக்குத் தானே தைத்த (பதவிச்) சட்டையை அணிவித்துக், குழந்தையை நடக்கவிட்டு, முன்னும் பின்னும் பார்த்து மகிழ்வார். சட்டையில் ஊசி தங்கிப்போய் எங்கேயாவது குத்துமோ என்றும் கண்காணிப்பார். ஆயினும், ஏதாவது எதிர்ப்பு வந்தால்தான் எப்போதுமே பெரியாருக்குப் பிடிக்கும்!'' என்றார்.

13-ந்தேதி தி. மு. க. செயற்குழுவும், 14, 15 தேதிகளில் பொதுக்குழுவும் கூடி, எம். ஜி. ஆர். மீது எடுத்த நடவடிக்கை சரியென முடிவு செய்து, 22-ந்தேதி 200 ஊர்களில் விளக்கக் கூட்டங்கள் நடத்துவதாகத் தீர்மானிக்கப்பட்டது.

13-10-72 அன்று காலை, பெரியார் அழைப்பின் பேரில், திடலுக்கு வந்து எம். ஜி. ஆர். பெரியாரைச் சந்தித்தார். "நீங்கள் பொறுப்பான பதவியில் இருக்கிறீர்கள். கட்சிக்கும் ஆட்சிக்கும் கேடுவராமல் காப்பாற்ற வேண்டியது உங்கள் கடமையல்லவா?'' என்று கேட்டார் பெரியார். எம்.ஜி.ஆர். தனது நிலையை எடுத்துக்கூறி, பெரியார் கூறியது பற்றி ஆலோசிப்பதாகச் சொல்லிவிட்டுச் சென்றார். அன்றே, பகல் 11-15 மணிக்கு முதல்வர் கலைஞரும், அமைச்சர்களான நாவலர், மன்னை நாராயணசாமி, க. ராஜாராம் ஆகியோரும் வந்து, இந்தியப் பிரதமர் பெரியாருக்கு வழங்கிய தாமிரப்பட்டய விருதினை நேரில் அளித்தனர். கலைஞர், பெரியாருக்கு ரோஜா மாலை சூட்டிப் பழங்களுடன் பட்டயத்தை ஒரு தாம்பாளத்தில் வைத்துப், பெரியாருக்குப் பணிவன்புடன் வழங்கினார். அதைவிடப் பணிவன்புடன் அதனைப் பெரியார் பெற்று மகிழ்ந்தார். அந்தப் பட்டயத்தில் இந்தி மொழியில் "பாரத விடுதலையின் 25 ஆண்டு நிறைவையொட்டி, பெரியார் ஈ. வெ. ராமசாமிக்கு, பாரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திராகாந்தி, நாட்டின் சார்பில் வழங்குகிறார்'' எனப் பொறிக்கப்பட்டிருந்தது. பெரியார், தாம் எம்.ஜி.ஆரை அழைத்துப் பேசியது பற்றி அவர்களிடம் விளக்கிக் கூறிவிட்டுத் திருச்சிக்கு வேனில் புறப்பட்டார்.

விழுப்புரம் அருகில் வேன் செல்லும்போது, எம். ஜி. ஆர். ரசிகர்கள் எனப்படுவோர் வேனை வழிமறித்து, எம். ஜி. ஆர். வாழ்க, கருணாநிதி ஒழிக என்று முழக்கமிட வற்புறுத்தினர், உள்ளே அமர்ந்திருந்த பெரியார் எழுந்ததும், அனைவரும் ஓடிவிட்டனர்.

11-ந் தேதி தொடங்கியே நாடெங்கும் இப்படிப் பட்ட அமளி ஆர்ப்பாட்டங்கள் நிறைய நடைபெற்றன. 14-ந் தேதி வரை 1,625 பேர் இதனால் கைதாகியிருப் பதாக முதல்வர் செய்தி தந்தார். 17-ந் தேதி கே. ஏ. கிருஷ்ணசாமி எம்.பி., தி. மு. க. அடிப்படை உறுப்பினர் பொறுப்பிலிருந்தும் அடியோடு நீக்கப்பட்டார். அமைச்சர் மாதவன் பேசும் போது "எம். ஜி. ஆர். தனக்கு அமைச்சர் பதவி கேட்டார். நடிப்பதை நிறுத்திக் கொண்டால் தருவதாகச் சொல்லப்பட்டது. அதனால் விலகி விட்டார்" என்றார். 18-10-72 அன்று எம். ஜி. ஆர்., தான் தி. மு. கழகத்திலிருந்து விலகி விட்டதாகவும், புதுக் கட்சி துவங்கிவிட்டதாகவும் அறிவித்ததால், இவர் முன்பு கேட்டது கணக்குப் பார்க்க அல்ல, கணக்குத் தீர்க்கத்தான் என்பது புரிந்தது. "விடுதலை" தொடர்ந்து மூன்று நாள் தலை யங்கத்தில் "புதுக் கட்சி என்ற பூனைக் குட்டி வெளியே வந்தது" என விளக்கமாக எழுதியிருந்தது. பெரியார் 11-ந் தேதியே சூசகமாய்க் குறிப்பிட்டதையும் எடுத்துக் காட்டிற்று. இந்திரா காங்கிரசின் கட்சித் தலைமை எதிர் பார்த்தவாறே நடந்துவிட்டதாக 19-ந் தேதி "சுதேசமித்திரன்" எழுதியது.

17-10-72 அன்று ஜஸ்டிஸ் அழகிரிசாமி, சுப்ரீம் கோர்ட்டின் ஜட்ஜான முதல் தமிழர். இவருக்கு முன்பாகத் தமிழ் தெரிந்த அய்ந்து பேர் இருந்திருக் கிறார்கள். யாரார் தெரியுமா? நீதிபதிகளான வரதாச்சாரி, பதஞ்சலி சாஸ்திரி, டி. எல். வெங்கட்ராம அய்யர், சந்திரசேகர அய்யர், ராஜகோபால அய்யங்கார் ஆகியோர்தான்!

21-ந் தேதி அமைச்சர் கே. ராஜாராம், எம்.ஜி.ஆர். பற்றிக் குறிப்பிடுகையில், "இரண்டு வருடமாகப் பொரு ளாளராக இருந்தவர், இதுவரை கேட்காத கணக்கை இப்போது கேட்கக் காரணம் என்ன? 'அய்யய்யோ

கலைஞர் எதிலேயோ காலை வைத்து விட்டாரே' என, இவர் பொருளாளராக வைக்கப்பட்டபோதே பெரியார் கூறினார். மதுவிலக்கு நீடிக்க வேண்டாம்; நீக்க வேண்டும் எனப் பேசினார் எம். ஜி. ஆர்.'' என்றதோடு, பிறகோர் சமயத்தில் எம். ஜி. ஆர். அண்ணாவின் மருத்துவச் செலவுக்குத் தான் பணம் கொடுத்ததாகச் சொன்னபோது, "அப்படியானால் அது இவருடைய வருமானவரிக் கணக்கில் எழுதப்பட்டிருக்குமே, காட்ட முடியுமா?'' என்றும் கேட்டார் ராஜாராம்.

கலைஞர் தலைமை மாறினால் போதாது. தி. மு. கழக ஆட்சியே மாற வேண்டும் என்று எம். ஜி. ஆர். சொன்னதாக 22–ந் தேதி "அலை ஓசை'' ஏடு வெளியிட்டதை, 26–ந் தேதி "விடுதலை'' பெட்டிச் செய்தியாகப் பிரசுரித்தது. 22–10–72 அன்று திண்டுக்கல் நாடாளுமன்ற உறுப்பினர் ராஜாங்கம் மரணமடைந்தார். பின்னர் 23-1-73 அன்று, கூடலூரில் ராஜாங்கம் இல்லம் சென்று, பெரியார் துக்கம் விசாரித்து, அவர் படத்துக்கு மாலை சூட்டி வந்தார்.

22–10–72 அன்று நாகர்கோயிலில் பெரியார் சிலை அமைப்புக் குழு கூடி, முதல் கூட்டத்திலேயே 13,750 ரூபாய் வசூலாயிற்று. 23–ந் தேதி இராமநாதபுரத்தில், அமைச்சர் மன்னை நாராயணசாமி பேசும்போது கல்லெறிந்து கலகம் விளைத்ததில், அமைச்சரின் மண்டை உடைந்து, ரத்தம் சிந்தியது. (எம். ஜி. ஆர். ரசிகர்களால்!)

23–10–72 "விடுதலை''யின் தலையங்கத்தில் பெரியார் தனது அரசியல் நிலை குறித்து ஒரு விளக்கமளித்திருந்தார்: "நான் எப்போதும் எந்தக் கட்சிக்கும் ஆதரவு கொடுக்க முந்துபவன் அல்லன்; முந்தியதே கிடையாது. என்னை அணுகுகின்றவர்களுக்குத்தான் ஆதரவு கொடுத்து வந்திருக்கிறேன். எனக்கு எந்தக் கட்சி ஆதரவும் தேவையில்லை. ஜஸ்டிஸ் கட்சி என்னை அடைந்ததால் அதற்கு ஆதரவு கொடுத்தேன்; நானே ஜஸ்டிஸ் கட்சியானேன். யாரையும் போய் ஆதரவு தேடாமல் இன்று ஜஸ்டிஸ் கட்சியே,

அதாவது திராவிடர் கழகமே (முன்னேற்றக் கழகமே) ஆட்சி செய்யும்படியான நிலைமைக்கு அதை ஆக்கியிருக்கிறேன்.

அந்தக் காலத்தில், காங்கிரஸ் ஒழிக்கப்பட்ட 1939-ல், இரண்டு கவர்னர் ஜெனரல்கள் என்னை வேண்டியும், நான் இணங்காமல் வெளியில் நின்றேன். அரசாங்கத்திற்கு ஆதரவு கொடுத்துக், காங்கிரசை அடக்கினேன்.

வெள்ளையர் அரசாங்கம் நாட்டைக் காலி செய்து விட்டுப் போனவுடன், வேறு கதியில்லாமல் காங்கிரஸ் பார்ப்பனர் கைக்கு வந்தவுடன், அவர்கள் எவ்வளவு என்னை வேண்டியும் நெருங்காமலிருந்து, பார்ப்பனரைப் பதவியிலிருந்து வெளியேற்றினேன். பிறகு பதவிக்கு வந்த பார்ப்பனரல்லாத தமிழர் திரு காமராஜர், அவரே விரும்பியதற்கிணங்க அவரை ஆதரித்தேன்.

அவர் ஆட்சி மாறி ஜஸ்டிஸ் கட்சியின், திராவிடர் கழகத்தின், ஒரு பிரிவான திராவிட முன்னேற்றக்கழகம் பதவிக்கு வந்தது என்றாலும், அது பார்ப்பனர் ஆதரவு தங்களுக்கு அபாயத்தைக் கொடுக்கும் என்று கருதி, பிரிவுபட்ட ஜஸ்டிஸ் கட்சியின் (தி.மு.க.) தலைவரான அண்ணா அவர்களே நேரில் என் வீட்டிற்கு வந்து, "உங்களிடம் ஒப்படைக்கிறேன். நீங்களே எங்களை நடத்துங்கள்!" என்று சொன்னதால், ஜஸ்டிஸ் கட்சியின் (தி. க.) ஆதரவில் நடந்து வருகிறது. இந்த ஜஸ்டிஸ் கட்சி சேலம் மாநாட்டில் அண்ணா அவர்களின் பிரேரணையின்மீதுதான் 'திராவிடர் கழகம்' என்ற பெயர்கொண்டதாயிற்று. அதற்கு மற்றொரு ஆதாரம் ஜஸ்டிஸ் கட்சி (தி. க.) கொள்கைப்படிப் பார்ப்பனரல்லாதாராலேயே ஆளப்பட்டு வருகிறது தமிழ்நாடு இன்று."

இதைத் தவிர, 23-ந் தேதியே, இரட்டைக்காலம் பாக்ஸ் ஒன்றும் 'இன்றைய நிலை' என்ற தலைப்பின் கீழ்ப் பெரியாரால் வரையப்பட்டது:—"தமிழ்நாட்டின் இன்றைய நிலை எதிரிகளால் மிகவும் பரிகசிக்கத்தக்கதாகவும், பார்த்துப் பரிதாபப்படத்தக்கதாகவும் மாறியிருக்கிறது. நாடெங்கும் கலகம், காலித்தனம், நாசவேலை ஆகிய

கேடுகள் தங்கு தடையின்றி நடைபெறுகின்றன. பணக்காரரும் பார்ப்பனரும் சேர்ந்து, தி. மு. க. ஆட்சியை ஒழிப்பதற்கான காரியத்தில், இந்திரா காங்கிரசின் சலுகையும் தேவைப்பட்டதால் அதையும் வேண்டிய அளவு பெற்றுக் கொண்டு, இப்போது திசை திருப்பிவிடும் தந்திரமாக, இதற்கு எம்.ஜி.ஆர். கிளர்ச்சி என்று பெயர் தந்துவிட்டனர். தி. மு. க.வுக்குக் கலைத்துறையில் தொடுப்பு இருந்ததால் எம். ஜி. ஆர். அங்கிருந்து அரசியலுக்கு இழுக்கப்பட்டார். மெள்ளப் பொருளாளராகவும் ஆகிவிட்டார். இந்த வளர்ச்சியைக் காட்டித், தனக்கு மந்திரி பதவி கேட்டாராம். மதுரை மாநாட்டில் வரம்புமீறிப் பேசிவிட்டதாலும் பிணக்கு ஏற்பட்டதாம். இதெல்லாம் தி. மு. க.வை விட்டு வெளியேறுவதற்கான சாக்குதான்! இப்போது எம்.ஜி.ஆரை தூக்கி வைத்துக்கொள்ளும் பத்திரிகைகள், முன்பு இவரை எம். ஆர். ராதா சுட்டபோது எம். ஜி. ஆரை ஆதரித்தார்களா? அனுதாபப்பட்டார்களா? இப்போது மட்டும் இவர் மீது என்ன அக்கறை? தமிழர்களே! உங்கள் தலையில் நீங்களே நெருப்பை அள்ளிக் கொட்டிக் கொள்ளாதீர்கள்! எச்சரிக்கை!''

இத்தோடு விடவில்லை பெரியார். பார்ப்பனரல்லாத இன நலக் கண்ணோட்டத்தினடிப்படையில், ஒற்றுமைக்காக ஆனவரை முயல்வதே அவரது வாடிக்கை! 24-ந் தேதியும் 'எம். ஜி. ஆருக்கு அறிவுரை' என்ற தலையங்கந் தீட்டினார்:—''எம். ஜி. ஆர். ஒரு கலைஞர். எனக்கு அந்தத் துறையில் அனுபவம் இல்லை; சுயபுத்திக் கொள்கை உடைய நடிகரின் நாடகம்தான் நான் பார்ப்பேன். இரண்டொரு சினிமா பார்த்திருக்கிறேன். சிவாஜிகணேசன், எம். ஆர். ராதா ஆகியோரை எனக்கு நன்றாகத் தெரியும். எனக்கு இவரைத் தெரியாது. இரண்டொரு நிகழ்ச்சிகளில் பார்த்த போது, வணக்கம் தெரிவித்தார்; நானும் பதில் வணக்கம் தெரிவித்தேன்! இவருக்கு இன்கம்டாக்ஸ் தொல்லை இருக்கிறது என்கிறார்கள்! அதனால் குழப்பம் ஏற்படுவது யற்கைதான். 'இதனால்தான் யோசிக்கிறேன். நான்

கட்டாயம் வேறு கட்சியில் சேரமாட்டேன்' என்று என்னிடம் கூறினார். இவரால் இனி கழகத்திற்கும் தொல்லைதான். இவருக்கும் இனி கலைத்துறையும் வீழ்ச்சி தான். பார்ப்பனர் ஆதரவெல்லாம் எவ்வளவு நாள் தாங்கும்?'' என்று.

அடுத்த நாளாகிய 25–10–72 அன்றும் ஓர் தலையங்கம் 'சிந்திக்க வேண்டும்' என்பதாக! இதில் ஓர் உவமைகூறினார். புருஷன் செத்ததை நினைத்துக்கொண்டு, வேறொரு இழவு வீட்டிற்குச் சென்றாலும், அங்கே அழுவதுபோல், பார்ப்பனர்களும், தமிழ் மக்களின் எதிரிகளும் சேர்ந்து நடத்துவதே இன்றையக் கிளர்ச்சி. இதற்குப் பத்திரிகைகள் ஆதரவு தருவது எம். ஜி. ஆருக்காக அல்ல. தி. மு. க.வை ஒழித்து விடுவதற்காகவே—என்று குறிப்பிட்டார் பெரியார்.

தமிழகச் சட்டமன்றப் பேரவைச் செயலாளரும், அண்ணாவின் உடன் பயின்றோருமாகிய சி. டி. நடராசன் அவர்களின் மகன் டாக்டர் பரிமேலழகன் எம். எஸ்.—செல்வி வனிதா திருமணம் ஆடபட்ஸ்பரி மாளிகையில் 26-ந் தேதி நடைபெற்றது. பெரியார், கலைஞர், அமைச்சர்கள், அதிகாரிகள், தமிழ்ப் பெருமக்கள் அனைவரும் வாழ்த்திச் சிறப்பித்தனர். பூந்தமல்லி வழக்கறிஞர் பழனியப்பன் அவர்களின் தந்தை ரத்னசபாபதி அவர்கள் மறைந்த துக்கம் விசாரிக்கப் பெரியாரும், மணியம்மையாரும் 29-ந் தேதி அங்கு சென்று, ஆறுதல் கூறி வந்தனர்.

பெரியாரின் மனவேதனை தணியவேயில்லை என்பதற்கு ஒரு சான்று, 1–11–72 "விடுதலை"யில் அவர் எழுதிய தலையங்கம். இதற்கு அவர் கொடுத்த தலைப்பே 'அயோக்கியர் அயோக்கியர், மகா அயோக்கியர்' என்பது. என்ன எழுதினார் தெரியுமா? "அரசியலில் கட்சி மாறுகிறவர்கள் அயோக்கியர்கள், அயோக்கியர்கள், மகா அயோக்கியர்கள்! அரசியலில், ஒரு கட்சித் தலைவர்களிடம் பல்லைக் காட்டிக் கெஞ்சி, சிபாரிசு பிடித்து, தன்னை ஒரு இடம் கொடுத்து ஏற்றுக்கொள்ளச் செய்து, தேர்தலில் 10 ஆயிரம் 20 ஆயிரம் கட்சிப் பணச் செலவில் பதவிக்கு

வந்து, கைதூக்குவது தவிர வேறு ஒரு தொண்டும் கட்சிக்குச் செய்யாமல், பொதுமக்களிடம் பணம் வாங்கிக்கொண்டு சர்க்காருக்குப் பல சிபாரிசுகள் செய்து பணம் சேர்த்துக் கொண்டு, கட்சிப் பெயரால் பதவிப் பெயரால் பல சலுகைகளைப்பெற்று அவற்றாலும் பணம் சம்பாதித்துக்கொண்டு, தகுதிக்கு மேற்பட்ட சொத்தும் அந்தஸ்தும் வருவாய்க்கு வழியும் தேடிக் கொண்டதைத் தவிர, வேறு காரியத்திற்குப் பயன்படாத அநாமதேயங்கள் சுயநலத்துக்கு என்றே கட்சியைக் காட்டிக் கொடுக்க, விலை பேசி வாங்கி வேறு கட்சி என்னும் பேரால் தானிருந்த கட்சிக்கு மனதறிந்து கேடு செய்யும் கட்சிக்குப் போய்த் தன் பெயரைக் கொடுப்பதும், தன்னை ஆளாக்கிய கட்சியைக் குறை கூறுவதும், அக்கட்சியை ஒழிக்கப் பாடுபடுவதும், அதற்குத் தன் பெயரைக் கொடுப்பதுமான காரியத்தில் ஈடுபடுவதைத்தான்—நான் அயோக்கியம், அயோக்கியத் தன்மை என்றும், அயோக்கியர் என்றும், மேலும் அப்படிப்பட்டவர் மகா அயோக்கியர் என்றும் பொது நன்மையை உத்தேசித்துக் கூறுகிறேன்!

இம்மாதிரிக்கண்டிக்காவிட்டால், இப்படிப்பட்டவர்களை மக்கள் வெறுக்கும்படிச் செய்யாவிட்டால், நாளாவட்டத்தில் யோக்கியமான பலருக்கும் நாக்கில் தண்ணீர் வடிய ஆரம்பிக்கும். கட்சி மாறுகிறவர்கள், தமது தேர்தலுக்குக் கட்சி செய்த செலவுத் தொகைகளைக் கொடுத்துவிட்டு, கட்சியால் தாம் பெற்ற பதவியையும் ராஜிநாமாச் செய்துவிட்டு வெளியேற வேண்டும். அப்போதுங்கூட இது வரை தானிருந்த கட்சியில் மக்களுக்கு என்னகெடுதல் ஏற்பட்டது; அதைத் தவிர்க்கத் தானெடுத்த முயற்சி என்ன? தெரிவித்த யோசனை என்ன? என்பனவற்றை விளக்குவதோடு, தாம் சேரப்போகும் கட்சியின் யோக்கியதை என்ன? நாணயம் என்ன? அதனால் நாட்டு மக்களுக்கு விளைய இருக்கும் நன்மை என்ன? என்பதையும், தன்னுடைய ஓட்டர்களுக்கு விளக்க வேண்டும்.

ஓட்டுக்குப் பணம் கொடுத்து வாங்கியதால், அவர்களுக்குச் சொல்லத் தேவையில்லை என்று சொல்லக்

கூடியவர்களாயிருந்தால், கட்சிக்காவது சொல்லிவிட்டுத் தான் செல்ல வேண்டும். ஏனென்றால், 'இந்த அயோக்கியர்கள், இப்படிச் செய்வது பொது நலனுக்கு ஏற்றதா என்று எண்ணிப் பாராமல், தங்கள் அப்பன் வீட்டுப் பரம்பரைச் சொந்தக் காரியம் என்று கருதுகிறார்கள்.

ஓர் உதாரணம், அமாவாசையில் பிறந்த பிள்ளை திருடும் என்று ஜோசியத்தில் நம்பிக்கை உள்ளவன் கருதினாலும், அவன் வீட்டிலேயே—யாரோ அமாவாசையில் பிறந்தவன் திருடிவிட்டால்—அவன் அதை வெளியில் சொல்லாமலும், போலீசில் பிராது கொடுக்காமலும் இருந்து விடுவானா?—அது போல, இன்று கட்சி மாறுவது சுபாவம் என்றாலும், நான் இதை மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டியவனாக இருக்கின்றேன்.

நாட்டில் இப்படிப்பட்ட அயோக்கியர்களைக் காப்பாற்ற, மூடி மறைக்கப், பிறவி அயோக்கியப் பத்திரிகைக்காரர்கள் பலர் இருக்கின்றார்கள்; இவர்களுக்கு மானாவமானமில்லை!

யோக்கியமான காரணம் காட்டாமல், பதவியை இராஜிநாமாச் செய்யாமல், கட்சி மாறுகிறவர்கள் அயோக்கியர்கள் என்று சுவரில் எழுதுங்கள். துண்டுப் பிரசுரம் போடுங்கள். கல்லில் இவற்றைச் செதுக்கி முச்சந்தியில் நடுங்கள், என்று கேட்டுக் கொண்டு இப்போதைக்கு முடிக்கிறேன்.

மனவேதனைப்பட்ட வேதனையாளன்.''

அடுத்து, கோவையில் 5–ந்தேதி பெரியார் பேசுங்கால் ''தமிழ் நாட்டிலுள்ள தொழிற்சாலைகளில் தமிழரல்லாதாரின் ஆதிக்கமே மிகுந்துவிட்டது. பாதிக்கு மேல் மலையாளிகளின் ஆதிக்கம்தான் காணப்படுகிறது. எம். ஜி. ஆர். துரோகத்தாலும், டில்லி அரசின் சூழ்ச்சியாலும், தி. மு. க. ஆட்சி கவிழ்ந்தால், இனி தமிழனுக்கு வாய்ப்பு ஏது? கலவரம் செய்வதற்கு மாணவர்களை வேறு தூண்டிவிட்டுப் பயன்படுத்துகிறார்கள்; இப்படியாகக் கவலையோடு நாம் சிந்திப்பதற்குரிய பல விஷயங்கள் இருப்பதால், விரைவில்

தமிழக ஆளுநர் சட்டசபையை இறுதியாக்கி (Prorogue) செய்து ஆணை பிறப்பித்தார்.

பெரியார், 14–ந் தேதி சிந்தாதிரிப்பேட்டை பொதுக் கூட்டத்தில், "தி.மு.க. ஆட்சியைக் கவிழ்க்க விரும்பியவர் களுக்குக் கருவியாக எம். ஜி. ஆர். இப்போது கிடைத்து விட்டார். ஆமாம்; புகார் வந்ததன் பேரில் மந்திரி பதவியி லிருந்து மதியழகனை 1970 செப்டம்பரில் விலக்கிய கலைஞர், இப்போது எதற்காக அவருக்குப் போய்ச் சபா நாயகர் பதவியைத் தந்தார்?" என்று கேட்டார் பெரியார். அடுத்த நாள் தலையங்கம் "சபாநாயகர் நிலை". அதில் "நாணயக் கேடாக நடந்து கொண்டார் என்ற குற்றச் சாட்டின்மீது பதவியிலிருந்து விலக்கப்பட்ட மதியழகன், அன்றைக்கே தனது மரியாதையை இழந்து விட்டார். அண்ணா செய்த தவறுதான் முதலில் இவருக்கு 1967–ல் மந்திரி பதவி தந்ததாகும். அடுத்து ஒரு தவறு அண்ணா செய்தது என்னவென்றால், எம். ஜி. ஆரைக் கட்சியில் சேர்த்ததாகும். அவர் நம்மவரும் அல்ல; நம் இனத்தவரும் அல்ல!" என்று எழுதினார் பெரியார். அதை மெய்ப்பிக்கத் தானோ என்னவோ, திண்டுக்கல்லில் இருந்த பெரியார் சிலையை, 16–ந் தேதி உடைத்திடும் முயற்சிகள் நடந்த தாகச் செய்தி!

"சுயராஜ்யா" இதழில், தமிழ் நாட்டில் ஜனாதிபதி ஆட்சியைப் பிரகடனம் செய்ய வேண்டும் என்று இராஜாஜி எழுதி, எரிகிற நெருப்பில் எண்ணெய் வார்த்தது போல், பெரியாரின் குமுறும் எரிமலையான நெஞ்சத்தில் மேலும் ஆத்திரத்தை மூட்டிவிட்டார். நவம்பர் 15, 16 தேதிகளின் தலையங்கத்தில், பெரியார் ராஜாஜியைப் போட்டுப் புரட்டி எடுத்துவிட்டார்! "நம் நாட்டு அரசியலில் ஆகட்டும், பொது வாழ்வில் ஆகட்டும், பெருவாரியான மக்களால் பாராட்டப்படக் கூடிய பெரிய மனிதர் என்பதற்கு ஒரு நபர் கூட இல்லாமல் போய் விட்டார்கள். தமது இன மக்களால் பெரியவராக விளம்பரம் செய்யப்படும் இராஜாஜி ஒருவர் இருக்கிறார். ஆனால் அவரைப் பெரிய மனிதன் என்று

ஒரு மாநாடு கூட்டி வேலைத் திட்டம் வகுக்கலாம் என எண்ணுகிறேன்'' என்றார். 11-ந் தேதி சென்னை லாயிட்ஸ் எஸ்டேட்டில் ''நாட்டில் சட்டம் ஒழுங்கு சீர் கெட்டதால், 20 லட்ச ரூபாய்க்கு மேல் நட்டம் ஏற்பட்டுள்ளதே! இவ்வளவும் யாரால்?'' என்று கேட்டார் பெரியார்.

10–11–72 அன்று எம்.ஜி.ஆர். ஆதரவாளர்கள் ஊர்வலம் நடத்தி அமைச்சரவை ராஜிநாமாச் செய்யக் கோருவதைக் குறிப்பிட்டு முதல்வர் கலைஞர், ''இதெல்லாம் அர்த்த மற்றது. ஆகஸ்டு மாதம் மதுரை மாநாட்டில் அவரே கூறினார்—அடுத்த தேர்தலுக்கு முன்பு ஆட்சியைக் கவிழ்க்க மத்திய அரசே முயன்றாலும், முறையல்ல என்று. இப்போது மாத்திரம் என்ன அவசியம் வந்தது?'' என்று கேட்டார். 12-ந் தேதி அமைச்சர் என். வி. நடராசன் மணி விழா, சென்னை ஆபஸ்ட்பரியை அடுத்துத் தி. மு. கழகத்தால் வாங்கப்பட்ட அண்ணா அறிவாலயத்தில், பெரியார் தலைமையில், சிறப்பாக நடைபெற்றது. கலைஞர் கேடயம் வழங்க, நாவலர் பொன்னாடை போர்த்த, சத்தியவாணிமுத்து வாழ்த்திதழ் படிக்க, ம. பொ. சி. மலர் வெளியிட, விழா கோலாகலமாய் நிறைவேறியது.

13–11–72 அன்று கூடிய சட்டமன்றத்தில், சபாநாயகர் மதியழகன் மீது கொண்டு வரப்பட்ட நம்பிக்கையில்லாத் தீர்மானம், மறுநாள் எடுத்துக் கொள்ளப்படுமென அவைத்தலைவரான அவரே முதலில் கூறினார். பின்னர் திடீரென்று, ''சட்டசபையைக் கலைத்துவிட்டு மறு தேர்தல் நடத்தலாம். சபை டிசம்பர் 5–ந் தேதி வரை ஒத்தி வைக்கப்படுகிறது'' என்று முரண்பாடாகக் கூறிவிட்டு, எழுந்து சென்று விட்டார். 14-ந் தேதி சபாநாயகர் இல்லமாகிய ''கூவம் இல்லம்' முன்பாக, மதியழகனைத் தேர்ந்தெடுத்த சட்டசபைத் தொகுதியான ஆயிரம் விளக்குப் பகுதியினர், ஆர்ப்பாட்டம் செய்து கைதாயினர். 15–ந் தேதி அர்த்தால் நடத்த எம். ஜி. ஆரும், வலது கம்யூனிஸ்ட்களும் வேண்டுகோள் விடுத்தும், சரியாக நடைபெறாமல் பிசுபிசுத்தது. 15–ந் தேதியன்று

என்பதாலும், ஒரு மனிதன் எந்த அயோக்கியத்தனத்தையும் செய்யலாமா? செய்தாலும்—மடையனும், அயோக்கியனும், துரோகிகளுமாக இருக்கும் மக்கள்தாம் சரி என்று சொல்வார்கள்; யோக்கியர்கள் இழித்துத்தான் கூறுவார்கள்!

ஏன் இவ்வளவு வேதனைப்பட்டு எழுதுகிறேன் என்றால், 'கருணாநிதி ஆட்சி விலகிவிடவேண்டும். அல்லது விலக்கப்படவேண்டும்' என்று அவர் சொன்னால், அப்படிச் சொல்லும் அவர் கருத்தையும் நான் புரிந்துகொண்டால், மனம் பதறுமா? பதறாதா?

அயோக்கியத்தனத்திற்கு எல்லை இல்லையென்றால், மனித சமுதாய நல்வாழ்வில் அக்கறை கொண்டவர்களுக்கு மனம் பதறாதா? வெடிக்காதா? என்று தான் கூறுகிறேன். எனவே மக்களே! நீங்கள் அவற்றை மதிக்க மாட்டீர்கள் என்றிருந்தாலும், உங்கள் வெறுப்பை அவர்களுக்குக் காட்டுங்கள் என்று வேண்டி இதை முடிக்கின்றேன்!''

19-ந் தேதி சென்னையில் சூளைப் பகுதியில் பேசிய பெரியார் ''எம்.ஜி.ஆர். வரிகொடா இயக்கம் ஆரம்பிக்கப் போவதாகச் சொல்லியிருக்கிறாரே—இவர் வரி (இன்கம் டாக்ஸ்) கொடாததால் இப்போது இயக்கம் நடத்தப் போவதாகச் சொல்கிறாரா?'' என்று நகைச்சுவையோடு கேட்டார். 13-ந் தேதியன்று சட்டசபையில் மதியழகன் நடத்தையைக் கண்டித்து, அகில இந்தியப் புகழ்பெற்ற ஆங்கில ஏடுகளான நேஷனல்ஹெரால்டு, டைம்ஸ்ஆஃப் இந்தியா, ஸ்டேட்ஸ்மென், இந்துஸ்தான் டைம்ஸ், பெட்ரியாட் ஆகியவை எழுதியிருந்தன. அங்ஙனமிருக்க, ''மதியழகன் யோசனை நல்லதுதான் என்று சி. சுப்ரமணியம் கூறுகிறாராம். இவருக்கும் மோகன் குமாரமங்கலத்துக்கும் இன்றுள்ள பதவி தி.மு.க. இட்ட பிச்சை என்பதை மறந்து விட்டார்களா? கலைஞர் சொல்வதுபோல், பசு சும்மாயிருக்க இந்தக் கன்றுகள் ஏன் துள்ளுகின்றன? கண்ணாடி வீட்டிலிருந்துகொண்டு கல்லெறிய வேண்டாம் என இவர்களை எச்சரிக்கிறோம். இனி இந்த விவஸ்தைகெட்ட பேச்சை

வேண்டாம்!'' என விடுதலை 20-ந்தேதி தலையங்கத்தில் குறிப்பிட்டிருந்தது.

18–11–72 சென்னை மாநகராட்சியில் தி.மு.க. புதிய மேயராக ஆர். ஆறுமுகமும் (பிற்படுத்தப்பட்டோர்) துணைமேயராகக்கன்னியப்பனும் (தாழ்த்தப்பட்டோர்) தேர்ந்தெடுக்கப்பட்டனர். 1965 இந்தி எதிர்ப்புப் போரில் தீக்குளித்து வீரமரணம் எய்தியோர் குடும்பத்துக்கு, மாதம் நூறு ரூபாயும், 53 தியாகிகட்கு மானியம் 2,000 ரூபாயும் தரப்படும் என அரசாணை பிறப்பிக்கப் பட்டது.

21–11–72 ''விடுதலை''யில் ஒரு பெட்டிச் செய்தி: 'இராஜாஜியின் பரிதாப நிலை' என்ற தலைப்பு. ''11–11–72 அன்று எம்.ஜி.ஆர். சென்று இராஜாஜியைச் சந்தித்தாராம். 'நீங்கள் இப்போது செய்ததைப் பத்தாண்டுகட்கு முன்பே செய்திருக்கவேண்டும்' என்றாராம் அந்த மேதை! (அப்போது தி.மு.க. ஆட்சியிலா இருந்தது?) என் நண்பர் ஏன் இப்படி உளறினார் என்று தெரியவில்லை! பைத்தியக்காரன் வாயில் கொஞ்சம் கள்ளையும் ஊற்றியதுபோல் ஆகிவிட்டதா? ஈ.வெ.ராமசாமி'' என்பதாக! அன்றே ''எனது சுற்றுப்பிரயாணம்'' என்ற தலையங்கமும் பெரியாரால் எழுதப்பட்டிருந்தது:– ''இப்போது இருக்கின்ற உடல் நிலையில் நான் சுற்றுப்பிரயாணம் செல்லவே தகுதியற்றவனாக இருக்கிறேன். ஆனாலும் என் மனவேதனை, துடிப்பு இவற்றைத் தணிக்க, இந்தச் சுற்றுப்பிரயாணம் காரணமாயிருப்பதால் துணிவு பெற்றேன்! எதற்காகவும் மனந்தளராமல் தி.மு.க. ஆட்சியைப் பாதுகாக்கப் புறப்பட்டு விட்டேன்!'' என்று. அத்துடன் அன்று காஞ்சிபுரம் பொதுக்கூட்டத்திலும் பெரியார் பேசினார்:– ''ஒருவன் கச்சேரி கேட்கப் போனான். அவன் புதிதாகப் போனதால் எங்கெங்கே தலை அசைக்க வேண்டுமென்று தனக்குத் தெரியாதே என்று நண்பனிடம் யோசனை கேட்டான். உன்குடுமியில் ஒரு கயிற்றைக்கட்டி என்கையில் பிடித்துக் கொண்டிருப்பேன். நான் அதை இழுக்கிற நேரத்தில், நீ தலையாட்டினால்போதும் என்றான்

நண்பன். அதேபோல, இன்னொரு கதை மகாபாரதத்தில். அஞ்ஞாத வாசத்தில் (விராடபர்வம்) இருந்த போது, அர்ச்சுனன் உத்தரகுமாரனுக்குத் தேர்ச்சாரதியாகி, யுத்தத்துக்குப் போனார்கள் இருவரும். எதிரிகளைக் கண்ட உத்தர குமாரன் பயந்து போய்த் தேரைத் திருப்பு; ஊருக்குப் போய் விடலாம் என்றான். அர்ச்சுனன் விடுவதாயில்லை. உத்தர குமாரனைத் தேர்க்காலில் கட்டிப்போட்டு விட்டுத் தானே போருக்குப் போனான். இந்த இரண்டு கதைகளிலும் சொன்னதுபோல, இப்போது எம்.ஜி.ஆர். நயங்கினாலும், கம்யூனிஸ்டுகள் அவரை விடுவதாயில்லை!'' என்றார் பெரியார்.

28-ந்தேதி எம்.ஜி.ஆர். 'ஸ்டேட்ஸ்மென்' ஏட்டுக்கு அளித்த பேட்டியில், தி.மு.க.அரசியல் ரீதியாகவும், தொழில் ரீதியாகவும் தன்னை அழித்திட முயன்றதால்தான் புதுக் கட்சி தொடங்கிடத் தான் முடிவுசெய்ததாகக்கூறியிருந்தார். 29-ந் தேதி சேலம் வேலூரில் முதல்வர் கலைஞர் பேச இருந்த கூட்டத்தில் பெருங்கலகம் விளைத்து, மின்சார டிரான்ஸ்ஃபார்மரைக் கொளுத்திக் கலவரம் செய்தனர் எம்.ஜி.ஆர். ஆதரவாளர்கள். மறுநாள் தஞ்சையில் பேசிய பெரியார் "இவ்வளவு தூரம் போன பிறகு இந்த ஸ்தாபனத்தைத் தடைசெய்ய வேண்டியதுதானே!'' என்றார்.

> சென்னை சட்டமன்றம் 2-12-72 அன்று சபாநாயகர் மதியழகன் தலைமையில் துவங்கியபோது, அவரை நீக்குகின்ற தீர்மானம் நிறைவேறியும், அவர் தலைவர் நாற்காலியை விடாமல் உட்கார்ந்திருந்தார். எனவே வேறுவழியின்றி, இன்னொருநாற்காலி போடப்பட்டு, அதில் துணை சபாநாயகர் பெ. சீனிவாசன் அமர்ந்து, சபைநடவடிக்கைகளைத் தொடர்ந்து நடத்த நேரிட்டது. 4-ந் தேதி நடந்தசட்டமன்றக் கூட்டத்தில் பெ சீனிவாசன் தலைமையில், கலைஞர் அமைச்சரவை மீது நம்பிக்கை வாக்குகோரப் பெற்றபோது ஆதரவாக 172, எதிர்ப்பாக 0 வாக்குகள் என அறிவிக்கப்பட்டது.

' 12-72 அன்று மதுரையில் பெரியார் பேசும்போது, துறைகளிலும் மலையாளிகளின் ஆதிக்கத்தை

ஒழித்துக்கட்ட ஒரு திட்டம் வகுத்தாகவேண்டும். அதற்காக ஒவ்வொரு மாவட்டத்திலும் திராவிடர் கழகம் மாநாடு நடத்தும்'' என்றார். கரூரில் பெரியார் ''தி.மு.க. சாதனை களால் மற்றக் கட்சிகளின் வாழ்வே அஸ்தமித்துவிட்டது. அதனால்தான் ஒழிக்கக் கிளம்பிவிட்டனர். பார்ப்பனர் அதிகார வர்க்கம் தி.மு.க. வால் ஒழிக்கப்பட்டது. அதனால் தான் கவிழ்ப்பில் இறங்கியுள்ளனர்'' என்று தெளிவு படுத்தினார்.

''உண்மை'' மாத இதழ் இனி சென்னையிலிருந்து வெளி வரும். ஆண்டுச் சந்தா 5 ரூபாய் என்று பெரியார் பெயரில் ''விடுதலை'' 2-12-72 ஏட்டில் செய்தி பிரசுரமாயிற்று. தாழ்த்தப்பட்டோரின் சம்பந்தியாக முதல்வர் கலைஞர் மாறியது 10-12-72 அன்று. அவரது இரண்டாவது மகன் அழகிரிக்கு, அமைச்சர் ஓ.பி. இராமனின் மைத்துனியும், காராளரின் இரண்டாவது மகளுமான காந்தியை அன்றைய தினம் வாழ்க்கைத் துணையாக இணைத்து வரலாறு படைத் தார். நாவலர் தலைமையில், பெரியார், அமைச்சர் ஜெகஜீவன்ராம்முன்னிலையில்,பெரியார்திடலில் திருமணம்! அவரவர் வீட்டில் சாப்பாடு! மத்திய அமைச்சர் காலந் தாழ்ந்து 12 மணிக்குத்தான் வர இயன்றதால், நேரே கலைஞரின் இல்லத்திற்கே வந்துவிட்டார். பெரியாரும் அங்கே சென்றிருந்து, சந்தித்து மகிழ்ந்தனர். முன்னதாக மணமக்களைக் காமராஜர், எம்.ஆர். கிருஷ்ணா (மத்திய துணை அமைச்சர்), பிரம்மானந்தரெட்டி, கே.கே.ஷா, நீதிபதி கே. வீராசாமி, மோகன்குமாரமங்கலம், கவிஞர் கண்ணதாசன், டாக்டர் ஹண்டே, சி.பி. சிற்றரசு, ம.பொ. சிவஞானம், ஏ.ஆர். பெருமாள், அப்துல்வகாப் ஜானிபாய், சத்தியவாணிமுத்து ஆகியோர் வாழ்த்தினர். மாலையில் ஒய்.பி. சவான், ஓம் மேத்தா, இல்லத்துக்கு வந்து மணமக் களைக் கண்டு சென்றனர்.

எம்.ஜி.ஆர்., எம். கல்யாணசுந்தரம் ஆகியோர், கலைஞர் மற்றும் சில அமைச்சர்கள்மீது தந்திருந்த புகார்ப்பட்டியல் பிரதம மந்திரி வழியாக, முதலமைச்

சருக்கு அனுப்பிவைக்கப்பட்டிருந்தது. அந்தப் புகார் பட்டியலின் பிரதியும், அதற்கான பதில் விளக்கமும் புத்தக உருவில் அச்சிடப்பட்டு 14–12–72 அன்று பிரதமருக்கு அனுப்பப்பெற்றது. சட்டமன்றத்திலும் வைக்கப்பட்டது. 15-12–72 முதல் 5-1-73 வரை தொடர்ந்து 22 நாட்களும் இவற்றை "விடுதலை" வெளியிட்டுவந்தது! 19-12–72 அன்று சென்னையில் கலெக்டர்கள் மாநாடு நடைபெற்றது. வெள்ளச்சேதம், நிவாரணப்பணிகள் பற்றி ஆராய்ந்து, துயர்துடைப்புக்காக 25 கோடி ரூபாய் தேவை என்றும், இப்போது 4 கோடி ஒதுக்கியுள்ளதாகவும் முதல்வர் நிருபர்களிடம் அறிவித்தார். மேலும் அவர் "வெள்ளச் சேதத்தால் பெற்றோரை இழந்து அநாதையான குழந்தைகள் 5, அவற்றில் அறநிலையைத் துறை பொறுப்பேற்றுக் கொண்டது 4. பெரியார் முன்வந்து மனமுவந்து தத்தெடுத்துக்கொண்ட குழந்தை 1. முன்பு கோயில்கள் செய்துவந்த வேலையை, இப்போது பெரியார் மேற்கொண்டுள்ளார். இது பெரியாரின் அன்பு உள்ளத்தைக் காட்டுவதாகும் என்றார்.

21–12–72 அன்று மூதறிஞர் இராஜாஜியின் உடல்நிலை மிக்க கவலைக்கிடமாகி விட்டதால், சென்னை பொது மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டிருந்தார். 24-ந்தேதி பெரியாரும் மணியம்மையாரும் திண்டிவனத்திலிருந்து நேரே 2–45 p.m. மணிக்குத் திடலுக்கு வந்து சேர்ந்தனர். இராஜாஜி உடல்நலக் குறைவு பற்றி விசாரித்த பெரியார், வேனிலிருந்து இறங்காமலேயே மருத்துவமனை சென்று, தம் நீண்டகால நண்பரைப் பார்த்து வந்தார். 25–ந் தேதி காலையிலும் மாலையிலும் பெரியாரும் மணியம்மையாரும் மீண்டும் சென்று பார்த்து வந்தனர். "எவ்வளவோ கருத்து வேறுபாடு எங்களுக்கிடையே யிருந்தாலும், எங்கள் நட்பு ஆழமானது. ஒருவருக்கொருவர் மாறாத தன்மை கொண்டது" என்று நிருபர்களிடம் கூறினார் பெரியார்.

மருத்துவர்களின் அரிய முயற்சிகள், அமைச்சர்களின் அரிய கவனிப்பு, அன்பர்களின் உரிய பேரார்வம் அனைத்தையும் மீறி, மூதறிஞர் இராஜாஜி அவர்கள் 25-12–72 அன்று

மாலை 5-44 மணிக்கு மரணமடைந்தார்கள். அன்னாரின் சடலம் இராஜாஜி மண்டபத்தில் பொது மக்களின் பார்வைக்கு வைக்கப்பட்டது. மறுநாள் குடிஅரசு தினம் ஆகையால் 27-ந் தேதி கிருஷ்ணாம்பேட்டையில் தகனம் செய்வதென முடிவு செய்யப்பட்டது. முதல்வர் கலைஞரின் தனி முயற்சியால், கிண்டி, காந்தி மண்டபத்தை அடுத்த காலி மனையில், காந்தியடிகளின் சகாவும் சம்பந்தியுமான சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியாருக்கு, எட்டுக் கோண நினைவு மண்டபம், உச்சியில் மணிக்கிரீடம் ஆகியவை பின்னர் அமைக்கப்பட்டன.

சென்னை 114-வது வட்டத்தில் பேசிய பெரியார், "யார் யாரோ யாரையோ கணக்குக் கேட்கின்றார்களே—பிரதமர் அம்மையார் கட்சியின் தேர்தல் செலவுக் கணக்கு என்ன? கோடி கோடியாய்ச் செலவு செய்கின்றார்களே? இவர்களுக்கு மட்டும் ஏது பணம்? இதை யாராவது கேட்க வேண்டாமா?" என்று, தாமே கேட்டு விட்டார்.

27-12-72 மாலை இராஜாஜியின் சவ ஊர்வலம் எடுத்துச் செல்லப்பட்டபோது, பெரியாரும் வேனில் பின் தொடர்ந்து சென்றார். எம்.ஜி.ஆரும் ஊர்வலத்தில் நடந்து வந்தார். அவரது ரசிகர்கள் சவ ஊர்வலம் என்பதை மறந்து, கைதட்டி, விசிலடித்து, ஆரவாரம் செய்யக் கண்டு, அவர் தமது காரில் ஏறிச் சென்றுவிட்டார். கிருஷ்ணாம்பேட்டை இடுகாட்டில் தமது அறுபதாண்டு நண்பரின் சிதைக்குத் தீயிடப்பட்டபோது, சக்கர நாற்காலியில் அமர்ந்தவாறே பெரியார், கசிந்து கண்ணீர் சிந்திய காட்சி, கண்டோர் நெஞ்சத்தைப் பிழிந்து விட்டது!

26-12-72 "விடுதலை"யின் தலையங்கம் இராஜாஜியின் மறைவுக்காகப் பெரியாரால் தீட்டப் பெற்றது என்பதைச் சொல்லவும் வேண்டுமா?... "நண்பர் இராஜாஜி அவர்கள் முடிவெய்திய நிகழ்ச்சி எல்லையற்ற துக்கத்துக்குரிய நிகழ்ச்சியாகும். சம்பிரதாயத்திற்கல்ல, உண்மையாகவே சொல்லுகிறேன்; இராஜாஜி அவர்கள் ஒப்பற்றவர், இணையற்றவருமாவார். கொள்கைக்காகவே வாழ்ந்து, கொள்கைக்

காகவே தொண்டாற்றி, முடிவெய்திய பெரியார் ஆவார். அவரது இழப்பு பரிகாரம் செய்ய முடியாத இழப்பாகும்.

தமிழ்நாட்டில் ஒப்பிலாமணியாய் வாழ்ந்து அரும்பெரும் காரியங்களைச் சாதித்த பெரியார் இராஜாஜி, தமது 95-வது வயதில் முடிவெய்தி மறைந்து விட்டார். அவரது பெருமைக்கு ஓர் எடுத்துக் காட்டு தெரிவிக்க வேண்டு மானால், இராஜாஜி இல்லாது இருந்தால், 'மகாத்மா காந்தி'யே இருந்திருக்க மாட்டார். அது மாத்திரமல்ல, இந்திய தேசிய காங்கிரசே இருந்திருக்க மாட்டாது.

தமிழ் நாட்டில் பார்ப்பனருக்கு எதிராகத் தோன்றிய ஓர் எரிமலையை, மகாத்மாகாந்தி என்னும் ஒரு புயல் மழையைக் கொண்டு தான் அவித்து, பார்ப்பனரை இருக்கச் செய்தார். 40 ஆண்டுக்கு உட்பட்ட மக்களுக்குத் தெரியாத சேதியாகும் இது. இராஜாஜி அவர்கள் 1910-ல் பார்ப்பன ரல்லாதாருடன் சமபந்தி போஜனம் செய்தார். 1915-லிருந்து பார்ப்பனரல்லாத மக்கள் வீட்டில் உணவு அருந்து வார்.; அவரால், காங்கிரசில் எல்லாப் பார்ப்பனர்களும், காந்தியாரும், சமபந்தி போஜனம் அருந்தும்படி ஆயிற்று. நான் அறிய, திராவிட நாட்டில் இவரால்தான் முதலில் யார் வீட்டிலும் யாரும் உணவு அருந்தலாம் என்கிற தன்மை ஏற்பட்டது.

தீவிர தேசபக்தர் மகாதியாகி என்று சொல்லப்பட்ட வ.வே.சு. அய்யர் வர்ணாசிரமப் பிரச்சாரம் செய்துகொண் டிருந்த காலத்தில், தான் மாத்திரமல்லாமல் அநேகப் பார்ப் பனரையும் துணிந்து யார் வீட்டிலும் உணவு அருந்தக்கூடிய சமுதாயச் சீர்திருத்தம் செய்த பெருமை இராஜாஜிக்குத் தான் உண்டு. மேலும், கலப்புத் திருமணத்தைத் துணிந்து முதலில் ஆதரித்தவரும் இவரே. ருக்மணிதேவி—அருண் டேல் திருமணத்தைக் கட்டுப்பாடாகப் பார்ப்பன சமு தாயமே—ஏன் சத்தியமூர்த்தி அய்யர், ரெங்கசாமி அய்யங்கார், கஸ்தூரி ரெங்க அய்யங்கார் எல்லாருமே— எதிர்த்தபோதும், துணிந்து அதை ஆதரித்ததோடு, தமது

மகளையும் கலப்புத் திருமணமாக, காந்தியார் மகனுக்குக் கொடுத்தவர் இராஜாஜி.

என்னை முழுக்க முழுக்க சமுதாயத் தொண்டனாக ஆக்கி, காங்கிரசில் ஈடுபடுத்தித், "தலைவர் நாய்க்கர்" என்று தாமே அழைத்து, பிறரையும் அழைக்கச் செய்த பெருமையும் அவரையே சாரும். நாங்கள் நாலைந்து ஆண்டுகள் இரண்டறக் கலந்து, நண்பர்களாக இருந்தோம்.

இராஜாஜி என்னோடு உள்ளவரை ஒரு பகுத்தறிவு வாதியாகவே இருந்தார். மற்றும் அவர் பொதுவுடைமைக் கருத்தையும் ஆதரித்தவர்.

வக்கீல் தொழிலிலும் "கோர்ட்டார் அவர்களே! எனது கட்சிக்காரரை நிரபராதி என்று சொல்ல நான் இங்கு வரவில்லை, இவர் குற்றவாளி என்று ஒரு முடிவு செய்ய வேண்டிய அளவுக்குச் சட்டப்படியான ஆதாரங்கள் இல்லை!" என்றுதான் சொல்லுவார். காந்தியை அடிக்கடி திணற வைத்து விடுவார். இதனாலேயே காந்தியாரும், இராஜாஜி அவர்களின் ஆமோதிப்பைப் பெற்றே எந்தக் கருத்தையும் வெளியிடுவார்.

இந்தி விஷயத்தில், பிற்காலத்தில், அவருக்கு அது கட்டாயப்படுத்தத் தக்கதல்ல என்கின்ற கருத்து பலமாக இருந்தது. இராஜாஜி அவர்களும் என்னைப்போலவே ஸ்தல சுய ஆட்சி என்பது தேவை இல்லை என்ற கருத்தைக் கொண்டவர்.

நம்நாட்டு அரசியல் வகுப்பு உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்ட அரசியலாக ஆகிவிட்டதால், அரசியல் காரணமாக வகுப்புகளுக்குக் கேடு வரக்கூடாது என்ற கருத்தால்—நம்முடைய சில கருத்துகள், காரியங்கள் இராஜாஜி அவர்களது ஆதரவுக்கு உரியன அல்லவாக இருக்கலாம் என்றாலும், பொதுவில் இராஜாஜி அவர்களை நாம் இழக்கவேண்டிய நிலை ஏற்பட்டது, நமக்கும், நாட்டுக்கும், மக்களுக்கும் பரிகாரம் செய்ய முடியாத இழப்பே ஆகும் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்."

# 18. நிறைந்தார்

மணியம்மையார் உடல்நலிவு—ஆர்க்காடு மாநாட்டில் தீ—பெங்களூர் மாநாடு—தஞ்சை விழா—மேடை வேன் அன்பளிப்பு—சென்னையில் பிறந்த நாள் விழா—மதுரை கருஞ்சட்டை மாநாடு—திருச்சி சிந்தனையாளர் கழக விழா — சென்னையில் தமிழர் சமுதாய இழிவு ஒழிப்பு மாநாடு—சாதி ஒழிப்புக் கிளர்ச்சிக்கு நாள் குறித்தது — தியாகராய நகர் பேருரை—உடல் நலிவு—வேலூர் மருத்துவ மனையில்......நெஞ்சங்களில் நீக்கமற நிறைந்தார்! 1973 முதல், 1979–ஆம் ஆண்டு முடிய·

---

1973–ஜனவரி 1–ந்தேதியும் பெரியார் புத்தாண்டுச் செய்தி வழங்கியருளினார். "1972–ல் நமது தி.மு.க. அரசு மக்களுக்கு உணவு, கல்வி, மற்ற வாழ்க்கை வசதிகளைச் செய்து கொடுத்தது. அதனால் மக்கள் மனநிறைவோடு வாழ்ந்து வருகிறார்கள். ஆயினும் சில பேர் பொறாமையாலும், பதவி ஆசையாலும், சில தொல்லை கொடுத்து வருகிறார்கள் என்றாலும், அதையெல்லாம் சமாளித்து, அரசு பணியாற்றி வருகிறது. வேறு எந்த மாநிலத்திலும் நமது ஆட்சியில் காணப்படும் அளவு பொறுப்பும், திறமையும், மேன்மையும் இருக்கவில்லை. மேலும் நமது அரசு, முற்போக்கான மக்கள்நலக் காரியங்களைச் செய்து வர

வேண்டுமானால், 1973–லும் தொடர்ந்து நம்முடைய ஆதரவைத் தந்து வரவேண்டும்—'' என்பதுதான் பெரியாரின் புது வருட வாழ்த்து.

மாணவர்களின் அமைதியின்மைக்குக் காரணம் கல்வித் திட்டந்தான் என்பது பெரியாரின் அசைக்க முடியாத கருத்தாகும். ''மாணவர்களுக்குக் கல்வி இலவசமாகி விட்டது. பலருக்குச் சாப்பாடும், புத்தகமுங்கூட இலவசமாகக் கிடைக்கின்றன. நிர்வாகிகள், பணம் சம்பாதிக்கும் ஒரு வழியாகக் கருதியே பல தனியார் பள்ளிகளை நடத்தி வருகின்றனர். ஆசிரியர்கள், சம்பளம் ஒழுங்காகக் கிடைத்தால் சரிதான், நமக்கென்ன? என்று இருந்து விடுகிறார்கள். வீட்டிலிருந்து தொந்தரவு தராமலிருந்தால் சரிதான்–என்று நினைக்கின்ற பெற்றோர்களுக்குப் பொறுப்பும் இல்லை; கவலையும் இருப்பதில்லை. உத்தியோகம் பார்ப்பதற்குத் தான் கல்வி என்ற நிலைமையை மாற்றித், தொழிலில் அக்கறை ஏற்பட, நிறையத் தொழிற் பயிற்சிப் பள்ளிகள் தேவை'' என்று பெரியார் எழுதியிருந்தார். மலேசியாவில் கூட சு.ம. திருமணங்கள் செல்லும் என்றும், தலைவர் வைத்துத் திருமணங்களை நடத்திக் கொள்ளலாம் என்றும் அனுமதித்ததைப் பெரியார் பாராட்டினார். 10-ந்தேதி அண்ணாமலை நகரில் பேசும்போது ''தி.மு.க. ஊழல் என்று ஊரெல்லாம் பேசுகிறார்களே–நான் கேட்கிறேன்—காந்தி, நேரு, இராஜாஜி, காமராஜர், இந்திராகாந்தி இவர்களில் ஊழலில் சம்பந்தப்படாதவர் யார்? சொல்ல முடியுமா?'' என்று வினாத் தொடுத்தார் பெரியார்.

கோபிச்செட்டிப்பாளையத்தை அடுத்த நம்பியூரில் பெரியார் 17-ந்தேதி பேசும்போது ''இந்தியாவிலிருந்து தமிழ் நாடு தனியாகப் பிரிந்து விடவேண்டும் என்கிற பிரிவினை உணர்ச்சியை எவராலும் தடுத்து நிறுத்த முடியாது. இந்தியா ஒரே நாடு என்று சொல்வதே பெரியதொரு புரட்டாகும். அதே போலத்தான் கடவுள் என்பதும் இமாலயப் புரட்டாகும். கடவுள் என்றால் காரித்துப்பு, என்று சிறுவர்களுக்கும் சொல்லித் தரவேண்டும்'' எனக்

கருத்துரைத்தார். அவ்வாறே இராஜபாளையத்தில் "தசாவ தாரம் என்கிறார்கள். 64 திருவிளையாடலுக்கும் அவதாரம் டுத்தான் என்கிறார்கள். இப்படி ஆயிரக்கணக்காக அப்போது அவதாரம் எடுத்த கடவுள், இன்று செருப்பால் அடி வாங்கியும் வரக்காணோமே!'' என்றார்.

பெரியாருடைய சுற்றுப் பயணங்கள் தடையின்றி நடை பெற வசதியாக அவருக்கு ஒரு வேன் வழங்க வேண்டுமென முயன்று, எஸ். குருசாமி, 1955-ல் ஒன்று ஏற்பாடு செய்தார். பின்னர் வேறொன்று 1961-ல் சிதம்பரத்தில் வழங்கப் பட்டது. அந்த வேன் மூன்று முறை ரிப்பேராகிவிட்டது. 1968-ல் கரூரில் அளித்த வேனும் சரியாக இல்லை என்று ஜி. டி. நாயுடுவிடம் தரப்பட்டது. இப்போது புதிதாக ஒன்று ஏற்பாடு செய்து, வேனில் அமர்ந்தபடியே அய்யா அவர்கள் பேசுமாறு வசதிகள் செய்யவேண்டும். தோழர்கள், மாவட்டப் பொறுப்பாளர்கள், நன்கொடை திரட்டி உதவவேண்டும்—என்பதாக வீரமணி அறிக்கை வெளியிட் டிருந்தார். தஞ்சை கா. மா. குப்புசாமி, 25-1-73 அன்று, 2,000 ரூபாய் அன்பளிப்பாக வழங்கினார்; அதன் பின்னர் எல்லா ஊர்களிலும் போட்டி போட்டுக் கொண்டு கார் நிதி வழங்கிட முன் வந்தனர்.

27-12-72 அன்று சென்னை ''கலைமகள்'' இதழின் சார்பில் திரு. பாணன் என்பவர் பெரியாரைப் பேட்டி கண்டார். அதில் ஓர் எழுத்துகூடக் குறைக்காமல் பிப்ரவரி 1973 இதழில் வெளியிடப்பட்டிருந்தது:—''நான் ஃபோர்த் ஸ்டாண்டர்டு வரைதான் படித்தேன். என் அண்ணன் லோயர் ஃபோர்த் ஃபார்ம் படித்தார். நான் கடையிலே மூட்டைக்கு விலாசம் போடுவது முதல் எல்லா வேலையும் பார்ப்பேன். குளிக்கவேணும்கிற ஞாபகமே வரதில்லே, இப்ப நான் குளிச்சு ஆறு நாளாச்சு. நான் ஒண்ணும் படிச்சோ ஆராய்ச்சி பண்ணியோ நாத்திகனாகலை, பகுத் தறிவுக்கு எட்டினதைச் சொல்றேன். சாப்பாடு—காலையிலே பெட் காஃபி சாப்பிடுவேன். ஆறரை மணிக்கு எழுந்திருப் பேன். படிப்பேன், இரண்டு இட்லி சாப்பிடுவேன். ரெண்டு

மலைப்பழம் சாப்பிடுவேன். மத்தியானம் புலால் உணவு, ரெண்டு கப் தயிர். இரண்டு வாழைப் பழம், மாலையில் காஃபி, இரவிலே ரெண்டு இட்லி, மலைப்பழம். கூட்டம் இல்லாது போனால் எட்டரை மணிக்குப் படுப்பேன். ஆளும் கட்சியை நமக்கு வசப்படுத்தப் பார்ப்பேன். நம்ம கொள்கையை அவர்கள் ஏற்றுக் கொண்டால் தொடர்ந்து ஆதரிப்பேன். எதிர்த்தால் ஒழிக்க முயற்சி செய்வேன். குடிப்பது தவறு இல்லை, கள் குடிச்சிச் செத்தவங்க எத்தனை பேர்? சொல்லுங்க பார்ப்போம், ஜனங்க சோம்பேறியாய் ஆனதற்குக் காரணமே மது ஒழிப்புத்தான். கூலி உயரக் காரணமே இதுதான். சினிமாவுக்குப் போறதைவிடக் குடி நல்லதுதான்.

தமிழைக் காட்டு மிராண்டி பாஷை என்று சொன்னேன். என்ன தப்பு? ஒருத்தனோடு ஒருத்தன் சண்டை போட்டுகிட்டுத் திட்டறானே தமிழில்...சண்டைக்காரனை மட்டுமா திட்டறான். அவன் அம்மா அக்கா பெண்டாட்டி எல்லாரையும் இழுக்கறான்! இங்லீஷ்லே திட்டினா யூ ஃபூல் இடியட்னு திட்டுவான், அவ்வளவுதான். நான் மட்டுந்தான் குறளைத் திட்டறேன். ஏன்? பெண்ணை ஆணுக்கு அடிமை ஆக்குகிறதே! கட்டுப்பாடு எவையுமே தேவையில்லை என்பவன் நான். எதையும் பாவம் என்பதற்காகச் செய்யத் தயங்க மாட்டேன், ஏன் என்று யோசிப்பேன். சிந்தனைக்குப் பிடிபடாத எந்த விஷயத்தையும் நான் நம்புவதில்லை.'' பெரியார் அளித்த பதிலின் சுருக்கம் இது.

இந்தப் பேட்டியின் போது ''விடுதலை'' நிர்வாகி என். எஸ். சம்பந்தம் உடனிருந்து உதவியதாகக் ''கலைமக''ளில் நன்றியுடன் குறிப்பிட்டிருந்தனர்.

3-பிப்ரவரி; அன்று பேரறிஞர் அண்ணா நினைவு நாள். பெரியார் தமது வேனிலேயே மவுன ஊர்வலத்தில் சென்று, அண்ணா நினைவிடத்தில் மலர் வளையம் வைத்தார். அன்று நள்ளிரவு மணியம்மையாருக்கு மாரடைப்பு ஏற்பட்டது. உடனடியாக அரசினர் பொது மருத்துவமனையில், இருதய நோய் தீவிர சிகிச்சைப் பிரிவில் சேர்க்கப்பட்டார். மறுநாள்

காலை 11 மணிக்குச் சென்று, மணியம்மையாரைப் பார்த்து விட்டுப் பெரியார், அங்கு சிகிச்சையிலிருந்த சி. பி. சிற்றரசு, எஸ்.எஸ். ராஜேந்திரன், நாமக்கல் பழனிவேலன் எம்.எல்.ஏ., ஏ. பத்மநாபன் அய். ஏ. எஸ். ஆகியோரையும் கண்டு, நலம் விசாரித்துச் சென்றார். மறுநாள் முதல்வர் கலைஞர் மருத்துவமனை சென்று, மணியம்மையாரின் நலம் எவ்வாறுள்ளதெனக் கண்டு வந்தார். அடுத்த 15-3-73 அன்றுதான் அம்மையார் இல்லந்திரும்பி, மறுநாள் திருச்சி செல்ல முடிந்தது! 18–2–73 அன்று சேலத்திலிருந்த பெரியாருக்கு அதிக வலி ஏற்பட்டு, அங்கேயே சுந்தரம் நர்சிங்ஹோமில் சேர்க்கப்பட்டார். வேலூரிலிருந்து டாக்டர் பட், சேலம் சென்று, புதிய டியூப் மாற்றப்பட்டது. பின்னர் அங்கிருந்தவாறே 20–ந்தேதி திருச்சி சென்றார் பெரியார்.

சென்னை உயர்நீதி மன்றம் துவங்கிய 112 ஆண்டுகளில் நடைபெறாத ஓர் அதிசயம் கலைஞர் ஆட்சிக் காலத்தில் நிகழ்ந்தது. 14–2–1973 அன்று அய்க்கோர்ட் கூடுதல் நீதிபதியாகத், தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த நீதிபதி ஏ. வரதராஜன் நியமிக்கப்பட்டார். நீதிபதி எஸ். நடராஜனும் இன்னொரு ஜட்ஜாக நியமனம் பெற்றார். முத்தமிழ்க் கலா வித்துவரத்தின அவ்வை டி. கே. சண்முகம் 15-2–73 அன்று சென்னையில் காலமானார். திருச்சியில் 4–ந்தேதி "தமிழ்த் தாய் வாழ்த்து யாருக்காக, எதற்காகப் பாடுகிறீர்கள்? இப்போது ஆட்சியில் இருந்துகொண்டு, மக்களுக்கான நன்மைகளைச் செய்து வருகின்றவர்களை வாழ்த்துங்கள். அது போதும்! இன்றைய தினம் கலைஞரை எதிர்ப்பவர்கள் கூட, அவர் இன்னின்ன தவறுகள் செய்தார்; நாங்கள் வந்தால் அப்படித் தவறு செய்யாமல், இன்னின்ன நன்மை செய்வோம்—என்று ஏதாவது சொல்ல இடமே இல்லையே! இன்றைக்கு நிலவுகின்ற ஜாதி இழிவை ஒழிப்பதற்கான திட்டம் அவரிடம்தானே உள்ளது!" என்று பேசினார் பெரியார்.

திருநெல்வேலியிலுள்ள ஸ்ரீவைகுண்டம் நகரில் நான்கு புறமும் மதிற்சுவரால் சூழப்பட்ட பகுதி ஒன்றுள்ளது.

அதற்குள், கோட்டைப் பிள்ளைமார் என்றோர் வகுப்பார், பல தலை முறைகளாக வெளியுலகைப் பாராமலே வாழ்ந்து வருகிறார்கள். மூடநம்பிக்கையின் பாற்பட்ட அந்தப் பழைமையான சம்பிரதாயத்தை 8–2–73 அன்று உடைத்து நொறுக்கினர். அதனால் மகிழ்ச்சி கொண்டு, பகுத்தறிவுப் பகலவனாம் தந்தை பெரியாருக்கு, அந்தச் சமுகத்தினர் பாளையங்கோட்டை நகரில் 1–3–73 அன்று விமரிசையான விருந்தொன்று நடத்தினர். அங்கேயே சரஸ்வதி அம்மாள் என்பவர் பெருமனத்துடன் 1,001 ரூபாய் அன்பளிப்பு பெரியாருக்கு வழங்கினார்.

திருச்சியிலுள்ள கனரக பாய்லர் தொழிற்சாலைக்குப் பெரியார் 6–3–73 அன்று வருகை தந்து, அங்குள்ள பார்வையாளர் புத்தகத்திலும் பின்வருமாறு கருத்துப் பதிவு செய்தார்:—பாய்லர் தொழிற்சாலை இந்தியாவிலேயே மிகப் பெரிய சாதனைகளில் ஒன்று என்பதையும், அதன் நிர்வாகமும் திறமையும் மேல் நாட்டு வாய்ப்புகளுக்கு எந்தவிதத்திலும் குறைந்ததல்லாத அதிசயப்படும் தன்மையில் நடந்து வருவதும் கண்டு, மிக மிக மகிழ்ச்சியும், அந்த வாய்ப்புக் கிடைத்ததற்குப் பெருமையும் அடைகிறேன்.

—ஈ. வெ. ராமசாமி.

சிவகங்கையிலுள்ள மன்னர் ராஜா துரைசிங்கம் நினைவுக் கல்லூரியில் பெரியார் 8-3-73-ல் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பற்றிச் சொற்பெருக்காற்றினார்:—''புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களைப் பற்றித் தெளிவாகப் பேச வேண்டுமானால், பகுத்தறிவுக் கூட்டத்தில்தான் பேச முடியும். அப்படிக்கில்லாது, கடவுள், மதம், மூடநம்பிக்கைக்கு ஆட்பட்ட இடங்களில் பேசுவதென்றால், வழ வழா கொழ கொழா என்றுதான் பேச வேண்டி வரும்!

பாரதிதாசன் அவர்கள் புரட்சிகரமான கருத்துகளை வெளிப்படுத்திய முதல் கவியும், கடைசிக் கவிஞரும் ஆவார். அவருக்கு அடுத்து, அவருக்கு ஈடாக, வேறு எந்தக் கவிஞரும் தோன்றவேயில்லை! பாரதிதாசன் புதுமைக் கருத்துகளையும், புரட்சிக் கருத்துகளையும், மக்கள் சமுதாயத்திற்குத்

தேவையான சமதர்மக் கருத்துகளையும் துணிந்து வெளியிட்டுள்ளார். அவருக்கு அனுசரணையாகச் சுயமரியாதை இயக்கமும், திராவிடர் இயக்கமும் இருந்தன. அவர் கடவுள், மதம், சாஸ்திரம், பெண்ணடிமை, மூடநம்பிக்கை இவற்றைக் கண்டித்து நன்றாகப் பாடியுள்ளார்.

பாரதியாருக்கோ வள்ளுவருக்கோ கொடுக்கின்ற மரியாதை. நமது பாரதிதாசனுக்கு நம் மக்கள் கொடுக்கத் தவறி விட்டார்கள். காரணம், பாரதிதாசன் புதுமைக் கவிஞர், புரட்சிகரமான கருத்துகளைக் கொண்டவர் என்பதால்தான்! மற்ற கவிஞர்கள் பழைமை விரும்பிகள் ஆனதனால், பழைமையில் பற்றுக்கொண்ட மக்கள் அவர்களுக்கு ஆதரவு கொடுக்கின்றார்கள்; போற்றுகின்றார்கள்! பாரதியாரை எடுத்துக்கொண்டால், அவர் தாவாத கொள்கை இல்லை. கடவுள், மதம், சாஸ்திரம், முன்னோர் நடப்பு எல்லாம் கூறியுள்ளார்.

பாரதிதாசன் எந்த இடத்திலும், எந்தச் சந்தர்ப்பத்திலும், பகுத்தறிவுக்குப் புறம்பான கருத்துகளை எடுத்துப் பாட முற்படவே இல்லை. சமுதாய மாற்றத்துக்கான கருத்துகளைத் துணிந்து கூறிய பெரும்புலவர் ஆவார் அவர். இன்றைக்குப் பகுத்தறிவாளர்களுக்கு எடுத்துச் சொல்லத் தக்க சமாதானமாகப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பாடல்கள் அமைந்துள்ளன.

நமது மக்கள், இப்படிப்பட்டவருக்குப் பாராட்டும் பெருமையும் அளிக்கவேண்டிய அளவுக்கு அளிக்காதது, வருந்தத் தக்கதாகும். காரணம், அவர் பகுத்தறிவு வாதியானபடியால், அவரது பணிக்குக் கிடைக்க வேண்டிய மதிப்புக் கிடைக்கவில்லை. பாரதிதாசனைப் போன்று புதிய கருத்துகளை எடுத்துச் சொல்லிப் பரப்ப ஆளே இல்லையே! பாரதிதாசன்போல நமது நாட்டில் புரட்சிப் புலவர்கள் தோன்றி இருந்திருப்பார்களேயானால், நமக்கு 2,000, 3,000 ஆண்டுகளாக இருந்துவரும் இழிதன்மை இருந்திருக்குமா?''

வட ஆர்க்காடு மாவட்டம் ஆர்க்காடு நகரில் இருபெரும் மாநாடுகள் மிகச் சீரோடும் சிறப்போடும் ஏற்பாடாகி

இருந்தன. 7–4–73 அன்று திராவிடர் கழக மாநாடு. வரவேற்புக் கழகத்தலைவர் ஆம்பூர் பெருமாள், மாநாட்டுத் தலைவர் பெரியார், திறப்பாளர் வீரமணி, கொடி உயர்த்தல் பிரபாவதி பி. ஏ., பி எல்.,—8-ந் தேதி பகுத்தறிவாளர் மாநாடு. வரவேற்புக் குழுத் தலைவர் வீராசாமி எம். எல். ஏ., தலைவர் அன்பில் தர்மலிங்கம், திறப்பாளர் பேராசிரியர் அன்பழகன், பெரியார் படத்திறப்பு க. ராஜாராம், அண்ணா படத்திறப்பு எஸ். ராமச்சந்திரன், கண்காட்சித் திறப்பு ப. உ. சண்முகம். ஆனால் வயிற்றெரிச்சல் கொண்ட வன் பகையாளர் சிலர், 6–ந் தேதி நள்ளிரவில் மாநாட்டுப் பந்தலுக்குத் தீவைத்து, ஓடினர்! பெருமளவு தீக்கிரையாயிற்று எனினும், வரவேற்புக் குழுவினரின் அரிய முயற்சியால் காலையில் பந்தல் சரி செய்யப்பட்டது. ஊர்வலம் தொடங்குவதில் மாத்திரம் சிறிது தாமதம் நேர்ந்தது. பெரியார், வீரமணி, வீராசாமி ஆகியோர் அமர்ந்து ஊர்வலமாக வந்தனர். தி.மு.க. ஆட்சியைப் பாதுகாப்போம்; திராவிடர்கள் இந்துக்கள் அல்ல என்றே கூறவேண்டும்; சுதந்திரத் தமிழ்நாடு அடைந்தே தீருவோம்; கோயில்களைப் புறக்கணிப்போம் என்பன போன்றவை முக்கிய தீர்மானங்களாக நிறைவேற்றப்பட்டன. 8–ந் தேதி இரவு சென்னை திரும்புங்கால், தனது கார் மரத்தில் மோதியதால், காயமுற்று, ஓய்வில் இருந்த ஆர்க்காடு வீராசாமியைப், பெரியார் 17–4–73 காலையில் சென்று பார்த்து, நலம் விசாரித்தார்.

12–4–73 அன்று பெரியார் நெய்வேலியில் நடைபெற்ற இராவணன் விழாவிலும், சிதம்பரம் வட்டத்தில் பொதுக் கூட்டத்திலும் கலந்துகொண்டார். "கிராமத்தான் உழைக்க நகரத்தான் அனுபவிப்பது என்பது கூடாது! அப்படியானால், கிராமத்தான் சூத்திரன்; நகரத்தான் பார்ப்பானா? யாரும் யாரையும் சுரண்டிப் பிழைக்க இடமிருத்தல் கூடாது. பலர் உழைத்துச் சிலர் சாப்பிடும் வர்க்க பேதம் அடியோடு ஒழிய வேண்டும். இதற்குத் துணையாகக் கூட்டுறவு உணர்வு வளரவேண்டும்!" என்று பெரியார் கருத்தினைத் தெரி

வித்துக்கொண்டார். தமிழக முதல்வர் கலைஞர் தஞ்சையில் 13-ந் தேதி நடைபெற்ற தி. மு. க. பேரணி ஒன்றினைத், தஞ்சை கீழவீதி பெரியார் இல்லத்திலிருந்து, கண்டு மகிழ்ந்தார். அதனைக் குறிப்பிட்டு அவர் உரையாற்றுகையில், "நானும், பேராசிரியரும், மன்னையும் திராவிடர் கழகக் கட்டடத்திலிருந்து இன்றைய பேரணியைக் கண்டோம். தமிழ்ச் சமுதாயத்திற்கு ஓர் ஆபத்து வருமானால், அதைத் தவிர்ப்பதற்கோ, அதிலிருந்து விடுபடுவதற்கோ, அதிலிருந்து தமிழ்ச் சமுதாயத்தைக் காப்பதற்கோ தி. மு. க. வின் பாசறைக் களங்களிலே ஒன்றாகத் தி. க. இருக்கும் என்பதற்கு இது அடையாளமாகும்!" என்றார். நாகையில் வி. பி. கே. காயாரோகணம் பிள்ளையின் சிலை திறப்பு விழாவில் பெரியார் கலந்துகொண்டு, அவர் தமது சிறந்த நண்பர்; நீதிக்கட்சிப் பிரமுகர் என நினைவு கூர்ந்தார், 22-4-73ல்.

பெரியாரின் பாசஉணர்வினைத் தூண்டிவிட்ட நிகழ்ச்சி ஒன்று, 28-4-73 மாலை 5-30 மணிக்குத் திருச்சி பெரியார் மாளிகையில். ரா. நிர்மலா (ஆசிரியர்)—இரா. சிவசுப்ரமணியன் D. E. E. (பொறியாளர்) ரா. அலமேலு—சு. இரத்தினம் (மின் வாரியம்) ஆகியோருக்குத் திருமணம். அழைப்பாளர் யார் தெரியுமா? ஈ. வெ. ராமசாமி—ஈ. வெ. ரா. மணியம்மை. யார் வீட்டுத் திருமணம் இது? அன்னை நாகம்மையார் குழந்தைகள் இல்லத் திருமணம்! ரா. நிர்மலா 14 ஆண்டுகளாய் அங்கு வளர்ந்து, அங்கேயே ஆசிரியப் பணி புரியும் பெண். ரா. அலமேலு 12 ஆண்டுகளாய் இல்லத்தில் வளர்ந்தபெண். இவர்கள் திருமணமாகிப், போன பொழுதில் பெரியார் கண்கலங்கிய புதுமையை உலகு கண்டு. வியந்தது —"ஞானியரும் மறப்பரோ மக்கள்மேற் காதல்?" என்று!

30-4-73 அன்று புதுவையில் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் 82-வது பிறந்த நாள் விழா. ஆளுநர் சேதிலால் கவிஞரின் சிலையினைத் திறந்து வைத்தார். 1-5-73 அன்று சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியரும், தலைசிறந்த பகுத்தறிவாளருமான சி. வெள்ளையன் அகால மரண

மடைந்தார். அமைச்சர்கள் நாவலர் நெடுஞ்செழியன், பேராசிரியர் அன்பழகன் ஆகியோரும் இடுகாட்டில் இரங்கலுரையாற்றினர். மகளிர் பாலிடெக்னிக் பிரின்சிபலான அவரது துணைவியார் சுந்தரி வெள்ளையனுக்கு அன்பர்கள் அனுதாபம் தெரிவித்தனர். 13-ந் தேதி ஆத்தூர் வட்டம் ஆரகளூரில் நடைபெற்ற நீத்தார் நினைவு நாள் நிகழ்ச்சியில் தர்மபுரி மாவட்ட ஆட்சித் தலைவர் ஆர். பண்டரிநாதன் அய். ஏ. எஸ். தலைமையில், அமைச்சர் எஸ். ராமச்சந்திரன், வெள்ளையன் படத்தினைத் திறந்து வைத்தார். பின்னர், சென்னை மாநிலக் கல்லூரியில், பேராசிரியர் வெள்ளையன் அறக்கட்டளை நிறுவுவதற்காகப் பெரியார் 29-8-73 அன்று 1,000 ரூபாய் வழங்கினார்.

"சேரன் போக்குவரத்துக் கழகம், தொழிலாளர்களுக்கு முதலீட்டிலும், நிர்வாகத்திலும் பங்கு அளிக்க எடுத்திருக்கிற துணிச்சலான ஒரு திட்டத்தைப் பற்றி அறிந்து, பெரு மகிழ்ச்சி அடைகிறேன். தி. மு. க. அரசாங்கம் சாதித்து வரும் பெரும் மவுனப் புரட்சிகளில் இது சரித்திர சாதனை என்பேன்.

நான் கடந்த 40 ஆண்டுகளாக இதை என்னுடைய கொள்கையாகச் சொல்லி வருகிறேன். 1944-ல் சேலத்தில் நடத்திய மாநாட்டில்—இலாபத்தில் தொழிலாளர்களுக்குப் பங்கு வேண்டும். அவர்களுக்கு நிர்வாகத்திலும். உரிமை வேண்டும் என்னும்படியாக ஒரு தீர்மானமே நிறைவேற்றி இருக்கிறோம்.

இது ஒன்றுதான் வேலை நிறுத்தம், கதவடைப்பு போன்ற எல்லா வகையான கெடுதல்களுக்கும் முடிவான மருந்தாகும். இது தொழிலாளிகள் நடுவில் கட்டுப்பாட்டு உணர்ச்சியையும், பொறுப்பையும் ஏற்படுத்தும்; தொழிலாளி வர்க்கத்தை இனி யாரும் சுரண்ட முடியாது.

நம்முடைய சேரன் போக்குவரத்துக் கழகத்திற்கும், ஆற்றலும் சொல்திறனும் ஒருங்கே அமைந்த நமது மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்கள் தலைமையிலான

தமிழ்நாட்டு அரசாங்கத்திற்கும் என்னுடைய பாராட்டைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அதே போலத், துடிப்பும் திறமையும் வாய்ந்த இளைஞர் நமது போக்குவரத்து அமைச்சர் மாண்புமிகு எஸ். இராமச் சந்திரன் அவர்களுக்கும் என்னுடைய பாராட்டைத் தெரிவிக்கிறேன்.

இதுபோன்ற செயற்கரிய காரியத்தை மற்றவர்களும் பின்பற்றுவார்கள் என்று நம்புகிறேன்—ஈ. வெ. ராமசாமி.''

5–5–73 அன்று பெரியாரின் இந்த வாழ்த்துச் செய்தி, கோவையிலுள்ள சேரன் போக்குவரத்துக்கழக மேனேஜிங் டைரக்டர் என். திருஞானசம்பந்தம் அவர்கட்கு அனுப்பி வைக்கப்பட்டது.

சென்னை உயர்நீதிமன்றத்திலிருந்து 8-ந் தேதி ஓய்வு பெற்ற ஜஸ்டிஸ் கே. எஸ். பழனிச்சாமிக்கவுண்டர், போகிற போக்கில் புழுதி வாரித் தூற்றுவதுபோல், தமிழ்நாடு பப்ளிக் சர்வீஸ் கமிஷனில் முன்சீப் தேர்வு நடைபெறும் முறைகளைப்பற்றி ஏதோ குறை கூறிப் பேசினாராம். ''நம் கையே நம் கண்ணைக் குத்துவதா? தமிழர் சமுகாயம் சாண் ஏறினால் முழம் சறுக்குவது இதனால்தான்? தமிழன் என்றோர் இனமுண்டு; தனியே அவற்கொரு குணமுண்டு என்று பாடினாரே, அது இந்தக் குணந்தானா?'' என்று கேட்டது ''விடுதலை''. சட்ட அமைச்சர் மாதவனும் இந்தத் தவறான பேச்சுக்குக் கண்டனம் தெரிவித்திருந்தார்.

13–5–73 அன்று ஈ. வெ. கி. சம்பத்துக்கு மார்வலி ஏற்பட்டுச் சென்னை அரசினர் பொதுமருத்துவ மனையில் சேர்க்கப்பட்டார். அங்கு ஏற்கனவே சிகிச்சை பெற்று வந்த அவரது இரண்டாவது தம்பி கஜராஜ் அங்கேயே தனது 35–வது வயதில் அகால மரணமடைந்தார். அவரது சடலம் ஈரோடு கொண்டு செல்லப்பட்டது. செய்தி கிடைத்ததும், கொடைக்கானலில் இருந்த பெரியாரும் மணியம்மையாரும் உடனே புறப்பட்டு ஈரோடு சேர்ந்தனர். திண்டுக்கல் நாடாளுமன்ற இடைத்தேர்தலில் எம். ஜி. ஆர். கட்சியான அண்ணா தி. மு. க. வேட்பாளர் மாயத்தேவர் வெற்றி

பெற்றார். வாக்கு விவரம்:— அ. தி. மு. க. 2, 60,930; காமராஜர் காங்கிரஸ் 1,19, 032; தி. மு. க. 93,496; இந்திரா காங்கிரஸ் 11,423. "திண்டுக்கல் தீர்ப்பு என்பது திண்டுக்கல் மக்களின் தீர்ப்புதானே தவிர, நாட்டு மக்களின் தீர்ப்பாகி விடுமா? ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்ற பழமொழி, அரசியலில் அல்ல!"என்றார் முதல்வர் கலைஞர். அமைச்சர் ப. உ. சண்முகம் "திண்டுக்கல் இடைத்தேர்தலில் வலது, இடது ஆகிய இரு கம்யூனிஸ்டுகளும் ஒரு நடிகரின் பின்னால் ஓடுவதா?" என்று கேட்டார்.

"திண்டுக்கல் தேர்தல் முடிவு எதிர்பாராதது. காரணம் இன்னது என்று புரிந்துகொள்ள முடியவில்லை. நம்முடைய ஜனநாயகம் இப்படி எல்லாம் இருக்கிறது. இதைச் சகித்துத் தான் ஆகவேண்டும். ஒன்றும் முழுகிப் போகவில்லை. அதனால் பெரிதாக இதைப் பற்றி யாரும் கவலைப்பட வேண்டியதில்லை. காரணம் இதில் ஒன்றும் அரசியல் இல்லை" என்று 22-ந் தேதி "விடுதலை" முதல் பக்கப் பெட்டிச் செய்தி கூறியது.

சென்னையில் பல்லவா போக்குவரத்துக் கழகப் பொதுத் தொழிலாளர் சங்கச் சார்பில் வி. பி. ஹாலில், தொழிலாளருக்கு லாபத்தில் பங்கு தரும் செயலைப் பாராட்டும் விழா 25-ந்தேதி நடந்தது. முதல்வர் கலைஞரும், அமைச்சர் எஸ். ராமச்சந்திரனும் பேசியதும், பெரியார், "எந்த மாநில அரசுமே செய்யத் துணியாத, லாபத்தில்—நிர்வாகத்தில் பங்கு தரும் திட்டத்தைத், தொழிலாளர் நலன் கருதும் தி. மு. க. அரசு, தமிழ் நாட்டில் புரட்சித் திட்டமாக நிறைவேற்றி இருக்கிறது! நாட்டில் கடைசியாக ஒரு முதலாளி இருக்கின்ற வரையில், ஒரு தொழிலாளி இருப்பான். அது போல, ஒரு பார்ப்பான் இருக்கின்ற வரையில், ஒரு சூத்திரன் இருப்பான். எனவே இவற்றைக் கவனமாக ஒழிக்கவேண்டும். தொழிலாளிகள் லாபத்தில் பங்கு வாங்கினால் மட்டும் போதாது; மூட நம்பிக்கைகளைக் கைவிட்டுப் பகுத்தறிவு வாதிகளாக விளங்கவேண்டும்!" என்று அறிவுரை புகன்றார்.

அடுத்த நாள் பெரியார் நெய்வேலியை அடுத்த காட்டுக் கூடலூரில், "பொதுமக்களின் சிந்தனையைக் கெடுக்கும் சினிமாமோகம் அறவே ஒழியவேண்டும். இது எவ்வளவு தூரம் முற்றியிருக்கிறது என்றால், திண்டுக்கல் தொகுதியில், எம். ஜி. ஆரின் எச்சில் பட்ட சோடா, கலர் பானங்களைக் குடிக்கும் முட்டாள்தனமான ஓட்டர்கள் நாட்டில் இருக்கின்றார்களே — இந்தப் பைத்தியக்காரத்தனம் வளர்ந்திருக்கிற நிலைக்கு நாடு கெட்டுப் போயிருக்கிறதே?" என்று பெரிதும் மனவேதனையுற்றார் பெரியார். 28-5-73 அன்று மணியம்மையாருக்கு, அரசினர் பொது மருத்துவ மனையில், டாக்டர் சரத்சந்திரா, ஹெர்ணியா ஆப்பரேஷன் செய்து, அம்மா நலமடைந்து வந்தார்.

1-6-73 அன்று பெரியாரின் கார் நிதிக்காகத் தஞ்சையில் பெரியாரிடம் 5,000 ரூபாய் வழங்கப்பட்டது. 5ந்தேதி கரூர் நகராட்சி, பெரியாருக்கு வரவேற்பு வழங்கியது. நகர தி.க. பெரியாரின் கார்நிதிக்காக 5,005 ரூபாய்தந்தது. 6—ந் தேதி சேலம் 4,500 ரூபாய் அன்பளிப்பாய்த் தந்தது. "விடுதலை" ஏடு 6—6—73 அன்று 36-ம் வயதை எட்டிப் பிடித்தது! திருமண விழாக்களில் பெருமளவாகப் பங்கேற்ற பெரியார், பெண்களின் அடிமைத்தனத்தை நாம் இன்னும் பேணுவதைச் சுட்டிக் காட்டிக் கண்டித்து, அவரவர்களே, மாப்பிள்ளை தேடிக் கொள்ளவேண்டும். 22 வயது அடைந்த பின் திருமணம் செய்து கொள்வது நல்லது. அதிலும், பெண்கள் ஏதாவது வேலை செய்து, தம் காலில் நிற்கவும் பழகவேண்டும். மேலும், எதற்கெடுத்தாலும் பார்ப்பானைத் திட்டுவதால் மட்டும், அல்லது மதவாதிகளைப் பழைமை வாதிகளைக் கண்டிப்பதால் மட்டும், பயனேற்பட்டுவிடாது! கடவுள், மத சம்பிரதாயம், மூட நம்பிக்கைகளை விட்டொழிக்க வேண்டும்—என்று அறிவுறுத்தினார்.

8-6-73 அன்று காலை 10 மணிக்குத் திருச்செங்கோட்டில் அண்ணா சிலையினைத் திறந்து வைத்தபோது —, எதிரிகள் முளைக்க வேண்டுமானாலும் அண்ணா பெயரைத்

தான் சொல்ல வேண்டியிருக்கிறது—என்று இடித்துக் காட்டினார் பெரியார். கலைஞரும், நாவலரும் தி. மு. க. வில் தலைவர், பொதுச் செயலாளர், பொறுப்புகளிலிருந்து விலகி, மன்னை நாராயணசாமியைக் கட்சிப் பொறுப்பில் பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப் போவதாக 13–6–73 ஒரு செய்தி. அமைச்சர் பதவி விலக மன்னை சம்மதித்து விட்டாராம். 15–ந் தேதி "விடுதலை"யில் இது சம்பந்தமான பெரியதொரு பெட்டிச் செய்தி இடம் பெற்றது; பெரியார் திருச்சியிலிருந்து அனுப்பிய எழுத்தாகும் இது:- "திண்டுக்கல்லில் தி. மு. க. தோல்வி அடைந்ததனால், கட்சியின் தற்போதைய தலைவரும், பொதுச் செயலாளரும் அந்தந்தப் பதவிகளிலிருந்து விலகி, வேறு ஒருவர் புதிய பொதுச் செயலாளராகும் ஒரு மாறுதல் செய்வது என்று உத்தேசிக்கப்பட்டுள்ளதாகப் பத்திரிகைகளில் பார்த்தேன். அந்தப்படிக்கான ஒரு மாறுதல் தேவை என்று நான் கருதவில்லை. அப்படி ஒரு மாறுதல் ஏற்படுவதனால், பெரிய பலன் ஏற்பட்டுவிடும் என்றும் நான் நினைக்கவில்லை. மாறாக, இம்மாறுதல் மூலம் பொது மக்கள், கட்சித்தலைமையிடம் ஏதோ பெரிய குறை இருப்பதாகத் தவறாக எண்ணக்கூடும். இது இன்றைய எதிரிகளுக்கு ஒரு வாய்ப்பாக ஆகிவிடும். மற்றபடி திண்டுக்கல் தோல்வி, அப்படி ஒரு கட்டுமீறிய அசாதாரண நிலை என்று, அளவுக்கு மீறிக் கவலைப்படவேண்டிய ஒன்றல்ல!"

16, 17 தேதிகளில் கூடிய தி. மு. க. பொதுக்குழுவில், தலைவர்கள் பதவிவிலகும் யோசனை திரும்பப் பெறப்பட்டது. துணைச் செயலாளர்கள் 7 பேர் புதிதாக நியமிக்கப்பட்டனர். மாவட்டச் செயலாளர் போன்ற பதவிகளிலிருப்போர் எம். எஸ். ஏ., எம். எல். சி. ஆக இருக்கக்கூடாது என்று தீர்மானிக்கப்பட்டு, அதன், விளைவாகப் பதவி நீங்கியோர்க்குப் பதிலாகப் பொறுப்பாளர்கள், 26-ந் தேதி நியமிக்கப்பட்டனர்.

எம். ஜி. ஆர். கட்சியில் பச்சைப் பார்ப்பனரான, கே. எம். சுப்ரமணியம், டாக்டர் ஹண்டே போன்றார்

சேர்ந்ததை எண்ணி, அ. தி. மு. க. என்பது அக்ரகார தி. மு. க. வா? என "விடுதலை" கேட்டது, 23-ந் தேதி!

பெரியார் சுற்றுப் பயணத்தை வாய்ப்பாகப் பயன் படுத்திக் கழகத் தோழர்கள், ஆங்காங்கு கார் நிதி வசூலித்துப், பெரியாரிடம் தந்து வந்தனர். ஜூன் 6 சீர் காழியில் ரூ 1,000; நாகை வட்டம் முதல் தவணை ரூ 1,028 2-வது தவணை 11-7-73 அன்று ரூ 1,231; 16-ந் தேதி திருச்சி சிந்தனையாளர் கழகம், கோவிந்தராசலு மூலமாக ரூ 1,000; 19 பட்டுக் கோட்டையில் ரூ 1,412; 20 ஒரத்த நாடு வட்டம் ரூ 1,415; 21 குடந்தை வட்டம் ரூ 3,800; 22 காரைக்கால் ரூ 1,117; 23 திருத்துறைப் பூண்டியில் ரூ 1,500; 24 காரைக்குடியில் ரூ 1,000; 27 தேவக் கோட்டையில் ரூ 1,002; 30 இடைப்பாடியில், ரூ 1,000; திருச்செங்கோட்டில் ரூ 1,500; அடுத்து ஜூலை மாதம் 1-ந் தேதி கரூரில் ரூ 5,601; 8 மேட்டூரில் ரூ 3,000; 11 திருவாரூரில் ரூ 2,275; 22 திருச்சி யில் ரூ 2,000, குளித்தலையில் ரூ 367, பாடாலூரில் ரூ 715 25 மதுரையில் மேயர் முத்து ரூ 300; 29 மண்ணச்சநல்லூரில் ரூ 1,310—27; 6-8-73 புதுச்சேரி வட்டம் ரூ 1,425—50; 13-8-73 லால்குடி வட்டம் ரூ 5,000.

பெரியார் பட்டுக்கோட்டையில் 19-6-73 அன்று பேசு கையில், "செப்டம்பர் முதல் தேதியிலிருந்து மீண்டும் கள்ளுக் கடைகளை மூடுவது புத்திசாலித்தனமல்ல. மிகவும் முன் யோசனையற்ற காரியமாகும் இது. சினிமாவுக்குப் போகின்ற அயோக்கியத்தனத்தை விடவா, கள் குடிப்பது தீமை?" என்று ஆவேசத்துடன் கேட்டார். 24 ந் தேதி காரைக்குடியில் பெரியார் சிலை அமைப்புக் குழு கூடி, அப்போதே 10,000 ரூபாய் திரட்டியது. 30-6-73 அன்று டாக்டர் K. ராமச்சந்திரா பொது மருத்துவமனை சூபரிண் டெண்டெண்டாகவும், டாக்டர் எம். நாராயணன் மருத்துவக்கல்வி இயக்குநராகவும், நியமிக்கப் பெற்றனர். 1-7-73 அன்று மாடிரோடு (Fly over) எனப்படும் அண்ணா மேம்பாலம், சென்னை ஜெமினிமுனையில் திறக்கப்பட்டது. விழாவில் பிரதமப் பொறியாளர் சி. வி. பத்மநாபன் விவர

அறிக்கை படித்தார். முதல்வர் கலைஞர், 'அமைச்சர்களான நாவலர், சாதிக் பாஷா பங்கேற்றனர். 2-ந் தேதி தமிழக அமைச்சர்களின் இலாக்காக்களில் சில மாறுதல்கள் செய்யப் பட்டதை ஆதரித்துப் பாராட்டிப் பெரியார் தமது கருத்தினை வெளிப்படுத்தியிருந்தார். 5-7-73 அன்று இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியிலிருந்து மணலி கந்தசாமி, ஏ.கே. சுப்பையா ஆகிய இரு சட்டமன்ற உறுப்பினர்களும் விலகினர்.

ஜூன் மாதம் 27-ம் நாள் எடமேலையூரில் பெரியார் தலைமையில், மன்னை நாராயணசாமி முன்னிலையில், மாறுதலான திருமணவிழா நடைபெற்றது. திருஞானம்—இளவரசி; சிவானந்தம் எம்.எஸ்சி.—மகாராணி ஆகிய மண மக்கள், தாலி அணியாமல், ஒருவருக்கொருவர் தம்து இனிஷியல் பொறித்த டாலர் கோக்கப்பட்ட சங்கிலிகளை அணிவித்துக் கொண்டனர். பெரியார், இந்தப் புதுமை முறையை வரவேற்றதோடு, "உலக நோக்கோடு பரந்த மனப்பான்மையில் வாழ வேண்டிய மனிதனைக், 'குடும்ப' வட்டத்துக்குள் அடக்குவதே இல்லறம் எனப்படுகிறது. கற்பு என்ற சொல்லையே அகராதியிலிருந்து நீக்கிவிட வேண்டும். ஒழுக்கம் என்பது இருவர்க்கும் பொதுவாக இருப்பது தேவை!" என்ற தமது கருத்தையும் வலியுறுத்தி னார். மதுரை மாநகராட்சியில் தந்தை பெரியார் திருவுருவப் படத்தினை மேயர் முத்து தலைமையில், அமைச்சர் என்.வி. நடராசன் ஜூலை 25-ந் தேதி திறந்தார்.

23, 24, ஜூன் திங்களில் பெங்களூரில் பகுத்தறிவாளர் மாநாடு மிகச் சிறப்புடன் நடைபெற்றது. பேராசிரியர் நஞ்சுண்டசாமி வரவேற்றார். துணை சபாநாயகர் பாதக், டாக்டர் பசுவராஜ், பேராசிரியர் மல்லேஷ், பேராசிரியர் தர்மலிங்கம், விசாலக்குமி சிவலிங்கம் ஆகியோர் பங்கேற் றனர். பெரியார் பேருரை நிகழ்த்தினார். பெண்ணடிமை ஒழிப்பு, மூடநம்பிக்கை ஒழிப்பு ஆகியவை முக்கிய இடம் பெற்ற கருத்துகள். "நான் எதிர்ப்புக்கு அஞ்சாதவன். மரணமே வந்தாலும் தளரமாட்டேன். என் கருத்தைத்

தான் நான் கூறுவேன். தனிமனிதனாகத் தமிழ் நாட்டில் பகுத்தறிவுக் கருத்துகளைக் கூறி, மக்களைப் பக்குவப் படுத்தினேன்!

உலகில் அர்ச்சகன், மாந்திரிகன், சோதிடன் இவர்களை விடப் பித்தலாட்டத்தில் கைதேர்ந்தவர்கள் கிடையாது. மதமும் கடவுளும் மனித சமூகத்தின் வளர்ச்சியைப் பெரிதும் தடுத்து நிறுத்திவிட்டன. பெண்கள் சங்கதியை எடுத்துக் கொள்ளுங்களேன். பார்ப்பான் நம்மை எப்படிக் கீழ்சாதி என்று சொல்லி அடிமை வேலை வாங்குகிறானோ, அதைப் போலத்தான் மக்களில் சரிபாதி எண்ணிக்கையுள்ள பெண்களை, நாம் நடத்தி வருகிறோம். பெண்கள் என்றால் வெறும் குட்டி போடும் கருவி என்றே நினைக் கிறோம். பெண்களும், கணவன்மார்கள் நல்ல நகை நட்டு துணிமணி வாங்கிக் கொடுத்தால் போதும் என்று, தங்களைக் குறுக்கிக் கொண்டார்கள்.

பிராமணன்—சூத்திரன் என்கிற பேத அமைப்புக்கும் புருஷன்—பெண்டாட்டி என்கிற பேத அமைப்புக்கும் எந்த வித வேறுபாடும் கிடையாதே! உலகத்திற்குப் பயன்படக் கூடிய பேர்பாதி மனித சக்தியைப் பெண்ணடிமை மூலம் நாம் விரயப்படுத்திய குற்றவாளிகளாகிறோம்!

இதற்கு ஒரு பரிகாரம் என்ன என்றால், கலியாணம் என்பதையே சட்ட விரோதமாக ஆக்கவேண்டும் இந்தக் கலியாண முறை இருப்பதால்தானே, கணவன்—மனைவி உறவு, பெண்ணடிமைத் தன்மை, குழந்தை குட்டிகள் பெறு வது, அவற்றுக்கு எப்படியாவது சொத்துச் சம்பாதிப்பது என்ற சமுதாய ஒழுக்கக் கேடுகள் எல்லாம் ஏற்படுகின்றன?

மந்திரியாகிறவன், கலெக்டராகிறவன்கூடப் பெண் டாட்டி பிள்ளையைக் காப்பாற்றும் சொந்த வாழ்க்கைப் பிரச்சினைக்கே ஈடுகொடுத்து வந்தால், சமுதாய உணர்ச் சியோ, பொது உணர்ச்சியோ, உலகத்தைப் பற்றிய கவலையோ எப்படி ஏற்படும்?

சாத்திரங்களில் சூத்திரனுக்குக் கலியாண முறையே இல்லை; இதையும் ஏற்படுத்தியதே பார்ப்பான்தான்!

"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் அய்யர் யாத்தனர் கரணம் என்ப' என்று தொல்காப்பியத்திலேயே கூறப்பட்டிருக்கிறதே! பெரும் பகுதி மக்களை உடலுழைப்புக்காரர்களாக ஆக்க, எப்படிச் சூத்திரன் என்று பார்ப்பான் சாத்திரம் செய்தானோ, அதே போலப் பெண்களை அடிமைகளாக்கக், கலியாணம் என்ற முறையையும் ஏற்படுத்தினான். இதனால்தானே வள்ளுவனும் பெண் அடிமைக் கருத்தை எழுதினான்; 'தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை' என்று!

நமது புராண இதிகாசங்கள் வலியுறுத்துவது என்ன? ஒரு பெண் பதிவிரதையாக இருப்பதென்றால், அடிமை உணர்வு மிகுதியாக இருக்க வேண்டும் என்பதுதானே? ஆணுக்கும் பெண்ணுக்கும் சம உரிமை இல்லாத நாட்டில், சுதந்தரத்தைப் பற்றிப் பேச எவனுக்கு யோக்கியதை இருக்கிறது? முஸ்லீமை எடுத்துக் கொண்டால், முகத்தை மூடி, உலகத்தில் நடமாட விடுகிறானே பெண்களை— இதை விடக் கொடுமை உண்டா?

நமது பெண்களுக்காவது உணர்ச்சி வரவேண்டாமா? ஜோடித்துக் கொள்வது — சிங்காரிப்பது —சினிமாவுக்குப் போவது—கோயிலுக்குப் போவது—என்பதோடு இருந்தால் போதுமா? தாங்களும் ஆண்களோடு சம உரிமை உள்ளவர்கள் என்கிற உணர்வு வரவேண்டாமா?

உலகில் மற்ற நாட்டுக்காரன் எல்லாம் எப்படி எப்படி முன்னேறி வருகிறான்! வெள்ளைக்காரன் என்ன நம்மை விடப் புத்திசாலியா? இயற்கையாகவே அவன் நம்மைவிட அறிவில் குறைந்தவன்தானே! அவன் குளிர் தேசத்துக்காரன்; நாமோ உஷ்ண தேசத்துக்காரர். பாம்பில்கூட உஷ்ண தேசத்துப் பாம்புக்குத்தானே விஷம் அதிகம்! பூவில்கூட உஷ்ண தேசத்துப் பூவுக்குத்தானே மணமும் மதிப்பும் அதிகம்! ஆகவே நாமும் அறிவைப் பயன்படுத்தினால் அவனைவிட வேகமாக முன்னேற்றமடையலாம்.

நான் 1932-ல் ஜெர்மனி சென்றிருந்தேன். அப்போது

ஒரு வீட்டில் தங்கியிருந்தேன். அந்த வீட்டுக்காரர்களை யாரென்று விசாரித்தேன். தாங்கள் proposed husband and wife என்றார்கள்; நாங்கள் உண்மையான கணவன் மனைவி ஆவதற்காக, எட்டு மாதமாக இப்படி ஒன்றாகத் தங்கியிருந்து பயிற்சி பெறுவதாகக் கூறினார்கள்! எப்படி யிருக்கிறது பாருங்கள்! அந்த மாதிரி நாடு முன்னேறுமா? சும்மா பதிவிரதம் பேசிப் பெண்களை அடிமையாக வைத்திருக்கும் நமது நாடு முன்னேறுமா? பதில் கூறுங்கள்!''

கரியாப்பட்டினத்தில் ஜூலை 11-ம் நாள் பெரியார், "தி. மு. க.வை ஒழிக்க முயன்று தோற்றவர்களின் கையாள் தான் எம். ஜி. ஆர். இவர் மக்களிடம் எதைச் சொன்னால் சுலபமாக ஏமாறுவார்களோ அதைச் சொல்கிறார்" என்றார். 24-7-73 காலை பெரியார், மணியம்மையார் துணையுடன் பொது மருத்துவமனை சென்று, தமக்கு அசதியும் சோர்வும் ஏப்பமும் இருப்பதாக டாக்டர் கே. ராமசந்திராவிடம் கூறி, ஆலோசனை பெற்றுக் கொண்டார். 19-8-73 அன்று தஞ்சையில் வைத்துப் பெரியாருக்குப் புது வேன் வழங்கப்படும் என்றும், கார் நிதிக்கு அதிக நன்கொடை அளித்த மாவட்டம் அதுதான் என்றும்—1-8-73 "விடுதலை" பறையறைந்தது! தனிப்பட்டவர்களும் மனமுவந்து கார் நிதிக்கு நிறைய வழங்கியிருந்தனர். இந்த ஆண்டு பெரியார் பிறந்த நாளையொட்டி வெளியிடப்படும் அழகிய சிறு நூல் "உயர் எண்ணங்கள்" 15 காசு விலை என்றது, செய்தி ஒன்று!

8-8-73 அன்று சட்ட மன்றத்தில் ஒரு சுவையான நிகழ்ச்சி:—அமைச்சரவைமீது கொணரப்பட்ட நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் மீது பேசும்போது டாக்டர் ஹண்டே, "சுயமரியாதையிருந்தால், முதல் அமைச்சர் பதவியிலுள்ள கலைஞருக்குச் சுயமரியாதையிருந்தால், அவர் தமது பதவியை ராஜிநாமாச் செய்யட்டும்; சுயமரியாதை இருந்தால்......" என்று சொல்லிக்கொண்டே போனார். முதல்வர் கலைஞர் குறுக்கிட்டுப்பேசினார்:—"சுயமரியாதை

எங்கள் சொத்து. நாங்கள் தந்தை பெரியாரின் பிள்ளைகள். முழுக்க முழுக்கச் சுயமரியாதை இயக்கத்தில் வளர்ந்த வர்கள் நாங்கள். இவர் இப்போது சென்றிருக்கும் கட்சியில் கூட, டாக்டர் ஹண்டேதான் சுயமரியாதை இயக்கத் திலிருந்து செல்லாதவர். இவருக்கு உண்மையிலேயே சுய மரியாதை இருந்தால், இவரது பழைய கட்சியாகிய சுதந்திராக் கட்சி கோருவதுபோல, இவர் தனது எம்.எல்.ஏ. பதவியை விட்டு விடட்டும்!'' என்று.

10-ந் தேதி "தமிழர்களின் பொற்காலம்'' என்ற "விடுதலை'' தலையங்கம் வரலாற்றுச் சாதனை ஒன்றை ஒளிபொருந்தக் காட்டிற்று. தமிழ்நாடு பப்ளிக் சர்வீஸ் கமிஷன் தேர்வுகளில், குரூப் I தேர்வில், பிற்படுத்தப் பட்டோர், மிகப் பிற்படுத்தப்பட்டோர், தாழ்த்தப் பட்டோர் ஆகியோரில் 22 பேர் வெற்றி பெற்றுப் பதவி களில் அமர்த்தப்பட்டுள்ளனர். இவர்களில், சாதி முறையின் படியான சக்கிலியர், பள்ளர், வண்ணார், மருத்துவர், சாணார், வலையர், குடும்பர் போன்ற வகுப்பைச் சார்ந்த வர்களும் உள்ளனர் என, இன்னும் விவரமாக, முதல்வரின் எடுத்துக் காட்டுகளையும் குறிப்பிட்டிருந்தது "விடுதலை.''

வழக்கம் போலவே "விடுதலை'' 15-8-73 அன்று, இது 26-வது துக்க நாள் என மகுடமிட்டிருந்தது. "பெரியாரோடு நீங்கள் போராட வேண்டியதைத் தவிர்க்கவாவது, நாங்கள் கேட்கின்ற மாநில சுயாட்சியைத் தந்து விடுங்கள். நாங்கள் கேட்பது இந்தியாவைப் பிளவு படுத்த அல்ல. எங்கோ உட்கார்ந்து கொண்டு, எஜமானர்களாக மாநிலங்களை ஆள்கின்ற தன்மை மாறுவதற்குத்தான்!'' என்றார் முதல்வர் கலைஞர். அமைச்சர் எஸ். இராமச்சந்திரன் "ஒரேவிதமான கருத்தைக் கூறுகிறார்கள் இருவர். ஒருவருக்கு நொபெல் பரிசு தருகிறார்கள்; அவர் பெயர் பெர்ட்ரண்ட் ரஸ்ஸல். அதே கருத்தைக் கூறுகிற இன்னொருவர் பெயர் பெரியார் ஈ.வெ. ராமசாமி. அவருக்கு வகுப்புவாதிப் பட்டம் சூட்டு கிறார்களே!'' என்றார். 24 8-73 செய்தியின்படிச் சேரன்

போக்குவரத்துக் கழகத்தின் மூலதனத்தில் 24 சதவீதம் தொழிலாளரின் பங்கு என்றும், இயக்குநர்கள் 10 பேரில் 2 பேர் தொழிலாளர் என்றும் தெரிந்தது.

"நான் ஒரு சமத்துவத் தொண்டன். சமுதாய சமத்துவத்துக்காகப் பாடுபடுகின்றவன். அதாவது ஜாதி அமைப்பை அடியோடு ஒழிக்கப் பாடுபடும் தொண்டன். எனக்கு ஏற்பட்டிருந்த சலிப்பை நீக்கிய ஆட்சி இது. இப்போது எங்கும் ஜாதி ஒழிப்பிற்கு எதிர்ப்பே கிடையாது. இனி நம்முடைய வேலை கோயில்களைப் புறக்கணித்தல்; நெற்றியில், உடம்பில் மதக்குறிகள் தரிப்பதை நீக்குதல்; பண்டிகை கொண்டாடாமல் இருத்தல் ஆகியவைகள்தான்" என்று பெரியார் "விடுதலை"யில் தலையங்கம் தீட்டினார், 18–8–73 அன்று. அதே நாளில் கிருஷ்ணராயபுரத்தில் பேசும்போது, "சேர சோழ பாண்டிய மன்னர்கள் தமிழ் நாட்டை ஆண்ட போதும், மனு தர்ம ஆட்சிதானே நடத்தி வந்தார்கள்!" என்று கேட்டார்.

19–8–73 தஞ்சை மாநகரில் கோலாகலக் குதூகலப் பெருநாள்; திருநாள்! பெரியதேரார் ஊர்வலத்தில், யானை முன் செல்ல, கருஞ்சட்டையினர் அணிவகுத்து முழக்கமிட்டுப் பின்தொடர, அழகு ஒளி உமிழத் தஞ்சையின் தனிச் சிறப்புப் புகழ் வாய்ந்த முத்துப் பல்லக்கில் பெரியாரும், வீரமணியும் அமர்ந்து வந்த பவனி. பின்னர் திலகர் திடலில் மக்கள் வெள்ளத்தினிடையே மகத்தான பொதுக்கூட்டம். அமைச்சர் எஸ். இராமசந்திரன் கூட்டத் தலைமை ஏற்றார். தஞ்சை மாவட்டக் கூட்டமெனினும், மாநிலச் சிறப்புப் பொருந்தியதாகையால், வீரமணி வரவேற்கட்டும் எனத் தோழி சுப்ரமணியம் உரைத்திட, வரவேற்புரை நிகழ்த்தினார் "விடுதலை" ஆசிரியரும், கார்நிதி அமைப்பாளருமான வீரமணி. அவர் கேட்டதோ ஒரு லட்சம். ஆனால் திரண்டதோ ஒன்றரை லட்சத்திற்கும் மேல்! மேடையில் 50 ஆயிரம் ரூபாய் பெரியாரிடம் நிதியாக வழங்கப் பட்டது. 10 ஆயிரம் பெரியார் அறக்கட்டளைச் சொற்பொழிவுக்காகத் தரப்பட்டது. பெரியார்பால் கரிசன

மிக்க மருத்துவ நிபுணர்களான டாக்டர்கள் கே. ராமச்சந்திரா, பட், ஜான்சன் ஆகியோருக்கு மாலை அணிவிக்கப்பட்டது. (ஆட்டோமாட்டிக்) தானியங்கிக் கடிகாரம் ஒன்றை விழாக்குழு சார்பில் அமைச்சர் மன்னை நாராயண சாமி பெரியாரிடம் தந்தார். ஒரு டேப் ரிக்கார்டர், தங்கத்தாலான கார் சாவி ஆகியவற்றைப் பெரியாரிடம் தந்து, பொன்னாடையும் போர்த்தினார் முதல்வர் கலைஞர். ஏர்கண்டிஷன் செய்யப்பட்டு, வேனிலிருந்தவாறே பேசுவதற்கு ஏற்ற முறையில் இந்த வேனை அமைத்தவர்கள் எல். ஜி. பாலகிருஷ்ணன் கம்பெனியார். விழாவில் வீரமணிக்கு மோதிரமும், ஓவியர் கருணாவுக்கு நல்லாடையும் பெரியாரால் அணிவிக்கப்பட்டன. வெடி முழக்கங்கள் விண்ணை எட்டின. 95 முறை அதிர் வேட்டுகள் கதிகலங்கச் செய்தன எதிரிகளை. "பெரியார் வாழ்க! கலைஞர் வாழ்க! கடவுள் இல்லை" என்ற எழுத்துகள் மத்தாப் பூவாய் எரிந்து ஒளி வீசின. "தோழர்களே! நான் செத்துப் போனாலும் நீங்கள் நினையுங்கள்! என்றைக்குக் கோயில், கடவுள், மதம் இவைகளுக்கு நாம் முழுக்குப் போடுகிறோமோ அன்றே நாம் மனிதர்களாவோம். யாருடைய நெற்றியிலாவது இனிமேல் நாமமோ விபூதியோ இருக்கக் கண்டால், காரித் துப்புங்கள்—அவர்கள் முகத்திலல்ல—கீழே!" என்று பேசினார் பெரியார்.

25–ந் தேதி சென்னை வண்ணாரப்பேட்டையில், இந்தப் புதிய வேனில் உள்ள மேடையில் வீற்றிருந்தவாறே பெரியார் பேசினார். "நாமிருக்கும் இந்த தேசம் இந்தியா என்பதை நாம் ஏற்றுக் கொண்டால், நாம் இந்து என்பதை ஏற்றுக் கொள்ளவேண்டும். நாம் இந்து என்பதை ஏற்றுக் கொண்டால், நாலாஞ்சாதியாகிய சூத்திரன் நாம் என்பதை ஏற்றுக்கொள்ள வேண்டும். நாம் சூத்திரன் என்பதை ஏற்றுக் கொண்டால், நாமெல்லாரும் தாசி புத்திரர் என்பதை ஏற்றுக் கொள்ளவேண்டும். இந்த இழிவிலிருந்து விடுபடுவதற்கு ஒரே வழி தமிழ் நாடு தனி நாடாவதுதான்' என்றார்.

28–8–73 காலை 11 மணியளவில் புதிய சபாநாயகர் புலவர் கோவிந்தன், பெரியாரை வந்து சந்தித்து, மாலை சூட்டி, மரியாதையைத் தெரிவித்துக் கொண்டார். 30-ந் தேதி காலையில் கடலூரில் கி. தண்டபாணியின் (வீரமணி யின் அண்ணன்) மகள் தேன்மொழிக்கும், ஜெயராமனுக்கும் பெரியார் வாழ்க்கை ஒப்பந்தம் நடத்தி வைத்தார். மாலை யில் "கலைஞர் கருணாநிதி குழந்தைகள் நூலக"த்தைத் திறந்து வைத்தார். 1–9–73 அன்று, திருச்சியை அடுத்த இரூரில், பெரியார் "இளைஞர்களே! எதிர் காலம் உங்க ளுடையது. அதனால் நீங்கள் எதையும் முன்னோக்கியே பார்க்கப் பழகுங்கள். தாய் தந்தையரே மூட நம்பிக்கைக் கருத்துகளைச் சொன்னால், பணிவோடு அவற்றை உதா சீனப்படுத்துங்கள்!" என்று புதுமையுரை புகன்றார்.

"ஏற்கனவே சலவை செய்து பெட்டி போட்ட துணி களை அலமாரியிலிருந்து எடுத்து, நாளாகி விட்டதே என்று மீண்டும் சலவைக்குப் போடமாட்டோம். அழுக்குத் துணி களைத்தான் சலவைக்குப் போடுவோம்" என்று இடத் திற்குப் பொருத்தமான உவமை ஒன்றைக் கலைஞர், பேரறிவுத் திறனோடு கூறியிருந்தார். 26–8–73 அன்று நடந்த சலவையாளர் முன்னேற்ற சங்க மாநாடு அது. சமுதாயத்தாலும் கல்வியாலும் பிற்படுத்தப்பட்டுக் கிடக் கின்ற சமுதாயம், அது எவ்வளவுதான் பொருளாதாரத்தில் முன்னேறினாலும், ஏற்கனவே மேல் மட்டத்துக்கு வந்து, கல்வியால் சமூக அமைப்பால் உயர் அந்தஸ்தில் இருக்கிற வகுப்பாருடன் சமநிலை எய்திட முடியாது என்பதை— முதல்வர் கலைஞர் வெகு அற்புதமாக எடுத்துக் காட்டி னார். அந்த அடிப்படையில் ஆழமான நம்பிக்கையோடு அவர் காரியமாற்றினார். 'முற்பட்டோரும் முதல்வர் பதிலும்" என்ற தலையங்கத்தின் வாயிலாக "விடுதலை" 1–9–73 ஏட்டில், ஆசிரியர் இக்கருத்துகளையும், முதல்வர் தந்த புள்ளி விவரங்களையும் அழகுற எடுத்துக் காட்டினார். இந்த ஆண்டு 16, 17 தேதிகளில் பெரியாரின் 95–வது பிறந்த நாள் விழாக்கள் சென்னையில் நடைபெறும்; மதுரை

விழாக்கள் ஒத்தி வைக்கப்பட்டுள்ளன என்ற அறிவிப்பு 3–9–73 அன்று வெளிவந்தது.

பெரியாரின் தலையங்கம் ஒன்றும் அதே நாளில் பிரசுரமானது: "இந்தியாவில் உழைப்பாளி—சுகபோகி என்று இரண்டு வகுப்புகள் இருக்கின்றன. இவை பெரிதும் ஏழை—பணக்காரன் என்ற சமுதாயப் பிரிவுகளைப் பரிணமிக்கச் செய்கின்றன. உண்மையான சமதர்மம் இந்தியாவில் நிலைநாட்டப்பட வேண்டுமானால், உழைப்பதற்கென்றே பிறந்திருக்கும் வகுப்பு ஒன்று, இவர்களது உழைப்பின் பயனை அனுபவித்துக் கொண்டு வாழ்வதற்கென்றே பிறந்திருக்கும் வகுப்பு ஒன்று, என்று இருப்பதைக் கிள்ளி எறிய வேண்டும். நம் நாட்டின் சமூகப் பொருளாதார நிலையை நன்றாக அறிந்த பின்னும், பணக்காரனை மட்டும் குறை கூறும் சமதர்மம் வெறும் பொறாமைச் சமதர்மமேயாகும்.'

இன்றைய உழைப்பாளிகள் அனைவரும் கீழ் சாதியாகவும், சுகபோகிகள் அனைவரும் மேல் சாதியாகவும் இருக்கிறார்கள். ஏதோ ஒரு புரட்சி மூலமோ, சர்வாதிகாரி ஏற்பட்டோ, நாட்டிலுள்ள பொருட்கள், அனைத்து மக்களுக்கும் பங்கிட்டுத் தரப்பட்டதாக வைத்துக் கொள்வோம். இந்தப் பிரகடனத்தால் பொருளாதார சமத்துவம் ஏற்படுமே ஒழிய, அதுவும் தற்கால சாந்தியாய் இருக்குமே ஒழிய, சமூக சமுதாய சமதர்மம் ஏற்பட வழியில்லாததால், அது தனது காரியத்தை எப்படிப்பட்ட பொருளாதார சமதர்மத்திலும் செய்து கொண்டே இருந்து, பழைய சீர்கேடே ஏற்பட்டுவிடும்.

பார்ப்பனரல்லாத சமூகத்தில் கீழ்சாதிக்காரர்கள் எவ்வளவு செல்வம் தேடி, கோடீஸ்வரரானாலும் அந்தஸ்தில் கீழ்தான்! பார்ப்பனர் எவ்வளவு பாப்பரானாலும், சோம்பேறியாய் உழைக்காதவராய் இருந்தாலும், மனித சமூகத்தில் மேல் நிலைதான்! இதனால்தான் பார்ப்பனர் பொருளாதார சமதர்மத்தை வரவேற்பதும், சமுதாய சமதர்மத்தை எதிர்ப்பதுமாக இருக்கிறார்கள்!

இந்த நாட்டில் சாதி ஒரு கடுகளவு மீதியிருந்தாலும்,

எப்படிப்பட்ட சமதர்மமும் ஒரு விநாடியில் கவிழ்ந்து போகும். மேல் நாட்டைப் படித்துவிட்டுப் புத்தகப் பூச்சி யாயிராமல், இந்த நாட்டின் நிலையுணர்ந்து அதற்கேற்ற படி நடக்க வேண்டும்.

சாதியை ஒழிக்கும் முயற்சியில் ஈடுபட்டு, சாதி முறை யின் ஆணிவேராக இருக்கும் பார்ப்பனனை ஒழிக்கும் முயற்சியே சமதர்மவாதிகளின் முதற் கடமை என்பது நமது அபிப்பிராயமாகும்."

"மாலை முரசு" ஏடு பெரியாரைப் பேட்டி கண்டு 16-9-73 அன்று விவரத்தை வெளியிட்டது. கேள்விகளும் பதில்களும் மிக்க ரசிக்கத்தக்கவையாக இருந்தன:

**கேள்வி :** உங்களுடைய அரசியல் வாரிசு யார்?

**பதில் :** எனக்கு அரசியல் வாரிசு என்று யாரும் கிடையாது. என்னுடைய கொள்கைகளும் கருத்துகளும்தான் வாரிசு; வாரிசு என்பது தானாகவே ஏற்படவேண்டும்.

**கேள்வி :** உங்களுடைய கொள்கைகள், கருத்துகள், எண்ணங்கள், கோட்பாடுகள் இவைகளைப் பரப்ப ஊர் தோறும் பகுத்தறிவுப் பிரச்சார நிலையங்கள் அமைக்கப் போகிறீர்களா?

**பதில :** இதற்கான முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. ஆனால் என்னென்னவோ செய்ய வேண்டும் என்று திட்டமிட்டு இருந்தேன். ஆனால், இப்போதுள்ள சூழ் நிலையில் விடுதலைப் போராட்டம்தான் முக்கியமாகத் தெரிகிறது.

**கேள்வி :** முன்பு ஒரு முறை திருச்சியில் நடந்த சிலை திறப்பு விழாவில் தமிழ் காட்டுமிராண்டி மொழி என்று சொன்னீர்களே! அப்படியானால் தமிழர்கள் காட்டு மிராண்டிகளா?

**பதில் :** தமிழ் காட்டுமிராண்டி மொழி என்று சொல்லக் காரணம் 2,000 ஆண்டுகளுக்கு முன்பு எந்தப் மூடப் பழக்க வழக்கங்களில் இருந்து வந்தோமோ, அதில் தானே இன்னும் இருந்து கொண்டிருக்கிறோம். அந்தப் பழக்க வழக்கங்களிலிருந்து நம்மை இன்னும்

நாம் மாற்றிக் கொள்ளாமல், 2,000 ஆண்டுகளுக்கு முன்பு உள்ளவற்றையே இன்னும் உதாரணம் காட்டிக் கொண்டு, கண்ணை மூடிக்கொண்டு பின்பற்றி வந்தால் அதற்கு என்ன பொருள்?

**கேள்வி :** தமிழ் இலக்கியங்களை நீங்கள் குறை கூறுவது ஏன்?

**பதில் :** தமிழ் இலக்கியங்களை எழுதிய புலவர்கள் அவற்றைக் கடவுளோடும் மதத்தோடும் இனத்தோடும் இணைத்து எழுதி வைத்திருக்கிறார்களே தவிரத், தமிழ் வளர வேண்டும் என்பதற்காக என்ன செய்து வைத் திருக்கிறார்கள்? தமிழ் என்றாலே சைவம், மதம், கடவுள் என்று நினைக்கிறானே தவிர, மக்கள் வாழ்க் கைக்கு, வளர்வதற்கு எவனும் எதுவுமே சொல்லவில் லையே! அதை எப்படி நம்முடைய வளர்ச்சிக்குப் பயன் படுத்த முடியும்? ஏற்றுக்கொள்ள முடியும்? இன்னமும் அரசியல் சட்டத்திலும் கூட, மதமும் இனமும் சாதியும் வளர்க்கப்படுகிறதே தவிர, அதை மாற்ற எவன் என்ன வழி சொல்லியிருக்கிறான்?

**கேள்வி :** தங்களைப் போல் 95 வயது வரை வாழ்வதற்கு என்ன செய்ய வேண்டும்?

**பதில் :** எப்போதும் ஆக்டிவ் (சுறுசுறுப்பு) வாக இருக்க வேண்டும்.

**கேள்வி :** இந்த வயதிலும் தாங்கள் பல மைல்கள் சுற்றுப் பயணம் செய்கிறீர்களே, உடல் நலம் பாதிக்காதா?

**பதில் :** வயதிற்கும் இதற்கும் எந்தவிதச் சம்பந்தமும் இல்லை. என்னைப் பொறுத்தவரை சும்மா இருக்கப் பிடிக்காது. சுற்றுப் பயணம் செய்தால்தான் நன்றாக இருக்கிறது.

**கேள்வி :** மாமிசம் சாப்பிடுவதால் தங்கள் ஜீரணசக்தி பாதிக்கப்படவில்லையா?

**பதில் :** என்னைப் பொறுத்தவரை மற்ற உணவுப் பதார்த் தங்களை விட, மாமிசம் சாப்பிட்டால் ஜீரணமாகி

விடுகிறது. அதனால் எந்தத் தொந்தரவும் கிடையாது. மாமிசம் இல்லாவிட்டால்தான் தொந்தரவு.

**கேள்வி :** கிளர்ச்சி, போராட்டம் நடத்த வேண்டும் என்கிறீர்களே அது எப்படி இருக்கும்?

**பதில் :** என் உடல் வேண்டுமானால் தளர்ந்திருக்கலாம். ஆனால் நான் அவற்றில் நேரடியாகவே ஈடுபட நினைக்கிறேன். நான் என்ன சொல்லுகிறேனோ, அதை நானே முன்னின்று செய்தால்தானே நன்றாக இருக்கும்? ஒதுங்கிக் கொள்வது என்பது எனக்குப் பிடிக்காது!

17–9–1973 பெரியாரின் 95–வது வயதை அழைத்துக் கொண்டு, குணதிசைப் பகலவன் பகுத்தறிவுக் கதிரவனைக் காணவந்து, தனது பொன்னாடை கொண்டு, தங்கநிற மேனியைத் தழுவினான், மகிழ்ந்தான், உவந்தான், பெருமூச்செறிந்தான்! பின், அவன் அகற்றப்பட்டான்! ஏன்? பூக்கடைகளுக்கு இன்று போக்கிடமே பெரியார் திடல்தானே! ஆறு மணிக்கு, அன்றலர்ந்த மலர், வெண்தாடி வேந்தனது சந்தனத்து மேனியிலே தவழ்ந்து விளையாடியது. 6 மணி எப்போது அடிக்குமெனக் காத்திருந்த மக்கள்—அலை, மகிழ்ச்சிப் பேரொலியுடன், வரிசை வரிசையாய்ச், சாரை சாரையாய்ப் படையெடுத்தது. அமைச்சர் பெருமக்கள், மரியாதைக்குரிய நீதிபதிகள், மாண்புக்குரிய சட்டமன்றப் பேரவை—மேலவை உறுப்பினர்கள், தலைவர்கள், அதிகாரிகள், அலுவலக ஊழியர்கள், தி.க. கருஞ்சட்டையினர், தி.மு.க. கருப்பு சிவப்புக் கரையினர்–வந்து, கண்டு, சென்றவண்ணமிருந்தனர்.

பெரியார் திடலில், பகுத்தறிவுப் பாதை மாறாத உவமைக் கவிஞர் சுரதா தலைமையில் கவியரங்கம். வீரமணி வரவேற்றார். "விடுதலை"யின் ஆஸ்தான கவி கலிபூங்குன்றன், சுஇசிவம், குடிஅரசு, கவியரசு பொன்னி வளவன், கா. வேழவேந்தன் ஆகிய கவிஞர்களின் பாடல் முழக்கம். இறுதியில் பெரியார் சிற்றுரை!—"தமிழைக் காட்டுமிராண்டி மொழி என்று சொல்லக் காரணம், அது

தோன்றிய காலம் அப்படி!வள்ளுவன்கூடக் காட்டுமிராண்டி தான்; அவன் தோன்றிய காலம் அப்படி!'' என்று ஓதினார் பெரியார். மதியம் 500 பேருக்குரிய விருந்தில் இரு இடத்தை எடுத்துக் கொண்டனர் அமைச்சர்களாள 'ப.உ. சண்முகமும், எஸ். இராமச்சந்திரனும்.

மாலையில் வீரமணி தலைமையில் பேராசிரியர்களான நன்னன், இராமநாதன், கணேசகோபால கிருஷ்ணன் ஆகியோரின் சொற்போர் அரங்கம் முடிவுற்றதும், நாதசுரச் சக்கரவர்த்தி நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் குழுவினரின் நாயன இசை மழை; இதில் நனைந்து போன பெரியார், பொன்னாடை போர்த்தினார் நாயனவேந்தருக்கு. பிறந்த நாள் பெருவிழா நாவலர் நெடுஞ்செழியன் தலைமையில் மேயர் ஆறுமுகம் வரவேற்றார். புலவர் கோவிந்தன், சி.பி. சிற்றரசு, நெ.து. சுந்தரவடிவேலு, ராஜாசர் முத்தையா செட்டியார், ஏ.பி. ஜனார்த்தனம், கி. வீரமணி, அமைச்சர் எஸ். இராமச்சந்திரன், அமைச்சர் கே. ராஜாராம் வாழ்த்துரை வழங்க, ஆந்திர நாத்திகத் தலைவர் கோரா முழங்க, இறுதியில் தந்தை பெரியார் "அடுத்த போராட்டம் தமிழ் நாடு தமிழருக்கேதான்" என்று பிரகடனம் செய்தார்.

பழைய சம்பவம் ஒன்றையும் பெரியார் நினைவு கூர்ந்தார். முன்னர் சாதிப்பித்தம் தலைக்கேறியிருந்த காலத்தில் செட்டிமார் நாட்டுத் திருமண ஊர்வலம் ஒன்றில், மதுரை சிவக்கொழுந்து நாதசுரம் வாசித்தார். அந்நாளைய சம்பிரதாயப்படி மேல் துண்டை இடுப்பில்தான் கட்டியிருந்தார். ஆனால் வியர்வை துடைக்கத் தோளில் ஒரு சிறு குட்டை போட்டிருந்தார். அதையும் எடுக்கச் சொன்னார்கள் அங்கிருந்த சாதிவெறியர்; மேளக்காரன் மேல்துண்டு போடலாமா என்றனர்! என்னோடு வந்திருந்த பட்டுக்கோட்டை அழகிரி சாமிக்கு 'விடாதே ஒரு கை பார்' என்று ஜாடை காட்டினேன். "சிவக்கொழுந்து துண்டை எடுக்காதே!" என்றார் அழகிரி. தானே அவரது வியர்வையைத் துடைத்து விட்டதோடு, வழிநெடுகிலும் விசிறிக் கொண்டே வந்தார். ஜாதி

வெறியர் இருந்த இடம் தெரியாமல் அடங்கிப் போனார்கள்— என்றார் பெரியார்.

இந்த ஆண்டு "விடுதலை" பெரியார் 95-வது பிறந்த நாள் மலரின் விலை 3 ரூபாய். பிறந்தநாள் நினைவாக அலுவலக ஊழியர்களுக்கு ஆளுக்கு 25 ரூபாய் அன்பளிப்பு வழங்கப்பட்டது. காலையில் புரட்சி நடிகர் எம்.ஜி. ராமச்சந்திரன் பெரியாரைச் சந்தித்து மாலை சூட்டி 5,000 ரூபாய் அன்பளிப்பு வழங்கித், தான் பெரியாருக்குச் சென்னையில் ஒரு சிலை அமைத்திட, அனுமதி கோரினார். அவருடன் மதியழகன், மனோகரன், எஸ்.டி. சோமசுந்தரம், மா. முத்துசாமி, பி.டி. சரஸ்வதி ஆகியோரும் வந்திருந்தனர். 1977-செப்டம்பர் 17-ல் எம்.ஜி.ஆர். முதலமைச்சராகி, இதனை நிறைவேற்றிவிட்டார்.

"செயலும் சிந்தனையும் இணைந்த ஒரே உலகத் தலைவர் பெரியார்தான். தந்தை பெரியார் உலக அரங்கிலே நிறுத்தப்பட்டு அதனால் தமிழகம் புகழடையும் காலம் ஒன்று வரும்." இவை அமைச்சர் ராமச்சந்திரனின் புகழ் மொழிகள்.

பெரியாருக்கு இனநலம் இதயம்; பகுத்தறிவு மூளை.

பார்ப்பானில் வைதிகப் பார்ப்பானே மேல்; காஸ்மாபாலிட்டன் ,பார்ப்பானைவிட—என்பது பெரியார் கருத்து.

பெரியாரின் 95-ம் ஆண்டு பிறந்த நாள் செய்தி என்ன?—

"எனது 95 ஆம் ஆண்டு பிறந்த நாள் துவக்கத்துக்கு வழமைபோல் ஆண்டு மலரில் ஒரு கட்டுரை எழுதவேண்டி இருக்கிறது. அதை முன்னிட்டு இக்கட்டுரை எழுதுகிறேன்.

அப்படி எழுதப்படும் இக்கட்டுரைகளில் இதுவே கடைசியான கட்டுரையாக இருந்தாலும் இருக்கலாம். ஏன் இப்படி எழுதுகிறேன் என்றால், அடுத்த ஆண்டு மலரில் எழுத வேண்டிய காலத்தில் நான் இருப்பேனோ இல்லையோ என்கிற பிரச்சினை மாத்திரமல்லாமல், எழுதும்படியான வாய்ப்பு இருக்குமோ இருக்காதோ என்பதே முக்கிய காரியமாகும்.

ஏனெனில், இன்னமும் நாம் இருப்பது போலவே—அதாவது இந்திய ஆட்சிக்குள் பிரஜையாய் -சமுதாயத்தில் நாலாஞ்சாதி சூத்திரனாய்—சட்டப்படி சாஸ்திரப்படி பார்ப்பானின் தாசிமகனாய்—நமது தாய்மார்கள் பார்ப்பானின் தாசிகளாய்—இருந்து வரும் அதே தன்மையிலேயே—இருப்போமோ என்கிற கருத்தைக் கொண்டே இப்படி எழுதுகிறேன்.

நாம் கிறிஸ்துவனாகவோ, முஸ்லீமாகவோ மதம் மாறிக்கொள்ளாமல் இந்துவாய் இருக்கும் வரை, நாம் நமது பண்டார சந்நிதிகள், சமணர், பவுத்தர், பகுத்தறிவுவாதி—எந்த நிலையிலிருந்தாலும் சூத்திரனாக, பார்ப்பானின் தாசி மக்களாக இருக்கவேண்டும்; இந்திய அரசியல் சட்டப்படி இந்தியப் பிரஜையாய் இருக்கும் வரையில்!

இந்த இந்திய அரசியல் சட்டத்தைத் திருத்தவோ, மாற்றவோ நம் மக்களுக்கு ஒரு நாளும் சக்தியோ, உரிமையோ ஏற்படும் என்று கருதவே இடம் இல்லை. அதனால் இந்திய ஆட்சியில் இருந்து தமிழ் நாட்டை விலக்கிக்கொள்ள முயற்சி செய்தே ஆகவேண்டிய ஒரு கட்டாயமான—நிர்ப்பந்தமான நிலையில் நாம் இருக்கிறோம். இந்த முயற்சியில் நாம் இந்திய ஆட்சியில் இருந்து விலகிக் கொள்ளும் வாய்ப்பு ஏற்படுமா என்பது பற்றி நமக்கு முடிவு செய்து கொள்ள முடியாமல் இருந்தாலும், இம்முயற்சியில் நாம் பலர் சிறையில் இருக்க நேரிடலாம் என்கிறதாலேயேதான் இந்தப்படி எழுதுகிறேன்.

நமக்கு இந்திய ஆட்சியில் அரசியல் பிரச்சினை எப்படி இருந்தாலும், சமுதாயப் பிரச்சினையில் இன்றைய இழிவைப் போக்க ஏதாவது முயற்சி செய்துதான் ஆகவேண்டும். நமது மக்கள் எளிதில் மதம் மாறமாட்டார்கள்; மதம் மாறுவதை இழிவாய்க் கருதுபவர்கள் ஆவார்கள்.

ஆதலால் நாம் உடனடியாக இந்தியக் கூட்டாட்சியிலிருந்து விலகி விடுதலை பெற்று, சுதந்தரத் தமிழ் நாட்டை உருவாக்கும் முயற்சியில் ஈடுபட்டாக வேண்டியவர்களாக இருக்கிறோம். இம்முயற்சிக்கு இன்றைய தி.மு.க. ஆட்சி

இணங்கும் என்று கருதமுடியாது, ஏனெனில் தி.மு.க. ஆட்சி விரும்புவதெல்லாம், இந்தியக் கூட்டாட்சி ஆதிக்கத்திற்கு உள்பட்ட மாகாண சுய ஆட்சிதான் அது விரும்புகிறது.

மாகாண சுயாட்சி என்றால் அரசியலில்தான் ஏதோ சில மாறுதல்களைச் செய்து கொள்ள முடியுமே தவிர, சமுதாயத்துறையில் அரசியல் சட்டத்திற்கு விரோதமாய் ஒரு காரியமும் செய்ய முடியாது.

இந்திய அரசியல் சட்டத்தில் சமுதாய (மத) சம்பந்த மான காரியங்களைப் பற்றிப் பழைய மனுதர்ம நிலையை மிகப் பிரபலப்படுத்திக் கொண்டபடி இருக்கிறது. கர்ப்பக் கிரகத்திற்குள் பார்ப்பான் தவிர்த்துப், பண்டார சந்நிதி உள்ளிட்ட இந்து என்ற தலைப்பில் வரும் எந்தச் சூத்திரனும் செல்ல முடியாதென்று உச்ச நீதிமன்ற (சுப்ரீம் கோர்ட்) தீர்ப்பு இருப்பதனால், இன்னும் சாமி தரிசனத்துக்கு என்று கோயிலுக்குப் போகும் யாருமே, தீண்டத்தகாதவர்கள் போல், வாயில்படிக்கு வெளியில்தான் எட்டி நிற்கவேண்டும்.

இன்று அமுலில் இருக்கும் இந்து லா (Hindu Law) என்னும் சட்டத்திலும், பல உயர்நீதி மன்றங்களின் தீர்ப்பிலும், பார்ப்பனரல்லாத இந்து மக்கள் என்பவர்களை மிக இழிவாகக் கூறி, நிலை நிறுத்தப்பட்டிருக்கிறது. இந்து என்னும் சொல்லுக்குச் சட்டத்தில் கொடுத்திருக்கும் விளக்கம் என்னவென்றால்—கிறிஸ்தவர்கள், முஸ்லீம்கள் தவிர்த்த இந்தியாவில் உள்ள மக்கள் அனைவருமே இந்துக்கள் ஆவார்கள்—என்பதாகும். இதன்படி நாத்திகன், பகுத்தறிவுவாதி, பரதேசி முதலிய சகலரும் இந்துக்கள் ஆகி, சூத்திரர், பார்ப்பானின் தாசி மக்கள், என்று ஆகிவிடுகிறார்கள்.

நான் இந்து அல்ல என்று சொல்லிவிட்டால், இழிவு நீங்கிவிடும் என்றுதான் நான் முதலில் கருதினேன். பின்பு சட்டங்களைப் பார்க்க ஆரம்பித்த பிறகுதான், இது தெரிந்தது! ஆதலாலேயே தீவிர முயற்சி எடுக்கவேண்டும் என்று தோன்றுகிறது.

இன்று நம் நாட்டில் இந்துக்கள் எல்லாருக்குமே அரசிய

வில்தான் முக்கிய கவனம் இருக்கிறது. அன்றியும் நாட்டுப் பிரிவினை என்றால் எல்லா மக்களும் பயப்படுகிறார்கள். பதவி கிடைக்காதே என்கிற காரணம் மாத்திரமல்லாமல், சிறைக்குச் செல்ல வேண்டுமே என்றும் பயப்படுகிறார்கள். 50 வருஷ காலமாகச் சுயமரியாதை இயக்கம் சாதித்தது என்ன என்று பார்த்தால், சிறிது படிப்பு, பல பதவி, சில உத்தியோகம் பெற நேர்ந்ததோடு, அரசியலில் பார்ப்பனரின் கொட்டத்தை நல்ல அளவுக்கு அடக்க முடிந்தது என்பதல்லாமல், சமுதாயத்துறையில் உள்ள அடிப்படை இழிவு, அப்படியே தங்கி, நல்ல அளவுக்குப் பலமும் பெற்றுவிட்டது என்றுதான் சொல்ல வேண்டும்.

எனவே, நாம் சட்டத்தைப்பற்றிப் பயப்படாமலும், பதவி கிடைக்காதே என்று கவலைப்படாமலும், சுதந்தரத் தமிழ்நாடு பெற ஒவ்வொருவரும் முடிவு செய்து கொண்டு முன்வரவேண்டியது, ஒவ்வொரு தமிழனுக்கும் மிக அவசியமான காரியம் என்பதைப் பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

'சுதந்தரத் தமிழ்நாடு எனது இலட்சியம்' என்ற சொற்களை ஒவ்வொருவரும் இலட்சியச் சொல்லாகக் கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். பதினாயிரக் கணக்கில் பேட்ஜுகளுக்கு ஆர்டர் கொடுத்துத் தயார்செய்து, மக்களுக்கு வினியோகிக்க ஆசைப்படுகிறேன். பொது மக்களுக்கும் இதுவே இலட்சியச் சொல்லாக (கூப்பாடாக) இருக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறேன். பொதுமக்களே! இளைஞர்களே! பள்ளி, கல்லூரி மாணவர்களே! மாணவிகளே! உறுதிகொள்ளுங்கள்! உறுதிகொள்ளுங்கள்! உறுதிகொள்ளுங்கள்!''

30–9–1973 மதுரையில் கருஞ்சட்டைப்படை மாநாடு. 1946–ல் கருஞ்சட்டைப்படை மாநாடு நடைபெற்றகாலை பந்தலுக்குத் தீயிட்டு, வீண்பழி சுமத்திக், கருஞ்சட்டையணிந்த ஆடவரை மட்டுமன்றிப் பெண்டிரையும் அடித்துத் துரத்தி அலைக்கழித்தனர் கொலைக்கஞ்சாக் கொடியோர். இது பற்றிக் கலிங்கத்துப் பரணி நடையில் பேரறிஞர்

அண்ணா 26–5–1946 "திராவிடநாடு" இதழில் "மரண சாசனம்" என்ற தலைப்பிட்டு எழுதிய அரிய கட்டுரையைப் படிக்குந்தொறும், கண்ணீர் ஊற்று வெடிக்கும்; கனிவான உள்ளமும் துடிக்கும்!

இப்போதைய மாநாட்டை வீரமணி திறந்து வைத்தார்; தலைமை ஏற்ற பெரியார் முழங்கினார் — "கழகத் தோழர்களே, நீங்கள் உயிருக்கு அஞ்சாதவர்கள்! தியாகத்தின் சின்னமாகிய கருஞ்சட்டை அணிந்திருப்பவர்கள். சுதந்தரத் தமிழ்நாடு கேட்பது சமுதாய விடுதலை பெறுவதற்காகத்தான், கேட்பது சட்டவிரோதந்தான்; ஆனால், நியாய விரோதமல்ல! ஏழாண்டு சிறையிலிட்டால் பரவாயில்லை என நீங்கள் ஏற்கவேண்டும்!" என்று.

மாலையில் மாபெரும் ஊர்வலம். கருஞ்சட்டைத் தோழர்களின் கங்குகரை காணாத எழுச்சிப் பேரணி, மக்கள் திரளால் மதுரை மாநகரே சிறுத்தது! மதுரை அவுட் போஸ்டில் அமைக்கப் பட்டிருந்த பெரியார் சிலை, இரவு 8-30 மணிக்குத் திறந்து வைக்கப்பட்டது. சிலையினைத் திறந்து வைக்க வேண்டிய முதல்வர் டாக்டர் கலைஞர், உடல் நலக் குறைவால் வர இயலவில்லை எனத் தந்தி அனுப்பியிருந்தார். டாக்டர் நாவலர் தலைமையில் அமைச்சர் எஸ். இராமச்சந்திரன், மணலி கந்தசாமி, மேயர் முத்து, வீரமணி, பெரியார் ஆகியோர் பேசினார்கள்.

"பெரியாரை நீக்கிவிட்டுத் தமிழக அரசியலே இயங்கிட முடியாது. பழைமை வெறி பிடித்த உத்தரப்பிரதேச மாநிலத்தில் கூட ஈ. வெ. ராமசாமிப் பெரியார் துணிந்து நாத்திகப் பிரச்சாரம் செய்தவர்" என்று 5–10–73 "இந்துஸ்தான்டைம்ஸ்" ஏடு தந்தைபெரியாரைப் பாராட்டி எழுதிற்று. "தி.க., தி.மு.க. இரண்டுக்குமே எதிரிகள் ஒருவரே! அதனால் நாமே ஒருவர்க்கொருவர் அழித்திட நினைக்கக் கூடாது. பொது எதிரியை ஒழிக்க, அண்ணா சொன்னதுபோல், இரட்டைக் குழல் துப்பாக்கியாய்ச் செயல்பட வேண்டும்" என்று திருவாரூரில் 10–10–73 அன்று முதலமைச்சர் கலைஞர் மொழிந்தார்.

தஞ்சை, தர்மபுரி போன்ற ஊர்களில் பெரியார் சிலைக்கு அடியிலுள்ள பீடத்தில் பொறிக்கப்பட்டுள்ள கடவுள் மறுப்பு வாசகங்களை அகற்றக்கோரி, சென்னை உயர்நீதி மன்றத்தில் தாக்கல் செய்யப்பட்ட ரிட்மனுவை நீதிபதி எம்.எம். இஸ்மாயில் 11–10–73 அன்று தள்ளுபடி செய்தார். சிலைக்கு உரியவரின் கருத்துகளை அடியில் பொறிப்பதில் தவறில்லை என்றார் ஜஸ்டிஸ்.

14–ந் தேதி சேலத்தில் உரையாற்றிய பெரியார் "மதச் சார்பற்ற நாட்டில் நேற்று ராவணனைக் கொளுத்தி, ராம் லீலா கொண்டாடலாமா? அப்போது நான் ஏன் இராமனைச் செருப்பால் அடிக்கக் கூடாது? ஆகவே, இந்தக் கிளர்ச்சியில் சிறைசெல்ல, மற்றும் உயிர்த்தியாகம் செய்யத் தயாராக உள்ளவர்கள் முன்வந்து பெயர் கொடுங்கள். வர இயலாத மற்றவர்கள் பொருளுதவியாவது செய்யுங்கள்" என்று வேண்டினார். மேலும் அன்றைய "விடுதலை"யிலும் "தமிழர்கள் சூத்திரர், பார்ப்பனரின் தாசி மக்கள் என்கிற இழிவு நீக்க மகாநாடு" என்னும் தலையங்கமும் வரைந்திருந்தார். "சென்னை அல்லது திருச்சியில் டிசம்பரில் கூட்டுவதாக இருக்கிறேன். தமிழ் நாட்டு அரசாங்கத்துக்கு இதில் அதிகாரமில்லாததால், நம்முடைய இந்தப் போராட்டம் இந்திய அரசாங்கத்திற்கு எதிராகத்தான். போராட்டத்தில் கலந்து கொள்ள முடியாதவர்கள்—ஆளுங் கட்சியைச் சேர்ந்தவர்கள் கூட—இதற்குப் பொருளுதவி வழங்கலாம்;" என்று விளக்கியிருந்தார் பெரியார்.

அக்டோபர் 16–ந் தேதி வெளியான செய்தி ஒன்று; உலகப் புகழ்பெற்ற அமெரிக்க பவுத்த குரு பிரடரிக் வி.லஸ்டிக் என்பார் 1954–ல் பர்மாவில் பெரியாரைச் சந்தித்தவர். உருவத்திலும் சிந்தனையிலும் அவர் சாக்ரட்டீசை ஒத்தவர். அன்னார் இந்த ஆண்டு பெரியார் பிறந்த நாள் விழா நிகழ்ச்சிகளில், பர்மா நாட்டில் பங்கேற்றார். 30-ந் தேதி மலேசியாவில் பெரியார்—அண்ணா பிறந்த நாள் விழாக்களில், முருகு. சுப்பிரமணியம் பெருமிதத்துடன் கலந்து கொண்டார்.

அண்ணா 26–5–1946 "திராவிடநாடு" இதழில் "மரண சாசனம்" என்ற தலைப்பிட்டு எழுதிய அரிய கட்டுரையைப் படிக்குந்தொறும், கண்ணீர் ஊற்று வெடிக்கும்; கனிவான உள்ளமும் துடிக்கும்!

இப்போதைய மாநாட்டை வீரமணி திறந்து வைத்தார்; தலைமை ஏற்ற பெரியார் முழங்கினார் — "கழகத் தோழர்களே, நீங்கள் உயிருக்கு அஞ்சாதவர்கள்! தியாகத்தின் சின்னமாகிய கருஞ்சட்டை அணிந்திருப்பவர்கள். சுதந்தரத் தமிழ்நாடு கேட்பது சமுதாய விடுதலை பெறுவதற்காகத்தான், கேட்பது சட்டவிரோதந்தான்; ஆனால், நியாய விரோதமல்ல! ஏழாண்டு சிறையிலிட்டால் பரவாயில்லை என நீங்கள் ஏற்கவேண்டும்!" என்று.

மாலையில் மாபெரும் ஊர்வலம். கருஞ்சட்டைத் தோழர்களின் கங்குகரை காணாத எழுச்சிப் பேரணி, மக்கள் திரளால் மதுரை மாநகரே சிறுத்தது! மதுரை அவுட் போஸ்டில் அமைக்கப் பட்டிருந்த பெரியார் சிலை, இரவு 8-30 மணிக்குத் திறந்து வைக்கப்பட்டது. சிலையினைத் திறந்து வைக்க வேண்டிய முதல்வர் டாக்டர் கலைஞர், உடல் நலக் குறைவால் வர இயலவில்லை எனத் தந்தி அனுப்பியிருந்தார். டாக்டர் நாவலர் தலைமையில் அமைச்சர் எஸ். இராமச்சந்திரன், மணலி கந்தசாமி, மேயர் முத்து, வீரமணி, பெரியார் ஆகியோர் பேசினார்கள்.

"பெரியாரை நீக்கிவிட்டுத் தமிழக அரசியலே இயங்கிட முடியாது. பழைமை வெறி பிடித்த உத்தரப்பிரதேச மாநிலத்தில் கூட ஈ.வெ. ராமசாமிப் பெரியார் துணிந்து நாத்திகப் பிரச்சாரம் செய்தவர்" என்று 5–10–73 "இந்துஸ்தான்டைம்ஸ்" ஏடு தந்தைபெரியாரைப் பாராட்டி எழுதிற்று. "தி.க., தி.மு.க. இரண்டுக்குமே எதிரிகள் ஒருவரே! அதனால் நாமே ஒருவர்க்கொருவர் அழித்திட நினைக்கக் கூடாது. பொது எதிரியை ஒழிக்க, அண்ணா சொன்னதுபோல், இரட்டைக் குழல் துப்பாக்கியாய்ச் செயல்பட வேண்டும்" என்று திருவாரூரில் 10–10–73 அன்று முதலமைச்சர் கலைஞர் மொழிந்தார்.

தஞ்சை, தர்மபுரி போன்ற ஊர்களில் பெரியார் சிலைக்கு அடியிலுள்ள பீடத்தில் பொறிக்கப்பட்டுள்ள கடவுள் மறுப்பு வாசகங்களை அகற்றக்கோரி, சென்னை உயர்நீதி மன்றத்தில் தாக்கல் செய்யப்பட்ட ரிட்மனுவை நீதிபதி எம்.எம். இஸ்மாயில் 11–10–73 அன்று தள்ளுபடி செய்தார். சிலைக்கு உரியவரின் கருத்துகளை அடியில் பொறிப்பதில் தவறில்லை என்றார் ஜஸ்டிஸ்.

14–ந் தேதி சேலத்தில் உரையாற்றிய பெரியார் "மதச் சார்பற்ற நாட்டில் நேற்று ராவணனைக் கொளுத்தி, ராம் லீலா கொண்டாடலாமா? அப்போது நான் ஏன் இராமனைச் செருப்பால் அடிக்கக் கூடாது? ஆகவே, இந்தக் கிளர்ச்சியில் சிறைசெல்ல, மற்றும் உயிர்த்தியாகம் செய்யத் தயாராக உள்ளவர்கள் முன்வந்து பெயர் கொடுங்கள். வர இயலாத மற்றவர்கள் பொருளுதவியாவது செய்யுங்கள்" என்று வேண்டினார். மேலும் அன்றைய "விடுதலை"யிலும் "தமிழர்கள் சூத்திரர், பார்ப்பனரின் தாசி மக்கள் என்கிற இழிவு நீக்க மகாநாடு" என்னும் தலையங்கமும் வரைந்திருந்தார். "சென்னை அல்லது திருச்சியில் டிசம்பரில் கூட்டுவதாக இருக்கிறேன். தமிழ் நாட்டு அரசாங்கத்துக்கு இதில் அதிகாரமில்லாததால், நம்முடைய இந்தப் போராட்டம் இந்திய அரசாங்கத்திற்கு எதிராகத்தான். போராட்டத்தில் கலந்து கொள்ள முடியாதவர்கள்—ஆளுங் கட்சியைச் சேர்ந்தவர்கள் கூட—இதற்குப் பொருளுதவி வழங்கலாம்;" என்று விளக்கியிருந்தார் பெரியார்.

அக்டோபர் 16–ந் தேதி வெளியான செய்தி ஒன்று; உலகப் புகழ்பெற்ற அமெரிக்க பவுத்த குரு பிரடரிக் வி.லஸ்டிக் என்பார் 1954–ல் பர்மாவில் பெரியாரைச் சந்தித்தவர். உருவத்திலும் சிந்தனையிலும் அவர் சாக்ரட்டீசை ஒத்தவர். அன்னார் இந்த ஆண்டு பெரியார் பிறந்த நாள் விழா நிகழ்ச்சிகளில், பர்மா நாட்டில் பங்கேற்றார். 30-ந் தேதி மலேசியாவில் பெரியார்—அண்ணா பிறந்த நாள் விழாக்களில், முருகு. சுப்பிரமணியம் பெருமிதத்துடன் கலந்து கொண்டார்.

18–ந் தேதி பிரதமர் இந்திரா காந்தி, புவனேஸ்வரில் நிருபர்கள் கேட்டபோது, "தி. மு. க. தனிநாடு கேட்க வில்லை. ஆனால் தனிநாடு கேட்கின்ற ஈ. வெ. ராமசாமியை ஆதரிக்கிறது. கருணாநிதி கேட்பது மாநில சுய ஆட்சியை விட அதிகம்" என்று பதில் கூறியிருந்தார்.

"விடுதலை"யில், மாவட்டத் தலைவர்களுக்கு, என்று ஒரு பெட்டிச் செய்தி 17–ந் தேதி வெளியிடப்பட்டது:— "வடஆர்க்காடு, தர்மபுரி, திருச்சி, மதுரை, கன்யாகுமரி ஆகிய மாவட்டங்களில் கழக ஆக்க வேலைகளில் ஒரு முயற்சியும் நடைபெறவில்லை. என்னுடைய கூட்டங்களே ஏற்பாடு செய்யக் காணோம்! வர இருக்கின்ற இழிவு நீக்க மாநாடுகளுக்காவது, ஒத்துழைப்புத் தருவார்கள் என்று எதிர்பார்க்கிறேன்! ஈ. வெ. ராமசாமி."

அக்டோபர் 23-ல் முதல்வர் கலைஞர் ஆரணியில் பேசு கையில், "சுயமரியாதைக் கொள்கைகள்தான் தி. மு. க. ஆட்சியின் கொள்கையாகும். தனக்குக் கண்பார்வை யில்லாததால் புறக்கணிக்கப் படுவோமோ என்ற தாழ்வு மனப்பான்மையைப் போக்குவதே கண்ணொளித்திட்டம்; சமுதாயத்தால் ஒதுக்கப்படுவோமோ என்ற அச்சத்தைப் போக்கி வாழ்வில் தன்னம்பிக்கை ஊட்டுவதே பிச்சைக்காரர் மறுவாழ்வுத்திட்டம்; மனிதனை மனிதன் இழுக்கின்ற மானங்கெட்ட செயலைப் போக்குவதே கைரிக்ஷா ஒழித்து சைக்கிள்ரிக்ஷா வழங்கும் திட்டம். இவை யாவுமே சுயமரி யாதை அடிப்படையில்தான் செய்யப்படுகின்றன. அண்ணா வைத் தானைத் தளபதியாய்க் கொண்ட பெரியாரிசமே எங்களுக்கு வழிகாட்டுகிறது!" என்றார் இறும்பூதுகொண்டு. அடுத்த 30-ந் தேதி சென்னையில், "தி. க. வுக்கும், தி. மு. க. வுக்கும் உள்ள உறவு தனித்தன்மை வாய்ந்ததாகும். திராவிடர் கழகத்தைத் தடைசெய்யத் தேவையில்லை என இந்திரா அம்மையாரே சொன்ன பிறகு, நான், என்ன சொல்ல இருக்கிறது?" என்று நிருபர்களுக்கு விடையளித் தார் கலைஞர்.

25-10-73 பகுத்தறிவாளர் கழகத்தில் பேசிய கம்யூனிஸ்டு (வலது) தோழர் தா. பாண்டியன் எம். ஏ., பி. எல்., "தமிழ் நாட்டுக்குப் பகுத்தறிவு அடிப்படையில் ஆழமான சமூக சீர்திருத்தப்பணி தேவைப்படுகிறது. இதற்கு நாங்கள் எப்போதும் ஆதரவு தருவோம்" என்றவர்; இன்றளவும் வார்த்தையைக் காப்பாற்றி வருகின்றார்!

பெரியார் பேனாவை எடுத்துவிட்டார். 23, 24, 25, 26 தேதிகளில் தொடர்ந்து "விடுதலை"யில் சிறப்பான தலையங்கக் கட்டுரைகள் வெளியாயின. முதல்நாள் 'நம் கடமை'. "சென்னையில் டிசம்பர் 8, 9 தேதிகளில் இழிவு ஒழிப்பு மாநாடுகள் நடைபெறும். மிகச் சமீபகாலம் வரையில் தமிழ் நாட்டில் நமது தஞ்சை, திருநெல்வேலி மாவட்டங்களில், பார்ப்பனர்கள் தங்கள் தெருக்களில் பஞ்சமர்களை நடக்க விடுவதில்லை. கக்கூஸ் எடுப்பதற்குக்கூட அய்ந்தாம் சாதியாரை அனுமதிக்காமல், நாலாம் சாதி சூத்திரரையே கக்கூஸ் சுத்தம் செய்வதற்கும் பயன்படுத்தி வந்தார்கள். எனக்குத் தெரியும். 1940-ஆம் ஆண்டு வரையில் ரயில் நிலையங்கள், சத்திரங்கள், பொதுவிடுதிகள், கோயில்களில் பார்ப்பனருக்குத் தனியிடம் என்பது இருந்தது. வெளிப் படையாகத் தெரியாமல் அதே நிலைமைகள் இப்போது மறைத்துவைக்கப் பட்டிருக்கிறதே ஒழிய, உண்மையில் அதற்கான ஆதாரங்களில் மேலும் பலப்பட்டு வருகின்றன. அதாவது அரசியல் சட்டத்திலும் சாதிப்பிரிவு இடங் கொண்டு விட்டது. இந்த ஜாதி இழிவுப் பிரச்சினைகளில் நம்மைப்போல் பெரிய ஜாதிக்காரர்களோ, பதவிக்காரர் களோ, பிரபுக்களோ கவலைப் படுவதில்லை. நாம்தான் இழிவை நீக்கி மானம் பெறுவதற்கு ஆகப் போராட வேண்டும்."

இரண்டாம் நாள் "சிந்தித்து ஆவன செய்ய வாருங்கள்" என்பதும், முதல்நாள் போலவே அன்பழைப்பு. மூன்றாம் நாள், 'வருவது வரட்டும்.' "பிரிவினை கேட்டால் ஏழாண்டு சிறைத் தண்டனை என்ற சட்டத்தை நிறைவேற்றியதே

இருக்கிறோம். அது யாராலே ஏற்பட்டிருந்தாலும் சரி—நல்ல வாய்ப்பிலே இருக்கிறோம்.

ஆனால் ஒன்று சொல்லுகிறேன்—பொறுமையாகக் கேளுங்கள்! நமக்கு இருக்கிற சட்டம் "இந்து லா" என்பதிலே, இந்துக்கள் என்ற சமுதாயத்திலே, பார்ப்பனரைத் தவிர்த்த மற்ற மக்கள் சூத்திரர்கள். அவர்களுடைய தாய்மார்கள், மனைவிமார்கள், சகோதரிகள், மக்கள் ஆகிய பெண்கள் எல்லாம் பார்ப்பானுக்குத் தாசிகள் என்று சட்டத்திலே இருக்கிறது! தப்புவதற்கே வழி இல்லை!

இது சம்மதம்தானா? இப்படியே இருக்க வேண்டியது தானா? மந்திரியாக ஆனால் போய்விடுகிறதா? இல்லை, கோடீஸ்வரன் ஆனால் போய்விடுகிறதா ? இல்லே, பண்டார சந்நிதி—வெங்காயம் ஆனால் போய்விடுகிறதா? என்ன ஆனால் போகிறது? இந்த ஆட்சி ஒழிகிற வரைக்கும் போகாது! அல்லது, இந்து என்கிற மதம் ஒழிக்கப்பட்டது. இந்துமதம் என்பதாக ஒன்று இல்லை—என்று சொல்கிற வரைக்கும் போகாது! அப்புறம் என்ன நான் உங்களுக்குத் தொண்டு செய்துவிட்டேன்? நான் பிறக்கிறதற்கு முன்னேயே தேவடியாள் மக்கள் நீங்கள்! நான் பிறக்கிறதற்கு முன்னேயே சூத்திரர்கள் நீங்கள்! நான்காவது சாதி நீங்கள்! இப்போது நாளைக்குச் சாகப்போகிறேன். சூத்திரனாய் விட்டு விட்டுத்தானே சாகிறேன். அப்புறம் என்ன என்னுடைய தொண்டு? சிந்திக்கணும் நீங்கள்; கொஞ்சம் கவலையோடு சிந்திக்கவேண்டும்! நானும் போய்விட்டேனென்றால், அப்புறம் இதைப் பற்றிப் பேசுவதற்கு ஆள் எங்கே? யார் வருவார்? வந்தால் இவ்வளவுக்குக்கூட விட்டுக் கொண்டிருக்க மாட்டானே அரசாங்கம்!

நானாக இருக்கிறதினாலே கொஞ்சம் சும்மா இருக்கிறான். இன்னொருவன் பேச ஆரம்பித்தால் ஒழித்துப் போடுவான். இப்போதே நம் அரசாங்கத்து மேலே கண் வைத்திருக்கிறான். அது தெரிந்துவிட்டது நம் தலைவருக்கு —முதல்வருக்கு. அவர் என்கிட்டே வந்தார்:-இப்படி இருக்கிறது நிலைமை; வேலையை ஒழித்துப் போடுவான் போலத்

தான் இருக்கிறது; எந்தச் சாக்காவது சொல்லி! இல்லை, நானே விலகிக் கொள்ளட்டுமா? என்ன சொல்கிறீர்கள்?— என்று கேட்டார். நான் சொன்னேன்: விலகவேண்டாம்; அவனாக விலக்குகிற வரைக்கும்! அவனாக விலக்கினால் இன்னும் கொஞ்சம் ஆள் சேருவார்கள் நமக்கு. விலகாதீர்கள்; இருங்கள்—என்றேன்.

அது இன்னும் கொஞ்ச நாளிலே நடக்கும், சீக்கிரத்திலே, இப்போதே சி. அய். டி. ஆங்காங்கே வந்து ரிப்போர்ட் பண்ணுகிறான். இப்போது அய்யா அமைச்சர் அன்பில் இங்கே வந்தது எல்லாம், உடனே இப்போது போயிருக்கும் டில்லிக்கு! இவர் இங்கே இந்தக் கூட்டத்திலே இருந்தார்; இவரை வைத்துக்கொண்டுதான் இராமசாமி பேசினான் என்று! எனக்கும் இவருக்கும் இந்தப் பேச்சிலே ஒன்றும் சம்பந்தமில்லை; மற்றப் பேச்செல்லாம் இருக்கலாம்; அதே மாதிரியே ஒப்பந்தம் எங்களுக்குள்ளே! நீங்கள் இதிலே கலந்துகொள்ளக் கூடாது; நானும் உங்களை எதிர்பார்க்க வில்லை என்று! ஆனாலும், அவன் புள்ளி போட்டுக் கொண்டு இருக்கிறான்.

சரி, அப்படி வந்தாலும் நான் அதற்காக ஒன்றும் கவலைப்படவில்லை. நம்மாலே வரக்கூடாது என்கிற எண்ணம்; வந்துவிட்டது! வேறே அவர்களுக்கு நாதி இல்லை; என்கிட்டேதான் வந்தாகணும்! மந்திரி சபையை ஒழித்துவிட்டார்கள் என்றால் அவர்கள் எங்கே போவார்கள்? வந்தாகவேண்டும்! அப்புறம் இன்னும் நன்றாக நடக்க வேண்டும்! இப்போது அவர்களுக்கும் நமக்கும் சம்பந்தமில்லை.

நாம் என்ன பண்ணுவது இப்போது? இப்போது நாம் சமுதாயத்துப் பேரைச் சொல்லி, பார்ப்பானை ஒழித்துப் பதவிக்கு வந்துவிட்டோம். நமக்கு அப்புறம்? நம்மிலே இருக்கிறார்கள் அநேகம் பேர் காட்டிக்கொடுக்கவும், மற்ற காரியங்கள் செய்யவும்! என்ன அவமானம் வந்தாலும் லட்சியம் செய்யாமல், பதவிதான் பெரிது என்பதற்கும் ஆட்கள் இருக்கிறார்கள்; அவர்கள்தான் மெஜாரிட்டி!

நம்மை விட்டால், முன்னேற்றக் கழகம் ஒன்று முணே முக்கால் பேர்; அவர்களும் நம்மிடம் வந்துவிடுவார்கள். கம்யூனிஸ்ட் எவன் காலை நக்கியாவது வயிறு வளர்க்கிறது தான் அவன் வேலை. உலகத்திலேயே கொள்கை இல்லாத ஒரு கூட்டம் என்றால் நம் கம்யூனிஸ்டுதான். காங்கிரசு— என்ன பண்ணியாவது பதவிக்கு வரணும் என்கிறவன். அவனோடு போட்டி போடுகிற இன்னொரு காங்கிரசு. இப்போது துவக்கின ஒரு கட்சி இருக்கிறது. அண்ணா முன்னேற்றக் கழகம் என்று, அவர்களுக்கு என்ன வேலை? எதிரிகிட்டே பேசிக்கொண்டு, இவர்களை ஒழித்துவிட்டு வருகிறேன்; எனக்கு ஏதாவது எச்சல்களை போடுகிறாயா? என்று கேட்கிறார்கள். அப்புறம் பார்ப்பான் கட்சி சுதந்தராக் கட்சி; ஜனசங்கக் கட்சி; வெங்காயக் கட்சி! தமிழரசுக் கட்சி எவன் ஜெயிக்கிறானோ அவனோடு சேர்ந்து கொள்கிறது; முன்னேற்றக் கழகம்! ஜெயித்தால் இவர்களோடே! வேறு ஒன்று வந்தால் அவர்களோடே!

அருமைத் தோழர்களே! இது நமக்குக் கடைசி முயற்சி என்று நினைக்கணும். இப்படியே சாகிறதைவிட ஈனத்தனம் வேறே இல்லை. ஆனதினாலே ஏதோ ஓர் கிளர்ச்சி செய்கிறேன் இப்போது நான். சமுதாய இழிவு ஒழிப்பு மாநாடு என்று அடுத்த மாதம் கூட்டுகிறேன். ஒன்றும் ஆட்சியைக் கைப்பற்றுகிறது அல்ல, பெரிய இலாபம் அடைகிறதற்கு அல்ல, நமக்கு இருக்கிற இழிவு போகணும்; அவமானம் போகணும்! இப்போது நாம்தான் ஆள்கிறோம்; என்ன செய்ய முடிந்தது?

நம் இயக்கத்தினுடைய இலட்சியம் இந்த (டெல்லி) ஆட்சியை ஒழிப்பது! இதிலிருந்து விலகணும் என்று எவனாவது நினைத்தால், ஏழு வருஷம் தண்டிப்பேன் என்று சட்டம் போட்டானே, எனக்கும் அண்ணாதுரைக்கும் பயந்துதானே, அந்த மாதிரி போட்டான்!

என்னுடைய ஆசையெல்லாம், ஜெயிலிலே செத்தால் மோட்சம் அடைவேன்—இன்பம் அடைவேன். பின்னே எனக்கென்ன இல்லை, அருமைத் தோழர்களே! நமக்கு

இது ஒரு பரீட்சைக்காலம். சும்மாவே இருந்தால் என்ன ஆகிறது? இந்துமதம் இல்லை என்று அவன் அரசியல் சட்டத்தைத் திருத்தட்டுமே! சட்டத்திலே எல்லாவற்றையும் கட்டிப் போட்டுவிட்டு, அது சொன்னால் தப்பு; இது செய்தால் தப்பு; ஏழு வருஷம் என்றால் எப்படி இது ஒரு நாடாகும்?

பெரிய கிளர்ச்சி நடந்தால்தான் விஷயங்களைச் சரி பண்ணிக்கொள்ள முடியும். இந்தக் கிளர்ச்சியை ஆரம்பிக்கிற இடந்தான் தமிழ்நாடே ஒழிய, ஒரு வருஷத்துக்குள்ளே இந்தியாவிலே பல இடங்களிலே இந்த நெருப்புப் பிடித்துக்கொள்ளும்! ஆகவே, இங்கே ஒரு அய்யாயிரம் பேர் ஜெயிலுக்குப் போனோம் ஆனால், மற்ற இடங்களிலும் பற்றிக்கொள்ளும். நம் இளைஞர்கள் எல்லாம் துணியணும். எல்லாம் பெண்களாகவே ஜெயிலுக்குப் போகணும். இது சமுதாய சம்பந்தமானது. உங்கள் குடும்பமோ, பிழைப்போ, கலந்துகொள்ள இடங்கொடுக்கவில்லை என்றால், நம் மாலான உதவி என்ன செய்யலாம் என்று சிந்தியுங்கள். மாநாடு நடத்த, உடனே நாம் ஒரு லட்ச ரூபாய் சேர்த்தாகணும்!

இன்று எனக்குப் புத்தி சுவாதீனம் இல்லை என்று கூடச் சொல்லுவேன்; என்ன பேசவேணும் என்று இருந்தேனோ ஒன்றும் ஞாபகத்திற்கு வரவில்லை. முந்தாநாள் பூரா ஒன்றுமில்லை; நேற்று ஒரு கப் கஞ்சி, தண்ணீர்கூட இல்லை. இன்று இன்னொரு இட்டிலி கொடு என்றேன். அம்மா முடியாது என்று சொல்லிவிட்டார்கள்- நாசமாய்ப் போகட்டும் என்று சொல்லி விட்டு வந்தேன்.

இப்போது நீங்கள் எல்லாம் பொறுப்போடு வெளியே போகணும். நீங்கள் வந்து அந்த மாநாட்டிலே கொடுக்கிற உற்சாகம்தான் மக்களுக்கு நல்லது ஆகும். சும்மா மாநாடு நடத்தி விட்டுப் போகிறதில்லை; நடந்த உடனே கிளர்ச்சி ஆரம்பிப்போம்! நாம் அவர்களுக்கு நோட்டீஸ் விடணும்— என்ன, இதை மாற்றுகிறதற்கு வழி பண்ணுகிறாயா? இல்லை, உன்னை ஒழிக்கிறதா? என்று. மாநாட்டுத்

தீர்மானம் அதுதான் வரும்! அதிலே time போடுவோம். அது ஆன உடனே, ஆரம்பித்துவிடுவோம்!

நான் ஒன்றும் சும்மா இருந்துகொண்டு அதிகாரம் பண்ணுகிறாற்போல் இல்லை. முதல் பலி நான். என்னைக் கொடுத்து விட்டுத்தான் உங்களைக் கூப்பிடுவேன். அருமைத் தோழர்களே! கொஞ்சம் சீரியஸாக, கொஞ்சம் தீவிரமாகச் சிந்தியுங்கள். என்னுடைய இஷ்டத்தைச் சொன்னேன். இன்னும் உங்களுக்குத் தோன்றுகிறதெல்லாம் சொல்லுங்கள்!

நான் இப்போதும், கடைசியாகவும் வேண்டிக்கொள்கிறேன். மந்திரிகளோ, முன்னேற்றக் கழகக்காரரோ இதில் கலந்துகொள்ளாமல் இருக்கணும். ஏதோ அவர்களாலே ஆன உதவியைச் செய்யட்டும்!

ஏன் என்றால், நான் முன்னமேயே சொன்னேன். "கடைசியாகவும் சொல்லுகிறேன். இது கடைசி முயற்சி, கடைசி முயற்சி; கடைசி முயற்சி! வணக்கம்!"

அடுத்துப் பெரியார் மேற்கொண்ட சுற்றுப் பயணத்திலும் இதே கருத்தை வெளிப்படுத்தி வந்தார். 10-ந் தேதி ஜெயங்கொண்டத்தில், முதலில் வடநாட்டார் கடைமுன் மறியல் செய்யலாம், என்றார். அடுத்த நாள் தாதம்பேட்டை பழுவூரில், வசதியுள்ளோர் பொருளுதவி செய்யுங்கள்; வசதியற்றவர் உடலுழைப்புத் தாருங்கள்; உணர்ச்சி உள்ளவர் சிறை செல்ல வாருங்கள்—என்றார்.

11–11–73 அன்று "முக்கிய தெரிவிப்பு" என்னவென்றால்...8, 9 மாநாடுகட்கு முன்பு பெரியார் ஒரு சுற்றுப் பயணம் மேற்கொள்ளத் திட்டமிட்டுள்ளார். மாநாடு ஒருவேளை தடை செய்யப்படலாம், அதனால் பெயர்ப்பட்டியலும், பொருளுதவியும் நேரில் பெற வருவார்கள். நவம்பர் 18 முதல் 28 முடிய, 11 மாவட்டங்களில், மணியம்மையார், தோழர்கள் ஆனைமுத்து, செல்வேந்திரன், புலவர் இமயவரம்பன்; சில இடங்களில் வீரமணியும், பெரியாருடன் வருவார்கள். 18 திருச்சி, 19 மதுரை, 20 காரைக்குடி, 21 திருநெல்வேலி, 22 தஞ்சை, 23 சென்னை, 24 வேலூர்,

25 கடலூர், 26 தர்மபுரி. 27 சேலம், 28 கோயமுத்தூர்—இது தான் பயணத்திட்டம் இவ்வளவும் ஒரு அம்பாஸிடர் காரில்.

குணமென்னும் குன்றேறி நின்ற பெரியாரின் வெகுளி வெடித்துச் சிதறியது, 15–ந்தேதி தலையங்கமாய்? என்ன தலைப்பு தெரியுமா? "நமது நாட்டு வாசியல் வாதிகள் பெரிதும் மானங்கெட்ட முண்டங்களே!" எத்தரித்த விஷயமோ சித்திரை வெய்யிலைவிட வெப்பம்! "நாம் பிரிவினை கேட்கிறபடியால், 'ஏன் இவர்களைப் பிடித்து உள்ளே போடவில்லை?' என்று, தமிழனுக்குப் பிறந்ததாகச் சொல்லிக் கொள்ளும் தமிழனே துடிக்கிறான். தி. மு. க. கட்சி மீதும் பழி சுமத்தி, ஆட்சியை ஒழிக்கப் பார்க்கிறான். என்ன செய்வது? தமிழரில் பலர், அல்லது சிலர், ஈனப் பிறவிகளாய் இருக்கிறார்கள். கலைஞர் மு. கருணாநிதி, சட்டப்படி இந்த நாட்டின் முதல் அமைச்சர். எல்லா விஷயங்களுக்கும் பொறுப்பும் முழு அதிகாரமும் உள்ளவர். அவர் எப்போதாவது பிரிவினை கேட்டாரா? சொல்லட்டும்! அயோக்கியப் பத்திரிகைகள், அவர்மீது ஏன் பாய்கிறார்கள்? மனித ஜென்மங்களாக இருந்தால், 1971–ல், எப்போது இவர்கள் கணிப்பையெல்லாம் கடந்து கலைஞர் பரிபூரண மெஜாரிட்டி பெற்றாரோ, அப்போதே இவர்களுக்கு மானம் வந்திருக்க வேண்டும். நானேகூடப் பிரிவினை கேட்க வில்லையே! எங்கள்மீது உள்ள இழிவு நீக்கப்படவில்லையா னால், பிரிந்து போவது தவிர வேறு வழி இல்லை என்றுதான் சொல்லுகிறோம். நான் சாகத்துணிந்தவன்; எனக்குச் சமுத் திரம் முழங்கால் அளவுதான்! அட முட்டாள்களா! நான் உங்களுக்கும் சேர்த்துதானே பாடுபடுகிறேன்! டில்லி எழவு எடுப்பதற்கு முன் உங்களோடு எழவா? மானமுள்ளவர் களானால் என்னோடு சேர்ந்துகொண்டு, நீங்களும் போராட வாருங்கள்? மற்ற யோக்கியர் வாலை அடக்கிக் கொண்டு சும்மா வாழுங்கள்!"

16–11–73 அன்று கலைஞரும் இதே கருத்தை வெளியாக் கினார்:– "தி. மு. க. ஆட்சியைக் கவிழ்க்கச் சதித்திட்டம் தயாராகி, அதில் சில பெரிய மனிதர்களும் ஈடுபட்டுள்ளனர்.

நான் பிரிவினைவாதி எனத் திட்டமிட்ட பிரச்சாரம் செய்யப்படுகிறது. இதற்குப் பத்திரிகைகளும் பெருமெடுப்பில் ஒத்து ஊதுகின்றன. நாலே நாளில் கழகத்தைக் கவிழ்த்து விடுவோம் என்றே முயற்சிகள் நடைபெறுகின்றன!'' என்றார். 20-11-73 அன்று சென்னை மாநகராட்சி மன்றம் கலைக்கப்பட்டதாகச் சட்ட மன்றத்தில் அறிவிக்கப்பட்டது!

''மத்திய அரசே! இழிவை நீக்கச் சட்டம் இயற்று! இல்லையானால் எங்களுக்குள்ள ஒரே வழி நாட்டுப் பிரிவினைதான்! வட நாட்டானே! நீ உடனே உன்னுடைய மூட்டை முடிச்சுகளைக் கட்டிக்கொள். இனிமேல் உனக்கு இங்கே வேலையில்லை!'' என்று 19-ந்தேதி பெரியார் திருச்சியில் முழக்கமிட்டு, மறுநாள் மதுரைப் பொதுக்கூட்டத்தில் உரையாற்றும்போது, ஜாதி வெறியர் சிலர், பெரியாரைப் பேசவிடாமல் கூச்சலிட்டு, இடையூறு செய்யப் பார்த்தனர். காலிகள் முயற்சி பலிக்கவில்லை, அதன் பின் 45 நிமிட நேரம் பெரியார் பேசியே முடித்தார்! 20-ந்தேதி காரைக்குடியில் ரூ 1,150-ம், 21 திருநெல்வேலியில் ரூ 1,300 கார் நிதி வழங்கப்பட்டது. இங்கெல்லாம் லட்சக் கணக்கான மக்கள் திரண்டு, பெரியாரின் போர்ப் பிரகடனத்தைக் கேட்டு உணர்ந்தனர். 22-ந்தேதி தஞ்சையில் ''இனி நான் என் வாழ்நாள் முழுவதும் சிறையில்தான் கழிப்பேன். விடுதலை பெற்றால், மீண்டும் கிளர்ச்சி செய்து, சிறை புகுவேன்; ஏனென்றால், நான் மறைந்தால், மீண்டும் ஆரியம் தலை தூக்கும்! அப்புறம் தமிழர்களின் இழிவை ஒழிக்கப் போவது யார்?'' என்று வினாத்தொடுத்தார் பெரியார்!

சென்னைப் பொதுக் கூட்டத்திற்காக வந்த பெரியார் 23-11-73 அன்று ''பிரிவினையா'' என்ற தலையங்கமும் எழுதினார்:— ''டில்லி அரசாங்கத்தில் இருப்பவர்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். வெறும் மிரட்டலில் பருப்பு வேகாது. நாங்கள் தி. மு. க. வை ஆதரிப்பது உண்மைதான். ஆனால் அவர்கள் எங்களை ஆதரிப்பது இல்லை; அவர்களின் ஆதரவை நாங்கள் எதிர்பார்ப்பதும் இல்லை. தி.மு.க.

ஆட்சியில் பார்ப்பானை உள்ளே விடாமல் இவர்கள் வைத்திருப்பதே, எங்களுக்குப் பெரிய உதவியாக நினைக்கிறோம். இத்தோடு அவர்களுக்குப் பதவி போனாலும், நம் கழகத்திற்கு வலிவுதானே என்கிற எண்ணக்காரன் நான். ஆகவே, பொது மக்களே! தோழர்களே! எந்த விளைவுக்கும் தயார், தயார், தயாராகுங்கள்!''

மனிதனை மனிதன் இழுப்பது சட்டப்படிக் குற்றம் என்னும் கைரிக்ஷா ஒழிப்பு மசோதா, 28-11-73 அன்று தமிழக சட்ட மன்றத்தில் தாக்கலாயிற்று. 29-ந்தேதி நாடாளு மன்றத்தில் பெரியார் ஓர் விவாதப் பொருளானார். உள்துறை அமைச்சராக உமாசங்கர் தீட்சித் என்பவர் அப்போது பதவி வகித்தார். அவர் கூறினார்! "பெரியாரின் பிரிவினைப் பிரச்சாரத்துக்கு முக்கியத்துவம் கொடுக்க விரும்பவில்லை. தாம் விரைவில் இறந்துவிடுவோம் என்கிற எண்ணத்தில் அவர் இந்தப் பிரிவினைக் கொள்கையைத் தீவிரப்படுத்துகிறார். மிகவும் வயதாகிவிட்ட அவரது மனத்தை மாற்றக்கூடுமென எண்ணவில்லை'' என்று. அவருக்குத் துணை அமைச்சரான மொய்சீன் என்பவர், தமிழக அரசுக்கு எழுதிப் பெரியார்மீது சட்டப்படி நடவடிக்கை எடுப்பதற்கான சாத்தியக்கூறுகளை ஆராய்ந்து வருவதாகக் கூறினார். தீட்சித் அளித்த பதில் குறித்து முதல்வர் கலைஞர் சென்னையில் 30-ந்தேதி—"அவர் இயல்புக்கு ஏற்ப அவர் ஜாதகம் கணிக்கிறார்!'' என்று கண்டித்து உரைத்தார்.

பெரியார் விட்டுவிடுவாரா? 30-11-73 "பூனை கண்ணை மூடிக்கொண்டால் உலகம் இருண்டு போகுமா?'' என்று கேட்டார் "விடுதலை'' மூலமாக. "நாடாளுமன்றத்தில் அமைச்சர்கள் கூறியுள்ள பதில், இருக்கின்ற பிரச்சினையைத் தீர்க்க உதவுமா? மற்ற மாநிலங்களுக்கும் இது பரவாதா? இழிவு ஒழிப்புக் கிளர்ச்சியை இருட்டடிப்புச் செய்ய நினைத்தார்களானால், பூனை கண்ணை மூடிக்கொண்டு பால் குடிக்கிற கதைதான்!'' என்று எழுதினார் பெரியார். தாழ்த்தப்பட்டோரையும் கோயில் அர்ச்சகராக்குமாறு அரசி

சாகத்தான் போகிறான்; அது ஒரு நல்ல காரியத்திற்காக நடக்கட்டுமே! ஆகவே, நாம் ஒரு துணிவான முடிவுக்கு வந்து விட்டோம். தி.மு.க. ஆட்சி ஊழலாமே? அப்படியானால் ஊழல் இல்லாமலா இந்த அம்மையார் ஆட்சியைப் பிடித்தார்கள்? அம்மையாரிடத்தில் தெரிகிறதே அசல் பார்ப்பன வெறிக்கோலம்! முன்னாள் குடிஅரசுத் தலைவர் ராதா கிருஷ்ணன், இந்நாள் குடிஅரசுத் தலைவர் வி. வி. கிரி இருவருமே பார்ப்பனர். தமிழ் நாடு தவிர மற்ற மாகாண முதலமைச்சர்கள், மத்திய அமைச்சர்கள், பார்ப்பனர்கள் தான்! இதைச் சொல்ல எங்களுக்கு அச்சம் கிடையாது. காரணம், நாங்கள் ஓட்டுப் பிச்சை கேட்போரல்ல? இவர்கள் சொல்லுகிறார்கள்—நான் சாதாரண ஆளாம்! தடை செய்து பார்! அப்போது தெரியும்! இந்தியா பூராவும் பற்றி எரியுமே எங்கள்பிரச்சினை! ஆகையால் தூங்குவதுபோல் நடிக்காமல், வீண் குற்றம் சாட்டாமல், பிரச்சினைக்குச் சரியான பதிலை உடனே சொல்லுங்கள்!'' என்று முரசடித்தார் பெரியார்!

4-12-73 தமிழ்நாடு சட்டமன்றத்தில், ஒத்திவைப்புப் பிரேரணைகளுக்கு முதல்வர் 'கலைஞர், வெகு விளக்கமான, திட்டவட்டமான பதிலைத் தெரிவித்தார்: ''தடைசெய்யக் கூடிய அளவுக்குத் திராவிடர் கழகம் அவ்வளவு பெரியகட்சியா என்ன? என்றுதென் மாநிலங்களில் சுற்றுப்பிரயாணம் செய்த பிரதமர் சொல்லியிருக்கிறார். பெரியாரின் பிரிவினைக் கோரிக்கைக்கு அதிக முக்கியத்துவம் தரவேண்டாம் என்று மத்திய உள்துறை அமைச்சர் நாடாளுமன்றத்தில் கூறி விட்டார். அப்படியிருக்கமாநில அரசு மாத்திரம் ஏன் இதற்கு முக்கியத்துவம் தரவேண்டும்? மேலும், நாங்கள் எடுத்துள்ள நடவடிக்கைகளும் சில இருக்கின்றன. நீங்கள் அதையும் தெரிந்து கொள்ளவேண்டும். மதுரையில், பிரிவினை கோரும் மாநாடு ஒன்றைப் பெரியார் திறக்க இருந்தார்; அதைத் தடை செய்தோம். பெரியாருடன், அமைச்சர்களும் நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும் போது, அங்கு பிரிவினை பற்றிப் பேசப்பட்டால், இது எங்கள்கொள்கை அல்ல என்று நாங்கள் அங்கேயே மறுத்திருக்கிறோம். பெரியார்

இப்போது மாத்திரமல்ல; காமராஜர், பக்தவத்சலம் காலத்திலும் பிரிவினை பற்றிப் பேசி வந்துதானிருக்கிறார். நான் இப்போதெல்லாம் தந்தை பெரியார் அவர்களை அடிக்கடி சந்தித்துப் பேசி வருகிறேன். இப்போது அவர் நிபந்தனையின் பேரில்தான் பிரிவினை கேட்கிறார். முன்பு பாகிஸ்தானுக்கு ஆதரவாக ஒருவர் (இராஜாஜி) எழுதியதற்கும், நாம் நடவடிக்கை எடுக்கவில்லை. பெரியவர்கள் என்று விட்டுவிடுகின்றோம். இந்த மாநாட்டை ஒட்டி தி.க., ஊர்வலம் எதுவும் நடத்துவதாக இல்லை. ஆனால், நீங்கள் என்னுடன் வந்தால், கோவில்களில், தேவாலயங்களில், எப்படி ஆபாசமாகக் கடவுளர்கள் களங்கப் படுத்தப் பட்டுள்ளனர் என்று காட்ட முடியும்!'' என விளக்கவுரை புகன்றார் முதல்வர்.

இவ்வாறு பேசுமுன், பெரியார் இடையில் கலைஞர் பெரியாரைத் தனியே சந்தித்தார். மணியம்மையார், வீரமணி, சம்பந்தம், கருணானந்தம் உடனிருந்தார்கள். கர்ப்பக்கிரகக் கிளர்ச்சியைக் கைவிடுமாறு பெரியாரைக் கலைஞர் கேட்டார். நான் நடத்தாமலிருக்க முடியாது. நீங்கள் சட்டப்படி என்னைக் கைது செய்தால், நான் வருத்தப்பட மாட்டேன் என்றார் பெரியார். கண்கள் புனல் சிந்தக் கலைஞர், நான் ராஜிநாமா செய்துவிடுகிறேன். நான் முதலமைச்சராயிருந்து அய்யாவைக் கைது செய்வதா? என்றார். பெரியாரும் கண்ணீர்மல்க உணர்ச்சி வயப் பட்டார். கலைஞர் முதுகில் அன்புடன் தட்டிக் கொடுத்து, அந்தப் பைத்தியக்கார எண்ணம் வேண்டாமென்றார்.

5-12-73 மயிலாப்பூரில் பேசும்போது, ''இந்தச் சலசலப்பெல்லாம் எங்களிடம் காட்ட வேண்டாம்! எத்தனையோ வன்முறைகளைச் சந்தித்து, ஈடுகொடுத்து, எதிர்நீச்சல் போட்டே வளர்ந்தவர்கள் நாங்கள்! எங்கள் உயிருக்கும் துணிந்துதான் இந்த முயற்சிகளை மேற்கொண்டிருக்கிறோம்'' என்று கர்ச்சனை புரிந்தார் பெரியார். பூரிசங்கராச்சாரியார்மீது மகாராஷ்டிர அரசு, வழக்குப் போடப் போவதாக, முதல்வர் வி.பி. நாயக், 6-ந்தேதி சொன்னார்.

திருச்சி மாவட்டம் தவிட்டுப் பாளையத்தில், கிராமப் பஞ்சாயத்து சார்பில், 'பெரியார் திருமண மண்டபம்' கட்டப்பட்டிருந்தது. இதனை, மாவட்ட ஆட்சித் தலைவர் எம். வைத்திலிங்கம் அய்.ஏ.எஸ். 8–12–73 அன்று திறந்து வைத்தார்.

1973 டிசம்பர் 8, 9, தேதிகளில் சென்னை பெரியார் திடலில் தமிழர் சமுதாய இழிவு ஒழிப்பு மாநாடு நடை பெற்றது. முதல் நாள் காலையில் பெரியார் திடலுக்கு எதிரிலுள்ள சாலையில் ஒரு சிலர் கருப்புக் கொடி பிடித்து ஆர்ப்பாட்டம் செய்தனர். வீரமணி ஒரு ஜீப்பில் ஏறிக் கொண்டு, கையில் ஒலிபெருக்கியுடன், அங்கு சென்று பேசத் துவங்கினார், அவ்வளவுதான்! அத்தனை கருப்புக்கொடி யரும் ஓட்டம் பிடித்தனர்! மாநாடு துவங்கியது, பகல் 12 மணியளவில். ஒரத்தநாடு திராவிடர் கழகச் செயலாளர் எஸ்.பி. சாமி அவர்களின் மகள் செல்வி மணிமொழி— ஒரத்தநாடு திரு சுந்தரராசன் மகன் செல்வன் துரைராஜ் ஆகியோரின் திருமண விழாவினைத் தந்தை பெரியார் நடத்தி முடித்து வைத்தார். வரவேற்புரையில் வீரமணி, 'அண்ணா "தமிழ்நாடு" தந்தார்; அய்யா அவர்களே, நீங்கள் "தமிழருக்கே!" தாருங்கள்!' என்று உணர்ச்சி பொங்கிடக் கேட்டார்.

அரசியல் சட்டம் மதச்சார்பின்மையை உண்மையாக்கு மாறு திருத்தப்படவேண்டும்; கிரிமினல் சட்டம் போல் Uniform civil code வேண்டும்; 'தீண்டாமை'க்குப் பதிலாக 'சாதி' என்று அரசியல் சட்டம் 17-வது விதியில் திருத்த வேண்டும்; பார்ப்பனப்பத்திரிகைகளை பகிஷ்காரம்செய்தல், கடவுள் மறுப்பு, இந்து அறநிலைய இலாக்கா ஒழிப்பு—ஆகிய பல தீர்மானங்கள் மாநாட்டில் இயற்றப்பட்டன.

9-12-73 அன்று மாநாட்டில் இறுதியாகப் பெரியார் பேருரை நிகழ்த்தினார்:— "பேரன்புமிக்க தாய்மார்களே! பெரியோர்களே! தமிழ்நாடு முழுவதிலும் இருந்து இங்கு எழுந்தருளியிருக்கும் பிரதிநிதிகளே! சொற்பொழிவாற்றிய பேரறிஞர்களே!

இப்போது நல்லசொற்பொழிவுகளைக் கேட்டு, ரொம்ப உணர்ச்சியோடு, பக்குவமான நிலையில் இருக்கிறீர்கள். நான் பேசுவதன் மூலம் எங்கே இது கலைந்து போய்விடுமோ என்று பயப்படுகிறேன். அவ்வளவு நல்ல தெளிவாக, யாருக்கும் விளங்கும்படியும், ஒவ்வொருவர்மனமும் உடனே காரியத்தில் இறங்கும்படியான உணர்ச்சி ஏற்படும்படியும், நல்லவண்ணம் அவர்கள் பேசினார்கள். எனக்கும் தெரியாத, இதுவரையிலும் நான் தெரிந்திருக்காத, அநேக அருமையான விஷயங்களை எல்லாம் பேசினார்கள். நாம் செய்வது ரொம்ப அவசியமான காரியம்—ஞாயமான காரியம் என்று கருதும்படி நல்லவண்ணம் விளக்கினார்கள். இனி நான் சம்பிரதாயத்துக்குத்தான் இரண்டொரு வார்த்தைகள் பேச வேண்டியிருக்கிறது.

தோழர்களே! நான் இந்த மாநாடு கூட்டி இருப்பதன் நோக்கம் போராட்டத்தை உத்தேசித்து அல்ல; அல்லது இந்த ஆட்சியிலிருந்து விலகவேண்டும் என்கிற எண்ணத்தை உத்தேசித்து அல்ல; மனிதசமுதாயமாகிய நாம், சமுதாயத்திலே ஈனப்பிறவிகளாக, அசிங்கமான கருத்தில் இன்னொரு சாதியானுக்கு, அதிலும் நம் நாட்டிலே பிழைக்க வந்த ஒரு சிறு கூட்டத்தானுக்கு அடிமைகளாக, தாசிமக்களாக இருந்து வருவதே ஆட்சியின் தன்மை, என்கிற இழிவான நிலைமையிலே இருந்து மாறவேண்டும் என்று கேட்கிறோம். இது இயற்கை!

இப்போது, நண்பர் நமது கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் இந்தக் கோயில் அர்ச்சகர் வேலை யாரும் பண்ண லாம் என்று தீர்மானம் பண்ணியுங்கூட, இந்த அரசாங்கம் செய்த சட்டம் செல்லாது என்று பண்ணி, நமது இழி நிலையைச் சட்டத்தின் மூலம் உறுதிப்படுத்தி விட்டதனாலே, நமக்கு ஆத்திரம் கொஞ்சம் அதிகமாகிப் போயிற்று. அதனாலே உணர்ச்சி வந்தது. மாநாடு போட்டோம் இது ஒரு திருப்திகரமான மாநாடு. நமது ஆசைப்படி எல்லாமே நல்ல வண்ணம் நடந்து இருக்கிறது.

இது நல்ல தீர்மானங்களைப் போட்டுவிட்டோம்.

அழுக்காகத் தீர்மானம் போடவில்லை; கண்டிப்பாக இழிவு தீரவேணும், இது போகாவிட்டால் நம் கதி என்ன ஆகும் என்கிற நிலைமையிலே இந்தத் தீர்மானங்களைச் செய்து இருக்கிறோம். எனக்கு ஒரு பொறுப்புக் கொடுத்திருக் கிறார்கள்; எப்போது செய்கிறது என்கிறதைப் பற்றித் தலைவர் சொல்லுவார் என்று!

முதலாவதாக நான் தெரியப்படுத்திக் கொள்ளுகிறேன். மாநாடு முடிந்தவுடனே தீர்மானங்களை மந்திரிகள், குடி அரசுத் தலைவர், இந்தியப் பிரதம மந்திரி இந்திரா அம்மாள் அவர்களுக்கும், மற்றும் பார்லிமெண்ட் மெம்பர்களுக்கோ, நம் அரசாங்கத்துக்கோ, இன்னும் யார் யாருக்கோ அனுப்பி, அவர்கள் நம் சேதிகளைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்று ஆதரவான பதிலை அனுப்பி வைக்க வேணும் என்று கேட்கப் போகிறோம். அது வந்த பிறகு, நம் மக்களுக்கு அனுகூலமாக இல்லாவிட்டால், கிளர்ச்சியில் இறங்குவது என்று திட்டம்போட்டு இருக்கிறோம். பெரிய காரியந்தான்!

தோழர்களே! நான் நினைக்கிறேன்; இவ்வளவு பெரிய காரியத்திற்கு நிபந்தனை போட, கொஞ்சம் வாய்தா கொடுத்துதான் ஆகவேண்டும்! வருகிற ஜனவரி மாதம் குடியரசு நாளாகிய 26–ந் தேதி வரைக்கும் வாய்தா கொடுக்கலாம். 45 நாள் இருக்கிறது; போதும். நமக்கும் பிரச்சாரம் பண்ண நாள் வேண்டியதுதான். அதற்குள்ளே நம் மக்களுக்கு உணர்ச்சி மறந்து போகாது. ஆதரவு அதிக மாக இருக்கும் என்றே நான் நம்புகிறேன்.

அன்றைய முதற்கொண்டே நாம் சொல்லி வருகிறோம். இது சுதந்தர நாள் அல்ல, துக்க நாள், மோசடி, நம்மை ஏமாற்றத் துரோகம் செய்கிற நாள் என்று. அதே போல், பிற்பாடு டாக்டர் அம்பேத்காரே ரொம்ப வருத்தப்பட்ட மாதிரி, அரசியல் சட்டமும் ஒரு மோசடி. அது ஒரு மனு தர்ம சாஸ்திரம். பார்ப்பன ஆதிக்கத்திற்கு ஏற்ற காரியம் என்றெல்லாம் நான் சொல்லிக் கொண்டு வந்திருக்கிறேன்.

யார் கவனிக்கிறார்கள்? அரசியல் வந்துவிட்டது என்றாலே, அவனவன் ஓட்டுக்கும், பதவிக்கும், மந்திரி வேலைக்கும் கவலையோடு இருந்தானே தவிர, சமுதாயத் துறையிலே நமக்கு இந்தக் கேடு இருக்கிறது என்று இன்றைக்கு யாருக்குக் கவலை இருக்கிறது?

இன்றைக்கு நான் சொல்லுவேன்—நமது முன்னேற்றக் கழகத்துக்காரர் சரியாக இருக்கிறார் என்று சொல்ல மாட்டேன். ஏதோ சில பேருக்கு இருக்கலாம். மற்றவர்களுக்கு ஏதோ அவர்கள் பதவி பட்டம் அது இது அந்த மாதிரி ஆகிப்போயிற்று நிலைமை. இந்த அரசியல் அவ்வளவு கீழ்த்தரமாகிப் போனதனாலே, அதிலே பிரவேசிக்கிறவர்கள் யாரும் வெட்கப்படுவதற்கு இல்லாமல்—அது மூலமாக ஒரு பரிகாரமும் செய்கிறதற்கு இல்லை. இப்போது நாம்தான் ஏதோ கத்திக் கொண்டிருக்கிறோம். நமக்கும் அவ்வப்போது சரி பண்ணிக் கொள்ளத்தான் முடிகிறதே தவிர, நிரந்தரமாய் இல்லை. மந்திரிமார்களிலேயும் சில பேருக்கெல்லாம் கொஞ்சம் உணர்ச்சி இருக்கிறது. சில பேர் பதவியை விட்டு வந்துவிடுகிறேன் என்றுகூடச் சொன்னார்கள். நண்பர்கள், போகட்டும்!

அநேகமாக நான் சொல்லுகிறேன், பார்ப்பானோடு போராடுகிற கடைசிப் போராட்டம் என்று இதை வைத்துக் கொள்ளணும். இதிலே வெற்றி பெறவில்லையானால், அப்புறம் நமக்கு வாய்ப்பே இல்லை! இப்போது, எப்படி இதை அடக்குகிறது, அழிக்கிறது என்று அவர்கள் ரொம்பத் திட்டம் போடுவார்கள். நாம் எவ்வளவு உறைப்பாக, துணிச்சலாக, கஷ்டத்தை ஏற்றுக்கொள்கிறதாக உணர்ச்சியோடு, இருக்கிறோமோ அதைப் பொறுத்துதான் இதற்கு ஏற்படுகிற மதிப்பு இருக்குமே தவிர, சும்மா வேஷத்தினாலே மதிப்பு ஏற்படும் என்று நினைக்க முடியாது. அந்த மாதிரி உணர்ச்சியோடு நமக்கு இதிலே வாய்ப்பு வந்து சாதாரணமான முறையிலே இதற்கு அடுத்த முறை வருகிறது என்றால், நமக்கு வெற்றியைத் தவிர வேறு வாய்ப்பு இல்லை.

நாம் கூடுமான வரைக்கும் பெண்களை இதிலே பூத வைக்கணும். ஆண்கள்தான் ரொம்பப் பேர் வர முடியும்; இருந்தாலும், ஆயிரம் பேர் போனார்கள் என்றால், அதிலே பெண்கள் 100 பேர் இருக்கணும். கிளர்ச்சிக்கு அது ரொம்பத் தூண்டுகோலாய் இருக்கும். பிடிக்கப் பிடிக்க அடுத்த அணி வந்துகொண்டே இருக்கவேணும்.

இயக்கத்துக்கு இறங்குகிறவர்கள், மன்னிக்கணும், ரொம்ப ஒழுக்கமாக இருக்கணும். இந்தக் கிளர்ச்சிக்கு ஒரு கவுரவம் இருக்க வேணும், நாணயம் இருக்க வேணும், பார்க்கிறவன் எல்லாம்கூட இதை மதிக்கணும். அதிலே ஒவ்வொருவரும் முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும்.

அடுத்து, நம் மக்கள் எடுத்துக்கொள்கிற முயற்சி—எந்த விதமான விரோத உணர்ச்சி அல்ல், குரோத உணர்ச்சி அல்ல, யார் பேரிலேயும் வருத்தம் இல்லை; நம் காரியத்துக்காகத்தான் நாம் செய்கிறோம் என்கிற மாதிரிதான் நடத்தை, காரியம், எல்லாம் இருக்கவேணும். மனதிலே வெற்றி பெறுகிறோமோ, தோல்வி அடைகிறோமா என்கிற எண்ணமே இருக்கக்கூடாது. நமக்கு ஞாயம் இருக்கிறது, செய்கிறோம். மக்களும் தாராள மனப்பான்மையோடு இருக்கிறார்கள்—அரிசி, பணம், கேட்டதற்கு மேலேயே கிடைக்கிறது. இதை ஒரு தொந்தரவாக யாரும் நினைக்கிறவர்கள் இல்லை; ஒருவர்கூட இல்லை.

மனதிலே நினைத்துக் கொள்ளுங்கள். நாம் ஒன்றும் தப்புப் பண்ணவில்லை. முன்னாடியே செய்திருக்க வேண்டிய காரியத்தைத்தான் இப்போது செய்கிறோம். இதைச் செய்யாததனாலே இன்னும் இழிவிலே இருக்கிறோம் என்கிற தலைப்பை வைத்துக் கொள்ளுங்கள். நான் ஒன்றும் புதிதாகச் சொல்லவில்லை. நமது தோழர்கள் எல்லாரும் சொன்னதைத்தான் திருப்பித் திருப்பிச் சொல்லுகிறேன்.

இந்தப் பார்ப்பனப் பத்திரிகைக்காரர்களும் தங்களின் சுயநலத்தை உத்தேசித்தாவது யோக்கியமாய் நடந்து கொள்ள வேண்டியது. இன்னமும் இப்படியே இருக்க வேணும் என்று அவர்கள் நினைத்தார்களானால், அது

அவர்கள் தப்புத்தான். நாளா வட்டத்திலே அப்படியே போய்விடும் என்று கருத வேண்டாம் என்று—விஷயங்களை எல்லாம் உங்களுக்கு எடுத்துச் சொல்லி, நான் என் பேச்சை முடித்துக் கொள்கிறேன். இப்போது நேரம் இரவு 8 மணி ஆகிறது. முடிக்கிறேன் நான். தயவு செய்து நீங்கள் எல்லாம் நன்றாக, மனதிலே உற்சாகமாக, எங்களுக்கு உற்சாகம் ஏற்படும்படியான மாதிரியிலே, நீங்கள் மற்றும் தினம் அங்கங்கே நடைபெறும் காரியங்களிலிருந்து, இதற்கு ஒரு நல்ல நேரம் என்று கருதிச் செய்யணும். வேறே ஒன்றும் நான் அதிகமாகச் சொல்லவில்லை.

மற்றபடி, நீங்கள் இவ்வளவு நேரம் காது கொடுத்ததற்கும், இரண்டு நாளாக நீங்கள் உங்களுடைய வேலை வெட்டி எல்லாம் விட்டுவிட்டு வந்து உற்சாகமூட்டி இந்த நிகழ்ச்சிகளுக்கு ஆதரவு கொடுத்ததற்கும், மற்றும் பொது மக்கள் இதற்கு ஆதரவாய் என்னென்ன உதவி பண்ண வேணுமோ அவைகளை எல்லாம் செய்ததற்கும், தோழர்கள் சிலர் நம் இயக்கத்திற்காக ரொம்ப உற்சாகமாகப் பணியாற்றி உதவி செய்ததற்கும், நான் அவர்களுக்கெல்லாம் நன்றிசெலுத்துகிறேன் என்று—உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன். அதிகமாகச் சொல்லவில்லை. வணக்கம்!''

10–12–73 அன்று பெரியார் ''விடுதலை''யில் ''அப்புறம் என்ன?'' என்ற தலையங்கத்தை எழுதி முடித்தார். ஜாதி ஒழிப்புக் கிளர்ச்சி 24–1–1974 அன்று துவக்கம், 5 பிரச்சாரப் படைகள் புறப்படும். கன்னியாகுமரி, திருச்சி, தஞ்சை, கடலூர், கோவை ஆகிய இடங்களிலிருந்து, ஒவ்வொரு பிரச்சாரப் படையிலும் 5 முதல் 10 பேர் வரை புறப்படுவார்கள்; கருஞ்சட்டை யணிந்து, கால்நடையாகவே, வழியெல்லாம் பிரச்சாரம் செய்து கொண்டும், 5 பைசாவிலிருந்து கிடைக்கும் அளவு நிதியோ மற்றும் பண்டங்களோ வசூல் செய்து கொண்டும், சென்னையை நோக்கி வருவார்கள்! வழியில், கிளர்ச்சியில் பங்கேற்கத் தொண்டர்களையும் திரட்டுவார்கள்—என்று தெரிவித்தார் பெரியார். அத்துடன் தமது சுற்றுப் பயணத் திட்டத்தையும் இறுதி

யாக உறுதி செய்து வெளியிட்டார். டிசம்பர் 12 புகலூர், 16 திருச்சியில் தென்பகுதி ரயில்வேத் தொழிலாளர் யூனியன் நீண்ட நாட்களாய் நடத்திவரும் பெரியார் பிறந்த நாள் விருந்தில் கலந்துகொள்வது, 17 கும்பகோணம், 21 திருவண்ணாமலை, 22 கந்திலி பஞ்சாயத்து யூனியனில் அண்ணா படத்திறப்பு, 23 வ. ஆ. திருப்பத்தூர்—காலை 11 மணிக்குப் பகுத்தறிவாளர் கழகத் துவக்கம்; மாலை பொதுக்கூட்டம், 28 இரும்புலிக்குறிச்சி, 29 உறையூர்.

"கழகத்தில் சதியா?" என்ற தலைப்பில், 'ஆசிரியருக்குக் கடிதம்' பகுதியில், 14–12–73 "விடுதலை"யில், ஒன்று பிரசுரமாகியிருந்தது. மயிலாப்பூரில் நடிகவேள் எம். ஆர். ராதா, வீரமணியைக் குறைகூறி வெளிப்படையாகப் பேசியதாகவும், ராதாவை முக்கியமாக வைத்து இரண்டொருவர் சேர்ந்து, 'பெரியார் திராவிடர் கழகம்' என ஒன்றை ஆரம்பிக்க முடிவு செய்திருப்பதாகவும், செ. துரைசாமி எழுதியிருந்தார். 16–ந் தேதி வில்லிவாக்கத்தில் பேசிய அமைச்சர் என்.வி. நடராசன், "பெரியாரின் பிரச்சினைதான் என்ன என்று அறியப் பிரதமர் இந்திரகாந்தி, பெரியாரைச் சந்தித்துப் பேசட்டுமே!" என்று கூறினார்; சமாதான தூதுவராகிய தமது இயல்பின்படி! முதல்வர் கலைஞர், 18-ந் தேதி கே.ஏ. மதியழகனைத் திரும்பவும் தி.மு.க.வில் ஏற்றுக் கொண்டதாகக் கூறினார். 20ந்–தேதி சென்னையில், "பெரியார் சொன்னது போல் நாங்களெல்லாம் பாஷாணத்தில் புழுத்த புழுக்கள். எங்களிடம் மிரட்டாதீர்கள். தாழ்த்தப்பட்டோர் ஒருவர் அய்.ஏ.எஸ். அதிகாரியாக வரலாம்; ஆனால் அர்ச்சகராக வரக்கூடாது என்றால் என்ன நியாயம்?" என்று கேட்டார் முதல்வர் கலைஞர். மலேசியா திராவிடர் கழகத் தலைவர் கே.ஆர். இராமசாமி, தமிழகம் வந்திருந்தவர் 19–12-73 அன்று, தந்தை பெரியாரையும், முதல்வர் கலைஞரையும் சந்தித்துப் பேசினார். பெரியாரின் புதுவேனில் பெட்ரோலுக்குப் பதில் டீசல் எண்ணெயில் ஓடுமாறு எஞ்சினை மாற்றிட உதவினார் அமைச்சர் ராஜாராம். 19–ந் தேதி அவர் தம்மைப் பார்க்க

வந்தபோது, "அய்யா வாங்க; திருச்சியிலிருந்து நான் இங்கு வர 300 ரூபாய் ஆகும் முன்னே, இப்போது 60 ரூபாயில் வந்துவிட்டேன். நன்றிங்க!" என்றார் பெரியார். ராஜா ராம் மிகுந்த உரிமைக் கோபத்துடன், யாரிடத்தில் இப்படி யெல்லாம் பேசுகிறீர்கள், என்று கடிந்து கொண்டார்.

19-12-73 அன்று பெரியார் சென்னையில் இருந்தார். அடுத்து 21-ந்தேதி திருவண்ணாமலை செல்ல வேண்டும். அன்று ஒரு நாள் ஏன் சும்மா இருக்க வேண்டும்? 12-10-1970-ல் தியாகராயநகரில் திடீர்ப்பிள்ளையார் பற்றிப் பெரியார் பேச இருந்த கூட்டம் ஒத்திவைக்கப்பட்டு, அந்தத் தோழர்கள் கூட்டத்திற்காகத் தந்திருந்த பணம் பெரியாரிடமே இருந்தது. இது பெரியாரின் மனத்தை உறுத்திக் கொண்டே இருந்து வந்தது போலும்! அதற்குத் திடீரென்று, இந்தப் பத்தொன்பதாந்தேதியை ஒதுக்கினார் பெரியார். மூன்றாண்டுகட்கு முன்னர் குறிப்பிடப்பட்ட அதே தியாகராயநகர் பேருந்து நிலையம் அருகில், அதே சிந்தனையாளர் மன்றத்தின் சார்பில், 19-12-73 அன்று, பெரியார் எனும் முதிர்ந்த போர்முரசம் அதிர்ந்தது. முத்து முத்தாய் உதிர்ந்தன கருத்துகள். விதிர்த்து நடுங்கியது வேதகால ஆதி மூடவைதிகம்!

பேருரை தொடங்குகிறது:—"பேரன்புமிக்க தலைவர் அவர்களே! தாய்மார்களே! பெரியோர்களே!

இன்றையதினம் இந்த இடத்திலே, சமுதாய இழிவு ஒழிப்பு சம்பந்தமாகச் சென்னையில் 10 நாட்களுக்கு முன்னால் நடந்த மாநாட்டுத் தீர்மானத்தை விளக்கவும், மற்றும் நம்முடைய கடமைகளை எடுத்து விளக்கவும் இக் கூட்டம் ஏற்பாடுசெய்யப்பட்டது. அதன்படிப் பேரறிஞர்கள் பலர் அத்தீர்மானங்களை விளக்கியும், மற்றும் பல நல்ல அரிய விஷயங்களையும், எலலாம் நல்ல வண்ணம் எடுத்து விளக்கினார்கள். என்னையும் ஒரு முக்கியப் பேச்சாளனாக இதிலே குறிப்பிட்டு இருக்கிறபடியினாலே, நானும் சில வார்த்தைகள் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்.

தோழர்களே! நான் பேச்சுத் துவக்குவதற்கு முன்பாக, நமது நண்பர் உயர்திரு வீரமணி அவர்கள், நம்முடைய கழக லட்சியச் சொல்லை விளக்கினார்கள்! நானும் விளக்கும்படிக் கேட்டுக் கொண்டேன். அதிலே நம் கழகத் தோழர்களுக்கு ஒன்றும் கஷ்டம் இருக்காது. புதிதாக வருபவர்களுக்கும், பகுத்தறிவைப் பற்றிக் கவலைப்படாமல் மூடநம்பிக்கையில் மூழ்கிக் கிடக்கிறவர்களுக்கும் கொஞ்சம் சங்கடம் ஏற்பட்டு இருந்தாலும் இருக்கலாம்; என்னடா, கடவுளை இப்படி எல்லாம் சொல்லுகிறான்—என்று, கடவுளைச் சொல்லுகிறதோடு இருக்காமல் கடவுளை நம்புகிறவர்களைக்கூட முட்டாள் பயல் என்று சொல்லுகிறானே—இது என்னடா? என்று சிலபேருக்குக் கோபம் வரலாம்.

கடவுள் சங்கதியை எடுத்தால் ஒருவனுக்கு ஒருவன்—நம்பிக்கைக்காரனும் நம்பிக்கை இல்லாதவனும்—அவனை இவன் முட்டாள் என்று சொல்லியாகணும், இவனை அவன் முட்டாள் என்று சொல்லித்தான் ஆகணும். ஆனாலும், நாங்கள் பகுத்தறிவை அடிப்படையாக வைத்துக் கடவுள் சங்கதி பேசுகிறதினாலே, கொஞ்சம் மரியாதையாக மானத்தோடு பேசுவோம். பகுத்தறிவு இல்லாதவர்கள் கொஞ்சம் கடுமையாகத்தான் பேசுவார்கள்; நம்மைவிட மோசமாக!

உதாரணமாகச் சொல்லுவேன், நாலாயிர திவ்யப் பிரபந்தம் பாடிய ஆழ்வார்கள், தேவார திருவாசகம் பாடிய நாயன்மார்கள் இவர்களைவிடக் கேவலமாக நாங்கள் சொல்லுவதில்லை; இதை மனத்திலே வையுங்கள். நாங்கள் இவனையோ, இவன் புத்தியையோதான் திட்டுவோம். இவனோ அவர்களது பெண்டாட்டி பிள்ளைகளையெல்லாம் திட்டுகிறான். தொண்டரடிப்பொடி ஆழ்வார் என்பவன், கடவுள் இல்லை என்கிறவனை எல்லாம் வெட்டு, வெட்டு என்கிறான். பாட்டிலேயே இப்படி என்றால், காரியத்திலே எப்படி? தேவாரம் பாடினானே சம்பந்தர் என்பவன், கடவுள் இல்லை என்கிறவன் பெண்டாட்டியுடன்

நான் சேரணும். "இசைத்து வை" என்று கடவுளையே கேட்கிறான். இவன் பக்தனாம், அயோக்கியப் பயல்!

கடவுளைப் பற்றி அறிவைக்கொண்டு ஆராய்ந்து பாருங்கள்; சிந்தியுங்கள் என்றுதான் சொன்னான் புத்தன். அவனை வெட்டி, தலை வேறு முண்டம் வேறாகக் குவித்தார்கள். எல்லாமே கோயிலிலே சிற்பமாகச் சித்திரமாக அடித்து வைத்திருக்கிறானே. இன்னொரு அயோக்கியக் கூட்டம் சைவர்கள், 8,000 பேரைக் கழுவிலே நிர்வாணமாக்கி ஏற்றினார்கள் சமணர்களை, இதற்கும் புராணம் எல்லாம் இருக்கிறது.

மற்றும் இன்றைய தினம் அரசியலிலே இருக்கிற அயோக்கியர்களோ, அரசியல் சட்டம் செய்த காலத்திலே நம்மையெல்லாம் தாசிமக்கள், சூத்திரர்கள் என்று எழுதினார்கள். இந்தியாவில் உள்ள கிறிஸ்தவன், முஸ்லீம், பார்சி தவிர மற்றவனெல்லாம் இந்துவாம். இந்துவிலே 100க்கு 2½ பேராக இருக்கிற பார்ப்பான் தவிர, பாக்கி 97½ பேரும் பார்ப்பானுக்கு வைப்பாட்டி மக்கள் என்று சட்டத்திலே எழுதி வைத்திருக்கிறான். என்ன காரணம்? அவனைத் திருப்பிக் கேட்காதது தான் காரணம்!

நமது பெண்டு பிள்ளைகளை விட்டு, அரசியல் சட்டத்தைத் தெருவிலே போட்டுச் சீவுகட்டையால் குத்தினால், ஏன் என்று கேட்பானல்லவா? அப்போது சொல்லுங்கள்; சும்மா கேட்டுச் சிரித்து விட்டுப் போவதால் என்ன பயன்? இது 2,000 வருஷமாய் இருக்கிறது, ஈனசாதி என்று. முஸ்லீம்களில் ஈனசாதி கிடையாது. ஒருவனுக்கொருவன் தொட்டுக் கொள்வான். ஒரே பீங்கானில் சாப்பிடுவான், எச்சில் கிடையாது. அவ்வளவு சகோதரத்துவம் அந்த மதத்தின் தன்மை. கிறிஸ்தவனும் கவலைப்படமாட்டான். சாதி என்று ஒருவனைக் குறைசொல்ல மாட்டான். பார்ப்பானும் அதே மாதிரி தங்களுக்குள்ளே மேல்சாதி கீழ்ச்சாதி கிடையாது; எல்லாரும் ஒஸ்தி. நாம் எல்லோரும்தான் அவனுக்குத் தேவடியாள் மக்கள். இப்படி இருக்கக் காரணம் என்ன?

நண்பர்கள் சொன்னார்களே, அதுபோல, நாம் இந்த 50 வருஷமாய் உழைத்ததிலே .ஏதோ கொஞ்சம் மாறுதல், நம் எதிரிலே சூத்திரன் என்று சொல்ல மாட்டான். வீட்டிலே எல்லாம் 'இந்த சூத்திரப் பயல்கள்' என்றுதான் பேசுவான். நாம் இந்த இழிவிலே இருந்துதான் நீங்கணும். சட்டத்திலே இருக்கிறதை என்ன பண்ணுகிறது? ஏதோ நாங்கள் கொஞ்சம் உணர்ச்சியோடு இருக்கிறோம். எங்களைத் தவிர நாதி இல்லையே இந்த நாட்டில்! எத்தனை நாளைக்கு நாம் இப்படியே கட்டிக் காத்துக்கிட்டு இருப்போம்? நாம் ஒழிந்தால் நாளைக்கே மாற்றிவிடுவானே!

நம்முடைய கலைஞர் கருணாநிதி அவர்கள், 'கல்தானே! யார் வேண்டுமானாலும் பூசை பண்ணலாம். ஆனால் முறைப்படி செய்யணும்' என்று, யாவருக்குமே அனுமதி கொடுத்தார். பார்ப்பான் கோர்ட்—சுப்ரீம் கோர்ட் என்றால் பார்ப்பான் கோர்ட்தான்—பார்ப்பனத்தியால் நியமிக்கப் பட்டவர்கள்—கோயிலுக்குள்ளே போகிறது சாஸ்திரவிரோதம்—ஆகமப்படி செய்ய வேணும் என்றார் களே—எந்த ஆகமத்தை, எவன், எப்போது, எழுதினான்? யாருக்காவது தெரியுமா? எழுதியவனுக்கு வயது என்ன? யாராவது சொல்ல முடியுமா?

நாம் மிகப்பெரிய சமுதாயம். நாம் எவ்வளவு முன்னுக்கு வரவேண்டியவர்கள். நாதியற்றுப் போய்க் காட்டுமிராண்டி யாக அல்லவா இருக்கிறோம்! வெள்ளைக்காரனைப் பாருங்கள்! நாம் வேட்டி கட்டிகிட்டு இருந்தபோது, அம்மணமாய்த் திரிந்தவர்கள், ஆகாயத்துக்கு மேலேபோய், சந்திரனில் அல்லவா உட்கார்ந்து விட்டு வருகிறார்கள்! இன்னும் அவர்கள் செய்கிற அதிசய அற்புதங்களைப் பார்த் தால், உங்களுக்குப் புரியக்கூடப் புரியாதே!

அருமைத்தோழர்களே! இப்போது நமக்கு மான உணர்ச்சி வேணும்; இழிவு நீங்கவேணும். அப்புறம் மேலே போகலாம்; போகணும். சுயமரியாதை இயக்கம் வராதிருந் தால் நமக்குப் படிப்பு ஏது சொல்லுங்கள்! 100க்கு 10 பேர் கூடப் படிக்க வில்லையே! நாம் தான் ஆரம்பித்தோம்

அறிவைப்பற்றி! சுயமரியாதை. இயக்கம் ஆரம்பித்தபோது, அதற்கு என்ன கொள்கை தெரியுமா? அய்ந்து கொள்கைகள்:—1. கடவுள் ஒழியணும், 2. மதம் ஒழியணும், 3. காந்தி ஒழியணும், 4. காங்கிரசு ஒழியணும், 5. பார்ப்பான் ஒழியணும். அன்றுமுதல் இன்றைய வரைக்கும் இந்த 5 கொள்கைகள்தான் நடக்கின்றன.

காந்தியை ஒழித்துப் போட்டார்கள். காங்கிரசும் ஒழிந்தது. அது இனிமேல் உருப்படியாகாது. கடவுளும் தெருவிலே சிரிப்பாய்ச் சிரிக்கிறார். அதுதான் வீரமணி சொன்னாரே, கடவுளையே செருப்பால் அடித்தார்கள் என்று. என்ன ஆயிப்போயிற்று? கடவுளைச் செருப்பாலே அடித்தான். அதனாலே ஓட்டுப் பண்ண வேண்டாம் என்று காமராஜர் முதற்கொண்டு தப்பட்டை அடித்தார்களே— என்றைக்கும் வாராத அளவுக்கு மேலே வந்து விட்டார்கள்! முன்னேற்றக் கழகத்துக்காரன் 185 பேர். அவர்களை ஆதரிக்கிறவர்கள் 20 பேர். காங்கிரஸ் காந்தி கடவுள் வெங்காயம் எல்லாம் சேர்ந்து 20 பேர் கூட வரவில்லையே! ஆனதனாலே, மக்கள் அறிவு பெற்றுக் கொண்டுதான் வருகிறார்கள். பயன்படுத்திக் கொள்ளவேணும்; அவர்களுக்கு விஷயங்களை எடுத்துச் சொல்லணும், தெரியாது வெகுபேருக்கு.

தீண்டாமை இல்லை என்று சட்டத்திலே எழுதிப் போட்டான். ஆனால் மதத்திற்கு மாத்திரம் உண்டு என்று அதிலே ஓர் நிபந்தனை. அதே மாதிரிதான், எல்லாருமே கோயிலுக்குப் போகலாம் என்று சட்டமே பண்ணினால், அந்தச் சட்டம் செல்லாது என்று ஆகிவிட்டதே! இவை போலத்தானே சாஸ்திரத்திற்கு விரோதமாய் இருக்கிற எந்தக் காரியமும் னிமேல் செல்லாது என்று வரும்?

ஆகவே இதை மாற்றியாகணும்; பெரிய முயற்சி பண்ணணும். அரசியல் சட்டம் என்றால், ஓர் அரசாங்கம் நடத்துவதற்கு அது வேண்டியதுதான், ஒத்துக்கொள்கிறேன். ஆனால் அரசாங்கம் நடக்கிறதற்கு சூத்திரன்

இருக்க வேணுமோ, பார்ப்பான் இருக்க வேணுமோ? மனுஷன் தானே இருக்கவேணும்!

நேற்று நடந்த மாநாட்டுக்கு வேறே கட்சிக்காரர்களுடைய ஆதரவு ஒன்றும் வரவில்லையே! வரலாம் அல்லவா? டெல்லிக்காரன் சி.அய்.டி.யை வேறு போட்டு விட்டான்; அதைப் பார்த்து, வேறு கட்சிக்காரர் ஒருவருமே வரவில்லை! இழிவு ஒழிய வேணும் என்றால், இழிவுக்கு ஆளானவன் எல்லாரும் வரணுமே, வந்து உதவிசெய்ய வேணுமே; எங்களோடு சேர்ந்தால் ஒட்டுப் போய்விடுமோ என்று பயப்படுகிறார்கள். மானம் போவது பற்றி யாருக்கும் கவலையில்லையே! நாம் முன்னேற்றம் அடையணும். பள்ளத்திலே கிடக்கிறோம்; முதலில் எழுந்து நிலமட்டத்து வரணும். அப்புறம் மேலே ஏறணும். யாரும் கவனிக்கவில்லை. ஆனால், நாங்கள் ஒன்று போனால் ஒன்று, ஏதோ செய்து கொண்டே இருக்கிறோம்!

நம்முடைய கடவுள் என்கிறான், நம்முடைய மதம் என்கிறான், நம்முடைய சாஸ்திரம் என்கிறான், நம்முடைய மனு தர்மம் என்கிறான், என்ன என்று தெரியாது. ரூபாய்க்கு எத்தனை படி என்று கேட்போம். ஒன்றுமே தெரியாமல், ஏன் என்ன எப்படி என்று கேட்காமல், எல்லாம் நம்முடையது என்று அவன் சொல்லுவதால், அடிமையாக இருந்து, ஏற்றுக் கொள்ளுகிறோம்.

இப்போது நாங்கள் வந்து, இந்தப் பிரச்சினையிலே, கடவுளைக் கும்பிடாதீர்கள் என்று சொல்லவில்லை. கடவுள் இருக்கிறதாக நினைக்காதீர்கள் என்று சொல்லவில்லை. நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள். கடவுள் என்றால் என்ன என்று சொல்லுங்கள்—அவ்வளவுதான் நாங்கள் சொல்லுகிறோம். ஒன்றுமேயில்லாமல், எந்த முட்டாளே சொன்னான் என்பதற்காக, மரம் மட்டை பாம்பு பல்லி வரையில் கடவுள் என்றால், அது முட்டாள் தனம், பைத்தியக்காரத்தனம் ஆகாதா? இவ்வளவும் பண்ணியும் இன்னும் தேவடியாள் மகன் என்ற பட்டம் நம் தலைமேல் அல்லவா இருக்கிறது!

ஆகவேதான், எந்தச் சங்கதி எப்படி ஆனாலும், இப்போது நாம் ஆரம்பித்துள்ள இழிவு ஒழிப்புக் கிளர்ச்சிக் காரியம் மிகவும் ஞாயமானது என்பதற்கு, நான் உங்களுக்கு ஒன்று சொல்லுகிறேன். இப்போது மகாநாடு நடந்து 10 நாள் ஆகிவிட்டது. பத்தாயிரங் கணக்கிலே மக்களும், 30க்கு மேலே பத்திரிகைக்காரர்களும் வந்தார்கள். சேதி பரவி விட்டது. யாராவது இதுவரையில் எதிர்த்துப் பேசினார்களா? இல்லை, நாம் பண்ணினது அவ்வளவு நேர்மையான காரியம். எவன் சொல்லுவான் நான் தேவடியாள் மகனாகத் தான் இருக்கணும் என்று? நாம் தயாராய் இருக்கிறோம். அப்புறம் அவன் பரிகாரத்துக்கு வரணும். நீ போப்பா வெளியே! உனக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? நீ 2,000 மைலுக்கு அப்பால் இருக்கிறாய்; உன் பேச்சு வேறே; உன் பழக்க வழக்கம் வேறே, உன் நடப்பு வேறே!

(இந்த இடத்தில் பெரியாருக்கு நோய்க் கொடுமை மிகுந்தது. வலி பொறுக்க முடியாமல் சிறிது நேரம் ம்.ம். அம்மா. ஆ.ஆ. அம்மா. என்று துடிக்கிறார். பின் இயல்பாகப் பேசுகிறார்.)

நீ மரியாதையாகப் போய்விடு. ரகளை வேணாம். நீ இல்லாவிட்டால் எங்களுக்கு என்ன நஷ்டம்? உப்பு இல்லையா, தண்ணி இல்லையா, காடு இல்லையா, மலை இல்லையா, நெல் கம்பு விளையவில்லையா? நீ எங்களுக்கு இதுவரை பண்ணின நன்மை என்ன? மரியாதையாகப் போ.

இவ்வளவுதானே நாம் சொல்லப் போகிறோம்? 2~ந் தேதி ஆரம்பிப்போம். மளமளவென்று சொல்கிறபடி நடக்கணும். நாம் கலகத்துக்குப் போக மாட்டோம். எவனையும் கையாலே தொட மாட்டோம். அடித்தாலும் பட்டுக் கொள்வோம்; திருப்பி அடிக்கமாட்டோம். ஆனதனாலே, நீங்கள் விஷயங்களைத் தீவிரமாய்க் கவனிக்க வேணும். நான் சொல்கிறேன் என்று கேலி பண்ணாதீர்கள். "நீ என்ன நாளைக்குச் சாகப் போகிறவன்தானே, துணிந்து வந்திருப்பாய்' என்று. நானே பண்ணவேணும் என்று இல்லை, நீங்கள் பண்ண வேண்டிய காரியத்தைத்தானே

நான் செய்கிறேன். நாம் எல்லோருமே பாடுபட்டதாகத் தெரியணும்.

நாம் எடுத்துக் கொள்கிற முயற்சியினாலே, நாம் செய்கிற தியாகத்தினாலே, மற்றவன் வருவான் நம்கூட. 5,000 பேர் 10,000 பேர் ஜெயிலிலே இருக்கிறார்கள் என்றால், ஏனடா இருக்கிறார்கள்? என்று கேட்பான் அல்லவா? பார்ப்பானுடைய தேவடியாள் மகன் என்று இருக்கிறதுக்கு இஷ்டமில்லை என்று ஜெயிலில் இருக்கிறார்கள் என்றால், அவனும், அடேடே; நம்ம சங்கதி என்ன? என்று கவனிப்பானல்லவா? மலையாளிக்கே இப்போது உணர்ச்சி வந்து விட்டது; நானும் சேர்ந்து கொள்கிறேன் என்று எனக்கு எழுதியிருக்கிறான். பிறகு, தெலுங்கனும் கன்னடியனும் கவனிப்பான். ஒவ்வொருவனுக்கும் உணர்ச்சி வந்து ஆகணுமே!

தமிழ் நாடு தனியாகப் பிரிந்தால், ஒரு பத்து வருஷத்துக்குள்ளாக நாமெல்லாம் 100 வயது வாழ்வோம். ஒவ்வொருவரும் தனித்தனியே இறக்கை வைத்துக் கொண்டு பறப்போம். பெண்கள் இந்திரியம் ஒரு டப்பியிலே, ஆண்கள் இந்திரியம் ஒரு டப்பியிலே பேங்க்கிலே வைத்திருந்து, என்றைக்குப் பிள்ளை தேவையோ அன்றைக்குக் கலந்து, குஞ்சு பொரிப்பது போல் பிள்ளை பெறலாம். எல்லாம் நடக்குமா, நடக்காதா? தமிழன் இந்தியாவிலேயே முதல் நம்பராயிருப்பான். இந்தியாவுக்கே வழி காட்டக்கூடிய சக்தி உடையவனாகிவிடுவான்.

ஆகவே நாங்கள் உங்களை ஏய்க்கிறதற்காகப் பொய்யையும், பித்தலாட்டத்தையும், இட்டுக் கட்டிப் பேசவில்லை. நாங்கள் எதையும் சுயநலத்திற்காகச் சொல்லவில்லை. 2,000, 3,000, வருஷங்களுக்கு முன்னே, மனிதன் மடையனாய் இருந்த காலத்தில் கற்பித்த கடவுளையும், புராணங்களையும், கற்பனைக் கதைகளையும், இந்து மதத்தையும், ஜாதி அமைப்புகளையும் இன்றைக்கும் நம்ப வேண்டுமென்று எதிர்பார்க்கலாமா? நாங்கள் எல்லா

ஆதாரங்களையும் கையில் வைத்துக் கொண்டுதான் இப்படிப் பேசுகிறோம்!

எனவே, அருமைத் தோழர்களே! நேரமாயிற்று. மணி 10க்கு மேல் ஆகிவிட்டது. ஏதோ எனக்குத் தோன்றியதைச் சொன்னேன். முக்கியமாய்ச் சொன்னதனுடைய கருத்தெல்லாம் நாளைக்கு நடக்கப் போகிற கிளர்ச்சியைப் பற்றி. அதனுடைய தத்துவம், என்ன? அவசியம் என்ன?—என்கிறதை விளக்கினோம். நம் கடமை என்ன என்கிறதை நீங்கள் சிந்திக்க வேணும்.

உங்கள் கடமை என்றால், உங்கள் ஒருவரைப் பொறுத்ததல்ல. தமிழர் என்று சொல்லுகிற நாம் இத்தனைக் கோடி மக்களையும் பொறுத்தது. பிறகு நாம் வட்டியும் முதலுமாய் உயரலாம். ஒன்றும் தேங்கிப் போகாது நம் நாட்டு முன்னேற்றம்—என்று உங்களை வணக்கத்தோடெல்லாம் கேட்டுக்கொண்டு, இந்த ஏற்பாடு பண்ணி, இவ்வளவு நேரம் பொறுமையாய் இருந்ததற்கெல்லாம், என்னைக் காது கொடுத்துக் கேட்டதற்கு, என்னுடைய மனப்பூர்த்தியான நன்றியறிதலைத் தெரிவித்துக் கொண்டு, என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.—

வணக்கம்!''

கூட்டம் முடிந்து இல்லந் திரும்பினார் பெரியார். படுக்கச் சென்றவருக்கு வலி அதிகமாக இருந்திருக்கிறது. நள்ளிரவுக்கு மேல் சுமார் 2–30 மணியிலிருந்தே தாங்க முடியாமல் இருந்த நோயை, மிகவும் சிரமப்பட்டுத் தாங்கிப் பொறுத்துக் கொண்டு, பொழுது விடிந்த பிறகு சொல்லலாம்; அதற்குள் ஏன் பிறரைத் தொந்தரவு செய்யவேண்டும் என்று எண்ணியிருக்கிறார். ஆனால் 4–30 மணியளவில், வலி அவரது சக்திக்கும் பொறுமைக்கும் மீறிப் போனதால், மெல்லத் தயக்கத்துடன் வெளியில் சொன்னார். உடனே டாக்டர் கே. ராமச்சந்திராவுக்கு ஃபோன் செய்து வரவழைக்கப்பட்டார். டாக்டர் சரத் சந்திராவும் வந்து பார்த்தார். அதன் பிறகு பிற்பகல் 3 மணிக்குப் பெரியார்

சென்னை அரசினர் பொது மருத்துவமனையில் சேர்க்கப் பட்டார்.

திருவண்ணாமலைக்கு 21-ந்தேதி வர இயலாதென்று தந்தி கொடுத்துவிடலாம் என்று வீரமணியும் சம்பந்தமும் சொன்ன போது "அதெல்லாம் கூடாது. நீங்களா பேசப் போகிறீர்கள்? நான்தானே! அவசியம் போக வேண்டும்!" என்றார் பெரியார்.

"மருத்துவமனையில் தந்தை பெரியார். சென்னை டிசம்பர் 21. நேற்று காலை முதல் இரணியா நோய்த் தொல்லையால் அவதிப்பட்ட தந்தை பெரியார் அவர்கள், முதலில் சென்னை பொது மருத்துவமனையில் சேர்க்கப் பட்டார்கள். பின்னர், இன்று அவர்களின் விருப்பப்படியே, வேலூரில் சி. எம். சி. மருத்துவமனையில் அனுமதிக்கப்பட் டுள்ளார்கள். டாக்டர் எச். எஸ். பட் அவர்கள், பெரியார் அவர்களுக்கு ஓய்வு தேவை என்று கூறுவதால், திருவண்ணா மலை, இருப்பத்தூர் நிகழ்ச்சிகள் ஒத்திவைக்கப்படுகின்றன. தோழர்கள் பொறுத்தருள வேண்டும்"—இதுதான் முதலில் வெளியான செய்தி. டிசம்பர் 22-ம் நாள் பெரியாருக்கு வலி குறைந்து உடல் நிலை தேறி வருகிறது என்று தகவல் தரப் பட்டது.

ஆனால் 22-12-73 இரவு பெரியாருக்கு வலி மிகுந்து விட்டது. தூக்கமில்லாமல் அவதிப்பட்டார். டாக்டர் பட்டும், டாக்டர் ஜான்சனும் அருகிலேயே இருந்து கவனித் தனர். இரவு 1 மணிக்கு டாக்டர் கே. ராமச்சந்திரா சென்னையிலிருந்து வந்து சேர்ந்தார் வேலூருக்கு. மூச்சுத் திணறல் இருந்தது. 4 மணி வரை தொடர்ந்து சிகிச்சை செய்தனர். குறைவதும், மிகுவதுமாயிருந்தது. இந்தச் செய்தி 23 காலை, பத்திரிகைகளில் வந்தது.

23-12-73 ஞாயிற்றுக்கிழமை; சிறிது ஓய்வாக இருந்து வரலாம் என்று முதல்வர் கலைஞர் அப்போதுதான் மாமல்ல புரம் போய்ச் சேர்ந்திருப்பார்; அமைச்சர் ராஜாராம் சென்னையிலிருந்து தொலைபேசி வழியே அழைத்தார். கருணானந்தம் அவரோடு பேசினார். இணைப்பு சரியா

யில்லாததால் தெளிவாகப் பேச இயலவில்லை. ஒன்று மட்டும் புரிந்தது, ராஜாராம் சொன்னதில்; பெரியாருக்கு வேலூரில் சீரியஸ் என்று. அடுத்த வினாடியே சென்னை திரும்பி, அமைச்சர்கள் ப. உ. சண்முகம், க. ராஜாராம், மற்றும் ஆர்க்காடு வீராசாமி, கருணானந்தம் ஆகியோருடன் முதல்வர் வேலூர் விரைந்தார். மதியம் 2 மணிக்குப் பெரியார் நினைவிழந்த நிலையிலேயே காணப்பட்டார். பிராணவாயுக் குழாய்கள் பொருத்தப்பட்டிருந்தன. அருகில் மணியம்மையார், வீரமணி, சம்பந்தம், ஈ. வெ. கி. சம்பத் இருந்தனர். இரவு சென்னைக்குத் திரும்பி வரும்போது, கலைஞர் முகம் சோகத்தாலும், நம்பிக்கையின்மையாலும் களைத்துப் போயிருந்தது.

94-ஆவது வயதில் 98 நாட்கள் உயிர் வாழ்ந்த பெரியார் ஈ. வெ. ராமசாமி 24-12-1973 காலை 7-22 மணிக்கு உலக மக்கள் இதயமெல்லாம் நிறைந்தார். நேற்று திருச்சியி லிருந்தார். இன்று சென்னையிலிருக்கிறார். நாளை வேலூரிலிருப்பார் என்று இடங் குறிப்பிட்டு இனிமேல் சொல்ல இயலாதவாறு, அங்கு இங்கு என்னாதபடி, எங்கும் பிரகாசமாய், ஆனந்தம் பூர்த்தியாகி, அருளோடு நிறைந் தார்.

வானொலி நிலையம் அவல இசையை ஒலிபரப்பியது. உடனடியாக வேலூரிலும், தமிழகத்திலும் காட்டுத் தீயெனச் செய்தி பரவிற்று. முற்பகல் முழுதும் வேலூரில் மக்கள் அலை அலையாய்த் திரண்டு வீரவணக்கம் செலுத்தி னர். மாலையில் சென்னை கொண்டுவர ஏற்பாடு. முதல்வர் கலைஞர் தலைமைச் செயலாளருடன் கலந்தாலோ சித்தார். அரசு விடுமுறை அறிவிக்கவும், பெரியாரின் உடலைச் சகல அரசு மரியாதைகளுடனும் அடக்கம் செய்ய வும் விழைந்தார். 'பெரியார் உண்மையிலேயே பெரிய தலைவர்தான் என்பதில் யாருக்கும் மாறுபட்ட கருத் தில்லை; ஆனால் எந்தக் காலத்திலும், அவர் அரசாங்கத்தில் சிறு பதவியும் வகித்ததில்லையே! அவருக்கு அரசு மரியாதைகள் தர விதிகள் இடந்தராதே?' என அதிகாரிகள்

அய்யமுற்றனர். "இப்படித்தான் செய்தாக வேண்டும்! இதனால் எந்த விளைவுகள் நேர்ந்தாலும் நான் சந்திக்கத் தயார்!" என்று தமது முடிவினையே ஆணையாக்கிவிட்டார் முதலமைச்சர். பிறகென்ன?

கருப்புக் கட்டமிட்ட தனி அரசிதழ் (அடுத்த பக்கம்) Black bordered special gazette வெளியிடப் பெற்றது. பெரியார் மறைவு குறித்து, அரசு விடுமுறையும் அறிவிக்கப் பட்டது. தமிழ்நாட்டில் மட்டுமல்ல; புதுவை அரசால், புதுச்சேரி மாநிலத்திலும்! காஞ்சிபுரம், கடலூர், புதுவை போன்ற நகரங்களிலும் மற்றும் பல ஊர்களிலும், செய்தி கேள்வியுற்றதும், வணிக நிலையங்கள் மூடப்பட்டன மரியாதை தெரிவிக்க. 24-ந் தேதி முற்பகலில் இராஜாஜி மண்டபம் பெரியாரை வரவேற்கத் தயார்ப்படுத்தப் பெற்றது. பெரியார் திடலிலும், பெரியாரின் சடலம் அடக்கம் செய்யப்படும் இடம் எது என்று, அமைச்சர் பெரு மக்கள் தேர்ந்தெடுத்தனர்.

பெரியாரின் அரவணைப்பில் வாழ்ந்துவரும் "விடுதலை" மாதத்தில் பாதி நாள் அவரெழுத்தால் நிறைந்திடும் தனது தலையங்கப் பகுதியை வெண்மையாக்கிக், கருப்புக் கட்டத்துடன், 24-12-73, 25-12-73 இருநாட்களும் துக்கம் அனுசரித்துத், தனது 26-ந் தேதி வெளியீட்டை நிறுத்தியே வைத்தது, விடுமுறை என்பதாக!

தமிழ் நாடே சென்னைக்கு விரைந்தது. ரயில்களில் கூடுதல் பெட்டிகள் இணைக்கப்பட்டன. பஸ்கள், லாரிகள், கார்கள் நிறைந்தன; பறந்தன சென்னை மாநகரம் நோக்கி. 24 மாலையில் தொடங்கி 25 மாலை வரை, 24 மணி நேரத்தில், சுமார் 205 பேர் நிமிடத்துக்கு என்ற கணக்கில், மக்கள் இராஜாஜி மண்டபத்துக்கு வந்து, தந்தை பெரியாரைக் கண்டு சென்றனர். தமிழ்நாடு அரசின் செய்திப்படத் துறையினர் அனைத்தையும் சுருள்களில் அடைத்தனர். பெரியாரின் ஆஸ்தான புகைப்படக்காரர்

தமிழ்நாடு அரசு 1973



பதிவெண் : எம் 1
(விலை 4 பை)


# தமிழ்நாடு அரசிதழ்

## சிறப்பு வெளியீடு

## ஆணைப்படி வெளியிடப்பட்டது


எண் 2 சென்னை, திங்கட்கிழமை 1973ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 24ஆம் நாள்
[மார்கழி 10 பிரமாதீச (2004 - திருவள்ளுவர் ஆண்டு)]


## பகுதி II - பிரிவு I

அரசாங்க அறிவிக்கைகளின் தமிழ் மொழிபெயர்ப்பு
பொதுத் [அரசியல்] துறை

### பெரியார் திரு. ஈ. வெ. ராமசாமி அவர்கள் மறைவு

**அரசு ஆணை எண் 3398** நாள் :—24-12-73

இந்திய நாட்டின் தலைசிறந்த சமுதாய சீர்திருத்த வாதியான பெரியார் – திரு. ஈ. வெ. ராமசாமி அவர்கள் வேலூரில் 24—12—1973ஆம் நாள் காலை 7-40 மணி யளவில் இயற்கை எய்தினார் என்பதை தமிழ்நாடு அரசு மிகுந்த வருத்தத்துடன் தெரிவிக்கின்றது. சமுதாயத் தளைகளையும், சாதி வேறுபாடுகளையும் நீக்குவதில் அவர் ஆற்றிய அரும்பணியை அரசு பெரிதும் பாராட்டு கிறது. மறைந்த தலைவருக்கு மரியாதை செலுத்தும் முறையில் இன்று துக்க நாளாக அனுசரிக்கப்படுமென் றும், பொது விடுமுறை என்றும் அரசு அறிவிக்கின்றது.

தமிழ்நாடு அரசு அலுவலகங்களும், கல்வி நிலை யங்களும் இன்று மூடப்பட்டிருக்கும். தேசியக் கொடிகள் இன்றும் (24—12—73), நாளையும் (25—12—73) அரைக் கம்பத்தில் பறக்கும். 25—12—73 அன்று இறுதி ஊர் வலம் சென்னையில் நடைபெறும்.

(ஆளுநரின் ஆணைப்படி.)

ப. சபாநாயகம்
தலைமைச் செயலாளர்

களான குருசாமியும், சுந்தரமும் Photogenic ஆன பெரியாரை ஆசைதீரப் படமெடுத்தனர்.

டிரக் வண்டியில் சற்று உயர்த்திச் சாய்வாக அமைக்கப் பட்ட மேடையில், பெரியார் படுத்திருக்க, இருமருங்கிலும் மணியம்மையார், வீரமணி, கலைஞர், நாவலர், என். வி. நடராசன், ஈ. வெ. கி. சம்பத் அமர்ந்திருக்க, வாழ்க்கையின் எல்லா அம்சங்களிலும் Punctuality கடைப்பிடித்த பெரியாரின் இறுதி ஊர்வலம், 25–12–73 மாலை 3 மணிக்கு இராஜாஜி மண்டபத்திலிருந்து கிளம்பிச் சரியாக 4-55 மணிக்குப் பெரியார் திடலை அடைந்தது. டிரக் வண்டியின் முன்னால், மலர் தூவிய வண்ணம் தோழர்கள் சென்றனர். தாய்மார்கள் கரங்களில், பாதி இறக்கிக் கட்டப்பட்ட கருங்கொடிகள், தாழ்த்திப் பிடிக்கப்பட்டிருந்தன. ஊர் வலத்தின் முன்னே அமைச்சர் பெருமக்கள், தலைவர்களான காமராஜர், ம. பொ. சி. போன்றார், நடிகவேள் எம். ஆர். ராதா, புரட்சி நடிகர் எம். ஜி. ஆர்., நடிகர் திலகம் சிவாஜி கணேசன் ஆகியோர் நடந்து சென்றனர். பல்லாயிரக்கணக் கான மக்கள் "அய்யா அய்யா" எனக் கதறி அலறி அழுது அரற்றினர்.

சரியாக 4–57 மணிக்குப் போலீசார் 36 குண்டுகள் வெடித்துத், துப்பாக்கியைத் தலை கீழாகப் பிடித்திட, போலீஸ் பேண்ட் சோக கீதம் இசைக்க, தேக்கு மரப் பெட்டி யில் பெரியாரின் தேகம் வைக்கப்பட்டது. பெரியாரின் கண்ணாடியைக் கழற்றிக் கலைஞர் வீரமணியிடம் தந்தார். தேக்குப் பெட்டியின் மூலைகளில் கட்டப்பட்டிருந்த கயிறு களை சம்பத், காமராஜ், கலைஞர், வீரமணி ஆகியோர் பிடித்துக் குழியில் இறக்கினர். காட்சி காணச் சகியாத கலைஞர் கோவென்று கதறியழக், காமராஜர் ஓடி வந்து, அணைத்துப் பிடித்து ஆறுதல் கூறினார். பெரியார் திடலில் நடைபெற்ற இத்தனையும் அண்மைத் தொலைக் காட்சி (close circuit T. V.)யில் காட்டப்பட்டதால் வெளியிலுள்ள பல்லாயிரம் மக்களும் நேரில் கண்ட நிறைவு பெற்றனர். டாக்டர் வா. செ. குழந்தைசாமியின் கவிதை வரிகள்

| ஒலி | காட்சி |
|---|---|
| தந்தை பெரியார் என்று, தமிழகத்தின் கோடிக்கணக்கான மக்களால், அன்புடன் அழைக்கப்படும் அய்யா மறைந்துவிட்டார், அம்மவோ! என்னே இயற்கையின் கொடுமை! | ராஜாஜி ஹாலில் உடல் கொண்டு வந்து வைக்கப்படுவது. |
| கடந்த 19-12-73 அன்று மாலை சென்னைதியாகராய நகரில் நடைபெற்ற மாபெரும் பொதுக் கூட்டத்தில் அய்யா உரையாற்றினார். | பெரியார் பொதுக்கூட்டத்தில் பேசும் காட்சிகள். |
| தமிழ்மக்களைக் கண்ணீர்க் கடலில் தத்தளிக்க விட்டு, 24-ம் நாள் காலை இயற்கை எய்தினார். | ராஜாஜி ஹாலில், மக்கள் சாரை சாரையாய் வந்து அஞ்சலி செலுத்துதல். |
| தமது 95-வது பிறந்த நாள் விழாவைக், கடந்த செப்டம்பர் திங்கள் 17-ம் நாள் கொண்டாடினார் அய்யா. | பிறந்த நாள் விழாக்காட்சிகள். நாமகிரிப் பேட்டை கிருஷ்ணன் நாயனம். |
| அய்யோ அய்யோ என அலறித் துடிதுடித்து, அவரால் ஆளாக்கப்பட்ட பெருமக்கள், துன்ப வெள்ளத்தில் அமிழ்ந்திட, நம்மை விட்டுப் பிரிந்தார். | மக்கள், பெரியாரின் சடலத்தைக் கண்டு அலறி அழுவது. நீண்ட கியூவில் மக்கள் கூட்டம். |
| தேசியப் பாரம்பரியத்தில் வந்த, மிக மூத்த தலைவர்களில் பெரியார் ஒருவர்தான் மீதியிருந்தார். காந்தியடிகளோடு நாட்டு விடுதலைப் போராட்டத்தில், தமது துணைவியாருடன் ஈடுபட்ட | சேலத்தில் 4-11-71 அன்று பெரியாருக்கு முதல்வர் கலைஞர் வெள்ளியினாலான சிம்மாசனம் வழங்குதல். பெரியார் கலைஞரைப் பிடித்து இழுத்து, அருகே |

| ஒலி | காட்சி |
| --- | --- |
| வர் அய்யா அவர்கள். அதற்காகப் பலமுறை சிறைவாசம் அனுபவித்திருக்கிறார். இதனைப் பாராட்டி இந்திய அரசு அவருக்குத் தாமிரப் பத்திர விருது வழங்கியது. தமிழக முதல்வர் கலைஞர், அதனைத் தலைவரின் இல்லம் சென்று, அளித்து வந்தார். | அமர்த்துதல். தாமிரப்பத்திர விருதை முதல்வர் பெரியாரிடம் வழங்குதல். |
| வைக்கம் வீரர் என்று சிறப்புப் பெயர் பெற்ற அய்யா, தீண்டாமை ஒழிப்புக்காக இறுதிவரை அரும்பாடு பட்டுள்ளார். | ராஜாஜி ஹாலில் மக்கள் அஞ்சலி. |
| சுயமரியாதைத் திருமணம் என்ற சீர்திருத்த முறையை நாட்டுக்கு அறிமுகம் செய்தவரே அவர்தாம். பேரறிஞர் அண்ணா அவர்களின் அரசு அதற்குச் சட்ட வடிவம் தந்துள்ளது. | பெரியார் திடலில் நடைபெற்ற திருமணக் காட்சிகள் திருச்சியில் ஊர்வலம். பெரியாரும் அண்ணாவும். |
| பிற்படுத்தப்பட்ட மக்களின் முன்னேற்றத்திற்காக அவர் தமது வாழ்நாள் முழுவதும் போராடினார். தமிழ் நாட்டில் அவர் கால் படாத ஊரே இல்லை. 60 ஆண்டுப் பொதுவாழ்வு அவருக்கு எண்ணற்ற தொண்டர்களைத் திரட்டித் தந்துள்ளது. | ராஜாஜி ஹாலில் மக்கள் கியூவில் வருவது. மணியம்மையார், வீரமணி, சம்பந்தம்-சோகமாய் இருப்பது. |
| பழமைக் கருத்துகளைச் சாடுவதிலும், பகுத்தறிவுக் கொள்கைகளைப் பரப்பு | பெரியார் தமது வேனில் செல்வது. மதுரையில் ஊர்வலம். தொண்டர்கள் |

| ஒலி | காட்சி |
|---|---|
| வதிலும் அவருக்குத் தணியாத ஆர்வம் உண்டு. அதற்காக அவர் ஓய்வின்றி உழைத்தார். | அணிவகுப்பு. |
| சமுதாய இழிவு ஒழிய வேண்டும் என்பதற்காக அவரும், அவரது தொண்டர்களும் கருப்புச் சட்டை அணிந்தனர். | ராஜாஜி ஹாலில் கருஞ் சட்டை அணிந்திருக்கும் தொண்டர்களின் இறுதி வணக்கம். |
| ரஷ்யா, ஜெர்மனி, இங்கிலாந்து போன்ற மேல் நாடுகளுக்கும், மலேசியா போன்ற கீழ்த்திசை நாடுகளுக்கும் அவர் சென்று வந்துள்ளார். அவரது புரட்சிகரமான கருத்துகளுக்காகப் பலமுறை சிறைத் தண்டனை பெற்றுள்ளார். | இறுதி ஊர்வலம் ராஜாஜி ஹாலில் இருந்து புறப்படுதல். |
| அச்சம் என்பதே அறியாதவர் தந்தை பெரியார். தமது கொள்கையிலே தளராத பிடிவாதமுடையவர். எவ்வளவோ மாறுபாடுகளுக்கு இடையிலும், ராஜாஜியும் பெரியாரும் மிக நெருங்கிய நெடுங்கால நண்பர்கள். | ஊர்வலம் செல்லும் வழியில், காட்சிகள். |
| தமிழகத்தின் முன்னாள் முதல்வர் காமராஜர், பெரியாருடன் தமிழ் நாட்டுத் தேசிய இயக்கங்களில் பணியாற்றியவர். முன்னாள் முதல்வர் பேரறிஞர் அண்ணாவும், இன்றைய முதல்வர் கலைஞரும், பிற | பெரியாரும் ராஜாஜியும், பெரியாரும் காமராஜரும், பெரியாரும் அண்ணாவும், பெரியாரும் முதல்வர் கலைஞரும், பெரியாரும் அமைச்சர்களும்—உள்ள காட்சிகள். |

| ஒலி | காட்சி |
|---|---|
| அமைச்சர் பெருமக்களும், பெரியார் அமைத்த சுயமரியாதை இயக்கம், திராவிடர் கழகம் ஆகியவற்றில் பணியாற்றியவர்கள் ஆவர். | |
| 'அவர் சொன்னார் இவர் சொன்னார் என்று நம்பி அறிவிழந்து தடுமாற்றம் அடைய வேண்டாம்; எவர் சொன்ன சொல் எனினும் அதனை உன்றன் இயல்பான பகுத்தறிவால் எண்ணிப் பார்ப்பாய்' -இதுதான் பெரியாரின் வாக்கு. சுயமாகச் சிந்தனை செய்து, தெளிவாக முடிவுகளை வரையறுத்து, உலகச் சிந்தனையாளர்களும் ஒப்புக்கொள்ளும் விதமாகப் பெரியாரின் வாதங்கள் அமையும். பல்கலைக் கழக ஆராய்ச்சி மாணவர்கள் இன்று பெரியாரின் தத்துவங்களை ஆராய்ந்து வருகின்றனர். | ஈரோட்டில் பெரியார் சிலை திறப்புவிழா–17-9-71<br><br>கடலூரில் பெரியார் சிலை திறப்புவிழா 13–8–72<br><br>இறுதி ஊர்வலத்தில் மக்கள்கூட்டம். |
| மதத்துறைத் தலைவர்களும், மதமே கூடாது என்றுரைக்கும் பெரியாருக்கு நண்பர்களாக உள்ளனர். தம்மிடம் வருகின்ற அனைவரிடத்தும் மரியாதையுடனும், அன்புடனும் அவர் உரையாடுவார். | குன்றக்குடி அடிகளாருடன் பெரியார் உரையாடுவது. புத்த பிட்சுகளுடன் பெரியார்! எழுந்து நிற்பதும், வரவேற்பதும், உரையாடுவதும். |
| மிக நீண்ட நேரம் சொற்பொழிவாற்றினாலும், அவர் பேச்சை மக்கள் மிகவும் | கூட்டத்தில் சொற்பொழிவாற்றும் காட்சி. |

| ஒலி | காட்சி |
|---|---|
| விரும்பிக் கேட்பது வழக்கம். | |
| அய்யா அவர்கள் மிகச் சிறந்த எழுத்தாளர். தமிழகத்தில் பெரும் புரட்சி உண்டாக்கிய குடிஅரசு, பகுத்தறிவு, விடுதலை ஆகிய ஏடுகள் அவரால் துவக்கப்பட்டவை. மலிவான விலையில் ஏராளமான நூல்களைப் பதிப்பித்து, அய்யா தமது கருத்துகளைப் பரப்புவது வழக்கமாகும். | பெரியார் எழுதுவது—பத்திரிகை படிப்பது—புத்தகம் விற்பது—ஆகிய பல காட்சிகள். |
| தமது முதிர்ந்த வயதினையும், பல்வேறு உடல் நலக் குறைவுகளையும் பொருட்படுத்தாது, அந்தப் பெருமகன், மக்களின் நல வாழ்வு ஒன்றினையே குறிக்கோளாகக் கொண்டிருந்தார். அவரது பிரிவு தமிழ் மக்களால் தாங்கவொண்ணாத இழப்பாகும். | இறுதி ஊர்வலம் பெரியார் திடலை அடைவது.<br>சடலம் பெட்டிக்குள் அடக்கம் செய்யப்படுவது. |
| புத்தரைப் போன்றதொரு அற்புதத்தலைவர் இவரென அறிவார்ந்த பெருமக்கள் வியந்து உரைக்கின்றனர். | பெரியாரின் அண்மைக் காட்சிகள் சிலவற்றில் அவர் முகம்; பெரியார் பேசுதல். |
| தமிழ்நாடு அரசு அந்தப் பேரறிவாளருக்கு நன்றிக் கடனாற்றியது. அன்னாரின் சடலம் ராஜாஜி மண்டபத்தில் காட்சிக்காக வைக்கப்பட்டது. அரசு மரியாதைகள் அனைத்தும் நடைபெற்றன. | போலீஸ் பேண்ட்; 36 வெடி; மரியாதை, துப்பாக்கியைத் தலை கீழாகப்பிடித்து. |

| ஒலி | காட்சி |
| --- | --- |
| சென்னை நகரமே இரு நாட்கள் சோக வெள்ளத்தில் மூழ்கிக் கிடந்தது. பல்வேறு ஊர்களிலிருந்து, பெண்டிரும் ஆடவரும் வரிசை வரிசையாக வந்து, தம்மைத் தட்டியெழுப்பித் தன்மான உணர்வளித்த தனிப்பெருந்தகையாளருக்கு அஞ்சலி செலுத்தினர். | மக்கள் அழுவது. கடைகள் மூடியிருப்பது. ஊர்வலம்—சில காட்சிகள். |
| இதோ, இங்கிருந்துதான் அந்தப் பகுத்தறிவுப் பகலவன் ஒளிவீசி வந்தது. இன்று அந்த இடம் அந்தகாரத்தில் மூழ்கிக் கிடக்கின்றது. | 'விடுதலை' அலுவலகம். பெரியார் தங்கும் அறை. |
| இதோ, இந்தப் பெரியார் திடலில்தான் அந்தச் சிந்தனைக் கருமேகம் கருத்து மழை பொழிந்தது. இன்று இங்கேதான் அந்தக் காலக் கருவூலம் புதையுண்டு போனது. | பெரியார் திடலில் மக்கள் கூட்டம்.<br>பெட்டியைக் குழியில் இறக்கும் காட்சி. |
| அகில உலகிலும் உள்ள அனைத்துக் கட்சிப் பெருமக்களும், ஆட்சித் தலைமையாளர்களும் அந்த வெண்தாடி வேந்தனுக்குப் புகழாரம் சூட்டுகின்றனர். | நினைவிடம் அருகில் பல கட்சித் தலைவர்கள். |
| தமிழ்மொழி உள்ளவரையில் தந்தை பெரியாரும் வாழ்வார்!" | பெரியார் சிரிக்கும் Close up காட்சிகள். |

அச்சுத் ஆர்க்கிடெக்ட் எனப்படும் கட்டடக்கலை நிபுணர்களின் ஆலோசனைப்படி, பெரியார் நினைவிடத்தில்

சிறிய மேடை ஒன்று கட்டப்பட்டு, நடுவில் அறிவுச் சுடரை ஏந்தி நிற்கும் கரம்ஒன்றின் வடிவமைப்பு அழகுற எழுச்சியுற அமைக்கப்பட்டது. இரு மருங்கிலும் தென்னை மரங்கள், பூச்செடிகள் வளர்க்கப்பட்டன. பெரியாரின் நூல்கள் போல, இரும்பில் செய்யப்பட்டு, நிலையாக இருக்குமாறு, விவரமாக வண்ணப் பூச்சுடன் வைக்கப்பட்டன. சென்னை வருவோர் அமைதியும், உணர்வும், புத்தெழுச்சியும் பெற இங்கு ஒருமுறை வருகை தரும் வாடிக்கை கொண்டனர். மாநகரில் உள்ளாரும், தமது வாழ்நாளின் சிறப்பான தினங்களில் வந்து செல்வதும் வழக்கமாகும். பெரியார் நினைவுப் பகுத்தறிவுப்படிப்பகம்—ஆய்வகம் ஒன்று இருமாடிக் கட்டடமாக எழுப்பப்பெற்றுக், கழகத்தின் கருவூலமான நூல்களும், பத்திரிகை வால்யூம் தொகுப்புகளும், ஒழுங்குற அழகுறப் பேணிக் காக்கப் படுகின்றன. இன்றும் பெரியாரைப் பற்றியோ, திராவிட இயக்கம் பற்றியோ, பகுத்தறிவு – சுய மரியாதைக் கொள்கைகள் குறித்தோ ஆய்வு நடத்து வார்க்கு வழிகாட்டும் ஒரே இடமாக, இது விளங்குகின்றது.

6-1-1974 திருச்சியில் நடைபெற்ற திராவிடர் கழக நிர்வாகிகள் குழுவில், ஈ.வெ.ரா. மணியம்மையார் தலைவராக ஒரு மனத்துடன் தேர்ந்தெடுக்கப்பட்டார். கி. வீரமணி தொடர்ந்து பொதுச் செயலாளராக விளங்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளப்பட்டார். அதே போன்று பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவன டிரஸ்டின் தலைவராக வீரமணியும், செயலாளராக மணியம்மையாரும் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். பெரியார் விட்டுச்சென்ற பணிகளைத் தொடர்ந்து திராவிடர் கழகம் நடைமுறைப் படுத்தி வரவேண்டுமெனக் கழகத் தோழர்கள் சூளுரைத்துக் கொண்டனர்.

திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் கலைஞர், முன்னதாகப் பெரியார் திருமுன்னர் நிபந்தனையோடு கூடிய வாக்குறுதி ஒன்று தந்ததற்கேற்ப, ராஜாஜி மண்டபத்திற்கும் சிம்சன் கம்பெனிக்கும் எதிர்ப்புறத்தில், ஏழு

கோவிந்தசாமியால் அமைக்கப்பட்ட, பெரியார் உட்கார்ந் திருக்கும் வடிவிலான அழகிய சிலை ஒன்றினை, நாவலர் தலைமையில் 25-12-74 மாலை 6.30 மணிக்குத் திறந்து வைத்தார். அவ்விழாவில் பேசிய பேராசிரியர் கே. அன்பழகன் வயதில் குறைந்தவர்களுக்குச் சிலை எழுப்புவது சரியல்ல என்று கருத்துரைத்தார். விழாவில் என்.வி. நடராசன், சி.பி. சிற்றரசு, மணியம்மையார், வீரமணி ஆகியோர் பேசினர். பெரியாரின் விருப்பத்தைப் பூர்த்தி செய்யவே, தான் உயிர் வாழ்வதாகக் கருதும் மணியம்மையார், அடுத்து கலைஞரின் சிலையினை நிறுவுதற்கு, இக்கருத்து அனு சரணையாக இல்லையே எனக் கவலையுற்றார். வீர மணியைக் கலைஞரிடமும், பேராசிரியரிடமும் சமாதானத் தூதுவராக அனுப்பிப், பெரியாரின் எண்ணம் ஈடேற, எப்படி யும் தான் கலைஞரின் சிலை அமைத்திட உறுதி பூண்டுள்ள தாக அறிவித்தார். சிற்பி எஸ்.பி.பிள்ளை எனப்படும் பக்கிரிசாமி அவர்களால் வடிக்கப்பட்டு, சில காலமாகச் சந்தேகச் சூழ்நிலையால் தாமதப்பட்டு வந்த, கலைஞர் மு. கருணாநிதி அவர்களின் சிலையின் திறப்பு விழா, திராவிடர் கழகத்தினரால், கோலாகலமாகக் கொண்டாடப் பட்டது. 21-9-1975 ஞாயிறு மாலை 6 மணிக்கு மணியம்மை யாரின் தலைமையில் குன்றக்குடி அடிகளார், சென்னை அண்ணாசாலை, புகாரி ஓட்டல் அருகில், இந்தச் சிலை யினைத் திறந்து வைத்தார்கள். மாநிலமெங்கணும் இருந்து திராவிடர் கழகச் செயல் வீரர்களும், கருஞ்சட்டைத் தோழர்களும் விழா சிறக்க வருகை தந்தனர்.

ராஜா சர் முத்தையாச் செட்டியார் முன்னிலையில் மணலி கந்தசாமி உரையாற்றினார். முன்னதாக நாமகிரிப் பேட்டை கிருஷ்ணன் குழுவினர் நாயன இசைமழை பொழிந் தனர். விழாவில் கி.வீரமணி, சைதை எஸ்.பி. தட்சிணா மூர்த்தி, சி.பி. இராசமாணிக்கம், கு. கிருஷ்ணசாமி, அ. ஆறுமுகம், ஆம்பூர் ஏ. பெருமாள், டி.டி. வீரப்பா, பொத்தனூர் க. சண்முகம், கோவை இராமச்சந்திரன், எம். என். நஞ்சையா, குமரிமாவட்டம் கிருஷ்ணன் ஆகியோர்

பேசினர். இசைமணி சீர்காழி கோவிந்தராசன் கலைஞரைப் பற்றிய பாடல்கள் சில பாடி மகிழ்வித்தார்.

ஈரோட்டில் பெரியாரின் இல்லம்ஒன்றில், முன்பகுதியில் பெரியாரும், பின்பகுதியில் அண்ணாவும் ஒருகாலத்தில் வசித்து வந்தனர். மணியம்மையார் அனுமதியுடன் அந்த இல்லத்தை வாங்கிக் கலைஞர் ஆட்சியில், பெரியார்-அண்ணா நினைவகம் என்று அமைக்கப்பட்டது. இருவரின் சிறு சிலைகளும், புழங்கிய பொருள்களும், நூல்களும் காட்சியாக வைக்கப்பட்டன. 17-9-1975 அன்று மணியம்மையார் தலைமையில் கலைஞர் இதனைத் திறந்து வைத்தார்.

வடநாட்டில் ராம்லீலா என்றவிழா ராமநவமி நேரத்தில் நடைபெறுவதும், அப்போது இராவணன், கும்பகர்ணன், இந்திரஜித் போன்றார் உருவங்களுக்குத் தீயிட்டு மகிழ்வதும், இந்த மதச்சார்பான விழாவில் குடிஅரசுத் தலைவர், தலைமை அமைச்சர் ஆகியோர் பங்கேற்பதும் கண்டு, பெரியார் பலமுறை கண்டித்துள்ளார்; நாம் ஏன் ராவண லீலா கொண்டாடக்கூடாது என்றும் கேட்டு, நடத்தியும் உள்ளார்! அந்த வழியைப் பின்பற்றித், தந்தை பெரியார் கருத்துக்கேற்ப, ஈ.வெ.ரா. மணியம்மையாரும், பெரியார் திடலில் 25-12-74 புதன் மாலை 6-40 மணிக்கு ராவணலீலா நடத்தினார். இராமன், இலக்குமணன், சீதை ஆகியவர்களின் பெரிய பொம்மை உருவில் தீயிட்டுக் கொளுத்தப் பட்டது. மத உணர்ச்சியுள்ளவர்களின் மனத்தை இது புண் படுத்தியதாகக் கலைஞரின் அரசு, மணியம்மையார் மற்றும் தோழர்கள் மீது வழக்குத் தொடுத்தது. அன்று முன் கூட்டியே கி. வீரமணியும் மற்ற ஏழு தோழர்களும் கைது செய்யப்பட்டு விட்டனர். எனினும் ராமன் முதலிய உருவங்கள் எப்படியும் கொளுத்தப்பட்டதால், மணியம்மையாருடன் மற்றும் 13 தோழர்களும், இரவு கைது செய்யப் பட்டனர். ஆனால் தி.மு.க. ஆட்சி இருந்தவரையில் வழக்கு நடைபெறவில்லை. அட்வைசர்களின் ஆட்சியில் வழக்கு நடைபெற்றது. 6 மாதத் தண்டனை வழங்கப்பட்டது. பிறகு சிட்டி சிவில் கோர்ட் அப்பீலில் இது தள்ளுபடி ஆயிற்று.

ராவணலீலா நடத்தியது சரிதான் என்றும் கோர்ட் கூறியது.

அடுத்து, கழகத் தலைவரான அம்மையாரின் சாதனை யாகப் பெரியார் பில்டிங்ஸ் எழுப்பப்பட்ட செய்தியினைக் கூறலாம். பெரியார் திடலின் முகப்பில், சுமார் 15 லட்ச ரூபாய் செலவில், பெரியதொரு அடுக்கு மாடிக்கட்டடத்தைக் கட்டி, நாகம்மையார் குழந்தைகள் இல்லத்துச் சிறுமிகளால் (Foundlings) அது திறந்து வைக்கப்பட்டது. மாதம் ஏறக் குறைய 23 ஆயிரம் வாடகை தருமளவுக்குப் பெரியார் சுய மரியாதைப் பிரச்சார நிறுவனத்திற்கு, அதுவும் ஓர் சொத் தாக இணைக்கப்பட்டது. 1976 டிசம்பரில், வருமானவரி பாக்கிக்காக இக்கட்டடம் ஜப்தி செய்யப்பட்டதாக, நல்ல எண்ணம் படைத்த நம்தமிழ் ஏடுகள் சில செய்தியாகப் பரப்பின வதந்தியை! அஃது உண்மையன்று.

ஏற்கனவே திட்டமிட்டவாறு 17-9-1976 அன்று இக் கட்டடம் திறக்கப்பட இருந்தது. அட்வைசர்கள் ஆட்சி 16 முதல் 18 வரை அம்மா, புலவர் இமயவரம்பன் முதலி யோரைக் கைது செய்து வைத்து விட்டதாலும், பெரியார் திடலில் யாரும் வரவிடாமல் செய்ததாலும், இவ்விழா ஒத்தி வைக்கப்பட்டு, 20-2-1977 அன்று பண்ணுருட்டி நடேசன் தலைமையில் அழகுமணி, கலைமணி, கண்மணி ஆகிய குழந்தைகளால் (Foundlings) திறந்து வைக்கப்பட்டது,

கழகக் கட்டுப்பாட்டை மீறியதாகத் தலைவர் மணி யம்மையார் அவர்களால் நடவடிக்கைக்கு உள்ளாகி 27-12-74 அன்று சென்னை டி.எம். சண்முகம், 23-9-75 அன்று திருவாரூர் கே. தங்கராசு, 16-11-75 அன்று திருச்சி வே. ஆனைமுத்து ஆகியோர் திராவிடர் கழகத்திலிருந்து விலக்கப்பட்டனர். 18-9-1975 அன்று திருவண்ணாமலை யில் மணியம்மையார் தலைமையில் பெரியார் சிலையினை முதல்வர் கலைஞர் திறந்து வைத்தார்.

1973 டிசம்பர் 8, 9 தேதிகளில் நடந்த சமுதாய இழிவு ஒழிப்பு மாநாட்டின் தீர்மானங்களுக்கு இணங்க, சாதிப் பிரிவை அரசியல் சட்டத்தினின்று அகற்றிடக் கோரி,

அம்மையார் தலைமையில் வடநாட்டு மத்திய அமைச்சர்களுக்குக் கருப்புக்கொடி காட்டப்பட்டது. அஞ்சல்மனைகள் முன்பு மறியல் நடத்தப்பட்டது. மணியம்மையார் அண்ணா சாலை தலைமை அஞ்சல் நிலையத்தின்முன் மறியல் செய்தார்கள்.

காமராஜர் 1975 அக்டோபர் இரண்டாம்நாள் மறைந்தார். அண்ணாவுக்கும், இராஜாஜிக்கும், பெரியாருக்கும் நினைவிடங்கள் அமைத்துச் சிறப்பித்த கலைஞர், காமராசருக்கும் நினைவுமண்டபம் எழுப்பினார்; அவரது மறைவுக்குப் பிரதமர் வந்து சென்றார்; என்ன முடிவோடு?!

சுயமரியாதை இயக்கத்தைப் பெரியார் தோற்றுவித்து 50 ஆண்டுகள் ஆயின. மகத்தான சமுதாயப் புரட்சியை விளைவித்த அம்மாபெரும் இயக்கத்திற்குப் பொன்விழா வேண்டாமா? பெரியார் இல்லாத குறை தெரியாவண்ணம் கொண்டாட வேண்டுமே! பெரியாரின் சுயமரியாதை இயக்கமெனும் பிராணவாயுவைச் சுவாசித்த புழுவும் புலியாகியிருக்கிறதே! புல்லும் மரமாகியிருக்கிறதே! கல்லும் கனி மண்ணும் நல்ல மனிதனாகியிருக்கிறதே! மறக்கலாமா? என்று அந்த விழாவினைத் தஞ்சைத் திருநகரில் கொண்டாட முடிவெடுத்தனர். 1975 டிசம்பர் மூன்றாம் வாரத்தில், 22 முதல் 24 முடிய தஞ்சை திலகர் திடலில் அமைக்கப்பட்ட பந்தலில் பெருவிழா; பொன்விழா! முதல்வரும், அமைச்சர் பெருமக்களும், கழகத் தோழர்களும், கருஞ்சட்டை வீரர்களும் பங்கேற்க ஏற்பாடு. 50 ஆண்டுகளாகச் சுயமரியாதை இயக்கத்தில் இருந்து வந்தோர், இப்போது எத்தனை பேர் உயிருடனிருப்பர்? நாகை என்.பி. காளியப்பன் தவிர வேறு யாரும் நிலைத்திருப்பதாக நினைவுக்கு வரவில்லையே!

எனவே, குறைந்த பட்சம் வெள்ளிவிழாக் காணும் அளவுக்காவது—அதாவது ஓர் இருபத்தைந்தாண்டு காலமாகவாவது—இயக்கத்தில் இருப்போர்க்குக் கேடயம் வழங்கவும் ஏற்பாடு. தஞ்சையில், சுயமரியாதை இயக்கப் பொன்விழா—டெல்லியில், திராவிட இயக்கங்களுக்குக் குழிபறிக்கும் சதி விழா—இரண்டும் ஒரே நேரத்தில் அமைந்தன! தஞ்சை

விழாவில் இருக்கவேண்டிய அளவு சிறப்பும் மகிழ்ச்சியும் காணப்படாமல், பீதியும் கலக்கமும் மிகுந்திருந்தன. முதல் வரும் உடல்நலிவால் பங்கேற்க முடியவில்லை!

எதிர்பார்த்தது நடந்துவிட்டது! 31–1–76ல் திராவிட முன்னேற்றக் கழக ஆட்சி டிஸ்மிஸ் செய்யப்பட்டு, சட்ட மன்றம் கலைக்கப்பட்டு, ஜனாதிபதி ஆட்சி பிரகடனம் செய்யப்பட்டது. 31–ந்தேதி மாலை 7 மணிக்கு ஒரே நொடியில் சென்னை நகரத்தில் மட்டும் 2,000 தொலைபேசி இணைப்புகள் துண்டிக்கப்பட்டன! பொழுது விடிவதற்குள் சிறைச்சாலைகள் நிரம்பின. சென்னைச் சிறைச்சாலை தனி வரலாறு படைத்து, "உலகப் புகழ்"(?) பெற்றது. திராவிடர் கழகத் தலைவர் மணியம்மையார் வெளியில் இருந்தார். பொதுச் செயலாளர் வீரமணி, "விடுதலை" மேலாளர் என்.எஸ். சம்பந்தம், மணியம்மையாரின் தம்பி தியாக ராஜன், சைதை எஸ்.பி. தட்சணாமூர்த்தி, வக்கீல் துரைசாமி உள்ளிட்ட 33 தி.க. தோழர்கள் சென்னை மத்திய சிறையில் "மரியாதை" பெற்றவர்கள் பட்டியலில்!

> திராவிட முன்னேற்றக் கழகத்தலைவர் கலைஞர் வெளியில் இருந்தார். முரசொலி மாறன், மு க. ஸ்டாலின் உள்ளிட்ட பல்லாயிரம் தி.மு க முன்னணியினர் சிறைக்கோட்டங்களில் இருந்தனர். சென்னை மத்திய சிறையில் "மரியாதை" பெற்றவர்கள் பட்டியலில் மு.க. ஸ்டாலின், சிட்டிபாபு, நீலநாராயணன், ஆர்க்காடு வீராசாமி, ஆர். டி. சீத்தாபதி, டி.கே. கபாலி எண்ணற்றோர்! எண்ணற்றோர்!! 1976 பிப்ரவரி முதல், 1977 ஜனவரி முடிய இருண்ட காலம்; மருண்ட காலமாகவும், சிலர் உருண்ட காலமாகவும், இது பின்னர் மாறியதல்லவா?

1976 செப்டம்பர் 17. பெரியாரின் 96–வது பிறந்த நாள் விழா. அவர் இருந்தால் எவ்வளவு குதூகலமாயிருந்திருக்கும்? ஒருவேளை, இந்த இருளே தமிழகத்தில் படர்ந்திருக்காதோ? அட்வைசர் ஆட்சி என ஒன்று வந்து, தமிழகத்தின் பிற்படுத்தப்பட்டோர், தாழ்த்தப்பட்டோர் முன்னேற்

றத்தை ஒரு நூற்றாண்டு பின்னோக்கித் தள்ளியிருக்காதல் லவா? எது நடந்தால் என்ன? கழகமும் கம்யூனிஸ்டுகளும் தான் பாதிக்கப்பட்டனர். தவறு, தவறு! திராவிடர் கழகம் துன்புறுத்தப்பட்டது. திருவாரூர் கே. தங்கராசு, சிதம்பரம் கு. கிருஷ்ணசாமி, இன்னும் சிலர் தாங்களும் திராவிடர் கழகம் என்று தனியே சென்று, அன்னை இந்திராகாந்தியின் ஆதரவும், பத்திரிகை — வானொலியின் விளம்பரமும் பெற்றனர்.

திருவாரூர் தங்கராசுவுக்கு ஏதோ மனக்குறை என்று அறிந்து, அவர் விருப்பப்படியே, தலைவர் மணி யம்மையாரையும் வீரமணியையும் விட்டுக் கொடுக்கச் செய்து, பிளவு வராமல் தடுக்க, முதல்வர் கலைஞர், தமது முதல்வர் எனும் நிலைக்குமீறிய சமாதான முயற்சிகளில் இறங்கியும், பிடிவாதமாகத் தங்கராசு, பிரிந்தே சென்றார்.

அதே போல, அண்ணா நிறுவிய திராவிட முன்னேற்றக் கழகம் எல்லாச் சோதனை, வேதனைகளுக்கும் உள்ளாயிற்று. இதிலிருந்து பிரிந்த அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் விரிவடைந்து, அனைத்து இந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகமாகி, பிரதமர் இந்திராவின் ஆதரவுக்கு ஆட்பட்டது. வலதுசாரிக் கம்யூனிஸ்டுகளும் அம்மையாரின் கனிவுக்கு ஆளாயினர்.

இந்த ஆண்டு பெரியார் பிறந்த நாள் விழா நடக்க விடுவோமா என்று ஜனாதிபதி ஆட்சி (உண்மையில் பி. கே. தவே—ஆர். வி. சுப்ரமணிய அய்யர் ஆட்சி) சவால்விட்டது போல், 1976 செப்டம்பர் 16-ந்தேதியே ஈ. வெ. ரா. மணி யம்மையாரையும், புலவர் கோ. இமயவரம்பன் போன்றாரையும் கைது செய்து, சிறையிலடைத்தது. பெரியார் திடலில் யாராவது வந்து, பெரியார் நினைவிடத்தில், மலர் மாலைகளோ, மலர் வளையங்களோ வைத்து "அசிங்கம்" செய்துவிடுவார்களோ என ஆட்சியாளர், இரண்டு மூன்று நாள் அந்தப் பக்கம் யாரையும் விடவில்லை! ஏற்கனவே இடுப்பொடிந்த என். எஸ். சம்பந்தம் மாத்திரம், மிசாவில் உள்ளே இருந்தால் பழிவருமோ என்ற அச்சத்தால்

வெளியே விடப்பட்டுப், பெரியார் திடலில் தனியாளாய் இருந்து வந்தார். மணியம்மையாருக்கு 3 நாள் சிறைவாசம் போதுமென்று அனுப்பிவிட்டனர்.

1977 பிப்ரவரியில் பொதுத் தேர்தல்கள் பிறந்தன. சிறைக் கதவுகளும் திறந்தன. நாடாளுமன்றத் தேர்தல்களில் வடபுலத்தில் காங்கிரஸ் வேரொடும், வேரடி மண்ணோடும் களைந்தெறியப்பட்டது! சுதந்திரத்திற்குப் பின் காங்கிரசல்லாத ஆட்சி, மத்தியில் ஜனதா அரசாக மலர்ந்தது மகத்தான புரட்சியாகும்! அதன் பின்னர், மாநிலங்களில் சட்ட மன்றத் தேர்தல்கள். தமிழகத்தில் அசாதாரண நிலை. திடீரென்று, திராவிட முன்னேற்றக் கழகத்திலிருந்து எதிர்பாராத சிலர் பிரிந்து சென்று, மக்கள் திராவிட முன்னேற்றக்கழகம் என்றனர். சிற்சில நாட்களிலேயே, முன்னர் தமிழ் தேசியக் கட்சி என ஒன்று, காங்கிரசில் அய்க்கியமானதுபோல், மக்கள் திராவிட முன்னேற்றக் கழகம்,அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்துடன் இணைந்து கொண்டது!

8-5-1977 அன்று தென்னார்க்காடு மாவட்டச் சார்பில் மணியம்மையாரின் வீரமிகு வெற்றிகளைப் பாராட்டு முகத் தான், கலைஞர் அவர்களால், அம்மையாருக்கு வெள்ளிவாள் கடலூரில் பரிசு வழங்கப்பட்டது.

தமிழ் நாட்டில் புதிய நிலைமை உருவாயிற்று. அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் அறுதிப் பெரும்பான்மை பெற்று, மாண்புமிகு எம். ஜி. ராமசச்ந்திரன் அவர்கள் தலைமையில் ஆட்சி அமைத்தது. 1967 முதல் ஆளுங்கட்சியாக விளங்கிய திராவிட முன்னேற்றக் கழகம், கலைஞர் தலைமையில் பிரதான எதிர்க்கட்சியாக விளங்கியது.

1977 செப்டம்பர் 17-ல் பெரியாரின் 97-வது பிறந்த நாள் விழா. பரவாயில்லை; பயமின்றி மூச்சுவிட முடிந்தது! தமிழக முதல்வர் எம். ஜி. ஆர். முன்னர் பெரியாரிடம் கேட்டுக் கொண்டவாறு, இரண்டு மூன்று ஆண்டுகட்கு முன்னர் 17-9-74 அன்று அண்ணா மேம்பாலத்தருகில் அமைத்து வைத்திருந்த பீடத்தின்மீது, நிற்கும் நிலையி

லுள்ள பெரியாரின் சிலையை, மத்திய அமைச்சர் ஜெகஜீவன்ராம் அவர்களைக் கொண்டு திறந்து வைத்தார். விழாவில் கலந்துகொண்ட மணியம்மையார், "பெரியார் உள்ளத்தை உறுத்திக் கொண்டிருந்த ஒரு காரியம் நிறைவேறாமலே நிற்கிறது. அனைத்துச் சாதியாரும் அர்ச்சகராகலாம் என்ற தமிழ் நாடு அரசின் சட்டம், உச்ச நீதி மன்றத்தால் தடை செய்யப்பட்டது. அதற்கு உயிரூட்ட, இந்திய அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டும். மத்திய அரசின் உதவியோடு இக்காரியம் நடைபெற, நமது மாநில அரசு முயலவேண்டும்!" என்று உருக்கமாக வேண்டுகோள் விடுத்தார். இதற்குப் பதிலளித்த முதல்வர், "கடவுளே இல்லை என்று சொன்னவர் தந்தை பெரியார். மற்றவர்களைக் கோயிலுக்குப் போகாதீர்கள் ,என்று சொன்னவர் பெரியார். அப்படிப்பட்ட கொள்கை உடையவர், கோயிலுக்குப் போய் அர்ச்சனை செய்யச் சொல்வதும், எல்லா சாதியாருக்கும் அந்த உரிமை வேண்டும் என்று சொல்வதும், உண்மையில் பெரியார் சொல்லியிருப்பாரா?என்று என்னால் நம்ப முடியவில்லையே!" என்றார்.

1977 அக்டோபர் 30-ம் நாள் மணியம்மையார் கைது செய்யப்பட்டார். ஏன்? தெரியவில்லை! வழக்கொன்றும் தாக்கல் செய்யப்படவில்லை. பின், விடுதலை செய்யப்பட்டார்.

இந்திராகாந்தி 1977 அக்டோபர் 30-ஆம் நாள் தமிழகம் வரும்போது கருப்புக் கொடி காட்டுவது என திராவிடர் கழகம் முடிவெடுத்தது. மணியம்மையார் முன்னின்று நடத்தத் தீர்மானிக்கப்பட்டது. இரண்டொரு நாட்களுக்குப் பின், தாங்களும் கருப்புக் கொடி காட்டப் போவதாகத் திராவிட முன்னேற்றக் கழகத்தினரும் முடிவெடுத்தனர். சென்னையில் கிண்டியருகில் வேனில் வந்த மணியம்மையாரை, இழிவாகவும் தரக்குறைவாகவும் பெரிய ஒரு போலீஸ் அதிகாரியும், போக்குவரத்து சார்ஜண்ட் ஒருவரும் பேசினர். வீரமணியையும் திட்டினார்கள். இதுவரையில் அவர்கள் மீது ஒரு நடவடிக்கையும் இல்லை! அம்மையாரும்

வீரமணியும் கைது செய்யப்பட்டனர். வழக்கும் தொடரப்பட்டுப் பின்னர் என்ன காரணமோ திரும்பப்பெறப்பட்டது.

ஆளுநர் ஆட்சிக் காலத்தில், சென்னை சிறைச்சாலையில், மிசா கைதிகளிடத்தில் தவறாக நடந்த சிறையதிகாரிகள் நடவடிக்கை பற்றி விசாரித்தறிய, நீதிபதி இஸ்மாயில் கமிஷன் நியமிக்கப்பட்டது. அதனிடம் வீரமணியும், என் எஸ். சம்பந்தமும் சாட்சியமளித்தனர். தாங்கள் தாக்கப்பட்டதாகவும் கூறினர். கைதியாகவும் இருந்து, சாட்சியமளிக்க வேண்டியவரும் ஆன எஸ். துரைசாமியே வழக்கறிஞராக இருந்து வழக்குரைத்தார்!

இந்திராகாந்திக்குக் கருப்புக் கொடி காட்டக் குழுமிய இடத்தில், போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்தது பற்றி விசாரிக்க, நீதிபதி பி. எஸ். சோமசுந்தரம் கமிஷன் நியமிக்கப்பட்டது. அதுகூடத் தனது பரிந்துரையில், மணியம்மையாரை இழிவாகப் பேசிய அதிகாரிகள் மீது தமிழக அரசு தனி நடவடிக்கை எடுக்கலாம் என்று கூறியுள்ளது. சென்னை நகரில் அப்போது துணைக் கமிஷனராக இருந்த அந்தப் போலீஸ் அதிகாரிக்குப் பதவி உயர்வு தந்து, தமிழக அரசு அவரைத் துணை அய். ஜி.யாக நியமித்துள்ளது!

> தி. மு. க.வுடன் தேர்தல் உடன்பாடு செய்து கொண்டதால், இந்திரா காந்தி அம்மையார் 20–9–1979-ல் தி. மு. க. நடத்திய பெரியார் அண்ணா விழாவில் கலந்து கொண்டது காலச் சுழற்சியன்றோ?

1978 மார்ச் 16-ஆம் நாள் ஈ. வெ. ரா. மணியம்மையார் இருதய நோயால் இயற்கை எய்தினார். பெரியாருக்குப் பின்னர், அவர்களால் அய்ந்தாண்டு உயிர் வாழ முடிந்ததே ஓர் அதிசயம்! அய்யா விட்டுச் சென்ற சில பணிகளை நிறைவேற்றிடத் தாம் எடுத்துக் கொண்ட சூளுரையின் வலிமையால்தான் அவர் வாழ்ந்திருக்க வேண்டும்!

பெரியாரின் நினைவிடத்துக்குப் பின் புறத்திலேயே அம்மையாரும் புதைக்கப்பட்டு, அவர்க்கும் நினைவு மேடை எழுப்பப்பட்டுள்ளது.

கி. வீரமணி நிரந்தரப் பொதுச் செயலாளராக, மணி

யம்மையார் எழுதி வைத்திருந்த கடிதத்தின்படி, ஒரே மன தாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். திராவிடர் கழகத்திற்கு இனித் தலைவர்கிடையாது என்றும்,முடிவெடுக்கப்பட்டது. பொருளாளராகத் தஞ்சை கா. மா. குப்புசாமி, பிரச்சாரச் செயலாளராகத் திருச்சி என். செல்வேந்திரன், விவசாயப் பிரிவுச் செயலாளராக ஏ. எம். ஜோசப், அமைப்புச் செய லாளராகக் கள்ளக்குறிச்சி கோ. சாமிதுரை எம். ஏ. பி.எல். தலைமைக் கழகச் செயலாளராக எஸ். துரைசாமி பி.ஏ. பி. எல்., இளைஞர் பிரிவுச் செயலாளராகக் கோவை கு. இராமகிருஷ்ணன் ஆகியோர் செயல்படுகின்றனர். சுய மரியாதை இயக்கப் பொன் விழாவுக்குப் பெரியார் இல்லாமை; பெரியார் நூற்றாண்டு விழாவுக்கும் மணியம் மையார் இல்லாமை;எனினும் பெரியார் தந்த சுயமரியாதைச் சுடர், பகுத்தறிவு ஒளி விளக்கு ஓயாமல் எரிந்து வெளிச்சந் தந்து வருகின்றது.

பெரியார் தொடங்கி நடத்திய பிரச்சாரப் பயிற்சி வகுப்புகள் திராவிடர் கழகத்தாரால் தொடர்ந்து நடத்தப் படுகின்றன. "விடுதலை", "உண்மை", "The Modern Rationalist" போன்ற பத்திரிகைகள்—நூல்கள் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகின்றன. சுயமரியாதைப் பிரச்சார டிரஸ்டின் தலைவராக சிவகங்கை சண்முகநாதனும், செய லாளராக வீரமணியும் உள்ளனர்.

இன்றையத் தமிழ் நாடு அரசும் பெரியார் நூற்றாண்டில் பல ஆக்கபூர்வமான செயல் திட்டங் களை அறிவித்தது. பெரியாரின் தமிழ் எழுத்துச் சீர் திருத்த முறை அமுலுக்குக் கொண்டு வரப்பட்டது, அரசாணை ஒன்றின் வாயிலாக கோவைமாவட்டத்தைத் இரண்டாகப் பிரித்து, ஈரோடு தலைநகராகக் கொண்ட பெரியார் மாவட்டம் அமைக்கப்பட்டுள்ளது. பெரியார் பல்கலைக் கழகம் ஒன்று கோவையில் அமைக்கப்பட இருக்கிறது. பெரியார் புரட்சி மொழிகள் நூல் வெளி வந்துள்ளது. பெரியார் வாழ்க்கை வரலாறும், படக் கதையும் நூல்வடிவில் தயாராகி வருகின்றன. பெரியார் பொன் மொழிகள் கல்லில் வடிக்கப்பட்டுப் பேரூர்களில் நிறுவப்பட இருக்கின்றன. பெரிய திட்டமாகப் பெரியார்

நினைவகம் ஒன்று நிறுவப்படுமென அறிவிக்கப்பட்டுள்ளது! மாவட்டந்தோறும் பெரியார் நூற்றாண்டு விழா, அரசு விழாக்களாக, ஆடம்பரமாக நடத்தப் பெற்றன!

பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம் திருச்சியில் ஆற்றிவரும் கல்விப் பணிகள்:—

1. பெரியார் ஆசிரியர் பயிற்சிநிறுவனம் 2. நாகம்மையார் ஆசிரியைப் பயிற்சி நிறுவனம் 3. பெரியார் மணியம்மை பெண்கள் மேல் நிலைப்பள்ளி 4. பெரியார் நடுநிலைப் பள்ளி 5. நாகம்மையார் குழந்தைகள் இல்லம் 6. பெரியார் மணியம்மை குழந்தைகள் காப்பகம் 7. தந்தை பெரியார் நூற்றாண்டு நர்சரி பள்ளி 8. ரங்கம்மாள் சிதம்பரம் தையல் பயிற்சி நிலையம் 9. பெரியார் மணியம்மை மன்றம்—ஆகியவற்றை நிறுவி நிருவகித்து வருவதாகும்.

நாகம்மையார் குழந்தைகள் இல்லத்திலும், பெரியார் மணியம்மை குழந்தைகள் காப்பகத்திலும் இப்போது சுமார் 300 குழந்தைகள் உள்ளனர். அவர்கள் அனைவர்க்கும் வயிறார உணவு, மானமார உடை, அறிவாரக்கல்வி அளிக்கப்பட்டு வருகிறது. அங்குள்ள பிள்ளைகளில் 7 பேர் கல்வியில் நல்ல முன்னேற்றம் காண்பித்ததால், அவர்கள் ஆங்கிலப் போதனைப் பள்ளிகளில் (English medium schools) சேர்க்கப்பட்டுக், கட்டணம் செலுத்தி, ஆங்கில மூலமான கல்வி வழங்கப்படுகிறது. ஓரளவு படித்துவிட்ட பெண்கள், அல்லது பாதியில் படிப்பை விட்டுவிட்ட வளர்ந்த பெண்கள், அங்கேயே பணியாளர்களாகவும், சமையல்காரர்களாகவும் நியமிக்கப்பட்டு, அவர்கள் சம்பளம் முழுவதும் அவரவர்கள் பெயர்களில் வங்கிகளில் அப்படியே சேமித்து வைக்கப்படுகின்றது. 25 பெண்களுக்குத் திருமகள் திருமணத் திட்டம் மூலமாகவும் பணம் சேமிக்கப்படுகின்றது வங்கியில்.

பெண்களுக்குத் தையல் பயிற்சி வகுப்புகளும், முதியோர் இல்லம் ஒன்றும் அண்மையில் துவங்கப்பட இருக்கின்றன. சில ஆண்டுகட்குமுன் துவங்கப் பெற்ற பெரியார் மணி

யம்மை குழந்தைகள் இல்லத்தில், 2 மாதத்திலிருந்து 7 வயது வரையில், பல குழந்தைகள் (Foundlings) வளர்க்கப்படுகின்றன. அவற்றுக்கெல்லாம் EVRM என்ற இனிஷியல் தரப்பட்டுள்ளது. 'கொழு கொழு குழந்தைகள்' போட்டியில் இந்த இல்லத்திலுள்ள 2 வயது வைக்கமதி பரிசு பெற்றுள்ளது.

பெரியார் நடுநிலைப் பள்ளியில் பயிலும் அனைத்து மாணவர்களுக்கும், மதிய உணவு வழங்கப்படுகின்றது. ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல் என்னும் பணி எவ்வளவு சிறப்பாகப் பெரியாரின் சந்ததியாரால் பேணப்படுகின்றது! "இமயமலை வெய்யிலிலே காய்கிறதே என்று குடை பிடிக்கக் கிளம்பியதுபோல்" என்று பெரியாரே குறிப்பிட்ட உவமையின் பிரகாரம், தாழ்ந்து வீழ்ந்த இனத்தின் தலை நிமிர்த்தப் பெரியார் நிறுவிய அறச்செயல்களின் திறமும் உரமும் எத்துணைச் சிறப்பானவை!

பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனத்துடைய சொத்துகளுக்கு வருமான வரித்துறையினர் பல லட்சம் வரி விதித்து, டிரிப்யூனல் அப்பீலில் வரி விதிப்பு தள்ளுபடி செய்யப்பட்டது 1979-ல். பெரியார் நூற்றாண்டு நிறைவு விழாவை ஒட்டிப் பொதுச் செயலாளர் கி. வீரமணியிடம் 100 சவரனுக்குச் சமமான தொகை திரட்டித் தஞ்சையில் வழங்கப்பட்டது. தஞ்சை மாவட்டத்தில் மகளிர் பாலிடெக்னிக் நிறுவிட இத்தொகை முன்னோட்டமாகச் செலவிடப்படும் என்றார் வீரமணி. பெரியார் நூற்றாண்டு நிறைவு விழாவில் பங்கேற்க மலேசியா, சிங்கப்பூர், குவெய்த் போன்ற வெளிநாட்டுத் தோழர்கள் வந்திருந்தனர். சிங்கப்பூர் நாகரத்தினம், மலேசியா கே. ஆர். ராமசாமி, குவெய்த் செல்லப் பெருமாள், இலங்கைத் தோழர்கள் ஆகியோர் விழாக்களில் பங்கேற்றுச் சென்றனர். திருத்தணி, சென்னை, கன்னியாகுமரி, சிக்கில் ஆகிய இடங்களிலிருந்து கால்நடையாகப் பிரச்சாரப் படைகள் புறப்பட்டு வந்தன. நூற்றாண்டு நாயகர் பெரியார் என்ற ஒரு திரைப் படமும், சில இசைத் தட்டுகளும் தயாரிக்கப்பட்டுள்ளன.

பெரியார் நூற்றாண்டு நிறைவு விழா திராவிடர் கழகச் சார்பில் எல்லா மாவட்டங்களிலும் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. தஞ்சையில் “பெரியார் பெருந்தொண்டர்” என்ற கேடயம், நெடுநாளையத் தொண்டர்களுக்குப் பொதுச் செயலாளரால் வழங்கப் பெற்றது.

பெரியார் பயன்படுத்திய பொருள்கள், அவருக்கு அன்பளிப்பாக வழங்கப்பெற்ற நன்கொடைப் பொருள்கள், வாழ்க்கை வரலாற்றை விளக்கும் ஓவியங்கள் ஆகியவை பெரியார் திடலில் பெரியாரும், மணியம்மையாரும் தங்கியிருந்த அறையில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. ‘பெரியார் காட்சியகம்’ திறப்பு விழாவும், பெரியார் மணியம்மை இலவச மருத்துவமனைக்கு நான்கு மாடிக் கட்டடம் ஒன்று பெரியார் திடலில் கட்டப்பட அடிக்கல் நாட்டலும், இந்தியப் பிரதமர் சவுதரி சரண்சிங் அவர்களால் 24-11-1979 நண்பகலில் நிகழ்த்தப் பெற்றன. (ஆளுநர் பிரதமரின் பணிகளை நிறைவேற்றினார்) 17-9-1979 அன்று திருச்சியில் மறைந்த நடிகவேள் எம்.ஆர். ராதா நினைவாகப், பெரியார் திடலில் அமைக்கப் பட்டிருந்த ராதா மன்றம் புதுப்பிக்கப் பெற்றது. பெரியார் மணியம்மையார் படங்கள் திறக்கப் பட்டன. வகுப்புரிமைக்குக் குழிபறித்த 2-7-1979 தேதியிட்ட அரசாணைக்குத் தீயிடும் கிளர்ச்சி 26-11-1979 அன்று நாடெங்கும் திராவிடர் கழகத்தால் நிகழ்த்தப் பெற்றது!

# 19. சிறந்தார்

சிறப்பு இயல்புகள்—இதயப்பாங்கு—பழக்க வழக்கங்கள்—பின்பற்றத் தக்க தனிமனித ஒழுக்கங்கள்—பண்புகள் — பண்பாடுகள் —புறத் தோற்றமும் அகத்தழகும்.

---

ஊற்றுக்கண் அடைபட்டு விட்டது. இனி அறிவு ஊற்றுச் சுரந்து புதிதாக நீர்பெருக வழியில்லை. ஏற்கனவே சுரந்து பெருகிய நீர்தான் அருவியாய் இழிந்து ஓடைகளில் ததும்பி வழிந்தோடிக் கொண்டிருக்கிறது. வற்றாத செல்வம் 'வறண்டது; வறுமை திரண்டது; வெறுமை நிறைந்தது!

புத்தி மார்க்கம் கண்டதால் புத்தரெனப் பெயர் பெற்றார் சித்தார்த்தர். மக்களிடையே புகுந்து மடமை ஒழிக்கப் பாடுபட்டார். அவர் கொள்கை இன்று உலகெலாம் பரந்து கிடக்கின்றது; ஓரளவு மாறுதல்களுக்குள்ளான போதிலும்! பகுத்தறிவு மார்க்கங்கண்ட இராமசாமி, மக்களிடையே புகுந்து அவர்களுக்காக அயராது பாடுபட்டதால் தந்தை பெரியார் ஆனார். இன்று அவர் கொள்கைகள் உலகத்தால் வியப்புடன் ஆராயப்படுகின்றன. மனிதாபிமான அடிப்படையில் அமைந்த அவர் கொள்கைகள்தாம் இன்று தமிழகத்தை ஆள்வதோடு எதிர்கால உலகை ஆளவும் போகின்றன. அவரில்லாத நேரத்தில் அந்தப் பெருமகனாரின் சிறப்புகளை நினைவு கூர்வதுதான் பொருத்தமுடையதாகும்.

பெருந்தன்மைக் குணம், பரந்த உள்ளம், இரக்க மிகு பண்பு, இளகிய மெல்லிதயம் இவை பலாச்சுளைபோல் உள்ளிருக்க; முள் நிறைந்த பலாத்தோல் போல் புறத்தே காணப்பெறும் மேடைத் தோற்றத்தின் முரட்டுத்தன்மை, மூடமதியைச் சாடும் வேகம், அநீதி எனில் பொங்கி எழும் சீற்றம், அச்சந்தயை தாட்சண்யத்திற்கடங்காத ஆண்மைத் திண்மை இவற்றை மட்டுமே பார்த்து அணுகிட அஞ்சி நெருங்காதோரே அநேகர், பெரியாரிடம்!

திருச்சியிலுள்ள நாகம்மையார் குழந்தைகள் இல்லத்துறையும் மழலைகளைப் போலவே, இந்தத் தமிழகத்துக் கோடானு கோடி பின்னடைந்த மக்களையும் தவிக்கவிட்டுப் போன ஏந்தலின் எண்ணிலா அருளாட்சித் திறன்களை எண்ணுதல் இன்பந் தருவதாகும்; அன்போடியைந்த நன்றிக் கடனாற்றுதலுமாகும்!

யாருக்காவது பெரியார் பொருளுதவி செய்தால்—(பலருக்குச் செய்துள்ளார் வெளியில் தெரியாமல், தனது டைரியில் குறித்துக் கொண்டு)—அதைச் சொல்லிக் காட்டி வெளிப் படுத்தவே மாட்டார். ஆனால், பண விஷயத்தில் யாராவது நாணயக் குறைவாக நடந்தால், அவர்களை மன்னிக்கவே மாட்டார். தவறு செய்தவர் நேர்மையாகத் தாமே ஒத்துக் கொண்டால், அத்தோடு மறந்து விடுவார் நாணயங் காக்கும் பெரியார்!

தாம் செய்து வருவது நன்றி கிட்டாத பணி—Thankless job—என்பது நன்கு தெரிந்திருந்தும், சமுதாய நலனுக்காக அதையே தொடர்ந்து செய்து வந்தார். அதனால், நிச்சயம் தம்மிடம் நன்றியோடு நடந்து கொள்ளக் கடமைப்பட்டோர் கூட, மறந்து விட்டால், அதைப் பொருட்படுத்தும் பழக்கமே இல்லாது போயிற்று, பெரியாரிடம்! அதே நேரத்தில் தமக்கு யாரும் உதவி செய்தால்—அல்லது செய்வதாகச் சொல்லிவிட்டால் கூடப்போதும்—அவருக்குத் தாம் மிகவும் கடன் பட்டதாக எண்ணிக் கொள்வார். உதாரணமாகக், காரில்செல்லும் போது, பாதை தெரியாமல் வழிப்போக்கரிடம் கேட்டு, அவர் சொன்னால்

அவருக்குத் தாமே நன்றி—(Thanks) சொல்லிய பின்புதான் டிரைவர் காரை எடுக்க அனுமதிப்பார் பெரியார்.

பொதுப் பணியில் ஈடுபடுவோர் தமது சொந்த (Self) மான அவமானங்களை ஒரு பொருட்டாய்க் கருதக் கூடாது என்பது தன்மானத் தந்தை பெரியாரின் கொள்கை. திருக் குறளில் வேறு எதை விரும்பா விட்டாலும் கூட, "குடிசெய் வார்க்கில்லை பருவம் மடிசெய்து மானம் கருதக்கெடும்" என்ற குறளை அவர் மிகவும் விரும்புவார்.

அவர், பதவிகளைத் துச்சமாக மதித்தார். ஆனால் பதவிகளில் இருப்போரைப் பெரிதும் மதித்தார். இதற்கு எடுத்துக் காட்டுகள் பெரியாரின் வாழ்க்கையில் ஏராளமாக உண்டு. அவரைச் சென்னை மாகாணத்தின் பிரதமராக இருக்கச் சொல்லி 1939-ஆம் ஆண்டிலேயே கவர்னர் வேண்டினார். இராஜாஜியும் கேட்டுக் கொண்டார் பதவிக் கூண்டில் சிக்கிக்கொள்ள அந்தச் சுதந்திரச் சிங்கம் விரும்பியதேயில்லை! பெரியார் பொதுவாழ்க்கையில் இறங்கிய நாளிலிருந்து, தமிழகத்தில் முதலமைச்சர்களாக வீற்றிருந்தவர் அத்தனை பேருமே அவருடைய நண்பர் களாகவோ, தோழர்களாகவோ, தொண்டர்களாகவோ தான் இருந்திருக்கிறார்கள். தம்மைவிட வயதில் குறைந்த வர்களாக இருப்பினும், தம்மைக் காணவருவோர் யாவரே யாயினும், பெரியார் எழுந்து நின்று, இருகைகூப்பி வணங்கி, "வாங்க வாங்க" என்று பரிவோடும் மரியாதையோடும் அழைத்து, அமரச் செய்வார். வெளிவாயில் வரை சென்று, அவர்களை வழியனுப்பி வைப்பார். முன்பே அறிமுகமான வர்களாக இருப்பின், அவர்கள் பெற்றோர், குடும்பத்தார், சுற்றத்தார், மற்றும் ஊரார் எல்லாரையும் நினைவு கூர்ந்து, நலம் விசாரிப்பார் பெரியார்.

பதவியிலிருப்போரை நாம் மதித்து நடந்தால்தான் அவர்களை மக்கள் மதிப்பார்கள் என்று கருதி, "அய்யா வாங்க!" என்று பணிவோடு பேசுவார் பெரியார். 'பெரியவர் என்ன சொன்னார்? அய்யா ஏதாவது பேசினாரா?' என்று, அமைச்சர்களைப் பற்றிப் பேசும்போது, அவர்கள் வயது

பற்றிக் கருதாமல், பதவி பற்றிக் கருதி, அவர்களில்லாத நேரத்திலும் மரியாதையோடு விசாரிப்பார். குன்றக்குடி அடிகளாரிடம் 1953-ம் ஆண்டு முதல் பெரியாருக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. கொள்கை, நடைமுறைகளில் இருவரும் இரு வேறு துருவங்களாயினும், இருவரது இலட்சியமும் ஒன்றேயாதலின், அன்போடு பழகி வந்தனர். பெரியாரை விட அடிகளார் 45 வயது இளையவர். எனினும், அடிகளாரைப் பற்றிக் குறிப்பிடும்போது, 'மகா சந்நிதானம் சுவாமி அவர்களைப் பிரார்த்தித்துக் கொள்கிறேன்' என்றுதான் பெரியார் சொல்லுவார்.

யாராவது வந்திருக்கும்போது பெரியார் தமக்கு அருகிலுள்ள ஒரு பத்திரிகையைப் படிக்க ஆரம்பித்து விட்டால், அதிலிருந்தே சாடை புரிந்துகொள்ள வேண்டும்; போகச் சொல்கிறார் என்று! மேலும், வருபவர் பெரியாரை முகத்துக்கு நேரே ஏதாவது கூறிப் புகழத் தொடங்கினால், அதனால் மயங்கி விடமாட்டார்; ஆனால், ஆள் ஏதோ ஏமாற்றப் பார்க்கிறார் என்று எச்சரிக்கை ஆகிவிடுவார்!

சாப்பாட்டு நேரத்தில் விருந்தினர் வந்துவிட்டால் பெரியார் மிகவும் மகிழ்ச்சி கொள்வார். பொதுவாகவே, மற்ற நேரங்களை விடக் குதூகலத்துடன் பெரியாரைக் காணக் கூடிய வேளையே, உணவு கொள்ளும் வேளைதான்! "அம்மா!" என்று அழைத்து—நாகம்மையார் காலத்திலும் சரி, மணியம்மையார் காலத்திலும் சரி—அவர்களுக்கு உடனே உணவு பரிமாறச் சொல்வார். தலைவர்கள் வீட்டில் நண்பர்களையோ, தொண்டர்களையோ, அலுவலகப் பணியாளர்களையோ சாப்பிடச் சொல்லும் பழக்கம் அந்தக்காலத்தில் பெரியாரிடம் மட்டுமே இருந்தது!

சாப்பிடுவோரின் உண்கலத்தை நன்கு கவனித்து, அவர் எதை விரும்பிச் சாப்பிடுகிறாரோ அதை மீண்டும் பரிமாறச் செய்வார் பெரியார். இறுதிவரை அவர் எதையும் மிச்சம் வைக்காமல் சாப்பிடுகின்றாரா என்றும் கவனிப்பார். கலத்தில் ஏதாவது விட்டுச்சென்றால், 'பண்டத்தைப் பாழாக்கலாமா?' என்று மிகவும் கோபித்துக்கொள்வார். அவருடைய

பழக்கமே, தமது உண்கலத்தில் பரிமாறப்பட்ட உணவை மீதியாக்காமல் சாப்பிட்டு, அஜீர்ணத்தால் அவதிப்படுவது தானே! நேற்று ஒரு பண்டத்தைச் சாப்பிட்டு, அது செரிக்காமல் தொந்தரவு கொடுக்கிறது என்று தெரிந்தாலும், இன்றும் அதே பண்டம் வைக்கப்பட்டால், மறுக்காமல் சாப்பிட்டுத் துன்பப்படுவது வாடிக்கை, பெரியாருக்கு.

வெளியூர்ப் பயணங்களின்போது தம்முடன் வருகின்ற தோழர்கள், உதவியாளர்கள், டிரைவர் முதலியோரும் சாப்பிட்டார்களா என்று தெரிந்துகொள்வார். பெரும்பாலும் உடன் அமர்த்திக்கொண்டே உண்பார்; அல்லது அவர்கள் சாப்பாடு முடிந்த பிறகே புறப்படுவார். இதுவும் பெரியாரின் தனிப் பண்பாடாகும்.

துவக்க நாட்களில் குதிரை பூட்டிய சாரட்டு வண்டியில் சவாரி செய்தவர், பிறகு ஒரு கார் வைத்திருந்தார். இடைக் காலத்தில் 1944 வரை ஈரோட்டில் ஒரு சாதாரண ஒற்றை மாட்டு வண்டிதான் பெரியாரிடம் இருந்தது; யுத்த காலமாக இருந்ததால் கார் வைத்துக் கொள்ளவில்லை. இரயிலில் மூன்றாம் வகுப்பிலேயே பயணம் செய்து வந்தார். வேறு யாராவது அவருக்காக இரண்டாம் வகுப்பு அல்லது முதல் வகுப்பு டிக்கட் வாங்கி வந்துவிட்டால்கூட, வருத்தப்படுவார்; அதைத் திருப்பித் தந்து, மூன்றாம் வகுப்பில்தான் பிரயாணம் செய்வார்; அதில் மிச்சமாகும் பணத்தை நிதியில் சேர்த்து விடுவார் பெரியார்! புகைவண்டி வருவதற்கு ஒரு மணிநேரம் முன்னதாகவே நிலையத்தை அடைந்துவிடுவார். இதை யாராவது காமதப்படுத்தினால், அவர்கள் பெரியாரின் கடுங்கோபத்துக்கு ஆளாகவேண்டும்!

குறிப்பிட்ட நேரம் தவறாமல் எந்த நிகழ்ச்சிக்கும் செல்லும் Punctuality என்னும் பண்பினை அவரளவு சரியாகக் கடைப்பிடித்த தலைவர் உலகிலேயே வேறு எவருமிலர். அதே போல், தாம் ஒத்துக்கொண்ட நிகழ்ச்சிகளுக்கும் கட்டாயம் எந்தச் சூழ்நிலையிலும் தவறாமல் சென்று விடுவார்.

காலை 6 மணிக்குமேல் பெரியார் உறங்குவதில்லை.

காலைக் கடன்களை முடிக்கும் போதே சில பத்திரிகை களைப் படித்து முடித்துவிடுவார். இரண்டு மூன்று இட்லியும் காப்பியும் காலை உண்டி. மீண்டும் பத்திரிகை படித்தல், பேசிக்கொண்டிருத்தல், புத்தகம் படித்தல், எழுதுதல், கடிதங்கள் பார்த்துப் பதில் வரைதல். மதிய உணவு கட்டாயம் புலாலுடன். பின்னர் சிறிது பொழுது கண் அயர்தல். பிஸ்கட், மலைவாழைப்பழம், காப்பி—சிற்றுண்டி. பயணநேரங்களில் வேனிலேயே உண்ணல், உறங்கல்! இரவு ணவு பெரும்பாலும் இட்லி. ஓய்வாகச் சாய்ந்துகிடப்பது அவர் வாழ்க்கையில் நடவாத ஒன்று. கார் பேட்டரி ஓட்டத்தில் சார்ஜ் ஆவதுபோல், பெரியாருடைய உடலும் உழைப்பில்தான் உற்சாகம் பெற்றது.

5 முழ வேட்டி (பின்னாட்களில் கயிலி); உடம்பில் உள்ளே மெல்லிய வெள்ளைத் துணியில் அரைக்கைச்சட்டை; அதிலுள்ள பையில் மணிபர்ஸ்! மேலே முக்கால்கை கருப்புச் சட்டை (1945 முதல்); அதன் பைகளில்–டயரி, கண்ணாடிக் கூடு, முக்கிய காகிதங்கள், தடியான பேனா, பின்னாட் களில் ஒரு பெரிய லென்ஸ்–ஆகியவை. மேலே, துடைப் பதற்காகும் துண்டு ஒன்று; எப்போதும் நீங்காத பிரம்புக் கைத்தடி; குளிர் காலத்தில் ஒரு கம்பளிச்சால்வை; செருப்புகள்; பழைய ஃபிரேமில் அடங்கிய மூக்குக் கண்ணாடி—குளிப்பதும், துணிகளைத் துவைப்பதும், உடை மாற்றுவதும் அன்றாடக் கடமைகளாகக் கருதியோ, அவரே விரும்பியோ செய்து கொண்டதில்லை, என்றுமே! அம்மை யாரின் தொண்டில் இவையும் இணைந்தவை!

"நான் (decency) சுத்தம், கண்ணுக்கு வெறுப்பில்லாத ரம்மியம் வேண்டாம் என்று சொல்லவில்லை. ஆனால் அதிகப் பணம்கொண்ட, —மக்கள் கவனத்தை ஈர்க்கத்தக்க —ஃபாஷன்நகை, துணி வெட்டு போன்ற அலங்காரத்தால் அல்ல; (Simple) சாதாரணக் குறைந்த தன்மையில் முடியும் என்று சொல்வேன்" என்கிறார் பெரியார்.

கருமித்தனம் அல்லது கஞ்சத்தனம் இவற்றிலிருந்து வேறுபட்டதல்லவா சிக்கனம்? இது சேமிப்புக்கு அடிப்

படையாயிற்றே! சிக்கனமாயிருந்து சேமித்த சொத்துகள், இன்று எப்படிப் பல்கிப் பெருகிச் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனத்துக்கு ஆதாரமாக நிறைந்து விளங்குகின்றன! பெரியார் என்ற தனி மனிதரின் எளிமைதானே இதற்குக் காரணம்?

புத்தகம் வாங்குவதில் அவர் சிக்கனம் கூடப் பார்ப்பதில்லை, "ஒரு நல்ல புத்தகம் வெளியாகியிருக்கிறது. 50 ரூபாய் விலை, ஆனால் நமக்கு உதவக்கூடியது!" என்று தயக்கத்துடன் தலையைச் சொரியும் வீரமணியை விளித்து, "இந்தாப்பா! இரண்டு புத்தமாக வாங்கிவா!" என்று பளிச் சென்று கூறி, உள்சட்டைப் பையிலுள்ள பர்சை எடுத்து, மெல்லத் திறந்து, மெல்ல ஒரு நூறு ரூபாய்த்தாளை வெளியில் எடுத்து, மீதியை மெல்ல ஒருமுறை எண்ணிப் பார்த்து, மீண்டும் பர்சை உள் சட்டைப்பையில் மெதுவாகத் திணித்து, வாய்ப்புறத்தில் ஓர் ஊக்கை மாட்டிப், பின்பு, டயரியை வெளியில் எடுத்து, தேதியுடன், 100 ரூபாய் செலவுக்கான விவரத்தை மறக்காமல் அதில் குறித்துக் கொள்வார் பெரியார்.

இரயில் பயணம் செய்யும் காலத்தில்—சந்திப்புகளில் வண்டி மாற்றும்போதும், ஏறும்போதும், இறங்கும்போதும் —கையிலுள்ள பெட்டி, ஹோல்டால் போன்ற தமது லக்கேஜ்களை எடுப்பதற்குக் கூலி போர்ட்டர்களை அழைக்க மாட்டார். இருக்கின்ற சாமான்களில் தாமே ஒன்றை முந்திக் கையில் எடுத்துக்கொள்வார். உடன் வருகின்ற மற்றவர்கள் ஆளுக்கு ஒரு சாமான் சுமந்துதானே தீர வேண்டும்? மிகுந்த கனமான 3, 4 புத்தகச் சிப்பங்களை அப்போதெல்லாம் மணியம்மையார் பொறுமையுடன் தூக்கிச் செல்வதுண்டு. "நானே ஒரு மூட்டையைச் சுமக்கும் போது, அதன் பாரத்தினால் கஷ்டப்பட்டிருப்பேனே தவிர, அது ஓர் அவமானம் தரக்கூடிய இழிவான செயல் என்று நான் கருதியதில்லை—" என்று பெரியாரே சொல்கிறாரே!

தந்தையார் வெங்கட்டநாயக்கர் தம் சொத்துகளை ஒரு டிரஸ்டாக ஏற்படுத்திடக் காரணமே, பெரியாரல்லவா

பெரியவர் ஈ.வெ.கி. தான். அவர் மிகுந்த செலவாளி. ஈ.வெ. கிருஷ்ணசாமியாரின் முதல் மனைவி நாகம்மாள், சேலம் தாதம்பட்டி எம். ராஜுவின் அத்தை. இவருக்குப் பிறந்த ரங்கராம், தாயாரம்மாள் ஆகிய இரு குழந்தைகளும் மதனப்பள்ளி சானடோரியத்தில் இறந்துவிட்டனர். இங்கிலாந்தில் பயின்று வந்தவரான ரங்கராமுக்கு, ஆனைமலையில் ரங்கநாயகி அம்மையாரைப் பெண்பார்த்து வைத்திருந்த போது, அவர் இறந்துபோனதால், ஈ.வெ.கி. தமது முதல் மனைவி உயிருடன் இருந்த போதே, இந்த ரங்கநாயகி அம்மாளை இரண்டாந்தாரமாக மணந்து கொண்டார். இவருக்கு மிராண்டா (தீனதயாளு) சம்பத் (சம்பத் குமார வேங்கடவரதன்) இரு குழந்தைகள் பிறந்த பின்னரே, 1927-ம் ஆண்டில் முதல் மனைவி நாகம்மாள் மறைந்து போய்விட்டார். சிக்கனமில்லாத ஈ.வெ.கி. ஒரு முறை 10,000 ரூபாய் கடன்பட்டுவிட்டார். வெங்கட்டநாயக்கர் அறிந்து வருந்தி, பத்தாயிரம் ஒருரூபாய் வெள்ளிப்பண நாணயங்களை ஒரு விசுப்பலகை மீது வரிசையாக அடுக்கி வைத்து, "இந்தப்பா கிருஷ்ணா! உன்னை இன்றைக்கு நான் பத்தாயிரம் ரூபாய் கொடுத்து விலைக்கு வாங்கியிருக்கிறேன்! இனிமேலாவது, இதோ உன் தம்பி ராமனைப் போலச் சிக்கனமாக நடந்துகொள்!" என்று கூறினார். தந்தையார் பார்வையில் பெரியார் எப்படிக் கருதப்பட்டார் என்பதை விளக்கும் நிகழ்ச்சியன்றோ இது!

• தனிப்பட்டவர் யாருக்காகவும் எவரிடத்திலும் எப்போதும் பெரியார் சிபாரிசு செய்ததில்லை; ஒரே ஒருவருக்காக மட்டும் மூன்று முதலமைச்சர்களிடத்தில் பரிந்துரை புரிந்துள்ளார். கல்வித்துறை இயக்குநராக்குமாறு காமராசரிடமும், கல்வி ஆலோசகராகப் போடுமாறு அண்ணாவிடத்திலும், துணைவேந்தராக்குமாறு இரண்டு தடவை கலைஞரிடமும், பெரியார் தாமே தமது இயல்புக்கு மாறாகச் சிபாரிசு செய்திருக்கிறார்.

பல மருத்துவ மனைகளுக்கும் சென்று, அங்கு கோரிக்கையில்லாமல், பெற்றோர் யாரென்றும் தெரியாமல், கைவிடப்பட்டுக் கிடக்கும் குழந்தைகளைக் (Foundlings) கேட்டு வாங்கி வந்து, வைக்கம், வளர்மதி, பாப்பு, அமலா என்றெல்லாம் பெயர் சூட்டி, அவற்றை அன்போடு செல்லமாகப் பெரியார் வளர்த்து வந்த பாங்கு, பார்த்தவரைப் பரவசமாக்கும்! இந்தக் குழந்தைகளில் ஒன்று வளர்ந்து, மங்கைப் பருவம் எய்தி, ஒருவருக்குத் திருமணம் செய்து வைக்கப் பட்டபோது, பிரிவாற்றாமையால் பெரியாரே கண்ணீர் சிந்தி விட்டார். அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்?

சட்டத்தை மதிப்பவர் பெரியார்; சட்டத்துக்கு உட்பட்டு நடப்பதையே எப்போதும் அவர் விரும்புவார். சட்டத்துக்குப் புறம்பாகத் தாம் எப்போதாவது தவறி நடக்க நேர்ந்துவிட்டால், தக்க தண்டனையை ஏற்றுக் கொள்ளத் தயங்கமாட்டார்.

“என் மனைவி முடிவெய்தியபோதும், நான் சிறிதும் மனங்கலங்கவில்லை; ஒரு சொட்டுக் கண்ணீர் வடிக்கவில்லை! என் தாயார் இறந்தபோதும், இயற்கைதானே? 95 வயதுக்கு மேலும் மக்கள் வாழவில்லையே என்று கருதலாமா! இது பேராசை அல்லவா? என்று கருதினேன்! என் அண்ணன் மகன் ரங்கராமைப் பத்து வயதில் லண்டனுக்கு அனுப்பிப் படிக்க வைத்தோம். 20 வயதில் ஊர் திரும்பிய அவன் இறந்து போனதற்காகவும் பதறவில்லை; சிதறவில்லை!”—என்று பெரியார் எழுதியுள்ள அனுதாப உரைகளைப் படிக்கும்போது, இவருக்கு எவ்வளவு கல்மனது—இறுகிய நெஞ்சம்—இளகாதபாறை உள்ளம்—என்றெல்லாம் எண்ணத் தோன்றும்! ஆனால், அவரது கட்டுரை இத்தோடு நின்றுவிடவில்லை; நீள்கிறது!—“பன்னீர் செல்வத்தின் மறைவு மனதை வாட்டுகிறது. காரணம்—மனைவி, தாயார், குழந்தை ஆகியவர்கள் மறைவு தனிப்பட்ட சுக துக்கத்தைப் பொறுத்தது. தன்னலம் மறையும்போது, அவர்களது நினைவும் மறந்துபோகும். பன்னீர்செல்வத்தின் மறைவு பொது

நலத்தைப் பொறுத்தது; தமிழர்களின் நிலையைப் பொறுத்தது. எனவே, தமிழர்களைக் காணுந்தொறும், நினைக்குந்தொறும் நெஞ்சம் பகீரென்கிறது.''

செல்வம் நினைவு பெரியாரை எவ்வளவு தூரம், எதற்காக வாட்டியது என்பது புரியும்போது, பொது நல ஊழியர்கள்பால் அவருக்கிருந்த பற்று, பாசத்தின் உயர்வு, வெளிப்படுகின்றதல்லவா?

பெரியாருக்கு இசையில் ஈடுபாடும், ஞானமும் உண்டு. நகைச்சுவை உணர்ச்சியும், நையாண்டியும் நளினமாக இழையோட, அவர் சில நேரங்களில் பேசுவதுண்டு. தெற்குச் சீமையிலிருந்து தொண்டர் ஒருவர் குடும்பத்துடன் பெரியாரைக் காணவந்திருந்தார். அடுக்கடுக்காகப் பத்துப் பன்னிரண்டு பிள்ளைகள் அவருக்கு. அவர் சென்றதும், அருகிலிருந்த தமது தோழர்களிடம் பெரியார், ''அய்யாவுக்கு ஊரில் தொழில் எப்படி?'' என்று கேட்டார்; 'பிள்ளை பெறுவது தவிர வேறு வேலை இல்லையோ?' என்பதையே நாசுக்காகக் கேட்டார்!

1970–ல் பம்பாய்ப் பயணத்தின் போது தஞ்சை கா. மா. குப்புசாமியின் கார் ஒன்றும் பெரியாரின் வேனைத் தொடர்ந்து வந்தது. ஆடவர்கள் காரிலும், மகளிர் வேனிலும் பயணம் செய்தனர். எங்கேயாவது வேன் நின்றால், காரிலிருக்கும் ஆண்கள் இறங்கி ஓடி, ''அய்யா என்ன?'' என்று வேனுக்குள் ஏறுவார்கள். ''அவர்கள் உண்மையில் என்னைப்பார்க்கவா இப்படி ஓடிவருகிறார்கள்? ஏன் அம்மா?'' என்பார் பெரியார். தத்தம் மனைவிமார்களைக் காணும் ஆவலில் வருவதாக, இலைமறைகாயாகப் பெரியார் எடுத்துக் காட்டினார்!

சீனாவில் ஆடவரும் மகளிரும் ஒரேமாதிரியான Unisex ஆடை அணிவது போல் நம் நாட்டிலும் இருக்க வேண்டும் என்பது பெரியார் கொள்கை. இதை முதலில் நாகம்மையார் குழந்தைகள் இல்லத்தில் அமுல் செய்யலாம் என்று ஒருவர் ஆலோசனை கூறினார். பெரியாரின் அருகிலிருந்த மணியம்மையார், ''அப்படியானால் 110 செட்

டிரஸ் வேண்டுமே'' என்றார்கள் ''அம்மாவுக்கா?'' என்று கேட்டு, நிறுத்திக் கொண்டார் பெரியார். அனைவரும் கொல்லென்று சிரித்ததும், அம்மாவுக்கு விஷயம் புரிந்து, வெட்கத்துடன் ஓடிவிட்டார்கள் உள்ளே!

பெரியாருக்கு அபாரமான எஞ்சினீரிங் ஸ்கில் இருந்தது. பந்தல்கள், கட்டடங்களுக்கு அவரே கைத்தடியால் அளவெடுத்துக், கையினால் பிளான்கள் வரைந்துள்ளார். எஸ்டிமேட் தாமே போட்டுவிடுவார்.

சர் சி.வி. ராமன் ஒரு நாத்திகர் என்பதும், பெரியாரிடம் ஈடுபாடு உள்ளவர் என்பதும் பலருக்குத்தெரியாது. அதனால் நமசிவாயம் லேப் என்று ஒரு கட்டடம் திறப்பு விழாவுக்காகப் பூண்டிக்கு அவரை அழைத்த நீரியல் விஞ்ஞானி பி. குமாரசாமியிடம் ''நீங்களும் என்னைப்போல ஒரு நாத்திகர் என்பதால் வருகிறேன். இந்தச் சம்பிரதாயமெல்லாம் எனக்குப் பிடிக்காது'' என்றார் சி. வி. ராமன்.

1955–ஆம்ஆண்டு தேசியக்கொடி எரிப்புப் போராட்டம் நடத்துவதாகப் பெரியார் அறிவித்திருந்தார். காமராஜர் முதலமைச்சராக இருந்த நேரம். அவரது தலையீட்டிலும் உறுதிமொழியிலும் பெரியார் தமது போராட்டத்தை ஒத்தி வைத்தார். முதலமைச்சருடன் அரசியல் ரீதியாகச் சரியான, சுமுகமான சூழ்நிலை இல்லை பெரியாருக்கு! அப்போது தஞ்சைப் பகுதியில் புயல், வெள்ளத்தால் பலத்த சேதம். பெரியார் தமது அரசியல் மாற்சரியங்களுக்கு அப்பாற்பட்டு, மனிதாபிமான உணர்வு உந்தியதால் முதலமைச்சரின் புயல் நிவாரண நிதிக்கு ஆயிரம் ரூபாய் 7–12–1955 அன்று அனுப்பி உதவினார்.

''எனக்குச் சுதந்தர நினைப்பு, சுதந்தர அனுபவம், சுதந்தர உணர்ச்சி உண்டு. அதை உங்கள்முன் சமர்ப்பிக்கின்றேன். நீங்கள் என்னைப் போலவே உங்களது சுதந்தர நினைப்பு, சுதந்தர அனுபவம், சுதந்தர உணர்ச்சி ஆகியவைகளால் பரிசீலனை செய்து, ஒப்புக்கொள்ளக் கூடியவைகளை ஒப்பித், தள்ள வேண்டியவைகளைத் தள்ளி

விடுங்கள் என்கின்ற நிபந்தனையின் பேரில்தான் நான் எதையும் தெரிவிக்கின்றேன்'' என்கிறாரே; இவர்தாம் பெரியார்!

"சுயமரியாதை இயக்கம் என்கிற இஞ்சினைப் பலப் படுத்தி, அது சரியாக ஓடத், தகுந்த சக்தியை உண்டாக்கி வைத்து விட்டால், பிறகு எந்த இயந்திரத்தைக் கொண்டு வந்து அதோடு இணைத்துத், தோல்பட்டையை மாட்டி விட்டாலும், அது தானாகவே ஓடும். அது இன்னவிதமான இயந்திரமாகத்தான் (Government) இருக்க வேண்டும் என்கிற கவலை யாருக்கும் வேண்டியதில்லை!''

எவ்வளவு நம்பிக்கையோடு நவிலப்பெற்ற தென் பூட்டும் மொழிகள் இவை! பெரியார் தவிர வேறு யாரால் சொல்ல இயலும்?

இந்தியாவில் இந்திரா ஆட்சி உள்நாட்டு நெருக்கடி நிலை பிரகடனம் செய்தபோது, பத்திரிகைத் தணிக்கை முறை அமுலானபோது, மிசா சட்டத்தின் கீழ் பல கட்சித் தலைவர்கள் சிறையிடப்பட்டபோது, பச்சைத் தமிழர் காமராசர் மனம் வெதும்பி மறைந்த போது, தனித் தமிழராட்சியை டிஸ்மிஸ் செய்து—முதன் முறையாகத் தமிழகத்தில் குடிஅரசுத் தலைவராட்சி அமுலானபோது, அட்வைசர்கள் எனும் பார்ப்பன அதிகாரிகள் தந்தை பெரியாரின் 60 ஆண்டு உழைப்பின் பலனை அழித்தொழித்த போது, சர்க்காரியா கமிஷன் நியமிக்கப்பட்ட போது, தி. க., தி. மு. க. தலைவர்கள் பலரைச் சிறையிலிட்டு அடித்து உதைத்துச் சித்திரவதை செய்தபோது,ஓராண்டுக்கு மேலும் கொடிய அடக்குமுறை ராணுவ ஆட்சிபோல் தலை விரித்தாடியபோது, அனைத்துக்கும் முடிவுகட்டுவதுபோல் மத்திய ஆட்சியில் காங்கிரஸ் ஒழிந்து—சுதந்திரம் பெற்ற 30 ஆண்டுக் காலத்திலேயே முதன் முறையாக ஜனதாக்கட்சி அரசுக்கட்டிலில் அமர்ந்தபோது, மாநிலத்தில் அய்யா–அண்ணா வழி என்று சொல்லிக் கொள்ளும் திராவிட பாரம்பர்ய அ. இ. அ. தி. மு. க. ஆட்சியே ஆளவந்த

போது, இந்திராகாந்திக்குக் கருப்புக்கொடி காட்டிய மணியம்மையாரை இழிவுபடுத்தியபோது, இந்திரா காந்தியைக் கொல்ல முயன்றதாக அரசு வழக்குத் தொடுத்த போது, மணியம்மையார் மறைந்தபோது, பிற்பட்டோராகிய சரண்சிங் பிரதமரான போது, வருப்புரிமைக்கு மாநில அரசு குழி பறித்தபோது—அய்யோ, பெரியார் இல்லையே!—என்று தமிழகம் விடுத்த ஏக்கப் பெருமூச்சு காதில் கேட்டிருக்குமே!

எங்கே அந்தப் பெரியார்?

எங்கே?

எங்கே தந்தை பெரியார்?

பெரியாரின் ஆறாவது நினைவு நாளன்று என் இல்லத்திலேயே எளிய முறையில், விஞ்ஞானி பொ. குமாரசாமி அவர்கள் தலைமையில், "அத்தையம்மாள்" நாகரசம்பட்டி என்.வி. விசாலாட்சி அம்மாள் அவர்கள் வெளியிட, இந்நூலின் முதற் பிரதியைச் சகோதரி மோகனா வீரமணி அவர்கள் பெற்றுக் கொண்டார்கள்.

I dedicate this work to Periyar's foundlings.

பெரியாரின் பெறாப் பிள்ளைகளுக்கு இந்த நூலை உரிமை செய்கின்றேன்.

## உருவாக்கம்

| | | |
|---|---|---|
| வெளியிட்டோர் | : | எஸ். கருணானந்தம்<br>பெசன்ட்நகர், சென்னை-600 090 |
| அச்சகத்தார் | : | மூவேந்தர் அச்சகம்<br>31, எஸ்.பி. சந்நிதித் தெரு,<br>இராயப்பேட்டை, சென்னை—14 |
| அச்சிட்டவர் | : | ஜி. டி. முத்து |
| பிழை திருத்தியோர் | : | கோ. தையமுத்து |
| உதவி | : | டி. பிரபாவதி |
| அச்சுக் கோப்பு | : | மூவேந்தர் தோழர், தோழியர்கள் |
| கட்டுக் கோப்பு | : | கபாலி பைண்டிங் |
| புகைப்படங்கள் | : | எம். குருசாமி, ஏ. சுந்தரம்,<br>கே. குலோத்துங்கன் |
| பிளாக் | : | கார்டியன் பிராசஸ் |
| வடிவமைப்பு | : | கோபன் |
| மேலட்டை ஓவியம் | : | கோபுலு |
| மேலட்டை அச்சு | : | கனரா பிரிண்டர்ஸ், சென்னை |




Published by the auther

**S. KARUNANANDAM**

Besantnagar, Madras-600090.

பெரியவர் ஈ.வெ.கி. தான். அவர் மிகுந்த செலவாளி. ஈ.வெ. கிருஷ்ணசாமியாரின் முதல் மனைவி நாகம்மாள், சேலம் தாதம்பட்டி எம். ராஜுவின் அத்தை. இவருக்குப் பிறந்த ரங்கராம், தாயாரம்மாள் ஆகிய இரு குழந்தைகளும் மதனப்பள்ளி சானடோரியத்தில் இறந்து விட்டனர். இங்கிலாந்தில் பயின்று வந்தவரான ரங்க ராமுக்கு, ஆனைமலையில் ரங்கநாயகி அம்மையாரைப் பெண்பார்த்து வைத்திருந்த போது, அவர் இறந்து போனதால், ஈ.வெ.கி. தமது முதல் மனைவி உயிருடன் இருந்த போதே, இந்த ரங்கநாயகி அம்மாளை இரண்டாந்தாரமாக மணந்து கொண்டார். இவருக்கு மிராண்டா (தினதயாளு) சம்பத் (சம்பத் குமார வேங்கடவரதன்) இரு குழந்தைகள் பிறந்த பின்னரே, 1927-ம் ஆண்டில் முதல் மனைவி நாகம்மாள் மறைந்து போய்விட்டார். சிக்கனமில்லாத ஈ.வெ.கி. ஒரு முறை 10,000 ரூபாய் கடன்பட்டு விட்டார். வெங்கட்டநாயக்கர் அறிந்து வருந்தி, பத்தாயிரம் ஒருரூபாய் வெள்ளிப்பண நாணயங்களை ஒரு விசுப்பலகை மீது வரிசையாக அடுக்கி வைத்து, "இந்தப்பா கிருஷ்ணா! உன்னை இன்றைக்கு நான் பத்தாயிரம் ரூபாய் கொடுத்து விலைக்கு வாங்கியிருக்கிறேன்! இனிமேலாவது, இதோ உன் தம்பி ராமனைப் போலச் சிக்கனமாக நடந்துகொள்!" என்று கூறினார். தந்தையார் பார்வையில் பெரியார் எப்படிக் கருதப்பட்டார் என்பதை விளக்கும் நிகழ்ச்சியன்றோ இது!

தனிப்பட்டவர் யாருக்காகவும் எவரிடத்திலும் எப்போதும் பெரியார் சிபாரிசு செய்ததில்லை; ஒரே ஒருவருக்காக மட்டும் மூன்று முதலமைச்சர்களிடத்தில் பரிந்துரை புரிந்துள்ளார். கல்வித்துறை இயக்குநராக்குமாறு காமராசரிடமும், கல்வி ஆலோசகராகப் போடுமாறு அண்ணாவிடத்திலும், துணைவேந்தராக்குமாறு இரண்டு தடவை கலைஞரிடமும், பெரியார் தாமே தமது இயல்புக்கு மாறாகச் சிபாரிசு செய்திருக்கிறார்.

பல மருத்துவ மனைகளுக்கும் சென்று, அங்கு கோரிக்கை யில்லாமல், பெற்றோர் யாரென்றும் தெரியாமல், கை விடப்பட்டுக் கிடக்கும் குழந்தைகளைக் (Foundlings) கேட்டு வாங்கி வந்து, வைக்கம், வளர்மதி, பாப்பு, அமலா என்றெல்லாம் பெயர் சூட்டி, அவற்றை அன்போடு செல்ல மாகப் பெரியார் வளர்த்து வந்த பாங்கு, பார்த்தவரைப் பரவசமாக்கும்! இந்தக் குழந்தைகளில் ஒன்று வளர்ந்து, மங்கைப் பருவம் எய்தி, ஒருவருக்குத் திருமணம் செய்து வைக்கப் பட்டபோது, பிரிவாற்றாமையால் பெரியாரே கண்ணீர் சிந்தி விட்டார். அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்?

சட்டத்தை மதிப்பவர் பெரியார்; சட்டத்துக்கு உட் பட்டு நடப்பதையே எப்போதும் அவர் விரும்புவார். சட்டத் துக்குப் புறம்பாகத் தாம் எப்போதாவது தவறி நடக்க நேர்ந்துவிட்டால், தக்க தண்டனையை ஏற்றுக் கொள்ளத் தயங்கமாட்டார்.

"என் மனைவி முடிவெய்தியபோதும், நான் சிறிதும் மனங்கலங்கவில்லை; ஒரு சொட்டுக் கண்ணீர் வடிக்க வில்லை! என் தாயார் இறந்தபோதும், இயற்கைதானே? 95 வயதுக்கு மேலும் மக்கள் வாழவில்லையே என்று கருத லாமா! இது பேராசை அல்லவா? என்று கருதினேன்! என் அண்ணன் மகன் ரங்கராமைப் பத்து வயதில் லண்டனுக்கு அனுப்பிப் படிக்க வைத்தோம். 20 வயதில் ஊர் திரும்பிய அவன் இறந்து போனதற்காகவும் பதறவில்லை; சிதற வில்லை!"—என்று பெரியார் எழுதியுள்ள அனுதாப உரை களைப் படிக்கும்போது, இவருக்கு எவ்வளவு கல்மனது— இறுகிய நெஞ்சம்—இளகாதபாறை உள்ளம்—என்றெல்லாம் எண்ணத் தோன்றும்! ஆனால், அவரது கட்டுரை இத்தோடு நின்றுவிடவில்லை; நீள்கிறது!—"பன்னீர் செல்வத்தின் மறைவு மனதை வாட்டுகிறது. காரணம்—மனைவி, தாயார், குழந்தை ஆகியவர்கள் மறைவு தனிப்பட்ட சுக துக்கத்தைப் பொறுத்தது. தன்னலம் மறையும்போது, அவர்களது நினை வும் மறந்துபோகும். பன்னீர்செல்வத்தின் மறைவு பொது

நலத்தைப் பொறுத்தது; தமிழர்களின் நிலையைப் பொறுத்தது. எனவே, தமிழர்களைக் காணுந்தொறும், நினைக்குந்தொறும் நெஞ்சம் பகீரென்கிறது."

செல்வம் நினைவு பெரியாரை எவ்வளவு தூரம், எதற்காக வாட்டியது என்பது புரியும்போது, பொது நல ஊழியர்கள்பால் அவருக்கிருந்த பற்று, பாசத்தின் உயர்வு, வெளிப்படுகின்றதல்லவா?

பெரியாருக்கு இசையில் ஈடுபாடும், ஞானமும் உண்டு. நகைச்சுவை உணர்ச்சியும், நையாண்டியும் நளினமாக இழையோட, அவர் சில நேரங்களில் பேசுவதுண்டு. தெற்குச் சீமையிலிருந்து தொண்டர் ஒருவர் குடும்பத்துடன் பெரியாரைக் காணவந்திருந்தார். அடுக்கடுக்காகப் பத்துப் பன்னிரண்டு பிள்ளைகள் அவருக்கு. அவர் சென்றதும், அருகிலிருந்த தமது தோழர்களிடம் பெரியார், "அய்யாவுக்கு ஊரில் தொழில் எப்படி?" என்று கேட்டார்; 'பிள்ளை பெறுவது தவிர வேறு வேலை இல்லையோ?' என்பதையே நாசுக்காகக் கேட்டார்!

1970-ல் பம்பாய்ப் பயணத்தின் போது தஞ்சை கா. மா. குப்புசாமியின் கார் ஒன்றும் பெரியாரின் வேனைத் தொடர்ந்து வந்தது. ஆடவர்கள் காரிலும், மகளிர் வேனிலும் பயணம் செய்தனர். எங்கேயாவது வேன் நின்றால், காரிலிருக்கும் ஆண்கள் இறங்கி ஓடி, "அய்யா என்ன?" என்று வேனுக்குள் ஏறுவார்கள். "அவர்கள் உண்மையில் என்னைப்பார்க்கவா இப்படி ஓடிவருகிறார்கள்? ஏன் அம்மா?" என்பார் பெரியார். தத்தம் மனைவிமார்களைக் காணும் ஆவலில் வருவதாக, இலைமறைகாயாகப் பெரியார் எடுத்துக் காட்டினார்!

சீனாவில் ஆடவரும் மகளிரும் ஒரேமாதிரியான Unisex ஆடை அணிவது போல் நம் நாட்டிலும் இருக்க வேண்டும் என்பது பெரியார் கொள்கை. இதை முதலில் நாகம்மையார் குழந்தைகள் இல்லத்தில் அமுல் செய்யலாம் என்று ஒருவர் ஆலோசனை கூறினார். பெரியாரின் அருகிலிருந்த மணியம்மையார், "அப்படியானால் 110 செட்

டிரஸ் வேண்டுமே'' என்றார்கள் ''அம்மாவுக்கா?'' என்று கேட்டு, நிறுத்திக் கொண்டார் பெரியார். அனைவரும் கொல்லென்று சிரித்ததும், அம்மாவுக்கு விஷயம் புரிந்து, வெட்கத்துடன் ஓடிவிட்டார்கள் உள்ளே!

பெரியாருக்கு அபாரமான எஞ்சினீரிங் ஸ்கில் இருந்தது. பந்தல்கள், கட்டடங்களுக்கு அவரே கைத்தடியால் அளவெடுத்துக், கையினால் பிளான்கள் வரைந்துள்ளார். எஸ்டிமேட் தாமே போட்டுவிடுவார்.

சர் சி.வி. ராமன் ஒரு நாத்திகர் என்பதும், பெரியாரிடம் ஈடுபாடு உள்ளவர் என்பதும் பலருக்குத்தெரியாது. அதனால் நமசிவாயம் லேப் என்று ஒரு கட்டடம் திறப்பு விழாவுக்காகப் பூண்டிக்கு அவரை அழைத்த நீரியல் விஞ்ஞானி பி. குமாரசாமியிடம் ''நீங்களும் என்னைப்போல ஒரு நாத்திகர் என்பதால் வருகிறேன். இந்தச் சம்பிரதாயமெல்லாம் எனக்குப் பிடிக்காது'' என்றார் சி. வி. ராமன்.

1955—ஆம்ஆண்டு தேசியக்கொடி எரிப்புப் போராட்டம் நடத்துவதாகப் பெரியார் அறிவித்திருந்தார். காமராஜர் முதலமைச்சராக இருந்த நேரம். அவரது தலையீட்டிலும் உறுதிமொழியிலும் பெரியார் தமது போராட்டத்தை ஒத்தி வைத்தார். முதலமைச்சருடன் அரசியல் ரீதியாகச் சரியான, சுமுகமான சூழ்நிலை இல்லை பெரியாருக்கு! அப்போது தஞ்சைப் பகுதியில் புயல், வெள்ளத்தால் பலத்த சேதம். பெரியார் தமது அரசியல் மாற்சர்யங்களுக்கு அப்பாற்பட்டு, மனிதாபிமான உணர்வு உந்தியதால் முதலமைச்சரின் புயல் நிவாரண நிதிக்கு ஆயிரம் ரூபாய் 7–12–1955 அன்று அனுப்பி உதவினார்.

''எனக்குச் சுதந்தர நினைப்பு, சுதந்தர அனுபவம், சுதந்தர உணர்ச்சி உண்டு. அதை உங்கள்முன் சமர்ப்பிக்கின்றேன். நீங்கள் என்னைப் போலவே உங்களது சுதந்தர நினைப்பு, சுதந்தர அனுபவம், சுதந்தர உணர்ச்சி ஆகியவைகளால் பரிசீலனை செய்து, ஒப்புக்கொள்ளக் கூடியவைகளை ஒப்பித், தள்ள வேண்டியவைகளைத் தள்ளி

விடுங்கள் என்கின்ற நிபந்தனையின் பேரில்தான் நான் எதையும் தெரிவிக்கின்றேன்'' என்கிறாரே; இவர்தாம் பெரியார்!

''சுயமரியாதை இயக்கம் என்கிற இஞ்சினைப் பலப்படுத்தி, அது சரியாக ஓடத், தகுந்த சக்தியை உண்டாக்கி வைத்து விட்டால், பிறகு எந்த இயந்திரத்தைக் கொண்டு வந்து அதோடு இணைத்துத், தோல்பட்டையை மாட்டி விட்டாலும், அது தானாகவே ஓடும். அது இன்னவிதமான இயந்திரமாகத்தான் (Government) இருக்க வேண்டும் என்கிற கவலை யாருக்கும் வேண்டியதில்லை!''

எவ்வளவு நம்பிக்கையோடு நவிலப்பெற்ற தெம்பூட்டும் மொழிகள் இவை! பெரியார் தவிர வேறு யாரால் சொல்ல இயலும்?

இந்தியாவில் இந்திரா ஆட்சி உள்நாட்டு நெருக்கடி நிலை பிரகடனம் செய்தபோது, பத்திரிகைத் தணிக்கை முறை அமுலானபோது, மிசா சட்டத்தின் கீழ் பல கட்சித் தலைவர்கள் சிறையிடப்பட்டபோது, பச்சைத் தமிழர் காமராசர் மனம் வெதும்பி மறைந்த போது, தனித் தமிழராட்சியை டிஸ்மிஸ் செய்து—முதன் முறையாகத் தமிழகத்தில் குடிஅரசுத் தலைவராட்சி அமுலானபோது, அட்வைசர்கள் எனும் பார்ப்பன அதிகாரிகள் தந்தை பெரியாரின் 60 ஆண்டு உழைப்பின் பலனை அழித்தொழித்த போது, சர்க்காரியா கமிஷன் நியமிக்கப்பட்ட போது, தி. க., தி. மு. க. தலைவர்கள் பலரைச் சிறையிலிட்டு அடித்து உதைத்துச் சித்திரவதை செய்தபோது,ஓராண்டுக்கு மேலும் கொடிய அடக்குமுறை ராணுவ ஆட்சிபோல் தலை விரித்தாடியபோது, அனைத்துக்கும் முடிவுகட்டுவதுபோல் மத்திய ஆட்சியில் காங்கிரஸ் ஒழிந்து—சுதந்திரம் பெற்ற 30 ஆண்டுக் காலத்திலேயே முதன் முறையாக ஜனதாக்கட்சி அரசுக்கட்டிலில் அமர்ந்தபோது, மாநிலத்தில் அய்யா—அண்ணா வழி என்று சொல்லிக் கொள்ளும் திராவிட பாரம்பர்ய அ. இ. அ. தி. மு. க. ஆட்சியே ஆளவந்த

போது, இந்திராகாந்திக்குக் கருப்புக்கொடி காட்டிய மணியம்மையாரை இழிவுபடுத்தியபோது, இந்திரா காந்தியைக் கொல்ல முயன்றதாக அரசு வழக்குத் தொடுத்த போது, மணியம்மையார் மறைந்தபோது, பிற்பட்டோராகிய சரண்சிங் பிரதமரான போது, வகுப்புரிமைக்கு மாநில அரசு குழி பறித்தபோது—அய்யோ, பெரியார் இல்லையே!—என்று தமிழகம் விடுத்த ஏக்கப் பெருமூச்சை காதில் கேட்டிருக்குமே!

எங்கே அந்தப் பெரியார்?

எங்கே?

எங்கே தந்தை பெரியார்?

பெரியாரின் ஆறாவது நினைவு நாளன்று என் இல்லத்திலேயே எளிய முறையில், விஞ்ஞானி பொ. குமாரசாமி அவர்கள் தலைமையில், "அத்தையம்மாள்" நாகரசம்பட்டி என்.வி. விசாலாட்சி அம்மாள் அவர்கள் வெளியிட, இந்நூலின் முதற் பிரதியைச் சகோதரி மோகனா வீரமணி அவர்கள் பெற்றுக் கொண்டார்கள்.

I dedicate this work to Periyar's foundlings.

பெரியாரின் பெறாப் பிள்ளைகளுக்கு இந்த நூலை உரிமை செய்கின்றேன்.

## உருவாக்கம்

| | | |
|---|---|---|
| வெளியிட்டோர் | : | எஸ். கருணானந்தம்<br>பெசண்ட்நகர், சென்னை-600 090 |
| அச்சகத்தார் | : | மூவேந்தர் அச்சகம்<br>31, எஸ்.பி. சந்நிதித் தெரு,<br>இராயப்பேட்டை, சென்னை—14 |
| அச்சிட்டவர் | : | ஜி. டி. முத்து |
| பிழை திருத்தியோர் | : | கோ. தையமுத்து |
| உதவி | : | டி. பிரபாவதி |
| அச்சுக் கோப்பு | : | மூவேந்தர் தோழர், தோழியர்கள் |
| கட்டுக் கோப்பு | : | கபாலி பைண்டிங் |
| புகைப்படங்கள் | : | எம். குருசாமி, ஏ. சுந்தரம்,<br>கே. குலோத்துங்கன் |
| பிளாக் | : | கார்டியன் பிராசஸ் |
| வடிவமைப்பு | : | கோபன் |
| மேலட்டை ஓவியம் | : | கோபுலு |
| மேலட்டை அச்சு | : | கனரா பிரிண்டர்ஸ், சென்னை |




Published by the author

**S. KARUNANANDAM**

Besantnagar, Madras-600090.